மறைச்சிலம்பு : பரல்-1.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# பெரியபுராணம்

என வழங்கும்

# திருத்தொண்டர் புராணம்.

## சேக்கிழார்சுவாமிகள்

அருளிச்செய்த மூலமும்,

சென்னை இராயப்பேட்டை

ஸ்ரீ பாலசுப்பிரமணிய பக்தஜனசபை ஸ்தாபகர்

சதாவதானம்

ஸ்ரீ ஸ்ரீ-நா. கதிரைவேற் பிள்ளையவர்கள் மாணவர்

திருவாரூர்-வி. கலியாணசுந்தர முதலியார்

இயற்றிய

அரும்பதக் குறிப்புரையும், வசனமும்.

---

இவை ஷை சபையாரால்

திருவாரூர் - வி. உலகநாத முதலியாராலும்,

அ. சிவசங்கர முதலியாராலும்

சென்னை

உமாபதி குருப்பிரகாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டன




---

சாதாரண ஹு ஆடி மீ

1910.

 [விலை ரூபா 3.

சிவமயம்

கதிரைநாயகன்றுணை

# உரிமையுரை.

## நேரிசையாசிரியப்பா.

பூவினிற் சிறந்த நாவினிற் பெரியார்
தொண்டையே நாடுந் தொண்டைமா நாடு
பாலிபாயந் தளிசீர் பாலிநன் னாடு
எண்ணிய வுதவும் புண்ணிய நாடு
அம்மை யறம்வளர் செம்மைசேர் நாடு
இத்திரு நாட்டிடைப் பத்திரு வனப்பார்
தோன்ற வருள்புரி யான்றபே ரறங்கள்
குன்றுத லில்லாக குன்றையம் பதிவாழ்
பாககிழார் பெருமான் சேக்கிழா ரருளால்
விரித்த அடியவர் சரித்திர மணக்கும்
பெரிய புராணமே யரியசொன் மூலம்
உகந்த கத்தியம் உயரும் பதவுரை
சேர்ந்தொளி செய்யுஞ் சிவஞா லிநூலை
முத்தமிழ் நாளுந் தத்தைக ளாம்பும்
அருட்பா திருப்புகழ்ப் பொருட்பா வோதையும்
நலமணி ஓதியின மலரணி பிணியும்
மலர்முக மணியணி நிலவெரி யுமிழவும்
நீங்கா தொளிரும் பாங்குறு நாடு
செந்தமி ழுரிமைமா தந்தவ நாடு
காவலர் போற்றுங் கூவலர் நாடு
அமிழ்தினு மினிய தமனிய நாடு
செய்தவ மொன்றுய்யத் திரண்ட வுருவென
ஆன்றவர் குணமொடு தோன்றின னெவனோ
நாவலர் மாணவ னாரலை படிந்தே
உகந்திரு மொழிநீர் முகந்தருள் புடவி
அந்தமிழ்ப் போக ராதியுங் கூர்ம
புராண சிவநிசி புராண வுரையும்
சைவ பூடண சந்திரி கையும்
குகபராக் கிரமமு மிகநூ லாக
உதவிய மழையெனும் உத்தம னெவனோ
செந்தமி ழணங்கின் சிந்தையி லென்றுந்
தங்குந் தமிழொளித துங்கவ னெவனோ
சாலி வாணிமா சூலியைப் புரையுங்
கற்புயர் கல்வி பொற்பருண் ஞானங்
கொண்டுமெய யன்பிற கோமகள் பேயார்
எனவே வளர்ந்து வனவே டசித்தே
அத்தியை யென்றும் புத்தியிற் போற்றும்
வடிவாம் பிகையெனும் வடிவினை மணந்தே
இல்லற மேற்ற நல்லவ னெவனோ
தெய்வ வைதிக சைவசித் தாந்த
சண்ட மாருதப்போர் கொண்டனஞ் சோம

## உரிமையுரை.

சுந்தர நாயகன் சுந்தர னையபின்
அவன்போற் செழித்தவன் சிவநெறி யெவனோ
நாஞ்சிவ மென்றே ஆஞ்சிங்க கரிகள
வீரிட வாட்டிப் பாரிடா களைந்து
மாயா வாத தும்சகோ ளரியெனுங்
காந்திசோ பட்டம் ஏந்தின னவனே
பின்னரு மப்பெயர் மன்னவ நுறுதி
செயதிடப் பெற்ற மெய்யய வனவனே
மன்னவா நீதி மன்றினி லேறிப்
பன்னிரு முறையே உன்னருட் பாவென்
றுணி பசுமாத தறைந்தா லென்னக
காட்டிச சாத்திர நாட்டின னவனே
சிற்றம் பலத்தினு மற்றத தலத்தினும
வளவ னடாத்திய வளமார திருமுறை
விழாவை யிந்நாள வழாம னிகழத்தி
உணமை யருட்பா வணமையை முனபோல
எங்கணும பரப்பிய தங்கண னவனே
அருவி கணகளிற பெருகிட அனபே
உருவா யானந்தப பெருவா ரிதியில்
திளைக்கவு நேயாகள் வளைவிலாக் கல்விப
பண்டித ரிண்டிக கண்டிலம் யாணடும
இவனிற புலவனை இவனது சொல்லிசை
என்றிமை யோராய் மினறிட ஒன்றோர்
அகத்திற புகழந்து முகத்தைச சுளிப்பத்
தன்னை மறந்தது தானறி யாமல்
பிரசங்க மாரி பெய்தவ னவனே
தென்றமிழ் வளாநத தொன்மது ராபுரிச
சங்கப புலவனாயச சார்ந்தவ னவனே
நல்லிசைப் புலவர்முன் சொல்லிசைச சதாவ
தானஞ் செய்த வானவ னவனே
அடக்கம் பொறையை நடக்கையிற காட்டி
இல்லா ருள்ளா ரொல்லா ரொல்லுநர்
ஒக்கவே நோக்கி யிக்கவ னவனே
அக்க மணியரை யொக்க லெனக்கொண
டுரியவா ரிகந்த பெரியவ னவனே
நாடவா பழித்துரை பூணது வாகத
துலக்கிய வாசக இலக்கிய னவனே
உலகை வென்ற வுணமைய னவனே
பற்றினாக் கினிய பணடித னவனே
எம்மைவிட் டகலாச செம்மைய னவனே
நஞ்சவை கண்ட நாயக னவனே
கதிரைவே லென்றொரு மதுரப் பெயருடைத்
தவன னவனே அவனது ஞாபக
சின்னம தாகச செய்தனம்
உரிமை யுலகமும உவந்திட இனிதே.

உ

சிவமயம்.

வேலுமயிலுந்துணை.

# உபோற்காதம்.

அவன் அவள் அது எனச்சுட்டி அறியப்படும் உலகம் தோற்றம் நிலை இறுதி யென்னும் முத்தொழிலுமுடைமையான், ஒரு காரணமுற்ற காரியப்பொருளென்பது எவரும் ஒப்பமுடிந்த உண்மையே யாம். என்னை? காரணமின்றிக் காரியம் நிகழாதாகலான் என்க. இதனை "அவனவளதுவெனுமவைமூவினைமையிற்-றோற்றியதிதியே யொடுங்கிமலத்துளதாம் - அந்தமாதியென்மனார்புலவர்" என்னுஞ் சிவஞானபோதமும், "அகரமுதலவெழுத்தெல்லாமாதி-பகவன்முத ற்றேயுலகு" எனனும் வள்ளுவர் வாக்கும் வலியுறுத்தலைக் காண்க.

அவ்வாதிபகவனை மண் புனல் தீ காற்றென மயங்கியும், உருவ மென்ன உரைத்தும், அருவமென்ன அறைந்தும், ஆன்மாவென ஆடி யும், மலாதிகளையாமென மகிழ்ந்தும், "யானே உலகமும், அதன் ஒளியும்" எனக்கூறி அற்புதங்களாற்றிய அருளாளர்களுட் சிலரெனச் செப்பியும், பிறவெனப்பிதற்றியும் தத்தம் பசுபாச ஞானங்கள் சென்றவழித் தமக்குள் வேறுபட்டும், மாறுபட்டும் இறுதியில் இட ர்ப்பட்டும் ஒழிகின்றார் பலசமயத்தார். அவரை அவசித்தாந்தி களென்பார் சிவசித்தாந்தக் கைவரப்பெற்றார். என்னை? மண்ணாதி யன சடமாகலானும், அவை தாமே இயங்காவாகலானும், உருவம் அழிதன்மாலையதாகலானும், அருவம் முயற்கோட்டினைச் சூனிய மாய முடிதலானும், ஆன்மா முக்குணவயத்தானும், அவத்தை வயத் தானும் அலக்கணுறலும், பிறப்பிறப்புக்களையும், பிறழ்கேடுகளையும் பெற்றும் உழல்கின்றமையானும், மலாதிமையா தோற்றக்கேடுகள் உறுவோர் ஆகலானும், அவர் பக்தித்துவம் பிருதிவிமுதல் பிரகிருதி மாயைகாறும் வியாபித்தது நிற்கும் பிரதிட்டாகலை பரியந்தமேயாக லானும், பிரகிருதிக்குமேலுந் தத்துவபுவனங்கள் உண்மையானும், அற்புதமாற்றிய அருளாளர்களுட் சிலர் மோனிவாய்ப்பட்டார்

ஆகலானும், ஒரோர்கால தங்குறையறுப்பான் இறைவனை யிரங்குமாறு வேண்டினார் ஆகலானும, தம்மையுந் தலைவனையும உணர்ந்து சிவோகம்பாவனையைத் தலைப்பட்டார் ஆகலானும, பிறவும் பொய்யாய்ப பொன்றுகின்றமையானும என்க.

இனி இச்சமயத்தார் தெய்வங்களாக நின்று அவரவர் போற்றல்களை ஏற்றுக்கொளவோனும், "குணாதீதன்" "நிர்க்குணன" "துரியமூர்த்தி" என உபநிடதங்களான் ஓதப்பெறுநனும, ஐசுவரியமாதி அறுகுணங்களையும், முற்றறிவு முதலிய எண் குணங்களையும் உடையானும், உருவாயும, அருவாயும, அருவுருவாயும, அவை கடந்த அகண்டாகார அழற்சோதிப பிழம்பாயும், அறிவாயும், அன்பாயும் உள்ளானுமாய பரமசிவனே ஆதியென்னுஞ் சததத்தால் விசேடிககப்பட்ட பகவன் என்க. இதனை — * "தேவராயுமசுரராயுஞ்சித்தர்செழுமறைசேர்--நாவராயுநண்ணுபாரும்விண்ணெரிகானீரு--மேவராயவிரைமலரோன்செங்கண் மாலீசனென்னு- மூவராய முதலொருவன்மேயதுமுதுகுன்றே" எனவும், * "விரிவிலா அறிவினார்களவேறொருசமயஞ்செய்தே—எரிவினாற்சொன்னாரேனுமெம்பிரார்க்கேறறதாகும" எனவும,‡ "யாதொருதெய்வங்கொண்டீரத்தெய்வமாகியாங்கே-மாதொருபாகனார்தாம்வருவார்" எனவும்,† "கோளிலபொறியிற்குணமிலவேயெண்குணத்தான - தாளைவணங்காத்தலை" எனவும,* "எட்டுவானகுணத்தீசனெமமான்றனை" எனவும்,‡ "அருவமோருபாரூபமானதோவனறிநின்ற - உருவமோவுரைக்குங்காத்தாவடிவெனககுணர்த்திங்கெனனில அருவமுமரூபாரூபமானதுமன்றிநின்ற - உருவமுமூன்றுஞ்சொன்னவொருவனுக்குளளதாமே" எனவும், ¶"அறிவுசிவமிரணடென்பரறிவிலார் - அறிவேசிவமாவதாருமறிகிலார - அறிவேசிவமாவதாருமறிந்தபின - அறிவேசிவமாயமர்ந்திருப்பாரே" எனவும்,¶ 'அன்புசிவமிரண்டேன்பரறிவிலார்-அன்பேசிவமாவதாருமறிகிலார் - அன்பேசிவமாவதாருமறிந்தபின்-அன்பேசிவமாயமாந்திருப்பாரே' எனவும், § "அமமையேயபபாவொபபிலா மணியேஅனபினில்விளைந்தவாரமுதே" எனவும், § "ஈறிலாபபதங்களியாவையுங்கடந்தவின்பமேயென்னுடையன்பே" எனவும் வருந திருவாக்குகளான் ஓர்ந்துணர்க. இன்னும பகவபபெயா சிவபரமாதலைச் சதுர்வேதத் தாற்பரிய

* தேவாரம ‡ சிவஞானசித்தியார். † திருக்குறள. ¶ திருமந்திரம.

§ திருவாசகம்.

சங்கிரகத்திலும், பவுட்கராகமத்திலும் காண்க. பிறவற்றை இந்நூல் ஐந்தாம்பக்கத்திற் பார்க்க.

இனி ஆதி பகவனாய சிவபிரான் திருவடிப்பேற்றைக் கதிக்கு நெறி பதிநெறியேயாம். இதனை ஞானநெறி யெனவும், சைவநெறி யெனவும், அத்துவிதநெறி யெனவும், அருணெறி யெனவுங் கூறுவர் ஆசிரிய அறிஞர். இது மணிவாசகப் பெருமானார் பிறநெறியினரை "முத்திநெறியறியாத மூர்க்கர்" எனவும், சிவநெறியைச் சித்தமலங் கழிவிக்கும் "பதிநெறி" எனவும் அருளிச்செய்தவாற்றான் இனிது விளங்கும் என்க. இன்னும் பதிநெறியே முத்திநெறியென்பதனை — "பதிவலையிற்படுவோன் காண்க" எனவும், "திசைமுகனசென்றுதேடினர்க்கொளித்து-முறையுளியொற்றிமுயனறவர்க்கொளித்து-மொற்றுமைகொண்டுநோக்குமுள்ளத்-துற்றவருருந்தவுரைப்பவர்க்கொளித்து-மறைத்திறநோக்கிவருந்தினர்க்கொளித்து-மித்தந்திரத்திற்காண்டுமென்றிருந்தோர்க்-கத்தந்திரத்தினவ்வயினொளித்து-முனிவறநோக்கிநனிவரக்கவவி-யாணெனத்தோன்றியலியெனப்பெயர்ந்து-வாணுதற்பெண்ணெனவொளித்துஞ்சேண்வயினைம்புலன்செலவிடுத்தருவரைதொறும்போய்த்-துற்றவைதுறந்தவெற்றுயிராக்கை-யருந்தவர்காட்சியுட்டிருந்தவொளித்து-மொன்றுண்டில்லையென்றறிவொளித்தும் - பண்டேபயில்தொறுமின்றேபயிற்றொறு-மொளிக்குஞ்சோரனைக்கண்டன-மார்மினார்மினாண்மலர்ப்பிணையலிற்-றடளையிடுமின-சுற்றுமின்சூழ்மின்றொடர்மினவிடேன்மின - பற்றுமினென்றவர்பற்றுமுற்றொளித்தும—தன்னேரிலலோன்றனேயானதன்மை - யென்னேரனையோர்கேட்கவந்தியம்பி- யறைகூவியாட்கொண்டருளி - மறையோர்கோலங்காட்டியருளலு- முளையாவன்பென்புருகவோலமிட்-டலைகடற்றிரையினாதந்தாங்கி" எனவும், "தெய்வமென்பதோர்சித்தமுண்டாகி- முனிவிலாததோர்பொருளதுகருதலு - மாறுகோடிமாயாசத்திகள் - வேறுவேறுதம்மாயைகடொடங்கின-வாத்தமானாரயலவர்கூடி--நாத்திகம்பேசிநாத்தழும்பேறினர்—சுற்றமென்னுந்தொல்பசுக்குழாங்கள்-பற்றியழைத்துப்பதறினர்பெருகவும - விரதமேபரமாகவேதியருஞ் - சரதமாகவேசாத்திரங்காட்டினர்-சமயவாதிகடத்தமதங்களே-யமைவதாகவரற்றிமலைந்தனர்-மிண்டியமாயாவாதமென்னுஞ்-சண்டமாருதஞ்சுழித்தடித்தார்த்-துலோகாயதனெனுமொண்டிறற்பாம்பின்-கலாபேதத்தகடுவிடமெய்தி-யதிற்பெருமாயையெனைப்பலசூழவுந்-தப்பாமேதாம்பிடித்ததுசலியாத -

தழலதுகண்டமெழுகதுபோலத்-தொழுதுளமுருகியழுதுடல்கம்பித்
தாடியுமலறியும்பாடியும்பரவியுங் - கொடிறும்பேதையுங்கொண்டது
விடாதெனும்-படியேயாகிநல்லிடையறாவன்பிற்-பசுமரத்தாணியறை
ந்தாற்போலக்-கசிவதுபெருகிக்கடலெனமறுகி-யகங்குழைந்தனுகு
லமாய்மெய்விதிர்த்துச்- சகம்பேயென்றுதம்மைச்சிரிப்ப - நாணது
வொழிந்துநாடவர்பழித்துரை-பூணதுவாகக்கோணுதலின்றிச்-சது
ரிழந்தறிமால்கொண்டுசாருங்-கதியதுபரமாவதிசயமாகக்-கற்றாமன
மெனக்கதறியும்பதறியு-மற்றோர்தெய்வங்கனவிலுநினையா-தருபரத்
தொருவனவனியில்வந்து - குருபரனாகியருளியபெருமையைச் - சிறு
மையென்றிகழாதேதிருவடியிணையைப்-பிறிவினையறியாநிழலதுபோ
ல-முன்பின்னாகிமுனியாதத்திசை - யென்புநைந்துருகிநெக்குநெக்கே
ங்கி-யன்பெனுமாறுகரையதுபுரள " எனவும் வரும் திருவாசகத்தா
னும், " என்பேவிறகாயிறைச்சியறுத்திட்டுப் - பொன்போற்கனலிற்
பொரியவறுப்பினும்-அன்போடுருகியகங்குழைந்தார்க்கன்றி-என்போ
னமணியினையெய்தவொண்ணாதே " எனவும், " அன்பினுள்ளானப்
புறத்தானுடலாயுள்ளான் - முன்பினுள்ளான்முனிவர்க்கும்பிரானவன் -
அன்பினுள்ளாகியமர்ந்திருந்தம்பொருள் - அன்பினுள்ளார்க்கேயணைது
ணையாமே" எனவும் வரும் திருமந்திரத்தானும், " அன்பேயென்னன்
பேயென்றன்பாலழைத்தழைத்திட்- டன்பேயன்பாகவறிவழியும்-அ
ன்பன்றித்-தீர்த்தந்தியானஞ்சிவார்ச்சனைகள்செய்யுமது-சார்ந்தும்பழு
தன்றேதான்," என்னுந்திருக்களிற்றுப்படியாரானும், "கருமமாதவ
ஞ்செபஞ்சொல்காசறுசமாதிஞானம்-புரிபவர்வசமதாகிப்பொருந்தி
டேம்புரையொன்றின்றித்- திரிவறுமன்புசெய்வோர்வசமதாய்ச்சேர்ந்
துநிற்போம் - உரைசெய்வோமவர்முன்னெய்தியவருளத்துறைவோ
மென்றும்" என்னும் வாயுசங்கிதையானும் அறிக

இன்னோரன்ன சிறப்புக்களையுடைத்தாம் பத்திநெறியன்றிப் பரமுத்தி சித்தியாதென்பதைச் சின்னாட்பல்பிணிச் சிற்றறிவினா ளாய சீவர்கள் தேர்ந்துய்வான் சங்கரியார்க்குச் சாவா மூவா மருந்தாய சங்கரன் செவியறிவுறுத்திய வண்ணம் எந்நாட்டி னுஞ் சிறந்த நன்னாடாகிய தென்னாட்டிலே உயர்ந்தகுலத்தும், இழிந்தகுலத்தும் திருவவதாரஞ்செய்து, செயற்கருஞ் செயகை களைச் செவ்வனே ஆற்றிச் சிந்தையு மொழியுஞ் செல்லா நிலைமைத்தாய அந்தமி லின்பத்தழிவில் பேறெய்தினார்கள் அறுபான்மும்மை நாயன்மார்கள். அவர்கள் தருட் சரிதங்களை

அறைவதே திருத்தொண்டர்புராணமாம். இதனைத் திருவருட்பெருஞ் செல்வராகிய சேக்கிழார்பெருமான் தென்றமிழ்நாடு உய்யத் திருவாய் மலர்ந்தருளுந் திருத்தொண்டை ஏற்றவரலாற்றையும், பிறவற்றையும் பெற்றான் சாம்பானுக்கும், முள்ளிச் செடிக்கும் முத்தி யளித்த உமாபதிசிவம் அருளிச்செய்த சேக்கிழார்புராணத்தானுணர்க.

இப்புராணம் பெரியபுராணமெனவும், திருத்தொண்டர் புராணமெனவும் இருதிருநாமங்களான் வழங்கப்பெறும் அவ்விரு நாமங்களும் ஆசிரியரால் இடப்பட்டனவென்பதை "எடுக்கு மாக்கதை" எனவும், "இங்கிதனாமங்கூறினிவ்வுலகத்துமுன்னாட்-டங்கிருளிரண்டின்மாக்கள்சிந்தையுட்சார்ந்துநின்ற-பொங்கியவிருளையேனைப்புறவிருள்போக்குகின்ற-செங்கதிரவன்போனீக்குந்திருத்தொண்டர்புராணமென்பாம்" எனவும் போந்த பாயிரத்தானுணர்க.

இக்காலத்துச் சிலர் பெரியபுராணத்துட் பலபாக்கள் சங்கநூற் கிடக்கைகளை விரவப்பெற்றுள்ளன என்றும், சேக்கிழார் செந்தமிழ்க் கலைப்புலமை மாத்திரம் நிரம்பப்பெற்றார் என்றும், அவர் திருவருட் புலமை கைவரப்பெற்றிலர் என்றுங் கூறிக்கழிபேருவகையுறுகின்றார். அஞ்ஞானிகள் சிவஞானிகளோடு வடிவான் ஒரோவழி ஒப்புறினும், பிறவற்றிற் றம்முட் சிறிதும் ஒவ்வாமை சிவணச் சங்கநூற்பாக்கள் பெரியபுராணப்பாக்களோடு சொல்வடிவில் ஒரோவழி ஒப்புறினும், பொருண்மாட்சியினும், பிறநயங்களினும் ஒப்புப்பெறா எனக் கொள்க. பண்டைச்சங்கநூற்கள் என்றது திருமுறைகளுட் சேராதனவற்றை என்க. இனி ஆசிரியர் திருவருள் காட்டியநெறியானே புராணம் பாடியருளிய திருவருட்பெரும்புலவர் என்பதனை அவரே "அருளினீர்மைத்திருத்தொண்டறிவருந் - தெருளினீரிதுசெப்புதற்காமெனின் - வெருளின்மெய்ம்மொழிவானிழல்கூறிய-பொருளினாகுமெனப்புகலாமன்றே" எனவும், "வெறியார்பொழிற்சண்பையர்வேந்தனெய்ப்பாசுரத்தைக்-குறியேறியவெல்லையறிந்துகும்பிட்டேனல லேன்-சிறியேனறிவுக்கவர்தந்திருப்பாதந்தந்தநெறியேசிறிதியானறி நீர்மைகும்பிட்டேனன்பால" எனவும் திருவாய்மலர்ந்தருளி விளக்கினமை காண்க. இவ்வுண்மை கண்டன்றே இப்புராணத்தை அருண்மொழியெனக்கொண்டு, பன்னிரண்டாந்திருமுறையாக வகுத்து, அருட்பாவென அன்புடன் போற்றி, ஆசிரியராம் அருண்மொழித் தேவரை அருட்பெரும் புலவரெனத் தொழுது, ஆனந்தவாரி தியிற்றிளைத்துய்ந்தனர் அநபாயவள்ளவர். தமிழ் வேதங்களின

பெறறியறிவிக்கும பெருங் கருவியா யிருததலானே இதன் மேன்மை யினிது விளங்கு மென்க. தோலாநாவினராயமேலோர் மொழிந்த சஙகநூறகளே இப்பெரியபுராணத்திறகு ஒபபுமை பெறுமெனின, பிறநூலகள் இதற்கு ஒப்புமை பெறுமாறெங் ஙனம் ? இவ்வருணூறகு ஒப்பாகவும உயர்வாகவும் வேறு நூற்களை விளமபுவோர் மாணுடராவரோ? அவர் அன்பினீர்மையும, அருளி னீர்மையும் அறிநதாராவரோ? அவரை "அன்பினவழிய துயிர்நிலை யஃதிலார்க்—கேன்புதோல்போர்த்தவுடம்பு" எனனுந திருககுறட்கு இலககியமாககி விலககுவா மேலோர.

இவவருணூலில அகததிணை மரபும், புறததிணை மரபும், வருணச்சிரம ஒழுககும், புறச்சமயபூாவபக்க ஒழுககும, அகச்சமய ஆசாரவழக்கும், அததுவித அருணெறி வழககும, உணமைச்சரியை யாதி உததம வழககும, பிறவும், ஒடபமுநதிட்பமும நுட்பமும பொருந்தி உவமனின்றுமாறு ஓதபபட்டுளளன. இனனும் இததிரு முறையின் காவியக்கவின்களும் பிறவும ஒல்காப்பெருமபுகழ்த தொல்காப்பிய முதலிய தொலலிலக்கணங்களையும, பல்காபபியஙக ளையும நலலாசிரியர்மாடடுக் கேட்டுத தெளிநது, ஊனுண்ணுமை முதலிய ஊனஙகட்தக கனவிலும மறநதும ஆளாகாதவர்களாய், ஞானசாரியரை வழிபட்டு, வேதாநதத தெளிவாஞ் சைவசித்தாநத உண்மைகளை உளளங்கை நெலலிககனிபோலக் கைவரபபெறறு, அனபின் தன்மையை அனுபவததிலறிநத ஒணபுலவரது நுண ணறிவிற்கே சிறிது விளங்கும் என்க. ஏனையோர் இவ்வெழி னூறகுச் செமபொருளுரைக்க எழுவது பேதைபபருவப் பெண் காமநூறபொருளை உணர்நதுரைக்குமாறு போலாம எனக.

இததுணைச் சிறப்பினதாய இதிற செறிநதுளள சிறநத வனபபுககளை ஒருங்கே தொகுத்துக் காட்டச் சிறிதும் வல லேனல்லேனுயினும, என சிறறறிவிறகுப புலப்பட்ட சிலவற்றை யீண்டெடுததுதவ வேண்டுமென, எனதுள்ளதெழுநத பேரவா என்னைப் பிடாபிடிததுநதியதேனும, உபோறகாதம இடநதாராமை யானும, இதனை வெளியிட்டார்கரு விருப்ப மினமையானும விரிக காது விடுததேன். பெருஙகாவியங்களை யாததோருள பெரும பாலோா பெணணுண் வனபபுக்களையும,பிறவறறையும் புகழ்நது வர் ணிபபான புகுநதுழிச் சுருங்கசசொலலல விளஙகவைததல முதலிய அழகுகளை அறவே மறநது, பலபாக்களால பகர்நதும் கருததைத்

தெளிவுற விளக்காது இயங்கினர். அப்பாக்களும் அன்பர்கட்கு இன்பளிக்காதனவாயிருப்பது வெள்ளிடைமலையே. சேக்கிழார் சுவாமிகள் அவ்விடங்களை நேர்ந்துழிச் செவிமடுப்போரும், செவ்வனே ஓதுவோரும், பிறரும் சிவமாநந்தனமை யெய்துமாறு கருத்து முற்றுறச் சுருங்கக்கூறிப் பேரின்பப்பொருள் கரந்து விளங்க விளம்பியுள்ளார். அதனைத் தாலிபுலாக நியாயத்தாற் காட்டுவல: "கற்பகத்தின் பூங்கொம்போகாமனுறன்பெருவாழ்வோ-பொற்புடையபுண்ணியத்தின்புண்ணியமோபுயல்சுமந்து-விற்குவளைபவளமலர்மதிபூத்தவிரைக்கொடியோ-வற்புதமோ சிவனருளோவறியேனென் றதிசயித்தார்." "முன்னேவந்தெதிர்தோன்று முருகனோபெருகொளியால் - றன்னேரின்மாரனோதாரமார் பின்விஞ்சையனோமின்னேர்செஞ்சடையண்ணன்மெய்யருள்பெற்றுடையவனோ-வென்னேயென்மனந்திரிந்தவிவனயாரோவென நினைந்தார்." "கழைசொரிதரளக்குன்றிற்கதிர்நிலவொருபாற்பொங்க-முழையரவுமிழ்ந்தசெய்யமணிவெயிலொருபானமொய்ப்பத்-தழைகதிர்ப்பரிதியோடுஞ்சந்திரனுறவுவாவிற்-குழையணிகாதர்வெற்புக்குடமிடச்சென்றாலொக்கும்." "வேதம்வேதியர்வேளவியேதியன-மாதரோதிமலரேயிணியன - காதலவீதியிலக்கேகவலைய-சூதமாதவியேபுறஞ்சூழ்வன. சாயலார்கணுசுப்பேதளர்வன-வாயமாடக்கொடியேயசைவன-சேயவோடைக்களிறேநிகைப்பன- பாயசோலைத்தருவேபயந்தன" என்னுந்திருவருட்பாக்களானுணர்க. திருக்குறிப்புத்தொண்டர் புராணத்தின் நிறைமையும், கண்ணப்பநாயனார் புராணத்துக் கவினையுங் கவனிக்கற் பாலனவாம். மங்கையர்க்கரசியார் மாணபுராணத்தையும் பார்த்து மகிழ்க.

இத்திருவருட்பாக்கனியுள் எங்கணுமொழுகுவது அன்பின ரசமே. இவ்வுண்மையை "பத்திச்சுவைநனி சொட்டச்சொட்டப் பாடிய கவிவலவ" எனச் சேக்கிழார் பிள்ளைத்தமிழார் சிறப்பித்த தாலுணர்க. அப்பத்திரசத்தை நுகர்ந்து ஆனந்தவாரிதியிற்றோய்ந்து இன்புறுவோர் ஒரு சிலரேயாவர். இதனை:—"குடிலையென்னுந் தடவயலுட்ப - ணருள்வித்திட்டுக்கருணைநீர்பாய்ச்சி-வேதமென்னும் பாதபம்வளர்த்ததனை-பாதபமதனிற்படுபயன்பலவே-அவற்றுள்- இலைகொண்டுவந்தனர்பலரேயிலையொரீஇத-தளிர்கொண்டுவந்தனர்பலரே தளிரொரீஇ-யரும்பொடுமலர்பிஞ்சருங்காயென்றிவை - விரும்பினர் கொண்டுகொண்டுவந்தனர்பலரே - யவ்வாறுறுப்புமிவ்வாறுபயப்ப - வோரும்வேதாந்தமென் றுச்சியிற்பழுத்த - சாரங்கொண்டசைவசித்

தாந்தத்-தேனமுதருந்தினர் சிலரே,'' என்னும் பண்டாரமும்மணிக் கோவையானுணர்க. இன்னும் இந்நூல் கருங்கன் மனத்தரையுங்கரையச்செய்வது; எச்சமயத்தவர்க்கும் இன்பூட்டுவது; சாதிவேற்றுமையைச் சேதித்தொழிப்பது; நவில்தொறும் நவில்தொறும் நாநயம் பயப்பது; பயில்தொறும்பயில்தொறும் பத்தியைவிளைப்பது; இக்கால நாகரிக இனிமையும் உடையது; பிறவுமினிய பெருமை பெற்றது.

இத்துணைச் சிறப்பினையுடைய அருமந்தன்ன இத்திருத்தொண்டர் புராண மூலத்தை ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகநாவலர் பெருமான் பிரதிக்கிணங்கப் பரிசோதித்து, அஃதுடன் அடியேனியற்றிய அரும்பதக்குறிப்புரையையும், வசனத்தையும் சேர்த்து, 1871-ம் ஆண்டிலே அமிழ்தினுமினிய தமிழ்நாட்டிலே அவதரித்து, அருட்பா என்பது ஆறிருமுறையேயென அரசமன்றமேறிய பசுமரத்தாணிபோனாட்டி, முன்னாத தில்லையம்பதியில் நடைபெற்ற திருமுறைமகோற்சவத்தை இக்காலத்து மக்கள் கண்டு இன்புற்றுய்ய அத்தில்லையினும் பிறபதிகளினும் இனிமையாய் நடாத்திக்காட்டி, 1907-ம் வருஷத்திலே சிவனடிசேர்ந்த சதாவதானம்-ஸ்ரீலஸ்ரீ-நா-கதிரைவேற்பிள்ளையவர்கள் ஞாபகசின்னத்திற்காக வெளியிடுத்தங்கள் குருபத்தியை விளக்கினார் எனதுதமையனார் திருவாரூர்-வி-உலகநாதமுதலியாரும், எனது கெழுதகைநண்பருமுழுவலன்பருமாகிய அ. சிவசங்கரமுதலியாரும்.

கல்வியினும், அறிவினும், அனுபவத்தினும் சிறியேனாகிய யான் இல்லௌகிகத்தில் நேர்ந்த பல இன்னல்களான் கடற்புயலிடைப்பட்ட கலனைக்கடுப்பக் கலங்கிய உள்ளத்தனாய் வந்துங்காலை எழுதி ஈந்த அரும்பதக்குறிப்புரையையும், வசனத்தையும் என்னுதவியைப் பெரிதும் வேண்டாது தாங்களே அச்சுப்பிழை பார்த்து வெளியிட்ட என்னொருசாலை மாணவர்கள் புரிந்த நன்றி என்றும் மறக்கற்பாலதன்று. அடியேனியற்றிய அரும்பதக்குறிப்புரையையும், வசனத்தையும் சொன்னயமுடைய நன்னயப்புலவர்கள் அன்னம் போற்கொள்வார்களாக. என்னுயிரனைய இருவரும் இதுபோன்ற பன்னூல்களை யச்சுவிமானமேற்றிக் குருபத்தியை வளர்க்குமாறு ஸ்ரீமுருகவேள் இருபாதத்தொருங்கிருவருளைச் சிந்திக்கின்றேன். சுபம்! சுபம்!! சுபம்!!!

இங்ஙனம்:

திருவாரூர்-வி. கலியாணசுந்தரன்.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருமுறைகண்டபுராணம்.

கருமுறை விண்டடி யவருய்ய மாறருள் கவுணியர் குலதீபந்
தருமிறை நாவுக் கரசா ரூரர் தாஞ்சே மித்திடுமத்
திருமுறை கண்ட புராண முரைக்கச் சிந்துர முகனற்றாள்
ஒருமுறை யிருமுறை மும்முறை வாழ்த்தி யுவந்தன் பொடுபணிவாம்

வேறு.

உலகமகிழ் தருசைய மீது தோன்றி யோவாது வருபொன்னி சூழ்சோ ணாட்டின், திலகமென விளங்குமணி மாடவாரூர்த் தியாகேசர் பதம்பணிந்து செங்கோ லோச்சி, அலகில்புகழ் பெறுராச ராச மன்ன னபயகுல சேகரன்பா லெய்து மன்பா, இலகுமொரு மூவருள் பதிக மொன்றொன் றேயினிதி னுரைசெய்ய வனபாற் கேட்டு. (௧)

கையிரண்டு முச்சிமே லேறக் கண்ணீர் கரைந்தோட மெய்ம்முழுதும் புளகம் போர்ப்ப, வையன்மலர்ப் பதமுளத்தே கொண்டு போற்றி யரிய முறை தேடவெங்கு மிலாமை யாலே, நையுமனத் தினனாகி யிருக்குங் காலை நாரையூ ரினிலாதி சைவமறை யோன்பால், வையமெலா மீடேறச் சைவம் வாழ மாமணிபோ லொருசிறுவன் வந்து தோன்றி (௨)

வளமொடுப நயனவிதிச் சடங்கும் பூண்டு மறைமுதலாங் கலைபயின்று வருநா ளீன்ற, கிளைமறையோ னோரூர்க்குச் செல்ல மைந்தன் சேடில்பிரா னுரைத்தமொழிப் படியே யந்தி, இளமதிசெஞ் சடைப்பொல்லாப் பிள்ளை யாரை யேத்தியா ராதிப்பா னினிதி னேகி, உளமலியன் பொடுதிருமஞ் சனமுன் னாகு முரியவெலாஞ் செய்துநிவே தனமுன் வைத்து. (௩)

எம்பெருமா னமுதுசெய வேண்டு மென்ன விறைஞ்சிடவு மமுது செயா திருப்பக் கண்டு, வெம்பியுள மேதேனுந் தவறி லுண்டோ வேழுமுக னேயடியே னிவேதித் திட்ட, பம்பமுத முண்ணாத தென்னை யென்னப் பரிந்துதலை தனைமோதப் புகுங்கா லெம்மான், நம்பிபொறு வெனத்தடுத்தவ் வமுதமெல்லா நன்கருந்த வுவந்துநம்பி கவில்வ தானான். (௪)

எந்தையே யினியடியேன் பள்ளிக் கேகி லெங்கடே சிகனடிப்பா னுந்த லாலே, சந்தமறை முதற்கலைக ணீயே யோதித் தரல்வேண்டு மெனவேழை முகத்தோ னன்று, மந்தமற வோதுவிக்க வோதி நம்பி மகிழ்ந்தன்னை நண்ணியது போல மற்றை நாளும், விந்தையொடு நிகழநம்பி யாண்டார் நம்பி மேவியிருந் திடுஞ்செய்தி வேந்தன் கேளா. (௫)

செல்வமிகு திருநாரை யூரின் மேவுஞ் சிவனளித்த மதகரிக்குச் சிந்தை கூர்ந்து, நல்லபுக ழுடையநம்பி யாண்டார் நம்பி நண்பினொடு நிவேதிப்பான் மதுர மிக்க, வெல்லையில்வா ழைக்கனிதே னவலோ டப்ப மெள்ளுண்டை யிவ்வுலகோ ரெடுக்க வென்றே, மல்லன்மிகு சேனையுட னிராச ராச மன்னவனு மந்நகரில் வந்து சேர்ந்தான். (௬)

ஆங்கதனுக் கந்நகரி லிடம்போ தாம லயல்சூழப் பதின்காத வகல வெல்லை, மாங்கனிவா ழைக்கனிகள் வருக்கை யாவும் வந்தனவவ் வெல்லை யெல்லா மருவ வைத்துப், பாங்கினுட னம்பிதாள் பணிந்து மன்னன் பல கனிகள் கொணர்ந்தவெலாம் பகர்ந்து போற்றி, யீங்கிதனைப் பொல்லாத பிள்ளை யாருக் கிப்பொழுதே நிவேதிக்க வென்று சொன்னான் (௭)

நம்பியா ரன்சொன்ன வார்த்தை கேளா நன்றெனது பணியென்ன வருளா லுன்னித், தும்பிமுக னடிபணிந்து மன்ன னிங்குத் தொகுத்தனநீ யமுதுசெய வேண்டு மென்னக், கம்பமதக் களிற்றுமுகத் தானு மங்குக் கருத்தினுட னம்பியுரைக் கிசைந்து காட்ட, விம்பரினில் வந்தனநாற் சுதி செய்தே யிருந்தவெலாம் படைக்கவவ னேற்றல் செய்தான். (௮)

புகாமுகக்கை புறப்படவே படைத்த வெல்லாம் புகுந்தவிட மறியாமற் போன பின்னை, அகமகிழ மெய்யரும்பிக் கண்ணீர் வார நம்பிகழ லணிபிணு லரசன் போற்றி, மிகவுமொரு விண்ணப்ப மடியேற் குண்டு மேதியனே கேளென்று விளம்பு வான்மெய்ப், புகழுதுசேர் மூவர்தமிழ் தொண்டர் செய்தி பூதலத்தில் விளங்கவெனப் போற்றி நின்றான் (௯)

அந்தவுரை கேட்டலுமங் கரசன் றன்னை நம்பிமகிழ்ந் தருள்புரிவா னருள்சேர் மூவர், செந்தமிழ்க ளிருந்தவிட மனப ருள்மேலார் செய்திகவ விநாயகன்றாள் சிந்தித் தெந்தாய், அந்தவகை யேதென்று கேட்டா லெந்தை மகிழ்ந்தருளு மந்நெறியை வழாது னக்குத், தந்திடுவன் மன்னபொறு வென் றுசொல்லித் தந்திமுகன் சந்நிதியிற் றாழ்ந்து சென்றான். (௧0)

சென்றுபணிந் திபமுகத்தோன் பாதப் போதைச் சென்னியில்வைத் தவனருளிற் றிளைத்துச் சிந்தை, யொன்றுமற வுருகிவிழி தாரை கொள்ள வுண்மையினால் வந்தித்தங் குவமையோன் றனைனை, இன்றமிழ்சேர் மூவர்தமி ழிருந்தவெல்லை யெல்லை யில்சீர்த் திருத்தொண்ட ரியல்புமோதத் தி, நன்றும ருள் செய்தருள வேண்டு மென்ன நாகமுக னம்பிக்கு நவில லுற்றான் (௧௧)

வாந்தருட்க ணீர்சொரிய நம்பி கேட்ப வண்டமிழ்க ளிருந்தவிட மன்றம் பலத்துள், கூர்ந்தவிருட் கண்டர்புறக் கடையின் பாங்காகக் கோலமலர்க் கைக்க ளடை யாள மாக்க, சார்ந்தனவென் றருள்செய்து தொண்டர் பேறுஞ் சாற்றுதலாற் சகத்தலத்தோ ரருளைச் சார, வார்ந்ததமி ழிருந்தவிட மன்பர் செய்தி யதனையு நம்பிமனத் தருளிற் கொண்டார் (௧௨)

கொண்டுகுல சேகரனுங் கோன்பால் வந்து குஞ்சரத்தோ னருள்செய்த கொள்கை யெல்லா, மண்டுபெருங் காதலுடன் சொல்லி யந்த வண்டமிழின் பெருமைதனை வகுத்துச் சொல்வார், கண்டபெரு மந்திரமே மூவர் பாடல் கைகாணு மந்திரங்கண் ணுதலோன் கூற, வெண்ணடிசையுஞ் சிவனருளைப் பெறுதற் காக விம்மொழியின் பெருமையையா னியம்பக் கேணீ (௧௩)

சேடர்மலி காழிநகர் வேந்தர் தாமுந் தேவர்புகழ் திருத்தோணிச் சிவனார் பங்கிற், பீடுடைய வுமைமுலைப்பா லருளா லுண்டு பிஞ்ஞகனைச் சினவி

டைமேற் பெருகக் கண்டு, தோடுடைய செவியன்முதற் கல்லூ ரென்னுந் தொடைமுடிவாப் பரசமயத் தொகைகண் மாளப், பாடினார் பதிகங்கள் பாவி லொன்றும பதினாறாயிர முளதாப் பகரு மன்றே. (கச)

திருநாவுக் கரையரெனுஞ் செம்மை யாளர் தீயமணர் சிறைநீங்க வதிகை மேவுங், குருநாமப் பரஞ்சுடரைப் பரவிச் சூலை கொடுங்கூற்றா யினவென்ன வெடுத்துக் கோதில், ஒருமானைத் தரிக்குமொரு வரையுங் காயு மொருநாற்பத் தொன்பதினா யிரம தாகப், பெருநாமப் புகலூரிற் பதிகங் கூறிப் பிஞ்ஞகனா ரடியிணைகள் பெற்று ளாரே. (கரு)

பினபுசில நாளின்க ணாரூர் நம்பி பிறங்குதிரு வெண்ணெய்நல்லூர்ப் பித்தா வென்னும், இன்பமுதற் றிருப்பதிக மூழி தோறு மீறாய முப் பத்தெண்ணா யிரம தாக, முன்புபுகன் றவர்நொடித்தான் மலையிற் சேர்ந்தார் முறைகளெல்லாந் திருத்தில்லை மூதூர் தன்னில், அன்றவர்கை யிலச்சினை யால் வைத்தார் மன்ன வாராய்ந்து தருகவென வருளிச் செய்தார். (கசு)

அருமறையைச் சிசசிலிபண் டருந்தத் தேடு மதுபோலன் றீதுவென்று முளதா முண்மைப், பரபதமுந் தற்பரமும் பரனே யன்றிப் பலரில்லை யெனவெழுதும் பனுவல் பாரி, னெரியினிடை வேவாதாற் றெதிரே யோடு மென்புகக்கு முயிர்கொடுக்கு மிடுநஞ் சாற்றுங், கரியைவளை விக்குங்கன் மிதக்கப் பண்ணுங் கராமதலை கரையிலுறக் காற்றுங் காணே. (கஎ)

என்றென்று நம்பிகளுப் பரிவா லுண்மை யின்றமிழின் பெருமைதனை யியம்பக் கேட்டுக், குன்றொன்று பேருருவங் கொண்டாற்போலுங் குஞ்சரத் தோனருளினையுட் கொண்டு மன்னன், மன்றினிடஞ் சென்றுமறை யோரந் தொண்டர் வார்சடையோர் காவலுடை மரபோர்க்கெல்லா, நன்றெங்கள் கணபதிதன் சொல்லி தென்று நன்மையுடன் மன்னவனா நவிலுங் காலை ()

அத்தகையோர் தமிழ்வைத்த மூவர் வந்தா லறைதிறக்கு மெனவுரைக்க வரசன் றானு, மெய்த்தகுசீ ரம்பலவர்க் குற்றசெல்வ விழாவெடுத்து விளம்புதமிழ் மூவர் தம்மை, உய்த்தணிவீ தியினுலா வருவித் தும்பர் நாயகனறன் கோயில்வல மாகி யுள்ளே, சித்தமெலா முருக்குதமி ழிருக்கை சேரச் சோதியவர் சேர்ந்ததெனச் செப்பி நின்றான். (க௯)

ஐயர்நட மாடுமம் பலத்தின் மேல்பா லருள்பெற்ற மூவர்தம தருள்சேர் செய்ய, கையதுவே யிலச்சினையா யிருந்த காப்பைக் கண்டவர்க ளதிசயிப்பக் கடைவாய் நீக்கிப், பொய்யுடையோ ரறிவுதனைப் புலன்கண் மூடும் பொறபதுபோற் போதமிகும் பாட றன்னை, நொய்யசிறு வன்மீக மூடக் கண்டு நொடிப்பளவி னிற்சிந்தை நொந்த வேந்தன். (உ0)

பார்த்ததனைப் புறத்துய்ப்ப வுரைத்து மேலே படிந்திருந்த மண்மலையைச் சேரத்தள்ளிச், சீர்த்ததில தயிலமலி கும்பங் கொண்டு செல்லுநனை யச்சொரிந்து திருவே டெல்லா, மார்த்தவரு ளதனாலே யெடுத்து நோக்க வலகிலா வேடுபழு தாகக்கண்டு, தீர்த்தமுடிக் கணிபரனே பரனே யென்னச் சிந்தைதளர்ந் திருகணீர் சோர நின்றான். (உக)

ஏந்துபுகழ் வளவனிவ்வா றன்பி னாலே யிடர்க்கடலின் கரைகாணா தினையுங் காலைச், சார்ந்தமலை மகள்கொழுந னருளால் வேதச் சைவநெறித் தலைவரெனு மூவர்பாடல், வேய்ந்தனபோன் மண்மூடச் செய்தே யீண்டு வேண்டு

வனை வைத்தோமென் றுலகி லுள்ள, மாந்தரொடு மன்னவனுங் கேட்கு மாற்
றால வானகத்தி லோரோசை யெழுந்த தன்றே. (உஉ)

அந்தமொழி கேட்டலுமே மன்னன் றானு மாடினான் பாடினா னலக்
கண் யாவுஞ், சிந்தினா னமுதமுண்டான் போல நெஞ்சந் தேறினா னம்பிதிரு
வடியிற் றாழ்ந்தான், பந்தமறு சிவனடியார் கொள்க வென்னப் பண்டாரந்
திறந்துவிட்டான் பரிவு கூர்ந்தான், இந்தவகைப் பெருங்களிகொண் மன்
னன் றானு மெழின்முறையை முன்போல வகுக்க வெண்ணி. (உங)

மன்னுதமிழ் விரகரெங்கள் காழி வேந்தர் வகுத்தருளா லமைத்ததிரு
முறையோர் மூன்றும், அன்னவகை வாகீசர் முறையோர் மூன்று மாரூரருரைத்
திருமுறைய தொன்றுந், துன்னவகை யேழாகத் தொகுத்துச் செய்தான்
றாயமனு வெழுகோடி யென்ப துன்னித், தன்னிகரி றிருவருளான் மன்
னன்றானுந் தாரணியோர் வீடுபெறுந் தன்மை சூழ்ந்தே. (உச)

வேறு.

பண்புற்ற திருஞான சம்பந்தர் பதிக முந்நூற்
றெண்பத்தி னானிலங்கு திருமுறைமூன் று
நண்புற்ற நாவரசர் முந்நூற்றேழ் மூன்றினால்
வண்பெற்ற முறையொன்று நூற்றினால் வன்றொண்டர் (உரு)

ஆகவெழு திருமுறையே யருட்டிருவா சகமொன்று
மோகமெறி திருவிசைப்பா மாலைமுறை யொன்றுசிவ
போகமிகு மந்திரமா முறையொன்று புகழ்பெறவே
பாகமிகுந் திருமுறைகள் பத்தாக வைத்தார்கள் (உசு)

வைத்ததற்பி னம்பிகழுன் மன்னாபிரான் மகிழ்ந்திறைஞ்சிச்
சித்திதரு மிறைமொழிந்த திருமுகப்பா சுரமுதலா
உய்த்தபதி கங்களையு மொருமுறையாச் செய்கவெனப்
பத்திதருந் திருமுறைகள் பதினொன்றாப் பண்ணினார் (உஎ)

மந்திரங்க ளெழுகோடி யாதலினான் மனுவுமவர்
இந்தவகை திருமுறைக ளேழாக வெடுத்தமைத்துப்
பந்தமறு மந்திரங்கள் பதினொன்று மாதலினால்
அந்தமுறை நான்கினொடு முறைபதினொன் றாக்கினார் (உஅ)

ஆக்கியபின் றிருத்தொண்டத் தொகையடைவை யருளாலே
நோக்கியபின் னயன்மா றடங்கடைவுந் தொழிற்பேறும்
பாக்கியத்தா லபமுகத்தோ னருள்செய்த பகுதியினால்
வாக்கியலந் தாதி நம்பியடை வேவகுத்தார். (உகூ)

சீருள்சே ரறுபத்து மூவர்தனி திருக்கூட்டஞ்
சாருமவ ரானபா னுந்தண்டமிழா லுரைசெய்து
பேரிசையாம் வகையடைவு புவியினிடைப் பெருமையினாற்
சீருலவு திருவெருக்கத் தம்புலியூர் சென்றடைந்தார் (௩0)

சென்னியரு ணம்பியிவ ரங்கரைச் சேர்ந்துசிவன்
மன்னுதிருக் கோயிலினை வலங்கொண்டு பணிந்தரனே

இன்னிசைதந் தருளென்ன விரக்கமுடன் குறைந்திரப்பக்
கன்னியொரு பங்குடையோ னருள்செய்த கட்டளைப்பாம. (௩௧)

நல்லிசையாழ்ப் பாணனார் நன்மரபின் வழிவந்த
வல்லியொருத் திக்கிசைகள் வாய்ப்பவளித் தோமென்று
சொல்லவவ டனையழைத்துச் சுருதிவழிப் பண்டமுவு
நல்லிசையின் வழிகேட்டு நம்பியிறை யுணமகிழ்ந்தார (௩௨)

ஆங்கவளை யம்பலத்து ளாடுவார் திருமுன்பே
பாங்கினுடன் கொடுவந்து பண்ணடைவு பயில்பாடல்
ஓங்கருளான் முறைபணித்தற் கொக்குமென வோரோசை
நீங்கரிய வானின்க ணிகழ்வா சன்கேட்டான். (௩௩)

மன்னனுக்கு நம்பிக்கு மறையவர்மூ வாயிரவர்
பன்னரிய திருத்தொண்டர் பலதுறையோர் தாங்கேட்க
இன்னருண்முன் வியந்துரைத்த விவண்முதலா விசைத்தவிசை
தென்னிலமேன் மிகத்தோன்றத் திருவருளாற் றேனறியதாம் (௩௪)

சொன்னட்ட பாடைக்குத் தொகையெட்டுக் கட்டளையாம்
இன்னிசையாற் றருந்தக்க ராகத்தேழ் கட்டளையாம
பன்னுபழந் தக்கரா கப்பண்ணின் மூன்றுளதாம
உன்னரிய தக்கேசிக் கோரிரண்டு வருவித்தார. (௩௫)

மேவுகுறிஞ் சிக்கஞ்சு வியாழகுறிஞ் சிக்காறு
பாவுபுகழ் மேகரா கக்குறிஞ்சிப் பாலிரண்டு
தேவுவந்த விந்தளத்தின் செய்திக்கு நான்கினிய
தாவில்புகழ்க் காமரத்தின் றன்மைதனக் கிரண்டமைத்தார. (௩௬)

காந்தார மாகியபி யந்தையாங் கட்டளைக்கு
வாய்ந்தவகை மூன்றாக்கி வன்னட்ட ராகத்திற்
கேயந்தவகை யிரண்டாக்கிச் செவ்வழியொன் றாக்கியிசைக்
காந்தார பஞ்சமத்தின் கட்டளைமூன் றாக்கினா (௩௭)

கொல்லிக்கு நாலாக்கிக் கவுசிகத்துக் கூறும்வகை
சொல்லிரண்டாக்குமிக் தூங்கிசைநோ பஞ்சமத்திற்
கொல்லையினி லொன்றாக்கிச் சாதாரிக் கொன்பதாப்
புலனுமிசைப் புறநீர்மைக் கொன்றாகப் போற்றினா (௩௮)

அந்தாளிக் கொன்றாக்கி வாகீச ரருந்தமிழின்
முந்தாய பலதமிழுக் கொன்றொன்று மொழிவித்து
நந்தாத நேரிசையாங் கொல்லிக்கு நாட்டிவிரண்
டுந்தாங்கு குறுந்தொகைக்கோர் கட்டளையா விரித்துரைத்தார. (௩௯)

தாண்டகமாம் பாவுக்கோர் கட்டளையாத் தாபித்தங்
காண்டகையார் தடுத்தாண்ட வையாரு டய்யமுறைக்
கீண்டிசைசே ரிந்தளத்துக் கிரண்டாக வெடுத்துரைத்து
நீண்டதக்க ராகத்துக் கிரண்டாக நிகழ்வித்தார். (௪௦)

கூறரிய நட்டரா கத்திரண்டு கொல்லிக்கு
வேறுவகை மூன்றாக மிகுத்தபழம் பஞ்சுரத்துக்

கேறும்வகை யிரண்டாக்கி யின்னிசைதேர் தக்கேசிப்
பேறிசையா ருகங்கியதிற் காந்தாரம் பிரித்திரண்டாம். (சக)

ஒன்ருகுங் காந்தார பஞ்சமத்துக் கோரிரண்டா
நன்ருன சீகாமரம் பாடைக்கு நவின்றுரைக்கிற்
குன்ருத புறநீர்மைக் கிரண்டாகுங் கூறுமிசை
ஒன்ருகக் காமரத்துக் கொன்ருகப் போற்றினர். (சஉ)

உற்றவிசைக் குறிஞ்சிக்கோ ரிரண்டாக வகுத்தமைத்துப்
பற்றரிய செந்துருத்திக் கொன்ருக்கிக் கவுசிகப்பாற்
றுற்றவிசை யிரண்டாக்கித் தூயவிசைப் பஞ்சமத்துக்
கற்றவிசை யொன்ருக்கி யானருளால் விரித்தமைத்தார் (சங)

இந்தவகை சிவன்செவிப்பா லெக்கண்ணுந் தழைத்தோங்க
அந்தமிலா வறுபத்து மூவாரு ளம்புவிமே
னந்தியிட மும்மலமு நல்லுலகோர் நீங்கியிடச்
சிந்தையருட் சிவமாகத் தெளிவித்தா னருட்சென்னி. (சச)

சீராருந் திருமுறைகள் கண்டதிறற் பார்த்திபனும்
ஏராரு மிறைவனையு மெழிலாரு நம்பியையும்
ஆராத வன்பினுட னடிபணிந்தங் கருளவிரவச
சோராத காதன்மிகு திருத்தொண்டா பதந்துதிப்பாம (சரு)

திருமுறைகண்டபுராணம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - சகூ



சிவமயம்

திருச்சிற்றம்பலம்.

---

# திருத்தொண்டர் புராணசாரம்.

மல்குபுகழ் வன்றொண்ட ரருளா லீந்த வளமருவு திருத்தொண்டத் தொகையின் வாய்மை, நல்கும்வகை புல்கும்வகை நம்பி யாண்டார் நம்பிதிரு வந்தாதி நவின்ற வாற்றாற், பல்குநெறித் தொண்டர்சீர் பரவ வல்ல பான்மையா ரெமையாளும் பரிவால் வைத்த, செல்வமிகு திருத்தொண்டர் புராண மேவுந் திருந்துபய னடியேனுஞ் செப்ப லுற்றேன். (௧)

## சுந்தரமூர்த்திநாயனார் புராணம்.

தண்கயிலை யதுநீங்கி நாவ லூர்வாழ் சைவனார் சடையனார் தனய னாராய், மண்புகழ வருட்டுறையா னோலை காட்டி மணம்விலக்க வன்றொண்டா யதிகை சேர்ந்து, நண்பினுட னருள்புரிய வாரூர்மேவி நலங்கிளரும் பரவைதோ ணயந்து வைகித், திண்குலவும் விறன்மிண்டர் திறல்கண் டேத்துந் திருத்தொண்டத் தொகையருளாற் செப்பி னாரே (௨)

செப்பலருங் குண்டையூர் நெல்லழைத்துத் திருப்புகலூர்ச் செங்கல்செழும் பொன்னாச் செய்து, தப்பின்முது குன்றாற்றரும பொருளாற் றிட்டுத் தடத்தெடுத்துச் சங்கிலிதோள் சார்ந்து நாதன், ஒப்பிறனித் தூதுவந்தா றூடு நீறி யுறுமுதலை சிறுமதலை யுமிழ நல்கி, மெய்ப்பெரிய களிற்றேறி யருளாற்சேரர் வேந்தருடன் வடகயிலை மேவி னாரே (௩)

## தில்லைவாழந்தணர் புராணம்.

நல்லவா னவர்போற்றுந் தில்லை மன்று ளாடகஞ்செய் பெருமானுக் கணியா நற்பொற், றொல்லைவான் பணியெடுத்தற் குரியார் வீடு துறந்தநெறி யார்தொண்டத் தொகைமுன் பாடத், தில்லைவா ழந்தணரென் றெடுத்து நாதன் செப்புமரு ளுடையார்முத் தீயார் பதத்திக், கெல்லைகாண் பரியாரொப் புலகிற் றாமே யேய்ந்துளா ரெமையாள வாய்ந்து ளாரே. (௪)

## திருநீலகண்டநாயனார் புராணம்.

தில்லைநகர் வேட்கோவர் தூர்த்த ராகித் தீண்டிலெமைத் திருநீல கண்ட மென்று, சொல்லுமனை யாடனையே யன்றி மற்றுந் துடியிடையா ரிடையின்பந் துறந்து மூத்தங், கெல்லையிலோ டிறைவைத்து மாற்றி நாங்க ளெடுத்திலமென் றியம்புமென விழிந்து பொய்கை, மெல்லியலா ளுடன்மூழ்கி யிளமை யெய்தி விளங்குபுலீச் சரத்தரனை மேவி னாரே (௫)

## இயற்பகைநாயனார் புராணம்.

எழிலாருங் காவிரிப்பூம் பட்டி னத்து ளியல்வணிக ரியற்பகையா ரிருவர் தேட, வழலாய பிரான்றூர்த்த மறையோ னாகி யாயிழையைத் தரவேண்டி யணைய வையன், கழலாரப் பணிந்துமனைக் கற்பின் மேன்மைக் காதலியைக

கொடுத்தமர்செய் கருத்தால் வந்த, பிழையாருஞ் சுற்றமெலாந் துணித்து மீளப் பிஞ்ஞகனு ரழைத்தருளப் பெற்று ளாரே (௬)

## இளையான்குடிமாறநாயனார் புராணம்.

மன்னியவே ளாண்டொன்மை யிளசை மாறர் வறுமையா லுணவுமிக மறந்து வைகி, உன்னருநள் ளிருண்மழையி லுண்டி வேண்டி யம்பாபிரா னணையவய லுழுது வித்துஞ், செந்நென்முளை யமுதமனை யலக்கா லாக்கிச் சிறுபயிரின் கறியமுது திருந்தச் செய்து, பன்னலரு முணவருத்தச் செழுந்த சோதிப் பரலோக முழுதாண்ட பான்மை யாரே (௭)

## மெய்ப்பொருணாயனார் புராணம்.

சேதிநாற் கோவலூர் மலாட மன்னர் திருவேட மெய்ப்பொருளாத் தெளிந்த சிந்தை, நீதியினா ருடனபொருது தோற்ற மாற்றா னெடுஞ்சினமுங் கொடும்படையு நிகழா வண்ண, மாதவர்போ லொருமுறைகொண் டணுகி வாளால் வன்மைபுரிந் திடமருண்டு வந்த தத்தன், காதலுற நமதத்தா வென்று நோக்கிக் கடிதகல்வித் திறைவனடி கைக்கொண் டாரே (௮)

## விறன்மிண்டநாயனார் புராணம்.

விளங்குதிருச் செங்குன்றூர் வேளாண் டொன்மை விறன்மிண்டர் திருவாரூர் மேவு நாளில், வளங்குலவு தொண்டரடி வணங்காதேகும் வன்றொண்டன் புறகவனை வலிய வாண்ட, துளங்குசடை முடியோனும் புற னென்றன்பாற் சொல்லுதலு மவர்தொண்டத் தொகைமுன் பாட, வுளங் குளிர வுளதென்றா ரதனா லண்ண லுவகைதர வுயர்கணத்து மோங்கினாரே.

## அமர்நீதிநாயனார் புராணம்.

பழையாறை வணிகரமர் நீதி யாரபாற் பரவுசிறு முனிவடிவாய்ப் பயிலு நல்லூராக, குழைகாதர் வந்தொருகோ வணந்தனைவைத்தாக கொடுத்ததனை யெடுத்தொளித்துக் குளித்து வந்து, தொழிலாரு மது[?] வெருண்டு நிரித் துலையிலிடுங் கோவணமோ தூங்கு மென்ன, எழுபாரும் பொனம னைவி யிளஞ்சே யேற்றி யேறினாவா லுலகுதொழ வேறி னாரே (௧௦)

## எறிபத்தநாயனார் புராணம்.

திருமருவு கருவூரா னிலையார் சாத்துஞ் சிவகாமி யார்மலரைச் சிந்தி யானை, அரனன்றியோ ரெறிபத்தர் பாகரோடு மறவெறிய வென்னுயிரு மகற்றீ ரெனவே, புரவலனார் கொடுத்தபடை யன்பால் வாங்கிப் புரிந்தரிவான் புகவெழுந்த புனித வாக்காற், கரியினுடன் விழுந்தாரு மெழுந்தார் தாமுந் தணந்த ரதுகாவல் கைக்கொண் டாரே (௧௧)

## ஏனாதிநாதநாயனார் புராணம்.

ஈழக் குலச்சான்றா ரெயினனூரா ரேனாதி நாதனா ரிறைவனீ றளைந்த, தாழுத் தொழுமரபார் படைக்க லாற்றுந் தன்மைபெற வதிசூரன் சமரிற் றோற்று, வாழுந் திருநீறு சாத்தக் கண்டு மருண்டார் தெருண்டார் கைவாள விடார்நோ, வீழக் களிப்பார்போ னின்றே யாக்கை விடுவித்துச் சிவனருளே மேவினாரே. (௧௨)

## கண்ணப்பநாயனார் புராணம்.

*வேடர்தம் பதியுடுப்பூர் வேந்தனாகன் விளங்கியசேய் திண்ணனார் கன்னிவேட்டைக், காடதில்வாய் மஞ்சனமுங் குஞ்சிதரு மலருங் காய்ச்சினமென் றிடுதசையுங் காளத்தியார்க்குதவ, தேடருமன் பினிலாறு தினத்தளவு மளிப்ப சிறுசிவகோசரியுந் தெளியவிழிப் புண்ணீர், ஓடவொரு கண்ணப்பி யொருகண்ணப்ப வொழிகவென வருள்கொடுக்கு குறைவிலரே.* (௧௩)

## குங்குலியக்கலயநாயனார் புராணம்.

*சிலமலி திருக்கடவூர்க் கலயனாராங் திகழ்மறையோர் பணிவறுமை சிதையாமுன்னே, தாலியைநெற் கொளவென்று வாங்கிக்கொண்டு கடைமையில் குங்குலியத்தாற் சார்ந்தசெல்வர், ஞாலநிகழ் திருப்பனந்தாளுறைசாமிக்கே நரபதியுந் தொழக்கசசா ணயந்துபோதப், பாலமுதமுண்டாரு மாசுமெய்யநிப பரிந்தமுது செயவருளசோ பான்மையாரே* (௧௪)

## மானக்கஞ்சாறநாயனார் புராணம்.

*கஞ்சநகர் மானக்கஞ் சாறனாசிரக காதன்மகள் வதுவைமணங் காணநாதன், வஞ்சமலி மாவிரதத் தலைவனாகி வந்துபுகுந் தயனாக மகிழ்புகந்து நோக்கிப், பஞ்சவடிக் காமென்ன வரிந்துநீட்டும் பதத்தெரிந்து மைந்தனைந்த வன் பணித்தவாக்கா, லெஞ்சலிலவண் குழலபெற்ற பேதைமாதுர் வேயவபிராற் குதவியரு ளெய்தினாரே* (௧௫)

## அரிவாட்டாயநாயனார் புராணம்.

*தாவில்கண மங்கலத்துள் வேளாண்டொன்மைத் தாயனாரா நாயனார் தமக்கே செந்நெற், றூவரிசி யெனவிளைவ தவையேயாகத் துறந்துணவு மரிசி தூளங்குகீரை, யாவினிலைந் துடனகொணர வேவாகமாறிசிந்த வடிக தரிவாள் கொண்டூட்டி யரியாமுனமே, மாவடுவி ரெனவியம்பரமன கரமுந் தோன்றி வாளவிலக்கி யமரர்தொழ வைத்ததன்றே.* (௧௬)

## ஆனாயநாயனார் புராணம்.

*மங்கலமா மழநாட்டு மங்கலமாநகருண் மருவுபுக ழானாயர் வளராமேய்ப்பார், கொங்கலர்பூந் திருக்கொன்றை மருங்கு சாரந்து குழலிசையி லைந்தெழுத்துங் குழையவைத்தூத, தங்குசரா சரங்களெல்லா முருகாநிற்பத் தம்பிரானணைந்துசெவி தாழ்த்திவாழ்ந்து, பொங்கியவான் கருணைபுரிந் தென்று மூதப் போதுகவென் றருளுவுடன் போயினாரே* (௧௭)

## மூர்த்திநாயனார் புராணம்.

*வழங்குபுகழ் மதுரைநகர் மூர்த்தியாராம் வணிகர்திரு வாலவாய மணணர் சா [illegible], தழங்குதிர முழங்கைதாத் தேய்க்கவூறுந் தவிர்ந்தமணா வஞ்சனையுங் கவிரமன்ன, னிழந்தவயி ரினனாக ஞாலமலக வெழிலவேணி முடியாகவிலங்குவேட, முழங்குபுக ழணியாக விரைநீறாக மும்மையுல காண்டருளி முன்னினாரே.* (௧௮)

## முருகநாயனார் புராணம்.

*மன்னுதிருப் புகலூர்வாழ் முருகனார மறையவர்கோ வர்த்தமானீசரத்தா, செனனியினுக கழகமரு மலர்களகொய்து திருமாலை புகழ்மா*

திகழச்சாத்திக், கன்னிமதிற் கழுமலநா டுடையநாதன் காதன்மிகு மணங் காணுங் களிப்பினாலே, யின்னல்கெட வுடன்சேவித் தருளான்மீளா திலங்கு பெருமணத்தானை யெய்தினாரே. (௧௯)

## உருத்திரபசுபதிநாயனார் புராணம்.

பங்கமில்வண் புகழ்நிலவு தலையூர்வாழும் பசுபதியா ரெனுமறையோர் பணிந்துசெந்தே, னங்கமல மடுவினிடை யல்லுமெல்லு மகலாதே யாகளமா யமர்ந்துநின்று, திங்கள்வளர் சடைமுடியா னடிகள்போற்றித் திருவெழுத்து முருத்திரமுந் திகழவோதி, மங்கையிட முடையபிரா னருளான்மேலை வானவர்க டொழுமுலகின் மன்னினாரே. (௨௦)

## திருநாளைப்போவார்நாயனார் புராணம்.

நன்மைதிகழ் மேற்காநாட் டாதனூர்வாழ் நந்தனார் புறத்தொண்டர் நாளைபோகப், பொன்மலிதென் புலியூர்க்கென் றுரைப்பார்புன் கூர்ப் பொய்கையமைத் தடலேறு பிரியநோக்கி, வன்மதில்சூழ் தில்லையிறை யருளால் வாய்ந்த வண்டழலி னிடைமூழ்கி மறையோர் போற்ற, மின்மலிசெஞ் சடைமுனியா யெழுந்துநாதன் விளங்குநடந் தொழமன்றுண மேவினாரே. (௨௧)

## திருக்குறிப்புத்தொண்டநாயனார் புராணம்.

கொந்தலர்பூம் பொழிற்கச்சி நகரேகாலிக் குலத்தலைவர் தவர்குறிப்புக் குறித்துளார்பால், வந்திறைவர் நமக்கின்று தாரீராகின் வருந்துமுட லெனவாங்கி மாசுநீத்த, கந்தைபுல ராதொழிய மழையுமாலைக் கடும்பொழுதும் வரக்கண்டு கலங்கிக் கன்மேற், சிந்தமுடி புடைப்பளவிற் றிருவேகம்பர் திருக்கைகொடு பிடித்துயர்வான் சேர்த்தினாரே. (௨௨)

## சண்டேசுரநாயனார் புராணம்.

வேதமலி சேய்ஞலூ ரெச்சதத்தன் விளங்கியசேய் மறைபயிலும் விசாரசன்மா, கோதனமேய்ப் பவன்கொடுமை பொறுத்தாமே கொண்டுதிரை மண்ணியின்றென் கரையினீழற், றத்தியின் மணலிலிங்கத் தான்பாலாட்டத் தாதைபொறா தலையிடறுந் தாள்கண்மாளக், காதிமலர்த் தாமமுயர் நாமமுண்ட கலமகனும் பதமருளாற் கைக்கொண்டாரே. (௨௩)

## திருநாவுக்கரசுநாயனார் புராணம்.

போற்றுதிரு வாமூரில் வேளாண்டொன்மைப் பொருவில்கொறுக் கையர்திபர் புகழனார்பான், மாற்றருமன் பினிற்றிலக வதியாமாது வந்துதித்த பின்பமருணீக்கியாருந், தோற்றியமண சமயமுறு துயரநீங்கத் துணைவாரு டரவந்த சூலைநோயாற், பாற்றருநீ ளிடரெய்திப் பாடலிபுத்திரத்திற் பாழியொழித் தரனதிகைப் பதியில்வந்தார். (௨௪)

வந்துதமக்கை யருளா னீறுசாத்தி வண்டமிழா னோய்தீர்ந்து வாக்கின் மன்னாய், வெந்தபொடி விடம்வேழம் வேலைநீந்தி வியன்சூலங் கொடியிடபம் விளங்கச் சாத்தி, யந்தமிலப் பூதிமக னரவுமாற்றி யருட்காசு பெற்றுமறை யடைப்புநீக்கிப், புந்திமகிழ்ந் தையாற்றிற் கயிலைகண்டு பூம்புகலூ ரரன்பாதம் பொருந்தினாரே (௨௫)

## குலச்சிறைநாயனார் புராணம்.

கோதில்புகழ் தருமணமேற் குடியார்கோவன் குலச்சிறையார் தென்
னர்குல வமைச்சராகுன்று, மாதவர்க ளடிபரவு மரபார்பாண்டி மாதேவி யார
ருள்வான் பயிர்க்குவேலி, காதன்மிகு கவுணியர்கோன் வாதிற்றோற்ற கைய
ரைவை கைக்கரைசேர் கழுவிலேற்றி, நீதியினா லாலவாய் நிமலர்ச்சேர்ந்த
நின்மலனா ரென்மலங்க ணீக்கினாரே (உசு)

## பெருமிழலைக்குறும்பநாயனார் புராணம்.

கொண்டல்பணி வளர்சோலை மிழலைநாட்டுக் கோதில்புகழ்ப் பெருமிழ
லைக் குறும்பனார்சீ, ரண்டர்பிரா னடியவருக் கடியாராகு மாதரவா லாரூர
வன் றொண்டர்க்களாய், மண்டொழுமெண் டருசித்தி வாய்த்துளாராம
வன்றொண்டர் வடகயிலை மருவுநாண்முன், னெண்டிகழு மறைமூல நெறியூ
டேகி யிலங்கொளிசேர் வடகயிலை யெய்தினாரே. (உஎ)

## காரைக்காலம்மையார் புராணம்.

தங்குபுகழ்க் காரைக்கால் வணிகன்மிக்க தனதத்தன் றரும்புனித வதி
யார்மாவின், செங்கனிக டிருவருளா லழைப்பக்கண்டு திகழ்கணவ னாஞ்ச
யித்துத் தேசநீங்க, வங்கவுட லிழந்துமுடி நடையாலேறி யம்மையே யெனு
நாத னப்பாவென்று, பொங்குவட கயிலைபணிந் தாலங்காட்டிற் புனிதனடி
மனவரதம் போற்றினாரே. (உஅ)

## அப்பூதியடிகணாயனார் புராணம்.

அந்தமினற் றிங்களூர் வருமப்பூதி யருமறையோர் திருநாவுக் கரசனா
மம், பந்தரிடை யெழுதக்கண் டரசுமெய்தப் பணிந்துபரி கலநேடிப் படப்
பைசோந்த, மைந்தனுயி ருயாகதலி யிலைமேற்றுஞ்சு மாளரவு கவரவுடன்
மறைத்தலை கேட்டச, சிந்தைமகிழ்ந் தியாபதிக மருந்தாற்றீர்த்துத் திருவ
முது செயவருளச் சோந்துளாரே (உகூ)

## திருநீலநக்கநாயனார் புராணம்.

நீதிதரு மறையோர்வாழ் சாத்தமங்கை நீலநக்க ரயவந்தி நிமலர்மேனி,
யூதிவிழுஞ் சிலம்பிகடிந் தவளைநீத்தாக குமியாத விடநாத னூறுநோய
காட்டக, காதன்மிகு மனைவியையு மகிழ்ந்துமேவிக் காழியர்கோ னமுது
செயக் களித்துவாழ்ந்து, வேதிகையிற் பாணனார்க் கிடமுநல்கி விளங்கு
பெரு மணத்தானை மேவினாரே. (ஙo)

## நமிநந்தியடிகணாயனார் புராணம்.

நண்ணுபுகழ் மறையோர்வா ழேமப்பேறூர் நமிநந்தி யடிகடிரு விளக்கு
நல்க, வெண்ணெயம ணர்கள்விலக்க நீராலாரூ ரிலகுமா னெறியாருக்
கேற்றுநாளிற், கண்ணமணர் கெடக்கணம்பெற் றடிகள்வாழக் காயலரு
ணிபந்தங்கள் கட்டுவித்தே, யண்ணலருள் கண்டாரூ ரமர்ந்துதொண்டாக்
காணியெனு மாசினரு ளடைந்துளாரே. (ஙக)

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் புராணம்.

காழிநகர்ச் சிவபாத விதயர்தந்த கவுணியர்கோ னழுதுமையாள் கருதி
யூட்டு, மேழிசையி னமுதுண்டு தாளம்வாங்கி யிலங்கியநித் திலச்சிவிகை

*யிசையவேறி, வாழுமுய லகனகற்றிப் பந்தரேய்ந்து வளர்கிழிபெற் றரவின் விட மருகற்றீர்த்து, வீழிநகர்க் காசெய்தி மறைகதவம் பிணித்து மீன வன்மே னியின்வெப்பு விடுவித்தாரே.* (௫௨)

*ஆரெரியிட் டெடுத்தவே டவைமுன்னேற்றி யாற்றிலிடு மேடெதிர போ யணையவேற்றி, யோரமண ரொழியாமே கழுவிலேற்றி யோதுதிருப் பதிகத்தா லோடமேற்றிக், காருதவு மடிபுத்தன றலையிலேற்றிக் காயாத பனையின்முது கனிகளேற்றி, யீரமிலா வங்கமுயி ரெய்தவேற்றி யிலங்கு பெரு மணத்தானை யெய்தினாரே.* (௫௩)

### ஏயர்கோன்கலிக்காமநாயனார் புராணம்.

*ஏதமில்வேளாளர்பெரு மங்கலத்து ளேயர்கோன் கலிக்காம ரிறையை நேரே, தூதுகொளு மவனாகி லென்னா மென்னுந் துணிவினர்பா லிறை வனருஞ் சூலையேவி, வேதனைவன் றொண்டன்வரி னீங்குமென்ன வெகுண்டு டல்வாள் கொடுதுறந்து மேயநாவற், போதகமு முடலிசைய வெழுந்துதாழ்ந்து போற்றியது விலக்கியருள் பொருந்தினாரே* (௫௪)

### திருமூலநாயனார் புராணம்.

*கயிலாயத் தொருசித்தர் பொதியிற்சேர்வார் காவிரிசூழ் சாத்தனூர் கருதுமூலன், பயிலாநோ யுடன்வீயத் துயரநீடும் பசுக்களைக்கண் டவனுட லிற் பாய்ந்துபோத, வயலாகப் பண்டையுட லருளான்மேவி யாவடுதண் டுறையாண்டுக ளொருபாவாகக், குயிலாரு மரசடியி லிருந்துகூறிக் கோதிலா வடகயிலை குறுகினாரே.* (௫௫)

### தண்டியடிகணாயனார் புராணம்.

*திருவாரூர் வருந்தண்டி யடிகள்காட்சி சேராதார் குளந்தொட்டற கம ணர்சீறிக, குருடாநீ முன்செவிடுங் கூடிற்றென்று குறித்தறியைப் பறித தெறியக் கொதித்துத்தங்க, ணருளாலே விழித்தெவரு மந்தராக வமணர் கலக்கமபலகண டவாகள்பாழிப, பருவான கற்பறித்தா விக்கரையுங்கட்டிப் பரனருளா லமருலகம் பற்றினாரே.* (௫௬)

### மூர்க்கநாயனார் புராணம்.

*தொண்டைவள நாட்டுவளர் வேற்காட்டூர்வாழ் தொல்லுழவா நற்சூதர் சூதுவென்று, கொண்டபொருள் கொண்டன்பர்க் கமுதளிக்குங் கொள்கை யினா திருக்குடந்தை குறுகியுள்ளார், விண்டிசைவு குழறுமொழி வீணர் மாள வெகுண்டிடலான் மூர்க்கரென விளம்புநாம, மெண்டிசையு மிகவு டையா ரண்டாபோற்று மேழுலகு முடனாளு மியல்பினாரே* (௫௭)

### சோமாசிமாறநாயனார் புராணம்.

*அம்பர்நக ரந்தணர்சோ மாசிமாற ரன்பர்களாம் யாவர்க்கு மன்பினமு தளிப்பா, ரும்பர்திகழ் வகையாகம் பலவுஞ்செய்யு முண்மையினா ரைந்தெ ழுத்து மோவாநாவா, நம்பர்திகழ் திருவாரூர் நயந்துபோற்று நாவலர்கோ னடிபரவு நன்மையாலே, யிம்பர்தொழ வும்பாபணிந் தேத்தமேலை யேழுலகு முடனாளு மியலபினாரே.* (௫௮)

## சாக்கியநாயனார் புராணம்.

*சங்கமங்கை வரும்வேளாண் டலைவரகாஞ்சிச் சாக்கியரோடியைந்தவர்தந் தவநெறிஞ்சைவத, துங்கமலி பொருளுமுணர்ந் தந்தவேடந் துறவாதே சிவலிங்கந் தொழுவோரக் கண்டோ, ரங்கணமலா திருமேனியழுந்தச்சாதது யமருநாண மறந்தொருநா ளருந்தாம் சோடிச், செங்கலெறிந் திமெனவின் மகிழ்ந்தநாதன் றிருவருளா லமருலகஞ் சோந்துளாரே* (௩௯)

## சிறப்புலிநாயனார் புராணம்.

*திருவாக்கூ ரருமறையோ ருலகமேததுச் சிறப்புலியார் மறப்புலியாருரிமேற்செங்க, ணரவார்ததா வருமேற்றூர்க் கன்பராஞர்க் கமுதளிப்பாரொளிவெண்ணீ றணிந்தமார்பா, பெருவாக்கான் மறைபரவி யாகம்போற்றும் பெற்றியிஞு ரைந்தெழுததும் பிறழாதோதிக், கருவாக்கா விறைவன்றாளிணைகளசேர்ந்த கருததிஞு ரெனையாவுந் திருத்திஞரே.* (௪௰)

## சிறுத்தொண்டநாயனார் புராணம்.

*பல்குமருத் துவரதிபர் செங்காட்டங்குடிவாழ் படைத்தலைவ ரமுதளிக்கும் பரஞ்சோதியாரமெய்ச், செல்வமிகு சிறுத்தொண்டர் காழிநாடன் றிருவருள்சேர தவவளருஞ் சீராளன் றன்னை, நல்குதிரு வெண்காட்டு நங்கைசமைததிடப்பின் னன்மதிசசந் தனத்தாதி தலைககறியிட்டுதவப், புல்கவரும் வயிரவர்தா மகிழ்ந்துமகவருளப் போற்றியவர் சிவனருளே பொருந்திஞரே.*

## சேரமான்பெருமாணயனார் புராணம்.

*காவலர்ம கோதையார் கொடுங்கோ ளூர்க்கோக் கழறியவை யறிந்தகோசசிலம போலைசக்கருத்தார், நாவலாகோ னண்பரடிச் சேரனென்றேநவின்றுவரும் வண்ணுனை நயந்தகோநற், பாவலாகோப் பாணபத்திரனுல் வாய்ந்த பரமாதிரு முகம்வாங்கிப் பணிசோவெற்பின், மேவியகோ வானைக்குக் குதிரைவைதத வீரர்கோ வெனையாளுஞ் சேரர்கோவே.* (௪௨)

## கணநாதநாயனார் புராணம்.

*கந்தமலி வயற்காழி மறையோரேத்துங் கணநாதர் திருததோணிககடவுளாக்கு, நந்தவனம் பலவமைத்து மலருங்கொய்து நற்றுமஞ் சொற்றும நயந்துசாத்தி, வந்தவரைத் தொண்டாக்கிப் பணிகளூட்டி வாதுசெயத வாரணத்தை மகிழ்ந்துவாழ்த்திப், புந்திமகிழ்ந் தானருளாற் கயிலைமேவிப் பொருவில்கணத் தவாகாவல் பொருந்திஞரே* (௪௩)

## கூற்றுவநாயனார் புராணம்.

*குன்றுத புகழாளர் களந்தைவேந்தர் கூற்றுவஞர் மாற்றலர்மண் கொண்டுசூடப், பொன்றுழு முடிவேண்டப் புலியூர்வாழும் பூசுரர்கள் கொடாதகலப் புனிதனீந்த, மன்றுடை திருவடியே முடியாச்சூடி மாநிலங்காத் திறைவனுறை மாடககோயிற், சென்றுசை யுடன்வணங்கிப் பணிகள்செய்து திருவருளா லமருலகஞ் சேர்ந்துளாரே.* (௪௪)

## பொய்யடிமையில்லாதபுலவர் புராணம்.

*பொய்யறியாக கபிலரொடு பரணராதிப் புலவோர்பொற் பார்கலைகள் பொருந்தவோதிச், செய்யுளிடை வளராசு மதுரநல்ல சித்திரம்வித் தார*

மெனத் தெரிக்குஞ்செம்மை, மெய்யுடைய தொடைகளெல்லா மன்றுளா
டன்மேவியகோ னிருதாளில விரவசசாத்திக், கையுடையஞ் சலியினரா யரு
ளான்மேலைக் கருதரிய வமருலகங் கைக்கொண்டாரே. (௪௫)

## புகழ்ச்சோழ நாயனார் புராணம்.

பொழின்மருவுங் கருவூர்வாழ் புகழார்சோழர் போதகம்போ லென்னுயி
ரும் போக்குமெனறே, யழலவிரவாள் கொடுத்தபிரா னதிகைமானமே
லடர்ந்தபெரும் படையேவ வவர்கொண்டேய்ந்த, தழலவிழிகொ டலைகாண்
பார்கண்டதோர்புன் சடைத்தலையை முடித்தலையாற் றூழ்ந்துவாங்கிக, கழல்
பரவி யதுசிரத்தி னேந்திவாய்ந்த கனன்மூழ்கி யிறைவனடி கைகொண
டாரே. (௪௬)

## நரசிங்கமுனையரையநாயனார் புராணம்

நாடுபுகழ் முனைப்பாடி நாடுமேய நரசிஙக முனையர்புவி நயநதுமன்று,
ளாடுமவ ராதிரைநா ளடியார்ககம்பொ னமுதளிப்பா ரொளிவெண்ணீ
றணிந்து தூர்த்த, வேடமுடை யவர்க்கிரட்டிச செமபொனீநது விடுத்தழகா
ராலயஙகள விளங்கசசெய்து, தோடலாதா ருடையபிரா னருளையாளத்
தோன்றினா ரெனையருளி னூன்றினாரே (௪௭)

## அதிபத்தநாயனார் புராணம்.

அலையாருங கடனாகை நகருள்வாழு மதிபத்தர் பரதவர்க ளதிபர்வேலை,
வலைவாரி வருமீனிற் றலைமீனீசன் வார்கழற்கே யென்றுவிடு மரபார்பன்
னாட், டலையான தொருமீனே சாரநாளுந் தந்தொழிலால் விடுத்துமிடி சாரச்
செம்பொ, னிலையாரு மணிநயந்த மீனொன்றெய்த நீத்தருளா லிறைவனடி
நேர்ந்துளாரே. (௪௮)

## கலிக்கம்பநாயனார் புராணம்.

கடவுளருட் கண்ணார்கள் பயிலுந்தொல்லைக கடந்தைநகர் வணிகர்
கலிக் கம்பரன்பர்க், கடிமையுற வமுதளிப்பா ரடியானீஙகி யருளுருவா யன்
பருட னணையவேத்தி, யிடையிலவ ரடியிணையும் விளக்காசிறப்ப விகழ்மனைவி
கரகமலி யிரண்டுகையும, படியில்விழ வெறிநதவள்செய் பணியுந்தாமே
பரிந்துபுரிந் தானருளே பற்றினாரே (௪௯)

## கலியநாயனார் புராணம்.

தடமதில்சூ ழொற்றியூர் நகருள்வாழுஞ் சக்கரப்பா டியர்குலமெய்த்
தவமாயுள்ளார், படர்புகழார் கலியனார் நலியுங கூற்றைப் பாய்ந்தவாககு
விளக்கெரிக்கும் பரிவான்மற்றோ, ருடலிலராய்ச் செக்குழல்வார்க் கதுவு
நேரா துயாமனைவி யைககொள்வா ருளருமின்றி, மிடறுதிர மகனிறைய
வரியநாதன் வியன்கைகொடு பிடிப்பவருண் மேவினாரே. (௫௰)

## சத்திநாயனார் புராணம்.

விரிதருகா விரிநாட்டு வரிஞ்சியூர்வாழ் வேளாளர் சத்தியார் விமலர்பா
தத், தூரியவர்க ளடிபரவு மொருமையார்நா வோவாமே யைந்தெழுத்து
முரைக்குநீரா, ரிருளின்மிட றுடையபிரா னடியார்தம்மை யிகழ்வார்நாத்

தண்டாயத் திடுக்கிவாங்கி, யரியுமது திருத்தொழிலா வுடையார்மன் றனா டியசேவடிநீ ழலடைந்துளாரே. (ருக)

### ஐயடிகள் காடவர்கோனாயனார் புராணம்.

வையநிகழ் பல்லவர்தங் குலத்துவந்த மாமணிமா நிலமுழுது மகிழ்ந்து காக்கு, மையடிகள் காடவர்கோ னருளானூல்க ளறிந்தரசு புரிந்திடுத லமை யுமென்றே, பொய்யனைய வுடல்வாழ்வு கழியுமாறு பொருந்தியிடம் புகழ் வெண்பாப் புலியூர்மேவுஞ், செய்யதிரு வடிமுதலாப் பதிகடோறுஞ் செப்பி னரொண் வினைகடப்பினாரே (ருஉ)

### கணம்புல்லநாயனார் புராணம்

இலகுவட வெள்ளாற்றுத் தென்பாலவாழு மிருக்குவேளூரதிப ரெழி லார்சென்னிக், கலைநிலவா ரடிபரவுங் கணம்புல்லர் தில்லைக்கருதுபுலீச் சரத் தாற்குக் காதற்றீப, நிலைதரத்தா மிடமிடியா லொருநாட்புல்லா னீடுவிளக் கிடவதுவு நேராதாகத், தலைமயிரி னெரிகொளுவு மளவிறுதன்றுவாத வாழ் வருளுந் தன்மையாரே. (ருங)

### காரிநாயனார் புராணம்.

திருக்கடவூர் வருமறையோர் காரியாராந் திகழ்தொண்ட ரண்டமிழ்நூ றிருந்தவோதி, விருப்பொடுதம் பெயராற்பா விளம்பிமும்மை வேந்தரையு முறைமுறையே மேவியங்க, ணுரைத்தவுரை நயமாக்கி யவர்பானல்கியந்த வொண்பொருளா லாலயங்க ளோங்கச்செய்து, தரைகருளுந் தவர்க்கேவ றகமுன்போற்றுந் தன்மையா லருள்சேர்ந்த நன்மையாரே (ருச)

### நின்றசீர்நெடுமாறநாயனார் புராணம்

தன்னன்மலி நெல்வேலிக் கவினார்மாறர் கவுரியர்கோ னமணருறு கல க்கமெல்லாம், பொன்னெயில்சூழ் சிரபுரக்கோ னணையமாற்றிப் புனிதமிகு நீறணிந்து போற்றிசெய்து, மனனுபுகழ் மங்கையருக் கரசியாரா மலர்மாது மணிமார்ப மகிழ்ந்துமாற்றார், வெங்கிடுதல் கண்டரசு புரிந்துகாழி வேந்தர ருள் சேர்ந்தபெரு விறலினாரே. (ருரு)

### வாயிலார்நாயனார் புராணம்.

ஞாயிலார் மதிற்றொண்டை நாட்டுமேன்மை நண்ணுமயி லாபுரியின் வேளாண்டொன்மை, வாயிலார் மலைவில்லா னடியேபோற்றி மறவாமை தலைநின்ற மனமேசெம்பொற், கோயிலா வுயர்ஞானம் விளக்காநீராக குலவி யவா னந்தமன்பே யமுதாகக்கொண்டு, தாயிலா னிருசரண நிகழவேத்துந் தன்மையா ரருள்சேர்ந்த நன்மையாரே. (ருசு)

### முனையடுவார்நாயனார் புராணம்.

பொன்னிவளந் தருநாட்டுப் புகழுநீடூர்ப் பொருவிறிரு மலிவேளாண் டொன்மைமிக்கார், முன்னியவர் முனையடுவா ரிகலார்போரின் முரணழி வார் தமக்காக மொழிந்தகூலி, மன்னுநிதி கொண்டுசயங் கொடுத்துவந்த வளர்பொருளா லிறைவனடி வழுவாவன்பர்க், கன்னமவர் நசையின்மிக மிசையநல்கு மன்பர்துன்ப மவையாவு மகன்றுளாரே. (ருஎ)

### கழற்சிங்கநாயனார் புராணம்.

காடவர்தங் குலமுவந்த கழலார்சிங்கர் காதன்மிகு தேவியுடன் காவ லாரூ, ராடவல பெருமானைப் பணிவாரங்கோ ரகன்றமலர் தனைமோந்த வரி வைமுக்கைச், சேடுடைய செருத்துணையா ரரியக்கேட்டுத் திறலரசா மல ரெடுத்த செங்கையென்றே, சூடகமுன் கைதடிந்து ஞாலங்காத்த தூய் மையா ரருள்சேர்ந்த வாய்மையாரே (ருஅ)

### இடங்கழிநாயனார் புராணம்.

கோனாட்டுக் கொடும்பாளூ ரிருக்கும்வேளிர் குலத்தலைவ ரிடங்கழியார் கொங்கிற்செம்பொ, னானேற்றார் மன்றின்முக டம்பொன்வேய்ந்த வாதித் தன் மரபோற்றெற் கவர்ந்தோரன்பர், போனாப்ப ணிருளின்கட் காவலாளர் புரவலர்முன் கொணரவவர் புகலக்கேட்டு, மானேற்றா ரடியாரே கொள்க வென்று வழங்கியர சாண்டருளின் மன்னினாரே (ரு௯)

### செருத்துணைநாயனார் புராணம்.

இரைத்தணையார் புனற்பொன்னி மருகனன்னாட் டெழிலாருந் தஞ்சை நக ருழவரேத்துஞ், செருத்துணையார் திருவாரூர் சேர்ந்துவாழ்வார் செல்வ மிகும் பல்லவர்கோன் றேவிவீழ்ந்த, மருத்துணையார் மலரெடுத்து மோப்பக் கண்டு வளமலிபூங் கத்தியா லவண்மூக்கீர்ந்த, கருத்துணையா விறற்றிருத் தொண் டினையேசெய்து கருதலரு மமருலகங் கைக்கொண்டாரே (சு0)

### புகழ்த்துணைநாயனார் புராணம்

புண்ணியர்கள் புகழழகார் திருப்புத்தூர்வாழ் புகழ்த்துணையா ரகத்தடி மைப் புனிதர்சின்னாண், மண்ணிகழ மழைபொழியா வற்காலத்தால் வருந் துடல நடுங்கிடவு மணிநீரேந்தி, யண்ணன்முடி பொழிகலச முடிமேல்வீழ வயர்ந்தொருநாட் புலம்பவர னருளாலீந்த, நண்ணலரு மொருகாசுப் படி யால் வாழ்ந்து நலமலிசீரமருலக நண்ணினாரே. (சுக)

### கோட்புலிநாயனார் புராணம்

குலவுபுகழ் நாட்டியத்தான் குடிவேளாளர் கோட்புலியார் குவித்து யர்த்த செந்நெற்கூடு, நிலவணிவார்க் கமைத்தானை சிறுதந்தியொனனார் நேர் மலைவார் திருவானை யினையாதேநெற், சிலமிடியா லழித்தபடி யறிந்துவா ளாற் சேர்ந்தபெருங் கிளைஞருடல் சிதறவீசி, யிலகுமொரு குழவியையு மெறிந்துநாத னெண்ணரிய கருணைநிழ லெய்தினாரே. (சுஉ)

### பத்தராய்ப்பணிவார்கள் புராணம்.

தொண்டரடித் தொழல்பூசைத் தொழின்மகிழ்த லழகார் துளங்கியவ ர்ச்சனைபுரித லுறுகுதி நியமங்கள், கொண்டபணி திருவடிக்கே கொடுத்த லீசன் குணமருவு மருங்கதையைக் குலவிக்கேட்டு, மண்டிவிழி துளும் பன்மயிர் சிலும்பலுன்னன் மருவுதிருப் பணிகாட்டி வருபவராங்கி, யுணடி கொளா தொழிதலென விவையோரெட்டு முடையரவா பத்தரென வுரைத் துளாரே. (சுங)

### பரமனையேபாடுவார் புராணம்.

அருந்தமிழால் வடகலையா லருளாலொன்று லறிவுநெறி மருவுமருங் கவிகள்யாவுந், திருந்தியவா னவர்பணிய மன்றுளாடுந் தேவர்பிரான் கழலி

லணயே சேர வோதி, விருந்திரோ வுடையபயன் மேவி னோர்தா மேலாமேறு மெனமகிழ்ந்து விழிநீர் சோரப், பரிந்தருளாற் பரமனையே பாட வல்ல பாண மையா ரெமையாளு மேன்மை யாரே. (௬௪)

### சித்தத்தைச்சிவன்பாலேவைத்தார் புராணம்.

பாரணவும் புலனந்தக் கரண மொன்றும் படாமே நெடுநாடி பயிலு நாதங் காரணபங் கயன்முதலா மைவா வாழ்வுங கழியுநெறி வழிபடவுங் கருணை மேலைப், பூரணமெய்ப் பரஞ்சோதிப் பொலிவு நோக்கிப் புணர்ந்தனைந்த சிவானு பவ போக மேவுஞ், சீரணவு மவரன்றே வெமமையாளுஞ் சித்தத்தைச் சிவன்பாலே வைத்து ளாரே. (௬௫)

### திருவாரூர்ப்பிறந்தார் புராணம்.

பொங்கியமா தவமுடையார் வருண நான்கிற் பொருந்தினாக ளல்லாத புகழி னுள்ளார், சங்கையிலா வருந்தவமுன் புரிந்தா ரிங்குச் சாரவிலா ரிறைவனருள் சாராத லாலே, கங்கைவாழ் சடைமுடியா னருளே நீங்காக் கணநாத ரெனவாழுங் கருத்தாகன்னிச, செங்கண்வரால் வளாவாவி திகழு மாரூரச் சிறந்துளா ரெமையாளப் பிறந்து ளாரே. (௬௬)

### முப்போழுதுந்திருமேனிதீண்டுவார் புராணம்

செப்பலருந் தவமுடைய செம்மையாளா சிறுகாலே மலர்வாவி திகழ மூழ்கி, யொப்பிறிரு நீறணிந்து நியதி யாற்றி யோவாமே யைந்தெழுத்து முறைதது மேன்மைத், தப்பிலசிவா கமவிதியா லனபா லன்பாந் தன்மையா னன்மையாக் தகையா ரென்று, முப்பொழுதுந் திருமேனி தீண்ட வல்ல முறைமையார் பிறவிதெறுந் திறமை யாரே. (௬௭)

### முழுநீறுபூசியமுனிவர் புராணம்.

கற்பமனு கற்பமுப கற்ப மென்றிக் கடனணைந்த திருநீறுங் கனற்கணிறும் பொற்புடைய வாஞசா னங்கி யாறு பொல்லாத பூமியெறிா புனை கலாகா வற்புதமாந் திரிபுண்ட மதியின் பாதி யகிலாங்கந் தீபமிது மழகார வட்ட முற்பொலிய வுடலணியு முறையாரன்றே முழுநீறு பூசவல்ல முனியர்தாமே

### அப்பாலுமடிச்சார்ந்தார் புராணம்

தாராரு மூவேந்தர் பயிலுந் தொல்லைத் தமிழ்நாட்டப் புறத்திறைவன் சரணஞ் சார்ந்த, சீராருந் தொண்டர்களு மண்ட மேதத்துந் திருத்தொண்டத் தொகையருளாற் செப்புங் காலத், தோருந் தொடையிலுறு திப்பாலப்பா லெங்கதைபிரா னடியடைந்த வியலபி னோரு, மாராத காதலுடை யவரா னன்றே வப்பாலு மடிசசார்ந்த வடியார் தாமே. (௬௮)

### பூசலார்நாயனார் புராணம்.

பொருவருந்தண் டகநாட்டு நின்ற வூர்வாழ் பூசுரர்கோப் பூசலார் புந்தியாலே, யிருநிதியந் தேடியா லயமுமாக்கி யெழுந்தருளப் பண்ணுவதா மெவ்வனுங் காலே, யானதனைக் காடவர்கோற் கருள மன்ன னந்நகர மெண்ணுதலுமவ னறிந்து தாழ, விரவுமனக் கோயிலுறு விருத்தி யங்கண் வேணுடுவெகொண் டிறைஞ்சியருண் மேவினாரே. (௭௦)

## மங்கையர்க்கரசியார் புராணம்.

மங்கையர்க்குத் தனியரசி வளவர்குலக் கொழுந்து மன்னவர்சூழ் தென்னவர்க்கு மாதேவி யார்மண், சங்கைகெட வமண்சமயஞ் சாட வல்ல சைவசிகா மணிஞானத் தமிழிற் கோத்த, பொங்குதிரு வருளுடைய போத வல்லி பொருவினெடு மாறனர் புயமேல் வாழுஞ், செங்கலச முலையாட னருளா லின்பஞ் சேர்ந்தவரைப் புகழ்ந்தடியேன வாழ்ந்த வாறே. (எக)

## நேசநாயனார் புராணம்.

சாலியர்கோக் காம்பீலித் தலைவர் மேன்மை தாவாத புகழ்நேசர் தஞ்சொ லென்றுங், கோலியவைந் தெழுத்தோதிச சிந்தை யுன்னிக கொண்ட பொரு ளன்பாகொளக் கொடுத்து வாழ்வார், சீலமிகுந திருத்தொண்டாக் குடையுங சீருந் திருந்தியவெண் கோவணமுஞ் சேர வீந்து, பாலனைய வொளிநீற்றன பாத மேத்திப் பரலோக முழுதாண்ட பான்மை யாரே. ()

## கோச்செங்கட்சோழநாயனார் புராணம்.

வெண்ணாவ லிறைக்கொளிநூற் பந்தர் செய்த வியன்சிலம்பி யதுவழித்த வெள்ளா னைக்கை, யுண்ணடிக் கடித்தவுட லொழியச் சோழ னுயர்குலத்துச் சுபதேவன் கமலத் தோங்கும், பெண்ணுகி யவளவயிற்றில வைகிச் செங்கட் பெருமானுய்த் தென்னவராய்ப் பெருங்கோயில பலவுங, கண்ணார்வித் துயாதிலலை மறைய வர்க்கு முறையுள் கனகமய மாக்கியருள கைக்கொண் டாரே. (எஉ)

## திருநீலகண்டயாழ்ப்பாணநாயனார் புராணம்.

பிறங்கெருக்கத் தம்புலியூர் வாழும் பேரியாழ் பேணுதிரு நீலகண்டப் பெரும் பாணனர் சீர், நிறந்தருசெம் பொற்பலகை யாலவாயி னிமலன்பாற் பெற்றூரூர் நோந்து சிவனவாயி, றிறந்தருளும் வடதிசையே சேர்ந்து போற்றித் திருஞானசம்பந்தர் திருத்தாள் வாழ்த்தி, யறந்திகழுந் திருப்பதிகம் யாழி லேற்றி யாசிறிருப் பெருமணஞ்சேர்ந் தருள் பெற்றூரே. (எச)

## சடையநாயனார் புராணம்.

சங்கையிலா வரன்மறையோர் நாவ லூர்வாழ் தவரதிபர் தம்பிரான் றோழராய, வெங்கள்பிரான் றவநெறிக்கோ ரிலக்கு வாய்த்த விசைஞானி யார்தனய ரெண்ணூர் சிங்க, மஙகையர்க டொழும்பரவை மணவாள நம்பி வந்திக்க மாதவங்கள் வருந்திச்செய்தார், வெங்கணரா விளங்குமிளம் பிறைசேர் சென்னி விடையினு ரருள்சேர்ந்த சடைய னரே. (எரு)

## இசைஞானியார் புராணம்.

நாவற்றிருப் பதிக்கோர்செல்வச சைவநா யகமாஞ் சடையனர் நயந்தவின்பப், பூவைக் குலமடந்தை பொற்பார்கொம்பு புனிதமிகு நீறணிந்து போற்றிசெய்தே, யாவிற்றி கழ்தலைவன் வலியவாண்ட வாரூரரவதரிக்கவருந் தவங்கள் புரிந்தார், யாவர்க்கு மெட்டாத விசைந்தவின்ப விசைஞானி யென ஞான மெளிதாமன்றே. (எசு)

---

அத்தராதி யவர்கூட்டத் தில்லை வாழு மந்தணர்பொய் யடிமையிலாப் புலவ ராசில, பத்தர்முத லெழுவரோ டொன்ப தின்ம ரேழொன்ப தினமா தனிப் பேரெண்ணொன் பதின்மராய, விதத்தொகையிற் றொண்டர்சீ ருரைத் தான் வைத்த வீரிரண்டா யிரத்திருநூற் றைம்பத்து மூன்று, முத்தமநல் விருத்தத்திற் பயனுஞ்செய்யுளுலகெழுபத் தைந்தெனவின் றுரைக்குமன்றே.

செல்வமிகு திருத்தொண்டத் தொகையி லுள்ளார் சிறந்த தனிப் பெய ராகி வறுபதின்மேன் மூவர், மலலன்மிகு கூட்டப்பே ரருள்சேர்ந்தார்கண் மாதவத்தோர் மும்மூன்று வகைபெற் றோர்க, ளில்லறத்துந் துறவறத்து மிருந்து வாழ்ந்தே யியல்பாகச் சிவபதத்தை யிசைந்தார்தம்மை, யல்லலறுத் தெனையாண்ட சைவசிகாமணியா ரருட்புலியூ ருமாபதியா ரருள்செய்தாரே.

திருத்தொண்டர்புராணசார முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - எஅ

---

உ

திருச்சிற்றம்பலம்.

# திருப்பதிகக்கோவை.

ஒன்றாதி யோரெழுபத் தொன்றீறாய் மூவர்தமிழ்
சென்றோர் சிவதலங்கள் செப்புதற்கு—நின்று
கடக்குஞ் சரமுகனோர் காய்விழியா னீன்ற
கடக்குஞ் சரமுகனே காப்பு.

பன்னுசிவ தலமொருநூற் றைம்பதிற்று மூன்று பதிகமொன்றா நாற் பத்தொன் பதுபதிக மிரண்டா, முன்னுமிரு பதிற்றெட்டு தலபதிகமூன்றா மொருபதின்மோர் தலம்பதிக மொருநான்கென் றுணாக, மன்னுமிரு நான்கு தல மோரைந்தே பதிக மற்றுமைந்து தலங்களுக்கு வருபதிகமாறாம, பின்னு மைந்து வளநகர்க்குப் பெறும்பதிக மேழாம் .பேசுமொரு நான்குதலம் பெறும்பதிக மெட்டே. (க)

பரவுமொரு நான்குதலம் பதினொன்றாம் பதிகம் பன்னுமிரு தலம்பதி கம் பன்னிரண்டாப் பகரு, முரைசெயிரு தலம்பதிகம் பதினெட்டா மிப்பா லொருமூன்று தலங்களுக்கிங் குறுபதிக முரைக்கி, னிரவிவரு மறுநான்கு முப்பதிற்று நான்கு நீடெழுபத் தொன்றுமென நிரனிரையா மாகக், கருது சிவ தலமிருநூற் றெழுபதிற்று நான்கு கடைகாப்போ ரெழுநூற்று நாற்ப திற் றொன்பானே. (உ)

திருப்பழுவூர் சேய்ஞலூர் திருமுல்லை வாயி றிருவைகா கொடிமாடச் செங்குன்றூர் வியலூர், கருக்குடிதெங் கூர்பனந்தாள் கலிக்காமூர் தலைச்சங் காடுமேயந் திரப்பள்ளி கச்சினங்கன் றுப்பூர், குரக்குக்கா பெரும்புலியூர் திருக்காட்டுப்பள்ளி குடந்தைக்கீழ்க் கோட்டமொடு குடந்தைக்கா ரோண,

மெருக்கத்தம் புலியூர்வெண் டுறைகண்ணார் கோயி லிலம்பையங்கோட் டூர்சிக்க லிராமன தீச்சரமே (௩)

பள்ளியின்முக் கூடறிரு விரும்பூளை யாலூர்ப் பசுபதீச் சரம்பாலைத் துறைபரிதி நியமங், கள்ளிலகுரங் கணின்முட்டந் திருமுருகன் பூண்டி கஞ்சனூர் கச்சிநெறிக் காரைக்கா டோத்தூர், புள்ளமங்கை நாட்டியத்தான் குடிகலைய நல்லூர் புகலொளியூ ரவிநாசி பூவனூர் துறையூர், கொள்ளிக்கா டிடைச்சுரமச் சிறுபாக்கம் விளமர் கொட்டையூர் கொடுங்குன்றங் கூடலை யாற் றூரே (௪)

கெலவேலி திருவழுந் தூர் தருமபுரம் பயற்றூர் கொடுங்களம்வக் கரையி ரும்பை மாகாளம வடுகூர், நெல்வெண்ணெய் வடகரைமாந் துறைதிருவிற் கோலநீலச்சக் கரப்பள்ளி யகத்தியான் பள்ளி, நெல்வாயில் பேணுபெருந் துறைநாலூர் மயான கொல்லிக்கா விறகுடிவீ ரட்டமதி முற்றம், வலமறை யணிநல்லூர் தலையாலங் காடு வாட்போக்கி திருநாவ லூர்மயிலாப் பூரே. (௫)

திருவாரூர்ப் பரவையுண்மண் டளிசாத்த மங்கை சிற்றேமந் தெளிச்சேரி திருவுசாத் தானங், காவீரந் திருவாலம் பொழில்வெண்ணெய் நல்லூர் கச்சியனே கதங்காவ தங்கோடிக் குழக, ராசிலிதென் குடித்திட்டை வடமுல்லை வாயி லம்பர்ப்பெருந் திருக்கோயில் வெண்பாக்கஞ் சுழியல், பெருமணம்நந் திரநீல பருப்பதம்வேற் காடு மேபெரயில்பாற் றுறைமூக்கீச் சரமுண்டீச் சரமே (௬)

பறியலூர் வீரட்டங் கானாட்டு முள்ளூர் பாதாளீச் சரமெதிர்கொள் பாடிவலி தாயஞ், சிறுகுடிகச் சூராலக் கோயில்கொள்ளம் பூதூர் திருப்புறவார் பனங்காட்டூர் விளநகர்தண் டலைநீ, ணெறியரசைப் பெரும்பாழி யூறல் கரு[illegible]ரா னிலையிடுமெபா வனங்கடுவாய்க் கரைப்புத்தூர் கடம்பந், துறை திருவேடகந்திருவஞ் சைக்களமாடானை சோபுரங்கற் குடிவடகு ரங்காடு துறைமேய. (௭)

திருமாணி குழிவேட்டக் குடிதிருவாப் பாடி திருந்துதே வன்குடிமா கறல்சதுதி முற்றந், திருவாப்ப னூரமீயச் சூரவ்வூர் தன்னிற் றிகழ்ந்ததிரு விளங்கோயில் வெஞ்சமாக் கூடல், பெருநீலக் குடிமண்ணிப் படிக்கரைநன் னிலத்துப் பெருங்கோயி றிருநணா திருப்பட்டீச் சரமே, திருவீங்கோய் மலைவன்பார்த்தான் பனங்காட் டூரே திருப்புகலூர் வர்த்தமா னீச்சரம்பாம் புரமே (௮)

கடைமுடியே யோணகாந் தன்றளிகோட் டூர்வை கன்மாடக் கோயிலிடை யாறுபழை யாறை, வடதளிநற் றினைநகரங் கோணமா மலைசீர் வன்னியூர் கருவிலிய னேகதங்கா வதநல், லிடமேவு கடிக்குளநற் றிருக்களரொன் றிலைகட் கிருமபதிக மொவவொன்றென் றிசைத்திடுக விப்பாற் குடவாயில் புனவாயி லூங்கானை மாடங் கோழம்ப மவளிவணல் லூர்கோலக் காவே. (௯)

குருகாவூர் திருவேள்விக் குடிவிசய மங்கை குற்றாலங் குடமூக்குக் கோட்டாறு பனையூர், கருகாவூர் குரங்காடு துறையோமாம் புலியூர் கண்டியூர் [illegible] திருக்குடிகா ணூர்கோ கரணந், திருவாரூ ரரநெறிபந் தணைநல்லூர் நல் [illegible] சரம் [illegible]லூர் திருச்சிராப்பள்ளி, பெருவேளூர் கீழ்வேளூர் [illegible] திருமங்கலக்குடியாக் கூர்கோவ லூரே (௧௦)

திருப்பரங்குன் றந்திருப்பா திரிப்புலியூர் குறுக்கை திருப்புத்தூர் மணஞ்சேரி பாசசிலாச சிராமம, கருப்பறிய லூரமகேதீச் சரந்திருக்கேதாரங் கச்சிமேற் றளிமேலைத் திருக்காட்டுப் பள்ளி, யருந்தியுறு பட்டினத்துப் பல்லவனீச சரம்பே ரனபிலா லந்துறைப ராயத்துறைவேட் களமிங, குரைத்தசீ ரனனியூ ரிவவிரண்டாம பதிக முளத்தலங கடவூரம யானம் வாஞ்சியமே. (கக)

துருத்திதிரு நனிபள்ளி திருமருகல் திருப்பூந் துருத்திபுறம் பயங்கட லூர் புள்ளிருக்கு வேளூர், ராத்துறைவாழ் கொள்ளிபுத்தூர் வான்மியூர் பாசூ ரமபாமா கானமயி லாடுதுறை வாய்மூர், திருக்கழுக்குன் றமபாண்டிக் கொடுமுடிராமேசசரஞ் செங்காட்டங் குடிவெண்ணி திருச்செம்பொன் பள்ளி, பருப்பதமபுன் கூரிசிற் கரைப்புத்தூர் சேறை பைஞ்ஞீலி கற் குடிமா மலைபதிக மூன்றே. (கஉ)

வலம்புரமா லங்காடு சிவபுரங்கா ளத்தி வலிவலஞ்சாய்க் காடுதிருக்கோ டிகா நகரம், நலந்திகழும பூவணங்கோ ளிலிநின்றி யூரந் துறையூர்ச சித்தீச சரமு நானகாகும பதிகம, வலஞ்சுழிநல லூர்ப்பழன மாமாத்தூ ரண்ணா மலைகடம்பூ ரினனம்பா நாரையூ ரைந்தா, நலந்திகழ்நா கேச்சரமாற் பேறு மழ பாடி நெய்த்தானம் வெண்காடு நீள்பதிக மாமே (கங)

கயிலாய மானைக்கா நள்ளாறு நாகைக் காரோணந் திருச்சோற்றுத் துறையேழுபுகலூர், வயலாருங கழிப்பாலை யொற்றியூர் திருவா வடுதுறை யெட் டாந்தில்லை மறைக்காடு மதுரை, யியலாரு முதுகுன்றம பதினொன்று கச்சி யேகமப மிடைமருதீ ராறையா றதிகை, யயலீரோன் பானவீழி யாரூரசீ காழி யறுநானகு முப்பானொன் கெழுபத்தொன் றாமே. (கச)

திருப்பதிகக்கோவை முற்றிற்று.

---

உ

# திருப்பதிக்கோவை.

கோயிறிரு வேட்களநெல் வாயில்கழிப் பாலை நலவுபெரு மணமயேந் திரப்பள்ளி முல்லை, வாயில்கலிக் காழூர்சாய்க் காடுதிருப் பல்லவனீச்சரம் வெண் காடுவளர் திருக்காட்டுப் பள்ளி, தாயிலான் குருகாவூர் காழிகோ லக்கா தருக்கிளர்புள் ளிருக்குவே ளூர்கண்ணார் கோயில், ஞாயிலியற் கடை முடியே நின்றியூர் புன்கூர் நாடியநீ டூரன்னி யூர்வேள்விக் குடியே. (க)

கருநெதிர்கொள் பாடிமணஞ் சேரிதிருக் குறுக்கை கருப்பறியலூர் கதியே காட்டுகுரக் குக்கா, மருவும்வாழ் கொள்ளிபுத்தூர் மண்ணிப்படிக் கரையே வளரு மோமாம்புலியூர் காறாட்டு முள்ளூர், திருநாரை யூர்கடம்பூர் பந்தணைநல் லூர்பொன் றிகழ்கஞ்ச னூர்கோடி காமங்கலக் குடியே, திருப் பனந்தா ளரப்பாடி சேய்ஞலூர் திருந்து தேவன்குடி திருவியலூர் திருக் கொட்டை யூரே. (உ)

இன்னம்பர் திரும்புறம்ப யம்விசய மங்கை யியல்வைகா வூர்கல்வட
குரங்காடு துறையே, பின்னமறு பழனமை யாறுநெய்த் தானம் பெரும்புலி
யூர மழபாடி திருப்பழுவூர் கானூர, ரன்னவன்பி லாலந்துறை மாந்துறைபாற்
றுறையே யானைக்கா வைஞ்ஞீலி பாசிலாச் சிராம, மன்னுமீங் கோய்மலையி
னோடுறுபான் மூன்றே வடகரையிற் பதிதெனபால வாட்போக்கி யாமே.()

கடம்பந்துறை திருப்பராய்த்துறை கற்குடி மூக்கீச்சரங் கருதுதிருச்
சிராப்பள்ளி திருவெறும்பியூரே, நெடுங்களமே லைக்காட்டுப் பள்ளியாலம்
பொழில்சீர் நிகழ்திருப்பூந் துருத்திகண்டி யூர்சோற்றுத் துறைமா, லடும்
வேதி குடிதென்குடித் திட்டைபுள்ள மங்கையணியார்சக் கரப்பள்ளி யருங்
கருகா வூரே, படாபாலைத் துறைநல்லூர் திருவாவூ ரதனிற் பசுபதீச சாரு
சத்தி முற்றமபட் டீச்சரமே. (௪)

ஆறைவட தளிதிருவ லஞ்சுழியே குடமூக் கதனிற்கீழ்க் கோட்டங்கா
ரோணநா கேச்சரங், கூறுமிடை மருதுகுரங் காடுதுறை நீலக் குடிவைகன்
மாடக்கோயி னல்லங்கோ ழம்பஞ், சாறமரா வடுதுறைதண் டுருத்திதிரு
வழுந்தூர சகம்புகழ்மா யூரமவிளா நகர்பறியலூரே, வீறுசெம்பொன் பள்ளி
நனி பள்ளிவலம்புரமே வியன்றலைச்சங் காடாக்கூர் விளங்கு கடவூரே (௫)

திருக்கடவூர் மயானமொடு திருவேட்டக் குடியே தெளிச்சேரி தரும
புர நள்ளாறு கோட்டா, றுரைக்குமம்பர்ப் பெருந்திருக்கோ யின்மாகாள
முயர்மீயச் சூரிளங்கோ யிற்றிலதைப் பதிபூ, மருக்கமழ்பாம் புரநற்சிறு குடி
வீழி மிழலை வன்னியூர் கருவிலிமன் பேணுபெருந் துறையென், கருத்து
டைக்கு நறையூர்ச்சித் தீச்சரத்தா டரிசிற் கரைப்புத்தூர் சிவபுரமுங் கலைய
நல்லூர் காணே. (௬)

கருக்குடிவாஞ் சியந்திருநன் னிலத்துப்பெருங் கோயில் கவின்கொண்
டீச் சரம்பனையூர் விற்குடிதென் புகலூா, ரிருக்கும்வர்த்த மானேச்சர மிரா
மனதீச்சரமே யியல்பயற்றூர் செங்காட்டங் குடிமருக விருவே, முருகசு
திருச் சாத்தமங்கை நாகைக்காரோண முன்றிருச்சிக்க றிருக்கீழ் வேளூர்தே
வூரே, யரிக்கரியான் பள்ளியின்முக் கூடறிரு வாரூ ரனெறிமூ லட்டானம்
பரவையுண் மண்டளியே. (௭)

மேலாகும் விளமர்கர வீரம்பெரு வேளூர் மிளிர்தலையா லங்காடு குட
வாயில் சேறை, நாலூர்ம யானங்கடு வாயக்கரைப் புத்தூர் நவிலுமிரும்
பூளைதிரு வரதைப்பெரும் பாழி, மாலூரு மவளிவணல் லூரபரித்தி நியமம்
வாழ்வெண்ணி பூவனூர் பாதாளீச் சரநீச, சேலூருந் திருக்களர்சிற் றேமமு
சாத தானந் திருவிடும்பா வனத்தோடு சோந்தகடிக் குளமே. (௮)

தண்டலைநீ ணெறிகோட்டூர் வெண்டுறையோ டழகே தருகொள்ளம்
பூதூர்பே ரெயில்கொள்ளிக் காடு, கண்டருதெங் கூர்நெல்லிக்கா நாட்டியத்
தான் குடியே காறாயில கன்றாப்பூர் வலிவலங்கச் சினத்தோ, டண்டர்பிரான்
கோளிலிதென் றிருவாய்மூர் மறைக்கா டகத்தியான் பள்ளிகோடிக் குழ
கருநதென் கரையி, லெண்டருநூற் றிருபத்தே ழிப்பாலீழத்தி லிசைகோண
மாமலைகே தீச்சரமென் றிரண்டே. (௯)

ஆலவா யாப்பனூர் பரங்குன்றே டகத்தோ டருங்கொடுங்குன் றந்திருப்
பத்தூர் புனவா யிலினோ, டேலுமிரா மேச்சரமா டானை கானப்பே ரெழிற்
றிருப்பூ வணஞ்சுழிய லின்புறுகுற் றாலம், பாலலோ சனன்றிருநெல் வேலி

யொடு பாண்டி பதினான்கு மலைநாட்டி லஞ்சைக்கள மொன்றே, சிலதிரு
மவிநாசி திருமுருகன் பூண்டி திருநணா கொடிமாடச் செங்குன்றூர் தாமே.

வெஞ்சமாக் கூடல்கொடு முடிகருவூர் கொங்கின் மேவுமே ழாத்துறை
வண் டேங்கானை மாட, மெஞ்சலில் கூடலையாற்றூ ரெருக்கத்தம் புலியூ
ரிணையகலூ திணைநகர்சோ புரமதிகை புகழே, விஞ்சுதிரு நாவலூர் முது
குன்றந திருநெல் வெண்ணெய்திருக் கோவலூ ரறையணிநல லூரே, மஞ்சு
திக ழிடையாறு வெண்ணெய் நல்லூர் துறையூர் வடுகூர்வீ டேயருளா திரு
மாணி குழியே. (௧௧)

தண்ணார்தண் டலைப்பாதி ரிப்புலியூர் முண்டீச் சரம்புறவார் பனங்
காட்டூர் திருவாமாத் தூரே, யெண்ணாரண் ணாமலையு நடுநாட்டி லிருபத்
திரண்டாகு மிப்பாலே கம்பமேற் றளிவிண, கண்மேறுங்கு மதிலோண காந்
தனறளி யனேக தங்காவ தங்கச்சி நெறிக்காரைக் காடே, யுணாறு குரங்க
ணின்முட் டந்திருமா கறலோத் தூர்வன்பார்த் தான்பனங்காட்டூர் வல்ல
மாறபேறே (௧௨)

ஊறலிலம் பையங்கோட்டூர் விற்கோல மாலங்கா டியர்பாசூர் வெண்
பாக்கங் கள்ளில் காளத்தி, மாறிதிரு வொற்றியூர் வலிதாயம் பாலி வட
முல்லை வாயில்வேற் காடுதிரு மயிலை, யீறிதிரு வான்மியூர் கச்சூரா லக்கோயி
லிடைசுரங் கழுக்குன்ற மச்சிறுபாக் கம்மே, மாறிதிரு வக்கரையே யரசிலி
தொல் லிரும்பை மாகாளந் தொண்டை நன்னாட் டெண்ணின் முப்பா
னிரண்டே. (௧௩)

கோகரணந் துளுவதே யத்திலொன்றேயிப்பாற் குலவு பருப் பதநீல
பருப்பதமம பிகைதன், பாகருறை யனேகதங்கா வதந்திருக் கேதாரம் பகர்
நொடித்தான் மலைவடகதிற் பதியைந்தே யிவற்றோ, டாகவிரு நூற்றெழுபா
னென்பர் மூவாருட்பதிக மிருகருமூ ரதிகமாம் வைப்புத், தாகமுட
னினைப்போர்க்குந் துதிப்போர்க்கும் வினைகள் சாராவாம் பிறப்பகலுஞ் சத்
தியமுத் தியுமே. (௧௪)

திருப்பதிக்கோவை முற்றிற்று.

---

உ

திருச்சிற்றம்பலம்.

## அறுபத்துமூன்று நாயன்மார்

# திருநட்சத்திரம்.

ஒன்றகல வெட்டெட்டா மோதுமடி யாரன்பாற்
றுன்றுமதி நாளினிது சொல்லவே—வென்றிதரும்
பொன்னிதிவி னாயகனார் பூமுடிமே லாடுதிருச்
சன்னிதிவி நாயகனார் தாள்.

### நீலமண்டலவாசிரியப்பா.

தில்லைவா ழந்தணர் திருவரு ளாலவர்
மல்குசீர்ப் பததனை மகிழ்வொடு வணங்கிக்
கடிதிரு நீல கண்டர்தை விசாகம்
வடிவியற் பகையார் மார்கழி யுத்திரம்
வருமிளை யான்குடி மாறரா வணிமகங்
கருது மெய்ப்பொருளார் கார்த்திகை யுத்திரம்
விறன்மிண்ட கண்டர் மேடமா திரைநாள்
அறனமர் நீதி யானிப் பூரம்
மாணெறி பத்தர் மாசியி லத்தங்
காணுமே னாதியார் கன்னியுத்தி ராட
மலர்கண் ணப்பர் மகரமான் றலையிற்
குலவுகுங் குலியர் கோளரி மூலங்
தருமா னக்கஞ் சாறர்விற் சுவாதி
அரிவாட் டாயர்தை யாதிரை நாளில்
ஆனாயர் கார்த்திகை யத்த நாளிற்
கான மூர்த்தியார் கடகத் தாரன்
முருக ரிடப மூல மதனில்
உருத்திர பசுபதி யுயர்கன்னி முன்னாள்
பொருந்திரு நாளைப் போவார்கன் னியிற்பார்
திருககுறிப் படியார் சிததிரைச் சுவாதி
சண்டீச ராமவர் தையுத் திரததிற்
றண்டமி ழப்பர் தகரிற் சதயங
குலச்சிறை நாயனார் கோளரி யனுட
மலகில் குறும்ப ராடியிற் சித்திரை
அருள் காரைக்கா லம்மைமீன் விளக்கா
மருகிலப் பூதிதை யதிற்சத யத்திற்
கமைநீல நக்கர் காளை மூலத்தில்
நமிநந்தி யடிக னாள்விடைப் பூசம்
ஞானசம் பந்தர் நாள்விடை மூல
மான கலிக்காம ரானிரே வதியில்
அருட்டிரு மூல ரைப்பசி முன்னாள்
வருதண்டி யடிகள் வளர்மீன் சதயஞ்
சேமமா மூர்க்கர் தேண்மதி மூலஞ்
சோமாசி மாறர் தொழு விடையரவிற்
சாக்கிய நாயனார் தனுப்பூ ராடந
தேக்கிய சிறப்புலி தேட்பூ ராடஞ்
சேர்சிறுத் தொண்டர் சிததிரைப் பரணி
சேரமான் கடகஞ் சேர்ந்தசோ தியினிற்
கணநாதர் மீனங கலந்தவா திரையிற்
குணமாங் கூற்றுவர் குளிர்மதி யாதிரை
பொய்யடிமை யில்லாப் புலவர்தாள் போற்றி
மெய்ப்புகழ்ச் சோழர் மிளிர்குளி ராரா
ணரசிங்க முனையார் நற்கன்னி சதயந்
திரவதி பத்தர் சிங்கவா யிலியங்
கலிக்கம்பர் மகரக் கடைநா ளதனிற்

கலியரா டியினிற் கலந்த விந்திரனு
யேயிற் சத்தியார் துலாப் பூசத்தில்
ஐயர்கா டவர்சோ னைப்பசி மூலங்
கணம்புல்ல நாயனர் கார்த்திகை யங்கி
கணஞ்சேர் காரியார் கடம்பூ ராடந்
தூயநெடு மாறர் துலாமதிப் பரணியில்
வாயிலார் நாயனர் மார்கழி யிரேவதி
வெம்முனை யடுவார் மீனப் பூசஞ்
செம்மைநா தங்கழற் சிங்கர்சேப் பரணி
மருவிடங் கழியார் மதிதுலா வாரல்
செருத்துணை நாயனா சிங்கப் பூசஞ்
சேட்புகழ்த் துணையார் சிங்கவா யிலியங்
கோட்புலி நாயனர் குளிர்மதி கேட்டை
பத்தராய்த் தாழ்வார் பரமனைப் பாடுவார்
சித்தத்தைச் சிவன்பாலே சேர்த்துளார்
அப்புறு செய்த்திரு வாரூர்ப் பிறந்தார்
முப்பொழு துந்திரு மேனி தீண்டுவார்
முப்புவி தொழுமுழு நீறு பூசுவார்
அப்பாலு முடிசசார்ந் தாரை வணங்கிப்
பூசலா ரைப்பசி புகும னுடத்தின்
மாசிலா மானியார் மைம்மதி யுரோகிணி
மிகுசிவ நேசர் மீனரோ கிணியிற்
றெருகுபுகழ்ச் செங்கட் சோழர் குடக்குன்
றடுநீல கண்டயாழ்ப் பாணர் சேமூலஞ்
சடையனர் மார்கழி சார்ந்தவா திரையில்
இசைஞானி மேடத் திசைந்த சித்திரையில்
வசையிலா விம்மதி மருவுமிந் நாளிற்
பரகதி யடைந்த பத்தரைப் பாடிக்
கருதுவன் றொண்டர் கடகச் சுவாதி
குருபூசை நாளிற் குறைவிலா திவர்க்கு
வருபூசை தந்தோர் மாங்கலத் தோங்கித
தவப்பய னெய்திச் சதுமறைக் கிரியிற்
சிவகதி யடைத றிண்ணமுண மையதே

---

பாடிய சம்பந்தர் வைகாசி மூலம் பயிலுமப்பர்
நீடிய சித்திரை மாதச் சதய நிறைவன்றொண்டர்
ஆடியிற் சோதி திருவாத வூராநல் லாணிமகந
தேடிய சேக்கிழார் வைகாசிப் பூசஞ் சிறந்தனரே.

சித்திரை யத்த முமாபதி யாவணித் திங்கடனில்
உத்திரஞ் சீர்கொண் மறைஞான சம்பந்த ரோதுகன்னிச்
சுத்திமெய்ப் பூர மருணந்தி யைப்பசிச் சோதிதனில்
வித்தக மெய்கண்ட தேவர் சிவகதி மேவினரே.

திருநட்சத்திர முற்றிற்று.

### சமயதாரவர் நால்வர் வயசு.

அப்பருக கெண்பத்தொன் றருள்வாத வூாருக்குச்
செப்பியநா லெட்டினிற் றெய்வீக—மிப்புவியிற்
சுநதராககு மூவாறு தொன்ஞான சம்பந்தர்க்
கநதம பதினாறறி.

---

திருத்தொண்டர் திருவந்தாதி.

# திருத்தொண்டர் திருவந்தாதி.

பொன்னி வடகரை சேர்நாரை யூரிற் புழைக்கைமுக
மன்ன னருபதது மூவர் பதிதே மரபுசெயல்
பன்னவத் தொணடத் தொகைவகை பல்குமந் தாதிதனைச்
சொன்ன மறைக்குல நம்பிபொற் பாதத் துணைதுணையே.

### தில்லைவாழந்தணர்.

செப்பத் தகுபுகழ்த தில்லைப் பதியிற் செழுமறையோர்
ஒப்பப் புவனஙகண மூன்றினு மும்பரி னூரெரித்த
வப்பர்க் கமுதத திருநடர்க கநதிப் பிறையணிந்த
துப்பர்க் குரிமைத தொழில்புரி வோர்தமைச் சொல்லுதுமே. (க)

### திருநீலகண்டநாயனார்.

சொல்லச் சிவன்றிரு வாணைதன் றூமொழி தோணசையை
யொல்லைத துறந்துரு மூத்ததற் பின்னுமை கோனருளால்
லில்லைப் புரைநத லாளொ டிளமைபெற் றின்பமிக்கான்
றில்லைத திருநீல கண்டக் குயவனுஞ் செய்தவனே (உ)

### இயற்பகைநாயனார்.

செய்தவர் வேணடிய தியாதுங கொடுப்பச் சிவன்றவனுய்க்
கைதவம் பேசிநின காதலி யைத்தரு கென்றலுமே
மைதிகழ் கணணியை யீநதவன் வாய்ந்த பெருமபுகழ்வந்
தெயதிய காவிரிப் பூம்பட் டினத்து ளியற்பகையே. (ங)

### இளையான்குடிமாறநாயனார்.

இயலா விடைச்சென்ற மாதவாக் கின்னமு தாவிதைத்த
வயலார் முளைவிததுவாரி மனையலக் கால்வறுத்துச்
செயலாா பயிர்விழுத தீஙகறி யாககு மவனசெழுநீர்க்
கயலா ரிளையான் குடியுடை மாறனெங கற்பகமே. (ச)

### மெய்ப்பொருணயனார்.

கற்றநன் மெய்த்தவன் போலொரு பொய்த்தவன் காய்சினத்தாற்
செற்றவன் றன்னை யவனைச் செறப்புக லுந்திருவாய்
மற்றவன் றத்தா நமரே யெனச்சொல்லி வானுலகம்
பெற்றவன் சேதியன் மெய்ப்பொரு ளாமென்று பேசுவரே. (ரு)

### விறன்மிண்டநாயனார்.

பேசும் பெருமையவ் வாரூ ரனையும் பிரானவனு
மீசன் றனையும் புறகுதட் டென்றவ னீசனுக்கே
நேச னெனக்கும் பிரான்மனைக் கேபுக நீடுதென்றல்
வீசும் பொழிற்றிருச் செங்குன்ற மேய விறன்மிண்டனே. (௬)

### அமர்நீதிநாயனார்.

மிண்டும் பொழிற்பழை யாறை யமர்நீதி வெண்பொடியின்
முண்டந் தரித்த பிராற்குநல் லூரின்முன் கோவணநோ
கொண்டிங கருளென்று தன்பெருஞ் செல்வமுந் தன்னையுந்தன்
றுண்ட மதிநுத லாளையு மீந்த தொழிலினனே (எ)

### சுந்தரமூர்த்திநாயனார்.

தொழுதும் வணங்கியு மாலயன் றேடருஞ் சோதிசென்றங்
கெழுதுந் தமிழ்ப்பழ வாவணங் காட்டி யெனக்குன்குடி
முழுது மடிமைவந் தாட்செ யெனப்பெற்ற வன்முரசே
றெழுகு மலரினற் றூரெம் பிரானம்பி யாரூரனே. (அ)

### எறிபத்தநாயனார்.

ஊர்மதின் மூன்றட்ட வுத்தமர்க் கென்றோ ருயர்தவத்தோன்
றார்மலர் கொய்யா வருபவன் றண்டின் மலர்பறித்த
ஆர்மலை மேற்கொளும பாக ருடறுணி யாக்குமவ
னோர்மலி மாமதில சூழ்கரு வூரி லெறிபத்தனே. (௯)

### ஏனாதிநாதநாயனார்.

பத்தனை யேனாதி நாதனைப்பாரீ டெயினை தன்னுள்
அத்தனைத் தன்னோ டமர்மலைந்தா னெற்றி நீறுகண்டு
கைத்தனி வாள்வீ டொழிந்தவன் கணடிப்ப நின்றருளு
நித்தனை யீழக் குலதீப னென்பரிந் நீணிலத்தே. (௧௦)

### கண்ணப்பநாயனார்.

நிலத்திற் றிகழ்திருக் காளத்தி யார்திரு நெற்றியின்மே
னலத்திற் பொழிதரு கண்ணிற் குருதிகண் டுண்ணடுங்கி
வலத்திற் கடுங்கணை யாற்றன் மலர்க்கண் ணிடந்தப்பினுன்
குலத்திற் கிராதனங் கண்ணப்ப னொன்மென்று கூறுவரே. (௧௧)

### குங்குலியக்கலயநாயனார்.

ஏய்ந்த கயிறுதன் கண்டத்திற் பூட்டி யெழிற்பனந்தாட்
சாய்ந்த சிவனிலைத் தானென்பர் காதலி தாலிகொடுத
தாய்ந்தநற் குங்குலி யங்கொண்ட னற்புகை காலனைமுன்
காய்ந்த வரற்கிட்ட தென்கட வூரிற் கலயனையே. (௧௨)

### மானக்கஞ்சாறநாயனார்.

கலச முலைக்கன்னி காதற் புதல்வி கமழ்குழலை
நலசெய் தவத்தவன பஞ்ச வடிக்கிவை நல்கெனலு
மலசு மெனக்கரு தாதவள் கூந்த லரிந்தளித்தான்
மலைசெய் மதிற்கஞ்சை மானக்கஞ் சாற னெனும்வள்ளலே. (௧௩)

### அரிவாட்டாயநாயனார்.

வள்ளற் பிரானற்கமு தேந்தி வருவோ னுகலுமிங்கே
வெள்ளச் சடையா யமுதுசெய் யாவிடி லென்றலையைத்
தள்ளத் தகுமென்று வாட்பூட் டியதடங் கையினன்கா
ணள்ளற் பழனக் கணமங் கலத்தரி வாட்டாயனே. (௧௪)

### ஆனாயநாயனார்.

தாயவன் யாவுக்குந் தாழ்சடை மேற்றனித் திங்கள்வைத்த
தூயவன் பாதந் தொடர்ந்துதொல் சீர்துளை யாற்பரவும்
வேயவன் மேன்மழ நாட்டு விரிபுனன் மங்கலக்கோ
னாயவ னானாய னென்னையு வந்தாண் டருளினனே. (௧௫)

### சுந்தரமூர்த்திநாயனார்.

அருட்டுறை யத்தர்க் கடிமைப்பட் டேனினி யல்லனென்னும்
பொருட்டுறை யாவதென் னேயென்ன வல்லவன் பூங்குவளை
யிருட்டுறை நீர்வய னாவற் பதிக்கும்பிரா னடைந்தோர்
மருட்டுறை நீக்கிநல் வான்வழி காட்டிட வல்லவனே. (௧௬)

### மூர்த்திநாயனார்.

அவந்திரி குண்டம ணாவதின் மாள்வனென் றன்றாலவாய்ச்
சிவன்றிரு மேனிக்குச் செஞ்சந் தனமாச் செழுமுழங்கை
யுவந்தொளிர் பாறையிற் றேய்த்துலக் காண்டவொண் மூர்த்திதன்னூர்
நிவந்தபொன் மாட மதுரா புரியென்னு நீள்பதியே (௧௭)

### முருகநாயனார்.

பதிகந் திகழ்தரு பஞ்சாக் கரம்பயி னாவினன்சீர்
மதியஞ் சடையாக் கலர்தொட் டணிபவன் யான்மகிழ்ந்து
துதியங் கழற்சண்பை நாதற்குத் தோழன்வண் டொண்டனம்பொன்
னதிகம் பெறும்புக லூர்முரு கன்னெனு மந்தணனே. (௧அ)

### உருத்திரபசுபதிநாயனார்.

அந்தாழ் புனறன்னி லல்லும் பகலுநின் றாதரத்தால்
உந்தாத வன்பொடு ருத்திரஞ் சொல்லிக் கருத்தமைந்த
பைந்தா ருருத்திர பசுபதி தன்னற் பதிவயற்கே
நந்தார் திருத்தலை யூரென் றுரைப்பரிந் நானிலத்தே. (௧௯)

### திருநாளைப்போவார்நாயனார்.

நாவார் புகழ்த்தில்லை யம்பலத் தானருள் பெற்றுநாளைப்
போவா னவனும் புறத்திருந் தொண்டன்றன் புன்புலைபோய்
மூவா யிரவர்கை கூப்ப முனியாய வனபதிதான்
மாவார் பொழிறிக ழாதனூ ரென்பரிம் மண்டலத்தே. (௨௦)

### திருக்குறிப்புத்தொண்டநாயனார்

மண்டும் புனற்சடை யான்றமர் தூசெற்றி வாட்டும்வகை
விண்டு மழைமுகில் வீடா தொழியின்யான் வீவனென்றே
மண்டும் படர்பாறை முட்டு மெழிலார் திருக்குறிப்புத்
தொண்டன் குலங்கச்சி யேகா லியர்தங்க டொல்குலமே. (௨௧)

### சண்டேசுரநாயனார்.

குலமே றியசெய்ஞ ஞாரிற் குரிசில் குரைகடல்சூழ்
தலமே றியவிறற் சண்டிகண் டீர்தந்தை தாளிரண்டும்
வலமே றியமழு வாலெறிந் தீசன் மணிமுடிமே
னலமே றியபால் சொரிந்தலர் சூட்டிய நன்னிதியே (௨௨)

### சுந்தரமூர்த்திநாயனார்.

நிதியார் துருத்திதென் வேள்விக் குடியாய் நினைமறந்த
மதியேற கறிதறி வைத்த புகர்பின்னை மாற்றிடென்று
துதியா வருள்சொன்ன வாறறிவா ரிடைப் பெற்றவன்கா
ணதியார் புனல்வய னுவலா கோனென்னு நற்றவனே. (௨௩)

### திருநாவுக்கரசுநாயனார்.

நற்றவ னல்லூர்ச் சிவன்றிருப் பாதந்தன் சென்னிவைக்கப்
பெற்றவன் மற்றிப் பிறப்பற வீரட்டர் பெய்கழற்ருள்
உற்றவ னுற்ற விடமடை யாரிட வொள்ளமுதாத்
துற்றவ னூமரி னுவுக கரசெனுந் தூமணியே. (௨௪)

மணியினை மாமறைக் காட்டு மருந்தினை வண்மொழியாற்
றிணியன நீள்கத வந்திறப் பித்தன தென்கடலிற்
பிணியன கன்மிதப் பித்தன சைவப் பெருநெறிக்கே
யணியன நாவுக் கரையர்பி ரான்ற னருந்தமிழே. (௨௫)

### குலச்சிறைநாயனார்.

அருந்தமி ழாகரன் வாதி லமணைக் கழுநுதிமேல்
இருந்தமிழ் நாட்டிடை யேற்றுவித் தோனெழிற் சங்கம்வைத்த
பெருந்தமிழ் மீனவன் றன்னதி காரி பிரசமல்கு
குருந்தவிழ் சாரன் மணமேற் குடிமன் குலச்சிறையே. (௨௬)

### பெருமிழலைக்குறும்பநாயனார்.

சிறைநன் புனற்றிரு நாவலூ ராளி செழுங்கயிலைக்
கிறைநன் கழனுளை யெய்து மிவனருள் போற்றவின்றே
பிறைநன முடியன் னடியடை வேனென் றுடல்பிரிந்தா
னறைநன் மலர்த்தா மிழலைக் குறும்ப னெனுநம்பியே. (௨௭)

### காரைக்காலம்மையார்.

நம்பன் றிருமலை நான்மிதி யேனென்று தாளிரண்டு
மும்பா மிசைத்தலை யானடந் தேற வுமைநகலுஞ்
செமபொன னுருவனென னம்மை யெனப்பெற் றவள்செழுந்தேன்
கொம்பி னுதகாரைக் காலினின மேய குலதனமே (௨௮)

### அப்பூதியடிகணயனார்.

தனமா வதுதிரு நாவுக்கரசின் சரணமென்று
மனமார் புனறபந்தா வாழ்த்திவைத தாங்கவன் வண்டமிழ்க்கே
யினமாத் தனது பெயரிடப் பெற்றவ னெங்கள்பிரா
னனமார் வயற்றிங்க ளூரினில வேதிய னப்பூதியே. (௨௯)

### திருநீலநக்கநாயனார்.

பூதிப் புயத்தர் புயத்திற் சிலந்தி புகலுமஞ்சி
யூதித் துமிந்த மனைவியை நீப்பவுப் பாலவெல்லாம்
பேதித் தெழுந்தன காணென்று பிஞ்ஞகன் காட்டுமவ
னீதித் திகழ்சாத்தை நீலநக் கன்னெனும் வேதியனே. (௩௰)

### நமிநந்தியடிகணாயனார்.

வேத மறிக்காத் தாரூ ராற்கு விளக்கு நெய்யைத்
தீது செறியமண கையரட் டாவிடத் தெண்புனலால்
ஏத முருக வருகவென் றன்று விளக்கெரித்தா
னாத னெழிலேமப் பேறூ ரதிப னமிநந்தியே. (௩௧)

### சுந்தரமூர்த்திநாயனார்.

நந்திக்கு நம்பெரு மாற்குநல் லாரூரி னாயகற்குப்
பந்திப் பரியன செந்தமிழ் பாடிப் படர்புனலிற்
சிந்திப் பரியன சேவடி பெற்றவன் சேவடியே
வந்திப் பவன்பெயர் வன்றொண்ட னென்பரிவ் வையகத்தே. (௩௨)

### திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

வைய மகிழயாம் வாழ வமணர் வலிதொலைய
வையன் பிரம புரத்தாற் கமமென் குதலைசெவ்வாய்
பைய மிழற்றும் பருவத்துப் பாடப் பருப்பதத்தின்
றைய லருள்பெற் றனனென்பர் ஞானசம் பந்தனையே. (௩௩)

பந்தார் விரலியர் வேள்செங்கட் சோழன் முருகனல்ல
சந்தா ரகலத்து நீலநக் கன்பெயர் தான்மொழிந்து
கொந்தார் சடையார் பதிகத்தி லிட்டடி பேணகொடுத்த
வந்தாதி கொண்ட பிரானருட் காழியர் கொற்றவனே. (௩௪)

### ஏயர்கோன்கலிக்காமநாயனார்.

கொற்றத் திறலெந்தை தந்தைதன் றந்தையெங் கூட்டமெல்லாந்
தெற்றச் சடையாய் நினதடி யேந்திகழ் வன்றொண்டனே
மற்றிப் பிணிதவிர்ப் பானென் றுடைவா ளுருவியந்நோய்
செற்றுத் தவிர்கலிக் காமன் குடியேயர் சீர்குடியே. (௩௫)

### திருமூலநாயனார்.

குடிமன்னு சாத்தனூர்க் கோக்குல மேய்ப்போன் குரம்பைபுக்கு
முடிமன்னு கூனற் பிறையாளன் றன்னை முழுத்தமிழின்
படிமன்னு வேதத்தின் சொற்படி யேபர விட்டெனுச்சி
யடிமன்ன வைத்த பிரான்மூல னாகின்ற வங்கணனே. (௩௬)

### தண்டியடிகணாயனார்.

கண்ணார் மணியொன்று மின்றிக் கயிறு பிடித்தரற்குத்
தண்ணார் புனற்றடந் தொட்டலுந் தன்னை நகுமமணர்
கண்ணாங் கிழப்ப வமணர் கலக்கங்கண் டம்மலர்க்கண்
விண்ணா யகனிடைப் பெற்றவ னாரூர் விறற்றண்டியே. (௩௭)

### மூர்க்கநாயனார்.

கண்டலை சூழ்திரு வேற்காட் டூர்மன்னன் றருகவற்றாற்
கொண்டவல் லாயம்வன் சூதரை வென்றுமுன் கொண்டபொருண்
முண்டநன் னீற்ற னடியவர்க் கீபவன் மூர்க்கனென்பர்
கண்டலை நீரொண் குடந்தையின் மேவுநற் சூதனையே. (௬௮)

### சோமாசிமாறநாயனார்.

சூதப் பொழிலம்ப ரந்தணன் சோமாசி மாறனென்பான்
வேதப் பொருளஞ் செழுத்தும் விளம்பியல் லான்மொழியா
னீதிப் பரன்மன்னு நித்த நியமன் பரவையென்னு
மாதுக்கு காந்தன் வன்றொண்டன் றனக்கு மகிழ்துணையே. (௬௯)

### சுந்தரமூர்த்திநாயனார்.

துணையு மளவுமில் லாதவன் றன்னரு ளேதுணையாக்
கணையுங் கதிர்நெடு வேலுங் கறுத்த கயலிணையும்
பிணையு நிகர்த்தகட் சங்கிலி பேரமைத் தோளிரண்டு
மணையு மவன்றிரு வாரூர னாகின்ற வற்புதனே. (௭௦)

### சாக்கியநாயனார்.

தகடன வாடையன் சாக்கியன் மாக்கற் றடவரையின்
மகடனந் தாக்கக் குழைந்ததிண் டோளர்வண் கம்பர்செம்பொன்
றிகழ்தரு மேனியிற் செங்க லெறிந்து சிவபுரத்துப்
புகழ்தரப் புக்கவ னூர்சங்க மங்கை புவனியிலே. (௭௧)

### சிறப்புலிநாயனார்.

புவனியிற் பூதியுஞ் சாதன மும்பொலி வார்ந்துவந்த
தவநிய மர்க்குஞ் சிறப்புச்செய் தத்துவ காரணனா
மவனியிற் கீர்த்தித் தென்னாக்கூ ரதிப னருமறையோன்
சிவனிய மந்தலை நின்றதொல் சீரஞ் சிறப்புலியே. (௭௨)

### சிறுத்தொண்டநாயனார்.

புலியி னதளுடைப் புண்ணியற் கின்னமு தாத்தனதோர்
ஒலியின் சதங்கைக் குதலைப் புதல்வ னுடறுணித்துக்
கலியின் வலிகெடுத் தோங்கும் புகழ்ச்சிறுத் தொண்டன்கண்டீர்
மலியும் பொழிலொண் செங்காட்டங் குடியவர் மன்னவனே. (௭௩)

### சேரமான்பெருமாணாயனார்.

மன்னர் பிரானெதிர் வண்ணா னுடலுவ ருறநீறூர்
தன்னர் பிரான்றமர் போல வருதலுந் தான்வணங்க
வென்ன பிரானடி வண்ணா னெனவடிச் சேரனென்னுந்
தென்னர் பிரான்கழ றிற்றறி வானெனுஞ் சேரலனே. (௭௪)

சேரற்குத் தென்னா வலர்பெரு மாற்குச் சிவனளித்த
வீரக் கடகரி முன்புதன் பந்தி யிவுளிவைத்த
வீரற்கு வென்றிக் கருப்புவில் வீரனை வெற்றிகொண்ட
சூரற் கெனதுள்ள நன்றுசெய் தாயின்று தொண்டுபட்டே. (௭௫)

### கணநாதநாயனார்.

தொண்டரை யாக்கி யவரவர்க் கேற்ற தொழில்கள்செய்வித்
தண்டர்தங் கோனைக் கணநாதனுக்கு நாயகம் பெற்றவன்காண்
கொண்டல்கொண் டேறிய மின்னுக்குக் கோல மடல்கடொறுங்
கண்டலவெண் சோறளிக் குங்கடற் காழிக் கணநாதனே. (௪௬)

### கூற்றுவநாயனார்.

நாதன் றிருவடி யேமுடி யாகக் கவித்துநல்ல
போதங் கருத்திற் பொறித்தமை யாலது கைகொடுப்ப
வோதந் தழுவிய ஞாலமெல்லா மொரு கோலின்வைத்தான்
கோதை நெடுவேற் களப்பாள னாகிய கூற்றுவனே. (௪௭)

### சுந்தரமூர்த்திநாயனார்.

கூற்றுக் கெவனோ புகறிரு வாரூரன் பொன்முடிமேல்
ஏற்றுத் தொடையலு மின்னடைக் காயு மிடுதருமக்
கோற்றெருத்து கூனனுங் கூன்போய்க் குருடனுங் கண்பெற்றமை
சாற்றித் திரியும் பழமொழி யாமித் தரணியிலே. (௪௮)

### பொய்யடிமையில்லாதபுலவர்.

தரணியிற் பொய்ம்மை யிலாத்தமிழ்ச் சங்க மதிற்கபிலர்
பரணர் நக்கீரர் முதனாற்பத் தொன்பது பல்புலவோர்
அருணமக் கீயுந் திருவால வாயரன் சேவடிக்கே
பொருளமைத் தின்பக் கவிபல பாடும் புலவர்களே. (௪௯)

### புகழ்ச்சோழ நாயனார்.

புலமன் னியமன்னைச் சிங்கள நாடு பொடிபடுத்த
குலமன் னியபுகழ்க் கோகன நாதன் குலமுதலோ
னலமன் னியபுகழ்ச் சோழனென் றென்பர் நகுசுடர்வாள்
வலமன் னியவெறி பத்தனுக் கீந்ததொர் வண்புகழே. (௫௦)

### நரசிங்கமுனையரைய நாயனார்.

புகழும் படியெம் பரமே தவர்க்குநற் பொன்னிடும்வா
னிகழும் படியோர் தவனமட வார்புனை கோலமொடு
திகழும் படிகண் டவனுக் கிரட்டிபொன் னிட்டவனீ
டிகழு முடிநர சிங்க முனையர சனதிறமே. (௫௧)

### அதிபத்தநாயனார்.

திறமமர் மீன்படுக் கும்பொழு தாங்கொரு மீனசிவற்கென்
றுறவமர் மாகடற் கேவிடு வோனொரு நாட்கனக
திறமமர் மீன்பட நின்மலற் கென்றுவிட் டோன்கமலம்
புறமமர் நாகை யதிபத்த னாகிய பொய்யிலியே. (௫௨)

### கலிக்கம்பநாயனார்.

பொய்யைக் கடிந்துநம் புண்ணியர்க் காட்பட்டுத் தன்னடியான்
சைவத் திருவுரு வாய்வரத் தானவன் றாள்கழுவ
வையத் தவர்முன்பு வெள்கிநீர் வாரா விடமனைவி
கையைத் தடிந்தவன் பெண்ணை கடந்தைக் கலிக்கம்பனே. (௫௩)

### கலியநாயனார்.

கம்பக் கரிக்குஞ் சிலந்திக்கு நல்கிய கண்ணுதலோன்
உம்பர்க்கு நாதற் கொளிவிளக் கேற்றற் குடலிலெண்ணெய்க்
கும்பத் தயிலம்விற் றுஞ்செக் குழன்றுங்கொள் கூலியினால்
நம்பற் கெரித்த கலியொற்றி மாநகர்ச் சக்கிரியே (௫௪)

### சத்திநாயனார்.

கிரிவில் லவர்தம் மடியரைத் தன்முன்பு கீழ்மைசொன்ன
திருவில் லவரையந் நாவரி வோன்றிருந் தாரைவெல்லும்
வரிவில் லவன்வயற் செங்கழு நீரின் மருவுதென்றற்
றெருவில் விரைகம ழுந்தென வரிஞ்சைத் திகழ்சத்தியை (௫௫)

### ஐயடிகள்காடவர்கோனாயனார்.

சத்தித் தடக்கைக் குமரன்ற றாதைதன் றன்மையெல்லா
முத்திப் பதமொரொரா வெண்பா மொழிந்து முடியரசா
மத்திறந் தும்மைந்தன் றுலராற் காயைய மேற்றமல்லனும்
பத்திக் கடலை யடிகளா கின்றநம் பல்லவனே. (௫௬)

### சுந்தரமூர்த்திநாயனார்.

பல்லவை செங்கதி ரோனைப் பறித்தவன் பாதம்புகழ்
சொல்லவ னென்புக லூரரன் பாற்றுய்ய செம்பொன்கொள்ள
வல்லவ னொட்டியத் தானகுடி மாணிக்க வண்ணனுக்கு
நல்லவன் றன்பதி நாவலூ ராகின்ற நன்னகரே (௫௭)

### கணம்புல்லநாயனார்

நன்னக ராய விருக்குவே ளூர்தனி னல்குரவாய்ப்
பொன்னக ராயநற் றில்லை புகுந்து புலீச்சரத்து
மன்னவ ராய வரற்குநற் புல்லால் விளக்கெரித்தான்
கன்னவி றோளெந்தை தந்தை பிரானெங்க ணம்புல்லனே (௫௮)

### காரிநாயனார்.

புல்லன வாகா வகையுல கத்துப் புணர்ந்தனவுஞ்
சொல்லின வுங்கய மாக்கிச் சுடர்பொற் குவடுதனி
வில்லனை வாழ்த்தி விளங்குங் கயிலைபுக் கானென்பரால்
கல்லன மாமதில் சூழ்கட வூரினிற் காரியையே. (௫௯)

### நெடுமாறநாயனார்.

காரத்தண் முகிற்கைக் கடற்கா ழியர்பெரு மாற்கெதிராய
ஆரத்த வமண ரழிந்தது கண்டுமற் றங்கவரைக்
கூரத்த கழுவி லுதிவைத்த பஞ்சவ னென்னுரைக்கும்
வார்த்தை யதுபண்டு நெல்வேலி யில்வென்ற மாறனுக்கே (௬௦)

### வாயிலார்நாயனார்

மாறா வருளரன் றன்னை மனவா லயத்திருத்தி
யாறா வறிவா மொளிவிளக் கேற்றி யகமலராம்
வீறா மலரளித் தன்பெறு மெய்யமிர் தங்கொடுத்தான்
வீறார் மயிலைப்புர வாயிலா னென்று விளம்புவமே (௬௧)

### முனையடுவார்நாயனார்.

என்று விளம்புவர் நீடூ ரதிபன் முனையடுவோ
னென்று மமரு ளழிந்தவர்க் காக்கூலி யேற்றெறிந்து
வென்று பெருஞ்செல்வ மெல்லாங் கனகன் மேருவென்னுங்
குன்று வளைத்த சிலையான் றமர்க்குக் கொடுத்தனனே. (௬௨)

### சுந்தரமூர்த்திநாயனார்.

கொடுத்தான் முதலைகொள் பிள்ளைக் குயிரன்று புக்கொளியூர்த்
தொடுத்தான் மதுர கவியவி நாசியை வேடர்சுற்றம்
படுத்தான் றிருமுரு கன்பூண் டியினிற் பராபரத்தேன்
மடுத்தா னவனென்பர் வன்றொண்ட னாகின்ற மாதவனே. (௬௩)

### கழற்சிங்கநாயனார்.

மாதவத் தோர்தங்கள் வைப்பினுக் காரூர் மணிக்குவைத்த
போதினைத் தானமோந்த தேவிதன் மூக்கை யரியப்பொற்கை
காதிவைத் தன்றோ வரிவதென் றங்கவள் கைதடிந்தா
னாதமொய்த் தாவண்டு கிண்டுபைங் கோதைக் கழற்சிங்கனே. (௬௪)

### இடங்கழிநாயனார்

சிங்கத் துருவனைச் செற்றவன் சிற்றம் பலமுகடு
கொங்கிற் கனக மணிந்தவா தித்தன் குலமுதலோன்
றிங்கட் சடையர் தமரென் செல்வ மெனப்பறைபோக்
கெங்கட் கிறைவ னிருக்குவே ளூர்மன் னிடங்கழியே. (௬௫)

### செருத்துணைநாயனார்.

கழிநீள் கடனஞ்ச மின்றார்க் கிருந்த கடிமலரை
மொழிநீள் புகழ்க்கழற் சிங்கன்றன் றேவி முனமோத்தலுமே
யெழில்நீள் குமிழ்மலர் மூக்கரிந் தானென் றியம்புவராற்
செழுநீர் மருகனன் னாட்டமா தஞ்சைச் செருத்துணையே. (௬௬)

### புகழ்த்துணைநாயனார்.

செருவிலி புத்தூர்ப் புகழ்த்துணை வையஞ் சிறுவிலைத்தா
வுருவலி கெட்டுண வின்றி யுமைகோனை மஞ்சனஞ்செய்
தருவதோர் போதுகை சோர்ந்து கலசம் விழத்தரியா
தருவரை வில்லி யருளி னிதியது பெற்றனனே. (௬௭)

### கோட்புலிநாயனார்.

பெற்ற முயர்த்தோன் விரையாக் கலிபிழைத் தோர்தமது
சுற்ற மறுக்குந் தொழிற்றிரு நாட்டியத் தான்குடிக்கோன்
குற்ற மறுக்குநங் கோட்புலி நாவற் குரிசிலருள்
பெற்ற வருட்கட லென்றுல கேத்தும் பெருந்தகையே (௬௮)

### சுந்தரமூர்த்திநாயனார்.

தகுமகட் பேசினென் வீயவே நாள்போன சங்கிலிபாற்
புகுமணக் காதலி னொற்றி யூருறை பண்ணியன்றன்
மிகுமலர்ப் பாதம் பணிந்தரு ளாலிவ் வியனுலக
நகுமவ ழக்கேகன் மை யாப்புணர்ந் தாரூர வூரரசே. (௬௯)

### பத்தராய்ப்பணிவார்.

அரசினை யாரூ ரமரர் பிரானை யடிபணிந்திட்
டுரைசெய்த வாய்தடு மாறி யுரோம புளகம்வந்து
கரசர ணாதி யவயவங் கம்பித்துக் கண்ணருவி
சொரிதரு மங்கத்தி னோர்பத்த ரென்று தொகுத்தவரே. (௭௦)

### பரமனையேபாடுவார்.

தொகுத்த வடமொழி தென்மொழி யாதொன்று தோன்றியதே
மிகுத்த வியலிசை வல்ல வகையில வினைடோயுநெற்றி
வகுத்த மதிற்றில்லை யம்பலத் தான்மலர்ப் பாதங்கண்மேல
உகுத்த மனத்தொடும் பாடவல் லோரென்ப ருத்தமரே. (௭௧)

### சித்தத்தைச்சிவன்பாலேவைத்தார்.

உத்தமத் தானத் தறம்பொரு ளின்ப மொடியெறிந்து
வித்தகத் தானத் தொருவழிக் கொண்டு விளங்கச்சென்னி
மத்தம்வைத் தான்றிருப் பாத கமல மலரிணைக்கீழ்ச்
சித்தம்வைத் தாரென்பர் வீடுபே றெய்திய செல்வர்களே (௭௨)

### திருவாரூர்ப்பிறந்தார்.

செல்வந் திகழ்திரு வாரூர் மதில்வட்டத் துட்பிறந்தார்
செல்வன் றிருக்கணத் துள்ளவ ரேயத னாற்றிகழச்
செல்வம் பெருகுதென் னாரூர்ப் பிறந்தவர் சேவடியே
செல்வ நெறியுறு வார்க்கணித் தாய செழுநெறியே. (௭௩)

### முப்பொழுதுந்திருமேனிதீண்டுவார்.

நெறிவார் சடையரைத் தீண்டி முப்போது நீடாகமத்தி
னறிவா லவணங்கி யர்ச்சிப்ப வாநம்மை யுமாண்டமராக
கிறையாய்முக் கண்ணுமெண் டோளுந் தரித்திறில் செல்வத்தொடு
முறைவார் சிவபெரு மாற்குறை வாய வுலகினிலே (௭௪)

### முழுநீறுபூசியமுனிவர்.

உலகு கலங்கினு மூழி திரியினு முன்னொருகால்
விலகுத லில்லா விதியது பெற்றநல் வித்தகர்கா
ணலகில பெருங்குணத் தாரூ ரமர்ந்த வரனடிக்கீழ்
இலகுவெண் ணீறுதம் மேனிக் கணியு மிறைவர்களே. (௭௫)

### அப்பாலுமடிச்சார்ந்தார்.

வருக்க மடைத்துநன் னாவலூர் மன்னவன் வண்டமிழாற்
பெருக்கு மதுரத் தொகையிற் பிறைசூடி பெய்கழற்கே
யொருக்கு மனத்தொடப் பாலடிச் சார்ந்தவ ரென்றுலகிற்
றெரிக்கு மவர்சிவன் பல்கணத் தோரஞ் செழுந்தவரே. (௭௬)

### சுந்தரமூர்த்திநாயனார்.

செழுநீர் வயன்முது குன்றினிற் செந்தமிழ் பாடிவெய்ய
மழுநீள் தடக்கைய னீந்தபொன் னாங்குக்கொள்ளா துவந்தப்
பொழினீ டருதிரு வாரூரில் வாசியும் பொன்னுங் கொண்டோன்
கெழுநீள் புகழ்த்திரு வாரூர னென்றுநாங் கேட்பதுவே (௭௭)

சுந்தரமூர்த்திநாயனார்

ஞான வாரூரரைச் சேரரை யல்லது நாமறியோ
மானவ வாசகம் பொய்ம்மைபுகக் கவரை வளரொளிப்பூண்
வானவ ராலு மருவற் கரிய வடகயிலைக்
கோனவனைக் கோயிற் பெருந்தவத் தோர்தங்கள் கூட்டத்திலே (௮௬)

திருத்தொண்டத் தொகையிலுள்ள.
கூட்டவடியார்கள், தனியடியார்கள்

கூட்டமொன் பானொ டறுபத்து மூன்று தனிப்பெயரா
வீட்டும் பெருந்தவத் தோரெழு பத்திரண் டாம்வினையை
வாட்டுந் தவத்திருத் தொண்டத் தொகைபதி னொன்றினவகைப்
பாட்டுந் திகழ்திரு நாவலூ ராளி பணித்தனனே. (௮௭)

திருத்தொண்டத் தொகைப் பதிகக்கவிகளின் முதற்குறிப்பு

பணித்தநற் றொண்டத் தொகைமுதற் றில்லை யிலைமலிந்த
வணித்திகழ் மும்மை திருநின்ற வம்பரு வார்கொண்டசீர்
இணைத்தநற் பொய்யடி மைகறைக்கண்டனை கடல்சூழ்ந்தபின்
மணித்திகழ் சொற்பத்தா மன்னிய சீர்மறை நாவனொடே. (௮௮)

நூற்பயன்.

ஓடிடும் பஞ்சேந் திரியமொடுக்கி யென்னும் வினைகள்
வாடிடும் வண்ணம் வினை றேத்தவுஞ் செய்தனன் வானிலுள்ளோர்
சூடிடுஞ் சீர்த்திருப் பாதத்தர் தொண்டத் தொகையிலுள்ள
சேடர்தஞ் செல்வப் பெரும்புக ழந்தாதி செப்பிடவே. (௮௯)

திருத்தொண்டர் திருவந்தாதி முற்றிற்று
திருச்சிற்றம்பலம்.

---

உ

திருச்சிற்றம்பலம்.

# திருத்தொண்டர் திருநாமக்கோவை.

மெய்யன்பர் நாமமெல்லாம் வெவ்வேறு போற்றிடவைங்
கையன் றிருவடியே காப்பு.

---

தில்லைவா ழந்தணர்கள் சீர்நீல கண்டனார்
இல்லை யளித்த வியற்பகையார்—தொல்லை
யிளையான் குடிமாறர் மெய்ப்பொருளா ரொன்று
மிளையா விறன்மிண்ட ரின்ப—மளவுமமர்
நீதி யெறிபத்தர் நீண்டபுக ழேனாதி
நாதர்திருக் கண்ணப்பர் நற்கலயர்—மேதகுசீர்

மாணக்கஞ் சாறநரி வாட்டாய ராணையர்
ஞானத திருமூாததி நாயனார்—மேன்மை
முருகா பசுபதியாா முன்னாளைப் போவார்
துரிசி றிருக்குறிப்புத் தொண்டர்—மருவுமறைச்
சணடேசர் வாகீசா தக்க குலசசிறையாா
கொண்ட மிழலைக் குறும்பனாா—தொண்டுசெயு
நீள்காரைக் காலமமை யப்பூதி நீலநககா
மூனா நமிநந்தி மூததமிழை—யாளுந
திருஞான சம்பந்தா செய்ய கலிககாமர்
அருணமூலா தண்டி யடிகள்—வருமூாககர்
சோமாசி மாறனாா சாககியனார் சூழாககூா
நாமாா சிறப்புலியாா நற்றொண்டி—னேமச்
சிறுததொண்டர் சேரமான் செய்ய கணநாதா
விறற்களநதைக கூற்றுவனாா விஞ்சைத் —திறததுமிகும்
பொயயடிமை யில்லாப் புலவா புகழ்சசோழா
மொயகொணா சிஙக முனையரைய—னையாதி
பததா கலிககம்பா கலியா பகாசத்தி
கைததபுல னையடிகள காடவாகோன—மொய்ததகணம
புலலனார் காரிநெடு மாறர்புகழ் வாயிலாா
நலல முனையடுவார் நாயனார்—மலருகழற்
சிஙக ரிடஙகழியாா தஞ்சைச செருததுணையார்
கொஙகாா புகழ்ததுணையார் கோட்புலியா—ரஙகணர்ககுப்
பத்தராய்த தாழ்வார் பரமனையே பாடுவாா
சிததஞ் சிவனபாலே சேர்ததுள்ளார்—நிததமு
முததி நெறிகாட்டு முதல்வா முழுதுணாநதோர்
பித்தனுறை யாரூர்ப் பிறந்தார்க—ளததனையே
முப்போதுந திணடுவாா முழுநீறு பூசுவாா
அப்பாலு மீச னடிச்சாாந்தாா—மெயப்பூசன்
மானியாா நேசனாா வாழ்செஙகட் சோழனார்
பான்மையாா நீலகணடப் பாணனார்—மேனமைச்
சடையனிசை ஞானியாா தமமையெலலாஞ சோத்துத்
தொடையாகப் பாடிய வன்றொணட—ரடியிணைகள
சிநதனைசெய் திநதத திருநாமக கோவைதனை
மநதிரமாக் கொணடு மயிர்சிலிாதது—நைநதுருகி
மெயயன்பா லென்றும் விளம்பப் பெறுவாாகள்
கைதவமும் புலலறிவுங கற்பனையு —மையலுநதீாந
ததது விதாநந்த வகணடபரி பூரணததி
னிததியமா வாழ்வாா நிசம்

திருநாமக்கோவை முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்



உ

கணபதி துணை.

திருச்சிற்றம்பலம்

# சேக்கிழார் நாயனர் புராணம்.

(*)

## பாயிரம்.

---

### விநாயகர்

வானுலகு மண்ணுலகும் வாழமறை வாழப்
பான்மைதரு செய்யதமிழ் பார்மிசை விளங்க
ஞானமத வைந்துகர மூன்றுவிழி காலவா
யானைமுக னைப்பரவி யஞ்சலிசெய் கிற்பாம். (௧)

### சபாநாதர்

சீராருஞ் சதுர்மறையுந் தில்லைவா ழந்தணரும்
பாராரும் புலிமுனியும் பதஞ்சலியுந் தொழுதேத்த
வாராருங் கடலபுடைசூழ் வையமெலா மீடேற
ஏராரு மணிமன்று ளாடுதததிரு வடிபோற்றி (௨)

### சிவகாமசுந்தரி.

பாங்கெழுந்த சமண்முதலாம் பரசமய விருணீங்கச்
சிரந்தழுவு சைவநெறித் திருநீற்றி னொளிவிளங்க
அரந்தைகெடப் புகலியர்கோ னமுதுசெய்த திருமுலைப்பால்
சுரந்தளித்த சிவகாம சுந்தரிபூங் கழல்போற்றி (௩)

### கற்பகவிநாய

மலரயனுந் திருமாலுங் காணாமை மதிமயங்கப்
புலிமுனியும் பதஞ்சலியுங் கண்டுதொழப் புரிசடையார்
குலவுநடந் தருந்தில்லைக் குடதிசைக்கோ புரவாயில்
நிலவியகற் பகக்கன்றி னிரைமலர்த்தா ளிணைபோற்றி. (௪)

### சுப்பிரமணியர்

பாறுமுக மும்பொருந்தப் பருந்துவிருந் துணக்கழுகு
நூறுமுக மாயணைந்து நூழில்படு களம்புகுத
மாறுமுகந் தருநிருதர் மடியவடி வேலெடுத்த
ஆறுமுகன் றிருவடித்தா மரையிணைக ளவைபோற்றி. (௫)

### சைவசமயாசாரியர்.

பூழியர்கோன் வெப்பொழித்த புகலியர்கோன் கழல்போற்றி
ஆழிமிசைக் கன்மிதப்பி லணைந்தபிரா னடிபோற்றி
வாழிதிரு நாவலூர் வன்றொண்டர் பதம்போற்றி
ஊழிமலி திருவாத வூராதிருத் தாள்போற்றி. (௬)

### திருத்தொண்டர்கள், சேக்கிழார்நாயனர்

தில்லைவாழ் அந்தணரே முதலாகச் சீர்படைத்த
தொல்லையதாந் திருத்தொண்டத் தொகையடியார் பதம்போற்றி
ஒல்லையவர் புராணகதை யுலகறிய விரித்துரைத்த
செல்வமலி குன்றத்தூர்ச் சேக்கிழா ரடிபோற்றி. (௭)

### நூற்பெயர்.

தாய்மலர்ந்த முகத்தினளாய்த் தழுவிமுலை தரவந்த
நோய்மலர்ந்த பிறவிதொறு நுழையாம லுலகுய்யத்
தீமலர்ந்த சடைக்கூத்தர் திருவருளாற் சேக்கிழார்
வாய்மலர்ந்த புராணத்தின் வரலாறு விரித்துரைப்பாம் (அ)

### அவையடக்கம்

ஊர்க்கடலை யிவனென்னவந் துதித்தநா னேகுதமிழ்
நூற்கடலைக் கரைகண்டு நுவலநினைக் குமதுதிருப்
பாற்கடலைச் சிறவெறும்பு பருகநினைப் பதுபோலு
நீர்க்கடல்சூழ் மண்ணுலகை நிறுக்கநினைக் குமதொக்கும். (௯)

தேவுடனே கூடியசொற் செழுந்தமிழோர் செரிந்துரைத்த
பாவுடனே கூடியவென் பருப்பொருளும் விழுப்பொருளாங்
கோவுடனே கூடிவருங் குருட்டாவு மூர்புகுதும்
பூவுடனே கூடியநார் புனிதர்முடிக் கணியாமால். (௧௦)

பாயிரம் முற்றிற்று.

---

## நூல்.

பாலாறு வளஞ்சுரந்து நல்க மல்கும் பாளைவிரி மணங்கமழ்பூஞ் சோலை
தோறுங், காலாறு கோலியிசை பாட நீடு களிமயிலின் நடமியற்றுந் தொண்டை
நாட்டு, நாலாறு கோட்டத்துப் புலியூர்க் கோட்ட நன்றிபுனை குன்றைவள
நாட்டுமிக்க, சேலாறு கின்றவயற் குன்றத்தூரிற் சேக்கிழார் திருமரபு சிறந்த
தன்றே (௧௧)

நாடெங்குஞ் சோழன்முனந் தெரிந்தேயேற்று நற்குடிநாற் பத்தெண்
ணாயிரத்து வந்த, கூடல்கிழான் பரிசைகிழான் குலவுசீர்வெண் குளப்பாக்கி
ழான்வரிசைக் குளத்தூழான்முன், றேடுபுக ழாரிவருஞ் சிறந்து வாழச் சேக்கி
ழார் குடியிலிந்தத் தேச முய்யப், பாடல்புரி யருண்மொழித்தே வரும்பி னந்
தம் பாலறா வாயரும்வந் துதித்து வாழ்ந்தார் (௧௨)

இமயமலை யரையன்மக டழுவக் கச்சி யேகம்பர் திருமேனி குழைந்த
ஞான்று, சமயமவை யாறினுக்குந் தலைவிக் கீசர் தந்தபடி யெட்டுழக்கீ ராழி
நெல்லு, முமைதிருச்சூ டகக்கையாற் கொடுக்க வாங்கி யுழவுதொழி லாற்பெ
ருக்கி யுலக மெல்லாந், தமதுகொழு மிகுதிகொடு வளர்க்கும் வேளாண் டலை
வர்பெரும் புகழுலகிற் றழைத்த தன்றே. (௧௩)

விளைகழனி பூலோக முழுது மேரி விரிதிரைநீர்க் கடல்வருணன் கம்பு
கட்டி, இளாகலப்பை தருசுமையாள் சுவேத ராமன் இடாமறலி வசந்தீசன
வசத்தா னென்றிங், களவறிந்தாண் டாண்டு தொழும விதைதப்பாம லளக்கு

செம்பியர்பூ பதிமகிழ்ந்து வினவிக் கேட்கச் சேக்கிழார் குரிசிலுரை செய்வா ராலத், தம்பலவர் திருத்தொண்டர் பெருமை யாரூ ரடிகண்முத லடியெடுத்துக் கொடுக்க நாவ, னம்பிபதி னொருதிருப்பாட் டாகச் செய்த நலமலிதொண் டத்தொகைக்கு நாரை யூரிற், நம்பிமுகன் பொருளுரைக்க நம்பி யாண்டார் சுருதிமொழிக் கலித்துறையந் தாதி செய்தார் (௨௩)

ஆயுமறை மொழிநம்பி யாண்டார் நம்பி யருள்செய்த கலித்துறையந் தாதி தன்னைச், சேயதிரு முறைகண்ட ராசராச தேவர்சிவா லயதேவர் முத லாயுள்ள, வேயகருங் கடல்புடைசூ ழுலக மெல்லா மெடுத்தினிது பாராட் டிற் றென்ன வந்தத், தூயகதை யடைவுபடச் சொல்வீரென்று சோழனுரை செயக்கேட்டுக் குன்றை வேந்தர் (௨௪)

தில்லைவா ழந்தணரே முதற்பண் பாடு திருநீல கண்டத்துப் பாணரீறாச், சொல்லியதொண் டத்தொகை நூல் வகையந் தாதித் தொடர்ச்சியினை விரித் துரைக்க வள்ளவன் கேட்டு, மெல்லியலாள் பங்கர்திரு வருளை நோக்கி வியந் தடிமைத் தொண்டுசெய்து பேறு பெற்ற, செல்கதியை நினைந்துருகி வள வர் கோமான் சேவையர்கா வலரைமுக நோக்கிச் சொல்வான். (௨௫)

அவரவர்க ளுடையவர்க ளிருந்த வூரவ் தவதரித்த திருமரபு திருப்பேர் செய்த, சிவசமயத் திருத்தொண்டு முற்றிற் பாடு சிவனடிக்கீ ழுயர்பரம முத்தி பெற்றோ, ரெவ்வருமறி யச்சிவன முதத ராயிங் கிருப்பவர்க ளினிமே லும் பிறப்போர் மண்மே, லவர்களைச்சேர்ந் தருள்பெறுவோர் பகைத்துப் பெற்றோ ரவர்கள்பகை யாயநரகி லடைந்த போர்கள் (௨௬)

இல்லறத்தி லிருந்துநனி முத்தி பெற்றோ ரில்லறத்திற் சிற்றின்ப விய ல்பை நீக்கி, நல்லறமாந் துறவறத்தி னின்று பெற்றோர் நற்பிரம சாரிகளா யருள்பெற் றுய்ந்தோர், செலகதிசற் குருவருளாற் சென்று சேர்ந்தோர் சிவ பூசை செய்துபர முத்தி பெற்றோர், புல்லறிவு தவிர்ந்துதிரு வேட மே மெய்ப் பொருளெனக்கொண் டரனடிக்கீழ்ப் பொருந்த புக்கோர் (௨௭)

இப்படியே யடைவுபடப் பிரித்துக் கேட்டால் யாவருக்கு மேதரிக்கச் செவிகா நீட்ட, வொப்பரிய பொருடெரிந்து விளங்கித் தோன்ற வுவமை யுடைத் தாயகதை கற்க நிற்கத், தப்பில்பெருங் காவியமாய் விரித்துச் செய்து தருவீரென் றவர்க்குவிடை கொடுத்துவேண்டு, செப்பரிய திரவி யமுங் கொடுக்க வாங்கிச் சேக்கிழார் குரிசிறிருத் தில்லை சேர்ந்தார். (௨௮)

வேறு

தில்லையெல்லையில் வந்துவந்தெதிர் தெண்டனிட்டு விழுந்தெழுந்
தல்லிசேர்கம லத்தடத்தினின் மூழ்கியம்பல வாணர்மு
னெல்லைசென்று பணிந்துகைத்தல முச்சிவைத்துள முருகிநைந்
தெல்லைகாணரி தாயபேரொளி யின்பவாரியின் மூழ்கியே. (௨௯)

அடையலார்புர நீறெழுத்திரு நகைசெய்தன்றொரு மூவரைப்
படியின்மேலடி மைகொளும்பதப் பங்கயங்கள் பணிந்துபின்
றடிகளேயுன தடியர்சீரடி யேனுரைத்திட வடியெடுத்
திடாகொடுத்தரு வாயெனத்திரு வருளையெண்ணியி றைஞ்சினார். (௩௦)

அலைபுனற்பகி ரதிநதிச்சடை யாடவாட ராடநின்
றிலகுமன்றினி லாடுவார்திரு வருளினாலச ரீரிவாக்

உலகெலாமென வடியெடுத்துரை செய்தபேரொலி யோசையிக்
கிலகுசீரடி யாரசெவிப்புலத் தெங்குமாகி நிறைந்ததால். (௩௧)

தில்லைமாநகர் வாழ்வாழ்தவ சிந்தையந்தண ராறைஞ்ஞூற்
றல்லதும்பல மடபதித்தவ ராசிரிகளையி லுள்ளமேயா
எல்லையில்லவர் யாவருங்களி கொள்விளங்கச் சீரிவாக
சொல்லைவந்தெழ வனைவருங்கர முச்சிவைத்துள முருகினார் (௩௨)

உள்ளலாபுர நீறெழுக்கணை யொன்றுதொட்டியர் மனறில்வாழ்
வள்ளலார்திரு மாலையுந்திரு நீறுமெய்ப்பரி வட்டமு
மெள்ளலாரல ரென்றுசேவையர் காவலாக்கிவை யினிதளித்
தள்ளலாரய னீடுதில்லையி லனைவருங்களி கொண்டபின். (௩௩)

சேவைகாவலர் தொண்டர்சீருரை செய்வதற்குயர் செய்யுண்முன்
மூவர்பாதிய திருநெறித்தமி ழாதலாலவர் முறைமையால்
யாவருமபுகழ் திருநெறித்தலை வரைவணங்கி யிணங்கிமெய்த்
தாவருஞ்சிவ சாதனங்க டரித்துநீறு பரித்தரோ. (௩௪)

வந்துசூழ நிரைத்தவையிரு நூறுகான்மணி மண்டபத்
தெந்தையார்திரு வருளையுன்னி யிருந்துசேவையர் காவலர்
செந்தமிழ்த்தொடை யாலிளங்கிய திருவிருத்த நிருத்தனார்
தந்தசொன்முத லாவெடுத்தனர் தாணுவான புராணநூல் (௩௫)

வேறு.

திருமறையோர் புராணமவை பதின்மூன்று சிவவேதியரானை வழிபட்ட புராணமோ ரிரண்டு, குறைகழன்மா மாத்திரரோன் றறுவர்முடி மன்னர் குறுநிலமன்னவரைவர் வணிகர்குலத்தைவர், திருவமைநெறி வேளாளர் பதின் மூவரிடைய ரிருவர்சாலியர்குயவர் தயிலவினை யாளர், பாதவர்சான் றார் வண்ணார் சிலைமறவர் நீசர் பாணரிவரோ ரொருவ ராமபகருங்காலே (௩௬)

அறுதிபெற்ற திருமரபு குறித்துரையாப் புராண மவைகளொரு பதின் மூன்று திருக்கூட்டந் தனனின, மருவிலவர் பதியறிந்த கதையிரண்டு வந்த மரபறிந்த கதையிரண்டு பேரறிந்த கதையொன்ற, றுறுமரபு தெரியாப்பு ராணமவையோரே ழோரறியாக் கதையேழு பேரறியாக் கதையெட், டிறுதி ரிலக்கங்கண்ட திருக்கூட்ட மொன்றெண் ணித்தன்னையென றறியாத திருக் கூட்ட மெட்டே. (௩௭)

தில்லைமறை யோர்கலயர் முருகர்பசு பதியார் சிறப்புலியார் கணநாதர் பூசலைசண் டேசர், கலயநிறை சோமாசி மாறர்நமி நந்தி கவுணியனா ரப்பூதி நீலநக்க ராகச, செல்வமறை யோர்களதை பதின்மூன்று சிவவேதியர்களதை யிரண்டு புகழ்த் துணையாரும் போதும, வலம்படி சிவனையருச் சிப்பார்கண் மாமாத் திரர்மரபிற் சிறுத்தொண்ட ரொருவர்முடி மன்னர். (௩௮)

அறுவரெவ ரவர்செங்கட் சோழர்புகழ்ச் சோழ ருருண்மாணி யிடங்கழி யார் நெடுமாறர் சேரர், குறுநிலமன் னவரைவர் நரசிங்கமுனையர் கூற்றுவ னார் கழற்சிங்கர் மெய்ப்பொருளா ரடிகள், முறைமைவணி கரிலைவர் காரைக்காலம்மை மூர்த்திகலிக் கம்பர்மா நீதியிற் பகையார், நிறைமலிசீர் வேளாளர் பதின்மூவர் மூர்க்கர் செருத்துணையார் வாயிலார் கோட்புலியார் சத்தி. (௩௯)

சிவனடியா ருடன்பகையாய் முதற்றியடைந் தவர்கள் செயலுரைத்தார்ச்
சண்டேசர் பிதாவெச்ச தத்தனை, கவர்புகழ்சேர் கோட்புலியார் துணைச்சுற்ற
விரையாக கலப்பழித்த கிளைப்பகைத்து நாகினைச்சென் றடைந்தோர், தவ
ரான மூர்த்தியார்நிறையுறைக்கச் சாத்திருஞ் சந்தனக்காப் பினைவிலக்கி யமண
சமயச் சார்வாயப, பலிபுரந்த கருநடமன் னயனமுத லனைவர் புராணத்தை
யினைப்பிரித்துப் புகலவெளி தல்லே. (சஅ)

ஆரூரர் திருத்தொண்டத் தொகையுரைத்த நாளி லடித்தொண்டு செய
தொண்டர் சிலரவர்க்கு முன்னே, பேருமெய்த் தொண்டுசெய்தபோ சிலப
ரவர்க்குப் பிறகுஞ் சிலர் தொண்டுசெய்யும் போசிலம்ப ராகச், சீருறுந் திருத்
தொண்டர் புராணத்திற் சொத்துச் சேவையாக்கான சோவைசெயுந் தொண
டரள் விறந்தோர், காருரு மணிகண்டர்க் கவரவர்கள் செய்த கைத்தொண்டி
னிலைகரை பண் ணிறைக்கவெளி தல்லே (சகூ)

ஒருலகோ வொருதிசையோ வொருபதியோ தமமி லொருமரபோ
வொருபெயரோ வொருகாலந் தானோ, பெருலகி லொருமைநெறி தருங்க
தையோ பன்மைப் பெருங்கதையோ பெரோனதோ வல்லவே யிதனை, யேரு
லகெ லாமுணர்ந்தோ தற்கரிய வனென் றிறைவனமுத லடியெடுத்துக்
கொடுத்தருளக் கொண்டு, பாருலகி ளுமக்கணின் றெடுத்துக்கை நீட்டப்
பாடிமுடித் தனர்தொண்டர் சீர்பரவ வல்லார் (ருO)

கருங்கடலைக் கைநீத்துக் கொளவெளிது முந்நீரக் கடற்கரையி னுய
மணலை யெண்ணியள விடலாம, பெருங்கடன்மேல வருந்திரையை யொன்
றிரண்டென் றெண்ணிப பிரித்தெழுதிக் கடையிலக்கம பிரித்துயிட லாகும்,
தருங்கடலின் மீனையள விடலாகும வானத் தாரகையை யளவிடலாஞ் சங்க
ரனருட மந்து, சிரங்கொடிருந் தொண்டர்புரா ணத்தையள விடுஞ் சேக்கி
ழார்க் கெளிதல்லது தேவர்க்கு மரிதே (ருக)

அறுபதுபோ தனிததிருப்போ திருக்கூட்ட மொன்ப தாகவறு பத
தொன்ப தரனடியார் கதையை, மறுவிறிரு நாவலூர்ச் சிவமறையோர்
குலத்து வருசடையனுரமனைவி யிசைஞானி வயிற்றி, லுறுதிபெற வவதரித்த
வாரூரர் முன்னா ளுரைசெய்த திருத்தொண்டத் தொகைப்பதிகத் தடைவே,
நறுமலிபூம பொழில்புடைசூழ் திருநாரை யூரி னம்பியாண் டார்திருவந்
தாதிகடைப் பிடித்து (ருஉ)

காண்டமிரண் டாவ[illegible] பரப்பைத் தொகுத்துக் கருதரிய
சருக்கங்கள் பதி[illegible], [illegible]மைத்த புராணத்திற் றிருவிருத்த
நாலா யிரத்திருநூற் றைம்பத்து மூன்றாக வமைத்துச், சேண்டகைய திருத்
தொண்டர் புராணமெனப் புராணத் திருமுறைக்குத் திருநாமஞ் சீர்மைபெற
வமைத்திட், டாண்டகைமை பெறவெழுதி மைக்காப்புச் சாத்தி யழகுபெ
றக் கயிறிக்கயு மமைத்ததிலவைத் ததன்பின். (ருங)

வேறு.

சேவைகாவலர் புராணகாதைதொகை செய்தினைந்தமை யகன்றபின்
யாவர்தாமரு கிருந்தபோகளக்கை சென்றதெய்வள விருந்ததங்
காயதென்னிவைக் ளறியவேணுமெ ததிந்துயாருமென வளவர்கோன்
வவிருனுரிய தூதர்தூதரறி யாமலோற்றரை யுமேவினன். (ருச)

வென்றிவேல்வளவ னளவறிந்தவ ரிட்டகாளையர் புராணநூல்
ஒன்றுபாதிகதை சென்றதென்றுசில ரோதினாசில ருவந்துசென்
றின்றுநாளைமுடி யும்புராணமினி யென்றுரைத்திட விறைஞ்சினான்
சென்றுநற்கதை முடிந்ததென்றுசிலர் செம்பியற்குறுதி செப்பினார். (௫௫)

வந்துசொன்னவர்க ளனைவருக்குநவ மணிகளுந்துகிலு மம்பொனுஞ்
சிந்தியள்ளியு முவந்துவீசியுயர் செம்பொனம்பல மருங்கில்வாழ்
அந்திவண்ணனட மும்பணிந்துமுத லடியெடுத்தவர் கொடுத்திடப்
புந்திசெய்துமகிழ் சேவைகாவலர் புராணமுந்தொழுவ னென்னவே. (௫௬)

வீதிவீதிக டோறுந்தொறும்பயண மென்றுவென்றிமணி முரசறைந்
தோதிவேதியர்க ளெண்ணணியிட்டவுயர் காளுமாலையு மகூடத்தமும்
போதநாடிவரை புரைக்கடக்களிறு புரவிமாதாகருவி யாடரச
சாதுரங்கமுட னேசெலப்பிளிறு தந்திமேல்கொடு நடந்தனன் (௫௭)

தோமுழக்கொலி மழைக்கடக்கரட சிந்துரக்களிறு பிளிறுசீர்
ஆமுழக்கொலி பரிசெருக்கொலி ப[illegible] ரடாங்கெழும
போமுழக்கொலி சழக்கிலாதுயர் பனைக்கு மாபுண நிமாசைமேயழ்
காமுழக்கொலியி னெட்டிரட்டிநிறை கடன்முழக்கென முழக்கெழ (௫௮)

வளவர்கோன்வர வறிந்துதில்லைமறை யோருமவன்மைமட பதிகளும்
பிளவுகொண்டமகி நுதனமடந்தையரு மற்றுமுள்ளபெரி யோர்களும்
களவிலாதமொழி கொடுபுராணகதை செய்தகாதலைக்குல நிலைக்குந
தளவமாலையப யனையெதிர்ந்தினிய சாரவாசியமல சாற்றினா (௫௯)

முண்டமானதிரு முடியுமிட்டதிரு முண்டமும்பவள மும்முண்ணக்
குண்டலங்களு மிரண்டுகாதினும வடிந்தலைந்தகழை யுந்திருக்
கண்டமாலைகர மாலையுஞ்சிரசு மாலையுங்கவின விளங்கவே
தொண்டர்சீர்பரவு வானைநந்தசுப சரிதைசோழனெதிர் கண்டனன (௬0)

கண்டபோதுள மகிழ்ந்துதன்னையறி யாதுகைகடலை மீதுறக்
கொண்டவேடமா னடியார்வேடமிது குறைவிலாததவ வேடமென்
றண்டவாணர்திரு வருளையுன்னியவ ரடிமைகொண்டபெரு மையைநினைந்
தெண்டயங்கரசர் மாறுசேவையர் குலாதிபாதுகை யிறைஞ்சினான். (௬௧)

இறைஞ்சியம்பலவர் பாததாமரை யிறைஞ்சவெண்ணணிவரன் முறைமையால்
அறைஞ்சிறந்தமுனி சேவைகாவலரு மாறைஞ்ஞூறுமறை யோர்களுந்
துறைஞ்சிறந்தமட பதிகளுந்தொடர வந்துமன்னனரி பிரமபான
மறைஞ்சுநின்றபொருள் வெளிப்படக்கனக மன்றிலின்றபடி கண்டனன்.

கண்டகண்ணருவி தாரைகொள்ளவிரு கைகளஞ்சலி கொளக்கசிந்
தெண்டரும்புளக ரோமகூபமெழ வினபவாரிகரை புரளவாய்
விண்டதூமொழிகள் குழறவன்பினொடு விம்மிவிம்மியருண மேலிடத்
தெண்டனாகமுன விழுந்தெழுந்துகனி செம்பியன்பரவ வெம்பிரான். (௬௩)

சேக்கிழானமது தொண்டர்சீர்பரவ நாமகிழ்ந்துலக மென்றுநம்
வாக்கினாலடி யெடுத்துரைத்திட வரைந்துநூல்செய்து முடித்தனன்
காக்குமவேல்வளவ நீயிதைக்கடிது கேளெனக்கனக வெளியிலே
யூக்கமானதிரு வாக்கெழுந்தது திருச்சிலம்பொலியு முடனெழ. (௬௪)

மன்றுளாடி திருவாய்மலர்ந்தமொழி யுஞ்சிலம்பொலியு மன்றிலே
நின்றமாணிடர் செவிப்புலன்புக நிறைந்ததன்றியு நிலத்தின்மேல்
ஒன்றநின்றய சராசரங்களடை யக்களித்துருகி யோலிடக்
குன்றிலாதுதிர டோணமேந்திரபுத்தி குலிசத்துள மகிழ்ந்தனன். (௬௫)

தொண்டர்தொண்டுசெய் புராணகாதைமதி சூடினார்திரு வருளினால்
இண்டைநீக்கிபுனை சேக்கிழார்முனி விரித்துரைத்தகதை கேட்பதற்
கண்டவாணரடி யாரெலாங்கடுக வருகவென்று திசைதிசைதொறு
மெண்டயங்கரச னேடெடுத்தெழுதி யாளுமோலைகளு மேவினான். (௬௬)

வேறு

கவசமணிந்த சனங்களு மிங்கித முங்கம்பித்
தவசமுறுஞ்சிவ சிந்தையு மன்பக லாமேன்மைத்
தவசரித்தமொழி லுஞ்சிவ சாதன முஞ்சாரச்
சிவசமயத்தவ ராயவரும் வந்து திரண்டார்கள். (௬௭)

வேதியர் வேத முழக்கொலி வேதத்தைத்தமிழால்
ஓதிய மூவர் திருப்பதி கத்தொலி யோவாமற்
பூதி யணிந்தர கரவென வன்பர் புகழ்ந்தோதுங்
காதியல் பேரொலி காரொலி போலொலி கைத்தேற. (௬௮)

பூசிப் பவர்சிலர் பூசித் தன்பொடு புனிதன்றா
ணேசிப் பவர்சிலர் பிறவர் வரமரு ணிமலாவென்
றியாசிப் பவர்சிலர் திருமுறை யெழுதிக் கனிகூர
வாசிப் பவர்சில ராக விருந்து மகிழ்ந்தார்கள். (௬௯)

தெள்ளுந் திரைக்கடன் மீது மிதந்த திருத்தோணி
வள்ளலை யன்புசெ யன்பர் மடங்க டொறும்பாலர்
மெள்ள விருந்து மிழற்றுப் புராண விருத்தத்தைக்
கிள்ளைகள் பாடி யுரைப்பன கேட்பன மெய்ப்பூவை. (௭௰)

மற்றது கண்டு களித்த நலத்த மனத்தோடு
சுற்றிய மந்திரி மாரொடு தந்திரி மார்சூழத்
தெற்றென வந்து திரண்டு புரந்தர னேராடு
பெற்றது செல்வ மெனத்தனி யோகை பொருந்தார்கள். (௭௧)

பாடினர் தும்புரு நாரதர் நீடிசை பாடாநின்
றாடினர் வானவர் மாமடைய ரஞ்சலி யெய்தாமற்
சூடினர் மன்னவர் மந்தைய ரந்தை துணைப்பாதந்
தேடினர் மாலய னன்பர் நடந்தரி சித்தார்கள். (௭௨)

சங்கொடு பேரி கறங்கிசை வீணை தனித்தாளம்
வாங்கிய காளம் திடக்கை கடக்கை மணிக்காளம்
பொங்கிய பம்பை வலம்புரி கண்விட முத்தறபொற்பார்
மங்கல தூரிய மெங்கு முழங்கி வனப்பெய்த. (௭௩)

வேதியர் வேள்வி நெடும்புகை யாலய மெங்கெங்குங்
காதிய குங்குலி யப்புகை நீடு கருப்பாலைச்
சோதி நெடும்புகை தோரண வீதி தொறுந்தோறு
மாதர் புகைக்கு மகிற்புகை யெங்கும் வனப்பெய்த. (௭௪)

ஆடக நாடக சாலைகண் முத்தணி யத்தாணி
மேடை யரங்கு களங்கு மிலாத வெளிக்கூட
மாட மணிக்கண மாளிகை சூளிகை யெங்கெங்குந்
தோடவிழ் மாலைகள் பொன்னணி மாலைகள் சூழ்வித்தார் (௭௫)

பழுத்த மனத்திரு வன்ப ரிருப்பொடு பணிமாறக்
குழைவுறு பொற்கங்கைக் கோமய நீர்நிறை செய்யுந்
தழைபொதி தோரண முங்கொடி யுந்துகி லுஞ்சாலித்
தழுத்து பெறத்திரு வீதி புதுக்கி யதன்பின்பு (௭௬)

வேறு

திருநெறித்தமிழ் வல்லபேர்கள் சிவாகமங்கள் படித்தபேர்
கருநெறிப்பகை ஞானநூல்பல கற்றபேர்மறை கற்றபேர்
குருநெறிக்கதி யோரிலக்கண லக்கியங்கள் குறித்தபேர்
பெருநெறிப்பல காவியங்களைப் பேசவல்ல வரானவரும் (௭௭)

வேறு.

வள்ளலார் திருநடஞ்செய் மன்றின் முன்றின் மறையவர்கோ மயசலந் தான்மெழுகித் தாபித, தெள்ளருமவெண் சுதையொழுக்கி யறுகாற பீட மிட்டதன்மேற் பசும்பட்டு விரித்து மீதே, வெள்ளைமடித் திட்டுமது மலருந் தூவி விரைநறுந் தூபங்கொடுத்தா தனங்கற்பித்துத், தெள்ளுதமிழ்ச் சேக்கிழார் புராணஞ் செய்த திருமுறையை யதன்மேல்வைத் திறைஞ்சிப் போற்றி (௭௮)

வாழிதிருத் தொண்டர்புரா ணக்கதை நீரே வாசித்துப் பொருளருளிச் செய்வீரென்று, சோழர்பெரு மான்முதலா மடியரெல்லாஞ் சொலக்கேட்டுக் குன்றைமுனி மன்று ளாடுந், தாழ்சடையா னடியெடுத்துத் தரத்தாஞ் செய்த சைவக்கதை யினைவிளங்க விரித்துச் சொல்லச், சூழவிருந் தம்பலவ ரடியாரெல்லாஞ் சுருதிமொழி யிதுவெனக்கை தொழுது கேட்டார் (௭௯)

தானுடைய திருச்சிலம்பு புலம்பநடம் புரியுந் தன்மையரா னுக்கிசைந்த போவழியி னுள், மானுடைய பிள்ளையா ரவதரித்த நாளுமவர்முழுது திருஞான மமுதுசெய்த நாளுஞ், சூனுடையா திரைநாளாஞ் சித்திரையா திரைநா டொடங்கியெதி ராமாண்டு சித்திரையா திரையி, னூனுடைய கதைமுடிப்ப மெனக்குன்றை வேந்தா நடத்தவினை வருமிருந்து கேட்டனாநா டோறும்.

சிறப்புடைய மூவாமுதலிக டிருவாய் மலர்ந்த திருநெறிய தமிழ்மூவர் திருமந்திர மாலை, யறப்பயனுங் காரைக்காற் பேயிரட்டை மாலை யந்தாதி மூத்தபதிகங்கழறிற் றறிவார், மறப்பரிய பொன்வண்ணத் தந்தாதி திருமும் மணிக்கோவை சேரவுலா வையடிகள் வெண்பா, வுறுப்பாசத் திருவிருத்த முடலாகப் பொருட்கோ ளுயிராக நாலடியா னடந்ததுல கெல்லாம் (௮௧)

அன்றுமுதனா டோறு நாடோறு மண்ணை லடியரள விறந்தபெயர் வந்தவர்க ளெல்லாஞ், சென்றுறையத் திருமடங்க டிருமடங்க டோறுந் திருவிளக்கங் கவாசாத்த வுள்ளுடைமேற் போர்வை, துணறியசெந் நெலினடிசில் கன்னனறுங் கனிகளியவறு சுவைக்கறிநெய் தயிர்திரண்ட பாறே, னன்றுதிருப் பண்ணியந்தண் ணீரமுத மடைக்காய் நரபதியே வலினமைச்சர் நாடோறு நடத்த. (௮௨)

நலமலியுந் திருத்தில்லை மன்றினினின் றாடு நடராசற் கன்றமுதன் மக பூசை நடத்தி, யலகிலபுகழ்த் தில்லைவா ழந்தணர்க்கும் வெவ்வே றமுதுபடி கறியமுது முதலான வெல்லா, நலமலிசெங் கோலவளவன் றப்பாமே நாளுந் நடத்திவர வரனடியார் நிறைந்துபதஞ் சலியும், புலிமுனியுந் தவஞ்செயத் பெருமைபற்றப் புலியூர் பூலோக சிவலோக மெனப்பொலிந்து தோன்ற. ()

மருவுதிரு முறைசேர்ப்பா ரெழுதுவா ரிருந்து வாசிப்பார் பொரு ளுரைப்பார் கேட்டிருப்பார் மகிழ்ந்து, சிரமசைத்துக் கொண்டாடிக் களிகூர் குலிப்பார் சிரிப்பார் தேனிப்பார் குன்றைமுனி சேக்கிழார் செய்த, வரிய தவத் தினைநினைப்பா ரம்பலவர் முன்னே ளடியெடுத்துக் கொடுக்கவிவர் பாடினரென் றுரைப்பார், பெரியபுரா ணங்கேட்ட வளவர்பிரான் செவிக்கு பிடிக்குமோ வினிச்சிந்தா மணிப்புரட்டென் றுரைப்பார். (௮௪)

இத்தகைய சிறப்புடனே திருத்தொண்டர் புராண மிருந்தன்பர் பாரா ட்ட நடந்தெதிரா மாண்டு, சித்திரையா திரைநாளின் முடியவதுகண்டு திருத்தொண்ட ரரவெனும்பே ரொலியெழுந்து பொங்கக், கந்தத்திரைக் கடலொலியை விழுங்கி முழங்கோரேழ் கடலொலியைக் கீழ்ப்படுத்திப் பிர மாண்ட வெளியைப், பொருதியிமை யவர்செவியை நிறைத்துயரப் பொங்கி ப் பொன்னுலகுக் கப்பாலும் புகழ்பொலிந்த தன்றே. (௮௫)

திருத்தொண்டர் புராணமெழு தியமுறையை மறையோர் சிவமூல மந்திரத்தா லருச்சனைசெய் திறைஞ்சி, யிருக்குமுதன் மறைநான்கி னின்று முதலாக வித்துவமொரு தமிழ்வேத மைந்தாவ தென்று, கருத்திருத்தி யமுத டைக்காய் நறுந்தூப தீபங் கவரிகுடை கண்ணாடி யாலத்தி நீறு, பரிந்தளவு செய்யக்கண்டு வளவர்பிரான் முறையைப் பசும்பட்டி னாற்சூழ்ந்து பொற்க லத்தி லிருத்தி. (௮௬)

செறிமதயா னைச்சிரத்திற் பொற்கலத்தோ டெடுத்துத் திருமுறையை யிருத்தியபின் சேவையாகா வலரை, முறைமைபெற வேற்றியார சனுங்கூட வேறி முறைமையினு லிணைக்கவரி துணைக்கரத்தால் வீச, மறைமுழங்க விண்ணவர்கள் கற்பகப்பூ மாரி மழைபொழியத் திருவீதி வலமாக வரு ம்போ, திறைவர்திரு வருளினிணைந் தடலரசா கோமா னிதுவனமே நான செய்த தவப்பயனென் றிசைத்தான் (௮௭)

வாரணத்தி லிவரைவரக் கண்டதிரு வீதி மறுகதொறுந் தூய்மை செய்துவாழைகளு நாட்டிப், பூரணகும்பமுமமைத்துப் பொரியுமிகத் தூவிப் பொன்னணிமா லையுநறும்பூ மாலைகளுந் தூக்கித், தோரணங்க ணிரைத்து விரை நறுந்தூப மேந்திச சுடர்விளக்கு மேற்றியணி மணிவிளக்கு மேந்து, யாரணங்கள் விரித்தோதி மாமறையோ ரெதிர்கொண்ட டறுகெடுப்ப வாழ்த் தெடுத்தா ரம்பையர்க ளெல்லாம். (௮௮)

வேறு.

காவல னிவர் தவரிவர் காவலர் கவரி யிடத்தகு மோவென்பார்
சேவையர் காவல னாசிவ மான சிறப்பிது நல்ல சிறப்பெனபார்
தேவரு மெழுதவொ ணுமறை யைத்தமிழ் செய்து திருப்பதி கம்பாடு
மூவரு மொருமுத லாயுல கத்து முளைத்த முதற்பொரு டானென்பார் ()

மின்மழை பெய்தது மேக வொழுங்குகள் விண்ணவர் கற்பக விரை
சேர்பூ, நன்மழை பெய்தனர் சேவையர் காவலர் நாவல ரின்புற நாவரச்,
சொன்மழை பெய்தன ரிரவலர் மிடிகெட வள்ளி முகந்தெதிர் சோளேசன்,
பொனமழை பெய்தன னுருகிய நெஞ்சொடு கணமழை யன்பர் பொழிந்
தாரகள். (௯0)

மதுர விராமா யணகதை யுரைசெய்த வான்மிக பகவனு மொப்பல்ல
விதிவழி பாரத முரைசெய்து கரைசெய்த வேத வியாதனு மொப்பல்ல
சிதைவற வாயிர நாவுட னறிவுள சேட விசேடனு மொப்பலல [பார்.
பொதிய மலைககுறு முனிவனு மொப்பல புகழ்புனை குன்றை முனிககென்

மெய்யுள சிவசா தனமும் வெளிப்பட வெண்ணீ றெழுதிய கண்ணேறுங
கையுந திகழ்மணி கணடமு மொளிதரு கவளிகை யுமபுத தகவேடு
நையுந திருவுள மழியுந தொறுமர கரவெனு நாமமு நாமெல்லா
முயயும படியருள கருணையு மழகி தெனதொழு தனருல கவரெல்லாம். ()

பூவை மறநதனள் வெண்டா மரைமயில புகலதரு சஙகப் புலவோரசொற்
பாவை மறநதனள் தேச சுபாடித பயனை மறநதனள் பதுமததோ
ளுவை மறநதனள பொதிய மலைததலை நணணிய புண்ணிய முனிவனெனுங்
கோவை மறநதனள சேவையா காவல னாதிரு நாவிற் குடிகொண்டாள ()

இட்படி யிப்படி தன்னில் விதிப்படி யிமபரு மும்பரு மேனேரு
மபபடி சூழ வரததிரு வீதி வலஞ்செய தணைநதம பலமுனறிற
றப்பற யானையி னினறு மிழிநதர சனுமுறை செறிசே வையாகோவு [தார்.
முப்புரி நூனமறை யோரொ டணைநதெழு தியமுறை யைத்திரு முன்வைத

வேறு.

அண்டவாணரெதிர் தெண்டனுகவனை வரும்விழுந்தபி னெழுந்துசீர்
கொண்டசேவைகுல திலகருககனைவ ருஙகுறித்தெதிர கொடுத்தபேர்
தொண்டாசீரபரவு வாரெனப்பெயா சுமத்திஞானமுடி சூட்டிமுன்
மண்டபததினி லிருததிமற்றவரை வளவாபூபதி வணஙகினன். (௯௫)

மூவரோதுதிரு முறைகளேழுதிரு வாதவூரமுறை யொன்றிசைப்
பாவரைநதமுறை யொன்றுமூலமுறை யொன்று பாசுரம தாதியாக்
கோவைசெய்தமுறை யொனறசேவையா குலாதிநீதிமுறை யொன்றுடன்
பாவைபாகாதிரு வருளசிறந்தமுறை பன்னிரணடென வகுததபின். (௯௬)

தோடுசெய்கதிரு நெறியசெந்தமிழொ டொக்குமென்றுரை தொடர்ந்துசெ
பேடுசெயதுநட ராசாசநநிதியி லேற்றினர்களிது பாலிசூழ் [ப்
நாடுசெயததவ நீடுகுனறைவள நகரிசெயததவ நிகரிலாப்
பீடுசெயதபகி ரதிகுலததிலகா சேககிழாரசெய்த பெருநதவம். (௯௭)

ஆயவேலையன பாயனிநநிலைமை யாதலாலனுசர் பாலரு
வாயரெஙகுள ரெனப்பணிந்திரு மருஙகுநின்றவர் விளம்புவார்
தூயகுனறைநகர் மீதுசம்பெயர் துலங்கவோர்குள மமைத்தபி
னேயநாகையா ராதிருப்பணி யியற்றியவவிடை யிருநதனர். (௯௮)

என்றுசொல்லவவ ரதமையழைத்தரச னிவரமைச்சரிவர் பட்டமு
மன்றன்மாலைபுனை தொண்டைமானென வகுத்தபின்றமது மண்டல
மன்றுவற்பம்வர வந்தடைந்தவரை யாற்றல்செய்து தொண்டைமண்டல
நின்றுகாத்தபெரு மானெனத்தமது பெயரையெங்கணு நிறுத்தினர். (௯௯)

தொண்டர்சீர்பரவு சேக்கிழார்குரிசி றாயதில்லைநகர் தன்னிலே
பண்டுமூவர்பதி கத்துவந்தவறு பத்துமூவர்கதை தனைபுணர்ந்
தண்டவாணரடி யார்கடமமுட னருந்தவந்தனி லிருந்துபி
னிண்டைவைத்தசடை யம்பலத்தவ ரெடுத்தபாதநிழ லெய்தினர். (௧00)

வாழிதில்லைமணி மன்றுளென்றுநட மாடுமெங்கணர் மலர்ப்பதம்
வாழிகாழிநகர் வாழவந்ததிரு நெறியராதிபதி வள்ளருள்
வாழியன்பர்திரு நீறுமிட்டதிரு முண்டமுந்துவய கவசமும்
வாழிகுன்றைமுனி சேவையாதிதிரு வாய்மலர்ந்தருள புராணமே. (௧0௧)

தேசிலங்குமுகில் குன்றையாதிபதி தொண்டர்சீர்பரவு சேக்கிழார்
வாசலன்றுமுத லின்றுகாறுமினி மேலும்வாழையடி வாழையாய்
வீசுதென்றனமணி மண்டபத்தரசு வீற்றிருக்குமுடி மன்னருக்
கீசனன்பர்கள் புராணமுஞ்சொலி யமைச்சுமாகிநல மெய்துமால் (௧0௨)

அண்டவாணர்தொழு தில்லையம்பலவ ரடியெடுத்துலகெ லாமெனத்
தொண்டர்சீர்பரவு சேக்கிழான்வரிசை துன்றுகுன்றைநக ராதிபன்
றண்டகாதிபதி திருநெறித்தலைமை தங்குசெங்கைமுகில் பைங்கழற்
புண்டரீகமலர் தெண்டனிட்டுவினை போக்குவார்பிறவி நீக்குவார். (௧0௩)

## சிறப்புப்பாயிரம்.

திருக்கிளருங் கயிலைமலைக் காவல்பூண்ட செல்வமலி திருநந்தி மரபில் வந்து, கருக்குழியி லெமைவீழா தெடுத்தாட்கொள்ளுங் கருணைமிகு மெய்கண்ட தேவர் தூய, மருக்கிளர்தாள் பரவுமரு ணந்தி தேவர் மகிழுமறை ஞானதே வருக்கன் பாகி, யிருக்குமுமா பதிதேவர் சேக்கி ழார்த மிசைப் புரா ணம்முரைத்தா ரென்ப மாதோ.

சந்தானாசாரியர் நால்வருளொருவராகிய உமாபதிசிவாசாரியர்

அருளிச்செய்த

சேக்கிழார்நாயனார் புராணம் முற்றிற்று.

---

சிவமயம்.

# சேக்கிழார்நாயனார் புராண வசனம்.

பாலாறுபாய்ந்து வளஞ்செய்யும் தொண்டைநாட்டிலே, புலியூர்க்கோட்டத்திலே, குன்றத்தூரிலே, வேளாண்மரபிலே, சேக்கிழார் குடியிலே பத்திநெறிதழைக்க அருண்மொழித்தேவர் என்பவர் ஒருவர் அவதாரஞ்செய்தார். அவருக்குப்பின் பாலறாவாயர் என்பவர் அவதரித்தார். முன்னவரால் சேக்கிழார் மரபுவிளக்கப் பெற்றமையால் அவருக்குச் சேக்கிழார் என்னும் அருமைத் திருநாமம் உண்டாயிற்று. அருண்மொழித்தேவர் சகல கலைகளையும் ஓதியுணர்ந்து, சிவபத்தி சிவனடியார் பத்திகளிற் சிறந்தவராயிருந்தார். அவரது பெருமையை அநபாய சோழமகாராசர் கேள்வியுற்று, அவரைத் தமக்கு பிரதம மந்திரியாராக்கி, அப்பெருமானுக்கு உத்தமசோழப் பல்லவன் என்னும் திருநாமஞ் சூட்டினார். அமைச்சர் பெருமானார் சோழநாட்டிலுள்ள திருநாகேச்சுரமென்னுந் திருப்பதியினிடத்திலே பேரன்பு இருந்தமையால், அவர் தமது குன்றத்தூரிலே ஒரு திருக்கோயில்கட்டி, அதற்குத் திருநாகேச்சுரமெனப் பெயரிட்டு முறைப்படி வழிபட்டுவந்தார்.

இங்ஙனம் ஒழுகுநாளில் சைவர்களிற் சிலர் சமணநூலாகிய சீவகசிந்தாமணியை மெய்யெனமதித்துக் கற்றுங்கேட்டுங் கொண்டிருந்தார்கள். அநபாயசோழரும் அந்நூலையே மெய்ந்நூலெனக் கருதிக்கேட்டுக் களிப்பாராயினார். அதுகண்ட சேக்கிழார்பெருமான் அரசரைப்பார்த்து "மன்னர் மன்னவரே! நீர் சைவராயிருந்தும் சிவகதையைக் கேளாது அவகதையைக் கேட்பதென்னை? அது மறுமைக்குதவுமோ?" என்று கேட்டார். அநபாய சோழர்பெரிதும் உவப்புற்று "மந்திரியாரே! சீவகசிந்தாமணி அவகதையாயின் சிவகதை யாது? அதன் வரலாறு என்னை?" என்று வினவினான். அதுகேட்ட சேக்கிழார் சுவாமிகள் "திருவாரூரிலே தியாகேசப் பெருமானார் அடியெடுத்துக் கொடுக்கச் சுந்தரமூர்த்தி சுவாமிகளால் அருளிச் செய்யப்பட்டது ஓர் அருட்பதிகம். அது திருத்தொண்டத்தொகை யென்னும் அருமையுடையது. அதற்குத் திருநாரையூர்ப் பொல்லாப் பிள்ளையார் பொருளுரைக்க அதைத் தொகுத்து அவரருள்பெற்ற நம்பியாண்டார் நம்பி என்பவர் கலித்துறையந்தாதியாகப் பாடியருளினார். அத்திருவந்தாதியை அபயகுலசேகர சோழமகாராஜர், சிவாலயமுனிவர் முதலிய பெரியோர்கள் அன்போடு போற்றிப் பாராட்டினார்கள்" என்று திருவாய்மலர்ந்தருளினார். அதுகேட்ட அரசர் அமைச்சரைநோக்கி "அத்திருவந்தாதியை ஓதிப் பொருளுரையும்" என்ன, அருண்மொழித்தேவர் அவ்வந்தாதியை ஓதி உண்மைப்பொருளையும் விரித்தார். அப்பிரசங்காமுதைச் செவிமாந்த அந

பாயசோழர் அன்புருவராகிச் சேக்கிழார் சுவாமிகளைப் பார்த்து "இவ்வருட் சரித்தை எவருக்கும் விளங்கும்படி காவியமாய்ச் செய்தருளும" என்று வேண்டி அளவற்ற திரவியங்களை அளித்தார்.

சேக்கிழார்சுவாமிகள் திரவியங்களை எடுத்துக் கொண்டு சிதம்பரத்தை யடைந்து சபாநாயகரைத் தரிசித்து "நடராஜப்பெருமானே! திருத்தொண்டர்களுடைய அருமைச்செயல்களைக் காப்பியமாகப் பாடத் தேவரீர அடியெடுத்துக் கொடுத்தருளும்" என்று வேண்டிநின்றார். உடனே நடராஜப் பெருமான் திருவருளால் "உலகெலாம் உணர்ந்தோதற் கரியவன்" என்று ஓர் அசரீரிவாக்கு எழுந்தது அத்திருவாக்கையே அருண்மொழித்தேவர் முதலாகக்கொண்டு புராணத்தைப்பாடி, அதற்குத் திருத்தொண்டர் புராணம் என்னும் அருமைத் திருநாமம் புனைந்தார்

அநபாய சோழமகாராஜா புராணம் முற்றுப்பெற்றமையைக் கேள்வியுற்றுப் பரிவாரங்களோடு தில்லையையடையப் புறப்பட்டார். அதையறிந்த அருண்மொழித்தேவரும், அந்தணர்களும், மற்றையோர்களும் அரசனை எதிர்கொண்டார்கள் அரசர்பெருமான சேக்கிழார் சுவாமிகள சிவவேடத் திருக்கோலத்தைக்கண்டு, ஆனந்த பரவசராய், அவருடைய ஸ்ரீபாதங்களிலே விழுந்து வணங்கிச் சுவாமிகளோடும், மற்றவர்களோடும் கனக சபையையடைந்து, சபாநாயகரைத் தரிசித்துத் தோத்திரஞ் செய்தார். அப்பொழுது நடராஜப்பெருமானுர் திருவருளால் "அநபாயசோழனே! நாம் "உலகெலா முணர்ந்தோதற் கரியவன்" என்று அடியெடுத்துக் கொடுக்கச் சேக்கிழான் நமது உண்மைநாயன்மார்களின் திருத்தொண்டுகளின் திறங்களைப் புராணமாகப்பாடி முற்றுவித்தனன். நீ அதைக்கேள்" என்று ஓரசரீரியும், திருச்சிலம்பொலியும் யாவருங்கேட்க எழுந்தன. அவைகேட்ட அரசர் திருத்தொண்டர் புராணத்தைக்கேட்டு ஆனந்திக்கச் சிவநேயர்கட்கு திருமுகங்கள் விடுப்ப, அவர்கள் யாவரும்வந்து சேர்ந்தார்கள்.

தில்லைவாழ் அந்தணர்கள் முறைப்படி நடராஜப்பெருமான் சந்நிதானத்திலே நிகழ்த்தவேண்டிய பணிகளைக் குறைவறநிகழ்த்தி, அறுகாற்பீடமிட்டு, அதன்மேல பசும்பட்டுவிரித்து, அதன்மீது வெணபட்டைமடித்து இட்டு, மலர்தூவி, தூபங்கொடுத்து, ஆதனங்கற்பித்து, அதனமேல் திருத்தொண்டர்புராணத்தை வைத்து அருச்சித்து வணங்கிஞர்கள் பிறகு அநபாய சோழர் முதலிய அடியவர்களெல்லாம் அருண்மொழித்தேவரை வணங்கி "சுவாமீ! இத்திருவருட் புராணத்தைத் தேவரீரே வாசித்து உண்மைப் பொருளை விரித்தருளவேண்டும்" என்று பிரார்த்தித்தார்கள். அவர்கள் வேண்டுகோளுக்கு இரங்கிய சேக்கிழார்பெருமான் சித்திரைமதியிலே திருவாதிரை நட்சத்திரத்திலே தொடங்கி நாள்தோறும புராணம்வாசித்துப் பொருளுரைத்து மறுஆண்டு சித்திரைமதியிலே திருவாதிரை நட்சத்திரத்திலே பூர்த்திசெய்தனர்.

அப்புராண பிரசங்கத்தைக் கேட்டுப் பத்திவாரிதியிற் படிந்துகிடந்த அரசர்பெருமான் திருத்தொண்டர்புராணத்தை விதிப்படி அலங்கரிப்பித்து, யானைமேலேற்றி, சேக்கிழார் சுவாமிகளையும் அக்களிற்றின்மீது ஆரோகணிக்கச்செய்து, தாமும் அவருடன் சாமரம் வீச எறித திருவீதிவலம்வந்து, சிற்சபையைச் சேர்ந்து, திருப்புராணத்தைத் திருமுன்னேவைத்து, சேக்கிழார் சுவாமிகட்குத் "தொண்டர்சீர் பரவுவார்" என்னும் அருட்டிரு நாமஞ் சூட்டி வணங்கினார் மற்ற அடியவர்களும் தொண்டர்சீர்பரவுவாரை வணங்கிப்போற்றிப் புனிதரானார்கள். பின்னர் அநபாயசோழர் அத்திருத்தொண்டர் புராணத்தைப் பதினொரு திருமுறைகளுடனே சேர்த்துப் பன்னிரண்டாந் திருமுறையென வகுத்து, அத்திருமுறையைச் செப்பேடுசெய்து, சந்நிதியில் ஏற்றுவித்தார்

பிறகு அநபாய சோழமகாராஜவானவர் "இத்தொண்டர்சீர் பரவுவாருடைய தம்பியார் எங்கே இருக்கின்றனர்" என்றுகேட்க, அருகிருந்தவர்கள் "அவர் குன்றத்தூரிலே திருநாகேச்சுரப் பெருமானுக்குத் திருத்தொண்டு செய்துகொண்டு இருக்கின்றனர்" என்று சொன்னார்கள் அது கேட்டுச் சோழர் அவரை அழைப்பித்து, அவருக்குத் தொண்டைமான் என்னும் நாமஞ்சூட்டித் தமக்கு முதன் மந்திரியாராக்கினார்.

சேக்கிழார் சுவாமிகள் சிலநாள் சிதம்பரத்திலேயிருந்து சிற்சபேசர் திருவடியை அகந்தாங்கி அன்புசெய்துகொண்டிருந்து, அச்சபா நாயகருடைய திருவடிநீழலை யடைந்தார்.



சிவமயம்.

# சேக்கிழார் சுவாமிகள் பிள்ளைத்தமிழ்.

## செங்கீரைப்பருவம்.

புண்ணிய முதலே பொங்கொளி மணியே பொய்யாப் பெருவாழ்வே
பொள்ளலின் முத்தே கள்ளமில் வித்தே புரையில் சுவைப்பாகே
தண்ணிய வமுதே மண்ணியன் மதியே தமிழ்நா வலரேறே
சத்துவ நிதியே பொத்திய மலநோய் சாடு பெரும்பகையே
யெண்ணிய வன்பரு ளத்தமு தூற வினிக்கு நறுந்தேனே
யென்றும் பத்தி ரசங்கனி கனியே யென்னு ளினுமெங்கட்
கண்ணிய பொருளே யாய்பவர் தெருளே யாடுக செங்கீரை
யாரு ளாகர சேவையா காவல வாடுக செங்கீரை.

## தாலப்பருவம்.

பத்திச் சுவைநனி சொட்டச் சொட்டப் பாடிய கவிவலவ
பயனில தாகுஞ் சிந்தாமணிவழி படாத லெனப்போதித்
துத்திச் சுமையொரு தோளவைத் திடுபு லுயாதமேதான் மணமடியா
ருறுசெய லுடைப் புரிமதி வலவவொல் லாவ ருகந்தாதிற
முத்தித் திறமல வென்றள விலர்பான் முற்றிச சிவமடைய
முயலசெயல் வலவ வயற்கண் மடைசசெறி முததம னைத்தினையுந்
தத்திப் புனல்பாய் குன்றைத திருமுனி தாலோ தாலேலோ
சைவப் பயிர்தழை யததழையுமபுய ருலோ தாலேலோ

## சப்பாணிப்பருவம்.

உண்ட லுடுத்தன் மணத்தன் முதற்பல வுன்னுபு நன்னயமா
ருத்தம வென்றடை யாதல ரெண்ண மொருங்கு தெரிந்தனையார்
தண்ட விளமகிழ் பூப்ப மலாகைத் தலம்வி ரியாதுதவி [லோ
தருமொர் பழக்கமுன் னுளதி யாங்கள்செய் தவம்வறிதாங்கொல்
கண்டல் செறிந்த கருங்கடல வணணன் கலிகெழு பாற்கடன்மேற்
கணடுயில் வதுபொர வெணசுகை தீற்றிய காமரு மாளிகைமேற்
கொண்ட லுறங்குங் குன்றத்தூரன் கொட்டுக சப்பாணி
கொற்றச் சேவையா காவல நாவல கொட்டுக சப்பாணி.

## முத்தப்பருவம்.

நிலஞ்சார் தெய்வக் கற்பகமே நிமல ஞான வாரிதியே
நீடுஞ் சைவப் பெருவாழ்வே நிலவா நின்ற குணக்குன்றே
வலஞ்சா பெருநா வலரேறே மாறுவருட்சிந் தாமணியே
மதிப்பார் மதியு ளெழுஞ்சுடரே வாழ்த்து வார்தம் பெரும்பேறே
புலஞ்சார் பத்தி விளைநிலமே போக்கு வரவில் பூரணமே
புந்திக் கினிக்குஞ் சுவையமுதே போற்றி யினிமே லொருதாயர்
கலஞ்சார் முலைப்பா லருந்தாத கனிவாய் முத்தந் தருகவே
கனகக்குன்றை யனகசெழுங் கனிவாய் முத்தந் தருகவே.

### வாரானைப்பருவம்.

எள்ளுந் திறத்துப் பரசமைய ரேறுவருக தேறுதலி
லெங்க ளுணாவின் கணுமதுரித் தினிக்கு மிருங்கோற் றேன்வருக
தெள்ளும் புலத்தர் பெறுகாம தேனுவருக வருகந்தர்
சிந்தா மணியைப் பொருட் படுத்தாச் செல்வச் சிந்தா மணிவருக
வுள்ளு மவருக் கெய்ப்பிடைவைப் பொதது மா ளெழுமொள் ளொளிவருக
வொழியாப் பத்திக கடல்வருக வுலவா தமைந்த சிவபோகங
கொளளுஞ் சைவப் பயிர்வளர்க்குங் கொணடல்வருக வருகவே
குன்றைப் பொருமா ளிகைகுன்றைக் கோமான்வருக வருகவே.

### அம்புலிப்பருவம்.

செறிதமிழ்ச் சங்கத்து முதன்மையோ னன்பினைந் திணையென நவின்ற நூலிற், செப்பிய விதிப்படிக் கரிகுழைத தெழுதுகட் செய்யவாய் வெண்ணகை நலார்,—முறிவற வணங்குதோ றெருவிடுத லால்வளரு மொய்ம்பு பெற் றனையெந்நாளு, மொய்த்தவெரு விடுதலத ளுல்வளர்த லுழவுதொழின் முயலிவன் காட்டுதொழிலே,—மறிவரிய விந்நனறி யுளளுணாந தனையென் னில் வாராதிருப்பை கொல்லோ, மதியோ னெனும்பெயர் குறிப்புற மறக விக மகன்வாதி வாககியாய,—வறிவர்கழ கமபரவு குன்றைநக ராளியுட னம்புலீ யாடவாவே, யருளுருத தேசுபொலி யருண்மொழித தேவனுட னம்புலீ யாடவாவே

### சிற்றிற்பருவம்.

உற்றார் சகியார் புனலாட்ட லுரியார் பலரு மடிக்கடியிவ் [திற்
வொல்லாப் புழுதி தோய்வெவனென் றுரைப்பார் தவஞ்செய் தருமருந
பெற்றார் செவியோ ரினும்பதைப்பார் பிறங்ககககாணி லென்படுவார்
பேசா வருமை பாராட்டிப் பேணியெடுப்பா ரையுஞ் சினபபார்
கற்றாரரிய நூல்பலவுங் கண்டார் விளங்க நாலினுரை
கரைந்தார் வரைந்து சிவனடியிற் கலநதார் கடிந்து பரசமையஞ்
செற்றார் செறிதண் டகநாடா சிறியேஞ் சிற்றில் சிதையேலே
செல்வஞ் செருக்கு குன்றையருட் செல்வா சிற்றில சிதையேலே.

### சிறுபறைப் பருவம்.

அத்தி தருங்கவி யென்மருநன்று வறைகுதி ரம்மட்டோ
வவாவிய புத்தி தருங்கவி யென்மரு மதுமட் டோவின்னுஞ்
சித்தி தருங்கவி யென்மரு மெல்லாத் தீாதத்ங களுமுறுமா
செயயாச சுத்தி தருங்கவி யெனமருஞ் செபபிய வமமட்டோ
பத்தி தருங்கவி யென்மருமாகிப் பாரிற புலவரெலாம
பலலா மீறுதுபு பாராட் டக்கதி பற்றிய பலலோர்கககு
முத்தி தருங்கவி பாடிய புலவன் முழக்குக சிறுபறையே
முழுமணி மாடக் குன்றத்தூரான் முழக்குக சிறுபறையே.

—ооЖоо—

சிவமயம்

திருச்சிற்றம்பலம்.

---

# பெரியபுராணம்

என்று வழங்குகின்ற

# திருத்தொண்டர் புராணம்.

---

## பாயிரம்.

---

### நடேசர் துதி.

விருத்தம்

உலகெ லாமுணர்ந் தோதற் கரியவ
னிலவு லாவிய நீர்மலி வேணிய
னலகில் சோதிய னம்பலத் தாடுவான்
மலர்சி லம்படி வாழ்த்தி வணங்குவாம்.

(இதன்பொருள்) உலகு எல்லாம் உணர்ந்து ஓதற்கு அரியவன் (சிவஞானங்கைவரப்பெற்ற) அறிஞர்கள் யாவரும் (இவ்வியல்பினனென்று) அறிந்தும் (அவ்வியல்பை எடுத்து) சொல்லுதற்கரியவனும்; நிலவு உலாவிய நீர் மலி வேணியன் - சந்திரன் தவழும் கங்கைதங்கும் சடையினையுடையவனும்; அலகுஇல் சோதியன் - அளவில்லாத பேரொளிப் பிழம்பானவனும் ஆகிய; அம்பலத்து ஆடுவான் - திருச்சிற்றம்பலத்தின்கண் ஆனந்தத்தாண்டவம்புரியும் ஸ்ரீ நடராஜப்பெருமானது; மலர் சிலம்பு அடி வாழ்த்தி வணங்குவாம் - மலர்போன்ற சிலம்பணிந்த திருவடிகளை (யாம்) துதித்து வணங்குவாம் (என்றவாறு)

அமிழ்தினுமினிய தமிழ்க்கல்வி நிரம்பப்பெற்ற அருட்புலவர்கள் அருளிய காப்பியங்களிற் காப்புச்செய்யுள்களின் முதற்கண் மங்கலமொழி மிளிர்வதைமான, எந்நூலினுஞ் சிறந்த நன்னூலாய இந்நூலினும் உலகு என்னும் மங்கலமொழி முதற்கண் மிளிர்கின்றது. தமிழ்த்தெய்வத்திற்குத்

தொண்டுபூண்டொழுகும் உத்தமப்புலவர்கள் தாம் பாடுங்காப்பியங்கள் முட்டின்றி யினிது முற்றுப்பெறுவான், வழிபடுதெய்வ வணக்கஞ்செய்து, மங்கலமொழியை முதலில் அமைக்கும் வழக்கு இழுக்குறாது என்றும் நிலவவும், மாணாக்கர் உய்யும்பொருட்டும் எல்லாம்வல்ல இறைவரும் மங்கலப் பொருத்தமும், பிறபொருத்தங்களுந் தேங்க உலகெலாம் என்று ஸ்ரீசேக்கிழார்சுவாமிகட்கு அடியெடுத்துக் கொடுத்தருளினார்.

வழிபடுதெய்வ வணக்கமும், மங்கலமொழியும் முதலில் வேண்டற்பாலன என்பதனை —

"வழிபடு தெய்வ வணக்கங் கூறி
மங்கல மொழிமுதல் வகுத்தெடுத்துக் கொண்ட
விலக்கண விலக்கிய மிடுக்க ணின்றி
யினிது முடியு மெனமனார் புலவர்"

என்னுஞ் சூத்திரத்தானுணர்க.

"தில்லைவாழந்தணர்த மடியார்க்குமடியேன்" என்று வன்றொண்டப் பெருந்தகைக்கு அடியெடுத்துக்கொடுத்த அடியார்க்கெளியவரே, பசுகரணங்கள் நீங்கிச் சிவகரணமுற்ற திருவருட்பெருங்கடலாகிய ஸ்ரீசேக்கிழார் பெருமானார்க்கு உலகெலாம் என்றோரடி யெடுத்துதவ, அருண்மொழித் தேவர் பாடி முற்றுப்பெறுவித்தமையால், 'பெரியபுராணம் பதிவாகமோ' பசுவாகமோ' என மலைவாருமுளர். பெரியபுராணம் பதிவாகமே என்பது பதிஞானிகளின் றுணிபு. என்னை' உலகெலாம என்றருளடி யெடுத்தீந்த முழுமுதற்கடவுளே குன்றைமுனிவரை யதிட்டித்துத் திருத்தொண்டர் புராணத்தைத் திருவாய் மலர்ந்தருளினமையால் என்க.

விசேடணம் விசேடியத்தை யடையுமென்னு முறையால் அரியவன், வேணியன், சோதியன் என்னும் விசேடணங்கள் ஆடுவானென்னும் விசேடியத்தை யுற்றன.

உலகு என்பது, லுக் (காணல்) என்னுந் தாதுவினின்றும் பிறந்த வடமொழியாகலின் காணப்படும் இம்மண்ணுலகமெனப் பொருளுரைப்பார் சிலர். அஃது பொருத்தம் அன்றென்க; என்னை' சிவபரஞ்சுடரால் சிருட்டிக்கப்பட்ட வுலகங்கள் பலவுண்மையானும், அவைகளிலுள்ளாரும் மண்ணுலகினரைச்சிவண தற்பரசிவத்தைத் தரிசிக்கப் பலகிரியைகள் இயற்றுகின்றமையானும், தரிசித்து ஆனந்தமயமாயினார் பலர் உண்மையானும் என்க. உலகு என்பதை "காலமுலகம்" என்னுந்தொல்காப்பியச் சூத்திரவுரையில் ஆசிரியர் நச்சினார்க்கினியர், "வடசொல் அன்று, ஆசிரியர் வடசொற்களை யெடுத்தோதி யிலக்கணங் கூறாராகலின், அது மக்கட்டொகுதியை யுணர்த்தியதாயின் உயர்திணையாயும், இடத்தை யுணர்த்தியதாயின் அஃறிணையாயும் வருதலின், ஒருசொல் இருபொருட்கண்ணுஞ் சென்றதென

வும்படாது இருசொல் எனவேபடும். ஆகுபெயரன்று" என்றுரைப்பாரண்டு உலகென்னும் பலபொரு ளொருசொற்கு அறிஞர்களென்ப பொருள்கோடலே யமைவுடைத்தென்பது அருணூலுணர்ந்த ஆன்றோ துணிபு. அவ்வறிஞர்கள் எவரோவெனில்; கூறுதும்: உலகாயதம், சௌத்திராந்திகம், யோகாசாரம், மாத்திமிகம், வைபாடிகம், நிகண்டவாதம், ஆசீவகம், பட்டாசாரியம், பிரபாகரம், சத்தப்பிரமவாதம், மாயாவாதம், பாற்கரியம், நிரீச்சுரசாங்கியம், சிவசாங்கியம், விஷ்ணுசாங்கியம், பாஞ்சராத்திரம், தார்க்கம், மீமாஞ்சை, சைவம், பாசுபதம், மாவிரதம், காளாமுகம், வாமம், வைரவம், பாடாணவாதசைவம், நிமித்தகாரணபரிணாமவாதசைவம், சுத்தசைவம், பேதவாதசைவம், சங்கிராந்தவாதசைவம், அவிகாரவாதசைவம், ஐக்கியவாதம், சிவசமவாதம், கிரீடாப்பிரமவாதம் முதலிய சமயங்களிலுழன்று, அவ்வச்சமயவுண்மை நூல்களை யாராய்ந்து, உண்மைப்பொருள் விளங்காது மயங்கி, அவைகள் நிச்சயிக்கும் பொருள்களை பொய்யெனத்தெளிந்து, வெண்ணீறையும், கண்மணியையும் அணியும் புண்ணியம்பெற்று, பிறவிப்பிணியையொழிக்கும் சிவதீக்கைகள்பெற்று, திருக்கோயில்களிலே திருவலமிடல், திருமெழுக்குச் சாத்தல், திருநந்தனவனம் வைத்தல், பத்திரபுட்பங்களெடுத்தல், திருமாலைகட்டுதல், சுகந்ததூபமிடுதல், திருவிளக்கேற்றுதல், தேவாரமுதலிய திருமுறைகளை யோதுதல், ஆனந்தக்கூத்தாடல் முதலியனவாகிய சரியையிற் சரியையையும், சந்திரசேகரர், உமாமகேசர், இடபாரூடர், சபாபதி, கல்யாணசுந்தரர், பிச்சாடனர், காமாரி, காலாரி, திரிபுராரி, சலந்தராரி, மாதங்காரி, வீரபத்திரர், அரியர்த்தர், அர்த்தநாரீச்சுவரர், கிராதர், கங்காளர், சண்டேசாநுக்கிரகர், நீலகண்டர், சக்கரப்பிரதர், கசமுகாநுக்கிரகர், சோமாஸ்கந்தர், ஏகபாதர், சுகாசீனர், தக்கிணாமூர்த்தி, இலிங்கோற்பவர் என்னும் ஐயைந்து மூர்த்திகளுள் ஒன்றனையேனும், கணபதி முதலிய ஆவரணமூர்த்திகளுள் ஒன்றனையேனும் பூசித்தலாகிய சரியையிற் கிரியையையும், மனத்தின்கண் உருத்திரக் கடவுளைத் தியானஞ் செய்தலாகிய சரியையில் யோகத்தையும், அங்ஙனம் இயற்றுந் தியான பாவனையின் உறைப்பினால் ஓரனுபவவுணர்வு நிகழ்தலாகிய சரியையில் ஞானத்தையும், சிவபூசைக்கு வேண்டப்படும் உபகரணங்களெல்லாஞ் செய்துகோடலாகிய கிரியையிற் சரியையையும், சிவாகமங்களில் விதிக்கப்பட்டவாறே *ஐவகைச்சுத்தி முன்னாகச் சிவலிங்க வடிவிற்செய்யும் பூசனையாகிய கிரியையிற் கிரியையையும், அகத்தே பூசை, ஓமம், தியானம் என்னுமூன்றனையும் †மூவிடம் வகுத்துக்கொண்டு செய்யப்படும் அந்தரியாகமாகிய கிரியையில் யோகத்தையும், அவ்வந்தரியாகவுறைப்பின்கண் நிகழும் ஓரனுபவவுணர்வாகிய கிரியையில் ஞானத்தையும், இயமம், நியமம், ஆசனம், பிராணாயாமம் என்னும் நான்காகிய யோகத்திற் சரியையை

* ஐவகைச்சுத்தி — பூதசுத்தி, ஆன்மசுத்தி, இலிங்கசுத்தி, மந்திரசுத்தி, திரவியசுத்தி என்பன.

† மூவிடம் — இதயம், உந்தி, புருவநடு என்பன.

யும், *பிரத்தியாகாரமும், †தாரணையுமாகிய யோகத்திற்கிரியையையும், ‡தியானமாகிய யோகத்தில் யோகத்தையும், ¶சமாதியாகிய யோகத்தில்ஞானத்தையும், உண்மைப்பொருளை ஞானாசிரியன்பால்கேட்டலாகியஞானத்திற்சரியையையும், அங்ஙனங்கேட்ட மெய்ப்பொருளைச் சிந்தித்தலாகிய ஞானத்திற் கிரியையையும், அங்ஙனஞ் சிந்தித்ததைத் தெளிதலாகிய ஞானத்தில் யோகத்தையும் வழாது அனுட்டித்து,சிவத்துடன் இரண்டறக்கலந்துநிற்கும் நிட்டையாகிய ஞானத்தில் ஞானங்கைவரப்பெற்ற சிவஞானச் செல்வர்களே யறிஞர்களாவர் இவ்வுண்மையை :—

**சிவஞானசித்தியார்.**

"புறச்சமய நெறிநின்று மகச்சமயம் புக்கும்
புகன்மிருதி வழியுழன்று புகலுமாச்சிரம
அறத்துறைக ளவையடைந்து மருந்தவங்கள் புரிந்து
மருங்கலைகள் பலதெரிந்து மாரணங்கள் படித்துஞ்
சிறப்புடைய புராணங்க ளுணர்ந்தும் வேதச
சிரப்பொருளை மிகத்தெளிந்துஞ் சென்றாற் சைவத்
திறத்தடைவ ரிதிற்சரியை கிரியாயோகஞ்
செலுத்தியபின் ஞானத்தாற் சிவனடியைச் சேர்வர்" எனவும்,

* பிரத்தியாகாரம் — [illegible] இந்திரியங்களைத் [illegible], [illegible] அவை [illegible], [illegible] கருமங்க[illegible] [illegible], [illegible] காரிய [illegible], [illegible], [illegible], கந்தத்தானம், குண்டலித்தானம், [illegible], ஆதாரம், [illegible], இருமுழந்தாள், [illegible] களினிடத்து, [illegible].

† தாரணை — [illegible] பிருதிவியாகத்தில் அயனையும், [illegible] அப்புவாகத்தில் அரியையும், [illegible] இருதயத்தில் [illegible] உருத்திரனையும், இருதயமுதல் [illegible] வாயுவாகத்தில் மகேசுரனையும், [illegible] சிரமளவுமுள்ள ஆகாயத்தில் சதாசிவனையும், அமையுமாறு [illegible].

‡ தியானம் — [illegible] ஆகாயத்தில் [illegible], [illegible] பின்னர் அகண்டிதே [illegible], [illegible] திருமேனியும், [illegible], [illegible], பாசத்தை [illegible], ஆதியந்தமில்லாதாய [illegible] பாதுகாக்கும் பிரமமாகிய சிவபெருமானை இடையறாது [illegible] செய்தல்.

¶ சமாதி.—[illegible] கருமங்களொழிந்து [illegible] கூடிமாறு நிற்குதல்.

### பட்டினத்துப்பிள்ளையார் புராணம்.

"கத்துவிதச் சமயமெலாங் கடந்தொளிருஞ் சித்தாந்தக்கதியி னேறிப்
பத்துவிதத் தவராகி யறியவுண்மைச் சரியைவகை படிந்து சிவன்
வத்துவித முணர்ந்துதிரு வடிஞானந் தனையடைந்து வாரா முத்தி
யத்துவிதம் பெறுமேழிக் குலத்துமற்றைப் பதிற்றிருவ ரடிகள் போற்றி."

எனவும் வருமாற்றானுணர்க.

"உணர்ந்தோதற்கரியவன" என்பதற்கு, உணர்தற்கு மோதற்கு மரியவன் என்றுரைத்து இடர்ப்பட்டாருமுளர். உணர்தற்கு மோதற்கு மரிதாம் பொருள் முக்காலத்தினுமில்லா முயற்கோடுபோலச் சூனியமாகலின், அவர் கூற்று அவசித்தாந்தமாதல்காண்க. வாக்குமனங்கட்கெட்டாதவராய், குணங்குறிநாமம் முதலியன இல்லாராய் விளங்கும் பரப்பிரமத்தையுணர்தல் யாங்ஙனமெனில்; ஞானத்தால் என்க. அருண்ஞானம், மேன்மேலும் பந்தமுறுத்தும் பசுபாசஞானங்கட்கு மேம்பட்டதாய பதிஞானம் எனறுணர்க. பதிஞானம், பரமஞானம், தத்துவஞானம், அத்துவிதஞானம், பரஞானம், திருவடிஞானம், அருண்ஞானம், சிவஞானம், மெய்யுணர்வு எனபன ஒருபொருட்சொற்கள். பதி - சிவன், ஞானம் - அறிவு, எனவே அன்புகாரணமாகச் சிவனையுள்ளவாறறியுமறிவெனப்படும். அதுமுதல்வனை யுணரும்பட்டது அன்பெனவும், உணர்ந்து அருளுருவாகி முதல்வனின் வேறாகாது நிற்புழிப் பதிஞானமெனவுங் கூறப்படும்.

தற்பரசிவம் குணங்குறிமுதலியன இல்லாததெனபதனை:—

#### தேவாரம்.

"மைப்படிந்த கண்ணாளுந் தானுங் கச்சி
 மயானத்தான் வார்சடையா னென்னி னல்லான்
ஒப்புடைய னல்ல னொருவ னல்லன்
 ஓரூர னல்லனோ ருவம னில்லி
அப்படியு மந்நிறமு மவ்வண் ணமும்
 அவனருளே கண்ணாகக் காணி னல்லால்
இப்படிய னிந்நிறத்த னிவ்வண் ணத்தன்
 இவனிறைவ னென்றெழுதிக் காட்டொ ணாதே" எனவும்,

#### பதினோராந்திருமுறை.

"அன்றுந் திருவுருவங் காணாதே யாட்பட்டேன்
இன்றுந் திருவுருவங் காண்கிலேன் — என்றுந்தான்
எவ்வுருவோ னும்பிரா னென்பார்கட் கென்னுரைக்கேன்
எவ்வுருவோ நின்னுருவ மேது." எனவும்,

**சிவப்பிரகாசம்.**

"பலகலையா கமவேத மியாவையினுங் கருத்துப்
பதிபசுபா சந்தெரித்தல் பதிபரமே யதுதான்
நிலவுமரு வுருவின்றிக் குணங்குறிக ளின்றி
நின்மலமா யேகமாய் நித்தமாகி
யலகிலுயிர்க் குணர்வாகி யசலமாகி
யகண்டிதமா யானந்த வுருவா யன்றிச்
செலவரிதாய்ச் செல்கதியாய்ச் சிறிதாகிப் பெரிதாய்த்
திகழ்வதுதற் சிவமென்பர் தெளிந்துளோரே" எனவும்,

**கந்தபுராணம்.**

"உணரிலான்குணங் குறியிலான் செயலிலா னுரைக்கும்
பேரிலானொரு முன்னிலான் பின்னிலான் பிறிதோர்
சாரிலான்வரல் போக்கிலான மேலிலான் றனக்கு
நேரிலான்குகக் கடவுளா யென்னுளே நின்றான்" எனவும்,

**தாயுமானசுவாமிகள்.**

"குலமிலான்குணங் குறியிலான் குறைவிலான கொடிதாம்
புலமிலான்றனக் கென்னவோர் பற்றிலான் பொருந்தும்
இலமிலான்மைந்தர் மனைவியிலா னெவனவன் சஞ்
சலமிலான்முத்தி தருமபர சிவனெனத் தகுமே"

எனவுமவரூஉந் திருச்செய்யுள்களானறிக.

சிவஞானத்தாலன்றிப் பசுபாசஞானங்களாற் சிவம் உணரப்படாதென்பதனை —

"பாசஞானத்தாலும் பசுஞானத்தாலும்
பார்ப்பரியபரம்பரனைப் பதிஞானத்தாலே
நேசமொடு முள்ளத்தே நாடிப்பாத
நீழற்கீழ் நில்லாமே நீங்கிப்போகிக்
குறைசெய்தருமூலமெலா மல்லைத்தீராமென
றறிந்தகலயாநிலையே யாகும்பின்னு
மோசைதரு மஞ்செழுத்தை விதிப்படி யுச்சரிக்க
வுள்ளத்தே புகுந்தளிப்பனூனமெலாமோட."

எனவரூஉஞ்சிவஞான சித்தியார் திருவிருத்தத்தானுணர்க.

சிவஞானத்தால் விளையும் உணர்ச்சி நிருவிகற்ப ஞானமாகலானும், அதனையடைந்தோர் குணவிருத்திகளும் பிறவும்ஒடுங்கப்பெற்று, எங்குஞ் சிவமாகவிளங்கி, நிரதிசயானந்தத்தை நுகர்வராகலானும், அவ்வானந்தத்தை யவரெடுத்தோதுவரேல், அவரடைந்த இன்பம் அத்துவிதஇன்பம் அன்றாகலானும், அவ்வின்பம் ஓதரிய இன்பமாகலானும், அவ்வின்புருவனை "ஓதற்கரியவன்" என்றார்.

சிவபிரான் ஓதற்கரியவன் என்பதனை:—

திருவாசகம்.

"பாதாள மேழினுக்கீழ்ச் சொற்கழிவு பாதமலர்
போதார் புனைமுடியு மெல்லாப் பொருண்முடிவே
பேதை யொருபாற் றிருமேனி யொன்றல்லன்
வேதமுதல் விண்ணோரு மண்ணுந் துதித்தாலு
மோத வுலவா வொருதோழன் றொண்டருளன்
கோதில் குலத்தரன்றன் கோயிற்பிணாப் பிள்ளைகா
ளேதவனூ ரேதவன்பே ராருற்றா ராரயலா
ரேதவனைப் பாடும் பரிசேலோ ரெம்பாவாய்" என்பதாலும்,

சிவஞானசித்தியார்.

"மறையினா லயனான் மாலான் மனத்தினால் வாக்கான் மற்றுங்
குறைவிலா வளவி னாலுங் கூறொணா தாகி நின்ற
விறைவனா கமல பாத மின்றியா னியம்பு மாசை
நிறையினாற் குணத்தோ ராகு தெல்லா நகையினை நிறுத்துமன்றே"

என்பதாலுமுணர்க.

உணர்ந்தோதற்கரியவன் என்னுங்கருத்தை.—

திருக்கோவையார்.

"உணர்ந்தார்க் குணர்வரி யோன்றில்லைச் சிற்றம் பலத்தொருத்தன்
குணந்தான் வெளிப்பட்ட கொவ்வைச்செவ் வாயிக் கொடியிடைதோள்
புணர்ந்தாற் புணருந் தொறும்பெரும் போகம்பின் னும்புதிதாய்
மணந்தாழ் புரிகுழ லாளல்குல் போல வளர்கின்றதே" என்பதனாலறிக.

உலகெலா முணர்ந்தோதற்கரியவனாய பரன் எவனோ என்று ஐயுறுவார் பிறவிப்பெருங்கடலை நீந்தி, முத்திக்கரையேறி யுய்ய "நிலவுலாவிய நீர்மலி வேணியன்" என்றோதி யுபகரித்தனர். நிலவு-பண்பாகுபெயர். உலாவிய என்னும் பெயரெச்சம் வேணியென்னும் இடப்பெயர்கொண்டது. தக்கன் சாபந்தாங்கித் தளர்ந்து மெலிந்து சரணடைந்த தண்மதியைத் தனிமுடியிற் றரித்து உய்வித்தமையால், பிறராற் பெருங்கேடெய்தினோருஞ் சங்கரனடிக் கீழ்ச் சரணம்புகுவரேல், அவர்கட்குய்வுண்டா மென்பதூஉம், பகீரதன்வே ண்டுகோளால் பங்கயனுலகத்தினின்றும் பரந்தாமனொதியிமையோரும் அடக் குமாற்றில்லாதுவருந்த, அதிவேகமாகப் பன்முகங்களுடன் பாரழிக்கவந்த கங்கையின் செருக்கையடக்கித்தரித்து, உலகையும் உம்பரையும் உய்வித்து உவப்பித்தமையால், எவராலும் முடித்தற்கரிய பெருங்காரியங்களும் பிறை சூடியாம் பெருமானால் முடிக்கப்படுமென்னுந் தண்ணளியாந் தன்மையும், பிறவும் பெறப்படுகின்றன. அஞ்ஞானவடிவாந் தக்கனது சாபம் அம்புலியை அடையாவண்ணம், சடையில் அணிந்தமையால், பரன் ஞானவடிவினனென்

பதூஉம், கங்கையின் செருக்கையடக்கிச் சடையிற்றரித்தமையால், சங்கரன்கிரியை வடிவினனென்பதூஉம், (உலகுய்ய இச்சைகொண்டு திருமேனி தாங்கினமையால்,) அவ்வருட் டிருமேனியில் வேறாகாத சடையையுடையான், இச்சை வடிவினனென்பதூஉம் விளங்குகின்றன

தனக்கென ஒருநிறமும் வேண்டப்படாத சுத்தபடிகமானது கூடினதன் நிறமாயிருத்தற்போல, தத்துவாதீதயாகலிற் றனக்கென ஒருவடிவுமில்லாத தற்பரசிவம் பிரபஞ்சங்களைக் காரியப்படுத்தும் அவதரத்து, தனது சத்தியின் சொரூபமாகிய பேரொளியையே தனக்குவடிவாக்கிக் கொண்டமையாலும், நட்சத்திர சந்திர சூரியாக்கினிகட்கும் ஒளியை யருளுகின்றமையாலும், உயிர்களது கட்புலனை மறைக்கும் புறவிருள்போலன்றி மற்றுள்ள விடய இந்திரியங்களையும், இச்சாஞானக் கிரியைகளையும் மறைத்தகலா நிற்கும் பேரிருளாணவத்தை யோட்டுகின்றமையாலும "அலகில்சோதியன்" என்றார்

ஒளி வடிவினனாயின் வடிவெனபதனை:-

சிவஞானசித்தியார்.

'பொன்மைநீ லாதி வன்னம் பொருந்திடப் பளிங்கி வற்றின்
றன்மையாய் நிற்கு மாபோற் சத்திதன் பேதமெல்லா
நின்மலன் றானாய்த் தோன்றி நிலைமையொன் றாயே நிற்பன்
முன்னருட் சத்திதன் பான் முகிழ்க்குந்தான் முளையானன்றே." எனவும,

சிவபிரான்யாவற்றிற்கும் ஒளிகொடுப்பதனை —

"நாயகன் கண்ண யப்பா ளாயகி புதைப்ப வெங்கும்
பாயிரு ளாகி மூடப் பரிந்துல கினுக் , கு நெற்றித்
தூயநேத் திரத்தி னாலே சுடரொளி கொடுத்த பண்பிற்
றேயமா மொளிக ளெல்லாஞ் சிவனுருத் தேசதெனறோ "எனவும்,

பேரிருளாய ஆணவத்தையொழிப்பர் என்பதை —

திருக்கழுமலமும்மணிக்கோவை.

"கண்ணின் றொளிருங் கருமணியி னுள்ளொளிபோ
லுண்ணின் றொளிரு மொளிவிளக்கென் — றெண்ணிப்
புகலிப் பெருமானைப் புண்ணியனைப் போற்றி
லகலுமே பாசவிரு ளன்று." எனவும்,

சிவபெருமான் அலகில்சோதியனாயினும், ஆன்மாக்கண்மீது வைத்த கைம்மாறற்ற பெருங்கருணையினாலே திருவருளையே திருமேனியாகக் கொண்டு திருச்சிற்றம்பலத்தாடுகின்றார் என்பதுதோன்ற "அம்பலத்தாடுவான்" என்றார் அம்பலம் என்றது, விராட்புருடனது இதயகமலத்துள்ள பரமாகாசத்தில் வியாபகமான சிதாகாசத்தை, அதுவே கோயிலெனவும்

படும். இறைவா அச்சிற்சபையில் பஞ்சகிருத்தியங்கட்குங் காரணமான ஆனந்ததிருத்தம் புரிகின்றனா.

சிவபெருமான் பஞ்சகிருத்திய நடம்புரிகின்றனா என்பதனை:—

"தோற்றந் துடியதனிற் றோயுந் திதியமைப்பிற்
சாற்றியிடு மங்கியிலே சங்காரம்—ஊற்றமா
யூன்று மலர்ப்பதத்தி லுற்ற திரோதமுத்தி
நான்ற மலர்ப்பதத்தே நாடு"

என்னும் மணவாசகங்கடந்தார் திருவாக்கானும்,

"பூமலி கற்பகப் புத்தேள் வைப்பு
நாமநீர் வரைப்பி னுனில வளாகமு
மேனைய புவனமு மெண்ணரீங் குயிருந்
தானே வகுத்ததுன் றமருகக் கரமே
தனித்தனி வகுத்த சராசரப் பகுதி
யனைத்தையுங் காப்பதுன் னமைத்தகைத் தலமே
தோற்றுபு நின்றவத் தொல்லுல கடங்கலு
மாற்றுவ தாரழ லமைத்ததோர் கரமே
யீட்டிய வினைப்பய னெவற்றையு மறைத்துநின்
றூட்டுவ தாகுநின் னூன்றிய பதமே
யடுத்தவின் னுயிர்கட் களவில்பே ரின்பங்
கொடுப்பது முதல்வநின் குஞ்சித பதமே"

என்னுங் குமரகுருபர ஸ்வாமிகள் திருவாக்கானு முணர்க.

"புண்ணியனே யுன்னடிக்கே போதுகின்றேன்" என்றும், திருவடிச் சிறப்பிற்கே ஓர் திருத்தாண்டகம் அருளியும் ஆன்றோர்கள் திருவடியையே சிறப்பித்தமையால், ஆசிரியரும் "மலர்சிலம்படி வாழ்த்திவணங்குவாம்" என்றார். சிலம்பென்றது வேதங்களை "மறைச்சிலம் பார்ப்ப" என்று பின்னர் விளக்கியதைக் காண்க.

வணங்குவாம் என்பது உளப்பாட்டுத் தன்மைப் பன்மை வினைமுற்று என்னை? தற்பயனையும் பிறர்பயனையுங் கருதியெடுக்கப்பட்ட இப்புராணமாகலின் மக்கட்டொகுதியையுந்தம்மோடுளப்படுத்துதன்முறையாம். வாழ்த்தி வணங்குவாம் என்ற வாக்குகாயங்களின் றொண்டானே இனமாயமனத்தொண்டும் அமையும்.

அறுபான்மும்மை நாயனமார்களும் ஞானம், யோகம், கிரியை, சரியை என்னும் நாற்பாதங்களையும் அனுட்டித்தவரென்பதுதோன்ற, ஸ்ரீசேக்கிழார் சுவாமிகளும், "உலகெலாமுணர்ந்தோதற்கரியவன்" என்றதனால் ஞானதரிசனத்தையும், "அலகில்சோதியன்" என்றதனால் யோகதரிசனத்தையும், "அம்பலத்தாடுவான்" என்றதனால் கிரியாபூசையையும், "வாழ்த்திவணங்கு

வாம்" என்றதனால் சரியைத்தொண்டையும் விளக்கினர். இத்திருவருட் பாசுரத்திற்குப் பலவிருத்தியுரை செய்துள்ளமையால், அவைகளையும் வாசித்து உண்மையுணர்க. (க)

ஊன டைந்த வுடம்பின் பிறவியே
தான டைந்த வுறுதியைச் சாருமாற்
றேன டைந்த மலர்ப்பொழிற் றில்லையுண்
மாந டஞ்செய் வரதர்பொற் றாடொழ (உ)

## விநாயகர் துதி.

எடுக்கு மாக்கதை யின்றமிழ்ச் செய்யுளாய்
நடக்கு மேன்மை நமக்கருள் செய்திடத்
தடக்கை யைந்துடைத் தாழ்செவி நீண்முடிக்
கடக்க ளிற்றைக் கருத்து ளிருத்துவாம் (ங)

வேறு

## திருக்கூட்டப் புகழ்ச்சி.

மதிவளர் சடைமுடி மன்று ளாரைமுன்
றுதிசெய் நாயன்மார் தூய சொன்மலர்ப்
பொதிநலம் நுகர்தரு புனிதர் பேரவை
விதிமுறை யுலகினில் விளங்கி வெல்கவே (ச)

வேறு

## அவையடக்கம்.

அளவி லாத பெருமைய ராகிய
வளவி லாவடி யார்புகழ் கூறுகே
னளவு கூட வுரைப்பரி தாயினு
மளவி லாசை துரப்ப வறைகுவேன் (ரு)

தெரிவ ரும்பெரு மைத்திருத் தொண்டர்தம்
பொருவ ருஞ்சீர் புகலலுற் றேன்முற்றப்

(உ) ஊனம் - மாமிசம். பிறவியே - மக்கட்பிறப்பே. உறுதியை - பயனை. பொழில் - சோலை. வரதர் - எல்லாவுயிர்களுக்கும் வரங்களைக் கொடுப்பவர். (ங) மாக்கதை - பெரிய புராணம். தடக்கை - விசாலம்பொருந்திய கரங்கள். கடக்களிற்றை - மதம்பொழியும் யானைமுகத்தையுடைய விநாயகக்கடவுளை. (ச) மதி - இளம்பிறை. மன்றுளாரை - நடராசரை. தொன்மலர் - சொல்லாகிய மலரில் (திருமுறைகளில்). பொதி நலம் நுகர்தரு புனிதர் பேர் அவை - நிறைந்தபயனாகிய தேனை (பதிகத்தை) யுண்ணும் பரிசுத்தர்களுடைய பெருமைபொருந்திய அவைக்களம். விதிமுறை - வேதசிவாகம விதிப்படி. வெல்க - மேன்மைபெற்றோங்குக. (ரு) துரப்ப - பிடித்துந்த; செலுத்த

பெருகு * தண்கட லூற்றும் பெருநசை
யொருசு ணங்கனை யொக்குந் தகைமையேன்
செப்ப லுற்ற பொருளின் சிறப்பினா
லப்பொ ருட்குரை யாவருங் கொள்வரா
லிப்பொ ருட்கென் னுரைசிறி தாயினு
மெய்ப்பொ ருட்குரி யார்கொள்வர் மேன்மையால் (௭)

மேய விவ்வுரை கொண்டு விரும்புமாஞ்
சேய வன்றிருப் பேரம் பலஞ்செய்ய
தூய பொன்னணி சோழனீ டூழிபா
ராய சீரந பாய னரசவை (௮)

அருளி னீர்மைத் திருத்தொண் டறிவருந்
தெருளி னீரிது செப்புதற் காமெனின்
வெருளின் † மெய்ம்மொழி வானிழல் கூறிய
பொருளி னாகு மெனப்புகல் வாமன்றே (௯)

நூற்பெயர்—வேறு

இங்கித னாமங் கூறி னிவ்வுல கத்து முன்னாட்
டங்கிரு ளிரண்டின் மாக்கள் சிந்தையுட் சார்ந்து நின்ற
பொங்கிய விருளை யேனைப் புறவிருள் போக்கு கின்ற
செங்கதி ரவன்போ னீக்குந் திருத்தொண்டர் புராண மென்பாம். ()

பாயிர முற்றிற்று.

(௬) தெரிவரும் - அறிதற்கரிய. பொருவரும் - ஒப்பற்ற. ஏற்றபெருந் தண்கடலூற்றும் பெருநசை - வெள்ளமாகப்பெருகுகின்ற குளிர்ந்த கடல்முழுதையும் (கடலினுள்ளாகக் கடல்நீரை) நக்கி வற்றுவிக்கும் பேராசையையுடைய சுணங்கனாகிய நாயை. தகைமையேன் - தகுதியையுடையயான். (௭) மெய்ப்பொருட்குரியார் - உண்மைப்பொருளை உணர்தற்குரிய ஞானிகள். (௮) மேய இவ்வுரை - மேன்மைபொருந்திய இப்புராணம். சேயவன் - சிவந்ததிருமேனியை யுடையநடராசர். பேரம்பலம் - கனகசபை. பொன்னணி சோழன் - கனகசபை, திருமாளிகைப்பத்தி, திருமதில் இவைகளை செம்பொற்றகட்டால் மரீஇயசோழன். நீடூழிபார் ஆயசீர் அநபாயன் - நீண்டகாலம் வரையிலும் உலகத்தில் நிறைந்த கீர்த்தியையுடைய அநபாயச்சக்கிரவர்த்தி. (௯) அருளினீர்மை - சிவனருட்டன்மை. தெருளிலா - தெளிந்த உண்மையுணர்வில்லாத. வெருளிலா - மயக்கமில்லாத. மெய்ம்மொழிவான் - வேதசிவாகமங்களை யருளியசிவபிரான். நிழல் - அசரீரி. (௰) தங்குஇருள் இரண்டு - நிலைபெற்ற புறவிருளும், அகவிருளும். இருளை - அஞ்ஞானத்தை. புறவிருள் - பூதவிருள். செங்கதிரவன் - சிவந்தகிரணங்களையுடைய சூரியன்.

* தெண்கடலூற்றும் என்றும்பாடம்.

† மெய்ம்மொழிவான் நிழல்கூறிய பொருளினாகும் என்பதற்கு, உலகெலாம் என்னும் உண்மைமொழியை ஆகாயத்தின்கண் அசரீரியாகக் கூறியகாரணத்தால் ஆகும் என்று பொருள்விரிப்பினும் அமையும்.

முதற்காண்டம்.

முதலாவது

# திருமலைச்சருக்கம்.



## திருமலைச்சிறப்பு.



பொன்னின் வெண்டிரு நீறு புனைந்தெனப்
பன்னு நீள்பனி மால்வரைப் பாலது
தன்னை யார்க்கு மறிவரி யானென்று
மன்னி வாழ்கயி லைத்திரு மாமலை (க)

அண்ணல் வீற்றிருக் கப்பெற்ற தாதலி
னண்ணு மூன்றுல குந்நான் மறைகளு
மெண்ணின் மாதவஞ் செய்யவந் தெய்திய
புண்ணி யந்திரண் டுள்ளது போல்வது (உ)

நிலவு மெண்ணி றலங்களு நீடொளி
யிலகு தண்டளி ராக வெழுந்ததோ
ருலக மென்னு மொளிமணி வல்லிமேன்
மலரும் வெண்மலர் போல்வது மம்மலை (ங)

மேன்மை நான்மறை நாதமும் விஞ்சையர்
கான வீணையி னோசையுங் காரெதிர்
தான மாக்கண் முழக்கமுந் தாவிலா
வான துந்துபி யார்ப்பு மருங்கெலாம் (ச)

பனிவி சும்பி லமரர் பணிந்தசூ
ழணித கோடி யணிமுடி மாலையும்
புனித கற்பகப் பொன்னரி மாலையு
முனிவ ரஞ்சலி மாலையு முன்னெலாம் (ரு)

(க) பனிமால்வரை - இமயமலை. பாலது - பக்கத்திலுள்ளது. தன்னையார்க்கும் அறிவரியான - சிவபெருமான். (உ) மூன்றுலகு - சுவர்க்கமத்தியபாதலம். நான்மறை - இருக்கு யசுர் சாமம் அதர்வணம். (ங) நிலவும் விளங்கும் உலகம், தலங்கள், கயிலை இவைகள் முறையே, மொட்டுபாகவும், தளிராகவும், வெண்மலராகவும் உருவகிக்கப்பட்டன. (ச) நாதமும் - ஒலியும். விஞ்சையர் - வித்தியாதரர். காரெதிர் தானமாக்கள் - மேகத்திற்கு மாறாக மதம்பொழிகின்ற யானைகள். தாவிலா - குறைவற்றசிறப்பு. ஆர்ப்பு - முழக்கம். மருங்கெலாம் பக்கங்களிலெல்லாம். (ரு) பனிவிசும்பு - குளிர்ச்சிபொருந்திய விண்ணுலகம். அணிதகோடி எண்ணிறந்தகோடி. அஞ்சலி - கைகுவித்தல்.

நீடு தேவர் நிலைகளும் வேண்டிடி
னூடு மைம்பெரும் பூதமு நாட்டுவ
கோடி கோடி குறட்சிறு பூதங்கள்
பாடி யாடும பரப்பது பாங்கெலாம் (௬)

நாய கன்கழல் சேவிக்க நான்முகன்
மேய கால மலாமையின் மீண்டவன்
றூய மால்வரைச் சோதியின் மூழ்கியொன்
றாய வன்னமுங் காணு தயர்க்குமால் (எ)

வேறு.

காதில்வெண் குழையோன் கழறொழ நெடியோன் காலம்பார்த் திரு
ந்தது மறியான், சோதிவெண் கயிலைத் தாழ்வரை முழையிற் றுதிக்கையோ
னூர்தியைக் கண்டு, மீதெழு *பண்டைச் செழுஞ்சுட ரின்று †வெண்சுட
ரானதென் றதன்கீ, ழாதியே னமதா யிடக்கலுற் றானென் றதனைவந் தணை
தருங் கலுழன் (அ)

அரம்பைய ராடன் முழவுடன் மருங்கி னருவிக ளொதிரொதிர முழங்க
வரம்பெறு காதன் மனத்துடன் றெய்வ மதுமல ரிருகையு மேந்தி
நிரந்தர மிடைந்த விமானசோ பான நீடியா வழியினு லேறிப்
புரந்தரன் முதலாங் கடவுளர் போற்றப் பொலிவது திருமலைப் புறம்பு. (கூ)

வேதநான் முகன்மால் புரந்தரன் முதலாம் விண்ணவ ரெண்ணிலார்
மற்றுங், காதலான் மிடைந்த முதற்பெருந் தடையாங் கதிர்மணிக் கோபுரத்
துள்ளான், பூதவே தாளப் பெருங்கண நாதர் போற்றிடப் பொதுவினின்
றாடு, நாதனு ராதி தேவனு ரோயி லுயக னந்தியெம் பெருமான் (ய)

நெற்றியிற் கண்ணர் நாற்பெருந் தோளர் நீறணி மேனிய ரநேகர்
பெற்றமேற் கொண்ட தம்பிரா னடியார் பிஞ்சகன் றன்னருள் பெறுவார்
மற்றவர்க் கெல்லாந் தலைமையாம் பணியு மலர்க்கையிற் சுரிகையும் பிரம்புங்
கற்றைவார் சடையா னருளினுற் பெற்றான் காப்பதக் கயிலைமால்வரைதான். (௧௧)

(௬) நீடுதேவர் நிலைகளும் உயர்ந்த தேவர்கள் பதங்களும் (எ) அயர்க்கும்-வரு
ந்துவன் (அ) நெடியோன் - திருமால் முழையில்-குகையில். துதிக்கையோன் ஊர்தி
மூஷிகம்-யானைமுகக்கடவுள் து வாகனமாகிய பெருச்சாளியை. ஏனம் - பன்றி இடக்கலுற
ற ன-பூமியைக்கிண்டிச் செல்கின்றான் கலுழன்-கருடன் (கூ) அரம்பையர்-தெய்வப
பெண்கள் அருவிகள்-சிறுநீரோடைகள். தெய்வமதுமலர்-கற்பகத்தருவின் தேன்பொருந்திய
பூக்களை நிரந்தரம் - எப்பொழுதும். சோபானம் - கீழுள்ளபடி. புரந்தரன் - தேவேந்தி
ரன். (ய) மிடைந்த - நெருங்கிய. பொதுவில்-சிற்சபையில். (௧௧) பெற்றமேற்கொண்ட
தம்பிரான் - இடபத்தை வாகனமாகக் கொண்ட சிவபெருமான். சுரிகை - உடைவாள்

* பண்டைச் செழுஞ்சுடர் என்றது முன்னொருகால் [illegible] மும் முண்டகனும் தாங்
களே கடவுளென்று முனிந்து யுத்தம்புரிந்த காலத்தில் அவர்களையாளச் சிவபிரான்கொ
ண்ட செழுஞ்சுடருருவாம் அக்கினிமலையை

† வெண்சுடரானது என்றது கயிலையங்கிரியை.

கையின்மான் மழுவர் கங்கைசூழ் சடையிற் கதிரிளம் பிறைநறுங் கண்ணி
யையர்வீற் றிருக்குந் தன்மையி னாலு மளப்பரும் பெருமையி னாலு
மெய்யொளி தழைக்குந் தூய்மையி னாலும் வென்றிவெண் குடையந பாயன்
செய்யகோ லபயன் றிருமனத் தோங்குந் திருக்கயி லாயநீள் சிலம்பு. (கஉ)

வேறு

அன்ன தன்றிருத் தாழ்வரை யின்னிடத்
தின்ன தன்மைய னென்றறி யாச்சிவன்
றன்னை யேயுணர்ந் தார்வந் தழைக்கின்றா
னுன்ன ருஞ்சீ ருபமன் னியமுனி. (கங)

யாத வன்றுவ ரைக்கிறை யாகிய
மாத வன்முடி மேலடி வைத்தவன்
பூத நாதன் பொருவருந் தொண்டினுக்
காதி யந்த மிலாமை யடைந்தவன் (கச)

அத்தர் தந்த வருட்பாற் கடலுண்டு
சித்த மார்ந்து தெவிட்டி வளர்ந்தவன்
பத்த ராய முனிவர்பல் லாயிரர்
சுத்த யோகிகள் சூழ விருந்துழி (கரு)

அங்க ணோரொளி யாயிர ஞாயிறு
பொங்கு பேரொளி போன்றுமுன் றோன்றிடத்
துங்க மாதவர் சூழ்ந்திருந் தாரெலா
மிங்கி தென்கொ லதிசய மென்றலும் (கசு)

அந்தி வான்மதி சூடிய வண்ணருள்
சிந்தி யாவுணர்ந் தம்முனி தென்றிசை
வந்த நாவலர் கோன்புகழ் வன்றொண்ட
னெந்தை யாரரு ளாலணை வானென. (கஎ)

கைகள் கூப்பித் தொழுதெழுந் தத்திசை
மெய்யி லானந்த வாரி விரவிடச்
செய்ய நீள்சடை மாமுனி செல்வுழி
யைய நீங்க வினவுவோ ரந்தணர் (கஅ)

(கஉ) கண்ணி - தொண்டைமாலை. செய்யகோல் - செங்கோல். அபயன் - பயமில்லாதவன். சிலம்பு - மலை. (கங) ஆர்வந்தழைக்கின்றான் - பத்தியைவளர்க்கின்றான். (கச) யாதவன் - இடையன். துவரைக்கு இறையாகிய மாதவன் - துவாரகைக்கு அரசனாகிய கண்ணன். முடிமேலடிவைத்தவன் - தீக்ஷைசெய்தவன். (கரு) அத்தர் - சிவபிரான். (கசு) ஞாயிறு - சூரியர். (கஎ) அந்திவானமதி - மாலையில் ஆகாயத்திற்றோன்றுஞ் சந்திரன். சிந்தியா உணர்ந்து - தியானமுதிர்ச்சியாலுண்டாகும் சமாதியாலுணர்ந்து. (கஅ) விரவிட - பெருக. மாமுனி - உபமன்னியமாமுனிவர்.

சம்பு வின்னடித் தாமரைப் போதலா
லெம்பி ரானிறைஞ் சாயிது வென்னெனத்
தம்பி ரானைத்தன் னுள்ளந் தழீஇயவ
னம்பி யாரூர னாந்தொழுந் தன்மையான் (௧௯)

என்று கூற விறைஞ்சி யியம்புவார்
வென்ற பேரொளி யாரெய் விழுத்தகவு
நன்று கேட்க விரும்பு நசையினே
னின்ற மகக்குரை செய்தரு ளென்றலும் (௨௰)

உள்ள வண்ண முனிவ னுரைசெய்வான்
வெள்ள நீர்ச்சடை மெய்ப்பொரு ளாகிய
வள்ளல் சாத்து மதுமலர் மாலைபு
மள்ளு நீறு மெடுத்தணை வானுளன் (௨௧)

அன்ன வன்பெய ராலால சுந்தரன்
முன்ன மாங்கொரு நாண்முதல் வன்றனக்
கின்ன வாமெனு நாண்மலர் கொய்திடத்
துன்னி னானந் தனவனச் சூழலில் (௨௨)

அங்கு முன்னமை யாளுடை நாயகி
கொங்கு சேர்குழற் காமலர் கொய்திடத்
திங்கள் வாண்முகச் சேடிய ரெய்தினா
ரெங்கு கின்ற கவினுடைப் பூவைமார் (௨௩)

அந்த மில்சீ ரனிந்திதை யாய்குழற்
கந்த மாலைக் கமலினி யென்பவர்
கொந்து கொண்ட திருமலர் கொய்வுழி
வந்து வானவ ரீச ரருளென (௨௪)

மாத வஞ்செய்த தென்றிசை வாழ்ந்திடத்
தீதி லாத்திருத் தொண்டத் தொகைதரப்
போது வாரவர் மேன்மனம் போக்கிடக்
காதன் மாதருங் காட்சியிற் கண்ணினார் (௨௫)

(௧௯) சம்புவின் அடித்தாமரைப்போது - சிவபிரானுடைய திருவடித் தாமரைமலர். இறைஞ்சாய் - வணங்கமாட்டாய். (௨௰) விழுத்தகவும் - பெரியதகவும். நசையினேன் - ஆசையுடையேன். (௨௧) வள்ளல் - சிவபெருமான். (௨௨) நாண்மலர் - அன்றலர்ந்தபுதிய மலர். துன்னினான் - நெருங்கினான். சூழலில் - சோலையில்; நந்தனவனத்தில். (௨௩) கொங்குசேர் - மணமமைந்த. [illegible] திங்கள் வாண்முகச் சேடியர் - ஒளிபொருந்திய முகத்தினையுடைய தோழிப்பெண்கள். கவினுடைப் பூவைமார் - அழகினையுடைய நாகணவாய்ப்பறவையைப்போன்ற சொல்லினையுடையவர்; பொருந்துகின்ற கவினுடைய பூவைமாராகிய திங்கள்வாண்முகச் சேடியர் எனக்கூட்டுக. (௨௪) ஆய்குழல் - ஆய்ந்து சிக்கெடுக்கப்பட்ட கூந்தல். கொந்துகொண்ட - கொத்துக்களாயுள்ள. (௨௫) போதுவார் அவர் - போகின்றவராகிய ஆலாலசுந்தரர்.

முன்ன மாங்கவர் மொய்ம்முகை நாண்மல
ரென்னை யாட்கொண்ட வீசனுக் கேய்வன
பன்ம லர்கொய்து செல்லப் பனிமல
ரன்ன மன்னவ ருங்கொண் டகன்றபின் (உசு)

ஆதி மூர்த்தி யவன்றிற நோக்கியே
மாதர் மேன்மனம் வைத்தனை தென்புவி
மீது தோன்றியம் மெல்லிய லாருடன்
காத லின்பங் கலந்தணை வாயென (உஎ)

கைக ளஞ்சலி கூப்பிக் கலங்கினான்
செய்ய சேவடி நீங்குஞ் சிறுமையேன்
மையன் மானுட மாயமயங் கும்வழி
யைய னேதடுத் தாண்டருள் செய்யென (உஅ)

அங்க ணாத னதற்கருள் செய்தபி
னங்கை மாருட னம்பிமற் றத்திசை
தங்கு தோற்றத்தி லின்புற் றுச்சாருமென்
றங்க வன்செய லெல்லா மறைந்தனன் (உகூ)

அந்த ணாளரு மாங்கது கேட்டவா
பந்த மானுடப் பாற்படு தென்றிசை
யிந்த வான்றிசை யெட்டினு மேற்பட
வந்த புண்ணியம் யாதென மாதவன் (ஙo)

பொருவ ருந்தவத் தான்புலிக் காலனு
மருமு னியெந்தை யர்ச்சித்து முள்ளது
பெருமை சேர்பெரும் பற்றப் புலியூரென்
றொருமை யாளர்வைப் பாம்பதி யோங்குமால் (ஙக)

அத்தி ருப்பதி யின்னுமை யாளுடை
மெய்த்த வக்கொடி காண விருப்புட
னத்த னீடிய வம்பலத் தாடுமற்
றித்தி றம்பெற லாந்திசை யெத்திசை (ஙஉ)

பூதம் யாவையி னுள்ளலர் போதென
வேத மூலம் வெளிப்படு மேதினிக்

(உசு) மொய்ம்முகை - நெருங்கிய அரும்புகள். ஏய்வனவாம் பன்மலரை எனக் கூட்டுக. (உகூ) அந்தணாளரும் - முனிவர்களும். மாதவன் - உபமன்னியமுனிவர். (ஙக) புலிக்காலனும் அருமுனி எந்தை வியாக்கிரபாதரென்னும் எந்தந்தை. பெரும்பற்றப் புலியூர் - தன்னைக்கண்ட ஆன்மாக்கட்குத் தன்னிடத்தே பெரும்பற்றை விளைக்கும் புலியூர். ஒருமையாளர் - ஒருவழிப்படுத்திய சிவானுபூதர்கள். வைப்பு - இடம். (ஙஉ) மெய்த்தவக்கொடி - சிவகாமியம்மை

காதன் மங்கை யிதய கமலமா
மாதொர் பாகனா ராரா மலர்ந்ததால். (௩௩)

எம்பி ராட்டியிவ் வேழுல கீன்றவ
டம்பி ரானைத் தனித்தவத் தாலெய்தி
கம்பை யாற்றில் வழிபடு காஞ்சியென
றும்பர் போற்றும் பதியு முடையது (௩௪)

நங்க ணாதனா நந்தி தவஞ்செய்து
பொங்கு நீடரு ளெய்திய பொற்பது
கங்கை வேணி மலரக் கனன்மலர்
செங்கை யாளரை யாறுந் திகழ்வது. (௩௫)

தேச மெல்லாம் விளக்கிய தென்றிசை
யீசர் தோணி புரத்துட னெங்கணும்
பூச னைக்குப் பொருந்து மிடம்பல
பேசி லத்திசை யொவ்வா பிறதிசை (௩௬)

என்று மாமுனி வன்றொண்டர் செய்கையை
யன்று சொன்ன படியா லடியவர்
தொன்று சீர்த்திருத் தொண்டத் தொகைவிரி
யின்றெ னாதர வால்வ லியம்புகேன். (௩௭)

மற்றி தற்குப் பதிகம்வன் றொண்டர்தாம்
புற்றி டத்தெம் புராண ரருளினாற்
சொற்ற மெய்த்திருத் தொண்டத் தொகையெனப்
பெற்ற நற்பதி கந்தொழப் பெற்றதாம் (௩௮)

அந்த மெய்ப்பதி கத்தடி யார்களை
நந்த நாதனா நம்பியாண் டார்நம்பி
புந்தி யாரப் புகன்ற வகையினால்
வந்த வாறு வழாம லியம்புவாம் (௩௯)

உலக முய்யவுஞ் சைவநின் றோங்கவு
மலகில் சீர்நம்பி யாரூரர் பாடிய
நிலவு தொண்டர்தங் கூட்ட நிறைந்துறை
குலவு தண்புன னாட்டணி கூறுவாம் (௪௰)

திருமலைச்சிறப்பு முற்றிற்று
ஆக திருவிருத்தம் - ௪௰.

(௩௩) பூதம் ஆணவமாசுகள் வேரறுமை பிணைவம் மேனிகாதன மங்கை - பூமிதேவி. (௩௫) மலர - விளங்க கனன்மலர் அக்கினிப்பிரகாசிக்கும். (௩௭) என் ஆதரவால் - என்விருப்பால். (௪௰) புனனாட்டணி - சோழநாட்டின் சிறப்பு.

உலகெலாம் உணர்ந்து ஓதற்கு அரியவராய், மண் புனல் தீ காற்று என்னும் நாற்பூதங்கட்கும்முதலாய வெளிக்குமேலவராய், அதற்கும் ஆதார மான பிரகிருதிக்கும் மேம்பட்டவராய், அப்பிரகிருதிக்கும் எதுவான கலா ரூபமாயுள்ளவராய், அதற்குங் காரணமான அசுத்தமாயைக்குங் கடந்த சுத்த வித்தைக்கும் அதீதமான விந்துதத்துவத்திலிருப்பவராய், அதற்கும்அப்பாற் பட்ட சதாசிவாதீதமான பராசத்திக்காதாரமாயிருப்பவராய்,அருவராய், உரு வராய், அருவுருவராய், அவைகடந்த அகண்டாகாரப் பிழம்பராய், தற்போ தவழியால் அறியப்படாதவராயுள்ள சிவபெருமான்,ஆன்மாக்கள்மீது வைத் தகைம்மாறற்ற பெருங்கருணையினாலே, பாலசந்திரன், கங்கை, கொன்றை முதலியனவிளங்குஞ் சடாமுடியையும், ஒருதிருமுகத்தையும், மூன்று திரு க்கண்களையும், நான்கு திருக்கரங்களையும், தெளிபளிங்குவடிவையும், இரு திருவடிகளையும் உடையராய், தும்புருநாரதர்களும், விஞ்சையர்களும் வீணை கானஞ்செய்து இசைபாட, பூதர்கள் நானாவிதவாத்தியங்களைமுழக்க, முனி புங்கவர்கள் கரங்களைச் சிரசின்மீதுவைத்து, வேதவாக்கியங்களை எடுத்தோத, உருத்திரர்கள், விட்டுணுக்கள், பிரமர்கள், இந்திரர்கள், சந்திரர்கள், சூரியர் கள் முதலியவானோர்கள் வாய்புதைத்துத் தத்தங்குறைகளை முறையிட, நந்தி யெம்பெருமான் திருக்கரத்தில் பிரம்பை ஏந்தி வாயில்காப்ப, எல்லா உலகங் களையீன்றுங் கன்னியாய் விளங்கும் உமாதேவியார் இடப்பாகத்தில்மிளிர வீற்றிருந்தருளுந் திருக்கயிலாய மலையானது இமயமலைக்குப் பக்கத்திற் பொலிகின்றது

அத்திருமலையின் அடிவாரத்திலே, துவாரகாபுரிவேந்தராய ஸ்ரீகிரு ஷ்ணமூர்த்திக்குச் சிவதீக்ஷைசெய்தவரும், சிவபத்தியிற் சிறந்த சைவாசாரிய ரும், சிவபிரான் தந்தருளிய திருப்பாற்கடலையுண்டு வளர்ந்தவரும், வியாக்கிர பாதமுனிவரின் குமாரருமாகிய உபமன்னியுமகாமுனிவர் எண்ணிறந்தமுனி வர்களும், சிவயோகிகளுஞ் சூழ எழுந்தருளி இருந்தனர். அவ்வமையத்தில் ஆங்கே ஆயிரஞ்சூரியர்களின் ஒளிபோலப் பேரொளியொன்று தோன்றிற்று. அதனைக்கண்ட அருந்தவமுனிவர்கள் "இதுஎன்ன அதிசயம்" என்றார்கள் உடனே உபமன்னியுமகாமுனிவர் அந்திவான் பிறையணிந்த அண்ணலைச் சிந்தித்து, சங்கரனருளால் தென்திசையில் திருவவதாரஞ்செய்த வன்றொ ண்டப்பெருமான் கயிலையங்கிரிக்கு எழுந்தருளுகின்றார் என்பதனை அறிந்து, எழுந்து, இரண்டுகைகளையுஞ் சிரசின்மீது குவித்து, கண்களினின்றும் ஆன ந்த அருவிபெருக, அத்திசையை நோக்கிச்சென்றனர். அதுகாலை அவணி ருந்த முனிசிரேட்டர்கள் தங்களுக்குண்டாகிய ஐயம்நீங்க, பாற்கடலையுண்ட பரமஞானியைப்பார்த்து "மாமுனிவரே! பிறப்பிறப்பில்லாச் சிவபெரு மானையன்றிச் சிறுதெய்வங்களை என்றும் வணங்காதநீர் இன்று இச்சோதி யைக்கண்டு வணங்கியதென்னை?" என்று வினவினர். உபமன்னியுமகா முனிவர் அம்முனிவர்களும், அவனியும், அமரரும், பிறரும் உய்ய மாதவர் களைத் திருநோக்கஞ்செய்து, "முனிவர்களே! இச்சோதிரூபமாய் எழுந் தருளுகின்ற பெருமானார் நம்பியாரூரரென்னுந் திருநாமமுடையவர் அவர் என்றுஞ் சிவபிரானைச் சிந்தையிலிருத்துபவராதலால், அவரே இறைவர்; இறைவரே அவர். நாம்வணங்குந் தகுதியையுடையவர்." என்று திருவாய் மலர்ந்தருள, முனிவர்கள் வியாக்கிரபாதமுனிவர் புத்திரரைப்பணிந்து, "முனிவர் பெருமானே! பேரொளிப்பிழம்பாகிய நம்பியாரூரர் தவப் பெருமைகளைக் கேட்கவிரும்புகின்றோம். தேவரீர்அருளிச் செய்யவேண் டும்" என்று வேண்டினார்கள். அதைக்கேட்ட மாமுனிவர் ஆனந்தவாரிதியில் ஆழ்ந்து "முனிவர்களே! கேளுங்கள்; கோடிசூரியப்பிரகாசமாய் எழுந்

தருளுவோர் சிவபெருமானுக்குப் பூமாலை தொடுத்துச்சாத்தலும், விபூதி பாத்திரந் தாங்குதலுமாகிய திருப்பணியைப் பூண்டிருந்தவர். அவர் அருமைத் திருப்பெயர் ஆலாலசுந்தரர். அச்சுந்தரர் ஓர்நாள் அம்பிகாபதிக்கு மலர்கொய்யத் திருநந்தனவனத்துக்குச் சென்றனர். அதுகாலை நம்மை அடிமையாகவுடைய பார்வதிதேவியாருக்குப் புட்பங்கொய்ய அனிந்திதை, கமலினி என்னும் இரண்டு சேடியர்களும் அவ்வனத்திற்குப்போயிருந்தார்கள். எவ்வுலகும் உய்ய, ஆலாலசுந்தரர் அவர்கள்மீது மனதைச் செலுத்தினர் அவர்களும் அழகர்மீது ஆசைகொண்டார்கள் பின்னர் ஒருவாறு மனதைமாற்றிப் புஷ்பங்களைக் கொய்துகொண்டு ஆலாலசுந்தரர் சிவசந்நிதியடைந்தனர்; அனிந்திதையும், கமலினியும் தேவிசந்நிதியை அடைந்தார்கள் எள்ளுக்குள் எண்ணெயைப்போல எங்குஞ் சத்தியுடன் எழுந்தருளியுள்ள எல்லாம்வல்ல இறைவர் ஆலாலசுந்தரரை அருள்விழியால் திருநோக்கஞ்செய்து 'நீ பெண்கள்மேல் இச்சைகொண்டபடியால், தென்திசையிலே மானுடனாகப் பிறந்து, அப்பெண்களுடன் புணர்ந்து, காமஇன்பத்தை நுகர்ந்து, மீண்டும் இங்குவரக்கடவை' என்று ஆஞ்ஞாபித்தனர் அதைக்கேட்ட ஆலாலசுந்தரர் மனங்கலங்கிச் சிவபிரான் திருவடிகளில் வீழ்ந்து வணங்கி 'சிவமே! மானுடனாய்ப்பிறந்து, மாயவலையிற்சிக்கி மயங்கும்பொழுது அடியேனைத் தடுத்தாட்கொள்ளவேண்டும்' என்றுவேண்ட, தடங்கருணைப் பெருங்கடலாகிய சங்கரரும் இசைந்தனர் பின்பு சிவாஞ்ஞைப்படியே ஆலாலசுந்தரர், அனிந்திதை, கமலினி என்னும் இருபெருமாட்டிகளுடன் தென்திசையில் திருவவதாரஞ்செய்து, காமஇன்பத்தை நுகர்ந்து, இப்பொழுது பேரொளிப் பிழம்பாக எழுந்தருளிவருகின்றனர்" என்று அருளிச்செய்தார்

அதுகேட்ட அருமறைவல்ல முனிவர்கள் உபமன்னிய முனிவரை நோக்கி "ஆலாலசுந்தரர் அவதாரஞ்செய்த தென்திசையானது அஷ்டதிசைகளினுஞ் சிறந்து மேம்பட்டுவிளங்கச் செய்த புண்ணியம் யாது?" என்று வினவ, மாதவர், "முனிவர்களே! கண்டாலும், சொன்னாலும், சிந்தித்தாலும் முத்தியளிக்கவல்ல சிதம்பரம், திருவாரூர், காஞ்சீபுரம், திருவையாறு, சீர்காழி முதலிய புண்ணியத்தலங்களையுடைமையால், தென்திசை பிறதிசைகளினுஞ் சிறந்தது" என்றியம்பினர்.

இங்ஙனம் உபமன்னியமுனிவர் வன்றொண்டர் வரலாற்றை முனிவர்களுக்கு அருளிச்செய்தபடியால், யானும் எனக்குண்டாயபேரவாவினால் திருத்தொண்டத் தொகையின் விரிவைச்சொல்லத் தொடங்கினேன் அத்திருத்தொண்டத் தொகையே இப்புராணத்திற்குப் பதிகமாம். அதன் உண்மைகளை விளக்கும் நம்பியாண்டார்நம்பி திருவந்தாதியைத் தழுவி அடியவர்கள் வரலாற்றை விரிவாய் விளம்புகின்றேன்.

# திருநாட்டுச் சிறப்பு.



பாட்டியற் றமிழுரை பயின்ற வெல்லையுட்
கோட்டுயர் பனிவரைக் குன்றி னுச்சியிற்
சூட்டிய வளர்புலிச் சோழர் காவிரி
நாட்டியல் பதனையா னவில லுற்றனன் (௧)

ஆதிமா தவமுனி யகத்தி யன்றரு
பூதநீர்க் கமண்டலம் பொழிந்த காவிரி
மாதர்மண் மடந்தைபொன் மார்பிற் றாழ்ந்ததோ
ரோதநீர் நித்திலத் தாம மொக்குமால் (௨)

சையமால் வரைபயி றலைமை சான்றது
செய்யபூ மகட்குநற் செவிலி போன்றது
வையகம் பல்லுயிர் வளர்த்து நாடொறு
முய்யவே சுரந்தளித் தூட்டு நீரது (௩)

மாலினுந் திச்சுழி மலர்தன் மேல்வருஞ்
சால்பினாற் பலவுயிர் தருதன் மாண்பினாற்
கோலநற் குண்டிகை தாங்குங் கொள்கையாற்
போலுநான் முகனையும் பொன்னி மாநதி (௪)

திங்கள்சூ டியமுடிச் சிகரத் துச்சியிற்
பொங்குவெண் டலைநுரை பொருது போதலா
லெங்கணா யகன்முடி மிசைநின் றிழி
கங்கையாம் பொன்னியாங் கன்னி நீத்தமே (௫)

வண்ணநீள் வரைதர வந்த மேன்மையா
லெண்ணில்பே ரறங்களும் வளர்க்கு மீகையா
லண்ணல்பா கத்தையா ளுடைய நாயகி
யுண்ணெகிழ் கருணையி னொழுக்கம் போன்றது (௬)

வேறு.

வம்பு லாமலர் நீரால் வழிபட்டுச்
செம்பொன் வார்கரை யெண்ணில் சிவாலயத்
தெம்பி ரானை யிறைஞ்சலி னீர்ம்பொன்னி
யும்பர் நாயகர்க் கன்பரு மொக்குமால் (௭)

---

(௧) கோட்டு - சிகரங்கள். புலி - புலிக்கொடி (௨) பூதநீர்-பரிசுத்தமான சலம். மாதர்-அழகிய. நித்திலத்தாமம்-முத்துமாலை. (௩) செவிலி - வளர்க்குந்தாய். (௪) உந்திச்சுழி - நீர்ச்சுழி; (சிலேடை) நாபிகமலம். பொன்னி - காவிரி. (௫) கன்னிநீத்தம் என்பது என்றும் இடையறாது செல்லும்பெற்றியை விளக்குகின்றது. கன்னி - அழிவின்மை. (௬) வண்ண நீள்வரை - அழகிய நீண்ட சையமலை. (௭) வம்புலா - வாசனைவீசும். வார் - நீண்ட. ஈர்ம்பொன்னி - குளிர்ச்சிபொருந்திய காவிரி.

வாச நீர்குடை மங்கையர் கொங்கையிற்
பூசு குங்கும மும்புனை சாந்தமும்
வீசு தெண்டிரை மீதிழித் தோடுநீர்
தேசு டைத்தெனி னுந்தெளி வில்லதே (அ)

மாவி ரைத்தெழுந் தார்ப்ப வரைதரு
பூவி ரித்த புதுமதுப் பொங்கிட
வாவி யிற்பொலி நாடு வளந்தரக்
காவி ரிப்புனல் கால்பரந் தோங்குமால். (கூ)

ஒண்டு றைத்தலை மாமத கூடுபோய்
மண்டு நீர்வய லுட்புக வந்தெதிர்
கொண்ட மள்ளர் குரைத்தகை யோசைபோ
யண்டர் வானத்தி னப்புறஞ் சாருமால் (க0)

மாதர் நாறு பறிப்பவர் மாட்சியுஞ்
சீத நீண்முடி சேர்ப்பவர் செய்கையு
மோதை யார்செய் யுழுநரொ ழுக்கமுங்
காதல் செய்வதோர் காட்சி மலிந்ததே (கக)

உழுத சான்மிக வூறித் தெளிந்தசே
றிழுது செய்யினு ளிந்திர தெய்வதந்
தொழுது நாறு நடுவார் தொகுதியே
பழுதில் காவிரி நாட்டின் பரப்பெலாம் (கஉ)

வேறு

மண்டுபுனல் பரந்தவயல் வளர்முதலின் சுருள்விரியக்
கண்டுழவர் பதங்காட்டக் களைகளையுங் கடைசியர்க
டண்டரளஞ் சொரிபணில மிடறியிடை தளர்ந்தசைவார்
வண்டலையுங் குழலலைய மடநடையின் வரம்பணைவார் (கங)

செங்குவளை பறித்தணிவார் கருங்குழன்மேற் சிறைவண்டை
யங்கைமலர் களைக்கொடுகைத் தயல்வண்டும் வரவழைப்பார்
திங்கணுதல் வெயர்வரும்பச் சிறுமுறுவ றளவரும்பப்
பொங்குமலர்க் கமலத்தின் புதுமதுவாய் மடுத்தயர்வார். (கச)

(அ) வாசநீர்குடை - நீராடும். தேசு - வெண்மைநிறம். (கூ) மா - வண்டுகள். வரைதருபூ - மலையிடத்திருந்து வருமலர்கள். மது - தேன். வாவி - தடாகம். (ய) குரைத்த - தட்டிய. (கக) ஓதையார் - ஒலிபொருந்திய. (கஉ) சால் - படைச்சால். செய்யினுள் - வயல்களில். (கங) முதலின் - நெற்பயிர்களின். தரளம் - முத்து. பணிலம் - சங்கு. (கச) திங்கணுதல் - பிறையொத்த நெற்றி. தளவு - முல்லை.

# திருத்தொண்டர் புராணம்.

கரும்பல்ல நெல்லென்னக் கமுகல்ல கரும்பென்னச்
சுரும்பல்லி குடைநீலத் துகளல்ல பகலெல்லா
மரும்பல்ல முலையென்ன வமுதல்ல மொழியென்ன
வரும்பல்லா யிரங்கடைசி மடந்தையர்கள் வயலெல்லாம் (௧௫)

கயல்பாய்பைந் தடநந்தூன் கழிந்தபெருங் கருங்குழிசி
வியல்வாய்வெள் வளைத்தரள மலர்வேரி யுலைப்பெய்தங்
கயலாமை யடுப்பேற்றி யரக்காம்ப னெருப்பூதும்
வயன்மாதர் சிறுமகளிர் விளையாட்டு வரம்பெல்லாம் (௧௬)

காடெல்லாங் கழைக்கரும்பு காவெல்லாங் குழைக்கரும்பு
மாடெல்லாங் கருங்குவளை வயலெல்லா நெருங்குவளை
கோடெல்லா மடவன்னங் குளமெல்லாங் கடலன்ன
நாடெல்லா நீர்நாடு தனையொவ்வா நலமெல்லாம். (௧௭)

வேறு

ஆலை பாய்பவ ரார்ப்புறு மோலமுஞ்
சோலை வாய்வண் டிரைத்தெழு சும்மையு
ஞால மோங்கிய நான்மறை யோதையும்
வேலை யோசையின் மிக்கு விரவுமால் (௧௮)

அன்ன மாடு மகன்றுறைப் பொய்கையிற்
றுன்னு மேதி படியத் துதைந்தெழுங்
கன்னி வாளை கமுகின்மேற் பாய்வன
மன்னு வான்மிசை வானவிற் போலுமால் (௧௯)

காவி னிற்பயி லுங்களி வண்டினம்
வாவி யிற்படிந் துண்ணு மலர்மது
மேவி யத்தட மீதெழப் பாய்கய
றாவி யப்பொழி லிற்கனி சாடுமால் (௨௦)

வேறு.

சாலிநீள் வயலி னோங்கித் தன்னிக ரின்றி மிக்கு
வாலிதாம் வெண்மை யுண்மைக் கருவினும் வளத்த வாகிச்
சூல்முதிர் பசலை கொண்டு சுருள்விரித் தாணுக் கன்ப
ராலின சிந்தை போல வலர்ந்தன கதிர்க ளெல்லாம். (௨௧)

---

(௧௫) சுரும்பு-வண்டு. கடைசி மடந்தையர்கள் - பள்ள ஸ்திரிகள். (௧௬) நந்து-சங்கு. குழிசி - பானை. வளைத்தரளம் - சங்குகளீன்ற முத்து. வேரி - தேன். (௧௭) கா - சோலை. மாடு - பக்கம். கோடு - தடாகக்கரை. (௧௮) சும்மையும் - ஒலியும். வேலை - சமுத்திரம். (௧௯) மேதி - எருமை. (௨௧) சாலி - நெற்பயிர். சூல் - கருவு.

பத்தியின் பால ராகிப் பரமனுக் காளா மன்பர்
தத்தமிற் கூடி னார்க டலையினால் வணங்கு மாபோன்
மொய்த்தநீள் பத்தி யின்பால் முதிர்தலை வணங்கி மற்றை
வித்தகர் தன்மை போல விளைந்தன சாலி யெல்லாம் (உஉ)

அரிதரு செந்நெற் சூட்டி னடுக்கிய வடுக்கல் சேர்ப்பார்
பரிவுறத் தடிந்த பன்மீன் படர்நெடுங் குன்று செய்வார்
சுரிவளை சொரிந்த முத்தின் சுடர்ப்பெரும் பொருப்பு யர்ப்பார்
விரிமலர்க் கற்றை வேரி பொழிந்திழி வெற்பு வைப்பார் (உங)

சாலியின் கற்றை துற்ற தடவரை முகடு சாய்த்துக்
காலிரும் பகடு போக்குங் கரும்பெரும் பாண்டி லீட்ட
மாலிய முகிலின் கூட்ட மருவரைச் சிமயச் சாரன்
மேல்வலங் கொண்டு சூழுங் காட்சியின் மிக்க தன்றே (உச)

வைதெரிந் தகற்றி யாற்றி மழைபெயன் மானத் தூற்றிச்
செய்யபொற் குன்றும் வேறு நவமணிச் சிலம்பு மென்னக்
கைவினை மள்ளர் வானங் கரக்கவாக் கியநெற் குன்றால்
மொய்வரை யுலகம் போலு முளரிநீர் மருத வைப்பு (உரு)

அரசுகொள் கடன்க ளாற்றி மிகுதிகொண் டறங்கள் பேணிப்
பரவருங் கடவுட் போற்றிக் குரவரும் விருந்தும் பண்பின்
விரவிய கிளையுந் தாங்கி விளங்கிய குடிக ளோங்கி
வரைபுரை மாட நீடி மலர்ந்துள பதிக ளெங்கும். (உசு)

கரும்படு களம ராலைக் கமழ்நறும் புகையோ மாதர்
சுரும்பெழ வகிலா லிட்ட தூபமோ யூப வேள்விப்
பெரும்பெயர்ச் சாலை தோறும் பிறங்கிய புகையோ வானின்
வருங்கரு முகிலோ சூழ்வ மாடமுங் காவு மெங்கும் (உஎ)

நாளிகே ரஞ்செ ருந்தி நறுமலர் நரந்த மெங்குங்
கோளிசா லந்த மாலங் குளிர்மலர்க் குரவ மெங்குந்
தாளிரும் போந்து சந்து தண்மலர் நாக மெங்கு
நீளிலை வஞ்சி காஞ்சி நிறைமலர்க் கோங்க மெங்கும் (உஅ)

(உங) அடுக்கல், குன்று, பொருப்பு, வெற்பு இவைகள் மலைக்குப்பெயர்கள். (உச) வரைமுகடு - மலையினுச்சி. பகடு - எருமை. பாண்டில் - எருது. ஈட்டம் - கூட்டம். ஆலியமுகில் - அசைகின்றமேகம், ஆலங்கட்டிகளையுடைய மேகம் எனினுமொக்கும். வரைச்சிமயம் - மலையினுச்சி. (உரு) வை - வைக்கோல். (உசு) அரசுகொள்கடன் - அரசன் பெறவேண்டிய பாகம். கிளையும் - சுற்றத்தையும். (உஎ) களமர் - மள்ளர். தூபமோ - புகையோ. (உஅ) நாளிகேரம் - தென்னமரங்கள். செருந்தி - ஓர்வகைமரம்; மணித்தக்காளிக்கும்பெயர். நரந்தம் - நாரத்தமரங்கள். கோளி - பூவாதுகாய்க்கு மரங்கள். சாலம் - ஆச்சாமரங்கள். தமாலம் - பச்சிலைமரங்கள். குரவம் - குராமரங்கள். போந்து - பனைமரங்கள். சந்து - சந்தனமரங்கள். நாகம் - குங்குமமரங்கள்

சூதபா டலங்க ளெங்குஞ் சூழ்வழை ஞாழ லெங்குஞ்
சாதிமா லதிக ளெங்குந் தண்டளிர் நவற மெங்கு
மாதவி சரள மெங்கும வகுளசண் பகங்க ளெங்கும்
போதவிழ் கைதை யெங்கும் பூகபுன் னாக மெங்கும். (உ௯)

மங்கல வினைக ளெங்கு மணஞ்செய்கம் பலைக ளெங்கும
பங்கய வதன மெங்கும் பண்களின் மழலை யெங்கும்
பொங்கொளிக் கலன்க ளெங்கும் புதுமலர்ப் பந்த ரெங்குஞ்
செங்கயற் பழன மெங்குந் திருமக ளுறையு ளெங்கும் (௩௦)

மேகமுங் களிறு மெங்கும் வேதமுங் கிடையு மெங்கும்
யாகமுஞ் சடங்கு மெங்கு மின்பமு மகிழ்வு மெங்கும
யோகமுந் தவமு மெங்கு மூசலு மறுகு மெங்கும்
போகமும் பொலிவு மெங்கும் புண்ணிய முனிவ ரெங்கும் (௩௧)

பண்டரு விபஞ்சி யெங்கும் பாதசெம் பஞ்சி யெங்கும்
வண்டறை குழல்க ளெங்கும் வளரிசைக் குழல்க ளெங்குந்
தொண்டர்த மிருக்கை யெங்குஞ் சொல்லுவ திருக்கை யெங்குந்
தண்டலை பலவு மெங்குந் தாதகி பலவு மெங்கும் (௩௨)

மாடுபோ தகங்க ளெங்கும் வண்டுபோ தகங்க ளெங்கும்
பாடமம் மனைக ளெங்கும் பயிலுமம் மனைக ளெங்கு
நீடுகே தனங்க ளெங்கு நிதிநிகே தனங்க ளெங்குந்
தோடுசூழ் மாலை யெங்குந் துணைவர்சூழ் மாலை யெங்கும். (௩௩)

வீதிகள் விழவி னார்ப்பும் விரும்பினர் விருந்தி னார்ப்புஞ்
சாதிக ணெறியிற் றப்பா தனயரு மனையிற் றப்பா
நீதிய புள்ளு மாவு நிலத்திருப் புள்ளு மாவு
மோதிய வெழுத்தா மஞ்சு முறுபிணி வரத்தா மஞ்சும். (௩௪)

---

(உ௯) சூதம - மாமரங்கள். பாடலம - பாதிரிமரங்கள். வழை - சுரபுன்னை மரங்கள். ஞாழல் - வைரமரங்கள். சாதி-சிறுசண்பகம மாலதி-மல்லிகை, முல்லை. வகுளம- மகிழமரங்கள். கைதை - தாழைமரங்கள (௩௰) வினைகள் தொழில்கள் கம்பலைகள - ஒலிகள் கலன்கள ஆபரணங்கள் பழனம - வயல் (௩௧) கிடையும - வேதமபயி லிடங்களும. (௩௨) விபஞ்சி வீணை. (௩௩) போதகங்கள் - யானைக்கன்றுகள். போது அகங்கள - மலரிடங்கள் அம்மனை - அழகியவீடு அம்மனை - அம்மானையென்னும ஓர்விளையாட்டு. கேதனங்கள் கொடிகள. நிகேதனங்கள - பொக்கிஷசாலைகள். மாலை - பூமாலை. மாலை - வரிசை (௩௪) புள்ளும மாவும-பறவைகளும விலங்குகளும. மாவும நிலத்து இருப்பு உள்ளும - இலக்குமியும அந்நாட்டில் வசித்தலை விரும்புவள். உள்ளும **ஆவும்** எனப்பிரித்துக காமதேனு எனப்பொருள கூறுனருமுளர்.

நற்றமிழ் வரைப்பி னோங்கு நாம்புகழ் திருநா டென்றும்
பொற்றடந் தோளால் வையம் பொதுக்கடிந் தினிது காக்குங்
கொற்றவ னநபா யன்பொற் குடைநிழற் குளிர்வ தென்றால்
மற்றதன் பெருமை நம்மால் வரம்புற விளம்ப லாமோ (௬௫)

திருநாட்டுச்சிறப்பு முற்றிற்று.

ஆக திருவிருத்தம் - ௬௫.

# திருவாரூர்ச் சிறப்பு.

சொன்ன நாட்டிடைத் தொன்மையின் மிக்கது
மன்னு மாமல ராள்வழி பட்டது
வன்னி யாறு மதிபொதி செஞ்சடைச்
சென்னி யார்திரு வாரூர்த் திருநகர் (௧)

வேத வோசையும் வீணையி னோசையுஞ்
சோதி வானவர் தோத்திர வோசையு
மாத ராடன் மணிமுழ வோசையுங்
கீத வோசையு மாய்க்கிளர் வுற்றதே (௨)

பல்லி யங்கள் பரந்த வொலியுடன்
செல்வ வீதிச் செழுமணித் தேரொலி
மல்லல் யானை யொலியுடன் மாவொலி
யெல்லை யின்றி யெழுந்துள வெங்கணும் (௩)

மாட மாளிகை சூளிகை மண்டபங்
கூட சாலைகள் கோபுரந் தெற்றிகள்
நீடு சாளர நீடரங் கெங்கணும்
ஆடன் மாத ரணிசிலம் பார்ப்பன (௪)

அங்கு ரைக்கென் னளவப் பதியிலார்
தங்கண் மாளிகை யின்னொன்று சம்புவின்
பங்கி னாடிருச் சேடிப் பரவையா
மங்கை யாரவ தாரஞ்செய் மாளிகை. (௫)

(௬௫) ஆமோ என்பதில் ஓகாரம் எதிர்மறைப் பொருளில் வந்தது. (௧) மலராள் - இலக்குமிதேவி. வன்னி - வன்னிப்பத்திரம். (௩) பல்லியங்கள் - பலவகை வாத்தியங்கள். மல்லல் - வளமை. மா - குதிரை. (௪) சூளிகை - செய்குன்று, ஆமணை. தெற்றிகள் - திண்ணைகள். சாளரம் - சன்னல்கள். அரங்கு - சபைகள். (௫) சம்புவின் பங்கினள் - பார்வதி தேவியார்.

படர்ந்த பேரொளிப் பன்மணி வீதிபார்
இடந்த வேனமு மன்னமுந் தேடுவார்
தொடர்ந்து கொண்டவன் றொண்டர்க்குத் தூதுபோய்
நடந்த செந்தா மரையடி நாறுமால். (௬)

செங்கண் மாதர் தெருவிற் றெளித்தசெங்
குங்கு மத்தின் குழம்பை யவர்குழற்
பொங்கு கோதையிற் பூந்துகள் வீழ்ந்துடன்
அங்கண் மேவி யளறு புலர்த்துமால் (௭)

உள்ள மாருரு காதவ ரூர்விடை
வள்ள லார்திரு வாரூர் மருங்கெலாந்
தெள்ளு மோசைத் திருப்பதி கங்கள்பைங்
கிள்ளை பாடுவ கேட்பன பூவைகள் (௮)

விளக்க மிக்க கலன்கள் விரவலாற்
றுளக்கில் பேரொலி யாற்றுன்னு பண்டங்கள்
வளத்தொ டும்பல வாறு மடுத்தலால்
அளக்கர் போன்றன வாவண வீதிகள் (௯)

ஆர ணங்களே யல்ல மறுகிடை
வார ணங்களு மாறி முழங்குமால்
சீர ணங்கிய தேவர்க ளேயலாற்
றோர ணங்களிற் றாமமுஞ் சூழுமால் (௧௦)

தாழ்ந்த வேணியர் சைவர் தபோதனர்
வாழ்ந்த சிந்தை முனிவர் மறையவர்
வீழ்ந்த வின்பத் துறையுள் விரவுவார்
சூழ்ந்த பல்வே றிடத்தது தொன்னகர் (௧௧)

நிலம கட்கழ கார்திரு நீணுதற்
றிலக மொப்பது செம்பியர் வாழ்பதி
மலர்ம கட்குவண் டாமரை போன்மலர்ந்
தலகில் சீர்த்திரு வாரூர் விளங்குமால் (௧௨)

அன்ன தொன்னக ருக்கர சாயினன்
றுன்னு செங்கதி ரோன்வழித் தோன்றினன்

(௭) அளறு - குழைச்சேறு. புலர்த்தும் - உலரச்செய்யும். (௮) தெள்ளும் - இனிய. பூவைகள் - நாகணவாய்ப் பறவைகள். (௯) விரவலால் - நெருங்கியுள்ளதால். துளக்கில - நீங்காத. (௰) மறுகிடை - தெருவினிடத்து. வாரணங்களும் - யானைகளும். தாமமும் - மாலைகளும். (௧௧) வேணியர் - சடையர். இன்பத்துறை - இல்லறம். (௧௨) நுதல் - நெற்றி. திலகம் - பொட்டு. செம்பியர் - சோழர்கள்.

மன்னு சீரந பாயன் வழிமுதன்
மின்னு மாமணிப் பூண்மனு வேந்தனே (கங)

மண்ணில் வாழ்தரு மன்னுயிர் கட்கெலாங்
கண்ணு மாவியு மாம்பெருங் காவலான்
விண்ணு ளார்மகிழ் வெய்திட வேள்விகள்
யெண்ணி லாதன மாண வியற்றினன். (கச)

கொற்ற வாழி குவலயஞ் சூழ்ந்திடச்
சுற்று மன்னர் திறைகடை சூழ்ந்திடச்
செற்ற நீக்கிய செம்மையின் மெய்ம்மனுப்
பெற்ற நீதியுந் தன்பெய ராக்கினன் (கரு)

பொங்கு மாமறைப் புற்றிடங் கொண்டவா
ரெங்கு மாகி யிருந்தவர் பூசனை
கங்கண் வேண்டு நிபந்தமா ராய்ந்துளான்
றுங்க வாகமஞ் சொன்ன முறைமையால் (கசு)

வேறு.

அறம்பொரு ளின்ப மான வறநெறி வழாமற் புல்லி
மறங்கடிந் தரசர் போற்ற வையகங் காக்கு நாளிற்
சிறந்தநற் றவத்தாற் றேவி திருமணி வயிற்று மைந்தன்
பிறந்தன னுலகம் போற்றப் பேரரிக் குருளை யன்னான் (கஎ)

தவமுயன் றரிதிற் பெற்ற தனியிளங் குமர னானுஞ்
சிவமுயன் றடையுந் தெய்வக் கலைபல திருந்த வோதிக்
கவனவெம் புரவி யானை தேர்படைத் தொழில்கள் கற்றுப்
பவமுயன் றதுவும் பேறே யெனவரும் பண்பின் மிக்கான். (கஅ)

அளவிறுல கலைகண் முற்றி யரும்பெறற் றந்தை மிக்க
வுளமகிழ் காதல் கூர வோங்கிய குணத்தா னீடி
யிளவர சென்னுந் தன்மை யெய்துதற் கணிய னாகி
வளரிளம் பரிதி போன்று வாழுநா ளொருநாண் மைந்தன். (ககூ)

(கச) மாண - பொருந்த. (கரு) ஆழி - ஆஞ்ஞாசக்கரம். திறை - அரசிறை. செற்றம்-கோபம்; பகைமை. மெய்ம்மனு என்றது, சூரியபுத்திரனாகிய வைவச்சுவதமனுவை; அவர்செய்தநீதி யாவது மனுநூல். (கசு) நிபந்தம் - படித்தரம். (கஎ) அரிக்குருளை - சிங்கக்குட்டி. (கஅ) சிவமுயன்று - நன்மையைமுயற்சித்து, (பரசிவத்தைச் சிந்தித்து எனப்பொருளுமாம்) கவனவெம்புரவி - வேகமாகப் பாயுங்குதிரை. பவமுயன்றதுவும் - மானுடதேகங்கொண்டதும். (ககூ) அணியனாகி - சமீபித்தவனாய். பரிதி - சூரியன்.

திங்கள்வெண் கவிகை மன்னன் றிருவளர் கோயி னின்று
மங்குறோய் மாட வீதி மன்னிளங் குமரர் சூழக்
கொங்கலர் மாலை தாழ்ந்த குங்குமங் குலவு தோளான்
பொங்கிய தானை சூழத் தேர்மிசைப் பொலிந்து போந்தான் (உ0)

பரசுவந் தியர்முன் சூதர் மாகத ரொருபாற் பாங்கர்
விரைநறுங் குழலார் சிந்தும் வெள்வளை யொருபால் மிக்க
முரசொடு சங்க மார்ப்ப முழங்கொலி யொருபால் வென்றி
யரசிளங் குமரன் போது மணிமணி மாட வீதி (உக)

தனிப்பெருந் தருமந் தானோர் தயாவின்றித் தானை மன்னன்
பனிப்பில்சிந் தையினி லுண்மைப் பான்மைசோ தித்தா லென்ன
மனித்தர்தன் வரவு காணா வண்ணமோர் வண்ண நல்லான்
புனிற்றிளங் கன்று துள்ளிப் போந்ததம் மறுகி னூடே (உஉ)

அம்புனிற் றாவின் கன்றோ ரபாயத்தி னூடு போகிச்
செம்பொனின் றேர்க்கான் மீது விசையினாற் செலலப் பட்டே
யும்பரி னடையக் கண்டங் குருகுதா யலமந் தோடி
வெம்பிடு மலறுஞ் சோரு மெய்ந்நடுக் குற்று வீழும். (உங)

மற்றது கண்டு மைந்தன் வந்ததிங் கபாய மென்று
சொற்றடு மாறி நெஞ்சிற் றுயருழந் தறிவ ழிந்து
பெற்றமுங் கன்று மின்றெ னுணர்வெனும் பெருமை மாளச்
செற்றவென் செய்கை யென்று தேரினின் றிழிந்து வீழ்ந்தான் ()

அலறுபே ராவை நோக்கி யாருயிர் பதைத்துச் சோரு
நிலமிசைக் கன்றை நோக்கி நெடிதுயிர்த் திரங்கி நிற்கு
மலர்தலை யுலகங் காக்கு மனுவெனு மெனக்கோ மானுக்
குலகிலிப் பழிவந் தெய்தப் பிறந்தவா வொருவ னென்பான். (உரு)

வந்தவிப் பழியை மாற்றும் வகையினை மறைநூல் வாய்மை
யந்தணர் விதித்த வாற்றா லாற்றுவ தறமே யாகில்
எந்தையீ தறியா முன்ன மியற்றுவ னென்று மைந்தன்
சிந்தைவெந் துயரந் தீர்ப்பான் றிருமறை யவர்முன் சென்றான் ()

(உ0) கவிகை - குடை. மங்குல்தோய - மேகத்தை யளாவும. கொங்குஅலர் - வாசனை வீசும. தானை - சேனை. (உக) வந்தியர் - மங்கலப் பாசுரங்களைப் பாடிச் செல்பவர். சூதர் - அரசர்களைத் தம்முன்னின்று தொழுது துயிலெழுப்புங்காலத்தும், பிறவிடங்களினும் பாடுவோர். மாகதர் - அரசர் வீரத்தைப் புகழ்ந்து பாடுவோர். (உஉ) பனிப்புஇல் - நடுக்கமில்லாத, சலியாத. பான்மை - குணத்தை. ஆன் பசு. புனிறு - ஈன்றணிமை, சூதகம். (உங) உம்பரின் அடைய - இறக்க. (உச) பெற்றமும் - பசுவும். (உரு) பிறந்தவாறு என்பது பிறந்தவா என ஈறுகுறைந்து நின்றது.

தன்னுயிர்க் கன்று வீயத் தளர்ந்தவா தரியா தாகி
முன்னெருப் புயிர்த்து விம்மி முகத்தினிற் கண்ணீர் வார
மன்னுயிர் காக்குஞ் செங்கோன் மனுவின்பொற் கோயில் வாயிற்
பொன்னணி மணியைச் சென்று கோட்டினாற் புடைத்த தன்றே.()

பழிப்பறை முழங்கோ வார்க்கும் பாவத்தி னொலியோ வேந்தன்
வழித்திரு மைந்த னாவி கொளவரு மறலி யூர்திக்
கழுத்தணி மணியி னோசையோ வென்னத்தன் கடைமுன் கேளாத
தெழுதெழு மோசை மன்னன் செவிப்புலம் புக்க போது (உஅ)

ஆங்கது கேட்ட வேந்த னரியணை யிழிந்து போந்து
பூங்கொடி வாயி னண்ணக் காவல ரெதிரே போற்றி
யீங்கிதோர் பசுவந் தெய்தி யிறைவநின் கொற்றவாயிற்
றூங்கிய மணியைக் கோட்டாற் றுளக்கிய தென்று சொன்னார் ()

மன்னவ னதனைக் கேளா வருந்திய பசுவை நோக்கி
யென்னிதற் குற்ற தென்பா னமைச்சரை யிகழ்ந்து நோக்க
முன்னுற நிகழ்ந்த வெல்லா மறிந்துளான் முதிர்ந்த கேள்வித்
தொன்னெறி யமைச்சன் மன்னன் றாளிணை தொழுதுசொல்வான்

வளவநின் புதல்வ னாங்கோர் மணிநெடுந் தோமே லேறி
யளவிறோ தானை சூழ வரசுலாந் தெருவிற் போங்கா
லிளையவான் கன்று தேர்க்கா லிடைப்புகுந் திறந்த தாகத்
தளர்வுறு மித்தாய் வந்து விளைத்ததித் தன்மை யென்றான் (௩௧)

அவ்வுரை கேட்ட வேந்த னாவுறு துயர மெய்தி
வெவ்விடந் தலைக்கொண் டாற்போல் வேதனை யகத்து மிக்கிங்
கிவ்வினை விளைந்த வாறென் றிடருறு மிரங்கு மேங்குஞ்
செவ்விதென் செங்கோ லென்னுந் தெருமருந் தெளியுந் தேறான்

மன்னுயிர் புரந்து வையம் பொதுக்கடிந் தறத்தி னீடு
மென்னெறி நன்றா லென்னு மென்செய்தாற் றீரு மென்னுந்
தன்னிளங் கன்று காணாத் தாய்முகங் கண்டு சோரு
மந்நிலை யரச னுற்ற துயரமோ ரளவிற் றன்றால் (௩௩)

(உஎ) வீய - இறக்க. நெருப்பு உயிர்த்து - நெருப்பெழும்படியாகப் பெருமூச்சு விட்டு. கோட்டினால் புடைத்தது - கொம்பினால் அடித்தது. (உஅ) மறலி ஊர்தி - யமனது வாகனமாகிய எருமைக்கடா. (உகூ) அரியணை இழிந்து - சிங்காசனத்தைவிட்டு இறங்கி. பூங்கொடி - பொலிவினையுடைய கொடி. பலவித பூக்களை யெழுதியுள்ள கொடி எனினுமமையும். காவலர் - வாயில்காப்போர். துளக்கியது - அசைத்தது (௩0) அமைச்சனை - மந்திரியை (௩௧) வளவ - சோழனே (௩௨) செவ்விது - அழகாயிருக்கின்றது. தெருமரும் - கலங்குவார். (௩௩) பொதுக்கடிந்து - பகைவர்களுக்குப் பொதுவாயிருத்தலினின்றும் நீக்கித் தனதாக்கி

வேறு

மந்திரிக ளதுகண்டு மன்னவனை யடிவணங்கிச்
சிந்தைதளர்ந் தருளுவது மற்றிதற்குத் தீர்வன்றால்
கொந்தலர்தார் மைந்தனைமுன் கோவதைசெய் தார்க்குமறை
யந்தணர்கள் விதித்தமுறை வழிநிறுத்த லறமென்றார். (௩௪)

வழக்கென்று நீர்மொழிந்தால் மற்றதுதான் வலிப்பட்டுக்
குழக்கன்றை யிழந்தலறுங் கோவுறுநோய் மருந்தாமோ
இழக்கின்றேன் மைந்தனையென் றெல்லீருஞ் சொல்லியவிச்
சழக்கின்று நானிசைந்தாற் றருமந்தான் சலியாதோ (௩௫)

மாநிலங்கா வலனாவான் மன்னுயிர்காக் குங்காலைத்
தானதனுக் கிடையூறு தன்னாற்றன் பரிசனத்தால்
ஊனமிகு பகைத்திறத்தாற் கள்வரா லுயிர்தம்மால்
ஆனபய மைந்துந்தீர்த் தறங்காப்பா னல்லனோ (௩௬)

என்மகன்செய் பாதகத்துக் கிருந்தவங்கள் செயவிசைந்தே
யன்னியனோ ருயிர்கொன்றா லவனைக்கொல் வேனானாற்
றொன்மனுநூற் றொடைமனுவாற் றுடைப்புண்ட தெனும்வார்த்தை
மன்னுலகிற் பெறமொழிந்தீர் மந்திரிகள் வழக்கென்றான் (௩௭)

என்றரச னிகழ்ந்துரைப்ப வெதிர்நின்ற மதியமைச்சர்
நின்றநெறி யுலகின்க ணிதுபோன்முன் னிகழ்ந்ததாற்
பொன்றுவித்தன் மரபன்று மறைமொழிந்த வறம்புரிதல்
சென்றுதொடு நெறியன்றோ தொன்னிலங்கா வலவென்றார். (௩௮)

அவ்வண்ணந் தொழுதுரைத்த வமைச்சர்களை முகநோக்கி
மெய்வண்ணந் தெரிந்துணர்ந்த மனுவென்னு நிறல்வேந்தன்
இவ்வண்ணம் பழுதுரைத்தீ ரென்றெரியி னிடைத்தோய்ந்த
செவ்வண்ணக் கமலம்போன் முகம்புலர்ந்து செயிர்த்துரைப்பான்

அவ்வுரையில் வருநெறிக ளவைநிற்க வறநெறியின்
செவ்வியவுண் மைத்திறநீர் சிந்தைசெயா துரைக்கின்றீர்
எவ்வுலகி லெப்பெற்ற மிப்பெற்றித் தாமிடரால்
வெவ்வுயிர்த்துக் கதறிமணி யெறிந்துவிழுந் ததுவிளம்பீர். (௪௰)

போற்றிசைத்துப் புரந்தரன்மா லயன்முதலோர் புகழ்ந்திறைஞ்ச
வீற்றிருந்த பெருமானார் மேவியுறை திருவாரூர்த்

(௩௪) தீர்வு - பரிகாரம். கொந்து அலர் தார் - கொத்துக்களையுடைய பூமாலை (௩௫) குழக்கன்றை - இளங்கன்றை (௩௭) துடைப்புண்டது - கெட்டது, அழிந்தது. (௩௮) பொன்றுவித்தல் - இறக்கச் செய்தல் (௩௯) எரியினிடை - நெருப்பினிடத்து புலர்ந்து - வாடி செயிர்த்து - கோபித்து. (௪௰) எப்பெற்றம் - எந்தப் பசு. வெவ்வுயிர்த்து - பெருமூச்சுவிட்டு. எறிந்து - அடித்து.

தோற்றமுடை யுயிர்கொன்ற ளதலினாற் றணிபொருடான்
ஆற்றவுமற் றவற்கொல்லு மதுவேயா மெனநினைமின். (௪௧)

எனமொழிந்து மற்றிதனுக் கினியிதுவே செயலிவ்வான்
மனமழியுந் துயரகற்ற மாட்டாதேன் வருந்துமிது
தனதுறுபே ரிடர்யானுந் தாங்குவதே கருமமென
அனகனரும் பொருடுணிந்தா னமைச்சருமஞ் சினாகன்றார் (௪௨)

மன்னவன்றன் மைந்தனையங் கழைத்தொருமந் திரிதன்னை
முன்னிவனை யவ்வீதி முரண்டேர்க்கா லூர்கவென
அன்னவனு மதுசெய்யா தகன்றுதன்னு ருயிர்துறப்பத
தன்னுடைய குலமகனைத் தான்கொண்டு மறுகணைந்தான் (௪௩)

ஒருமைந்தன் றன்குலத்துக் குள்ளானென் பதுமுணரான்
றருமந்தன் வழிச்செல்கை கடனென்று தன்மைந்தன்
மருமந்தன் றேராழி யுறவூர்ந்தான் மனுவேந்தன்
அருமந்த வரசாட்சி யாரிதோமற் றெளிதோதான் (௪௪)

தண்ணளிவெண் குடைவேந்தன் செயல்கண்டு தரியாது
மண்ணவர்கண் மழைபொழிந்தார் வானவர்பூ மழைசொரிந்தார்
அண்ணலவன் கண்ணெதிரே யணிவீதி மழவிடைமேல்
விண்ணவர்க டொழநின்றான் வீதிவிடங் கப்பெருமான் (௪௫)

சடைமருங்கி லிளம்பிறையுந் தனிவிழிக்குந் திருநுதலும்
இடமருங்கி லுமையாளு மெம்மருங்கும் பூதகணம்
புடைநெருங்கும் பெருமையுமுன் கண்டரசன் போற்றிசைப்ப
விடைமருவும் பெருமானும் விறல்வேந்தற் கருள்கொடுத்தான். ()

அந்நிலையே யுயிர்பிரிந்த வான்கன்று மவ்வரசன்
மன்னுரிமைத் தனிக்கன்று மந்திரியு முடனெழலும்
இன்னபரி சானுனென் றறிந்திலன்வேந் தனும்யார்க்கு
முன்னவனே, முன்னின்றான் முடியாத பொருளுளதோ. (௪எ)

(௪௧) வீற்றிருந்த - (கயிலையில்) வீற்றிருந்தருளும். (௪௨) இவ்வான் - இப்பசு. அனகனரும் - அம்மனுநீதிச்சோழனும். (௪௩) உயிர்துறப்ப - உயிர்விட. மறுகு - தெருவு. (௪௪) தருமந்தன் வழிச்செல்கை - அறத்தினவழியே நடப்பது. மருமம் - மார்பு. ஆழியுற - சக்கரம் பொருந்த. அருமந்த - தேவாமிர்தத்தைப்போலும். (௪௫) அளி - கிருபை. மண்ணவர் - நிலவுலகத்தார். கண்மழை பொழிந்தார் - கண்ணீரைச் சொரிந்தார்கள். அண்ணல் அவன் - பெருமையிற் சிறந்த சோழன். மழவிடை - இளமையுடைய இடபம். விடங்கப்பெருமான் - உளிபடாத கடவுள். வீதிவிடங்கப் பெருமானுடைய அண்ணல் எனக்கூட்டியுரைப்பினும் பொருந்தும். (௪எ) அந்நிலையே - காட்சிகொடுத்தபொழுதே. தனிக்கன்றும் - ஒப்பற்ற புதல்வனும். முன்னவனே - சிவபிரானே

அடிபணிந்த திருமகனை யாகமுற வெடுத்தணைத்து
நெடிதுமகிழ்ந் தருந்துயர நீங்கினு னிலவேந்தன்
மடிசுரந்து பொழிதீம்பால் வருங்கன்று மகிழ்ந்துண்டு
படிநனைய வரும்பசுவும் பருவரனீங் கியதன்றே (௪௮)

பொன்றயங்கு மதிலாரூர்ப் பூங்கோயி லமர்ந்தபிரான்
வென்றிமனு வேந்தனுக்கு வீதியிலே யருள்கொடுத்துச்
சென்றருளும் பெருங்கருணைத் திறங்கண்டு தன்னடியார்க்
கென்றுமெளி வரும்பெருமை யேழுலகு மெடுத்தேத்தும். (௪௯)

இனையவகை யறநெறியி லெண்ணிறந்தோர்க் கருள்புரிந்து
முனைவரவர் மகிழ்ந்தருளப் பெற்றுடைய மூதூர்மேற்
புனையுமுரை நம்மளவிற் புகலலாந் தகைமையதோ
அனையதனுக் ககமலரா மறவனூர் பூங்கோயில் (௫௦)

## திருவாரூர்ச்சிறப்பு முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ௧௨௫



அகத்தியமுனிவருடைய கமண்டலத்தினின்றும் நதியுருவாகப் பெருக்கெடுத்து வெளிவந்த புண்ணியதீர்த்தமாகிய காவிரிநதியையுடைய சோழநாட்டிலே, பழமையில் மிக்கதாயும், இலக்குமியினால் பூசிக்கப்பட்டதாயும், சூரியகுல மன்னர்களாகிய சோழவேந்தர்களுக்குரிய இராஜதானியாயும் உள்ளது திருவாரூரென்னுந் திருநகரம் அத்திருநகருக்கு அரசரும், அநபாயச்சோழமகாராஜாவின் குலத்திற்கு முதல்வருமாகிய மனுநீதிகண்டசோழரென்னுந் திருப்பெயருடைய ஓர் மன்னர்பெருமான் இருந்தனர் அவர் எல்லாவுயிர்கட்கும் கண்ணும் உயிரும்போன்றவர்; தேவர்கள் மகிழும்படியாகப் பலயாகங்களைச் செய்தவர்; வன்மீகப் பெருமானுர்க்குப் பூசை முதலியனவற்றைச் சிவாகமவிதிப்படி நடத்துபவர்

அவ்வரசர்கோமான் நீதியரசியற்றுநாளிலே, அவர்க்கோர் பெருந்தவப் புதல்வன் பிறந்தனன் அவன் பல கலைஞானங்களையும், வேதவேதாந்த ஞானங்களையும் ஓதியுணர்ந்து, குதிரை யேற்றம், யானை யேற்றம், தேரூர்தல், வில்வித்தை முதலியவைகளினும் பயின்று, அரசிளம் பருவத்தை யடையும் பக்குவத்தை யுடையனாய் வாழுங்கால், ஓர்நாள் அரண்மனையினின்றும் இராஜகுமாரர்களும், சேனைகளுந் தன்னைச்சூழ்ந்துவரத் தேரிலேறிப் பவனி வந்தான் அச்சமையத்தில் ஒருபசுவின் இளங்கன்றானது துள்ளியோடி அத்தேர்ச் சக்கரத்தினடியில் அகப்பட்டு இறந்தது. அக்கன்றின் தாய்ப்பசு நிகழ்ந்ததைக்கண்டு, அவ்விடத்திற்கு ஓடிவந்து, மனங்கலங்கி, அலறி, சோர்ந்து, நடுங்கி, கீழேவிழுந்தது. அதுகண்ட அரசிளங்குமரனும் வாய்தடுமாறி, அறிவழிந்து, தேரினின்றுங் கீழேவிழுந்து, தாய்ப்பசுவைப்பார்த்துச் சோர்வான்; கன்றைப்பார்த்துக் கண்ணீர்விடுவான்; "நீதியரசியற்றி மனுஎன்

(௪௮) ஆகம் - மார்பிற்பொருந்த. படி - பூமி. பருவரல் - துன்பம். (௫௦) முனைவர் - சிவபெருமான். மூதூர் - பழய திருவாரூர். அறவனூர்-அரன். பூங்கோயில் - கமலாலயம்; திருவாரூர் ஆலயத்தின் திருப்பெயர்

னும் நாமத்தைத்தாங்கும் என் தந்தைக்கு இத்தகைய பழி சுமத்துவதற்கோ யான் பிள்ளையாய்ப் பிறந்தேன்" என்று வருந்துவான் "இப்பெரும்பாவத்திற்குப் பிராயச்சித்தம் உளதாயின், என் தந்தை அறியுமுன்னமே அந்தணர்களைக்கொண்டு, அவர் விதிக்கும்வண்ணம் செய்துகொள்ளல் வேண்டும்" என்று உன்னி பிராமணர்களிடத்திற்குச் சென்றான்

கன்றை இழந்தபசு பெருமூச்சுவிட்டு, முகத்தில் கண்ணீர் தாரைதாரையாயொழுக, மன்னுயிர்களைத் தன்னுயிர்போற் காக்கும் மனுச்சோழ மன்னவரின் அரமனைக்குச்சென்று, அம்மனைவாயிலில் கட்டியிருந்த ஆராய்ச்சி மணியைத் தன்கொம்பினால் அடித்தது அம்மணி யோசையைக்கேட்ட மன்னர்கோமான் சிங்காசனத்தை விட்டிழிந்து, வாயிலையடைந்தனர். அங்கிருந்த காவலாளர்கள் வணங்கி "நாயகரே! இங்கே ஓர்பசு ஆராய்ச்சிமணியையடித்தது" என்று சொன்னார்கள் அரசன் "இப்பசுவிற்கு நேர்ந்த இடையூறென்னை?" என்றுகோபித்து மந்திரிமார்களை நோக்க, அவர்களுள் ஒருவர் "கருணைக்கோவே! தேவரீர் திருப்புதல்வன் தேரேறி வீதியிற் சென்றகாலை, இக்கோவின்கன்று தேர்ச்சக்கரத்தின் கீழ்ப்பட்டு இன்னுயிர் துறந்தது. அதன் தாயாகிய இப்பசு இங்குவந்து மணியையடித்தது" என்று கூறினார் அதைக்கேட்ட சோழமகாராஜர் இடிகேட்ட சாப்பம்போல் மனநடுங்கி, "என் அரசாட்சிமுறை நன்றாயிருக்கின்றது" என்பார்; "என்னபரிகாரஞ் செய்தால் இப்பழிநீங்கும்" என்பார்; பசுவைப்பார்த்து ஏங்குவார்; இரங்குவார் இங்ஙனந் துயரமுறும்வேந்தரை மந்திரிகள்பார்த்து, "அரசே! நீர் சிந்தைதளர்வது இப்பழிக்குப் பரிகாரமாகாது. வேதங்களையுணர்ந்த பிராமணர்களைக்கொண்டு பிராயச்சித்தஞ் செய்வதே நீதி" என்றார்கள் அதற்கு அரசர் "அமைச்சர்களே! நீங்கள் கூறும்பிராயச்சித்தம் கன்றையிழந்தலறும் இப்பசுவின்நோய்க்கு மருந்தாமோ? நான் என்னொரு புதல்வனை இழக்கின்றேன் உங்கள் வார்த்தைக்கு நான் இசைந்தேனாயின், தருமதேவதை சலியாதோ? உயிர்களுக்குத் தன்னாலாவது, பரிசனங்களாலாவது, பகைவர்களாலாவது, கள்வர்களாலாவது, பிறவுயிர்களாலாவது விளையும் ஐந்து பயத்தையுந்தீர்த்து, அறத்தைக் காப்பவனன்றோ அரசன் என்புத்திரன்பொருட்டு நான் பிராயச்சித்தஞ் செய்யவுடன்பட்டு, அன்னியனொருவன் ஒருயிரைக்கொன்றால், அவனைக்கொலை செய்வேனாயின், பூர்வத்திலே மனுஎன்பவர்செய்த நீதிநூலவிதி மனுஎன்னுஞ் சோழனால் நீக்கப்பட்டது என்னும் பழிமொழிஉலகத்தில் என்றும் வழங்காதோ. மந்திரிகள் வழக்கப்படி மொழிந்தீர்கள்" என்று இயம்பினார். மந்திரிகள் மன்னரைப்பார்த்து "இதுபோல முன்னும் நிகழ்ந்துள்ளது; இது காரணமாகப் புத்திரனைக்கொல்லுதல் முறைமையல்ல. பிராயச்சித்தஞ் செய்தலே நீதி" என்று மொழிந்தார்கள். அதைக்கேட்ட சோழர்பெருமான் "நீங்கள் அறநூலின் உண்மையை யொருசிறிதுஞ் சிந்தியாது பேசுகின்றீர்கள் எவ்வுலகில் எப்பசு இத்தகைய துன்பத்தினால் ஆராய்ச்சிமணியையடித்தது? என் மகன் தியாகேசர் எழுந்தருளியுள்ள திருவாரூரிலே பிறந்தஉயிரைக் கொன்றனனே. அவனைக்கொல்லுதலே தகுந்தபிராயச்சித்தம் இப்பசு தன்கன்றையிழந்து வருந்துவதைப்போல யானும் என்புத்திரனையிழந்து வருந்துவதே முறை" என்றுகூறி, அவ்வரியசெய்கையைச் செய்யத்துணிந்தார். அதையுணர்ந்த மந்திரிகள் அஞ்சி தூரத்திற் சென்றார்கள்

மனுநீதிகண்ட சோழர் தம்புத்திரனை அங்கு வரவழைத்து, ஒருமந்திரியை நோக்கி "இப்புத்திரனைக் கன்றிறந்த வீதியிலே தேர்க்காலிலிட்டுத் தேரை நடத்தக்கடவை" என்று ஆஞ்ஞாபிக்க, அமைச்சர் அப்படி செய்ய

மனமில்லாதவராய், அவ்விடத்தி னின்றும் அகன்று தம்முயிரை மாய்த்துக் கொண்டார் அதையறிந்த அரசர் பெருமான் தம்முடைய குலமகனைத் தாமே பசுவின் கன்றிறந்த வீதிக்கு அழைத்துக் கொண்டுபோய், தங்குலத்திற்கு ஒருமைந்தனே உளன் என்பதைக் கவனியாது, தருமவழி நடப்பதே முறைமை என்றுகருதி, அருமைப் புத்திரனைக் கீழேகிடத்தி, அவன் மார்பில் தேரச் சக்கரமானது பொருந்தி அழுந்தும்படி தேரை நடத்தினர். இச்செயற்கரிய செய்கையைக் கண்ட மண்ணுலகத்தார் கண் மழை பொழிந்தார்கள்; விண்ணுலகத்தார் பூமாரி சொரிந்தார்கள் பிறவித் துன்பத்தை யொழித்த சோழர் பெருமான் முன்பாக கணங்கள்சூழ மழ விடைமேல் வீதிவிடங்கப்பெருமான் காட்சிகொடுத்தருளினர் சோழமகா ராசர் சந்திரசேகரரைப்பணிந்து, ஆனந்தவாரிதியிற் றிளைத்தனர் அப்பொழுதே பசுக்கன்றும், அரசிளங் குமரனும், மந்திரியும் உயிர் பெற்றெழுந்தார்கள். சோழமன்னர் ஆனந்தவுருவாகித் தம்மை வணங்கிய புதல்வனை மார்பி லணைத்து வரம்பிலா மகிழ்வெய்தினர் பசு, தன்மடி பொழிகின்ற பாலை உயிர்பெற்றெழுந்த கன்று உண்பதைக்கண்டு, துன்பத்தை யொழித்தது சிவபெருமானும் சோழர்க்குத் திருவருள் புரிந்து கரந்தனர்

இங்ஙனம் தருமவழி நின்று ஒழுகும் மெய்யன்பர்கட்கு விளையுந் துன்பங்களைக்களைந்து, திருவருள்புரியுந் தியாகேசப்பெருமான் எழுந்தருளியுள்ள திருவாரூரின் பெருமை எம்மால் அளவிடற் பாலதோ? அத்திரு நகரினுக்கு வன்மீகப் பெருமான் பூங்கோயில் இதயகமலம்போ லிருக்கின்றது



## திருக்கூட்டச்சிறப்பு.



பூத நாயகர் புற்றிடங் கொண்டவர்
ஆதி தேவ ரமர்ந்தபூங் கோயிலிற்
சோதி மாமணி நீள்சுடர் முன்றிலசூழ்
மூதெ யிற்றிரு வாயின்முன் ளுயது (௧)

பூவார் திசைமுக னிந்திரன் பூமிசை
மாவா ழகலத்து மான்முத லானவர்
ஓவா தெவரு நிறைந்துறைந் துள்ளது
*தேவா சிரிய னெனுந்திருக் காவணம். (௨)

அரந்தை தீர்க்கு மடியவர் மேனிமேல்
நிரந்த நீற்றொளி யானிறை தூய்மையாற்

(௧) முன்றில்-திருமுற்றம் மூதெயில் - பழயமதிலகள் (௨) மாவாழ் அகலத்து மால - இலக்குமி வாழும் மார்பினையுடைய விஷ்ணு. ஓவாது-நீங்காது தேவாசிரியன்- தேவாசிரியனெனனும் பெயருடைய காவணம் - மண்டபம

* தேவாசிரியன - ஆயிரக்கானமண்டபம விண்டுவாதி தேவர்கள் விமலன திருவருளைப் பெற்றுய்ய வந்துசேர்தற்கிடமாகலின் தேவாசிரியமண்டபம எனறாயிற்று.

புரந்த வஞ்செழுத் தோசை பொலிதலாற்
பரந்த வாயிரம் பாற்கடல் போல்வது. (௩)

அகில காரணர் தாள்பணி வார்கடாம்
அகில லோகமு மாடற் குரியரென்
றகில லோகத்து ளார்க ளடைதலின்
அகில லோகமும் போல்வ ததனிடை (௪)

அத்தர் வேண்டிமுன னாண்டவ ரன்பினன்
மெய்த்த மைந்து விதிர்ப்புறு சிந்தையார்
கைத்தி ருத்தொண்டு செய்கடப் பாட்டினார்
இத்தி றத்தவ ரன்றியு மெண்ணிலார் (௫)

மாசி லாத மணிதிகழ் மேனிமேற்
பூசு நீறுபோ லுள்ளும் புனிதர்கள்
தேசி னாலெத் திசையும் விளக்கினார்
பேச வொண்ணாப் பெருமை பிறங்கினார். (௬)

பூத மைந்து நிலையிற் கலங்கினும்
மாதொர் பாகர் மலர்த்தாள் மறப்பிலார்
ஓது காத லுறைப்பி னெறிநின்றார்
கோதி லாத குணப்பெருங் குன்றனார் (௭)

கேடு மாக்கமுங் கெட்ட திருவினார்
ஓடுஞ் செம்பொனு மொக்கவே நோக்குவார்
கூடு மன்பினிற் கும்பிட லேயன்றி
வீடும் வேண்டா விறலின் விளங்கினார் (௮)

ஆரங் கண்டிகை யாடையுங் கந்தையே
பார மீசன் பணியல தொன்றிலார்
ஈர வன்பினர் யாதுங் குறைவிலார்
வீர மென்னால் விளம்புந் தகையதோ (௯)

வேண்டு மாறு விருப்புறும் வேடத்தர்
தாண்ட வப்பெரு மான்றனித் தொண்டர்கள்

(௩) அரந்தை - துன்பத்தை. புரந்த - காப்பாற்றுதற்குரிய (௪) ஆடற்கு-ஆளுதற்கு (௬) தேசினால்-ஞானவொளியால். பிறங்கினார் - விளங்கினார். (௮) கேடும் ஆக்கமும் - பொருளிழத்தலால் விளையுமநஷ்டத்தையும், பொருள்வளர்தலால் நேரும் இலாபத்தையும் வீடும் - முத்தியையும். (௰) வேண்டுமாறு விருப்புறும் வேடத்தர் - அன்பர்கள் பொருட்டுத் தாம் விரும்புகின்ற வண்ணம் பலவேடங்களைத் தாங்குஞ் சிவபிரானைத் தத்தமக்குவேண்டிய படியே விரும்பித் தரித்துக்கொள்ளுகின்ற திருவேடங்களையுடையவர் என்று அடியவர்களுக்கு விசேடணமாகக் கூறுவருமுளர்

ணீண்ட தொல்புக ழார்தந் நிலைமையை
ஈண்டு வாழ்த்துகே னென்னறிந் தேத்துகேன் (௧௦)

இந்த மாதவர் கூட்டத்தை யெம்பிரான்
அந்த மில்புக ழாலால சுந்தரன்
சுந்த ரத்திருத் தொண்டத் தொகைத்தமிழ்
வந்து பாடிய வண்ண முரைசெய்வாம் (௧௧)

திருக்கூட்டச்சிறப்பு முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ௧௪௬



பூதநாயகரும், புற்றிடங்கொண்ட வருமாகிய தியாகேசப்பெருமான் வீற்றிருந்தருளுந் திருவாரூர்ப் பூங்கோயிலிலே,தேவாசிரியனென்னுந் திருப்பெயருடைய ஆயிரக்கால மண்டபம் ஒன்று உளது. அம்மண்டபத்தினிடத்திலே அரிபிரமாதி தேவர்கள் என்றும் நிறைந்திருப்பார்கள்; கண்டிகை விளங்குகின்ற திருமேனியின்மேல் பூசுந் திருநீற்றைப்போல உள்ளத்திலும் பரிசுத்தமுடையவர்களும், சிவஞானப் பிரகாசத்தால் எல்லா திசைகளையும் விளக்கினவர்களும், பஞ்சபூதங்களும் தத்தம் நிலைகலங்கினும், பார்வதி பாகரது திருவடிகளை மறவாதவர்களும், அன்புருவாய் நின்றவர்களும், குணத்தில் மலையை ஒத்தவர்களும், இன்பதுன்பங்களை ஒழித்தவர்களும், ஓட்டையும், பொன்னையும் ஒக்கவே நோக்குவார்களும், பேரன்பினால் சிவபிரானை வணங்குதலையன்றி மோக்ஷ இன்பத்தையுங் கருதாதவர்களும், கண்டிகையையே ஆரமாகவும், கந்தையையே வஸ்திரமாகவும், இறைபணி நிற்றலையே பெரும்பணியாகவுங் கொண்டுள்ளவர்களும் அத்திருக்காவணத்தில் வீற்றிருப்பார்கள் அன்னவர்கள் அருட்டன்மையை எங்ஙனம் எடுத்துத் துதிக்கவல்லேம்? ஆயினும் எம்மை அடிமையாகவுடைய ஆலாலசுந்தரர், திருக்கயிலையினின்றுந் தென்திசையில் திருவவதாரஞ் செய்து, இம்மாதவர் திருக்கூட்டத்தைத் தரிசித்துத் திருத்தொண்டத் தொகையைத் திருவாய்மலர்ந்தருளிய வண்ணம் உரைசெய்வாம்.



# தடுத்தாட்கொண்ட புராணம்.



கங்கையு மதியும் பாம்புங் கடுக்கையு முடிமேல் வைத்த
அங்கண ரோலை காட்டி யாண்டவர் தமக்கு நாடு
மங்கையர் வதன சீத மதியிரு மருங்கு மோடிச்
செங்கயல் குழைக ளோடுந் திருமுனைப் பாடி நாடு (க)

பெருகிய வளத்தான் மிக்க பெருந்திரு நாடு தன்னில்
அருமறைச் சைவ மோங்க வருளினா லவத ரித்த
மருவிய தவத்தான் மிக்க வளம்பதி வாய்மை குன்றாத்
திருமறை யவர்க ணீடுந் திருநாவ லூரா மன்றே (உ)

மாதொரு பாக னார்க்கு வழிவழி யடிமை செய்யும்
வேதியர் குலத்துட் டோன்றி மேம்படு சடைய னாருக்
கேதமில் கற்பின் வாழ்க்கை மனையிசை ஞானி யார்பாற்
றீதகன் றுலக முய்யத் திருவவ தாரஞ் செய்தார் (௩)

தம்பிரா னருளி னாலே தவத்தினான் மிக்கோர் போற்றும்
நம்பியா ரூர ரென்றே நாமமுஞ் சாற்றி மிக்க
ஐம்படைச் சதங்கை சாத்தி யணிமணிச் சுட்டி சாத்திச்
செம்பொனா ணரையின் மின்னத் தெருவிற்றே ருருட்டு நாளில் (௪)

நரசிங்க முனைய ரென்னு நாடுவா ழரசர் கண்டு
பரவருங் காதல் கூரப் பயந்தவர் தம்பாற் சென்று
விரவிய நண்பி னாலே வேண்டினர் பெற்றுத் தங்கள்
அரசிளங் குமரற் கேற்ப வன்பினான் மகன்மை கொண்டார் (ரு)

பெருமைசா லரசர் காதற் பிள்ளையாய்ப் பின்னுந் தங்கள்
வருமுறை மரபின் வைகி வளர்ந்துமங் கலஞ்செய் கோலத்
தருமறை முந்நூல் சாத்தி யளவினூல் கலைக ளாய்ந்து
திருமலி சிறப்பி னோங்கிச் சீர்மணப் பருவஞ் சேர்ந்தார் (சு)

(க) கடுக்கையும் - கொன்றைப்பூமாலையும். அங்கணர் - சிவபிரான். வதனசீதமதி - முகமாகிய குளிர்ச்சி பொருந்திய சந்திரனுடைய. இருமருங்கும் - இரண்டுபக்கங்களினும். செங்கயல் ஓடி - கண்களாகிய கயல்மீன்கள் தாவி. குழைகள் - காதுகள். (உ) அருமறைச் சைவம் - வேதசாரமாய சைவம். மருவிய - மேன்மைபொருந்திய. (௩) வாழ்க்கை - இல்வாழ்க்கை. (௪) தம்பிரான் - சிவபிரான். ஐம்படை - குழந்தைகளைத் துஷ்டதேவதைகளினின்றுங் காத்தற் பொருட்டு நாராயணமூர்த்தியின் சங்கு சக்கரம் கதை கட்கம் கோதண்டமென்னும் ஐந்தாயுதங்களின் வடிவாய்ச்செய்து, அவர்களின் மார்பிற் கோத்தணியும் ஓராபரணம். (ரு) பரவரும் - சொல்லுதற்கரிய. காதல்கூர - ஆசை மிகுதியால். (சு) காதற்பிள்ளை - அபிமான புத்திரர். தங்கள் வருமரபில் வைகலாவது, ஆதிசைவர்களிடத்தன்றி மறையோரிடத்தில் புசியாமை முதலியன. முந்நூல் - பூணூல்.

தந்தையார் சடைய னாரத் தனிததிரு மகற்குச் சைவ
அந்தணர் குலத்துட் டங்க ளரும்பெரு மரபுக் கேற்ப
வந்ததொல் சிறப்பிற் புத்தூர்ச் சடங்கவி மறையோன் றன்பாற்
செந்திரு வனைய கன்னி மணத்திறஞ் செப்பி விட்டார். (எ)

குலமுத லறிவின் மிக்கார் கோத்திர முறையுந் தேர்ந்தார்
நலமிகு முதியோர் சொல்லச் சடங்கவி நன்மை யேற்று
மலர்தரு முகத்த னாகி மணம்புரி செயலின் வாய்மை
பலவுடன் பேசி யொத்த பண்பினா லன்பு நேர்ந்தான். (அ)

மற்றவ னிசைந்த வார்த்தை கேட்டவர் வள்ள றன்னைப்
பெற்றவர் தம்பாற் சென்று சொன்னபின் பெருகு சிந்தை
யுற்றதோர் மகிழ்ச்சி யெய்தி மணவினை யுவந்து சாற்றிக்
கொற்றவர் திருவுக் கேற்பக் குறித்தநா ளோலை விட்டார். (கூ)

மங்கலம் பொலியச் செய்த மணவினை யோலை யேந்தி
யங்கயற் கண்ணி னாரு மாடவர் பலரு மீண்டிக்
கொங்கலர்ச் சோலை மூதூர் குறுகினா ரெதிரே வந்து
பங்கய வதனி மாரு மைந்தரும் பணிந்து கொண்டார். (க0)

மகிழ்ச்சியான் மணமீக் கூறி மங்கல வினைக ளெல்லாம்
புகழ்ச்சியாற் பொலிந்து தோன்றப் போற்றிய தொழில ராகி
யிகழ்ச்சியொன் றானு மின்றி யேந்துபூ மாலைப் பந்தர்
நிகழ்ச்சியின் மைந்த ரீண்டி நீணிலை சாத்தி னார்கள். (கக)

மணவினைக் கமைந்த செய்கை மாதினைப் பயந்தார் செய்யத்
துணர்மலர்க் கோதைத் தாமச் சுரும்பணை தோளி னானைப்
புணர்மணத் திருநா ளுன்னாட் பொருந்திய விதியி னாலே
பணைமுர சியம்ப வாழ்த்திப் பைம்பொனாண் காப்புச் சேர்த்தார். (கஉ)

மாமறை விதிவ ழாமல் மணத்துறைக் கடன்க ளாற்றித்
தூமறை மூதூர்க் கங்குன் மங்கலந் துவன்றி யார்ப்பத்
தேமரு தொடையன் மார்பன் றிருமணக் கோலங் காணக்
காமுறு மனத்தான் போலக் கதிரவ னுதயஞ் செய்தான். (கங)

(கூ) வள்ளல் - நம்பியாரூரர். கொற்றவர் திருவுக்கு ஏற்ப - அரசராகிய நரசிங்க முனையர் செல்வத்திற்கு இசைய. (க0) அங்கயல் கண்ணினார் - மாதர்கள். ஆடவர் - புருஷர்கள். ஈண்டி - ஒருங்குசேர்ந்து. மூதூர் - புத்தூர். பங்கயவதனிமார் - தாமரை போன்ற முகத்தையுடைய பெண்கள். (கஉ) சுரும்பணை - வண்டுகள் மொய்க்கின்ற துணர் மலர்க் கோதைத் தாமத்தோளினானை - கொத்தாகிய மலர்மாலை யணிந்த நம்பியாரூரரை. பணை - பருத்த. (கங) மூதூர் - திருநாவலூர். கங்குல் - இரவில். மங்கலம் துவன்றி ஆர்ப்ப - மங்கலவாத்தியங்கள் சேர்ந்து முழங்க. தேமருதொடையல் மார்பன் - தேன்பொருந்திய மாலையை யணிந்த மார்பையுடைய நம்பியாரூரர். காமுறு - ஆசைகொண்ட. கதிரவன் - சூரியன்.

காலைசெய் வினைகண் முற்றிக் கணிதநூற் புலவர் சொன்ன
வேலைவந் தணையு முன்னா விதிமணக் கோலங் கொள்வா
னூலசைந் திலங்கு மார்பி னுணங்கிய கேள்வி மேலோன்
மாலையுந் தாரும் பொங்க மஞ்சனச் சாலை புக்கான் (கச)

வாசநெய் யூட்டி மிக்க மலர்விரை யடுத்த தூநீர்ப்
பாசனத் தமைந்த பாங்கர்ப் பருமணிப் பைம்பொற் றிண்கால்
ஆசனத் தணிநீ ராட்டி யரிசனஞ் சாத்தி யன்பால்
ஈசனுக் கினியார் மேனி யெழில்பெற விளக்கி னார்கள் (கரு)

அகில்விரைத் தூப மேய்ந்த வணிகொள்பட் டாடை சாத்தி
முகினுழை மதியம் போலக் கைவலான் முன்கை சூழ்ந்த
துகிலொடு குஞ்சி யீரம் புலர்த்தித்தன் றூய செங்கை
யுகிர்நுதி முறையிற் போக்கி யொளிநறுஞ் சிகழி யார்த்தான் (கசு)

தூநறும் பசுங்கர்ப் பூரச் சுண்ணத்தால் வண்ணப் போதில்
ஆனதண் பனிநீர் கூட்டி யமைத்தசந் தனச்சே றாட்டி
மான்மதச் சாந்து தோய்ந்த மங்கலக் கலவை சாத்திப்
பான்மறை முந்நூன் மின்னப் பவித்திரஞ் சிறந்த கையான் (கஎ)

தூமலர்ப் பிணையன் மாலை துணைநறுங் கண்ணி கோதை
தாமமென் றினைய வேறு தகுதியா லமையச் சாத்தி
மாமணி யணிந்த தூய வளரொளி யிருள்கால் சீக்கு
நாமநீள் கலன்கள் சாத்தி நன்மணக் கோலங் கொண்டான் (கஅ)

மன்னவர் திருவுந் தங்கள் வைதிகத் திருவும் பொங்க
நன்னகர் விழவு கொள்ள நம்பியா ரூரர் நாதன்
றன்னடி மனத்துட் கொண்டு தகுந்திரு நீறு சாத்திப்
பொன்னணி மணியார் யோகப் புரவிமேற் கொண்டு போந்தார் (ககூ)

(கச) வேலை - முகூர்த்தகாலம். உணங்கிய - நுட்பமான. மாலையும் - இரத்தின மாலையும். தாரும் - பூமாலையும். (கரு) விரை - வாசனை. பாசனத்து - பாத்திரத்தின். திண்கால் - வலியகால்களையுடைய. அரிசனம் - மஞ்சள்கலந்த கலவைப்பொடி. எழில் பெற - அழகுண்டாக. (கசு) கைவலான் - அலங்கரிப்பதில் கைதேர்ந்தவன். முன்கை சூழ்ந்த துகில் - முன்கையிற் சுற்றிய ஆடையால். குஞ்சி - குடுமி. உகிர்நுதி-நகநுனி. சிகழி ஆர்த்தான் - குடுமியைமுடித்தான். (கஎ) சுண்ணத்தால் - பொடியால். வண்ணப்போதில் - அழகியபூக்களில். ஆன - உண்டான. மான்மதச்சாந்து - கஸ்தூரிக் குழம்பு. (கஅ) பிணையல்மாலை - மலர்களின் தாளிரண்டையும் ஒன்றின்மேல் ஒன்று வைத்துக் கட்டுஞ்சரம். கண்ணி (கொண்டைமாலை) நாரின்வழியாகப் பூக்களையடுக்கிச் செறிய இழையினால் வளைவாகக் கட்டுகின்றமாலை. தாமம் - பூக்களை வெவ்வேறு பத்தியாக வைத்து வளைவின்றி நீளமாகக் கட்டுகின்ற பத்திமாலை. (ககூ) மன்னவர்திரு - தேர், யானை, குதிரை, காலாள், வெண்கொற்றக்குடை, வெற்றிமுரசு முதலியன. வைதிகத்திரு - பிராமணருக்கேற்ற அணி ஆடை முதலியன. யோகப்புரவி-தெய்வமணி, சீவற்சம் முதலிய நற்சுழிகளும், நல்லிலக்கணமும் உடைய குதிரை.

இயம்பல துவைப்ப வெங்கு மேத்தொலி யெடுப்ப மாதா
நயந்துபல லாண்டு போற்ற நான்மறை யொலியி னோங்க
வியந்துபார் விரும்ப வந்து விரவினர்க் கின்பஞ் செய்தே
யுயர்ந்தவா கனயா னங்கண் மிசைக்கொண்டா ருழைய ரானா (௨௰)

மங்கல கீத நாத மறையவர் குழாங்க ளோடு
தொங்கலும் விரையுஞ் சூழ்ந்த மைந்தருந் துவன்றிச் சூதும்
பங்கய முகையுஞ் சாய்த்துப் பணைத்தெழுந் தணியின் மிக்க
குங்கும முலையி னாரும் பரந்தெழு கொள்கைத் தாகி (௨௧)

அருங்கடி யெழுந்த போழ்தி னார்த்தவெள் வளைக ளாலும்
இருங்குழை மகரத் தாலு மிலங்கொளி மணிக ளாலு
நெருங்கிய பீலிச் சோலை நீணிறத் தரங்கத் தாலுங்
கருங்கடல் கிளர்ந்த தென்னக் காட்சியிற் பொலிந்த தன்றே (௨௨)

நெருங்குதூ ரியங்க ளோங்க நிரைத்தசா மரைக * ளோங்கப்
பெருங்குடை மிடைந்து செல்லப் பிணங்குபூங் கொடிக ளாட
அருங்கடி மணம்வந் தெய்த வன்றுதொட் டென்று மன்பில்
வருங்குல மறையோர் புத்தூர் மணம்வந்த புத்தூ ராமால். (௨௩)

நிறைகுடந் தூப தீப நெருங்குபா லிகைக ளேந்தி
நறைமல ரறுகு சுண்ண நறும்பொரி பலவும் வீசி
யுறைமலி கலவைச் சாந்தி னுறுபுன றெளித்து வீதி
மறையவர் மடவார் வள்ளன் மணமெதிர் கொள்ள வந்தார் (௨௪)

கண்களெண் ணிலாத வேண்டுங் காளையைக் காண வென்பார்
பெண்களி லுயர நோற்றாள் சடங்கவி பேதை யென்பார்
மண்களி கூர வந்த மணங்கண்டு வாழ்ந்தோ மென்பார்
பண்களி னிறைந்த கீதம் பாடுவா ராடு வார்கள். (௨௫)

---

(௨௰) இயம் - வாத்தியங்கள். துவைப்ப - முழங்க. விரவினார்க்கு - கூடினவர்களுக்கு. யானங்கள் - சிவிகைகள். உழையரானார் - பரிசனங்கள். (௨௧) தொங்கலும் - மலர்மாலைகளும் விரையும் - வாசனைத்திரவியங்களும். துவன்றி - நெருங்கி. சூதும்பங்கய முகையும் சாய்த்து பணைத்து - சூதாடுகருவியையும், தாமரைப்பூவின் அரும்பையுந் தோற்கச்செய்து (அடி) பருத்து. (௨௨) கடி - திருமணம். ஆர்த்தவெள்வளைகளாலும் - சப்திக்கின்ற வெள்ளைவளையல்களாலும் (சிலேடை) முழங்குகின்றவெள்ளிய சங்குகளாலும். இருங்குழை மகரத்தாலும் - பெரிய மகரகுண்டலங்களினாலும் (சிலேடை) பெரியமகரமீன்களாலும். மணிகளாலும் - இரத்தினாபரணங்களாலும் (சிலேடை) முத்துக்களினாலும். தரங்கத்தாலும் - வரிசைகளாலும். (சிலேடை) தரங்கத்தாலும் - அலைகளாலும். (௨௩) தூரியங்கள் - வாத்தியங்கள். *தோரை - என்றும் பாடம். மிடைந்து - நெருங்கி. (௨௪) நறை - வாசனை.

ஆண்டகை யருளி னேக்கின் வெள்ளத்து ளலைந்தோ மென்பார்
தாண்டிய பரியு நம்பாற் றகுதியி னடைந்த தென்பார்
பூண்டயங் கிவனே காணும் புண்ணிய மூர்த்தி யென்பார்
ஈண்டிய மடவார் கூட்ட மின்னன விசைப்பச் சென்றார் (உக)

வருமணக் கோலத் தெங்கள் வள்ளலார் தெள்ளும் வாசத்
திருமணப் பந்தர் முன்பு சென்றுவெண் சங்க மெங்கும்
பெருமழைக் குலத்தி னார்ப்பப் பரிமிசை யிழிந்து பேணும்
ஒருமணத் திறத்தி னங்கு நிகழ்ந்தது மொழிவே னுய்ந்தேன் (உஎ)

வேறு

ஆலுமறை சூழ்கயிலை யின்கணருள் செய்தே
சாலுமொழி யால்வழி தடுத்தடிமை கொள்வான்
மேலுற வெழுந்துமிகு கீழுற வகழ்ந்து
மாலுமய னுக்குமரி யாரொருவர் வந்தார். (உஅ)

கண்ணிடை கரந்தகதிர் வெண்பட மெனச்சூழ்
புண்ணிய நுதற்புனித நீறுபொலி வெய்தத்
தண்மதி முதிர்ந்துகதி ராயவென மீதே
வெண்ணரை முடித்தது விழுந்திடை சழங்க. (உகூ)

காதிலணி கண்டிகை வடிந்தகுழை தாழச்
சோதிமணி மார்பினசை நூலினொடு தோளின்
மீதுபுனை யுத்தரிய வெண்டுகி லுடங்க
ஆதப மறைக்குடை யணிக்கரம் விளங்க (௩0)

பண்டிசரி கோவண வுடைப்பழைமை கூரக்
கொண்டதொர் சழங்கலுடை யார்ந்தழகு கொள்ள
வெண்டுகி லுடன்குசை முடிந்துவிடு வேணுத்
தண்டொருகை கொண்டுகழ றள்ளுநடை கொள்ள. (௩க)

மொய்த்துவளர் பேரழகு மூத்தவடி வேயோ
அத்தகைய மூப்பெனு மதன்படிவ மேயோ
மெய்த்தநெறி வைதிகம் விளைத்தமுத லேயோ
இத்தகைய வேடமென வையமுற வெய்தி (௩உ)

வந்துதிரு மாமறை மணத்தொழி லொடுங்கும்
பந்தரிடை நம்பியெதிர் பன்னுசபை முன்னின்
றிந்தமொழி கேண்மினெதி ராயவர்க ளென்றான்
முந்தைமறை யாயிர மொழிந்ததிரு வாயான். (௩௩)

(உஅ) ஆலும - ஒலிக்கும. (உகூ) கரந்த - மறைத்த. வெண்படம - வெள்ளிய வஸ்திரம். நுதல்-நெற்றியில. சழங்க - அசைய, தளர. (௩0) உடங்க - அசைய. ஆதபம - வெயயில. (௩க) பண்டி - வயிறு. சழங்கல உடை - நழுவும உடை. குசை - தருப்பையை. வேணு - மூங்கில. (௩௩) ஆயிரம - அளவுபடாத, பல.

என்றுரைசெ யந்தணனை யெண்ணின்மறை யோரு
மன்றலவினை மங்கலம டங்கலனை யானு
நன்றுமது நலவரவு நங்கடவு மென்றே
நின்றறிவ ணீர்மொழிமி ணீர்மொழிவ தென்றா (௩௪)

பின்னுகனு நாவலர் பெருந்தகையை நோக்கி
என்னிடையு நின்னிடையு நின்றவிசை வால்யான்
முன்னுடைய தோரபெரு வழக்கினை முடித்தே
நின்னுடைய வேள்வியினை நீமுயறி யெனமுன (௩௫)

நெற்றிவிழி யான்மொழிய நின்றங்க ரில்லா
னுற்றதொர வழக்கெனிடை நீயுடைய துணடேன்
மற்றது முடித்தலகி யான்வதுவை செய்யேன்
முற்றவிது சொல்லுகென வெலலைமுடி விலலான் (௩௬)

ஆவதிது கேண்மின்மறை யோரெனடி யானிந
நாவனக ரூரணிது நான்மொழிவ தென்றான்
றேவரையு மாலயன் முதற்றிருவின் மிக்கோா
யாவரையும் வேறடிமை யாவுடைய வெம்மான (௩௭)

வேறு

என்றா னிறையோ னிதுகேட்டவ ரெம்ம ருங்கு
நின்றா ரிருந்தா ரிவனென்னினை நதான்கொ லென்று
சென்றார் வெகுண்டார சிரித்தார திரு நாவ லூரார்
நன்றான் மறையோன் மொழியென்றெதிர் நோக்கி நக்கார (௩௮)

நக்கார் முகநோககி நடுங்கி நுடங்கி யார்க்கு
மிக்கான் மிசையுத் தரியத்துகி ருங்கி மேறசென்
றக்கா லமுன்றந்தை தன்றநதையா ளோலை யீதால்
இக்கா ரியத்தை நீயின்று சிரித்ததென் னேடவென்ன. (௩௯)

வேறு

மாசிலா மரபில் வந்த வள்ளல்வே தியனை நோககி
நேசமுன் கிடந்த சிந்தை நெகிழ்ச்சியாற் சிரிப்பு நீஙகி
யாசிலந் தணர்கள் வேறே ரநதணர்க கடிமை யாதல்
பேசவின் றுன்னைக் கேட்டோம் பித்தனோ மறையோ னென்றார்.

---

(௩௪) மடஙகல அனையானும - சிஙகமபோனற சுந்தரமூா த்திசுவாமிகளும (௩௫) ஆண்டான் என னுந்தனமை என்னிடத்தும, அடிமை என னுந்தனமை உனனிடத்தும தொனறு தொடருளளன எனபது தோனற "என்னிடையு ... வழக்கினை" என்றார். (௩௬) வதுவை - கலியாணம. (௩௮) நககார - சிரிததார.

பித்தனு மாகப் பின்னும் பேயனு மாக நீயின்
றெத்தனை தீங்கு சொன்னா யாதுமற் றவற்றா னாணேன்
அத்தனைக் கென்னை யொன்று மறிந்திலை யாகி னின்று
வித்தகம் பேச வேண்டாம் பணிசெய்ய வேண்டு மென்றார். (௪௧)

கண்டதோர் வடிவா லுள்ளங் காதல்செய் தருகா நிற்குங்
கொண்டதோர் பித்த வார்த்தை கோபமு முடனே யாக்கு
முண்டொரா ளோலை யென்னு மதனுண்மை யறிவே னென்று
தொண்டனா ரோலை காட்டு கென்றனர் துணைவ னாரை (௪௨)

ஓலைகாட் டென்று நம்பி யுரைக்கநீ யோலை காணற்
பாலையோ வவைமுன் காட்டப் பணிசெயற் பாலை யென்ற
வேலையி னாவ லூரர் வெகுண்டுமேல் விரைந்து சென்று
மாலயன் றொடரா தானை வலிந்துபின் றொடர லுற்றார் (௪௩)

ஆவணம் பறிக்கச் சென்ற வளவினி லந்த ணாளன்
காவணத் திடையே யோடக் கடிதுபின் றொடர்ந்து நம்பி
பூவணத் தவரை யுற்றா ரவரலாற் புரங்கள் செற்ற
ஏவணச் சிலையி னாரை யார்தொடர்ந் தெட்ட வல்லார். (௪௪)

மறைகளா யினமுன் போற்றி மலர்ப்பதம் பற்றி நின்ற
இறைவனைத் தொடர்ந்து பற்றி யெழுதுமா ளோலை வாங்கி
யறைகழ லண்ண லாளா யந்தணர் செய்த லென்ன
முறையெனக் கீறி யிட்டார் முறையிட்டான் முடிவி லாதான். (௪௫)

அருமறை முறையிட் டின்னு மறிவதற் கரியான் பற்றி
யொருமுறை முறையோ வென்ன வுழைநின்றார் விலக்கி யிந்தப்
பெருமுறை யுலகி லில்லா நெறிகொண்டு பிணங்கு கின்ற
திருமறை முனிவ ரேநீ ரெங்குளீர் செப்பு மென்றார். (௪௬)

என்றலு நின்ற வைய ரிங்குளே னிருப்புஞ் சேய
தன்றிந்த வெண்ணெய் நல்லூ ரதுநிற்க வறத்தா றின்றி

(௪௧) வித்தகம் - பரிகாச வார்த்தைகளை. (௪௪) ஆவணம் - அடிமை ஓலை. காவணத்திடை - பந்தலின் கீழ். பூவணத்தவரை - அழகிய செந்நிறத்தையுடைய சிவபிரானை. திருப்பூவணத்தில் எழுந்தருளியுள்ள சிவபெருமானை என்றலு மொன்று. ஏவணச் சிலையினாரை - அம்போடு சேர்ந்த மேருவாய வில்லையுடைய சிவபிரானை. (௪௫) அறைகழல் அண்ணல் - சப்திக்கின்ற வீரக்கழலணிந்த சுந்தரமூர்த்திசுவாமிகள். முறையிட்டான் - இது முறையோ என்று முறையிட்டார். முறையீடாவது, தனக்குநேரிட்ட ஆபத்தைத் தீர்க்கும் பொருட்டு யாவருமறிய இது முறையோ முறையோ என்று அலறுவது. (௪௬) உழைநின்றார் - சமீபத்திலிருந்தவர்கள். (௪௭) இருப்பும் - என் இருப்பிடம். சேய்தன்று - தூரமல்ல.

வன்றிறல் செய்தென் கையி லாவணம வலிய வாஙகி
நின்றிவன் கிழிததாத் தானே நிரப்பிஞ னடிமை யென்ருன். (சஎ)

குழைமறை காதி ஞனைக் கோதிலா ரூரா நோக்கிப்
பழையமன் ருடி போலு மிவனென்று பண்பின் மிகக
விழைவுறு மனமும் பொஙக வெண்ணெய்நல் லூரா யேலுன்
பிழைநெறி வழக்கை யாஙகே பேசநீ போதா யென்ருர் (சஅ)

வேதிய னதனைக கேட்டு வெணணெயநல லூரி லேநீ
போதினு நன்று மற்றப் புனிதநான் மறையோா முன்னா
ஆதியின் மூல வோலை காட்டிநீ யடிமை யாதல்
சாதிப்ப னென்று முன்னே தண்டுமுன் ருங்கிச் சென்ருன் (சகூ)

செல்லுநான் மறையோன் றன்பின் றிரிமுகக காந்தஞ் சோநத
வல்லிரும் பணையு மாபோல் வள்ளலுங கடிது சென்ருன்
எலலையில் சுற்றத தாரு மிதுவென்ஞெ மென்று செலல
நல்லவந் தணாகள் வாழும் வெண்ணெய்நல் லூரை நண்ணி (ருo)

வேதபா ரகரின் மிககாா விளஙகுபே ரவைமுன சென்று
நாதஞ மறையோன் சொல்லு நாவலூ ராரூ ரன்ருன்
காதலென் னடியா னென்னக காட்டிய வோலை கீறி
மூதறி வீர்முன் போநதா னிதுமற்றென் முறைப்பா டென்ருன் ()

அந்தண ரவையின் மிககாா மறையவ ரடிமை யாதல
இந்தமா நிலததி லிலலை யென்சொன்ஞ யையா வென்ருா
வந்தவா றிசைவே யன்ருே வழககிவன் கிழிதத வோலை
தந்தைதன் றநதை நோ்நத தென்றனன் றனியாய் நின்ருன் (ருஉ)

இசைவிஞ லெழுது மோலை காட்டிஞ ஞகி லின்று
விசையிஞல் வலிய வாஙகிக கிழிப்பது வெறறி யாமோ
தசையெலா மொடுஙக மூததான் வழககினைச் சாரச் சொன்ஞன்
அசைவிலா ரூர ரெண்ண மென்னென்ரு ரவையின் மிககார். (ருங)

அனைததுநூ லுணர்ந்தீ ராதி சைவனென் றறிவீ ரென்னைத
தனக்குவே றடிமை யென்றிவ வநதணன் சாதித தானேன்
மனத்திஞ லுணர்தற் கெட்டா மாயையென் சொல்லு கேன்யான்
எனக்கிது தெளிய வொண்ஞ தென்றன னெண்ண மிக்கான். ()

(சஅ) குழைமறை காதிஞனை - குழையை மறைததுவநத காதினையுடைய சிவ பிரானை. மன்றுஆடி - ந்யாயசபையில் வழககாடி (குறிபபாால்) அமபலததில ஆடுகினற வா. (ருஉ) இசைவே அன்ருே - பொருததமுடையதலலவோ. தநதைதன தந்தை நோ்நதது - இவன பாட்டன எழுதிககொடுததது.

அவ்வுரை யவையின் முன்பு நம்பியா ரூரர் சொல்லச்
செவ்விய மறையோர் நின்ற திருமறை முனியை நோக்கி
இவ்வுல கின்க ணீயின் றிவரையுன் னடிமை யென்ற
வெவ்வுரை யெம்முன் பேற்ற வேண்டுமென் றுரைத்து மீண்டும் ( )

ஆட்சியி லாவ ணத்தி லன்றிமற் றயலார் தங்கள்
காட்சியின் மூன்றி லொன்று காட்டுவா யென்ன முன்னே
மூட்சியிற் கிழித்த வோலை படியோலை மூல வோலை
மாட்சியிற் காட்ட வைத்தே னென்றனன் மாயை வல்லான். (ருசு)

வல்லையேற் காட்டிங் கென்ன மறையவன் வலிசெய் யாமற்
சொல்லநீர் வல்லீ ராகிற் காட்டுவே னென்று சொல்லச்
செல்வநான் மறையோர் நாங்க ளுங்குற வொட்டோ மென்றார்
அல்லறீர்த் தாள நின்றா ராவணங் கொண்டு சென்றார் (ருஎ)

இருண்மறை மிடற்றோன் கையி லோலைகண் டவையோ ரேவ
அருள்பெறு கரணத் தானு மாவணந் தொழுது வாங்கிச்
சுருள்பெறு மடியை நீக்கி விரித்தனன் றொன்மை நோக்கித்
தெருள்பெறு சபையோர் கேட்ப வாசகஞ் செப்பு கின்றான் (ருஅ)

அருமறை நாவ லாதி சைவனா ரூரன் செய்கை
பெருமுனி வெண்ணெய் நல்லூர்ப் பித்தனுக் கியானு மென்பால்
வருமுறை மரபு ளோரும் வழித்தொண்டு செய்தற் கோலை
இருமையா லெழுதி நேர்ந்தே னிதற்கிவை யென்னெ ழுத்து. (ருகூ)

வாசகங் கேட்ட பின்னர் மற்றுமே லெழுத்திட் டார்கள்
ஆசிலா வெழுத்தை நோக்கி யவையொக்கு மென்ற பின்னர்
மாசிலா மறையோ ரையா மற்றுங்கள் பேர னார்தம்
தேசுடை யெழுத்தே யாகிற் றெளியப்பார்த் தறிதி யென்றார் (சுo)

அந்தணர் கூற வின்னு மாளோலை யிவனே காண்பான்
றந்தைதன் றந்தை தான்வே றெழுதுகைச் சாத்துண் டாகில்
இந்தவா வணத்தி னோடு மெழுத்துநீ ரொப்பு நோக்கி
வந்தது மொழிமி னென்றான் வலியவாட் கொள்ளும் வள்ளல். (சுக)

(ருரு) திருமறை முனியை - சிவபெருமானை. ஏற்றவேண்டும் - உறுதிப்படுத்த வேண்டும். (ருசு) ஆட்சியில் - அனுபவத்தில். ஆவணத்தில் - இலிகிதத்தில். அயலார் காட்சியில் - பிறர்சொல்லுகின்ற சாட்சியில். மூட்சியில் - கோபத்தால் படியோலை - மூலவோலையைப் பார்த்து எழுதியவோலை. மாட்சியில் - பெருமையோடு. (ருஅ) தொன்மை - பழமை. தெருள்பெறு - (நீதிநூலில்) தெளிவடைந்த. (ருகூ) இருமையால் - உள்ளும்புறமும் ஒத்து (சுo) மேல் எழுதது இட்டார்கள் - சாட்சி எழுதிட்டார்கள். ஆசு இலா - குற்றமில்லாத. ஐயா - ஆரூரரே. பேரனார் - பாட்டனார்.

திரண்டமா மறையோர் தாமுந் திருநாவ லூரர் கோமுன்
மருண்டது தெளிய மற்ற மறையவ னெழுத்தா லோலை
யரண்டரு காப்பில் வேறொன் றழைத்துட னொப்பு நோக்கி
இரண்டுமொத் திருந்த தென்னே யினிசெய லில்லை யென்றார் ()

நான்மறை முனிவ னாக்கு நம்பியா ரூரர் தோற்றீர
பான்மையி னேவல் செய்தல் கடனென்று பண்பின் மிக்க
மேன்மையோர் விளம்ப நம்பி விதிமுறை யிதுவே யாகில்
யானிதற் கிசையே னென்ற லிசையுமோ வென்று நின்றார் (௬௩)

திருமிகு மறையோர் நின்ற செழுமறை முனியை நோக்கி
அருமுனி நீர்முன் காட்டு மாவண மதனி லெங்கள்
பெருமைசேர் பதியே யாகப் பேசிய துமக்கிவ் வூரில்
வருமுறை மனையு நீடு வாழ்க்கையுங் காட்டு கென்றார் (௬௪)

பொருவரும் வழக்கால் வென்ற புண்ணிய முனிவ ரென்னை
யொருவரு மறியீ ராகிற் போதுமென் றுரைத்துச் சூழ்ந்த
பெருமறை யவர்கு ழாமு நம்பியும் பின்பு செல்லத்
திருவருட் டுறையே புக்கார் கண்டிலார் திகைத்து நின்றார் (௬௫)

எம்பிரான் கோயி னண்ண விலங்குநூன் மார்ப னெங்க
ணம்பாதங் கோயில் புக்க தென்கொலோ வென்று நம்பி
தம்பெரு விருப்பி னோடு தனித்தொடர்ந் தழைப்ப மாதோ
டும்பரின் விடைமேற் றோன்றி யவர்தமக் குணர்த்த லுற்றார் (௬௬)

முன்புநீ நமக்குத் தொண்டன் முன்னிய வேட்கை கூரப்
பின்புநம் மேவ லாலே பிறந்தனை மண்ணின் மீது
துன்புறு வாழ்க்கை நின்னைத் தொடர்வறத் தொடர்ந்து வந்து
நன்புல மறையோர் முன்னர் நாந்தடுத் தாண்டோ மென்றார். (௬௭)

என்றெழு மோசை கேளா வீன்றவான் கன்றுக் கேட்ட
கன்றுபோற் கதறி நம்பி கரசர ணாதி யங்கந்
துன்றிய புளக மாகத் தொழுதகை தலைமே லாக
மன்றுளீர் செயலோ வந்து வலியவாட் கொண்ட தென்றார். (௬௮)

(௬௨) திருநாவலூரர்கோ - சுந்தரமூர்த்தி சுவாமிகள். அரண்தரு காப்பில் - அவர் வீட்டில் காவலான இடத்தில். (௬௩) இசையேன் என்றல் இசையுமோ - சம்மதிக்கமாட்டேனென்று மறுப்பது பொருந்துமோ. (௬௪) அருமுனி - அரிய முனிவரே. வாழ்க்கை - வாழ்க்கைக்குரிய பொருள்கள். (௬௫) பொருவரும் - ஒப்பு அற்ற. குழாமும் - கூட்டமும். திருவருட்டுறை - திருவெண்ணெய் நல்லூர் ஆலயத்தின் பெயர். (௬௬) உம்பரில் - ஆகாயத்தில். (௬௭) வேட்கைகூர - விருப்பமிகுதியால். (௬௮) ஈன்ற ஆன் கன்றுப்பு - பெற்ற தாய் பசுவின் குரலை. கரசரண் ஆதி அங்கம் துன்றிய புளகம் ஆக - கைகால் முதலிய அவயவங்களில் நெருங்கியெழுந்த மயிர் சிலிர்க்கமுண்டாக.

எண்ணிய வோசை யைந்தும் விசும்பிடை நிறைய வெங்கும்
விண்ணவர் பொழிபூ மாரி மேதினி நிறைந்து விம்ம
மண்ணவர் மகிழ்ச்சி பொங்க மறைகளு முழங்கி யார்ப்ப
அண்ணலை யோலை காட்டி யாண்டவ ரருளிச் செய்வார் (சுகூ)

மற்றுநீ வன்மை பேசி வன்றொண்ட னென்னு நாமம்
பெற்றனை நமக்கு மன்பிற் பெருகிய சிறப்பின் மிக்க
அர்ச்சனை பாட்டே யாகு மாதலான் மண்மே னம்மைச்
சொற்றமிழ் பாடு கென்றா ரூமறை பாடும் வாயார் (எ0)

தேடிய வயனு மாலுந் தெளிவுறா வைந்தெ ழுத்தும்
பாடிய பொருளா யுள்ளான் பாடுவா யநம்மை யென்ன
நாடிய மனத்த ராகி நம்பியா ரூரர் மன்றுள்
ஆடிய செய்ய தாளை யஞ்சலி கூப்பி நின்று (எக)

வேதிய னாகி யென்னை வழக்கினால் வெல்ல வந்த
ஊதிய மறியா தேனுக் குணர்வுதந் துய்யக் கொண்ட
கோதிலா வமுதே யின்றுன் குணப்பெருங் கடலை நாயேன்
யாதினை யறிந்தென் சொல்லிப் பாடுகே னென்மொ ழிந்தார் (எஉ)

அன்பனை யருளி னோக்கி யங்கண ரருளிச் செய்வார்
முன்பெனைப் பித்த னென்றே மொழிந்தனை யாத லாலே
என்பெயர் பித்த னென்றே பாடுவா யென்றார் நின்ற
வன்பெருந் தொண்ட ராண்ட வள்ளலைப் பாட லுற்றார். (எஙு)

வேறு

கொத்தார்மலர்க் குழலாளொரு கூறாயடி யவர்பால்
மெய்த்தாயினு மினியானையவ் வியனாவலர் பெருமான்
பித்தாபிறை சூடியெனப் பெரிதாந்திருப் பதிகம்
இத்தாரணி முதலாமுல கெல்லாமுய வெடுத்தார் (எச)

முறையால்வரு மதுரத்துடன் மொழியிந்தள முதலிற்
குறையாநிலை மும்மைப்படி கூடுங்கிழ மையினால்
நிறைபாணியி னிசைகோள்புணர் நீடும்புகழ் வகையால்
இறையான்மகி ழிசைபாடின னெல்லாநிக ரில்லான் (எரு)

(சுகூ) ஓசை யைந்தும் - தோற்கருவி துளைக்கருவி முதலிய ஐந்துவாத்தியங்களின் ஓசையும். விசும்பிடை - ஆகாயத்தில் (எஉ) ஊதியம் - இலாபம் (எச) வியன் - (இடம்) அகன்ற, பெருமை (எரு) மதுரத்துடன் - (ஸ்வரவினணியார் விசேடங்களான உண்டாகும்) நயப்புடன். மும்மைப்படி குறையாநிலை - துரித விளம்பித மத்தியம என்னும் இசைவேறுபாடுகள் குறையாமல். பாணி-தாளம். இசை கோள் - இசையின் கொள்கை.

### திருவெண்ணெய்நல்லூர் - பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

பித்தாபிறைசூடிபெருமானேயருளாளா
வெத்தான்மறவாதேநினைக்கின்றேன்மனத்துன்னை
வைத்தாய்பெண்ணைத்தென்பால்வெண்ணெய்நல்லூரருட்டுறையு
ளத்தாவுனக்காளாயினியல்லேனெனலாமே

காரூர்புனலெய்திக்கரைகல்லித்திரைக்கையாற்
பாரூர்புகழெய்தித்திகழ்பன்மாமணியுந்திச்
சீரூர்பெண்ணைத்தென்பால்வெண்ணெய்நல்லூரருட்டுறையு
ளாரூரனெம்பெருமாற்காளல்லேனெனலாமே

திருச்சிற்றம்பலம்.

---

சொல்லார்தமி ழிசைபாடிய தொண்டன்றனை யின்னும்
பல்லாறுல கினினம்புகழ் பாடென்றுறு பரிவில்
நல்லார்வெண்ணெய் நல்லூரருட் டுறைமேவிய நம்பன்
எல்லாவுல குய்யப்புர மெய்தானருள் செய்தான் (எசு)

அயலோர்தவ முயல்வாரபிற ரன்றேமண மழியுஞ்
செயலானிகழ் புத்தூர்வரு சிவவேதியன் மகளும்
உயர்நாவலர் தனிநாதனை யொழியாதுணர் வழியிற்
பெயராதுயர் சிவலோகமு மெளிதாம்வகை பெற்றாள் (எஎ)

வேறு

நாவலர்கோ னாரூரன் றனைவெண்ணெய் நல்லூரின்
மேவுமருட் டுறையமர்ந்த வேதியராட் கொண்டதற்பின்
பூவலருந் தடம்பொய்கைத் திருநாவ லூர்ப்புகுந்து
தேவர்பிரான் றனைப்பணிந்து திருப்பதிகம் பாடினார் (எஅ)

---

### திருவெண்ணெய்நல்லூரும் திருநாவலூரும் - பண் - நட்டராகம்.

திருச்சிற்றம்பலம்.

கோவலனான்முகன்வானவர்கோனுங்குற்றேவல்செய்ய
மேவலர்முப்புரந்தீயெழுவித்தவனோரம்பினா
லேவலனார்வெண்ணெய்நல்லூரில்வைத்தென்னையாளுங்கொண்ட
நாவலனார்க்கிடமாவதுநந்திருநாவலூரே.

(எசு) சொல் ஆர் - சொற்கள் நிறைந்த. (எஎ) மணம் அழியும் செயலால்-கலியாணம் நடவாத காரணத்தால். சிவவேதியன் - சடங்கவி சிவாசாரியார். ஒழியாது உணர்வழியில் பெயராது-இடைவிடாமல் சிந்திக்கும் முறைமையினின்றும் தவறாமல். பிறர் தவஞ்செய்து அடையவேண்டிய சிவபதத்தைச் சடங்கவி சிவாசாரியருடைய அருந்தவப்புதல்வி சுந்தரமூர்த்தி சுவாமிகளை இடையறாது சிந்தித்து எளிதிற் பெற்றார் என்பது கருத்து.

நாதனுக்கூர் நமக்கூர் நரசிங்கமுனையரைய
ஞாதரித்தீசனுக்காட்செயுமூரணி நாவலூரென்
றோதநற்றகவன்றொண்டனாரூரனுரைத்ததமிழ்
காதலித்துங்கற்றுங்கேட்பவர்தம்வினைகட்டறுமே

திருச்சிற்றம்பலம்

---

சிவனுறையுந் திருத்துறையூர் சென்றணைந்து தீவினையால்
அவநெறியிற் செல்லாமே தடுத்தாண்ட அடியேற்குத்
தவநெறிதந் தருளென்று தம்பிரான் முன்னின்று
பவநெறிக்கு விலக்காகுந் திருப்பதிகம் பாடினார் (௭௯)

---

**திருத்துறையூர் - பண் - தக்கராகம்.**

திருச்சிற்றம்பலம்

மலையாரருவித்திரண்மாமணியுந்திக்
குலையாரக்கொணர்ந்தெற்றியோர்பெண்ணைவடபாற்
கலையாரல்குற்கன்னியராடுந்துறையூர்த்
தலைவாவுனைவேண்டிக்கொள்வேன்றவநெறியே

செய்யார்கமலம்மலர்நாவலூர்மன்னன்
கையாற்றொழுதேத்தப்படுந்துறையூர்மேற்
பொய்யாத்தமிழூரனுரைத்தனவல்லார்
மெய்யேபெறுவார்கடவநெறிதானே

திருச்சிற்றம்பலம்

---

புலனொன்றும் படிதவத்திற் புரிந்தநெறி கொடுத்தருள
அலர்கொண்ட நறுஞ்சோலைத் திருத்துறையூ ரமர்ந்தருளும்
நிலவுந்தண் புனலுமொளிர் நீள்சடையோன் றிருப்பாத
மலர்கொண்டு போற்றிசைத்து வந்தித்தார் வன்றொண்டர் (௮௦)

திருத்துறையூர் தனைப்பணிந்து சிவபெருமா னமர்ந்தருளும்
பொருத்தமா மிடம்பலவும் புக்கிறைஞ்சிப் பொற்புலியூர்
நிருத்தனார் திருக்கூத்துத் தொழுவதற்கு நினைவுற்று
வருத்தமிகு காதலினால் வழிக்கொள்வான் மனங்கொண்டார் (௮௧)

மலைவளர்சந் தகில்பீலி மலர்பரப்பி மணிகொழிக்கும்
அலைதருதண் புனற்பெண்ணை யாறுகடந் தேறியப்பா
னிலவுபசும் புரவிநெடுந் தேரிரவி மேல்கடலிற்
செலவணையும் பொழுதணையத் திருவதிகைப் புறத்தணைந்தார் (௮௨)

(௮௦) புலனொன்றும்படி - பஞ்சேந்திரியங்களும் தன்வசப்படும்படி. (௮௧) பொற்புலியூர் நிருத்தனார் - அழகிய புலியூரென்னுஞ் சிதம்பரத்தில் திருக்கூத்தாடும் நடராசர். வருத்தம் - ஆராமை. வழிக்கொள்வான் - செல்லும்படி. (௮௨) மலைவளர் சந்து - மலையில் உண்டாகி வளர்ந்த சந்தனமரங்கள். மணி - முத்து. புறத்து - சமீபத்தில்.

உடையவர சுலகேத்து முழவாரப் படையாளி
விடையவர்க்குக் கைத்தொண்டு விரும்புபெரும் பதியைமிதித்
தடையுமதற் கஞ்சுவனென் றந்நகரிற் புகுதாதே
மடைவளர்தண் புறம்பணையிற் சித்தவட மடம்புகுந்தார் (அ௩)

வரிவளர்பூஞ் சோலைசூழ் மடத்தின்கண் வன்றொண்டர்
விரிதிரைநீர்க் கெடிலவட வீரட்டா னத்திறைதாள்
புரிவுடைய மனத்தினராய்ப் புடையெங்கு மிடைகின்ற
பரிசனமுந் துயில்கொள்ளப் பள்ளியமர்ந் தருளினார். (அ௪)

அதுகண்டு வீரட்டத் தமர்ந்தருளு மங்கணரு
முதுவடிவின் மறையவராய் முன்னொருவ ரறியாமே
பொதுமடத்தி னுட்புகுந்து பூந்தாரான் றிருமுடிமேற்
பதுமமலர்த் தாள்வைத்துப் பள்ளிகொள்வார் போற்பயின்றார். (அ௫)

அந்நிலையா ரூரனுணர்ந் தருமறையோ யுன்னடியென்
சென்னியில்வைத் தனையென்னத் திசையறியா வகைசெய்த
தென்னுடைய மூப்புக்கா ணென்றருள வதற்கிசைந்து
தன்முடியப் பால்வைத்தே துயிலமர்ந்தான் தமிழ்நாதன் (அ௬)

அங்குமவன் றிருமுடிமேன் மீட்டுமவர் தாணீட்டச்
செங்கயல்பாய் தடம்புடைசூழ் திருநாவ லூராளி
யிங்கென்னைப் பலகாலு மிதித்தனைநீ யாரென்னக்
கங்கைசடைக் கரந்தபிரா னறிந்திலையோ வெனக்கரந்தான் (அ௭)

செம்மாந்தி யானறியா தென்செய்தே னெனத்தெளிந்து
தம்மானை யறியாத சாதியா ருளரேயென்
றம்மானைத் திருவதிகை வீரட்டா னத்தமர்ந்த
கைம்மாவி னுரியானைக் கழல்பணிந்து பாடினார் (அ௮)

---

திருவதிகைவீரட்டானம் - பண் - கொல்லிக்கௌவாணம்.

திருச்சிற்றம்பலம்.

தம்மானையறியாதசாதியாருளரேசடைமேற்கொள்பிறையானைவிடை மேற்கொள்விகிர்தன், கைம்மாவினுரியானைக்கரிகாட்டிலாடலுடையானை

(அ௩) உடையவரசு - நம்மையெல்லாம் அடிமையாக உடைய திருநாவுக்கரசு சுவாமிகள். உழவாரப்படை - புல்லைச்செதுக்கும் ஓர்கருவி. கைத்தொண்டு - சிவாலயங்களின் பிராகாரங்களிலும், திருவீதிகளிலும், பிறவிடங்களிலும் புல்முதலியன முளைக்காமல் செதுக்கிக் கொண்டிருத்தல். மடை - நீர்மடை, நீர் பாய்ச்சுவதற்குத் திறக்கும் இடம். (அ௪) வரிவளர் - வண்டுகளின் ரீங்கார ஓசைமிகும். விரிதிரை - விரிந்த அலைகளையுடைய. கெடிலம் - திருக்கெடில நதி. புடை - தம்பக்கம். பள்ளி அமர்ந்தருளினார் - சிவானந்த நித்திரைசெய்தார். (அ௭) கரந்த - மறைத்த (அ௮) செம்மாந்து - இறுமாப்படைந்து. கைம்மாவின் உரியானை - யானைத்தோலைப் போர்வையாகவுடைய சிவபிரானை.

விடையானைக்கறைகொண்டகண்டத், தெம்மான்றனடிக்கொண்டென்முடி மேல்வைத்திடுமென்னு மாசையால்வாழ்கின்றவறிவிலாநாயே, னெம்மானை யெறிகெடிலவடவீரட்டானத் துறைவானை யிறைபோதுமிகழ்வன்போலி யானே

என்பினையேகலனுகவணிந்தானையெங்களொருதேறும்பெருமானையிசை ஞானிசிறுவன்,வன்பனையவளர்பொழில்சூழ்வயனுவலூர்க்கோன்வன்றொண் டனூரன்மதியாதுசொன்ன, அன்பனையாவர்க்குமறிவரியவத்தர்பெருமா னையதிகைமாநகருள்வாழ்பவனை,யென்பொன்னையெறிகெடிலவடவீரட்டா னத்துறைவானையிறைபோதுமிகழ்வன்போலியானே.

திருச்சிற்றம்பலம்.

---

பொன்றிரளு மணித்திரளும் பொருகரிவெண் கோடுகளு
மின்றிரண்ட வெண்முத்தும் விரைமலரு நறுங்குறடும்
வன்றிரைக ளாற்கொணர்ந்து திருவதிகை வழிபடலாற்
றென்றிசையிற் கஙகையெனுந் திருக்கெடிலந் திளைத்தாடி (அகூ)

அங்கணரை யடிபோற்றி யஙககன்று மற்றந்தப்
பொங்குநதித் தென்கரைபோய்ப் போர்வலித்தோண் மாவலிதன்
மங்கலவேள் வியிற்பண்டு வாமனனாய் மண்ணிரந்த
செங்கணவன் வழிபட்ட திருமாணி குழியணைந்தார் (கூ0)

பரம்பொருளைப் பணிந்துதாள் பரவிப்போய்ப் பணிந்தவர்க்கு
வரந்தருவான் றினைநகரை வணஙகினர்வண் டமிழ்பாடி
நரம்புடையா ழொலிமுழவி னாதவொலி வேதவொலி
யரம்பையர்தங் கீதவொலி யறாத்தில்லை மருங்கணைந்தார் (கூக)

---

திருத்தினைநகர் - பண் - தக்கேசி.

திருச்சிற்றம்பலம்.

நீறுதாங்கியதிருநுதலானைநெற்றிக்கண்ணனைநிரைவளைமடந்தை
கூறுதாங்கியகொள்கையினனைக்குற்றமில்லியைக்கற்றையஞ்சடைமே
லாறுதாங்கியவழகனையமரர்க்கரியசோதியைவரிவராலுகளுஞ்
சேறுதாங்கியதிருத்தினைநகருட்சிவக்கொழுந்தினைச்சென்றடைமனனே

நீடுபோக்கையிற்பிறவியைப்பழித்துநீங்கலாமென்றுமனத்தினைத்தெருட்டிச்
சேடுலாம்பொழிற்றிருத்தினைநகருட்சிவக்கொழுந்தினைத்திருவடியிணைத்தா
ளுடெலாம்புகழ்நாவலூராளிநம்பிவன்றொண்டனூரனுரைத்த
பாடலாந்தமிழ்பத்திவைவல்லார்முத்தியாவதுபாரகதிப்பயனே.

திருச்சிற்றம்பலம்.

---

(அகூ) பொருகரி - போர்புரியும யானைகளின. வெணகோடுகளும - வெள்ளிய தந்தஙகளையும. நறுங குறடும - சநதன மரததுண்டுகளையும. திளைதது - மூழகி. (கூ0) அங்கணரை - வீரடடேசுரை. செஙகணவன -

வேறு.

தேம லங்கலணி மாமணி மார்பிற் செம்ம லங்கயல்கள் செங்கம லத்தண்
பூம லங்கவெதிர் பாய்வன மாடே புள்ள லம்புதிரை வெள்வளை வாவித்
தாம லங்குக டடம்பணை சூழுந் தண்ம ருங்குதொழு வாரகட மும்மை
மாம லங்களற வீடரு டில்லை மல்ல லம்பதியி னெல்லை வணங்கி (௩௨)

நாக சூதவகு ளஞ்சா ளஞ்சூழ் நாளி கேரமில வங்க நரந்தம்
பூக ஞாழல்குளிர் வாழை மதூகம் பொதுளும் வஞ்சிபல வெங்கு நெருங்கி
மேக சாலமலி சோலைக ளாகி மீது கோகில மிடைந்து மிழற்றப்
போக பூமியினு மிக்கு விளங்கும் பூம்பு றம்பணை கடந்து புகுந்தார் (௩௩)

வன்னி கொன்றைவழை சண்பக மார மலர்ப்ப லாசொடுசெ ருந்திமந் தாரங்
கன்னி காரங்குர வங்கமழ் புன்னை கற்பு பாடலங் கூவிள மோங்கித்
துன்னு சாதிமரு மாலதி மௌவ றுதைந்த நந்திகர வீர மிடைந்த
பன்ம லர்ப்புனித நந்த வனங்கள் பணிந்து சென்றனன் மணங்கமழ் தாரான்.

இடம ருங்குதனி நாயகி காண வேழ்பெ ரும்புவன முய்ய வெடுத்து, நடந வின்றருள் சிலம்பொலி போற்று நான்ம றைப்பதியை நாளும் வணங்கக், கடல்வ லங்கொள்வது போற்புடை சூழுங் காட்சி மேவிமிகு சேட்செல வோங்குந், தடம ருங்குவளர் மஞ்சிவ ரிஞ்சித் தண்கி டங்கையெதிர் கண்டு மகிழ்ந்தார் (௩௫)

(௩௨) தேமலர் மார்பு புள்ளலம்புகின்ற வெள்வளைவாவி செங்கமலத்தண் பூம லங்க அங்கயல்கள் எதிர்பாய்வன மலங்குகள் தடம்பணை சூழும் தண்மருங்கு தொழுவார்கட்கு. தேமலங்கல் - தேன் பொருந்திய மலர்மாலையும் அணிமாமணி - அழகியமாமணி களையும் கொண்ட செம்மல் - சுவாமிகள். மாடு - அருகில். புள்ளலம்பு - பறவைகள் சப்திக்கின்ற. வெள்வளை - வெள்ளிய சங்குகளையுடைய. மலங்க - அசைய. அங்கயல்கள் - அழகிய கெண்டைமீன்கள். பாய்வன - பாயும்படி (முற்றெச்சம்). தாம, அலை மலங்குகள் - மலங்கு மீன்கள். தடம்பணை - விசாலமாகிய வயல்களில். மும்மை மாமலங்கள் அற - ஆணவம் கன்மம் மாயை என்னும் மூன்று மலங்களும் ஒழிய. வீடு அருள் - மோக்ஷத்தைக்கொடுக்கும். மல்லல் - வளத்தையுடைய. (௩௩) நாகம் - புன்னைமரம். சூதம் - மாமரம். வகுளம் - மகிழமரம். நாளிகேரம் - தென்னைமரம். நரந்தம் - நாரத்தமரம். பூகம் - கமுகமரம். ஞாழல் - குங்குமமரம். மதூகம் - இலுப்பைமரம். பொதுளும் - நெருங்கிய. மேகசாலம் - மேககூட்டங்கள். கோகிலம் - குயில்கள். மிடைந்து மிழற்ற - நெருங்கிக் கூவிக்கொண்டிருக்க. போகபூமி - பரதகண்டத்துக்குப் புறம்பா யுள்ள கிம்புருட கண்டம் முதலியன, தெய்வலோகமெனினும் பொருந்தும். (௩௪) வழை - சுரபுன்னைமரம். கன்னிகாரம் - கோங்குமரம். பாடலம் - பாதிரிமரம். கூவிளம் - வில்வமரம். சாதி - சிறுசண்பகம். மாலதி - முல்லை. மௌவல் - மல்லிகை. நந்தி - நந்தியாவர்த்தம். கரவீரம் - அலரி. (௩௫) இடமருங்கு - இடப்பாகத்தில். தனிநாயகி - ஒப்பற்ற சிவகாமவல்லி. மஞ்சு இவர் - மேகம் தவழும். இஞ்சி - மதில். கிடங்கை - அகழியை.

மன்றுளாடுமது வின்னசையாலே மறைச்சுரும்பறை புறத்தின் மருங்கே, குன்றுபோலுமணி மாமதில் சூழுங் குண்டகழ்க் கமல வண்டலர் கைதைத், துன்றுநீறுபுனை மேனியவாகித் தூயநீறுபுனை தொண்டர்களென்னச், சென்றுசென்றுமுரல் கின்றனகண்டு சிந்தையன்பொடு திளைத்தெதிர் சென்றார் (௯௬)

பார்விளங்கவளர் நான்மறைநாதம் பயின்றபண்புமிகு வெண்கொடியாலுஞ், சீர்விளங்குமணி நாவொலியாலுந் திசைகளெங்கெதிர் புறப்படலாலுந், தார்விளங்குவரை மார்பினயன்பொற் சதுர்முகங்களென வாயில்கடில்லை, யூர்விளங்குதிரு வாயில்களெங்கி லுத்தரத்திசையின் வாயின்முனெய்தி (௯௭)

அன்பின் வந்தெதிர் கொண்டசீரடியா ரவர்களோடுநம்பி யாரூரர்தாமோ, முன்பிறைஞ்சின ரியாவரென் றறியா முறைமையாலெதிர் வணங்கி மகிழ்ந்து, பின்புகும்பிடும் விருப்பினிறைந்து பெருகுநாவலநகரார்பெருமானும், பொன்பிறங்குமணி மாளிகைநீடும் பொருவிறந்ததிருவீதிபுகுந்தார் (௯௮)

அங்கண் மாமறை முழங்கு மருங்கே யாடரம்பைய ரரங்கு முழங்கு, மங்குல் வானின்மிசை யைந்து முழங்கும் வாசமாலைகளின் வண்டு முழங்கும், பொங்கு மன்பருவி கண்பொழி தொண்டர் போற்றிசைக்குமொலி யெங்கு முழங்குந், திங்க ளங்குசடை கங்கை முழங்குந் தேவ தேவர்புரி யுந் திருவீதி (௯௯)

போக நீடுநிதி மன்னவன மன்னும புரங்க ளொப்பன வரம்பிலவோங்கி, மாக முன்பருகு கின்றன போலு மாளிகைக்குலமிடைந்த பதாகை, யோக சிந்தைமறை யோர்கள் வளர்க்கு மோம தூமமுயர் வானி லடுப்ப, மேக பந்திகளின் மீதிடை யெங்கு மின்னு டங்குவன வென்ன விளங்கும் (௱)

(௯௬) மன்றுள் ஆடும் மது - சிற்றம்பலத்தில் நடம்புரியும் (அஞ்செழுத்தாகமாகிய நாம மொழியிலுள்ள) தேனை. மறைச்சுரும்பு - வேதங்களாகிய வண்டுகள். குண்டு அகழ் - ஆழமாகிய அகழி. கைதை - தாழை. துன்று நீறு - தாழம்பூவிற் செறிந்துள்ள வெண்பொடி. (- பராகம்). முரல்கின்றன கண்டு - ஊதுவனவாகக் கண்டு. (௯௭) வெண்கொடியாடும் - வெள்ளிய கொடியினிடத்திற் கட்டப்பட்டு அசையும். (சிலேடை) [illegible] விளையாடுதற்கிடமான. தார் விளங்குவரைமார்பினயன் - பூமாலையணிந்த மலைபோன்ற மார்பினையுடைய பிரமன். உத்தரத்திசையின் - வடபக்கவாயிலின். (௯௮) நாவல நகரார் பெருமானும் - திருநாவலூரிலுள்ளார்க்குத் தலைவராகிய வன்றொண்டப் பெருமானும். (௯௯) ஆடு அரம்பையர் அரங்கு - நடஞ் செய்யும் தெய்வப்பெண்கள் சபை. ஐந்து - ஐந்துவித வாத்தியங்கள். அவையாவன—தோற்கருவி, துளைக்கருவி, நரம்புக்கருவி, கஞ்சக்கருவி, மிடற்றுக்கருவி என்பன. தோற்கருவி - பேரிகைமுதலியன. துளைக்கருவி - வேய்ங்குழல்முதலியன. நரம்புக்கருவி - வீணைமுதலியன. கஞ்சக்கருவி - தாளமுதலியன. மிடற்றுக் கருவி - கண்டத்தால் சப்த சுரங்களும் தோன்றும்படி பாடுதல். புரியும் - விரும்பும். (௱) நிதிமன்னவன் - குபேரன். மாகம் - மேகமண்டலம். பதாகை - கொடியாடை. பந்திகள் - வரிசைகள்.

ஆடு தோரணைபுடை நாசிக டோறு மரணி தந்தசுட ராகுதி தோறு, மாடு தாமமணி வாயில்க டோறு மங்க லக்கலசம் வேதிகை தோறுஞ், சேடு கொண்டவொளி தேர்நிரை தோறுஞ் செங்கெ லன்னமலை சாலைக டோறு, நீடு தண்புனல்கள் பந்தர்க டோறு நிறைந்த தேவர்கண நீளிடை தோறும்.()

எண்ணில பேருல கனைத்தினு முள்ள வெல்லை யிலவழகு சொல்லிய வெல்லா, மண்ணி லிப்பதியில் வந்தன வென்ன மங்க லம்பொலி வளத்தன வாகிப், புண்ணி யப்புனித வன்பர்கண் முன்பு புகழ்ந்து பாடல்புரி பொற்பின் விளங்கும், அண்ண லாடுதிரு வம்பலஞ் சூழ்ந்த வம்பொன் வீதியினை நம்பிவ ணங்கி (௧௦௨)

மால யன்சத மகன்பெருந் தேவர் மற்று முள்ளவர்கண் முற்று நெருங்கிச், சீல மாமுனிவர் சென்றுபின் றுன்னித் திருப்பி ரம்பினடி கொண்டு திளைத்துக், கால நேர்படுதல் பார்த்தய லிற்பக் காத லன்பர்கண நாதர் புகும்பொற், கோல நீடுதிரு வாயி லிறைஞ்சிக் குவித்த செங்கைதலை மேற்கொடு புக்கார் (௧௦௩)

வேறு

பெருமதில சிறந்த செம்பொன்மா ளிகைமின் பிறங்குபே ரம்பல மேரு, வருமுறை வலங்கொண் டிறைஞ்சிய பின்னர் வணங்கிய மகிழ்வொடும் புகுந்தார், அருமறை முதலி னடுவினிற் * கடையி லன்பாதஞ் சிந்தையி லலர்ந்த, திருவள ரொளிசூழ் திருச்சிற்றம் பலமுன் றிருவணுக் கன்றிரு வாயில் (௧௦௪)

வையகம் பொலிய மறைச்சிலம் பார்ப்ப மன்றுளே மாலயன் றேட, ஐயர்தாம் வெளியே யாடுகின் றாரை யஞ்சலி மலர்த்திமுன் குவித்த, கைகளோ திளைத்த கண்களோ வந்தக் கரணமோ கலந்தவன் புந்தச், செய்தவம் பெரியோன் சென்றுதாழ்ந் தெழுந்தான் றிருக்களிற் றுப்படி மருங்கு. ()

(௱௧) தோரணை - மாலைகள். புடைநாசிகள் - கோபுரநாசிகள், தலைதாமணியின் வாயில்கள், துவாரங்கள். ஆகுதிதோறும் - ஆகுதிப்புகை தங்கிய மாளிகைகளிலெல்லாம் அணிந்த சுடர் - தீபங்களைப்போல்முறை கனைந்த அக்கினிகள். தாமம் - மாலைகள். வேதிகை - திண்ணைகள், பலிபீடங்கள். சேடு - பெருமையுடைய. நிரை - வரிசைகள். நளஇடை - நீண்டவீதிகள். (௱௩) சதமகன் - இந்திரன். (௱௪) பேரம்பலம் உயர்ச்சியினும், சிறப்பினும், நிறத்தினும், வடிவத்தையுடைமையினும், பிறவற்றினும் மேருவை யொத்திருந்தலால் "பேரம்பலமேரு" என்றார். பிரணவப்பொருளாகிய திருச்சிற்றம்பலம் வேதத்தின் முதலினும், இடையினும், கடையினும் இருத்தலானும், அதை அன்பர்கள் தகாலிக்கதை என உபாசிக்கின்றமையானும் "அருமறை முதலினடுவினிற் கடையி லன்பாதஞ் சிந்தையி லலர்ந்த" என்றார். திருச்சிற்றம்பலம் பிரணவமாகலான் தமிழ்வேதம் ஓதுங்கால் முதலினும், கடையினும் ஓதப்படுகிறது. (௱௫) ஓசாரங்கள், ஐயம். கைகள், கண்கள், கரணம் யாவும் அன்பின் வழியே செலுத்தப்பட்டன என்பது கருத்து. திருக்களிற்றுப்படி - ஸ்ரீபஞ்சாக்ஷரப்படி.

* சீரதில் என்றும் பாடம்.

ஐந்துபே ரறிவுங் கண்களே கொள்ள வளப்பருங் கரணங்க ணான்குஞ்
சிந்தையே யாகக் குணமொரு மூன்றுந் திருந்துசாத் துவிகமே யாக
இந்துவாழ் சடையா னாடுமா னந்த வெல்லையி றனிப்பெருங் கூத்தின்
வந்தபே ரின்ப வெள்ளத்துட் டிளைத்து மாறிலா மகிழ்ச்சியின் மலர்ந்தார்

தெண்ணிலா மலர்ந்த வேணியா யுன்றன் றிருநடங் கும்பிடப் பெற்று
மண்ணிலே வந்த பிறவியே யெனக்கு வாலிதா மின்பமா மென்று
கண்ணிலா னந்த வருவிநீர் சொரியக் கைம்மல ருச்சிமேற் குவித்துப்
பண்ணினீ டியறிவரும் பதிகம் பாடினார் பரவினார் பணிந்தார். (௧௦௭)

தடுத்துமுன் னாண்ட தொண்டனார் முன்பு தனிப்பெருந் தாண்டவம் புரிய
எடுத்தசே வடியா ரருளினாற் றாள மெறிபுனன் மறிதிரைப் பொன்னி
மடுத்தநீள் வண்ணப் பண்ணையா ரூரில் வருகநம் பாலென வானில் [தார்.
அடுத்தபோ தினிலவந் தெழுந்ததோ ராதங் கேட்டலு மதுவுணர்ந் தெழுந்

ஆடுகின் றவர்பே ரருளினா னிகழ்ந்த வப்பணி சென்னிமேற் கொண்டு
சூடுதங் கரங்க ளஞ்சலி கொண்டு தொழுந்தொறும் புறவிடை கொண்டு
மாடுபே ரொளியின் வளரும்அம் பலத்தை வலங்கொண்டு வணங்கினார் போந்து
நீடுவான் பணிய வுயர்ந்தபொன் வரைபோ னிலையெழு கோபுரங் கடந்து.

நின்றுகோ புரத்தை நிலமுறப் பணிந்து நெடுந்திரு வீதியை வணங்கி, மன்றலார் செல்வ மறுகினூ டேகி மன்னிய திருப்பதி யதனிற், றென்றிசை வாயில் கடந்துமுன் போந்து சேட்படு திருவெல்லை யிறைஞ்சிக், கொன்றைவார் சடையா னருளையே நினைவார் கொள்ளிடத் திருநதி கடந்தார் (௧௧௦)

(௱௬) ஐந்துபேர் அறிவும் கண்களே கொள்ள - (சத்தம், பரிசம், ரூபம், ரசம், கந்தம் என) ஐந்தாகப் பெயர்ந்த புலவுணர்ச்சி ஐந்தையும் (ஏனைய இந்திரியங்களன்றிக்) கண்களே கொள்ளவும். கரணங்கள் நான்கும் சிந்தையே ஆக - (மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்னும்) அந்தக்கரணங்கள் நான்கும் (அவ்வாறின்றி ஒன்றாய்) சித்தமே ஆகவும். குணம் ஒருமூன்றும் திருந்து சாத்துவிகமே ஆக - (சத்துவம், ராசதம், தாமதம் என்னும்) மூன்றுகுணங்களும் (அவ்வாறின்றி ஒன்றாய்) சத்துவ குணமே ஆகவும். இந்து - சந்திரன். திளைத்து - முழுகி. மலர்ந்தார் - பூரித்தார். (௱௭) தெண்ணிலா மலர்ந்த வேணியாய் - தெளிந்த (பரிசுத்தமான) இளஞ்சந்திரன் விளங்கும் சடையை உடையவனே. வாலிதாம் - மேலான. (௱௮) தொண்டனார் - சுந்தரமூர்த்திசுவாமிகள். தாளம் எற்று - முத்துக்களை வீசும். பொன்னி - காவிரி. மடுத்த - பாய்கின்ற. வண்ணப் பண்ணை ஆரூரில் - அழகிய வயல் சூழ்ந்த திருவாரூரில். (௱௯) ஆடுகின்றவர் - நடராசர். நீடுவான் பணிய - நீண்ட மேகமண்டலமுந் தாழும்படி. பொன்வரை - மேருமலை. (௱௰) மன்றல் ஆர் - வாசனை பொருந்திய. மறுகினூடே - வீதிவழியே. சேட்படு - தூரத்தில் இருக்கும்.

வேறு

புறந்தருவார் போற்றிசைப்பப் புரிமுந்நூ லணிமார்பர்
அறம்பயந்தா டிருமுலைப்பா லமுதுண்டு வளர்ந்தவர்தாம்
பிறந்தருளும் பெரும்பேறு பெற்றதென முற்றுலகிற்
சிறந்தபுகழ்க் கழுமலமாந் திருப்பதியைச் சென்றணைந்தார் (ககக)

பிள்ளையார் திருவவதா ரஞ்செய்த பெரும்புகலி
யுள்ளுநான் மிதியேனென் றாரெல்லைப் புறம்வணங்கி
வள்ளலார் வலமாக வரும்பொழுதின் மங்கையிடங்
கொள்ளுமால் விடையானு மெதிர்காட்சி கொடுத்தருள (ககஉ)

மண்டியபே ரன்பினால் வன்றொண்டர் நின்றிறைஞ்சித்
தெண்டிரைவே லையின்மிதந்த திருத்தோணி புரத்தாரைக்
கண்டுகொண்டேன் கயிலையினில் வீற்றிருந்த படியென்று
பண்டருமின் னிசைபயின்ற திருப்பதிகம் பாடினார் (ககங)

---

திருக்கழுமலம் - பண் - தக்கேசி.

திருச்சிற்றம்பலம்

சாதலும்பிறத்தலுந்தவிர்த்தெனைவகுத்துத்தன்னருடந்தவெந்தலைவனை மலையின், மாதினைமதித்தங்கோர்பால்கொண்டமணியைவருபுனற்சடையிடைவைத்தவெம்மானை, ஏதிலேன்மனத்துக்கோரிரும்புண்டநீரையெனவகையொருவனையெங்கள்பிரானைக், காதில்வெண்குழையனைக்கடல்கொளமிதந்தகழுமலவளநகர்க்கண்டுகொண்டேனே

செழுமலர்க்கொன்றையுங் கூவிளமலரும் விரவியசடைமுடியடிகளை நினைந்திட், டழுமலர்க்கண்ணிணையடியவர்க்கல்லாலறிவரிதவன்றிருவடியிணையிரண்டுங், கழுமலவளநகர்க்கண்டுகொண்டாரூரன்சடையன்றன்காதலன்பாடியபத்துந், தொழுமலரெடுத்தகையடியவர்தம்மைத்துன்பமுமிடும்பையுஞ்சூழகிலாவே

திருச்சிற்றம்பலம்

---

இருக்கோல மிடும்பெருமா னெதிர்நின்று மெழுந்தருள
வெருக்கோளுற் றதுங்கநீ ராருமேற் செலவிரும்பிப்
பெருக்கோதஞ் சூழ்புறவப் பெரும்பதியை வணங்கிப்போய்த்
திருக்கோலக் காவணங்கிச் செந்தமிழ்மா லைகள்பாடி (ககச)

(ககக) புறந்தருவார் - தம்மைச்சூழ்ந்து வரும் அடியவர்கள். அறம்பயந்தாள் - (முப்பத்திரண்டு) அறங்களையும் வளர்த்த பார்வதிதேவியார். அமுது உண்டுவளர்ந்தவர் - ஞானமுலையுண்டு வளர்ந்தவராகிய திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள். கழுமலம் - சீகாழி. (ககஉ) பிள்ளையார் - ஆளுடையபிள்ளையார். (ககங) மண்டிய - நிறைந்த. மகாப்பிரளயகாலத்திலும் சீகாழி அழியாமல் ஓர் தோணியைப்போல மிதக்கும் ஆகலின் "வேலையின்மிதந்த திருத்தோணிபுரம்" என்றார்.

தேனார்க்கு மலர்ச்சோலைத் திருப்புன்கூர் நம்பர்பால்
ஆனாப்பே ரன்புமிக வடிபணிந்து தமிழ்பாடி
மானார்க்குங் கரதலத்தார் மகிழ்ந்தவிடம் பலவணங்கிக்
கானார்க்கு மலர்த்தடஞ்சூழ் காவிரியின் கரையணைந்தார் (ககரு)

வம்புலா மலரலைய மணிகொழித்து வந்திழியும்
பைம்பொன்வார் கரைப்பொன்னிப் பயிறீர்த்தம் படிந்தாடித்
தம்பிரான் மயிலாடு துறைவணங்கித் தாவில்சீர்
அம்பர்மா காளத்தி னமர்ந்தபிரா னடிபணிந்தார் (ககசு)

மின்னார்செஞ் சடையண்ணல் விரும்புதிருப் புகலூரை
முன்னாகப் பணிந்தேத்தி முதல்வன்ற னருணினைந்து
பொன்னாரு முத்தரியம் புரிமுந்நூ லணிமார்பர்
தென்னாவ லூராளி திருவாரூர் சென்றணைந்தார் (ககஎ)

தேராரு நெடுவீதித் திருவாரூர் வாழ்வார்க்குக்
காராத காதலினம் மாரூர னுமைக்க
வாராநின் றானவனை மகிழ்ந்தெதிர்கொள் வீரென்று
நீராருஞ் சடைமுடிமே னிலவணிந்தா ரருள்செய்தார் (ககஅ)

தம்பிரா னருள்செய்யத் திருத்தொண்ட ரதுசாற்றி
யெம்பிரா னாரூர னிருந்தபரி சிதுவானால்
நம்பிரா னாராவா ரவரன்றே யெனுநலத்தால்
உம்பர்நா டிழிந்ததென வெதிர்கொள்ள வுடனெழுந்தார் (கககூ)

மாளிகைகண் மண்டபங்கண் மருங்குபெருங் கொடிநெருங்கத்
தாளினெடுந் தோரணமுந் தழைக்கமுகுங் குழைத்தொடையும்
நீளிலைய கதலிகளு நிறைந்தபசும் பொற்றசும்பும்
ஒளிநெடு மணிவிளக்கு முயர்வாயி றொறுநிறைத்தார். (கஉ0)

(ககச) இருக்கு ஓலமிடும் - வேதம் (இன்ன தன்மையனென்று சொல்லாது) முறையிடும். எதிர்ந்தன்றும் எழுந்தருளி - மறைய. வெருக்கொண்டுற்று - அச்சமடைந்து. பெருக்கு ஓதம் - பெருக்கினையுடைய கடல். புறவம் - சீகாழி. (ககரு) தேன் ஆர்க்கும் - வண்டுகள் ஆரவாரிக்கும். ஆனாப்பேர் அன்பு - அடங்காத பேர் அன்பு. மான் ஆர்க்கும் - மான் சப்திக்கும். இடம் - க்ஷேத்திரங்கள். கான் ஆர்க்கும் - மணம் பொருந்திய. (ககசு) வம்பு உலா - வாசனைவீசும். பயில - (நூல்களானும், ஆன்றோர்களானும்) சொல்லப்பட்ட. (கககூ) தம்பிரான் - சிவபெருமான். சிவபெருமானின் அருட்டிருவடிவே வன்றொண்டப்பெருமான் என்னும் நயந்தோன்ற "நம்பிரா னாராவா ரவரன்றே யெனுநலத்தால்" என்றார். (கஉ0) தாளினெடுந் தோரணமும் - கால்கள் (நாட்டி) அவைகளில் கட்டப்பட்ட நெடிய தோரணங்களையும், பனை தென்னை முதலியவற்றின் குருத்துக்களாலாய தோரணங்களையுமெனினும் அமையும். குழைத்தொடையும் - மாவிலை முதலிய தழைகளால் கட்டப்பட்ட தோரணங்களையும். கதலிகளும் - வாழை மரங்களையும். பொன் தசும்பும் - பொன்னாலாகிய பூரண கும்பங்களையும். ஒளி - ஒழுங்காக.

சோதிமணி வேதிகைக ணேறுஞ்சாந் தணிநீவிக
கோதில்பொரி பொற்சுண்ணங் குளிர்தரள மணிபரப்பித்
தாதவிழ்பூந் தொடைமாலைத் தண்பந்தர் களுஞ்சமைத்து
வீதிகளுண் கொடிகளுடன் விரைப்பனிநீர் மிகத்தெளித்தார். (கஉக)

மங்கலகீ தம்பாட மழைநிகர்தூ ரியமுழங்கச்
செங்கயற்கண் முற்றிழையார் தெற்றிதொறு நடம்பயில
நங்கள்பிரான் திருவாரூர் நகர்வாழ்வார் நம்பியைமுன்
பொங்கெயினீ டிருவாயிற் புறமுறவந் தெதிர்கொண்டார் (கஉஉ)

வேறு.

வந்தெதிர் கொண்டு வணங்குவார்முன் வன்றொண்ட ரஞ்சலி கூப்பிவந்து
சிந்தை களிப்புற வீதியூடு செல்வார் திருத்தொண்டர் தம்மைநோக்கி
யெந்தை யிருப்பது மாரூரவ ரெம்மையு மாள்வரோ கேளீரென்னுஞ்
சந்த விசைப்பதி கங்கள்பாடித் தம்பெரு மான்றிரு வாயில்சார்ந்தார் ()

திருவாரூர் - பண் - காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்

கரையுங்கடலுமலையுங்காலையுமாலையுமெல்லா
முரையில்விரவிவருவானொருவனுருத்திரலோகன்
வரையின்மடமகள்கேள்வனவானவர்தானவர்க்கெல்லா
மரையனிருப்பதுமாரூரவரெம்மையுமாள்வரோகேளீர்

எந்தையிருப்பதுமாரூரவரெம்மையுமாள்வரோவென்று
சிந்தைசெயுந்திறமவல்லான்றிருமருவுந்திரடோளன்
மந்தமுழவம்யம்பும்வளவயலவாரூரன்
சந்தமிசையொடும்வல்லார்தாம்புகழெய்துவார்தாமே

திருச்சிற்றம்பலம்.

வானுற நீடிரு வாயினோக்கி மண்ணுற வைந்துறுப் பால்வணங்கித்
தேனுறை கற்பக வாசமாலைத் தேவா சிரியன் றொழுதிறைஞ்சி
யூனு முயிரு முருக்குமன்பா லுச்சி குவித்தசெங் கைகளோடுந்
தூநறுங் கொன்றையன் மூலட்டானஞ் சூழ்திரு மாளிகை வாயில் புக்கார்.

புற்றிடங் கொண்ட புராதனனைப் பூங்கோயின் மேய பிரானையார்க்கும்
பற்றிட மாய பரம்பொருளைப் பார்ப்பதி பாகனைப் பங்கயத்தாள்
அர்ச்சனை செய்ய வருள்புரிந்த வண்ணலை மண்மிசை வீழ்ந்திறைஞ்சி [றார்.
நற்றமிழ் நாவலர் கோனுடம்பா னன்மையின் றன்மையை மெய்ம்மை பெற்

(கஉக) வேதிகைகள் - திண்ணைகள். நீவி - மெழுகி. துகள் அடங்க - தூசுகள் அடங்கும்படி. (கஉஉ) தூரியம் - முரசு முதலிய வாத்தியங்கள். தெற்றிதொறும் - நடனசாலைகள்தோறும். (கஉச) மண்ணுற-பூமியில திருமேனிபடிய. ஐந்துறுப்பால் - பஞ்சாங்க விதிமுறைப்படி. (கஉரு) பங்கயத்தாள் - இலக்குமிதேவி.

அன்பு பெருக வுருகியுள்ள மலையவட் டாங்கபஞ் சாங்கமாக, முன்பு
முறைமையி ஞல்வணங்கி முடிவிலாக் காதன் முதிரவோங்கி, நன்புல ஞகிய
வைந்துமொன்றி நாயகன் சேவடி யெய்தப்பெற்ற, இன்பவெள் ளத்திடை
மூழ்கிநின்றே யின்னிசை வண்டமிழ் மாலைபாட (கஉசு)

வாழிய மாமறைப் புற்றிடங்கொண் மன்னவ ஞரரு ளாலோர்வாக்குத்
தோழமை யாக வுனக்குநம்மைத் தந்தன நாமுன்பு தொண்டுகொண்ட
வேள்வியி லன்றுநீ கொண்டகோல மென்றும் புனைந்துநின் வேட்கைதீர
வாழிமண் மேல்விளை யாடுவாயென் றாரூரர் கேட்க வெழுந்ததன்றே. ()

கேட்க விரும்பிவன் றொண்டரென்றுங் கேடிலா தானை யிறைஞ்சிநின்றே
யாட்கொள வந்த மறையவனே யாரூ ரமர்ந்த வருமணியே
வாட்கயல் கொண்டகண் மங்கைபங்கா மற்றுன் பெரிய கருணையன்றே
நாட்கம லப்பதந் தந்ததின்று நாயினே னைப்பொரு ளாகவென்றார். (கஉஅ)

என்று பலமுறை யால்வணங்கி யெய்திய வுள்ளக் களிப்பினோடும்
வென்றி யடல்விடை போனடந்து வீதி விடங்கப் பெருமான்முன்பு
சென்று தொழுது துதித்துவாழ்ந்து திருமாளி கைவலஞ் செய்துபோந்தார்
அன்று முதலடி யார்களெல்லாந் தம்பிரான் றோழரென் றேயறைந்தார் ()

மைவளர் கண்ட ரருளினாலே வண்டமிழ் நாவலர் தம்பெருமான்
சைவ விடங்கி னணிபுனைந்து சாந்தமு மாலையுந் தாருமாகி
மெய்வளர் கோலமெல் லாம்பொலிய மிக்க விழுத்தவ வேந்தரென்னத் [றூர்.
தெய்வ மணிப்புற்று ளாரைப்பாடித் திளைத்து மகிழ்வொடுஞ் செல்லாநின்

வேறு.

இதற்குமு னெல்லை யில்லாத் திருநக ரிதனுள் வந்து
முதற்பெருங் கயிலை யாதி முதல்வர்தம் பங்கி னுட்குப்
பொதுக்கடிந் துரிமை செய்யும் பூங்குழற் சேடி மாரிற்
கதித்தபூ ணேந்து கொங்கைக் கமலினி யவத ரித்தாள். (கஙக)

கதிர்மணி பிறந்த தென்ன வுருத்திர கணிகை மாராம்
பதியிலார் குலத்திற் றோன்றிப் பரவையா ரென்னு நாமம்
விதியுளி விளக்கத் தாலே மேதகு சான்றோ ரான்ற
மதியணி புனித னன்னாண் மஙகல வணியாற் சாற்றி. (கஙஉ)

(கஉசு) அட்டாஙகம - சிரம, இரண்டு கைகள், இரண்டு முழந்தாள்கள, இரண்டு காதுகள், நெற்றி இவைகள் பூமியிலபொருநதுமபடி நமஸ்கரிததல். பஞ்சாஙகம - சிரம, இரண்டு கைகள், இரண்டு முழநதாளகள இவைகள பூமியில பொருந்த வண ங்குதல். (கஉஎ) மனனவஞா தியாகேசபபெருமான. வேளவியில் - கலியாணததில (கஉஅ) கேடு இலாதானை-அழிவிலலாத சிவபிரானை. (கஙக) முதல்வாதம பங்கினுட்கு-பாாவதிதேவியாருககு. பொதுககடிநது - சிறபபாக கதிதத - விலையுயாநத. (கஙஉ) மதியணி புனித நனனாள - திருவாதிரை திருநடசததிரததில.

பாவினர் காப்புப் போற்றிப் பயில்பெருஞ் சுற்றந் திங்கள்
விரவிய பருவந் தோறும் விழாவணி யெடுப்ப மிக்கோர்
வரமலர் மங்கை யிங்கு வந்தன ளென்று சிந்தை
தரவரு மகிழ்ச்சி பொங்கத் தளர்நடைப் பருவஞ் சேர்ந்தார் (௧௩௩)

மானிளம் பிணையோ தெய்வ வளரிள முகையோ வாசத்
தேனிளம் பதமோ வேலைத் திரையிளம் பவள வல்லிக்
கானிளங் கொடியோ திங்கட் கதிரிளங் கொழுந்தோ காமன்
றனிளம் பருவங் கற்குந் தனியிளந் தனுவோ வென்ன. (௧௩௪)

நாடுமின் பொற்பு வாய்ப்பு நாளுநாள் வளர்ந்து பொங்க
ஆடுமென் கழங்கும் பந்து மம்மனை யூச லின்ன
பாடுமின் னிசையுந் தங்கள் பனிமலை வல்லி பாதங்
கூடுமன் புருகப் பாடுங் கொள்கையோர் குறிப்புத் தோன்ற. (௧௩௫)

பிள்ளைமைப் பருவ மீதாம் பேதைமைப் பருவ நீங்கி
யள்ளுதற் கமைந்த பொற்பா லனங்கன்மெய்த் தனங்க ளீட்டங்
கொள்ளமிக் குயர்வ போன்ற கொங்கைகோங் கரும்பை வீழ்ப்ப
உள்ளமெய்த் தன்மை முன்னை யுண்மையுந் தோன்ற வுய்ப்பார் ()

பாங்கியர் மருங்கு சூழப் படரொளி மறுகு சூழ்ந்த
தேங்கமழ் குழலின் வாசந் திசையெலாஞ் சென்று சூழ
ஓங்குபூங் கோயி லுள்ளா ரொருவரை யன்பி னோடும்
பூங்கழல் வணங்க வென்றும் போதுவா ரொருநாட் போந்தார் (௧௩௭)

அணிசிலம் படிகள் பாரவென் றடிப்படுத் தனமென் றார்ப்ப
மணிகிளர் காஞ்சி யல்குல் வரியரா வுலகை வென்ற
துணிவுகொண் டார்ப்ப மஞ்சு சரிகுழற் கழிய விண்ணும்
பணியுமென் றினவண் டார்ப்பப் பரவையார் போதும் போதில் ()

(௧௩௩) காப்புப்போற்றி - காவலைப்பேணி - (குழந்தைக்குச் சுகமாக வாழவேண்டிக் குலதெய்வங்களைப் பரவி வணங்குதல்) திங்கள் - மாதங்கள். தாலப்பருவம் ஐந்தாமாதமும், செங்கீரைப்பருவம் ஏழாமாதமும், சப்பாணிப்பருவம் ஒன்பதாமாதமுமாகப் பருவங்கள் மாதவரையறையால் வருதல்பற்றி "திங்கள்விரவிய பருவம்" என்றார். பருவந்தோறும் விழாவணிசெய்தலாவது, ஒவ்வொரு பருவந்தோறும் வேண்டிய சிறப்புகளைச் செய்தல். (௧௩௪) பிணையோ - பெண்மானோ. தெய்வவளர் இளமுகையோ - கற்பகத் தருவின் வளரும் இளமையான அரும்போ. தனுவோ - வில்லோ. (௧௩௫) நாடும் இன் பொற்பு வாய்ப்பு யாவரும் விரும்பத்தக்க இனிய அழகின் சிறப்பு. பனிமலைவல்லி - பார்வதி தேவியார். (௧௩௬) பிள்ளைமைப் பருவம் - குழந்தைப்பருவமாய ஐந்துவயது. பேதைமைப் பருவம் - ஐந்துவயதுமுதல் ஏழுவயதளவுமுள்ளது. அனங்கன் மன்மதன். தனங்கள் ஈட்டங்கொள்ள - திரவியக்குவையைத் தாம்பெற்றுக்கொள்ள. வீழ்ப்ப - தோற்கச்செய்ய. முன்னையுண்மையாவது - திருக்கயிலாயத்தில் உமாதேவியாருக்குச் சேடியராயிருந்தது. (௧௩௮) பார் வென்று அடிப்படுத்தனம் - இப்பூமியைவென்று கீழ்ப்

புற்றிடம் விரும்பி னாரைப் போற்றினர் தொழுது செல்வார்
சுற்றிய பரிச னங்கள் சூழவா ரூடைய நம்பி
நற்பெரும் பான்மை கூட்ட நகைபொதிந் திலங்கு செவ்வாய்
விற்புரை நுதலின் வேற்கண் விளங்கிழை யவரைக் கண்டார் (ககூ)

வேறு

கற்பகத்தின் பூங்கொம்போ காமன்றன் பெருவாழ்வோ
பொற்புடைய புண்ணியத்தின் புண்ணியமோ புயல்சுமந்து
விற்குவளை பவளமலர் மதிபூத்த விரைக்கொடியோ
அற்புதமோ சிவனருளோ வறியேனென் றதிசயித்தார் (கஉ0)

ஓவியநான் முகனெழுத வொண்ணாமை யுள்ளத்தான்
மேவியதன் வருத்தமுற விதித்ததொரு மணிவிளக்கோ
மூவுலகின் பயனாகி முன்னின்ற தெனநினைந்து
நாவலர்கா வலர்நின்றார் நடுநின்றார் படைமதனார் (கஉக)

தண்டரள மணித்தோடுந் தகைத்தோடுங் கடைபிறழுங்
கெண்டைநெடுங் கணவியப்பக் கிளரொளிப்பூ ணாரவனை
யண்டர்பிரான் திருவருளா *லயலறியா மனம்விரும்பப்
பண்டைவிதி கடைகூட்டப் பரவையா ருங்கண்டார் (கஉஉ)

கண்கொள்ளாக் கவின்பொழிந்த திருமேனி கதிர்விரிப்ப
விண்கொள்ளாப் பேரொளியா னெதிர்நோக்கு மெல்லியலுக்
கெண்கொள்ளாக் காதலின்முன் பெய்தாத தொருவேட்கை
மண்கொள்ளா நாண்மடமச் சம்பயிர்ப்பை வலிந்தெழலும் (கஉங)

பதித்திருக்கும் அலகில் மணிவளாகஞ்சூழ் திகம்பல்கானத்தின் மீதணிந்த முத்து முதலிய மணிகளால் சேர்க்கப்பட்ட பாஞ்சி என்னும் ஆபரணம். வரிஅரவு உலகை - புள்ளிகளுடைய பாம்புகள் வாழும் நாகலோகத்தை. கரிகுழற்கு மஞ்சு அழிய - கருண்ட கூந்தலுக்குமேகம் தோற்றமையால். பார் என்பதற்குப் பூமியிலுள்ள பெண்களை என்றும், வரியரவல்குல் உலகைவென்ற எனக்கூட்டிப் புள்ளிகளையுடைய பாம்பின் படத்தைப் போன்ற நிதம்பம் ஆடவர்களை வென்றது என்றும் கூறுவாருமுளர். (ககூ) பான்மை கூட்ட - சிவனருள் சேர்க்க. புரை - ஒத்த. விளங்கு இழை - பிரகாசிக்கின்ற ஆபரணங்களைத் தரித்த பரவையார். (கஉ0) பெருவாழ்வோ - இரதியோ. புயல் சுமந்து வில் குவளை பவளம் மலர் மதி பூத்த விரை கொடியோ எனப்பிரிக்க. (கஉக) ஓவியம் - சித்திரம். உள்ளத்தால் விதித்ததொரு மணிவிளக்கோ எனக்கூட்டுக. (கஉங) கவின் - அழகு. சிவவடிவேயானாரென்பதை வலியுறுத்த "விண்கொள்ளாப் பேரொளியான்" என்றார். எண்கொள்ளா - அளவிடுதற்கு அரிய. நாணம் - பெண்களுக்கு இயல்பாயுள்ளதோர் தன்மை. மடம் - எல்லாமறிந்தும் அறியாததுபோலிருத்தல். அச்சம் - பெண்தன்மையால் என்றுங்காணாத ஒன்றைக்கண்ட விடத்து அஞ்சுதல். பயிர்ப்பு - (கணவரல்லாமல்) மற்றையோர்கை தன்மேற்படின் தேகம் அருவருத்து நிற்றல்.

* அயலறியாமனம் விரும்பி என்றும், அறியாமல் மனம் விரும்ப என்றும் பாடம்.

முன்னேவந் தெதிர்தோன்று முருகனோ பெருகொளியாற்
றன்னேரின் மாரனோ தார்மார்பின் விஞ்சையனோ
மின்னேர்செஞ் சடையண்ணல் மெய்யருள்பெற் றுடையவனோ
என்னேயென் மனந்திரித்த விவன்யாரோ வெனநினைந்தார் (௧௪௪)

அண்ணலவன் றன்மருங்கே யளவிறந்த காதலினால்
உண்ணிறையுங் குணநான்கு மொருபுடைசாய்ந் தனவெனினும்
வண்ணமலர்க் கருங்கூந்தன் மடக்கொடியை வலிதாக்கிக்
கண்ணுதலைத் தொழுமன்பே கைக்கொண்டு செலவுய்ப்ப (௧௪௫)

பாங்கோடிச் சிலைவளைத்துப் படையனங்கன் விடுபாணந்
தாங்கோலி யெம்மருங்குந் தடைசெய்ய மடவாலுந்
தேங்கோதை மலர்க்குழன்மேற் சிறைவண்டு கலந்தார்ப்பப்
பூங்கோயி லமர்ந்தபிரான் பொற்கோயில் போய்ப்புகுந்தாள் (௧௪௬)

வன்றொண்ட ரதுகண்டென் மனங்கொண்ட மயிலியலின்
இன்றொண்டைச் செங்கனிவா யிளங்கொடிதான் யாரென்ன
அன்றங்கு முன்னின்றா ரவர்நங்கை பரவையார்
சென்றும்பர் தரத்தார்க்குஞ் சேர்வரியா ரெனச்செப்ப (௧௪௭)

பேர்பரவை பெண்மையினிற் பெரும்பரவை விரும்பல்கு
லார்பரவை யணிதிகழு மணிமுறுவ லரும்பரவை
சீர்பரவை யாயினா டிருவுருவின் மென்சாயல்
ஏர்பரவை யிடைப்பட்ட வென்னாசை யெழுபரவை (௧௪௮)

(௧௪௪) மாரனோ - மன்மதனோ. விஞ்சையனோ - வித்தியாதரனோ. ஓகாரங்கள், ஐயம். (௧௪௭) உம்பர் தரத்தார்க்கும் - தேவர்கட்கும். (௧௪௮) பேர்பரவை - பெயர் பரவை என்று சொல்லப்படுவது. பெரு உம்பர் அவை விரும்பு அல்குலார் பரவு ஐ - பெரிய தேவர் கூட்டம் விரும்புகின்ற திலோத்தமை முதலிய தேவமாதர்கள் துதிசெய்யத் தக்க தெய்வமாம். மணிமுறுவல் அரும்பர் அவை - முத்துக்களைப்போன்ற பற்கள் முல்லை அரும்புகளையொக்கும். சீர்பரவை ஆயினாள் - பரவை என்னுங் கூத்தையுடைய இலக்குமியை யொத்தவள். ஏர்பரவை இடைப்பட்ட - அழகிய சமுத்திரத்தினிடத்தில் பொருந்திய. என் ஆசை எழுபரவை - என்னுடைய ஆசையானது ஏழு சமுத்திரங்களையும் ஒத்திருக்கின்றது. பெரும்பரவை என்பதற்கு, பெரு உம்பர் அவ்வை எனப்பிரித்து, பெரிய தேவர்களுக்குத் தாய்போன்றவள் என்றும், விரும்பல்குலார்பரவை என்பதற்கு, விரும்பு அல்குல் ஆர்பு அரவு ஐ எனப்பிரித்து, விரும்புகின்ற நிதம்பத்தழகின் நிறைவானது ஆதிசேடன் படத்தின் அழகை யொக்கும் என்றும், சீர்பரவை ஆயினாள் என்பதற்கு, சீர் பரவு ஐ ஆயினாள் எனப்பிரித்து, இலக்குமி துதிசெய்யத் தக்க அழகையுடையவளது என்றும் பொருள் விரிப்பினும் பொருந்தும். அவ்வை என்பது அவை என விகாரமாயிற்று.

என்றினைய பலவுநினைந் தெம்பெருமா னருள்வகையான்
முன்றொடர்ந்து வருங்காதன் முறைமையினாற் றொடக்குண்டு
நன்றெனையாட் கொண்டவர்பா னண்ணுவனென் றுண்மகிழ்ந்து
சென்றுடைய நம்பியும்போய்த் தேவர்பிரான் கோயில்புக (கசகூ)

பரவையார் வலங்கொண்டு பணிந்தேத்தி முன்னரே
புரவலனார் கோயிலினின் றொருமருங்கு புறப்பட்டார்
விரவுபெருங் காதலினான் மெல்லியலார் தமைவேண்டி
யரவினா ரம்புனைந்தா ரடிபணிந்தா ராரூரர் (கருO)

அவ்வாறு பணிந்தேத்தி யணியாரூர் மணிப்புற்றின்
மைவாழுந் திருமிடற்று வானவர்பா னின்றும்போந்
தெவ்வாறு சென்றாளென் னின்னுயிரா மன்னமெனச்
செவ்வாயவெண் ணகைக்கொடியைத் தேடுவா ராயினார் (கருக)

வேறு

பாச மாம்வினைப் பற்றறுப் பான்மிகும்
ஆசை மேலுமொ ராசை யளிப்பதோர்
தேசின் மன்னியென் சிந்தை மயக்கிய
ஈச னாரரு ளென்னெறிச் சென்றதே. (கருஉ)

உம்பர் நாயகர் தங்கழ லல்லது
நம்பு மாறறி யேனை நடுக்குற
வம்பு மால்செய்து வல்லியி னொல்கியின்
றெம்பி ரானரு ளெந்நெறிச் சென்றதே (கருங)

பந்தம் வீடு தரும்பர மன்கழல்
சிந்தை யார்வுற வுன்னுமென் சிந்தையை
வந்து மால்செய்து மானென வேவிழித்
தெந்தை யாரரு ளெந்நெறிச் சென்றதே (கருச)

என்று சாலவு மாற்றல ரென்னுயிர்
நின்ற தெங்கென நித்திலப் பூண்முலை
மன்றல் வார்குழல் வஞ்சியைத் தேடுவான்
சென்று தேவா சிரியனைச் சேர்ந்தபின். (கருரு)

(கசகூ) தொடக்குண்டு - பந்திக்கப்பட்டு. (கருO) மெல்லியலார் தமைவேண்டி - பரவையாரைச் சேர விரும்பி. (கருக) மைவாழும் திருமிடற்று வானவன்பால - திருநீலகண்டப் பெருமானிடத்தில. (கருஉ) பாசம் ஆம் வினை பற்று அறுப்பான - பாசசம்பந்தத்தால் வரும் இருவினையின் தொடர்பை ஒழித்தருளுஞ் சிவபெருமானிடத்து. அருளால் வந்தவரை "அருள்" என்றது உபசாரம். (கருங) வம்புமால் - நிலையில்லாத விருப்பம். வல்லியினொல்கி - கற்பகக்கொடிபோல துவண்டு. (கருரு) நித்திலப்பூண் முத்துமாலை யணிந்த. மன்றல்வார் குழல் - வாசனைவீசும் நீண்ட கூந்தலையுடைய.

காவி நேர்வருங் கண்ணியை நண்ணுவான
யாவ ரோடு முரையியம் பாதிருந்
தாவி நல்குவ ராரூரை யாண்டவர்
பூவின் மங்கையைத் தந்தெனும் போழ்தினில் (௧௫௬)

நாட்டு நல்லிசை நாவலூ ரன்சிந்தை
வேட்ட மின்னிடை யின்னமு தத்தினைக்
காட்டு வன்கட லைக்கடைந் தெம்பிரான்
பூட்டு மேழ்பரித் தேரோன் கடல்புக (௧௫௭)

எய்து மென்பெடை யோடிரை தேர்ந்துண்டு
பொய்கை யிற்பகல் போக்கிய புள்ளினம்
வைகு சேக்கைகண் மேற்செல வந்தது
பையுண் மாலை தமியோர் பனிப்புற (௧௫௮)

பஞ்சின் மெல்லடிப் பாவைய ருள்ளமும்
வஞ்ச மாக்கள் வல்வினை யும்மரன்
அஞ்செ ழுத்து முணரா வறிவிலோர்
நெஞ்சு மென்ன விருண்டது நீண்டவான் (௧௫௯)

மறுவில் சிந்தைவன் றொண்டர் வருந்திட
உறும ருங்குலார்க் கியார்பிழைப் பாரென்று
நறும லர்க்கங்கு னங்கைமுன் கொண்டபுன்
முறுவ லென்ன முகிழ்த்தது வெண்ணிலா (௧௬0)

அரந்தை செய்வார்க் கழுங்கித்தம் மாருயிர்
வரன்கை தீண்ட மலர்குல மாதர்போற்
பரந்த வெம்பகற் கொல்கிப் பனிமதிக்
கரங்க டீண்ட வலர்ந்த கயிரவம் (௧௬௧)

(௧௫௬) காவிநேர்வரும் கண்ணியை - நீலோற்பலமலரை யொத்த கண்களையுடைய பாவையாரை. (௧௫௭) சிந்தைவேட்ட - உள்ளம் விரும்பிய. ஏழ்பரித்தேரோன் - சூரியன். (௧௫௮) எய்து மென் பெடையோடு - பிரியாதிருக்கும் மெல்லிய தன்மையுடைய பெண்பறவைகளோடு. புள்ளினம் - பறவைக்கூட்டங்கள். வைகு சேக்கைகண்மேல் செல - தாம் வசிக்குங் கூடுகளிற்செல்ல. தமியோர் பனிப்புற - பிரிவுற்றநாயகனும் நாயகியும் நடுக்கமடைய. பையுள் மாலை வந்தது - துன்பத்தைக்கொடுக்கும் மாலைக்காலம் வந்தது. (௧௬0) மறுவில் - குற்றமில்லாத. உறுமருங்குலார்க்கு - வருந்த இடுப்பினையுடைய பெண்களுக்கு, (அவர்கள் ஆசை வலையினின்றும்). கங்குல் நங்கை - இரவாகியபெண். புன்முறுவல் - புன்சிரிப்பு. வெண்ணிலா முகிழ்த்தது - வெள்ளிய சந்திரன் உதயமாயினன். (௧௬௧) அரந்தை செய்வார்க்கு அழுங்கி - தம்மீது காதல் கொண்டு துன்பஞ்செய்யும் அன்னிய நாயகர்களுக்குப் பயந்து வருந்தி. தம் ஆருயிர் வரன் கைதீண்ட - தமது அருமையாகிய உயிர்போன்ற கணவர்கள் தொட்டால். பகற்கு ஒல்கி - சூரியனுக்குச் சுருங்கி. பனிமதிகரங்கள் தீண்ட - குளிர்ச்சிபொருந்திய சந்திரனது கிரணங்கள்பட. கயிரவம் அலர்ந்த - ஆம்பல்கள் மலர்ந்தன.

*தோற்று மன்னுயிர் கட்கெலாந் தூய்மையே*
*சாற்று மின்பமுந் தண்மையுந் தந்துபோ*
*யாற்ற வண்டமெ லாம்பரந் தண்ணல்வெண்*
*ணீற்றின் பேரொளி போன்றது நீணிலா* (கசுஉ)

*வாவி புள்ளொலி மாற்றிய மாலையி*
*னாவ லூரரு நங்கை பரவையாம்*
*பாவை தந்த படர்பெருங் காதலு*
*மாவி சூழ்ந்த தனிமையு மாயினார்* (கசுந)

*தந்தி ருக்கண் ணெரிதழ லிற்பட்டு*
*வெந்த காமன் வெளியே யுருசெய்து*
*வந்தென் முன்னின்று வாளி தொடுப்பதே*
*யெந்தை யாரரு ளிவ்வண்ண மோவென்பார்.* (கசுச)

*ஆர்தி கண்டுமென் மேனின் றழற்கதிர்*
*தூர்ப்ப தேயெனைத் தொண்டுகொண் டாண்டவர்*
*நீர்தங் கங்கை நெடுங்கங்கை நீண்முடிச்*
*சார்த்தும் வெண்மதி போன்றிலை தண்மதி.* (கசுரு)

*அடுத்து மேன்மே லலைதெழு மாழியே*
*தடுத்து முன்னெனை யாண்டவர் தாமுனக்*
*கடுத்த நஞ்சுண் டிருந்த கரங்களால்*
*எடுத்து நீட்டுநீ யென்னையின் றென்செயாய்* (கசுசு)

*பிறந்த தெங்கள் பிரான்மல யத்திடைச்*
*சிறந்த ணைந்தது தெய்வநீர் நாட்டணி*

(கசுந) வாவி - தடாகங்களில் புள் ஒலி மாற்றிய - பறவையின் கூச்சலை நீக்கிய. தனிமையும் - திருவாரூரும் பரவையிடத்து வைத்த விருப்பையும், அதைமுடிக்கும் திருவருளையும் அன்றிப் பிறபால் உரையாடுதல் முதலிய விடயங்களைச் செய்யாதிருந்தார் என்பது தோன்ற "காதலும் ஆவிசூழ்ந்த தனிமையும் ஆயினார்" என்றார். (கசுரு) ஆர்தி கண்டும் - (பரவையால் யான்படும் காம) வேதனையைப் பார்த்திருந்தும் சரங்கம் அலை. சார்த்தும் வெண்மதி - அணிந்துள்ள வெண்ணிலா. என்னை ஆண்டவர், திருமுடியில் கங்கையோடு அணிந்துள்ள வெண்மதியாயின், எனக்குத் தண்ணளிசெய்வாய், அங்ஙனஞ் செய்யாது சுடுதலால் நீ வேறு மதிபோலும் என்றார் எனக. (கசுசு) அலைத்து எழும் ஆழியே - அலைவீசி எழுகின்ற கடலே (கசுஎ) தமிழ்மாருதம்-தமிழுடன் பழகிய தென்றற்காற்றே. பிறந்தது எங்கள் பிரான் மலயத்திடை - (நீ) உற்பத்தியானது எமது சிவபெருமான் எழுந்தருளியுள்ள மலய மலையில். சிறந்து அணைந்தது தெய்வநீர் நாட்டு அணிபுறம் பணைத்தடம் - சிறப்பாக வந்து சேர்ந்ததானம், தெய்வத்தன்மையுடைய சோழநாட்டிலுள்ள அழகிய வயல்களிலிருக்கும் தடாகங்கள். (இப்படியிருக்க) பொங்கு அழல் வீசிடும் மரம் பயின்றது எங்கு - கொதிக்கும் உஷ்ணத்தை வீசுங் கொடுமையைப் பழகியது எவ்விடம்

புறம்ப ணைததடம் பொங்கழல் வீசிட
மறம்ப யின்றதெங கோதமிழ் மாருதம். (கசுஎ)

இன்ன தன்மைய பின்னு மியம்புவான்
மன்னு காதல ஞகிய வள்ளல்பாற்
றன்ன ரும்பெற னெஞ்சு தயங்கப்போம்
அன்ன மன்னவள் செய்கை யறைகுவாம் (கசுஅ)

வேறு

கனங்கொண்ட மணிகண்டர் கழல்வணங்கிக் கணவனைமுன் பெறுவாள் போல, இனங்கொண்ட சேடியர்கள் புடைசூழ வெய்துபெருங் காதலோடுந், தனங்கொண்டு தளர்மருங்குற் பரவையும்வன் றொண்டர்பாற் றனித்துச் சென்ற, மனங்கொண்டு வரும்பெரிய மயல்கொண்டு தன்மணிமாளிகையைச் சார்ந்தாள் (கசுகூ)

சீறடிமே னூபுரங்க ளறிந்தனபோற் சிறிதளவே யொலிப்ப முன்னர்
வேறொருவ ருடன்பேசாண் மெல்லவடி யொதுங்கிமா ளிகையின் மேலால்
ஏறிமர கதத்தூணத் திலங்குமணி வேதிகையி னலங்கொள் பொற்கான்
மாறின்மலர்ச் சேக்கைமிசை மணிநிலா முன்றினமருங் கிருந்தாள் வந்து.()

அவ்வளவி லருகிருந்த சேடிதனை முகநோக்கி யாரூ ராண்ட
மைவிரவு கண்டரைநாம் வணங்கப்போ மறுகெதிர்வந் தவரா ரென்ன
இவ்வுலகி லந்தணரா யிருவர்தே டொருவாதா மெதிர்நின் றாண்ட
சைவமுதற் றிருத்தொண்டர் தம்பிரான் றோழனா நம்பி யென்றாள்

என்றவுரை கேட்டலுமே யெம்பிரான் றமரேயோ வென்னு முன்னம
வன்றொண்டர் பாலவைத்த மனககாத லளவின்றி வளர்ந்து பொங்க
நின்றநிறை நாண்முதலாங் குணங்களுட னீங்கவுயி ரொன்றுந தாங்கி
மின்றயங்கு நுண்ணிடையாள் வெவ்வுயிர்த்துமெலலணைமேல்வீழ்ந்தபோது

ஆரநறுஞ் சேறாட்டி யரும்பனிநீர் நறுந்திவலை யருகு வீசி
யீரவிளந் தளிர்குளிரப் படுத்துமட வார்செய்த விவையு மெல்லாம்
பேரழலி னெய்சொரிந்தா லொத்தனமற் றதன்மீது சமிதை யென்ன
மாரனுந்தன் பெருஞ்சிலையின் வலிகாட்டி மலர்வாளி சொரிந்தான் வந்து

மலரமளித் துயிலாற்றாள் வருந்தென்றன் மருங்காற்றாண் மங்குல் வானி
னிலவுமிழுந் தழலாற்றா ணிறையாற்றும் பொறையாற்றா ணீர்மை யோடுங்

(கசுஅ) வள்ளலபால - சுநதரமூாத்திசுவாமிகளிடத்து. அனனம அனனவள - அனனததைப போனற பரவை நாயகியாா. (களம) நூபுரஙகள - சிலமபுகள. வேதிகை யில - திணணையில சேககை - சயனம (களக) இருவா - பிரமவிஷ்ணுக்கள். (களஉ) தமரேயோ - அடியவரேயோ. (சளங) சேறு ஆட்டி - சநதனககுழமபைப பூசி திவலை - துளிகளை. குளிா - ஓாவாசனைக்கொடி. படுதது - பாபபி. சமிதை - ஓமவிறகு. மாரன - காமன. மலாவாளி - புஷப பாணம.

கலவமயி லெனவெழுந்து கருங்குழலின் பரமாற்றாக் கைய ளாகி [னாள்.
யிலவிதழ்ச் செந்துவர்வாய் நெகிழ்ந்தாற்றா மையின்வறிதே யின்ன சொன்

வேறு

கந்தங் கமழ்மென் குழலீ ரிதுவென் கலைவாண் மதியங் கனல்வா னெனையிச்
சந்தின் றழலைப் பனிநீ ரளவித் தடவுங் கொடியீர் தவிரீர் தவிரீர்
வந்திங் குலவும் நிலவும் விரையார் மலயா னிலமு மெரியாய் வருமால்
அந்தண் புனலு மரவும் விரவுஞ் சடையா னருள்பெற் றுடையா ரருளார்

புலரும் படியன் றிரவென் னளவும் பொறையு நிறையு மிறையுந் தரியா
உலருந் தனமு மனமும் வினையே னொருவே னளவோ பெருவாழ் வுரையீர்
பலரும் புரியுந் துயர்தா னிதுவோ படைமன் மதனார் புடைநின் றகலார்
அலரு நிலவு மலரு முடியா ரருள்பெற் றுடையா ரவரோ வறியார். ()

தேருங் கொடியு மிடையு மறுகிற் றிருவா ரூரா நீரே யல்லால்
ஆரொன் றுயர மறிவா ரடிகே ளடியே னயரும் படியோ விதுதான்
நீரும் பிறையும் பொறிவா ளரவி னிரையு நிரைவெண் டலையின் புடையே
யூருஞ் சடையீ ரிடைமேல் வருவீ ருமதன் பிலர்போல் யானோ வுறுவேன்.

என்றின் னனவே பலவும் புகலு மிருளா ரளகச் சுருளோ தியையும் [வார
வன்றொண் டரையும் படிமேல் வரமுன் பருள்வா னருளும் வகையார் நினை
சென்றும பாகனும் பணியுஞ் செலவத் திருவா ரூர்வாழ் பெருமா னடிகள்
அன்றங் கவர்மன் றலைநீ செயுமென் றடியா ரறியும் படியா லருளி. ()

மன்னும் புகழ்நா வலர்கோன் மகிழ மங்கை பரவை தனைநேத தந்தோம்
இன்ன வகைநம் மடியா ரறியும் படியே யுரைசெய் தனமென் றருளிப் [வான்
பொன்னின் புரிபுன் சடையன் விடையன் பொருமா கரியி னுரிவை புனை
அன்ன நடையாள் பரவைக் கணிய தாரூ ரன்பான் மணமென் றருள

காமத் துயரிற் கவல்வார் நெஞ்சிற் கரையில் விருளுங் கங்குற் கழிபோம்
யாமத் திருளும் புலரக் கதிரோ னெழுகா லையில்வந் தடியார் கூடிச்
சேமத் துணையா மவர்பே ரருளைத் தொழுதே திருநா வலர்கோன் மகிழத்
தாமக் குழலாள் பரவை வதுவை தகுநீர் மையினா னிகழச் செய்தார். (கஅ௦)

(கஎச) மலர் அமளி - புஷ்பசயனம். (கஎரு) மலயானிலமும் - தென்றற்காற்றும். அருள்பெற்றுடையார் அருளார் - நம்பியாரூரர் கிருபை செய்கின்றாரில்லை. (கஎசு) இறையும் - க்ஷணநேரமும், சிறிதும். (கஎஎ) பொறி - புள்ளி. (கஎஅ) ஓதியையும் - கூந்தலையுடைய பரவையாரும். படிமேல் வர - பூமியில் திருவவதாரஞ் செய்ய. முன்பு அருள்வான் - முன்னர் (கயிலாயத்தில்) கட்டளையிட்டருளிய தியாகேசர். (கஅ௦) கவல்வார் - வருந்தும் வன்றொண்டரும், பரவையாரும். சேமம் - சேமநிதி, புதையல்.

வேறு

தென்னாவ லூரமன்னன் றேவர்பிரான் றிருவருளான்
மின்னாருங் கொடிமருங்குற் பரவையெனு மெல்லியறன்
பொன்னாரு முலையோங்கற் புணர்குவடே சார்வாகப்
பன்னாளும் பயில்யோக பரம்பரையின் விருப்பினால் (கஅக)

தன்னையா ளுடையபிரான் சரணார விந்தமலர்
சென்னியிலுஞ் சிந்தையிலு மலர்வித்துத் திருப்பதிகம்
பன்னுதமிழ்த் தொடைமாலை பலசாத்திப் பரவையெனு
மின்னிடையா ளுடன்கூடி விளையாடிச் செல்கின்றார் (கஅஉ)

வேறு

மாலுடன் கூட வைகி மாளிகை மருங்கு சோலைப்
போதலர் வாவி மாடு செய்குன்றின் புடையோர் தெற்றிச்
சீதளத் தரளப் பந்தர்ச் செழுந்தவி சிழிந்து தங்கள்
நாதர்பூங் கோயி னண்ணிக் கும்பிடும் விருப்பா னம்பி (கஅங)

அந்தரத் தமரர் போற்று மணிகிள ராடை சாத்திச்
சந்தனத் தளறு தோய்ந்த குங்குமக் கலவை சாத்திச்
சுந்தரச் சுழியஞ் சாத்திச் சுடாமணிக் கலன்கள் சாத்தி
இந்திரத் திருவின் மேலா மெழின்மிக விளங்கித் தோன்ற (கஅச)

கையினிற் புனைபொற் * கோலுங் காதினில் விளங்கு தோடு
மெய்யினிற் றவள நூலு நெற்றியின் விளங்கு நீறும்
ஐயனுக் கழகி தாமென் றாயிழை மகளிர் போற்றச்
சைவமெய்த் திருவின் கோலந் தழைப்பவீ தியினைச் சார்ந்தார் (கஅரு)

நாவலூர் வந்த சைவ நற்றவக் களிறே யென்றும்
மேவலர் புரங்கள் செற்ற விடையவர்க் கனப வென்றுந்
தாவில்சீர்ப் பெருமை யாரூர் மறையவர் தலைவ வென்று
மேவின ரிரண்டு பாலும் வேறுவே றாகப் போற்ற (கஅசு)

கைக்கடா குரங்கு கோழி சிவல்கவு தாரி பற்றிப்
பக்கமுன் போது வார்கள் பயின்மொழி பயிற்றிச் செல்ல

(கஅக) மருங்குல் - இடையையுடைய. ஓங்கல் - மலை. குவடே - உச்சியே. (கஅங) போது அலர் வாவி - தாமரைப்பூக்கள் மலரும் தடாகங்களிலும். தெற்றி - திண்ணைகளிலும். தரளப்பந்தல் - முத்துப் பந்தர். மாளிகை தெற்றிமாலுடன் வைகி என்று கூட்டுக. (கஅச) அந்தரத்து அமரர் - வானத்துள்ள தேவர்கள். சுழியம் - கிரீடம். சூளியம் என்னும் வடசொல் சுழியமென வந்தது. இந்திரத்திரு - தேவேந்திர செல்வம்.

* செண்டும் என்றும் பாடம்.

மிக்கபூம் பிடகை கொள்வோர் விரையடைப் பையோர் சூழ
மைக்கருங் கண்ணி னாகண் மறுகநீண் மறுகில் வந்தார் (௧௮௭)

பொலங்கலப் புரவி பண்ணிப் போதுவார் பின்பு போத
இலங்கொளி வலயப் பொற்றோ ளிடையிடை மிடைந்து தொங்க
னலங்கிளர் நீழற் சூழ நான்மறை முனிவ ரோடும்
அலங்கலந் தோளி னான்வந் தணைந்தன னண்ணல் கோயில் (௧௮௮)

கண்ணுதல் கோயிற் றேவா சிரியனுங் காவ ணத்து
விண்ணவ ரொழிய மண்மேன் மிக்கசீ ரடியார் கூடி
யெண்ணிலா ரிருந்த போதி லிவர்க்கியா னடியே னாகப்
பண்ணுநா ளெந்நா ளென்று பரமர்தாள் பரவிச் சென்றார் (௧௮௯)

அடியவர்க் கடிய னாவே னென்னுமா தரவு கூரக்
கொடிநெடுங் கொற்ற வாயில் பணிந்துகை குவித்துப் புக்கார்
கடிகொள்பூங் கொன்றை வேய்ந்தா ரவர்க்கெதிர் காணக் காட்டும்
படியெதிர் தோன்றி நிற்பப் பாதங்கள் பணிந்து பூண்டு (௧௯௦)

வேறு

மண்பெ ருந்திரு மாமறை வண்டுசூழ்ந்
தன்பர் சிந்தை யலர்ந்தசெந் தாமரை
நன்பெ ரும்பர மானந்த நன்மது
வென்ற ரத்து மளித்தெதிர் நின்றன (௧௯௧)

ஞால முய்ய நடமன்று ளாடின
கால னாருயிர் மாளக் கறுத்தன
மாலை தாழ்குழன் மாமலை யாள்செங்கை
சீல மாக வருடச் சிவந்தன (௧௯௨)

நீதி மாதவர் நெஞ்சிற் பொலிந்தன
வேதி யாதவர் தம்மைவே திப்பன

(௧௮௭) சிவலை - சாடை. பூம்பிடகை - புஷ்பக்கூடை. அடைப்பை - பாக்கு வெற்றிலை முதலிய முகவாசங்களை வைத்துள்ள பை. (௧௮௮) பொலங்கலப் புரவி - அழகிய ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்ட குதிரையை. வலயம் - வாகுவலயம். அலங்கலம் தோளினான் - மாலையணிந்த அழகிய தோள்களையுடைய சுந்தரமூர்த்தி சுவாமிகள். (௧௮௯) காவணத்து - மண்டபத்தில். (௧௯௦) ஆதரவு கூர - விருப்பம் அதிகரிக்க. (௧௯௧) மறைவண்டு - வேதங்களாகிய வண்டுகள். அன்பர் சிந்தை அலர்ந்த செந்தாமரை - அடியவர்கள் இதயதாமரையில் பொருந்திய. (௧௯௨) கறுத்தன - கோபித்தன. "கறுப்புஞ் சிவப்பும் வெகுளிப்பொருள" என்னுந் தொல்காப்பியச் சூத்திரத்தானுணர்க. (௧௯௩) வேதியாதவர் - தியானித்து உணராத அபக்குவர்கள். வேதிப்பன - (பக்குவப்படுத்த) பிறவித்துன்பத்தில் வருந்தச்செய்வன.

சோதி யாயெழுஞ் சோதியுட் சோதிய
ஆதி மாலயன் காணு வளவின (கக௩)

வேத வாரண மேற்கொண் டிருந்தன
பேதை யேன்செய் பிழைபொறுத் தாண்டன
ஏத மானவை தீர்க்க விசைந்தன
நாத நாதநின் புண்டரீ கப்பதம் (கக௪)

இன்னவா றேத்து நம்பிக் கேறுசே வகனுர் தாமும்
அந்நிலை யவர்தாம் வேண்டு மதனையே யருள வேண்டி
மன்னுசீ ரடியார் தங்கள் வழித்தொண்டை யுணர நல்கிப்
பின்னையு மவாக டங்கள் பெருமையை யருளிச் செய்வார் (கக௫)

பெருமையாற் றம்மை யொப்பார் பேணலா லெம்மைப் பெற்றார்
ஒருமையா லுலகை வெல்வா ரூனமே லொன்று மில்லார்
அருமையா நிலையி னின்றா ரன்பினு லின்ப மாவார்
இருமையுங் கடந்து நின்றா ரிவரைநீ யடைவா யென்று (கக௬)

நாதனு மருளிச செய்ய நமபியா ரூரா நானிங
கேதந்தீர் நெறியைப் பெற்றே னென்றெதிா வணங்கிப் போற்ற
நீதியா லவர்க டம்மைப் பணிந்துநீ நிறைசொன மாலை
கோதிலா வாய்மை யாலே பாடென வணணல் கூற (கக௭)

தன்னையா ளுடைய நாதன் றானருள் செய்யக் கேட்டுச
சென்னியால வணங்கி நின்ற திருமுனைப் பாடி நாடா
இன்னவா றின்ன பண்பென் றேத்துகே னிதற்கு யானு
பன்னுபா மாலை பாடும பரிசெனக் கருளசெய் யென்ன (கக௮)

வேறு

தொல்லைமால வரைபயந்த தூயாடன் றிருபபாகன்
அல்லறீர்ந் துலகுய்ய மறையளித்த திருவாக்காற்
றில்லைவா ழந்தணர்த மடியார்க்கு மடியேனென
றெல்லையில்வண் புகழாரை யெடுத்திசைப்பா மொழியெனறார் (கக௯)

மன்னுசீர் வயலாரூர் மன்னவரை வன்றொண்டா
சென்னியுற வடிவணங்கித திருவருண்மேற் கொள்பொழுதின்
முன்னமா லயனறியா முதல்வர்தா மெழுந்தருள
அந்நிலைகண் டடியவர்பாற் சார்வதனுக கணைகின்றார் (உ00)

(கக௫) ஏறுசேவகனா - இடபவாகனனாய சிவபிரானை. (கக௭) ஏதமதீர - குற்றமற்ற (கக௯) தூயாளதன் திருபாகன - புனிதவதியாகிய பார்வதி தேவியாரை இடப் பாகத்திலுடைய பரமசிவன.

தாரத்தே திருக்கூட்டம் பலமுறையாற் றொழுதன்பு
சேரத்தாழ்ந் தெழுந்தருகு சென்றெய்தி நின்றழியா
வீரத்தா ரெல்லார்க்குந் தனித்தனிவே றடியேனென்
றார்வத்தாற் றிருத்தொண்டத் தொகைப்பதிக மருள்செய்தார் (௨௦௧)

தம்பெருமான் கொடுத்தமொழி முதலாகத் தமிழ்மாலைச்
செம்பொருளாற் றிருத்தொண்டத் தொகையான திருப்பதிகம்
உம்பர்பிரான் றானருளு முணர்வுபெற வுலகேத்த
எம்பெருமான் வன்றொண்டர் பாடியவ ரெதிர்பணிந்தார் (௨௦௨)

---

## திருத்தொண்டத்தொகை - பண் - கொல்லிக்கௌவாணம்.

திருச்சிற்றம்பலம்.

தில்லைவாழந்தணர்தமடியார்க்குமடியேன்றிருநீலகண்டத்துக்குயவனார்க்கடியே, னில்லையேயென்னாதவியற்பகைக்குமடியேனிளையான்றன்குடிமாறனடியார்க்குமடியேன், வெல்லுமாமிகவல்லமெய்ப்பொருளுக்கடியேன் விரிபொழில்சூழ்குன்றையார்விறன்மிண்டர்க்கடியே, னல்லிமென்முல்லையந்தாரமர்நீதிக்கடியேனாரூரனாரூரிலம்மானுக்காளே (௧)

இலைமலிந்தவேனம்பி யெறிபத்தர்க்கடியே னேனாதிநாதன்றனடியார்க்குமடியேன், கலைமலிந்தசீர்நம்பிகண்ணப்பர்க்கடியேன்கடவூரிற்கலயன்றனடியார்க்குமடியேன், மலைமலிந்ததோள்வள்ளன்மானக்கஞ்சாறனெஞ்சாத வாட்டாயனடியார்க்குமடியேன்,அலைமலிந்தபுனன்மங்கையானாயர்க்கடியேனாரூரனாரூரிலம்மானுக்காளே (௨)

மும்மையாலுலகாண்டமூர்த்திக்குமடியேன்முருகனுக்குமுருத்திரபசுபதிக்குமடியேன்,செம்மையேதிருநாளைப்போவார்க்குமடியேன்றிருக்குறிப்புத்தொண்டர்தமடியார்க்குமடியேன், மெய்ம்மையேதிருமேனிவழிபடாநிற்கவெகுண்டெழுந்ததாதைதாண்மழுவினாலெறிந்த, வம்மையானடிச்சண்டிப்பெருமானுக்கடியேனாரூரனாரூரிலம்மானுக்காளே (௩)

திருநின்றசெம்மையேசெம்மையாக்கொண்ட திருநாவுக்கரையன்றனடியார்க்குமடியேன், பெருநம்பிகுலச்சிறைதனடியார்க்குமடியேன்பெருமிழலைக்குறும்பர்க்கும்பேயார்க்குமடியேன்,ஒருநம்பியப்பூதியடியார்க்குமடியேனொலிபுனல்சூழ்சாத்தமங்கைநீலநக்கர்க்கடியேன், அருநம்பிநமிநந்தியடியார்க்குமடியேனாரூரனாரூரிலம்மானுக்காளே (௪)

வம்பறாவரிவண்டுமணநாறமலருமதுமலர்நற்கொன்றையானடியலாற் பேணா,வெம்பிரான்சம்பந்தனடியார்க்குமடியேனேயர்கோன்கலிக்காமனடியார்க்குமடியே, னம்பிரான்றிருமூலனடியார்க்குமடியேனாட்டமிகுதண்டிக்குமூர்க்கர்க்குமடியேன், அம்பரான்சோமாசிமாறனுக்குமடியேனாரூரனாரூரிலம்மானுக்காளே (௫)

வார்கொண்ட வனமுலையாளுமைபங்கன்கழலேமறவாதுகல்லெறிந்த சாக்கியர்க்கு மடியேன், சீர்கொண்ட புகழ்வள்ளல் சிறப்புலிக்குமடியேன் செங்காட்டங்குடிமேயசிறுத்தொண்டர்க்கடியேன், கார்கொண்டகொடைக்

கழறிற்றறிவார்க்குமடியேன் கடற்காழிக் கணநாதனடியார்க்கு மடியேன், ஆர்கொண்ட வேற்கூற்றன் களந்தைக்கோனடியே னாரூரனாரூரிலம்மானுக் காளே (௬)

பொய்யடிமையில்லாத புலவர்க்குமடியேன் பொழிற்கருவூர்த் துஞ்சிய புகழ்ச்சோழற்கடியேன், மெய்யடியனரசிங்கமுனையரையற்கடியேன் விரிதிரைசூழ்கடனாகையதிபத்தர்க்கடியேன், கைதடிந்தவரிசிலையான் கலிக்கம்பன்கலியன்கழற் சத்திவரிஞ்சையர்கோனடியார்க்கு மடியேன், ஐயடிகள் காடவர்கோனடியார்க்குமடியேனாரூரனாரூரிலம்மானுக்காளே (எ)

கறைக்கண்டன் கழலடியே காப்புக்கொண்டிருந்த கணம்புல்லநம்பிக்குங்காரிக்குமடியேன், நிறைக்கொண்டசிந்தையானெல்வேலிவென்றநின்ற சீர்நெடுமாறனடியார்க்குமடியேன், துறைக்கொண்டசெம்பவளமிருளகற்றுஞ்சோதித்தொன்மயிலைவாயிலானடியார்க்குமடியேன், அறைக்கொண்ட வேனம்பிமுனையடுவார்க்கடியேனாரூரனாரூரிலம்மானுக்காளே (அ)

கடல்சூழ்ந்தவுலகெல்லாங்காக்கின்றபெருமான்காடவர்கோன்கழற்சிங்கனடியார்க்குமடியேன், மடல்சூழ்ந்ததார்நம்பியிடங்கழிக்குந்தஞ்சைமன்னவனாஞ்செருத்துணைதனடியார்க்குமடியேன், புடைசூழ்ந்த புலியதண்மேலாடவாடிபொன்னடிக்கே மனம்வைத்த புகழ்த்துணைக்குமடியேன், அடல்சூழ்ந்தவேனம்பிகோட்புலிக்குமடியேனாரூரனாரூரிலம்மானுக்காளே (௯)

பத்தராயப்பணிவார்களெல்லார்க்குமடியேன்பரமனையேபாடுவாரடியார்க்குமடியேன், சித்தத்தைச்சிவன்பாலேவைத்தார்க்குமடியேன்றிருவாரூர்ப்பிறந்தார்களெல்லார்க்குமடியேன், முப்பொழுதுந்திருமேனிதீண்டுவார்க்கடியேன்முழுநீறுபூசியமுனிவர்க்குமடியேன், அப்பாலுமடிச்சார்ந்தவடியார்க்குமடியேனாரூரனாரூரிலம்மானுக்காளே (௧௦)

மன்னியசீர்மறைநாவனின்றவூர்ப்பூசல்வரிவளையாண்மானிக்குநேசனுக்குமடியேன், றென்னவனாயுலகாண்டசெங்கணார்க்கடியேன்றிருநீலகண்டத்துப்பாணனார்க்கடியே, னென்னவனாமரனடியே யடைந்திட்டசடையனிசைஞானிகாதலன்றிருநாவலூர்க்கோ, னன்னவனாமாரூரனடிமைகேட்டுவப்பாராரூரிலம்மானுக்கன்பராவாரே (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

உம்பர்நா யகரடியார் பேருவகை தாமெய்த
நம்பியா ரூராதிருக் கூட்டத்தி னடுவணைந்தார்
தம்பிரான் றோழரவர் தாமொழிந்த தமிழ்முறையே
யெம்பிரான் றமர்கடிருத் தொண்டேத்த லுறுகின்றேன் (௨௦௫)

**திருக்கூட்டச் சிறப்பு முற்றிற்று.**

ஆ திருவிருத்தம்—௩௪௯



(௨௦௫) தமிழ்முறையே - திருத்தொண்டத்தொகை முறைப்படி.

இரண்டாவது

## தில்லைவாழந்தணர் சருக்கம்.

# தில்லைவாழந்தணர் புராணம்.



ஆதியாய் நடுவு மாகி யளவிலா வளவு மாகிச்
சோதியா யுணர்வு மாகித் தோன்றிய பொருளு மாகிப்
பேதியா வேக மாகிப் பெண்ணுமா யாணு மாகிப்
போதியா நிற்குந் தில்லைப் பொதுநடம் போற்றி போற்றி (௧)

கற்பனை கடந்த சோதி கருணையே யுருவ மாகி
அற்புதக் கோல நீடி யருமறைச் சிரத்தின் மேலாஞ்
சிற்பர வியோம மாகுந் திருச்சிற்றம் பலத்து ணின்று
பொற்புட னடஞ்செய் கின்ற பூங்கழல் போற்றி போற்றி (௨)

போற்றிநீ டில்லை வாழந் தணர்திறம் புகல லுற்றே
னீற்றினி னிறைந்த கோல நிருத்தனுக் குரிய தொண்டாம்
பேற்றினார் பெருமைக் கெல்லை யாயினார் பேணி வாழும்
ஆற்றினார் பெருகு மன்பா லடித்தவம் புரிந்து வாழ்வார் (௩)

பொங்கிய திருவி னீடும் பொற்புடைப் பணிக ளேந்தி
மங்கலத் தொழில்கள் செய்து மறைகளாற் றுதித்து மற்றுந்
தங்களுக் கேற்ற பண்பிற் றகும்பணித் தலைநின் றுய்த்தே
யங்கணர் கோயி லுள்ளா வகம்படித் தொண்டு செய்வார். (௪)

வருமுறை யெரிமூன் றோம்பி மன்னுயி ரருளான் மல்கத்
தருமமே பொருளாகக் கொண்டு தத்துவ நெறியிற் செல்லும்
அருமறை நான்கி னோடா றங்கமும் பயின்று வல்லார்
திருநடம் புரிவார்க் காளாந் திருவினாற் சிறந்த சீரார் (௫)

(௪) மங்கலத்தொழில்கள் என்றதனால் நித்திய பூசையன்றித் திருவிழாச் சிறப்பு முதலியனவுங் கொள்க. மற்றுப் பிறிதென்னும் பொருளில் வந்தது. "மற்றுந் தங்களுக்கு ஏற்ற தகும் பணி" என்றது சாமரம், ஏட்டியம், விசிறி முதலிய பணிகளை. (௫) எரி மூன்று - அக்கினி மூன்று. அவையாவன — ஆகவனீயம், காருகபத்தியம், தக்கணாக்கினி. ஓம்பி - வளர்த்து. மல்க - வளர. தத்துவநெறியில் - உண்மைவழியில். ஆறங்கமாவன — சிக்ஷை, வியாகரணம், சந்தோவிசிதி, நிருத்தம், சோதிடம், கற்பம் என்பன.

மறுவிலா மரபின் வந்து மாறிலா வொழுக்கம் பூண்டார்
அறுதொழி லாட்சி யாலே யருங்கலி நீக்கி யுள்ளார
உறுவது நீற்றின் செல்வ மெனக்கொளு முள்ள மிக்கார்
பெறுவது சிவன்பா லன்பாம் பேறெனப் பெருகி வாழ்வார் (சு)

ஞானமே முதலா நான்கு நவையறத் தெரிந்து மிக்கார்
தானமுந் தவமும் வல்லார் தகுதியின் பகுதி சார்ந்தார்
ஊனமே லொன்று மில்லா ருலகெலாம் புகழ்ந்து போற்று
மானமும் பொறையுந் தாங்கி மனையறம் புரிந்து வாழ்வார் (எ)

செம்மையாற் றணிந்த சிந்தைத் தெய்வவே தியர்க ளானோர்
மும்மையா யிரவர் தாங்கள் போற்றிட முதல்வ னாரை
யிம்மையே பெற்று வாழ்வா ரினிப்பெறும் பேறொன் றில்லார்
தம்மையே தமக்கொப் பான நிலைமையாற் றலைமை சார்ந்தார் (அ)

இன்றிவர் பெருமை யெம்மா லியம்பலா மெல்லைத் தாமோ
தென்றமிழ்ப் பயனா யுள்ள திருத்தொண்டத் தொகைமுன் பாட
அன்றுவன் றொண்டர் தம்மை யருளிய வாரூ ரண்ணல்
முன்றிரு வாக்காற் கோத்த முதற்பொரு ளானா ரென்றால் (கூ)

அகலிடத் துயர்ந்த தில்லை யந்தண ரகில மெல்லாம்
புகழ்திரு மறையோ ரென்றும் பொதுநடம் போற்றி வாழ்க
நிகழ்திரு நீல கண்டக் குயவனார் நீடு வாய்மை
திகழுமன் புடைய தொண்டர் செய்தவங் கூற லுற்றாம் (கo)

**தில்லைவாழந்தணர்புராண முற்றிற்று.**

ஆக திருவிருத்தம் - ௩௫கூ



சிதம்பரத்திலே, சிவகாமியம்மையார் கண்டுகளிக்கத் திருத்தாண்டவம் புரியும் ஸ்ரீநடராஜப் பெருமானுக்குத் திருத்தொண்டு செய்தலையே பெருந் தவமாகக் கொண்டவர்களே தில்லைவாழ் அந்தணர்கள் அவர்கள் வேதத்திற் சொல்லுகின்ற ஆகவனீயம், தக்ஷிணாக்கினி, காருகபத்தியம் என்னும் மூன்றக்கினிகளையும் விதிப்படி வளர்த்து, உலகத்துக்குச் சுகத்தைக் கொடுப்பவர்கள்; தருமத்தையே பொருளாகக் கொண்டவர்கள்; இருக்கு, யசுர், சாமம், அதர்வணம் என்னும் நான்கு வேதங்களையும், சிக்ஷை, வியாகரணம், சந்தோவிசிதி, நிருத்தம், சோதிடம், கற்பம் என்னும் ஆறுவேதாங்கங்களையும் பயின்றவர்கள்; மாசிலாமரபில் தோன்றினவர்கள்; மாறிலா ஒழுக்கம

(சு) மறுவிலா - குற்றமில்லாத. அறுதொழில்களாவன.— ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல் என்பன. கலி - துன்பம். (எ) "ஞானமே முதலாநான்கு" என்றது ஞானம், யோகம், கிரியை, சரியை என்பவைகளை. நவையற- குற்றமற. மனை அறம் - இல்லறம். (கூ) திருவாக்கால் கோத்த - திருவாக்கினால் எடுத்துக்கொடுத்த. முதற்பொருள் - முதல் அடியவர்கள்.

பூண்டவர்கள்; ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல் என்னும் அறுதொழிலினாலும் துன்பங்களை நீக்கினவர்கள்; விபூதியையே மேலான ஐஸ்வரியமெனக் கொண்டுள்ளவர்கள்; ஞானம், யோகம், கிரியை, சரியை என்னும் நான்கு பாதங்களின் உண்மையையுணர்ந்து, விதிப்படி அநுட்டிப்பதில் சிறந்தவர்கள்; மானத்தையும், பொறையையுந் தாங்கிக்கொண்டு, யாவரும் புகழும் இல்லறத்தை நடாத்துபவர்கள். அவர்கள் மூவாயிரவர்; மூவர்கோனய் நிற்கும் முதல்வனை இப்பிறப்பிலேயே வணங்கும் பெருமை வாய்ந்தவர்கள்; இனிப்பெறும் பேறு ஒன்றும் இல்லாதவர்கள், தங்களுக்குத் தாங்களே சமமாக விளங்கும் மேன்மையையுடையவர்கள் வேத சிவாகமங்களை யருளிய தியாகேசப்பெருமானே சுந்தரமூர்த்தி சுவாமிகட்கு "தில்லைவாழ் அந்தணர்த மடியார்க்கும் அடியேன்" என்று அடிஎடுத்துக்கொடுத்துச் சிறப்பித்த முதற்பொருளானார்கள் என்றால், அவ்வந்தணர் பெருமான்களின் அருட்பெருந்தன்மை இவ்வளவினதென்று எம்மால் இயம்பற்பாலதோ?

---

# திருநீலகண்டநாயனர் புராணம்.

(*)

வேதியர் தில்லை மூதூர் வேட்கோவர் குலத்து வந்தார்
மாதொரு பாக நோக்கி மன்னுசிற் றம்ப லத்தே
யாதியு முடிவு மில்லா வற்புதத் தனிக்கூத் தாடு
நாதனார் கழல்கள் வாழ்த்தி வழிபடு நலத்தின் மிக்கார் (க)

பொய்கடிந் தறத்தின் வாழ்வார் புனற்சடை முடியார்க் கன்பார்
மெய்யடி யார்கட் கான பணிசெயும் விருப்பி னின்றார்
வையகம் போற்றுஞ் செய்கை மனையறம் புரிந்து வாழ்வார்
சைவமெய்த் திருவின் சார்வே பொருளெனச் சாரு நீரார் (உ)

அளவிலா மரபின் வாழ்க்கை மட்கல மமுதுக் காக்கி
வளரிளந் திங்கட் கண்ணி மன்றுளா ரடியார்க் கென்றும்
உளமகிழ் சிறப்பின் மல்க வோடளித் தொழுகு நாளில்
இளமைமீ தூர வின்பத் துறையினி லெளிய ரானார் (ங)

(க) வேட்கோவர் - குயவர். (உ) கடிந்து நீக்கி, அழித்து. புனற் சடைமுடியார்க்கு - சிவபெருமானுக்கு. மெய்யடியார்கட்கு - சிவனடியார்களுக்கு. மனை அறம் - இல்லறம். இல்லறந் துறவறத்திற்கு வித்தாதலானும், அஃதின்றேல் துறவறம் என்னும் மொழியே சிறத்தலின்மையானும், அஃது எவராலும் போற்றப்படுந்தகைத்து என்பார் "வையகம் போற்றுஞ் செய்கை" என்றார். சைவமெய்த் திருவின் சார்வே - சித்தாந்த சைவ உண்மைச் செல்வத்தை யடைதலே. நீரார் - குணத்தையுடையவர். (ங) மரபின் வாழ்க்கை - குலத்துக்கு ஏற்ப அளவிலா மட்கலம் எனக்கூட்டுக. அளவிலா என்பதை மரபிற்கு அடைமொழியாகக் கொள்ளுதலும் ஒன்று. அமுதுக்கு - [illegible]. மன்றுளார் அடியார்க்கு - சிவனடியார்களுக்கு. இன்பத்துறையினில் எளியர் ஆனார் - சிற்றின்ப வழியில் பிரியமுள்ளவராயினார்.

அவர்தங்கண் மனைவி யாரு மருந்ததி கற்பின் மிக்கார்
புவனங்க ளுய்ய வையர் பொங்குநஞ் சுண்ண யாஞ்செய்
தவநின்று தடுத்த தென்னத் தகைந்துதான் றரித்த தென்று
சிவனெந்தை கண்டந் தன்னைத் திருநீல கண்ட மென்பார் (௪)

ஆனதங் கேள்வ ராங்கோர் பரத்தைபா லணைந்து நண்ண
மானமுன் பொருது வந்த வூடலான் மனையின் வாழ்க்கை
யேனைய வெல்லாஞ் செய்தே யுடனுறை விசையா ரானார்
தேனலர் கமலப் போதிற் றிருவினு முருவ மிக்கார் (௫)

மூண்டவப் புலவி தீர்க்க வன்பனார் முன்பு சென்று
பூண்டயங் கிளமென் சாயற் பொற்கொடி யனையார் தம்மை
வேண்டுவ விரந்து கூறி மெய்யுற வணையும் போதில்
தீண்டுவீ ராயி னெம்மைத் திருநீல கண்ட மென்றார் (௬)

ஆதியார் நீல கண்டத் தளவுதாங் கொண்ட வார்வம்
பேதியா வாணை கேட்ட பெரியவர் பெயர்ந்து நீங்கி
ஏதிலார் போல நோக்கி யெம்மையென் றதனால் மற்றை
மாதரார் தமையு மென்றன் மனத்தினுந் தீண்டே னென்றார் (௭)

கற்புறு மனைவி யாருங் கணவனார்க் கான வெல்லாம்
பொற்புற மெய்யு றாமற் பொருந்துவ போற்றிச் செய்ய
இற்புறம் பொழியா தங்க ணிருவரும் வேறு வைகி
அற்புறு புணர்ச்சி யின்மை யயலறி யாமை வாழ்ந்தார் (௮)

இளமையின் மிக்கு ளார்க ளிருவரு மறிய நின்ற
அளவில்சீ ராணை போற்றி யாண்டுகள் பலவுஞ் செல்ல
வளமலி யிளமை நீங்கி வடிவுறு மூப்பு வந்து
தளர்வொடு சாய்ந்து மன்புத் தம்பிரான் றிறத்துச் சாயார் (௯)

(௪) தகைந்து - தடுத்து. (௫) ஆன தங்கேள்வர் - பிரியமுள்ள தமது கணவனார். பரத்தைபால் அணைந்துநண்ண - வேசியினிடங் கூடி (வீட்டிற்கு) வர. ஊடலால் - பிணக்கால். உடன் உறைவு இசையார் ஆனார் - புணர்ச்சிக்கு மாத்திரம் இஷ்டமில்லாதவராயிருந்தார். (௬) மூண்ட - உதித்து எழுந்த, உண்டாகிய. புலவி - பிணக்கை. பூண்தயங்கு - ஆபரணங்கள் விளங்காநின்ற. பொற்கொடி அனையார் தம்மை - பொற்கொடிபோன்ற மனைவியாரை. (௭) ஆதியார் - சிவபிரான். ஆர்வம் - விருப்பு. பேதியா - வேறுபடாத. பெரியவர் - திருநீலகண்ட நாயனார். ஏதிலார்போல - அயலாரைப்போல. எம்மை என்றதனால் - (என்னை என்று கூறாது) எம்மையெனப் பன்மையாகக் கூறினமையால். மற்றை மாதரார் தமையும் - (இவரையும்) பிறஸ்திரீகளையும். (௮) இற்புறம்பு ஒழியா - வீட்டினின்றும் புறம்பே செல்லாதவர்களாய். அற்பு உறு - அன்பு பொருந்திய. (௯) தம்பிரான் திறத்து அன்புசாயார் - சிவபிரானிடத்துத் தாம்வைத்த பேரன்பினின்றும் நீங்காதவர்களானார்கள்.

இந்நெறி யொழுகு நாளி லெரிதளிர்த் தென்ன நீண்ட
மின்னொளிர் சடையோன் றானுந் தொண்டரை விளக்கங் காண
நன்னெறி யிதுவா மென்று ஞாலத்தோர் விரும்பி யுய்யும்
அந்நெறி காட்டு மாற்றா லருட்சிவ யோகி யாகி (௰)

வேறு

கீளொடு கோவணஞ் சாத்திக் கேடிலா
வாள்விடு நீற்றொளி மலர்ந்த மேனிமேற்
றோளொடு மார்பிடைத் துவளு நூலுடன்
நீளொளி வளர்திரு முண்ட நெற்றியும் (௧௧)

நெடுஞ்சடை கரந்திட நெறித்த பம்பையும்
விடுங்கதிர் முறுவல்வெண் ணிலவு மேம்பட
இடும்பலிப் பாத்திர மேந்து கையராய்
நடந்துவேட் கோவர்தம் மனையி னண்ணினார் (௧௨)

நண்ணிய தவச்சிவ யோக நாதரைக்
கண்ணுற நோக்கிய காத லன்பர்தாம்
புண்ணியத் தொண்டரா மென்று போற்றிசெய்
தெண்ணிய வுவகையா லெதிர்கொண் டேத்தினார் (௧௩)

பிறைவளர் சடைமுடிப் பிரானைத் தொண்டரென்
றுறையுளி லணைந்துபே ருவகை கூர்ந்திட
முறைமையின் வழிபட மொழிந்த பூசைகள்
நிறைபெரு விருப்பொடு செய்து நின்றபின் (௧௪)

எம்பிரான் யான்செயும் பணியெ தென்றனர்
வம்புலா மலர்ச்சடை வள்ளல் தொண்டனார்
உம்பர்நா யகனுமிவ் வோடுன் பாலவைத்
தும்பிநீ தருகநாம் வேண்டும் போதென்று (௧௫)

(௰) எரிதளிர்த்தது என்ன — நெருப்புத் துளிர் விட்டதைப்போல. விளக்கங்காண — மகிமையை யாவரும் அறிய. (௧௧) கீள் — அரைஞாணுடன் சேர்ப்பப் பகிர்ந்த நூலாற் செய்யப்பட்டது. வாள்விடு — ஒளி வீசும். முண்டம் என்பது திரிபுண்டரம் என்னும் வடமொழிச் சிதைவு. (௧௨) கரந்திட — மறையும்படி. நெறித்த பம்பையும் — சுருண்டு கீழ் விழாமல் மேனோக்கிச் சென்ற தலைமயிரும். முறுவல் — பற்கள். புன்சிரிப்புத் தோன்ற முகமலர்ச்சியோடு இறைவர் எழுந்தருளினார் என்பது விளங்க "முறுவல்வெண்ணிலவு மேம்பட" என்றார். பலிப்பாத்திரம் — பிச்சையெடுத்தற்குரிய திருவோட்டை. (௧௪) உறையுளில் — வீட்டினுள். கூர்ந்திட — அதிகரிக்க. (௧௫) வம்பு உலா — வாசனை வீசும். உம்பர் நாயகனும் — தேவர்பெருமானாகிய சிவயோகியாரும். நம்பி — தொண்டனே! (புருடர்களிற் சிறந்தோய்)

தன்னையொப் பரியது தலத்துத் தன்னுழைத்
துன்னிய யாவையுந் தூய்மை செய்வது
பொன்னினு மணியினும் போற்ற வேண்டுவ
தின்னதன் மையதிது வாங்கு நீயென (கசு)

தொல்லைவேட் கோவர்தங் குலத்துட் டோன்றிய
மல்குசீர்த் தொண்டனார் வணங்கி வாங்கிக்கொண்
டொல்லையின் மனையிலோர் மருங்கு காப்புறும்
எல்லையில் வைத்தவந் திறையை யெய்தினார் (கஎ)

வைத்தபின் மறையவ ராகி வந்தரு
ணித்தனா ரேகிட நின்ற தொண்டரும்
உய்த்துடன் போய்விடை கொண்டு மீண்டனர்
அத்தர்தா மம்பல மணைய மேவினார் (கஅ)

வேறு

சாலநாள் கழிந்த பின்பு தலைவனார் தாமுன் வைத்த
கோலமா ரோடு தன்னைக் குறியிடத் தகலப் போக்கிச்
சீலமார் கொள்கை யென்றுந் திருந்துவேட் கோவர் தம்பால்
வாலிதா நிலைமை காட்ட முன்புபோன் மனையில் வந்தார் (கக)

வந்தபின் றொண்ட னாரு மெதிர்வழி பாடு செய்து
சிந்தைசெய் தருளிற் றெங்கள் செய்தவ மென்று நிற்ப
முந்தைநா ளுன்பால் வைத்த மொய்யொளி விளங்கு மோடு
தந்துநில் லென்றா னெல்லாந் தான்வைத்து வாங்க வல்லான் (உ0)

என்றவர் விரைந்து கூற விருந்தவ ரேந்த வோடு
சென்றுமுன் கொணர்வான் புக்கார் கண்டிலர் திகைத்து நோக்கி
நின்றவர் தம்மைக் கேட்டார் தேடியுங் காணார் மாயை
யொன்றுமங் கறிந்தி லாதா ருரைப்பதொன் றின்றி நின்றார் (உக)

மறையவ னாகி நின்ற மலைமகள் கேள்வன் றானும்
உறையுளிற் புக்கு நின்ற வொருபெருந் தொண்டர் கேட்ப
இறையிலிங் கெய்தப் புக்காய் தாழ்த்ததென் னென்ன வந்து
கறைமறை மிடற்றி னானைக் கைதொழு துரைக்க லுற்றார். (உஉ)

(கசு) தலத்து - இப்பூவுலகில். தன்னுழைத்துன்னிய யாவையும் - தன்னிடஞ் சேரும் எல்லாப்பொருள்களையும். (கஎ) ஒல்லையில் - சீக்கிரமாக. மருங்கு - பாகத்தில். காப்பு உறும் எல்லையில் - காவல் உள்ள இடத்தில். (கக) சாலநாள் - பலநாள்கள். குறியிடத்து அகலப்போக்கி - வைக்கப்பட்ட இடத்தினின்றும் மறையச்செய்து. வாலிதாம் நிலைமைகாட்ட - பரிசுத்தமாகிய பத்திநிலைமையை மற்றையோர்க்கு உணர்த்த. (உ0) மொய் - மிக்க. வைத்து வாங்க வல்லான் - ஆக்கவும் அழிக்கவும் ஆற்றலுடைய சிவபெருமான். (உஉ) மலைமகள் கேள்வன் - சிவபிரான். இறையில் - சொற்பப் போதில். கறைமறை மிடற்றினானை - நீலகண்டத்தை மறைத்த சிவபிரானை.

இழையணி முந்நூன் மார்பி னெந்தைநீர் தந்து போன
விழைதரு மோடு வைத்த வேறிடந் தேடிக் காணேன்
பழையமற் றதனி னல்ல பாத்திரந் தருவன் கொண்டிப்
பிழையினைப் பொறுக்க வேண்டும் பெருமவென் றிறைஞ்சி நின்றார் (உ௩)

சென்னியால் வணங்கிச் சொன்ன தொண்டரைச் செயிர்த்து நோக்கி
யென்னிது மொழிந்த வாநீ யான்வைத்த மண்ணோ டன்றிப்
பொன்னினா லமைத்துத் தந்தா யாயினுங் கொள்ளேன் போற்ற
முன்னைநான் வைத்த வோடே கொண்டுவா வென்றான் முன்னோன் (உ௪)

கேடிலாப் பெரியோ யென்பால் வைத்தது கெடுத லாலே
நாடியுங் காணேன் வேறு நல்லதோ ரோடு சால
நீடுசெல் வதுதா னென்று தருகின்றே னெனவுங் கொள்ளா
தூடிநின் றுரைத்த தென்ற னுணர்வெலா மொழித்த தென்ன. (உ௫)

ஆவதென் னுன்பால் வைத்த வடைக்கலப் பொருளை வௌவிப்
பாவகம் பலவுஞ் செய்து பழிக்குநீ யொன்று நாணா
யாவருங் காண வுன்னை வளைத்துநான் கொண்டே யன்றிப்
போவதுஞ் செய்யே னென்றான் புண்ணியப் பொருளாய் நின்றான் (உ௬)

வளத்தினான் மிக்க வோடு வௌவினே னல்லே னல்லை
யுளத்தினுங் களவி லாமைக் கென்செய்கே னுரையு மென்னக்
களத்துநஞ் சொளித்து நின்றான் காதலன் மகனைப் பற்றிக்
குளத்தினின் மூழ்கிப் போவென் றருளினான் கொடுமை யில்லான் (உ௭)

ஐயர்நீ ரருளிச் செய்த வண்ணம்யான் செயவ தற்குப்
பொய்யில்சீர்ப் புதல்வ னில்லை யென்செய்கேன் புகலு மென்ன
மையறு சிறப்பின் மிக்க மனையவ டன்னைப் பற்றி
மொய்யலர் வாவி புக்கு மூழ்குவா யெனமொ ழிந்தார். (உ௮)

---

(உ௩) விழைதரும் - விருப்பைக்கொடுக்கும். வைத்த வேறு இடம் - வைத்த இடத்தினும், பிற இடங்களினும். வேறிடம் என்பதற்குப் பொது இடத்திற்கு வேறாய காவலாகவுள்ள இடம் என்று கூறுவாருமுளர். இறைஞ்சி - வணங்கி. (உ௪) செயிர்த்து - கோபித்து. போற்ற - காப்பாற்றும்படி. (உ௫) கெடுதலால் - காணாது ஒழிந்தபடியால். சால நீடு செல்வது - மிகவும் நெடுங்காலம் இருக்கத்தக்கது. ஊடி நின்று - கோபித்துப்பிரியனமாய் (உ௬) வௌவி - அபகரித்து. பாவகம் - வஞ்சக நடிப்பு, போலி அன்பு. வளைத்து - (தப்பிப்போகவொட்டாமல்) தடுத்து. கொண்டே - என்திருவோட்டை வாங்கிக்கொண்டே. (உ௭) களவு இலாமைக்கு என்செய்கேன் - திருட்டுத்தனம் இல்லாமையைத் தெரிவிப்பதற்கு என்செய்வேன். ஒல்லை உரையும் - சீக்கிரத்திற்சொல்லும். களத்து நஞ்சு ஒளித்து நின்றான் - திருக்கண்டத்தில் விஷத்தை மறைத்து வந்த சிவபிரான் (உ௮) மை அறு - குற்றமற்ற. மொய்ய - நெருங்கிய.

வேறு.

கங்கைநதி கரந்தசடை கரந்தருளி யெதிர்நின்ற
வெங்கண்விடை யவரருள வேட்கோவ ருரைசெய்வார்
எங்களிலோர் சபதத்தா லுடன்மூழ்க விசைவில்லை
பொங்குபுனல் யான்மூழ்கித் தருகின்றேன் போதுமென (உகூ)

தந்ததுமுன் றாராதே கொள்ளாமைக் குன்மனைவி
யந்தளிர்ச்செங் கைப்பற்றி யலைபுனலின் மூழ்காதே
சிந்தைவலித் திருக்கின்றாய் தில்லைவா ழந்தணர்கள்
வந்திருந்த பேரவையின் மன்னுவன்யா னெனச்சென்றார் (ங0)

நல்லொழுக்கந் தலைநின்றார் நான்மறையின் றுறைபோனார்
தில்லைவா ழந்தணர்கள் வந்திருந்த திருந்தவையின்
எல்லையிலான் முன்செல்ல விருந்தொண்ட ரவர்தாமு
மல்குபெருங் காதலினால் வழக்கின்மேல் விட்டணைந்தார் (ஙக)

அந்தணனா மெந்தைபிரா னருமறையோர் முன்பகர்வான்
இந்தவேட் கோவன்பால் யான்வைத்த பாத்திரத்தைத்
தந்தொழியான் கெடுத்தானேற் றனமனைவி கைப்பற்றி
வந்துமூழ் கியுந்தாரான் வலிசெய்கின் றானென்றார் (ஙஉ)

நறைகமழுஞ் சடைமுடியு நாற்றோளு முக்கண்ணுங்
கறைமருவு திருமிடறுங் கரந்தருளி யெழுந்தருளு
மறையவனித் திறமொழிய மாமறையோ ருரைசெய்வார்
நிறையுடைய வேட்கோவர் நீர்மொழியும் புகுந்ததென (ஙங)

நீணிதியா மிதுவென்று நின்றவிவர் தருமோடு
பேணிநான் வைத்தவிடம் பெயர்ந்துகரந் ததுகாணேன்
பூணணிநூன் மணிமார்பீர் புகுந்தபரி சிதுவென்று
சேணிடையுந் தீங்கடையாத் திருத்தொண்ட ருரைசெய்தார் (ஙச)

வேறு

திருவுடை யந்த ணாளர் செப்புவார் திகழ்ந்த நீற்றின்
உருவுடை யிவர்தாம் வைத்த வோட்டினைக் கெடுத்தீ ராகிற்
றருமிவர் குளத்தின் மூழ்கித் தருகவென் றுரைத்தா ராகின்
மருவிய மனைவி யோடு மூழ்குதல் வழக்கே யென்றார். (ஙரு)

(உகூ) கரந்த - மறைத்த. விடையவர் - இடபாரூடராய சிவபெருமான். (ஙய) கொள்ளாமைக்கு-கவரவில்லை என்பதற்கு (சாக்ஷியாக). சிந்தைவலித்து இருக்கின்றாய்-மனதில் உறுதிசெய்து கொண்டிருக்கிறாய். (ஙஉ) கெடுத்தானேல் - இழந்துவிட்டானாகில. (ஙங) நறைகமழும் - வாசனைவீசும். புகுந்தது - நடந்த விகாரம். (ஙச) சேண் இடையும் - நெடுந்தூரத்தும்.

அருந்தவத் தொண்டர் தாமு மந்தணர் மொழியைக் கேட்டுத்
திருந்திய மனைவி யாரைத் தீண்டாமை செப்ப மாட்டார்
பொருந்திய வகையான் மூழ்கித் தருகின்றேன் போது மென்று
பெருந்தவ முனிவ ரோடும் பெயர்ந்துதம் மனையைச் சார்ந்தார். (௩௬)

மனைவியார் தம்மைக் கொண்டு மறைச்சிவ யோகி யார்முன்
சினவிடைப் பாகர் மேவுந் திருப்புலீச் சுரத்து முன்னா
நனைமலர்ச் சோலை வாவி நண்ணித்தம் முண்மை காப்பார்
புனைமணி வேணுத் தண்டி னிருதலை பிடித்துப் புக்கார் (௩௭)

தண்டிரு தலையும் பற்றிப் புகுமவர் தம்மை நோக்கி
வெண்டிரு நீற்று முண்ட வேதியர் மாதைத் தீண்டிக்
கொண்டுடன் மூழ்கீ ரென்னக் கூடாமை பாரோர் கேட்கப்
பண்டுதஞ் செய்கை சொல்லி மூழ்கினார் பழுதி லாதார் (௩௮)

வாவியின் மூழ்கி யேறுங் கணவரு மனைவி யாரு
மேவிய மூப்பு நீங்கி விருப்புறு மிளமை பெற்றுத்
தேவரு முனிவர் தாமுஞ் சிறப்பொடு பொழியுந் தெய்வப்
பூவின்மா மழையின் மீள மூழ்குவார் போன்று தோன்ற (௩௯)

அந்நிலை யவரைக் காணா மதிசயங் கண்டா ரெல்லா
முன்னிலை நின்ற வேத முதல்வரைக் கண்டா ரில்லை
இந்நிலை யிருந்த வண்ண மென்னென மருண்டு நின்றார்
துன்னிய விசும்பி னூடு துணையுடன் விடைமேற் கண்டார் (௪௦)

கண்டனர் கைக ளாரத் தொழுதனர் கலந்த காதல்
அண்டரு மேத்தி னார்க ளன்பர்தம் பெருமை நோக்கி
விண்டரும் பொலிவு காட்டி விடையின்மேல் வருவார் தம்மைத்
தொண்டரு மனைவி யாருந் தொழுதுடன் போற்றி நின்றார். (௪௧)

மன்றுளே திருக்கூத் தாடி யடியவர் மனைக டோறுஞ்
சென்றவர் நிலைமை காட்டுந் தேவர்க டேவர் தாமும்
வென்றவைம் புலனான் மிக்கீர் விருப்புட னிருக்க நம்பால்
என்றுமிவ் விளமை நீங்கா தென்றெழுந் தருளி னாரே. (௪௨)

விறலுடைத் தொண்ட னாரும் வெண்ணகைச் செவ்வாய் மென்றோள்
அறலியற் கூந்த லாளா மனைவியு மருளி னார்ந்த

(௩௭) நனை - அரும்புகளும். வேணுத்தண்டின் - மூங்கிற்றண்டின். (௩௮) பாரோர் - உலகத்தவர். பண்டுதம்செய்கை - முன்னாளில் தாம் செய்துகொண்ட சபதத்தை. (௩௯) வாவியில் - குளத்தில். (௪௦) வேதமுதல்வரை - சிவயோகியாக வந்தபரமசிவனை. விசும்பினூடு - ஆகாயத்திலே. துணையுடன் - பார்வதிதேவியாரோடு. (௪௨) மன்றுளே - சிற்சபையிலே. ஐம்புலனை வெல்வது ஐம்புலன் வழியேமனத்தைச் செலுத்தாது தடுத்தல். (௪௩) விறல் - பக்திவலிமை. அறல்இயல் - கருமணல்போன்ற.

திறலுடைச செய்கை செய்து சிவலோக மதனை யெய்திப்
பெறலரு மிளமை பெற்றுப் பேரின்ப முற்று ரன்றே. (௪௩)

அயலறி யாத வண்ண மண்ணலா ராணை யுய்த்த
மயலில்சீர்த் தொண்ட ரை யானறி வகையால் வாழ்த்திப்
புயல்வளர் மாட நீடும் பூம்புகார் வணிகர் பொய்யில்
செயலியற் பகையார் செய்த திருத்தொண்டு செப்ப லுற்றேன். (௪௪)

திருநீலகண்டநாயனார்புராண முற்றிற்று.

ஆக திருவிருத்தம் - ௪0௩.



சிவவேதியாகள் வாழ்கின்ற சிதம்பரத்திலே, குயவர்குலத்திலே, அவதாரஞ் செய்த அடியவர் ஒருவர் இருந்தார். அவர் இல்லறவழியிலே நின்று, சிவபத்தி சிவனடியார் பத்திகளிற் சிறந்தவராய், தங்குல மரபிற்கு ஏற்ப, மண் பாண்டங்களைச் செய்து விற்றுச் சீவனஞ் செய்தும், ஸ்ரீநடராசப் பெருமான் அடியவர்களுக்குத் திருவோடுகளைக் கொடுத்துஞ் சீலமாக ஒழுகி வந்தார். அவ்வன்பர் "சர்வலோகஙகளும் பிழைக்கும்படி திருப்பாற் கடலினின்றுந் தோன்றிய ஆலகாலவிஷத்தைச சிவபெருமான் உண்டபொழுது, அவர் திருக்கண்டமானது அவரைச் சரணடைநதோர் சகல துன்பஙகளினின்றும் நீஙகப்பெறுவர் என்னும் உண்மையை நம்மனோர்கள் அறிந்து உய்ய, ஓர் அருட்குறியாய் என்றும் விளஙகும்பொருட்டு, அதனை உள்ளே போக வொட்டாமல், தானே தகைவுசெய்து, தரித்துககொண்டது" என்று கருதி, பரமசிவத்தின் திருககண்டத்தைத திருநீலகண்டம் என்று எந்நாளுஞ் சிறப்பித்துச் சொல்லிக்கொண்டிருப்பர் அதனால் அப்பெருந்தகையார்ககுத் திருநீலகண்ட நாயனார் என்னும் அருமைததிருநாமம் உண்டாயிற்று.

ஒருநாள் அந்நாயனார் அவவூரிலுள்ள ஓர் பரத்தைபால் அணைந்து வீட்டுக்குவர, அவர்தங கற்பரசியார், தமககுண்டாகிய கோபத்தை வெளியே காட்டாமல் அடககி, இலவாழ்ககைக்கு வேண்டிய எல்லாப்பணிகளையும் இன்பமாய்ச் செய்து, புணர்ச்சிக்கு மாததிரம் இசையாதவராயிருந்தார். நாயனார் தம் நாயகியார்கொணட புலவியைத் தீர்க்க வேண்டியஇரப்புரைகளை இசைத்து, அவரை அன்புடன் தழுவும்போது, அம்மையார் வெகுண்டு "நீர் எம்மைத் தீண்டுவீராயின் திருநீலகண்டம்" என்றார் அதைக்கேட்ட அடியவர், சிவபிரான் திருநீலகண்டததிலே தாம் வைத்தபேரன்பு ஒருசிறிதும் பேதியாவண்ணம் உடனே மனைவியாரைத் தீண்டாமல் அகன்று "இவர் எம்மை எனப் பன்மையாகக் கூறினமையால இவரையும், பிறமாதர்களையும் நான் மனதிலுந் தீண்டேன்" என்று உறுதி செய்துகொண்டு, வீட்டைவிட்டுத் துறக்காமல், இல்லறப்பணிகள் யாவையும் இயற்றிக்கொண்டு, புணர்ச்சியின்மையைப் பிறர் அறியாதபடி பெருமையாய் வாழ்ந்து வந்தார்கள். இங்ஙனம் பல ஆண்டுகள் கழிய, இருவர்களும் இளமைப்பருவம் நீஙகப் பெற்று, முதுமைப்பருவம் எய்தப் பெற்றார்கள். பெற்றும், சிவபததியினும், அடியவர் பத்தியினும் சிறிதும் குறையாதவரா யிருந்தார்கள்.

---

(௪௪) அண்ணலா ஆணை உயதத - சிவபெருமான திருநீலகணடததினவிடயமாக இடபபட்ட ஆணையைப பாதுகாதத. புயல்வளா - மேகஙகள் தவழும பூமபுகாா - காவிரிபபூமபட்டினததில.

இப்படி ஒழுகும் திருநீலகண்டநாயனர் திருத்தொண்டின் பெருமையை உலகத்துள்ள யாவரும் உணர்ந்து, அவரைப்போல ஒழுகி உய்யும்பொருட்டு, ஸ்ரீநடராஜவள்ளல் ஓர் சிவயோகி வடிவந்தாங்கி, குயவர் பெருமான் வீட்டிற்கு எழுந்தருளினர். நாயனர் அவரைக்கண்டு முகமலர்ந்து, எதிர்கொண்டு அழைத்து, ஓர் அரும்பீடத்தில் இருத்தி, ஆகமவிதிப்படி பூசித்து, வணங்கி, "எம்பிரானே! அடியேன் தேவரீருக்குச் செய்யவேண்டிய குற்றேவல்யாது?" என்றுகேட்க, சிவயோகியார் "அன்பனே! இத்திருவோட்டைப் பத்திரமாக வைத்திருந்து நான் கேட்கும்போது கொடுப்பாயாக இத்திருவோடு தனக்குத் தானே ஒப்பானது; தன்னிடத்தில் சேர்ந்த எல்லாப் பொருள்களையும் பரிசுத்தப்படுத்துவது; பொன்மணிகளினுஞ் சிறந்ததாக வைத்துப் பாதுகாக்கத்தக்கது. இத்தகைய சிறப்புக்களையுடைய இவ்வோட்டினை வாங்கிவை" என்று திருவாய்மலர்ந்தருளி, திருவோட்டைக் கொடுத்தனர். தொண்டர் யோகியாரைப்பணிந்து, அதைவாங்கித் தம் இல்லத்தின் ஓர்பக்கத்தில் சேமித்து வைத்து விட்டு, அந்தணரிடம்வந்தார். சிவயோகியார் அவ்விடத்தினின்றும் போமபடி எழ, நாயனர் அவருடன் சிறிதுதூரம்சென்று, விடைபெற்று, வீட்டுக்குத் திரும்பினர். யோகியாக வந்த ஸ்ரீநடராசமூர்த்தியும் கனகசபையை யடைந்தருளினர்

பலநாள்கள் கழிந்தபின்னர், ஒருநாள் சிவபெருமான் தாம சேமித்து வைக்கத் தந்த திருவோட்டை வைக்கப்பட்ட இடத்தினின்றும் மறையத் திருவருள்செய்து, முன்போலச் சிவயோகி வடிவங்கொண்டு, நாயனர்சுவாமிகள் வீட்டிற்கு வந்தார் அடியவர் முன்போலவே அவரை வழிபட்டு நிற்க, யோகியார் "அடியவனே! நாம்முன்னளில் உன்னிடத்தில் அளித்த திருவோட்டைக்கொண்டுவா" என்றார் உடனே உண்மையடியவர் திருவோடு வைக்கப்பட்ட இடத்திற்குச் சென்றுபார்த்து, திகைத்து, மனைவியாரைக் கேட்டும், பிறவிடங்களில் தேடியும் அதைக் காணதவராய், சிவயோகியாருக்கு உத்தரஞ் சொல்வதற்கு ஒன்றுந் தோன்றமல் நின்றார். பிராமணராக வந்த பெருமான் உள்ளே நுழைந்த நாயனர் கேட்கும்படி "க்ஷணநேரத்தில் வருவேன் என்று சென்ற நீ ஏன் இவ்வளவுநேரம் தாமதப்பட்டு நிற்கின்றாய்?" என்ன, திகைக்கும நாயனர் சிவயோகியாரிடம் வந்து வணங்கி "எந்தையே! தேவரீர் அளித்த திருவோட்டை வைத்தவிடத்தினும், பிறவிடங்களினுந் தேடியுங்கண்டிலேன்; பழையதாகிய அதைவிடச்சிறந்ததாகப் புதியதுஒன்று செய்து தருகின்றேன். சிறியேன் செய்த பெரும்பிழையைப் பொறுத்தருளல்வேண்டும்" என்று கெஞ்சிக்கேட்டுக் கொண்டார். சிவயோகியார் சினந்து சிவத்தொண்டரைப் பார்த்து "நீஎன்னசொன்னய்? நான்கொடுத்த மண்ணேட்டையன்றிப் பொன்னேட்டைக் கொடுத்தாயாயினும் நான்வாங்கேன். நான் முன்கொடுத்த ஓட்டினையே கொண்டுவா" என்றார். அடியவர், பெரியவரைப்பணிந்து "ஐயரே! தேவரீர் அளித்த திருவோடு தேடியுங் காணப்படவில்லை. வேறொரு நல்ல ஓடு கொடுக்கின்றேன் என்றாலும், அதற்கும் உடன்படாமல் 'எம்மோட்டையே கொண்டுவா' என்று இயம்புகின்றீர். இது என் உணர்வு முழுதையும் ஒழித்துவிட்டது" என்றுசொன்னர் அதைக்கேட்ட புண்ணியமூர்த்தி "நான் உன்னிடத்தில் வைத்த அடைக்கலப்பொருளை அபகரித்துக் கொண்டு, பழிக்குச்சிறிதும் அஞ்சாதவனய், பலபாவங்களைச் செய்கின்றாய். யாவருங்காணும்படி உன்னைத் தப்பிப்போகவொட்டாமல்பிடித்து, என் ஓட்டை வாங்காமல் நான் போகவேமாட்டேன்" என்ன, நாயனர் "தேவரீர் தந்த திருவோட்டை நான் கவர்ந்தவனல்லன். என்னிடத்திற் களவின்மையை எங்ஙனம் விளக்குவேன்? கூறும்" என்றார்.

அதற்குச் சிவயோகியார் "உன்மகனைக் கையிலே பிடித்துக்கொண்டு குளத்தில் மூழ்கிச் சத்தியஞ் செய்துகொடு" என்று இயம்ப, அடியவர் "எனக்குப் புதல்வன் இலலையே! நான் என்ன செய்வேன்" என்றார். சிவயோகியார் "உன்மனைவியின் கையைப் பிடித்துத் தடாகத்தில் மூழ்கிச் சத்தியஞ்செய்" என்றுரைப்ப, அன்பர் "எனக்கும், என்மனைவிக்கும் ஓர் சபதம் உண்டு; அதனாலே யானு என் இல்லாளுடன் குளத்தில் மூழ்கமாட்டேன்; யானே மூழ்கிச சததியஞ்செய்கின்றேன்; வாரும்" என்று மொழிந்தவுடன், சிவபிரான் "நான்முன் அளித்த திருவோட்டைக கொடுக்காமலும், அதை அபகரிககவில்லை என உன் மனைவியின் கையைப் பிடித்துக் குளத்தில் முழுகிச சததியஞ்செய்து கொடுககாமலும் சிநதைவலிததிருக்கின்றாய்; தில்லைவாழ் அந்தணர்கள் கூடியுள்ள பெரிய சபைககுசசெனறு, அஙகே இந்தவிடயத்தைக் குறித்துப் பேசப்போகின்றேன்" என்று அச்சபைக்குச் சென்றார் நாயனாரும் அவரைப் பின்தொடாநதா சிவயோகியார் அந்தணர்களை நோக்கி "இககுயவனிடத்தில யான் சேமிதது வைககும்படி கொடுத்த பாத்திரததை எனககுக கொடுககாமலிருககின்றான. அதை இழந்தானாயின் தன்மனைவி கைப்பற்றிக குளததில மூழ்கிச சததியமுஞ் செய்யாமலிருக்கின்றான்" என்றார வேதியர்கள் வேட்கோவரைப பாரதது "விளைந்த விடயததை விளம்பும்" என்ன, நாயனார் நடநதவைகளைச சொன்னார் அதைக் கேட்ட பிராமணர்கள் "நாயனாரே! இவர் அளிதத ஓட்டைநீர இழந்தீராகில், இவர் கூறும வண்ணம் உம்முடைய மனைவியாரின் கையைப் பிடித்துத் தடாகததில மூழ்கிச சததியஞ் செய்து கொடுத்தலே நியாயம்" என்று சொல்ல, அடியவர் தம்மனைவியாரைத தீண்டாதிருததலைப்பற்றி ஒன்றுஞ் செப்ப மாட்டாதவராய் "குளத்தில மூழ்கிச் சததியஞ்செய்கினறேன்; என்னுடன் வாரும" என்று சிவயோகியாருடன் தமது இலலத்திற்குவந்து, மனைவியை யழைததுக்கொணடு, இடபவாகனத்தையுடைய இறைவர்எழுந்தருளியுள்ள திருபபுலீசசுரததுககு முன்னுள்ள திருககுளததையடைந்து தமமாணை தவறாதபடி, ஓர மூஙகிற்றணடின் ஓாமுனையை மனைவியார்பிடிக்கத தாமோாமுனையைப் பிடிதது மூழ்கும்போது, சிவயோகியார் 'உன் மனைவியின் கையைப்பிடிததுமூழ்கு" என்றார் அன்பிற்சிறந்தபெரியவர் அப்படி செய்யககூடாமையைப் பற்றி யாவரும அறிய, தமக்கும் கற்பரசிக்கும் உண்டாகிய சபததததை வெளியிட்டு மூழ்கினா. அப்படி மூழ்கிக கரையேறிய நாயனாரும், நாயகியாரும் முதுமைப்பருவம நீஙகி, இளமைப் பருவததை அடைநதார்கள் தேவர்கள் பூமாரிபொழிந்து நாயனாரைப் புகழ்நதார்கள் அதைககணடவாகள் அஙகிருந்த சிவயோகியாரைக காணமல் மருண்டு நின்றார்கள். யோகியாய் வந்த சிவபிரான் பார்வதியாரோடு இடபவாகனததின் மேல் தோன்றினர். திருநீலகணட நாயனாரும், அவர் மனைவியாரும் அறுமுகன்றாதையை வணஙகி, துதிசெய்து ஆனநதவாரிதியில ஆழ்ந்தனர் எல்லாம் வலல இறைவா "ஐமபுலனை வென்றதனால சிறப்படைந்த அன்பர்களே! இவ்விளமைப்பருவம் என்றும் நீஙகாமல எம்மிடத்தில் இருஙகள்" என்றருளி எழுந்தருளினர் குயவாகுலஞ் செய்த பெருந்தவப் பயனாகிய நாயனார் பெருமானும், அவர்மனைவியாராம அருந்ததியனைய பெருமாட்டியும் சிவலோகமடைந்து பேரின்ப முற்றார்கள்

—oo—

# இயற்பகைநாயனார் புராணம்.



சென்னி வெண்குடை நீடந பாயன் றிருக்கு லம்புகழ் பெருக்கிய சிறப்பின், மன்னு தொல்புகழ் மருதநீர் நாட்டு வயல்வ ளந்தர வியல்பினி லளித்துப், பொன்னி நன்னதி மிக்கநீர் பாய்ந்து புணரி தன்னையும் புனித மாக் குவதோர், நன்னெ டும்பெருந் தீர்த்தமுன் னுடைய நலஞ்சி றந்தது வளம்புகார் நகரம் (௧)

அக்கு லப்பதிக் குடிமுதல் வணிக ரளவில் செல்வத்து வளமையி னமைந்தார், செக்கர் வெண்பிறைச் சடையவ ரடிமைத் திறத்தின் மிக்கவர் மறைச்சிலம் படியார், மிக்க சீரடி யார்கள்யா ரேனும் வேண்டும் யாவையு மில்லையென் னாதே, இக்க டற்படி நிகழமுன் கொடுக்கு மியல்பி னின்றவ ருலகியற் பகையார் (௨)

ஆறு சூடிய வையர்மெய் யடிமை யளவி லாததோ ருளநிறை யருளா
னீறு சேர்திரு மேனியர் மனத்து நினைத்த யாவையும் வினைப்படி முடித்து
மாறி லாதநன் னெறியினில் விளங்கு மனைய றம்புரி மகிழ்ச்சியின் வந்த
பேறெ லாமவ ரேவின செய்யும் பெருமை யேயெனப் பேணிவாழ் நாளில்.

ஆயு நுண்பொரு ளாகியும் வெளியே யம்ப லத்துணின் றாடுவா ரும்பர், நாய கிக்குமஃ தறியவோ பிரியா நங்கை தானறி யாமையோ வறியோந், தூய நீறுபொன் மேனியில் விளங்கத் தூர்த்த வேடமுந் தோன்றவே தியராய், மாய வண்ணமே கொண்டுதந் தொண்டர் மறாத வண்ணமுங் காட்டுவான் வந்தார் (௪)

வந்து தண்புகார் வணிகர்த மறுகின் மருங்கி யற்பகை யார்மனை புகுத, எந்தை யெம்பிரா னடியவ ரணைந்தா ரென்று நின்றதோ ரின்பவா தரவாற், சிந்தை யன்பொடு சென்றெதிர் வணங்கிச் சிறப்பின் மிக்கவர்ச் சனைகண் முன் செய்து, முந்தை யெம்பெருந் தவத்தினா லேகொல் முனிவ ரிங்கெழுந் தருளிய தென்றார். (௫)

(௧) சென்னி - சோழ (குலத்தில் அவதரித்த.) பொன்னி - காவிரி. புணரிதன்னையும் - கடலையும். தீர்த்தம் - காவிரி சங்கம. புகார்நகரம் - காவிரிப்பூம்பட்டினம். (௨) மறைச்சிலம்படியார் மிக்கசீர் அடியார்கள் - சிவனடியார்கள் கடற்படி - கடல் சூழ்ந்த நிலவுலகில். உலகு இயல் பகையார் - உலகியலைப் பகைத்த காரணத்தால் இயற்பகையார் என்னுந் திருநாமத்தையுடையவர். (௩) வினைப்படி - கருத்துப்படி. (௪) ஆயும் - (ஞானிகள்) ஆராயும். ஆடுவார் - நடராஜர். உம்பர் நாயகிக்கும் - தேவர்கள் முதல்வியாகிய பார்வதிதேவியாருக்கும். தூர்த்தவேடமும் - காமுகர்க்குரிய வேடமும். தொண்டர் - இயற்பகைநாயனார் மறாதவண்ணமும் - (அடியவர்கள்) கேட்டபொருளை மறுக்காமற் கொடுக்குந் தன்மையையும். (௫) மறுகின் மருங்கு - வீதியினிடத்தில். ஆதரவால் - விருப்பால். "சிந்தை நினைந்ததோர் இன்ப ஆதரவால் அன்பொடு" எனக்கூட்டுக.

என்று கூறிய வியற்பகை யார்முனெய்தி நின்றவக் கைதவ மறையோர், கொன்றை வார்சடை யாரடி யார்கள் குறித்து வேண்டின குணமெனக் கொண்டே, ஒன்று நீரெதிர் மறுத்தவந் தளிக்கு முண்மை கேட்டுநும் பாலொன்று வேண்டி, இன்று நானிங்கு வந்தன னதனுக் கிசைய லாமெனி லியம்பலா மென்றார். (௬)

என்ன வவ்வுரை கேட்டியற் பகையார் யாது மொன்றுமென் பக்கலுண் டாகில், அன்ன தெம்பிரா னடியவ ருடைமை யைய மில்லைநீ ரருள்செய்யு மென்ன, மன்னு காதலுன் மனைவியை வேண்டி வந்த திங்கென வங்கண ரெதிரே, சொன்ன போதிலு முன்னையின் மகிழ்ந்து தூய தொண்டனார் தொழுதுரை செய்வார் (௭)

இதுவெ னக்குமுன் புள்ளதே வேண்டி யெம்பி ரான்செய்த பேறெனக் கென்னாக், கதுமெ னச்சென்று தம்மனை வாழ்க்கைக் கற்பின் மேம்படு காதலி யாரை, விதிம ணக்குல மடந்தையின் றுனையிம் மெய்த்த வர்க்குநான் கொடுத்தன னென்ன, மதும லர்க்குழன் மனைவியார் கலங்கி மனந்தெளிந்த பின் மற்றிது மொழிவார் (௮)

இன்று நீரெனக் கருள்செய்த திதுவே லென்னு யிர்க்கொரு நாதநீ ருரைத்த, தொன்றை நான்செயு மத்தனை யல்லா லுரிமை வேறுள தோவெனக் கென்று, தன்ற னிப்பெருங் கணவரை வணங்கத் தாழ்ந்து தொண்டனார் தாமெதிர் வணங்கச், சென்று மாதவன் சேவடி பணிந்து திகைத்து நின்றன டிருவினும் பெரியாள். (௯)

மாது தன்னைமுன் கொடுத்தமா தவர்தா மனம கிழ்ந்துபே ருவகையின் மலர்ந்தே, யாது நானினிச் செய்பணி தாமென் றிறைஞ்சி நின்றவர் தம்மெதிர் நோக்கிச், சாதி வேதிய ராகிய தலைவர் தையல் தன்னையான் றனிக்கொடு போகக், காதல் மேவிய சுற்றமும் பதியுங் கடக்க நீதுணை போதுக வென்றார். (௰)

---

(௬) கைதவமறையோர் - வஞ்சனையுடைய பிராமணர். (௭) என்பக்கல் உண்டாகில் - என்னிடம் இருப்பின். அங்கணர் - சிவபிரான். (௮) கதுமெனச் சென்று - விரைவாகப்போய். காதலியாரை - மனைவியாரை. விதிமணக்குலமடந்தை - வேதவிதிப்படி என்னைக் கலியாணஞ்செய்து கொண்ட நற்குலமாதே. மதுமலர்க்குழல் - தேனைப்பொருந்திய பூக்களை முடித்தகூந்தலையுடைய. தகாத மொழியைக்கேட்டு மனமவருந்தினார் என்பது தோன்ற "கலங்கி" என்றும், உடனே கணவன் சொற்படி நடத்தலே சிறப்புடையார்க் கழகெனக் கருதியுடன்பட்டார் என்பது தோன்ற "மனந்தெளிந்து" என்றுங் கூறினார். (௯) உரிமை - என்னிஷ்டப்படி செய்யத்தக்க காரியம். தன்மனைவியார் என்னும் பாவனையை யொழித்தார் என்னுங் கருத்துப்பற்றி "எதிர்வணங்க" என்றார். (௰) உவகையின்மலர்ந்து - சந்தோஷத்தால் முகமலர்ந்து; தேகம் பூரித்து. சாதி வேதியராகிய தலைவர் - சிவபிரான். காதல்மேவிய சுற்றமும் பதியும் கடக்க - (இவளிடத்து) ஆசைவைத்துள்ள பந்துக்களையும், இவ்வூரையும் கடந்துபோக.

வேறு.

என்றவ ரருளிச் செய்ய யானேமுன் செய்குற் றேவல்
ஒன்றிது தன்னை யென்னை யுடையவ ரருளிச் செய்ய
நின்றது பிழையா மென்று நினைந்துவே றிடத்துப் புக்குப்
பொன்றிக ழறுவை சாத்திப் பூங்கச்சுப் பொலிய வீக்கி (கக)

வாளொடு பலகை யேந்தி வந்தெதிர் வணங்கி மிக்க
ஆளரி யேறு போல்வா ரவரைமுன் போக்கிப் பின்னே
தோளிணை துணையே யாகப் போயினார் துன்னி னாரை
நீளிடைப் படமுன் கூடி நிலத்திடை வீழ்த்த நேர்வார் (கஉ)

மனைவியார் சுற்றத் தாரும் வள்ளலார் சுற்றத் தாரும்
இனையதொன் றியாரே செய்தா ரியற்பகை பித்த னானாற்
புனையிழை தன்னைக் கொண்டு போவதா மொருவ னென்று
துனைபெரும் பழியை மீட்பான் றொடர்வதற் கெழுந்து சூழ்வார் (கங)

வேலொடு வில்லும் வாளுஞ் சுரிகையு மெடுத்து மிக்க
காலென விசையிற் சென்று கடிநகர்ப் புறத்துப் போகிப்
பாலிரு மருங்கு மீண்டிப் பரந்தவார்ப் பரவம் பொங்கி
மால்கடல் கிளர்ந்த தென்ன வந்தெதிர் வளைத்துக் கொண்டார் (கச)

---

(கக) முன் - கட்டளையிடுமுன். என்னையுடையவர் - என்னையாளாகவுடைய இச் சிவனடியார். அறுவை - பீதாம்பரம். பூங்கச்சு - அழகிய அரைக்கச்சு. பொலிய வீக்கி - விளங்கும்படி கட்டி. (கஉ) பலகை - கேடகத்தையும். மிக்க ஆளரி ஏறு போல்வார் - அதிக வலிமையுடைய மிருகேந்திரனென்னும் ஆண்சிங்கத்தையொத்த இயற்பகையார். அவரை - மறையவரையும், மனைவியாரையும். பெரும் வீரனுக்கு அவன் புஜபலமே துணையாகலின் "தோளிணை துணையேயாக" என்றார். துன்னினாரை நீள் இடைப்பட முன்கூடி நிலத்து இடைவீழ்த்த நேர்வார் போயினார் - (மனைவிநிமித்தமாக) வந்தவர்களை நெடுந்தூரத்தில் வரும்பொழுதே எதிர்த்துப் பூமியில் துணித்து விழுத்த இஷ்டமுள்ளவராய்ச் சென்றார். போல்வார் வீழ்த்த நேர்வாராய்ப் போயினார் எனக்கூட்டுக. (கங) வள்ளலார் - இயற்பகைநாயனார். "இயற்பகை பித்தனாயினும், அறிவும், மானமும், வலிமையும் உடையவர்களாய நாம், அவன் மனைவியையோர் அந்தணன் கொண்டுபோக வொட்டோம்" என்னுங் கருத்துடையரானார்கள் என்பது தோன்ற "இயற்பகை . . . ஒருவன்" என்று கூறினார். துனை - தமது குடும்பத்தைப் பற்றும். (கச) சுரிகையும் - உடைவாளையும். கால் என - காற்றைப்போல. கடிநகர் - காவலையுடைய பட்டினம். இருபால் - வலம் இடம் ஆகிய இரண்டு பக்கங்களினும். இரு மருங்கும் - முன்னும் பின்னும். ஈண்டி - நெருங்கி. மால்கடல் கிளர்ந்தது என்ன - பெரிய சமுத்திரம் பொங்கி எழுந்ததைப்போல.

வழிவிடுந் துணைபின் போத வழித்துணை யாகி யுள்ளார்
கழிபெருங் காதல் காட்டிக் காரிகை யுடன்போம் போதில்
அழிதகன் போகே லீண்டவ் வருங்குலக் கொடியை விட்டுப்
பழிவிட நீபோ வென்று பகர்ந்தெதிர் நிரைந்து வந்தார் (கரு)

மறைமுனி யஞ்சி னான்போன் மாதினைப் பார்க்க மாதும்
இறைவனே யஞ்ச வேண்டா வியற்பகை வெல்லு மென்ன
அறைகழ லண்ணல் கேளா வடியனே னவரை யெல்லாந்
தறையிடைப் படுத்து கின்றேன் றளர்ந்தருள் செய்யே லென்று (கசு)

பெருவிற லாளி யென்னப் பிறங்கெரி சிதற நோக்கிப்
பரிபவப் பட்டு வந்த படர்பெருஞ் சுற்றத் தாரை
ஒருவரு மெதிர்நில் லாமே யோடிப்போய்ப் பிழையு மன்றேல்
எரிசுடர் வாளிற் கூறாய்த் துடிக்கின்றீ ரென்று நேர்ந்தார் (கஎ)

ஏடநீ யென்செய் தாயா லித்திற மியம்பு கின்றாய்
நாடுறு பழியு மொன்னார் நகையையு நாணா யின்று
பாடவ முரைப்ப துன்றன் மனைவியைப் பனவற் கீந்தோ
கூடவே மடிவ தன்றிக் கொடுக்கயா மொட்டோ மென்றார் (கஅ)

மற்றவர் சொன்ன மாற்றங் கேட்டலு மனத்தின் வந்த
செற்றமுன் பொங்க வுங்க ளுடற்றுணி யெங்குஞ் சிந்தி
முற்றுநும் முயிரை யெல்லா முதல்விசும் பேற்றிக் கொண்டு
நற்றவர் தம்மைப் போக விடுவனென் றெழுந்தார் நல்லோர் (ககூ)

நேர்ந்தவ ரெதிர்ந்த போது நிறைந்தவச் சுற்றத் தாருஞ்
சார்ந்தவர் தம்முன் செல்லார் தையலைக் கொண்டு பெற்றம்
ஊர்ந்தவர் படிமேற் செல்ல வுற்றெதி ருடன்று பொங்கி
ஆர்ந்தவெஞ் சினத்தான் மேற்சென் றடர்ந்தெதிர் தடுத்தா ரன்றே (உ0)

---

(கரு) வழிவிடும் துணைபின்போத - தம்மை வழிவிடுதற்குரிய துணையாக இயற்பகைநாயனார் பின்னேவர. வழித்துணையாகியுள்ளார் - சீவர்கள்செல்லும் முத்திநெறிக்குத் துணையாயுள்ள சிவபெருமான், இயற்பகை நாயனாரும், பிறரும் செல்லும் முத்திவழிக்குத் துணைநின்றார் எனினும் பொருந்தும். கழிபெரும் - மிகப்பெரிய. அழிதகன் - பெருமைகெட்டவனே. தகவழிந்தவன் என்பது அழிதகனென மாறினது. ஈண்டு அவ் அருங்குலக்கொடியை - இவ்விடத்தில் அந்த இயற்பகையின் குலத்திற் சிறந்த மனைவியாரை. (கசு) மறைமுனி - பரமசிவனாகிய பிராமணர். (கஎ) பரிபவம் - அவமானம். பெருவிறல் ஆளி என்ன - மிக்கவலிமையுடைய சிங்கத்தைப்போல. வாளில் கூறாய் - வாளால் இரண்டு துண்டங்களாகி. (கஅ) ஒன்னார் - பகைவர்கள். பாடவம் - சமர்த்து. பனவற்கு - பிராமணனுக்கு. (ககூ) செற்றம் - கோபம். விசும்பு - ஆகாயத்தில். (உ0) சார்ந்தவர் - இயற்பகைநாயனார். பெற்றம் ஊர்ந்தவர் - இடபாரூடராய இறைவர். படிமேல் - பூமிமீது.

சென்றவர் தடுத்த போதி லியற்பகை யார்முன் சீறி
வன்றுணை வாளே யாகச் சாரிகை மாறி வந்து
துன்றினர் தோளுந் தாளுந் தலைகளுந் துணித்து வீழ்த்து
வென்றடு புலியே றென்ன வமர்விளை யாட்டின் மிக்கார். (உக)

மூண்டுமுன் பலராய் வந்தார் தனிவந்து முட்டி னோர்கள்
வேண்டிய திசைக டோறும் வேறுவே றமர்செய் போழ்தில்
ஆண்டகை வீரர் தாமே யனைவர்க்கு மனைவ ராகிக்
காண்டகு விசையிற் பாய்ந்து கலந்துமுன் றுணித்து வீழ்த்தார் (உஉ)

சொரிந்தன குடல்க ளெங்குந் துணிந்தன வுடல்க ளெங்கும்
விரிந்தன தலைக ளெங்கு மிடைந்தன கழுகு மெங்கும்
எரிந்தன விழிக ளெங்கு மெதிர்ப்பவ ரொருவ ரின்றித்
திரிந்தனர் களனி லெங்குஞ் சிவன்கழல் புனைந்த வீரர் (உங)

மாடலை குருதி பொங்க மடிந்தசெங் களத்தி னின்றும்
ஆடுறு செயலின் வந்த கிளைஞரோ டணைந்தார் தம்மில்
ஓடினா ருள்ளா ருய்ந்தா ரொழிந்தவ ரொழிந்தே மாண்டார்
நீடிய வாளுந் தாமு நின்றவர் தாமே நின்றார். (உச)

திருவுடை மனைவி யாரைக் * கொடுத்திடைச் செறுத்து முன்பு
வருபெருஞ் சுற்ற மெல்லாம் வாளினாற் றுணித்து மாற்றி
அருமறை முனியை நோக்கி யடிகணீ ரஞ்சா வண்ணம்
பொருவருங் கான நீங்க விடுவனென் றுடனே போந்தார் (உரு)

இருவரா லறிய வொண்ணா வொருவர்பின் செல்லு மேழை
பொருதிறல் வீரர் பின்பு போகமுன் போகும் போதில்
அருமறை முனிவன் சாய்க்கா டதன்மருங் கணைய மேவித்
திருமலி தோளி னானை மீளெனச் செப்பி னானே (உசா)

தவமுனி தன்னை மீளச் சொன்னபின் றலையா லார
அவன்மலர்ப் பதங்கள் சூடி யஞ்சலி கூப்பி நின்று
புவனமூன் றுய்ய வந்த பூசுரன் றன்னை யேத்தி
இவனருள் பெறப்பெற் றேனென் றியற்பகை யாரு மீண்டார். (உஎ)

---

(உக) சாரிகைமாறிவந்து - வலம் இடமாகச் சுற்றிவந்து. சாரி - சரித்தல், கை - இடம். தானிற்கும் இடத்தினின்றும் வலமாகவும், இடமாகவும் சரித்தலிற் சாரிகை என்றாயிற்று. புலி ஏறு என்ன - ஆண்புலியைப்போல. (உங) மிடைந்தன - நெருங்கின. களனில் - போர்க்களத்தில். (உச) மாடு அலை குருதிபொங்க - பக்கங்களில் அலையை வீசிக்கொண்டு இரத்தவெள்ளம் பொங்கும்படி. (உரு) இடைசெறுத்து - இடையிலே கோபித்து. (உசா) இருவரால் - பிரமவிட்டுணுக்களால். அருமறைமுனிவர் - வேதியனாகிய சிவபிரான். தோளினானை - இயற்பகை நாயனாரை.

* கொடுத்திட என்றும் பாடம்.

செய்வதற் கரிய செய்கை செய்தநற் றொண்டர் போக
மைதிகழ் கண்ட னெண்டோண் மறையவன் மகிழ்ந்து நோக்கிப்
பொய்தரு முள்ள மில்லான் பார்க்கிலன் போனு னென்று
மெய்தரு சிந்தை யாரை மீளவு மழைக்க லுற்றார் (உ௮)

இயற்பகை முனிவா வோல மீண்டுநீ வருவா யோலம்
அயர்ப்பிலா தானே யோல மன்பனே யோல மோலஞ்
செயற்கருஞ் செய்கை செய்த தீரனே யோல மென்றான்
மயக்கறு மறையோ விட்டு மாலயன் றேட நின்றான் (உ௯)

அழைத்தபே ரோசை கேளா வடியனேன் வந்தேன் வந்தேன்
பிழைத்தவ ருளரே லின்னும் பெருவலி தடக்கை வாளின்
இழைத்தவ ராகின் றாரென் றியற்பகை யார்வந் தெய்தக்
குழைப்பொலி காதி னானு மறைந்தனன் கோலங் கொள்வான் (௩0)

சென்றவர் முனியைக் காணார் சேயிழை தன்னைக் கண்டார்
பொன்றிகழ் குன்று வெள்ளிப் பொருப்பின்மேற் பொலிந்த தென்னத்
தன்றுணை யுடனே வானிற் றலைவனை விடைமேற் கண்டார்
நின்றிலர் தொழுது வீழ்ந்தார் நிலத்தினின் றெழுந்தார் நேர்ந்தார். (௩௧)

சொல்லுவ தறியேன் வாழி தோற்றிய தோற்றம் போற்றி
வல்லைவந் தருளி யென்னை வழித்தொண்டு கொண்டாய் போற்றி
எல்லையி லின்ப வெள்ள மெனக்கருள் செய்தாய் போற்றி
தில்லையம் பலத்து ளாடுஞ் சேவடி போற்றி யென்ன (௩௨)

விண்ணிடை நின்ற வெள்ளை விடையவ ரடியார் தம்மை
எண்ணிய வுலகு தன்னி லிப்படி நம்பா லன்பு
பண்ணிய பரிவுகண்டு மகிழ்ந்தனம் பழுதி லாதாய்
நண்ணிய மனைவி யோடு நம்முடன் போது கென்று (௩௩)

திருவளர் சிறப்பின் மிக்க திருத்தொண்டர் தமக்குந் தோற்ற
மருவிய தெய்வக் கற்பின் மனைவியார் தமக்குந் தக்க
பெருகிய வருளி னீடும் பேறளித் திமையோ ரேத்தப்
பொருவிடைப் பாகர் மன்னும் பொற்பொது வதனுட் புக்கார். (௩௪)

(உ௮) பார்க்கிலன் திரும்பிப்பார்க்கின்றான் இலன். (உ௯) ஓலம் - அடைக்கலம், அச்சம் நிகழ்ந்தவிடத்து அதனைத் தீர்க்கக் கூறும் ஓர் விளிப்பொருளவாகிய இடைச் சொல். அயர்ப்பு இலாதானே - (சிவனடியார்களை என்றும்) மறவாதவனே. (௩0) குழை பொலி காதினானும் - சங்கக்குழை விளங்கும்படியான காதுகளையுடைய சிவ பெருமானும். வந்தேன் விரைவு பற்றி எதிர்காலம் இறந்தகாலமாயிற்று. கோலங் கொள்வான் மறைந்தனன் எனக்கூட்டுக. (௩௧) வெள்ளிப்பொருப்பின் - கயிலாயமலை யின். (௩௨) வல்லை - விரைவாக. (௩௪) பொன்பொது - கனகசபை.

வானவர் பூவின் மாரி பொழியமா மறைக ளார்ப்ப
ஞானமா முனிவர் போற்ற நலமிகு சிவலோ கத்தில்
ஊனமி றொண்டர் கும்பிட் டுடனுறை பெருமை பெற்றா
ரேனைய சுற்றத் தாரும் வானிடை யின்பம் பெற்றார். (௧௫)

இன்புறு தாரந் தன்னை யீசனுக் கன்ப ரென்றே
துன்புறா துதவுந் தொண்டர் பெருமையைத் தொழுது வாழ்த்தி
அன்புறு மனத்தா னாத னடியவர்க் கன்பு நீடு
மன்புக ழிளைசை மாறன் வளத்தினை வழுத்த லுற்றேன். (௧௬)

**இயற்பகைநாயனார்புராண முற்றிற்று.**

ஆக திருவிருத்தம் - ௪௰௧



சோழமண்டலத்திலே, காவிரிப் பூம்பட்டினத்திலே, வணிகர் குலத்திலே அவதாரஞ் செய்தவரும், இயற்பகையார் என்னுந் திருநாமத்தையுடையவரும் ஆகிய ஒருநாயனார் இருந்தார். அவர் இல்லறத்திலிருந்து, விபூதி உருத்திராக்ஷமணிந்த சிவனடியார்கள் எக்குலத்தவராயினும், அவர்கள் விரும்பும் யாவையும் இல்லை என்னாமல் அளித்துக்கொண்டு வாழ்ந்துவந்தார்.

அங்ஙனம் வாழும் இயற்பகைநாயனாரது மெய்த்தொண்டின் மேன்மையை உலகினர்க்கு உணர்த்தும்பொருட்டு, உம்பர் நாயகராகிய சிவபிரான் விபூதிவிளங்குந் திருமேனியராய், காமுகர்க்குரிய வேடங்கொண்டு, பிராமணராக அப்பெரியவர் வீட்டிற்கு எழுந்தருளினார். நாயனார், சுவாமிகளைக் கண்டதும் அன்புடன் எதிர்கொண்டழைத்து, முறைப்படி அருச்சித்து, "பெருமானே! தேவரீர் அடியேன் இல்லத்துக்கு எழுந்தருளியது பூர்வத்தில் யான் செய்த பெருந்தவப் பயனபோலும்" என்றுரைத்தார். அந்தணர் அடியவரை நோக்கி "அன்பரே! சிவனடியார்கள் விரும்பி, எவற்றைக்கேட்பினும், நீர் அவையிற்றை மறுக்காது ஈதலைக்கேட்டு யாமும் ஒரு பொருளை நாடி உம்மிடத்திற்கு வந்தோம் அதை நீர் அளிப்ப இசைவீராயின், அப்பொருள் இன்னதென்று இயம்புகின்றோம்" என்றார். அதற்கு அன்பிற்சிறந்த நாயனார் "எப்படிப்பட்ட பொருளாயினும் என்னிடத்திருப்பின், அது எம்பிரான் அடியவர்களுக்குரியதேயாம்; தேவரீர் சிறிதும் சந்தேகிக்கவேண்டாம்; விரும்பியபொருளை அருளிச் செய்யவேண்டும்" என்ன, வேதியர் "உம்மனைவியைவேண்டி இங்கே வந்தோம்" என்றார். அதைக்கேட்டவுடன் அடியவர் முன்னினும் அதிக மகிழ்வடைந்து, மறையவரை வணங்கி "சுவாமீ! என்னிடத்துள்ள பொருளையே தாங்கள் விரும்பியது என்புண்ணியப் பயன்" என்று கூறி, விரைவில் உள்ளே நுழைந்து, கற்பரசியைப்பார்த்து "பெண்ணே! நான் இன்றைக்கு உன்னை இவ்வேதியருக்குக் கொடுத்துவிட்டேன்" என்றார். அதைக்கேட்ட மனைவியார்சிறிது மனங்கலங்கி, உடனே தெளிந்து, "என்னுயிர்த் துணைவரே! தேவரீர் கட்டளைப்படி நடப்பதே என்கடமை. அதையன்றி என்மனப்படி செய்தற்கு

(௧௫) உடனுறை - சமீபத்தில் இருக்கும். ஏனைய சுற்றத்தாரும்-(பகைத்துப் போர் புரிந்து இறந்த) மற்ற உறவினர்களும். (௧௬) தாரம் - மனைவி. இளைசைமாறன் - இளையான்குடிமாறநாயனார்.

ரிய காரியம் வேறுளதோ?" என்று சொல்லி வணங்க, நாயனாரும் காதலியாரை வணங்கினார். உடனே மாதரசியார் மறையவரிடஞ்சென்று, அவரைப் பணிந்து, எழுந்து, திகைத்து நின்றார். அதைப்பார்த்து ஆனந்தக்கடலில் ஆழ்ந்த அடியவர்பெருமான், ஐயரை நமஸ்கரித்து "இன்னுஞ்சிறியேன் இயற்றவேண்டிய குற்றேவல் யாது" என்று கேட்க; சுவாமியார் "இத்தையலை யாம் தனியே அழைத்துக்கொண்டு போகிறபடியால், உங்கள்மீது பற்றுள்ள பந்துக்களையும், பிறரையும், இவ்வூரையும் கடந்துபோக நீர்எனக்குத் துணையாக வரலவேண்டும்" என்று வாய்மலர்ந்தார். அதுகேட்ட நாயனார் "இவர் ஏவுதற்கு முன்னமே யானே இப்பணியைச் செய்யாது, இவர் அருளும் வரைகரும் தாழ்த்து நின்றது பிழை" எனக்கருதி, வேறோரிடத்துக் குச் சென்று யுத்தகோலங் கொண்டு, திரும்பி, தூரத்தராகவந்த வேதியனை வணங்கி, அவரையும், அருந்ததியனையாரையும் தமக்குமுன்னே போகச் செய்து, தாம் தனிமையாக அவர்களுக்குப் பின்னே சென்றார்.

அதுகாலை நாயகியார் சுற்றத்தவர்களும், நாயனார் சுற்றத்தவர்களும் "இப்படிப்பட்ட காரியத்தை இதுகாறும் செய்தவர் யாவர்? இயற்பகைபித்தனாயினும், அவன் மனைவியை ஒருமறையவன் கொண்டுபோவது தகுதியாமோ" என்று, தங்கள் குலத்துக்கு நேரும்பழியை யொழிக்க யுத்தாயுதங்களைத்தாங்கிக்கொண்டு,ஐயரைவளைத்துக்கொண்டார்கள். அந்தணர்தம்முடன் வரும் அணங்கினை நோக்க, அவர் "எம்பிரானே! தேவரீர்அஞ்சவேண்டாம்; இயற்பகைநாயனார் இவர்களை வெல்லுவார்" என்றார் உடனே இயற்பகை நாயனார் வேதியருக்குத் தேறுதற் கூறிப் பந்துக்களைப்பார்த்து "என்னெதிரில நிலலாமல் ஓடிப்பிழையுங்கள். இல்லாவிடின், என்வாளுக்கு இரையாவீர்கள்" என்றியம்ப, சுற்றத்தார்கள் "ஏடா இயற்பகையே! நீஎன்னகாரியஞ் செய்தாய்? ஊரார்பழிப்பார்கள்; பகைவர்கள் நகைப்பார்கள்; நீசிறிதும் நாணமலிருக்கின்றனையே; மனைவியை மறையவர்க்களித்தோ சாமர்த்தியமொழிகளைப் பேசுவது; நாங்கள் ஒருங்கே மடிவதன்றி, இம்மாதை வேதியர்க்குக் கொடுக்க வொட்டோம்" எனறுரைத்தார்கள். அடியவா சினந்து "உங்கள் உயிரை விண்ணுக்கேற்றி, இப்பெரியாரைத் தடையின்றிப் போக விடுவேன்" என்று விளம்பி எதிர்க்க; அவர்கள் அன்பரை விடுத்து, அந்தணரைத் தடுத்தார்கள். இல்லையே என்னு இயற்பகையார் சீறித்தடுத்தவர்களனைவரையும் வாளினால துண்டம் துண்டமாக வெட்டி வீழ்த்தி, எதிர்ப்பவர் ஒருவருமின்றி யுலவினர் பின்னர் பிறவியை யொழித்த பெருந்தகையார் பிராமணரைப் பார்த்து "இறைவனே! தேவரீர பயப்படாவண்ணம் இக்காட்டைக் கடக்கும் வரைக்கும வருகின்றேன்" எனமொழிந்து, அவருடன் சென்றார். திருச்சாய்க்காடு என்னுந திருப்பதிக்கு அருகே போனபோது, அருமுனிவர் அன்பரைத திருக்கணோக்கஞ் செய்து "நீர்வீட்டிற்குத் திரும்பலாம்" என்ன, செயற்கருஞ் செய்கையைச் செய்த சிவனடியார் அவரைப்பணிந்து, துதித்துக்கொண்டு வீட்டுக்குத் திரும்பினார். சிவபெருமான் "மனைவியைவிடுத்துத் திரும்பிப் பாராதுபோகின்றான் அன்பன்" என்று நினைத்து, "இயற்பகை முனிவா ஓலம்; இவ்விடத்திற்குச சீக்கிரம வரவும்" என்று ஓலமிட, திருத்தொண்டர் அவ்வோசையைக்கேட்டு, "அடியேன் வந்தேன் வந்தேன்; இன்னுந் துன்பஞ் செய்பவர்கள் இருப்பின் அவர்களுயிரைத் துலைக்கின்றேன்" என்று இயம்பிக்கொண்டு, விரைவாகத் திரும்பிவர, குழகராய வேதியர் மறைந்தருளினார். நாயனார் நாதனைக்காணமல நங்கையை மாத்திரங்கண்டார். பின்னர் வானத்திலே சிவபிரானை யுமாதேவியாரோடு விடைமேற்கண்டு, விழுந்து, வணங்கி, தோத்திரஞ் செய்து ஆனந்த

வுருவராயினார். அப்பொழுது கந்தனைப் பெற்ற கங்காதரர் "அன்பனே! உன்னடிமைத் திறம் எமக்குப் பெருமகிழ் வளித்தது. நீஉன் மனைவியுடன் நம்மோடு வரக்கடவாய்" என்று திருவாய் மலர்ந்தருளி, திருவுருக்கரந்தனர். இயற்பகைநாயனாரும், அவர் மனைவியாரும் சிவலோகமடைந்து சுகானந்த வாழ்வைப்பெற்றார்கள். நாயனாருடன் பகைத்துப் போர்புரிந்து இறந்த சுற்றத்தவர் வானுலகத்தையடைந்து சுகம்பெற்றார்கள்



# இளையான்குடிமாற நாயனார் புராணம்.



அம்பொ னீடிய வம்ப லத்தினி லாடு வாரடி சூடுவார்
தம்பி ரானடி மைத்தி றத்துயர் சால்பின் மேன்மை தரித்துளார்
நம்பு வாய்மையி னீடு சூத்திர நற்கு லஞ்செய் தவத்தினால்
இம்பர் ஞாலம் விளக்கி னாரிளை யான்கு டிப்பதி மாறனார் (க)

ஏரின் மல்கு வளத்தி னால்வரு மெல்லை யில்லதொர் செல்வமு
நீரின் மல்கிய வேணி யாரடி யாதி றத்து நிறைந்ததோர்
சீரின் மல்கிய வன்பின் மேன்மை திருந்த மன்னிய சிந்தையும்
பாரின் மல்க விரும்பி மற்றவை பெற்ற நீடு பயன்கொள்வார் (உ)

ஆர மென்பு புனைந்த வையர்த மன்ப ரென்பதொர் தன்மையா
னேர வந்தவர் யாவ ராயினு நித்த மாகிய பத்திமுன்
கூர வந்தெதிர் கொண்டு கைகள் குவித்து நின்று செவிப்புலத்
தீர மென்மது ரப்ப தம்பரி வெய்த முன்னுரை செய்தபின். (ங)

கொண்டு வந்து மனைப்பு குந்து குலாவு பாதம் விளக்கியே
மண்டு காதலி னாத னத்திடை வைத்த ருச்சனை செய்தபின்
உண்டி நாலு விதத்தி லாறு சுவைத்தி றத்தினி லொப்பிலா
அண்டர் நாயகர் தொண்ட ரிச்சையி லமுது செய்ய வளித்துளார். (ச)

(க) ஆடுவார் - நடராஜர். தம்பிரான் - சிவபிரான். வாய்மை - மெய்மை, பொய் கூறாமை. நீடு - உயர்ந்த. சூத்திர நற்குலம் - வேளாளர்குலம். இம்பர் ஞாலம் - இவ்வுலகம். (உ) ஏரின் - உழவுத்தொழிலால். மல்கு - ஓங்கிய, நிறைந்த. வளத்தினால் - பயிர்வளத்தால் நீரின் - கங்கா சலத்தால். மல்கிய - விளங்கிய. வேணியார் அடியார் - சடையுடைய சிவபிரானடியவர். பாரின்மல்க - உலகத்தில் உண்டாயிருக்க. (ங) பத்தி முன்கூர - அன்பு அதிகரிக்க. ஈரமென் மதுரப்பதம் - குளிர்ந்த மிருதுவான இனிய வார்த்தைகளை. (ச) குலாவு - விளக்கமாகிய, வியக்கும். மண்டு - நிறைந்த. ஆதனத்து - பீடத்து. உண்டி நாலு - உண்ணல், தின்னல், நக்கல், பருகல் எனபன. (உண்ணல் - சோறு முதலியன. தின்னல் - கறி முதலியன. நக்கல் - குழம்பு பச்சடி ஆதியன. பருகல் - பாயசம் நீர் ஆதியன) ஆறுசுவை - கைப்பு, புளிப்பு, இனிப்பு, துவர்ப்பு, கார்ப்பு, உவர்ப்பு எனபன.

ஆரு நாயக ரன்ப ரானவ ரளவி லாருள மகிழவே
நாளு நாளு நிறைந்து வந்து நுகர்ந்த தன்மையி னன்மையா
னீளு மாநிதி யின்ப ரப்பு நெருங்கு செல்வ நிலாவியெண்
டோளி னாரள கைக்கி ருத்திய தோழ னாரென வாழுநாள். (௫)

செல்வ மேவிய நாளி லிச்செயல் செய்வ தன்றியு மெய்யினால்
அல்ல னல்குர வான போதினும் வல்ல ரென்றறி விக்கவே
மல்ல னீடிய செல்வ மெல்ல மறைந்து நாடொறு மாறிவந்
தொல்லை யில்வறு மைப்ப தம்புக வுன்னி னார்தில்லை மன்னினார் (௬)

இன்ன வாறு வளஞ்சு ருங்கவு மெம்பி ரானிளை யான்குடி
மன்னன் மாறன் மனஞ்சு ருங்குத லின்றி யுள்ளன மாறியுந்
தன்னை மாறி யிறுக்க வுள்ள கடன்க டக்கன கொண்டுபின்
முன்னை மாறி றிருப்ப ணிக்கண் முதிர்ந்த கொள்கைய ராயினார் (௭)

மற்ற வன்செய லின்ன தன்மைய தாக மாலய னானவர்க்
கொற்ற வேனமு மன்ன முந்தெரி யாத கொள்கைய ராயினார்
பெற்ற மூர்வது மின்றி நீடிய பேதை யாளுட னின்றியோர்
நற்ற வத்தவர் வேட மேகொடு ஞால முய்ந்திட நண்ணினார் (௮)

வேறு

மாரிக் காலத் திரவினில் வைகியோர்
தாரிப் பின்றிப் பசிதலைக் கொள்வது
பாரித் தில்ல மடைந்தபின் பண்புற
வேரித் தாரன் விருந்தெதிர் கொண்டனன் (௯)

ஈர மேனியை நீக்கி யிடங்கொடுத்
தார வின்னமு தூட்டுதற் காசையாற்

(௫) எண்டோளினார் அளகைக்கு இருத்திய தோழனாரென - சிவபிரான் அளகாபுரியில் வைத்த தோழனாகிய குபேரனைப்போல. (௬) நல்குரவு-தரித்திரம். மெய்யினால் வல்லர்-மெய்ப்பத்தியினால் தந்திருத்தொண்டிற் குறைச்சாது எப்பொழுதும் போலச் செய்யத் தக்கவர். மல்லல் - வளம். தொல்லையில் - சீக்கிரத்தில். பதம்புக - நிலைமையடைய. தில்லைமன்னினார் - நடராஜா. உன்னினார் - நினைத்தார். (௭) உள்ளனமாறியும் - தம்மிடத்துள்ள பொருள்களை விற்றும் தன்னைமாறி இறுக்க உள்ள - தன்னை விற்றுக்கொடுக்கத்தக்க அவ்வளவு. கடன்கள் தக்கனகொண்டு-கடன்களைத் தக்கவாறு வாங்கியும். (௮) ஏனமும் - பன்றியும். கொள்கையர் ஆயினார் - சிவபெருமான். பெற்றம் ஊர்வதும் இன்றி - ரிஷபவாகனத்தில் எழுந்தருளாமலும். பேதையாள் - உமாதேவியார். (௯) ஓர் தாரிப்பு இன்றி - உபசரிப்பார் ஒருவரும் இல்லாமல். தாரிப்பின்றி என்பதற்கு அடக்கக்கூடாமல் என்று பொருளுரைப்பாருமுளர். தலைக்கொள்வது - மேற்கொள்வதை, அதிகப்படுவதை. பாரித்து - அடக்கிக்கொண்டு. இல்லம் அடைந்தபின் - வீட்டிற் கதவை மூடியபின். வேரி - தேன்

ரூர மாதரை நோக்கித் தபோதனர்
தீர வேபசித் தார்செய்வ தென்னென. (௧0)

நமக்கு முன்பிங் குணவிலை யாயினும்
இமக்கு லக்கொடி பாகர்க் கினியவர்
தமக்கு நாமின் னடிசி றகவுற
அமைக்கு மாறெங்ங னேயணங் கேயென. (௧௧)

மாது கூறுவாண் மற்றொன் றுங் காண்கிலேன்
ஏதி லாரு மினித்தரு வாரில்லை
போதும் வைகிற்றுப் போமிடம் வேறிலை
தீது செய்வினை யேற்கென் செயலென்று (௧௨)

செல்ல னீங்கப் பகல்வித் தியசெந்நெல்
மல்ல னீர்முளை வாரிக் கொடுவந்தால்
வல்ல வாறமு தாக்கலு மாகுமற்
றல்ல தொன்றறி யேனென் றயர்வுற. (௧௩)

மற்ற மாற்ற மனைவியார் கூறமுன்
பெற்ற செல்வ மெனப்பெரி துண்மகிழ்ந்
துற்ற காதலி னெலொருப் பட்டனர்
சுற்று நீர்வயல் செல்லத் தொடங்குவார் (௧௪)

பெருகு வானம் பிறங்க மழைபொழிந்
தருகு நாப்ப ணறிவருங் கங்குற்றன்
கருகு மையிரு ளின்கணங் கட்டுவிட்
டுருகு கின்றது போன்ற துலகெலாம் (௧௫)

எண்ணு மிவ்வுல கத்தவர் யாவருந்
துண்ணெ னும்படி * தோன்றமுன் றோன்றிடல்
வண்ண நீடிய மைக்குழம் பாமென்று
நண்ணல் செய்யா நடுவிருள் யாமத்து. (௧௬)

---

(௧௧) இமக்குலக் கொடிபாகர்க்கு இனியவர் தமக்கு - பார்வதி பாகராகிய பரமசிவனுடைய தொண்டருக்கு. இன்னடிசில் - இனிய அமுதை. (௧௨) ஏதிலாரும்-அயலாரும் போதுமவைகிற்று - இரவு நீடித்தது, நெடுநேரமானது. (௧௩) செல்லல்-துன்பம். வித்திய - விதைத்த. வல்லவாறு - கூடியவரையில். (௧௪) ஒருப்பட்டனர் - சம்மதித்தார் (௧௫) நாப்பண் - நடுவும். கருகுமை இருளின்கணம் - கரிய இருள்கூட்டங்கள். (௧௬) துண்ணெனும்படி-அஞ்சும்படி, விரைவாக. தோன்ற - (இருள்) புலப்பட. மைக்குழம்பு ஆமென்று - மைக்குழம்பால் பூசப்படுவோமென்று. நண்ணல்-வெளியே புறப்படுதல்

* தோன்றி முன்றோயந்திடல் என்றும் பாடம்.

உள்ள மன்புகொண் டேக்கவோர் பேரிடாக்
கொள்ள முன்கவித் தூக்குறி யின்வழிப்
புள்ளு றங்கும் வயல்புகப் போயினார்
வள்ள லாரிளை யான்குடி மாறனார். (கஎ)

காலி னாற்றட விச்சென்று கைகளாற்
சாலி வெண்முளை நீர்வழிச் சார்ந்தன
கோலி வாரி யிடாநிறை யக்கொண்டு
மேலெ டுத்துச் சுமந்தொல்லை மீண்டனர் (கஅ)

வேறு

வந்தபின் மனைவி யாரும் வாய்தலி னின்று வாங்கிச்
சிந்தையில் விரும்பி நீரிற் சேற்றினை யலம்பி யூற்றி
வெந்தழ லடுப்பின் மூட்ட விறகில்லை யென்ன மேலோர்
அந்தமின் மனையி னீடு மலக்கினை யறுத்து வீழ்த்தார் (கக)

முறித்தவை யடுப்பின் மாட்டி முளைவித்துப் பதமுன் கொள்ள
வறுத்தபின் னரிசி யாக்கி வாக்கிய வுலையிற் பெய்து
வெறுப்பிலின் னடிசி லாக்கி மேம்படு கற்பின் மிக்கார்
கறிக்கினி யென்செய் கோமென் றிறைஞ்சினார் கணவ னாரை (உ0)

வழிவரு மிளைப்பி னோடும் வருத்திய பசியி னாலே
அழிவுறு மைய னென்னு மன்பினிற் பொலிந்து சென்று
குழிநிரம் பாத புன்செய்க் குறும்பயிர் தடவிப் பாசப்
பழிமுதல் பறிப்பார் போலப் பறித்தவை கறிக்கு நல்க (உக)

மனைவியார் கொழுநர் தந்த மனமகிழ் கறிக ளாய்ந்து
புனலிடைக் கழுவித் தக்க புனிதபாத் திரத்துக் கைம்மை
வினையினில் வேறு வேறு கறியமு தாக்கிப் பண்டை
நினைவினாற் குறையை நேர்ந்து திருவமு தமைத்து நின்று (உஉ)

---

(கஎ) இடா - கூடையை. கொள்ள - (சிரசு) அடங்க. புள் - பட்சிகள். (கஅ) கோலி - சேர்த்து. ஒல்லை - சீக்கிரம். (கக) வாய்தலில் - வாசலில். இலமுற்றிருந்த வீடென்பார் "அந்தமில் மனை" என்றார். அலக்கினை - வரிச்சுக்கொம்புகளை. (உக) வழிவரும் - வழிநடந்து வந்ததால் உண்டாகிய. ஐயன் அழிவுறும் - இச்சிவனடியார் வருந்துவார். குழிநிரம்பாத புன்செய்ப்பயிர் என்றது பூசினி, சுரை முதலியவைகளை. பாசப்பழி முதல் - தம்பாசத்தின் இழிவாகிய வேரை. (உஉ) கொழுநர் - கணவர். கைம்மை வினையில் - கைத்திறத்தினால். செல்வத்தோடு வாழ்ந்தபோது இருந்த உபகரணங்கள் அனைத்தும் இப்பொழுதில்லையே எனக்கருதி மனக்குறைவடைந்தார் என்பது தோன்ற "பண்டை நினைவினாற் குறையை நேர்ந்து" என்றார்.

கணவனார் தம்மை நோக்கிக் கறியமு தான காட்டி
இணையிலா தவரை யீண்ட வமுதுசெய் விப்போமென்ன
உணர்விலு லுணர வொண்ணு வொருவரை யுணர்த்த வேண்டி
அணையமுன் சென்று நின்றங் கவர்துயி லகற்ற லுற்றார் (உங)

அழுந்திய விடரு ணீங்கி யடியனே னுய்ய வென்பால்
எழுந்தருள் பெரியோ யீண்ட வமுதுசெய் தருள்க வென்று,
தொழும்பனா ருரைத்த போதிற் சோதியா யெழுந்து தோன்றச்
செழுந்திரு மனைவி யாருந் தொண்டருந் திகைத்து நின்றார் (உச)

மாலயற் கரிய நாதன் வடிவொரு சோதி யாகச
சாலவே மயங்கு வார்க்குச் சங்கரன் றன்ம கிழ்ந்தே
ஏலவார் குழலா டன்னோ டிடபவா கனனாய்த் தோன்றிச
சீலமா பூசை செய்த திருத்தொண்டர் தம்மை நோக்கி (உரு)

அன்பனே யன்பர் பூசை யளித்தநீ யணங்கி னோடும்
என்பெருந் தலத்தை யெய்தி யிருநிதிக் கிழவன் றானே
முன்பெரு நிதிய மேந்தி மொழிவழி யேவல கேட்ப
இன்பமார்ந் திருகக வென்றே யருள்செய்தா னெவர்க்கு மிக்கான் (உசு)

இப்பரி சிவர்க்குத தக்க வகையினா லின்ப நல்கி
முப்புரஞ் செற்றா ரன்பர் முன்பெழுந் தருளிப் போனா
அப்பெரி யவர்தந் தூய வடியிணை தலைமேற் கொண்டு
மெய்ப்பொருட் சேதி வேந்தன் செயலினை விளம்ப லுற்றேன் (உஎ)

இளையான்குடிமாற நாயனார் புராண முற்றிற்று.

ஆக திருவிருத்தம்—சசுசு.

---

இளையான் குடிப்பதியிலே, வேளாளர் குலத்திலே அவதரித்தவா மாற னார் என்னும் அடியவர். அவர்வேளாண்மையால் வருஞ்செல்வத்தையும், சிவ னடியார்கள்மேல் பேரன்பு வைத்த சிந்தையையும், தம் இல்லத்திற்கு எழுந் தருளுஞ் சிவனடியார்களை அன்புடன் எதிர் கொண்டழைத்து, அஞ்சலி செய்து, அவர்கள் திருவடிகளைச் சுத்த சலத்தால் விளக்கி, ஆகம விதிப்படி

(உங) உணாத்தவேண்டி - துயிலெழுப்ப விரும்பி, தெரிவிக்குமபடி. (உச) தொழும்பனா - அடியவராய இளையான்குடிமாறநாயனா திசைப்பு - காணுத பொருளைக்கண்ட விடத்துத் துணிவு பிறவாமையால, அது யாதோ எனனும ஐயத்தால மருண்டு நிற்குந்தனமை (உரு) ஏலவார் குழலாள - மயிர்ச்சாந்தணிந்த நீண்ட கூந்தலையுடைய பார்வதிதேவியார். (உசு) அணங்கினோடும - மனைவியோடும. என்பெருந தலத்தை - என்னுடைய பெருமை தங்கிய சிவபதத்தை. இருநிதிக்கிழவன தானே - குபேரனே. முன-உனமுனனே. நிதியம - சங்கநிதி பதுமநிதிகளை. மொழிவழி ஏவல்கேட்ப - உன அனுமதிப்படி ஏவல் தொழிலைச் செய்ய. எவர்க்கு மிக்கான - சிவபெருமான.

அருச்சித்து, அவர்களை அமுது செய்விக்கும் புண்ணியத்தையும் உடைய வர். நாள்தோறும் அடியவர்களுக்குத் திருவமுது செய்வித்தலாகிய பதிப் புண்ணியத்தின் பெரும்பயனாலே செல்வம் அபிவிருத்தியாக, அவர் குபே ரனைப்போல் வாழ்ந்து வந்தார் அங்ஙனம் வாழும் அடியவர் வறுமையராய் வருந்தினும் மாகேசுர பூசையைத் தளராது செய்யுஞ் சிறப்பை யுடையவர் என்பதை உலகத்தவர்க்கு உணர்த்தவேண்டிச் சிவபெருமான் நாயனாருக்கு வறுமை எய்தும்படி திருவருள் செய்தார் திருவருளால் வறுமை யெய்தப் பெற்றும், அன்பில் இளையாத இளையான்குடிமாற நாயனார் சிறிதுந் தள ராது, தம்பொருள்களை விற்றும், தம்மையும் விற்றுக்கொடுக்கத் தக்க கடன் களை வாங்கியும் தாம் புரியும் திருத்தொண்டை விடாது நிகழ்த்திக்கொண்டு வந்தார்.

அவர் மழைக்காலத்திலே, ஓர்நாளிரவில் நெடுநேரம் தனியே விழித்தி ருந்தும், உபகரிப்பார் ஒருவருமின்றி, அதிகப்படும் பசியை யடக்கிக் கொண்டு வீட்டுக்கதவைப் பூட்டிய பின்னர், பார்வதிபாகராகிய பரமசிவன் அடியவர் வேடந்தாங்கிக் கதவைத்தட்டினார் உடனே நாயனார் கதவைத்திற ந்து, அவரை வீட்டிற்குள்ளே அழைத்துக்கொண்டு சென்று, நனைந்த திரு மேனியை வஸ்திரத்தினால் துடைத்து, இருக்கும்படி செய்து, அவ ருக்கு அமுதளிக்க விரும்பி, மனைவியைப் பார்த்து "இப்பெரியவர் மிகப் பசியுடன் வந்திருக்கின்றார். நமக்கு முன்னமே உணவில்லை ஆயினும், எப் படியாவது இவருக்கு அமுதளிக்க வேண்டும்" என்றார் அதற்குக் காதலி யார் "இறைவரே! வீட்டில ஒருபதார்த்தமுமில்லை. அயலாரும் இனிக் கடன்கொடார்கள் நெடுநேரம் ஆய்விட்டது அரிசிக்கடன் கேட்பதற்கு இடமுமில்லை. யான் என்ன செய்வேன்" என்று கூறி, பின்பு "இன்று பகல் வயலிலே விதைக்கப்பட்ட நெல்லை வாரிக்கொண்டு வந்தால், கூடிய வரையில் அமுதாக்கலாம இதுவன்றி, வேறொன்றும் எனக்குத் தோன்ற வில்லை" என்றார் அதைக்கேட்ட மாறனார் மனமகிழ்ந்து, மழை பொழி கின்ற நடுராத்திரியிலே ஒருகூடையைத் தலையிற் கவிழ்த்துக் கொண்டு, கால்களினால் தடவிக்கொண்டுபோய், தம்வயலை யடைந்து, மழை நீரின் மேல் மிதந்திருந்த நென்முளைகளைக் கோலிவாரி, கூடை நிறையப்போட்டு, தலையில் வைத்துச் சுமந்துகொண்டு வீட்டிற்குத் திரும்பி வந்தார் வாயிற் படியிலே நின்று எதிர்பார்த்துக்கொண்டிருந்த நாயகியார், நாயகர் சுமந்து வரும் கூடையை யன்பாய் வாங்கி, அதிலுள்ள நென்முளைகளைச் சேறு போம்படி கழுவி, கணவரை நோக்கி "விறகில்லையே" என்ன, அன் பிற் பெரியவர் இலமாய்க்கிடக்கும் தம் இல்லத்தின் வரிச்சுகளை அறு த்துத் தள்ளினார் மனைவியார் அவைகளை அடுப்பில் வைத்து நென்முளைக ளைப் பதமாக வறுத்து, பின்பு அரிசியாக்கி, உலையிலிட்டு இனிய சோறாகச் சமைத்து, உயிர்த்துணைவரை நோக்கி "பதார்த்தத்திற்கு இனி என்னசெய் வோம்" என்று தொழுதார். தொண்டர் பெருமான் புறக்கடைக்குச் சென்று, குழியினின்றும் மேற்கிளம்பாத புன்செய்ச் சிறுபயிர்களை யரு மைத் திருக்கரத்தால் தடவிப் பிடுங்கிக் கொண்டுவந்து கொடுத்தார். இல்ல ரசியார் அவைகளை வாங்கிச் சலத்தால் சுத்தஞ்செய்து, "செல்வத்துடன் வாழ்ந்த காலத்திலிருந்த உபகரணங்கள் இப்பொழுதில்லையே" என்னுங் குறையை மனதிலே வைத்துக்கொண்டு, கைத்திறமையால் வெவ்வேறுகறி யமுதுகளாகச் செய்து, நாயகர்க்குத் தெரிவித்தார். நாயனார், நித்திரை செய்யும் நின்மலரிடஞ் சென்று "என் இடர்துலைக்க எழுந்த இறைவரே! திருவமுது செய்ய எழுந்தருளல் வேண்டும்" என்று வேண்டி அழைத்தார்.

அழைத்ததும் அவர்சோதியாய் எழுந்து தோன்ற நாயனாரும், அவர் நாயகியாரும் திகைத்து நின்றார்கள். சிவபிரான், செவ்வேளை யீன்ற சிற்சத்தியோடு இடபாரூடராய் எழுந்தருளி "அன்பனே! அன்பர்களுக்கு அறுசுவை உண்டியை நாடோறும் ஊட்டிய நீ உன்மனைவியுடன் நமது தலத்தையடைந்து, குபேரன் உன் ஆணைப்படி ஏவல்கேட்ப, இன்பத்தை அனுபவித்துக்கொண்டிரு" என்று அருளிச் செய்து, அருளுருவை மறைத்தருளினர்.

---

# மெய்ப்பொருணயனர் புராணம்.

சேதிநன் னாட்டு நீடு திருக்கோவ லூரின் மன்னி
மாதொரு பாக ரன்பின் வழிவரு மலாடர் கோமான்
வேதநன் னெறியின் வாய்மை விளங்கிட மேன்மை பூண்டு
காதலா லீசர்க் கன்பர் கருத்தறிந் தேவல் செய்வார். (க)

அரசிய னெறியின் வந்த வறநெறி வழாமற் காத்து
வரைநெடுந் தோளால் வென்று மாற்றலா முனைகண் மாற்றி
யுரைதிறம் பாத நீதி யோங்குநீர் மையினின் மிக்கார்
திரைசெய்நீர்ச் சடையா னன்பர் வேடமே சிந்தை செய்வார் (உ)

மங்கையைப் பாக மாக வைத்தவர் மன்னுங் கோயில்
எங்கணும் பூசை நீடி யேழிசைப் பாட லாடல்
பொங்கிய சிறப்பின் மல்கப் போற்றுதல் புரிந்து வாழ்வார்
தங்கணா யகருக் கன்பர் தாளலாற் சார்பொன் றில்லார் (ங)

தேடிய மாடு நீடு செல்வமுந் தில்லை மன்றுள்
ஆடிய பெருமா னன்பர்க் காவன வாகு மென்று
நாடிய மனத்தி னோடு நாயன்மா ரணைந்த போது
கூடிய மகிழ்ச்சி பொங்கக் குறைவறக் கொடுத்து வந்தார் (ச)

இன்னவா றொழுகு நாளி லிகற்றிறம் புரிந்தோர் மன்னன்
அன்னவர் தம்மை வெல்லு மாசையா லமர்மேற் கொண்டு
பொன்னணி யோடை யானை பொருபரி காலாண் மற்றும்
பன்முறை யிழந்து தோற்றுப் பரிபவப் பட்டுப் போனான் (ரு)

(க) மலாடர் கோமான் - மலையாளர்களுக்கு அரசர். (உ) அரசியல் நெறியின் வந்த - அரசாட்சிக்குரிய வழியினின்றும் பரம்பரையாய் வந்த. வழாமல் - தவறாமல். வரைநெடும் - மலையையொத்த நெடிய. மாற்றலார் முனைகள் மாற்றி - பகைவர்கள் சேனைகளை அழித்து. உரை திறம்பாத - சொல்தவறாத, மெய்சொல்வதினின்றும் வேறுபடாத. நீர்மையினில் - குணத்தில். திரைசெய்நீர் - அலைவீசுங் கங்காநதி. (ரு) இகல் திறம்புரிந்து - பகைத்து நின்று. ஓடை - நெற்றிப்பட்டம். பொருபரி - போர் செய்யுங் குதிரைகளையும். பரிபவம் - அவமானம்.

இப்படி யிழந்த மாற்ற னிகலினால் வெல்ல மாட்டான்
மெய்ப்பொருள் வேந்தன் சீல மறிந்துவெண் ணீறு சாத்தும்
அப்பெரு வேடங் கொண்டே யற்றத்தில் வெல்வா னாகச்
செப்பரு நிலைமை யெண்ணித் திருக்கோவ லூரிற் சேர்வான் (சு)

மெய்யெலா நீறு பூசி வேணிகண் முடித்துக் கட்டிக்
கையினிற் படைக ரந்த புத்தகக் கவளி யேந்தி
மைபொதி விளக்கே யென்ன மனத்தினுட் கறுப்பு வைத்துப்
பொய்தவ வேடங் கொண்டு புகுந்தனன் முத்தி நாதன் (எ)

மாதவ வேடங் கொண்ட வன்கணான் மாடந் தோறுங்
கோதைசூ ழளக பாரக் குழைக்கொடி யாட மீது
சோதிவெண் கொடிக ளாடுஞ் சுடர்நெடு மறுகிற் போகிச்
சேதியர் பெருமான் கோயிற் றிருமணி வாயிற் சேர்ந்தான். (அ)

கடையுடைக் காவ லாளர் கைதொழு தேற நின்றே
உடையவர் தாமே வந்தா ருள்ளெழுந் தருளு மென்னத்
தடைபல புக்க பின்பு தனித்தடை நின்ற தத்தன்
இடைதெரிந் தருள வேண்டுந் துயில்கொளு மிறைவ னென்றான் (கூ)

என்றவன் கூறக் கேட்டே யானவற் குறுதி கூற
நின்றிடு நீயு மென்றே யவனையு நீக்கிப் புக்குப்
பொன்றிகழ் பள்ளிக் கட்டிற் புரவலன் றுயில மாடே
மன்றலங் குழன்மென் சாயன் மாதேவி யிருப்பக் கண்டான் (க௦)

கண்டுசென் றணையும் போது கதுமென விழிந்து தேவி
வண்டலர் மாலை யானை யெழுப்பிட வுணர்ந்து மன்னன்
அண்டர்நா யகனார் தொண்ட ராமெனக் குவித்த செங்கை
கொண்டிழிந் ததிரே சென்று கொள்கையின் வணங்கி நின்று (கக)

மங்கலம் பெருக மற்றென் வாழ்வுவந் தணைந்த தென்ன
இங்கெழுந் தருளப் பெற்ற தென்கொலோ வென்று கூற

(சு) அற்றத்தில் வெல்வானாய் - (தன் வஞ்சனையை யுணராதிருக்கும்) சமயத்தில் வெல்லுங் கருத்துடையவனாய். (எ) வேணிகள் - சடைகளை. படைகரந்த - உடைவாளை மறைத்து வைத்துள்ள. கவளி - புத்தகப்பை. மைபொதிவிளக்கே யென்ன - கருநிறத்தைத் தன்னிடத்தே வைத்துள்ள தீபத்தைப்போல. கறுப்பு - வஞ்சம். (அ) வன்கணான் - கொடிய வஞ்சகனாகிய முத்திநாதன். கோதை - மாலைகள். கொடி ஆட - மகளிர்கள் நாட்டியஞ் செய்ய. மறுகில் - வீதியில். சேதியர் பெருமான் மெய்ப்பொருள் நாயனார். (கூ) தடைபலபுக்க பின்பு - பலவாயில்களைக் கடந்த பின்பு. இடைதெரிந்து - சமயமறிந்து. அருளவேண்டும்-உள்ளே எழுந்தருளவேண்டும். (க௦) மன்றல் - வாசனை. (கக) கதுமென - விரைவாக.

உங்கணா யகனார் முன்ன முரைத்தவா கமநூன் மண்மேல்
எங்குமில் லாத தொன்று கொடுவந்தே னியம்ப வென்றான். (கஉ)

பேறெனக் கிதன்மே லுண்டோ பிரானருள் செய்த விந்த
மாறிலா கமத்தை வாசித் தருள்செய வேண்டு மென்ன
நாறுபூங் கோதை மாது தவிரவே நானு நீயும்
வேறிடத் திருக்க வேண்டு மென்றவன் விளம்ப வேந்தன். (கங)

திருமக ளென்ன நின்ற தேவியார் தம்மை நோக்கிப்
புரிவுடன் விரைய வந்தப் புரத்திடைப் போக வேவித்
தருதவ வேடத் தானைத் தவிசின்மே லிருத்தித் தாமும்
இருநிலத் திருந்து போற்றி யினியருள் செய்யு மென்றார் (கச)

கைத்தலத் திருந்த வஞ்சக் கவளிகை மடிமேல் வைத்துப்
புத்தக மவிழ்ப்பான் போன்று புரிந்தவர் வணங்கும் போதிற்
பத்திரம் வாங்கித் தான்முன் னினைந்தவப் பரிசே செய்ய
மெய்த்தவ வேட மேமெய்ப் பொருளெனத் தொழுது வென்றார் (கரு)

மறைத்தவன் புகுந்த போதே மனமங்கு வைத்த தத்தன்
இறைப்பொழு தின்கட் கூடி வாளினா லெறிய லுற்றா
னிறைத்தசெங் குருதி சோர வீழ்கின்றார் நீண்ட கையாற்
றறைப்படு மளவிற் றத்தா நமரெனத் தடுத்து வீழ்ந்தார் (கசு)

வேதனை யெய்தி வீழ்ந்த வேந்தரால் விலக்கப் பட்ட
தாதனாந் தத்தன் றானுந் தலையினால் வணங்கித் தாங்கி
யாதுநான் செய்கே னென்ன வெம்பிரா னடியார் போக
மீதிடை விலக்கா வண்ணங் கொண்டுபோய் விடுநீ யென்றார் (கஎ)

அத்திற மறிந்தா ரெல்லா மரசனைத் தீங்கு செய்த
பொய்த்தவன் றன்னைக் கொல்வோ மெனப்புடை சூழ்ந்த போது
தத்தனு மவரை யெல்லாந் தடுத்துடன் கொண்டு போவான்
இத்தவன் போகப் பெற்ற திறைவன தாணை யென்றான். (கஅ)

அவ்வழி யவர்க ளெல்லா மஞ்சியே யகல நீங்கிச்
செவ்விய நெறியிற் றத்தன் றிருநகர் கடந்து போந்து
கைவடி நெடுவா ளேந்தி யாளுறாக் கானஞ் சேர
வெவ்வினைக் கொடியோன் றன்னை விட்டபின் மீண்டு போந்தான். (ககூ)

(கச) புரிவுடன் - விருப்பத்துடன். (கரு) பத்திரம் வாங்கி - உடைவாளை எடுத்து. வென்றார் - அஞ்ஞானப் பகையை வென்றார். (கசு) இறைப்பொழுதின்கட் கூடி - ஒரு க்ஷணநேரத்துக்குள் போய். குருதி - இரத்தம். றறைப்படும் அளவில் - பூமியில் சாயும்போது. நமர் - நம்பெரியோர், நம்மினத்தவராய சிவனடியார். (கஎ) தாதனும் - அடியவனாகிய. அடியார் - முத்திநாதன். இடை - மத்தியில.

மற்றவன் கொண்டு போன வஞ்சனை வேடத் தான்மேற்
செற்றவா தம்மை நீக்கித் தீதிலா நெறியில் விட்ட
சொற்றிறங் கேட்க வேண்டிச் சோர்கின்ற வாவி தாங்குங்
கொற்றவன் முன்பு சென்றான் கோமகன் குறிப்பி னின்றான் (௨0)

சென்றடி வணங்கி நின்று செய்தவ வேடங் கொண்டு
வென்றவற் கிடையூ றின்றி விட்டன னென்று கூற
இன்றெனக் கையன் செய்த தியார்செய்ய வல்லா ரென்று
நின்றவன் றன்னை நோக்கி நிறைபெருங் கருணை கூர்ந்தார் (௨௧)

அரசிய லாயத் தார்க்கு மழிவுறுங் காத லார்க்கும்
விரவிய செய்கை யெல்லாம் விளம்புவார் விதியி னாலே
பரவிய திருநீற் றன்பு பாதுகாத் துய்ப்பீ ரென்று
புரவலர் மன்று ளாடும் பூங்கழல் சிந்தை செய்தார் (௨௨)

தொண்டனார்க் கிமயப் பாவை துணைவனா ரவர்முன் றம்மைக்
கண்டவா றெதிரே நின்று காட்சிதந் தருளி மிக்க
அண்டவா னவர்கட் கெட்டா வருட்கழ னீழல் சேரக்
கொண்டவா றிடைய றாமற் கும்பிடுங் கொள்கை யீந்தார் (௨௩)

இன்னுயிர் செகுக்கக் கண்டு மெம்பிரா னன்ப ரென்றே
நன்னெறி காத்த சேதி நாதனார் பெருமை தன்னில்
என்னுரை செய்தே னாக விகலவிறன் மிண்டர் பொற்றாள்
சென்னிவைத் தவர்முன் செய்த திருத்தொண்டு செப்ப லுற்றேன் (௨௪)

மெய்ப்பொருணாயனார்புராணம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ௪௧0



சேதிநாட்டிலே, திருக்கோவலூரிலே, மலையாளர்களுக்குமன்னவரும், தரும நெறிதவறாமல் அரசாட்சி செய்கின்றவரும், எதிர்த்த பகைவர்களை வென்று குடிகளுக்கு நன்மை செய்யும் நற்குணமுடையவரும், அடியவர்கள் திருவேடத்தையே மெய்ப்பொருளென்று சிந்திப்பவரும் ஆகிய மெய்ப்பொருணாயனார் என்பவர் ஒருவர் இருந்தார். அவர் சிவாலயங்களிலெல்லாம் பூசை, திருவிழா முதலியன செய்தும், உள்ளபொருள்களைச் சிவனடியார்களுக்குக் குறையாது கொடுத்தும் வந்தார்

(௨௨) அரசியல் ஆயத்தார்க்கும் - அரசுக்குரிய முதலவர் சேனாதிபதிகளுக்கும். அழிவுறும் - மனம் வருந்தும். காதலார்க்கும் - மந்திரி முதலியோர்க்கும். (௨௩) இமயப் பாவை துணைவனார் - உமாதேவியார் நாயகராகிய சிவபெருமான். உண்மையடியவர் கருதிய திருவுருவாய்ச் சிவநாதன் தோன்றுதலின் "கண்டவாறெதிர் நின்று" என்றார். (௨௪) செகுக்கக் கண்டும் - (வாளால்) குத்தப்பார்த்தும். சேதிநாதனார் - மெய்ப்பொருள் நாயனார். இகல் - வலிமையுடைய.

அங்ஙனம் வாழுங்காலத்தில், முத்திநாதன் என்னும் ஓர் அரசன் அவருடன் பகைத்து, யுத்தஞ்செய்து, பலமுறைதோற்று அவமானப்பட்டான். நாயனார் அடியவர் பத்தியிற் சிறந்தவர் என்பதை யறிந்து, கபடத்தால் அவரைவெல்லக் கருதி, தேகமுழுமையும் விபூதிதரித்து, சடைகளை ஒன்றாகச் சேர்த்துக் கட்டி, உடைவாளை மறைத்து வைத்திருக்கின்ற புத்தகக் கவளியைக் கையிலே தாங்கிக்கொண்டு, மெய்யடியார் அரண்மனையை யடைந்தான் அரமனை வாயில்காப்போர் வேண்டுகோட்படி, பலவாயில்களையுங் கடந்து, இறுதிவாயிலையடைந்தபொழுது, அங்கேஇருந்த அரசர் பெருமானின் உயிர்க்காவலாளியாகிய தத்தன், வஞ்சகனை நோக்கி "இப்பொழுது அரசர்நித்திரைசெய்கின்றார்; தேவரீர் சமயமறிந்து எழுந்தருளல்வேண்டும்" என்றான் அதைக்கேட்ட வஞ்சகன் "யான் அவருக்குச் சாத்திரத்தின் உண்மையை உபதேசஞ்செய்யப்போகின்றேன்; நீ என்னைத் தடைசெய்யாமல் நில்" என்றுகூறி, அவனை விலககிக்கொண்டு, உள்ளே நுழைந்து, அரசன் துயில, மனைவியார் பக்கத்திலிருப்பதைக் கண்டுங கட்டிலின் சமீபத்திற் சென்றான். உடனே தேவியார் உண்மை நாயனாரை எழுப்ப, அவர் விழித்துவிரைந்தெழுந்து, அவனைச் சிவனடியார் எனக்கருதிப் பணிந்து, 'பெரியவரே! தேவரீர் இஙகு எழுந்தருளிய காரணம்யாது'" என்று கேட்க, முத்திநாதன் "உஙகள் இறைவன் முன்னர் அருளிச் செய்த ஆகமங்களுள் எங்கணும் காணப்படாத ஓர் ஆகமத்தை யுமக்கு உபதேசிக்கக் கொண்டுவந்தேன்" என்று சொன்னான் அதைக்கேட்ட அடியவர்பெருமான் ஆனந்தவாரிதியிற்றோய்ந்து "இதைவிட எனக்கு என்ன பேறுளது, அவ்வருளாகமத்தைவாசித்துப் பொருளுரைககவேண்டும்" என்று வேண்டினார். அவன் 'உம்மனைவி இல்லாமல நீரும் நானும் வேறிடத் திருக்கவேண்டும்' என்று இயம்பினதும், அரசா, தம்நாயகியாரை அந்தப்புரம்போம்படி கட்டளையிட்டு, கபடவேடத்தானைத் தவிசின்மேல் இருக்கச்செய்து, தாம் கீழேஇருந்து 'மெய்யன்பரே! ஆகமத்தை வாசித்துப்பொருளுரையும்' என்றார் வஞ்சகன் கவளிகையை மடிமீது வைத்துப் புத்தகம்அவிழ்ப்பவனைப்போல நாயனார் மெய்ப்பத்தியுடன் பணியும்போது, கவளியில் மறைத்துக் கொணர்ந்த உடைவாளை எடுத்து, அவரைக குத்தினான் அதுகாலைஅரசர்பெருமான் "மெய்ததவவேடமே மெய்ப்பொருள்" என்று கொடியனைத் தொழுதார்

முத்திநாதன், பொய்வேடந்தாஙகி உள்ளே நுழையும்பொழுதே சந்தேகித்ததத்தன் நொடியிலே அரசரிடஞ்சென்று அஙகிருந்தபாவியை வாளினால் வெட்டப்போனான் வாளால் குத்துண்டு வீழப்போகும் வேந்தர் "தத்தனே! இவர் சிவனடியார்' என்று தடுதது பூமியில் சாய்ந்தார். உடனே தத்தன் மெய்யன்பரை வணஙகி, அவரைத தாங்கிக்கொண்டு "அரசே! யான் செய்யவேண்டியது யாது?" என்றுவினவ, மெய்ப்பொருணாயனார் "வழியிலே யிவருக்கு யாவராலும் தீஙகுநேரிடாதபடி இவரை அழைத்துக் கொண்டுபோய்விடு' என்று ஆஞ்ஞாபித்தார். அப்படியே தத்தன் அவ்வஞ்சகனை அழைத்துக்கொண்டு போகும்பொழுது, அவனால் அரசர் குத்துப்பட்டார் என்பதை அறிந்தவர்களெல்லாரும் அவனைக்கொல்ல வளைத்துக் கொள்ள, அவர்களுக்கு அரையன்சொற்ற அருள்மொழியைக் கூறித் தடுக்க, அவர்கள் அஞ்சிப்போய்விட்டார்கள். தத்தன் முத்திநாதனுடன் நகரத்தைக கடந்து, காட்டையடைந்து, அவனைவிட்டு, அரமனைக்குத் திரும்பி அரசர்க்குத் தெரிவிததான். அதைக் கேட்கும்வரைக்கும் உயிர்தாங்கிக் கொண்டிருந்த நாயனார் தத்தனைப் புகழ்ந்து, அரசியலுக்குரிய குமாரர்களையும், மந்திரி முதலியோர்களையும் பார்த்து விதிப்படி விபூதிமேல் வைத்த

பேரன்பைப் பாதுகாக்கும்படி போதித்து, சிதம்பரத்திலே ஆனந்தத் தாண்டவஞ் செய்தருளும் ஸ்ரீ நடராஜவள்ளலாரது குஞ்சிதபாதத்தைச் சிந்தை செய்தார் அப்பொழுது சண்முகன் தந்தையாகிய சபாநாதப் பெருமான் மெய்ப்பொருணாயனார்க்குக் காட்சிகொடுத்து, அவரைத் தம் அருட்கழல் நீழலில் சேர்த்தருளினார்



# விறன்மிண்ட நாயனார் புராணம்.



விரைசெய் நறும்பூந் தொடையிதழி வேணி யார்தங் கழல்பரவிப்
பரசு பெறுமா தவமுனிவன் பரசு ராமன் பெறுநாடு
திரைசெய் கடலின் பெருவளனுந் திருந்து நிலனின் செழுவளனும்
மலையின் வளனு முடன்பெருகி மல்கு நாடு மலைநாடு (௧)

வாரி சொரியுங் கதிர்முத்தும் வயன்மென் கரும்பிற் படுமுத்தும்
வேரல் விளையுங் குளிர்முத்தும் வேழ மருப்பி னொளிர்முத்து
மூரன் முறுவல் வெண்முத்த நகையார் தெரிந்து முறைகோக்குஞ்
சேரர் திருநாட் டூர்களின்முன் சிறந்த மூதூர் செங்குன்றூர் (௨)

என்னும் பெயரின் விளங்கியுல கேறும் பெருமை யுடையதுதான்
அன்னம் பயிலும் வயலுழவி னமைந்த வளத்தா லாய்ந்தமறை
சொன்ன நெறியின் வழியொழுகுந் தூய குடிமைத் தலைநின்றார்
மன்னுங் குலத்தின் மாமறைநூல் மரபிற் பெரியோர் வாழ்பதியாம் (௩)

அப்பொற் பதியி னிடைவேளாண் குலத்தை விளக்க வவதரித்தார்
செப்பற் கரிய பெருஞ் சீர்த்திச் சிவனார் செய்ய கழல்பற்றி

(௧) விரை செய் நறும் பூந் தொடை இதழி வேணியார் தம் - வாசனை வீசும் நல்ல அழகு பொருந்திய கொன்றைப் பூமாலையை யணிந்த சடையையுடைய சிவபிரான். பரசு பெறு மாதவ முனிவன் - மழுப்படையைப் பெற்ற பெருந்தவ முனிவராகிய. பரசுராமன், தன் தந்தையின் உயிரைப் போக்கிய க்ஷாத்திர வீரியனையும், அவன் இனத்தவரையும் பரமசிவன் பாற்பெற்ற பரசாற் கொன்று, அவர்கள் இரத்தத்தால் பிதிர் தர்ப்பணஞ் செய்து, அப்பழியைச் சிவபூசை புரிந்து ஒழித்து, ஒரு நாடு உண்டாக்கி அந்தணர்களுக்கு அளிக்க, வருணதேவனை வேண்டி, தென்றிசைக் கடலில் மழுவை வீச, அஃது வீழ்ந்த தானத்தையே நாடாகச் செய்து, மறையவர்க்குக் கொடுத்துக் குடியேற்றினமையின் "பரசுராமன் பெறுநாடு" என்றார். கடலின் வளம் - முத்து, பவளம், சங்கு முதலியன. நிலனின் வளம் - செந்நெல், கரும்பு, வாழை முதலியன. மலையின் வளம் - சந்தனம், யானைக்கோடு முதலியன. (௨) வாரி சொரியும் - கடல் (அலைகளால்) ஒதுக்கும். வேழ மருப்பின் - யானைக் கொம்பில். மூரல் - பல். வெண் முத்த நகையார் - வெள்ளிய முத்துப்போன்ற நகையினையுடைய பெண்கள். தெரிந்து - ஆராய்ந்து.

எப்பற் றினையு மறவெறிவா ரெல்லை தெரிய வொண்ணாதார்
மெய்ப்பத் தர்கள்பாற் பரிவுடையா ரெம்பி ரானார் விறன்மிண்டர். (௪)

நதியு மதியும் புனைந்தசடை நம்பர் விரும்பி நலஞ்சிறந்த
பதிக ளெங்குங் கும்பிட்டுப் படருங் காதல் வழிச்செல்வார்
முதிரு மன்பிற் பெருந்தொண்டர் முறைமை நீடு திருக்கூட்டத்
தெதிர்முன் பரவு மருள்பெற்றே யிறைவர் பாதந் தொழப்பெற்றார் (௫)

பொன்றா ழருவி மலைநாடு கடந்து கடல்சூழ் புவியெங்குஞ்
சென்றா ளுடையா ரடியவர்தந் திண்மை யொழுக்க நடைசெலுத்தி
வன்றாண் மேருச் சிலைவளைத்துப் புரங்கள் செற்று வைதிகத்தேர்
நின்றா ரிருந்த திருவாரூர் பணிந்தார் நிகரொன் றில்லாதார். (௬)

திருவார் பெருமை திகழ்கின்ற தேவா சிரிய னிடைப்பொலிந்து
மருவா நின்ற சிவனடியார் தம்மைத் தொழுது வந்தணையா
தொருவா றொதுங்கும் வன்றொண்டன் புறகென் றுரைப்பச் சிவனருளாற்
பெருகா நின்ற பெரும்பேறு பெற்றார் மற்றும் பெறநின்றார் (௭)

சேணார் மேருச் சிலைவளைத்த சிவனா ரடியார் திருக்கூட்டம்
பேணா தேகு மூரனுக்கும் பிரானாந் தன்மைப் பிறைசூடிப்
பூணா ரவம் புனைந்தார்க்கும் புறகென் றுரைக்க மற்றவர்பாற்
கோணா வருளைப் பெற்றார்மற் றினியார் பெருமை கூறுவார். (௮)

ஞால முய்ய நாமுய்ய நம்பி சைவ நன்னெறியின்
சீல முய்யத் திருத்தொண்டத் தொகைமுன் பாடச் செழுமறைகள்
ஓல மிட்டு முணர்வரியா ரடியா ருடனா முளதென்றால்
ஆல மமுது செய்தபிரா னடியார் பெருமை யறிந்தாரார். (௯)

ஒக்க நெடுநா ளிவ்வுலகி லுயர்ந்த சைவப் பெருந்தன்மை
தொக்க நிலைமை நெறிபோற்றித் தொண்டு பெற்ற விறன்மிண்டர்
தக்க வகையாற் றம்பெருமா னருளி னாலே தாணிழற்கீழ்
மிக்க கணநா யகராகுந் தன்மை பெற்று விளங்கினார். (௧௦)

---

(௪) எல்லைதெரிய வொண்ணாதார் - (அவர் மெய்ப்பத்தியின் பெருமையை) இவ்வளவினதென்று அளவிட்டு அறிந்துரைக்க கூடாதவர். பரிவுடையார் - அன்புடையவர். (௫) ஆளுடையார் அடியவர் - எவரையும் அடிமையாகவுடைய சிவபிரானடியார். வன்றாள் - வலிய அடியுடைய. வைதிகத்தேர் நின்றார் - வேதங்களாகிய குதிரைகள் பூட்டப்பட்ட தேரில் நின்றருளிய சிவபெருமான். (௭) திருஆர்-மங்கலம் பொருந்திய புறகு - புறம்பு. (௮) சேண் ஆர் - ஆகாயத்தை யளாவிய. திருக்கூட்டம் - தேவாசிரிய மண்டபத்தெழுந்தருளியுள்ள அடியவர் கூட்டத்தை. பேணாது ஏகும் ஊரனுக்கும் - வணங்காது செல்லும் நம்பியாரூரருக்கும். அவர்பால் - சிவபெருமானிடத்தும், வன்றொண்டரிடத்தும். கோணா - கெடாத.

வேறு பிறிதென் றிருத்தொண்டத் தொகையா லுலகு விளங்கவரும்
பேறு தனக்குக் காரணராம் பிரானூர் விறன்மிண் டரின்பெருமை
கூறு மளவென் னளவிற்றே யவர்தாள் சென்னி மேற்கொண்டே
யாறை வணிக ரமர்நீதி யன்பர் திருத்தொண் டறைகுவாம் (௧௧)

விறன்மிண்டநாயனார்புராணம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம் - ௫0௧



மலைநாட்டிலே, செங்குன்றூரிலே, வேளாளகுலத்திலே அவதரித்த வரும், அகப்பற்றுப் புறப்பற்றுக்களை ஒழித்தவரும், சிவாலயங்களுக்குப் போகும் பொழுதெல்லாம், முன்னே திருத்தொண்டர்களை வணங்கிப் பின்னே பிறையணிந்த பிரானைப் பணியும் பெருமை வாய்ந்தவரும் ஆகிய விறன் மிண்டநாயனார் என்பவர் ஒருவரிருந்தார் அவர் பலதிருப்பதிகளைத் தரிசித்து வணங்கித் திருவாரூரை யடைந்து, சுவாமிதரிசனஞ்செய்துகொண்டிருந்த காலத்தில், ஓர்நாள் சுந்தரமூர்த்தி சுவாமிகள் தேவாசிரிய மண்டபத்தில வீற்றிருந்தருளுஞ் சிவனடியார்களை வணங்காமல், ஒருவாறு ஒதுங்கிச் சென்றார் அதைக்கண்ட அடியவர்பத்தியிற் சிறந்த நாயனார் "தொண்டர்களை வணங்காது செல்லும் வன்றொண்டன் அத்தொண்டர்களுக்குப் புறம்பு; அவனைத் தடுத்தாண்ட சிவனும் அவர்களுக்குப் புறம்பு" என்றார் நம்பியாரூரர், அவர் அன்பின் உறுதியைக்கண்டு, தங்கருத்துமுற்றுப்பெறவும், உலகும் உய்யவும் திருத்தொண்டத்தொகையைத் திருவாய் மலர்ந்தருளினர்; நாயனார் பெருமகிழ் வெய்தினர் முருகப்பிரான் அருளாடலைக் கண்டுகளிக்குஞ் சிவபெருமான், விறன்மிண்டநாயனார் சங்கம பத்தி வலிமையைக் கண்டு, அவரைத் தமது கணங்களுக்குத் தலைவராக்கியருளினார்



# அமர்நீதிநாயனார் புராணம்.

சீரி னீடிய செம்பியர் பொன்னிநன் னாட்டுக
காரின் மேவிய களியளி மலர்ப்பொழில் சூழ்ந்து
தேரின் மேவிய செழுமணி வீதிகள் சிறந்து
பாரி னீடிய பெருமைசேர் பதிபழை யாறை (௧)

மன்னு மப்பதி வணிகர்தங் குலத்தினில் வந்தார்
பொன்னு முத்துநன் மணிகளும் பூந்துகின் முதலா
எந்நி லத்தினு முள்ளன வருவளத் தியல்பால்
அந்நி லைக்கண்மிக் கவரமர் நீதியா ரென்பார் (௨)

(௧) செம்பியர் - சோழர்கள். பொன்னிநன்னாடு - காவிரிநாடு காரின்மேவிய - மேகமண்டலத்தை அளாவிய. அளி - வண்டுகள். (௨) பூந்துகில் - அழகிய பட்டாடைகள். வருவளத்து இயல்பால் - வருவதற்கேதுவான வியாபார முறையால். அந்நிலைக்கண் - அவ்வியாபாரத் தன்மையில.

சிந்தை செய்வது சிவன்கழ லல்லதொன் றில்லார்
அந்தி வண்ணர்தம் மடியவர்க் கமுதுசெய் வித்துக்
கந்தை கீளுடை கோவணங் கருத்தறிந் துதவி
வந்த செல்வத்தின் வளத்தினல் வரும்பயன் கொள்வார். (௩)

முக்க ணக்கரா முதல்வனா ரவர்திரு நல்லூர்
மிக்க சீர்வளர் திருவிழா விருப்புடன் வணங்கித்
தக்க வன்பர்க ளமுதுசெய் திருமடஞ் சமைத்தார்
தொக்க சுற்றமுந் தாமும்வந் தணைந்தனர் தூயோர் (௪)

மருவு மன்பொடு வணங்கினர் மணிகண்டர் நல்லூர்த்
திருவி ழாவணி சேவித்துத் திருமடத் தடியார்
பெருகு மின்பமோ டமுதுசெய் திடவருள் பேணி
உருகு சிந்தையின் மகிழ்ந்துறை நாளிடை யொருநாள். (௫)

பிறைத்த ளிர்ச்சடைப் பெருந்தகைப் பெருந்திரு நல்லூர்க்
கறைக்க ளத்திறை கோவணப் பெருமைமுன் காட்டி
நிறைத்த வன்புடைத் தொண்டர்க்கு நீடருள் கொடுப்பான்
மறைக்கு லத்தொரு பிரமசா ரியின்வடி வாகி (௬)

செய்ய புன்சடை கரந்ததோர் திருமுடிச் சிகையுஞ்
சைவ வெண்டிரு நீற்றுமுண் டத்தொளித் தழைப்பு
மெய்யின் வெண்புரி நூலுடன் விளங்குமான் றோலுங்
கையின் மன்னிய பவித்திர மாகத்தக் கதிரும். (௭)

முஞ்சி நாணுற முடிந்தது சாத்திய வரையிற்
றஞ்ச மாமறைக் கோவண வாடையின் றழைவும்
வஞ்ச வல்வினைக் கறுப்பறு மனத்தடி யார்க
ணெஞ்சி னீங்கிடா வடிமலர் நீணிலம் பொலிய (௮)

கண்ட வாக்குறு காதலின் மனங்களைந் துருகத்
தொண்ட ரன்பெனுந் தூநெறி வெளிப்படுப் பாராய்த்

(௪) நக்கராம முதல்வர் - திருவாணியாகிய சிவபிரான். (௫) உறை நாளிடை - வசிக்குங் காலத்தில். (௬) கோவணப் பெருமை முன் காட்டி - (நாயனர் அடியவர்களுக்குக்) கொடுக்குங் கோவணத்தின் பெருமையை உலகத்தாருக்கு முன் காட்டி. தொண்டர்க்கு - அமர்நீதிநாயனர்க்கு. (௭) செய்ய புன்சடை கரந்ததோர் திருமுடிச் சிகையும் - சிவந்த மிருதுவாகிய சடையை மறைத்த திருமுடியின்மேல் குடுமியும், அதாவது சடையில்லாமல் சிகையாகச் சேர்த்து முடித்த குடுமி. மான்றோலினை யோரங்கலத்தில் நூலளவாகக் கத்தரித்துப் புரிநூலுடன் புனைந்துத் தரிப்பது பிரமசாரிகளுக்கு விதியாகலின் "வெண்புரி நூலுடன் விளங்குமான்றோலும்" என்றார். (௮) முஞ்சி நாணுற முடிந்தது சாத்திய அரையில் - முஞ்சி என்னும் தருப்பையை நாணாக முடித்து அதனை (நாபியினடியில் உதரபந்தனமாகக் கட்டிய) அரையில் சாற்றப்பெற்ற. (௯) வெளிப்படுப்பாராய் - வெளிப்படுத்துகின்றவராய்.

தண்டின் மீதிரு கோவண நீற்றுப்பை தருப்பை
கொண்டு வந்தமர் நீதியார் திருமடங் குறுக. (௯)

வடிவு காண்டலு மனத்தினு முகமிக மலர்ந்து
கடிது வந்தெதிர் வணங்கியிம் மடத்தினிற் காணும்
படியி லாதநீ ரணையமுன் பயிறவ மென்னோ
அடிய னேன்செய்த தென்றன ரமர்நீதி யன்பர் (௰)

பேணு மன்பரை நோக்கிநீர் பெருகிய வடியார்க்
கூணு மேன்மையி லூட்டிநற் கந்தைகீ ளுடைகள்
யாணர் வெண்கிழிக் கோவண மீதல்கேட் டும்மைக்
காண வந்தன மென்றனன் கண்ணுதற் கரந்தோன் (௧௧)

என்று தம்பிரா னருள்செய வித்திரு மடத்தே
நன்று நான்மறை நற்றவ ரமுதுசெய் தருளத்
துன்று வேதியர் தூய்மையி னமைப்பது முளதால்
இன்று நீருமிங் கமுதுசெய் தருளுமென் றிறைஞ்ச (௧௨)

வணங்கு மன்பரை நோக்கியம் மறையவ ரிசைந்தே
அணங்கு நீர்ப்பொன்னி யாடிநான் வரமழை வரினும்
உணங்கு கோவண மவைத்துநீ தாருமென் றொருவெண்
குணங்கொள் கோவணந் தண்டினி லவிழ்த்தது கொடுப்பார் (௧௩)

ஓங்கு கோவணப் பெருமையை யுள்ளவா றுமக்கே
ஈங்கு நான்சொல வேண்டுவ தில்லைநீ ரிதனை
வாங்கி நான்வரு மளவுமும் மடத்திக ழாதே
ஆங்கு வைத்துநீர் தாருமென் றவர்கையிற் கொடுத்தார் (௧௪)

கொடுத்த கோவணங் கைக்கொண்டு கோதிலா வன்பர்
கடுப்பி லங்கெழுந் தருளுநீர் குளித்தெனக் கங்கை
மடுத்த தும்பிய வளர்சடை மறைத்தவம் மறையோர்
அடுத்த தெண்டிரைப் பொன்னிநீ ராடுதற் ககன்றார் (௧௫)

(௰) காணும்படி இலாத - இதுவரையும் காணும்படி வாராத. (௧௧) யாணர் - புதிய. (௧௨) நான்மறை நற்றவர் - பிராமணர்கள். துன்று - நெருங்கிய. அமைப்பதும் - சமைக்கும் திருவமுதும். (௧௩) அணங்கு நீர்ப்பொன்னி - தெய்வத்தன்மையுடைய காவிரி. உணங்கு கோவணம் - உலர்ந்த இக்கோவணத்தை. வெண்குணம் கொள் - வெண்மை நிறத்தையுடைய. (௧௪) இக்கோவணத்தினுடைய சிறந்தன பல தும்மிடத்து துள வாகலின், அவைபிறரைப்போல இதையும் கருதி சேமியாதொழியற்க என்பார் "இகழாதே" என்றார். (௧௫) கடுப்பில் - விரைவில். மடுத்து (- பாய்ந்து) என்னும் வினை [illegible]

தந்த கோவணம் வாங்கிய தனிப்பெருந் தொண்டர்
முந்தை யந்தணர் மொழிகொண்டு முன்புதாங் கொடுக்குங்
கந்தை கீளுடை கோவண மன்றியே காப்புச்
சிந்தை செய்துவே றிடத்தொரு சேமத்தின் வைத்தார் (கசு)

போன வேதியர் வைத்தகோ வணத்தினைப் போக்கிப்
பான லந்துறைப் பொன்னிநீர் படிந்துவந் தாரோ
தூந றுஞ்சடைக் கங்கைநீர் தோய்ந்துவந் தாரோ
வான நீர்மழை பொழிந்திட நனைந்துவந் தணைந்தார் (கஎ)

கதிரி ளம்பிறைக் கண்ணியர் நண்ணிய பொழுதின்
முதிரு மன்புடைத் தொண்டர்தா முறைமையின் முன்னே
அதிக நன்மையி னறுசுவைத் திருவமு தாக்கி
யெதிரெ ழுந்துசென் றிறைஞ்சிட நிறைந்தநூன் மார்பர் (கஅ)

தொண்ட ரன்பெனுந் தூயநீ ராடுதல் வேண்டி
மண்டு தண்புனன் மூழ்கிய வீரக்கை மாற்றத்
தண்டின் மேலது மீரமான் றதற்கோ வணத்தைக்
கொண்டு வாருமென் றுரைத்தனர் கோவணக் கள்வர் (ககூ)

ஐயர் கைதவ மறிவுறா தவர்கடி தணுகி
எய்தி நோக்குறக் கோவண மிருந்தவே றிடத்தின்
மையில் சிந்தையர் கண்டிலர் வைத்தகோ வணமுன்
செய்த தென்னென்று திகைத்தனர் தேடுவா ரானார் (உ0)

பொங்கு வெண்கிழிக் கோவணம் போயின நெறிமேற்
சங்கை யின்றியே தப்பின தென்றுதஞ் சரக்கில்
எங்கு நாடியுங் கண்டில ரென்செய்வா ரென்றார்
அங்கண் வேதியர் பெருந்தொடக் கினிலகப் பட்டார் (உக)

மனைவி யாரொடு மன்னிய கிளைஞருந் தாமும்
இனைய தொன்றுவந் தெய்திய தெனவிடர் கூர்ந்து
நினைவ தொன்றிலர் வருந்தினர் நிற்கவு மாட்டார்
புனைய வேறொரு கோவணங் கொடுபுறப் பட்டார் (உஉ)

---

(கசு) காப்பு - காவலான இடத்தை. சேமத்தில் - காவலுள்ள தனிவீட்டில். (கஎ) பானல் அம்துறை - குவளைமலர்கள் மலர்ந்துள்ள அழகிய கரையினையுடைய. ஓகாரங்கள் - ஐயம். (கஅ) கண்ணியர் - கொண்டைப் பூமாலையையுடைய பரமசிவன். (ககூ) கைதவம் - கபடத்தை. (உக) தொடக்கினில் - வாதத்தில், சிக்கில். (உஉ) இனையது ஒன்று - இப்படிப்பட்ட நிகழ்ச்சி. ஐயர் அளித்த கோவணத்தைக் காணாது வருந்தினும், அவர் ஈரக் கோவணத்தோடிருந்தமையால் குளிரால் இடர்ப்படுவர் என்னுங் கருத்துடையவராய் பிறிதோர் கோவணத்தைக் கொணர்ந்தார் என்பதை விளக்க "வேறொரு கோவணங்கொடு புறப்பட்டார்" என்றார்.

அத்தர் முன்புசென் றடிகணீர் தந்தகோ வணத்தை
வைத்தி டத்துநான் கண்டிலன் மற்றுமோ ரிடத்தில்
உய்த்தொ ளித்தன ரில்லைநா னொளித்தவா றறியேன்
இத்த கைத்தவே றதிசயங் கண்டிலே னென்று (உ௩)

வேறு நல்லதோர் கோவணம் விரும்பிமுன் கொணர்ந்தேன்
கீறு கோவண மன்றுநெய் தமைத்தது கிளர்கொ
ளாறு சாத்திய நெற்றியீர் மற்றது களைந்து
மாறு சாத்தியென் பிழைபொறுப் பீரென வணங்க (உ௪)

நின்ற வேதியர் வெகுண்டமர் நீதியார் நிலைமை
நன்று சாலவு நாளிடை கழிந்தது மன்றால்
இன்று நான்வைத்த கோவணங் கொண்டதற் கெதிர்வே
றொன்று கொள்ளென வுரைப்பதே நீரென வுரையா (உ௫)

நல்ல கோவணங் கொடுப்பனென் றுலகின்மே லொருஞ்
சொல்லு வித்ததென் கோவணங் கொள்வது துணிந்தோ
ஒல்லை யீங்குறு வாணிக மழகிய துமக்கென
றெல்லை யில்லவ னெரிதுள்ளி னானென வெகுண்டான் (உ௬)

மறிக ரந்துதண் டேந்திய மறையவர் வெகுளப்
பொறிக லங்கிய வுணர்வின ராய்முகம் புலர்ந்து
சிறிய வென்பெரும் பிழைபொறுத் தருள்செய்வீ ரடியேன்
அறிய வந்ததொன் றன்றென வடிபணிந் தயர்வார் (உ௭)

செயத்த குந்தணி செய்வனிக் கோவண மன்றி
நயத்த குந்தன நல்லபட் டாடைகண் மணிகள்
உயர்த்த கோடிகொண் டருளுமென் றுடம்பினி லடங்காப்
பயத்தொ டுங்குலைந் தடிமிசைப் பலமுறை பணிந்தார் (உ௮)

பணியு மன்பரை நோக்கியப் பரம்பொரு ளானார்
தணியு முள்ளத்த ராயினர் போன்றுநீர் தந்த
மணியும் பொன்னுநல் லாடையு மற்றுமென் செய்ய
அணியுங் கோவண நேர்தர வமையுமென் றருள (உ௯)

மலர்ந்த சிந்தைய ராகிய வணிகரே றனையார்
அலர்ந்த வெண்ணிறக் கோவண மதற்குநே ராக

---

(உ௪) கீறு - (ஒரு ஆடையிலிருந்து) கிழித்த. அது - ஈரமாயுள்ள கோவணத்தை. மாறுசாத்தி - (அதற்கு) மாறாக இக்கோவணத்தைத் தரித்து. (உ௭) மறிகரந்து - மானைமறைத்து. (உ௮) நயத்தகுந்தன - விரும்பத்தக்க தனங்களும். (உ௯) நேர்தர - ஒத்திருக்க.

இலங்கு பூந்துகில் கொள்வதற் கிசைந்தருள் செய்தீர்
நலங்கொள் கோவணந் தரும்பரி சியாதென நம்பர் (௩௦)

உடுத்த கோவண மொழியநுங் கையிற் றாரீர்
கெடுத்த தாங்குமுன் சொல்லுமக் கிழித்தகோ வணநேர்
அடுத்த கோவண மிதுவென்று தண்டினி லவிழா
எடுத்து மற்றித னெடையிடுங் கோவண மென்றார் (௩௧)

நன்று சாலவென் றனபரு மொருதுலை நாட்டக்
குன்ற வில்லியார் கோவண மொருதட்டி லிட்டார்
நின்ற தொண்டருங் கையினி னெய்தகோ வணஞ்சாட்
டொன்றி லேயிட நிறையிலா தொழிந்தமை கண்டார் (௩௨)

நாடு மன்பொடு நாயன்மா ரளிக்கமுன் வைத்த
நீடு கோவண மனையதே ராகவொன் றொன்றாக
கோடு தட்டின்மீ திடவிடக் கொண்டெழுந் ததுகண்
டாடு சேவடிக் கடியரு மற்புத மெய்தி (௩௩)

உலகி லில்லதோர் மாயைமிக் கோவண மொன்றுக்
கலகில் கோவண மொத்தில வென்றதி சயித்துப்
பலவு மென்றுகில் பட்டுட னிடவிட வுயரா
இலகு பூந்துகிற் பொதிகளை யெடுத்துமே லிட்டார் (௩௪)

முட்டி லன்பர்த மன்பிடுந் தட்டுக்கு முதல்வர்
மட்டு நின்றதட் டருளொடுந் தாழ்வுறும் வழக்காற்
பட்டொ டுந்துகி லநேககோ டிகளிடும் பத்தர்
தட்டு மேற்படத் தாழ்ந்தது கோவணத் தட்டு (௩௫)

(௩௦) பூந்துகில் - அழகிய பட்டாடை (முதலியவற்றை) இசைந்து அருள் செய்தீர் - ஒப்பிக்கொண்டருளினீர். கோவணம் தரும் பரிசு யாது என - கோவணத்தைக் கொடுக்க என்னை எடையாக வைத்துக் கொடுப்பது. நம்பர் - சிவபெருமான். (௩௩) கோடு - வட்டமான. ஆடு சேவடிக்கு அடியரும் - (என்னைப் பரிசே) திருத்தாண்டவம் புரியும் அழகிய திருவடிக்குத் தொண்டுபூண்டொழுகும் அமர்நீதி நாயனாரும். (௩௫) அன்பு இடும் முட்டு இல் அன்பர் தம் தட்டுக்கு - அன்பினை இடும் குறைபாடில்லாத அன்பர்கள் (கீழ்மை என்னும்) தட்டிற்கு. முதல்வர் மட்டு நின்றதட்டு - சிவபெருமானிடத்து நின்ற (அருட்குணமென்னும்) தட்டானது. தடங்கருணைப் பெருங்கடலாய சிவபிரான் அடியவர்க்கு எளியவராந் தன்மையுடையாரென அருணூல்கள் முழக்கும் முறையால், ஈண்டு இறைவர் கோவணம் வைத்த தட்டும் எளிய தன்மையுடையது போலத் தாழ்ந்து நின்றதென ஒருநயந்தோன்றக் கூறினார் என்க. நாயனார் பட்டுப் பீதாம்பரங்களைத் தட்டில் இடுதல் சங்கரன் மாட்டுள்ள பேரன்பு என்றும், அவர் கோவணத் தட்டைத் தாழ்த்தல் அடியவர் அன்பை வெளிப்படுத்தும் அருளுடைமை என்றும் உணர்க. அன்பருக்குத் தாழுந் தன்மை அரன் மாட்டினதென்பார் "முதல்வர்மட்டின்ற தட்டு" என்றார். "தட்டுமேற்பட" என்பதற்குப் பரிபாகம் மேற்பட திருவருள் பதிந்ததென விளக்குதலும் ஒன்று.

ஆன தன்மைகண் டடியவ ரஞ்சியந் தணர்முன்
றூாக றுந்துகில் வர்க்கநூல் வர்க்கமே முதலா
மான மில்லன குவிக்கவுந் தட்டின்மட் டிதுவால்
ஈனை யென்றன மிடப்பெற வேண்டுமென் றிறைஞ்ச (௩௬)

மங்கை பாகரா மறையவர் மற்றதற் கிசைந்தே
யிங்கு நாமினி வேறொன்று சொல்லுவ தென்கொல்
அங்கு மற்றுங்க டனங்களி னுகிலு மிடுவீர்
எங்கள் கோவண நேர்நிற்க வேண்டுவ தென்றார் (௩௭)

நல்ல பொன்னொடும் வெள்ளியு நவமணித் திரளும்
பல்வ கைத்திறத் துலோகமும் புணர்ச்சிகள் பலவும்
எல்லை யில்பொருள் சுமந்தவ ரிடவிடக் கொண்டே
மல்கு தட்டுமீ தெழுந்தது வியந்தனர் மண்ணோர் (௩௮)

தவநி றைந்தநான் மறைப்பொரு ளுலகளாற் சமைந்த
சிவன்வி ரும்பிய கோவண மிடுஞ்செழுந் தட்டுக்
கவனி மேலமர் நீதியார் தனமெலா மன்றிப்
புவனம் யாவையு நேர்நிலா வென்பது புகழோ (௩௯)

நிலைமை மற்றது நோக்கிய நிகரிலார் நேர்நின்
றுலைவில் பஃறன மொன்றொழி யாமையுய்த் தொழிந்தேன்
றலைவ யானுமென் மனைவியுஞ் சிறுவனு தகுமேற்
றுலையி லேறிடப் பெறுவதுன் னருளெனத் தொழுதார் (௪௦)

பொச்ச மில்லடி மைத்திறம் புரிந்தவ ரெதிர்நின்
றச்ச முன்புற வுரைத்தலு மங்கண ரருளா
னிச்ச யித்தவர் நிலையினைத் துலையெனுஞ் சலத்தால
இச்ச ழக்கினின் றேற்றுவா ரேறுதற் கிசைந்தார். (௪௧)

மனம கிழ்ந்தவர் மலர்க்கழல் சென்னியால் வணங்கிப்
புனைம லர்க்குழன் மனைவியார் தம்மொடு புதல்வன்
றனையு டன்கொடு தனித்துலை வலங்கொண்டு தகவால்
இனைய செய்கையி லேறுவார் கூறுவா ரெடுத்து (௪௨)

இழைத்த வன்பினி லிறைதிரு நீற்றுமெய் யடிமை
பிழைத்தி லோமெனிற் பெருந்துலை நேர்நிற்க வென்று
மழைத்த டம்பொழிற் றிருநல்லூ ரிறைவரை வணங்கித்
தழைத்த வஞ்செழுத் தோதினு ரேறினர் தட்டில் (௪௩)

---

(௩௬) மானம் இல்லன - அளவில்லாத பொருள்களை. (௩௮) புணர்ச்சிகள் - (பல உலோகங்களை) கலந்த வெண்கல முதலியனவும். (௪௦) உலைவு இல் - கெடுதலில்லாத. (௪௧) பொச்சம் இல் - பொய்யில்லாத. சலத்தால் - வியாசத்தால், முகாந்தரத்தால் சலம் என்பது வடசொல் (வியாசம் - உண்மையை மறைத்து மற்றொன்று செய்வது.)

மண்டு காதலின் மற்றவர் மகிழ்ந்துட னேற
அண்டர் தம்பிரான் றிருவரைக் கோவண மதுவுங்
கொண்ட வன்பினிற் குறைபடா வடியவ ரடிமைத்
தொண்டு மொத்தலா லொத்துநேர் நின்றதத் துலைதான். (சச)

மதிவி ளங்கிய தொண்டர்தம் பெருமையை மண்ணோர்
துதிசெய் தெங்கணு மதிசய முறவெதிர் தொழுதார
கதிர்வி சும்பிடை கரந்திட நிரைந்தகற் பகத்தின்
புதிய பூமழை யிமையவர் மகிழ்வுடன் பொழிந்தார் (சரு)

அண்டர் பூமழை பொழியமற் றதனிடை யொளித்த
முண்ட வேதிய ரொருவழி யான்முத னல்லூர்ப்
பண்டு தாம்பயில் கோலமே விசும்பினிற் பாகங்
கொண்ட பேதையுந் தாமுமாய்க் காட்சிமுன் கொடுத்தார். (சசு)

தொழுது போற்றியத் துலைமிசை நின்றுநேர் துதிக்கும்
வழுவி லன்பரு மைந்தரு மனைவியார் தாமு
முழுது மின்னருள் பெற்றுத்தம் முன்றொழு திருக்கும்
அழிவில் வான்பதங் கொடுத்தெழுந் தருளினா ரையர் (சஎ)

நாதர் தந்திரு வருளினா னற்பெருந் துலையே
மீது கொண்டெழு விமானம தாகிமேற் செல்லக்
கோதி லன்பருங் குடும்பமுங் குறைவறக் கொடுத்த
ஆதி மூர்த்தியா ருடன்சிவ புரியினை யணைந்தார் (சஅ)

வேறு.

மலர்மிசை யயனு மாலுங் காணுதற் கரிய வள்ளல்
பலர்புகழ் வெண்ணெய் நல்லூ ராவணப் பழமை காட்டி
உலகுய்ய வாண்டு கொள்ளப் பெற்றவர் பாத முன்னித்
தலைமிசை வைத்து வாழுந் தலைமைநந் தலைமை யாகும் (சகூ)

அமர்நீதிநாயனார்புராண முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ருரு௦

தில்லைவாழந்தணர்சருக்க முற்றுப்பெற்றது.



(சச) மண்டு காதலின - மிக்க விருப்புடன. (சரு) மதி - அறிவு, ஞானம. கதிர் விசும்பு இடை கரந்திட - ஒளிவிளங்கும ஆகாய வெளி மறைய (சசு) முண்டவேதியர் - திரிபுண்டர மணிநத சிவபிரான். பண்டுதாமபயில் கோலமே-முனனேதாம [illegible]ற்றிருந்தருளும் திருக்கோலமாகவே. (சஎ) வான்பதம - உயர்ந்த சிவபதத்தை. (சகூ) பெற்றவர் - சுந்தரமூர்த்தி சுவாமிகள்.

சோழநாட்டிலே, பழையாறை என்னும் பதியிலே, வணிகர்குலத்திலே அவதரித்தவரும், அளவிலாச் செல்வத்தையுடையவரும், அடியவர்களைத் திருவமுது செய்வித்து, அவரவர் கருத்தறிந்து, கந்தை கீள் உடை கோவணம் என்பவைகளை அன்புடன் அளிப்பவருமாகிய அமர்நீதிநாயனார் என்பவர் ஒருவர் இருந்தார். அவர் திருநல்லூர் என்னுந் திருப்பதியிலே, திருவிழாத் தரிசனஞ் செய்ய வரும் அடியவர்களுக்குத் திருவமுது செய்விக்கும் பொருட்டு ஒரு திருமடங்கட்டி, சுற்றத்தவர்களோடு அத்தலத்திற்குப் போய்ச் சேர்ந்து, தந்திருத்தொண்டைக் குறையாது செய்துவந்தார்.

அங்ஙனம் செய்துவரு நாட்களில், ஒருநாள் சிவபிரான் வேதியர் குலத்துப் பிரமசாரி வடிவங்கொண்டு, இரண்டு கோவணங்களும், திருநீற்றுப்பையும், தருப்பையும் கட்டப்பட்டுள்ள ஒரு தண்டைத் திருக்கரத்திலே தாங்கிக்கொண்டு, அத்திருமடத்தை அடைந்தார். அடைந்ததும், அமர்நீதிநாயனார் எதிர்கொண்டு, அன்புடன்வணங்கி "எம்பிரானே! தேவரீர் இங்கே எழுந்தருள அடியேன் பூர்வத்தில் என்ன தவஞ் செய்தேனோ" என்ன; பிராமணர் "உமது திருத்தொண்டைக் கேள்வியுற்று, உம்மைக் காண இங்கு வந்தோம்" என்றியம்பினார். அதைக்கேட்ட அடியவர் "இம்மடத்தில் அந்தணர்கள் அமுதுசெய்ய, அந்தணர்கள் அமுது சமைப்பதும் உண்டு. இன்று தேவரீரும் இங்கே அமுது செய்தருளல் வேண்டும்" என்று வணங்கினார். பிரமசாரியானவர் "நாம் காவேரியில் ஸ்நானஞ் செய்து வருவோம்; ஒருவேளை மழைவரின் தரித்துக்கொள்வதற்கு இவ்வுலர்ந்த கோவணத்தை வைத்திருந்து கொடும்" என்றுகூறி, தண்டில் கட்டப்பட்டுள்ள கோவணங்களில் ஒன்றை அவிழ்த்து "இதன் பெருமையை உமக்கு யாம்சொல்லல் வேண்டுவதில்லை; இதனை இகழாமல் பத்திரமாய் வைத்திருந்து கொடும்" என்று, நாயனார் இடம் அளித்துக் காவேரிக்குச் சென்றார். அடியவர் பெருமான் அந்தணர் அளித்த கௌபீனத்தை ஓர்தனி இடத்தில் சேமித்து வைத்தார்.

காவேரி நதிக்குச் சென்ற கங்காதரர் தாம் நாயனாரிடம் அளித்த கோவணத்தை வைக்கப்பட்ட இடத்தினின்றும் மறையும்படி திருவருள்செய்து, நீராடி, மழைபொழிய, நனைந்து திருமடத்திற்கு வந்தார். அமர்நீதி நாயனார் அதற்கு முன்னமே அமுது சமைத்து ஐயரை எதிர்கொண்டு வணங்க; வேதியர் "ஈரம் மாற்றவேண்டும்; தண்டின் மேலுள்ள கோவணமும் ஈரமாயிருக்கின்றது; யாம் உம்மிடத்தில் அளித்த கோவணத்தைக் கொண்டு வாரும்" என்றார். உடனே உண்மை அடியவர் உள்ளே நுழைந்து கௌபீனத்தைத் தேடிக்காணாது, வருந்தி, நிற்கமாட்டாதவராய் வேறொரு கோவணத்தை எடுத்துக்கொண்டு, வெளியேவந்து, பிரமசாரியை வணங்கி "சுவாமி! தேவரீர் அளித்த கோவணத்தை வைக்கப்பட்ட இடத்திலும், பிற இடங்களினும் தேடியுங் கண்டிலேன், வேறொரு கோவணத்தைக் கொணர்ந்தேன்; இது ஓராடையினின்றுங் கிழிக்கப்பட்டதன்று; புதிதாக நெய்யப்பட்டது; தயைசெய்து ஈரக்கோவணத்தைக் களைந்து, இதைச்சாத்தி, சிறியேன்செய்த பெரும் பிழையைப் பொறுத்தருளல் வேண்டும்" என்று வணங்கினார். மறையவர் சினந்து "உம்முடைய நிலைமை மிகவும் நன்றாயிருக்கின்றது; பலநாட்கள் கழியவுமில்லை; இன்றுகொடுத்த கோவணத்தைக் கவர்ந்துகொண்டு, பதிலாக வேறொரு கோவணத்தைக் கொடுப்பது என்னை? சிவனடியார்களுக்கு நல்ல கோவணங் கொடுப்பேனென்று உலகத்திலே சொல்லுவித்துப் பரவச்செய்தது என்கோவணத்தைக் கவர்வதற்கோ? உம்

வாணிபம் அழகாயிருக்கின்றது" என்று கூற, அடியவர் பயந்து ஐயரைப் பணிந்து "அடியேன் இப்பிழையைத் தெரிந்து செய்தேனல்லன். செய்ய வேண்டிய பணிகளெல்லாஞ் செய்கின்றேன் இக்கோவணமன்றிப் பொன்களையும், பட்டாடைகளையும், மணிகளையும் கொடுக்கின்றேன் ஏற்றுக் கொள்ளல்வேண்டும்" என்று வேண்டினர் பிரமசாரியானவர் கோபம் தணிந்தவரைப் போலக்காட்டி "அன்பரே! பொன்களும், பட்டாடைகளும், மாணிக்கங்களும் எமக்கேன்? நாம் அணிந்து கொள்வதற்கு உம்மிடங்கொடுத்த கௌபீனத்துக்கு ஒத்தநிறையுள்ள கௌபீனம் ஒன்று கொடுத்தாற் போதும்" என்ன, நாயனர் "எதனுடைய நிறைக்குச் சமமாகக் கோவணத்தைக் கொடுக்கவேண்டும்?" என்றார் அதற்கு அந்தணர் பெருமான் "இக்கோவண நிறைக்குச் சமமாக" என்று தண்டில்கட்டியுள்ள கோவணத்தை அவிழ்த்து "இதற்குச் சமமாக நிறுத்துக்கொடும்" என்றார் அதைக்கேட்ட அடியவர் ஓர் தராசை நாட்ட, அந்தணர் தங் கோவணத்தை ஓர் தட்டிலிட்டார். நாயனர் பெருமானும் தம்மிடமிருந்த கோவணத்தை மற்றொரு தட்டில் வைத்தார் அதுசிவகோவண நிறைக்கு ஒத்துநில்லாமல் மேலே எழுந்தது. அதுகண்ட அன்பிற் பெரியவர் தாம் சிவனடியார்களுக்கு வைத்திருந்த கோவணங்களையும், பட்டாடைகளையும், வஸ்திரப்பொதிகளையுங் கொண்டு வந்து ஒவ்வொன்றாகவும், பொதி பொதியாகவும் இட்டும் சிவகோவணத் தட்டு கீழ்தாழ்ந்தது வைசியகுலப் பெருமானர் கண்டு அஞ்சிப் பிராமணரைப் பணிந்து "என் தனங்களையும் இட தேவரீர் அனுமதிகொடுத்தருள வேண்டும்" என்ன, அடியவர்க்கெளியவர் "நாம் என்னசொல்வது, தனங்களையும் இட்டுப்பாரும்; எப்படியாவது எம்முடைய கோவணம் நேர் நிற்க வேண்டும்" என்றார் நாயனர் பொன் கட்டிகளையும், வெள்ளிக்கட்டிகளையும், நவரத்தினக் குவியல்களையும், மற்றும் பலஉலோகங்களையும் கொண்டு வந்து இட இட தட்டுமேலே எழுந்தபடியே இருந்தது அதைக்கண்ட அடியவர் பிரமசாரியரை வணங்கி, "சிவமே! என்னிடத்திருந்த ஆடைகளையும், திரவியங்களையும், மற்றவைகளையும் தட்டில் இட்டேன் யானும், மனைவியும், புத்திரனும் மாத்திரம் நிற்கின்றோம் தேவரீருக்குத் திருவுளமிருப்பின் யாங்களும் இத்தட்டில் ஏற அனுமதிகொடுத்தருள வேண்டும்" என்ன; ஐயரும் உடன்பட்டார்

அமர்நீதி நாயனர் பெரிதும் மகிழ்ந்து பிரமசாரியை வணங்கி மனைவியோடும், மைந்தரோடும் துலையை வலம் வந்து "சிவனடியார்களுக்கு இதுகாறும் செய்து வந்த திருத்தொண்டிலே யாங்கள் சிறிதும் தவறாமல் இருந்தது உண்மையாகில், நாங்கள் ஏறினவுடன் இத்துலையானது நேர் நிற்கக் கடவது" என்றுமொழிந்து, அஞ்செழுத்தை அன்புடன் ஓதிக்கொண்டு, தட்டிலே ஏறினர் ஏறினதும், தராசின் இருதட்டுகளும் ஒத்து நின்றன அதைக்கண்ட மண்ணவர் துதி செய்தார்கள்; விண்ணவர் பூமாரி பொழிந்தார்கள் கார்த்திகேயன் ஆடும் கயிலாய பதியானவர் பிரமசாரி வடிவத்தைக் கரந்து, உமாதேவியாருடன் மழவிடைமேற்றோன்றித் தராசு தட்டிலே நின்று தம்மைத் துதிக்கும் நாயனரையும், அவர் மனைவியாரையும், புதல்வரையும் திருக்கண்ணோக்கஞ் செய்து "நீவிர் மூவிரும் எம்முடைய திருவருளைப் பூரணமாகப் பெற்று, எம்மை என்றும் தொழுதுகொண்டிருங்கள்" என்று திருவாய் மலர்ந்தருளி, மறைந்தருளினர். திருவருளால் அத்துலையே தேவவிமானமாகி மேலே செல்ல, அமர்நீதி நாயனரும், அவர் மனைவியாரும், மைந்தரும் சிவபிரானோடு சிவபதத்தை அடைந்தார்கள்.



மூன்றாவது

## இலைமலிந்த சருக்கம்.

# எறிபத்த நாயனார் புராணம்.



மல்லனீர் ஞாலந் தன்னுண் மழவிடை யுடையா னன்பர்க்
கொல்லைவந் துற்ற செய்கை யுற்றிடத் துதவு நீரார்
எல்லையில் புகழின் மிக்க வெறிபத்தர் பெருமை யெம்மாற்
சொல்லலாம் படித்தன் றேனு மாசையாற் சொல்ல லுற்றேன். (க)

பொன்மலைப் புலிவென் றோங்கப் புதுமலை யிடித்துப் போற்றும்
அந்நெறி வழியே யாக வயல்வழி யடைத்த சோழன்
மன்னிய வநபா யன்சீர் மரபின்மா நகர மாகுந்
தொன்னெடுங் கருவூ ரென்னுஞ் சுடாமணி வீதி மூதூர் (உ)

மாமதின் மஞ்சு சூழு மாளிகை நிரைவிண் சூழுந்
தூமணி வாயில் சூழுஞ் சோலையில் வாசஞ் சூழுந்
தேமல ரளகஞ் சூழுஞ் சிலமதி தெருவிற் சூழுந்
தாமகிழ்ந் தமரர் சூழுஞ் சதமக னகரந் தாழ (ங)

கடகரி துறையி லாடுங் களிமயில் புறவி லாடும்
அடர்மணி யரங்கி லாடு மரிவையர் குழல்வண் டாடும்
படரொளி மறுகி லாடும் பயில்கொடி கதிர்மீ தாடுந்
தடநெடும் புவிகொண் டாடுந் தனிநகர் வளமை யீதால் (ச)

மன்னிய சிறப்பின் மிக்க வளநக ரதனின் மல்கும்
பொன்னியல் புரிசை சூழ்ந்து சுரர்களும் போற்றும் பொற்பாற்
றுன்னிய வன்பின் மிக்க தொண்டர்தஞ் சிந்தை நீங்கா
அந்நிலை யரனார் வாழ்வ தானிலை யென்னுங் கோயில் (ரு)

(க) மல்லல் நீர் ஞாலம் தன்னுள் - வளப்பமுடைய கடலாற் சூழப்பட்ட நிலவுலகத்தில். ஒல்லைவந்து - விரைவில் வந்து. உற்றிடத்து - ஆபத்து நேர்ந்த காலத்தில். (உ) பொன்மலை புலி வென்று ஓங்க - இமயமலையினிடத்து நாட்டிய (தமது) புலிக்கொடி (பகையரசர்களை) வென்றுவிளங்க. மலைகளை இடித்து நேர்வழி யுண்டாக்கிச் சுற்றுமார்க்கங்களை அடைத்தலை அரசர்களுக்குச் சிறப்பாகலின் "புதுமலை இடித்து அடைத்தசோழன்" என்றார். (ங) மஞ்சு - மேகங்கள். நிரை - வரிசைகள். அளகம் - (மாதர்கள்) கூந்தலில். சிலமதி - (மாதர்களின் முகமாகிய) சில சந்திரர்கள். சதமகன் நகரம் - இந்திரலோகம். (ச) கடகரி - மதம் பொழியும் யானைகள். புறவில் - முல்லை நிலத்தில். அரங்கில் ஆடும் அரிவையர் குழல் வண்டு ஆடும் - சபையில் நடஞ்செய்கின்ற மாதர்கள் கூந்தலில் வண்டுகள் சஞ்சரிக்கும். மறுகில் - வீதியில். (ரு) புரிசை சூழ்ந்து - மதிலைச் சுற்றி.

பொருட்டிரு மறைக டந்த புனிதரை யினிதக் கோயின்
மருட்டுறை மாற்று மாற்றால் வழிபடுந் தொழில ராகி
இருட்கடு வொடுங்கு கண்டத் திறையவாக் குரிமை பூண்டார்க்
கருட்பெருந் தொண்டு செய்வா ரவரெறி பத்த ராவார்  (௬)

மழைவளர் ருலகி லெங்கு மன்னிய சைவ மோங்க
அழலவிர் சடையா னன்பர்க் கடாதன வடுத்த போது
முழையரி யென்னத் தோன்றி முரண்கெட வெறிந்து தீர்க்கும்
பழமறை பரசுந் தூய பரசுமுன் னெடுக்கப் பெற்றார்.  (௭)

அண்ணலார் நிகழு நாளி லானிலை யடிக ளாராகுத்
திண்ணிய வன்பு கூர்ந்த சிவகாமி யாண்டா ரென்னும்
புண்ணிய முனிவ ஞாதாம் பூப்பறித் தலங்கல சாத்தி
உண்ணிறை காத லோடு மொழுகுவா ரொருநாண் முன்போல்.  (௮)

வைகறை யுணர்ந்து போந்து புனன்மூழ்கி வாயுங் கட்டி
மொய்மலர் நெருங்கு வாச நந்தன வனத்து முன்னிக்
கையினிற் றெரிந்து நல்ல கமழ்முகை யலரும் வேலைத்
தெய்வநா யகர்க்குச் சாத்துந் திருப்பள்ளித் தாமங் கொய்து  (௯)

கோலப்பூங் கூடை தன்னை நிறைத்தனர் கொண்டு நெஞ்சில்
வாலிய நேசங் கொண்டு மலர்க்கையிற் றண்டுங் கொண்டு
காலைய மதனை நோக்கி யங்கணாக் கமைத்துச் சாத்துங்
காலைவந் துதவ வேண்டிக் கடிதினில் வாரா நின்றார்.  (௧0)

மற்றவ ரணைய விப்பால் வளங்க ரதனின் மன்னுங்
கொற்றவர் வளவா தங்கள் குலப்புகழ்ச் சோழ ஞர்தம்
பற்றலா முனைகள் சாய்க்கும் பட்டவர்த் தனமாம் பணபு
பெற்றவெங் களிறு கோலம் பெருகுமா நவமி முன்னாள்  (௧௧)

மங்கல விழவு கொண்டு வருநதித் துறைநீ ராடிப்
பொங்கிய களிப்பி னோடும் பொழிமதஞ் சொரிய நின்றார்
எங்கணு மிரியல் போக வெதிர்பரிக் கார ரோடத்
துங்கமால் வரைபோற் றோன்றித் துண்ணென வணைந்த தன்றே  (௧௨

(௬) இருள்கடு - கரிய நஞ்சு (௭) முழை அரி எனன - குகையில் வசிக்கும் சிங்கத்தைப்போல. பரசும - துதிக்கும. பரசு - மழு, கோடாலி. (௮) திண்ணிய - உறுதியான. அலங்கல - திருப்பள்ளித்தாமம, பரமசிவனுக்குச்சாத்தச் கட்டும் பூமாலை. (௯) வைகறை - விடியற்காலத்தில். (௰) வாலிய - மாசற்ற, தூய (௧௧) வளவா தங்கள் - சோழர்களுடைய. பற்றலா முனைகள் சாய்க்கும - பகைவர்களுடைய போர் முனையை அழிக்கும. பட்டவர்த்தனம - பட்டத்துயானை. (௧௨) நின்றார் - எதிரில வாரா நின்றவர்கள். இரியல்போக - அஞ்சிவிலக, ஓட.

வென்றிமால் யானை தன்னை மேல்கொண்ட பாக ரோடுஞ்
சென்றொரு தெருவின் முட்டிச் சிவகாமி யார்முன் செல்ல
வன்றனித் தண்டிற் றூங்கு மலர்கொள்பூங் கூடை தன்னைப்
பின்றொடர்ந் தோடிச் சென்று பிடித்துடன் பறித்துச் சிந்த. (கங)

மேல்கொண்ட பாகர் கண்டு விசைகொண்ட களிறு சண்டக்
கால்கொண்டு போவார் போலக் கடிதுகொண் டகலப் போக
நூல்கொண்ட மார்பிற் றொண்டர் நோக்கினர் பனைத்துப் பொங்கி
மால்கொண்ட களிற்றின் பின்பு தண்டுகொண் டடிக்க வந்தார் (கச)

அப்பொழு தணைய வொட்டா தடற்களி றகன்று போக
மெய்ப்பெருந் தொண்டர் மூப்பால் விரைந்துபின் செல்ல மாட்டார்
தப்பினார் விழுந்து கையாற் றரையடித் தெழுந்து நின்று
செப்பருந் துயர நீடச் செயிர்த்துமுன் சிவதா வென்பார் (கரு)

வேறு

களியா னையினீ ருரியாய் சிவதா
எளியார் வலியா மிறைவா சிவதா
அளியா ரடியா ரறிவே சிவதா
தெளிவா ரமுதே சிவதா சிவதா (கசு)

ஆறும் மதியும் மணியுஞ் சடைமேல்
ஏறும் மலரைக் கரிசிந் துவதே
* வேறுண் ணினைவார் புரம்வெந் தவியச்
சீறுஞ் சிலையாய் சிவதா சிவதா (கஎ)

தஞ்சே சரணம் புகுதந் தமியோர்
நெஞ்சேய் துயரங் கெடநேர் தொடரு
மஞ்சே யெனவீழ் மறலிக் கிறைநீள்
செஞ்சே வடியாய் சிவதா சிவதா (கஅ)

நெடியோ னறியா நெறியா ரறியும்
படியா லடிமைப் பணிசெய் தொழுகும்

(கங) முட்டி - அடைந்து. (கச) சண்டக்கால் கொண்டுபோவார் போல - சண்ட மாருதத்தை வசப்படுத்திக்கொண்டு போகின்றவரைப் போல. (கரு) சிவதா என்பது சுகத்தைக் கொடுக்கின்றவனே என்னும் விளிப்பொருள்பட அக்காலத்தடியவர்கள் கூறும் ஒருவடமொழி. சிவகாமியாண்டார் நாடோறும் சிவதா சிவதா என்றுச்சரிக்கும் வழக்குடையாராதலின், இடுக்கண் நேரிட்டுழி அவ்வாறு கூறினார் எனக். இதனால் தமக்குவிளைந்த துன்பத்தை யொழித்துச் சுகத்தைக் கொடு என்று சிவபிரானை இரந்தவாறாயிற்று. (கசு) வலியார் - வலிய துணையார். அளியார் - அருள்பொருந்திய. (கஎ) * வேறுண்ணினைவார் என்றும் பாடபேதமுண்டு. (கஅ) தமியோர் - மார்க்கண்டேயர்.

அடியார் களில்யா ரொரு வணைவாய்
முடியா முதலா ரெனவே மொழிய (௧௯)

வேறு

என்றவ ருரைத்த மாற்ற மெறிபத்த ரெதிரே வாரா
நின்றவர் கேளா மூளு நெருப்புயிர்த் தழன்று பொங்கி
மன்றவ ரடியார்க் கென்று மழிப்பகை களிறே யன்றோ
கொன்றது வீழ்ப்ப னென்று கொலைமழு வெடுத்து வந்தார் (௨௦)

வந்தவ ரழைத்த தொண்டர் தமைக்கண்டு வணங்கி யும்மை
இந்தவல் லிடுமை செய்த யானையெங் குற்ற தென்ன
எந்தையார் சாத்தும் பூவை யென்கையிற் பறித்து மண்மேற்
சிந்திமுன் பிழைத்துப் போகா நின்றதித் தெருவே யென்றார் (௨௧)

இங்கது பிழைப்ப தெங்கே யினியென வெரிவாய் சிந்தும்
அங்கையின் மழுவுந் தாமு மனலுமவெங் காலு மெனப்
பொங்கிய விசையிற் சென்று பொருகரி தொடர்ந்து செல்லுஞ்
செங்கணவா ளரியிற் கூடக் கிடைத்தனர் சீற்ற மிக்கார் (௨௨)

கண்டவ ரிதுமுன் பண்ணை லுரித்தவர் களிறே போலும்
அண்டரு மண்ணு ளோருந் தடுக்கினு மடர்த்துச் சிந்தத்
துண்டித்துக் கொல்வே னென்று சுடர்மழு வலத்தில் வீசிக்
கொண்டெழுந் தார்த்துச் சென்று காலினாற் குலுங்கப் பாய்ந்தார் (௨௩)

பாய்தலு மிசைகொண் டுய்க்கும் பாகரைக் கொண்டு சீறிக்
காய்தழ லுமிழ்கண் வேழந் திரிந்துமேற் கதுவ வச்சந்
தாய்தலை யன்பின் முன்பு நிற்குமே தகைந்து பாய்ந்து
தோய்தனித் தடக்கை வீழ மழுவினாற் றுணித்தார் தொண்டர் (௨௪)

கையினைத் துணித்த போது கடலெனக் கதறி வீழ்ந்து
மைவரை யனைய வேழம் புரண்டிட மருங்கு வந்த
வெய்யகோற் பாகர் மூவர் மிசைகொண்டா ரிருவ ராக
ஐவரைக் கொன்று நின்றா ரருவரை யனைய தோளார் (௨௫)

(௨௨) வெங்காலும் என்ன - அக்கினியும் காற்றும் போல. கிடைத்தனர் - கிட்டினர். (௨௪) திரிந்து மேற்கதுவ - மாறுபட்டுச் சோபித்துச் செல்ல. தாய்தலை அன்பு - தாயப்பசு கன்றினிடத்து வைத்த தலையன்புபோலும். தாயப்பசு தன்பயன் கருதாது கன்றின் பயன் கருதியே அன்பு செலுத்துகின்றதைப்போல, இந்நாயனாரும் தமக்கிறுதி வரினும் அதனைச் சிறிதுங் கருதாது அடியவர் துயரையே யொழிக்கக் கருதலின், அவ்வன்பின் பெருமை தோன்ற "தாய்த் தலையன்பு" என்றார். அத்தலையன்புடையார் முன் அச்சம் இல்லா தொழியும் என்பார் "அச்சம் அறசமே" என்றார். (௨௫) மைவரை அனைய - கரியமலைபோலும்.

வெட்டுண்டு பட்டு வீழ்ந்தா ரொழியவே யுள்ளா ரோடி
மட்டவிழ் தொங்கன் மன்னன் வாயிற்கா வலரை நோக்கிப்
பட்டவர்த் தனமும் பட்டுப் பாகரும் பட்டா ரென்று
முட்டநீர் கடிது புக்கு முதல்வனுக் குரையு மென்றார். (௨௬)

மற்றவர் மொழிந்த மாற்ற மணிக்கடை காப்போர் கேளாக்
கொற்றவன் றன்பா லெய்திக் குரைகழல் பணிந்து போற்றிப்
பற்றல ரிலாதாய் நின்பொற் பட்டமால் யானை வீழச்
செற்றனர் சிலரா மென்று செப்பினார் பாக ரென்றார் (௨௭)

வளவனுங் கேட்ட போதின் மாறின்றி மண்காக் கின்ற
கிளர்மணித் தோள லங்கற் சுரும்பினங் கிளர்ந்து பொங்க
அளவில்சீற் றத்தி னாலே யார்செய்தா ரென்றுங் கேளான்
இளவரி யேறு போல வெழின்மணி வாயி னீங்க. (௨௮)

தந்திரத் தலைவர் தாமுந் தலைவன்ற னிலைமை கண்டு
வந்துறச் சேனை தன்னை வலவிரைந் தெழுமுன் சாற்ற
அந்தரத் தகல மெல்லா மணிதுகிற் பதாகை தூர்ப்ப
எந்திரத் தேரு மாவு மிடையிடை களிறு மாகி (௨௯)

வில்லொடு வேல்வா ளண்டு பிண்டிபா லங்கண் மிக்க
வல்லெழு முசல நேமி மழுக்கழுக் கடைமுன் னான
பல்படைக் கலன்கள் பற்றிப் பைங்கழல் வரிந்த வன்கண்
எல்லையில் படைஞர் கொட்புற் றெழுந்தன ரெங்கு மெங்கும். (௩௰)

சங்கொடு தாரை காளந் தழங்கொலி முழங்கு பேரி
வெங்குரற் பம்பை கண்டை வியன்றுடி திமிலை தட்டி
பொங்கொலிச் சின்ன மெல்லாம் பொருபடை மிடைந்த பொற்பின்
மங்குல்வான் கிளாச்சி நாண மருங்கெழுந் தியம்பி மல்க (௩௧)

தூரியத் துவைப்பு முட்டுஞ் சுடர்ப்படை யொலியு மாவின்
றார்மணி யிசைப்பும் வேழ முழக்கமுந் தடந்தேர்ச் சீரும்
வீரர்தஞ் செருக்கி னார்ப்பு மிக்கெழுந் தொன்றா மெல்லைக்
காருடன் கடைநாட் பொங்குங் கடலெனக் கலித்த வன்றே. (௩௨)

---

(௨௭) சிலர் என்றது சிவகாமியாண்டாரையும், எறிபத்த நாயனாரையும். (௨௮) சுரும்பு இனம் - வண்டுகள். (௨௯) தந்திரத் தலைவர் தாமும் - சேனைத் தலைவர்களும். அந்தரத்து அகலம் எல்லாம் - ஆகாயத்தின் விசாலமாகிய இடங்களில் எல்லாம். (௩௰) முசலம் - இருப்புலக்கைகளும். கழுக்கடை - எறியீட்டியும், சூலமும். வரிந்த - கட்டிய. (௩௨) தூரியத்து துவைப்பும் - வாத்தியங்களினுடைய ஒலியும். மாவின் - குதிரையின். செருக்கு - வீரத்தாலாய களிப்பு. கடைநாள் - கற்பகாலத்தில்.

பண்ணுறு முறுப்பு நான்கிற் பரந்தெழு சேனை யெல்லா
மண்ணிடை யிறுகான் மேன்மேல் வந்தெழுந் ததுபோற் றோன்றத்
தண்ணளிக் கவிகை மன்னன் றானைபின் றொடரத் தானோர்
அண்ணலம் புரவி மேற்கொண் டரசமா வீதி சென்றான் (௩௩)

கடுவிசை முடுகிப் போங்கிக் களிற்றொடு பாகர் வீழ்ந்த
படுகளங் குறுகச் சென்றான் பகைப்புலத் தவரைக் காணான்
விடுசுடர் மழுவொன் றேந்தி வேறிரு தடக்கைத் தாய
அடுகளி றென்ன நின்ற வன்பரை முன்பு கண்டான் (௩௪)

பொன்றவ ழருவிக் குன்ற மெனப்புரள் களிற்றின் முன்பு
நின்றவர் மன்று ளென்று நிருத்தமே பயிலும் வெள்ளிக்
குன்றவ ரடியா ராவார் கொன்றவ ரிவரென் றோரான்
வென்றவர் யாவ ரென்றான் வெடிபட முழங்குஞ் சொல்லான் (௩௫)

அரசனங் கருளிச் செய்ய வருகுசென் றணைந்து பாகர்
விரைசெய்தார் மாலை யோய்நின் விறற்களிற் றெதிரே நிற்குந்
திரைசெய்நீ ருலகின் மன்னர் யாருளார் தீங்கு செய்தார்
பரசுமுன் கொண்டு நின்ற விவரெனப் பணிந்து சொன்னார் (௩௬)

குழையணி காதி னானுக் கன்பராங் குணத்தின் மிக்கார்
பிழைபடி னன்றிக் கொல்லார் பிழைத்ததுண் டென்றுட் கொண்டு
மழைமத யானை சேனை வரவினை மாற்றி மற்ற
வுழைவயப் புரவி மேனின் றிழிந்தன னுலக மன்னன் (௩௭)

மைத்தடங் குன்று போலு மதக்களிற் றெதிரே யிந்த
மெய்த்தவர் சென்ற போது வேறொன்றும் புகுதா விட்ட
அத்தவ முடையே னானே னம்பல வாண ரன்பர்
இத்தனை முனியக் கெட்டே னென்கொலோ பிழையென் றஞ்சி (௩௮)

செறிந்தவர் தம்மை நீக்கி யன்பர்முன் றொழுது சென்றீ
தறிந்திலே னடியே னிங்குக் கேட்டதொன் றதுதா னிற்க
மறிந்தவிக் களிற்றின் குற்றம் பாகரோ டிதனை மாள
எறிந்ததே போது மோதா னருள்செயு மென்று நின்றார் (௩௯)

(௩௩) பண்ணுறும் உறுப்பு நான்கில் - அலங்கரிக்கப்பட்ட ரத கஜ துரக பதாதி என்னும் நால்வகை யுறுப்பாக. இறுகால் - ஊழிக்காற்று. கவிகை - குடையுடைய. அண்ணல் அம் புரவி - பெருமையுடைய அழகிய குதிரை. (௩௫) பொன்தவழ் அருவிக் குன்றம் என - பொற்பொடிகள் சேர்ந்து ஒழுகும் சிறு நதியையுடைய மலையைப்போல. (௩௭) அவ்வுழை வயப்புரவி - எரிவந்த பிடரியையுடைய வெற்றி பொருந்திய குதிரை. (௩௮) வேறு ஒன்று புகுதா விட்ட - வேறொரு தீங்கு (யானையால் இவருக்கு) நேரிடாமல் இருக்கப் பெற்ற. பரிசனத்தாலும், சேனையாலும் நேரிடும் பிழை அரசனுக்கே உரியதாகலின் "கெட்டேன்" என்றார். (௩௯) செறிந்தவர் தம்மை நீக்கி - தம்முடன் நெருங்கிவரும் மந்திரி முதலியோர்களை விலக்கி. மறிந்த - இறந்த

மன்னவன் றன்னை நோக்கி வானவ ரீசர் நேசர்
சென்னியித் துங்க வேழஞ் சிவகாமி யாண்டார் கொய்து
பன்னகா பரணர்ச் சாத்தக் கொடுவரும் பள்ளித் தாமந்
தன்னைமுன் பறித்துச் சிந்தத் தரைப்படத் துணித்து வீழ்த்தேன் (௪௰)

மாதங்கந் தீங்கு செய்ய வருபரிக் காரர் தாமு
மீதங்குக் கடாவு வாரும் விலக்கிடா தொழிந்து பட்டார்
ஈதிங்கு நிகழ்ந்த தென்று றெறிபத்த ரென்ன வஞ்சிப்
பாதங்கண் முறையாற் றாழ்ந்து பருவரைத் தடந்தோண் மன்னன் (௪௧)

அங்கண ரடியார் தம்மைச் செய்தவிவ் வபரா தத்துக்
கிங்கிது தன்னாற் போதா தென்னையுங் கொல்ல வேண்டும்
மங்கல மழுவாற் கொல்கை வழக்குமன் றிதுவா மென்று
செங்கையா லுடைவாள் வாங்கிக் கொடுத்தனர் தீர்வு நேர்வார் (௪௨)

வெந்தழற் சுடர்வா ணீட்டும் வேந்தனை நோக்கிக் கெட்டேன்
அந்தமில் புகழா னன்புக் களவின்மை கண்டே னென்று
தந்தவாள் வாங்க மாட்டார் தன்னைத்தான் றுறக்கு மென்று
சிந்தையா லுணர்வுற் றஞ்சி வாங்கினார் தீங்கு தீர்ப்பார் (௪௩)

வாங்கிய தொண்டர் முன்பு மன்னனார் தொழுது நின்றே
ஈங்கெனை வாளி னாற்கொன் றென்பிழை தீர்க்க வேண்டி
ஓங்கிய வுதவி செய்யப் பெற்றன னிவர்பா லென்றே
ஆங்கவ ருவப்பக் கண்ட வெறிபத்த ரதனுக் கஞ்சி (௪௪)

வன்பெருங் களிறு பாகர் மடியவு முடைவா ளைத்தந்
தென்பெரும் பிழையி னாலே யென்னையுங் கொல்லு மென்னும்
அன்பனார் தமக்குத் தீங்கு நினைத்தனை னென்று கொண்டு
முன்பென துயிர்செ குத்து முடிப்பதே முடிவென் றெண்ணி (௪௫)

புரிந்தவர் கொடுத்த வாளை யன்பர்தங் கழுத்திற் பூட்டி
அரிந்திட லுற்ற போதி லரசனும் பெரியோர் செய்கை
இருந்தவா றிதுவென் கெட்டே னெனவெதிர் கடிதிற் சென்று
பெருந்தடந் தோளாற் கூடிப் பிடித்தனன் வாளுங் கையும் (௪௬)

வளவனார் விடாது பற்ற மாதவர் வருந்து கின்ற
அளவிலாப் பரிவில் வந்த விடுக்கணை யகற்ற வேண்டிக்

(௪௰) சென்னி - சோழனே! (௪௧) மாதங்கம் - யானை. வருபரிக்காரர் தாமும் - முன்னேவரும் குத்துக்கோல்காரர்களும். கடாவுவாரும் - செலுத்தும் பாகர்களும். (௪௩) தன்னைத் தான் துறக்கும் என்று (வாங்காதிருந்தால்) தன்னுயிரைத்தானே மாய்த்துக்கொள்வார் என்று.

களமணி களத்துச் செய்ய கண்ணுத லருளால் வாக்குக்
கிளரொளி விசும்பின் மேல்வந் தெழுந்தது பலருங் கேட்ப. (சஎ)

தொழுந்தகை யன்பின் மிக்கீர் தொண்டினை மண்மேற் காட்டச்
செழுந்திரு மலரை யின்று சினக்கரி சிந்தத் திங்கட்
கொழுந்தணி வேணிக் கூத்த ரருளினாற் கூடிற் றென்றங்
கெழுந்தது பாக ரோடு மியானையு மெழுந்த தன்றே (சஅ)

ஈரவே பூட்டும வாள்விட் டெறிபத்தர் தாமு மந்த
நேரியர் பெருமா னாருன்மேல் விழுந்தனர் நிருபர் கோனும்
போர்வடி வாளைப் போக வெறிந்தவர் கழல்கள் போற்றிப்
பார்மிசைப் பணிந்தார் விண்ணோர் பணிமலர் மாரி தூர்த்தார். (சகூ)

இருவரு மெழுந்து வானி லெழுந்தம்ப ரொலியைப் போற்ற
அருமறைப் பொருளா யுள்ளா ரணிகொள்பூங் கூடை தன்னின்
மருவிய பள்ளித் தாம நிறைந்திட வருள மற்றத்
திருவருள் கண்டு வாழ்ந்து சிவகாமி யாரு நின்றார் (ருo)

மட்டவி ழலங்கல் வென்றி மன்னவர் பெருமான் முன்னர்
உட்டரு களிப்பி னோடு முறங்கிமீ தெழுந்த தொத்து
முட்டவெங் கடங்கள் பாய்ந்து முகிலென முழங்கிப் பொங்கும்
பட்டவர்த் தனத்தைக் கொண்டு பாகரு மணைய வந்தார். (ருக)

ஆனசீர்த் தொண்டர் கும்பிட் டடியனேன் களிப்ப விந்த
மானவெங் களிற்றி னேறி மகிழ்ந்தெழுந் தருளு மென்ன
மேன்மையப் பணிமேற் கொண்டு வணங்கிவெண் குடையி னீழல்
யானைமேல் கொண்டு சென்றா ரிவுளிமேற் கொண்டு வந்தார் (ருஉ)

அந்நிலை யெழுந்த சேனை யாகலி யேழு மொன்றாய்
மன்னிய வொலியி னார்ப்ப மண்ணெலா மகிழ்ந்து வாழ்த்தப்
பொன்னெடும் பொதுவி லாட னீடிய புனிதர் பொற்றாள்
சென்னியிற் கொண்டு சென்னி திருவளர் கோயில் புக்கான் (ருங)

(சஎ) பரிவில் வந்த [illegible] உண்டாகிய. களமணி களத்துச் செய்ய கண்ணுதல் - திருநீலகண்டத்தையும், சிவந்த நெற்றிக்கண்ணையும் உடைய சிவபிரான். (சஅ) தொழுந்தகை - யாவரும் வணங்குந் தன்மையுடைய. (சகூ) ஈரவே - அறுக்கவே. நேரியர் பெருமான் - சோழர்களுடைய தலைவராகிய புகழ்ச்சோழ நாயனார். நிருபர் கோனும் - புகழ்ச்சோழ நாயனாரும். (ருக) மட்டு அவிழ் அலங்கல் - தேன் ஒழுகும் மலர்மாலையைத் தரித்த. முட்ட வெம் கடங்கள் பாய்ந்து - (நாற்பக்கங்களினும்) நிறைய சொரிய மதநீர் பொழிந்து. (ருஉ) இவுளி மேற்கொண்டு வந்தார் - குதிரை மீது ஏறிக்கொண்டு வந்த புகழ்ச்சோழ நாயனார். (ருங) ஆகலி - ஆரவாரம். பொதுவில் ஆடல் நீடிய புனிதர் - சபையில் தாண்டவம் புரியும் நடராஜர்.

தம்பிரான் பணிமேற் கொண்டு சிவகாமி யாருஞ் சார
எம்பிரா னன்ப ரான வெறிபத்தர் தாமு மென்னே
அம்பல நிறைந்தார் தொண்ட ரறிவதற் கரியா ரென்று
செம்பியன் பெருமை யுன்னித் திருப்பணி நோக்கிச் சென்றார் (௬௪)

மற்றவ ரிணைய தான வன்பெருந் தொண்டு மண்மேல்
உற்றிடத் தடியார் முன்சென் றுதவியே நாளு நாளும்
நற்றவக் கொள்கை தாங்கி நலமிகு கயிலை வெற்பிற்
கொற்றவர் கணத்தின் முன்னாங் கோமுதற் றலைமை பெற்றார். (௬௫)

ஆளுடைத் தொண்டர் செய்த வாண்மையுந் தம்மைக் கொல்ல
வாளினைக் கொடுத்து நின்ற வளவனார் பெருமை தானும்
நாளுமற் றவர்க்கு நல்கு நம்பர்தா மளக்கி லன்றி
நீளுமித் தொண்டி னீர்மை நினைக்கிலா ரளக்க வல்லார் (௬௬)

தேனாருந் தண்பூங் கொன்றைச் செஞ்சடை யவர்பொற் றாளில்
ஆனாத காத லன்ப ரெறிபத்த ரடிகள் சூடி
வானாளுந் தேவர் போற்று மன்றுளார் நீறு போற்றும்
ஏனாதி நாதர் செய்த திருத்தொழி லியம்ப லுற்றேன் (௬௭)

எறிபத்தநாயனார்புராண முற்றிற்று.

ஆக திருவிருத்தம் — ௯௦௭



சோழராஜாக்களுக்குரிய இராஜதானிகள் ஐந்தனுள் ஒன்றாகிய கருவூரிலே, திருவானிலை என்னுந் திருக்கோயிலிலே வீற்றிருந்தருளும் பசுபதீசுரப் பெருமானார் பாததாமரைகளை மறவாத சிந்தையரும், சிவனடியார்களுக்குத் தீங்கிழைக்கும் தீயர்களை வெட்டி ஒழிக்க மழுப்படையைத் தாங்கப் பெற்றவரும் ஆகிய எறிபத்த நாயனார் என்பவர் ஒருவர் இருந்தார். அவர் காலத்திலே, ஓர் நாள் சிவகாமியாண்டார் என்பவர் வழக்கப்படி நந்தனவனத்துக்குச் சென்று, பூக்களைக் கொய்து, பூங்கூடையை நிறைத்து, அழகியகையில் தண்டை ஏந்தி, ஆனிலை அடிகளார்க்குத் திருப்பள்ளித் தாமங் கட்டிச் சாத்த விரைவாக நடந்து கொண்டிருக்கையில், அந்நகர் மன்னவராகிய புகழ்ச்சோழ நாயனார் பட்டவர்த்தன யானையானது நவமி முன்னாளிலே, காவேரியில் மூழ்கிப் பாகர்களுடன் விரைவாக நடந்து, தனக்கு முன்னேபோகும் சிவகாமியாண்டாரைப் பின்தொடர்ந்து ஓடி, அவர் தண்டில் தூங்கும் பூக்கூடையைப் பிடித்துப் பறித்துச் சிந்தியது. அதைக் கண்ட பாகர்கள் யானையை விரைவாக நடத்திக்கொண்டு போனார்கள். சிவகாமியாண்டார் சினந்து வேழத்தைத் தண்டினால் அடிக்க, அதற்குப் பின் செல்ல; வயோதிகத் தன்மையால் கால்தவறிக் கீழேவிழுந்து, கைகளைத் தரையிலேமோதி, எழுந்து நின்று, சொல்லுதற்கரிய துக்கங் கொண்டு "பெருமானே! தேவரீர் திருமுடியில் ஏறும் மலரை யானையா சிந்துவது! சிவதா! சிவதா!!" என்று வருந்தினார். அதைக்கேட்டுக்கொண்டு எதிரேவந்த எறிபத்தநாயனார் மிகக்கோபித்துச் சிவகாமியாண்டாரைக்கண்டு அன்புடன்

பணிந்து "உமக்கு இடையூறு செய்த யானை எங்குற்றது" என்று வினவ; அவ்வன்பர் "சிவபிரானுக்குச் சாத்த யான்கொண்டுவந்த பூக்களைச்சிந்தி, இவ்வீதிவழியாகவே போயிருக்கின்றது" என்றார் உடனே நாயனார் பெருமான் விரைந்து ஓடி யானையைக்கிட்டி, மழுவை வீசி, அதன்மீது பாய, கரியுஞ் சீறி அடியவர்மேல் திரும்பியது அனபுருவாய நாயனார் சிறிதும் அஞ்சாது அத்தியின் துதிக்கையைத் துணித்தார். கருமலைபோன்ற கஜமானது கதறிக் கீழேவீழ்ந்து புரண்டது பின்னர் பெரியவர் தந்தியின் மருங்கு வந்த குத்துக்கோற்காரர்கள் மூவரையும், அதன்மேலேறிவந்த பாகர்கள் இருவரையும் சங்கரித்து நின்றார்

மழுவினால் வெட்டுப்பட்டவர்கள் ஒழிய மற்றையோர்கள் வேகமாக ஓடி, புகழ்ச்சோழ நாயனார் அரண்மனை வாயிற்காப்போர்களைக் கண்டு "பட்டவர்த்தனத்தையும், சிலபாகர்களையும் சிலர் கொன்று விட்டார்கள்; இதை இறைவனுக்குச் சீக்கிரம் தெரியப்படுத்துங்கள்" என்று சொல்ல; அப்பொழுதே அவர்கள் அதை அரசனுக்கு அறிவித்தார்கள் சோழர்பெருமான் வடவைபோற் சீறி, கோபித்து, ஒருகுதிரையின் மேலேறி, நாலவகைச் சேனைகளோடு களிறு இறந்த இடத்தை அடைந்து, "பட்டத்து யானையைப் படச் செய்தவர் யாவர்" என்ன; அங்கிருந்த பாகர்கள் அரசரை வணங்கி "பரசினைத் தாங்கிக்கொண்டு ஆங்கு நிற்கின்றவரே யானையைக் கொன்றவர்" என்று கூறினார்கள் புகழ்ச்சோழ நாயனார் "இவர் சிவனடியாராயிருத்தலால் பட்ட வர்த்தன ம பிழை செய்தாலன்றி அதனைக்கொல்லார்" என்று கருதி தஞ்சேனைகளை எல்லாம நிறுத்தி, குதிரையை விட்டிறங்கி "இந்த மெய்த்தவர் யானைக்கெதிரே சென்றபோது, அதனால் இவருக்கு ஒருதீங்கும் நேரிடாமலிருக்கும்படி யான்பூர்வத்தில் என்ன புண்ணியஞ் செய்தனனோ' இவ்வடியவர் இவ்வளவு கோபங்கொள்ள என்ன பிழை நேரிட்டதோ" என்று அஞ்சி, நாயனார் முன்னே சென்று தொழுது "யானையைக் கொன்றவர் தேவரீர் என நான் அறியேன், நான் கேட்டது ஒன்று; அது நிற்க, இந்தக்களிறு செய்த பிழைக்காக இதனைப் பாகரோடு சங்கரித்தது போதுமா' சொல்லும்" என்று கேட்டார் அதற்கு நாயனார் நடந்த சமாசாரங்களைக் கூறினார் சோழர்பெருமான் அன்பிற் சிறந்த பெரியவரை வணங்கி "சிவனடியாருக்குச் செய்த அபராதத்துக்கு யானையையும், பாகர்களையும் கொன்றது போதாது; என்னையுங் கொல்ல வேண்டும்; தேவரீருடைய மங்கல மழுவால் என்னைக்கொல்லுதல் முறைமையன்று" என்று மொழிந்து, தம்உடைவாளை எடுத்து "இதனால் என்னைக் கொன்றருளும்" என்று கொடுத்தார் அதைக்கண்ட எறிபத்த நாயனார் அரசரின் அன்பின் பெருமையைக் கருதி வியந்து, சிறிதுநேரம் தாழ்த்து, வாளாயுதத்தைவாங்காவிட்டால், தற்கொலை செய்து கொள்வார் என்று நினைத்து, அதை வாங்கினார் உடனே புகழ்ச்சோழநாயனார் எறிபத்தரைத் தொழுது "இப்பெரியவர் அடியேனைக் கொன்று என்குற்றத்தை யொழிக்கும் பேறைப்பெற்றேன்" என்று மனமகிழ்ந்துரைத்தார் அதுகேட்ட அன்பர் "யானையும், பாகர்களும் இறந்ததைக் குறித்துச் சிறிதும் துயர் உறாது, தன்னையுங் கொல்லும்படி கேட்கும் இவருக்குத் தீங்கு நினைத்தனனே" என்று நினைத்து, "முதலிலே என்னுயிரைப் போக்கிக்கொள்வதே முறை" என்று தீர்மானித்து, அரசர் அளித்த வாளை தங்கழுத்திலே பூட்டி அறுக்கத் தொடங்கினார். அதைக்கண்ட அரசர் கெட்டேன! கெட்டேன்!! என்று வாளையுங் கையையும் பிடித்துக் கொண்டார் செயற்கருஞ் செய்கையைச் செய்யத்துணிந்த நாயனார் தங்கருத்து முற்றுப்பெறாததைக் குறித்து வருந்தி நின்றார்.

அதுகாலை, அன்பின் பெருக்கால் இருவர்களுக்கும் நேர்ந்த இடுக்கணை மாற்ற இறையருளால் "அன்பிற் சிறந்தவர்களே! உங்கள் திருத்தொண்டின் பெருமைகளை உலகத்தவர்க்குக் காட்டி, அவர்களையும் ஆட்கொள்வான் பட்டத்து யானை புட்பங்களைச் சிந்தும்படி சிவபிரான் திருவருள் செய்தார்" என்னும் அசரீரி வாக்கு ஆகாயத்தில் எழுந்தது. எழுந்ததும், யானை பாகர்களோடு எழுந்தது. எறிபத்தநாயனார் வாளை விடுத்து வளவர்கோனை வணங்கினார். அரசரும் வாளை எறிந்து எறிபத்த நாயனாரைப் பணிந்தார். தேவர்கள் பூமாரி பொழிந்தார்கள். பின்னர் இரு அடியவர்களும் அசரீரியைத் துதிசெய்தார்கள். சிவனருளால் பூங்கூடையில் பூக்கள் நிறைய, சிவகாமியாண்டாரும் ஆனந்த வாரிதியிற் றிளைத்தனர்.

பாகர்கள் பட்டவர்த்தனத்தை அன்பின் உருவாக விளங்கும் அரசர் முன்னே நடத்திக்கொண்டு வந்தார்கள். எறிபத்த நாயனார் புகழ்ச்சோழ நாயனாரைக் கும்பிட்டு "அடியேன் மகிழ இவ்வேழங்களிற்றின்மீது ஏறிச் செல்லும்" என்ன; சோழரும் நாயனாரை வணங்கி, யானைமேல் ஏறிச் சேனைகளோடு அரமனையை அடைந்தார். சிவகாமியாண்டார் பூங்கூடையை எடுத்துக்கொண்டு சிவபிரானுக்குத் திருமாலை கட்டிச் சாத்தச் சென்றார். பதி புண்ணியத்தின் பயனாக விளங்கும் எறிபத்தநாயனார் தந்திருத்தொண்டை ஒருசிறிதும் வழாது நடத்திக்கொண்டிருந்து, சிங்காரவேலரையீன்ற சிவபெருமான் எழுந்தருளியுள்ள திருக்கைலையில் சிவகணங்களுக்குத் தலைவராயினார்.



# ஏனாதிநாத நாயனார் புராணம்.



புண்டரிகம் பொன்வரைமேல் ஏற்றிப் புவியளிக்கும்
தண்டரள வெண்கவிகைத் தாரவளவர் சோணாட்டில்
வண்டறை பூஞ்சோலை வயன்மருதத் தண்பணைசூழ்
தெண்டிசையு மேறியசீ ரெயினனூர் (க)

வேழக் கரும்பினொடு மென்கரும்பு தண்வயலிற்
றாழக் கதிர்ச்சாலி தாமோங்குந் தன்மையதாய்
வாழக் குடிதழைத்து மன்னியவப் பொற்பதியில்
ஈழக் குலச்சான்றா ரேனாதி நாதனார் (உ)

தொன்மைத் திருநீற்றுத் தொண்டின் வழிபாட்டி
னன்மைக்க ணின்ற நலமென்றுங் குன்றாதார்
மன்னர்க்கு வென்றி வடிவாட் படைபயிற்றுந்
தன்மைத் தொழில்விஞ்சை யிற்றலைமை சார்ந்துள்ளார் (ங)

(க) புண்டரிகம் - புலிக் (கொடியை.) தண் தரள வெண்கவிகை - குளிர்ச்சி பொருந்திய வெள்ளிய முத்துக் குடை. வளவர் - சோழர். (உ) வேழக் கரும்பு - நாணற் கரும்பு. (ங) விஞ்சையில் - வித்தையில்.

வாளின் படைபயிற்றி வந்த வளமெல்லாம்
நாளும் பெருவிருப்பா னண்ணுங் கடப்பாட்டிற்
றாளுந் தடமுடியுங் காணாதார் தம்மையுந்தொண்
டாளும் பெருமா னடித்தொண்டர்க் காக்குவார் (ச)

நள்ளார் களும்போற்று நன்மைத் துறையின்கண்
எள்ளாத செய்கை யியல்பி னொழுகுநாட்
டள்ளாத தங்க டொழிலுரிமைத் தாயத்தின்
உள்ளா னதிசூர னென்பா னுளனானான் (ரு)

மற்றவனுங் கொற்ற வடிவாட் படைத்தொழில்கள்
கற்றவர்க டன்னிற் கடந்துள்ளா ரில்லையெனும்
பெற்றிமையான் மாநிலத்து மிக்க பெருமிதம்வந்
துற்றுலகிற் றன்னையே சால மதித்துள்ளான் (சு)

தானாள் விருத்திகெடத் தங்கள்குலத் தாயத்தின்
ஆனாத செய்தொழிலா மாசிரியத் தன்மைவளம்
மேனாளுந் தான்குறைந்து மற்றவர்க்கே மேம்படலால்
ஏனாதி நாதர்திறத் தேலா விகல்புரிந்தான் (எ)

கதிரோ னெழமழுங்கிக் கால்சாயுங் காலை
மதிபோ லழிந்துபொறா மற்றவனுஞ் சுற்றப்
பதியோ ருடன்கூடப் பண்ணியவர் மேற்சென்
றெதிர்போர் விளைப்பதற்கே யெண்ணித் துணிந்தெழுந்தான் (அ)

தோள்கொண்ட வல்லாண்மைச் சுற்றத் தொடுந்துணையாங்
கோள்கொண்ட போர்மள்ளர் கூட்டத் தொடுஞ்சென்று
வாள்கொண்ட தாயம் வலியாரே கொள்வதெனா
மூள்கின்ற செற்றத்தான் முன்கடையி னின்றழைத்தான் (கூ)

வெங்கட் புலிகிடந்த வெம்முழையிற் சென்றழைக்கும்
பைங்கட் குறுநரியே போல்வான் படைகொண்டு

(ச) காணாதார் தம்மையும் - பிரம விஷ்ணுக்களையும். (ரு) நள்ளார்களும் - பகைவர்களும். தாயத்தின் உள்ளான் - ஞாதிகள் மரபில் தோன்றினவனாகிய. (சு) கொற்ற - வெற்றியினையுடைய. கடந்துள்ளார் - மேம்பட்டவர்கள். பெருமிதம் வந்து உற்று - இறுமாப்படைந்து. (எ) தானாள் விருத்திகெட - தான்செய்யும் ஜீவனோபாயம் கெடும்படி. ஆனாத - குறையாத. ஏலா இகல் - நீதியில்லாப்பகை. (அ) கால் சாயும் - இருளடைகின்ற. (கூ) துணையாம் - (தனக்கு) உதவியாக வரும். கோள்கொண்ட - கொள்கையுடைய, வலிமையுடைய. போர்மள்ளர் - யுத்தவீரர்களின். வாள்கொண்ட தாயம் - வாள் வித்தையால் (நாம் அனுபவிக்கும்) உரிமையை. முன்கடையில் - தலைவாயிலில். (ய) முழையில் - குகையில்.

பொங்கிப் புறஞ்சூழ்ந்து போர்குறித்து நேர்நின்றே
யங்கட் கடைநின் றழைத்தா ரொலிகேளா (க0)

ஆர்கொல் பொரவழைத்தா ரென்றரியேற் றிற்கிளர்ந்து
சேர்வு பெறக்கச்சிற் செறிந்தவுடை மேல்வீக்கி
வார்கழலுங் கட்டி வடிவாட் பலகைகொடு
போர்முனையி லேனாதி நாதர் புறப்பட்டார் (கக)

புறப்பட்ட போதின்கட் போர்த்தொழில்கள் கற்கும்
விறற்பெருஞ்சீர்க் காளையர்கள் வேறிடத்தி னின்றார்
மறப்படைவாட் சுற்றத்தார் கேட்டோடி வந்து
செறற்கரும்போர் வீரர்க் கிருமருங்குஞ் சேர்ந்தார்கள் (கஉ)

வந்தழைத்த மாற்றான் வயப்புலிப்போத் தன்னார்முன்
னந்தமது வாட்பயிற்று நற்றாயங் கொள்ளுங்கால்
இந்தவெளி மேற்கை வகுத்திருவேம் பொருபடையுஞ்
சந்தித் தமர்விளைத்தாற் சாயாதார் கொள்வதெனை (கங)

என்றுபகைத் தோனுரைப்ப வேனாதி நாதரது
நன்றுனக்கு வேண்டுமே னண்ணுவனென் றுண்மகிழ்ந்து
சென்றவன்முன் சொன்ன செருக்களத்துப் போர்குறிப்பக்
கன்றி யிருபடையுங் கைவகுத்து நேர்மலைவார் (கச)

வேறு

மேக வொழுங்குகண் முன்கொடு மின்னிரை தம்மிடை யேகொடு
மாக மருங்கினு மண்ணினும் வலனுரு மேறெதிர் செல்வன
வாக நெடும்பல கைக்குல மாள்வினை வாளுடை யாடவர்
காக மிடைந்த களத்திரு கைகளின வந்து கலந்தனர். (கரு)

கால்கழல கட்டிய மள்ளர்கள் கைகளின் மெய்க ளடக்கிய
வாளொளி வட்ட முனைத்திட வந்திரு கைகளின் முந்தினர்

(கக) கொல் - ஐயம். பொர - யுத்தஞ்செய்ய. அரியேற்றின் கிளர்ந்து - ஆண்சிங்கத்தைப்போலக் கோபித்து எழுந்து. சேர்வுபெறக் கச்சில் செறிந்த உடைமேல் வீக்கி - உறுதியாகப் பொருந்தக் கச்சோடு சேர்ந்த உடையை மேலே கட்டி. (கங) சாயாதார் - தோல்வியடையாதவர்கள். (கச) கன்றி - கோபித்து. கைவகுத்து - அணிவகுத்து. நேர்மலைவார் - எதிர்த்துப் போர்செய்வாராயினார். (கரு) வலனுரும் ஏறு - வலிய இடியேறுகள். ஒழுங்குகள் - கூட்டங்களை. மின்னிரை - மின்னலின் வரிசைகளை. மாகமருங்கினும் - ஆகாயத்திலும். எதிர் செல்வனவாக - எதிரே போவதைப்போல. ஆடவர் செல்வனவாகக் கலந்தனர் என இயையும். படைகள் மேகக் கூட்டங்களாகவும், வாளாயுதங்கள் மின்னலாகவும், வீரர்களின் உரத்தசொற்கள் இடிகளாகவும் உவமிக்கப்பட்டன.

வேலொடு வேலெதிர் நீள்வன மேவிய பாதலம் விட்டுயர்
ஞாலமு றும்பணி வீரர்க ணாகிமிர் கின்றன வொத்தன. (கசு)

வெங்கண் விறற்சிலை வீரர்கள் வேறிரு கையினு நேர்பவர்
தங்கள் சிலைக்குல முந்தின தாவில் சரங்க ணெருங்குவ
பொங்கு சினத்தெரி யிற்புகை போகு கொடிக்கள் வளைத்தெதிர்
செங்கண் விழிக்கனல் சிந்திய சீறு பொறிச்செல வொத்தன. (கஎ)

வாளொடு நீள்கை துடித்தன மார்பொடு வேல்கள் குளித்தன
தோளொடு வாளி நிலத்தன தோலொடு தோல்க டகைந்தன
தாளொடு வார்கழ லிற்றன தாரொடு சூழ்சிர மற்றன
நாளொடு சீறி மலைப்பவர் நாடிய போர்செய் களத்தினில் (கஅ)

குருதியி னதிகள் பரந்தன குறையுட லொழுகி யலைந்தன
பொருபடை யறுதுணி சிந்தின புடைசொரி குடருடல் பம்பின
வெருவர வெருவை நெருங்கின விசியறு துடிகள் புரண்டன
இருபடை தனினு மெதிர்ந்தவ ரெதிரெதி ரமர்செய் பறந்தலை (கக)

நீளிடை முடுகி நடந்தெதிர் நேரிரு வரிலொரு வன்றொடர்
தாளிரு தொடையற முன்பெயர் சாரிகை முறைமை தடிந்தனன்
வாளொடு விழுமுடல் வென்றவன் மார்பிடை யறமு னெறிந்திட
ஆளியி னவனு மறிந்தன னயினர் பலருள ரங்கணும் (உ0)

(கசு) மெய்கள் அடக்கிய - உடம்புகளை மறைத்துள்ள வாள் ஒளி வட்டம் முனைத்திட - மிகுந்த ஒளியுடைய கேடகங்கள் சுழல. பணிவீரர்கள் - நாகராஜாக்கள். நாகிமிர்கின்றன ஒத்தன - நாக்களை எதிர்நீட்டுதலுக்கு ஒப்பாயிருந்தன. (கஎ) வேறு இருகையினும் நேர்பவர் தங்கள் - வெவ்வேறாய இருமருங்கும் எதிர்த்துப் போர்புரிகின்றவர்களுடைய. சிலைக்குலம் உந்தின - விற்கூட்டத்தினின்றும் புறப்பட்ட. தாவில் சரங்கள் நெருங்குவ - கெடுதலில்லாத அம்புகள் நெருங்குவன. பொங்கு சினத்து எரியில் - (அவர்கள்) உள்ளிருந்து எழும்கோபமாகிய நெருப்பினின்றும். புகைபோகு கொடிகள் வளைத்து - புகையாகச் செல்லும் இரேகைகளிருல் வளைக்கப்பட்டு. (எழும்பிய கொடிபோல நீண்டபுகைகள் சுற்றி.) எதிர் செங்கண் விழிக்கனல் சிந்திய - எதிரெதிராகச் சிவந்தகண்களினின்றும் உதித்த கோபாக்கினி சிந்திய. சீறுபொறி செலவொத்தன - கொடியபொறிகள் விழுவதை ஒத்திருந்தன. (கஅ) குளித்தன - பாய்ந்தன (முழுகின) தோளொடு வாளி நிலத்தன - (அறுந்த) தோள்களோடு அம்புகள் தரையில் விழுந்து கிடந்தன. தோலொடு - கேடகங்களோடு தகைந்தன - நெருங்கின. நாளொடு சீறி மலைப்பவர் - தம் வாழ்நாளோடு கோபித்து யுத்தஞ்செய்பவர்கள் (கக) பொருபடை அறுதுணி - யுத்தஞ்செய்கின்ற சேனைகள் (உடலில்) அற்றதுண்டுகள். பம்பின - நிறைந்து கிடந்தன. வெருவர எருவை - அச்சம் உண்டாக கழுகுகள். விசிஅறு துடிகள் - வார்அறுந்த உடுக்கைகள். பறந்தலை - போர்க்களத்தில். (உ0) நீள இடை - நெடுந்தூரம். முன்பெயர் - முன்னே செல்கின்ற.

கூர்முனை யயில்கொடு முட்டினர் கூடிமு னுருவிய தட்டுட
னேருர முருவ வுரப்புட னேர்பட வெதிரெதிர் குத்தினர்
ஆருயிர் கழியவு நிற்பவ ராண்மையி லிருவரு மொத்தமை
போரடு படைகொ டளப்பவர் போல்பவ ரளவிலர் பட்டனர் (உக)

பொற்சிலை வளைய வெதிர்ந்தவர் புற்றர வனைய சரம்பட
விற்படை துணியவு நின்றிலர் வெற்றிகொள் சுரிகை வழங்கினர்
முற்றிய பெருவள னின்றியு முற்படு கொடைநிலை நின்றிட
உற்றன வுதவிய பண்பின ரொத்தன ருளர்சில கண்டர்கள். (உஉ)

அடன்முனை மறவர் மடிந்தவ ரலாமுக முயிருள வென்றுறு
படர்சிறை சுலவு கருங்கொடி படர்வன சுழல்வன துன்றலில்
விடுசுடர் விழிக ளிரும்புசெய் வினைஞர்த முலையின் முகம்பொதி
புடைமிடை கரியிடை தங்கிய புகைவிடு தழலை நிகர்த்தன (உங)

திண்படை வயவர் பிணம்படு செங்கள மதனிடை முன்சிலர்
புண்படு வழிசொரி யுங்குடர் பொங்கிய கழுகு பருந்தொடு
கொண்டெழு பொழுதினு முன்செயல் குன்றுத லிலர்தலை நின்றனர்
விண்படர் கொடிவிடு பண்பயில் விஞ்சைய ரு குமரரை வென்றனர் (உச)

வேறு

இம்முனைய வெம்போரி லிருபடையின் வாளவீரர்
வெம்முனையின் வீடியபின் வீடாது மிககொழிந்த
தம்முடைய பல்படைஞர் பினனுகத் தாமுன்பு
தெம்முனையி லேனாதி நாதர் செயிர்த்தெழுந்தார் (உரு)

வெஞ்சினவாட் டயுமிழ வீரக கழல் கலிப்ப
நஞ்சணிகண் டர்க்கன்பா தாமெதிர்ந்த ஞாட்பின்கண்

---

(உக) அயில் - வேலாயுதம். தட்டுடன் - கேடகத்தோடு. நேர் உரம் உருவ உரப்புடன் - நேராக மார்பில் உருவும்படி உறுதியாக. குத்தினர் - குத்திக்கொண்டவர்களாய். அடு - கொல்லும். (உஉ) சுரிகை வழங்கினர் - உடைவாளை (பாணங்களுக்கு எதிராக) பிரயோகித்தார்கள். இன்றியும் - இல்லாமல் ஒழிந்தகாலத்தும். முற்படு - முன்னே செய்த. உற்றன உதவிய பண்பினர் - இயன்றபொருள்களை (இரப்பார்க்கு) கொடுக்கும் ஈகைக்குண முடையவர்களை. கண்டர்கள் - படைவீரர்கள். (உங) அடல்முனை - போர்முகத்தில். மறவர் - வீரர்கள். படர்சிறை சுலவுகருங்கொடி - படர்ந்த சிறகினையுடைத்தாய்ச் சூழ்கின்ற காகங்கள். படர்வன சுழல்வன துன்றலில் - இட்டுவனவாயும், சூழ்வனவாயும் நெருங்கியிருத்தலால். இரும்பு செய் வினைஞர்தம் - கொல்லர்களது உலையின் முகம் பொதி புடை மிடை கரி இடை - உலைமுகத்தில் போட்டுள்ள சூழ்ந்து நெருங்கிய கரியின் மத்தியில் தங்கிய. விழிகள் நிகர்த்தன என இயையும். (உச) முன்செயல் - முன்னிருந்த தைரியத்திலும், பிறவீரச் செயல்களிலும். கொடி - காற்றாடிப்பட்டம். (உரு) வீடியபின் - இறந்தபின்பு. செயிர்த்து - கோபித்து. (உசு) ஞாட்பின்கண் - போரினிடத்து. வேலுழவர் - வேல்வீரர்கள். உரமும் - மார்பையும்.

எஞ்சியெதிர் நின்ற விகன்முனையில் வேலுழவர்
தஞ்சிரமுந் தோளுரமுந் தாளும் விழத்துணித்தார் (உசு)

தலைப்பட்டா ரெல்லாருந் தனிவீரர் வாளிற்
கொலைப்பட்டார் முட்டாதார் கொல்களத்தை விட்டு
நிலைப்பட்ட மெய்யுணர்வு நேர்பட்ட போதில்
அலைப்பட்ட வார்வமுதற் குற்றம்போ லாயினார் (உஎ)

இந்நிலைய வெங்களத்தி லேற்றழிந்த மானத்தாற்
றன்னுடைய பல்படைஞர் மீண்டார் தமைக்கொண்டு
மின்னொளிவாள் வீசி விறல்வீரர் வெம்புலியே
றன்னவர்தம் முன்சென் றதிசூர னேரடர்ந்தான் (உஅ)

மற்றவர்தஞ் செய்கை வடிவா ளொளிகாணச்
சுற்றிவரும் வட்டணையிற் றோன்று வகைகலந்து
பற்றியடர்க் கும்பொழுதிற் றானும் படைபிழைத்துப்
பொற்றடந்தோள் வீரர்க் குடைந்து புறகிட்டான் (உகூ)

போன வதிசூரன் போரி லவர்க்கழிந்த
மானமிக மீதூர மண்படுவான் கண்படான்
ஆனசெய லோரிரவுஞ் சிந்தித் தலமருவான்
ஈனமிகு வஞ்சனையால் வெல்வனென வெண்ணினான் (ஙo)

சேட்டாருங் கங்குல் புலர்காலைத் தீயோனு
நாட்டாரைக் கொல்லாதே நாமிருவேம் வேறிடத்து
வாட்டாயங் கொள்போர் மலைக்க வருகவெனத்
தோட்டார்பூந் தாரார்க்குச் சொல்லிச் செலவிட்டான். (ஙக)

இவ்வாறு கேட்டலுமே யேனாதி நாதனார்
அவ்வாறு செய்த லழகி தெனவமைந்து
கைவா ளமர்விளைக்கத் தான்கருது மக்களத்தில்
வெவ்வா ளுரவோன் வருகவென மேற்கொள்வார் (ஙஉ)

சுற்றத்தார் யாரு மறியா வகைசுடர்வாள்
பொற்பலகை யுந்தாமே கொண்டு புறம்போந்து

(உஎ) முட்டாதார் - எதிர்க்காதவர்கள். மெய்யுணர்வு - உண்மைப்பொருளை யுணருமுணர்வு. ஆர்வமுதற் குற்றம் - காமம், வெகுளி, மயக்கம் என்பன. மெய்யுணர்ச்சி அடைந்தார் மாட்டுக் காமவெகுளி மயக்கங்கள் நில்லா தொழியுமாறுபோல, ஏனாதிநாதனார்க்கு முன்னே எதிர்த்து நில்லாதொழிந்தார் என்பார் "மெய்யுணர்வு ... ஆயினார்" என்றார். (ஙo) மண்படுவான் கண்படான் - தரையிற் படுத்துள்ளவன் தூங்காதவனாய். அலமருவான் - மனம்வருந்துகின்றவன். (ஙக) சேட்டாருங்கங்குல் - நீண்ட இராக்காலம். தோடு ஆர் பூம் தாரார்க்கு - இதழ்களுடைய பூமாலையை யணிந்த ஏனாதிநாதனார்க்கு. (ஙங) பொன்பலகையும் - அழகிய கேடகத்தையும்.

மற்றவன்முன் சொல்லி வரக்குறித்த வக்களத்தே
பற்றலனை முன்வரவு பார்த்துத் தனிநின்றார். (௩௩)

தீங்கு குறித்தழைத்த தீயோன் றிருநீறு
தாங்கிய நெற்றியினார் தங்களையே யெவ்விடத்தும்
ஆங்கவருந் தீங்கிழையா ரென்ப தறிந்தானாய்ப்
பாங்கிற் றிருநீறு பண்டு பயிலாதான். (௩௪)

வெண்ணீறு நெற்றி விரவப் புறம்பூசி
யுண்ணெஞ்சில் வஞ்சக் கறுப்பு முடன்கொண்டு
வண்ணச் சுடர்வாண் மணிப்பலகை கைக்கொண்டு
புண்ணியப்போர் வீரர்க்குச் சொன்னவி டம்புகுந்தான் (௩௫)

வென்றி மடங்கல் விடக்குவர முன்பார்த்து
நின்றாற்போ னின்றார் நிலைகண்டு தன்னெற்றி
சென்று கிடைப்பளவுந் திண்பலகை யான்மறைத்து
முன்றனிவீ ரர்கதிரே மூண்டான் மறம்பூண்டான் (௩௬)

அடல்விடையே றென்ன வடர்த்தவனைக் கொல்லு
மிடைதெரிந்து தாள்பெயர்க்கு மேனாதி நாதர்
புடைபெயர்ந்த மாற்றான் பலகைபுறம் போக்கக்
கடையவன்ற னெற்றியின்மேல் வெண்ணீறு தாஙகண்டார். (௩௭)

கண்டபொழு தேகெட்டேன் முன்பிவர்மேற் காணாத
வெண்டிருநீற் றின்பொலிவு மேற்கண்டேன் வேறினியென்
அண்டர்பிரான் சீரடியா ராயினா ரென்றுமனங்
கொண்டிவர்தங் கொள்கைக் குறிவழிநிற் பேனென்று (௩௮)

கைவா ளுடன்பலகை நீக்கக் கருதியது
செய்யார் நிராயுதரைக் கொன்றா ரெனுந்தீமை
யெய்தாமை வேண்டிமிவர்க்கென் றிரும்பலகை
நெய்வா ளுடனடர்த்து நேர்வார்போ னேர்நின்றார் (௩௯)

அந்நின்ற தொண்டர் திருவுள்ள மாரறிவார்
முன்னின்ற பாதகனுந் தன்கருத்தே முற்றுவித்தான்
இந்நின்ற தன்மை யறிவா ரிவர்க்கருள
மின்னின்ற செஞ்சடையார் தாமே வெளிநின்றார் (௪௰)

மற்றினிநாம் போற்றுவதென் வானோர் பிரானருளைப்
பற்றலர்தங் கைவாளாற் பாச மறுத்தருளி

---

(௩௬) மடங்கல - சிஙகஏறு. விடககு வர - மாமிசவுணவுக்குரிய மிருகம வருதலை. (விடககு - ஆகுபெயா.) கிடைபபளவும - கிட்டி எதிர்ககும வரைககும.

யுற்றவரை யென்று முடன்பிரியா வன்பருளிப்
பொற்றொடியாள் பாகனார் பொன்னம் பலமணைந்தார். (சக)

தம்பெருமான் சாத்துந் திருநீற்றுச் சார்புடைய
எம்பெருமா னேனாதி நாதர் கழலிறைஞ்சி
யும்பர்பிரான் காளத்தி யுத்தமர்க்குக் கண்ணப்பு
நம்பெருமான் செய்தபணி நாந்தெரிந்த வாறுரைப்பாம் (சஉ)

ஏனாதிநாதநாயனார்புராண முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - கூசக.



சோழநாட்டிலே, எயினனூரிலே, சான்றூர் குலத்திலே தோன்றினவரும், விபூதியினிடத்துப் பேரன்பு வாய்ந்தவரும், அரசர்களுக்கு வாள் வித்தை பயிற்றி, அதனால் கிடைத்த பொருள்களைச் சிவனடியார்களுக்குக் கொடுத்து வந்தவரும் ஆகிய ஏனாதிநாதநாயனார் என்பவர் ஒருவர் இருந்தார். அவர்காலத்திலே அதிசூரனென்னும் ஓர் வாள்வீரனும் வாள் வித்தை பயிற்றிச் சீவித்துவந்தான் அவன் நாளுக்குநாள் தனக்கு வருவாய் குறைதலையும், ஏனாதிநாதனார்க்கு வளர்தலையுங்கண்டு, அழுக்காறடைந்து, ஓர்நாள் தன் மாணாக்கர்களும், சுற்றத்தவர்களும், மற்றவர்களும் சூழச் சென்று, சான்றூர் குலத்தொண்டர்பெருமான் இல்லத்தின் தலைவாயிலில் நின்று அவரை யுத்தத்திற்கு அழைத்தான். அவன் அழைத்தலைக்கேட்ட அடியவர் யுத்தகோலந்தாங்கிப் புறப்பட, அவர்மாணவர்களும், ஊரவர்களும், பந்துக்களும் யுத்தாயுதங்களைத் தாங்கிக்கொண்டு அவரைச் சூழ்ந்துகொண்டார்கள். அதிசூரன் நாயனாரைப்பார்த்து "இந்தவெளியிலே நமது சேனைகளை அணிவகுத்து அமர்செய்வோம்; போர்முனையில் வெற்றியடைபவர் எவரோ அவரே வாள்வித்தை கற்பிக்கும் உரிமையுடையவர்" என்ன, உத்தம நாயனாரும் உடன்பட்டார் உடனே இருவர்சேனைவீரர்களும் கலந்து அவ்வெளியிலே போர்புரிந்தார்கள். இறுதியில் ஏனாதிநாதநாயனாருக்கு அதிசூரன்தோற்று, எஞ்சிய சேனைகளோடு புறமுதுகிட்டு ஓடிப்போனான்.

ஓடிய அதிசூரன் அன்றிரவுமுழுதும் தூக்கமின்றித் துக்கசாகரத்தில் தோய்ந்து, ஏனாதி நாதனாரை வஞ்சனை வழியிற் கொல்லக்கருதி, விடியற்காலத்திலே, "நமக்காக வூரவர்களை யழைத்துக்கொல்லாமல், நாமிருவரும் வேறோரிடத்தில் போர்செய்வோம் வாரும்" என்று நாயனார்க்குத் தெரிவிக்கும்படி ஒருவனை அனுப்பினான் அதற்கு நாயனார் உடன்பட்டு, வாளையும், கேடகத்தையும் எடுத்துக்கொண்டு ஒருவருக்குந்தெரியாமல், அதிசூரன் குறித்த களத்தில்போய், அவனை எதிர்நோக்கி நின்றார். என்றும் வெண்ணீறணியாத அதிசூரன், திருநீறுதரித்த சிவனடியார்களுக்கு ஏனாதிநாதனார் தீங்கு செய்யார் என்பதைத்தெளிந்து, நெற்றியிலே நீற்றையணிந்து, நெஞ்சில் வஞ்சனைகொண்டு, வாளையும், பரிசையையும் கையிலேதாங்கி, தான்குறித்த போர்க்களத்துக்குப்போய், அவனுலவும் அன்பிற்பெரியாரைப்பார்த்து, அவரை நெருங்கும் வரைக்கும் கேடகத்தாலே தன்னெற்றியை மறைத்துக்கொண்டு எதிர்த்து வந்தான். நீற்றைப்பொருளாகக் கொண்ட நின்மலர் அவனைக்கொல்ல அடிபெயர்த்தார். அதுகாலை அவன் தன்முகத்தை மறைத்துக் கொண்டிருந்த கேடகத்தைப் புறத்தில் எடுத்தான். நாயனார்

புண்ணிய நீறு அச்சூரன் முகத்தில் பிரகாசிப்பதைக்கண்டு "கெட்டேன்! இவர் நெற்றியிலே நீற்றினை இன்று கண்டேன். இவர் சிவபிரான் தொண்டராயினார் இவர் கருத்தின் வழியே யான்நிற்பேன்" என்று நினைத்து, வாளையும் கேடகத்தையும் விடக்கருதிப்பின்னர் "நிராயுதரைக்கொன்றார் எனுந்தீமை இவருக்கு எய்தாதிருக்க வேண்டும்" என்றெண்ணி, அவைகளை நீக்காது, எதிர்ப்பவரைப்போலக் காட்டி நிற்க; வஞ்சகனாய அதிசூரன் அவரை மாய்த்தான் உடனேவேற்கடவுள் தாதை ஏனாதிநாத நாயனார்க்குமுன் எழுந்தருளி, தம்மை என்றும் பிரியாப் பெருவாழ்வையளித்து மறைந்தருளினார்.

---

# கண்ணப்ப நாயனார் புராணம்.

மேவலர் புரங்கள் செற்ற விடையவர் வேத வாய்மைக்
காவலர் திருக்கா ளத்திக் கண்ணப்பர் திருநா டென்பர்
நாவலர் புகழ்ந்து போற்று நல்வளம் பெருகி நின்ற
பூவலர் வாவி சோலை சூழ்ந்தபொத் தப்பி நாடு (௧)

இத்திரு நாடு தன்னி லிவர்திருப் பதியா தென்னில்
நித்தில வருவிச் சார னீள்வரை சூழ்ந்த பக்கர்
மத்தவெங் களிற்றுக் கோட்டு வன்றொடர் வேலி கோலி
ஒத்தபே ராணஞ் சூழ்ந்த முதுபதி யுடுப்பூ ராகும் (௨)

குன்றவ ரதனில் வாழ்வார் கொடுஞ்செவி ஞமலி யார்த்த
வன்றிறல் விளவின் கோட்டு வார்வலை மருங்கு தூங்கப்
பன்றியும் புலியு மெண்குங் கடமையு மானின் பார்வை
அன்றியும் பாறை முன்றி லைவன முணங்கு மெங்கும் (௩)

(௧) மேவலர் - பகைவர்கள். திருக்காளத்திக் கண்ணப்பர் - திருக்காளத்தியில் சிவப்பேறுபெற்ற கண்ணப்ப நாயனாருடைய. "பொத்தப்பி நாடு" "கண்ணப்பர் திருநாடென்பர்" என இயையும். (௨) நித்திலம் அருவி சாரல் நீள்வரை சூழ்ந்த பக்கர் - முத்துக்களை வாரிக்கொண்டு வரும் சிறுாறுகள் பொருந்திய மலைப்பக்கங்களை யுடைய நீண்ட மலைகள் சூழ்ந்த இடங்களில் மத்த வெம் களிற்று கோட்டு - மதம்பொழியுங் கொடிய யானைக்கொம்புகளால். வன்தொடர் - மிகுந்த தொடர்ச்சியாய (பிணிப்பையுடைய.) பேராரணம் பெரிய வேலி (மதில்). (௩) குன்றவர்-குறவர்கள். ஞமலி ஆர்த்த - நாய்களைக்கட்டிய. விளவின் கோட்டு - விளாமரத்தின் கொம்புகளில். எண்கும் - கரடியும். கடமையும் - காட்டுப்பசுவும். மானின் பார்வை - விலங்கின் பார்வை யுடைய. அன்றியும் - (மிருகங்கள்) வாழ்தலன்றியும் முன்றில் - முற்றங்களில், தலைவாசல்களில். ஐவனம் - மலைநெல், உணங்கும் - உலர்ந்துகொண்டிருக்கும்,

வன்புலிக் குருளை யோடும் வயக்கரிக் கன்றி னோடும்
புன்றலைச் சிறும கார்கள் புரிந்துட னாட லன்றி
அன்புறு காதல் கூர வணையுமான் பிணைக ளோடும்
இன்புற மருவி யாடு மெயிற்றியர் மகளி ரெங்கும் (௪)

வெல்படைத் தறுகண் வெஞ்சொல் வேட்டுவர் கூட்டந் தோறுங்
கொல்லெறி குத்தென் றார்த்துக் குழுமிய வோசை யன்றிச்
சில்லரித் துடியுங் கொம்புஞ் சிறுகணா குளியுங் கூடிக்
கல்லெனு மொலியின் மேலுங் கறங்கிசை யருவி யெங்கும் (௫)

ஆறலைத் துண்ணும் வேட ரயற்புலங் கவர்ந்து கொண்ட
வேறுபல் லுருவின் மிக்கு விரவுமா னிரைக ளன்றி
ஏறுடை வானந் தன்னி லிடிக்குர லெழிலி யோடு
மாறுகொண் முழக்கங் காட்டு மதக்கைமா நிரைக ளெங்கும் (௬)

மைச்செறிந் தனைய மேனி வன்றொழின் மறவர் தம்பால்
அச்சமு மருளு மென்று மடைவிலா ருடைவன் றோலா
பொச்சையி னறவு மூனின் புழுக்கலு முணவு கொள்ளு
நச்சழற் பகழி வேடர்க் கதிபதி நாக னென்பான் (௭)

பெற்றியாற் றவமுன் செய்தா னாயினும் பிறப்பின் சார்பாற்
குற்றமே குணமா வாழ்வான் கொடுமையே தலைநின் றுள்ளான்
விற்றொழில் விறலின் மிக்கான் வெஞ்சின மடங்கல் போல்வான்
மற்றவன் குறிச்சி வாழ்க்கை மனைவியுந் தத்தை யென்பாள் (௮)

(௪) புலிக்குருளை - புலிக்குட்டி. வயக்கரி - வெற்றியுடையயானை. புன்றலைச் சிறுமகார்கள் - புல்லிய சிரங்களையுடைய (எண்ணெய் தேயாமல் உஷ்ணத்தாலுலர்ந்து சிவந்த மயிர்களையுடைய) வேடப்பிள்ளைகள். பிணைகளோடும் - பெண்மான்களோடும். எயிற்றியர்மகளிர் - வேடப்பெண்கள். வேடச்சிறுமிகள் தினைமுதலிய வுணவுகளை மான்களுக்குக் கொடுக்கும் வழக்கப்பற்றி அவர்களைக்கண்டு அவைகள் தாமே அணைதலால 'அணையும் பிணைகள்' என்றார். மான்களின் கண்களைப்போல வேடப்பெண்களின் கண்களும் தோற்றலால் அவைகள் தங்களினமெனக் கருதித் தாமே அணைந்தனவென விளக்குணருமுளர். (௫) அரி-பரல் (வெண்கல முதலியவற்றால் சிறிய மணிகள்போலச் செய்யப்பட்டுச் சிலம்பு முதலியவைகளில் உள்ளே போடுவது.) துடியும்-உடுக்கையும். கொம்பும்-ஊதுகொம்பு வாத்தியமும். சிறுகணாகுளியும் - சிறிய கண்களையுடைய சிறுபறையும். கறங்கு இசை - சுழலும் (ஒலிக்கும்) இசையுடைய. (௬) ஆறலைத்து உண்ணும் - வழிப்பறித்துச் சீவிக்கும். பலஉருவின் மிக்கு-பலநிறத்தோடு கூடி. ஏறு உடைவானம் தன்னில் - உயர்வாய ஆகாயத்தில். எழிலி - மேகம். மதக்கைமா நிரைகள் - மதம் பொழியும் துதிக்கையுடைய யானைக்கூட்டங்கள். (௭) பொச்சையின் நறவும்-மலைத்தேனையும். புழுக்கலும் - சோற்றையும். பகழி - அம்பு. (௮) மடங்கல்-ஆண்சிங்கம். குறிச்சி - சிற்றூர், குறிஞ்சி நிலத்தூர்.

அரும்பெறன் மறவர் தாயத் தான்றதொல் குடியில் வந்தாள்
இரும்புலி யெயிற்றுத் தாலி யிடையிடை மனவு கோத்துப்
பெரும்புற மலையப் பூண்டாள் பீலியுங் குழையுந் தட்டச்
சுரும்புறு படலை முச்சிச் சூரரிப் பிணவு போல்வாள். (௯)

பொருவருஞ் சிறப்பின் மிக்கா ரிவர்க்கினிப் புதல்வர்ப் பேறே
அரியதென் றெவருங் கூற வதற்படு காத லாலே
முருகல ரலங்கற் செவ்வேள் முருகவேண் முன்றிற் சென்று
பரவுதல் செய்து நாளும் பராய்க்கட னெறியி னிற்பார் (௧௦)

வாரணச் சேவ லோடும் வரிமயிற் குலங்கள் விட்டுத்
தோரண மணிகள் தூக்கிச் சுரும்பணி கதம்ப நாற்றிப்
போரணி நெடுவே லோற்குப் புகழ்புரி குரவை தூங்கப்
பேரணங் காடல் செய்து பெருவிழா வெடுத்த பின்றை. (௧௧)

பயில்வடுப் பொலிந்த யாக்கை வேடர்தம் பதியா நாகற்
கெயிலுடைப் புரங்கள் செற்ற வெந்தையார் மைந்த ரான
மயிலுடைக் கொற்ற வூர்தி வரையுரங் கிழித்த திண்மை
அயிலுடைத் தடக்கை வென்றி யண்ணலா ரருளி னாலே (௧௨)

கானவர் குலம்வி ளங்கத் தத்தைபாற் கருப்ப நீட
ஊனமில் பலிகள் போக்கி யுறுகடன் வெறியாட் டோடும்
ஆனவத் திங்கள் செல்ல வளவில்செய் தவத்தி னாலே
பான்மதி யுவரி யீன்றா லெனமகப் பயந்த போது (௧௩)

கரிப்பரு மருப்பின் முத்துங் கழைவிளை செழுநீர் முத்தும்
பொருப்பினின் மணியும் வேடர் பொழிதரு மழையே யன்றி
வரிச்சுரும் பலைய வானின் மலர்மழை பொழிந்த தெங்கும்
அரிக்குறுந் துடியே யன்றி யமரர்துந் துபியு மார்த்த. (௧௪)

அருவரைக் குறவர் தங்க ளகன்குடிச் சீறூ ராயம்
பெருவிழா வெடுத்து மிக்க பெருங்களி கூறுங் காலைக்

---

(௯) எயிற்றுத்தாலி - பல்லாற்செய்யப்பட்டதாலி. மனவு - சங்குமணிகள், பலகறைகள். புறம் - முதுகின்பக்கம் தட்ட-மோத, தாக்க. சுரும்பு உறுபடலைமுச்சி - வண்டுகள் மொய்க்கும் பூமாலையைத் தரித்த உச்சிக்கொண்டையுடைய. சூர் அரிப் பிணவுபோல்வாள் - அச்சத்தைக்கொடுக்கும் பெண் சிங்கத்தைப்போன்றவள். (௰) அதற்படும் காதலாலே - அப்புத்திரப் பேற்றை யடையும் ஆசையால். முருகு அலர் அலங்கல் - வாசனைவீசுங் கடப்பமாலையைத் தரித்த. முன்றில் - சந்நிதிமுன். பராய்க் கடன் நெறி - வழிபட்டு வரும் முறையில். (௧௧) குரவை - குரவைக்கூத்து. (௧௩) கானவர் - வேடர்கள். பான்மதி உவரியீன்றால் என - வெள்ளிய சந்திரனை உவர்நீரையுடைய சமுத்திரம் ஈன்றாற்போல. (௧௪) கழைவிளை-மூங்கிலில் உண்டாகும். பொருப்பினின் மணியும் - மலையில் உண்டாகும் முத்துக்களும்.

கருவரை காள மேக மேந்திய தென்னத் தாதை
பொருவரைத் தோள்க ளாரப் புதல்வனை யெடுத்துக் கொண்டான். (கரு)

கருங்கதிர் விரிக்கு மேனிக் காமரு குழவி தானும்
இரும்புலிப் பறழி னோங்கி யிறவுள ரளவே யன்றி
யரும்பெற லுலக மெல்லா மளப்பரும் பெருமை காட்டித்
தருங்குறி பலவுஞ் சாற்றுந் தன்மையிற் பொலிந்து தோன்ற. (கசு)

அண்ணலைக் கையி லேந்தற் கருமையா லுரிமைப் பேருந்
திண்ணனென் றியம்பு மென்னத் திண்சிலை வேட ரார்த்தார்
புண்ணியப் பொருளா யுள்ள பொருவில்சீ ருருவி னானைக்
கண்ணினுக் கணியாத் தங்கள் கலன்பல வணிந்தா ரன்றே (கஎ)

வரையுறை கடவுட் காப்பு மறக்குடி மரபிற் றங்கள்
புரையிறீ ரன் முறைமைக் கேற்பப் பொருந்துவ போற்றிச் செய்து
விரையிளந் தளிருஞ் சூட்டி வேம்பிழைத் திடையே கோத்த
அரைமணிக் கவடி கட்டி யழகுற வளர்க்கு நாளில். (கஅ)

வருமுறைப் பருவந் தோறும் வளமிகு சிறப்பிற் றெய்வப்
பெருமடை கொடுத்துத் தொக்க பெருவிறல் வேடர்க் கெல்லாந்
திருமலி துழனி பொங்கச் செழுங்களி மகிழ்ச்சி செய்தே
யருமையிற் புதல்வா பெற்ற வாரவமுந் தோன்ற வுய்த்தார் (கசு)

ஆண்டெதி ரணைந்து செல்ல விடுமடித் தளர்வு நீங்கிப்
பூண்டிகழ் சிறுபுன் குஞ்சிப் புலியுகிர்ச் சுட்டி சாத்தி
மூண்டெழு சினத்துச் செங்கண் முளவுமுள் ளரிந்து கோத்த
நாண்டரு மெயிற்றுத் தாலி நலங்கிளர் மார்பிற் றூங்க (உ0)

---

(கசு) இரும்புலி பறழின் ஓங்கி - பெருமை பொருந்திய புலிக்குட்டியைப்போல வளர்ந்து இறவுளர் அளவே அன்றி - வேடர்கள் மட்டுமே அல்லாமல். (கஅ) புரை இல் குற்றமில்லாத. வேம்பு இழைத்து இடையே கோத்த அரைமணி கவடி கட்டி - வேப்பங்கோலை (துண்டுதுண்டாகத் தரித்து) இழைத்து இடையிலே கோத்த அரைமணியுடன் பலகறையும் இடையிற்கட்டி. வேம்பிழைத்து என்பதற்கு வேப்பங் கொட்டைகளை இழைத்து எனினும் பொருந்தும். (கசு) மடைகொடுத்தலாவது - வனதெய்வங்களுக்குக் காய் கிழங்கு முதலியவைகளைச் சமைத்து நிவேதித்தல். திருமலி துழனி பொங்க - மங்கலகரமான (வாத்திய) ஒலிகள் அதிகரிக்க. (உ0) ஆண்டு எதிர் அணைந்து செல்ல - ஒருவருஷ காலம் ஆக. குஞ்சி - குடுமியில். புலியுகிர் - புலி நகத்தால் செய்யப்பட்ட. முளவுமுள் - முள்ளம் பன்றியின் முள்களை. நாண்தரும எயிறுதாலி - கயிற்றில் தொங்கும் புலிப்பல் தாலி. (தாலி என்றது முட்பன்றியின் முட்களையரிந்து புலிப்பல்லோடு கோத்த சரமாலையை)

பாசொளி மணியோ டார்த்த பன்மணிச் சதங்கை யெங்கக்
காசொடு தொடுத்த காப்புக் கலன்புனை யரைஞாண் சேர்த்தித்
தேசுடை மருப்பிற் றண்டை செறிமணிக் குதம்பை மின்ன
மாசறு கோலங் காட்டி மறுகிடை யாடு நாளில் (உக)

தண்மல ரலங்கற் றாதை தாய்மனங் களிப்ப வந்து
புண்ணியக் கங்கை நீரிற் புனிதமாந் திருவாய் நீரில்
உண்ணனைந் தமுத மூறி யொழுகிய மழலைத் தீஞ்சொல்
வண்ணமென் பவளச் செவ்வாய் குதட்டியே வளரா நின்றார். (உஉ)

பொருபுலிப் பார்வைப் பேழ்வாய் முழையெனப் பொற்கை நீட்டப்
பரிவுடைத் தந்தை கண்டு பைந்தழை கைக்கொண் டோச்ச
இருசுடர்க் குறுகண் டீர்க்கு மெழில்வளர் கண்ணீர் மல்கி
வருதுளி முத்த மத்தாய் வாய்முத்தங் கொள்ள மாற்றி. (உ௩)

துடிக்குற ளுருட்டி யோடித் தொடக்குநாய்ப் பாசஞ் சுற்றிப்
பிடித்தறுத் தெயினப் பிள்ளைப் பேதைய ரிழைத்த வண்டல்
அடிச்சிறு தளிராற் சிந்தி யருகுறு சிறுவ ரோடுங்
குடிச்சிறு குரம்பை யெங்குங் குறுநடைக் குறும்பு செய்து (உச)

அனையன பலவுஞ் செய்தே யைந்தின்மே லான வாண்டின்
வினைதரு வடிவார் கண்ணி மறச்சிறு மைந்த ரோடுஞ்
சினைமலர்க் காவு ளாடிச் செறிகுடிக் குறிச்சி சூழ்ந்த
புனமருப் புழலை வேலிப் புறச்சிறு கானிற் போகி (உ௫)

கடுமுயற் பறழி னோடுங் கானவே னத்தின் குட்டி
கொடுவரிக் குருளை செந்நாய்க் கொடுஞ்செவிச் சரப மான
முடுகிய விசையி லோடித் தொடர்ந்துமுன் பற்றி முற்றத்
திடுமரத் திரளிற் கட்டி வளர்ப்பன வெண்ணி லாத (உ௬)

---

(உக) பாசு - பசுமை; காசொடு - மணியுடன். மருப்பின் தண்டை - யானைக் கொம்பாலாய தண்டையும். குதம்பை - காதில் தொங்கும் அணியும் ஓர் ஆபரணம். (உ௩) பேழ்வாய் - ஆழ்ந்தவாய். முழையென - குகையென்று. இருசுடர்க்கு உறுகண் தீர்க்கும் - சிவபெருமானுடைய சோம சூரியர்களாய இரண்டு கண்களுக்கும் நேர்ந்த துன்பத்தைப் பின்னே ஒழிப்பதற்குக் காரணமான. (உச) துடிக்குறடு - உடுக்கை வடிவாய்ச்செய்த மரக்கட்டையை. தொடக்கு நாய் பாசம் - கட்டியுள்ள வேட்டை நாய்களின் கயிறுகளை. எயினப்பிள்ளை பேதையர் - வேடச் சிறுமிகள். இழைத்த வண்டல் - (விளையாட்டாக) கட்டிய சிறுவீடுகளை. குரம்பை - குடிசைகளை. (உ௫) மறச்சிறு மைந்தரோடும் - வேடச்சிறுவர்களுடன். சினை - கிளை. காவுள் - சோலைக்குள். உழலைவேலி - (வழியிலே நாட்டப்பட்டுப் போகின்றவர்களுக்கு இடங்கொடுத்துப் பின் உழன்று தன்னிலையில் நிற்கும்) உழலைமரம் பொருந்திய வேலி. (உ௬) கடு முயல் பறழினோடும் - அதிவேகத்தையுடைய முயற்குட்டிகளோடும். கான ஏனத்தின் - காட்டுப் பன்றியின். கொடுவரி குருளை - வேங்கையின் குட்டிகளையும். சரபமான - சரபத்தைப்போல.

அலர்பகல் கழிந்த வந்தி யையவிப் புகையு மாட்டிக்
குலமுது குறத்தி யூட்டிக் கொண்டுகண் டுயிற்றிக் கங்குல்
புலரவூ னுணவு நல்கிப் புரிவிளை யாட்டின் விட்டுச்
சிலமுறை யாண்டு செல்லச் சிலைபயில் பருவஞ் சேர்ந்தார். (உஎ)

தந்தையு மைந்த னாரை நோக்கித்தன் றடித்த தோளாற்
சிந்தையுண் மகிழப் புலலிச் சிலைத்தொழில் பயிற்ற வேண்டி
முந்தையத் துறையின் மிக்க முதியரை யழைத்துக் கூட்டி
வந்தநாட் குறித்த தெல்லா மறவர்க்குச் சொல்லி விட்டான். (உஅ)

வேடர்தங் கோமா னாகன் வென்றிவே ளருளாற் பெற்ற
சேடரின் மிக்க செய்கைத் திண்ணன்விற் பிடிக்கின் றானென்
றாடியற் றுடியுஞ் சாற்றி யறைந்தபே ரோசை கேட்டு
மாடுயர் மலைக ளாளு மறக்குலத் தலைவ ரெல்லாம் (உகூ)

மலைபடு மணியும் பொன்னுந் தரளமும் வரியின் றோலுங்
கொலைபுரி களிற்றின் கோடும் பீலியின் குவையுந் தேனுந்
தொலைவில்பன் னறவு மூனும் பலங்களுங் கிழங்குந் துன்றச்
சிலையுடை வேடர் கொண்டு திசைதொறு நெருங்க வந்தார் (ஙo)

மல்கிய வளங்க ளெல்லா நிறைந்திட மாறில் சீறூர்
எல்லையி லடங்கா வண்ண மீண்டினார் கொணர்ந்தா ரெங்கும்
பல்பெருங் கிளைஞர் போற்றப் பராயக்கடன் பலவு நேர்ந்து
வில்விழா வெடுக்க வென்று விளம்பினன் வேடர் கோமான். (ஙக)

பான்மையிற் சமைத்துக் கொண்டு படைக்கலம் வினைஞ ரேந்தத்
தேனலர் கொன்றை யார்தந் திருச்சிலைச் செம்பொன் மேரு
வானது கடலி னஞ்ச மாக்கிட வவர்க்கே பின்னுங்
கானவூ னமுத மாக்குஞ் சிலையினைக் காப்புச் சேர்த்தார் (ஙஉ)

---

(உஎ) ஐயவி புகையும் ஆட்டி - கடுகின் புகையினால் திருஷ்டி சுற்றி (கழித்து.) (உகூ) சேடரில் - அறிவுடையோரில். ஆடு இயல் துடியும் - அசையுந்தன்மையுடைய உடுக்கை வாத்தியத்தையும். ஆடு என்பதற்கு வெற்றி எனினும் அமையும். மாடு - பக்கத்தில், அருகில். (ஙo) வரியின் - புலியின். நறவும் - கள்ளும். துன்ற - நெருங்க, ஒன்றுக. சிலை உடை - வில்லை உடைய. (ஙக) பராயக்கடன் பலவும் - வனதெய்வங்களை வழிபட்டுப் பலி முதலிய பலகடன்களையும். (ஙஉ) பான்மையில் சமைத்துக்கொண்டு - முறைப்படியே (வில்விழாவிற்கு வேண்டிய பொருள்களை எல்லாம்) ஏற்படுத்திக்கொண்டு. வினைஞர் - வீரர்கள். கடலில் நஞ்சம் ஆக்கிட - பாற்கடலில் தோன்றிய விஷத்தை (இறைவற்கு) அமுதாகக்கொடுத்த காரணத்தால். (அதற்கீடு நீங்கும்படி) அவர்க்கே பின்னும் கான ஊன் அமுதம் ஆக்கும் சிலையினை காப்பு சேர்த்தார் - அவ்விறைவர்க்கே பின்னும் காட்டிலுள்ள மாமிசத்தை அமுதாகச் செய்விக்க (வந்தது போலுமுள்ள) ஓர் வில்லிற்குக் காப்புக் கட்டினார்கள்.

சிலையினைக் காப்புக் கட்டுந் திண்புலி நரம்பிற் செய்த
நலமிகு காப்பு நன்னா ளுகனூர் பயந்த நாகக்
குலம்விளங் கரிய குன்றின் கோலமுன் கையிற் சேர்த்தி
மலையுறை மாக்க ளெல்லாம் வாழ்த்தெடுத் தியம்பி னார்கள். (௩௩)

ஐவன வடிசில் வெவ்வே றமைத்தன புற்பாற் சொன்றி
மொய்வரைத் தினைமென் சோறு மூங்கில்வன் பதங்கண் மற்றுங்
கைவினை யெயின ராக்கிக் கலந்தவூன் கிழங்கு துன்றச்
செய்வரை யுயர்ப்ப வெங்குங் கலந்தனர் சினவில் வேடர். (௩௪)

செந்தினை யிடியுந் தேனு மருந்துவார் தேனிற் றோய்த்து
வெந்தவூ னயில்வார் வேரி விளங்கனிக் கவளங் கொள்வார்
நந்திய வீய லுண்டி நசையொடு மிசைவார் வெவ்வே
றந்தமி லுணவின் மேலோ ராயினா ரளவி லார்கள். (௩௫)

அயல்வரைப் புலத்தின் வந்தா ரருங்குடி யிருப்பி னுள்ளார்
இயல்வகை யுணவி லார்ந்த வெயிற்றிய ரெயின ரெல்லாம்
உயர்கதி ருச்சி நீங்க வொழிவில்பன் னறவு மாந்தி
மயலுறு களிப்பி னீடி வரிசிலை விழவு கொள்வார். (௩௬)

பாசிலைப் படலை சுற்றிப் பன்மலர்த் தொடையல் சூடிக்
காசுடை வடத்தோல் கட்டிக் கவடிமெய்க் கலன்கள் பூண்டார்
மாசில்சீர் வெட்சி முன்னா வருநறைக் கண்ணி சூடி
ஆசிலா சிரிய னேந்து மடற்சிலை மருங்கு சூழ்ந்தார் (௩௭)

தொண்டக முரசுங் கொம்புந் துடிகளுந் துளைகொள் வேயும்
எண்டிசை நிறைந்து விம்ம வெழுந்தபே ரொலியி னோடுந்
திண்டிறன் மறவ ரார்ப்புச் சேண்விசும் பிடித்துச் செல்லக்
கொண்டசீர் விழவு பொங்கக் குறிச்சியை வலங்கொண் டார்கள். (௩௮)

(௩௩) நாகக்குலம் - தேவகுலம். குன்றின் கோலமுன் கையிற் சேர்த்தி - குன்றுரிய திண்ணனாருடைய அழகிய முன்கையிற் கட்டி. (௩௪) ஐவன அடிசில் - மலைநெற்சோறு. பால் புல் சொன்றி - பாலிற் சமைத்த புற்சோறு. மூங்கில் வன் பதங்கள் - மூங்கில் அரிசியின் வலியசோறு. செய்வரை உயர்ப்ப - செய்குன்று போலக் குவிக்க. (௩௫) இடியும் - மாவும். வேரிவிளங்கனி - தேனோடு கலந்த விளாம்பழத்தின். நந்திய ஈயல் - மிகுந்த ஈயலென்னும் செல்லினம். (௩௬) எயிற்றியர் - வேடச்சிகள். எயினர் - வேடர்கள். (௩௭) பாசு இலை படலை - பச்சிலைகளாற் கட்டப்பட்ட மாலைகளை. தொடையல் - மாலைகளை. காசு - இரத்தினங்கள். வடத்தோல் - தோல் வடத்தை. கவடி - பலகறைகளாலாகிய. வெட்சி முன்னா - வெட்சி மலர் முதலாக. (௩௮) தொண்டகம் - குறிஞ்சிப்பறையும். துளைகொள் வேயும் - துளையுடைய புல்லாங் குழலும்.

குன்றவர் வரிகொண் டாடக் கொடிச்சியர் துணங்கை யாடத்
துன்றிய மகிழ்ச்சி யோடுஞ் சூரர மகளி ராட
வென்றிவில் விழவி னோடு விருப்புடை யேழா நாளாம்
அன்றிரு மடங்கு செய்கை யழகுற வமைத்த பின்னர் (௩௯)

வெங்கதிர் விசும்பி னுச்சி மேவிய பொழுதி லெங்கு
மங்கல வாழ்த்து மல்க மருங்குபல் லியங்க ளார்ப்பத்
தங்குடொன் மரபின் விஞ்சைத் தனுத்தொழில் வலவர் தம்பாற்
பொங்கொளிக் கரும்போ ரேற்றைப் பொருசிலை பிடிப்பித் தார்கள். (௪௦)

பொற்றட வரையின் பாங்கர்ப் புரிவுறு கடன்முன் செய்த
விற்றொழிற் களத்தி னண்ணி விதிமுறை வணங்கி மேவும்
அற்றைநாட் டொடங்கி நாளு மடற்சிலை யாண்மை முற்றக்
கற்றனர் என்னை யாளுங் கானவர்க் கரிய சிங்கம் (௪க)

வண்ணவெஞ் சிலையு மற்றப் படைகளு மலரக் கற்றுக்
கண்ணகன் சாயல் பொங்கக் கலைவளர் திங்க ளேபோல்
எண்ணிரண் டாண்டின் செவ்வி யெய்தின ரெல்லை யில்லாப்
புண்ணியந் தோன்றி மேன்மேல் வளர்வதன் பொலிவு போல்வார். (௪௨)

வேறு

இவ்வண்ணந் திண்ணனா ரிரம்பு நாளி லிருங்குறவர் பெருங்குறிச்சிக் கிறைவ னாய, மைவண்ண வரைநெடுந்தோ ணாகன் றானு மலையெங்கும் வனமெங்கும் வரம்பில் காலங், கைவண்ணச் சிலைவேட்டை யாடித் தெவ்வர் கணநிரைகள் பலகவர்ந்து கானங் காத்து, மெய்வண்ணந் தளர்மூப்பின் பருவ மெய்தி வில்லுழவின் பெருமுயற்சி மெலிவா னானான். (௪௩)

அங்கண்மலைத் தடஞ்சாரற் புனங்க ளெங்கு மடலேனம் புலிகரடி கடமை யாமா, வெங்கண்மரை கலையொடுமான் முதலா யுள்ள மிருகங்கண் மிக நெருங்கி மீதூர் காலைத், திங்கண்முறை வேட்டைவினை தாழ்த்த தென்று சிலைவேடர் தாமெல்லாந் திரண்டு சென்று, தங்கள்குல முதற்றலைவ னாகி யுள்ள தண்டெரிய னாகன்பாற் சார்ந்து சொன்னார். (௪௪)

(௩௯) வரிகொண்டாட - குறிஞ்சிப் பண்ணைப்பாடியாட. கொடிச்சியர் - வேடமாதர்கள். துணங்கை - இருகை முடக்கிப் பழுப்புடை யொத்தியாடல். (இதனை:—"பழுப்புடை யிருகை முடக்கி யடிக்கத் தொடக்கிய நடையது துணங்கையாகும்" எனனும் சூத்திரத்தானுணர்க.) சூர அரமகளிர் ஆட - அச்சத்தைப் பார்த்தது மலையில் (வனத்தில்) உள்ள தெய்வப்பெண்கள் ஆட. (௪௦) பல்லியங்கள் - பலவாத்தியங்கள். (௪௩) இரம்பு நாளில் - பதினாறுவயதும் நிரம்பிய நாளில். வரம்பு இல்காலம் - நெடுங்காலம். கைவண்ணச் சிலை - கையிற்பிடித்த அழகிய விலலினால். தெவ்வர் - பகைவர்கள். கணநிரைகள் - பல பசுக்கூட்டங்களை. (௪௪) திங்கள் முறை - மாதந்தோறும் முறையாகச் செய்துவரும். தண்தெரியல் - குளிர்ந்த மாலையைத் தரித்த.

சொன்னவுரை கேட்டலுமே நாகன் றானுஞ் சூழ்ந்துவருந் தன்மூப்பின் றொடர்வு நோக்கி, முன்னவர்கட் குரைசெய்வான் மூப்பி னாலே முன்பு போல் வேட்டையினின் முயல கில்லேன், என்மகனை யுங்களுக்கு நாத னாக வெல்லீருங் கைக்கொண்மி னென்ற போதின், அன்னவரு மிரங்கிப்பின் மகிழ்ந்து தங்கோ னடிவணங்கி யிம்மாற்ற மறைகின் றார்கள் (௪௫)

இத்தனைகா லமுநினது சிலைக்கீழ்த் தங்கி யினிதுண்டு தீங்கின்றி யிருந்தோ மின்னும், அத்தவுன தருள்வழியே நிற்ப தல்லா லடுத்தநெறி வேறுளதோ வதுவே யன்றி, மெய்த்தவிறற் றிண்ணனையுன் மரபிற் சால மேம்படவே பெற்றளித்தாய் விளங்கு மேன்மை, வைத்தசிலை மைந்தனையீண் டழைத்து நுங்கள் வரையாட்சி யருளென்றா மகிழ்ந்து வேடர் (௪௬)

சிலைமறவ ருரைசெய்ய நாகன் றானுந் திண்ணனைமுன் கொண்டுவரச் செப்பி விட்டு, மலைமருவு நெடுங்கானிற் கன்னி வேட்டை மகன்போகக் காடுபலி மகிழ வூட்டத், தலைமரபின் வழிவந்த தேவ ராட்டி தனையழைமி னெனவங்குச் சார்ந்தோர் சென்று, நிலைமையவ டனக்குரைப்ப நரைமூ தாட்டி நெடிதுவந்து விருப்பினொடுங் கடிது வந்தாள். (௪௭)

கானில்வரித் தளிர்துதைந்த கண்ணி சூடிக் கலைமருப்பி னரிந்தகுழை காதிற் பெய்து, மானின்வயிற் றரிதாரத் திலக மிட்டு மயிற்கழுத்து மனவுமணி வடமும் பூண்டு, தானிழிந்து திரங்கிமுலை சரிந்து தாழத் தழைப்பீலி மரவுரிமேற் சார வெய்திப், பூநெருங்கு தோரைமலி சேடை நல்கிப் போர் வேடர் கோமானைப் போற்றி நின்றாள். (௪௮)

நின்றமுது குறக்கோலப் படிமத் தாளை நோநோக்கி யன்னைநீ நிரப்பு நீங்கி, நன்றினிதி னிருந்தனையோ வென்று கூறு நாகனெதிர் நலம்பெருக வாழ்த்தி நல்ல, மென்றசையு மீயலொடு நறவும் வெற்பில் விளைவளனும் பிறவளனும் வேண்டிற் றெல்லா, மன்றநீ வைத்தபடி பெற்று வாழ்வே னழைத்தபணி யென்னென்றா ளணங்கு சார்ந்தாள் (௪௯)

(௪௫) தொடர்வு - சம்பந்தத்தை. (௪௭) கன்னி வேட்டை - வேடர்கள் நல்ல நாள் குறித்துச் செய்யும் முதல்வேட்டை. காடுபலி - வனத்துள்ள தெய்வங்களுக்குப் பலியை. (௪௮) கானில் வரி தளிர் துதைந்த கண்ணி சூடி-காட்டிலுள்ள வரியுடைய தளிர்கள் நெருங்கிய மாலையைத் தரித்துக்கொண்டு. கலை மருப்பின் அரிந்த குழை காதிற் பெய்து-கலைமான் கொம்பை அரிந்துசெய்த குண்டலத்தைச் செவியில் அணிந்து. அரிதாரத் திலகம் - கஸ்தூரிப் பொட்டு. அரிதாரம் பலவகைப்படலின் ஈண்டு வாசனைவீசும் அரிதாரம் என்பார் "மானின் வயிற்றரி தாரம்" என்றார். மயிற் கழுத்து மனவுமணி-மயிற் கழுத்துக்களைத் துண்டு துண்டாக நறுக்கி இடையிடையே கோக்கப்பட்ட சங்குமணி. தான் இழிந்து திரங்கி - (நிலையினின்றும்) இறங்கிச் சுருங்கி. தழை - சந்தனத்தழை. தோரை - மலைநெல். சேடை (சேஷை) - அட்சதையாக இடும் மலை நெல்லரிசி. (௪௯) படிமத்தாளை - தேவராட்டியை, சன்னதக்காரியை. (சன்னதம் - ஆவேசம், தெய்வங்கூறல்.) நிரப்பு நீங்கி - தரித்திரம் இன்றி.

கோட்டமிலென் குலமைந்தன் றிண்ண னெங்கள் குலத்தலைமை யான் கொடுப்பக் கொண்டு பூண்டு, பூட்டுறுவெஞ் சிலைவேடர் தம்மைக் காக்கும் பொருப்புரிமை புகுகின்ற னவனுக் கென்றும், வேட்டைவினை யெனக்கு மேலாக வாய்த்து வேறுபுலங் கவர்வென்றி மேவு மாறு, காட்டிலுறைதெய் வங்கள் விரும்பி யுண்ணக் காடுபலி யூட்டென்றான் கவலை யில்லான் (௫௰)

மற்றவன்றன் மொழிகேட்ட வரைச்சூராட்டி மனமகிழ்ந்திங் கன்போடு வருகின் றேனுக், கெற்றையினுங் குறிகண்மிக நல்ல வான விதனாலே யுன் மைந்தன் றிண்ண னான, வெற்றிவரிச் சிலையோனின் னளவி லன்றி மேம் படுகின் றானென்று விரும்பி வாழ்த்திக், கொற்றவனத் தெய்வங்கண் மகிழ வூட்ட வேண்டுவன குறைவின்றிக் கொண்டு போனாள் (௫௧)

தெய்வநிகழ் குறமுதியாள் சென்ற பின்பு திண்ணனார் சிலைத்தாதை யழைப்பச் சீர்கொண், மைவிரவு நறுங்குஞ்சி வாசக் கண்ணி மணிநீல மலை யொன்று வந்த தென்னக், கைவிரவு சிலைவேடர் போற்ற வந்து காதல்புரி தாதைகழல வணங்கும் போதிற், செய்வரைபோற் புயமிரண்டுஞ் செறியப் புல்லிச் செழுமபுலித்தோ லிருக்கையின்முன் சேர வைத்தான (௫௨)

முன்னிருந்த மைந்தன்முக நோக்கி நாகன் மூப்பெனைவந் தடைதலி னான் முன்பு போல, என்னுடைய முயற்சியினால் வேட்டை யாட வினியெ னக்குக் கருத்தில்லை யெனக்கு மேலாய், மன்னுசிலை மலையர்குலக் காவல் பூண்டு மாறெறிந்து மாவேட்டை யாடி யென்று, முன்னுடைய மரபுரிமை தாங்கு வாயென் றுடைதோலுஞ் சுரிகையுங்கைக் கொடுத்தா னன்றே.(௫௩)

தந்தைநிலை யுட்கொண்டு தளர்வு கொண்டு தங்கள்குலத் தலைமைக் குச் சாயவு தோன்ற, வந்தகுறை பாடதனை நிரப்பு மாறு மனங்கொண்ட குறிப்பினான் மறுமை கொண்டு, முந்தையவன் கழல்வணங்கி முறைமைதந்த முதற்சுரிகை யுடைதோலும வாங்கிக் கொண்டு, சிந்தைபரங் கொளநின்ற திண்ண னார்க்குத் திருத்தாதை முகமலர்ந்து செப்பு கின்றான். (௫௪)

---

(௫௰) கோட்டம் இல - குற்றம் இல்லாத. கொடுப்ப - (என் அரசை) யான் கொடுக்க. வேறுபுலம் கவர - பகை யரசாகள் சிறநாரைக் கொள்ளையிடக் காரணமான. (௫௧) வரைச்சூராட்டி - மலையில் வாழும் தேவராட்டி. எற்றையினும் குறிகள் மிகநல்ல ஆன - எந்நாட்களினும் உண்டாகாத குறிகள் இன்று அதிக நலமுடையனவா யிருந் தன (௫௨) தெய்வம் நிகழ - தெய்வம் ஆவேசித்தற்கிடமாயுள்ள புல்லி - தழுவி. இருக்கையில் முன் சேரவைத்தான் - ஆசனத்தில் தனக்கு முன்னே இருக்கும்படி செய்தான். (௫௩) மாறு எறிந்து - பகைவரை வென்று. (௫௪) தளர்வு கொண்டு - (தந்தையின் முதுமையைக் குறித்து) வருத்த மடைந்து. மறுமை கொண்டு - (தந்தை வார்த்தையை) மறுக்காது ஒப்பிக்கொண்டு. சிந்தை பரம் கொளநின்ற - மனதில் (அரசுரிமை என்னும்) பாரங்கொள்ளும்படி நின்ற.

நம்முடைய குலமறவர் சுற்றத் தாரை நான்கொண்டு பரித்ததன்மே லலமே செய்து, தெம்முனையி லயற்புலங்கள் கவர்ந்து கொண்ட திண்சிலை யின் வளமொழியாச் சிறப்பின் வாழ்வாய், வெம்முனையின் வேட்டைகளு முனக்கு வாய்க்கும் விரைந்துநீ தாழாதே வேட்டை யாட, இம்முரண்வெஞ் சிலைவேடர் தங்க ளோடு மெழுகவென விடைகொடுத்தா னியல்பினின்றான்.

செங்கண்வயக் கோளரியே றன்ன திண்மைத் திண்ணனார் செய்தவத் தின் பெருமை பெற்ற, வெங்கண்விறற் றாதைகழல் வணங்கி நின்று விடை கொண்டு புறம்போந்து வேட ரோடு, மங்கலநீர்ச் சுனைபடிந்து மனையின் வைகி வைகிருளின் புலர்காலை வரிவிற் சாலைப், பொஙகுசிலை யடல்வேட் டைக் கோலங் கொள்ளப் புனைதொழிற்கை வினைஞருடன் பொலிந்து புக் கார். (ருசு)

வேறு.

நெறிகொண்ட குஞ்சிச் சுருடுஞ்சி நிமிர்ந்து பொங்க
முறிகொண்ட கண்ணிக் கிடைமொய்யொளிப் பீலி சேர்த்தி
வெறிகொண்ட முல்லைப் பிணைமீது குறிஞ்சி வெட்சி
செறிகொண்ட வண்டின் குலஞ்சேர்கொளப் பின்பு செய்து (ருஎ)

முன்னெற்றியின் மீது முருந்திடை வைத்த குன்றி
தன்னிற்புரி கொண்ட மயிர்க்கயி றாரச் சாத்தி
மின்னிற்றிகழ் சங்கு விளங்குவெண் டோடு காதின்
மன்னிப்புடை நின்றன மாமதி போல வைக (ருஅ)

கண்டத்திடை வெண்கவ டிக்கதிர் மாலை சேரக்
கொண்டக்கொடு பன்மணி கோத்திடை யேனக் கோடு
துண்டப்பிறை போல்வன தூங்கிட வேங்கை வன்றோற்
றண்டைச்செயல் பொங்கிய சன்னவீ ரந்த யங்க (ருகூ)

---

(ருரு) பரித்ததனமேல - காததனைப பாசகிலும அதிகமாக. தெமமுனையில - இரணகளததில வெமமுனையில - கொடிய வேடடைத தொழிலில (ருசு) வைகு இருளின புலா காலை - தஙகிய இருளுடைய விடியறகாலை (அரையிருள தஙகிய விடி யறகாலம-வேட்டைககுரிய காலம.) (ருஎ) துஞ்சி நெறிகொண்ட குஞசி சுருள் நிமி ர்ந்து பொஙக - வணஙகி நெறிபபுறற (சிலிாதத) தலைமயிரின சுருள்சள (உச்சியில முடிககபபடடு) நிமிாந்துபொலிய. முறிகொண்ட கணணிககு இடை - (அதன மேல்) தளிரால கடடபபடட கொணடை மாலைககு மததியில. மொய ஒளி - மிகுநத பிரகாசததையுடைய. வெறிகொண்ட - வாசனை வீசும. பிணை-பூமாலை. (௲கூ-ம பககம பார்க்க.) செறிகொண்ட - நெருஙகிய. (ருஅ) முருந்து இடை வைதத - மயிலிறகின அடிமுள்ளோடு இடையிடையே வைதத குனறி தனனில - குனறி மணியால். ஆர - பொருந்துமபடி. புடை - இரண்டு பககங்களினும். (ருகூ) கவடி - பலகறை. அக்கொடு - சங்குமணியோடு. ஏனககோடு - பனறிககொமபு. சனனவீரம - முதலி னால் ஓர் சிறந்த மாலையாகச் செய்து அரசா முதலியோா அணிந்து கொள்ளும் ஓா ஆபரணம, அமமாலையை வேடர்கள் திண்ணனார்க்கு வேங்கைத தோலால செய்து அணிந்தனர் என்க.

மார்பிற்சிறு தந்த மணித்திரண் மாலை தாழத்
தாரிற்பொலி தோள்வலை யங்க டழைத்து மின்னச்
சேர்விற்பொலி கங்கண மீது திகழ்ந்த முன்கைக்
கார்விற்செறி நாணெறி கைச்செறி கட்டி கட்டி. (௬0)

அரையிற்சர ணத்துரி யாடையின் மீது பௌவத்
திரையிற்படு வெள்ளலை கார்த்து விளிம்பு சேர்த்தி
நிரையிற்பொலி நீளுடைத் தோல்சுரி கைப்பு றஞ்சூழ்
விரையிற்றுவர் வார்விசி போக்கி யமைத்து வீக்கி. (௬௧)

வீரக்கழல் காலின் விளங்க வணிந்து பாதஞ்
சேரத்தொடு நீடு செருப்பு விருப்பு வாய்ப்பப்
பாரப்பெரு வில்வலங் கொண்டு பணிந்து திண்ணன்
சாரத்திருத் தாண்மடித் தேற்றி வியந்து தாங்கி (௬௨)

அங்கப்பொழு திற்புவ னத்திடர் வாங்க வோங்கித்
துங்கப்பெரு மாமழை போன்று துண்ணென் றொலிப்ப
வெங்கட்சின நீடு விலங்கு விலங்கி நீங்கச்
செங்கைத்தலத் தாற்றட விச்சிறு நாணெறிந்தார் (௬௩)

பல்வேறு வாளி புதைபார்த் துடன்போத வேவி
வில்வேட ராயத் துடிமேவி யொலிக்கு முன்றிற்
சொல்வேறு வாழ்த்துத் திசைதோறு நுதைந்து விம்ம
வல்லேறு போல்வா ரடலவாளி தெரிந்து நின்றார் (௬௪)

மானச்சிலை வேடர் மருங்கு நெருங்கு போதிற்
பானற்குல மாமல ரிற்படா சோதி யார்முன்

(௬0) தாரில் பொலி - மாலையால் பொலிவடைந்த. சேர்வில் பொலி - ஒளியோடு கூடி விளங்கும். கார்வில்செறி நாண் எறி கைச்செறிகட்டி - கரிய வில்லிற் கட்டிய நாணை எறிந்து அம்பை விடுதற்குச் சாதனமாய கைச்சோதை (கைவிரல்களுக்குத் தோலினால் தைத்துப் போடும் உறை.) (௬௧) சரணத்து உரி ஆடையின் மீது - மயிர்ப்புலியோடு சேர்ந்த (புலித்) தோலாடையின் மேல். பௌவம் திரையில் படு வெள் அலகு ஆர்த்து விளிம்பு சேர்த்தி - கடலின் அலைகளில் உண்டாகும் வெள்ளிய பலகறைகளைக் கோர்த்து ஓரத்தில் (அருகே) கட்டி. விரையில் துவர் வார் விசிபோக்கி அமைத்து வீக்கி - வாசனை கமழும் சிவந்த வார்க்கச்சையைச் செலுத்தி அமைத்துக் கட்டி. (௬௨) தொடு நீடு செருப்பு பாதஞ் சேர எனக் கூட்டுக. மடித்து ஏற்றி வியந்து - வளைத்து நாணேற்றித் தெய்வங்களைத் துதித்து. (௬௩) புவனத்து இடர் - பிறவித் துன்பம். (௬௪) புதை பார்த்து - அம்புக்கட்டுகளினின்றும் பார்த்து எடுத்து. ஆயம் - கூட்டம். துதைந்து விம்ம - நெருங்கி ஒலிக்க. (௬௫) மானம் சிலை - வலிமை பொருந்திய வில்லை ஏந்திய. மாகுல பானல் மலரின் படா சோதியார் - பெரிய கூட்டமாகிய நீலோற்பலமலரின் படர்ந்த ஒளிபோலக் கரிய திருமேனியுடைய திண்ணனார்.

தேனற்றசைத்தேறல் சருப்பொரி மற்று முள்ள
கானப்பலி நேர்கடவுட்பொறை யாட்டி வந்தாள். (௬௫)

நின்றெங்கு மொய்க்குஞ் சினவேடரை நீக்கிப் புக்குச்
சென்றங்கு வள்ள றிருநெற் றியிற்சேடை சாத்தி
யுன்றந்தை தந்தைக்கு மிந்நன்மைக ளுள்ள வல்ல
நன்றும்பெரி துன்விற னம்மள வன்றி தென்றாள். (௬௬)

அப்பொற்றியில் வாழ்த்து மணங்குடை யாட்டி தன்னைச்
செப்பற்கரி தாய சிறப்பெதிர் செய்து போக்கிக்
கைப்பற்றிய திண்சிலைக் கார்மழை மேக மென்ன
மெய்ப்பொற் புடைவேட் டையின்மேற்கொண் டெழுந்து போந்தார். (௬௭)

வேறு.

தாளில்வாழ் செருப்பர்தோ றழைத்தநீடு தானையார்
வாளியோடு சாபமேவு கையர்வெய்ய வன்கணார்
ஆளியேறு போலவேகு மண்ணலார்மு னெண்ணிலார்
மீளிவேடர் நீடுகூட்ட மிக்குமேலெ ழுந்ததே. (௬௮)

வன்றொடர்ப்பி ணித்தபாசம் வன்கைமள்ளர் கொள்ளவே
வென்றிமங்கை வேடர்வில்லின் மீதுமேவு பாதமுன்
சென்றுமீளு மாறுபோல்வ செய்யநாவின் வாயவாய்
ஒன்றொடொன்று நேர்படாம லோடுநாய்கண் மாடெலாம். (௬௯)

போர்வலைச் சிலைத்தொழிற் புறத்திலே விளைப்பவச்
சார்வலைத் தொடக்கறுக்க வேகுமையர் தம்முனே
கார்வலைப் படுத்தகுன்று கானமா வளைக்கநீள்
வார்வலைத் திறஞ்சுமந்து வந்தவெற்பர் முந்தினார் (௭0)

நண்ணிமா மறைக்குலங்க ளுடைவென்று நீடுமத்
தண்ணிலா வரும்புகொன்றை தங்குவேணி யார்தமைக்
கண்ணினீடு பார்வையொன்று கொண்டுகாணு மன்பர்முன்
எண்ணில்பார்வை கொண்டுவேட ரெம்மருங்கு மேகினார். (௭௧)

---

தேறல் - கள்ளும். சரு - தேவர்களுக்கு நிவேதனஞ் செய்ய வேடர்கள் சமைத்த வுணவு. கடவுள் பொறை யாட்டி - தேவராட்டி. (௬௬) இ நன்மைகள் உள்ள அல்ல - இவ்வித நல்ல சகுனங்கள் உண்டாகவில்லை. (௬௮) தோல தழைத்த நீடு தானையார் - தோலினால் அகலமாக வுடுத்த நீண்ட ஆடையை யுடையவர்கள். வாளியோடு சாபம மேவு கையா - அம்புகளோடு வில்லைத் தாங்கிய கையையுடையவர்கள். மீளி - வலியுடைய; நமனைப் போன்ற. (௬௯) வென்றிமங்கை பாதம - வீரலட்சுமியின திருவடிகள். (௭0) அச்சார்வலை தொடக்கு - அகத்தே தன்னைப பந்தித்த பாசமாகிய வலையின் பிணிப்பை. கார்வலை படுத்த குன்று கானம மாவளைக்க - மேகங்கள் வலையிட்டதைப போல மூடிக்கொண்டுள்ள மலைகளினும், காடுகளினும இருக்கும மிருகங்களைப பிடிக்க. கார்வலைபடுத்த என்பதற்குக் கரியவலைகளைக் கட்டிய எனினும பொருந்தும். (௭௧) பார்வை என்றது கண்பார்வைக்கும, பார்வை மிருகங்களுக்கும் பொதுவாக நின்றது

கோடுமுன் பொலிக்கவுங் குறுங்கணு குளிக்குல
மாடுசென் றிசைப்பவும் மருங்குபம்பை கொட்டவுஞ்
சேடுகொண்ட கைவிளிச சிறந்தவோசை செல்லவுங்
காடுகொண் டெழுந்தவேடு கைவளைந்து சென்றதே. (எஉ)

நெருங்குபைந் தருக்குலங்க ணீடுகாடு கூடநேர்
வருங்கருஞ் சிலைததடககை மானவேடர் சேனைதான்
பொருந்தடந் திரைக்கடற் பரப்பிடைப் புகும்பெருங்
கருந்தரஙக நீள்புனற் களிந்திகன்னி யொத்ததே (எஙு)

தென்திசைப் பொருப்புடன் செறிந்தகானின் மானினம்
பன்றிவெம் மரைக்கணஙக ளாதியான பல்குலந்
துன்றிநின்ற வென்றடிச சுவட்டிஞெற்றர் சொல்லவே
வன்றடக்கை வார்கொடெம் மருஙகுமவேட ரோடினா. (எச)

ஓடியெறிநது வாரொழுககி யோசனைப் பரப்பெலா
நெடியதிண் வலைத்தொடக்கு நீளிடைப் பிணித்துநேர்
கடிகொளப் பரந்தகாடு காவல்செய் தமைத்தபின்
செடிதலைச சிலைக்கைவேடர் திண்ணனார்மு னண்ணினா. (எரு)

வெஞ்சிலைககை வீரனாரும வேடரோடு கூடிமுன்
மஞ்சலைக்கு மாமலைச் சரிப்புறத்து வந்தமா
அஞ்சுவித் தடர்க்குநாய்க ளட்டமாக விட்டுநீள்
செஞ்சரத்தி னேடுசூழல் செய்தகானு ளெய்தினர். (எசு)

வெய்யமா வெழுப்பவேவி வெற்பராய மோடிநேர்
எய்யும்வாளி முன்றெரிந்து கொண்டுசெல்ல வெங்கணு
மொய்குரற் றுடிக்குலங்கள் பம்பைமுன் சிலைத்தெழக்
கைவிளித் ததிர்த்துமா வெழுப்பினார்கள் கானெலாம். (எஎ)

---

(எஉ) கோடு - ஊதுகுழலகள். குறுஙகணுகுளி குலம்-குறுகிய கண்ணையுடைய சிறுபறைக கூட்டஙகள். சேடுகொண்ட - திரண்டு. கைவிளி - கைதட்டுதல் காடு கொணடு எழுநத வேடு - காடுபோலத திரணடெழுநத வேடா கூட்டம. வேடு - ஆகு பெயா. கைவளைநது - இரண்டு பககஙகளிலும் சூழநது. (எஙு) பெருமகரும் தரங் கம நீள்புனல களிநதி கனனி ஒததது - பெரிதாய கருமை நிறமுள்ள அலைகளோடு வெள்ளததையுடைய காளிநதி எனனும நதியாகிய மாதையொததிருந்தது. காளிந்தி எனபது களிந்திஎனவிகாரமாக வநதது. (எச) வாா - வலைகள். (எரு) ஓடி - சுருககு வலைகளை. ஒடிதல - மடஙகுதல ; அததொழிலையுடைய வலைககாயது (- ஆகுபெயர்.) நேர் கடி கொள - நேராககககண்டவாகள அஞச. காவல செய்து அமைத்தபின் - (மிருகங்கள் வெளியே போகாதபடி) காவல்செய்து வைத்தபினனர். செடி தலை - புதர்போன்ற மயிர்ததலையையுடைய. (எசு) முனமஞசு அலைக்கும் - முனனே மேகங் கள் சஞ்சரிக்கும. அட்டம ஆகவிட்டு அருகாகச செலுத்தி. சூழல்செய்த - (வேடர் களால்) வளைக்கப்பட்ட. (எஎ) வெற்பர் ஆயம - வேடா கூட்டம. சிலைத்து-ஒலித்து.

ஏனமோடு மானினங்க ளெண்குதிண் கலைக்குலங்
கானமேதி யானைவெம் புலிக்கணங்கள் கான்மரை
யானமா வனேகமா மருண்டெழுந்து பாயமுன்
சேனைவேடர் மேலடர்ந்து சீறியம்பி னூறினார். (௭௮)

வேறு.

தாளறுவன விடைதுணிவன தலைதுமிவன கலைமான்
வாளிகளொடு குடல்சொரிதர மறிவனசில மரைமா
நீளுடல்விடு சரமுருவிட நிமிர்வனமிடை கடமா
மீளிகொள்கணை படமுடலெழ விழுவனபல வுழையே. (௭௯)

வெங்கணைபடு பிடாகிழிபட விசையுருவிய கயவாய்
செங்கனல்விட வதனொடுகணை செறியமுனிரு கருமா
வங்கெழுசிர முருவியபொழு தடலெயிறுற வதனைப்
பொங்கியசின மொடுகவர்வன புரைவனசில புலிகள் (௮௰)

பின்மறவர்கள் விடுபகழிகள் பிறகுறவயி றிடைபோய்
முன்னடுமுக மிசையுருவிட முடுகியவிசை யுடனக்
கொன்முனையடு சரமினமெதிர் குறுகியமுக முருவத்
தன்னெதிரெதிர் பொருவனநிகர் தலையனபல கலைகள். (௮௧)

கருவரையொரு தனுவொடுவிசை கடுகியதென முனைநேர்
குரிசின்முன்விடு மடுசரமெதிர் கொலைபயில்பொழு தவையே
பொருகரியொடு சினவரியிடை புரையறவுடல் புகலால்
வருமிரவொடு பகலணைவன வெனமிடையுமவ் வனமே (௮௨)

நீளிடைவிசை மிசைகுதிகொள நெடுமுகிறொட வெழுமான்
றாளுறுகழன் மறவர்கள்விடு சரநிரைதொடர் வனதாம்

---

(௭௮) ஏனமோடு - காட்டுப்பன்றிகளோடு. எண்கு - கரடிகளும். திண்கலைக்குலம் - வலியகலைமான் கூட்டங்களும். கானமேதி - காட்டெருமைகளும். (௭௯) கடமா - மதத்தையுடைய யானைகள். (௮௰) முனை இரு கருமா - முனையுள்ள பெரியபன்றி. கயவாய் - பிளந்தவாய். அடல் எயிறு உற அதனை - வலிய பற்களில் பொருந்தும்படி அப்பன்றியை. புரைவன - ஒத்தன. (௮௧) மறவர்கள் பின்விடுபகழிகள் பலகலைகள் பிறகுற வயிற்றிடைபோய் எனக்கூட்டுக. பிறகு உறவயிறு இடைபோய் - பின்பக்கமாகப் பாய்ந்து வயிற்றின் வழியாகச் சென்று. தன் எதிர் எதிர் பொருவனநிகர் தலையன - அக்கலைமான்கள் ஒன்றோடொன்று எதிர் எதிர் போர்செய்தலை ஒத்திருந்தன. (௮௨) குரிசில் - திண்ணனார். முனை - வில்லின் முனை. அவையே - அவ்வம்புகளே. அரியிடை - சிங்கத்தினிடத்தும். மிடையும் - நெருங்கியிருக்கும்.

வாள்விடுகதிர் மதிபரிவுற வருமெனவிழு முழையைக்
கோளொடுபயில் பணிதொடர்நிலை கொளவுளவெதிர் பலவே. (௮௩)

கடல்விரிபுனல் கொளவிழுவன கருமுகிலென நிரையே
படர்வொடுசெறி தழைபொதுளிய பயில்புதல்வன மதன்மேல்
அடலுறுசர முடலுறவரை யடியிடமல மரலான்
மிடைகருமரை கரடிகளொடு விழுவனவன மேதி (௮௪)

பலதுறைகளின் வெருவரலொடு பயில்வலையற நுழைமா
வுலமொடுபடர் வனத்தையுற வுறுசினமொடு கவர்நாய்
நிலவியவிரு வினைவலையிடை நிலைசுழல்பவர் நெறிசேர்
புலனுறுமன னிடைதடைசெய்த பொறிகளினள வுளவே (௮௫)

துடியடியன மடிசெவியன துறுகயமுனி தொடரார்
வெடிபடவிரி சிறுகுருளைகண் மிசைபடுகொலை விரவார்
அடிதளர்வுறு கருவுடையன வணைவுறுபிணை யலையார்
கொடியனவெதிர் முடுகியுமுறு கொலைபுரிசிலை மறவோர். (௮௬)

இவ்வகைவரு கொலைமறவினை யெதிர்நிகழ்வுழி யதிரக்
கைவரைகளும் வெருவுறமிடை கானெழுவதொ ரேனம்
பெய்கருமுகி லெனவிடியொடு பிதிர்கனல்விழி சிதறி
மொய்வலைகளை யறநிமிர்வுற முடுகியகடு விசையில். (௮௭)

போமதுதனை யடுதிறலொடு பொருமறவர்க ளரியே
றூமவர்தொடர் வுறும்விசையுட னடிவழிசெலு மளவிற்

---

(௮௩) நீளிடை விசை மிசை குதிகொள - வெளியிலே விசையோடு மேலே குதித்து. வாள் விடுகதிர் மதிபரிவு உற வரும் என - ஒளிவீசும் கிரணங்களையுடைய சந்திரன் (இராகுவினால் பீடிக்கப்பட்டுத்) துன்பமடையுங்காலம் வரும் என்று. உழையை - மானை. கோளொடுபயில் பணி - கிரகங்களுடன் ஒன்றாகப்பயிலும் இராகு. கோளொடு என்பதற்கு வலியோடு என்பொருளுரைப்பினும் பொருந்தும். தொடர்நிலை - தொடர்ந்து பிடிக்கும் நிலைமையை. (௮௪) பொதுளிய - நெருங்கிய. புதல் - நாணல், புல். அலமரலால் - சுழன்று துன்புறுதலோடு. வனமேதி - காட்டெருமைகள். புதல்வனத்தைக் கடலாகக்கொள்க. (௮௫) வெருவரலொடு - அச்சத்தோடு. பயில் வலை அற நுழை மா - கட்டியவலைகள் அறுந்து விழும்படி நுழையும் மிருகங்கள். உலமொடு படர் வனத்தை உற - வேகமாக ஓடுதலைத் தடுக்க. பொறிகளின் அளவு உளவே - ஐம்பொறிகளின் தன்மையை ஒத்திருந்தன. (௮௬) துடி அடியன - உடுக்கை போன்ற கால்களையுடையனவாயும். துறுகயமுனி தொடரார் - நெருங்கும் யானைக் கன்றுகளைத் தொடர்ந்து வேட்டையாடார். சிறு குருளை - சிறிய விலங்கின் குட்டிகளை. பிணை அலையார் - பெண்மான்களைக் கொல்லமாட்டார். (௮௭) கைவரைகளும் - யானைகளும். ஏனம் - பன்றி. பெய் - மழைபெய்யும்.

றுமொருவரு மறிகிலரவர் தனிதொடர்வுழி யதன்மேல்
ஏமுனையடு சிலைவிடலைக ளிருவர்களடி பிரியார். (௮௮)

நாடியகழல் வயவர்களவர் நாணனுநெடு வரிவிற்
காடனுமெனு மிருவருமலை காவலனொடு கடிதிற்
கூடினர்விடு பகழிகளொடு கொலைஞமலிகள் வழுவி
நீடியசரி படாவதுதரு நீழலின்விரை கேழல். (௮௯)

குன்றியைநிகர் முன்செறவுரி கொடுவிழியிடி குரனீள்
பன்றியுமடல் வன்றிறலொடு படாநெறிநெடி தோடித்
துன்றியதொரு குன்றடிவரை சுலவியநெறி சூழற்
சென்றதனிடை நின்றதுவலி தெருமரமா நிரையில் (௯௰)

அத்தருவளர் சுழலிடையடை யதனிலையறி பவர்முன்
கைத்தெரிகணை யினிலடுவது கருதலர்விசை கடுகி
மொய்த்தெழுசுடர் விடுசுரிகையை முனைபெறவெதி ருருவிக்
குத்தினருடன் முறிபடவெறி குலமறவர்க டலைவர் (௯௧)

வேறு

வேடர்தங் கரிய செங்கண் வில்லியார் விசையிற் குத்த
மாடிரு துணியாய் வீழ்ந்த வராகத்தைக் கண்டு நாணன்
காடனே யிதன்பி னின்று காதங்கள் பலவந் தெய்த்தோம்
ஆடவன் கொன்றா னச்சோ வென்றவ ரடியிற் றாழ்ந்தார் (௯௨)

(௮௮) அடுதிறலொடு பொருமறவர்கள் அரிவரும் அவர் - கொல்லத்தக்க வலிமையோடு எதிர்க்கும் வேடர்களுக்கு ஆண்சிங்கம்போன்ற திண்ணனார். ஏ முனை அடு சிலை விடலைகள் - அம்பினால் பகைவர்களைக் கொல்லும் வில்லையுடைய காளைகள். இருவர்கள் அடிபிரியார் - இருவர் (திண்ணனாரை) அடிபிரியாதவர்கள். (௮௯) ஞமலிகள் வழுவி - நாய்களுக்குத் தப்பி. கேழல் - பன்றியானது. நீடியசரி - நீண்டமலைச்சாரலில். தருநீழலின் - மரத்தின் நிழலில். விரை படாவது - விரைவாகச் சென்றது. தருநீழலின் விரைகேழல் நீடியசரிபடாவது எனக்கூட்டிப் பொருளுரைப்பினும் பொருந்தும். படாவது காலவழுவமைதி (௯௰) குன்றியை - குன்றிமணியை. படாநெறி - செல்லும் வழியில். சுலவியநெறி சூழல் சென்று - வளைந்தவழியுடைய ஒருசோலையை (காட்டை) அடைந்து. வலிதெருமர மா நிரையில் நின்றது - வலியிழந்து (நம்பிக்கையற்று) மரச்செறிவில் நின்றது. (௯௧) சூழல் சுழல் எனக்குறுக்கல் விகாரமாயிற்று அதன் நிலை அறிபவர் - அப்பன்றியின் இருப்பைத் தெரிந்தவராய். தெரிகணையினில் அடுவது கருதலர் - ஆராய்ந்தெடுத்த அம்புகளால் கொல்ல நினையாமல். விசைகடுகி - விரைவாகக் கிட்டி. சுரிகையை - உடைவாளை. எறிகுலமறவர்கள் தலைவர் - கொலைத்தொழிலையுடைய நல்வேடகுலத்தலைவராய திண்ணனார் (௯௨) ஆடவன் - ஆண்தன்மையுடைய திண்ணன். பலநாள் வேட்டைத்தொழிலிற்பழகிய தங்களாற் கொல்லப்படாத பன்றியைக் கன்னிவேட்டையில் திண்ணனார் உடைவாளாற் குத்திக்கொன்றமையை வியப்பான் "அச்சோ" என்றார்.

மற்றவர் திண்ண னார்க்கு மொழிகின்றார் வழிவந் தாற்ற
உற்றது பசிவந் தெம்மை யுதவிய விதனைக் காய்ச்சிச்
சற்றுநீ யருந்தி யாமுந் தின்றுதண் ணீர்கு டித்து
வெற்றிகொள் வேட்டைக் காடு குறுகுவோ மெலலவென்றார். (கக)

என்றவர் கூற நோக்கித் திண்ணனார் தண்ணீ ரெங்கே
நன்றுமிவ் வனத்தி லுள்ள தென்றுரை செய்ய நாண
னின்றவிப் பெரிய தேக்கி னப்புறஞ் சென்றா னீண்ட
குன்றினுக் கயலே யோடுங் குளிர்ந்தபொன் முகலி யென்றான் (கச)

பொங்கிய சினவில் வேடன் சொன்னபின் போவோ மங்கே
இங்கிது தன்னைக் கொண்டு போதுமி னென்று தாமும்
அங்கது நோக்கிச் சென்றார் காவத மரையிற் கண்டார்
செங்கணே றுடையார் வைகுந் திருமலைச் சாரற் சோலை (கரு)

நாணனே தோன்றுங் குன்றி னண்ணுவே மென்ன நாணன்
காணநீ போதி னல்ல காட்சியே காணு மிந்தச
சேணுயர் திருக்கா ளத்தி மலைமிசை யெழுந்து செவ்வே
கோணமில் குடுமித் தேவ ரிருப்பர்கும் பிடலா மென்றான் (கசு)

ஆவதெ னிதனைக் கண்டிங் கணைதொறு மென்மேற் பாரம்
போவதொன் றுளது போலு மாசையும் பொங்கி மேன்மேன்
மேவிய நெஞ்சும் வேறோர் விருப்புற விரையா நிற்குந்
தேவரங் கிருப்ப தெங்கே போகென்றார் திண்ண னார்தாம் (கஎ)

உரைசெய்து விரைந்து செல்ல வவர்களு முடனே போந்து
கரைவளர் கழையின் முத்துங் காரகிற் குறடுஞ் சந்தும்
வரைதரு மணியும் பொன்னும் வயிரமும் புளினந் தோறுந்
திரைகண்முன் றிரட்டி வைத்த திருமுக லியினைச் சார்ந்தார் (கஅ)

ஆங்கதன் கரையின் பாங்கோ ரணிநிழற் கேழல் விட்டு
வாங்குவிற் காடன் றன்னை மரக்கடை தீக்கோல் பண்ணி
ஈங்குநீ நெருப்புக் காண்பா யிம்மலை யேறிக் கண்டு
நாங்கள்வந் தணைவோ மென்று நாணனுந் தாமும் போந்தார். (கக)

(கச) நீண்டகுன்று என்றது திருக்காளத்தி மலையை. (கரு) காவதம் அரையில் கண்டார் - அரைக்காதவழி தூரத்தில் தரிசித்தார். (கசு) சேண்உயர் - ஆகாயமட்டும் உயர்ந்த. குடுமித்தேவர் - மலையுச்சியிலுள்ள பிரான். (கஅ) கழையின் - மூங்கிலின். புளினம் தோறும் - மணற்குன்றுகடோறும். (கக) மரக்கடை தீக்கோல் பண்ணி - மரக்கொம்பால் தீக்கடைகோல் செய்து. காண்பாய் - உண்டாக்குவாய்.

அளிமிடை கரைசூழ் சோலை யலர்கள்கொண் டணைந்த வாற்றின்
றெளிபுன லிழிந்து சிந்தை தெளிவுறுந் திண்ண னார்தாங்
களிவரு மகிழ்ச்சி பொங்கக் காளத்தி கண்டு கொண்டு
குளிர்வரு நதியூ டேகிக் குலவரைச் சாரல் சேர்ந்தார். (கoo)

கதிரவ னுச்சி நண்ணக் கடவுண்மால் வரையி னுச்சி
அதிர்தரு மோசை யைந்து மார்கலி முழக்கங் காட்ட
இதுவென்கொ லென்றார்க் கிம்மலைப் பெருந்தேன் சூழ்ந்து
மதுமல ரீக்கண் மொய்த்து மருங்கெழு மொலிகொ லென்றான். (கoக)

முன்புசெய் தவத்தி னீட்ட முடிவிலா வின்ப மான
அன்பினை யெடுத்துக் காட்ட வளவிலா வார்வம பொங்கி
மன்பெருங் காதல் கூர வள்ளலார் மலையை நோக்கி
என்புநெக் குருகி யுள்ளத் தெழுபெரு வேட்கை யோடும் (கoஉ)

நாணனு மன்பு முன்பு நளிர்வரை யேறத் தாமும்
பேணுதத் துவங்க ளென்னும் பெருகுசோ பான மேறி
ஆணையாஞ் சிவத்தைச் சார வணைபவர் போல வையா
நீணிலை மலையை யேறி நேர்படச் செல்லும் போதில் (கoங)

திங்கள்சேர் சடையா ரைத் தம்மைச் சென்றவர் காணு முன்னே
அங்கணர் கருணை கூர்ந்த வருட்டிரு நோக்க மெய்தித
தங்கிய பவத்தின் முன்னைச் சார்புவிட் டகல நீங்கிப்
பொங்கிய வொளியி னீழற் பொருவிலன் புருவ மானார் (கoச)

மாகமார் திருக்கா ளத்தி மலையெழு கொழுந்தா யுள்ள
ஏகநா யகரைக் கண்டா ரெழுந்தபே ருவகை யன்பின்
வேகமா னதுமேற் செல்ல மிக்கதோர் விரைவி னோடு
மோகமா யோடிச் சென்றார் தழுவினார் மோந்து நின்றார். (கoரு)

(ள) அளிமிடை - வண்டுகள மொயககும. குலவரை-மேனமையாகிய அமமலை. (ளக) கடவுள் மால் - தெயவததனமை பொருநதிய பெரிய. அதிாதருமோசை ஐந்தும - முழங்குகினற தேவதுந்துபி ஐநதும. ஆாகலிமுழககம காடட - கடலைப் போல ஒலிகக. திணணனார் செவிககுககேடட தேவதுநதுபியின முழககததை அறியாத நாணன இவவொலியாதெனக கேடகத் தனககுககேடட தேனீயி னொலியின மேல்வைதது ஐயபபாடாய அறைநதனன எனக (ளங) நளிா - குளிாநத. சோபானம - கறபடி (படிபபடியாக.) தததுவஙகளைத தனிததனி நியதிகளைந்து சிவததைத தரிசிககினறாாச சிவண, திணணனெமபிரானும சோபான வழியேறிச சிவபிரானைத தரிசிததனா எனபாா "தததுவஙகளெனனும பெருகு சோபானமேறி" எனறாா. ஆணையாம - சததியருபியாய (உணமையாய)—(படைததல முதலிய பஞ்சகிருததியஙகட்குங் காரணமான முடிவிலாறறல எனனுஞ் சததியையுடைய எனினும பொருந்தும.) (ளச) அங்கணர் கருணை கூாநத - சிவநாதன கிருபைமிக்க சாாபு - மலமாயாகனம பந்தங்கள். ஒளியின - திருவருளின. (ளரு) மாகம ஆா - வானுலகத்தையளாவிய.

நெடிதுபோ துயிர்த்து நின்று நிறைந்தெழு மயிர்க்கா றோறும்
வடிவெலாம் புளகம் பொங்க மலர்க்கண்ணீ ரருவி பாய
அடியனேற் கிவர்தா மிங்கே யகப்பட்டா ரச்சோ வென்று
படியிலாப் பரிவு தானோர் படிவமாம் பரிசு தோன்ற. (௧௦௬)

வெம்மறக் குலத்து வந்த வேட்டுவச் சாதி யார்போற்
கைம்மலை கரடி வேங்கை யரிதிரி கானந் தன்னில்
உம்முடன் றுணையா யுள்ளா ரொருவரு மின்றிக் கெட்டேன்
இம்மலைத் தனியே நீரிங் கிருப்பதே யென்று நைந்தார் (௧௦௭)

கைச்சிலை விழுந்த தோரார் காளையார் மீள விந்தப்
பச்சிலை யோடு பூவும் பறித்திட்டு நீரும் வார்த்து
மச்சிது செய்தார் யாரோ வென்றலு மருங்கு நின்ற
அச்சிலை நாணன் றானு நானிது வறிந்தே னென்பான் (௧௦௮)

வன்றிற லுந்தை யோடு மாவேட்டை யாடிப் பண்டிக்
குன்றிடை வந்தோ மாகக் குளிர்ந்தநீ ரிவரை யாட்டி
ஒன்றிய விலைப்பூச் சூட்டி யூட்டிமுன் பறைந்தோர் பார்ப்பான்
அன்றிது செய்தா னின்று மவன்செய்த தாகு மென்றான் (௧௦௯)

உண்ணிறைந் தெழுந்த தேனு மொழிவின்றி யாரா வன்பிற்
றிண்ணனார் திருக்கா ளத்தி நாயனார்க் கினிய செய்கை
எண்ணிய விவைகொ லாமென் றிதுகடைப் பிடித்துக் கொண்டவ்
வண்ணலைப் பிரிய மாட்டா தளவிலா தரவு நீட. (௧௧௦)

இவர்தமைக் கண்டே னுக்குத் தனியரா யிருந்தா ரென்னே
இவர்தமக் கமுது செய்ய விறைச்சியு மிடுவா ரில்லை
இவர்தமைப் பிரிய வொண்ணா தென்செய்கே னினியான் சால
இவர்தமக் கிறைச்சி கொண்டிங் கெய்தவும் வேண்டு மென்று. (௧௧௧)

போதுவர் மீண்டு செல்வர் புல்லுவர் மீளப் போவர்
காதலி னோக்கி நிற்பர் கன்றகல் புனிற்றாப் போல்வர்
நாதனே யமுது செய்ய நல்லமெல் லிறைச்சி நானே
கோதறத் தெரிந்து வேறு கொண்டிங்கு வருவே னென்பார் (௧௧௨)

---

(௱௬) நெடிதுபோது உயிர்த்து நின்று-நெடுநேரம் உச்சியைமோந்து பெருமூச்சு விட்டுநின்று. படி இலா பரிவுதான் ஓர் படிவம் ஆம் பரிசு தோன்ற - ஒப்பில்லாத அன்பே ஓர் உருவங்கொண்டதுபோலக் கண்டோர்க்குத் தோன்றும்படி. (௱௭) கைம்மலை - யானை. (௱௮) மஞ்சு - அழகு மஞ்சு என்றது மச்சு என விகாரமாயிற்று. (௱௯) உந்தையோடு - உன் தந்தையுடன். (௧௧௦) இது கடைப்பிடித்துக்கொண்டு - நாணன்சொற்ற மொழியை உறுதியாகக்கொண்டு. ஆதரவு நீட-அன்பு பெருக. (௧௧௨) புல்லுவர் - தழுவுவர். புனிற்றா - இளங்கன்றுப் பசு.

ஆர்தம ராக நீரிங் கிருப்பதென் றகல மாட்டே
னீர்பசித் திருக்க விங்கு நிற்கவுங் கில்லே னென்று
சோர்தரு கண்ணீர் வாரப் போய்வரத் துணிந்தா ராகி
வார்சிலை யெடுத்துக் கொண்டு மலர்க்கையாற் றொழுது போந்தார். (கககூ)

முன்புநின் றரிதி னீங்கி மொய்வரை யிழிந்து நாணன்
பின்புவந் தணைய முன்னைப் பிறதுறை வேட்கை நீங்கி
அன்புகொண் டுய்ப்பச் செல்லு மவர்திரு முகலி யாற்றின்
பொன்புனை கரையி லேறிப் புதுமலர்க் காவிற் புககார் (ககச)

காடனு மெதிரே சென்று தொழுதுநீக கடைந்து வைத்தேன்
கோடுடை யேன முங்கள் குறிப்படி யுறுப்பை யெல்லா
மாடுற நோக்கிக் கொள்ளு மறித்துநாம போகைக் கின்று
நீடநீர் தாழ்த்த தென்னோ வென்றலு நின்ற நாணன். (ககரு)

அங்கிவன் மலையிற் றேவர் தம்மைக்கண் டணைததுக கொண்டு
வங்கினைப் பற்றிப் போகா வலலுடும் பென்ன நீங்கான்
இங்குமத் தேவர் தின்ன விறைச்சிகொண் டேகப் போந்தா
னங்குலத் தலைமை விட்டா னலப்பட்டான் தேவாக கென்றான். (ககசு)

என்செய்தாய் திண்ணா நீதா னென்னமால கொண்டா யெஙகண்
முன்பெரு முதலி யலலை யோவென முகத்தை நோக்கார்
வன்பெரும் பன்றி தனனை யெரியினில வதக்கி மிக்க
இன்புறு தசைகள் வெவ்வே றம்பினா லீாநது கொண்டு. (ககஎ)

கோலினிற் கோத்துக் காய்ச்சிக் கொழுந்தசை பததத்தில் வேவ
வாலிய சுவைமுன் காண்பான் வாயினி லதுக்கிப் பார்த்துச்
சாலவு மினிய வெல்லாஞ் சருகிலை யிணைத்த கல்லை
யேலவே கோலிக் கூட வதன்மிசை யிடுவா ராணர். (ககஅ)

மருங்குநின் றவர்கள் பின்னு மயன்மிக முதிர்ந்தா னென்னே
அரும்பெற விறைச்சி காய்ச்சி யதுக்கிவே றுமிழா நின்றான்
பெரும்பசி யுடைய னேனும் பேச்சில னெமக்கும் பேறு
தரும்பரி சுணரான் மற்றைத் தசைபுறத் தெறியா நின்றான். (கககூ)

(ககக) ஆாதமராக-யாரைச சுற்றமாககொண்டு. (ககச) பிறதுறை வேடகை - வேறு விஷயங்களில உணடாகும ஆசையினினறும. காவில சோலையில. (ககரு) மாடு உற-இவ்விடத்திலிருகக. மறிதது நாம போகைககு - மீண்டும நாம (வேடடைக்குப) போவதற்கு. (ககசு) வங்கினை பறறிபோகா - மரப்பொந்தினைப் பற்றிவிடாத. (ககஎ) மால் - மயக்கம. முதலி அலலையோ - தலைவன லலலையோ. (ககஅ) வாலிய-இனிய. அதுக்கி-போட்டு மெனறு. கலலை இலைககலததை. ஏலவே கோலி-பொருந்த (நன்கு கத்) தைத்து.

தேவுமால் கொண்டா ரிந்தத் திண்ணன்மற் றிதனைத் தீர்க்க
லாவதொன் றறியோந் தேவ ராட்டியை நாக னோடு
மேவிநாங் கொணர்ந்து தீர்க்க வேண்டுமவ் வேட்டைக் கானில்
ஏவலாட் களையுங் கொண்டு போதுமென் றெண்ணிப் போனர். (கஉ0)

கானவர் போன தோரார் கடிதினிற் கல்லை யின்கண்
ஊனமு தமைத்துக் கொண்டு மஞ்சன மாட்ட வுன்னி
மாநதி நன்னீர் தூய வாயினிற் கொண்டு கொய்த
தூநறும் பள்ளித தாமங் குஞ்சிமேற் றுதையக் கொண்டார். (கஉக)

தனுவொரு கையில் வெய்ய சரத்துடன் றாங்கிக் கல்லைப்
புனிதமெல் லிறைச்சி நலல போனக மொருகை யேந்தி
இனியவெம் பிரானர் சாலப் பசிப்பரென் றிரங்கி யேங்கி
நனிவிரைந் திறைவர் வெற்பை நணணினர் திண்ண னர்தாம் (கஉஉ)

இளைத்தனர் நாய னரென் றீண்டச்சென் றெய்தி வெற்பின்
முளைத்தெழு முதலைக கண்டு முடிமிசை மலரைக் காலில்
வளைததபொற் செருப்பான் மாற்றி வாயின்மஞ் சனநீர் தன்னை
விளைத்தவன் புமிழ்வார் போல விமலனர் முடிமேல விட்டார். (கஉங)

தலைமிசைச் சுமந்த பள்ளித தாமததைத் தடஙகா ளததி
மலைமிசைத் தம்பி ரானர் முடிமிசை வணஙகிச சாததிச
சிலைமிசைப் பொலிந்த செஙகைத் திண்ணனர் சோத்த கல்லை
இலைமிசைப் படைதத வூனின் றிருவமு தெதிரே வைத்து. (கஉச)

கொழுவிய தசைக ளெலலாங கோலினிற் றெரிந்து கோத்தங
கழலுறு பததிற் காய்சசிப் பலலின லதுககி நாவிற்
பழகிய வினிமை பார்த்துப் படைத்தவிவ் விறைச்சி சால
அழகிது நாய னீரே யமுதுசெய் தருளு மென்றார். (கஉரு)

அன்னவிம் மொழிகள் சொல்லி யமுதுசெய் வித்த வேடர்
மன்னனர் திருக்கா ளததி மலையினர்க் கினிய நல்லூன்
இன்னமும் வேண்டு மெனனு மெழுபெருங காதல் கண்டு
பன்னெடுங் கரங்கள் கூப்பிப் பகலவன் மலையிற் றாழ்ந்தான். (கஉசு)

அவ்வழி யந்தி மாலை யணைதலு மிரவு சேரும்
வெவ்விலங் குளவென் றஞ்சி மெய்மையின் வேறு கொள்ளாச்

---

(கஉ0) தேவுமால-தெயவப பயிததியம, ம,ருள. (கஉக) பளளிததாமம குஞ்சிமேல துதையக கொண்டாா - மலாகளைத தமது குடுமியில நிறையச செருகிக்கொண் டாா. (கஉங) நாயனா - சிவபெருமான. விளைநத எனபது விளைதத என விகாரமாயிற்று. (கஉசு) பகலவன - சூரியன. திண்ணனா அனபுருவாய் நினறு அளிதத ஊன முதைச் சிவபெருமான உண்டருளினா எனபதுதோனற "அமுது செய்விததவேடா" என்றார். பகலவன் மலையில தாழ்ந்தான-சூரியன மேறகு மலையில் அஸ்தமனமாயினன

செவ்விய வன்பு தாங்கித் திருக்கையிற் சிலையுந் தாங்கி
மைவரை யென்ன வையர் மருங்குநின் றகலா நின்றார். (௧௨௭)

சார்வருந் தவங்கள் செய்து முனிவரு மமரர் தாமுங்
கார்வரை யடவி சேர்ந்துங் காணுதற் கரியார் தம்மை
ஆர்வமுன் பெருக வாரா வன்பினிற் கண்டு கொண்டே
நேர்பெற நோக்கி நின்றார் நீளிரு ணீங்க நின்றார். (௧௨௮)

கழைசொரி தரளக் குன்றிற் கதிர்நில வொருபாற் பொங்க
முழையரா வுமிழ்ந்த செய்ய மணிவெயி லொருபான் மொய்ப்பத்
தழைகதிர்ப் பரிதி யோடுஞ் சந்திரன் றலையு வாவிற்
குழையணி காதர் வெற்பைக் கும்பிடச் சென்றா லொக்கும் (௧௨௯)

விரவுபன் மணிகள் கான்ற விரிகதிர்ப் படலை பொங்க
மரகத மொளிகொ ணீல மணிகளு மிமைக்குஞ் சோதி
பொரவிரு சுடருக் கஞ்சிப் போயின புடைக டோறும்
இரவிரு ளொதுங்கி னாலே போன்றுள தெங்கு மெங்கும் (௧௩0)

செந்தழ லொளியிற் பொங்குந் தீபமா மரங்க ளாலு
மந்திகண் முழையில் வைத்த மணிவிளக் கொளிக ளாலும்
ஐந்துமா றடக்கி யுள்ளா ரரும்பெருஞ் சோதி யாலும்
எந்தையார் திருக்கா ளத்தி மலையினி லிரவொன் றில்லை (௧௩௧)

வருங்கறைப் பொழுது நீங்கி மல்கிய யாமஞ் சென்று
சுருங்கிட வறிந்த புள்ளின் சூழ்சிலம் போசை கேட்டுக்

(௧௨௯) முழை அரவு உமிழ்ந்த - குகைகளிலுள்ள சர்ப்பங்கள் கக்கிய. பரிதியோடும் - சூரியனோடும். தலையுவாவில் - அமாவாசையில். குழையணிகாதர் வெற்பை - குண்டலத்தை யணிந்த திருச்செவியராய காளத்திநாதர் மலையை. (௧௩0) கான்ற - கக்கிய; உமிழ்ந்த. விரிகதிர் படலைபொங்க - விரிந்த ஒளித்திரள் பிரகாசிக்க. மரகதம் ஒளிகொள் நீல மணிகளும் இமைக்குஞ்சோதி - மரகதமும், ஒளிவிளங்கும் நீலமணிகளும் ஆகிய இவைகள் வீசுகின்ற பிரகாசமானது. இருசுடருக்கு - சூரிய சந்திரர்களுக்கு. (௧௩௧) செம் தழல் ஒளியில் பொங்கும் தீபமாமரங்களாலும் - சிவந்த நெருப்பின் ஒளிபோல் பிரகாசிக்கும் சோதிவிருக்ஷங்களினாலும். மந்திகள் முழையில்வைத்த - குரங்குகள் (தாம் வசிக்கும்) குகைகளில் ஏற்றிய. ஐந்து ஆறு அடக்கியுள்ளார் - ஐம்புலன்களையும் அறுவகைப் பகைகளையும் அடக்கிய முனிவர்கள். ஐம்புலன்கள்.—சப்தம், ஸ்பரிசம், ரூபம், ரசம், கந்தம் என்பன. ஆறுபகைகள்.—காமம், குரோதம், லோபம், மோகம், மதம், மாற்சரியம் என்பன. சோதிவிருக்ஷமாவது.—அருகிற் செல்பவர்களுக்குத் தோன்றாது தெய்வீகமலைகளினும், தபோவனங்களினும் இருப்பது; பகலில் ஒருவரும் அறியாதபடி தன்னொளியைக் காட்டாது இரவில் தன்னொளியைக் காட்டிச் சோதியாய் விளங்குவது. முனிவர்கள் ஒளியாவது.—அவர்களை நெடுந்தூரத்துக் காண்பார்கட்கு அவர்கள் திருமேனி ஒளிரூபமாகத் தோன்றுவது. (௧௩௨) கறைபொழுது - இராக்காலம். யாமம் - நடுயாமம்.

கருங்கட லென்ன நின்று கண்டுயி லாத வீரர்
அரும்பெறற் றம்பி ரானார்க் கமுதுகொண் டணைய வேண்டி. (கஙஉ)

ஏறுகாற் பன்றி யோடு மிருகங்கலை புனமான் மற்றும்
வேறுவே றினங்கள் வேட்டை வினைத்தொழில் விரகி னாலே
ஊறுசெய் காலஞ் சிந்தித் தருமிகத் தெரியாப் போதின்
மாறடு சிலையுங் கொண்டு வள்ளலைத் தொழுது போந்தார். (கஙங)

வேறு

மொய்காட்டு மிருள்வாங்கி முகங்காட்டுந் தேரிரவி
மெய்காட்டு மன்புடைய வில்லியார் தனிவேட்டை
எய்காட்டின் மாவளைக்க விட்டகருந் திரையெடுத்துக்
கைகாட்டு வான்போலக் கதிர்காட்டி யெழும்போதில் (கஙச)

எய்தியசீ ராகமத்தி லியம்பியபூ சனைக்கேற்பக்
கொய்தமல ரும்புனலு முதலான கொண்டணைந்தார்
மைதழையுங் கண்டத்து மலைமருந்தை வழிபாடு
செய்துவருந் தவமுடைய முனிவர்சிவ கோசரியார் (கஙரு)

வந்துதிரு மலையின்கண் வானவர்நா யகர்மருங்கு
சிந்தைநிய மத்தோடுஞ் செல்கின்றார் திருமுன்பு
வெந்தவிறைச் சியுமெலும்புங் கண்டகல மிதித்தோடி
இந்தவனு சிதஞ்செய்தே னியார்செய்தா ரென்றழிவார் (கஙசு)

மேவநேர் வரவஞ்சா வேடுவரே யிதுசெய்தார்
தேவதே வேசனே திருமுன்பே யிதுசெய்து
போவதே யிவ்வண்ணம் புகுதநீ திருவுள்ளம்
ஆவதே யெனப்பதறி யழுதுவிழுந் தலமந்தார் (கஙஎ)

பொருப்பிலெழுஞ் சுடர்க்கொழுந்தின் பூசனையுந் தாழ்க்கநான்
இருப்பதினி யென்னென்றவ் விறைச்சியெலும் புடனிலையுஞ்
செருப்படியு நாயடியுந் திருவலகான் மாற்றியபின்
விருப்பினொடுந் திருமுகலிப் புனன்மூழ்கி விரைந்தணைந்தார். (கஙஅ)

---

(கஙங) ஏறுகால பனறியோடு - வயிறறில ஏறும குறிய காலினையுடைய பனறிக ளோடும. தேகத்துககேறற கால இலலாமையால "ஏறுகால" எனறார. விரகினாலே - சாமாாததியததினாலே. (கஙச) மொயகாடடும இருள் வாஙகி - (உலகதது) நிறைந்தி ருந்த இருளையொழிதது. தோ இரவி-தேரையுடைய சூரியன. வேடடை எய்காட்டில மாவளைக்க - வேடடையாடுகினற காடடினிடததுளள மிருகஙகளை வளைக்குமபடி. (வேட்டையில் முடபனறியையும, காடடிலுள்ள் மறறமிருகங்களையும வளைககுமபடி எனினும பொருந்தும.) (கஙசு) அநுசிதம - அசுததம, தூய்மையினமை. (கஙஎ) அலமந்தா - மனங்கலங்கினா. (கஙஅ) செருபபடியும நாயடியும - திண்ணனா செருபபு அடையாளத்தையும, (அவருடன பிரியா) நாயின அடிசசுவட்டினை

பழுதுபுகுந் ததுதீரப் பவித்திரமாஞ் செயல்புரிந்து
தொழுதுபெறு வனகொண்டு தூயபூ சனைதொடங்கி
வழுவிறிரு மஞ்சனமே முதலாக வரும்பூசை
முழுதுமுறை மையின்முடித்து முதல்வனார் கழல்பணிந்தார். (௧௩௯)

பணிந்தெழுந்து தனிமுதலாம் பரனென்று பன்முறையாற்
றுணிந்தமறை மொழியாலே துதிசெய்து சுடர்த்திங்கள்
அணிந்தசடை முடிக்கற்றை யங்கணரை விடைகொண்டு
தணிந்தமனத் திருமுனிவர் தபோவனத்தி னிடைச்சார்ந்தார். (௧௪௦)

இவ்வண்ணம் பெருமுனிவ ரேகினா ரினியிப்பால்
மைவண்ணக் கருங்குஞ்சி வனவேடர் பெருமானார்
கைவண்ணச் சிலைவளைத்துக் கான்வேட்டை தனியாடிச்
செய்வண்ணத் திறமொழிவேன் றீவினையின் திறமொழிவேன் (௧௪௧)

திருமலையின் புறம்போன திண்ணனார் செறிதுறுகற்
பெருமலைக ளிடைச்சரியிற் பெரும்பன்றி புனமேய்ந்து
வருவனவுந் துணிபடுத்து மானினங்கள் கானிடைநின்
றொருவழிச்சென் றேறுதுறை யொளிநின்று கொன்றருளி (௧௪௨)

பயில்விளியாற் கலையழைத்துப் பாடுபெற வூடுருவும்
அயின்முகவெங் கணைபோக்கி யடியொற்றி மரையினங்க
டுயிலிடையிற் கிடையெய்து தொடர்ந்துகட மைகளெய்து
வெயில்படுவெங் கதிர்முதிரத் தனிவேட்டை வினைமுடித்தார் (௧௪௩)

பட்டவன விலங்கெல்லாம் படாவனத்தி லொருசூழல்
இட்டருகு தீக்கடைகோ லிருஞ்சுரிகை தனையுருவி
வெட்டிநறுங் கோற்றேனு மிகமுறித்துத் தேக்கிலையால்
வட்டமுறு பெருங்கல்லை மருங்குபுடை படவமைத்தார் (௧௪௪)

இந்தனத்தை முறித்தடுக்கி யெரிகடையு மரணியினில்
வெந்தழலைப் பிறப்பித்து மிகவளர்த்து மிருகங்கள்

---

யும். நாயடியாவது—திண்ணனெம் பெருந்தகையார் வேட்டைக்கு வெளியிட்டகாலை அவருடன் வந்த நாயின் காலடி என்றுணர்க. இதனை,—"கடும்பகல் வேட்டையிற் காதலிற் றடிந்த - உடும்பொடும் சிலைகணை யுடைத்தோல் செருப்புத் - தொடர்ந்த நாயொடுதோன்றினன் தோன்றலும்" என்னுங் கண்ணப்பதேவர் திருமறத்தா னுணர்க. (௧௩௯) பவித்திரம்-பாவத்தைப்போக்கி நன்மையைத்தருவது. "பவித்திரமாஞ் செயல் புரிந்து" என்றதனால் பிராயச்சித்தத்தினிமித்தம் செய்யவேண்டிய பஞ்சகவ்விய ஸ்நானம் முதலியனவுங் கொள்க. (௧௪௨) ஒளிநின்று - மறைந்துநின்று. (௧௪௩) பயில் விளியால் - மிருகங்களைப்போல அழைக்கின்ற பயிலோசையால். பாடுபெற - வருந்தும்படி. அயில் - கூரிய. அடி ஒற்றி - அடிவழி சென்று. கதிர்முதிர - சூரியன் உச்சியில் வரும்போது.

கொந்தியயி லலகம்பாற் குட்டமிட்டுக் கொழுப்பரிந்து
வந்தனகொண் டெழுந்தழலில் வக்குவன வக்குவித்து. (கசரு)

வாயம்பா லழிப்பதுவும் வகுப்பதுவுஞ் செய்தவற்றின்
ஆயவுறுப் பிறைச்சியெலா மரிந்தொருகல் லையிலிட்டுக்
காயநெடுங் கோல்கோத்துக் கனலின்க ணுறக்காய்ச்சித்
தூயதிரு வமுதமைக்கச் சுவைகாண லுறுகின்றார். (கசசு)

எண்ணிறந்த கடவுளருக் கிடுமுணவு கொண்டேட்டும்
வண்ணவெரி வாயின்கண் வைத்ததெனக் காளத்தி
அண்ணலார்க் காம்பரிசு தாஞ்சோதித் தமைப்பார்போல்
திண்ணனார் திருவாயி லமைத்தார்வூன் றிருவமுது (கசஎ)

நல்லபத முறவெந்து நாவின்க ணிடுமிறைச்சி
கல்லையினிற் படைத்துத்தேன் பிழிந்துகலந் ததுகொண்டு
வல்விரைந்து திருப்பள்ளித் தாமமுந்தூய் மஞ்சனமும்
ஒல்லையினின் முன்புபோ லுடன்கொண்டு வந்தணைந்தார் (கசஅ)

வந்துதிருக் காளத்தி மலையேறி வனசரர்கள்
தந்தலைவ ரிமையோர் தலைவனார் தமையெய்தி
அந்தணனார் பூசையினை முன்புபோ லகற்றியபின்
முந்தைமுறை தம்முடைய பூசனையின் செயன்முடிப்பார். (கசகூ)

ஊனமுது கல்லையுடன் வைத்திதுமுன் னையினன்றால்
ஏனமொடு மான்கலைகண் மரைகடமை யிவையிற்றில்
ஆனவுறுப் பிறைச்சியமு தடியேனுஞ் சுவைகண்டேன்
றேனுமுடன் கலந்ததிது தித்திக்கு மெனமொழிந்தார் (கரு0)

இப்பரிசு திருவமுது செயவித்துத் தமமுடைய
ஒப்பரிய பூசனைசெய் தந்நெறியி லொழுகுவார்
எப்பொழுது மேன்மேல்வந் தெழுமன்பாற் காளத்தி
அப்பரொதி ரல்லுறங்கார் பகலவேட்டை யாடுவார். (கருக)

மாமுனிவர் நாடோறும் வந்தணைந்து வனவேந்தர்
தாமுயலும் பூசனைக்குச் சாலமிகத் தளர்வெய்தித்
தீமையென வதுநீக்கிச் செப்பியவா கமவிதியால்
ஆமுறையி லர்ச்சனைசெய் தந்நெறியி லொழுகுவரால் (கருஉ)

---

(கசரு) இநதனததை - விறகை. எரிகடையும அரணியினில - தீக்கடைகோலி ஞல். வதகசுவன எனபதை வககுவன என இடைக குறைதது குழூஉக்குறியாய் ஓதுவது வேடாகள் வழககு. (கசஎ) உணவு கொண்டு ஊட்டும - அவிஉணவை (முன்புதான) உண்டு (பினபு தேவாகளை) உண்பிக்கும. எரி - அக்கினிதேவன். (கசகூ) வனசரர்கள்தம - வேடாகளுடைய. (கருக) அல் - இரவில்.

நாணனொடு காடனும்போய் நாகனுக்குச் சொல்லியபின்
ஊணுமுறக் கமுமின்றி யணங்குறைவா ளையுங்கொண்டு
பேணுமக னார்தம்பால் வந்ததெல்லாம் பேதித்துக்
காணுநெறி தங்கள்குறி வாராமற் கைவிட்டார் (கருங)

முன்புதிருக் காளத்தி முதல்வனா ரருளோக்கால்
இன்புறுவே தகத்திரும்பு பொன்னானாற் போல்யாக்கைத்
தன்பரிசும் வினையிரண்டுஞ் சாருமல மூன்றுமற
அன்புபிழம் பாய்த்திரிவா ரவர்கருத்தி னளவினரோ. (கருச)

அந்நிலையி லன்பனா ரறிந்தநெறி பூசிப்ப
மன்னியவா கமப்படியான் மாமுனிவ ரருச்சித்திங்
கென்னுடைய நாயகனே யிதுசெய்தார் தமைக்காணேன்
உன்னுடைய திருவருளா லொழித்தருள வேண்டுமென (கருரு)

அன்றிரவு கனவின்க ணருண்முனிவர் தம்பாலே
மின்றிகழுஞ் சடைமவுலி வேதியர்தா மெழுந்தருளி
வன்றிறல்வே டுவனென்று மற்றவனை நீநினையே
லன்றவன்றன் செயறன்னை நாமுரைப்பக் கேளென்று (கருசு)

அவனுடைய வடிவெல்லா நம்பக்க லன்பென்றும்
அவனுடைய வறிவெல்லா நமையறியு மறிவென்றும்
அவனுடைய செயலெல்லா நமக்கினிய வாமென்றும்
அவனுடைய நிலையிவ்வா றறிநீயென் றருள்செய்வார். (கருஎ)

பொருப்பினில்வந் தவன்செய்யும் பூசனைக்கு முன்பென்மே
லருப்புறுமென் மலர்முன்னை யவைநீக்கு மாதரவால்
விருப்புறுமன் பெனும்வெள்ளக் கால்பெருகிற் றெனவீழ்ந்த
செருப்படியவ் விளம்பருவச் சேயடியிற் சிறப்புடைத்தால் (கருஅ)

உருகியவன் பொழிவின்றி நிறைந்தவவ னுருவென்னும்
பெருகியகொள் கலமுகத்திற் பிறங்கியினி தொழுகுதலா
லொருமுனிவன் செவியுமிழு முயர்கங்கை முதற்றீர்த்தப்
பொருபுனலி னெனக்கவன்றன் வாயுமிழும் புனல்புனிதம் (கருக)

இம்மலைவந் தெனையடைந்த கானவன்ற னியல்பாலே
மெய்ம்மலரு மன்புமேல் விரிந்தனபோல் விழுதலாற்
செம்மலர்மே லயனொடுமான் முதற்றேவர் வந்துபுனை
யெம்மலரு மவன்றலையா லிடுமலர்போ லெனக்கொவ்வா. (கசுய)

---

(கருங) அணங்கு உறைவாளையும - தெய்வராட்டியையும. (கருச) வேதகதது - இரசகுளிகையால. (கருஅ) சேய் - முருகன. (கருக) ஒருமுனிவன செவி உமிழும் - சன்னு எனனும் முனிவர் காதின வழியாய்விட்ட.

வெய்யகனற் பதங்கொள்ள வெந்துளதோ வெனுமன்பா
லையுமனத் தினிமையினி லையமிக மென்றிடலாற்
செய்யுமறை வேள்வியோர் முன்புதருந் திருந்தவியி
லெய்யும் வரிச் சிலையவன்றா னிட்டவூ னெனக்கினிய. (கசுக)

மன்பெருமா மறைமொழிகண் மாமுனிவர் மகிழ்ந்துரைக்கு
மின்பமொழித் தோத்திரங்கண் மந்திரங்க ளியாவையினு
முன்பிருந்து மற்றவன்றன் முகமலர வகநெகிழ்ந்த
வன்பினிலைந் தெலையல்லா லறிவுறா மொழிநல்ல. (கசுஉ)

உனக்கவன்றன் செயல்காட்ட நாளைநீ யொளித்திருந்தால்
எனக்கவன்றன் பரிவிருக்கும் பரிசெல்லாங் காண்கின்றாய்
மனக்கவலை யொழிகென்று மறைமுனிவர்க் கருள்செய்து
புனற்சடிலத் திருமுடியா ரெழுந்தருளிப் போயினார். (கசுங)

கனவுநிலை நீங்கியபின் விழித்துணர்ந்து கங்குலிடைப்
புனைதவத்து மாமுனிவர் புலர்வளவுங் கண்டுயிலார்
மனமுறுமற் புதமாகி வரும்பயமு முடனாகித்
துனைபுரவித் தனித்தேர்மேற் றோன்றுவான் கதிர்தோன்ற. (கசுச)

முன்னைநாள் போல்வந்து திருமுகலிப் புனன்மூழ்கிப்
பன்முறையுந் தம்பிரா னருள்செய்த படிநினைந்து
மன்னுதிருக் காளத்தி மலையேறி முன்புபோற்
பின்னுகனைப் பூசித்துப் பின்பாக வொளித்திருந்தார் (கசுரு)

வேறு.

கருமுகி லென்ன நின்ற கண்படா வில்லி யார்தாம்
வருமுறை யாறா நாளில் வருமிர வொழிந்த காலை
அருமறை முனிவ னார்வந் தணைவதன் முன்பு போகித்
தருமுறை முன்பு போலத் தனிப்பெரு வேட்டை யாடி. (கசுசு)

மாறிலூ னமுது நல்ல மஞ்சனப் புனலுஞ் சென்னி
ஏறுநாண் மலரும் வெவ்வே றியல்பினி லமைத்துக் கொண்டு
தேறுவார்க் கமுத மான செல்வனார் திருக்கா ளத்தி
ஆறுசேர் சடையார் தம்மை யணுகவந் தணையா நின்றார். (கசுஎ)

இத்தனை பொழுதுந் தாழ்த்தே னெனவிரைந் தேகு வார்முன்
மொய்த்தபல் சகுன மெல்லா முறைமுறை தீங்கு செய்ய
இத்தகு தீய புட்க ளீண்டமுன் னுதிரங் காட்டும்
அத்தனுக் கென்கொல் கெட்டே னடுத்ததென் றணையும் போதில். (கசுஅ)

(கசுச) புனைதவத்து - செய்யப்பட்ட தவத்தையுடைய. துனை - வேகமான.

அண்ணலார் திருக்கா ளத்தி யடிகளார் முனிவ னார்க்குத
திண்ணனார் பரிவு காட்டத் திருநய னத்தி லொன்று
துண்ணென வுதிரம் பாய விருந்தனர் தூரத் தேயவ்
வண்ணவெஞ் சிலையார் கண்டு வல்விரைந் தோடி வந்தார். (கசுகூ)

வந்தவர் குருதி கண்டார் மயங்கினார் வாயி னன்னீர்
சிந்திடக் கையி லூனுஞ் சிலையுடன் சிதறி வீழக்
கொந்தலர் பள்ளித் தாமங் குஞ்சியின் றலைந்து சோரப்
பைந்தழை யலங்கன் மார்பர் நிலத்திடைப் பதைத்து வீழ்ந்தார் (கஎ0)

விழுந்தவ ரெழுந்து சென்று துடைத்தனர் குருதி வீழ்வ
தொழிந்திடக் காணார் செய்வ தறிந்தில ருயிர்த்து மீள
அழிந்துபோய் வீழ்ந்தார் தேறி யாரிது செய்தா ரென்னா
எழுந்தனர் திசைக ளெங்கும் பார்த்தன ரெடுத்தார் வில்லும் (கஎக)

வாளியுந் தெரிந்து கொண்டிம் மலையிடை யெனக்கு மாறா
மீளிவெம் மறவர் செய்தா ருளர்கொலோ விலங்கின் சாதி
ஆளிமுன் னாகி யுள்ள விளைத்தவோ வறியே னென்று
நீளிருங் குன்றைச் சார னெடிதிடை நேடிச் சென்றார் (கஎஉ)

வேடரைக் காணார் தீய விலங்குகண் மருங்கு மெங்கு
நாடியுங் காணார் மீண்டு நாயனார் தம்பால் வந்து
நீடிய சோகத் தோடு நிறைமலர்ப் பாதம் பற்றி
மாடுறக் கட்டிக் கொண்டு கதறினார் கண்ணீர் வார (கஎங)

பாவியேன் கண்ட வண்ணம் பரமனார்க் கடுத்த தென்னோ
ஆவியி னினிய வெங்க ளத்தனார்க் கடுத்த தென்னோ
மேவினார் பிரிய மாட்டா விமலனார்க் கடுத்த தென்னோ
ஆவதொன் றறிகி லேன்யா னென்செய்கே னென்று பின்னும். (கஎச)

என்செய்தார் நீருமோதா னெம்பிரான் றிறத்துத் தீங்கு
முன்செய்தார் தம்மைக் காணேன் மொய்கழல் வேட ரொன்று
மின்செய்வார் பகழிப் புண்க டீர்க்குமெய் மருந்து தேடிப்
பொன்செய்தாழ் வரையிற் கொண்டு வருவனா னென்று போனார். (கஎரு)

---

(கஎ0) கொந்து அலர் - கொத்தாக அலர்ந்த. பைந்தழை அலங்கல் - பசிய தழைகளால் கட்டப்பட்ட மாலையைத்தரித்த. (கஎஉ) எனக்கு மாறாச்செய்தார் எனக்கூட்டுக. மீளி வெம் மறவர் உளர்கொலோ - வலியினையுடைய கொடிய வேடர்கள் இருக்கின்றனரோ? ஆளிமுன் ஆகியுள்ள - சிங்கமுதலான. (கஎச) ஆவியின் இனிய - என் உயிரினும் இனியவராய. மேவினார் பிரியமாட்டா - தம்மையடைந்தவர் பேரன்பு மிகுதியால் பிரியக்கூடாத. (கஎரு) என்றும் மின்செய்வார் பகழிபுண்கள் - எப்பொழுதும் பிரகாசிக்கின்ற அம்புகள் தைத்தலால் உண்டாகும் புண்களை.

நினைத்தனர் வேறு வேறு நெருங்கிய வனங்க ளெங்கும்
இனத்திடைப் பிரிந்த செங்க ணேறெனை வெருக்கொண் டெய்திப்
புனத்திடைப் பறித்துக் கொண்டு பூதநா யகன்பால் வைத்த
மனத்தினுங் கடிது வந்து மருந்துகள் பிழிந்து வார்த்தார். (கஎசு)

மற்றவர் பிழிந்து வார்த்த மருந்தினாற் றிருக்கா ளத்திக்
கொற்றவர் கண்ணிற் புண்ணீர் குறைபடா திழியக் கண்டும்
இற்றையின் னிலைமைக் கென்னோ வினிச்செய லென்று பார்ப்பார்
உற்றநோய் தீர்ப்ப தூனுக் கூனெனு முரைமுன் கண்டார். (கஎஎ)

இதற்கினி யென்க ணம்பா லிடந்தப்பி னெந்தை யார்கண்
அதற்கிது மருந்தாய்ப் புண்ணீர் நிற்கவு மடுக்கு மென்று
மதர்த்தெழு முள்ளத் தோடு மகிழ்ந்துமுன் னிருந்து தங்கண்
முதற்சர மடுத்து வாங்கி முதல்வர்தங் கண்ணி லப்ப (கஎஅ)

நின்றசெங் குருதி கண்டார் நிலத்தினின் றேறப் பாய்ந்தார்
குன்றெனை வளர்ந்த தோள்கள் கொட்டினார் கூத்து மாடி
நன்றுநான் செய்த விந்த மதியென நகையுந் தோன்ற
ஒன்றிய களிப்பி னாலே யுன்மத்தர் போல மிக்கார் (கஎகூ)

வலத்திருக் கண்ணிற் றங்க ணப்பிய வள்ள லார்த
நலத்தினைப் பின்னுங் காட்ட நாயனார் மற்றைக் கண்ணில்
உலப்பில்செங் குருதி பாய்க் கண்டன ருலகில் வேடர்
குலப்பெருந் தவத்தால் வந்து கொள்கையி னும்பர் மேலார் (கஅ0)

கண்டபின் கெட்டே னெங்கள் காளத்தி யார்கண் ணொன்று
புண்டரு குருதி நிற்க மற்றைக்கண் குருதி பொங்கி
மண்டுமற் றிதனுக் கஞ்சேன் மருந்துகை கண்டே னின்னும்
உண்டொரு கண்ணெக் கண்ணை யிடந்தப்பி யொழிப்பே னென்று (கஅக)

கண்ணுதல் கண்ணிற் றங்க ணிடந்தப்பிற் காணு நேர்பா
டெண்ணுவா ராதம் பிரான்றன் றிருக்கண்ணி லிடக்கா லூன்றி
உண்ணிறை விருப்பி னோடு மொருதனிப் பகழி கொண்டு
திண்ணனார் கண்ணி லூன்றத் தரித்திலர் தேவ தேவர் (கஅஉ)

செங்கண்வெள் விடையின் பாகர் திண்ணனார் தம்மை யாண்ட
அங்கணர் திருக்கா ளத்தி யற்புதர் திருக்கை யன்பர்

(கஎசு) வெருக்கொண்டு - (காளத்திநாதர்க்கு நோந்ததைக்குறித்து மனதில்) அச்சங்கொண்டு. (கஎஎ) உரை - பழமொழி (கஎஅ) மதர்த்து எழு - களித்து (பூரித்து) எழுந்த. (கஎகூ) ஒன்றிய - (மனதில்) பொருந்திய ; கலந்த. உன்மத்தர் - பயித்தியங்கொண்டவர். (கஅ0) கொள்கையில் - பக்தியில். (கஅஉ) காணும் நேர்பாடு எண்ணுவார் - தமக்கு இருகண்களும் இல்லாமையால் இறைவன் கண்ணுள்ள விடத்தைப் பரிசத்தால் அறிய எண்ணினவராய்.

தங்கண்முன் னிடக்குங் கையைத் தடுக்குமூன் றடுக்கு நாக
தங்கண ரமுத வாக்குக் கண்ணப்ப நிற்க வென்ற. (கஅங)

கானவர் பெருமா ஞர்தங் கண்ணிடந் தப்பும் போது
மூனமு துகந்த வைய ருற்றுமுன் பிடிக்கும் போது
ஞானமா முனிவர் கண்டார் நான்முகன் முதலா யுள்ள
வானவர் வளர்பூ மாரி பொழிந்தனர் மறைக ளார்ப்ப (கஅச)

பேறினி யிதன்மே லுண்டோ பிரான்றிருக் கண்ணில் வந்த
ஊறுகண் டஞ்சித் தங்க ணிடந்தப்ப வுதவுங் கையை
ஏறுயர்த் தவர்தங் கையாற் பிடித்துக்கொண் டென்வ லத்தின்
மாறிலாய் நிற்க வென்று மன்னுபே ரருள்பு ரிந்தார். (கஅரு)

மங்குல்வாழ் திருக்கா ளத்தி மன்னனா கண்ணிற் புண்ணீர்
தங்கணான் மாற்றப் பெற்ற தலைவர்தா டலைமேற் கொண்டே
கங்கைவாழ் சடையார் வாழுங் கடவூரிற் கலய னாராம்
பொங்கிய புகழின் மிக்கார் திருத்தொண்டு புகல லுற்றேன் (கஅசு)

கண்ணப்பநாயனார்புராண முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - அஙரு



பொத்தப்பி நாட்டிலே, உடுப்பூரிலே, வேடர்களுக்கு அதிபதியும், வில்வித்தையில் கைதேர்ந்தவனும், பூர்வசன்மத்தில் பெருந்தவத்தினைச் செய்தவனும் ஆகிய நாகன் என்பவன் ஒருவன் இருந்தான். அவன் தத்தை என்பவளை மணந்து இல்லறம் நடாத்திவருநாளில் புத்திரப்பேறின்மையைக் குறித்துப் பெரிதும் துக்கித்து, முருகவேள் சந்நிதியிலே கோழிகளையும், மயில்களையும் விடுத்து, அக்கடவுளர் பெருமானைப் பூசித்து வழிபட்டுவந்தான். கருணைக்கடலாகிய காங்கேயன் அருளால் அவன் மனைவி கருப்பமடைந்து ஒரு புதல்வனைப் பெற்றாள். அக்குழவியை நாகன் கையிலே ஏந்தியபோது திண்ணெனவா யிருந்தபடியால், அதற்குத் திண்ணன்என்று திருநாமஞ் சூட்டினன். திண்ணனார் வேடர்கள் போற்றவளர்ந்து, வில்வித்தை பயிலும் பருவத்தை அடைந்து, நல்லாசிரியர்பால் தினந்தோறும்

---

(கஅங) மூன்று அடுக்கு - மூன்று அடுக்காக. நாக கங்கணர் பாம்பைக் கங்கணமாகத் தரித்தவர். மூன்றடுக்கு என்றது நில்லுகண்ணப்ப நில்லுகண்ணப்ப நில்லுகண்ணப்ப என மும்முறை அருளியதாம். இதனை.—"கண்ணிலும் வடிக்கணை மடுத்தனன் மடுத்தலும், நில்லுகண் ணப்ப நில்லுகண் ணப்பவென், னன்புடைத் தோன்ற னில்லு கண் ணப்பவென, றின்னுரையதனொடும்" என்னுங் கண்ணப்பதேவர் திருமறத்தானும், "மறைமொழி பிறந்த தமவாய் மலர்திறந் தருட்பே ராழி, இறைவர்கண் ணப்ப நிற்க வென்முக்கால் மொழிந்துகொண்டே" என்னுஞ் சீகாளத்திபுராணத்தானும் உணர்க. (கஅச) ஞானமாமுனிவர் - சிவகோசரியார். (கஅரு) ஏறு உயர்த்தவர் - இடபக் கொடியையுடைய சிவபிரான். (கஅசு) மங்குல்வாழ் மேகங்கள் தவழும்.

முறையாக அவ்வித்தையைப்பயின்றுவந்தார். அங்ஙனம்பயின்று அதிசமர்த்தராய் விளங்கும்போது, ஓர்நாள் வேடர்கள் நாகனிடம்வந்து "அரசே! மாதந்தோறும் வேட்டையாடுதல் தவறியபடியால், புலி கரடி பன்றி முதலிய விலங்குகள் அதிகரித்துப் புனங்களை அழிக்கின்றன" என்று முறையிட்டார்கள். அதைக்கேட்ட நாகன் வேடர்களைநோக்கி "நான் மூப்பினாலே முன்போல வேட்டையாட வல்லமையில்லாதவனா யிருக்கின்றேன்; என்மகன் திண்ணனை உங்களுக்குத் தலைவனாக்குகின்றேன்" என்றுசொல்லித் தேவராட்டியை அழைப்பித்துத் திண்ணனார்க்குத் தன் அரசுரிமையைக் கொடுத்தான்

வேடராசர் ஆகிய திண்ணனா வேட்டைக்குரிய ஆடைகளையும், அணிகளையும் அணிந்துகொண்டு மறவர்களுடன் காட்டையடைந்து, வேட்டையாடித் துட்ட மிருகங்களைத் தொலைததுவரும்போது, ஓர்பன்றி வேடர்கள் கட்டிய வலைகள் அறும்படி கிளம்பி வேகமாகவோடியது அதைக்கண்ட வேடர் பெருமான் விரைவாக அதன் அடிவழியே சென்றார். அவரைப்பிரியா நாணன் காடன்என்கிற இரண்டுகோளைகள் மாததிரம் அவருக்குப்பின்னே ஓடினார்கள் அப்பன்றியானது நாய்களுக்குந் தப்பி நெடுந்தூரம் ஓடி, இளைதது, ஒருமலையடியிலே சுற்றுவழியுடைய ஒரு சோலையையடைந்து, வலிகுன்றி மரச்செறிவில் நின்றது திணணனர் அதைக்கண்டு, நெருங்கி, உடைவாளையுருவி, அவ்வேனததைக் குததினா அவரைப் பின்தொடர்ந்து வந்த நாணன் இறநத கேழலைககணடு "காடனே! இதனைப் பலகாதங்கள் தூரம் தொடர்நதுவந்து இளைததோம; ஆடவராம் வேடர்பிரானே இதனைக்கொன்றார்" என்று ஆச்சரியப்பட்டுக் கூறினன் உடனே அவ்விருவர்களும திண்ணனரைவணஙகி "நாம் நெடுந்தூரம் வந்தபடியால பசி நம்மை வருத்துகினறது; இப்பன்றியைக காய்சசிததின்று, தண்ணீர்குடித்து, பசியைத்தணித்து, வேட்டைககாட்டுககு மெல்லப்போவோம்" என்றாகள் அதைக்கேட்ட திண்ணனா "இககாட்டிலே தண்ணீர் எங்கே இருக்கின்றது" என்று வினவ; நாணன் "இப்பெரிய தேக்குமரத்திற்கு அப்புறஞ்சென்றால நீண்ட குன்றினுககு அயலில பொன் முகலியாறு ஓடுகின்றது" என்றான். திண்ணனர் "அஙகே போவோம்; இப்பன்றியை எடுத்துக்கொண்டு வாருஙகள்" என்றுசொலலி, அம்மலையை நோக்கிப் போனர்; அவ்வாறு போம்போது அரைக்காததத்துக்கு அப்பால் உள்ள திருக்காளத்தி மலையைததரிசித்து "நாணனே! நமககு முன்னே தோன்றுங குன்றினுக்குப்போவோம்" என்ன, நாணன் "இம்மலையில் குடுமித்தேவர் இருக்கின்றார்; நாமபோனல் கும்பிடலாம" என்றான். சிவநேயராகும் பெருமான் "இவவரையை அணுக அணுக என்மேலுள்ள பாரம் சிறிது சிறிதாகக் குறைகினறதுபோல இருககினறது; என்னல் இயமபக்கூடாத ஓர் விருப்பமும் விளையாநிற்கின்றது" என்றுகூறி, வேகமாகசசென்று, பொன்முகலியாற்றை யடைநது, அதன் கரையிலுள்ள ஒரு மாநிழலிலே, கொண்டுவந்த கேழலை இடுவிததது, காடனைநோக்கி "நீக்கடை கோல் செய்து நெருப்பை யுண்டாக்கு; நாஙகள் குடுமித்தேவரைத் தரிசித்து வருவோம்" என்றுகூறி, நாணனேடு பொன்முகலியைக் கடந்து, மலைச்சாரலை அடைந்தார்.

மலையிலே நாணன் முன்னே ஏற, பின்னே திண்ணனெம்பெருமான் பேரன்போடு ஏறிப்போனர். அவர் சிவபிரானைத் தரிசிப்பதற்குமுன்னே, சிவனர் அவரைத் திருக்கண்ணேக்கஞ் செய்தார். செய்ததும், வேடர்கோ

மான் சிவமாய் விளங்கிச் சிவலிங்கப் பெருமானைக்கண்டு, கட்டித் தழுவி, மோந்து, நெடுநேரம் பெருமூச்சு விட்டுக் கொண்டு நின்று, தேகமெல்லாம் மயிர் சிலிர்த்துப் புளகம் பொங்க, மலர்க்கண்களினின்றும் ஆனந்த அருவி பாய "இவர் அடியேனுக்கு அகப்பட்டார்; அச்சோ" என்று கூறி, ஆனந்த முற்று, 'ஐயையோ! சிங்கம் புலி கரடி முதலிய கொடிய மிருகங்கள் உலவும் இக்கானத்தில தேவரீர் வேடரைப்போலத் தனியே இருப்பதென்னோ' என்று வருந்திக் கையிலிருந்த விலலுக்கீழே விழுவதையும் உணராதவராய்ப் பரவச முற்ருர் பின்பு தெளிந்து 'இவர் முடிமீது நீரைவார்த்துப் பூககளையும், பச்சிலைகளையும் இட்டார் யாரோ' என்ன; அருகிருந்த நாணன் "நான் முன்னொருநாள் உமது தந்தையாருடன் வேட்டையாடிக் கொண்டு, இம்மலைக்கு வந்தேன்; அப்போது ஓர் அந்தணர் இவர்மீது நீரைவார்த்து, பச்சிலைகளையும், மலர்களையும் சூட்டி, உணவையூட்டி, முன்னின்று சில வார்த்தைகளைச் சொல்லிக் கொண்டிருந்ததைப் பார்த்தேன் அவரே இதைச் செய்திருக்கவேண்டுமே" என்ருன். அதைக்கேட்ட அடியவர் இச்செய்கைகளே இறைவனுக்கு இனியவை எனக் கடைப்பிடித்துக் கொண்டு "ஐயோ! இவர் இங்கே தனியராய் இருக்கின்ருர்; இவர் அமுது செய்ய இறைச்சி யளிப்பாரும் இல்லை; இவரைப் பிரியவும் ஒண்ணுது; என்ன செய்வேன்? எப்படியாவது இவருக்கு இறைச்சி கொண்டு வரவேண்டும்" என்று நினைத்து, சிவபிரானைவிட்டுச் சிறிது தூரம் போவார், மீண்டும் திரும்புவார்; தழுவி அணைத்துக்கொள்வார், திரும்பவும் போவார்; அன்புடன் சுவாமியைத் திரும்பிப் பார்த்து நிற்பார்; "நாதனே! தேவரீர் திருவமுது செய்ய நானே இறைச்சிகொண்டு வருவேன்" என்பார்; "நீர்தனியராய் இருக்கிறபடியால் உம்மைப் பிரியமாட்டேன்; நீர் பசியோடிருக்கின்றமையால் இங்கே நிற்கவுமாட்டேன்" என்று கூறிக்கொண்டுகண்களில் ஆனந்தவெள்ளம்பெருக நிற்பார் பின்பு ஒருவாறு துணிந்து, விலலை எடுத்துக்கொண்டு, சுவாமியைத் தொழுது, நாணன் பின்னேவர, மலையினின்றும் இழிந்து, பொன்முகலியாற்றைக் கடந்து, அங்குள்ள சோலையிலே நுழைந்தார்

அவரைக் கண்ட காடன் எதிரே சென்று, பணிந்து "தீக்கடைந்து வைத்துள்ளேன; வராகத்தின அவயவங்களை யெல்லாம் உமது அடையாளப்படியே பார்த்துக்கொள்ளும் நீர் இவவளவு நேரம் தாழ்த்தது என்னை" என்ருன அப்பொழுது நாணன நிகழ்ந்தவைகளைக் கூறி "குடுமித் தேவர்க்கு இறைச்சிகொண்டு போகும் பொருட்டு இங்கே வந்திருக்கின்ருர் இவர் நமது குலத்தலைமையை விட்டுவிட்டார்; அததெய்வ வசமாய்விட்டார்" என்றியம்பினுன் அதைக் கேட்டகாடன் "திண்ணனுரே! என்னபயித்தியங் கொண்டீர்" என்ன; கானவர் பெருமான் அவனைப்பாராது, பன்றியை நெருப்பிலே வதக்கி, அதனுடைய இனிய தசைகளை வெவ்வேருக அம்பினுல் ஈர்ந்து, அம்பிலே கோத்துக்காய்ச்சி, பதமாக வெந்தவுடன், வாயிலிட்டு, அதுக்கிப்பார்த்து, இனிய இறைச்சிகளைக் கல்லையிலேவைத்து, மற்றவைகளைப் புறத்திலே துப்பினுர் அதைப்பார்த்துக் கொண்டிருந்த நாணனும், காடனும் "இவர் பயித்தியங் கொண்டுள்ளார்; பசியுடையராயிருந்தும் இறைச்சிகளை உண்ணுது, வீணுக இலைக்கலத்திலும், புறத்திலும் உமிழ்ந்து விடுகின்ருர் எமக்குக் கொடுக்கின்ருர் இல்லை; இவர்க்குத் தெய்வப் பயித்தியம் பிடித்துளது; நாம் என்னசெய்வது? தேவராட்டியையும், நாகனையும் அழைத்துக் கொண்டுவந்து, இவர்மயலை யொழிக்கவேண்டும்; காட்டிலேவந்துள்ள ஏவலாளரையுங்கொண்டு போவோம்" என்று எண்ணிப் போனுர்கள்.

சிவமாய் விளங்குந் திண்ணனர், அவர்கள் சென்றதை அறியாதவராய், இறைச்சியைக் கல்லையிலே வைத்து, திருமஞ்சன மாட்டக்கருதி, பொன் முகலியாற்றின் சலத்தை வாயினால் முகந்து, புஷ்பம் கொய்து குடுமியிலே செருகி, ஒருகையில் தனுவையும் அம்பையும், மற்றக்கையிலே இறைச்சிவைத்த இலைக்கலத்தையும் தாங்கிக்கொண்டு "என் உயிர்க்குயிராய பெருமான் பசியால் மெலிந்தனரோ" என்று இரங்கி, ஏங்கி, இறைவனர் திருமலையை அடைந்தார். அடைந்து, சிவனர் திருமுடி மீதிருந்த மலர்களைக் கால் செருப்பால் மாற்றி, வாயிலுள்ள திருமஞ்சன நீரைத் தமமிடத்து அடங்காமல் எழும் அன்பை உமிழ்பவர்போலத் திருமுடிமீது உமிழ்ந்து, தமது குடுமியில் செருகி வந்த பூக்களைச்சாத்தி, கல்லையில் படைத்த மாமிசத்தைத் திருமுன்னே வைத்து "இவ்விறைச்சிகளை நான் சுவைபார்த்துப் படைத்தேன்; அமுதுசெய்தருளும" என்று இன்சொற் கூறி உணபித்தார். உணபித்த பின்னர் சூரியன் அஸ்தமயனமாக, இரவில் கொடிய விலங்குகள் இறைவர்க்குத் தீங்குசெய்யுமெனக்கருதி அஞ்சித் திருக்கையில் சிலையைத் தாங்கிக்கொண்டு, மறந்தும் கண்ணிமையாமல் சிவபிரானை நோக்கிக்கொண்டு நின்றார் அங்ஙனம்நின்ற அன்பிற்பெரியார் பொழுது விடிந்தவுடன் காளத்திநாதற்கு மாமிசம் கொண்டுவரும் பொருட்டு வேட்டைக்குப்போனர்.

திண்ணனர் சென்றபின்பு திருக்காளத்தியப்பரைத் தினந்தோறும் விதிப்படி அருச்சிப்பவராகிய சிவகோசரியார் என்பவர் புஷ்பம், திருமஞ்சனம் முதலியவைகளை எடுத்துக்கொண்டு காளத்திநாதர் திருச்சந்நிதானத்துக்குப்போனர் அங்கே வெந்த இறைச்சிஎலும்புகளைப் பார்த்து அகல மிதித்து ஓடி "தேவர்பெருமானே! இவ்வநுசிதத்தைச் செய்தவர்யாவர்; வேடப்புலையர்களே இதைச் செய்திருத்தலவேண்டும்; இப்படி அவர்கள் செய்ய தேவரீர் திருவுள்ளம் இசைந்தீரோ" என்று அழுது வீழ்ந்து கலங்கினர் பின்பு "சிவபெருமானுக்குப் பூசை தவறும்படி நானிருப்பதில் என்ன பயன்" எனக்கருதி, இறைச்சி முதலியவற்றைத் திருவலகால மாற்றிப் பொன்முகலியில் ஸ்நானஞ்செய்து விரைவாகச் சந்நிதியடைந்து, பிராயச்சித்தம்பண்ணி, சுவாமிக்கு அபிடேகஞ்செய்து, பூக்களைச்சாத்தி, வேதவாக்கியங்களாலே துதிசெய்து, தபோவனத்தை யடைந்தார்

வேட்டையாடப்போன திண்ணனர் மான், கலை, மரை, பன்றி என்னும் மிருகங்களைக்கொன்று, அவையிற்றின் தசையை முன்போலவே அம்பினல் கிழித்துக்காய்ச்சிப் பக்குவப்படுத்திக் கல்லையிலேவைத்து, அதனுடன் தேனைக்கலந்து, முன்போல மஞ்சனமும் மலருங்கொண்டு, குன்றிலேறி, சிவசந்நிதியடைந்து, முன்போல பூசைசெய்து, இறைச்சியைத் திருமுன்னே வைத்து "இது முன்கொண்டு வந்தது போன்றதன்று; பன்றி, மான், கலை, மரை, கடமை யிவையிற்றின் இறைச்சி; இதனை அடியேனுஞ் சுவைபார்த்திருக்கின்றேன், இதனுடன் தேனுங்கலந்துளேன்; தித்திக்கும்; அமுதுசெய்தருளும்" என்றின்சொற்கூறி உணபித்தார் இப்படி பகலில் வேட்டையாடி விலங்குகளை வதைத்து, அவைகளின் இறைச்சியைவதக்கி இறைவர்க்கு ஊட்டியும், இரவிலே உறங்காமல் காளத்தியப்பர் திருச்சந்நிதி முன்னே நின்றும் திருத்தொண்டை நிகழ்த்திவந்தார் சிவகோசரியாரும் நாடோறும் சிவசந்நிதிக்கு வந்து, வனவேந்தர் பூசனையை மாற்றி, சிவாகம விதிப்படி அருச்சித்துக் கொண்டுவந்தார். அன்பாய் விளங்கும் அண்ணலைப் பிரிந்த நாணனும், காடனும் நாகனிடஞ் சென்று திண்ணனர் செய்கையைச் சொல்ல, நாகன் ஊண் உறக்கமின்றி, தேவராட்டியை அழைத்துக்கொண்டு

மைந்தரிடம் வந்து பற்பலவழியால் வசிக்கவும், அவர் தன்வசமாகாமையைக் கண்டு மனநொந்து வீட்டுக்குத் திரும்பினன்.

திண்ணனார் செய்கையைத் தீமையெனக் கருதித் துயர்உறும் சிவகோசரியாரை உவப்பிக்க, காளத்தியப்பர் ஐந்தாநாளிரவில் அவருக்குச் சொப்பனத்திலே தோன்றி "அன்பனே! அவனைவேடுவன் என்று நீ நினைக்க வேண்டாம். அவனுடைய வடிவெல்லாம நம்மீது பொருந்தியுள்ள அன்பின் வடிவமே. அவனுடைய அறிவெல்லாம் நமைஅறியும் அறிவே. அவனுடைய செயல்கள் எல்லாம் நமக்கு இனிய செயலகளே உன்னால் இடப்பட்ட பூக்களை நீக்க அவன் வைக்கும் செருப்படி, நமது முருகன் அடியினைப் பார்க்கிலும் இன்பதனைத் தருகிறது அவன் நம்மீது உமிழும் நீரானது, அன்பு நிறைந்த அவன்உருவம் என்னும் கொள்கலததினின்றும் ஒழுகுகின்றபடியால், கங்கைமுதலிய தீர்த்தங்களைவிட புனிதமாயிருக்கிறது அவன் தலைமயிரில் செருகிக்கொணடு வந்து எம்மீது சாததும் மலர்கள், அவன் அன்பானது விரிந்து விழுதல்போல விழுதலால், அயன் அரி முதலிய தேவர்கள் நமக்கிடும் பூக்கள் அவைகளுக்குச சிறிதும் சமானமாகா. அவன் நமக்கூட்டும் இறைச்சி, பதமாக வெந்துளதோ என்று பெருத்தெழும் அன்பால் மனங் குழைந்து, சுவைபார்த்து ஊட்டப்படுகின்றபடியால், வேள்விசெய்வோர் அளிக்கும் அவியினும் அதிகசுவையாய் இருககின்றது. அவன் நம்முன்னின்று மொழியுஞ் சொற்கள், அன்பினால் நம்மையன்றி வேறொருவரையும் அறியாது வெளிப்படலால், மறைகளும், மாமுனிவர்களும் மகிழ்ந்து உரைக்கும் இன்பமொழித் தோத்திரங்களினும் மிக இனியனவாயிருககின்றன நாளை நீ நமக்குப்பின் ஒளித்திருந்தால், அவன் நமக்கு அன்பால் செய்யும் செய்கைகளைக் காணபாய் மனக்கவலை ஒழித்துவிடு" என்றருளி மறைந்தருளினார். சிவகோசரியார் விழித்து, பொழுது விடியுமளவும் கணதுயிலாதவராய், வைகறை எழுந்து, பொன் முகலியில் ஸ்நானஞ்செய்து, காளத்திமலையிலேறி முன்போல முதல்வனை அருச்சித்துப் பின்புறம் ஒளித்திருந்தார்.

சிவகோசரியார் மலைக்கு வருவதற்கு முன்னே வேட்டைக்குச்சென்ற திண்ணனார் வேட்டையாடி இறைசசியையும், பூக்களையும், மஞ்சனத்தையும் முன்போலத் தாஙகிக்கொணடு விரைவில் திரும்பும்போது துர்ச்சகுனஙகளைக்கணடு 'இவைகள் உதிரஙகாட்டும்; என் ஐயனுக்கு என்னநேரிட்டதோ' என்று மனஙகலங்கி விரைவாக ஓடிவந்தார். பத்திவலையிற்படும் பரமசிவன் சிவகோசரியார்ககுத் திண்ணனார் அன்பின் பெருமையைக் காட்டத் தமது வலக்கணணினின்றும் இரததஞ் சொரியச் செய்தார். ஓடிவந்த திணணனெம் பெருந்தகையார் இரத்தஞ் சொரிதலைக் கணடார். கணடதும், மயங்கினார்; வாயிலுள்ள மஞ்சனநீர் சிந்தவும், கையிலுள்ள ஊன்சிதறவும், வில்விழவும, தலையில் செருகப்பட்டமலர்கள் அலைந்து சோரவும் பதைத்து வீழ்ந்தார்; வீழ்ந்தவர் எழுந்துபோய் இரத்தத்தைத் துடைத்தார்; துடைத்தும், குருதி நில்லாதிருத்தலைக்கணடு, பெருமூச்சுவிட்டு வீழ்ந்தார். பின் ஒருவாறுதெளிந்து எழுந்து, "என்பெருமானுக்கு இத்தீங்கைப்பகைவர்களாகிய வேடர்கள் செய்தார்களோ? கொடிய மிருகஙகள் செய்தனவோ?" எனக் கூறி வில்லைத்தாங்கி, மலைப்பக்கங்களிலே நெடுந்தூரம் தேடிப்போனார். வேடர்களையேனும் விலங்குகளையேனும் காணுதவராய்த் திரும்பித் திருக்காளத்தி நாதனாரைக் கட்டிக்கொண்டு "என் உயிரினுஞ் சிறந்த தலைவனார்க்கு நேர்ந்ததென்னோ! அடைந்தவர்கள் அன்பினால் பிரியமாட்டாத ஆண்டவர்க்கு விளைந்ததென்னோ! என்செய்கேன்" என்று கண்ணீர் சோரக் கதறினார். பின்னும் "இந்த இரத்தம் என்னசெய்தால் நிற்கும்; இத்தீங்கான

செய்கையை முன்னே செய்தவர்களைக் காணேன். வேடர்கள் அம்பால் உண்டாகும் புண்களைத்தீர்க்கும் பச்சிலைமருந்துகளை மலையடிவாரத்துக்குப் போய்க் கொண்டுவருவேன்' என்று சொல்லிககொண்டு, வனங்களெங்குந் திரிந்து பச்சிலைகளைப் பறித்துக் கொண்டுவந்து பிசைந்து, சங்கரன் கண்ணில் வார்த்தார். அதனாலும் இரத்தம் நில்லாமையைக் கருதி ஆவிசோர்ந்து, என்ன செய்வதென்று ஆலோசிததுக்கொண்டு நின்றார். நிற்கும்போது 'ஊனுக்கு ஊனிடல் வேண்டும்' என்னும் மூதுரை ஞாபகத்துக்கு வந்தது. உடனே தன்வலக்கண்ணை அம்பால்தோண்டி அரனார் திருக்கண்ணில் அப்ப, ஒழுகிக்கொண்டிருந்த இரத்தம் நின்றுவிட்டது. அதைக்கண்ட அன்புருவர் குதித்தார்; தோள்களைத்தட்டி ஆனந்தக் கூத்தாடினார்; 'நான் செய்த செய்கை மிகவும் நன்று' என்று கூறி மகிழ்ந்துகளிப்பால் உன்மத்தர்போலாயினார். சிவபிரான் திண்ணனார் உண்மையைச் சிவகோசரியார்க்கு இன்னுங்காட்ட இடக்கண்ணிலும் இரத்தம் ஒழுகச் செய்தார் தேவர்முனிவர்களினுஞ் சிறந்த சிவவேடநாயகர் கண்டு 'இதற்கு நான் அஞ்சேன்; மருந்தை கண்டிருக்கிறேன்; இன்னும், எனக்கொரு கண்ணுண்டு; அதையிடந்து அப்பி ஐயன் நோயைத் தீர்ப்பேன்' என்று துணிந்து, சிவபெருமான்கண்ணில் தம்கண்ணைத் தோண்டியப்பும்போது, சுவாமியின்கண் இவ்விடத்திலிருக்கின்றதென்று அறியும் பொருட்டு, காளத்தி நாதர் திருக்கண்ணில் தமது இடக்காலை ஊன்றிக்கொண்டு, உள்ளத்தெழும் பெருவிருப்பததோடு தங்கண்ணைத்தோண்ட அம்பை ஊன்றினார். தடங்கருணைப் பெருங்கடலாகிய தேவதேவர் சகிக்கலாற்றாதவராய் 'நில்லுகண்ணப்ப நில்லுகண்ணப்ப நில்லுகண்ணப்ப' என்றருளிச்செய்து, திண்ணனார் கண்ணைத்தோண்டுங் கையைத் திருக்கரத்தால் பிடித்துக்கொண்டார் அதைக்கண்ட சிவகோசரியார் ஆனந்தவாரிதியில் ஆழ்ந்தார். பிரமாதிதேவர்கள் பூமாரி பொழிந்தார்கள். கடம்பனைப்பெற்ற காரிகைபாகர் கண்ணப்பர் திருக்கையைப் பிடித்துக்கொண்டு 'அன்பிற் பெரியோய்! என் வலப்பக்கத்தில் இருக்கக்கடவாய்' என்று பேரருள் புரிந்தார்.

# குங்குலியக்கலயநாயனார் புராணம்.

வாய்ந்தநீர் வளத்தா லோங்கி மன்னிய பொன்னி நாட்டின்
எய்ந்தசீர் மறையோர் வாழு மெயிற்பதி யெறிநீர்க் கங்கை
தோய்ந்தநீள் சடையார் பண்டு தொண்டர்மேல் வந்த கூற்றைக்
காய்ந்தசே வடியார் நீடி யிருப்பது கடவூ ராகும் (க)

வயலெலாம் விளைசெஞ் சாலி வரம்பெலாம் வளையின் முத்தம்
அயலெலாம் வேள்விச் சாலை யணையெலாங் கழுநீர்க் கற்றை
புயலெலாங் கமுகின் காடப் புறமெலா மதன்சீர் போற்றல்
செயலெலாந் தொழில்க ளாறே செழுந்திருக் கடவூ ரென்றும். (உ)

(க) வாய்ந்த - சிறந்த. சீர் எய்ந்த மறையோர் - சிறப்புப் பொருந்திய வேதியர்கள். எயில் - மதில். தொண்டர் - மார்க்கண்டேயர். (உ) அணை எலாம் கழுநீர்கற்றை நீர்க்கால் அணைகளில் எல்லாம் செங்கழுநீர்மலர்க் கூட்டங்கள். கமுகின் காடு எல்லாம் புயல் - கமுகஞ் சோலைகளிலெல்லாம் மேகங்கள். அதன் சீர்போற்றல் - அந்நிலவளங்களைச் சீர்படுத்தல். செயல் - (வேதியர்கள்) செய்கை.

குடங்கையி னகன்ற வுண்கட் கடைசியர் குழுமி யாடும்
இடம்படு பணைதோறு மெழுவன மருதம் பாடல்
வடம்புரி முந்நூன் மார்பின் வைதிக மறையோர் செய்கைச்
சடங்குடை யிடங்க டோறு மெழுவன சாமம் பாடல் (௩)

துங்கநீண் மருப்பின் மேதி படிந்துபால் சொரிந்த வாவிச்
செங்கயல் பாய்ந்து வாசக் கமலமுந் தீம்பா லூறு
மங்குறோய் மாடச் சாலை மருங்கிறை யொதுங்கு மஞ்சும
அங்கவை பொழிந்த நீரு மாகுதிப் புகைப்பா லூறும். (௪)

மருவிய திருவின் மிக்க வளம்பதி யதனில் வாழ்வார்
அருமறை முந்நூன் மார்பி னந்தணர் கலய ரென்பார்
பெருநதி யணியும் வேணிப் பிரான்கழல் பேணி நாளும்
உருகிய வன்பு கூர்ந்த சிந்தையா ரொழுக்க மிக்கார் (௫)

பாலனா மறையோன் பற்றப் பயங்கெடுத் தருளு மாற்றான்
மாலுநான் முகனுங் காணா வடிவுகொண் டெதிரே வந்து
காலனா ருயிர்செற் றார்க்குக் கமழ்ந்தகுங் குலியத் தூபஞ்
சாலவே நிறைந்து விம்ம விடும்பணி தலைநின் றுள்ளார் (௬)

கங்கைநீர் கலிக்குஞ் சென்னிக் கண்ணுத லெம்பி ரார்க்குப்
பொங்குகுங் குலியத் தூபம் பொலிவுறப் போற்றிச் செல்ல
அங்கவ ரருளி னாலே வறுமைவந் தடைந்த பின்னுந்
தங்கணா யகர்க்குத் தாமுன் செய்பணி தவாமை யுய்த்தார் (௭)

இந்நெறி யொழுகு நாளி லிலம்பாடு நீடு செல்ல
நன்னில முற்றும் விற்று நாடிய வடிமை விற்றும
பன்னெடுந் தனங்கண் மாளப் பயின்மனை வாழ்க்கை தன்னின்
மன்னிய சுற்றத் தோடு மக்களும் வருந்தி னார்கள் (௮)

யாதொன்று மில்லை யாகி யிருபக லுணவு மாறிப்
பேதுறு மைந்த ரோடும் பெருகுசுற் றத்தை நோக்கிக்

---

(௩) குடங்கையின - உள்ளங்கையைப் பார்க்கிலும். கடைசியர் - பள்ள ஸ்திரீகள். குழுமி - கூட்டமாகக் கூடி. இடம்படு பணைதோறும் - விசாலமாகிய வயல்கள்தோறும். (௪) துங்க நீள் மருப்பின்மேதி படிந்து - உயர்வாக நீண்ட கொம்பினையுடைய எருமைகள் நீரிற் படிந்து. மங்குல் தோய் மாடச் சாலைமருங்கு - ஆகாயமளவும் உயர்ந்த மண்டபங்களின் பக்கங்களில் இறை ஒதுங்கும் மஞ்சும - சிறிதுநேரம் தங்கும் மேகமும். ஆகுதி புகைப்பால் நாறும - (வேதியர்கள் யாகசாலையில்) ஆகுதி செய்யும் புகையினிடத்துக் கமழும். (௫) கூர்ந்த - மிகுந்த. (௬) பாலனும் மறையோன - சிறுவராய மார்க்கண்டேயர். விம்ம - பரவ. (௭) தவாமை - தவறாமை. (௮) இலம்பாடு நீடுசெல்ல - வறுமை அதிகரிக்க. அடிமை - அடிமையாட்களை. (௯) பேதுறும - வருந்தும.

காதல்செய் மனைவி யார்தங் கணவனார் கலய னார்கைக்
கோதின்மங் கலநூற் றாலி கொடுத்துநெற் கொள்ளு மென்றார். (௯)

அப்பொழு ததனைக் கொண்டு நெற்கொள்வா னவரும் போக
ஒப்பில்குங் குலியங் கொண்டோர் வணிகனு மெதிர்வந் துற்றான்
இப்பொதி யென்கொ லென்றார்க் குள்ளவா றியம்பக் கேட்டு
முப்புரி முந்நூன் மார்பர் முகமலர்ந் திதனைச் சொன்னார். (௧௦)

ஆறுசெஞ் சடைமேல் வைத்த வங்கணர் பூசைக் கான
நாறுகுங் குலிய மீதே லின்று பெற்றே னல்ல
பேறுமற் றிதன்மே லுண்டோ பெறாப்பேறு பெற்று வைத்து
வேறினிக் கொள்வ தென்னென் றுரைத்தெழும் விருப்பின் மிக்கார் (௧௧)

பொன்றரத் தாரு மென்று புகன்றிட வணிகன் றானும்
என்றர விசைந்த தென்னத் தாலியைக் கலய ரீந்தார்
அன்றவ னதனை வாங்கி யப்பொதி கொடுப்பக் கொண்டு
நின்றிலர் விரைந்து சென்றார் நிறைந்தெழு களிப்பி னோடும் (௧௨)

விடையவர் வீரட் டானம் விரைந்துசென் றெய்தி யென்னை
உடையவ ரெம்மை யாளு மொருவர்தம் பண்டா ரத்தில்
அடைவுற வொடுக்கி யெல்லா மயர்த்தெழு மன்பு பொங்கச்
சடையவர் மலர்த்தாள் போற்றி யிருந்தனர் தமக்கொப் பில்லார் (௧௩)

அன்பரங் கிருப்ப நம்ப ரருளினா லளகை வேந்தன்
றன்பெரு நிதியந் தூர்த்துத் தரணிமே னெருங்க வெங்கும்
பொன்பயில் குவையு நெல்லும் பொருவில்பல் வளனும் பொங்க
மன்பெருஞ் செல்வ மாக்கி வைத்தனன் மனையி னீட (௧௪)

மற்றவர் மனைவி யாரு மக்களும் பசியால் வாடி
அற்றைநா ளிரவு தன்னி லயர்வுறத் துயிலும் போதி
னற்றவக் கொடிய னார்க்குக் கனவிடை நாத னல்கத்
தெற்றென வுணர்ந்து செல்வங் கண்டபின் சிந்தை செய்வார். (௧௫)

கொம்பனா ரில்ல மெங்குங் குறைவிலா நிறைவிற் காணும்
அம்பொனின் குவையு நெல்லு மரிசியு முதலா யுள்ள

(௧௩) வீரட்டானம் - வீரஞ்செலுத்திய இடம் (யமனைக்கொன்ற இடம் - கடவூர்.) பண்டாரத்தில் அடைவுற எல்லாம் ஒடுக்கி - பண்டகசாலையில் எல்லாக் குங்குலியத்தையும் முறையாகவைத்து. (௧௪) அளகைவேந்தன் தன்பெரும் நிதியம் தரணிமேல் நெருங்கத் தூர்த்து - குபேரன் தன் (பொக்கிஷத்திலுள்ள) பெரிய நிதியங்களைப் பூமியின்மேல் (நாயனார் இல்லத்தில்) நெருங்க நிறைத்து. பொருவில் - ஒப்பற்ற. (௧௫) நற்றவக் கொடியனார்க்கு - நல்ல தவத்தினையுடைய கொடிபோன்ற (நாயனார்) மனைவியார்க்கு. (௧௬) கொம்பனார் - பூங்கொம்பையொத்த (குங்குலியக்கலயர்) மனைவியார்.

எம்பிரா னருளா மென்றே யிருகரங் குவித்துப் போற்றித்
தம்பெருங் கணவ னார்க்குத் திருவமு தமைக்கச் சார்ந்தார் (கசு)

காலனைக் காய்ந்த செய்ய காலனார் கலய னாராம்
ஆலுமன் புடைய சிந்தை யடியவ ரறியு மாற்றாற்
சாலநீ பசித்தா யுன்றன் றடநெடு மனையி னண்ணிப்
பாலினின் னடிசி லுண்டு பருவர லொழிக வென்றார். (கஎ)

கலையனா ரதனைக கேளாக் கைதொழு திறைஞ்சிக் கங்கை
அலைபுனற் சென்னி யார்த மருண்மறுத் திருக்க வஞ்சித்
தலைமிசைப் பணிமேற் கொண்டு சங்கரன் கோயி னின்று
மலைநிகர் மாட வீதி மருஙகுதம் மனையைச சார்ந்தார். (கஅ)

இல்லத்திற் சென்று புக்கா ரிருநிதிக் குவைக ளார்ந்த
செல்வத்தைக கணடு நின்று திருமனை யாரை நோககி
வில்லொத்த நுதலா யிந்த விளைவெலா மென்கொ லென்ன
அல்லொத்த கண்ட னெம்மா னருடர வந்த தென்றார் (கக)

மின்னிடை மடவார் கூற மிக்கசீர்க் கலய னார்தா
மன்னிய பெருஞ்செல் வத்து வளமலி சிறப்பை நோக்கி
என்னையு மாளுந் தன்மைத தெந்தையெம பெருமா னீசன்
தன்னரு ளிருந்த வண்ண மென்றுகை தலைமேற் கொண்டார் (உ0)

பதுமநற் றிருவின் மிக்கார் பரிகலந் திருததிக் கொண்டு
கதுமெனக் கணவ னாரைக் கண்ணுதற் கன்ப ரோடும்
விதிமுறை தீப மேநதி மேவுமின் னடிசி லூட்ட
அதுநுகர்ந் தின்ப மார்ந்தா ரருமறைக் கலய னார்தாம் (உக)

ஊர்தொறும் பலிகொண் டுய்க்கு மொருவன தருளி னாலே
பாரினி லார்ந்த செல்வ முடையராம் பண்பி னீடிச்
சீருடை யடிசி னல்ல செழுஙகறி தயிர்நெய் பாலால்
ஆர்தரு காதல் கூர வடியவர்க் குதவு நாளில் (உஉ)

---

(கஎ) செயய காலனா - சிவநத திருவடியையுடைய சிவபிரான. ஆலும - சிறந்த; பரநத. பருவரல் - பசிததுனபம. (கஅ) இறைஞசி - வணஙகி. (கக) ஆர்ந்த - நிறைந் திருக்கினற. நுதலாய் - நெறறியினையுடைய பெணணே! அலலொதத கண்டன - இருள் போனற நீலகணடன. (உக) பதுமநல திருவின மிககார் - செந்தாமரை மலரில வீற்றி ருககும இலட்சுமியைப் பாரககிலும (அழகிற) சிறநத (கலயனா) மனைவியாா. பரிகலம திருததிக்கொண்டு - (திருவமுது செய்விததறகுரிய) பாததிரஙகளைச சுததிசெய்து கொண்டு. கதுமென-விரைவாக. கணணுதறகு அனபரோடும - சிவனடியார்களோடும. தீபம் ஏநதி - தீபாராதனை செய்து. மேவும - விரும்பததகுந்த. (உஉ) ஊாதொறும பலிகொண்டு உய்ககும ஒருவனது (தாருகாவன இருடிகள் வசிககும) ஊர்கள் தோறும் பிச்சை எடுத்து (அவாகளை) வாழச் செய்த சிவபிரானது.

செங்கண்வெள் ளேற்றின் பாகன் றிருப்பனந் தாளின் மேவும்
அங்கணன் செம்மை கண்டு கும்பிட வரச னார்வம்
பொங்கித்தன் வேழ மெல்லாம் பூட்டவும் நேர்நில் லாமைக்
கங்குலும் பகலுந் தீராக் கவலையுற் றழுங்கிச் செல்ல. (உ௩)

மன்னவன் வருத்தங் கேட்டு மாசறு புகழின் மிக்க
நன்னெறிக் கலய னார்தா நாதனை நேரே காணும்
அந்நெறி தலைநின் றானென் றரசனை விரும்பித் தாமு
மின்னெறித் தனைய வேணி விகிர்தனை வணங்க வந்தார். (உ௪)

மழுவுடைச் செய்ய கையர் கோயில்கண் மருங்கு சென்று
தொழுதுபோந் தன்பி னோடுந் தொன்மறை நெறிவ ழாமை
முழுதுல கினையும் போற்ற மூன்றெரி புரப்போர் வாழுஞ்
செழுமலர்ச் சோலை வேலித் திருப்பனந் தாளிற் சேர்ந்தார் (உ௫)

காதலா லரச னுற்ற வருத்தமுங் களிற்றி னோடு
தீதிலவன் சேனை செய்யுந் திருப்பணி நேர்ப டாமை
மேதினி மிசையே யெய்த்து வீழ்ந்திளைப் பதுவு நோக்கி
மாதவக் கலயர் தாமு மனத்தினில் வருத்த மெய்தி (உ௬)

சேனையு மானை பூண்ட திரளுமெய்த் தெழாமை நோக்கி
யானுமிவ் விளைப்புற் றெய்க்கு மிதுபெற வேண்டு மென்று
தேனலர் கொன்றை யார்தந் திருமேனிப் பூங்கச் சேய்ந்த
மானவன் கயிறு பூண்டு கழுத்தினா லவருந்த லுற்றார் (உ௭)

நண்ணிய வொருமை யன்பி னூருறு பாசத் தாலே
திண்ணிய தொண்டர் பூட்டி யிளைத்தபின் றிறம்பி நிற்க
ஒண்ணுமோ கலய னார்த மொருப்பாடு கண்ட போதே
அண்ணலார் நேரே நின்றா ரமரரும் விசும்பி லார்த்தார் (உ௮)

பார்மிசை நெருங்க வெங்கும் பரப்பினர் பயில்பூ மாரி
தேர்மலி தானை மன்னன் சேனையுங் களிறு மெல்லாங்

(உ௩) அங்கணன் - சடையப்பநாதர் செம்மைகண்டு கும்பிட - முன்போல்நேராக நிற்குந் தன்மையைக்கண்டு வணங்க (தம்மைப்பூசித்த ஓர்பாபபிணியின் பொருட்டாகச் சிவலிங்கப்பெருமான் தந்திருமேனியைச் சாய்த்தபடியால், அவரை முன்போல நோக்கித் தரிசிக்க) அரசன் ஆர்வம் பொங்கி தன்வேழம் எல்லாம் பூட்டவும் - சோழமகாராஜன் ஆசைமிகுந்து தனது யானைகளை எல்லாம் பூட்டி வலித்தும். (உ௫) மூன்றெரிபுரப்போர் - பிராமணர்கள். (உ௭) சேனையு மானை பூண்ட திரளும் எய்த்து - சேனைகளும் பூங்கச்சிற் கட்டிய யானைக் கூட்டங்களும் இழுத்து இளைத்தும். (உ௮) நாருறு பாசத்தாலே - நாரலாய கயிற்றால். திண்ணிய - பத்திவலியுடைய. திறம்பி நிற்க ஒண்ணுமோ - (நாயனார் அன்பைப்) பிழைத்து நிற்றற்குச் (சிவனார்க்கு) அமையுமோ. ஒருப்பாடு - அன்பின் ஒருமைப்பாடு

காா்பெறு கானம் போலக் களித்தன கைகள் கூப்பி
வார்கழல் வேந்தன் தொண்டர் மலரடி தலைமேல் வைத்து. (உகூ)

விண்பயில் புரங்கள் வேவ வைதிகத் தேரின் மேருத்
திண்சிலை குனிய நின்றார் செந்நிலை காணச் செய்தீர்
மண்பகிர்ந் தவனுங் காணா மலரடி யிரண்டும் யாரே
பண்புடை யடியா ரல்லாற் பரிந்துநேர் காண வல்லார். (௩0)

என்றுமெய்த் தொண்டர் தம்மை யேத்தியங் கெம்பி ரானுக
கொன்றிய பணிகண் மற்று முள்ளன பலவுஞ் செய்து
நின்றவெண் கவிகை மன்ன னீங்கவு நிகரி லன்பர்
மன்றிடை யாடல் செய்யு மலர்க்கழல வாழ்த்தி வைகி (௩க)

சிலபகல கழிந்த பின்பு திருக்கட வூரி னண்ணி
நிலவுதம் பணியிற் றங்கி நிகழுநா ணிகரில் காழித்
தலைவராம பிள்ளை யாரும் தாண்டகச சதுர ராகும்
அலர்புக ழரசுங் கூட வங்கெழுந் தருளக் கண்டு (௩உ)

மாறிலா மகிழ்ச்சி பொங்க வெதிர்கொண்டு மனையி லெய்தி
ஈறிலா வன்பின் மிக்கார்க் கின்னமு தேற்கு மாற்றால
ஆறுநற் சுவைக ளோங்க வமைத்தவ ரருளே யன்றி
நாறுபூங் கொன்றை வேணி நம்பாதம மருளும் பெற்றா (௩௩)

கருப்புவில லோனைக கூற்றைக் காய்ந்தவா கடவூர் மன்னி
விருப்புறு மன்பு மேன்மேன் மிக்கெழும் வேட்கை கூர
ஒருப்படு முள்ளத தன்மை யுண்மையாற றமக்கு நேர்ந்த
திருப்பணி பலவுஞ் செய்து சிவபத நிழலிற் சேர்ந்தார. (௩௪)

தேனக்க கோதை மாதா திருநெடு தாலி மாறிக்
கூனற்றண பிறையி னார்க்குக குங்குலி யங்கொண் டுய்த்த
பானமைத்திண்ண கலைய னாரைப் பணிந்தவ ரருளி னாலே
மானக்கஞ் சாறா மிக்க வண்புகழ் வழுத்த லுற்றேன். (௩௫)

குங்குலியக்கலயநாயனார்புராணம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ௬௭0.



(உகூ) காா்பெறு - மழைபொழியப்பெற்ற. (௩0) செந்நிலை - நேராக நிற்குந்தன்மை. மண்பகிர்ந்தவனும - மண்ணைத்தோண்டிச சென்ற திருமாலும. (௩க) ஒன்றிய - ஏற்ற. வெண்கவிகை - வெண்கொற்றக் குடையையுடைய. (௩உ) காழி ... அரசும - திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகளும, திருநாவுக்கரசு சுவாமிகளும. (௩௪) கருப்புவில்லோனை-கரும்பு வில்லினையுடைய மன்மதனையும, வேட்கை கூர - ஆசை அதிகப்பட.

சோழநாட்டிலே, திருககடவூரிலே, மறையவர் குலத்திலே சிவபத்தி அடியவர் பத்திகளிற் சிறந்தவராகிய கலயனுர் என்பவர் ஒருவர் இருந்தார். அவர் மார்க்கண்டேயர்க்காக யமனுயிர் போக்கிய அமிர்தகடேசருக்குக் குங் குலியத தூபம் இடுந்திருப்பணியைத் தினந்தோறும் வழாதுசெய்து வந்தார். செய்துவருநாளில சிவபெருமான் திருவருளால அவருக்கு வறுமைஎய்திற்று. எய்தியும் அவர் சிறிதுந்தளராது தம் நிலஙகளையும், அடிமைகளையும்விற்றுத் திருப்பணியைத் தவருது செய்ய, தனஙகளெல்லாம் அழிந்து விட்டன. அன்பரது மனைவிமக்களும், சுற்றத்தார்களும் வறுமைப் பிணியால் வருந்தி ஞர்கள்

ஓர்தினம், அவர்நாயகியார், போசனத்துக்கு யாதொன்று மில்லாமை யால், இரண்டுநாள் பட்டினியிருந்து, வாடிவருந்தும் மைந்தர்களையும், மற் றவர்களையும் நோக்கி இரஙகி, தமது தாலியை அவரிடம் அளித்து "இதை விற்று நெல்வாஙகிவாரும்" என்ரு நாயனுர் அத்தாலியை வாங்கிக்கொண்டு நெல்கொள்ளப் போமபொழுது, ஒருவணிகன் குஙகுலியப்பொதிகொண்டு அவருக்கு எதிரேவந்தான் அடியவா அவனைப்பாாத்து "இது என்னபொதி" என்று வினவ, அவன் "குஙகுலியப்பொதி" என்ருன் அதைககேட்ட அன் பிற்பெரியார் பெரிதும் மகிழ்வடைந்து "இதுசிவபூசைககு ஏற்ற குஙகுலிய மாயின் நான் இதைப் பெற்றுக்கொணடேன்; இதனினுஞ் சிறந்த பேறுவே றுளதோ" என்று கூறி, வணிகனைப்பார்தது "பொன் தருகின்றேன் ; இக் குங்குலியப் பொதியைக்கொடு" என்ருர் அதற்கு வர்தகன் "எவ்வளவு பொன் கொடுப்பீர்" எனன, அன்பனுர் தம்மிடமிருந்த தாலியைக் கொடுத தார் செட்டி அதைப்பெற்றுக்கொண்டு, குஙகுலியப் பொதியைக் கொடு க்க, ஆனநதமயமாய் விளஙகும் குஙகுலியககலயநாயனுர் அன்புடன் அப் பொதியை வாஙகிக்கொண்டு ஆலயத்திற்கு விரைந்தோடி, அங்கேயுள்ள பண் டாரத்தில் அக்குஙகுலியத்தை வைத்துவிட்டு, சிவபெருமான் திருவடியைப் போற்றிக்கொண்டிருந்தார்

அரிய செய்கையைச செய்த அன்பர்பெருமான் அஙகிருக்க, இல்லத் திலே அவர்மனைவி முதலியோர்கள் பசியால வாடிவருந்தி நிததிரை செய்யும் போது, அடியார்க்கெளியவா அவ்வில்லமுழுவதும் பொற்குவியலும், நெற்கு வியலும், மற்றையவளஙகளும் நிறையும்படி திருவருள் செய்து, அவ்வில் லாளுக்குச் சொப்பனததிலே எழுந்தருளி அறிவித்தார். உடனே கற்பாசி யார் விழித்து எழுந்து தம் இல்லமுழுவதும் நிறைந்துகிடக்கும் செல்வங் களைக் கண்டு வரம்பிலா மகிழ்வெய்தி; ஏழை பஙகாளனை ஏத்தித்தொழுது தமது கணவனுர்க்குத் திருவமுது சமைக்கசசென்ருர் காலனைக்காய்ந்தவர் கலயனுராம் அடியவர்க்குத தோன்றி "நீ மிகவும் பசியால் வருந்துகின்ருய் ; வீட்டுக்குச்சென்று பாலும் அன்னமும் உண்டு துயரத்தை ஒழி" என்று அருளிச்செய்ய ; நாயனுர் சிவாஞ்ஞையை மறுத்தற்கு அஞ்சி ; அதைத்தலை மேற்கொண்டு தமது வீட்டை அடைந்தார் வீட்டிலே நிறைந்துள்ள நிதிக் குவியல்களைக் கண்டு மனைவியை நோக்கி "இவைகள் எப்படி வந்தன" என்றுவினவ; அவர் "திருநீலகண்டர் திருவருளால் வந்தன" என்ருர். அதைக்கேட்ட குங்குலியக் கலய நாயனுர் "என்னையும் ஆட்கொள்ளும் பொருட்டு இறைவனுர் திருவருள் இருந்தவண்ணம் இப்படியோ என்று சிர சின்மேற் கரங்களைக் கூப்பிச் சிவபிரானை வணங்கினுர். இலக்குமியினுஞ் சிறந்த மனைவியார் தங்கணவராய கலயனுரையும், அடியவர்களையும் விதிப் படி தூபதீபங்களால் ஆராதித்துத் திருவமுது செய்வித்தார். கலயனுர்

கடவுளருளால் பெருந்தன முடையவராய்ச் சிவனடியார்களைத் திருவமுது செய்வித்துக்கொண்டு வாழ்ந்து வந்தார்.

அப்படிவாழ்ந்து வருநாளில் திருப்பனந்தாளிலே வீற்றிருக்கின்ற சிவலிங்கம் சாய்ந்தபடியால், அதை நிமிரச்செய்து கும்பிட, சோழராசர்தம் யானைகளை யெல்லாம் பூட்டி இழுப்பித்தும், அது நேர்நில்லாமையால் இரவும் பகலும் கவலையுற்றிருந்தார் குங்குலியக்கலயநாயனார் அதைக் கேள்விப்பட்டுச் சுவாமி தரிசனத்திற்காகத் திருப்பனந்தாளுக்குப் போனார் அங்கே அரசன் படுந்துன்பத்தையும், சிவலிங்கத்தை இழுத்து இளைத்த யானைகளின் துன்பத்தையுங் கண்டு வருத்தமடைந்து "யானும் இளைப்பைக் கொடுக்கும் இத்திருப்பணியைச் செய்யப்பெறவேண்டும்" என்று, சிவலிங்கத்திற் கட்டப்பட்ட கயிற்றைக் கழுத்திலே கட்டிக்கொண்டு வருந்தி வலித்தார். அன்புக்கயிறால் இழுக்கப்படவே சிவலிங்கம் நிமிர்ந்தது அதைக் கண்ட தேவர்கள் ஆகாயத்தில் ஆரவாரித்தார்கள் அரசரும், சேனைகளும் குங்குலியக் கலய நாயனாரை வணங்கித் துதிசெய்து, சிவபெருமானுக்குச் செய்யவேண்டிய திருப்பணிகளைக் குறைவற நிறைவேற்றித் தம்நகரை அடைந்தார்

கலயனார் சிலகாலம் அத்திருப்பதியிலே இருந்து, பின்பு திருக்கடவூருக்குச் சென்று தமது திருப்பணியைச் செய்து வந்தார் வருங்காலத்தில் திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகளும், திருநாவுக்கரசு சுவாமிகளும் அட்டவீரட்டானத்துள் ஒன்றாய அத்திருத்தலத்துக்கு எழுந்தருளினார்கள் அடியவர் அவர்களை அன்புடன் எதிர்கொண்டு, இல்லத்துக்கு அழைத்துக் கொண்டுபோய், அமுதுசெய்வித்து, பெறுதற்கரிய அவர்கள் திருவருளையும், ஆண்டவன் திருவருளையும் எளிதில் அடைந்து, சிலகாலம் பல திருப்பணிகளையுஞ் செய்துகொண்டிருந்து, சிக்கிவாகனற்கினிய சிவபிரான் திருவடி நீழலையடைந்தார்.



# மானக்கஞ்சாறநாயனார் புராணம்.



மேலாறு செஞ்சடைமேல் வைத்தவர்தாம் விரும்பியது
நூலாறு நன்குணர்வார் தாம்பாடு நோன்மையது
கோலாறு தேன்பொழியக் கொழுங்கனியின் சாறொழுகுங்
காலாறு வயற்கரும்பின் கமழ்சாறூர் கஞ்சாறூர். (க)

(க) தேன கோல ஆறு பொழிய - (சொம்புத்) தேன கொம்பினவழியே சொரிய. கொழுமகனியின - சொழுமைபொருந்திய பழங்களின. சால ஆறு வயல் கரும்பின கமழ்சாறு ஊர் - வாய்க்காலினவழியே கரும்பினது வாசனைவீசும சாறுபாயும. மேல் ஆறு - ஆகாயகங்கையை. நூல் ஆறு நனகுணாவா - நூல்வழிகளைச் (சாத்திரப்பகுதிகளை) செவ்வனே யுணர்ந்த புலவர்கள். நோன்மையது - பெருமையுடையது.

கண்ணீலக் கடைசியர்கள் கடுங்களையிற் பிழைத்தொதுங்கி
யுண்ணீர்மைப் புணர்ச்சிக்கண் ணுறைத்துமலர்க் கண்சிவக்குந்
தண்ணீர்மென் கழுநீர்க்குத் தடஞ்சாலி தலைவணங்கு
மண்ணீர்மை நலஞ்சிறந்த வளவயல்க ளுளவயல்கள். (உ)

புயல்காட்டுங் கூந்தல்சிறு புறங்காட்டப் புனமயிலின்
இயல்காட்டி யிடையொதுங்க வினங்காட்டு முழத்தியர்கண்
முயல்காட்டு மதிதோற்கு முகங்காட்டக் கண்மூரிக
கயல்காட்டுந் தடங்கள்பல கதிர்காட்டுந் தடம்பணைகள். (ந)

சேறணிதண் பழனவயற் செழுநெல்லின் கொழுங்கதிர்போய்
வேறருகு மிடைவேலிப் பைங்கமுகின் மிடறுரிஞ்சி
மாறெழுதிண் குலைவளைப்ப வண்டலைதண் டலையுழவர்
தாறரியு நெடுங்கொடுவா ளணையவுள தனியிடங்கள் (ச)

பாங்குமணிப் பலவெயிலுஞ் சுலவெயிலு முளமாட
ஞாங்கரணி துகிற்கொடியு நகிற்கொடியு முளவரங்கம்
ஓங்குநிலைத் தோரணமும் பூரணகும் பமுமுளவாற்
பூங்கணைவீ தியிலணைவோர் புலமறுகுஞ் சிலமறுகு. (ரு)

(உ) கடுமகளையில பிடுங்குகிற களையினின்றும். உள்நீர்மை புணர்ச்சிக்கண் உறைத்து மலர் கண் சிவக்கும் தண் நீர் மென் கழு நீர்க்கு - உள்ளே உண்டாகும் நீர்மையாய புணர்ச்சியிடத்துப் பிணங்கிப் பூவாகிய கண்கள் சிவக்கும் குளிர்ச்சியுடைய மெல்லிய செங்கழுநீர் மலராகிய நாயகிக்கு (நீர்மைபுணர்ச்சி என்பதற்கு நீரின் சம்பந்த மென்றும் பொருள்கொள்க.) தடம் சாலி தலை வணங்கும்-வளர்ந்த செந்நெற்பயிராகிய நாயகன் சிரசால் வணங்குகின்ற. மண்நீர்மை - நிலவளத்தால். அயல்கள் உள - பக்கங்களில் இருக்கின்றன. (ந) புயல்காட்டும் - மேகத்தையொத்துக் கருநிறத்தைக் காட்டும். சிறுபுறம் - பிடரியில் (பின்புறத்தில்.) புனமயிலின் இயல்காட்டி - வயல்களில் சஞ்சரிக்கின்ற மயிலின் சாயலைக் காண்பித்து. இனம் காட்டும் உழத்தியர்கள் - கூட்டத்தைக் காட்டும் (கூட்டமாகவருகின்ற) பள்ளஸ்திரிகள். முயல்காட்டும் மதி தோற்கும் - முயற்களங்கத்தைத் தன்னகத்தே காட்டுகின்ற (சந்திர களங்கத்தையுடைய) சந்திரனைத் தோற்கச் செய்யும். கண்மூரி கயல் காட்டும் - கண்களை வலிமையுடைய கெண்டைமீன்கள் காண்பிக்கின்ற. தடங்கள் - தடாகங்கள். தடம்பணைகள் விசாலமாகிய வயல்கள். (ச) சேறு அணி - சேற்றால் அழகுசெய்யும். வேறு அருகு மிடை வேலி - வேறாகச் சமீபத்திலே நெருங்கிய வேலியாகிய. மிடறு உரிஞ்சி - கழுத்தை உராய்ந்து. மாறு எழு திண்குலை வளைப்ப-மாறாக எழும்பிய வலிய குலைகளை வளைத்தல். வண்டு அலை தண்டலை உழவர் - வண்டுகள் சஞ்சரிக்கும் சோலைகளிலிருக்கின்ற பள்ளர்கள். (சோலைகளையுடைய எனினும் அமையும்.) தாறு அரியும் நெடும் கொடுவாள் அணைய உள - கமுகின் குலைகளைத் துணிக்கின்ற நீண்ட அரிவாளையொத்தனவாயிருக்கின்றன. (ரு) வெயிலும்-ஒளிகளும். சுலவு எயிலும்-சூழ்ந்தமதில்களும். மாடம் உள - மேல்வீடுகளில் (மண்டபங்களில்) இருக்கின்றன. ஞாங்கர்-முன்பக்கத்தில். நகில்

*மனைசாலு நிலையறத்தின் வழிவந்த வளம்பெருகும்*
*வினைசாலு முழவுதொழின் மிக்கபெருங் குடிதுவன்றிப்*
*புனைசாயன் மயிலனையார் நடம்புரியப் புனைமுழவங்*
*கனைசாறு மிடைவீதிக் கஞ்சாறு விளங்கியதால்.* (சு)

*அப்பதியிற் குலப்பதியா யரசர்சே னாபதியாஞ்*
*செப்பவருங் குடிவிளங்கத் திருவவதா ரஞ்செய்தார்*
*மெய்ப்பொருளை யறிந்துணர்ந்தார் விழுமியவே ளாண்குடிமை*
*வைப்பனைய மேன்மையினார் மானக்கஞ் சாறனார்* (எ)

*பணிவுடைய வடிவுடையார் பணியினொடும் பனிமதியின்*
*அணிவுடைய சடைமுடியார்க் காளாகும் பதம்பெற்ற*
*தணிவில்பெரும் பேறுடையார் தம்பெருமான் கழல்சார்ந்த*
*துணிவுடைய தொண்டர்க்கே யேவல்செயுந் தொழில்பூண்டார்* (அ)

*மாறில்பெருஞ் செல்வத்தின் வளம்பெருக மற்றதெலாம்*
*ஆறுலவுஞ் சடைக்கற்றை யங்கணர்த மடியாராம்*
*ஈறில்பெருந் திருவுடையா ருடையாரென் றியாவையுநேர்*
*கூறுவதன் முன்னவர்தங் குறிப்பறிந்து கொடுத்துள்ளார்.* (கூ)

*விரிகடல்சூழ் மண்ணுலகை விளக்கியவித் தன்மையராம்*
*பெரியவர்க்கு முன்சிலநாட் பிள்ளைப்பே றின்மையினால்*
*அரியறியா மலர்க்கழல்க ளறியாமை யறியாதார்*
*வருமகவு பெறற்பொருட்டு மனத்தருளால் வழுத்தினார்* (ய)

*குழைக்கலையும் வடிகாதிற் கூத்தனா ரருளாலே*
*மழைக்குதவும் பெருங்கற்பின் மனைக்கிழத்தி யார்தம்பால்*
*இழைக்கும்வினைப் பயன்சூழ்ந்த விப்பிறவிக் கொடுஞ்சூழல்*
*பிழைக்குநெறி தமக்குதவப் பெண்கொடியைப் பெற்றெடுத்தார்* (கக)

கொடியும - முலைசுளையுடைய பெணகளும. அரஙகம சபைகளில பூஙகணைவீதியில - மனமதன புடபபாணங்களைத தொடுக்கும வீதியில. புலம மறுகும - அறிவுமயஙகுத தகக மறுகு - வீதிகளில். சில மறுகு உள எனககூட்டுக. (தோரணமும பூரண குமபமும சில மறுகில் உள்ளன எனக). (சு) வினைசாலும - தொழிலிற சிறநத. குடி துவனறி - குடிகள நெருங்கி. புனைமுழவம கனைசாறு மிடை வீதி - அழகிய முழவப்பறை ஒலிககினற விழாவானது நெருஙகிய தெருககளையுடைய (எ) குலபபதியாய் - வேளாணகுல முதலவராய. மெய் பொருளை சிவபிரானை. விழுமிய - மேலான, சிறந்த. வைப்பு அனைய - புதையல்போனற. (அ) பணிவுடைய - (சிவனடியாரகளை) வணங்குந் தனமையுடைய. பணியினொடும் - பாமபினொடும. தணிவு இல - குறைவிலலாத. (கக) குழை அலையும வடிகாதின கூத்தனா - குண்டலம ஆடுந் தாழ் செவியினையுடைய நடராசா. கு-சாரியை. கணவனைத தெய்வமாகக கொண்டொழுகும மாதாகள் பெய்யெனறு சொனனவுடன மழைபெய்யுமாகலான "மழைக்குதவும பெருங் கற்பின் மனைக்கிழத்தியார்" என்றார். இழைககும வினை பயன சூழ்ந்த - முனசனமததில் செய்த வினைபபயனை அனுபவிக்க ஏதுவாயிருக்கும் சூழல் - காட்டினின்றும.

பிறந்தபெரு மகிழ்ச்சியினாற் பெருமூதூர் களிசிறப்பச்
சிறந்தநிறை மங்கலதூ ரியமுழங்கத் தேவர்பிரான்
அறந்தலைநின் றவர்க்கெல்லா மளவில்வளத் தருள்பெருக்கிப்
புறந்தருவார் போற்றிசைப்பப் பொற்கொடியை வளர்க்கின்றார். (௧௨)

காப்பணியு மிளங்குழவிப் பதநீங்கிக் கமழ்சுரும்பின்
பூப்பயிலுஞ் சுருட்குழலும் பொலங்குழையு முடன்றாழ
யாப்புறுமென் சிறுமணிமே கலையணிசிற் றாடையுடன்
கோப்பமைகிங் கிணியசையக் குறுந்தளிர்மெல் லடியொதுங்கி (௧௩)

புனைமலர்மென் கரங்களினாற் போற்றியதா தியர்நடுவண்
மனையகத்து மணிமுன்றின் மணற்சிற்றி லிழைத்துமணிக்
கனைகுரனூ புரமலையக் கழன்முதலாப் பயின்றுமுலை
நனைமுகஞ்செய் முதற்பருவ நண்ணினளப் பெண்ணமுதம் (௧௪)

உறுகவின்மெய்ப் புறம்பொலிய வொளிநுசுப்பை முலைவருத்த
முறுவல்புற மலராத முகிழ்முத்த நகையென்னு
நறுமுகைமென் கொடிமருங்கு னளிர்சுருளங் தளிர்ச்செங்கை
மறுவில்குலக் கொழுந்தினுக்கு மணப்பருவம் வந்தணைய. (௧௫)

திருமகட்கு மேலவிளங்குஞ் செம்மணியின் றீபமெனும்
ஒருமகளை மண்ணுலகி லோங்குகுல மரபினராய்க்
கருமிடற்று மறையவனார் தமராய கழலேயா
பெருமகற்கு மகட்பேச வந்தணைந்தார் பெருமுதியோர். (௧௬)

(௧௨) தூரியம - வாத்தியங்கள். அறந்தலை - அருளவழியே. அருள்பெருக்கி - கொடையைப் பெருக்கச்செய்து. புறந்தருவார - பாதுகாப்போர், தாதிகள். (௧௩) பதம - பருவம். கமழ்சுரும்பின பூப்பயிலும - வாசனை வீசும வண்டுகளையுடைய பூக்களைமுடித்த. பொலம குழையும - பொற்குண்டலமும. யாப்புறு - கட்டப்பட்ட. மேகலையணி - மேகலாபரணம அணிந்த. கோப்பமை - கோக்கப்பட்ட. அடி ஒதுங்கி - பாதங்களினால ஒதுங்கி நடந்து. (௧௪) மணிமுன்றில - அழகியமுற்றத்தில. மணல சிறு இல் இழைத்து - மணலால சிறுவீடுகளைக்கட்டி. நூபுரம - பாதச்சிலம்புகள். கழன்முதலா - கழங்காடல முதலிய விளையாடல்களை முலைநனை முகஞ்செய முதல் பருவம - கொங்கை அரும்புபோலத் தோன்றும பேதைப்பருவத்தை. (௧௫) உறுகவின மெய்ப்புறம பொலிய - மிக்க அழகானது தேகத்தினிடத்து விளங்க. நுசுப்பை - இடையை. முறுவல புற மலராத - இளநகை புறத்தில வெளிப்படாத. நகை - பல் வரிசை. கொடி மருங்குல - கொடியெனனும இடையினையும. நளிர்சுருள் - குளிர்ச்சி பொருந்திய சுருண்ட குழலும. மறுஇல - குற்றமில்லாத. (௧௬) கருமிடற்று மறையவனார் தமராய - திருநீலகண்டராய சிவபெருமானுடைய அடியவராகிய. கழல ஏயா பெருமகற்கு - ஏயர்கோன கலிக்காம நாயனாருக்கு.

வந்தமூ தறிவோரை மானக்கஞ் சாறனா
முந்தைமுறை மையின்விரும்பி மொழிந்தமணத் திறங்கேட்டே
யெந்தமது மரபினுக்குத் தகும்பரிசா லேயுமெனச்
சிந்தைமகிழ் வுறவுரைத்து மணநேர்ந்து செலவிட்டார். (கஎ)

சென்றவருங் கஞ்சாறர் மணமிசைந்த படிசெப்பக்
குன்றனைய புயத்தேயர் கோனாரு மிகவிரும்பி
நின்றநிலை மையினிரண்டு திறத்தார்க்கு நேர்வாய
மன்றல்வினை மங்கலநாண் மதிநூல்வல் லவர்வகுத்தார். (கஅ)

மஙகலமாஞ் செயல்விரும்பி மகட்பயந்த வள்ளலார்
தங்குலநீள் சுற்றமெலாந் தயங்குபெருங் களிசிறப்பப்
பொங்கியவெண் முளைப்பெய்து பொலங்கலங்க ளிடைநெருங்கக்
கொங்கலாதண் பொழின்மூதூர் வதுவைமுகங் கோடித்தார். (கசூ)

கஞ்சாறர் மகட்கொடுப்பக கைப்பிடிகக வருகின்ற
எஞ்சாத புகழ்ப்பெருமை யேயர்குலப் பெருமானுந்
தஞ்சால்பு நிறைசுற்றந் தலைநிறைய முரசியம்ப
மஞ்சாலு மலர்ச்சோலைக கஞ்சாற்றின் மருஙகணைய (உ0)

வள்ளலார் மணமவ்வூர் மருங்கணையா முன்மலர்க்கண்
ஒள்ளிழையைப் பயந்தார்தந் திருமனையி லொருவழியே
தெள்ளுதிரை நீருலக முய்வதற்கு மற்றவர்தம்
உள்ளநிலைப் பொருளாய வும்பர்பிரான் முமணைவார் (உக)

முண்டநிறை நெற்றியின்மேன் முண்டித்த திருமுடியிற்
கொண்டசிகை முச்சியின்கட் கோததணிந்த வெற்புமணி

---

(கஎ) முநதை முறைமையின - தமமுடைய பழைய உறவினாகள எனனுமமுறைமையினால. மணம நோந்து - கலியாணததிறகுச சமமதிதது. (கஅ) மதிநூல வலலவா - அறிவினையுடைய சோதிட சாததிரததில வலலவாகள. (கசூ) மகள பயநத வளளலாா - கலியாணப பெண்ணைபபெறற மானககஞ்சாற நாயனாா. பொலம கலஙகள் இடைநெருஙக பொஙகிய வெணமுளை பெயது - பொறபாததிரஙகளில நெருங்குமபடி விளஙகுகிற வெளளிய பாலிகை முளைகளையிடடு. கொஙகு அலா தண்பொழில் - வாசனைவீசும குளிாநத சோலைகள் சூழந்த வதுவை முகம கோடிததாா - கல்யாணததிற்கு வேணடிய சிறபபுணடாகச் சிங்காரிததாா. (உ0) எஞ்சாத - குறையாத. சாலபு - மேனமை. தலைநிறைய - கூடடமாய் வர. மஞ்சு ஆலும - மேகஙகள அசையும (உக) தெளளு திரைநீா - தெளிவான அலைகளையுடைய கடல்சூழந்த. (உஉ) முணடம திரிபுணடரம. முண்டிதத - க்ஷெளரஞ்செய்த கொண்ட சிகை - வைததுளள குடுமியும. எறபுமணி - எலுமபு மணிகளும. பண்டு ஒருவன உடல் அஙகம பரிததநாள் - பூர்வததில் விஷ்ணுவின திருமேனியிலுளள எலுமபுகளைத் தரித்துக்கொண்ட நாளில. அதுகடைநத வெண்தரளம என - அவ்வஸ்திையைக கடைந்த வெண் முததைபபோல.

பண்டொருவ னுடலங்கம் பரித்தநா ளதுகடைந்த
வெண்டாள மெனக்காதின் மிசையசையுங் குண்டலமும். (உஉ)

அவ்வென்பி னொளிமணிகோத் தணிந்ததிருத் தாழ்வடமும்
பைவன்பே ரரவொழியத் தோளிலிடும் பட்டிகையு
மைவந்த நிறக்கேச வடப்பூணு நூலுமனச்
செவ்வன்பர் பவமாற்றுந் திருநீற்றுப் பொக்கணமும் (உங)

ஒருமுன்கைத் தனிமணிகோத தணிந்தவொளிர் சூத்திரமும்
அருமறைநூற் கோவணத்தின் மிசையசையுந் திருவுடையும
இருநிலத்தின் மிசைதோய்ந்த வெழுதரிய திருவடியும்
திருவடியிற் றிருப்பஞ்ச முத்திரையுந் திகழ்ந்திலஙக. (உச)

பொடிமூடு தழலென்னத் திருமேனி தனிற்பொலிந்த
படிநீடு திருநீற்றின் பரப்பணிந்த பான்மையராய்க்
கொடிநீடு மறுகணைந்து தம்முடைய குளிர்கமலத்
தடிநீடு மனத்தன்பர் தம்மனையி னகம்புகுந்தார். (உரு)

வந்தணைந்த மாவிரத முனிவரைக்கண் டெதிரெழுந்து
சிந்தைகளி கூர்ந்துமகிழ் சிறந்தபெருந் தொண்டனா
எந்தைபிரான் புரிதவத்தோ ரிவ்விடத்தே யெழுந்தருள
உய்ந்தொழிந்தே னடியேனென் றுருகியவன் பொடுபணிநதாா (உசு)

நற்றவராம் பெருமானா நலமிகுமன் பரைநோககி
உற்றசெயன் மஙகலமிங கொழுகுவதென் னெனவடியேன்
பெற்றதொரு பெண்கொடிதன் வதுவையெனப் பெருந்தவரு
மற்றுமக்குச சோபனமா குவதென்று வாய்மொழிந்தார். (உஎ)

ஞானச்செய் தவரடிமேற் பணிந்துமனை யகநண்ணி
மானககஞ் சாறனா் மணககோலம் புனைந்திருந்த

(உங) பை - படததையுடைய. பட்டிகையும - யோகபபட்டையும. கேசவடம - மயிரால வடமாகச செயயபபட்ட பொக்கணமும - பையும. (உச) சூததிரமும - கயிறும. பஞசமுததிரை - பதுமம, சஙகம, மகரம, சக்கரம, தண்டம எனபன, இமமுததிரை யோகிகளின பாததகில இருபபது (உரு) பொடி மூடு தழல் எனன - நீறுபூததத நெருபபைபபோல. அடிநீடும - திருவடி தஙகும. (உசு) மாவிரதமாவது அகச்சமயம ஆறனுள ஒனறு; இச்சமயிகள் தந்நூற்களிற கூறியபடி தீக்கைபெற்று, எனபணிதல முதலிய கிரியைகளை அனுட்டிதது, சிவபெருமானை எனபுமாலை தரித்த மூர்த்தியாகத தியானிபபா. உய்நது ஒழிந்தேன - பிறவித்துனபததினினறும நீங்கிப் பிழைததேன. (உஎ) வதுவை - கலியாணம சோபனம ஆகுவது - சுபம உண்டாககக்கடவது.

*தேனக்க மலர்க்கூந்தற் றிருமகளைக் கொண்டணைந்து*
*பானற்கந் தரமறைத்து வருமவரைப் பணிவித்தார்.* (௨௮)

*தஞ்சரணத் திடைப்பணிந்து தாழ்ந்தெழுந்த மடக்கொடிதன்*
*மஞ்சுதழைத் தெனவளர்ந்த மலர்க்கூந்தற் புறநோக்கி*
*அஞ்சலிமெய்த் தொண்டரைப்பார்த் தணங்கிவடன் மயிர்நமக்குப்*
*பஞ்சவடிக் காமென்றார் பரவவடித் தலங்கொடுப்பார்.* (௨௯)

*அருள்செய்த மொழிகேளா வடற்சுரிகை தனையுருவிப்*
*பொருள்செய்தா மெனப்பெற்றே னெனக்கொண்டு பூங்கொடிதன்*
*இருள்செய்த கருங்கூந்த லடியிலரிந் தெதிர்நின்ற*
*மருள்செய்த பிறப்பறுப்பார் மலர்க்கரத்தி னிடைநீட்ட* (௩௦)

*வாங்குவார் போனின்ற மறைப்பொருளா மவர்மறைந்து*
*பாங்கின்மலை வல்லியுடன் பழையமழ விடையேறி*
*ஓங்கியவிண் மிசைவந்தா ரொளிவிசும்பி னிலநெருங்கத்*
*தூங்கியபொன் மலர்மாரி தொழும்பர்தொழு தெதிர்விழுந்தார்* (௩௧)

*விழுந்தெழுந்து மெய்ம்மறந்த மெய்யன்பர் தமக்குமதிக்*
*கொழுந்தலைய விழுங்கங்கை குதித்தசடைக் கூத்தனார்*
*எழும்பரிவு நம்பக்க லுனக்கிருந்த பரிசிந்தச்*
*செழும்புவனங் களிலேறச் செய்தோமென் றருள்செய்தார்* (௩௨)

*மருங்குபெருங் கணநாதர் போற்றிசைப்ப வானவர்க*
*ளொருங்கவிடை மேற்கொண்டு நின்றவர்முன் னின்றவர்தாம்*
*ஒருங்கியநெஞ் சொடுகரங்க ளுச்சியின்மேற் குவித்தையா*
*பெருங்கருணை திறம்போற்றும் பெரும்பேறு நேர்பெற்றார்.* (௩௩)

*தொண்டனார் தமக்கருளிச் சூழ்ந்திமையோர் துதிசெய்ய*
*இண்டைவார் சடைமுடியா ரெழுந்தருளிப் போயினார்*
*வண்டுவார் குழற்கொடியைக் கைப்பிடிக்க மணக்கோலங்*
*கண்டவர்கள் கண்களிப்பக் கலிக்காம னார்புகுந்தார்.* (௩௪)

---

(௨௮) பானல் கந்தரம்-நீலோற்பல மலர்போன்ற கரியகண்டத்தை. (௨௯) பஞ்சவடியாவது:—மயிரால் அகலமாகச் செய்யப்பட்டு மார்பிலே பூணூலாக அணியப்படும் வடம். (பஞ்சம் - விரிவு. வடி எனினும் வடம் எனினும் ஒக்கும்.) (௩௦) அடல் சுரிகை - வலிய உடைவாளை. பொருள்செய்தாம் என பெற்றேன் என கொண்டு-பொருளை (விருத்தி) செய்தவனைப்போல (இம்முனிவர் இதனைக்கேட்கப்) பெற்றேன் என்று மனத்தில் நினைத்துக்கொண்டு. (௩௧) மலைவல்லியுடன் - பார்வதிதேவியாருடன். பொன் மலர் மாரி தூங்கிய - கற்பக மலர்மாரி சொரிந்த (௩௨) பரிவு - பேரன்பு. பரிசு - பத்தியை. செழும் புவனங்களில் ஏற - செழுமைதங்கிய உலகங்களில் பரவும்படி. (௩௪) இண்டை - இண்டைமாலையை (முல்லை, தாமரை.)

வந்தணைந்த வேயர்குல மன்னவனார் மற்றந்தச்
சிந்தைநிலை வரியசெயல் செறிந்தவர்பாற் கேட்டருளிப்
புந்தியினின் மகவுவந்து புனிதனா ரருள்போற்றிச்
சிந்தைதளர்ந் தருள்செய்த திருவாக்கின் றிறங்கேட்டு (௩௫)

மனந்தளரு மிடர்நீங்கி வானவர்நா யகரருளாற்
புனைந்தமலர்க் குழல்பெற்ற பூங்கொடியை மணம்புணர்ந்து
தனம்பொழிந்து பெருவதுவை யுலகெலாந் தலைசிறப்ப
இனம்பெருகத் தம்முடைய வெயின்மூதூர் சென்றணைந்தார் (௩௬)

வேறு.

ஒருமகள் கூந்த றன்னை வதுவைநா ளொருவர்க் கீந்த
பெருமையார் தன்மை போற்றும் பெருமையென் னளவிற் றாமே
மருவிய கமரிற் புக்க மாவடு விடேலென் னோசை
உரிமையாற் கேட்க வலலார் திறமினி யுரைக்க லுற்றேன் (௩௭)

மானக்கஞ்சாறநாயனார்புராண முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - கூ0எ



நீர்வள நிலவளங்களாற் சிறந்த கஞ்சாறூரிலே, வேளாளர் குலத்திலே வேந்தர்களிடத்தில் பரம்பரையாகச் சேனாதிபதி உத்தியோகத்தில் இருக்கின்ற குடிவிளங்கத் திருவவதாரஞ் செய்தவர் மானக்கஞ்சாற நாயனார். அவர் இல்லறவழியில் நின்று, சிவபத்தி அடியவர் பத்திகளிற் சிறந்து வாழ்ந்து வருங்காலத்தில், பிள்ளைப்பேறின்மையால் சிவபெருமானை உபாசித்து, அவரருளால் ஒருபெண்மகவைப் பெற்றார். அப்பெண்ணமிர்தம் வளர்ந்து கலியாணப் பருவம் அடைய, சிலமுதியோர்கள் அப்பெண்ணை ஏயர்கோன் கலிக்காம நாயனாருக்குப்பேச மானக்கஞ்சாற நாயனாரிடம் வந்தார்கள். நாயனார் வந்தவர்களை உபசரித்து அவர்கள் கூறிய மங்கலவார்த்தையைக் கேட்டுத் தமது புதல்வியைக் கலிக்காமருக்குக் கொடுக்க உடன்பட்டார். அவர்கள் சென்று ஏயர்கோன் கலிக்காம நாயனாருக்குக் கஞ்சாறர் உடன்பட்டதைத் தெரிவிக்க, அவர் சோதிடர்களால் குறிக்கப்பட்ட சுபதினத்திலே, கலியாணகோலங்கொண்டு பந்து மித்திரர்களோடும் கஞ்சாறூர்க்குப் புறப்பட்டார்.

(௩௫) புந்தியினில் - உள்ளத்தில். சிந்தை தளர்ந்து - (நாம கலியாணஞ்செய்த பின்னர் இங்ஙனம் நிகழ்ந்தால், நமக்கும் அத்திருவருள் கிடைத்திருக்கும், முன்னே நிகழ்ந்ததே என்றும், கூந்தலில்லாப் பெண்ணை மணத்தல் சாஸ்திர விரோதமென்றுங் கருதி) மனந்தளர்ச்சியடைந்து. அருள்செய்த திருவாக்கின் - (கலிக்காம! வருந்தாதே, கலியாணப்பெண்ணிறகுக் கூந்தலைமீள அளிக்கின்றோம என்று) அருளிச்செய்த (சிவபிரான்) திருவாக்கினது. (௩௬) தனம் பொழிந்து - (அந்தணர் முதலியோர்களுக்குத் தானமாக வேண்டிய) திரவியங்களைச் சொரிந்து உலகு எல்லாம் தலை சிறப்ப - உலக முழுமையும் சிறப்புற்று ஓங்க. இனம் பெருக - சுற்றத்தார்கள் சந்தோஷிக்க.

அவ்வன்பர் அவ்வூரை அடைவதற்குமுன், சிவபெருமான் மாவிரத கோலங்கொண்டு மானக்கஞ்சாற நாயனார் இல்லினுக்கேக, நாயனார் அவரை அன்புடன் எதிர்கொண்டு அழைத்து முகமன் கூறி வணங்கினார் மாவிரத முனிவர் அடியவரைப்பார்த்து "இங்கே என்ன நடக்கப்போகிறது" என்று கேட்க; அன்பனார் "என்மகட்கு விவாகம் நடக்கப்போகிறது" என்றார் அதைக்கேட்ட அருந்தவர் "உமக்குச்சோபனம் உண்டாகுக" என்று ஆசி மொழிந்தார். உடனே உண்மை அடியவர் உள்ளே சென்று தமது புதல்வியை அழைத்துக்கொண்டு வந்து, மாவிரதியாரைப் பணியும்படி செய்தார. மாமுனிவர் தம்மைப்பணிந்து எழுந்த மடக்கொடியின் கூந்தலைநோக்கித் திருத்தொண்டரைப்பார்த்து "இப்பெண்ணின் கூந்தல் நமது பஞ்சவடிக்கு உதவும்" என்றார் உடனே அடியவர் பெருமான் உடைவாளையுருவி தம்மகளின் கரிய கூந்தலை அரிந்து மாவிரதியார் திருக்கரத்தில் நீட்ட, வாங்குவார்போல நின்றமாதேவர் மாவிரதவடிவத்தைநீக்கி மாதேவியாரோடு மழவிடைமேல் தோன்றினார். மானக்கஞ்சாற நாயனார் ஆனந்தவாரிதியிற்றிளைத்துப் பூமியில்விழுந்து பணிந்தார். செந்நிறநாதன் தந்தையார் அன்பரை நோக்கி "உன் அன்பின் மாட்சிமையை உலகெங்கும் பரவும்படி செய்தோம்" என்று திருவாய்மலர்ந்தருளி என்றுந் தமது பெருங்கருணைத் திறத்தைப்போற்றிக் கொண்டிருக்கும் பெரும்பேற்றைப் பெரியவருக்குக் கொடுத்து மறைந்தருளினார்

ஏயர்கோன் கலிக்காமநாயனார் கஞ்சாறூரை அடைந்து, நடந்தவைகளைக் கேட்டுத் திருவருளை வியந்து, கூந்தலில்லாப் பெண்ணை மணஞ்செய்தல் சாஸ்திர விரோதமெனச் சிந்தைதளர்ந்து, பின்னர் சிவனருளால் கூந்தலைப்பெற்ற அப்பெண்ணையே மணந்து தமது ஊருககுப் போனார்

## அரிவாட்டாயநாயனார் புராணம்.



வரும்புனற் பொன்னி நாட்டொரு வாழ்பதி
சுரும்பு வண்டொடு சூழ்ந்து முரன்றிட
விரும்பு மென்க ணுடையவாய் விட்டுநீள்
கரும்பு தேன்சொரி யுங்கண மங்கலம் (க)

செந்நெ லார்வயற் கட்டசெந் தாமரை
முன்னர் நந்துமிழ் முத்தஞ் சொரிந்திடத்
துன்னு மள்ளர்கைம் மேற்கொண்டு தோன்றுவார்
மன்னு பங்கய மாநிதி போன்றுளார். (உ)

(க) வரும்புனல் பொன்னிநாட்டு ஒரு வாழ்பதி - இடையறாது வரும் சலத்தினையுடைய காவிரி நாட்டிலே (சோழ நாட்டிலே) ஒப்பற்ற குடிகள் வாழ்தற்கிடமாகிய ஊராவது. சுரும்பு வண்டொடு - ஆண்வண்டுகள் பெண்வண்டுகளுடன். முரன்றிட - ஒலிக்க. (உ) செந்நெல் ஆர் - செந்நெற் பயிர்களையுடைய கட்ட - களைகட்ட. நந்து உமிழ் - சங்குகள் ஈன்ற. பங்கய மாநிதி - பதுமநிதி.

வளத்தி னீடும் பதியதன் கண்வரி
யுளர்த்து மைம்பா லுடையோர் முகத்தினுங்
களத்தின் மீதுங் கயல்பாய் வயலயற்
குளத்து நீடுங் குழையுடை நீலங்கள். (௩)

அக்கு லப்பதி தன்னி லறநெறித்
தக்க மாமனை வாழ்க்கையிற் றங்கினார்
தொக்க மாநிதித் தொன்மையி லோங்கிய
மிக்க செல்வத்து வேளாண் டலைமையார். (௪)

தாய னாரெனு நாமந் தரித்துளார்
சேய காலந் தொடர்ந்துந் தெளிவிலா
மாய னார்மண் கிளைத்தறி யாதவத்
தூய நாணமலர்ப் பாதந் தொடர்ந்துளார் (௫)

மின்னு செஞ்சடை வேதியர்க் காமென்று
செந்நெ லின்னமு தோடுசெங் கீரையு
மன்னு பைந்துணர் மாவடு வுங்கொணர்ந்
தன்ன வென்று மமுதுசெய் விப்பரால் (௬)

இந்த நன்னிலை யின்னல்வந் தெய்தினுஞ்
சிந்தை நீங்காச் செயலி னுவந்திட
முந்தை வேத முதல்வ ரவர்வழி
வந்த செல்வ மறியாமை மாற்றினார் (௭)

மேவு செல்வங் களிறுண் விளங்கனி
யாவ தாகி யழியவு மன்பினாற்
பாவை பங்கர்க்கு முன்பு பயின்றவித்
தாவில் செய்கை தவிர்ந்திலா தாயனார் (௮)

(௩) வரி உளர்த்தும் ஐம்பால் உடையோர் - வண்டுகள் ஒலிக்கின்ற கூந்தலையுடைய மாதர்கள். களத்தின் மீதும் - கழுத்தினும். முகத்தில் குழையுடை நீலங்கள் என்றது காதளவோடிய கண்களை. களத்திற் குழையுடை நீலங்கள் என்றது குழைவாகச்செய்த நீலமணிகளை. (௫) சேய காலம் - பலகாலம். (௬) செஞ்சடை வேதியர்க்கு - சிவபிரானுக்கு. பைந்துணர் மாவடுவும் - பசிய பூங்கொத்துக்களையுடைய மாம்பிஞ்சும். அன்ன - அவைகளை. (௭) இன்னல் - வறுமைத் துன்பம். சிந்தைநீங்கா செயலின் உவந்திட - மனதில்மறவாது செய்யும் இவர் செய்கை காரணமாக (உலகம்) சந்தோஷிக்க. (௮) களிறு உண் விளமகனி ஆவது ஆகி அழியவும் - யானை உண்ட விளாம்பழத்தைப்போல நிலையில்லாததாகி ஒழியவும். தாவில் - கெடுதியில்லாத.

அல்ல னல்குர வாயிடக் கூலிக்கு
நெல்ல றுத்துமெய்ந் நீடிய வன்பினு
னல்ல செந்நெலிற் பெற்றன நாயனுர்க்
கொல்லை யின்னமு தாக்கொண் டொழுகுவார் (௯)

சாலி தேடி யறுத்தவை தாம்பெறுங்
கூலி யெல்லாந் திருவமு தாக்கொண்டு
நீல நெல்லரி கூலிகொண் டுண்ணுநாண்
மால யற்கரி யாரது மாற்றுவார் (௧௦)

வேறு.

நண்ணிய வயல்க ளெல்லா நாடொறு முன்னங் காண
வண்ணவார் கதிர்ச்செஞ் சாலி யாக்கிட மகிழ்ந்து சிந்தை
அண்ணலா ரறுத்த கூலி கொண்டிஃ தடியேன் செய்த
புண்ணிய மென்று போத வமுதுசெய் விப்பா ராஞர். (௧௧)

வைகலு முணவி லாமை மனைப்படப் பையினிற் புக்கு
நைகர மில்லா வன்பி னங்கைகை யடகு கொய்து
பெய்கலத் தமைத்து வைக்கப் பெருந்தகை யருந்தித் தங்கள்
செய்கடன் முட்டா வண்ணந் திருப்பணி செய்யு நாளில் (௧௨)

மனைமருங் கடகு மாள வடநெடு வான மீனே
அனையவர் தண்ணீர் வார்க்க வமுதுசெய் தன்ப ஞரும்
வினைசெயன் முடித்துச் செல்ல மேவுநா ளொரு நாண் மிக்க
முனைவனர் தொண்டர்க் கங்கு நிகழ்ந்தது மொழியப் பெற்றேன் (௧௩)

முன்புபோன் முதல்வ னுரை யமுதுசெய் விக்க மூனும்
அன்புபோற் றூய செந்நெ லரிசிமா வடுமென் கீரை
துன்புபோ மனத்துத் தொண்டர் கூடையிற் சுமந்து செல்லப்
பின்புபோ மனைவி யாரான் பெற்றவஞ் சேந்திச சென்றுர் (௧௪)

போதரா நின்ற போது புலர்ந்துகா றளர்ந்து தப்பி
மாதரார் வருந்தி வீழ்வார் மட்கல மூடு கையாற்

(௯) அல்லல் நல்குரவு ஆயிட - துன்பத்தைக் கொடுக்குந் தரித்திரம் தம்மை யடைய. நாயனுர்க்கு - சிவபெருமானுக்கு. ஒல்லை - விரைவில் (௧௧) முன்னங்காண - தன்முன்னே காணும்படி. வண்ணவார் - அழகிய நீண்ட (௧௨) வைகலும் - நாடோறும். மனை படப்பையினில் புக்கு - வீட்டின் கொல்லைக்குப் போய். நைகரம் - வருத்தம். நங்கை கை அடகு - மனைவியார் தமது கையால் இலைக்கறிகளை. பெய்கலத்து - போசன பாத்திரத்தில். (௧௩) நெடுவான வடமீனே அனையார் - (கற்பில்) மிகவுஞ் சிறந்த அருந்ததியையே ஒத்த மனைவியார். முனைவனர் - சிவபிரானுடைய. (௧௪) ஆன்பெற்ற அஞ்சு - பஞ்சகவ்வியத்தை (பால், தயிர், நெய், கோசலம், கோமயம்,)

காதலா லணைத்து மெல்லாங் கமரிடைச் சிந்தக் கண்டு
பூதநா யகர்தந் தொண்டர் போவதங் கினியே யென்று. (கரு)

நல்லசெங் கீரை தூய மாவடு வரிசி சிந்த
அல்லநீர்த் தாள வல்லா ரமுதுசெய் தருளு மப்பே
றெல்லையி றீமை யேனிங் கெய்திடப் பெற்றி லேனென்
றொல்லையி லரிவாட் பூட்டி யூட்டியை யரிய லுற்றார். (கசு)

ஆட்கொள்ளு மையர் தாமிங் கமுதுசெய் திலர்கொ லென்னப்
பூட்டிய வரிவாட் பற்றிப் புரையற விரவு மன்பு
காட்டிய நெறியி னுள்ளந் தணடறக் கழுத்தி னோடே
ஊட்டியு மரியா நின்றா ருறுபிறப் பரிவா ரொத்தார் (கஎ)

மாசறு சிந்தை யன்பர் கழுத்தரி யரிவாட் பற்றும்
ஆசில்வண் கையை மாற்ற வம்பலத் தாடு மையா
வீசிய செய்ய கையு மாவடு விடேல்வி டேலென்
றோசையுங் கமரி னின்று மொக்கவே யெழுந்த வன்றே (கஅ)

திருக்கைசென் றரிவாட் பற்றுந் திண்கையைப் பிடித்த போது
வெருக்கொடங் கூறு நீங்க வெவ்வினை விட்டு நீங்கிப்
பெருக்கவே மகிழ்ச்சி நீடத் தம்பிரான் பேணித் தந்த
அருட்பெருங் கருணை நோக்கி யஞ்சலி கூப்பி நின்று (கக)

அடியனே னறிவி லாமை கண்டுமென் னடிமை வேண்டிப்
படிமிசைக் கமரில் வந்திங் கமுதுசெய் பரனே போற்றி
துடியிடை பாக மான தூயநற் சோதி போற்றி
பொடியணி பவள மேனிப் புரிசடைப் புராண போற்றி. (உ0)

என்றவர் போற்றி செய்ய விடபவா கனராய்த் தோன்றி
நன்றுநீ புரிந்த செய்கை நன்னுத லுடனே கூட
* என்றுநம் முலகில் வாழ்வா யென்றவ ருடனே நண்ண
மன்றுளே யாடு மையர் மழவிடை யுகைத்துச் சென்றார் (உக)

(கரு) மாதரார் மண்கலம் மூடுகையால காதலால் அணைத்தும் - அந்நாயனார் மனைவியார் பஞ்சகவ்விய பாத்திரத்தை மூடிக்கொண்டிருக்கின்ற கையால் விருப்பால் அணைத்தும். எல்லாம்-மாவடு, அரிசி, செங்கீரை ஆகிய இவைகள் கமரிடை-நிலப் பிளப்பிலே. (கசு) ஊட்டியை - கழுத்தை (விழுங்குதற்கிடமாய முடிச்சை.) (கஎ) புரை அறவிரவும் - குற்றமில்லாமல் கலந்த. உளளந்தண்டு - ஊட்டியின் அருகிலுள்ள பெரு நரம்பு. (கஅ) மாவடு விடேல விடேல என்று ஓசையும் - மாம்பிஞ்சைக் கடிப்பதாலுண்டாகிய விடேல் விடேல் என்னும் ஒலியும். (கக) வெருக்கொடு - அச்சமுற்று. (உக) நல நுதலுடனே - நல்ல நெற்றியையுடைய மனைவியோடு. அவா உடனே நண்ண - நாயனாரும், மனைவியாரும் சிவபிரானுடனே போக. உகைத்து - செலுத்திக்கொண்டு. * ஒன்றி என்றும் பாடம்.

பரிவுறு சிந்தை யன்பர் பரம்பொரு ளாகி யுள்ள
பெரியவ ரமுது செய்யப் பெற்றிலே னென்று மாவின்
வரிவடு விடேலெ னுமுன் வன்கழுத் தரிவாள் பூட்டி
அரிதலா லரிவாட் டாய ராயினார் தூய நாமம். (உஉ)

முன்னிலை கமரே யாக முதல்வனு ரமுது செய்யச்
செந்நெலி னரிசி சிந்தச் செவியுற வடுவி னோசை
அந்நிலை கேட்ட தொண்ட ரடியிணை தொழுது வாழ்த்தி
மன்னுமா னுயர் செய்கை யறிந்தவா வழுத்த லுற்றேன் (உ௩)

அரிவாட்டாயநாயனார்புராண முற்றிற்று.

ஆக திருவிருத்தம் - ௬௩௦

—∞∞—

சோழநாட்டிலே, கணமங்கலத்திலே, வேளாளர்களுக்குத் தலைவரும், இல்லறத்தை நடாத்துகின்றவரும், அளவிலாச செல்வத்தை யுடையவரும், பரந்தாமன் அறியாப் பரமசிவன பாதபத்மங்களையே பற்றுக் கோடாகக் கொண்டவருமாகிய தாயனார் எனபவா ஒருவா இருந்தார். அவர் நாள்தோறும் அம்பிகை பாகருக்குச செந்நெல அரிசியும், செங்கீரையும், மாவடுவுங் கொணடுபோய்த திருவமுது செய்விப்பாா அங்ஙனஞ் செய்வித்து வருநாளில் அம்பலவாணன் அருளால் அவருக்குக் கொடிய வறுமையுற்றது உற்றும், அவர் சம்பாநெற்பயிர்கள் விளைந்துள்ள வயல்களுக்குப்போய, அவைகளை அறுத்துக் கூலியாகப் பெறுஞ் செந்நெலலைச சிவபெருமானுக்குத் திருவமுது செய்வித்தும், கார்நெலலை யறுத்துக் கூலியாகப்பெறுங் கார்நெலலைக் கொண்டு தாம சீவித்தும வந்தாா. வருநாளில் சிவபிரான் அப்பதியின் வயல்களிலுள்ள பயிர்கள்எல்லாம் சம்பா நெற்பயிர்களாகும்படி திருவருள் செய்தார். அன்பிற் சிறந்த நாயனாராந்தாயனார் நாடோறும் வயல்களுக்குச் சென்று நெல்லறுத்துக் கூலிபெற்று "கூலியெல்லாஞ் செந்நெல்லாகக்கிடைக்க யான் என்ன புண்ணியஞ்செய்தனனோ" என்று பெரிதும் மகிழ்ந்து பரமசிவனுக்குத் திருவமுது செய்வித்துத் தாம் உணவின்றியிருந்தார். அதைக்கணடமனைவியாா வீட்டின்கொல்லையிலுள்ள இலைக்கறி அறுத்துச சமைத்து வைக்க, அதை உண்டும், இலைக்கறி அற்றுப்போக, மனைவியார் தணணீர் வார்க்க, அதனைக குடித்துந் தந்திருத்தொண்டைத் தவறாது செய்துவந்தார்.

ஒருநாள் வழக்கப்படி தாயனார் சிவபெருமானுக்கு அமுது செய்விக்கச் செந்நெல் அரிசியும், செங்கீரையும, மாவடுவும கூடையிலே வைத்துச்சுமந்து செல்ல, அவர் பின்னே மனைவியாா பஞ்சகவ்வியத்தை எடுத்துக்கொண்டு சென்றார். செல்லும்பொழுது உணவில்லாமல மெலியும் நாயனார் இளைப்பால்கால் தளர்ந்து தவறிவிழ, நாயகியார் பஞ்சகவ்விய கலசத்தை மூடியிருந்த கையால் நாயகனை அணைத்தும், எல்லாம் நிலப்பிளப்பில் சிந்தின. அது கண்ட அடியவர் "இனி ஆலயத்துக்குப்போவதில் என்ன பயன்; கமரில் சிந்திய செந்நெல்லையும், செங்கீரையையும், மாவடுவையுஞ் சிவபெருமான் அமுது செய்யும் பெரும்பேற்றை அடையப்பெற்றேன் அல்லேன்" என்று வருந்தி அரிவாளை எடுத்து ஊட்டியை அரியலுற்றார். அப்பொழுது

உள்ளந்தண்டறும்படி கழுத்தோடு ஊட்டியை அரியா நின்ற அன்பனார் கையைத் தடுக்க எள்ளுக்குள் எண்ணெயைப் போல் எங்கும் நீக்கமற நிறைந்துள்ள இறைவனார் திருக்கரமும், மாவடுவைக் கடிப்பதால் உண்டாகும் விடேல் விடேல் என்னும் ஓசையும் கமரினின்றும் எழுந்தன. நாயனார் சிவபெருமான் திருக்கரம் தமது கையைப் பிடித்தபோது, அச்சமுற்று, பழயவினை நீங்கி, எல்லையிலலா ஆனந்தமுற்று, அஞ்சலியஸ்தராய் ஸ்தோத்திரஞ்செய்துகொண்டு நின்றார் மான்மருகனைத் தந்தமங்கைபாகர் இடபாரூடராய்த் தோன்றி "நீ புரிந்த செய்கை மிகவும் நன்று; நீ உன்மனைவியுடன் என்றும் எமது சிவலோகத்தில் வாழ்வாயாக" என்று அருளிச் செய்து, அன்பரும், அவர் மனைவியாரும் தம்முடன் வரஎழுந்தருளினார். அத்தாயனார் "கமரில விழுந்தவைகளைக் கணணுதற்கடவுள உண்ணும் புண்ணியம் நண்ணப்பெற்றேனில்லையே" என்றுவருந்தி, அரிவாளால தமது ஊட்டியை யரிந்தபடியால்,அவர் அரிவாட்டாய நாயனார் என்னும்புனிதநாமத்தை யுடையவரானார்.



# ஆனாயநாயனார் புராணம்.



மாடு விரைப்பொலி சோலையின் வான்மதி வந்தேறச  
சூடு பரப்பிய பண்ணை வரம்பு சுரும்பேற  
ஈடு பெருக்கிய போர்களின் மேக மிளைத்தேற  
நீடு வளத்தது மேன்மழ நாடெனு நீர்நாடு (க)

நீவி நிதம்ப வுழத்தியர் நெய்க்குழன் மைச்சூழன்  
மேவி யுறங்குவ மென்சிறை வண்டு விரைக்கஞ்சப்  
பூவி லுறங்குவ நீள்கயல் பூமலி தேமாவின்  
காவி னறுங்குளிர் நீழ லுறங்குவ கார்மேதி (உ)

வன்னிலை மள்ள ருகைப்ப வெழுந்த மரக்கோவைப்  
பன்முறை வந்தெழு மோசை பயின்ற முழக்கத்தால  
அன்ன மருங்குறை தண்டுறை வாவி யதன்பாலைக்  
கன்ன லடும்புகை யான்முகில செய்வ கருப்பாலை. (ஙு)

(க) மாடு விரை பொலி - பக்கங்களிலுள்ள வாசனை கமழும. சூடு - நெலலரிகளை. பண்ணை - வயல. சுரும்பு - வண்டு. போர்களில - நெறபோர்களில. (உ) நீவி நிதம்ப உழத்தியா நெய குழல மை சூழல - ஆடையைக் கொய்சகம வைத்து உடுத்த அல்குலையுடைய பள்ளஸ்திரிகளின மயிர்ச்சாந்து பூசிய கூந்தலாகிய கரிய இடத்தில். கஞ்சப் பூவில - தாமரைப்பூவில. தேமாவின காவின - தேமாஞ்சோலையின. கார் மேதி - கரிய எருமைகள. (ஙு) உகைப்ப - (மாடுகளைப்பூட்டி) ஓட்ட. எழுந்த கோவை மரம - சுற்றுகின்ற (கருமபாலையின) கோவை (இணைக்கப்பட்ட) மரங்கள. பாலை எனபதில ஐ - சாரியை. கன்னல அடும - கருப்பஞ்சாறறைக் காயச்சுகினற கருப்பாலை - கரும்பாலைகள். முகிலசெயவ - மேகத்தை (ஒத்துக) காட்டுகின்றன.

பொங்கிய மாநதி நீடலை யுந்து புனற்சங்கந்
துங்க விலைக்கத லிப்புதன் மீது தொடக்கிப்போய்த்
தங்கிய பாசடை சூழ்கொடி யூடு தவழ்ந்தேறிப்
பைங்கமு கின்றலை முத்த முதிர்க்குவ பாளையென (௪)

அல்லி மலர்ப்பழ னத்தய லாகிள வானீனும்
ஒல்லை முழுப்பை யுகைப்பி னுழக்கு குழக்கன்று
கொல்லை மடக்குல மான்மறி யோடு குதித்தோடு
மல்கு வளத்தது முல்லை யுடுத்த மருங்கோர்பால் (௫)

கன்மலர் காவிகள் பாய விருப்பன கார்முல்லை
தண்ணகை வெண்முகை மேவு சுரும்பு தடஞ்சாலிப்
பண்ணை யெழுங்கயல் பாய விருப்பன காயாவின்
வண்ண நறுஞ்சினை மேவிய வஞ்சிறை வண்டானம் (௬)

பொங்கரில் வண்டு புறம்பலை சோலைகண் மேலோடும்
வெங்கதிர் தங்க விளங்கிய மேன்மழ நன்னாடாம்
அங்கது மண்ணி னருங்கல மாக வதற்கேயோர்
மங்கல மானது மங்கல மாகிய வாழ்மூதூர் (௭)

ஒப்பில் பெருங்குடி நீடிய தன்மையி லோவாமே
தப்பில் வளங்கள் பெருக்கி யறம்புரி சால்போடுஞ்
செப்ப வுயர்ந்த சிறப்பின் மலிந்தது சீர்மேவும்
அப்பதி மன்னிய வாயர் குலத்தவ ரானாயர் (௮)

ஆயர் குலத்தை விளக்கிட வந்துத யஞ்செய்தார்
தூய சுடர்த்திரு நீறு விரும்பு தொழும்புள்ளார்.
வாயினின் மெய்யின் வழுத்து மனத்தின் வினைப்பாலிற்
பேயுட னாடு பிரானடி யல்லது பேணாதார் (௯)

(௪) உந்து புனல் சங்கம் - ஓதுக்கப்பட்ட சங்குகள். கதலி - வாழை. தொடக்கி - தொடர்கொண்டு, தொடர்ந்து. பாசு அடைசூழ் கொடியூடு பசிய இலைகள் நெருங்கிய கொடி வழியாக. தலைமுத்தம் உதிர்க்குவ - தலைமேல் முத்துக்களைச் சொரிகின்றன. (௫) பழனத்து அயல் - வயல்களினருகில். நாகு இள ஆன் ஈனும் ஒல்லை முழுப்பை உகைப்பின் உழக்கு குழக்கன்று மிகவும் இளமையான பசுவானது பெற்றவுடன் சிறு புதல்களைக் கால் உதையால் கலக்குகின்ற இளங்கன்று. மடக்குல - மடமை விலங்குகளாய. உடுத்த - சூழ்ந்த. (௬) கார் முல்லை தண் நகை வெண்முகை மேவு சுரும்பு - கார் காலத்திற்குரிய முல்லையின் குளிர்ந்த ஒளிபொருந்திய வெள்ளிய அரும்பினிடத்துள்ள வண்டுகள். கள்மலர் காவிகள் - தேன் நிறைந்த கருங்குவளையில். காயாவின் - காயாமரத்தின் சினை - கிளைகளில். வண்டானம் - நாரைகள். தடம் சாலி பண்ணை எழும் - விசாலமாகிய நெற்பயிர்களையுடைய வயலில் எழுகின்ற. (௭) பொங்கரில் - மரக்கொம்புகளில். மங்கலம் ஆகிய - திருமங்கலமெனனும் பெயருடைய. (௮) பெருங்குடி பெரிய நான்கு வருணக் குடிகளும். ஓவாமே - குறையாமல். (௯) தொழும்பு - அடிமைத்தொண்டு.

ஆனிரை கூட வகன்புற விற்கொடு சென்றேறிக்
கானுறை தீய விலங்குறு நோய்கள் கடிந்தெங்குந்
தூநறு மென்பு லருந்தி விரும்பிய தூநீருண்
டேனமி லாய முலப்பில பல்க வளித்துள்ளார் (௰)

கன்றொடு பான்மறை நாகு கறப்பன பாலாவும்
புன்றலை மென்சினை யாவொடு நீடு புனிற்றாவும்
வென்றி விடைக்குல மோடு மினந்தொறும் வெவ்வேறே
துன்றி நிறைந்துள சூழ லுடன்பல தோழங்கள். (கக)

ஆவி னிரைக்குல மப்படி பல்க வளித்தென்றுங்
கோவல ரேவல் புரிந்திட வாயர் குலம் பேணுங்
காவலர் தம்பெரு மானடி யன்புறு கானத்தின்
மேவு துளைக்கரு விக்குழல் வாசனை மேல்கொண்டார் (கஉ)

வேறு

முந்தைமறை நூன்மரபின் மொழிந்தமுறை யெழுந்தவே
யந்தமுத லிரண்டி லரிந்துநரம் புறுதானம்
வந்ததுளை நிரையாக்கி வாயுமுதல் வழங்குதுளை
யந்தமில்சீ ரிடையீட்டி னங்குலியெண் களினமைத்து (கங)

எடுத்தகுழற் கருவியினி லெம்பிரா னெழுத்தஞ்சுந்
தொடுத்தமுறை யேழிசையின் சுருதிபெற வாசித்துத்
தடுத்தசரா சரங்களெலாந் தங்கவருந் தங்கருணை
யடுத்தவிசை யமுதளித்துச் செல்கின்றா ரங்கொருநாள். (கச)

(௰) ஆன் நிரை - பசுக்கூட்டங்களை. புறவில் - முல்லை நிலத்தில். ஆயம் உலப்பில பல்க அளித்துள்ளார் - பசுக்கூட்டங்கள் அளவில்லாதன விருத்தியடையக் காப்பாற்றுகின்றவர். (கக) பான்மறை - பால் மறந்த பசுக்களும். நாகு - இளங்கன்றுகளும். சினை ஆவொடும் - சினைப்பசுவோடும் புனிற்றாவும் - இளங்கன்றுப் பசுவும். விடை - இடபம். சூழலுடன் - சோலைகளுடன். (கஉ) கோவலர் - இடையர்கள். காவலர் - ஆனாயநாயனார். தம்பெருமான் அடி அன்பு உறு - தமது சிவபெருமான் திருவடிக்கு அன்பு மிகுந்த. கானத்தின்மேவு துளைக்கருவி குழல்வாசனை - இசை பொருந்திய துளைக் கருவியாகிய புள்ளாங்குழலை வாசித்தலை. (கங) மறை - காந்தருவ வேதம். எழுந்த வேய்-(இருபது விரல் நீளத்தில் ஓர் கணுவும், சுற்று நாலரை விரலுமுள்ளதாய்) வளர்ந்த மூங்கிலை. நரம்பு உறுதானம் வந்த துளை நிரை ஆக்கி - மெட்டுகள் வைக்கவேண்டிய இடங்களில் செய்யப்பட்ட துளைகளை வரிசையாக அமைத்து. அங்குலி எண்களின் - ஒவ்வோர் அங்குல அளவு. (கச) தங்க - உருகி நிற்க. தம் கருணை அடுத்த இசை அமுது அளித்து - தமது கருணையால் பாடும் இசையாகிய அமிர்தத்தைச் (செவிக்கு) ஊட்டி.

வாசமலர்ப் பிணைபொங்க மயிர்நுழுதி மருங்குயர்ந்த
தேசுடைய சிகழிகையிற் செறிகண்ணித் தொடைசெருகிப்
பாசிலைமென் கொடியின்வடம் பயிலநறு விலிபுனைந்து
காசுடைநா ணதற்கயலே கருஞ்சுருளின் புறங்கட்டி (கரு)

வெண்கோட லிலைச்சுருளிற் பைந்தோட்டு விரைத்தோன்றித்
தண்கோல மலர்புனைந்த வடிகாதி னொளிதயங்கத்
திண்கோல நெற்றியின்மேற் றிருநீற்றி னொளிகண்டோர்
கண்கோட னிறைந்தாராக் கவின்விளங்க மிசையணிந்து (கசு)

நிறைந்தநீ றணிமார்பி னிரைமுல்லை முகைசுருக்கிச்
செறிந்தபுனை வடந்தாழத் திரடோளின் புடையலங்கல்
அறைந்தசுரும் பிசையரும்ப வரையுடுத்த மரவுரியின்
புறந்தழையின் மலிதானைப் பூம்பட்டுப் பொலிந்தசைய (கஎ)

சேவடியிற் றொடுதோலுஞ் செங்கையினில் வெண்கோலு
மேவுமிசை வேய்ங்குழலு மிகவிளங்க வினைசெய்யும்
காவல்புரி வல்லாயர் கன்றுடையா னிரைசூழப்
பூவலர்தார்க் கோவலனார் நிரைகாக்கப் புறம்போந்தார் (கஅ)

வேறு.

நீலமா மஞ்ஞை யேங்க நிரைக்கொடிப் புறவம் பாடக்
கோலவெண் முகையேர் முல்லை கோபவாய் முறுவல் காட்ட
ஆலுமின் னிடைசூழ் மாலைப் பயோதர மசைய வந்தாள்
ஞாலநீ டரங்கி லாடக் காரெனும் பருவ நல்லாள். (ககூ)

வேறு.

எம்மருங்கு நிரைபரப்ப வெடுத்தகோ லுடைப்பொதுவர்
தம்மருங்கு தொழுதணையத் தண்புறவில் வருந்தலைவர்
அம்மருங்கு தாழ்ந்தசினை யலர்மருங்கு மதுவுண்டு
செம்மருந்தண் சுரும்புசுழல் செழுங்கொன்றை மருங்கணைந்தார். (உ0)

(கரு) நுழுதி - கோதி. - மருங்கு உயர்ந்த - வலப்புறம் உயர முடித்த சிகழிகையில் - மயிர் முடியில். நறுவிலி - நறுவிலிக்காயை. காசு உடை நாண் - பொற்காசு கோத்த மயிர்க்கயிற்றை. (கசு) வெண்கோடல் இலை - வெண்காந்தளின் இலை. பைந்தோட்டு விரைத்தோன்றி - பசிய இதழையுடைய வாசனைவீசும் செங்காந்தளின். கண்கோடல் - கண்ணைக் கவரும்படி. (கஎ) அலங்கல் அறைந்த சுரும்பு இசை அரும்ப - பூமாலைகளில் சப்திக்கின்ற வண்டுகள் இசைபாடவும். தழையின் மலிதானை - தழையாற் செய்யப்பட்ட முன்தானையுடைய (கஅ) வினைசெய்யும் - (ஆனாய நாயனார்) ஏவல் தொழிலைச் செய்யும். கன்று உடை ஆன் - கன்றையுடைய பசுவின். (ககூ) மஞ்ஞை - மயில். கொடிப்புறவம் பாட - கொடிகளிலுள்ள (வண்டுகள்) முல்லைப்பண்களைப் பாடவும். கோபம் - இந்திரகோபம். பயோதரம் - முலைகள். (உ0) பொதுவர் - இடையர்கள். புறவில் வரும் தலைவர் - முல்லை நிலத்தில்வரும் ஆனாயநாயனார். அம்மருங்கு - அவ்விடத்து. சினை - கிளைகளிலுள்ள. செம்மரும் - களிக்கும். சுரும்பு - வண்டுகள்.

சென்றணைந்த வானாயர் செய்தவிரைத் தாமமென
மன்றன்மலர்த் துணர்தூக்கி மருங்குதாழ் சடையார்போ
னின்றநறுங் கொன்றையினை நேர்நோக்கி நின்றுருகி
யொன்றியசிந் தையிலன்பை யுடையவர்பான் மடைதிறந்தார் (௨௧)

அன்பூறி மிசைப்பொங்கு மமுதவிசைக் குழலொலியால்
வன்பூதப் படையாளி யெழுத்தைந்தும் வழுத்தித்தாம்
முன்பூதி வருமளவின் முறைமையே யெவ்வுயிரும்
என்பூடு கரைந்துருக்கு மின்னிசைவேய்ங் கருவிகளில் (௨௨)

ஏழுவிர லிடையிட்ட வின்னிசைவங் கியமெடுத்துத்
தாழுமலர் வரிவண்டு தாதுபிடிப் பனபோலச்
சூழுமுரன் றெழநின்று தூயபெருந் தனித்துளையில்
வாழியநந் தோன்றலார் மணியதரம் வைத்தூத (௨௩)

முத்திரையே முதலனைத்து முறைத்தானஞ் சோதித்து
வைத்ததுளை யாராய்ச்சி வக்கரனை வழிபோக்கி
யொத்தநிலை யுணர்ந்ததற்பி னொன்றுமுதல் படிமுறையாம்
அத்தகைமை யாரோசை யமரோசை களினமைத்தார். (௨௪)

மாறுமுதற் பண்ணின்பின் வளர்முல்லைப் பண்ணாக்கி
யேறியதா ரமுமுழையுங் கிழமைகொள விடுந்தானம்
ஆறுலவுஞ் சடைமுடியா ரஞ்செழுத்தி னிசைபெருகக்
கூறியபட் டடைக்குரலாங் கொடிப்பாலை யினினிறுத்தி. (௨௫)

(௨௧) விரைத்தாமம் என - மணங்கமழும் பூமாலையைப்போல. மன்றன்மலர்த் துணர் - வாசனைவீசும் பூங்கொத்துக்களை. மருங்கு தாழ் - புறத்தில் தாழ்ந்திருக்கின்ற. உடையவர்பால் - சிவபிரானிடத்து. (௨௨) வன்பூதப் படையாளி - வலிய பூதப்படையையுடைய சிவபிரானின். (௨௩) ஏழுவிரல் இடை இட்ட (ஒவ்வோர் துளைக்கும் புறத்திலும் ஒவ்வோர் விரலளவாக) ஏழுவிரலளவு இடையில் இடம் விடப்பட்டுள்ள. இன் இசை வங்கியம் - (முத்திரைத்துவாரத்துடன் எட்டுத் துவாரங்களுடைய) இனிய இசையுடைய புல்லாங்குழல். தாது - பூந்தாது, இதழ். சூழும் உரன்று எழ - நாற்பக்கங்களும் இசைபரவ. அதரம் - உதடு. (௨௪) முத்திரை - வாய்வைக்கப்பெற்ற எட்டாவது துளை. வக்கரனை வழிபோக்கி - இராக சோதனையை புணர விரல்களை முறையே செலுத்தி. ஒன்றுமுதல்படி முறையாம் என்றது சட்சம், இடபம், காந்தாரம், மத்திமம், பஞ்சமம், தைவதம், நிஷாதம் என்பவைகளை. (௨௫) மாறு முதல் பண் - சுரங்களை மாறி வருகின்ற குறிஞ்சிப்பண்ணை. தாரமும் உழையும் கிழமை கொள - (பாலையாழ்க்கமைந்த) தாரம், உழை என்னும் இரண்டும் சம்பந்தப்பட. பட்டடைக்குரலாம் - இளிக்குரலாய.

ஆயவிசைப் புகனான்கி னமைந்தபுகல் வகையெடுத்து
மேயதுளை பற்றுவன விடுப்பனவாம் விரனிரையிற்
சேயவொளி யிடையலையத் திருவாள னெழுத்தஞ்சுந்
தூயவிசைக் கிளைகொள்ளுந் துறையஞ்சின் முறைவிளைத்தார் (உசு)

மந்தரத்து மத்திமத்துந் தாரத்தும் வரன்முறையாற்
றந்திரிகண் மெலிவித்துஞ் சமங்கொண்டும் வலிவித்தும்
அந்தரத்து விரற்றொழில்க ளளவுபெற வசைத்தியக்கிச்
சுந்தரச்செங் கனிவாயுந் துளைவாயுந் தொடக்குண்ண (உஎ)

எண்ணியநூற் பெருவண்ண மிடைவண்ணம் வனப்பென்னும்
வண்ணவிசை வகையெல்லா மாதுரிய நாதத்தி
னண்ணியபா ணியுமியலுந் தூக்குநடை முதற்கதியிற்
பண்ணமைய வெழுமோசை யெம்மருங்கும் பரப்பினார். (உஅ)

வள்ளலார் வாசிக்கு மணித்துளைவாய் வேய்ங்குழலின்
உள்ளுறையஞ் செழுத்தாக வொழுகியெழு மதுரவொலி
வெள்ளநிறைந் தெவ்வுயிர்க்கு மேலமரர் தருவிளைதேன்
றெள்ளமுதி னுடன்கலந்து செவிவார்ப்ப தெனத்தேக்க (உகூ)

ஆனிரைக ளறுகருந்தி யசைவிடா தணைந்தயரப்
பானுரைவாய்த் தாய்முலையிற் பற்றுமிளங் கன்றினமுந்
தாமுணவு மறந்தொழியத் தடமருப்பின் விடைக்குலமு
மான்முதலாங் கானவிலங்கு மயிர்முகிழ்த்து வந்தணைய (௩0)

ஆடுமயி லினங்களுமங் கசைவயர்ந்து மருங்கணுக
வூடுசெவி யிசைநிறைந்த வுள்ளமொடு புள்ளினமு
மாடுபடிந் துணர்வொழிய மருங்குதொழில் புரிந்தொழுகுங்
* கூடியவன் கோவலருங் குறைவினையின் றுறைநின்றார் (௩க)

பணிபுவனங் களிலுள்ளார் பயில்பிலங்கள் வழியணைந்தார்
மணிவரைவா ழரமகளிர் மருங்குமயங் கினர்மலிந்தார்

(உசு) ஆய இசை புகல் நான்கின - இசைக்குரிய பண், பண்ணியல், திறம், திறத் திறம் நான்கினும். அமைந்த புகல்வகை எடுத்து - தாம்பாடுஞ் சொற்பாவிற் கமைந்த கூறுபாடான இசையை எடுத்து. சேய ஒளி இடை அலைய - சிவந்த ஒளியானது முழுவிடத்தும் பெரிதும் விளங்க. இசைக்கிளை ஐந்து.— ஆயத்தம், எடுப்பு, உக்கிரம், சஞ்சாரம், இடாயம் என்பன. (உஎ) தந்திரிகள் - சுரஸ்தானத்துக்குரிய தந்திகள். (உஅ) மாதுரிய - மிக இனிய. பாணியும் இயலும் - தாளமும், இராகமும். (உகூ) மேல் அமரர் தரு தேவலோகத்துள்ள கற்பகத்தரு (௩0) தடமருப்பின் விடைக்குலமும் - பெரிய கொம்புகளையுடைய ரிஷபக்கூட்டங்களும். மயிர் முகிழ்த்து - மயிர் சிலிர்த்து. (௩க) புள் இனமும் மாடு படிந்து - பறவைக் கூட்டங்களும் அருகே சோர்ந்து. கூடியவன் - திரண்ட வலியுடைய. * கூடியவண என்றும் பாடம்

*தணிவிலொளி விஞ்சையர்கள் சாரணர்கின் னரரமரர்*
*அணிவிசும்பி னயர்வெய்தி விமானங்கண் மிசையணைந்தார்.* (௩௨)

*சுரமகளிர் கற்பகப்பூஞ் சோலைகளின் மருங்கிருந்து*
*கரமலரி னமுதூட்டுங் கனிவாய்மென் கிளையுடன்*
*விரவுநறுங் குழலலைய விமானங்கள் விரைந்தேறிப்*
*பரவியவே ழிசையமுதஞ் செவிமடுத்துப் பருகினார்* (௩௩)

*நலிவாரு மெலிவாரு முணர்வொன்றா நயந்தலினால்*
*மலிவாயவெள் ளெயிற்றரவ மயின்மீது மருண்டுவிழுஞ்*
*சலியாத நிலையரியுந் தடங்கரியு முடன்சாரும்*
*புலிவாயின் மருங்கணையும் புல்வாய புல்வாயும்* (௩௪)

*மருவியகால் விசைத்தசையா மரங்கண்மலர்ச் சினைசலியா*
*கருவரைவீ ழருவிகளுங் கான்யாறுங் கலித்தோடா*
*பெருமுகிலின் குலங்கள்புடை பெயர்வொழியப் புனல்சோரா*
*இருவிசும்பி னிடைமுழங்கா வெழுகடலு மிடைதுளும்பா* (௩௫)

*இவ்வாறு நிற்பனவுஞ் சரிப்பனவு மிசைமயமாய்*
*மெய்வாழும் புலன்கரண மேவியவொன் றாயினவால்*
*மொய்வாச நறுங்கொன்றை முடிச்சடையா ரடித்தொண்டர்*
*செவ்வாயின் மிசைவைத்த திருக்குழல்வா சனையுருக்க.* (௩௬)

*மெய்யன்பர் மனத்தன்பின் விளைத்தவிசைக் குழலோசை*
*வையந்தன் னையுநிறைத்து வானந்தன் வயமாக்கிப்*
*பொய்யன்புக் கெட்டாத பொற்பொதுவி னடம்புரியும்*
*ஐயன்றன் றிருச்செவியி னருகணையப் பெருகியதால்.* (௩௭)

*ஆனாயர் குழலோசை கேட்டருளி யருட்கருணை*
*தானாய திருவுள்ள முடையதவ வல்லியுடன்*
*கானாதி காரணராங் கண்ணுதலார் விடையுகைத்து*
*வானாறு வந்தணைந்தார் மதிநாறுஞ் சடைதாழ* (௩௮)

*திசைமுழுதுங் கணநாதர் தேவர்கட்கு முன்னெருங்கி*
*மிசைமிடைந்து வரும்பொழுது வேற்றொலிகள் விரவாமே*
*யசையவெழு குழனாதத் தஞ்செழுத்தா றமைப்பரவும்*
*இசைவிரும்புங் கூத்தனா ரெழுந்தருளி யெதிர்நின்றார்* (௩௯)

(௩௨) பணிபுவனங்களில் - நாகலோகங்களில். மணிவரை வாழ் அரமகளிர் - அழகிய மலைகளில் வாழும் தெய்வமகளிர்கள். (௩௩) சுரமகளிர் - தெய்வப்பெண்கள் (௩௪) அரியும் - சிங்கமும் புல்வாய புல்வாயும் - சிறியவாயினையுடைய மான்களும் (௩௫) சினை - கிளைகள். (௩௬) நிற்பனவும் - மரங்கள் முதலிய நிலை இயற்பொருள்களும். சரிப்பனவும் - மனிதர் முதலிய இயங்கியற் பொருள்களும். (௩௮) கான ஆதிகாரண ராம் - இசைக்கு மூலகாரணராய வானஆறு - ஆகாயமார்க்கத்தில்.

முன்னின்ற மழவிடைமேன் முதல்வனா ரப்பொழுதுஞ்
செந்நின்ற மனப்பெரியோர் திருக்குழல்வா சனைகேட்க
இந்நின்ற நிலையேநம் பாலணைவா யெனவவரும்
அந்நின்ற நிலைபெயர்ப்பா ரையர்திரு மருங்கணைந்தார் (௬0)

விண்ணவர்கண் மலர்மாரி மிடைந்துலக மிசைவிளங்க
எண்ணிலரு முனிவர்குழா மிருக்குமொழி யெடுத்தேத்த
அண்ணலார் குழற்கருவி யருகிசைத்தங் குடன்செல்லப்
புண்ணியனா ரெழுந்தருளிப் பொற்பொதுவி னிடைப்புக்கார் (௬௧)

வேறு

சீதுகொள் வினைக்கு வாரோஞ் செஞ்சடைக் கூத்தர் தம்மைக்
காதுகொள் குழைகள் வீசுங் கதிர்நில விருள்கால் சீப்ப
மாதுகொள் புலவி நீக்க மனையிடை யிருகாற் செல்லத்
தூதுகொள் பவரா நம்மைத் தொழும்புகொண் டுரிமை கொள்வார் (௬௨)

**ஆனாயநாயனார்புராண முற்றிற்று.**

ஆ திருவிருத்தம் - கஎ௨

இலைமலிந்தசருக்க முற்றுப்பெற்றது



மழநாட்டிலே, திருமங்கலமென்னும் ஊரிலே, ஆயர்குலத்திலே, விபூதியினிடத்துப் பேரன்பு வாய்ந்தவரும், சிவபிரான் திருவடியையன்றிப் பிறிதொன்றைப் பேணாதவரும் ஆகிய ஆனாயர் என்பவர் ஒருவர் இருந்தார். அவர் இடையர்களுக்குத் தலைமை பூண்டு, பசுக்கூட்டங்களைக் காட்டுக்குக் கொண்டுபோய் மேய்த்துக்கொண்டும், காந்தருவ வேதத்தில் மொழிந்தபடி செய்யப்பட்ட புள்ளாங்குழலினாலே ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தை வாசித்து ஆன்மாக்களுக்குத் தமது இசையமுதைச் செவியின்வழியாகப் புகட்டிக்கொண்டும் வந்தார். ஒருநாள் அவர் வழக்கப்படி காட்டுக்குப் போமபோது, அங்கே மலர்மாலையைப் போலப் பூங்கொத்துக்களைத் தாங்கிக்கொண்டு புறத்திலே தாழ்ந்துள்ள சடையினையுடைய சிவபெருமானைச் சிவணநின்ற ஒரு கொன்றை மரத்தை நோக்கிக் கொண்டு நின்று, மனம் உருகி, இசைக்குழலால் ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தை வாசித்தார். அவர்வாசிக்கும் இசையானது எவ்வகைப்பட்ட ஆன்மாக்கள் செவிகளினும் நுழைந்தது. அறுகம்புற்களைமேய்ந்து கொண்டிருந்த பசுநிரைகள் அசைவிடாமல் அவர் சமீபத்திலே வந்து அயர்ந்து நின்றன; பால்குடித்து நின்றகன்றுகள் குடித்தலை யொழித்தன; இடபங்களும், மான்முதலிய மிருகங்களும் மயிர்சிலிர்த்துக் கொண்டு அவரை அடைந்தன; ஆடும் மயில்கள் ஆடுதலை யொழித்து ஆனாயர் அருகே வந்தன; மற்றைய

(௬0) செந்நின்ற மனப்பெரியோர் திருக்குழல் வாசனைகேட்க - செம்மைக்குணம் (பேரன்பு) பொருந்திய மனத்தையுடைய ஆனாயநாயனாரது அழகிய புள்ளாங்குழல் இசையைத்தாம் கேட்க. (செம்மைக்குணமுடைய பெரியோர்கள் நாயனார் திருக்குழலின் வாசனைகேட்க எனினும்பொருந்தும்.) இந்நின்ற நிலையே - இவ்வாறு குழலை வாசித்துநின்றபடியே. (௬௨) இருள் கால் சீப்ப - இருளையொழிக்க. மாதுகொள் புலவி - பரவையார்கொண்ட பிணக்கை. தொழும்பு - அடிமை.

பட்சிகளும் இசைவயப்பட்டு மனங்கரைந்து நாயனாரிடம் வந்தணைந்தன; நாகலோக வாசிகள் பிலங்கள் வழியாக வந்தணைந்தார்கள்; மலையில்வாழும் தெய்வப் பெண்கள் மயங்கி மாதவர் மருங்கடைந்தார்கள்; வித்தியாதரர்களும், சாரணர்களும், கின்னரர்களும், தேவர்களும் மெய்ம்மறந்து விமானங்களில் ஏறிவந்தார்கள் இன்னும் அவ்விசையைக் கேட்ட பாம்புகள் பயமில்லாமல் மயில்கள் மீது விழுந்தன; சிங்கமும் யானையும் ஒருங்குசேர்ந்துவந்தன; மான்கள் அச்சமின்றிப் புலிகள் பக்கத்திலசென்றன; மரக்கொம்புகள் அசையாமலிருந்தன இங்ஙனம் சராசரங்களெல்லாம் இசைவயப்பட்டன. சாமவேதப் பிரியராகிய சரவணபவனைப் பெற்ற சங்கரனார் சங்கரியோடு இடபாரூடராய் ஆகாயத்தில் தோன்றி ஆனாயநாயனாரைத் திருக்கண்ணோக்கஞ்செய்து "அன்பனே! நமது அடியவர்கள் நீ வாசிக்கும் வேய்ங்குழலின் இசையைக் கேட்க, நீ இப்பொழுது இங்கே நின்றபடியே நம்மிடம் வருவாய" என்று அருமைத்திருவாய் மலர்ந்து, நாயனார் பெருமான் வங்கியத்தை வாசித்துக்கொண்டு தம்முடன் செல்லத் திருக்கயிலாயத்துக்கு எழுந்தருளினார்.



## நான்காவது மும்மையாலுலகாண்ட சருக்கம்.

# மூர்த்திநாயனார் புராணம்.



சீர்மன்னு செல்வக் குடிமல்கு சிறப்பி னோங்குங்
காரமன்னு சென்னிக் கதிர்மாமணி மாட வைப்பு
நாமன்னு சிந்தைப் பலநற்றுறை மாந்தர் போற்றும்
பாமன்னு தொன்மைப் புகழ்பூண்டது பாண்டி நாடு (க)

சாயுந் தளிர்வல்லி மருங்குனெடுந் தடங்கண்
வேயும் படுதோளியர் பண்படு மின்சொற் செய்ய
வாயும் படுநீள்கரை மண்பொருந் தண்பொருந்தம்
பாயுங் கடலும் படுநீர்மை பணித்த முத்தம் (உ)

மொய்வைத்த வண்டின் செறிசூழன் முரன்ற சந்தின்
மைவைத்த சோலை மலயந்தர வந்த மந்த
மெய்வைத்த காலுந் தருஞாலம ளந்த மேன்மைத்
தெய்வத் தமிழுந் தருஞ்செவ்வி மணஞ்செ யீரம் (ங)

(க) காரமன்னு சென்னி - மேகங்கள் தவழும் சிகரத்தையும். வைப்பு - ஊர். நா - அன்பு. (உ) வல்லி மருங்குல் - கொடிபோன்ற இடையையும். வேயும் படுதோளியர் - மூங்கிலையொத்த தோள்களையும் உடையமாதர்கள் படும் - உதிக்கும். மண்பொரும் தண்பொருந்தம் - மண்ணை அலைகையால் எற்றுங் குளிர்ந்த தாமிரபரணியாறு. (ங) மொய்வைத்த வண்டின் செறிசூழல் முரன்ற-கூட்டமாக நெருங்கிய வண்டினுடைய தொகுதிகள் சூழ்ந்து ஒலிக்கின்ற. மைவைத்த - மேகங்கள் தவழும். சந்தின் சோலை - சந்தனச் சோலையயுடைய. மலயம் - பொதியமலை. மந்த மெய்வைத்த காலும் - சிறுதென்றற் காற்றும்.

சூழு மிதழ்ப்பங்கய மாகவத் தோட்டின் மேலாள்
தாழ்வின்றி யென்றுந் தனிவாழ்வதத் தைய லொப்பார்
யாழின் மொழியிற் குழலின்னிசை யுஞ்சு ரும்பும்
வாழுந் நகர மதுராபுரி யென்ப தாகும் (௪)

சால்பாய மும்மைத் தமிழ்தங்கிய வங்கண் மூதூர்
நூல்பாயிடத்தும் முளநோன்றலை மேதி பாயப்
பால்பாய் முலைதோய் மதுப்பங்கயம் பாய வெங்கும்
சேல்பாய் தடத்தும் முளசெய்யுண்மிக் கேறு சங்கம்

மந்தா நிலம்வந் தசைபந்தரின் மாட முன்றிற்
பந்தா டியமங் கையர்பங்கயச் செங்கை தாங்குஞ்
சந்தார் முலைமே லனதாழ்குழை வாண்மு கப்பொற்
செந்தா மரைமே லனநித்திலஞ் சேர்ந்த கோவை (௬)

மும்மைப் புவனங்களின் மிக்கதன் றேயம் மூதூர்
மெய்ம்மைப் பொருளாந் தமிழ்நூலின் விளங்கு வாய்மைச்
செம்மைப் பொருளுந் தருவார்திரு வால வாயில்
எம்மைப் பவந்தீர்ப் பவர்சங்க மிருந்த தென்றால் (௭)

அப்பொற் பதிவாழ் வணிகக்குலத் தான்ற தொன்மைச்
செப்பத் தகுசீர்க் குடிசெய்தவஞ் செய்ய வந்தார்
எப்பற் றினையு மறுத்தேறுகைத் தேறு வார்தாண்
மெய்ப்பற் றெனப்பற்றி விடாத விருப்பின் மிக்கார் (௮)

நாளும் பெருங்காத லயப்புறும் வேட்கை யாலே
கேளுந் துணையும் முதற்கேடில் பதங்க ளெல்லாம்
ஆளும் பெருமா னடித்தாமரை யல்ல தில்லார்
மூளும் பெருகன் பெனுமூர்த்தியார் மூர்த்தி யார்தாம் (௯)

(௪) அந்தோட்டின் மேலாள் - அம்மலரில் வாழும் இலக்குமியானவள். (௫) நூல் பாய இடத்தும் செய்யுள் மிக்கு ஏறு சங்கம் உள - நூல்கள் பயிலுமிடத்தும் செய்யுள்களான மிக்கு உயர்ந்த கல்விச் சங்கங்கள் இருக்கின்றன. நோன் தலைமேதி - பெரிய தலையையுடைய எருமைக்கடாக்கள். சேல்பாய் தடத்தும் - கெண்டை மீன்கள் பாய்கின்ற தடாகங்களினும். செய்யுள் - வயல்களில் சங்கம் உள - சங்குகள் இருக்கின்றன. (௬) மந்தா நிலம் - சிறு தென்றற் காற்று சந்து ஆர் முலை மேலன - சந்தனம் பூசிய ஸ்தனங்களின் மேலிருக்கின்றன நித்திலம் சேர்ந்த கோவை - முத்தாலாகிய மாலைகள். (செந்தாமரை மேலன) நித்திலஞ் சேர்ந்த கோவை - முத்துக்களைப் போலும் வோவையின் கோவை. (௭) செம்மை பொருள் - சிறந்த பொருளை; அப்பொருளை எனினுமாம். (௮) ஏறு உகைத்து - இடபவாகனத்தைச் செலுத்தி. (௯) கேளும் - சுற்றமும். ஆளும் பெருமான் - சிவபிரான். மூர்த்தியார் - திருவுருவத்தை யுடையவர்.

அந்திப் பிறைசெஞ் சடைமேலணி யால வாயில்
எந்தைக் கணிசந் தனக்காப்பிடை யென்று முட்டா
அந்தச் செயலி னிலைநின்றடி யாரு வப்பச
சிந்தைக் கினிதாய திருப்பணி செய்யு நாளில். (க0)

கானக் கடிசூழ் வடுகக்கரு நாடர் காவன்
மானப் படைமன்னன் வலிந்து நிலங்கொள் வானாய்
யானைக் குதிரைக் கருவிப்படை வீரர் திண்டேர்
சேனைக் கடலுங் கொடுதென்றிசை நோக்கி வந்தான். (கக)

வந்துற்ற பெரும்படை மண்புதை யப்ப ரப்பிச
சந்தப் பொதியிற் றமிழ்நாடுடை மன்னன் வீரஞ்
சிந்தச் செருவென்று தன்னாணை செலுத்து மாற்றாற்
கந்தப் பொழில்சூழ் மதுராபுரி காவல் கொண்டான். (கஉ)

வல்லாண் மையின் வண்டமிழ் நாடு வளம்ப டுத்தி
நில்லா நிலையொன் றியவின்மை யினான் மேரு
வில்லா னடிமைத் திறமேவிய நீற்றர் பாலும்
செல்லா தருகந்தர் திறத்தினிற் சிந்தை தாழ்ந்தான் (கக)

தாழுஞ் சமண்கையர் தவத்தைமெய் யென்று சார்ந்து
வீழுங் கொடியோ னதுவன்றியும் வெய்ய முன்னைச
சூழும் வினையா லரவஞ்சுடர்த் திங்க ளோடும
வாழுஞ் சடையா னடியாரையும் வன்மை செய்வான். (கச)

செக்கர்ச் சடையார் விடையார்திரு வால வாயுண்
முக்கட் பரனார் திருத்தொண்டரை மூர்த்தி யாரை
மைக்கற் புரைநெஞ் சுடைவஞ்சகன் வெஞ்ச மண்பேர்
எக்கர்க் குடனாக விகழ்ந்தன செய்ய வெண்ணி. (கரு)

அந்தம் மிலவா மிறைசெய்யவு மன்ப ரூதாம்
முந்தைம் முறைமைப் பணிமுட்டலர் செய்து வந்தார்
தந்தம் பெருமைக் களவாகிய சார்பி னிற்கும்
எந்தம் பெருமக் களையாவர் தடுக்க வல்லார். (கசா)

(கக) கானக்கடி - காட்டரண். மானப்படை - வலிய வேற்படை தாங்கிய. (கஉ) மன்னன் - பாண்டியன். வீரம் சிந்த - வீரங்குன்ற. செரு - போர். (கக) நில்லா நிலையொன்றிய இன்மையில் - நில்லாத நிலைமையோடு கூடிய தரித்திரத்தால். மேருவில்லான் - சிவபிரான். அருகந்தர் - சமணர். (கச) கையர் - வஞ்சகர். (கரு) மைக்கல் புரை - கருங்கல்லை யொத்த. எக்கர்க்கு - இடக்கர்களுக்கு. (கசா) இறை - துன்பம்.

எள்ளுஞ் செயல்வன்மைக ளெல்லையில் லாத செய்யத்
தள்ளுஞ் செயலில் லவர்சந்தனக் காப்புத் தேடிக்
கொள்ளுந் துறையு மடைத்தான்கொடுங் கோன்மை செய்வான்
றெள்ளும் புனல்வே ணியர்க்கன்பருஞ் சிந்தை நொந்து (கஎ)

புன்மைச் செயல்வல் லமண்குண்டரிற் போது போக்கும்
வன்மைக் கொடும்பா தகன்மாய்ந்திட வாய்மை வேதந்
நன்மைத் திருநீற் றுயர்நன்னெறி தாங்கு மேன்மைத்
தன்மைப் புவிமன் னரைச்சார்வதென் றென்று சார்வார் (கஅ)

காய்வுற்ற செற்றங்கொடு கண்டகன் காப்ப வுஞ்சென்
றாய்வுற்ற கொட்பிற் பகலெல்லை யடங்க நாடி
மேய்வுற்ற நற்சந் தனமெங்கும் பெறாது சிந்தை
சாய்வுற் றிடவந் தனர்தம்பிரான் கோயி றன்னில் (க௯)

நட்டம் புரிவா ரணிநற்றிரு மெய்ப்பூச் சின்று
முட்டும் பரிசா யினுந்தேய்க்குங்கை முட்டா தென்று
வட்டந் திகழ்பா றையினைவைத்து முழங்கை தேய்த்தார்
கட்டும் புறந்தோ னரம்பென்பு கரைந்து தேய (உ௦)

கல்லின் புறந்தேய்த்த முழங்கை கலுழ்ந்து சோரி
செல்லும் பரப்பெங் கணுமென்பு திறந்து மூளை
புல்லும் படிகண்டு பொறுத்திலர் தம்பி ரானார்
அல்லின்க ணெழுந்தது வந்தருள் செய்த வாக்கு (உக)

அன்பின் றுணிவா லிதுசெய்திட லையவுன்பால்
வன்புன்கண் விளைத்தவன் கொண்டமண் ணெல்லாங் கொண்டு
முன்பின்னல் புகுந்தன முற்றவு நீத்துக் காத்துப்
பின்புன் பணிசெய்து நம்பேருல செய்து கென்ன (உஉ)

இவ்வண்ண மெழுந்தது கேட்டெழுந் தஞ்சி முன்பு
செய்வண்ண மொழிந்திடத் தேய்ந்தபுண் ணூறு தீர்ந்து
கைவண்ண நிரம்பின வாசமெல் லாங்க லந்து
மெய்வண்ண விளங்கொளி யெய்தினர் மூர்த்தி யார்தாம் (உ௩)

(கஎ) எள்ளும் - இகழ்தற்க. தள்ளும் - (தமது திருப்பணியைத்) தடைசெய்யும். (க௯) கண்டகன் காப்பவும் - கீழ்மகனாகிய அவ்வரசன் சந்தனக் கட்டையை ஒருவருங்கொள்ளாமல் தடுக்கவும். ஆய்வுற்ற கொட்பில் - தேடுஞ் செலவினால் (தேடித் திரிதலினால்.) பகல் எல்லை அடங்க - பகல் முழுதும். மேய்வுற்ற - (காப்புக்குத்) தகுந்த. (உ௦) மெய்ப்பூச்சு - திருமேனியில் தரித்தற்குரிய சந்தனக்காப்பு. (உக) சோரி - உதிரத்தை. கலுழ்ந்து - பெருகி, செங்கு பரப்பு - இடங்கள். புல்லும்படி - ஒழுகும்படி. அல்லின்கண் - இரவில். (உஉ) செய்திடல் - செய்யாதிருப்பாயாக. மண் - பூமி.

அந்நா ளிரவின்க ணமண்புகல் சார்ந்து வாழு
மன்ஞ கியபோர் வடுகக்கரு நாடர் மன்னன்
றன்னுரு முடிந்தது சங்கரன் சார்பி லோர்க்கு
மின்னு மெனநீ டியமெய்ந்நிலை யாமை யெல்ல. (உச)

இவ்வா றுலகத்தி னிறப்ப வுயர்ந்த நல்லோர்
மெய்வா ழுலகத்து விரைந்தணை வார்க ளேபோல்
அவ்வா றரனு ரடியாரை யலைத்த தீயோன்
வெவ்வாய் நிரயத் திடைவீழ விரைந்து வீந்தான். (உடு)

முழுதும் பழுதே புரிமூர்க்க னுலந்த போதின்
எழுதுங் கொடிபோல் பவருட்பட வேங்கு சுற்ற
முழுதும் புலர்வுற் றதுமற்றவ னன்ன மாலைப்
பொழுதும் புலர்வுற் றதுசெங்கதிர் மீது போத. (உசு)

அவ்வேலையி லங்க ணமைச்சர்கள் கூடித் தங்கள்
கைவேறுகொ ளீம வருங்கடன் காலை முற்றி
வைவே லவன்றன் குலமைந்தரு மின்மை யாலே
செய்வேறு வினைத்திறஞ் சிந்தனை செய்து தேர்வார் (உஎ)

தாழுஞ் செயலின் ெறாருமன்னவன் றுங்க வேண்டு
சூழுங் குடியு முதலாயின கொள்கைத் தேனுஞ்
சூழும் படைமன் னவன்றோளிணைக் காவ லின்றி
வாழுந்தகைத் தன்றிந்த வையக மென்று சொன்னர். (உஅ)

வேறு.

பன்முறை யுயிர்க ளெல்லாம் பாலித்து ஞாலங் காப்பான்
றன்னெடுங் குடைக்கீழ்த் தத்த நெறிகளிற் சரித்து வாழு
மன்னரை யின்றி வைகு மண்ணுல கெண்ணுங் காலை
யின்னுயி ரின்றி வாழும் யாக்கையை யொக்கு மென்பார் (உகூ)

இவ்வகை பலவு மெண்ணி யிங்கினி யரச ரில்லை
செய்வகை யிதுவே யென்று தெளிபவர் சிறப்பின் மிக்க
மைவரை யனைய வேழங் கண்கட்டி விட்டான் மற்றக்
கைவரை கைக்கொண் டார்மண் காவல்கைக் கொள்வா ரென்று. (௩0)

---

(உச) நீடியமெய் - நீடித்த ஆயுளையுடைய தேகமும். (உடு) மெய - சிவபிரான. நிரயத்திடை - நரகத்திலே. வீந்தான - இறந்தான். (உசு) உலந்த - இறந்த. எழுதும கொடிபோலபவா - சித்திரத்தில எழுதும கொடியை யொத்தவாகளாகிய அவன் மனைவி மார்கள். புலர்வு - வருத்தம். அவன் அன்ன - அக்கொடிய இராசனது மனதைப போனற. (உஎ) தங்கள் கைவேறு கொள-தங்களது ஒழுக்கத்துக்கு வேறான. ஈமம-சுடுகாடு. (உஅ) கூழும - பயிரும. கொள்கைத்தேனும - சிறப்புகளையுடையன வாயி ருப்பினும். (௩0) அக கைவரை - அந்தயானையால. கைகொண்டார் - எடுத்துக்கொள் ளப்பட்டவா.

வேறு.

செம்மாண் வினை யர்ச்சனை நூன்முறை செய்து தோளால்
இம்மாநில மேந்தவொ ரேந்தலை யேந்து கென்று
பெய்மாமுகில் போன்மதம் பாய்பெரு கோடை நெற்றிக்
கைம்மாவை நறுந்துகில் கொண்டுகண் கட்டி விட்டார். (௬௧)

கண்கட்டி விடுங்களி யானையக் காவன் மூதூர்
மண்கொட்புற வீதி மருங்கு திரிந்து போகித்
திண்பொற்றட மாமதில் சூழ்திரு வாலவாயின்
விண்பிற்பட வோங்கிய கோபுர முன்பு மேவ. (௬௨)

நீங்கும் மிரவின்க ணிகழ்ந்தது கண்ட தொண்டர்
ஈங்கெம் பெருமா னருளாமெனி லிந்த வையந்
தாங்குஞ் செயல்பூண் பனென் றுள்ளந் தளர்வு நீங்கிப்
பூங்கொன்றை மிலைந்தவர் கோயிற் புறத்தி னிற்ப. (௬௩)

வேழத் தரசங்கண் விரைந்து நடந்து சென்று
வாழ்வுற் றுலகஞ்செய் தவத்தினின் வள்ள லாரைச
சூழ்பொற் சுடர்மா மணிமாநிலந் தோய முன்பு
தாழ்வுற் றெடுத்துப் பிடர்மீது தரித்த தன்றே (௬௪)

மாதங்க மெருத்தினில் வைத்தவர் தம்மைக் காணு
ஏதங்கெட வெண்ணிய திண்மை யமைச்ச ரெல்லாம்
பாதங்களின் மீது பணிந்தெழுந் தார்க ளப்போ
தோதங்கிளர் வேலையை யொத்தொலி மிக்க தவ்வூர் (௬௫)

சங்கங்கண் முரன்றன தாரைகள் பேரி யோடும்
எங்கெங்கு மியம்பின பல்லிய மெல்லை யில்ல
அங்கங்கு மலிந்தன வாழ்த்தொலி யம்பொற் கொம்பின்
பங்கன் னருளா லுலகாள்பவர் பாங்க ரெங்கும் (௬௬)

வெங்கட் களிற்றின் மிசைநின்று மிழிச்சி வேரித்
தொங்கற் சுடர்மா லைகள்சூழ்முடி சூடு சாலை

---

(௬௧) செம்மாண் - செவ்விய பெருமையுடைய. ஓடை - பட்டமணிந்த கைம்மாவை-யானையை. துகில் - வஸ்திரம். (௬௨) கொட்புற - கிளம்பிச்சுழல. திண் - வலிய. தடம் - உயர்ந்த. (௬௩) பூங்கொன்றை மிலைந்தவர் - சிவபெருமான். (௬௫) மாதங்கம் - அரசுவா. எருத்தினில் - பிடரியின் மேல். காணு - கண்டு. ஏதம்கெட (உலகத்திலுள்ள) குற்றம் (தீமை) ஒழிய. ஓதம்கிளர் வேலையை - வெள்ளத்தைப் பெருக்கி யெழும் சமுத்திரத்தை (௬௬) முரன்றன - ஒலித்தன. பல்லியம் - பலவகை வாத்தியங்கள். அம்பொன் கொம்பின் பங்கன் - அழகிய பொற்கொம்பை யொத்த பார்வதி பாகராகிய பரமசிவன். (௬௭) இழிச்சி- இறக்கி. வேரித்தொங்கல் - தேன்பொருந்திய பூமாலைகளும் சுடர் மாலைகள் - பிரகாசத்தையுடைய மாணிக்கமாலைகளும். அரி ஆசனத்து - சிங்காசனத்தில்.

யங்கட் கொடுபுக் கரியாசனத் தேற்றி யொற்றைத்
திங்கட் குடைக்கீ ழுரிமைச்செயல் சூழ்ந்து செய்வார். (ருஎ)

மன்னுந் திசைவேதியின் மங்கல வாகு திக்கட்
டுன்னுஞ் சுடர்வன்னி வளர்த்துத் துதைந்த நூல்சூழ்
பொன்னின் கலசங்கள் குடங்கள் பூரித்த தூநீர்
உன்னுஞ் செயன்மந் திரயோகர் நிறுத்தி னார்கள். (ருஅ)

வந்துற்றெழு மங்கல மாந்தர்க டம்மை நோக்கிச்
சிந்தைச சிவமே தெளியுந்திரு மூர்த்தி யார்தா
முந்தைச் செயலா மமண்போய்முதற் சைவ மோங்கில்
இந்தப்புவி தாஙகியிவ் வின்னர சாள்வ னென்றார் (ருகூ)

அவ்வாறு மொழிந்தது கேட்ட வமைச்ச ரோடு
மெய்வாழ்தரு நூலறி வின்மிகு மாந்தர் தாமும்
எவ்வா றருள் செய்தனை மற்றவை யன்றி யாவர்
செய்வார் பெரியோ யெனச்சேவடி தாழ்ந்து செப்ப. (சo)

வையம் முறைசெய் குவனாகில் வயஙகு நீறே
செய்யும் மபிடே கமுமாக செழுங்க லன்கள்
ஐயன் னடையா ளமுமாக வணிந்து தாங்கு
மொய்புன் சடைமா முடியேமுடி யாவ தென்றார் (சக)

என்றிவ்வுரை கேட்டலு மெல்லையில் கல்வி யோரும
வன்றிணமதி நூல்வளர் வாய்மை யமைச்சர் தாமு
நன்றிங்கரு டாலெனை நற்றவ வேந்தர் சிந்தை
யொன்றும் மரசா ளுரிமைச்செய லான வுய்த்தார். (சஉ)

மாடெஙகு நெருங்கிய மங்கல வோசை மல்கச்
சூடுஞ்சடை மௌலி யணிந்தவர் தொல்லை யேனந்
தேடுஙகழ லார்திரு வாலவாய் சென்று தாழ்ந்து
நீடுங்களிற் றின்மிசை நீண்மறு கூடு போந்தார். (சங)

மின்னும்மணி மாளிகை வாயிலின் வேழ மீது
தன்னின்று மிழிந்து தயங்கொளி மண்ட பத்திற்

(ருஅ) மனனுமை திசை வேதியில் - (நாயனா) வீற்றிருககும (கிழக்குத்) திசையில் (அவரெதிரில இடபபட்ட) ஓமகுண்டத்தில், வனனி - அககினி. துதைந்த - நெருங கிய. (ருகூ) வநது உறறு எழுமை மஙகலமாநதாகள் தமமை - (தமமிடம) வந்து பணி நது எழுகினற மஙகலச் செயலகளுககுரிய மநதிரிகள் முதலியோரை. (சக) ஐயன அடையாளம - சிவனடியாா எனறுகுறிபபானுணா உருததிராககமாலை. (சங) ஏனமு - விஷ்ணுவாகிய பனறி. மறுகூடுபோநதாா - வீதிவழியாகப் பவனிவந்தார்.

பொன்னின்னரி மெல்லிணைச் சாமரைக் காமர் பூங்கான்
மன்னுங்குடை நீழ லிருந்தனர் வையந் தாங்கி. (௪௪)

குலவுந்துறை நீதி யமைச்சர் குறிப்பின் வைகக்
கலகஞ்செ யமண்செய லாயின கட்டு நீக்கி
நிலவுந்திரு நீற்று நெறித்துறை நீடு வாழ
உலகெங்கு நிரம்பிய சைவ முயர்ந்து மன்ன. (௪௫)

நுதலின்கண் விழித்தவர் வாய்மை நுணங்கு நூலின்
பதமெங்கு நிறைந்து விளங்கப் பவங்கண் மாற
உதவுந்திரு நீறுயர் கண்டிகை கொண்ட வேணி
முதன்மும்மையி னாலுல காண்டனர் மூர்த்தி யார்தாம் (௪௬)

ஏலங் கமழ்கோதையர் தந்திற மென்று நீங்குஞ்
சீலங் கொடுவெம்புலன் றெவ்வுடன் வென்று நீக்கி
ஞாலந் தனிநேமி நடாத்தி நலங்கொ ளூழி
காலம் முயிர்கட் கிடரான கடிந்து காத்து (௪௭)

பாதம் பரமன்னவர் சூழ்ந்து பணிந்து போற்ற
ஏதம் பிணியா வகையிவ்வுல காண்டு தொண்டின்
பேதம் புரியா வருட்பேர ரசாளப் பெற்று
நாதன் கழற்சே வடிநண்ணின ரண்ண லாரே. (௪௮)

அகல்பா றையின்வைத்து முழங்கையை யன்று தேய்த்த
இகலார் களிற்றன் பரையேத்தி முருக னாரா
முகில்சூழ் நறுஞ்சோலையின் மொய்யொளி மாட வீதிப்
புகலூர்வரு மந்தணர் தந்திறம் போற்ற லுற்றும். (௪௯)

மூர்த்திநாயனார்புராண முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - க,०௨க.



பாண்டி நாட்டிலே, மதுரைமாநகரிலே, வணிகர்குலத்திலே, சிவபத்தியிற் சிறந்தவரும், பேரன்பையே திருவுருவமாகக் கொண்டவரும் ஆகிய மூர்த்தி நாயனார் என்பவர் ஒருவர் இருந்தார். அவர் மீனாக்ஷி சமேதராகிய சொக்கலிங்கப் பெருமானார்க்குச் சந்தனக்காப்பணியுந் திருத்தொண்டைச்

(௪௪) காமர் பூங்கால் - விரும்பத்தக்க மெல்லிய காம்பு. காலமன்னும் என்பதற்குக் காலினையுடையவென்பாருமுளர். (௪௫) கட்டு - கட்டுப்பாடு; (௪௬) நுதலின்கண் விழித்தவர் - நெற்றியிற்கண்ணையுடைய சிவபெருமான். நுணங்கு நூலின்பதம் - நுட்பமான வேதசிவாகம நூல்களிற் சொல்லிய வைதிக சைவமார்க்கம். மும்மையினால் - மூன்று அடையாளங்களோடு (விபூதி, உருத்திராக்கம், சடை.) (௪௭.) ஏலம் - மயிர்ச்சாந்து. தெவ்வுடன் - சத்துருக்களோடு. நேமி - ஆஞ்ஞாசக்கரத்தை. (௪௮) பரமன்னவர் - வேற்றரசர்கள்.

செய்துவந்தார். வருநாளில் கருநாடக தேசத்தரசன் நால்வகைச் சேனைகள் சூழ அம்மதுராபுரிக்கு வந்து, பாண்டியனை எதிர்த்துப் பெரும் போர்புரிந்து, வெற்றியடைந்து, அத்திருப்பதிக்கு அரசனுயினுன். அவ்வரசன் அமணர்களுடைய போதனையால் சமண சமயத்தை மெய்யென்று நம்பி, அம்மதத்திற் பிரவேசித்துத் திருநீறணியுஞ் சிவனடியார்களுக்குத் தீங்கிழைப்பானுயினுன். அன்புருவாக விளங்கும் மூர்த்திநாயனுர் தமது திருத்தொண்டைச் சிறிதுந் தவருது நிகழ்த்திக் கொண்டிருந்தார்.

அதைக்கண்ட அரசன் அன்பனுரை அமண்திருட்டுச்சமயத்தில் புகுவிப்ப, அவருக்குப்பல இடையூறுகள் புரிந்தான். புரிந்தும், அன்பிற் பெரியவர் சிறிதுந்தளராது தந்திருத்தொண்டைச் செய்துவர, கொடுங்கோல் மன்னன், நாயனுர் சந்தனக்கட்டைகளைத் தேடி வாங்குமிடங்களிலெல்லாம் அவருக்குக் கொடுக்க ஒட்டாமல் தடைசெய்தான். அதனுல் நாயனுர் பெருமான் பெரிதுந் துககித்து "இககொடுஙகோல் மன்னன் மாய்வது எக்காலம்; இந்நாடு விபூதி நெறியைத் தாங்கும் வேந்தனை அடைவது எக்காலம்" என்று சிந்தித்துப் பகல்முழுவதும் பலவிடங்களில் திரிந்து தேடியுஞ் சந்தனக்கட்டை கிடைக்கப் பெருமல், சோமசுந்தரக் கடவுள் திருவாலயத்துக்கு வந்து "இன்று சந்தனக்கட்டைககு முட்டுவந்தாலும், அதைத் தேய்க்கும் என் கைக்கு ஒரு முட்டுமில்லை" என்று, ஒரு சந்தனக் கல்லின்மேல் தமது அருமை முழஙகையை வைத்து, தோலும் நரம்பும் என்புங் கரைந்து குறையும்படி தேய்த்தார். தேய்த்தலும், இரத்தம் வெள்ளம் போல் பெருகி, எலும்பு வெளிப்பட்டு, அதனுள்ளேயுள்ள துவாரந் திறந்து மூளை ஒழுகியது. அதைககண்டு பொருத அம்பிகாபதி அருளால், "அன்பனே! மெய்யன்பின் துணிவால் இததகைய செய்கையைச செய்யாதே. உனக்கு இன்னல் விளைகருங் கொடுஙகோல் மன்னன் ஆளும் இராச்சியமெலலாம் நீயே கைக்கொண்டு, அவனுல் விளைந்த தீமைகளையொழித்து, நீ செய்துவருஞ் சந்தனக்காப்புத் திருப்பணியைச் செய்து, நமது சிவலோகத்தை அடைவாயாக" என்று ஒரு அசரீரி எழுந்தது. உடனே நாயனுர் பெருமான் அஞ்சி முழங்கையைத் தேய்த்தலை யொழித்து எழுந்தார். எழுந்ததும் அவரது கை ஊறுநீஙகி பழயபடி ஆயிற்று.

அன்றிரவே அக்கொடிய அரசன் இறந்து நிரயத்திலே வீழ்ந்தான். அடுத்தநாள் காலையிலே அமைச்சர்களெல்லாஞ் சேர்ந்து, தகனம் முதலிய கிரியைகள் செய்து, பின்பு இறந்த வேந்தனுக்குப் புதல்வர்கள் இல்லாதபடியால் எவரை அரசனுககுவது என்று ஆலோசிததுத் தெளிந்து "ஒரு யானையைக் கண்கட்டி விடுவோம்; அது எவரை எடுத்துக்கொண்டு வருகிறதோ, அவரே அரசாட்சிக்குரியவர்" என்று உறுதிபடுத்திக்கொண்டு, ஒரு யானையை சாஸ்திரமுறைப்படி அருச்சித்து "நீ இந்நாட்டை ஆளவல்ல ஒரு ஏந்தலை எடுத்துக்கொண்டுவா" என்று வஸ்திரத்தால் அதன்கண்ணைக்கட்டி விட்டார்கள். அவ்வேழம் தெருக்களிலே திரிந்து, சோமசுந்தரக் கடவுள் வீற்றிருந்தருளுந் திருக்கோயிலின் கோபுரத்துக்கு முன்னே போனது. அசரீரி வாககைக்கேட்ட அடியவர் பெருமான் "இறைவனுர்க்குத் திருவுளமாயின், நான் இந்நாட்டிற்கு இறைவனுவேன்" என்று கருதிக்கொண்டு ஆலயத்தின் ஓர் புறத்தில் நின்றூர் அரசுவா அன்பர் திருமுன்னே போய்த் தாழ்ந்து, அவரை எடுத்துத் தன்முதுகின்மேல் வைத்துக்கொண்டது. அதைக்கண்ட அமைச்சர்கள் அடியவரைப் பணிந்து, வாத்திய கோஷ்டத்துடன் முடி சூட்டு மண்டபத்திற்கு அழைத்துக் கொண்டுபோய், சிங்காச

னத்திலே எழுந்தருளச் செய்து, முடிசூட்டற்கு வேண்டிய மங்கல கிரியைகளை விதிப்படி தொடங்கினார்கள். அப்பொழுது நாயனார் மந்திரிகளை நோக்கி "சமணசமயம் அழிந்து சைவசமயம் விருத்தியானால் நான் அரசாட்சியைக் கைக்கொள்வேன்" என்ன; மந்திரிகளும், மற்றையோர்களும் மூர்த்தியாரை வணங்கி "தேவரீர் ஆஞ்ஞைவழி நிற்போம்" என்று சொன்னார்கள். பின்னர் பெரியவர் "நான் அரசன் ஆவேனாகில், எனக்குத் திருநீறே அபிடேகத் திரவியமும், கண்டிகையே கலன்களும், சடை முடியேகிரீடமும் ஆகுக" என்று திருவாய் மலர்ந்தருளினார். அமைச்சர் முதலியோர் "அப்படியே ஆகுக" என்று மொழிந்து, மகுடாபிஷேகத்துக்குரிய செயல்களைச் செய்தார்கள். உண்மை நாயனார் சடைமுடி தரித்துக்கொண்டு திருக்கோயிலுக்குப் போய்ச் சொக்கநாதரைத் தரிசித்து வணங்கிப் பட்டவர்த்தனத்தின்மீது ஆரோகணித்துக் கொண்டு அரசமாளிகையை யடைந்தார். அங்கே செங்கோல் தாங்கிச் சிங்காசனத்தின் மேல் வீற்றிருந்து, சமணம் ஒழியவும், சைவம் ஓங்கவும், பெண்ணாசை சிறிதும் இல்லாமல், விபூதி, உருத்திராக்ஷம, சடைமுடி என்கின்ற இம்மூன்றினாலும் பலநாள் நீதியரசியற்றிப் பின்னர் தனிகைவேல் தந்தையின் திருவடிநீழலை யடைந்தார்.



# முருகநாயனார் புராணம்.



தாது சூழுங் குழன்மலையா டளிர்க்கை சூழுந் திருமேனி
மீது சூழும் புனற்கற்றை வேணி நம்பர் விரும்புபதி
சோதி சூழு மணிமௌலிச் சோழர் பொன்னித் திருநாட்டுப்
போது சூழுந் தடஞ்சோலைப் பொய்கை சூழும் பூம்புகலூர். (க)

நாம மூதூர் மற்றதனு ணல்லோர் மனம்போ லவரணிந்த
சேம நிலவு திருநீற்றின் சிறந்த வெண்மைத் திருந்தொளியால்
யாம விருளும் வெளியாக்கு மிரவே யல்ல விரைமலர்மேற்
காமர் மதுவுண் சிறைவண்டு களங்க மின்றி விளங்குமால். (உ)

நண்ணு மிசைதேர் மதுகரங்க ணனைமென் சினையின் மருங்கலைய
வண்ண மதுரத் தேன்பொழிவ வாச மலர்வா யேயல்ல
தண்ணென் சோலை யெம்மருங்குஞ் சாரு மடமென் சாரிகையின்
பண்ணின் கிளவி மணிவாயும் பதிகச் செழுந்தேன் பொழியுமால். (௩)

(க) தாது - பூந்தாதுகள். மலையாள் - பார்வதிதேவியார். மீதுசூழும் புனல் - திருமுடிமேல் பெருகவெடுக்கும் கங்கை தங்கும். மணிமௌலி இரத்தினங்களிழைத்த கிரீட மணிந்த போது - மலர்கள். (உ) நாமம் - (யாவரும்) அதிசயிக்கத்தக்க சேமம் நிலவு - மோக்ஷ வின்பத்தைக்கொடுக்கும். (௩) மதுகரங்கள் - வண்டுகள் நனைமென் சினையின்மருங்கு - அரும்புகளையுடைய மெல்லிய கிளைகளின் புறத்திலே. சாரிகையின் - நாகணவாய்ப் புட்களினுடைய. கிளவி - சொல்லையுடைய. பதிகம் - தேவாரப்பதிகங்களாய.

வண்டு பாடப் புனற்றடத்து மலர்ந்து கண்ணீ ரரும்புவன
கொண்ட வாச முகையவிழ்ந்த குளிர்பங் கயங்க ளேயல்ல
அண்டர் பெருமான் றிருப்பாட்டி னமுதம் பெருகச் செவிமடுக்குந்
தொண்டர் வதன பங்கயமுந் துளித்த கண்ணீ ரரும்புமால். (௪)

ஆன பெருமை வளஞ்சிறந்த வந்தண் புகலூ ரதுதன்னின்
மான மறையோர் குலமரபின் வந்தார் முந்தை மறைமுதல்வர்
ஞான வரம்பின் றலைநின்றார் நாகம் புனைவார் சேவடிக்கீழ்
ஊன மின்றி நிறையன்பா லுருகு மனத்தார் முருகனார். (௫)

அடைமே லலவன் றுயிலுணர வலர்செங் கமல வயற்கயல்கண்
மடைமே லுகளுந் திருப்புகலூர் மன்னி வாழுந் தன்மையராய்
விடைமேல் வருவார்க் காளான மெய்மைத் தவத்தா லவர்கற்றைச்
சடைமே லணியத் திருப்பள்ளித் தாமம் பறித்துச் சாத்துவார். (௬)

புலரும் பொழுதின் முன்னெழுந்து புனித நீரின் மூழ்கிப்போய்
மலருஞ் செவ்வித் தம்பெருமான் முடிமேல வானீ ராறுமதி
உலவு மருங்கு முருகுயிர்க்க நகைக்கும் பதத்தி னுடன்பறித்த
அலகில் மலர்கள் வெவ்வேறு திருப்பூங் கூடை களிலமைப்பார். (௭)

கோட்டு மலரு நிலமலருங் குளிர்நீர் மலருங் கொழுங்கொடியின்
றோட்டு மலரு மாமலருஞ் சுருதிமலருந் திருவாயிற்
காட்டு முறுவ னிலவலரக் கனக வரையிற் பன்னகநாண்
பூட்டு மொருவர் திருமுடிமேற் புனைய லாகு மலர்தெரிந்து (௮)

கொண்டு வந்து தனியிடத்தி னிருந்து கோக்குங் கோவைகளும்
இண்டைச் சுருக்குந் தாமமுட னிணைக்கும் வாச மாலைகளுந்
தண்டிற் கட்டுங் கண்ணிகளுந் தாளிற் பிணைக்கும் பிணையல்களு
நுண்டா திறைக்குந் தொடையல்களுஞ் சமைத்து நுடங்கு நூன்மார்பர் ()

ஆங்கப் பணிக ளானவற்றுக் கமைத்த காலங் களினமைத்துத்
தாங்கிக் கொடுசென் றன்பினொடுஞ் சாத்தி வாய்ந்த வர்ச்சனைகள்
பாங்கிற் புரிந்து பரிந்துள்ளார் பரமர் பதிகப் பற்றான
ஓங்கிச் சிறந்த வஞ்செழுத்து மோவா நாவி னுணர்வினார் (௧0)

தள்ளு முறைமை யொழிந்திடவித் தகுதி யொழுகு மறையவர்தாந்
தெள்ளு மறைகண் முதலான ஞானஞ் செம்பொன் வள்ளத்தில்

(௫) மானம - மேனமையுடைய. (௬) அடைமேல் - தாமரையிலைமீது. அலவன - நண்டுகள உகளும - பாயும. (௭) வானநீா ஆறு - ஆகாயகஙகை. முருகு உயிர்க்க நகைக்கும - மணம கமழுமபடியாக மலரும. (௮) கனக வரையில் - மேரு வாகிய வில்லில. பனனக நாண் - ஆதிசேடனாகியநாணை. (௯) தாமம, கணணி, பிணையல ஙகூ-ம பககம பார்கக நுண்தாது - நுண்ணியமகரந்தங்களை. நுடஙகும - அசையும (௧௧) வள்ளததில - கிண்ணததில்.

அள்ளி யகில மீன்றளித்த வம்மை முலைப்பா லுடனுண்ட
பிள்ளை யார்க்கு நண்பருமாம் பெருமை யுடையா ராயினார். (கக)

அன்ன வடிவு மேனமுமா யறிவா ரிருவ ரறியாமன்
மன்னும் புகலூ ருறைவாரை வர்த்த மான வீச்சுரத்து
நன்னர் மகிழ்ச்சி மனங்கொள்ள நாளும் பூசை வழுவாமே
பன்னும் பெருமை யஞ்செழுத்தும் பயின்றே பணிந்து பரவினார். (க௨)

அங்க ணமருந் திருமுருக ரழகார் புகலிப் பிள்ளையார்
பொங்கு மணத்தின் முன்செய்த பூசை யதனாற் புக்கருளிச்
செங்க ணடலே றுடையவர்தாஞ் சிறந்த வருளின் பொருளளிக்கத்
தங்கள் பெருமா னடிநீழற் றலையா நிலைமை சார்வுற்றார். (க௩)

அரவ மணிந்த வரையாரை யருச்சித் தவர்தங் கழனிழற்கீழ்
விரவு புகலூர் முருகனார் மெய்மைத் தொண்டின் றிறம்போற்றிக்
கரவி லவர்பால் வருவாரைக் கருத்தி லுருத்தி ரஙகொண்டு
பரவு மன்பர் பசுபதியார் பணிந்த பெருமை பரவுற்றேன் (க௪)

முருகநாயனார்புராண முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - க,0௩௫.



சோழநாட்டிலே, திருப்புகலூரிலே, வேதியர் குலத்திலே சிவபத்தி அடியார் பத்திகளிற் சிறந்தவராய முருகநாயனார் எனபவர் ஒருவர் இருந தார். அவர் நாள்தோறும் வைகறை எழுந்து ஸ்நானஞ் செய்து, திருநந்தன வனத்துக்குச் சென்று கோட்டுப்பூ, கொடிப்பூ, நீர்ப்பூ, நிலப்பூ என்கின்ற நால்வகைப்பூககளில் சிவபிரான் திருமுடியில் தரிக்கத்தக்க பூக்களை விதிப் படிகொய்துகொண்டுவந்து, தனியிடத்திலிருந்து, இண்டை, தாமம், கண்ணி, பிணையல் முதலிய மாலைகளைக்கட்டி அத்திருப்பதியிலுள்ள வா த்தமானீச்சுரம் என்னுந்திருக்கோயிலிலே எழுந்தருளியிருக்கின்ற சிவபெரு மானுக்குச்சாத்தி, அருச்சனை செய்து, மனமுருகித் திருவஞ்செழுத்தைச் செபித்துவந்தார். அவர் அங்ஙனஞ் செய்து கொண்டிருந்து, அம்பிகையின் அருளமுதையுண்டு அருட்பாக்களைப் பொழிந்த திருஞானசம்பந்த சுவாமிக ளுக்கு நண்பராகிய பெருமையையும் பெற்று, அப்பிள்ளையார் திருக்கல்யா ணத்திலே முன்செய்த சிவபூசாபலத்தால் போய்ச் சிவசுப்பிரமணியனைப் பெற்ற சிவபிரான் திருவடி நீழலை அடைந்தார்.

(க௨) புகலிப்பிள்ளையார் - திருஞானசமபந்த மூர்த்திசுவாமிகள்.

# உருத்திரபசுபதிநாயனார் புராணம்.



நிலத்தி னோங்கிய நிவந்தெழும் பெரும்புன னீத்த
மலர்த்த டம்பணை வயல்புகு பொன்னிநன் னாட்டுக்
குலத்தி னோங்கிய குறைவிலா நிறைகுடி குழுமித்
தலத்தின் மேம்படு நலத்தது பெருந்திருத் தலையூர். (௧)

வான ளிப்பன மறையவர் வேள்வியின் வளர்தீ
தேன ளிப்பன நறுமலர் செறிசெழுஞ் சோலை
யான ளிப்பன வஞ்சுகந் தாடுவார்க் கவ்வூர்
தான ளிப்பன தருமமு நீதியுஞ் சால்பும் (௨)

அங்கண் மாநக ரதனிடை யருமறை வாய்மைத்
துங்க வேதியர் குலத்தினிற் றோன்றிய தூயோர்
செங்கண் மால்விடை யார்செழும் பொன்மலை வல்லி
பங்க னாரடி மைத்திறம் புரிபசு பதியார். (௩)

ஆய வந்தண ரருமறை யுருத்திரங் கொண்டு
மாய னாறி யாமலர்ச் சேவடி வழுத்துந்
தூய வன்பொடு தொடர்பினி லிடையறாச் சுருதி
நேய நெஞ்சின ராகியத் தொழிறலை நின்றார். (௪)

கரையில் கம்பலை புள்ளொலி கறங்கிட மருங்கு
பிரச மென்சுரும் பறைந்திடக் கருவரால் பிறழு
நிரைநெ டுங்கய நீரிடை நெருப்பெழுந் தனைய
விரைநெ கிழ்ந்தசெங் கமலமென் பொய்கையின் மேவி. (௫)

தெள்ளு தண்புனல் கழுத்தள வாயிடைச் செறிய
உள்ளு றப்புக்கு நின்றுகை யுச்சிமேற் குவித்துத்
தள்ளு வெண்டிரைக் கங்கைநீர் ததும்பிய சடையார்
கொள்ளு மன்பினி லுருத்திரங் குறிப்பொடு பயின்றார். (௬)

அரும றைப்பய னாகிய வுருத்திர மதனை
வருமு றைப்பெரும் பகலுமெல் லியும்வழு வாமே
திரும லர்ப்பொகுட் டிருந்தவ னனையவர் சிலநாள்
ஒருமை யுய்த்திட வுமையிட மகிழ்ந்தவ ருவந்தார். (௭)

---

(௧) பெரும்புனல் நீத்தம் - காவேரியின் பிரவாகம். (௨) வான - மழையை. (ஆன் அஞ்சு) உகந்து ஆடுவார்க்கு - (பசுவின் பஞ்சகவ்வியத்தை) விரும்பி ஆடியருளும் பரமசிவனுக்கு. ஆன அளிப்பன - பசுக்கள் அக்கவ்வியங்களைக் கொடுக்கின்றன. (௫) கம்பலை - முழக்கத்தை. கறங்கிட - சுழல. பிரசமென்சுரும்பு - தேனையுண்ணு மிருதுவான ஆண்வண்டுகள். (௭) எல்லியும் - இரவும். திருமலர்ப்பொகுட்டு இருந்தவன் - பிரமனை. இடம் - இடப்பக்கம்.

காத லன்பர்த மருந்தவப் பெருமையுங் கலந்த
வேத மந்திர நியதியின் மிகுதியும் விரும்பி
ஆதி நாயக ரமர்ந்தருள் செய்யமற் றவர்தாந்
தீதி லாநிலைச் சிவபுரி யெல்லையிற் சென்றார். (அ)

நீடு மன்பினி லுருத்திர மோதிய நிலையால்
ஆடு சேவடி யருகுற வணைந்தன ரவர்க்குப்
பாடு பெற்றசீ ருருத்திர பசுபதி யாராங்
கூடு நாமமு நிகழ்ந்தது குவலயம் போற்ற. (௯)

அயில்கொண் முக்குடு மிப்படை யார்மருங் கருளாற்
பயிலு ருத்திர பசுபதி யார்திறம் பரசி
யெயிலு டைத்தில்லை யெல்லையி னாளைப்போ வாராஞ்
செயலு டைப்புறத் திருத்தொண்டர் திறத்தினை மொழிவாம். (௰)

உருத்திரபசுபதிநாயனார்புராண முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - க,0சரு



சோழமண்டலத்திலே, திருத்தலை என்னும் ஊரிலே, அந்தணர்குலத்திலே, சிவபிரான் சேவடிக்கண் இடையறாப் பேரன்பு உடையவராகிய பசுபதி என்பவர் ஒருவர் இருந்தார். அப்பெரியவர் தாமரைத் தடாகத்திற்குச் சென்று அகோராத்திரம் கழுத்தளவு தண்ணீரிலே நின்று கொண்டு, மகா உருத்திர மந்திரத்தை ஓதிச்சின்னாட்கழிந்த பின்னர் சாமியாய் வந்த சங்கரனடிசேர்ந்தார். அவர் உருத்திரமந்திரத்தை ஓதியபடியால் உருத்திரபசுபதி நாயனார் என்னுந் திருநாமத்தை யுடையவரானார்.



# திருநாளைப்போவார்நாயனார் புராணம்.



பகர்ந்துலகு சீர்போற்றும் பழையவளம் பதியாகுந்
திகழ்ந்தபுனற் கொள்ளிடம்பொன் செழுமணிக டிரைக்கரத்தான்
முகந்துதர விருமருங்கு முளரிமலர்க் கையேற்கும்
அகன்பணைநீர் நன்னாட்டு மேற்காநாட் டாதனூர். (க)

நீற்றலர்பே ரொளிநெருங்கு மப்பதியி னிறைகரும்பின்
சாற்றலைவன் குலைவயலிற் றகட்டுவரா லெழப்பகட்டேர்

(௰) அயில கொள் முக்குடுமி படையார்-கூர்மை பொருந்தியமுத்தலைச் சூலாயுதத்தையுடைய சிவபிரான. (க) முகந்துதர-வாரிக்கொடுக்க. பணை - வயல்களுடைய. (உ) அலைவன குலை - அலையா நின்ற வலிய நெற்கதிர்க் குலைகளையுடைய. பகடு ஏர் ஆறு அலம் - எருமைகள் பூட்டிய ஏர்போகும் மார்க்கத்தில் கலப்பையின. சால் - படைச்சால். அலவன - நண்டுகள். முருகு உயிர்க்கும - தேனைச்சொரியும.

ஆற்றலவன் கொழுக்கிழித்த சால்வழிபோ யசைந்தேறிச்
சேற்றலவன் கருவுயிர்க்க முருகுயிர்க்குஞ் செழுங்கமலம். (உ)

நனைமருவுஞ் சினைபொதுளி நறுவிரைசூழ் செறிதளிரிற்
றினகரமண் டலம்வருடுஞ் செழுந்தருவின் குலம்பெருகிக்
கனமருவி யசைந்தலையக் களிவண்டு புடைசூழப்
புனன்மழையோ மதுமழையோ பொழிவொழியா பூஞ்சோலை (ந)

பாளைவிரி மணங்கமழும் பைங்காய்வன் குலைத்தெங்கின்
றாளதிர மிசைமுட்டித் தடங்கிடங்கி னெழப்பாய்ந்த
வாளைபுதை யச்சொரிந்த பழமிதப்ப வண்பலவி
னீளமுதிர் கனிகிழிதே னீத்தத்தி லெழுந்துகளும். (ச)

வயல்வளமுஞ் செயல்படுபைந் துடவையிடை வருவளமும்
வியலிடமெங் கணுநிறைய மிக்கபெருந் திருவினவாம்
புயலடையு மாடங்கள் பொலிவெய்த மலிவுடைத்தா
யயலிடைவே றடிநெருங்கக் குடிநெருங்கி யுளதவ்வூர். (ரு)

மற்றவ்வூர்ப் புறம்பணையின் வயன்மருங்கு பெருங்குலையிற்
சுற்றம்விரும் பியகீழ்மைத் தொழிலுழவர் கிளைதுவன்றிப்
பற்றியபைங் கொடிச்சுரைமேற் படர்ந்தபழங் கூரையுடைப்
புற்குரம்பைச் சிற்றில்பல நிறைந்துளதோர் புலைப்பாடி. (சு)

கூருகிர்மெல் லடியளகின் குறும்பார்ப்புக் குழுச்சுழலும்
வார்பயின்முன் றிலினின்ற வள்ளுகிர்நாய்த் துள்ளுபறழ்
காரிரும்பின் சரிசெறிகைக் கருஞ்சிறார் கவர்ந்தோட
வார்சிறுமென் குரைப்படக்கு மரைக்கசைத்த விருப்புமணி. (எ)

வன்சிறுதோன் மிசையுழத்தி மகவுறக்கு நிழன்மருதுந்
தன்சினைமென் பெடையொடுங்குந் தடங்குழிசிப் புதைநீழன்

(ந) நனைமருவும சினைபொதுளி - அரும்புகள் விளங்கும கிளைகள் நெருங்கி. தின கரன - சூரியன. வருடும - தடவும. தருவினகுலம - மரக்கூட்டங்கள். கனம - மேகங் கள. (ச) தடம கிடங்கின - விசாலமாகிய குளங்களினின்றும. நீத்தத்தில் - வெள் ளத்தில். உகளும - குதிக்கும, விளையாடும. (ரு) செயல்படு பைந்துடவையிடை - வைத்துவளாக்கப்படும பசிய தோட்டங்களில. (சு) குலையில - செய்கரையில். கிளை து வன்றி - சாதியார நெருங்கி. குரம்பை - குடிசைகளாகவுள்ள. புலைப்பாடி - புலைச் சேரி. (எ) கூர்உகிர - கூர்மையான நகத்தோடு கூடிய. அளகின - பெட்டைக்கோழி யின. குறும்பார்ப்பு - சிறுகுஞ்சுகளது. வார்பயிலமுன்றில - வார்வலைகள் தொங்கும முற்றத்தில். வள் - கூரிய; நெருங்கிய. பறழ் - குட்டிகளை. சரி - காப்பு.

மென்சினைய வஞ்சிகளும் விசிப்பறைதூங் கினமாவும்
புன்றலைநாய்ப் புனிற்றுமுழைப் புடைத்தெங்கு முடைத்தெங்கும் (அ)

செறிவலித்திண் கடைஞர்வினைச் செயல்புரிவை கறையாமக்
குறியளக்க வுளைக்குஞ்செங் குடுமிவா ரணச்சேக்கை
வெறிமலர்த்தண் சினைக்காஞ்சி விரிநீழன் மருங்கெல்லா
நெறிகுழற்புன் புலைமகளிர் நெற்குறுபாட் டொலிபரக்கும். (கூ)

புள்ளுந்தண் புனற்கலிக்கும் பொய்கையுடைப் புடையெங்குந்
தள்ளுந்தா ணடையசையத் தளையவிழ்பூங் குவளைமது
விள்ளும்பைங் குழற்கதிர்நென் மிலைச்சியபுன் புலைச்சியர்கள்
கள்ளுண்டு களிதூங்கக் கறங்குபறை யுங்கலிக்கும். (கo)

இப்படித்தா கியகடைஞ ரிருப்பின்வரைப் பினின்வாழ்வார்
மெய்ப்பரிவு சிவன்கழற்கே விளைத்தவுணர் வொடும்வந்தார்
அப்பதியி லூர்ப்புலைமை யான்றதொழிற் றாயத்தார்
ஒப்பிலவர் நந்தனா ரெனவொருவ ருளரானார். (கக)

பிறந்துணர்வு தொடங்கியபின் பிறைக்கண்ணிப் பெருந்தகைபால்
சிறந்தபெருங் காதலினாற் செம்மைபுரி சிந்தையராய்
மறந்துமய னினைவின்றி வருபிறப்பின் வழிவந்த
அறம்புரிகொள் கையராயே யடிதொண்டி னெறிநின்றார் (கஉ)

ஊரில்விடும் பறைத்துடவை யுணவுரிமை யாக்கொண்டு
சார்பில்வருந் தொழில்செய்வா தலைநின்றார் தொண்டினாற்
கூரிலைய முக்குடுமிப் படையண்ணல் கோயிறொறும்
பேரிகையே முதலாய முகக்கருவி பிறவினுக்கும் (கங)

போர்வைத்தோல் விசிவாரென் றினையனவும் புகலுமிசை
நேர்வைத்த வீணைக்கும் யாழுக்கு நிலைவகையில்

(அ) பெடை - பெடைக்கோழி. குழிசி - பானை. விசிபறை - வாரால் கட்டப் பட்ட பறைகள். மாவும் - மாமரங்களும். நாய்ப்புனிற்றும் உழை - நாய்கள் குட்டி போட்டிருக்கும் பள்ளத்தின் (நாய்புனிற்று முழை - நாய்குட்டிகளுள்ள சிறுமுழைகளின் எனினும் பொருந்தும்.) தெங்கும் - தென்னமரங்களும். (கூ) வைகறையாமம் குறிஅளக்க விடியற் சாமத்தின் குறிப்பைத் தெரிவிக்க. வாரணச்சேக்கை-சேவல்களின் துயில்இடமாகிய. காஞ்சி - காஞ்சிமரம். (ம) புள்ளும் - பட்சிகளும். மிலைச்சிய - சூடிய. கறங்கு - ஒலிக்கின்ற, அடிக்கின்ற (கக) பரிவு - அன்பு. (கஉ) பிறைகண்ணி பெருந்தகைபால் - சிவபிரானிடத்து மறந்தும் அயல் நினைவு இன்றி - மறந்தும் பிற சிறு தெய்வங்களைக் கருதாமல். (கங) பறை துடைவை - பறையர்க்குரிய மானியம் (வெட்டியான் மானியம்.) கூர்இலையமுக்குடுமிப்படை - கூரிய தகட்டுவடிவான முத்தலைச் சூலத்தை யேந்திய. (கச) நிலைவகையில் சேர்வுற்ற தந்திரியும் - சுரஸ்தானங்களுக்கு ஏற்ற பொருத்தமாகிய நரம்புகளும்.

சேர்வுற்ற தந்திரியுந் தேவர்பிரா னர்ச்சனைகட்
கார்வத்தி னுடன்கோரோ சனையுமிவை யளித்துள்ளார். (கச)

இவ்வகையாற் றந்தொழிலி னியன்றவெலா மெவ்விடத்துஞ்
செய்வனவுங் கோயில்களிற் றிருவாயில் புறநின்று
மெய்விரவு பேரன்பு மிகுதியினு லாடுதலும்
அவ்வியல்பில் பாடுதலு மாய்நிகழ்வா ரந்நாளில். (கரு)

திருப்புன்கூர்ச் சிவலோகன் சேவடிகண் மிகநினைந்து
விருப்பினெடுந் தம்பணிகள் வேண்டுவன செய்வதற்கே
அருத்தியினு லொருப்பட்டங் காதனூர் தனினின்றும்
வருத்தமுறுங் காதலினல் வந்தவ்வூர் மருங்கணைந்தார். (கசு)

சீரேறு மிசைபாடித் திருத்தொண்டர் திருவாயி
னேரேகும் பிடவேண்டு மெனநினைந்தார்க் கதுநேர்வார்
காரேறு மெயிற்புன்கூர்க் கண்ணுதலார் திருமுன்பு
போரேற்றை விலங்கவருள் புரிந்தருளிப் புலப்படுத்தார். (கஎ)

சிவலோக முடையவர்தந் திருவாயின் முன்னின்று
பவலோகங் கடப்பவர்தம் பணிவிட்டுப் பணிந்தெழுந்து
சுவலோடு வாரலையப் போவார்பின் பொருசூழல்
அவலோடு மடுத்ததுகண் டாதரித்துக் குளந்தொட்டார். (கஅ)

வடங்கொண்ட பொன்னிதழி மணிமுடியார் திருவருளாற்
றடங்கொண்ட குளத்தளவு சமைத்ததற்பின் றம்பெருமான்
இடங்கொண்ட கோயில்புறம் வலங்கொண்டு பணிந்தெழுந்து
நடங்கொண்டு விடைகொண்டு தம்பதியி னண்ணினூர் (கக)

இத்தன்மை யீசர்மகிழ் பதிபலவுஞ் சென்றிறைஞ்சி
மெய்த்ததிருத் தொண்டுசெய்து விரவுவார் மிக்கெழுந்த
சித்தமொடுந் திருத்தில்லைத் திருமன்று சென்றிறைஞ்ச
உய்த்தபெருங் காதலுணர் வொழியாது வந்துதிப்ப. (உ0)

அன்றிரவு கண்டுயிலார் புலர்ந்ததற்பி னங்கெய்த
ஒன்றியணை தருதன்மை யுறுகுலத்தோ டிசைவில்லை

---

(கசு) அருத்தியினுலை - அன்பினுலை. வருத்தமுறும - (தரிசனங கிடைக்குமோ எனனும) வருததததைக்கொடுக்கும. (கஎ) அதுநேர்வார் - அங்ஙனமே திருவருள் செய்வாராய். காரேறும எயில் - மேகங்கள் தவழும மதில்களையுடைய. ஏற்றை - இடபதேவரை. (கஅ) சுவலோடு வார அலைய - முதுகில் வாததியங்களைக கட்டுதற குரியவாரகள் அலையும்படி அவல - பள்ளம, சிறுகுளம. குளம தொட்டார்-குளமாக வெட்டினூர்.

யென்றிதுவு மெம்பெருமா னேவலெனப் போக்கொழிவார்
நன்றுமெழுங் காதன்மிக நாளைப்போ வேனென்பார். (௨௧)

நாளைப்போ வேனென்று நாள்கள்செலத் தரியாது
பூளைப்பூ வாம்பிறவிப் பிணிப்பொழியப் போவாராய்ப்
பாளைப்பூங் கமுகுடுத்த பழம்பதியி னின்றும்போய்
வாளைப்போத் தெழும்பழனஞ் சூழ்தில்லை மருங்கணைவார். (௨௨)

செல்கின்ற போழ்தந்தத் திருவெல்லை பணிந்தெழுந்து
பல்குஞ்செந் தீவளர்த்த பயில்வேள்வி யெழும்புகையு
மல்குபெருங் கிடையோது மடங்களொருங் கினவுங்கண்
டல்குந்தங் குலநினைந்தே யஞ்சியணைந் திலர்நின்றார் (௨௩)

நின்றவரங் கெய்தரிய பெருமையினை நினைப்பார்முன்
சென்றிவையுங் கடந்தூர்சூ ழெயிற்றிருவா யிலைப்புக்கார்
குன்றனைய மாளிகைக டொறுங்குலவும் வேதிகைக
ளொன்றியமூ வாயிரமங் குளவென்பா ராகுதிகள் (௨௪)

இப்பரிசா யிருக்கவெனக் கெய்தலரி தென்றஞ்சி
யப்பதியின் மதிற்புறத்தி னாராத பெருங்காத
லொப்பரிதாய் வளர்ந்தோங்க வுள்ளுருகிக் கைதொழுதே
செப்பரிய திருவெல்லை வலங்கொண்டு செல்கின்றார். (௨௫)

இவ்வண்ண மிரவுபகல் வலஞ்செய்தங் கெய்தரிய
வவ்வண்ண நினைந்தழிந்த வடித்தொண்ட ரயர்வெய்தி
மைவண்ணத் திருமிடற்றார் மன்றினடங் கும்பிடுவ
தெவ்வண்ண மெனநினைந்தே யேசறவி னொடுந்துயில்வார் (௨௬)

இன்னறரு மிழிபிறவி யிதுதடையென் றேதுயில்வா
ரந்நிலைமை யம்பலத்து ளாடுவா ரறிந்தருளி
மன்னுதிருத் தொண்டரவர் வருத்தமெலாந் தீர்ப்பதற்கு
முன்னணைந்து கனவின்கண் முறுவலொடு மருள்செய்வார் (௨௭)

இப்பிறவி போய்நீங்க வெரியினிடை நீமூழ்கி
முப்புரிநூன் மார்பருடன் முன்னணைவா யெனமொழிந்
தப்பரிசே தில்லைவா ழந்தணர்க்கு மெரியமைக்க
மெய்ப்பொருளா னாரருளி யம்பலத்தே மேவினார். (௨௮)

(௨௨) பூளை பூவாம் - சிறு பூளைப் பூவைப்போல (நொய்தாய் ஒழியும், நிலையாமையையுடைய.) பழனம் - வயல்கள். (௨௩) மல்கு பெரும் கிடை ஓதும் - மிகுந்த பெரிய பிராமணச் சிறுவர்கள் வேதாத்தியயனஞ் செய்யும். (கிடை - வேதவொலி.) (௨௬) ஏசறவினொடு - துக்கத்தோடு. (௨௮) முப்புரி நூன்மார்பருடன் - அந்தணர்களுடன்.

தம்பெருமான் பணிகேட்ட தவமறையோ ரெல்லாரு
மம்பலவர் திருவாயின் முன்பச்ச முடனீண்டி
யெம்பெருமா னருள்செய்த பணிசெய்வோ மென்றேகித்
தம்பரிவு பெருகவருந் திருத்தொண்டர் பாற்சார்ந்தார் (உ௯)

ஐயரே யம்பலவ ரருளாலிப் பொழுதணைந்தோம்
வெய்யவழ லமைத்துமக்குத் தரவேண்டி யெனவிளம்ப
நையுமனத் திருத்தொண்டர் நானுய்ந்தே னெனத்தொழுதார்
தெய்வமறை முனிவர்களுந் தீயமைத்த படிமொழிந்தார். (௩௦)

மறையவர்கண் மொழிந்ததற்பின் றென்றிசையின் மதிற்புறத்துப்
பிறையுரிஞ்சுந் திருவாயின் முன்னாகப் பின்னாகர்த
நிறையருளான் மறையவர்க ளொருப்பமைத்த குழியெய்தி
யிறையவர்தாண் மனங்கொண்டே யெரிசூழ வலங்கொண்டார் (௩௧)

கைதொழுது நடமாடுங் கழலுன்னி யழல்புக்கா
ரெய்தியவப் பொழுதின்கண் ணெரியின்க ணிம்மாயப்
பொய்தகையு முருவொழித்துப் புண்ணியமா முனிவடிவாய்
மெய்திகழ்வெண் ணூல்விளங்க வேணிமுடி கொண்டெழுந்தார். (௩௨)

செந்தீமே லெழும்பொழுது செம்மலர்மேல் வந்தெழுந்த
வந்தணன்போற் றோன்றினா ரந்தரதுந் துபிநாதம்
வந்தெழுந்த திருவிசும்பில் வானவர்கண் மகிழ்ந்தார்த்துப்
பைந்துணர்மந் தாரதின் பனிமலர்மா ரிகள்பொழிந்தார். (௩௩)

திருவுடைய தில்லைவா ழந்தணர்கள் கைதொழுதார்
பரவரிய தொண்டர்களும் பணிந்துமனங் களிபயின்றா
ரருமறைசூழ் திருமன்றி லாடுகின்ற கழல்வணங்க
வருகின்றார் திருநாளைப் போவாரா மறைமுனிவர். (௩௪)

தில்லைவா ழந்தணரு முடன்செல்லச் சென்றெய்திக்
கொல்லைமான் மறிக்கரத்தார் கோபுரத்தைத் தொழுதிறைஞ்சி
யொல்லைபோ யுள்புகுந்தா ருலகுய்ய நடமாடு
மெல்லையினைத் தலைப்பட்டார் யாவர்களுங் கண்டிலரால். (௩௫)

அந்தணர்க ளதிசயித்தா ரருமுனிவர் துதிசெய்தார்
வந்தணைந்த திருத்தொண்டர் தம்மைவினை மாசறுத்துச்
சுந்தரத்தா மரைபுரையுந் துணையடிக டொழுதிருக்க
வந்தமிலா வானந்தப் பெருங்கூத்த ரருள்புரிந்தார். (௩௬)

---

(௩௧) பிறை உரிஞ்சும - சந்திரன தவழும. (௩௨) வேணி - சடை. (௩௩) அநத ணனபோல் - பிரமனைபபோல. பைந்துணர் மநதாரததின - பசிய பூஙகொததுககளை யுடைய கறபகததருவின. (௩௫) ஒலலை - விரைவில. (௩௬) தாமரைபுரையும-தாமரை மலாபோனற

*மாசுடம்பு விடத்தீயின் மஞ்சனஞ்செய் தருளியெழுந்*
*தாசின்மறை முனியாகி யம்பலவர் தாளடைந்தார்*
*தேசுடைய கழல்வாழ்த்தித் திருக்குறிப்புத் தொண்டர்வினைப்*
*பாசமற முயன்றவர்செய் திருத்தொண்டின் பரிசுரைப்பாம்.* (௩௭)

**திருநாளைப்போவார் நாயனார்புராண முற்றிற்று.**

*ஆக திருவிருத்தம் - க,0அ௨.*



சோழமண்டலத்திலே, மேற்காநாட்டிலே, ஆதனூரிலே, பறையர் குலத்திலே சிவபெருமானையன்றிப் பிறதெய்வங்களைக் கனவிலுங் கருதாதவரும், ஊரார் விடுத்த மானியநிலத்தின் விளைவால் சீவித்துத் தங்குலத் தொழிலைச்செய்து வருபவரும் ஆகிய நந்தனார் என்பவர் ஒருவர் இருந்தார் அவர் சிவாலயங்கடோறும் பேரிகைமுதலிய வாத்தியங்களுக்குத் தோலும் வாரும், வீணைக்கும் யாழுக்கும் நரம்பும், அருச்சனைக்குக் கோரோசனையுங் கொடுத்தும், திருக்கோயில்களின் வாயிற்புறத்திலே நின்றுகொண்டு அனலிடைப்பட்டமெழுகுபோல மனங்கசிந்துருகி, தொடுமணற்கேணிபோல் கண்களினின்றுங் கண்ணீர்சொரிய ஆனந்தக்கூத்தாடியும், பாடியும்வந்தார் ஒருநாள் அவர் திருப்புன்கூர்ச் சிவலோகநாதனைத் தரிசித்து, அங்கே திருப்பணிசெய்ய விரும்பி, ஆதனூரினின்றும் அவ்வூரையடைந்து, திருக்கோயில் வாயிலிலே நின்றுகொண்டு, சிவலிங்கப்பெருமானை நேரே தரிசிக்க நினைக்க, பத்திவலையிற் படுவோரும் தந்திருமுன்பிருக்கின்ற இடபதேவரை விலகும்படி திருவருள்செய்து, தரிசனந்தந்தருளினார். அடியவர் பெருமான் அன்புடன் பணிந்து எழுந்துபோம்போது, அங்கே ஒருபள்ளத்தைக கண்டு, குளமாகவெட்டி ஆதனூர்க்குத் திரும்பினார். அப்பெரியவர் இப்படியே பல திருப்பதிகளுக்குச் சென்று பல திருத்தொண்டு செய்து வந்தார். வருங்காலத்தில் ஒருநாள் அவருக்குச் சிதம்பரதரிசனஞ் செய்ய வேண்டுமென்னும் பேராசை உண்டாயிற்று. அன்றிரவுமுழுதுங் கண்துயிலாதவராய்ப் பொழுதுவிடிந்தபின் "தில்லையம்பதிக்குப்போனால் திருக்கோயிலுள்ளேசெல்லுந் தகுதி என்குலத்துக்கு இல்லையே" என்று வருந்தி, "இதுவும் எம்பெருமான் திருவருளே" என்று சொல்லிப்போகா தொழிந்தார். பின்னும் உண்டாகும் ஆசைமிகுதியினால் "நாளைக்குப்போவேன் நாளைக்குப்போவேன்" என்று சொல்லிக்கொண்டு பலநாட்கள் கழித்தார். அதனால் அவர் திருநாளைப்போவார் என்னுந் திருநாமத்தைப் பெற்றார்.

ஒருநாள் திருநாளைப்போவார் தில்லையைத் தரிசிக்கவேண்டும் என்று உறுதிகொண்டு தம் ஊரினின்றும்போய்ச் சிதம்பரத்தின் திருவெல்லையையடைந்தார். அடைந்து திருமதில்வாயிலிலே நுழைந்து, அங்கே அந்தணர்கள் யாகசாலைகளையும், வேதாத்தியயனஞ் செய்யும் மடங்களையுங்கண்டு அஞ்சி உள்ளேபுகாமல் அத்திருவெல்லையை வலஞ்செய்வாராயினார். இவ்வண்ணம் இரவும்பகலும் வலஞ்செய்துகொண்டு, தாம் உள்ளே நுழையக் கூடாத தன்மையைக்கருதித் துக்கித்துத் துயருறுந் தொண்டர்பிரான் "நடராஜப்பெருமான் திருநடனத்தைத் தரிசிப்பது எப்படி? இவ்விழிபிறவி தடையாய் இருக்கின்றதே" என்று நினைத்து; மனநொந்து நித்திரைசெய்தார். நடராஜவள்ளல் அன்பர் வருத்தமெல்லாந் தீர்ப்ப, அவருக்குச் சொப்ப

னத்திலே தோன்றி "நீ இந்நீசப்பிறப்பொழிய நெருப்பிலேமூழ்கி, வேதியர்களோடும் நமது சபைமுன்னணைவாய்" என்று திருவாய்மலர்ந்து, தில்லைவாழந்தணர்களுக்குஞ் சொப்பனத்திலே தோன்றி, நந்தனுர்பொருட்டு அக்கினி வளர்க்கும்படி ஆஞ்ஞாபித்து அம்பலமடைந்தார். அந்தணர் பெருமான்கள் விழித்து எழுந்து ஆலயத்திலே ஒருங்குசேர்ந்து "நம்பெருமான் அருள்செய்த பணியைச் செய்வோம்" என்றுசொல்லித் திருநாளைப்போவாரிடஞ்சென்று "ஐயரே! சிவாஞ்ஞைபடி நும்பொருட்டு நெருப்புவளர்க்க வந்தோம்" என்ன; நாளைப்போவார் "நான் உய்ந்தேன் உய்ந்தேன்" என்று தொழுதார். பின்பு அந்தணர்கள் தென்மதிற்புறத்திலே, திருவாயிலுக்கு முன்னே ஓர்குழியிலே தீவளர்த்து நந்தனுருக்குத் தெரிவித்தார்கள். நாயனுர் அவ்வக்கினிக்குழியை அடைந்து, கைகூப்பி அம்பலவாணன் குஞ்சிதபாதத்தைத் தியானித்துக்கொண்டு, அக்குழியை வலம்வந்து, அக்கினியிலே முழுகினுர். முழுகிய புனிதர் நீசதேகத்தையொழித்து, புண்ணியமுனி வடிவாய்ப் பூணூல் சடைமுடிகளோடும் எழுந்தார் அதுகண்டு அமரர் அலர்மாரி சொரிந்தார்கள்; அங்கிருந்த அந்தணாகள் கைகூப்பித் தொழுதார்கள்; மற்றைய சிவனடியார்கள் மகிழ்வெய்தினுர்கள் திருநாளைப்போவார் தில்லைமூவாயிரவர் முதலியோருடனசென்று திருக்கோபுரத்தைக் கண்டு பணிந்து எழுந்து, பொன்னமபலத்தை அடைநதாா அடைந்ததும் அங்கிருந்த மறையவர்களும், மற்றையவாகளும அவரைக்காணுமல் அதிசயித்துத் துதிசெய்தார்கள் மலைகிழவோள் பெற்ற மாதேவர் திருநாளைப்போவார் நாயனுருககுத் தமது திருவடியைக கொடுததருளினுர்.



# திருக்குறிப்புத்தொண்டநாயனுர்புராணம்



ஏயு மாறுபல் லுயிர்களுக் கெல்லையில் கருணைத்  
தாய னுடனி யாயின தலைவரைத் தழுவ  
வாயு நான்மறை போற்றநின் றருந்தவம் புரியத்  
தூய மாதவஞ் செய்தது தொண்டைநன் ஞடு. (௧)

நன்மை நீடிய நடுநிலை யொழுக்கத்து நயந்த  
தன்மை மேவிய தலைமைசால் பெருங்குடி தழைப்ப  
வன்மை யோங்கெயில் வளம்பதி பயின்றது வரம்பின்  
றொன்மை மேன்மையி னிகழ்பெருந் தொண்டைநன் ஞடு. (௨)

நற்றி றம்புரி பழையனூர்ச் சிறுத்தொண்டர் நவைவந்  
துற்ற போதுதம் முயிரையும் வணிகனுக் கொருகாற்  
சொற்ற மெய்ம்மையுந் தூக்கியச் சொல்லையே காக்கப்  
பெற்ற மேன்மையி னிகழ்ந்தது பெருந்தொண்டை நாடு. (௩)

---

(௧) ஏயுமாறு - பக்குவத்திற் கிசைய. ஆயும - (அநதணாகள்) ஆராயும. (௨) வனமை ஓங்கு எயில் - வலிமை மிகுந்த மதிலால் சூழபபட்ட, (௩) நவை - குறறம்,

ஆணை யாமென நீறுகண் டடிச்சேர னென்னுஞ்
சேணு லாவுசீர்ச் சேரனார் திருமலை நாட்டு
வாணி லாவுபூண் வயவர்கள் மைத்துனக் கேண்மை
பேண நீடிய முறையது பெருந்தொண்டை நாடு. (ச)

கறைவி ளங்கிய கண்டர்பாற் காதல்செய் முறைமை
நிறைபு ரிந்திட நேரிழை யறம்புரிந் ததனாற்
பிறையு ரிஞ்செயிற் பதிபயில் பெருந்தொண்டை நாட்டு
முறைமை யாமென வுலகினின் மிகுமொழி யுடைத்தால். (ரு)

தாவில் செம்மணி யருவியா றிழிவன சாரல்
பூவில் வண்டினம் புதுநற வருந்துவ புறவம்
வாவி நீள்கயல் வரம்பிற வுகைப்பன மருத
நீவி நித்திலம் பரந்திய ருணக்குவ நெய்தல். (சு)

குறவர் பன்மணி யரித்திதை விதைப்பன குறிஞ்சி
கறவை யானிரை மானுடன் பயில்வன கானம்
பறவை தாமரை யிருந்திற வருந்துவ பழனஞ்
சுறவு முண்மருப் பணங்கயர் வனகழிச் சூழல். (எ)

கொண்டல் வானதின் மணிசொரி வனகுல வரைப்பாற்
றண்டு ணர்க்கொன்றை பொன்சொரி வனதள வயற்பால்
வண்டன் முத்தநீர் மண்டுகால் சொரிவன வயற்பாற்
கண்டன் முன்றுறைக் கரிசொரி வனகலங் கடற்பால். (அ)

தேனி றைந்தசெந் தினையிடி தருமலைச் சீறூர்
பானி றைந்தபுற் பதத்தன முல்லைநீள் பாடி

---

(ச) ஆணை ஆம என - சிவபெருமான அருளாவடிவம என்று. சேண் உலாவு - நெடுந்தூரம பரவிய. வாள் நிலாவு பூண் - ஒளிவீசும் ஆபரணங்களைத் தரித்த. வயவர்கள் - படைவீரர்கள் கேண்மை - உரிமை, சமபந்தம். (ரு) நேரிழை - காமாட்சியமமையார பிறை உரிஞ்சு - சந்திரன் தவழும. (சு) தாவில் - குறறமிலலாத. புறவம் - முலலை நிலங்களில. நறவு - தேனை. வரமபு இற உகைப்பன - வயல வரம்புகள் இற்றுப்போகுமபடி பாய்கின்றன. நீவி - கழுவி. நித்திலம - முததுக்கள். உணக்குவ- உலர்ததபபடுகின்றன. (எ) கானம - முல்லை நிலஙகளில. ஆனநிரை - பசுக்கூட்டங்கள். பழனம - வயலகளில். இற அருந்துவ - இறால் மீனகளை யுண்கினறன. சுறவு முன் மருப்பு அணங்கு அயர்வன - சுறா மீன் முட் கொமபுகளை தெய்வத்தின அடையாளமாக வைததுத திருவிழாக கொண்டாடப படுகினறன. (அ) பொன - பொன போலும பூக்களை. தளவுஅயல்பால் - முல்லை நிலத்தின் அருகில். வண்டல்-மகளிர்கள் விளையாட்டிற சிந்திய. கலம - மரக்கலங்கள். கண்டல் - தாழைகளையுடைய ; (நீர் முள்ளிக்கும் பெயர்.) கரி சொரிதலாவது - பிறதீவுகளிலுள்ள யானைகளை மரக்கலங்களில் ஏற்றிக்கொண்டு வந்து இறக்குதல். (கூ) முல்லை நீள்பாடி - முல்லை நிலத்திலிருக்கின்ற நீண்ட இடையர்பாடிகள். புல்பதத்தன-புல்லரிசியன்னததை யுடையன, வேலைவைப்பு இடங்கள் - கடல் சாரபாகிய நெய்தனிலத் தூர்கள்,

தூநெ லன்னநெய் கன்னலின் கனியதண் டுறையூர்
மீனி றைந்தபே ருணவின வேலைவைப் பிடங்கள். (௯)

குழல்செய் வண்டினங் குறிஞ்சியாழ் முரல்வன குறிஞ்சி
முழவு கார்கொள முல்லைகண் முகைப்பன முல்லை
மழலை மென்கிளி மருதமர் சேக்கைய மருத
நிழல்செய் கைதைசூழ் நெய்தலங் கழியன நெய்தல். (௰)

மல்கு மப்பெரு நிலங்களில் வரைபுணர் குறிஞ்சி
யெல்லை யெங்கணு மிறவுள ரேனன்முன் விளைக்கும்
பல்பெ ரும்புனம் பயில்வன படர்சிறைத் தோகை
சொல்லு மப்புனங் காப்பவுஞ் சுரிகுழற் றோகை. (௧௧)

அங்கண் வான்மிசை யரம்பையர் கருங்குழற் சுரும்பு
பொங்கு பூண்முலைக் கொடிச்சியர் குழன்மூழ்கிப் போகாச்
செங்கண் மால்விடை யார்திருக் காளத்தி யென்னு
மங்குல் சூழ்வரை நிலவிய வாழ்வினுன் மல்கும். (௧௨)

பேறு வேறுசூ ழிமையவ ரரம்பையர் பிறந்து
மாறில் வேடரு மாதரு மாகவே வணங்கும்
ஆறு சூழ்சடை யண்ணலார் திருவிடைச் சுரமுங்
கூறு மேன்மையின் மிக்கதங் காட்டுவண் குறிஞ்சி. (௧௩)

அம்பொன் வார்குழற் கொடிச்சிய ருடனர மகளிர்
வம்பு லாமலர்ச் சுனைபடிந் தாடுநீள் வரைப்பின்
உம்பர் நாயகர் திருக்கழுக் குன்றமு முடைத்தாற்
கொம்பர் வண்டுசூழ் குறிஞ்சிசெய் தவங்குறை யுளதோ. (௧௪)

கோல முல்லையுங் குறிஞ்சியு மடுத்தசில் விடங்க
ணீல வாட்படை நீலிகோட் டங்களு நிரந்து
கால வேனிலிற் கடும்பகற் பொழுதினைப் பற்றிப்
பாலை யுஞ்சொல லாவன வுளபரன் முரம்பு (௧௫)

---

(௰) குறிஞ்சியாழ் முரல்வன - குறிஞ்சியாழிசையைப் பாடுகின்றன. முல்லை முழவ கார்கொள - முல்லை நிலத்தில் முழவப்பறையென மேகங்கள் ஒலிக்க. மருதமர் சேக்கைய-மருத விருக்ஷங்களில் துயிலிடங்களையுடையன. கைதை-தாழை. (௧௧) புணர் - சார்ந்த. இறவுளா - வேடர்கள். ஏனல் - தினை. (௧௨) சுரும்பு - வண்டுகள். கொடிச்சியர் - குறப்பெண்கள். போகா - (வாசனை அதிகமாக இருக்கின்றமையால்) நீங்காத. (௧௪) அரமகளிர் - தெய்வப்பெண்கள். வம்பு உலா - மணங்கமழும். கொமபர் - கொம்புகளிடத்தில். (௧௫) நீலி - துர்க்கை. பரல் முரம்பு - பருக்கைக் கற்களையுடைய சிலமேட்டு நிலங்கள்.

சொல்லு மெல்லையின் புறத்தன துணர்ச்சுரும் பலைக்கும்
பல்பெ ரும்புனற் கானியா றிடையிடை பரந்து
கொல்லை மெல்லிணர்க் குருந்தின்மேற் படர்ந்தபூம் பந்தர்
முல்லை மென்புதன் முயலுகைத் தடங்குநீண் முல்லை. (கசு)

பிளவு கொண்டதண் மதிநுதற் பேதைய ரெயிற்றைக்
களவு கொண்டது தளவெனக் களவலர் தூற்றும்
அளவு கண்டவர் குழனிறங் கனியுமக் களவைத்
தளவு கண்டெதிர் சிரிப்பன தமக்குமுண் டென்று. (கஎ)

மங்கை யர்க்குவாள் விழியிணை தோற்றமான் குலங்கள்
எங்கு மற்றவ ரிடைக்கிடை மலர்க்கொடி யெங்கும்
அங்கண் முல்லையின் றெய்வமென் றருந்தமி ழுரைக்குஞ்
செங்கண் மாறொழுஞ் சிவன்மகிழ் திருமுல்லை வாயில் (கஅ)

நீறு சேர்திரு மேனியர் நிலாத்திகழ் முடிமேன்
மாறில் கங்கைதான் வாக்குமஞ் சனந்தர வணைந்தே
ஊறு நீர்தரு மொளிமலர்க் கலிகைமா நகரை
வேறு தன்பெரு வைப்பென விளங்குமா முல்லை. (ககூ)

வாச மென்மலர் மல்கிய முல்லைசூழ் மருதம்
வீசு தெண்டிரை நதிபல மிக்குயர்ந் தோடிப்
பாச டைத்தடந் தாமரைப் பழனங்கண் மருங்கும்
பூசல் வன்கரைக் குளங்களு மேரியும் புகுவ. (உ0)

துங்க மாதவன் சுரபியின் றிருமுலை சொரிபால்
பொங்கு தீர்த்தமாய் நந்திமால் வரைமிசைப் போந்தே
யங்க ணித்திலஞ் சந்தன மகிலொடு மணிகள்
பங்க யத்தட நிறைப்பவந் திழிவது பாலி. (உக)

பிள்ளை தைவரப் பெருகுபால் சொரிமுலைத் தாய்போல்
மள்ளர் வேனிலின் மணற்றிடர் பிசைந்துகை வருட
வெள்ள நீரிரு மருங்குகால் வழிமிதந் தேறிப்
பள்ள நீள்வயற் பருமடை யுடைப்பது பாலி. (உஉ)

---

(கசு) சொல்லும - முன்கூறிய குறிஞ்சி நிலத்தின. துணர் - பூங்கொத்துக்களை. இணா - துளிர்களையுடைய. உகைத்து-ஓட்டி. (கஎ) எயிற்றை-பற்களின் வனப்பை. தளவு - முல்லையரும்புகள். களவு - களாச்செடிகள். (கஅ) இடைக்கு இடை - இடைகளுக்குத் தோற்ற. (ககூ) கலிகை மாநகரை-திருவூறல என்னுந் திருத்தலத்தை. (உ0) பாசடை - பசிலைகள் தங்கும. பூசல் - (அலைகள்) ஒலிக்கின்ற. (உக) துங்க மாதவன சுரபியின - வசிட்டமுனிவருடைய காமதேனுவின். (உஉ) தைவர - தடவ. மணலதிடர் பிசைந்து கைவருட - மணல் மேடுகளைக் கையால்தோண்டி மணல்களை வாரி ஊற்றுண்டாக்க.

அனைய வாகிய நதிபரந் தகன்பணை மருங்கிற்
கனைநெ டும்புன னிறைந்துநின் கரைப்பெருங் குளங்கள்
புனையி ருங்கடி மதகுவாய் திறந்திடப் புறம்போய்
வினைஞ ரார்ப்பொலி யெடுப்பநீர் வழங்குவ வியன்கால். (௨௩)

மாறில் வண்பகட் டேர்பல நெருங்கிட வயல்கள்
சேறு செய்பவர் செந்நெலின் வெண்முளை சிதறி
நாறு வார்ப்பவர் பறிப்பவர் நடுபவ ரான
வேறு பல்வினை யுடைப்பெருங் கம்பலை மிகுமால். (௨௪)

வரும்பு னற்பெருங் கால்களை மறித்திட வாளை
பெருங்கு லைப்பட விலங்குவ,பிறங்குநீர்ப் பழன
நெருங்கு சேற்குல முயர்த்துவ நீள்கரைப் படுத்துச்,
சுருங்கை நீர்வழக் கறுப்பன பருவராற் றொகுதி. (௨௫)

தளைத்த டம்பணை யெழுந்தசெந் தாமரைத் தவிசின்
இளைத்த சூல்வளை கண்படுப் பனவிடை யெங்கும்
விளைத்த பாசொளி விளங்குநீள் விசும்பிடை யூர்கோள்
வளைத்த மாமதி போன்றுள மருதநீள் வைப்பு. (௨௬)

ஓங்கு செந்நெலின் புடையன வுயர்கழைக் கரும்பு
பூங்க ரும்பயன் மிடைவன பூகமப் பூகப்
பாங்கு நீள்குலைத் தெங்குபைங் கதலிவண் பலவு
தூங்கு தீங்கனிச் சூதநீள் வேலிய சோலை. (௨௭)

நீடு தண்பணை யுடுத்தநீண் மருங்கின நெல்லின்
கூடு துன்றிய விருக்கைய விருந்தெதிர் கொள்ளும்
பீடு தங்கிய பெருங்குடி மனையறம் பிறங்கு
மாட மோங்கிய மறுகன மல்லனூ ரூர்கள். (௨௮)

தொல்லை நான்மறை முதற்பெருங் கலையொலி துவன்றி
இல்ல றம்புரிந் தாகுதி வேள்வியி லெழுந்த
மல்கு தண்புகை மழைதரு முகிற்குலம் பரப்புஞ்
செல்வ மோங்கிய திருமறை யவர்செழும் பதிகள். (௨௯)

---

(௨௩) வினைஞர் - உழவர்கள் - (௨௪) கம்பலை-ஆரவாரம. (௨௫) வாளைமறித்திட-வாளைமீனகள் அணைபோலக் குறுக்கிட்டுத் தடுக்க. குலை - கரை. சுருங்கை நீர்வழக்கு-மதகுகளினினறுஞ் சலமவரும் வழக்கதகை. (சுருங்கை - நீாவரும சிறுவழி.) (௨௬) தளை தடமபணை - வரமபுகளையுடைய பெரிய வயல்களில். தவிசில - பீடததில். வளை - சங்குகள். (௨௭) கழைக் கருமபு - உயர்ந்தகரும்பு. பூகம - கமுகமரங்கள். மிடைவன - நெருங்கியுள்ளன. கதலி - வாழைமரங்களும். சூதம் - மாமரங்களும். (௨௮) நெல்லின் கூடு துன்றிய இருக்கைய - நெற்கூடுகள் நெருங்கிய வீடுகளையுடையன. பீடு - பெருமை. மறுகன - தெருக்களையுடையன. மலலல் - வளமைபொருந்திய.

தீது நீங்கிடத் திக்கலி யாமவு ணற்கு
காதர் தாமருள் புரிந்தது நல்வினைப் பயன்செய்
மாதர் தோன்றிய மரபுடை மறையவர் வல்லம்
பூதி சாதனம் போற்றிய பொற்பினால் விளங்கும். (௬௦)

அருவி தந்தசெம் மணிகளும் புறவிலாய் மலரும்
பருவி யோடைக ணிறைந்திழி பாலியின் கரையின்
மருவு கங்கைவாழ் சடையவர் மகிழ்ந்தமாற் பேறும்
பொருவில் கோயிலுஞ் சூழ்ந்ததப் பூம்பணை மருதம். (௬௧)

விரும்பு மேன்மையென் பகர்வது விரிதிரை நதிகள்
அருங்கரைப்பயில் சிவாலய மனைகமு மணைந்து
பருங்கை யானையை யுரித்தவ ரிருந்தவப் பாசூர்
மருங்கு சூழ்தவம் புரிந்ததன் றேமற்ற மருதம். (௬௨)

பூம ரும்புனல் வயற்களம் பாடிய பொருநர்
தாம ருங்கிளை யுடன்றட மென்மலர் மிலைந்து
மாம ருங்குதண் ணீழலின் மருதயாழ் முரலுங்
காமர் தண்பணைப் புறத்தது கருங்கழி நெய்தல். (௬௩)

தூய வெண்டுறைப் பரதவர் தொடுப்பன வலைகள்
சேய நீள்விழிப் பரத்தியர் தொடுப்பன செருந்தி
யாய பேரளத் தளவர்க ளளப்பன வுப்பு
சாயன் மெல்லிடை யளத்திய ரளப்பன தரளம். (௬௪)

கொடுவினைத்தொழி லுளையர்கள் கொடுப்பன கொழுமீன்
படும ணற்கரை நுளைச்சியர் கொடுப்பன பவளந்
தொடுக டற்சங்கு துறையவர் குளிப்பன வவர்தம்
வடுவ கிர்க்கண்மங் கையர்குளிப் பனமணற் கேணி. (௬௫)

சுழிப்பு னற்கட லோதமுன் சூழ்ந்துகொண் டணிய
வழிக்க ரைப்பொதிப் பொன்னவிழ்ப் பனமலர்ப் புன்னை
விழிகரு நெய்தலின் விரைமலர்க் கட்சுரும் புண்ணக்
கழிக்க ரைப்பொதி சோறவிழ்ப் பனமடற் கைதை (௬௬)

காயல் வன்கரைப் புரைநெறி யடைப்பன கனிமுட்
சேய தண்ணறுஞ் செழுமுகை செறியுமுண் டகங்கள்

---

(௬௧) புறவில் - முல்லைநிலத்தில். (௬௩) களம - நெற்போர்க்களம. பொருநா - உழவா. மிலைந்து - சூடிக்கொண்டு. (௬௪) செருந்தி - செருந்திமலர்கள். தரளம் - முத்துக்கள். (௬௫) படு - மிகுந்த. தொடு - (சகரர்களால்) தோண்டப்பட்ட. (௬௭) காயல் - கழிகளின. புரைநெறி - குற்றமான வழிகளை. கனி - மெல்லிய. சேய-சிவந்த. முண்டகங்கள தாழைகள் (தாமரைகள் எனினும் பொருந்தும்.)

ஆய நுண்மணல் வெண்மையை மறைப்பன வன்னந்
தாய முன்றுறைச் சூழல்சூழ் ஞாழலின் றாது (௩௭)

வாம்பெ ருந்திரை வளாகமுன் குடிபயில் வரைப்பிற்
றாம்ப ரப்பிய கயல்களின் விழிக்கய றவிரக்
காம்பி னேர்வருந் தோளியர் கழிக்கயல் விலைசெய்
தேம்பொ திந்தசின் மழலைமென் மொழியசெவ் வழியாழ் (௩௮)

மருட்கொ டுந்தொழின் மன்னவ னிறக்கிய வரியை
நெருக்கி முன்றிரு வொற்றியூர் நீங்கவென் றெழுதும்
ஒருத்தர் தம்பெருங் கோயிலி னொருபுறஞ் சூழ்ந்த
திருப்ப ரப்பையு முடையதத் திரைக்கடல் வரைப்பு. (௩௯)

மெய்த ரும்புகழ்த் திருமயி லாபுரி விரைசூழ்
மொய்த யங்குதண் பொழிற்றிரு வான்மியூர் முதலாப்
பைத ரும்பணி யணிந்தவர் பதியெனைப் பலவா
னெய்த லெய்தமுன் செய்தவந் நிறைதவஞ் சிறிதோ. (௪0)

கோடு கொண்டெழுந் திரைக்கடற் பவளமென் கொழுந்து
மாடு மொய்வரைச சந்தனச் சினைமிசை வளரு
நீடு நெய்தலுங் குறிஞ்சியும் புணர்நிலம் பலவால்
ஆடு நீள்கொடி மாடமா மல்லையே யனைய. (௪௧)

மலைவி ழிப்பன வெனவயற் சேல்வரைப் பாறைத்
தலையு கைப்பவுந் தளைச்செறு விடைநெடுங் கருமான்
கலைகு திப்பன கரும்பகட் டேர்நிகர்ப் பவுமாய்
அலைபு னற்பணை குறிஞ்சியோ டணைவன வனேகம். (௪௨)

புணர்ந்த வானிரைப் புறவுடைக் குறுமுயல் பொருப்பின்
அணைந்த வான்மதி முயலினை யினமென வணைந்து
மணங்கொள் கொல்லையில் வரகுபோர் மஞ்சென வரைக்கார்
இணைந்து முல்லையுங் குறிஞ்சியுங் கலப்பன வெங்கும். (௪௩)

---

(௩௮) வாமபெரும திரை வளாகமுன குடிபயில் வரைபபில் - மோதுகின்ற பெரிய அலைகளையுடைய கடறகரையிலே பரதவாகள் குடியுள்ள இடததிலே. காமபின நோ வருமதோளியா-மூங்கிலையொதத தோள்களையுடைய நுளைப்பெண்கள. (௩௯) வரைபபு-நெய்தல நிலம. (௪0) பைதருமபணி-படத்தையுடைய பாமபை. (௪௧) (திரைகடல) கோடு கொண்டு எழும - கிளைதது (கொமபுகளாக) எழும. மாடுமொய் - சமீபத்திலே நெருங்கிய. சினை - கிளை. மல்லை - மாவலிபுரம. (௪௨) வயலசேல - மருத நிலத்துள்ள சேல்மீனகள். மலை விழிபபன என - மலை கண்ணை விழிததுபபாாததாற போல. உகைப்பவும் - பாய்ந்து புரளவும். தளைசெறு இடை - தளைகளாகப் பகுக்கபபட்ட மருத நிலங்களில். (௪௩) பொருப்பின - மலையில்.

கவரு மீன்குவை கழியவர் கானவர்க் களித்துச்
சிவலுஞ் சேவலு மாறியுஞ் சிறுகழிச் சியர்கள்
அவரை யேனலுக் கெயிற்றியர் பவளமுத் தளந்தும்
உவரி நெய்தலுங் கானமுங் கலந்துள வொழுக்கம். (௪௪)

அயன றம்புற வினிலிடைச் சியரணி நடையுப்
வியனெ டும்பணை யுழத்தியர் சாயலும் விரும்பி
இயலு மன்னமுந் தோகையு மெதிரெதிர் பயில
வயலு முல்லையு மியைவன பலவுள மருங்கு. (௪௫)

மீனு மோதமுன் கொழித்தவெண் டரளமுங் கமுகின்
பாளை யுக்கவும் விரவலிற் பரத்தியர் பணைமென்
றோளு முத்தியர் மகளிர்மா ருடிமுன் றொருக்கு
நீளு நெய்தலு மருதமுங் கலந்துள நிலங்கள். (௪௬)

ஆய நானிலத் தமைதியிற் றத்தமக் கடுத்த
மேய செய்தொழில் வேறுபல் குலங்களின் விளங்கித்
தீய வென்பன கனவிலு நினைவிலாச் சிந்தைத்
தூய மாந்தர்வாழ் தொண்டைநாட் டியல்புசொல் வரைத்தோ. (௪௭)

இவ்வ ளந்தரு பெருந்திரு நாட்டிடை யென்று
மெய்வ ளந்தரு சிறப்பினு லுலகெலாம் வியப்ப
எவ்வு கங்களு முள்ளதென் றியாவரு மேத்துங்
கைவி ளங்கிய நிலையது காஞ்சிமா நகரம். (௪௮)

ஆன தொன்னக ரம்பிகை தம்பெரு மானை
மான வர்ச்சனை யாலொரு காலத்து வழிபட்
டூன மில்லற மனைத்து முலகுய்ய வைத்த
மேன்மை பூண்டவப் பெருமையை யறிந்தவா விளம்பில். (௪௯)

வெள்ளி மால்வரைக் கயிலையில் வீற்றிருந் தருளித்
துள்ளு வார்புனல் வேணியா ரருள்செயத் தொழுது
தெள்ளு வாய்மையி னாகமத் திறனெலாந் தெரிய
உள்ள வாறுகேட் டருளினா ளுலகையா ளுடையாள். (௫௦)

எண்ணி லாகம மியம்பிய விறைவர்தாம் விரும்பும்
உண்மை யாவது பூசனை யெனவுரைத் தருள
அண்ண லார்தமை யர்ச்சனை புரியவா தரித்தாள்
பெண்ணி னல்லவ ளாயின பெருந்தவக் கொழுந்து. (௫௧)

(௪௪) கழியவா - நெய்தனிலத்துள்ள பரதவர்கள். கானவாககு - இடையர்களுககு. (வேடாகளுக்கெனினுமாம.) சிவலும - கவுதாரியையும. ஏனலுக்கு - தினைக்கு. எயிற்றியா - இடைச்சியர்கள். உவரி - சமுத்திரக்கரையிலுள்ள. (௪௬) உக்குவும் - உதிர்ந்த பூககளும. விரவலில் - கலத்தலால். (௪௮) கை - ஒழுக்கம.

வேறு.

நங்கை யுண்ணிறை காதலை நோக்கி நாய கன்றிரு வுள்ளத்து மகிழ்ந்தே, அங்க ணெய்திய முறுவலுந் தோன்ற வடுத்த தென்கொ ணின் பாலெனை வினவ, இங்கு நாதநீ மொழிந்தவா கமத்தி னியல்பி னாலுனை யர்ச்சனை புரியப், பொங்கு கின்றதென் னாசையென் றிறைஞ்சிப் போக மார்த்தபூண் முலையினாள் போற்ற. (௫௨)

தேவ தேவனு மதுதிரு வுள்ளஞ் செய்து தென்றிசை மிக்கசெய் தவத்தால், யாவ ருந்தனை யடைவது மண்மே லென்று முள்ளது காஞ்சிமற் றதனுண், மாவ மர்ந்தநம் மிருக்கையி னணைந்து மன்னு பூசனை மகிழ்ந்துசெய் வாயென், றேவ வெம்பெரு மாட்டியும் பிரியா விசைவு கொண்டெழுந் தருளுதற் கிசைந்தாள். (௫௩)

ஏதமில்பல யோனியெண் பத்து நான்கு நூறுயி ரந்தனுள் வைத்த, பேத மும்புரந் தருளுமக் கருணைப் பிரானமொ ழிந்தவா கமவழி பேணிப், போது நீர்மையிற் றொழுதனள் போதப் பொருப்பில் வேந்தனும் விருப்பில் வந் தெய்தி, மாத வம்புரிந் தருளுதற் கமைந்த வளத்தொ டும்பரி சனங்களை விடுத்தான். (௫௪)

துன்னு பல்லுயிர் வானவர் முதலாச் சூழ்ந்து டன்செலக் காஞ்சியி லணையத்
தன்னை நேர்வரும் பதுமமா நாகந் தம்பி ராட்டிதா டலைமிசை வைத்தே
அன்னை யாயுலகனைத்தையு மீன்று யடிய னேனுறை பிலமத னிடையே[ந்து
முன்னு கோயில்கொண் டருளுவா யென்ன மலைம டந்தைமற் றதற்கருள்புரி
அங்கு மண்ணுல கத்துயிர் தழைப்ப வளவி லின்பத்தி னருட்கரு விருத்தித
திங்க டங்கிய புரிசடை யார்க்குத் திருந்து பூசனை விரும்பினள் செய்ய
எங்கு நாடவுந் திருவிளை யாட்டா லேக மாமுத லெதிர்ப்படா தொழியப் [லி
பொங்கு மாதவஞ் செய்துகாண் பதற்கே புரிவு செய்தனள் பொன்மலைவல்
நெஞ்ச மீசனைக் காண்பதே விரும்பி நிரந்த ரந்திரு வாக்கினி னிகழ்வ
தஞ்செ ழுத்துமே யாகவா ளுடைய வம்மை செம்மலர்க் கைகுவித் தருளித்
தஞ்ச மாகிய வருந்தவம் புரியத் தரிப்ப ரேயவ டனிப்பெருங் கணவர்
வஞ்ச நீக்கிய மாவின்மூ லத்தில் வந்து தோன்றினார் மலைமகள் காண. (௫௭)

கண்ட போதிலப் பெருந்தவப் பயனுங் கம்ப மேவிய தம்பெரு மானை, வண்டு லாங்குழற் கற்றைமுன் றாழ வணங்கி வந்தெழு மாசைமுன் பொங்கக், கொண்ட காதலின் விருப்பள வின்றிக் குறித்த பூசனை கொள்கைமேற் கொண்டு, தொண்டை யங்கனி வாயுமை நங்கை தூய வர்ச்சனை தொடங்குதல் புரிவாள். (௫௮)

---

(௫௪) புரந்தருளும - காத்தருளும. போது நீர்மையில - போகவேண்டும என னும எண்ணத்தோடு (குணத்தோடு.) பொருப்பில் வேந்தனும - மலையரையனும. (௫௫) தன்னை நேர்வரும - தனக்குத்தானே ஒப்பாகிய. (௫௬) ஏகமாமுதல் - ஒப்பற்ற முழுமுதற்கடவுள். (௫௭) மாவின மூலத்தில் - மாமரத்தடியில.

உம்பர் நாயகர் பூசனைக் கவர்தா முரைத்த வாகமத் துண்மையே தலை நின், றெம்பி ராட்டியர்ச் சனைபுரி வதனுக் கியல்பில் வாழ்திருச் சேடியரான, கொம்ப னார்கள்பூம் பிடகைகொண் டணையக் குலவு மென்றளி ரடியிணை யொதுங்கி, யம்பி காவன மாந்திரு வனத்தி லான தூநறும் புதுமலர் கொய் தாள். (ருக)

கொய்த பன்மலர் கம்பைமா நதியிற்குலவு மஞ்சன நிலவுமெய்ப் பூச்சு, நெய்த ருங்கொழுந் தூபதீ பங்கணிறைந்த சிந்தையினீடிய வன்பின், மெய்த ரும்படி வேண்டின வெல்லாம் வேண்டும் போதினி லுதவமெய்ப் பூசை, யெய்த வாகம விதியெலாஞ் செய்தா ளுயிர்கள் யாவையு மீன்றவெம் பிரா ட்டி. (சு0)

கரந்த ரும்பய னிதுவென வுணர்ந்து கம்ப மேவிய வும்பர்நா யகர்பா
னிரந்த காதல்செ யுள்ளத்த ளாகி நீடு நன்மைக ளியாவையும் பெருக
வரந்த ரும்பொரு ளாமலை வல்லி மாறி லாவகை மலர்ந்தபே ரன்பாற்
சிரம்ப ணிந்தெழு பூசைநா டோறுந் திருவு ளங்கொளப் பெருகிய தன்றே.

நாத ரும்பெரு விருப்பொடு நயந்து நங்கை யர்ச்சனை செய்யுமப் பொழுதிற்
காதன்மிக்கதோர் திருவிளை யாட்டிற் கனங்கு ழைக்கருள் புரிந்திடவேண்டி
யோத மார்கட லேழுமொன் றாகி யோங்கி வானமு முட்படப் பரந்து
மீது செல்வது போல்வரக் கம்பை வெள்ள மாந்திரு வுள்ளமுஞ் செய்தார்.

அண்ண லாரருள் வெள்ளத்தை நோக்கி யங்க யற்கண்ணி தம்பெரு மான்மேல், விண்ணெ லாங்கொள வரும்பெரு வெள்ள மீது வந்துறு மென வெருக் கொண்டே, யுண்ணி லாவிய பதைப்புறு காதலுடன் றி ருக்கையாற் றடுக்கநில் லாமை, தண்ணி லாமலர் வேணியி னாரைத் தழுவிக் கொண்டன டன்னையே யொப்பாள். (சுங)

மலைக்கு லக்கொடி பரிவுறு பயத்தான் மாவின் மேவிய தேவநா யக னை, முலைக்கு வட்டொடு வளைக்கையா னெருக்கி முறுகு காதலா லிறுகிடத் தழுவச், சிலைத்த னித்திரு நுதற்றிரு முலைக்குஞ் செந்த ளிர்க்கரங் களுக்கு மெத் தெனவே, கொலைக்க ளிற்றுரி புனைந்ததம் மேனி குழைந்து காட்டி னார் விழைந்தகொள் கையினார். (சுச)

கம்பர் காதலி தழுவமெய் குழையக் கண்டு நிற்பவுஞ் சரிப்பவு மான
உம்ப ரேமுதல் யோனிக ளெல்லா முயிரும் யாக்கையு முருகியொன் றாகி
யெம்பி ராட்டிக்கு மெல்லிய ராவ ரென்று மேகம்ப ரென்றெடுத் தேத்த
வம்பு லாமலர் நிறையவிண் பொழியக் கம்பை யாறுமுன் வணங்கிய தன்றே.

(ருக) பூம்பிடகை - பூங்கூடை. (சு0) மெய்ப்பூச்சு - சந்தனக்காப்பு. (சுச) பரிவு - துன்பம். குவட்டொடு - மலைச்சிகரங்களோடு. (சுரு) நிற்பவுஞ் சரிப்பவும் ஆன - சரா சரங்களாகிய, மெல்லியர் ஆனார் - குழைந்தவராயினார்.

பூதி யாகிய புனிதநீ ருடிப் பொங்கு கங்கைதோய் முடிச்சடை புனை ந்து, காதில் வெண்குழை கண்டிகை தாழக் கலந்த யோகத்தின் மருவிய கருத்தால், ஆதி தேவனு ராயுமா தவஞ்செ யவ்வ ரங்கொலோ வகிலமீன் றளித்த, மாது மெய்ப்பயன் கொடுப்பவே கொண்டு வளர்த்த மூம்புடன் முலைச் சுவ டணிந்தார். (சுசு)

கோதி லாவமு தனையவண் முலைக்குக் குழைந்த தம்மண வாளநற் கோல மாது வாழவே காட்டிமு னின்று வரங்கள் வேண்டுவ கொள்கவென் றருள வேத காரண ராயவே கம்பர் விரைம லர்ச்செய்ய தாமரைக் கழற்கீழ் ஏத நீங்கிய பூசனை முடிந்த தின்மை தானறி விப்பதற் கிறைஞ்சி. (சுஎ)

அண்டர் நாயக ரெதிர்நின்று கூறு மளவி னுலஞ்சி யஞ்சலி கூப்பிக், கொண்ட விற்றையென் பூசனை யின்னுங் குறைநி ரம்பிடக் கொள்கவென் றருள, வண்டு வார்குழன் மலைமகள் கமல வதன நோக்கியம் மலர்க்கணெற் றியின்மேன், முண்டநீற்றர்நின் பூசனை யென்று முடிவ தில்லைநம் பாலென மொழிய. (சுஅ)

மாறி லாதவிப் பூசனை யென்று மன்ன வெம்பிரான் மகிழ்ந்துகொண் டருளி, யீறி லாதவிப் பதியினு ளெல்லா வறமும் யான்செய வருள்செய வேண்டும், வேறுசெய்வினை திருவடிப்பிழைத்த லொழிய விங்குளார் வேண்டின செயினும், பேறு மாதவப் பயன்கொடுத் தருளப் பெறவும் வேண்டுமென் றனள்பிறப் பொழிப்பாள். (சுகூ)

விடையின் மேலவர் மலைமகள் வேண்ட விரும்பு பூசனை மேவிவீற் றிருந்தே, யிடைய ருவறம் வளர்க்கும்வித் தாக விகப ரத்திரு நாழிநெல் லளித்துக், கடையராகிய முயர்ந்தவராயுங் காஞ்சி வாழ்பவர் தாஞ்செய்தீ வினையுந் தடைப டாதுமெய்ந் நெறியடை வதற்காந் தவங்க ளாகவு முவந்தருள் செய்தார். (எ0)

எண்ண ரும்பெரு வரங்கண்முன் பெற்றங் கெம்பி ராட்டிதம் பிரான் மகிழ்ந் தருள, மண்ணின் மேல்வழி பாடுசெய் தருளி மனைய றம்பெருக் குங்கரு ணையினு, ளண்ணு மன்னுயிர் யாவையும் பல்க நாடு காதலி னீடிய வாழ்க்கைப், புண்ணி யத்திருக காமக்கோட் டத்துப் பொலிய முப்பதோ டிரண்டறம் புரக்கும். (எக)

அலகி னீடவத் தறப்பெருஞ் செல்வி அண்ட மாந்திரு மனைக்கிடுந் தீப முலகில் வந்துறு பயனறி விக்க வோங்கு நாண்மலர் மூன்றுட னொன்று[லக நிலவ வாண்டினுக் கொருமுறை செய்யு நீடு தொன்மையா னிறைந்தபே ருமலர்பெ ருந்திருக் காமக் கோட்டத்து வைத்த நல்லற மன்னவே மன்னும்.

(சுசு) பூதி - மகதயிசுவரியம. அவ்வரங்கொலோ - அமமேன்மைதானே. (எஉ) தீபம - சோமன், சூரியன, அக்கினி என்னும முச்சுடர்.

தீங்கு தீர்க்குநற் றீர்த்தங்கள் போற்றுஞ் சிறப்பி னுடைத்திருக் காமக்கோட் டத்தின், பாங்கு மூன்றுல கத்தினுள் ளோரும் பரவு தீர்த்தமாம் பைம்பு னற் கேணி, வாங்கு தெண்டிரை வேலைமே கலைசூழ் வையகந்தனக் கெய் திய படியா, யோங்கு தன்வடி வாய்நிகழ்ந் தென்று முள்ள தொன்றுல காணியென் றுளதால். (எ௩)

அந்த மின்றிநல் லறம்புரிந் தளிக்கு மம்மை தன்றிருக் காமக்கோட் டத்தில்
வந்து சந்திர சூரியர் மீது வழிக்கொ ளாததன் மருங்குபோ தலினாற்
சந்த மாதிர மயங்கியெம் மருங்குஞ் சாயை மாறிய தன்றிசை மயக்கம் [ல்.
இந்த மாநிலத் தவரெலாங் காண வென்று முள்ளதொன் றின்றுமங் குளதா

கன்னி நன்னெடுங் காப்புடை வரைப்பிற் காஞ்சி யாந்திரு நதிக்கரை மருங்கு, சென்னி யிற்பிறை யணிந்தவர் விரும்புந் திருப்பெ ரும்பெய ரிருக் கையிற் றிகழ்ந்து, மன்னு வெங்கதிர் மீதெழும் போது மறித்து மேற்கடற் றலைவிழும் போதுந், தன்னிழற்பிரி யாதவண் காஞ்சித் தான மேவிய மேன் மையு முடைத்தால். (எ௫)

மறைக ளாற்றுதித் தருந்தவம் புரிந்து மாறி லாநிய மந்தலை நின்று
முறைமை யால்வரும பூசனை செய்ய முனிவர் வானவர் முதலுயி ரெல்லா
நிறையு மன்பினு லர்ச்சனை செய்ய நீடு காமங்க ளவரவர்க் கருளி
யிறைவர் தாமகிழ்ந் தருளிய பதிக ளெண்ணி றந்தவத் திருநக ரெல்லை. ()

மன்னு கின்றவத் திருநகர் வரைப்பின் மண்ணின் மிக்கதோர் நன்மையி னாலே, துன்னும் யானையைத் தூற்றில்வாழ் முயன்முன் றுரக்க வெய்திய தொலைவிலாக் கததாற, றன்னி லததுநின் றகற்றுதல் செய்யுந் தான மன்றி யுந் தனுவெழுந் தரணி, யெநநி லததிலுங் காண்பரு மிறவாத தான மென் றிவை யியல்பினி லுடைத்தால். (எஎ)

ஈண்டு தீவினை யாவையு நீக்கி யின்ப மேதரும் புண்ணிய தீர்த்தம்
வேண்டி னார்தமக் கிட்டசித தியதாய் விளங்கு தீர்த்தநன் மங்கல தீர்த்த
நீண்ட காப்புடைத தீரத்தமூன் றுலகி னிகழ்ந்த சாருவ தீர்த்தமு முதலா
ஆண்டு நீடிய தீர்ததமெண் ணிலவு மமர நாட்டவ ராடுத லொழியார். ()

தாள தொன்றினின் மூன்றுபூ மலருந் தமனி யசெழுந் தாமரைத் தடமு
நீள வார்புனல் குடதிசை யோடி நீர்க ரக்குமா நதியுட னீடு
நான லர்ந்துசெங் குவளைபைங் கமல நண்ப கற்றரும் பாடல மன்றிக்
கால மேகமொப் பானுறை வரைப்பிற் கண்ப டாதகா யாப்புளி யுளதால்.

---

(எ௩) வாங்கு - வளைந்த. வேலை - கடலாகிய. (எ௪) சந்த மாதிரம - நல்ல திசைகள் (எ௫) காபபுடை - காவலையுடைய (எ௬) காமஙகள - வரஙகளை. (எஎ) தூற றில் - புகலில். தனு - இறநத தேகஙகள். (எஅ) அமரநாட்டவா - தேவலோகத்தா கள். (எ௯) தமனியம - பொன குடதிசை - மேறறிசை. நீகரககும மாநதியுடன -

சாயை முன்பிணிக் குங்கிண றொன்று தஞ்ச முண்ணினுஞ் சாந்தட மொன்று, மாயை யின்றிவந் துள்ளடைந் தார்கள் வான ரத்துரு வாம்பில மொன்று, மேய வவ்வுரு நீங்கிடக் குளிக்கும் விளங்கு பொய்கையு மொன்று விண்ணவரோ, டாய வின்பமுய்க் கும்பில மொன்றோ டனைய வாகிய வதிசயம் பலவால் (௮௦)

அஞ்சு வான்கரத் தாறிழி மதத்தோ ரானை நிற்கவு மரையிருட் டிரியு மஞ்சு நீள்வது போலுமா மேனி மலர்ப்ப தங்களில் வண்சிலம் பொலிப்ப நஞ்சு பில்கெயிற் றரவெற் றரையி னும மூன்றிலைப் படையுடைப் பிள்ளை யெஞ்ச லின்றிமுன் றிரியவுங் குன்ற மெறிந்த வேலவன் காக்கவு மிசையும்.

சத்தி தற்பர சித்தயோ கிகளுஞ் சாத கத்தனித் தலைவரு முதலா, நித்த மெய்திய வாயுண்மெய்த் தவர்க ணீடு வாழ்திருப் பாடியு மனேகஞ், சித்தர் விஞ்சைய ரியக்கர்கந் தருவர் திகழ்ந்துமன் னுவார் செண்டுகையேந்தி, வித்த கக்கரி மேற்கொளுங் காரி மேவு செண்டணை வெளியுமொன் றுளதால்.

வந்த டைந்தவர் தம்முரு மாய மற்று ளாரைத்தாங் காண்பிட முளது [றும் சிந்தை யோகத்து முனிவர்யோ கினிகள் சேரும் போகபீ டமுமுள தென் அந்த மில்லறம் புரப்பவள் கோயி லான யோகபீ டமுமுள தாகும் எந்தை யார்மகிழ் காஞ்சிநீ டெல்லை யெல்லை யில்லன வுள்ளவா ரறிவார். ()

தூண்டு சோதியொன் றெழுந்திரு டேக்குஞ் சுரர்கள் வந்துரு முருத்திர சோலை, வேண்டினார்கடம் பிறப்பினை யொழிக்கு மெய்ந்நெ றிக்கணின் றார்கடாம் விரும்பித், தீண்டில் யாவையுஞ் செம்பொனுக் குவதோர் சிலையு முண்டுரை செய்வதற் கரிதால், ஆண்ட நாயகி சமயங்க ளாறு மகில யோனியு மளிக்குமந் நகரம். (௮௪)

என்று முள்ளவிந் நகர்கலி யுகத்தி லிலங்கு வேற்கரி காற்பெரு வளத்தோன், வன்றி றற்புலி யிமயமால் வரைமேல் வைக்க வேகுவோன் றனக்கிதன் வளமை, சென்று வேடன்முன் கண்டுரை செய்யத் திருந்து காதநான் குட்பட வகுத்துக், குன்று போலுமா மதில்புடை போக்கிக் குடியி ருத்தின கொள்கையின் விளங்கும். (௮௫)

---

நீர்மறைந்து போகின்ற (பமன்ப என்னும்) நதியோடு. நீடு நாள - நீண்டபகலிலே. பைங்கமலம் - (இரவிலே மலர்ந்த) பசிய தாமரைப் பூவும் நண்பகல் தருமபாடலம் - மதியான காலத்திலே அலரும் பாதிரியும். காளமேகம் ஒப்பாள் - கரியமேகத்தை ஒத்ததிருமேனியை யுடைய காமாட்சியம்மையார். (௮௰) சாயைமுன் பிணிக்கும் - தன்னைப் பார்த்தோர் சாயையை அவர்களுக்குப் புலப்படாமல் அடக்கிக்கொள்ளும். (௮௧) ஓர் ஆனை-விநாயகக் கடவுளாகிய ஓர் யானை. பில்குஎயிறு-கொப்பளிக்கும் பற்களை யுடைய. நாமம் - அச்சம். பிள்ளை - வயிரவர். எஞ்சல் இன்றி - ஓய்வின்றி. (௮௨) காரி - ஐயனார். செண்டணை வெளியும்-வையாளி வெளியும்; குதிரை நடத்தும் வெளியும். (௮௫) கரிகால் பெருவளத்தோன் - கரிகாற்சோழன். புலி - புலிக்கொடியை.

## வேறு.

தண்காஞ்சி மென்சினைப்பூங் கொம்ப ராடல் சார்ந்தசைய வதன்மருங்கு சுரும்பு தாழ்ந்து, பண்காஞ்சி யிசைபாடும் பழன வேலிப் பணைமருதம் புடையுடைத்தாய்ப் பாரி னீடுந், திண்காஞ்சி நகர்நொச்சி யிஞ்சி சூழ்ந்த செழுங்கிடங்கு திருமறைக ளொலிக்குந் தெய்வ, வண்காஞ்சி யல்குன்மலை வல்லி காக்க வளர்கருணைக் கடலுலகஞ் சூழ்ந்தான் மானும். (அசு)

கொந்தலர்பூங் குழலிமயக் கொம்ப கம்பர் கொள்ளும்பூ சனைகுறித்த தானங் காக்க, மந்திரமா மதிலகழி யவர்தாந் தந்த வாய்மையா கமவிதியின் வகுப்புப் போலு, மந்தமில்சீர்க் காஞ்சியைவந் தடைந்தார்க் கன்றி யுடைகளங்க மறுப்பரிதென் றறிந்து சூழ, வந்தணைந்து தன்கறுப்பு முவர்ப்பு நீக்கு மாகடலும் போலுமலர்க் கிடங்கு மாதோ. (அஎ)

ஆங்குவளெ ரெயிலினுடன் விளங்கும் வாயி லப்பதியில் வாழ்பெரியோ ருள்ளம் போல, வோங்குநிலைத் தன்மையவா யகில முய்ய வுமைபாக ரருள்செய்த வொழுக்க மல்லாற், றீங்குநெறி யடையாத தடையு மாகிச் செந்நெறிக்க ணிகழ்வாய்மை திருந்து மார்க்கந், தூங்குலவு நிலவிவள ரொளியா லென்றுந் தடநெடுவா னளப்பனவாந் தகைய வாகும். (அஅ)

மாறுபெற லருங்கனக மாட நீடு மணிமறுகு நெடுந்தெருவும் வளத்தில் வந்த, வாறுபயி லாவணவீ திகளு மற்று மமைந்தநக ரணிவரைக ணடுவு போக்கிக், கூறுபடு நவகண்ட மன்றி மல்கக் கொண்டவனே கங்கண்ட மாகி யன்ன, வேறொருமண் ணுலகுதனி யுளதா லென்ன விளங்கியுமா லோக நிலை மேவிற் றன்றே. (அகூ)

பாகமருங் கிருபுடையு முயர்ந்து நீண்ட படரொளிமா ளிகைநிரைகள் பயின்மென் கூந்தற், றோகை யர்தங் குழாமலையத் தூக்கு முத்தின் சுடர்க்கோவைக் குளிர்நீர்மை துதைந்த வீதி, மாகமிடை யொளிதழைப்ப மன்னி நீடு மருங்குதா ரகையலைய வரம்பில் வண்ண, மேகமிடை கிழித்தொழுகுந் தெய்வக் கங்கை மேனதிகள் பலமண்மேல் விளங்கி யொக்கும். (கூ0)

(அசு) தண்காஞ்சி - குளிர்ந்தகாஞ்சி மரத்தின. பண்காஞ்சி என்றது மருதப்பண்ணை. (காஞ்சி மருதத்திற்குரிய மரமாகலின.) தெய்வ வண்காஞ்சி-தெய்வவண்மையுடைய காஞ்சி என்னும் ஆபரணத்தை யணிந்த. மானும - ஒக்கும். (அஎ) கொந்து-கொத்து. உடைகளங்கம் - தம்மகம் அடைந்த குற்றத்தை. கறுப்பு - கருமைநிறமாகிய களங்கத்தையும். (அகூ) கனகம் - பொன. ஆவண வீதிகளும்-கடைத் தெருக்களும. அணிவரைகள நடுவுபோக்கி - அழகிய இமயம முதலாய மலைகளை (எல்லையாக) இடையிடையே அமைத்து. (கூ0) நிரைகள் - வரிசைகளில். மாகம் - விண்ணுலகம. தாரகை - நட்சத்திரங்கள்.

இளவொளிச்செங் கனகமயந் தானாய் மாடு கீழ்நிலையோர் நீலச்சோபா னம் பூணக், கொளவமைத்து மீதொருபாற் கன்ன சாலை குலவயிரத் தால மைத்த கொள்கை யாலே, யளவில்சுடர்ப் பிழம்பானார் தம்மைத் தேடி யகழ்ந்தேன மானனு மன்னமாகி, வளர்விசும்பி லெழுந்தானும் போலநீடு மாளி கையு முளமற்று மறுகு தோறும். (கக)

மின்பொலிபன் மணிமிடைந்த தவள மாட மிசைப்பயில்சந் திரகாந்தம் விசும்பின் மீது, பொன்புரையுஞ் செக்கர்நிறப் பொழுது தோன்றும் புனிற் றுமதி கண்டுருகிப் பொழிந்த நீரால், வன்புலியி னுரியாடைத் திருவே கம் பர் வளர்சடையு மிளம்பிறையுங் கண்டு கும்பிட், டன்புருகி மெய்பொழியக் கண்ணீர் வாரு மடியவரு மனையவுள வலகி லாத. (கஉ)

முகிலுரிஞ்சுங் கொடிதொடுத்த முடிய வாகு முழுப்பளிங்கின் மாளி கைகண் முற்றுஞ் சுற்று, நிகரில்சரா சரங்களெல்லா நிழலி னாலே நிறை தலினா னிறைதவஞ்செ யிமயப் பாவை, நகிலுழுத சுவடும்வளைத் தழும்பும் பூண்ட நாயகனார் நான்முகற்குப் படைக்க நல்கும், அகிலயோ னிகளெல்லா மமைத்து வைத்த வருபெரும்பண் டாரநிலை யனைய வாகும். (கங)

பொற்களப மாளிகைமேன் முன்றி னின்று பூங்கழங்கு மணிப்பந் தும் போற்றி யாடும், விற்புருவக் கொடிமடவார் கலன்கள் சிந்தி விழுவன வுங் கெழுவுதுணை மேவு மாதர், அற்புமுதிர் கலவியினிற் பரிந்து சிந்து மணி மணிச்சே டியர்தொகுக்கு மவையு மாகி, நற்கனக மழையன்றிக் காஞ்சி யெல்லை நவமணிமா ரியும்பொழியு நாளு நாளும். (கச)

பூமகளுக் குறையுளெனத் தகைய வான பொன்மாடத் தரமியங்கள் பொலிய நின்று மாமகரக் குழைமகளிர் மைந்த ரங்கண் வந்தேறு முன்னறு நீர் வண்ட லாடத், தூமணிப்பொன் புனைநாளத் துருத்தி வீசுஞ் சுடர்விடு செங் குங்குமநீர்த் துவலை தோய்ந்த, காமர்மணி நாசிகையின் மருங்கு தங்குங் கருமுகில்கள் செம்முகில்க ளாகிக் காட்டும். (கரு)

---

(கக) மாடு - சமீபத்திலுள்ள. நீலச்சோபானம் - நீலமணிகள் பதித்தபடி. அள வில் சுடர் பிழம்பானார் தம்மை - சிவபெருமானை. (கஉ) தவளம் - வெண்மை நிறம். புனிற்றுமதி - இளஞ் சந்திரனை. (கங) நிறைதவம் - குறைவில்லாத தவத்தை. இம யப்பாவை - உமை யம்மையாரின். நகில உழுத சுவடும் - கொங்கைகள் அழுந்திய தழும்பையும். வளை - வளையல்களை. பண்டாரம் - பொக்கிஷ சாலையின. (கச) கழங்கு - கழற்காய்களையும். கெழுவு துணைமேவு மாதர் அற்புமுதிர - தழுவுகின்ற கணவர்களுடன் கூடிய மாதர்கள் அன்புமுதிர்ந்த. (கரு) பூமகளுக்கு உறை உள எனும் இலக்குமி தேவியார்க்கு வாசஸ்தலம் எனலும். அரமியங்கள் - நிலா முற்றங்களில் (வீட்டின் மேலுலாவும் வெளி.) (வண்டல் - மகளிர் விளையாட்டுகளுள் ஒன்று.) நாளத்துருத்தி - துளைகளையுடைய நீர் துருத்தி. துவலை - துளிகள். காமர் மணி நாசிகையின - அழகிய மணிகள் பதித்தகோபுர நாசிகளின.

இமமலிய வெடுத்தநெடு வரைகள் போல விலங்குசுதைத் தவளமா ளிகைநீள் கோட்டுச், சிமையடையுஞ் சோபான நிரையும் விண்ணுந் தெரி வரிய தூய்மையினு லவற்றுட் சேர்ந்து, தமர்களுட னிழிந்தேறு மைந்தர் மாதர் தங்களையும் விசும்பிடைநின் றிழியா நிற்கும், அமரரையு மரமகளிர் தமையும் வெவ்வே றறிவரிதாந் தகைமையன வனேக மங்கண். (௯௬)

அரவநெடுந் தேர்வீதி யருகு மாடத் தணிமணிக்கோ புரத்தயலே வியல் வாய் நீண்ட, விரவுமா கதச்சோதி வேதித் திண்ணை விளிம்பினொளி துளும் புமுறைப்படிமீ தேறுங், குரவலருங் குழன்மடவா ரடியி லூட்டுங்குழம்படுத்த செம்பஞ்சின் சுவட்டுக் கோலம், பரவைநெடுந் தரங்கமிசை விளங்கித் தோன் றும் பவளநறுந் தளிரனைய பலவும் பாங்கர். (௯௭)

வெம்புசினக் களிற்றதிர்வு மாவி னார்ப்பும் வியனெடுந்தேர்க் காலிசை ப்பும் விழவ ரூத, அம்பொன்மணி வீதிகளி லரங்கி லாடு மரிவையர்நூ புர வொலியோ டமையு மிம்பர், உம்பரினிந் திரன்களிற்றின் முழக்குந் தெய்வ வுயரிரவி மாக்கலிப்பு மயனூர் தித்தேர், பம்பிசையும் விமானத்து ளாடுந் தெய்வப் பாவையர்நூ புரவரவத் துடனே பல்கும். (௯௮)

அருமறையந் தணர்மன்னு மிருக்கை யான வாகுதியின் புகையடுத்த வம்பொன் மாடப், பெருமறுகு தொறும்வேள்விச் சாலை யெங்கும் பெறும விப்பா கங்கொடுக்கும் பெற்றி மேலோர், வருமுறைமை யழைத்துவிடு மந் திரமெம் மருங்கும் வானவர்நா யகர்திருவே கம்பர் முன்றிற், றிருமலிபொற் கோபுரத்து நெருங்கு மெல்லாத் தேவரையு மணித்தாகக் கொண்டுசெல்லும்.

அரசர்குலப் பெருந்தெருவுந் தெற்றி முற்றத் தாயுதங்கள் பயிலும்விய லிடமு மங்கண், புரசைமதக் கரிகளொடு புரவியேறும் பொற்புடைய வீதி களும் பொலிய வெங்கும், விரைசெய்நறுந் தொடையலங்கற் குமரர் செய் யும் வியப்புறுசெய் தொழில்கண்டு விஞ்சை விண்ணோர், நிரைசெறியும் விமானவூர் திகளின் மேலு நிலமிசையும் பலமுறையு நிரந்து நீங்கார். (௱)

வெயிலுமிழும் பன்மணிப்பூண் வணிக மாக்கள் விரவுநிதி வளம்பெருக் கும் வெறுக்கை மிக்க, வயினிலவு மணிக்கடைமா நகர்க ளெல்லாம் வனப்பு டைய பொருட்குலங்கண் மலித லாலே, கயிலைமலை யார்கச்சி யாலயங்கள் பலவுங் கம்பமுமே வியதன்மை கண்டு போற்றப், பயிலுமுருப்பலகொண்டு நிதிக்கோன் றங்கப் பயிலளகா புரிவகுத்த பரிசு காட்டும். (௱௧)

---

(௯௬) இமம - பனி, சுதைதவள மாளிகை - சுண்ணச்சாந்து பூசிய வெண மையாகிய மண்டபஙகளின (சுதைதவளம எனபதறகு மிகவெண்மை எனபபொருள கோடலு மொனறு.) கோட்டுச்சிமை - சிகரத்தின உச்சியை. சோபான நிரையும - படி களின் வரிசையும. (௯௭) அரவம - ஒலியுடைய. பரவை - கடலிலே, தரங்கம - அலை யின. (௯௮) மாவின - குதிரையின. அரங்கில ஆடும அரிவையா நூபுர ஒலியோடு - நாடக சாலையில நடனஞ்செய்யும மகளிர்களுடைய சிலமபுகளின் ஒலியோடு. (௱) தெற்றி - சிதிரக் கூடஙகளின. புரசை - கழுத்திற கயிறறையுடைய. (புரசை - யானை கடடுந்தறி) (௱௧) வெறுக்கை - செலவம. நிதிக்கோன - குபேரன.

விழவுமலி திருக்காஞ்சி வரைப்பின் வேளாண் விழுக்குடிமைப் பெருஞ் செல்வர் விளங்கும் வேணி, மழவிளவெண் டிங்கள்புனை கம்பர் செம்பொன் மலைவல்லிக் களித்தவள ருணவின் மூலந், தொழவுலகு பெறுமவடா னருளப் பெற்றுத் தொன்னிலதது மன்னுபயிர் வேத வாய்மை, யுழவுதொழிலாற்பெருக்கி யுயிர்க ளெலலா மோஙகவருந் தருமவினைக் குளரா லென்றும்.

ஓங்கியநாற் குலத்தொவ்வாப் புணர்விற் றம்மி லுயர்ந்தனவு மிழிந்தனவு மான சாதி, தாஙகுழுமிப் பிறந்தகுல பேத மெல்லாந் தந்தகைமைக் கேற்ற தனி யிடங்கண் மேவி, யாங்குநிறை கிளைபயின்று மாபி னுற்ற வடுத்தவினைத் தொழின்முறைமை வழாமை நீடு, பாஙகுவள ரிருக்கைநிலை பலவு மெல்லாம் பண்புநீ டியவுரிமைப் பால வனறே. (௧0௫)

வேறு.

ஆதி மூதெயி லந்நகர் மன்னிய
சோதி நீண்மணித தூபமுந் தீபமுங
கோதில் பல்லிய முஙகொடி யும்பயில்
வீதி நாளு மொழியா விழாவணி (௧0௪)

வாயி லெங்கணுந் தோரண மாமதின்
ஞாயி லெஙகணுஞ் சூழ்முகி ஞ ளமதி
தோயி லெஙகணு மஙகலந் தொண்டர்சூழ்
கோயி லெஙகணு மும்பர் குலகதுழாம். (௧0௫)

வேத வேதியர் வேள்வியே தீயன
மாத ரோதி மலரே பிணியன
காதல் வீதிவி லககே கவலைய
சூத மாதவி யேபுறஞ் சூழ்வன (௧0௬)

சாய லாரக ணுசுபபே தளர்வன
ஆய மாடக் கொடியே யசைவன
சேய வோடைக் களிறே திகைப்பன
பாய சோலைத் தருவே பயத்தன. (௧0௭)

அண்ண லன்பரன் பேமுன ரார்த்தன
தண்ண றுஞ்செழுந் தாதே துகள்வன
வண்ண நீணமணி மாலையே தாழ்வன
எண்ணில் குஙகுமச் சேறே யிழுககின. (௧0௮)

(௱௫) மதில ஞாயில - மதிலுறுபபுககள. (௱௬) ஒதி - கூநதலிலுளள. விலககே-குறுந்தெருககளே. சூதம மாதவியே-மாமரஙகளும, குருககததி மரங்களுமே. தீயன, பிணியன, கவலைய, புறஞ்சூழ்வன இபபதஙகள காஞ்சியில கொடுஞ் செயலாளர்கள், பிணியாளிகள், கவலையுளளார, புறஞ்சூழ்நதது இரபபார ஆகிய இவாகள் இனமையை விளக்குகின்றன. (௱௭) நுசுபபே - இடைகளே.

வென்றி வானவர் தாம்விளை யாடலும்
என்று முள்ளவர் வாழு மியற்கையு
நன்று முள்ளத்து நண்ணினர் வேட்கைதீர்
ஒன்று மங்கொழி யாவகை யுய்ப்பது (கoகூ)

புரங்க டந்தவர் காஞ்சி புரம்புகழ்
பரம்பு நீள்புவ னம்பதி னான்கினும்
வரம்பில் போக வனப்பின் வளமெலா
நிரம்பு கொள்கல மென்ன நிறைந்ததால். (ககo)

வேறு.

அவ்வகைய திருநகர மதன்கணொரு மருங்குறைவார்
இவ்வுலகிற் பிறப்பினா லேகாலிக் குலத்துள்ளார்
செவ்வியவன் புடைமனத்தார் சீலத்தி னெறிநின்றார்
மைவிரவு கண்டரடி வழித்தொண்ட ருளரானார். (ககக)

மண்ணின்மிசை வந்ததற்பின் மனமுதலா யினமூன்றும்
அண்ணலார் சேவடியின் சார்வாக வணைவிப்பார்
புண்ணியமெய்த் தொண்டர்திருக் குறிப்பறிந்து போற்றுநிலைத்
திண்மையினாற் றிருக்குறிப்புத் தொண்டரெனுஞ் சிறப்பினார் (ககஉ)

தேரொலிக்க மாவொலிக்கத் திசையொலிக்கும் புகழ்க்காஞ்சி
யூரொலிக்கும் பெருவண்ணா ரெனவெண்ணு முண்மையினார்
நீரொலிக்க வராவிரைக்க நிலாமுகிழ்க்குந் திருமுடியார்
பேரொலிக்க வுருகுமவர்க் கொலிப்பர்பெரு விருப்பினொடும். (ககங)

தேசுடைய மலர்க்கமலச் சேவடியா ரடியார்தந்
தூசுடைய துகண்மாசு கழிப்பார்போற் றொல்லைவினை
யாசுடைய மலமூன்று மணையவரும் பெரும்பிறவி
மாசுதனை விடக்கழித்து வருநாளி லங்கொருநாள். (ககச)

பொன்னிமயப் பொருப்பரையன் பயந்தருளும் பூங்கொடிதன்
னன்னிலைமை யன்றளக்க வெழுந்தருளு நம்பெருமான்
றன்னுடைய வடியவர்தந் தனித்தொண்டர் தம்முடைய
அந்நிலைமை கண்டன்பர்க் கருள்புரிவான் வந்தணைவார். (ககரு)

---

(ககo) புரங்கடந்தவர் - திரிபுரத்தை யெரித்த சிவபிரான். (ககஉ) மனம் முதலாயின மூன்றும் - மனம் வாக்கு காயம் என்னும் திரிகரணங்களும். திண்மையினால் - உறுதியினால். (ககங) மா - குதிரைகள். அரா இரைக்க - பாம்புகள் சீறவும். ஒலிப்பர் - ஆடையை ஒலித்து (வெண்மையாக்கிக்) கொடுப்பர். (ககரு) பொன் இமய பொருப்பு அரையன் - மலையரையன்.

சீதமலி காலத்துத் திருக்குறிப்புத் தொண்டர்பால்
ஆதுலராய் மெலிந்துமிக வழுக்கடைந்த கந்தையுடன்
மாதவவே டந்தாங்கி மாலறியா மலரடிகள்
கோதடையா மனத்தவர்முன் குறுநடைகள் கொளக்குறுகி. (கககூ)

திருமேனி வெண்ணீறு திகழ்ந்தொளிருங் கோலத்துக்
கருமேக மெனவழுக்குக் கந்தையுட னெழுந்தருளி
வருமேனி யருந்தவரைக் கண்டுமன மகிழ்ந்தெதிர்கொண்
டுருமேவு மயிர்ப்புளக முளவாகப் பணிந்தெழுந்தார். (ககஎ)

எய்துமவர் குறிப்பறிந்தே யின்மொழிகள் பலமொழிந்து
செய்தவத்தீர் திருமேனி யிளைத்திருந்த தென்னென்று
கைதொழுது கந்தையினைத் தந்தருளுங் கழுவவென
மைதிகழ்கண் டங்கரந்த மாதவத்தோ ரருள்செய்வார். (ககஅ)

இக்கந்தை யழுக்கேறி யெடுக்கவொணா தெனினும்யான்
மெய்க்கொண்ட குளிர்க்குடைந்து விடமாட்டேன் மேல்கடற்பால்
அக்குன்றம் வெங்கதிரோ னணைவதன்முன் றருவீரேற்
கைக்கொண்டு போயொலித்துக் கொடுவாருங் கடிதென்றார். (ககக)

தந்தருளு மிக்கந்தை தாழாதே யொலித்துமக்கின்
றந்திபடு வதன்முன்னந் தருகின்றே னெனவவருங்
கந்தையிது வொலித்துணக்கிக் கடிதின்றே தாரீரேல்
இந்தவுடற் கிடர்செய்தீ ரென்றுகொடுத் தேகினார். (கஉ0)

குறித்தபொழு தேயொலித்துக் கொடுப்பதற்குக் கொடுபோந்து
வெறித்தடநீர்த் துறையின்கண் மாசெறிந்து மிகப்புழுக்கிப்
பிறித்தொலிக்கப் புகுமளவிற் பெரும்பகல்போய்ப் பின்பகலாய்
மறிக்கரத்தார் திருவருளான் மழையெழுந்து பொழிந்திடுமால். (கஉக)

திசைமயங்க வெளியடைத்த செறிமுகிலின் குழாமிடைந்து
மிசைசொரியும் புனற்றாரை விழிநுழையா வகைமிடைய
அசைவுடைய மனததன்ப ரறிவுமறந் தருந்தவர்பால்
இசைவுநினைந் தழிந்தினியா னென்செய்கே னெனநின்றார். (கஉஉ)

ஓவாதே பொழியுமழை யொருகால்விட் டொழியுமெனக்
காவாலி திருத்தொண்டர் தனிநின்றார் விடக்காணா

(கககூ) ஆதுலராய்-ஏழைபோல. கோது-குற்றம். (கககூ) எடுக்கவொணா தெனினும - அணிதறகுத தகாததாயிருநதபோதினும. (கஉ0) அநதி படுவதன முனனம - மாலைபபொழுதாகுமுனனா. உணக்கி-உலாத்தி. (கஉக) வெறி - வாசனைவீசும. (கஉஉ) முகிலின் குழாம - மேசக கூட்டஙகள். மிடைநது - நெருங்கி. இசைவு - வாக்குத் தததஞ்செய்ததை, (மாலைபபொழுதுக்குள் கொடுககினறேன என்று இசைந்ததை.)

மேவார்போற் கங்குல்வர மெய்குளிரும் விழுத்தவர்பால்
ஆவாவென் குற்றேவ லழிந்தவா வெனவிழுந்தார். (கஉங)

விழுந்தமழை யொழியாது மெய்த்தவர்சொல் வியவெல்லை
கழிந்ததுமுன் பொலித்துமனைக் காற்றேற்க வறிந்திலேன்
செழுந்தவர்தந் திருமேனி குளிர்காணுந் தீங்கிழைத்த
தொழும்பனேற் கினியிதுவே செயலென்று துணிந்தெழுவார். (கஉச)

கந்தைபுடைத் திடவெற்றுங் கற்பாறை மிசைத்தலையைச்
சிந்தவெடுத் தெற்றுவனென் றணைந்துசெழும் பாறைமிசைத்
தந்தலையைப் புடைத்தெற்ற வப்பாறை தன்மருங்கு
வந்தெழுந்து பிடித்ததணி வளைத்தழும்பர் மலர்ச்செங்கை. (கஉரு)

வானிறைந்த புனன்மழைபோய் மலர்மழையா யிடமருங்கு
தேனிறைந்த மலரிதழித் திருமுடியார் பொருவிடையின்
மேனிறைந்த துணைவியொடும் வெளிநின்றார் மெய்த்தொண்டர்
தானிறைந்த வன்புருகக் கைதொழுது தனிநின்றார் (கஉசு)

முன்னவரை நேர்நோக்கி முக்கண்ணர் மூவுலகு
நின்னிலைமை யறிவித்தோ நீயுமினி நீடியநம்
மன்னுலகு பிரியாது வைகுவா யெனவருளி
யந்நிலையே யெழுந்தருளி யணியேகாம் பரமணைந்தார். (கஉஎ)

சீர்நிலவு திருக்குறிப்புத் தொண்டர்திருத் தொழில்போற்றிப்
பார்குலவத் தந்தைதா ளறவெறிந்தார் பரிசுரைக்கேன்
பேரருளின் மெய்த்தொண்டர் பிதத்தனெனப் பிதற்றுதலால்
ஆருலகி லிதனுண்மை யறிந்துரைக்க விசைந்தெழுவார் (கஉஅ)

திருக்குறிப்புத்தொண்டநாயனார் புராண முற்றிற்று.

ஆ திருவிருத்தம் க,உகo.



சான்றோர்கள்வாழுந் தொண்டை மண்டலத்திலே, காமாட்சியம்மையார் அறம்வளர்த்த காஞ்சிபுரத்திலே, வண்ணார்குலத்திலே மெய்த்தொண்டர்களின் திருக்குறிப்பை யறிந்து, அவர்களுக்குத் திருத்தொண்டு செய்கின்ற திண்மையினால் திருக்குறிப்புத்தொண்டர் என்னும் பெயர்பெற்ற ஒரு நாயனார் இருந்தார். அவர் தங்குலத்தொழிலுக்கு ஏற்ப அடியவர்களுக்கு வஸ்திரம் ஒலித்துக் கொடுத்துவந்தார். வருநாளில் குளிர்காலத்திலே ஒருநாள் திருவேகம்பநாதர் விபூதி ருத்திராக்ஷங்களை அணிந்து, மெலிந்த

(கஉங) சாவாலி - (சாபாலி) சிவபெருமான். மேவார்போல் - பகைவரைப்போல. ஆவா-ஆ ஆ (இரக்கக்குறிப்பு.) (கஉச) மனைகாற்று ஏற்க - வீட்டில் காற்றை ஏற்றி உலர்த்த. தொழும்பனேற்கு - அடியேனுக்கு. (கஉரு) எற்றுவன் - மோதுவேன். வளைதழும்பர் - வளையல் சுவட்டை யணிந்த ஏகாம்பரநாதர்.

வறியவரைப்போல அழுக்கடைந்த கந்தையுடன் அடியவர்பால் அணைந்தார். நாயனார் அவரைக்கண்டு பெரிதும் மகிழ்ந்து, எதிர்கொண்டு பணிந்து அவர் திருவுள்ளக்குறிப்பை யறிந்து "தேவரீர் அணிந்துள்ள அழுக்கடைந்த கந்தையைக் கொடுத்தருளும்; ஒலித்துத் தருகின்றேன்" என்றார். அருந் தவவேடர் அன்பனாரைநோக்கி "இக்கந்தை தரிப்பதற்குத் தகுதியற்றதா யிருப்பினும், குளிருக்குப்பயந்து கைவிடமாட்டேன்; சூரிய அஸ்தமயனத் திற்குமுன் தருவீரேல், இதனைக் கைக்கொண்டுபோய் விரைவில் ஒலித்துக் கொண்டுவாரும்" என்று அருளிச்செய்தார் அதற்கு நாயனார் இசைந்து "கந்தையைத் தந்தருளும்" என்ன; இறைவர் "அஸ்தமயனத்துக்குமுன் வெளுத்து உலர்த்திக் கொடுக்காதொழிவீரேல், இந்த உடலுக்கு இடர் செய்தவராவீர்" என்று இயம்பி, அவ்வழுக்குக்கந்தையை யளித்தனர் அடி யவர் அதை வாங்கிக்கொண்டு சென்று ஒருதடாகத்திலே சிறிது அழுக்கு நீங்கும்படி தோய்த்துப்பின் வெள்ளாவியில் வைத்து ஒலிக்கத் தொடங்கும் பொழுது சிவபெருமான் திருவருளால் மேகங்கள் திரண்டெழுந்து மழை பொழிந்தன அதைக்கண்ட நாயனார் சிவனடியாருக்கு வாக்களித்ததை நினைந்து "நான் என்செய்கேன்" என்று வருந்தி, "ஒருகால் மழை விடவுங் கூடு" மென்று தனியாக நின்றார். அதுவிடாமல பெய்வதைப்பார்த்து, இரவுவர, "குளிரினால தேகம் நடுங்குகின்ற சிவனடியாருக்கு அடியேன் செய்ய இசைந்த குற்றேவல் தவறிற்றே; ஐயையோ" என்று கீழேவிழுந் தார் விழுந்து "மழையொழியாது; மெய்த்தொண்டர் சொன்னகால வரையுங் கழிந்தது; முன்னமே இவ்வாடையை ஒலித்து வீட்டிலே காற் றேறக்கட்டி விட்டேனுமில்லை; அடியவர் திருமேனி குளிரினால் வருந்தத் தீங்கிழைத்த தொழும்பனேற்கு இதுவேசெயல" என்று எழுந்து "வஸ்தி ரங்களைப் புடைக்கின்ற கற்பாறையிலே என்தலையை மோதிக்கொள்வேன்" என்றுபோய்க் கற்பாறைமீது தமது தலையைமோத, அங்கிங்கெனாதபடி எங்கும் பிரகாசமாய் விளங்கும் பரமேஸ்வரன் திருக்கரம் அப்பாறையின் மருங்கேதோன்றி அன்பரைப் பிடித்துக்கொண்டது ஆகாயத்தினின்றும் பொழியும் புனல்மழையொழிந்து பூமழை சொரிந்தது. பரமசிவன் பார் வதியோடு இடபவாகனத்தின்மேல் தோன்றியருளினார் திருக்குறிப்புத் தொண்டநாயனார் மெய்ம்மறந்து பணிந்து எழுந்து கைதொழுது நின்றார் ஆசானையளித்த அரவாபரணன் அன்பிற் சிறந்த நாயனாரைத் திருநோக்கஞ் செய்து "உன்பத்தி வலிமையை மூவுலகும் அறியும்படி செய்தோம்; இனி நமது உலகத்தையடைந்து சுகானந்தப் பெருவாழ்வைப் பெற்றிரு" என்று திருவருள்செய்து எழுந்தருளினார்

# சண்டேசுர நாயனார் புராணம்.



பூந்தண் பொன்னி யெந்நாளும் பொய்யா தளிக்கும் புனனாட்டு
வாய்ந்த மண்ணித் தென்கரையின் மன்ன முன்னாள் வரைகிழிய
ஏந்து மயில்வே லிலைகாட்டி யிமையோ ரிகல்வெம் பகைகடக்குஞ்
சேந்த னளித்த திருமறையோர் மூதூர் செல்வச் சேய்ஞலூர். (௧)

செம்மை வெண்ணீற் றொருமையினா லிரண்டு பிறப்பின் சிறப்பினார்
மும்மைத் தழலோம் பியநெறியார் நான்கு வேத முறைபயின்றார்
தம்மை யைந்து புலனும்பின் செல்லுந் தகையா ரறுதொழிலின்
மெய்ம்மை யொழுக்க மேழுலகும் போற்று மறையோர் விளங்குவது. (௨)

கோதின் மான்றோற் புரிமுந்நூல் குலவு மார்பிற் குழைக்குடுமி
யோது கிடைசூழ் சிறுவர்களு முதவும் பெருமை யாசானும்
போதின் விளங்குந் தாரகையு மதியும் போலப் புணர்மடங்கண்
மீது முழங்கு முகிலொதுங்க வேத வொலிகண் முழங்குவன. (௩)

யாக நிலவுஞ் சாலைதொறு மறையோ ரீந்த வவியுணவின்
பாக நுகர வருமாலு மயனு மூரும் படர்சிறைப்புண்
மாக மிகந்து வந்திருக்குஞ் சேக்கை யெனவும் வானவர்கோ
னாக மணையுங் கந்தெனவு நாட்டும் யூப மீட்டமுள (௪)

தீம்பா லொழுகப் பொழுதுதொறு மோம தேனுச் செல்வனவுந்
தாம்பா டியசா மங்கணிப்போர் சமிதை யிடக்கொண் டணைவனவும்
பூம்பா சடைநீர்த் தடமூழ்கி மறையோர் மகளிர் புகுவனவும்
ஆம்பான் மையினில் விளங்குவன வணிநீண் மறுகு பலவுமுள. (௫)

வாழ்பொற் பதிமற் றதன்மருங்கு மண்ணித் திரைகள் வயல்வரம்பின்
றாள்விற் றரளஞ் சொரிகுலைப்பாற் சமைத்த யாகத் தடஞ்சாலை
சூழ்வைப் பிடங்க ணெருங்கியுள தொடங்கு சடங்கு முடித்தேறும்
வேள்வித் தலைவர் பெருந்தேர்கள் விண்ணோ ரேறும் விமானங்கள் (௬)

---

(௧) பொன்னி - காவேரிநதி. அளிக்கும் - (சலத்தைக்) கொடுக்கும். வரை - கிரவுஞ்சகிரி. அயில் - கூர்மையான. சேந்தன் - முருகப்பிரான். சேய்ஞலூர் என்றது சேய்நல்லூர் என்பதின் போலியாக வந்தது. (சேய் - கந்தநாதற்கு. நல் - நல்லதான; ஊர், முருகப்பெருமானால் விரும்பப்பட்ட நல்லவூர் என்பது பொருள்.) (௩) குழை - மெல்லிய. கிடை - வேதம் ஓதும் (வேதவொலி.) போதின் - இரவில். தாரகையும் - நக்ஷத்திரங்களையும். (௪) மாகம் இகந்து - ஆகாயத்தைவிட்டு. சேக்கை - இருப்பிடம். வானவர்கோன் நாகம் அணையும் கந்து எனவும் - தேவேந்திரனது ஐராவதத்தைக் கட்டுந்தறி போலவும். யூப மீட்டம் - யூபத்தம்பங்களின் தொகுதிகள். (யூபத்தம்பம் - யாகப் பசு கட்டப்படும்பொருட்டு, யாகசாலையில் நாட்டுந்தம்பம்.) (௫) ஓமதேனு - ஓமத்திற்குப் பால்சொரிக்கும் பசுக்கள்.

மடையிற் கழுநீர் செழுநீர்சூழ் வயலிற் சாலிக் கதிர்க்கற்றைப்
புடையிற் சுரும்பு மிடைகமுகு புனலிற் பரம்பு பூம்பாளை
அடையிற் பயிலுந் தாமரைநீ ளலரிற் றுயிலுங் கயல்கள்வழி
நடையிற் படர்மென் கொடிமௌவ னனையிற் றிகழுஞ் சினைக்காஞ்சி. (எ)

சென்னி யபயன் குலோத்துங்கசோழன் றில்லைத் திருவெல்லை
பொன்னின் மயமாக் கியவளவர் போரே றென்றும் புவிகாக்கு
மன்னர் பெருமா னநபாயன் வருந்தொன் மரபின் முடிசூட்டுந்
தன்மை நிலவு பதியைந்தி னொன்றாய் நீடுந் தகைத்ததவ்வூர். (அ)

பண்ணின் பயனா நல்லிசையும் பாலின் பயனா மின்சுவையுங்
கண்ணின் பயனாம் பெருகொளியுங் கருத்தின் பயனா மெழுத்தஞ்சும்
விண்ணின் பயனாம் பொழிமழையும் வேதப் பயனாஞ் சைவமும்போன்
மண்ணின் பயனா மப்பதியின் வளத்தின் பெருமை வரம்புடைத்தோ. (கூ)

பெருமை பிறங்கு மப்பதியின் மறையோர் தம்முட் பெருமனைவாழ்
தரும நிலவு காசிபகோத் திரத்துத் தலைமை சான்மரபில்
அருமை மணியு மளித்ததுவே நஞ்சு மளிக்கு மரவுபோல்
இருமை வினைக்கு மொருவடிவா மெச்ச தத்த னுளனானான். (க௦)

மற்றை மறையோன் றிருமனைவி வாய்ந்த மரபின் வந்துதித்தாள்
சுற்றம் விரும்பு மில்வாழ்க்கைத் தொழிலா ளுலகிற் றுணைப்புதல்வற்
பெற்று விளங்குந் தவஞ்செய்தாள் பெறும்பே றெல்லைப் பயன்பெறுவாள்
பற்றை யெறியும் பற்றுவரச் சார்பா யுள்ள பவித்திரையாம். (கக)

நன்றி புரியு மவர்தம்பா னன்மை மறையின் றுறைவிளங்க
என்று மறையோர் குலம்பெருக வேழு புவனங் களுமுய்ய
மன்றி னடஞ்செய் பவர்சைவ வாய்மை வளர மாதவத்தோர்
வென்றி விளங்க வந்துதயஞ் செய்தார் விசார சருமனார். (கஉ)

ஐந்து வருட மவர்க்கணைய வங்க மாறு முடனிறைந்த
சந்த மறைக ளுட்படமுன் றலைவர் மொழிந்த வாகமங்கண்
முந்தை யறிவின் றொடர்ச்சியினான் முகைக்கு மலரின் வாசம்போற்
சிந்தை மலர வுடன்மலருஞ் செவ்வி யுணர்வு சிறந்ததால். (கங)

நிகழு முறைமை யாண்டேழு நிரம்பும் பருவம் வந்தெய்தப்
புகழும் பெருமை யுபநயனப் பொருவில் சடங்கு முடித்தறிவின்

(எ) மௌவல - முல்லைகளும. நனை - முகை, அரும்பு. சினை - கிளைகளையுடைய.
(அ) அபயன - திருமுறைகண்ட சோழன. குலோத்துங்கன - சேய்ஞலூரையாண்டு புகழ்பெற்றவன. அநபாயன - இப்பெரிய புராணத்தைச் செய்வித்தோன. சோழ ராஜாக்களின் ஐந்து இராஜதானிகளாவன.—காவிரிப்பூம்பட்டினம, கருவூர், திருவாரூர், உறையூர், திருச்சேய்ஞலூர் எனபவைகளாம.

இகழு நெறிய வல்லாத வெல்லா மியைந்த வெனினுந்தந்
திகழு மரபி னேதுவிக்குஞ் செய்கை பயந்தார் செய்விததார். (கச)

குலவு மறையும் பலகலையுங் கொளுத்து வதன்முன் கொண்டமைந்த
நிலவு முணர்வின் றிறங்கண்டு நிறுவு மறையோ ரதிசயித்தார்
அலகில் கலையின் பொருட்கெல்லை யாடுங் கழலே யெனக்கொண்ட
செலவு மிகுந்த சிந்தையினிற் றெளிந்தார் சிறிய பெருந்தகையார். (கரு)

நடமே புரியுஞ் சேவடியார் நம்மை யுடையா ரெனுமெய்மை
உடனே தோன்று முணர்வின்க ணொழியா தூறும் வழியன்பின்
கடனே யியல்பாய் முயற்றிவருங் காதன் மேன்மே லெழுங்கருத்தின்
றிடரோ நிற்குஞ் செம்மலார் திகழு நாளி லாஙகொருநாள். (கசு)

ஓது கிடையி னுடன்போவா ரூரா னிரையி னுடன்புக்க
போது மற்றங கொருபுனிற்றா போற்று மவன்மேன் மருப்போச்ச
யாது மொன்றுங கூசாதே யெடுத்த கோல்கொண் டவன்புடைப்ப
மீது சென்று மிகும்பரிவால் வெகுண்டு விலக்கி மெய்யுணர்ந்து. (கஎ)

பாவுங கலைக ளாகமநூற் பரப்பின் றொகுதிப் பான்மையினுன்
மேவும் பெருமை யருமறைகண் மூல மாக விளங்குலகில்
யாவுந் தெளிந்த பொருணிலையே யெய்த வுணர்ந்த வுள்ளத்தால்
ஆவின் பெருமை யுள்ளபடி யறிந்தா ராயற் கருள்செய்வார். (கஅ)

தங்கு மகில யோனிகட்கு மேலாம் பெருமைத் தகைமையன
பொங்கு புனித தீர்த்தஙக ளெல்லா மென்றும் பொருந்துவன
துங்க வமரர் திருமுனிவர் கணஙகள் சூழ்ந்து பிரியாத
அங்க மனைத்துந் தாமுடைய வல்ல வோநல் லானினங்கள். (ககூ)

ஆய சிறப்பி னாற்பெற்ற வன்றே மன்று ணடம்புரியு
நாய னார்க்கு வளர்மதியு நதியு நகுவெண் டலைத்தொடையு
மேய வேணித் திருமுடிமேல் விரும்பி யாடி யருளுதற்குத்
தூய திருமஞ் சனமைந்து மளிக்கு முரிமைச் சுரபிகடாம். (உ௦)

சீல முடைய கோக்குலங்கள் சிறக்குந் தகைமைத் தேவருடன்
கால முழுது முலகனைத்துங் காக்கு முதற்கா ரணராகு

(கரு) கொளுததுவதனமுன - ஓதுவிபபதறகுமுன. நிறுவும - அவரை ஓதுந தொழிலில நிறுததும. செலவுமிகுந்த - கொளளைமுதிர்ந்த. (விசாலமாகிய எனினும பொருந்தும.) (கஎ) ஆனிரை - பசுககூட்டஙகள். புனிற்றா - இளஙகனறுபசு. போறறும அவனமேல் மருபபு ஓச்ச - மேய்பபோனை இடையனைக கொமபால் முட்ட. (கஅ) பாவும - பரவிய. ஆயற்கு - இடையனுககு. (உ௦) நகுவெண்தலை தொடையும் - சிரிககினற வெள்ளிய தலைமாலையும். சுரபிகள் - பசுக்கள்.

நீல கண்டர் செய்யசடை நிருத்தர் சாத்து நீறுதரு
மூல மவதா ரஞ்செய்யு மூர்த்தத மெனறூன் முடிவென்றே. (உக)

உள்ளுந் தகைமை யினிப்பிறவே றுளவே யுழைமான் மறிக்கன்று
துள்ளுங் கரத்தா ரணிபணியின் சுடர்சூழ் மணிகள் சுரந்திநீர்
தெள்ளுஞ் சடையார் தேவர்கடம் பிராட்டி யுடனே சேரமிசைக்
கொள்ளுஞ் சினமால் விடைத்தேவர் குலமன் றேவிச் சுரபிகுலம் (உஉ)

என்றின் னனவே பலவுநினைந் திதத்தின் வழியே மேய்த்திந்தக
கன்று பயிலா னிரைகாக்கு மிதன்மே லில்லை கடனிதுவே
மன்று ளாடுஞ் சேவடிகள் வழுத்து நெறியா வதுமென்று
நின்ற வாயன் றனைநோக்கி நிரைமேய்ப் பொழிக நீயென்பார். (உ௩)

யானே யினியிந் நிரைமேய்ப்ப னென்றூ ரஞ்சி யிடைமகனுந்
தானே ரிறைஞ்சி விட்டகன்றன் றூமு மறையோ ரிசைவினுல்
ஆனே நெருங்கும் பேராய மளிப்பா ராகிப் பைஙகூழ்க்கு
வானே யென்ன நிரைகாக்க வந்தார் தெய்வ மறைசசிறுவர் (உ௪)

கோலுங கயிறுங கொண்டுகுழைக குடுமி யலையக் குலவுமான்
றேலு நூலுஞ் சிறுமார்பிற் றுவள வரைக்கோ வணஞ்சுடரப்
பாலும் பயனும் பெருகவரும் பசுக்கண மேய்க்கும் பான்மையினுற்
சாலும் புல்லி னவைவேண்டுந் தனையு மிசையுந் தலைச்சென று (உ௫)

பதவு காலங களின்மேய்த்தும் பறித்து மளித்தும் பரிவகற்றி
இதமுண் டுறையு நற்றண்ணீ ரூட்டி யசச மெதிர்நீக்கி
அதர்நல் லனமுன் செலநீழ லமாவித் தமுத மதுரப்பால்
உதவும் பொழுது பிழையாம லுடையோ ரில்லந் தொறுமுய்த்தார். (உ௬)

மண்ணிக் கரையின் வளர்புறவின் மாடும் படுகர் மருங்கினிலுந்
தண்ணித் திலநீர் மருதத்தண் டலைசூழ் குலையின் சார்பினிலும்
எண்ணிற் பெருகு நிரைமேய்த்துச சமிதை யுடன்மே லுறிகொண்டு
நண்ணிக் கஙகுன் முன்புகுந்து நன்னுள் பலவா மந்நாளில் (உ௭)

(உக) நீறு தரும மூலம அவதாரம செயயும - விபூதி யுண்டாவதறகுக காரண மாகவுள்ள சாணம தோனறும. (உஉ) உழை - மயிாகளையுடைய. (உ௪) பைஙகூழ்கரு வானே எனன - பயிாகளுககு மழையைபபோல. (உ௫) சுடர - விளஙக. சாலும ** சென று - மிகுந்த புல்களில அபபசுககள வேண்டுமளவும மேயததகுநத இடஙகளில் ஓட்டிக்கொண்டுபோய். (உ௬) பதவு - புலதரையில. (பதவு-புல், ஆகுபெயா.) பறித்து - (மேய்க்கக்கூடாத விடஙகளிலுளள புறகளைப) பிடுஙகி. பரிவு - துனபம. அச்சம எதிர்நீக்கி - பிறமிருகஙகளால் விளையும அசசததை எதிரேநினறு ஒழிதது. அதர் - வழி, விலஙகுகள் செலலுமவழி. (உ௭) புறவினமாடும - முல்லை நிலஙகளிலும். படுகர் மருஙகினிலும - பள்ளஙகளிலும, தண்டலை - சோலைகள்.

ஆய நிரையின் குலமெல்லா மழகின் விளங்கி மிகப்பல்கி
மேய வினிய புல்லுணவும் விரும்பு புனலு மார்தலினால்
ஏய மனங்கொள் பெருமகிழ்ச்சி யெய்த விரவு நன்பகலுந்
தூய தீம்பால் மடிபெருகிச் சொரிய முலைகள் சுரந்தனவால். (உஅ)

பூணுந் தொழில்வேள் விச்சடங்கு புரிய வோம தேனுக்கள்
காணும் பொலிவின் முன்னையினு மனேக மடங்கு கறப்பனவாய்ப்
பேணுந் தகுதி யன்பாலிப் பிரம சாரி மேய்த்ததற்பின்
மாணுந் திறத்த வானவென மறையோ ரெல்லா மனமகிழ்ந்தார். (உகூ)

அனைத்துத் திறத்து மானினங்க ளணைந்த மகிழ்ச்சி யளவின்றி
மனைக்கட் கன்று பிரிந்தாலு மருவுஞ் சிறிய மறைக்கன்று
தனைக்கண் டருகு சார்ந்துருகித் தாயாந் தன்மை நிலைமையவாய்க்
கனைத்துச் சுரந்து முலைக்கண்கள் கறவா மேபால் பொழிந்தனவால் (௩0)

தம்மை யணைந்த வான்முலைப்பால் தாமே பொழியக் கண்டுவந்து
செம்மை நெறியே யுறுமனத்திற் றிருமஞ் சனமாங் குறிப்புணர்ந்தே
எம்மை யுடைய வள்ளலா ரெய்த நினைந்து தெளிந்ததனின்
மெய்ம்மைச் சிவனார் பூசனையை விரும்பும் வேட்கை விளங்கெழலும். (௩௧)

அங்கண் முன்னை யர்ச்சனையி னளவின் றொடர்ச்சி விளையாட்டாப்
பொங்கு மனபான் மண்ணிமணற் புளினக் குறையி லாத்தியின்கீழ்ச்
செங்கண் விடையார் திருமேனி மணலா லாக்கிச் சிவாலயமுந்
துங்க நீடு கோபுரமுஞ் சுற்று லயமும் வகுத்தமைத்தார். (௩௨)

ஆத்தி மலருஞ் செழுந்தளிரு முதலா வருகு வளர்புறவிற்
பூத்த மலர்க டாங்தெரிந்து புனிதர் சடிலத் திருமுடிமேற்
சாத்த லாகுந் திருப்பள்ளித் தாமம் பலவுந் தாங்கொய்து
கோத்த விலைப்பூங் கூடையினிற் கொணர்ந்து மணந்தங் கிடவைத்தார். ()

நல்ல நவகும் பங்கள்பெற நாடிக் கொண்டு நாணற்பூங்
கொல்லை யிடத்துங் குறைமறைவு மேவுங் கோக்க ளுடன்கூட
ஒல்லை யணைந்து பாலாக்க ளொன்றுக் கொருகா லாகவெதிர்
செல்ல வவையுங் கனைத்துமுலை தீண்டச் செழும்பால் பொழிந்தனவால். ()

கொண்டு மடுத்த குடநிறையக் கொணர்ந்து விரும்புங் கொள்கையினால்
அண்டர் பெருமான் வெண்மணலா லயத்து ளவைமுன் றாபித்து

---

(உகூ) மாணுமதிறதத ஆன-செழித்திருககினறன, மாட்சிமைபடையும தன்மை யுடையனவாயின. (௩௧) வள்ளலார் - விசாரசருமா. (௩௨) மண்ணி மணல புளினக் குறையில் - மண்ணிநதியின மணற்குன்றிலுள்ள ஆறறிடைககுறையில (ஆற்றின ஒடுக்கமானவிடம.) (௩௪) நவகுமபங்கள் பெறநாடிக்கொணடு - புதிய குடஙகளைப பெற விருமபி அவைகளைத்தேடிச் சம்பாதித்து.

வண்டு மருவுந் திருப்பள்ளித் தாமங் கொண்டு வரன்முறையே
பண்டைப் பயில்வா லருச்சித்துப் பாலின் றிருமஞ் சனமாட்டி. (௩௫)

மீள மீள விவ்வண்ணம் வெண்பால் சொரிமஞ் சனமாட்ட
ஆள வுடையார் தம்முடைய வன்ப ரன்பின் பாலுளதாய்
மூள வமர்ந்த நயப்பாடு முதிர்ந்த பற்று முற்றச்சூழ்
கோள மதனி லுண்ணிறைந்து குறித்த பூசை கொள்கின்றார். (௩௬)

பெருமை பிறங்குஞ் சேய்ஞலூர்ப் பிள்ளை யார்தம் முள்ளத்தில்
ஒருமை நினைவா லும்பர்பிரா னுவக்கும் பூசை யுறுப்பான
திருமஞ் சனமே முதலவற்றிற் றேடா தனவன் பினினிரப்பி
வருமந் நெறியே யர்ச்சனைசெய் தருளி வணங்கி மகிழ்கின்றார். (௩௭)

இறையோ னடிக்கீழ் மறையவனு ரேடுதனுத் திருமஞ் சனமாட்டு
நிறைபூ சனைக்குக் குடங்கள்பா னிரம்பச் சொரிந்து நிரைக்குலங்கள்
குறைபா டின்றி மடிபெருகக் குவிந்த முலைப்பால் குறைவின்றி
மறையோர் மனையின் முன்புதரும் வளங்கள் பொலிய வைகுமால். (௩௮)

செயலிப் படியே பலநாளுஞ் சிறந்த பூசை செய்வதற்கு
முயல்வுற் றதுவே திருவிளையாட் டாக முந்நூ லணிமார்பர்
இயல்பிற் புரியு மற்றிதனைக் கண்டித் திறத்தை யறியாத
அயன்மற் றொருவ னப்பதியி லந்த ணாளர்க் கறிவித்தான். (௩௯)

அச்சொற் கேட்ட வருமறையோ ராய னறியா னென்றவற்றின்
இச்சை வழியே யான்மேய்ப்பே னென்றெம் பசுக்க டமைக்கறந்து
பொச்ச மொழுகு மாணவகன் பொல்லாங் குரைக்க வவன்றாதை
யெச்ச தத்தன் றனையழைமி னென்றா ரவையி னிருந்தார்கள். (௪௦)

ஆங்கு மருங்கு நின்றார்க ளவ்வந் தணன்றன் றிருமனையின்
பாங்கு சென்று மற்றவனை யழைத்துக் கொண்டு வரப்பகர்ந்த
ஓங்கு சபையோ ரவனைப்பார்த் தூரா னிரைமேய்த் துன்மகன்செய்
தீங்கு தன்னைக் கேளென்று புகுந்த பரிசு செப்புவார். (௪௧)

அந்தண் மறையோ ராகுதிக்குக் கறக்கும் பசுக்க ளானவெலாஞ்
சிந்தை மகிழ்ந்து பரிவினுற் றிரளக் கொடுபோய் மேய்ப்பான்போற்
கந்த மலிபூம் புனன்மண்ணி மணலிற் கறந்து பாலுகுத்து
வந்த பரிசே செய்கின்றா னென்று மறையோர் வாய்மொழிந்தார். (௪௨)

மறையோர் மொழியக் கேட்டஞ்சிச் சிறுமா ணவகன் செய்தவிது
விறையு நான்முன் பறிந்திலே னிதற்கு முன்பு புகுந்ததனை

(௩௬) சூழ்கோளமதனில் - தாம வியாபிதமுள்ள சிவலிங்கத்தில். (௩௭) சேய்ஞலூர் பிள்ளையார் - விசாரசருமர். தேடாதனவாவன - சந்தனம தூபதீப நைவேத்திய முதலியன. (௪௦) பொச்சம் - பொய். (௪௩) இறையும் - சிறிதும்.

பும் பெருமை யந்தணர்கா ளென்றொறுக்க வேண்டு நீங்க ளெனக்
குறைகொண் டிறைஞ்சி யினிப்புகுதிற் குற்ற மெனதே யாமென்றான். ()

அந்த ணாளர் தமைவிடைகொண் டந்தி தொழுது மனைபுகுந்து
வந்த பழியொன் றெனநினைந்தே மகனார் தமக்கு வாய்நேரான்
இந்த நிலைமை யறிவேனென் றிரவு கழிந்து நிரைமேய்க்க
மைந்த னார்தாம் போயினபின் மறைந்து சென்றான் மறைமுதியோன். ()

சென்ற மறையோன் றிருமகனார் சிறந்த வூரா னிரைகொடுபோய்
மன்றன் மருவும் புறவின்கண் மேய்ப்பா ரமண்ணி மணற்குறையில்
அன்று திரளக் கொடுசென்ற வதனை யறிந்து மறைந்தப்பா
னின்ற குரவின் மிசையேறி நிகழ்வ தறிய வொளித்திருந்தான். (சடு)

அன்பு புரியும் பிரமசா ரிகளு மூழ்கி யாரூர்க்கு
முன்பு போல மணற்கோயி லாக்கி முகைமென் மலர்கொய்து
பின்பு வருமான் முலைபொழிபால் பெருகுங் குடங்கள் பேணுமிடந்
தன்பாற் கொணர்ந்து தாபித்துப் பிறவும் வேண்டு வனசமைத்தார். (சசு)

நின்ற விதியின் விளையாட்டா னிறைந்த வரும்பூ சனைதொடங்கி
யொன்று முள்ளத் துண்மையினா லுடைய நாதன் றிருமுடிமேன்
மன்றல் விரவு திருப்பள்ளித் தாமஞ் சாத்தி மஞ்சனமா
கன்று நிறைதீம் பாற்குடங்க ளெடுத்து நயப்புற் றாட்டுதலும். (சஎ)

பரவ மேன்மே லெழும்பரிவும் பழைய பான்மை மிகும்பணபும்
விரவு மேதக் கவர்தமபான் மேவும் பெருமை வெளிப்படுப்பான்
அரவ மேவுஞ் சடைமுடியா ரருளா மென்ன வறிவழிந்து
குரவ மேவு முதுமறையோன் கோப மேவும் படிகண்டான். (சஅ)

கண்ட போதே விரைந்திழிந்து கடிது சென்று கைத்தண்டு
கொண்டு மகனார் திருமுதுகிற் புடைத்துக் கொடிதா மொழிகூறத்
தொண்டு புரியுஞ் சிறியபெருந் தோன்ற லார்தம் பெருமான்மேன்
மண்டு காத லருச்சனையின் வைத்தார் மற்றொன் றறிந்திலரால். (சகூ)

மேலாம் பெரியோர் பலகாலும் வெகுண்டே னடிகக வேறுணரார்
பாலார் திருமஞ் சனமாட்டும் பணியிற் சலியா ரதுகண்டு
மாலா மறையோன் மிகச்செயிர்த்து வைதத திருமஞ் சனக்குடப்பால்
காலா லிடறிச் சிந்தினான் கையாற் கடமைத் தலைநின்றான். (ருய)

சிந்தும பொழுதி லதுநோக்குஞ் சிறுவ ரிறையிற் றீயோனைத்
தந்தை யெனவே யறிந்தவன்றன் றாள்கள் சிந்துந் தகுதியினான்

(சச) அந்திதொழுது - சந்தியா வந்தனஞ்செய்து. வாய்நேரான - சொல்லாத வனாய். (ருய) கையால கடமை தலைநின்றான - ஒழுக்கத்தால கீழ்மையின் முதலில் நின்றான, தீயொழுக்கத்தை யுடையவன. (ருக) இறையில - அக்கணத்திலே.

முந்தை மருங்கு கிடந்தகோ லெடுத்தார்க் கதுவே முறைமையினால்
வந்த மழுவா யிடவெறிந்தார் மண்மேல் வீழ்ந்தான் மறையோனும். (௫௧)

எறிந்த வதுவே யர்ச்சனையி லிடையூ றகற்றும் படையாக
மறிந்த தாதை யிருதாளுந் துணித்த மைந்தர் பூசனையில்
அறிந்த விடையூ றகற்றினராய் முன்போ லருச்சித் திடப்புகலுஞ்
செறிந்த சடைநீண் முடியாருந் தேவி யோடும் விடையேறி. (௫௨)

பூத கணங்கள் புடைசூழப் புராண முனிவர் புத்தேளிர்
வேத மொழிக ளெடுத்தேத்த விமல மூர்த்தி திருவுள்ளங்
காதல் கூர வெளிப்படலுங் கண்டு தொழுது மனங்களித்துப்
பாத மலர்கண் மேல்விழுந்தார் பத்தி முதிர்ந்த பாலகனார். (௫௩)

தொடுத்த விதழி சூழ்சடையார் துணைத்தா ளிழற்கீழ் விழுந்தவரை
யெடுத்து நோக்கி நம்பொருட்டா லீன்ற தாதை விழவெறிந்தா
யடுத்த தாதை யினியுனக்கு நாமென் றருள்செய் தணைத்தருளி
மடுத்த கருணை யாற்றடவி யுச்சி மோந்து மகிழ்ந்தருள. (௫௪)

செங்கண் விடையார் திருமலர்க்கை தீண்டப் பெற்ற சிறுவனார்
அங்கண் மாயை யாக்கையின்மே லளவின் றுயர்ந்த சிவமயமாய்ப்
பொங்கி யெழுந்த திருவருளின் மூழ்கிப் பூமே லயன்முதலாந்
துங்க வமரர் துதிசெய்யச் சூழ்ந்த வொளியிற் றோன்றினார். (௫௫)

அண்டர் பிரானுந் தொண்டர்தமக் கதிப னாக்கி யனைத்துநாம்
உண்ட கலமு முடுப்பனவுஞ் சூடு வனவு முனக்காகச்
சண்டீ சனுமாம் பதந்தந்தோ மென்றங் கவர்பொற் றடமுடிக்குத்
துண்ட மதிசேர் சடைக்கொன்றை மாலை வாங்கிச் சூட்டினார். (௫௬)

எல்லா வுலகு மார்ப்பெடுப்ப வெங்கு மலர்மா ரிகள்பொழியப்
பல்லா யிரவர் கணநாதர் பாடி யாடிக் களிபயிலச்
சொல்லார் மறைகள் துதிசெய்யச் சூழ்பல் லியங்க ளெழச்சைவ
நல்லா றோங்க நாயகமா நங்கள் பெருமான் றொழுதணைந்தார். (௫௭)

ஞால மறியப் பிழைபுரிந்து நம்ப ரருளா னன்மறையின்
சீலந் திகழுஞ் சேய்ஞலூர்ப் பிள்ளை யார்தந் திருக்கையிற்
கோல மழுவா லேறுண்டு குற்ற நீங்கிச் சுற்றமுடன்
மூல முதலவர் சிவலோக மெய்தப் பெற்றான் முதுமறையோன். (௫௮)

வந்து மிகைசெய் தாதைதாண் மழுவாற் றுணித்த மறைச்சிறுவர்
அந்த வுடம்பு தன்னுடனே யரனார் மகனா ராயினார்

முந்தை மருங்குகிடந்த - தம்முன் அருகேயிருந்த. (௫௨) மறிந்த - தடுத்த. (௫௩) புத்தேளிர் - தேவர்களும். (௫௮) ஏறுண்டு - வெட்டுப்பட்டு. (௫௯) மிகைசெய் - பூசைக்கிடையூறுசெய்த.

*இந்த நிலைமை யறிந்தாரா ரீறி லாதார் தமக்கன்பு*
*தந்த வடியார் செய்தனவே தவமா மன்றோ'சாற்றுங்கால்.* (௫௯)

*நேச நிறைந்த வுள்ளத்தா னீல நிறைந்த மணிகண்டத்*
*தீச னடியார் பெருமையினை யெல்லா வுயிருந் தொழவெடுத்துத்*
*தேச முய்யத் திருத்தொண்டத் தொகைமுன் பணித்த திருவாளன்*
*வாச மலர்மென் கழல்வணங்க வந்த பிறப்பை வணங்குவாம்.* (௬௦)

**சண்டேசுர நாயனார் புராண முற்றிற்று.**

ஆ திருவிருத்தம். ௧, உ௪௦

**மும்மையாலுலகாண்ட சருக்க முற்றுப்பெற்றது.**



காவிரிநதி எந்நாளும் பாய்ந்து வளஞ்செய்கின்ற சோழநாட்டிலே, திருச்சேய்ஞலூரிலே, வேதியர்குலத்திலே, காசிபர் கோத்திரத்தில் உதித்தவனும், பவித்திரை என்பவளை மணந்து இல்லறத்தை நடத்துகின்றவனும் ஆகிய எச்சதத்தன் என்பவன் ஒருவன் இருந்தான். அவன் செய்த பெருந்தவப்பயனால் அவனுக்கு விசாரசருமர் என்பவர் புத்திரராகத்திருவவதாரஞ் செய்தார். அவர் ஐந்துவயதிலே வேத வேதாந்தங்களையும், சிவாகமங்களையும முன்சன்மத்து அறிவின் தொடர்ச்சியால் ஓதாதுணர்ந்தார். முன்னறி தெய்வங்களாகிய அன்னையும் பிதாவும் அவருக்கு ஏழாம் ஆண்டிலே உபநயனச் சடங்கு செய்து, வேதம் ஓதுவிக்கத் தொடங்கினார்கள். ஆசிரியர்கள் வேதங்களையும், பலகலைகளையும் ஓதுவித்தற்கு முன்னமே விசாரசருமர் அவைகளை யுணர்ந்திருந்ததை அறிந்து அதிசயித்தார்கள். ஓதாதுவேதமுதலிய கலைகளை யுணர்ந்த பெருந்தகையார் சிவபெருமானே முழுமுதற் பொருளெனத் துணிந்து, அவர் திருவடியை மறவாச் சிந்தையரானார்.

அவ்வுண்மை நாயனார் ஒருநாள் வேதாத்தியயனஞ் செய்யுஞ் சிறுவர்களுடன் அவ்வூரவர்கள் பசுக்கூட்டங்களோடு கூடிப்போகும்பொழுது, ஒரு இளங்கன்றுப்பசு மேய்ப்போனாகிய இடையனை முட்டப்போயிற்று. அவன் சிறிதுங் கூசாமல் அக்கோவைக் கொம்பால் அடித்தான். அதைக்கண்ட விசாரசருமர் பதை பதைத்து அவன் அருகே போய்ப் பின்னும் அடியாதபடி அவனைத்தடுத்து "பசுக்கள் தமது உறுப்புக்களில் தேவர்களையும், முனிவர்களையும், புண்ணியதீர்த்தங்களையும் உடையனவாயிருக்கின்றன வன்றோ? சிவபெருமானுக்கு அபிடேக திரவியம் அவைகள் அளிக்கும் பஞ்சகவ்வியங்களன்றோ? பிறவிப்பிணியை யொழிக்குந் திருநீற்றிற்குமூலம் அவைகளின் கோமயம் அன்றோ? அவைகள் பரமசிவன் ஊர்தியாகிய இடபதேவர்குலத்தனவன்றோ" என்று நினைந்து "பசுக்களை மேய்த்துக் காப்பதைவிடச் சிறந்த தொன்றில்லை. அதுவே சிவபெருமானை வழிபடும் பெருநெறி" என்று உறுதிகொண்டு, ஆயனைப்பார்த்து "இனி இவ்வானிரையை நீமேய்க்கவேண்டிய தில்லை; நானே மேய்க்கப்போகின்றேன்" என்ன, அவன் அஞ்சி இறைஞ்சிப் போய்விட்டான். அன்றுமுதல் விசாரசருமர் தாமே பசுக்களை அவ்வவற்றிற்குரிய அந்தணர்கள் சம்மதியின்மேல் மண்ணியாற்றங்கரையிலே புல்லுள்ள விடங்களில் மேய்த்து வந்தார்.

இப்படி மேய்த்துவருநாளில் பசுக்கள் முன்னிலும் அழகாகச் செழித்து இரவும் பகலும மடிசுரந்து பாலை அதிகமாகச் சொரிந்தன. அது கண்டு பிராமணர்கள் பெரிதும் மகிழ்வெய்தினர்கள். பசுக்கள் தஙகள் கன்றுகள் பிரிந்தாலும் சிறிதும் தளராது, தஙகளைப் பேரன்போடு மேய்த்துவரும் பிரமசாரியார் சற்றுநேரம் பிரிவாராயின் தாய்போல் உருகி அவர் அருகேபோய்க்கனைத்து மடிசுரந்து, ஒருவருங கறவாமல் பாலைச் சொரியும். அப்பாலைக் கண்ணுற்ற அந்தணப் பெருந்தகையார் அது சிவபெருமானுக்குத திருமஞ்சனமாகுந தகுதியுடைமையை நினைநதார். உடனே அவருக்குச் சிவபூசையில் பேராசையுணடாக, அவர் மண்ணியாற்றங கரையிலே, ஒரு ஆற்றிடைக் குறையிலே, ஆததிமரததினடியிலே மணலினலே ஒரு சிவலிஙகஞ்செய்து, திருமதில்களும், கோபுரஙகளும வகுதது, சிவபிரானுக்குரிய ஆத்திமுதலிய மலாகளைக கொயதுகொணடு வைததுப் பின்பு புதிய குடஙகளைததேடி வாஙகிக்கொணடு, கறவைப் பசுக்கள் ஒவ்வொன்றிடத்திலும போய் முலையைத் தீண்ட, அவைகள் கனைத்துக் குடஙகளிற் பாலைச் சொரிநதன. பின்னா அப்பாற் குடஙகளை எடுத்துககொண்டுபோய்த் திருக்கோயிலிலே வைத்துப் பததிரபுட்பஙகளாற் பரமசிவனை அருச்சித்துப் பாலால்அபிடேகஞ்செய்தார். சாவவியாபியாகிய சஙகரா அம்மணலிலிருந்து அன்பர் செய்யும் பூசனையை இன்புடன் ஏற்றா மறையவர் பெருமான் மஙகைபாகன் பூசைககு அஙகமாகிய திருமஞ்சனம் முதலியவற்றுள் கிடையாதன வற்றை மனசிலே கிடைத்தனவாகப் பாவிதது நிரப்பி முறைப்படி அருசசித்து வந்தாா. கோககள் குழகனர் திருமஞசனததுக்குப் பாலைச் சொரிநதும் வேதியர்களுககு முன்போல குறைவிலலாமல பாலைக்கொடுத்துக் கொண்டுவநதன.

இஙஙனம் பலநாள்களாகச் செய்து வருங்காலத்தில் ஒருநாள் ஒருவன் சேய்ஞலூர்ப் பிள்ளையார் செய்கையை விளையாட்டெனககருதி உணமையுணராதவனய், அவ்வூர் அந்தணர்களுக்கு அறிவித்தான். அவர்கள் எச்சதததனை அழைப்பித்து "ஆகுதியின் நிமித்தமாகப பால்கறககும் பசுநிரைகளை எல்லாம் உமது குமாரனகிய விசாரசருமன் உள்ளன்போடு மேய்ப்பவனைப் போலககொணடுபோயப் பாலைககறநது வீணுக மணலிலே சொரிந்து விளையாடுவதாக ஒருவன் சொன்னன்" என்றூர்கள் அதற்கு எச்சதத்தன் "சிறியவனகிய என்புத்திரன் இப்படிசெய்து வருவதை இதற்குமுன் அறிந்திலேன்; அவன் குற்றததைப் பொறுககவேணடும். இனி அவன் அஙஙனஞ் செய்வானயின் அப்பிழை என்னுடையதாகும" என்று குறைபிரந்து வணங்கி, அவர்கள்பால விடைபெற்றுக்கொண்டு வீட்டுககுத் திரும்பினன். அவன் அடுத்த நாட்காலையில், விசாரசருமர் பசுக்களை மேய்ககப் போன பின்பு, அவா அறியாதபடி உண்மையுணரவேண்டி அவருககுப் பின்னே மறைந்து சென்றான். எச்சதத்தன் பிள்ளையார் பசுக்களை மண்ணியாற்றின் மணற்றிட்டையிலே ஓட்டிக்கொண்டு போனதைப் பார்த்து, சமீபத்திலிருந்த ஒருகுராமரத்தில் ஏறி, அங்கே நிகழ்வதையறிய ஒளித்திருந்தான். சிவமாகவிளஙகும் விசாரசருமர் வழக்கப்படி ஸ்நானம்பண்ணிச் சிவலிஙகந்தாபித்தல் முதலிய சிவபணிகளைச்செய்து பூசைதொடஙகிச சிவலிங்கப் பெருமானுக்குப் பத்திரபுட்பங்கள் சாத்திப் பாற்குடங்களை எடுத்து அபிடேகஞ் செய்தார். அதைக்கண்ட எச்சதத்தன் குராமரத்தினின்றும் இறங்கி விரைவாகப்போய்த் தன் கைத்தண்டால் இறைபணி நிற்போர் முதுகில் அடித்து வெம்மொழிகளைச் சொன்னன். பசுகரணம் நீங்கப்பெற்ற பெரியவர் சிந்தை சிவபூசையிலே பதிந்து கிடைககின்றமையால் அவருக்கு ஒன்றுந்தோன்ற

வில்லை. எச்சதத்தன் பின்னுங் கோபித்துப் பன்முறைபுடைத்தும், அவ்வடியால் விசாரசருமர் வருநதாதவராய் அபிடேகத திருப்பணியினின்றுஞ் சிறிதுந் தவறு திருநதார் அப்பெருந்தகைப்பெருமான் சிந்தை ஒருமைப் பட்டிருப்பதை உணராத மருளனாகிய எசசதததன் பாற்குடஙகளைக காலால் இடறிச்சிநதினான். சிநதினதும விசாரசருமர் அதைசசெய்தவன் தந்தை என்றறிநதும, அவன் செய்தது சிவாபராதமாகையால அவன் கால்களைத் துணிததுப் பாசத்தைக் களையவேண்டுமெனக் கருதித் தமககுமுன் இருந்த ஒருகோலை எடுக்க, அது மழுவாயிற்று அம்மழுவால் அவன் காலகளைவெட்டி முன்போல சிவபூசைசெய்ய; பரமசிவன் பாாவதியோடுவிடைமேல தோன்றியருளினார். விசாரத்தையொழிதத விசாரசருமா விமலனைககணடு எல்லையிலலா ஆனந்தம எய்திவணஙகினார். எலலாமவலல இறைவா விசாரசருமரைத் திருககரஙகளாலெடுததுத திருக்கண்ணோககஞ்செய்து "நீநம்பொருட்டு உனனைப்பெற்ற தநதையைததடிந்தாய்; இனி நாமே உனககுரிய தநதையாயினோம்" எனறு திருவாய்மலர்நது, அவருடலைத்தைவநது உச்சிமோந்து மகிழ்நதருளினார் சிவபெருமான் திருக்கரம தீணடப்பெற்ற விசாரசருமர் திருமேனி சிவமயமாகிப் பேபரொளியோடு விளஙகியது இளையபிள்ளையாரை யீன்றோர் சேய்ஞலூர்ப் பிள்ளையாரைநோககி "நமது திருததொண்டர்களுககு உன்னைத தலைவனாககினோம்; நாம உண்டஅமுதும, பரிவட்டமும், சூடுவனவாம் மாலை முதலியனவற்றையும் உனககே கிடைககும்படி சணடீசுரபதததைத் தந்தோம" எனறு அருளிசசெய்து தமது திருசசடையிலுள்ள கொன்றைமாலையை எடுதது அவருககுச சூட்டியருளினா. சண்டேசுரநாயனா எலலாஉலகும ஆரப்பவும, எஙகும மலாமாரிகள் பொழியவும, கணநாதாகள பாடியாடி ஆனநதமெயதவும, வேதஙகள துதிசெயயவும, பலவாததியஙகள முழஙகவும, சைவம ஓஙகவும பெருமானைததொழுது, அவர் அருள்செயத சணடேசுரபதததை அடைநதாா எசசதத்தன் சிவாபராதஞ்செய்தும, சணடீசப்பெருமானால தணடிககப்பட்டமையால் பாசம் நீஙகப்பெற்றுச சுற்றததுடன் சிவலோகமெயதினான்

—∞⁂∞—

ஐந்தாவது

## திருநின்றசருக்கம்.

---

# திருநாவுக்கரசு சுவாமிகள் புராணம்.

—(*)—

திருநாவுக் கரசுவளர் திருத்தொண்டி னெறிவாழ
வருஞானத் தவமுனிவர் வாகீசர் வாய்மைதிகழ்
பெருநாமச் சீரபரவ லுறுகின்றேன் பேருலகில்
ஒருநாவுக் குரைசெய்ய வொண்ணுமை யுணராதேன். (க)

---

(க) வளா - சிறநது ஓஙகும. வரும - (திருககயிலையினினறும) எழுந்தருளிவந்த. வாகீசா திருநாவுககரசு வாயமைதிகழ் பெருநாம சீர் - ஸ்ரீ வாகீச வள்ளல் திருவவதாரமாகிய திருநாவுககரசு சுவாமிகளினுடைய உண்மையொளிரும அருட்பெருஞ் சரிதச்

தொன்மைமுறை வருமண்ணின் றுகளன்றித் துகளில்லா
நன்மைநிலை யொழுக்கத்தி னலஞ்சிறந்த குடிமல்கிச்
சென்னிமதி புனையவளர் மணிமாடச் செழும்பதிகண்
மன்னிநிறைந் துளதுதிரு முனைப்பாடி வளநாடு. (உ)

புனப்பண்ணை மணியினொடும் புறவினறும் புதுமலருங்
கனப்பெண்ணி றிரைசுமந்து கரைமருங்கு பெரும்பகட்டோர்
இனப்பண்ணை யுழும்பண்ணை யெறிந்துலவி யெவ்வுலகும்
வனப்பெண்ண வரும்பெண்ணை மாநதிபாய் வளம்பெருகும் (ந)

காவெல்லாந் தகட்டுவரால் கரும்பெல்லாங் கண்பொழிதேன்
பாவெல்லாங் கதிர்ச்சாலி பரப்பெல்லாங் குலைக்கமுகு
சாலெல்லாந் தரளநிரை தடமெல்லாஞ் செங்கழுநீர்
மேலெல்லா மகிற்றூபம் விருந்தெல்லாந் திருந்துமனை (ச)

கடைஞர்மிடை வயற்குறைத்த கரும்புகுறை பொழிகொழுஞ்சா
றிடைதொடுத்த தேன்கிழிய விழிந்தொழுகு நீத்தமுடன்
புடைபரந்து ஞிமிறொலிப்பப் புதுப்புனல்போன் மடையுடைப்ப
உடைமடையக் கரும்படுகட் டியினடைப்ப வூர்கடொறும். (ரு)

கருங்கதலிப் பெருங்குலைகள் களிற்றுக்கைம் முகங்காட்ட
மருங்குவளர் கதிர்ச்செந்நெல் வயப்புரவி முகங்காட்டப்
பெருஞ்சகடு தேர்காட்ட வினைஞரார்ப் பொலிபிறங்க
நெருங்கியசா துரங்கபல நிகர்ப்பனவா நிறைமருதம் (சு)

நறையாற்றுங் கமுகுநவ மணிக்கழுத்தி னுடன்கூந்தற்
பொறையாற்று மகளிரெனப் புறம்பலைத்தண் டலைவேலித்

சிறப்புரை. (திருநாவுக்கரசு - திருநாவுக்கரசு என்னும் திருநாமத்தை யுடையவராம் வருஞானத் தவமுனிவர் - திருவவதாரஞ்செய்த ஞானத்தையுடைய தவமுனிவரு மாகிய—என்னும் அமையும்) (நாமம் - சரிதம்.) (உ) துகளன்றி - தூசிகளை யல்லாமல். துகள் - (மற்றைய) குற்றங்கள் (ந) புனப்பண்ணை (பணை) மணியினொடும் - குறிஞ்சி நிலத்துள்ள மூங்கில் முத்துக்களோடும்; குறிஞ்சிநிலத்துள்ள தொகுதியான இரத்தினங்களோடும். புறவின - முல்லை நிலத்துள்ள. கனப்பு - தொகுதிகளையும். பெரும்பகடு ஏர் இனப்பண்ணை உழும்பண்ணை - பெரிய எருமைகள் பூட்டப்பட்ட அதிக ஏர் கூட்டங்கள் உழுகின்ற வயல்களில். (ச) கண் - கணுக்கள். பால் எல்லாம் - பக்கங்களிலெல்லாம். பரப்பு - விசாலமான இடங்கள். சால் - படைச்சால். தரளநிரை - முத்துவரிசைகள். மேல்-மேல் வீடுகள். (ரு) கடைஞர் மிடை-உழவர்கள் நெருங்கிய. குறை - துண்டுகள். தேன் - தேன்கூடுகள். நீத்தம் - தேன் வெள்ளம். ஞிமிறு - வண்டுகள். (சு) கதலி - வாழை. சகடு - பண்டிகள். வினைஞர் - உழவர்கள். சாதுரங்கபலம் - சதுரங்க சேனைகளையுடைய இடத்தை. (எ) நறை ஆற்றும்-வாசனை

துறையாற்ற * மணிசொரியச் சுரும்பிரைக்கும் பெரும்பண்ணை
நிறையாற்று நீர்க்கொழுந்து படர்ந்தேறு நிலைமையதால். (எ)

மருமேவு மலர்மேய மாகடலி னுட்படியும்
உருமேக மெனமண்டி யுகைத்தகருங் கன்றுபோல
பருமேனிச் செங்கண்வரான் மடிமுட்டப் பாலசொரியுங்
கருமேதி தனைக்கொண்டு கரைபுரள்வ திரைவாவி (அ)

மொய்யளிசூழ் நிரைநீல முழுவலயங் களினலையச்
செய்யதளிர் நறுவிரலிற் செழுமுகையி னகஞ்சிறப்ப
மெய்யொளியி னிழற்காணு மாடியென வெண்மதியை
வையமகள் கையணைத்தாற் போலுயர்வ மலர்ச்சோலை (௯)

எயிற்குலவும் வளம்பதிக ளெங்குமணந் தங்குமவயற்
பயிர்க்கண்விய லகலிடங்கள் பரந்துயாநெற் கூடுகளும்
வெயிற்கதிர்மென் குழைமகளிர் விரவியமா டமுமேவி
மயிற்குலமு முகிற்குலமு மாறாட மருங்காடும் (௰)

மறந்தருதீ நெறிமாற மணிகண்டர் வாய்மைநெறி
யறந்தருநா வுக்கரசு மாலால சுந்தரரும்
பிறந்தருள வுளதானு னம்மளவோ பேருலகிற்
சிறந்ததிரு முனைப்பாடித் திறம்பாடுஞ் சீர்ப்பாடு (கக)

இவ்வகைய திருநாட்டி லெண்ணில்பல வூர்களுமென்று
மெய்வளங்க ளோங்கவரு மேன்மையன வாங்கவற்றுட்
சைவநெறி யேழுலகும் பாலிக்குந் தகைமையினாற்
றெய்வநெறிச் சிவம்பெருக்குந் திருவாரூர் திருவாரூர். (கஉ)

ஆங்குவன முலைகள்சுமந் தணங்குவன மகளிரிடை
ஏங்குவன நூபுரங்க ளிரங்குவன மணிகாஞ்சி
ஓங்குவன மாடநிரை யொழுகுவன வழுவில்லற
நீங்குவன தீங்குநெறி நெருங்குவன பெருங்குடிகள் (கங)

மலர்நீலம் வயல்காட்டு மைஞ்ஞீல மதிகாட்டும்
அலர்நீடு மறுகாட்டு மணியூசல் பலகாட்டும்

சுமழும் பொறை - சுமையை தண்டலை - சோலைகள். துறை - கரையில் (அ) மருமேவு - வாசனைவீசும். மேதிதனை கொண்டு - எருமைகளை அழைத்துக்கொண்டு. (௯) அளி - வண்டுகள். ஆடி - கண்ணாடி. (௰) எயிற்குலவும் - மதில்கள் சூழ்ந்த. குழை - குண்டலமணிந்த. (கக) மறந்தரும் தீநெறி - பாவத்தை விளைக்கும் தீச்சமய நெறிகள் (கஉ) திருவாரூர் - இலக்குமிவாழும் ஊராகிய (கங) வனமுலைகள் - அழகிய தனங்களை. அணங்குவன - வருந்துகின்றன. நூபுரங்கள் - சிலம்புகள்.

* மணிவண்ணச் சுரும்பிரைக்கும் பெரும்பண்ணை என்றும் பாடம்.

புலர்நீல மிருள்காட்டும் பொழுதுழவ ரொலிகாட்டுங்
கலனீடு மனைகாட்டுங் கரைகாட்டாப் பெருவளங்கள். (கச)

தலத்தின்கண் விளங்கியவத் தனிப்பதியி லனைத்துவித
நலத்தின்கண் வழுவாத நன்மரபிற் குடிநாப்பண்
விலக்கின்மனை யொழுக்கத்தின் மேதக்க நிலைவேளாண்
குலத்தின்கண் வரும்பெருமைக் குறுக்கையர்தங் குடிவிளங்கும் (கரு)

அக்குடியின் மேற்றோன்ற லாயபெருந் தன்மையினார்
மிக்கமனை யறம்புரிந்து விருந்தளிக்கு மேன்மையினார்
ஒக்கல்வளர் பெருஞ்சிறப்பி னுளரானா ருளரானார்
திக்குநில வும்பெருமை திகழவரும் புகழனார் (கசு)

புகழனார் தமக்குரிமைப் பொருவில்குலக் குடியின்கண்
மகிழவரு மணம்புணர்ந்த மாதினியார் மணிவயிற்றி
னிகழுமலர்ச் செங்கமல நிரையிதழி னகவயினிற்
றிகழவருந் திருவனைய திலகவதி யார்பிறந்தார். (கஎ)

திலகவதி யார்பிறந்து சிலமுறையாண் டகன்றதற்பின்
அலகில்கலைத் துறைதழைப்ப வருந்தவத்தோர் நெறிவாழ
உலகில்வரு மிருணீக்கி யொளிவிளங்கு கதிர்போல்பின்
மலருமரு ணீக்கியார் வந்தவதா ரஞ்செய்தார் (கஅ)

மாதினியார் திருவயிற்றின் மன்னியசீர்ப் புகழனார்
காதலனா ருதித்ததற்பின் கடன்முறைமை மங்கலங்கண்
மேதகுநல் வினைசிறப்ப விரும்பியபா ராட்டினுடன்
ஏதமில்பல் கிளைபோற்ற விளங்குழவிப் பதங்கடந்தார். (ககூ)

மருணீக்கி யார்சென்னி மயிர்நீக்கு மணவினையுந்
தெருணீரப் பன்மாந்தரெலா மகிழ்சிறப்பச் செய்ததற்பின்
பொருணீத்தங் கொளவீசிப் புலன்கொளுவ மனமுகிழ்த்த
சுருணீக்கி மலர்விக்குங் கலைபயிலத் தொடங்குவித்தார். (உ0)

தந்தையார் களிமகிழ்ச்சி தலைசிறக்க முறைமையினாற்
சிந்தைமலர்ந் தெழுமுணர்விற் செழுங்கலையின் றிறங்களெல்லா
முந்தைமுறை மையிற்பயின்று முதிரவறி வெதிரும்வகை
மைந்தனார் மறுவொழித்த விளம்பிறைபோல் வளர்கின்றார் (உக)

---

(கச) மைந்நீலம் - கரியகளங்கத்தை. ஞிலம் - நிலம், போலி. அலர் நீடு மறுகு - விசாலமாகிய நீண்ட தெருக்கள் (நீல இருள்காட்டும்) புலர்பொழுது - விடியற்காலம். (கரு) நாப்பண் - இடையில். விலக்கு இல - வழுவில்லாத. (கசு) ஒக்கல் - உறவினர்களை. (கஅ) பதம் - பருவம் (உ0) தெருணீர - தெளிந்த குணத்தையுடைய. பொருள் நீத்தங் கொளவீசி - பொருளை வெள்ளமாக (ஏராளமாக) எடுத்துத் தானம் புரிந்து.

அந்நாளிற் றிலகவதி யாருக்காண் டாறிரண்டின்
முன்னாக வொத்தகுல முதல்வேளாண் குடித்தலைவர்
மின்னார்செஞ் சடையண்ணன் மெய்யடிமை விருப்புடையார்
பொன்னாரு மணிமௌலிப் புரவலன்பா லருளுடையார். (உ௨)

ஆண்டகைமைத் தொழிலின்க ணடலரியே றெனவுள்ளார்
காண்டகைய பெருவனப்பிற் கலிப்பகையா ரெனும்பெயரார்
பூண்டகொடைப் புகழனார் பாற்பொருவின் மகட்கொள்ள
வேண்டியெழுங் காதலினான் மேலோரைச் செலவிட்டார். (உ௩)

அணங்கனைய திலகவதி யார்தம்மை யாங்கவர்க்கு
மணம்பேசி வந்தவரும் வந்தபடி யறிவிப்பக்
குணம்பேசிக் குலம்பேசிக் கோதில்சீர்ப் புகழனார்
பணங்கொளர வகலல்குற் பைந்தொடியை மணநேர்ந்தார். (உ௪)

கன்னிதிருந் தாதையார் மணமிசைவு கலிப்பகையார்
முன்னணைந்தா ரறிவிப்ப வதுவைவினை முடிப்பதன்முன்
மன்னவற்கு வடபுலத்தோர் மாறேற்க மற்றவர்மேல்
அன்னவர்க்கு விடைகொடுத்தா னவ்வினைமே லவரகன்றார். (உ௫)

வேந்தற்குற் றுழிவினைமேல் வெஞ்சமத்தில் விடைகொண்டு
போந்தவரும் பொருபடையு முடன்கொண்டு சிலநாளிற்
காய்ந்தசினப் பகைப்புலத்தைக் கலந்துகடுஞ் சமர்க்கடலை
நீந்துவார் நெடுநாள்க ணிறைவெம்போர்த் துறைவிளைத்தார். (உ௬)

ஆயநா ளிடையிப்பா லணங்கனையா டனைப்பயந்த
தூயகுலப் புகழனார் தொன்றுதொடு நிலையாமை
மேயவினைப் பயத்தாலே யிவ்வுலகை விட்டகலத்
தீயவரும் பிணியுழந்து விண்ணுலகிற் சென்றடைந்தார். (உ௭)

மற்றவர்தா முயிர்நீப்ப மனைவியார் மாதினியார்
சுற்றமுடன் மக்களையுந் துகளாக வேநீத்துப்
பெற்றிமையா லுடனென்றும் பிரியாத வுலகெய்துங்
கற்புநெறி வழுவாமற் கணவனா ருடன்சென்றார். (உ௮)

தாதையா ரும்பயந்த தாயாரு மிறந்ததற்பின்
மாதரார் திலகவதி யாருமவர் பின்வந்த

(உ௨) மௌலி புரவலன் - கிரீடத்தைத் தரித்த அரசனிடத்தில். (உ௩) ஆண்டகைமை தொழிலின் - வீரத்தொழிலில். அடல் அரி ஏறு என - வலிமையுடைய ஆண்சிங்கத்தைப்போல. வனப்பில் - அழகில். பொருவில - ஒப்பில்லாத (உ௪) அணங்கனைய - திருமகளை யொத்த. (உ௫) வதுவை - கலியாணம். மாறேற்க - படையெடுத்துவர. (உ௮) துகளாக - அற்பமாக.

காதலனா மருணீக்கி யாருமனக் கவலையினாற்
பேதுறுநற் சுற்றமொடும் பெருந்துயரி லழுந்தினார். (உகூ)

ஒருவாறு பெருங்கிளைஞர் மனந்தேற்றத் துயரொழிந்து
பெருவான மடைந்தவர்க்குச் செய்கடன்கள் பெருக்கினார்
மருவார்மேன் மன்னவற்கா மலையப்போங் கலிப்பகையார்
பொருவாரும் போர்க்களத்தி லுயிர்கொடுத்துப் புகழ்கொண்டார். (௩௰)

வெம்முனைமேற் கலிப்பகையார் வேல்வேந்த னேவப்போய்
அம்முனையிற் பகைமுருக்கி யமருலக மாள்வதற்குத்
தம்முடைய கடன்கழித்த பெருவார்த்தை தலஞ்சாற்றச்
செம்மலர்மேற் றிருவனைய திலகவதி யார்கேட்டார். (௩௧)

எந்தையுமெம் மனையுமவர்க் கெனைக்கொடுக்க விசைந்தார்கள்
அந்தமுறை யாலவர்க்கே யுரியதுநா னாதலினால்
இந்தவுயி ரவருயிரோ டிசைவிப்ப னெனத்துணிய
வந்தவர்தம் மடியிணைமேன் மருணீக்கி யார்விழுந்தார். (௩௨)

அந்நிலையின் மிகப்புலம்பி யன்னையுமத் தனுமகன்ற
பின்னையுநா னுமைவணங்கப் பெறுதலினா லுயிர்தரித்தேன்
என்னையினித் தனிக்கைவிட் டேகுவீ ரெனில்யானு
முன்னமுயிர் நீப்பனென மொழிந்திடரி னழுந்தினார். (௩௩)

தம்பியா ருளராக வேண்டுமென வைத்ததயா
உம்பருல கணையவுறு நிலைவிலக்க வுயிர்தாங்கி
அம்பொன்மணி நூறாங்கா தனைத்துயிர்க்கு மருடாங்கி
இம்பர்மனைத் தவம்புரிந்து திலகவதி யாரிருந்தார். (௩௪)

மாசின்மனத் துயரொழிய மருணீக்கி யார்நிரம்பித்
தேசநெறி நிலையாமை கண்டறங்கள் செய்வாராய்க்
காசினிமேற் புகழ்விளங்க நிதியளித்துக் கருணையினால்
ஆசிலறச் சாலைகளுந் தண்ணீர்ப்பந் தருமமைப்பார். (௩௫)

காவளர்த்துங் குளந்தொட்டுங் கடப்பாடு வழுவாமல்
மேவினர்க்கு வேண்டுவன மகிழ்ந்தளித்தும் விருந்தளித்து

---

(உகூ) மாதார் - அழகு நிறைந்த. பேதுறும் - வருந்தும். (௩௰) கிளைஞர் - சுற்றத்தார்கள். வானம் அடைந்தவர்க்கு - சுவர்க்கத்தை யடைந்த தாய்தந்தையர்களுக்கு. மருவார்மேல் - பகைவர்கள்மேல். மலைய - போர்புரிய. (௩௪) நால - மாங்கலிய சூத்திரம். திருநாவுக்கரசு சுவாமிகள் உலகுய்யத் திருவவதாரஞ் செய்த அருள் வள்ளல் ஆகலானும், அவர் பொருட்டு அம்மையார் உயிர் தாங்கினமையானும் "அனைத்துயிர்க்கும் அருடாங்கி" என்றார். (௩௬) காவளர்த்தும் - சோலைகளை வைத்து வளர்த்தும். குளம் தொட்டும் - குளங்களை வெட்டியும். கடப்பாடு ாகை

நாவலர்க்கு வளம்பெருக நல்கியநா ணிலத்துள்ளோர்
யாவருக்குந் தவிராத வீகைவினைத் துறைநின்றார். (௩௬)

நிலையாத வுலகியல்பு கண்டுநிலை யாவாழ்க்கை
அல்லலென் றறத்துறந்து சமயங்க ளானவற்றி
னல்லாறு தெரிந்துணர நம்பரரு ளாமையினாற்
கொல்லாமை மறைந்துறையு மமண்சமயங் குறுகுவார் (௩௭)

பாடலிபுத் திரமென்னும் பதியணைந்து சமண்பள்ளி
மாடணைந்தார் வல்லமணர் மருங்கணைந்து மற்றவர்க்கு
வீடறியு நெறியிதுவே யெனமெய்போற் றங்களுடன்
கூடவரு முணர்வுகொளக் குறிபலவுங் கொளுவினார் (௩௮)

அங்கவரு மமண்சமயத் தருங்கலைநூ லானவெலாம்
பொங்குமுணர் வுறப்பயின்றே யந்நெறியிற் புலன்சிறப்பத்
துங்கமுழு வுடற்சமணர் சூழ்ந்துமகிழ் வாரவர்க்குத்
தங்களின்மே லாந்தரும சேனரெனும் பெயர்கொடுத்தார் (௩௯)

அத்துறையின் மீக்கூரு மமைதியினா லகலிடத்திற்
சித்தநெறி யறியாத தேரரையும் வாதின்கண்
உய்த்தவுணர் வினில்வென்றே யுலகின்க ணொளியுடைய
வித்தகரா யமண்சமயத் தலைமையினின் மேம்பட்டார் (௪0)

வேறு

அந்நெறியின் மிக்கா ரவரொழுக வான்றதவச்
செந்நெறியின் வைகுந் திலகவதி யார்தாமுந்
தொன்னெறியின் சுற்றத் தொடர்பொழியத் தூயசிவ
நன்னெறியே சேர்வதற்கு நாதன்றா ணண்ணுவார். (௪௧)

பேராத பாசப் பிணிப்பொழியப் பிஞ்ஞகன்பால்
ஆராத வன்புபெற வாதரித்த வம்மடவார்
நீரார் கெடிலவட நீள்கரையி னீடுபெருஞ்
சீரார் திருவதிகை வீரட்டா னஞ்சேர்ந்தார் (௪௨)

சென்றுதிரு வீரட்டா னத்திருந்த செம்பவளக்
குன்றை யடிபணிந்து கோதில் சிவசின்னம்
அன்று முதற்றாங்கி யாராவுமுறத் தங்கையாற்
றுன்று திருப்பணிகள் செய்யத் தொடங்கினார் (௪௩)

---

(௩௭) நல்லாறு - நன்மார்க்கம் (௩௮) சமணப்பள்ளி மாடு - சமணர்கோயிலை, பாழியிடத்தை குறிபலவும் கொளுவினார் - பலவகையான நூல்களைப் போதித்தார்கள். (௪0) தேரரையும் - புத்தர்களையும் வாதின்கண் - வாதத்தில். (௪௧) செந்நெறியின் - சைவசமயத்தில் (௪௨) ஆதரித்த - விரும்பிய. (௪௩) செம்பவளக்குன்றை அடி - சிவபெருமான் திருவடிகளில்

வேறு.

புலர்வதன்முன் றிருவலகு பணிமாறிப் புனிறகன்ற
நலமலியா னன்சாணத் தானன்கு திருமெழுக்கிட்டு
மலர்கொய்து கொடுவந்து மாலைகளுந் தொடுத்தமைத்துப்
பலர்புகழும் பண்பினாற் றிருப்பணிகள் பலசெய்தார். (௪௪)

நாளுமிகும் பணிசெய்து குறைந்தடையு நன்னாளிற்
கேளுறுமன் புறவொழுகுங் கேண்மையினார் பின்பிறந்தார்
கோளுறுதீ வினைமுந்தப் பரசமயங் குறித்ததற்கு
மூளுமனக் கவலையினான் முற்றவருந் துயருழந்தார். (௪௫)

தூண்டுதவ விளக்கனையார் சுடரொளியைத் தொழுதென்னை
ஆண்டருளு நீராகி லடியேன்பின் வந்தவனை
ஈண்டுவினைப் பரசமயக் குழிநின்று மெடுத்தாள
வேண்டுமெனப் பலமுறையும் விண்ணப்பஞ் செய்தனரால் (௪௬)

தவமென்று பாயிடுக்கித் தலைபறித்து நின்றுண்ணும்
அவமொன்று நெறிவீழ்வான் வீழாமே யருளுமெனச்
சிவமொன்று நெறிநின்ற திலகவதி யார்பரவப்
பவமொன்றும் வினைதீர்ப்பார் திருவுள்ளம் பற்றினார் (௪௭)

மன்னுதபோ தனியார்க்குக் கனவின்கண் மழவிடையார்
உன்னுடைய மனக்கவலை யொழிநீயுன் னுடன்பிறந்தான்
முன்னமே முனியாகி யெனையடையத் தவமுயன்றான்
அன்னவனை யினிச்சூலை மடுத்தாள்வ மெனவருளி (௪௮)

பண்டுபுரி நற்றவத்துப் பழுதினள விறைவழுவுந்
தொண்டரையா ளத்தொடங்குஞ் சூலைவே தனைதன்னைக்
கண்டருநெற் றியாருளக் கடுங்கனல்போ லடுங்கொடிய
மண்டுபெருஞ் சூலையவர் வயிற்றினிடைப் புக்கதால். (௪௯)

அடைவிலமண் புரிதரும சேனர்வயிற் றடையுமது
வடவனலுங் கொடுவிடமும் வச்சிரமும் பிறவுமாங்
கொடியவெலா மொன்றாகு மெனக்குடரி னகங்குடையப்
படருழந்து நடுங்கியமண் பாழியறை யிடைவீழ்ந்தார். (௫௦)

அச்சமயத் திடைத்தாமுன் னதிகரித்து வாய்த்துவரும்
விச்சைகளாற் றடுத்திடவு மேன்மேலு மிகமுடுகி

---

(௪௪) புனிறு அகன்ற நலமலி ஆன் - இளமை நீங்கிய நல்ல பசுவின். (௪௫) குறைந்தடையும் - தமது குறையை விண்ணப்பித்து வரும் (தமது தம்பியார் சமண சமயத்திற் புகுந்துழலுதலை நீக்கியருள.) (௪௭) அவம் ஒன்றும் நெறி - தீமை பொருந்திய சமண சமயம். (௪௯) இறை அளவு பழுதின் வழுவும் - சிறுபிழையால் வழுவிய. (௫௧) வாய்த்துவரும் - கைவந்துள்ள. விச்சைகளால் - மந்திரவித்தைகளால்.

உச்சமுற வேதனைநோ யோங்கியெழ வாங்கவர்தா
நச்சரவின் விடந்தலைக்கொண் டெனமயங்கி நவையுற்றார் (௫க)

அவர்நிலைமை கண்டதற்பி னமண்கையர் பலரீண்டிக்
கவர்கின்ற விடம்போன்முன் கண்டறியாக் கொடுஞ்சூலை
இவர்தமக்கு வந்ததினி யாதுசெய லென்றழிந்தார்
தவமென்று வினைபெருக்கிச் சார்பல்லா நெறிசார்வார். (௫உ)

புண்டலைவன் முருட்டமணர் புலர்ந்துசெய லறியாது
குண்டிகைநீர் மந்திரித்துக் குடிப்பித்துந் தணியாமை
கண்டுமிகப் பீலிகொடு காலளவுந் தடவிடவும்
பண்டையினு நோவமிகப் பரிபவத்தா லிடருழந்தார் (௫ங)

தாவாத புகழ்த்தருமசேனர்க்கு வந்தபிணி
ஓவாது நின்றிடலு மொழியாமை யுணர்ந்தாராய்
ஆவாநா மென்செய்கோ மென்றழிந்த மனத்தினராய்ப்
போவார்க ளிதுநம்மாற் போக்கரிதா மெனப்புகன்று (௫ச)

குண்டர்களுங் கைவிட்டார் கொடுஞ்சூலை கைக்கொண்டு
மண்டிமிக மேன்மேலு முடுகுதலான் மதிமயங்கிப்
பண்டையுற வுணர்ந்தார்க்குத் திலகவதி யாருளராக்
கொண்டவர்பா லூட்டுவான் றனைவிட்டார் குறிப்புணர்த்த (௫௫)

ஆங்கவன்போய்த் திருவதிகை தனையடைய வருந்தவத்தா
பூங்கமழ்நந் தனவனத்தின் புறம்பணையக் கண்டிறைஞ்சி
யீங்கியா னுமக்கிளையா ரேவலினால் வந்ததெனத்
தீங்குளவோ வெனவினவ மற்றவனுஞ் செப்புவான் (௫சு)

கொல்லாது சூலைநோய் குடர்முடக்கித் தீராமை
யெல்லாருங் கைவிட்டா ரிதுசெயலென் முன்பிறந்த
நல்லாள்பாற் சென்றியம்பி நானுய்யும் படிகேட்டிங்
கல்லாகும் பொழுதணைவா யென்றாரென் றறிவித்தான் (௫எ)

என்றவன்முன் கூறுதலும் யானங்குன் னுடன்போந்து
நன்றறியா ரமண்பள்ளி நண்ணுகிலே னெனுமாற்றஞ்
சென்றவனுக் குரையென்று திலகவதி யார்மொழிய
அன்றவனு மீண்டுபோய்ப் புகுந்தபடி யவர்க்குரைத்தான் (௫அ)

---

(௫உ) ஈண்டி - கூடி. (௫ச) தாவாதபுகழ் - கெடாத புகழையுடைய. ஆவா - ஆ ஆ, ஆச்சரியக்குறிப்பு. (௫௫) ஊட்டுவான் தனை - பாகம் பண்ணி அன்னமிடுகின்றவனை. (அன்னத்தையிலையிலிடாது கையிலிடுதலின் "ஊட்டுவான்" என்றார்.) (௫எ) அல்லாகும் பொழுது - இராக்காலத்தில்.

அவ்வாறுதமை கேட்டலுமே யயர்வெய்தி யிதற்கினியான
எவ்வாறு செய்வனென வீசரருள் கூடுதலால்
ஒவ்வாவிப் புன்சமயத் தொழியாவித துயரொழியச்
செவ்வாறு சேர்திலக வதியார்தாள் சேர்வனென (௫௯)

எடுத்தமனக் கருத்துய்ய வெழுதலா லெழுமுயற்சி
யடுத்தலுமே யயாவொழிந்தகத் திருவதிகை யணைவதனுக்
குடுத்துழலும் பாயொழிய வுறியுறுகுண் டிகையொழியத்
தொடுத்தபீலியுமொழியப் போவதற்குத் துணிந்தெழுந்தார். (௬௰)

பொய்தருமா லுள்ளத்துப் புன்சமண ரிடங்கழிந்து
மெய்தருவா னெறியடைவார் வெண்புடைவை மெய்சூழ்ந்து
கைதருவார் தமையூன்றிக் காணாமே யிரவின்கட்
செய்தவமா தவர்வாழுந் திருவதிகை சென்றடைந்தார். (௬௧)

சுலவிவயிற் றகங்கனலுஞ் சூலைநோ யுடன்றொடரக்
குலவியெழும் பெருவிருப்புக் கொண்டணையக் குலவரைபோன்
றிலகுமணி மதிற்சோதி யெதிர்கொடிரு வதிகையினிற்
றிலகவதி யாரிருந்த திருமடத்தைச் சென்றணைந்தார். (௬௨)

வந்தணைந்து திலகவதி யாரடிமே லுறவணங்கி
நந்தமது குலஞ்செய்த நற்றவத்தின் பயனனையீர்
இந்தவுடற் கொடுஞ்சூலைக் கிடைந்தடைந்தே னினிமயங்கா
துய்ந்துகரை யேறுநெறி யுரைத்தருளு மெனவுரைத்து. (௬௩)

தாளிணைமேல் விழுந்தயருந் தம்பியார் தமைநோக்கி
யாளுடைய தம்பெருமா னருணினைந்து கைதொழுது
கோளில்பர சமயநெறிக் குழியில்விழுந் தறியாது
மூளுமருந் துயருழந்தீ ரெழுந்திரீ ரெனமொழிந்தார் (௬௪)

மற்றவுரை கேட்டலுமே மருணீக்கி யார்தாமும்
உற்றபிணி யுடனடுங்கி யெழுந்துதொழ வுயர்தவத்தோர்
கற்றைவே ணியரருளே காணுமிது கழலடைந்தோர்
பற்றறுப்பார் தமைப்பணிந்து பணிசெய்வீ ரெனப்பணித்தார் (௬௫)

என்றபொழு தவரருளை யெதிரேற்றுக் கொண்டிறைஞ்ச
நின்றதபோ தனியாரு நின்மலன்பே ரருணினைந்து

---

(௬௨) வயிறு அகம் சுலவி கனலும் - வயிற்றினுள்ளே சுற்றி எரியும். (௬௩) சூலைக்கு இடைந்து அடைந்தேன் - சூலைநோயால் வருந்தி உம்மிடம் வந்தேன். (௬௪) கோள் இல் - (பெரியோர்கள்) கொள்ளாத, கோட்பாடில்லாத, உறுதியில்லாத. எழுந்திரீர் - எம்மை வணங்குதலினின்றும் எழுந்திரும், சமணப்படுகுழியினின்றும் எழுந்திரும்.

சென்றுதிரு வீரட்டம் புகுவதற்குத் திருக்கயிலைக்
குன்றுடையார் திருநீற்றை யஞ்செழுத்தோ திக்கொடுத்தார். (சுசு)

திருவாளன் றிருநீறு திலகவதி யாரளிப்பப்
பெருவாழ்வு வந்ததெனப் பெருந்தகையார் பணிந்தேற்றங்
குருவாக வணிந்துதமக் குற்றவிடத் துய்யுநெறி
தருவாராய்த் தம்முன்பு வந்தார்பின் றாம்வந்தார். (சுஎ)

நீறணிந்தா ரகத்திருளு நிறைகங்குற் புறத்திருளு
மாறவருந் திருப்பள்ளி யெழுச்சியினின் மாதவஞ்செய்
சீறடியார் திருவலகுந் திருமெழுக்குந் தோண்டியுங்கொண்
டாறணிந்தார் கோயிலினுள் ளடைந்தவரைக் கொடுபுக்கார். (சுஅ)

திரைக்கெடில வீரட்டா னத்திருந்த செங்கனக
வரைச்சிலையார் பெருங்கோயி றொழுதுவலங் கொண்டிறைஞ்சித்
தரைத்தலத்தின் மிசைவீழ்ந்து தம்பிரான் றிருவருளால்
உரைத்தமிழ்மா லைகள்சாத்து முணர்வுபெற வுணர்ந்துரைப்பார். (சுகூ)

வேறு.

நீற்றானிறை வாகிய மேனியுட னிறையன்புறு சிந்தையி னேசமிக
மாற்றார்புர மாற்றிய வேதியரை மருளும்பிணி மாயை யறுத்திடுவான்
கூற்றாயின வாறு விலக்ககிலீ ரெனநீடிய கோதில் திருப்பதிகம்
போற்றாலுல கேழின் வருந்துயரும் போமாறெதிர் நின்று புகன்றனரால்

---

திருவதிகைவீரட்டானம் - பண் - கொல்லி

திருச்சிற்றம்பலம்.

கூற்றாயின வாறுவி லக்ககிலீர் கொடுமைபல செய்தன நானறியேன்
ஏற்றாயடிக் கேயிர வும்பக லும்பிரியா துவணங்குவ னெப்பொழுதுந்
தோற்றாதென் வயிற்றி னகம்படியே குடரோடு துடக்கி முடக்கியிட
வாற்றேனடி யேனதி கைக்கெடில வீரட்டா னத்துறை யம்மானே

போர்த்தாயங்கோ ரானையினீ ருரிதோல் புறங்காடரங் காநட மாடவல்லா
யார்த்தா னரக்கன் றனைமால் வரைக்கீ ழடர்த்திட் டருள்செய் தவைகருதாய்
வேர்த்தும் புரண்டும் விழுந்தும் மெழுந்தா லென்வேதனை யான விலக்கியிடா
யார்த்தார்புனல் சூழதி கைக்கெடில வீரட்டா னத்துறை யம்மானே.

திருச்சிற்றம்பலம்

---

(சுஎ) உற்ற துன்பம் நேரிட்ட தம் முன்பு வந்தார் - திலகவதியார். (சுகூ) வரைச்சிலையார் - மேருவில்லை ஏந்தியசிவபெருமான். (எ0) மாற்றார்புரமாற்றிய வேதியரை - பகைவர்களது திரிபுரங்களையும் எரித்த வீரட்டேசரை. போற்றால் - துதியால். திருநாவுக்கரசுசுவாமிகள் திருவதிகைக்கு வந்ததும், சமண சமயத்தினின்றும் நீங்கியதும், பின்னைவாய்ப்ப பதிகங்களைப் பாடியதும் மண்ணுலகமும், மற்றையவுலகங்களும் உண்மை உணர்ந்துய்யும் பொருட்டே என்பார் "உலகேழின் வருந்துயரும் போமாறு" என்றார். "உலகேழ்" என்றமையான் சொல்வேந்தர் சைவசமயத்துக்கன்றி, அதன் அங்கங்களாய மற்றைய சமயங்கட்கும் மாபெருங்குரவராம் மாண்புடையார் என்பது இனிது பெறப்படுகின்றது.

மன்னும்பதி கம்மது பாடியபின் வயிறுற்றடு சூலை மறப்பிணிதான்
அந்நின்ற நிலைக்க ணகன்றிட லும்மடியேனுயி ரோடரு டந்ததெனச்
செந்நின்ற பரம்பொரு ளானவர்தந் திருவாரருள் பெற்ற சிறப்புடையோர்
முன்னின்ற தெருட்சி மருட்சியினான் முதல்வன்கரு ணைக்கடன் மூழ்கினரே

அங்கங்க ளடங்கவு ரோமமெலா மடையப்புள கங்கண் முகிழ்த்தலரப்
பொங்கும்புனல் கண்கள் பொழிந்திழியப் புவிமீது விழுந்து புரண்டயர்வார்
இங்கென்செய லுற்ற பிழைப்பதனா லேலாத பெருந்திட ரேறிடநின் [வார்.
றங்குங்கரு ணைப்பெரு வெள்ளமிடத் தகுமோவென வின்னன தாமொழி

பொய்வாய்மை பெருக்கிய புன்சமயப் பொறியிற்சம ணீசர்புறத்து றையாம், அவ்வாழ்குழி யின்கண் விழுந்தெழுமா றறியாது மயங்கி யவம்புரி வேன், மைவாச நறுங்குழன் மாமலையாண் மணவாளன் மலர்க்கழல் வந்த டையும், இவ்வாழ்வு பெறத்தரு சூலையினுக் கெதிர்செய்குறை யென்கொ லெனத்தொழுவார் (எங)

மேவுற்றவிவ் வேலையி னீடியசீர் வீரட்ட மமர்ந்த பிரானருளாற், பாவுற் றலர் செந்தமி ழின்சொல்வளப் பதிகத்தொடை பாடிய பான்மையினால், நாவுக்கர சென்றுல கேழினுநின் னன்னாம நயப்புற மன்னுகவென், றியாவர்க்கு மியப்புற மஞ்சுறைவா னிடையேயொரு வாய்மை யெழுந்ததுவே.

இத்தன்மை நிகழ்ந்துழி நாவின்மொழிக் கிறையாகிய வன்பரு மிந்நெடுநாட்
சித்தந்திகழ் தீவினை யேனடையுந் திருவோவிது வென்று தெருண்டறியா
அத்தன்மைய னாயிரா வணனுக் கருளுங்கரு ணைத்திற மானவதன் [வே
மெய்த்தன்மை யறிந்து துதிப்பதுவே மேல்கொண்டு வணங்கினர் மெய்யுற

பரசுங்கரு ணைப்பெரி யோனருளப் பரிபுன் றலையோர்நெறி பாழ்படவந்
தரசிங்கரு ளைப்பெற் றுலகுய்யவெனு மடியார்புடை சூழ்தி கைப்பதிதான
முரசம்படகந் துடி தண்ணுமையாழ் முழவங்கிளை துந்துபி கண்டையுட
னிரைசங்கொலி யெங்கு முழங்குதலா னெடுமாகட லென்ன நிறைந்துளதே

மையற்றுறை யேறி மகிழ்ந்தலர்சீர் வாகீசர் மனத்தொடு வாய்மையுடன்
மெய்யுற்ற திருப்பணி செய்பவராய் விரவுஞ்சிவ சின்னம் விளங்கிடவே

(எ௧) தெருட்சி மருட்சியினான் - தெளிந்தமயக்கத்தால் (ஆனந்தபரவசமாதல்) (எ௨) திடர் - மேடு. இடர் - பாசம். (எ௩) எதிர் செய்குறை - பிரதியுபகாரம். சூலைநோய் திருவருளைப்பெறச் செய்தமையால் அதனை அருள்வடிவென்று கருதித்தொழுதனர் என்க. (எ௪) மஞ்சு உறை வான் இடையே ஒருவாய்மை - மேகங்கள் வாழும் ஆகாயத்தினின்றும் ஒரு அசரீரி. (எ௫) நாவின்மொழிக்கு இறைவர் ஆகிய - நாவுக்கரசராகிய. "மெய்த்தன்மை அறிந்து துதிப்பதுவே" என்றதனால் இராவணனைப் பத்தாவது திருப்பாடலில் வைத்துப்பாடினமை இனிது விளங்குகின்றது. (எ௬) பரசும் கருணை பெரியோன் - யாவரும் போற்றும் சிவபிரான். பரிபுன்றலையோர் நெறி - சமணசமயம். முழவம் - மத்தளம். கிளை - புல்லாங்குழல். கண்டை - கண்டாமணி.

யெயதுற்ற தியான மருவுணாவு மீறின்றி யெழுந்திரு வாசகமுங்
கையிறறிக ழும்முழை வாரமுடன் சைகெகொண்டு கசிந்து கலந்தனரே.

மெய்ம்மைப்பணி செய்த விருப்பதனல் விண்ணேர்தனி நாயக ஞர்கழலிற்
றம்மிச்சை நிரம்ப வரம்பெறுமத் தன்மைப்பதி மேவிய தாபதியார் [ருளா
பொய்மைச்சம யப்பிணி விட்டவர்முன் போதும்பிணி விட்டரு ளிப்பொ
வெம்மைப்பணி கொள்கரு ணைத்திறமிங் கியார்பெற்றன ரென்னவிறைஞ்சி
னரே

வேறு.

இன்ன தன்மையி லிவர்சிவ நெறியினை யெய்தி
மன்னு பேரருள் பெற்றிடா நீங்கிய வண்ணம்
பன்னு தொன்மையிற் பாடலி புத்திர நகரிற்
புன்மை யேபுரி யமணர்தாம் கேட்டது பொருராய். (எகூ)

தரும சேனர்க்கு வந்தவத் தடுப்பருஞ் சூலை
யொருவ ராலுமிங் கொழிந்திடா மையினவ ருயப்போய்ப்
பெருகு சைவராய்ப் பெயர்ந்துதம் பிணியொழிந் துய்ந்தார்
மருவு நம்பெருஞ் சமயம்வீழ்ந் ததுவென மருள்வார் (அ0)

மலையும் பல்சம யங்களும் வென்றுயர்த் தவரால்
நிலையும் பெற்றவிந் நெறியினி யழிந்ததென் றழுங்கிக்
கொலையும் பொய்மையு மிலமென்று கொடுந்தொழில் புரிவோர்
தலையும் பீலியுந் தாழவந் தொருசிறை சார்ந்தார் (அக)

இவ்வ கைப்பல அமணராகி யருட னீண்டி
வெவ்வ கைத்திறப் பறிந்திடில் வேந்தனும் வெகுண்டு
சைவ னாகிநம் விருத்தியை யவிக்குமற் றினியென்
செய்வ தென்னென வஞ்சனை தெரிந்துசிந் திப்பார் (அ௨)

தவ்வை சைவத்து நிற்றலிற் றருமசே னருந்தாம்
பொய்வ குத்ததோர் சூலைதீர்ந் திலதெனப் போயிங்
கெவ்வ மாசவந் தெய்திநஞ் சமயலங் கனமுந்
தெய்வ நிந்தையுஞ் செய்தன னெனச்சொலத் தெளிந்தார் (அ௩)

சொன்ன வண்ணமே செய்வது துணிந்தது துன்மதியோர்
முன்ன காஞ்சென்று முறைப்படு வோமென முயன்றே

(எஅ) தாபதியார் - திலகவதியார். (அ௨) அருகிரிபயா [illegible] உபயபாராயிருா. (பொய்யை மெய்போல [illegible]) (அக) தவ்வை - தமக்கையாகிய திலகவதியார். ([illegible] வந்து எய்தி - குதாக வந்திருந்து ([illegible]) லங்கனம் - தாண்டுதல், விடுதல் (சமண சமயத்தை விட்டு [illegible] விரோதித்தல்).

யின்ன தன்மையி லிருட்குழாஞ் செல்வதுபோல
மன்ன னாகிய பல்லவ னகரில்வந் தணைந்தார். (அச)

உடையொ ழிந்தொரு பேச்சிடை யின்றிநின் றுண்போர்
கடைய ணைந்தவன் வாயில்கா வலருக்கு நாங்கள்
அடைய வந்தமை யரசனுக் கறிவியு மென்ன
இடைய றிந்துபுக் கவருந்த மிறைவனுக் கிசைத்தார். (அரு)

வேறு.

அடிகண்மா ரெல்லாரு மாகுலமாய் மிகவழிந்து
கொடிநுடங்கு திருவாயிற் புறத்தணைந்தா ரெனக்கூற
வடிநெடுவேன் மன்னவனு மற்றவர்சார் பாதலினாற்
கடிதணைவா னவர்க்குற்ற தென்கொலெனக் கவன்றுரைத்தான் (அசு)

கடைகாவ லுடையார்கள் புகுதவிடக் காவலன்பால்
நடையாடுந் தொழிலுடையார் நண்ணித்தா மெண்ணியவா
றுடையாரா கியதரும சேனர்பிணி யுற்றாராய்ச்
சடையானுக் காளாயுன் சமயமழித் தாரென்றார். (அஎ)

விரையலங்கற் பல்லவனு மதுகேட்டு வெகுண்டெழுந்து
புரையுடைய மனத்தினனாய்ப் போவதற்குப் பொய்ப்பிணிகொண்
டுரைசிறந்த சமயத்தை யழித்தொழியப் பெறுவதே
கரையிற[illegible] கென்செய்வ தெனக்கனன்றான் (அஅ)

தலைநெறியா கியசமயந் தன்னையழித் துன்னுடைய
நிலைநின்ற தொல்வரம்பி னெறியழித்த பொறியிலியை
அலைபுரிவா யெனப்பாவி வாயாலஞ் சாதுரைத்தார்
கொலைபுரியா நிலைகொண்டு பொய்யொழுகு மமண்குண்டர் (அகூ)

அருள்கொண்ட வுணர்வின்றி நெறிகோடி யறிவென்று
மருள்கொண்ட மன்னவனு மந்திரிக ளமைநோக்கித்
தெருள்கொண்டா ரிவர்சொன்ன தீயோனைச் செறுவதற்குப்
பொருள்கொண்டு விடாதென்பாற் கொடுவாரு மெனப்புகன்றான் (கூ0)

---

(அச) [illegible] - புல்லறிவாளராகிய சமணர்கள். [illegible] (அசு) அடிகண்மார் - சமணமுனிவர்கள். [illegible] - அசைநிலை. (அஎ) நடையாடுந் தொழில் உடையார் - நடக்குந் தொழிலையுடைய சமணர்கள் (நடைப்பிணங்கள்). (அஅ) விரை அலங்கல் - வாசனை வீசும் ஆத்திமாலையணிந்த. புரை - மாசு. கனன்றான் - கோபித்தான். (அகூ) பொறியிலியை - ஞானமில்லாத, தருமசேனரை. அலைபுரிவாய் - வருத்துவாய். பாவி வாயால என்றும் பாடம். (கூ0) நெறிகோடி - முறைதவறி. செறுவதற்கு - தண்டிப்பதற்கு. பொருள் கொண்டு என்பதற்கு அவனிடத்தில் கைப்பொருள் வாங்கி என்றும், அவனை ஒருபொருளாக மதித்து என்றும் அமையும். வழிச்செலவுக்காக [illegible] பொருள் கொண்டு என்பாருமுளர்.

அரசனது பணிதலைநின் றமைச்சர்களு மந்நிலையே
முரசதிருந் தானையொடு முன்சென்று முகில்சூழ்ந்து
விரைசெறியுஞ் சோலைசூழ் திருவதிகை தனைமேவிப்
பரசமயப் பற்றறுத்த பான்மையினார் பாற்சென்றார். (கக)

சென்றணைந்த வமைச்சருடன் சேனைவீ ரருஞ்சூழ்ந்து
மின்றயங்கு புரிவேணி வேதியனா ரடியவரை
யின்றுநுமை யரசனழைத் தெமைவிடுத்தான் போதுமென
நின்றவரை நேர்நோக்கி நிறைதவத்தோ ருரைசெய்வார். (கஉ)

நாமார்க்குங் குடியல்லோ மென்றெடுத்து நான்மறையின்
கோமானை நதியினுடன் குளிர்மதிவாழ் சடையானைத்
தேமாலைச் செந்தமிழின் செழுந்திருத்தாண் டகம்பாடி
யாமாறு நீரழைக்கு மடைவிலமென் றருள்செய்தார் (கங)

---

**திருமறுமாற்றத்திருத்தாண்டகம்**

திருச்சிற்றம்பலம்

நாமார்க்குங்குடியல்லோநமனையஞ்சோநரகத்திலிடர்ப்படோநடலையில் லோம், ஏமாப்போம்பிணியறியோம்பணிவோமல்லோமின்பமேயெந்நாளுந் துன்பமில்லை, தாமார்க்குங் குடியல்லாத்தன்மையானசங்கரனற்சங்கவெண் குழையோர்காதிற், கோமாற்கேநாமென்றுமீளாவாளாய்க்கொய்ம்மலர்ச்சே வடியிணையேகுறுகினோமே

நாவாரநம்பனையேபாடப்பெற்றோநாணற்றார்நள்ளாமேவிள்ளப்பெற்றோம், ஆவாவென்றெனையாளாவானமாநாதனையுமொழிமாற்கறிவரியவனையாயினா ட, தேவாதிதேவனைச்சிவனையெனைச்சிந்தைசேர்ந்திருந்தான்றென்றிசைக்கோனன் றேவந்து, கோவாடிக்குற்றேவல்செய்கென்றாலுங்குணமாகக்கொள்ளோ மெண்குணத்துளோமே

திருச்சிற்றம்பலம்

---

ஆண்டவர சருள்செய்யக் கேட்டவரு மடிவணங்கி
வேண்டியவாக் கொண்டேக விடையுகைத்தார் திருத்தொண்டர்
ஈண்டுவரும் வினைகளுக்கெம் பிரானுளனென் றிசைந்திருந்தார்
மூண்டசினப் போர்மன்னன் முன்னணைந்தங் கறிவித்தார் (கச)

பல்லவனு மதுகேட்டுப் பாங்கிருந்த பாயுடுக்கை
வல்லமணர் தமைநோக்கி மற்றவனைச் செய்வதினிச்
சொல்லுமென வறந்துறந்து தமக்குறுதி யறியாத
புல்லறிவோ ரஞ்சாது நீற்றறையி லிடப்புகன்றார் (கரு)

அருகணைந்தார் தமைநோக்கி யவ்வண்ணஞ் செய்கவெனப்
பெருகுசினக் கொடுங்கோலான் மொழிந்திடலும் பெருந்தகையை

(கக) முரசதிருந் தானையொடு - முரசொலித்தியம் முழங்கும் சேனைகளோடு. பரசமயப் பற்றறுத்த பான்மையினார்பால் - திருநாவுக்கரசு சுவாமிகளிடம்.

யுருகுபெருந் தழல்வெம்மை நீற்றறையி னுள்ளிருந்தித்
திருகுகருந் தாட்கொளுவிச சேமங்கள் செய்தமைத்தார். (கசு)

ஆண்டவர சதனகத்து ளணைந்தபொழு தம்பலத்துத்
தாண்டவமுன் புரிந்தருளுந் தாணிழலைத் தலைக்கொண்டே
யீண்டுவருந் துயருளதோ வீசனடி யார்க்கென்று
மூண்டமன நேர்நோக்கி முதல்வனையே தொழுதிருந்தார். (கஎ)

வெய்யநீற் றறையதுதான் வீங்கிளவே னிற்பருவந்
தைவருதண் டென்றலணை தண்கழுநீர்த் தடம்போன்று
மொய்யொளிவெண் ணிலவலர்ந்து முரன்றயா ழொலியினதா
யையர்திருவடிநீழ லருளாகிக் குளிர்ந்ததே (கஅ)

---

### தனித்திருக்குறுந் தொகை.

திருச்சிற்றம்பலம்

மாசில்வீணையுமாலைமதியமும
வீசுதென்றலுமவீங்கிளவேனிலு
மூசுவண்டறைபொய்கையும்போன்றதே
யீசனெந்தையிணையடிநீழலே

விறகிற்றீயினின்பாலிற்படுநெய்போன்
மறையநின்றுளன்மாமணிச்சோதியான்
உறவுக்கோனட்டுணர்வுகயிற்றினன்
முறுகவாங்கிக்கடையமுன்னிற்குமே

திருச்சிற்றம்பலம்

---

வேறு

மாசினமதி நீடுபுனன் மன்னியவளா சென்னியணைப
பேசவினி யானையுல காளுடைய பிஞஞகனை
யீசனையெம் பெருமானை யெவ்வுயிருந தருவானை
யாசையிலா ராவமுதை யடிவணங்கி யினிதிருந்தார (ககூ)

ஒரெழுநாள் கழிந்ததற்பி னுணாவிலம ணரையழைததுப்
பாருமினி நீற்றறையை யெனவுரைததான் பல்லவனும
காரிருணட குழாமபோலு முருவுடைய காரமணா
தேருநிலை யிலலாதாா நீறறறையைத திறநதாாகள (உ௦)

ஆனநத வெளளததி னிடைமூழ்கி யமபலவா
தேனுநது மலர்ப்பாதத் தமுதுண்டு தெளிவெயதி
யூனநதா னிலராகி யுவநதிருநதாா தமமைககண்
மனநதங் கியதிலதா மென்னவதி சயமெனறா (உக)

---

(கஎ) திருகு கருமதாள - முறுககாயவுளள (கழலுந தனமையுடைய) இருமபு
தாள.

அதிசயமன் றிதுமுன்னை யமண்சமய சாதகத்தால்
இதுசெய்து பிழைத்திருந்தா னெனவேந்தற் குரைசெய்து
மதிசெய்வ தினிக்கொடிய வல்விடமூட் டுவதெனவே
முதிரவரும் பாதகத்தோர் முடைவாயான் மொழிந்தார்கள் (௧0௨)

ஆங்கதுகேட் டலுங்கொடிய வமண்சார்பாற் கெடுமன்னன்
ஓங்குபெரு மையலினா னஞ்சூட்டு மெனவுரைப்பத்
தேங்காதார் திருநாவுக் கரசரையத் தீயவிடப்
பாங்குடைய பாலடிசி லமுதுசெயப் பண்ணினார் (௧0௩)

நஞ்சமமு தாமெங்க ணாதனடி யார்க்கென்று
வஞ்சமிகு நெஞ்சுடையார் வஞ்சனையாம் படியறிந்தே
செஞ்சடையார் சீர்விளங்குந் திறலுடையார் தீவிடத்தால்
வெஞ்சமண ரிடுவித்த பாலடிசின் மிசைந்திருந்தார் (௧0௪)

பொடியார்க்குந் திருமேனிப் புனிதர்க்குப் புவனங்கண்
முடிவாக்குந் துயர்நீங்க முன்னைவிட மமுதானாற்
படியார்க்கு மறிவரிய பசுபதியார் தம்முடைய
அடியார்க்கு நஞ்சமுத மாவதுதா னற்புதமோ (௧0௫)

அவ்விடத்தை யாண்டவர சமுதுசெய்து முன்னிருப்ப
வெவ்விடமு மமுதாயிற் றெனவமணர் வெருக்கொண்டே
யிவ்விடத்தி லிவன்பிழைக்கி லெமக்கெல்லா மிறுதியெனத்
தெவ்விடத்துச் செயல்புரியுங் காவலற்குச் செப்புவார் (௧0௬)

நஞ்சுகலந் தூட்டிடவு நஞ்சமயத் தினில்விடந்தீர்
தஞ்சமுடை மந்திரத்தாற் சாதியா வகைதடுத்தான்
எஞ்சுமவகை யவற்கிலதே லெம்முயிரு நின்முறையுந்
துஞ்சுமது திடமென்றார் சூழ்வினையின் றுறைநின்றார் (௧0௭)

மற்றவர்தம் மொழிகேட்டு மதிகெட்ட மன்னவனுஞ்
செற்றவனை யினிக்கடியுந் திறமெவ்வா றெனச்செப்ப
உற்றவரு மந்திரசா தகநாங்க ளொழித்திடநின்
கொற்றவயக் களிற்றெதிரே விடுவதெனக் கூறினார் (௧0௮)

மாபாவிக் கடையமணர் வாகீசத் திருவடியாங்
காபாலி யடியவர்பாற் கடக்களிற்றை விடுகென்னப்
பூபாலர் செயன்மேற்கொள் புலைத்தொழிலோ னவர்தம்மேற்
கோபாதி சயமான கொலைக்களிற்றை விடச்சொன்னான். (௧0௯)

(௱உ) முடைவாயால் - நாற்றவாயால். (௱௩) தேங்காதார் (சொற்றொழில் புரிய) மயங்காதவர்களாகிய சமணர்கள். (௱௫) முன்னைவிடம் - பாற்கடல் கடைந்த காலத்தில் எழுந்த ஆலகாலம். (௱௬) தெவ்விடத்து - பகைவர்களிடத்து. (௱௭) சாதியாவகை - சாவாதபடி. (௱௯) பூபாலர் - அரசர்.

கூடத்தைக் குத்தியொரு குன்றமெனப் புறப்பட்டு
மாடத்தை மறித்திட்டு மண்டபங்க ளெடுத்தெற்றித்
தாடத்திற் பரிக்காரர் தலையிடறிக் கடக்களிற்றின்
வேடத்தால் வருங்கூற்றின் மிக்கதொரு விறல்வேழம் (கக0)

வேறு.

பாசத்தொடை நிகளத்தொடர் பறியத்தறி முறிய
மீசுற்றிய பறவைக்குலம் வெருவத்துணி விலகா
ஊசற்கர மெதிர்சுற்றிட வுறறிப்பரி யுழுரு
வாசக்கட மழைமுற்பட மதவெற்பெதிர் வருமால். (ககக)

இடியுற்றெழு மொலியிற்றிசை யிபமுட்கிட வடியிற்
படிபுக்குற நெளியப்பட பவனக்கதி விசையிற்
கடிதுற்றடு செயலிற்கிளர் கடலிற்படு கடையின்
முடிவிற்கன லெனமுற்சின முடுகிக்கடு கியதே. (ககஉ)

மாடுற்றணை யிவுளிக்குல மறியச்செறி வயிரக்
கோடுற்றிரு பிளவிட்டறு குறைகைக்கொடு முறியச்
சாடுற்றிடு மதிறெற்றிகள் சரியப்புடை யணிசெற்
றூடுற்றகல் வெளியுற்றதவ் வடர்கைக்குல வரையே. (ககங)

பாவகக்கொடு வினைமுற்றிய படிறுற்றடு கொடியோர்
நாவுக்கர செதிர்முற்கொடு நணுகிக்கரு வரைபோல்
ஏவிச்செறு பொருகைக்கரி யினையுய்த்திட வெருளார்
சேவிற்றிகழ் பவர்பொற்கழ றெளிவுற்றனர் பெரியோர் (ககச)

வேறு.

அண்ண லருந்தவ வேந்த ரானைதம் மேல்வரக் கண்டு
விண்ணவர் தமபெருமானை விடையுகந் தேறும் பிரானைச்

(கக0) மறித்திட்டு - அழித்து. எற்றி - எறிந்து, வீசி. தாடத்தில் - அடியெடுத்து வைத்தலால். பரிக்காரர் - முன்னே போகும் குத்துக்கோல்காரர். (ககக) பாசத்தொடை நிகளத்தொடர் பறிய - கால்விற்பூட்டிய கயிறுகளும், சங்கிலிகளும் அறுந்துபோக. மீசுற்றிய - மேலே பறக்கின்ற. ஊசற்கரம் - ஊசல்போல அசையும் துதிக்கை. உறறி - அதிக கோபங்கொண்டு. பரியுழுரு - குதிரைகளைக் கலக்கி. கடம் - மதமாகிய மதவெற்பு - மதத்தையுடைய யானையாகிய மலை (ககஉ) திசை இபம் முட்கிட - திசையானைகள் பயப்படவும். படிபுக்கு - பூமியாழ்ந்து. பட்டபவனக் கதி விசையில் - செல்லும் வாயுவேகத்தில். அடு - கொல்லும் கடையின் முடிவினகனல் - ஊழித்தீ (ககங) இவுளிக்குலம் மறிய - குதிரைக்கூட்டங்கள் அழிய. அறுகுறை - அற்றகுறையை. (ககச) படிறு உற்று அடுகொடியோர் - பொய்யுடைய கொலைசெய்கையாளர்களாகிய சமணர்கள். சேவில் திகழ்பவர் - இடபவாகனத்தில் விளங்குஞ் சிவபிரான்.

சுண்ணவெண் சந்தனச் சாந்து தொடுத்த திருப்பதி கத்தை
மண்ணுல குய்ய வெடுத்து மகிழ்வுட னேபாடு கின்றார். (௧௧௫)

திருக்கெடிலவீரட்டானம் - பண் - காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

சுண்ணவெண்சந்தனச்சாந்துஞ்சுடர்த்திங்கட்சூளாமணியும்
வண்ணவுரிவையுடையும்வளரும்பவளநிறமு
மண்ணலரண்முரணேறுமகலம்வளாயவரவுந்
திண்ணன்கெடிலப்புனலுமுடையாரொருவர்தமர்நாம்
அஞ்சுவதியாதொன்றுமில்லையஞ்சவருவதுமில்லை

நரம்பெழுகைகள்பிடித்துநங்கைநடுங்கமலையை
யுரங்களெல்லாங்கொண்டெடுத்தானொன்பதுமொன்றுமலற
வரங்கள்கொடுத்தருள்செய்வான்வளாபொழிலவீரட்டஞ்சூழ்ந்து
நிரம்புகெடிலப்புனலுமுடையாரொருவர்தமர்நாம்
அஞ்சுவதியாதொன்றுமில்லையஞ்சவருவதுமில்லை.

திருச்சிற்றம்பலம்.

வஞ்சகர் விட்ட சினப்போர் மதவெங் களிற்றினை நோக்கிச்
செஞ்சடை நீண்முடிக் கூத்தர் தேவர்க்குந் தேவர் பிரானார்
வெஞ்சுடர் மூவிலைச் சூல வீரட்டர் தம்மடி யோநாம்
அஞ்சுவ தில்லையென் றென்றே யருந்தமிழ் பாடி யறைந்தார் (௧௧௬)

தண்டமிழ் மாலைகள் பாடித் தம்பெரு மான்சர ணாகக்
கொண்ட கருத்தி லிருந்து குலாவிய வன்புறு கொள்கைத்
தொண்டரை முன்வல மாகச் சூழ்ந்தெதிர் தாழ்ந்து நிலத்தில்
எண்டிசை யோர்களுங் காண விறைஞ்சி யெழுந்தது வேழம் (௧௧௭)

ஆண்ட வரசை வணங்கி யஞ்சியவ் வேழம் பெயாத
தூண்டிய மேன்மறப் பாகர் தொடக்கி யடர்த்துத் திரித்து
மீண்டு மதனை யவர்மேன் மிறைசெய்து காட்டிட வீசி
ஈண்டவா தங்களை யேகொன் றமணர்மே லோடிற் றெதிர்ந்தே (௧௧௮)

ஓடி யருகர்க ளம்மை யுழறி மிதித்துப் பிளந்து
நாடிப் பலரையுங் கொன்று நகரங் கலங்கி மறுக
நீடிய வேலை கலக்கு நெடுமந் தரகிரி போல
ஆடியல் யானையம் மன்னற் காகுல மாக்கிய தன்றே. (௧௧௯)

யானையின் கையிற் பிழைத்த வவ்வமண் கையர்க ளெல்லா
மான மழிந்து மயங்கி வருந்திய சிந்தைய ராகித்
தானை நிலமன்னன் றாளிற் றனித்தனி வீழ்ந்து புலம்ப
மேன்மை நெறிவிட்ட வேந்தன் வெருண்டினிச் செய்வதெ னென்றான் ()

(௱௧௮) மிறைசெய்து காட்டிட - வருத்தி அவரைக்கொல்ல வேண்டுமென்னுங் குறிப்பைக்காட்ட. (௧௧௯) ஆடு இயல - வெற்றி இலக்கணங்கள் பொருந்திய.

நங்கள் சமயத்தி னின்றே நாடிய முட்டி நிலையால்
எங்க ளெதிரே றழிய யானையா லிவ்வண்ண நின்சீர்
பங்கப் படுத்தவன் போகப் பரிபவந் தீரு முனக்குப்
பொங்கழல் போக வதன்பின் புகையகன் றுலென வென்றார். (கஉக)

அல்லிரு ளன்னவர் கூற வரும்பெரும் பாவத் தவன்றான்
றொல்லைச சமய மழித்துத் துயரம் விளைத்தவன் றன்னைச
சொல்லு மினிச்செய்வ தென்னச் சூழ்ச்சி முடிக்குந் தொழிலோர்
கல்லுடன் பாசம் பிணித்துக் கடலிடைப் பாய்ச்சுவ தென்றார் (கஉஉ)

ஆஙகது கேட்ட வரச னவ்வினை மாக்களை நோக்கித்
தீஙகு புரிநதவன் றன்னைச் சேம முறக்கொண்டு போகிப்
பாஙகொரு கல்லி லணைத்துப் பாசம் பிணித்தோர் படவில்
வீஙகொலி வேலையி லேற்றி வீழ்த்துமி னென்று விடுத்தான் (கஉங)

அவ்வினை செயதிடப் போக்கு மவருடன் போயரு கந்த
வெவ்வினை யாளருஞ் சென்று மேவிட நாவுக் கரசர்
செவ்விய தந்திரு வுள்ளஞ் சிறப்ப வவருடன் சென்றார்
பவவததின் மனனவன் சொன்ன படிமுடித் தாரப் பதகா (கஉச)

அபபரி சவவினை முற்றி யவரகன் றேகிய பின்னர்
ஒபபரு மாகடல் புகக வுறைப்புடை மெய்த்தொண்டா தாமும
எப்பரி சாயினு மாக வேததுவ னெங்தையை யென்று
செப்பிய வணடமிழ் தனனுற் சிவனஞ் செழுத்துந் துதிப்பாா (கஉரு)

வேறு.

சொற்றுணை வேதிய னென்னுந் தூய்மொழி
நறறமிழ் மாலையா நமசசி வாயவென்
றறறமுன் காக்குமஞ் செழுத்தை யன்பொடு
பற்றிய வுணாவினுற பதிகம் பாடினா (கஉசு)

---

நமச்சிவாயத்திருப்பதிகம் - பண் - காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

சொற்றுணைவேதியன்சோதிவானவன்
பொற்றுணைதிருந்தடிபொருந்தக்கைதொழுக
கற்றுணைப்பூட்டியோர்கடலிற்பாய்சசினும
நற்றுணையாவதுநமச்சிவாயவே

(கஉக) முட்டி நிலை - விடம, கொடுநோய முதலியன துனபபபடுததா வணணம
நடுததல எதி ரேறு அழிய - யானையை அவனமேல ஏவுதல கெட. போக - ஒழிய,
இறநதால.

*மாப்பிணைதழுவியமாதொர்பாகத்தன்*
*பூப்பிணைதிருந்தடிபொருந்தக்கைதொழ*
*நாப்பிணைதழுவியநமச்சிவாயப்பத*
*தேத்தவல்லார்தமக்கிடுக்கணில்லையே.*

திருச்சிற்றம்பலம்.

---

பெருகிய வன்பினர் பிடித்த பெற்றியால்
அருமல ரோன்முத லமரர் வாழ்த்துதற்
கரியவஞ் செழுத்தையு மரசு போற்றிடக்
கருநெடுங் கடலினுட் கன்மி தந்ததே. (கஉஎ)

அப்பெருங் கல்லுமங் கரசு மேல்கொளத்
தெப்பமாய் மிதத்தலிற் செறிந்த பாசமுந்
தப்பிய ததன்மிசை யிருந்த தாவில்சீர்
மெய்ப்பெருந் தொண்டனார் விளங்கித் தோன்றினார் (கஉஅ)

இருவினைப் பாசமு மலக்க லார்த்தலின்
வருபவக் கடலில்வீழ் மாக்க ளேறிட
அருளுமெய் யஞ்செழுத் தரசை யிக்கடல்
ஒருகன்மே லேற்றிட லுரைக்க வேண்டுமோ (கஉகூ)

அருணையந் தஞ்செழுத் தேத்தப் பெற்றவக்
கருணைநா வரசினைத் திரைக்க ரங்களாற்
றெருணெறி நீர்மையிற் சிரத்திற் றாங்கிட
வருணனுஞ் செய்தனன் முன்பு மாதவம் (கங0)

வாய்ந்தசீ வருணனே வாக்கின் மன்னனைச்
சேர்ந்தடை கருங்கலே சிவிகை யாயிட
ஏந்திய தொண்டெழுந் தருளு வித்தனன்
பூந்திருப் பாதிரிப் புலியூர்ப் பாங்கரில் (கஙக)

அந்தநற் பதியினி லணைந்த வன்பரை
மெய்ந்தவக் குழாமெலா மேவி யார்த்தெழ
எத்திசை யினுமர வென்று மோசைபோ
றந்தரப் பெருங்கட றூறு மார்த்ததே (கஙஉ)

தொழுந்தகை நாவினுக் கரசுந் தொண்டர்முன்
செழுந்திருப் பாதிரிப் புலியூர்த் திங்கள்வெண்
கொழுந்தணி சடையரைக் கும்பிட் டன்புற
விழுந்தெழுந் தருணெறி விளங்கப் பாடுவார் (கஙங)

---

(கஉகூ) மலக்கல் - ஆணவக்கல்

வேறு

ஈன்றாளு மாயெனக் கெந்தையு மாகி யெனவெடுத்துத்
தோன்றாத் துணையா யிருந்தனன் றன்னடி யோங்கட்கென்று
வான்றாழ் புனற்கங்கை வாழ்சடை யானைமற் றெவ்வுயிர்க்குஞ்
சான்றா மொருவனைத் தண்டமிழ் மாலைகள் சாத்தினரே. (௧௩௪)

---

## திருப்பாதிரிப்புலியூர் - திருவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

ஈன்றாளுமாயெனக்கெந்தையுமாயுடன்றோன்றினராய்
மூன்றாயுலகம்படைத்துகந்தான்மனத்துள்ளிருக்க
வேன்றானிமையவர்க்கன்பன்றிருப்பாதிரிப்புலியூர்த்
தோன்றாத்துணையாயிருந்தனன்றன்னடியோங்களுக்கே

திருந்தாவமணர்தந்தீநெறிப்பட்டுத்திகைத்துமுத்தி
தருந்தாளிணைக்கேசரணம்புகுந்தேன்வரையெடுத்த
பொருந்தாவரக்கனுடனெரித்தாய்பாதிரிப்புலியூர்
இருந்தாயடியேனினிப்பிறவாமல்வந்தேன்றுகொள்ளே

திருச்சிற்றம்பலம்.

---

மற்று மினையன வண்டமிழ் மாலைகள் பாடிவைகி
வெற்றி மழவிடை வீரட்டர் பாத மிகநினைவால்
உற்றதொர் காதலி னங்குநின் றேகியொன் னார்புரங்கள்
செற்றவர் வாழுந் திருவதி கைப்பதி சென்றடைவார் (௧௩௫)

தேவர் பிரான்றிரு மாணி குழியுந் தினைநகரு
மேவினர் சென்று விரும்பிய சொன்மலர் கொண்டிறைஞ்சிப்
பூவலர் சோலை மணமடி புல்லப் பொருண்மொழியின்
காவலர் செல்வத் திருக்கெடி லத்தைக் கடந்தணைந்தார் (௧௩௬)

வெஞ்சமண் குண்டர்கள் செய்வித்த தீய மிறைகளெல்லாம்
எஞ்சவென் றேறிய வின்றமி ழீச ரெழுந்தருள
மஞ்சிவர் மாடத் திருவதி கைப்பதி வாணரெல்லாந்
தஞ்செயல் பொங்கத் தழங்கொலி மங்கலஞ் சாற்றலுற்றார் (௧௩௭)

மணிநெடுந் தோரணம் வண்குலைப் பூக மடற்கதலி
இணையுற நாட்டி யெழுநிலைக் கோபுரந் தெற்றியெங்குந்
தணிவில் பெருகொளித் தாமங்க ணாற்றிச்செஞ் சாந்துநீவி
யணிநகர் முன்னை யணிமையி லணிசெய் தலங்கரித்தார் (௧௩௮)

மன்னிய வன்பின் வளநகர் மாந்தர் வயங்கிழையார்
இன்னிய நாதமு மேழிசை யோசையு மெங்கும்விம்மப்

---

(௧௩௮) பூகம் - கமுகமரங்களையும்.

பொன்னியல் சுண்ணமும் பூவும் பொரிகளுந் தூவியெங்குந்
தொன்னக ரின்புறஞ் சூழ்ந்தெதிர் கொண்டனர் தொண்டரையே. (கநக)

தூயவெண் ணீறு துதைந்தபொன் மேனியுந் தாழ்வடமு
நாயகன் சேவடி தைவருஞ் சிந்தையு நைந்துருகிப்
பாய்வது போலன்பு நீர்பொழி கண்ணும் பதிகச்செஞ்சொன்
மேயசெவ் வாயு முடையார் புகுந்தனர் வீதியுள்ளே (கச0)

கண்டாரகள் கைதலை மேற்குவித் திந்தக் கருணைகண்டால்
மிண்டாய செய்கை யமண்கையர் தீங்கு விளைக்கச்செற்றம
உண்டா யினவண்ண மெவ்வண்ண மென்றுரைப் பார்கள்பின்னுந்
தொண்டாண்டு கொண்ட பிரானைத் தொழுது துதித்தனரே. (கசக)

இவ்வண்ணம் போல வெனைப்பல மாகக ளியம்பியேத்த
மெய்வண்ண நீற்றொளி மேவுங் குழாங்கள் விரவிச்செல்ல
அவ்வண்ண நண்ணிய வன்பரும் வந்தெய்தி யம்பவளச்
செவ்வண்ணர் கோயிற் றிருவீரட் டானத்தைச சேர்ந்தனரே (கசஉ)

உம்பர்கோனை யுடைய பிரானையுள் புக்கிறைஞ்சி
நம்புறு மன்பி னெய்ப்புறு காதலி னூற்றிளைத்தே
எம்பெரு மானைநா னேழையே னென்பண் டிகழ்ந்ததென்று
தம்பரி வாற்றிருத் தாண்டகச் செந்தமிழ் சாற்றிவாழ்ந்தார் (கசந)

திருவீரட்டானம் - ஏழைத்திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்

வெறிவிரவுகூவிளநற்றொங்கலானைவீரட்டத்தானைவெள்ளேற்றினானைப்
பொறியரவினானைப்புள்ளூர்தியானைப்பொன்னிறத்தினானைப்புகழ்த்தக்கானை
யறிதற்கரியசீரம்மானறன்னையதியரையமங்கையமர்ந்தான்றன்னை
யெறிகெடிலநாடனையிறைவன்றன்னையேழையேனானபண்டிகழ்ந்தவாறே

முலைமறைக்கப்பட்டுநீராடப்பெண்கள்முறைமுறையானந்தெய்வமெ
ன்றுதீண்டித், தலைபறிக்குந்தன்மையர்களாகிநின்றுதவமென்றவஞ்செய்து
தக்கதோரார், மலைமறிக்கச்சென்ற விலங்கைக்கோனை மதனழியச்செற்ற
சேவடியினானை, யிலைமறித்தகொன்றையந்தாரானறன்னையேழையேனான்
பண்டிகழ்ந்தவாறே

திருச்சிற்றம்பலம்

வேறு

அரியயனுக் கரியானை யடியவருக் கெளியானை
விரிபுனல்சூழ் திருவதிகை வீரட்டா னத்தமுதைத்
தெரிவரிய பெருந்தன்மைத் திருநாவுக் கரசுமனம்
பரிவுறுசெந் தமிழ்ப்பாட்டுப் பலபாடிப் பணிசெயுநாள் (கசச)

(கசக) மிண்டாய செய்கை - கொடுந்தொழி லுடைய.

புல்லறிவிற் சமணர்க்காப் பொல்லாங்கு புரிந்தொழுகும்
பலலவனுந் தன்னுடைய பழவினைப்பா சம்பறிய
அல்லலொழிந் தங்கெய்தி யாண்டவர சினைப்பணிந்து
வல்லமணர் தமைநீததது மழவிடையோன் றாளடைந்தான் (கசரு)

வீடறியாச் சமணர்மொழி பொய்யென்று மெய்யுணாந்த
காடவனுந் திருவதிகை நகரின்கட் கண்ணுதற்குப்
பாடலிபுத் திரத்திலமண் பள்ளியொடு பாழிகளுங்
கூடவிடித் துக்கொணர்ந்து குணதரவீச் சரமெடுத்தான் (கசசு)

இந்நாளிற் றிருப்பணிகள் செய்கின்ற வின்தமிழ்க்கு
மன்னுன வாகீசத திருமுனியு மதிச்சடைமேற்
பன்னாக மணிந்தவர்தம் பதிபலவுஞ் சென்றிறைஞ்சிச்
சொன்னமத தமிழ்புனைந்து தொண்டுசெய்வான் றொடர்ந்தெழுவார் ()

திருவதிகைப் பதிமருங்கு திருவெண்ணெய் நல்லூரும்
அருளுதிரு வாமாத்தூர் திருககோவ லூர்முதலா
மருவுதிருப் பதிபிறவும் வணங்கிவளத் தமிழ்பாடிப்
பெருகுவிருப் புடன்விடையார் மகிழ்பெண்ணை கடமணைந்தா. (கசஅ)

காாவளரு மாடஙகள் கலந்தமறை யொலிவளர்க்குஞ்
சீருடையந் தணர்வாழுஞ் செழும்பதியி னகத்தெய்தி
வார்சடையாா மன்னுதிருத தூஙகானை மாடததைப்
பாாபரவுந் திருமுனிவா பணிந்தேத்திப பரவினா. (கசகூ)

புன்னெறியா மமண்சமயத தொடக்குண்டு போநதவுடல்
தனனுடனே யுயிர்வாழத் தரியேனுன் றரிப்பதனுக
கென்னுடைய நாயகநின் னிலசசினையிட் டருளென்று
பன்னுசெழுந தமிழ்மாலை முன்னின்று பாடுவாா (கருய)

பொன்னாநத திருவடிககென் விண்ணப்ப மென்றெடுநது
முன்னாகி யெப்பொருட்கு முடிவாகி நின்றவனைத்
தன்னாகத துமைபாகங கொண்டவனைச் சஙகரனை
நன்னமத திருவிருத்த நலஞ்சிறககப் பாடுதலும (கருக)

---

## திருத்தூங்கானைமாடம் - திருவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

பொன்னார்திருவடிக்கொன்றுண்டுவிண்ணப்பமபோற்றிசெயயு
மென்னாவிகாப்பதற்கிச்சையுண்டேலிருஙகூற்றகல
மின்னாருமூவிலைச்சூலமென்மேற்பொறிமேவுகொண்டற்
றுன்னாகடந்தையுட்டூஙகானைமாடச்சுடர்க்கொழுந்தே

---

(கசசு) காடவனும - பல்லவனும. (சருய) இலசசினை - இடப முததிரையும, சூலமுததிரையும.

கடவுந்திகிரிகடவாதொழியக்கயிலையுற்றான்
படவுந்திருவிரலொன்றுவைத்தாய்பனிமால்வரைபோ
லிடபம்பொறித்தென்னையேன்றுகொள்ளாயிருஞ்சோலைதிங்கள்
தடவுங்கடந்தையுட்டூங்கானைமாடத்தெந்தத்துவனே.

திருச்சிற்றம்பலம்.

---

நீடுதிருத் தூங்கானை மாடத்து நிலவுகின்ற
ஆடகமே ருச்சிலையா னருளாலோர் சிவபூத
மாடொருவ ரறியாமே வாகீசர் திருத்தோளிற்
சேடெயர்மூ விலைச்சூலஞ் சினவிடையி னுடன்சாத்த (௧௫௨)

ஆங்கவர்தந் திருத்தோளி லார்ந்ததிரு விலச்சினையைத்
தாங்கண்டு மனங்களித்துத் தம்பெருமா னருணினைந்து
தூங்கருவி கண்பொழியத் தொழுதுவிழுந் தார்வத்தால்
ஓங்கியசிந் தையராகி யுய்ந்தொழிந்தே னெனவெழுந்தார் (௧௫௩)

தூங்கானை மாடத்துச் சுடர்க்கொழுந்தி னடிபரவிப்
பாங்காகத் திருத்தொண்டு செய்துபயின் றமருநாட்
பூங்கான மணங்கமழும் பொருவிறிரு வரத்துறையும்
தேங்காவின் முகிலுறங்குந் திருமுதுகுன் றமும்பணிந்து (௧௫௪)

வண்டமிழ்மென் மலர்மாலை புனைந்தருளி மருங்குள்ள
தண்டுறைநீர்ப் பதிகளிலுந் தனிவிடையார் மேவியிடங்
கொண்டருளுந் தானங்கள் கும்பிட்டுக் குணதிசைமேற்
புண்டரிகத் தடஞ்சூழ்ந்த நிவாக்கரையே போதுவார் (௧௫௫)

ஆறாத சீர்த்தில்லை யம்பலத்தே யாடுகின்ற
வாறாறு புடைபரக்கு மலர்ச்சடையா ரடிவணங்கி
ஊறாறு முயிராலு முள்ளபயன் கொளநினைந்து
தேனாரு மலர்ச்சோலைத் திருத்தில்லை மருங்கணைந்தார். (௧௫௬)

வேறு

நாவுக் கரசரு மிருவர்க் கரியவர் நடமா டியதிரு வெல்லைப்பால்
மேவித் தலமுற மெய்யிற் றொழுதபின் மேன்மே லெழுதரு விரைவோடுங்
காவிற் களிமயின் மகிழ்வுற் றெதிரெதி ராடக் கடிகமழ் கமலஞ்சூழ்
வாவித் தடமலர் வதனம் பொலிவுறு மருதத் தண்பணை வழிவந்தார் (௧௫௭)

---

(௧௫௩) தூங்கு - (இடையறாது) சொரியும். (௧௫௪) தேன்காவில் முகில் - தேன் பொருந்திய சோலைகளில் மேகங்கள். திருமுதுகுன்றம் - விருத்தாசலம். (௧௫௫) குணதிசை - கீழ்த்திசை. நிவா - நிவா என்னும் ஓர் நதி. (௧௫௬) ஆறாத - நீங்காத. (௧௫௭) இருவர்க்கு - பிரமவிஷ்ணுக்களுக்கு. காவில் - சோலைகளில். கடிகமழ் - வாசனை வீசும்.

முருகிற் செறியிதழ் முளரிப் படுகரின் முதுமே திகள்புது மலர்மேயும்
அருகிற் செறிவன மெனமிக் குயர்கழை யளவிற் பெருகிட வளரிக்குப்
பெருகிப் புடைமுதிர் தரளஞ் சொரிவன பெரியோ ரவர்திருவடிவைக்கண்
டுருகிப் பரிவுறு புனல்கண் பொழிவன வெனமுன் புளவள வயலெங்கும்.

அறிவிற் பெரியவ ரயனெற் பணைவய லவைபிற் படுமவகை யணைகின்றார்
பிறவிப் பவநெறி விடுவீ ரிருவினை பெருகித் தொடர்பிணி யுறுபாசம்
பறிவுற் றிடவணை யுமினென் றிருபுடை பயில்சூழ் சினைமிசை குயிலகூவுஞ்
செறிவிற் பலதரு நிலையிற் பொலிவுறு திருநந தனவன மெதிரகண்டார் ()

அவர்முன் பணிவொடு தொழுதங் கணைவுற வணிகொம் பரின்மிசை யருகே
தவமுன் புரிதலில் வருதொண் டெனுநிலை தலைநின் றுயர்தமி ழிறைஞான
இவர்தந் திருவடி வதுகண் டதிசய மெனவந் தெதிரா கரவென்றேயோராம
சிவமுன் பயின்மொழி பகர்கின் றனவளர் சிறைமென் கிளியொடுசிறுபூவை

அஞ்சொற் றிருமறை யவர்முன் பகர்தலு மவருந் தொழுதுமு னெளிகூரு
நெஞ்சிற் பெருகிய மகிழ்வுங் காதலு நிறையன் பொடுமுறை தடுமாறச்
செஞ்சொற் றிருமறை மொழியந் தணர்பயி றில்லைத திருநக ரெல்லைப்பான்
மஞ்சிற் பொலிகெடு மதில்சூழ் குடதிசை மணிவா யிற்புறம வந்துற்றா ()

அல்லற் பவமற வருளுந தவமுத லடியா ரெதிர்கொள வவரோடு
மல்லற் புனலகமழ் மாடே வாயிலின் வழிபுக வெதிர்தொழு தணைவுற்றார்
கல்வித் துறைபல வருமா மறைமுதல் கரைகண் டுடையவா கழல்பேணுஞ்
செல்வக் குடிநிறை நலவைப் பிடைவளா சிவமே நிலவிய திருவீதி (கசுஉ)

நவமின் சுடர்மணி நெடுமா லையுநறு மலர்மா லையுநிறை திருவீதிப்
புவனங் களின்முத லிமையோர் தடமுடி பொருதுந் தியமணி போகட்டிப்
பவனன் பணிசெய வருணன் புனல்கொடு பணிமா றவுமவை பழுதாமென்
றெவருந தொழுதெழு மடியார் திருவல கிடுவார் குளிர்புனல விடுவார்கள்

மேலம் பரதல நிறையுங் கொடிகளில் விரிவெங் கதிர்நுழை வரிதாகுங்
கோலம் பெருகிய திருவீ தியைமுறை குலவும் பெருமையா பணிவுற்றே
ஞாலந் திகழ்திரு மறையின் பெருகொலி நலமா முனிவாக டுதியோடும
ஓலம் பெருகிய நிலையேழ் கோபுர முறமெய கொடுதொழு துள்புக்கார்

(கருஅ) முருகின செறி இதழ் முளரிபடுகரில - வாசனையும, நெருங்கிய இதழ்களையுமுடைய தாமரைத தடாகங்களிடத்து. முதுமேதிகள - முதிரநத எருமைகள. கழை அளவில - மூங்கில்களின அளவாக. இக்கு - கரும்புகள. (கருகூ) பறிவுறறிட - நீங்குமபடி. சினைமிசை - கிளைகள் மீது. (கசுO) பூவை - நாகண வாயபபறவைகள (கசுக) குடதிசை - மேறகுததிககு. (கசுஉ) மலலல - வளமையுடைய. (கசுங) போகடடி - போகவிடடு. பவனன பணிசெய - வாயுதேவன திருவலகிட. (கசுச) அமபரதலமமேல் - ஆகாயததின மேல.

வளர்பொற் கனமணி திருமா ளிகையினை வலம்வந் தலமரு வரைநில்லா
அளவிற் பெருகிய வார்வத் திடையெழு மன்பின் கடனிறை யுடலெங்கும்
புளகச் செறிநிரை விரவத் திருமலி பொற்கோ புரமது புகுவாமுன் [றூர்
களனிற் பொலிவிட முடையார் நடநவில் கனகப் பொதுவெதிர் கண்ணுற்

நீடுந் திருவுட னிகழும் பெருகொளி நிறையம் பலநினை வுறநேரே
கூடும் படிவரு மன்பா லின்புறு குணமுன் பெறவரு நிலைகூடத்
தேடும் பிரமனு மாலுந் தேவரு முதலாம் யோனிக ளெனிவொன்று
ஆடுங் கழல்புரி யமுதத் திருநட மாரா வகைதொழு தார்கின்றார். (கசுசு)

கையுந் தலைமிசை புனையஞ் சலியன கண்ணும் பொழிமழை யொழியாதே
பெய்யுந் தகையன கரணங் களுமுட னுருகும் பரிவின பேறெய்து
மெய்யுந் தரைமிசை விழுமுன் பெழுதரு மின்றாழ் சடையொடு நின்றாடும
ஐயன் றிருநட மெதிர்கும் பிடுமவ ரார்வம் பெருகுத லளவின்றால் (கசுஎ)

இத்தன் மையர்பல முறையுந் தொழுதெழ வெனறெய தினையென மன்று
அததன றிருவருள பொழியுங கருணையி னருளபெற றிடவரு மானநத [டும
மெயததன் மையினில்வி ருததத திருமொழிபாடிய பினனையு மேனமேலுஞ
சித்தம பெருகிய பரிவா லின்புறு திருநே ரிசைமொழி பகாகினறா ()

வேறு.

பத்தனையப் பாட மாட்டே னென்றுமுன் னெடுத்தப் பண்ணல
அத்தாவுன் னுடல காணபா னடியனேன வநத வாறென்
றித்திரம போற்றி நினறே யின்றமிழ் மாலை பாடிக
கைததிருத தொண்டு செய்யுங காதலிற் பணிந்து போந்தா (கசுகூ)

---

கோயில் - திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்

பத்தனாய்ப்பாடமாட்டேன்பரமனே பரமயோகி
யெத்திறற்பததிசெய்கேனென்னைநீயிகழவேண்டா
முத்தனேமுதல்வாதில்லையம்பலததாடுகின்ற
அத்தாவுன்னுடல்காண்பானடியனேன்வந்தவாறே

மண்ணுண்டமாலவனுமலர்மிசைமன்னினானும்
விண்ணுண்டதிருவுருவம்விரும்பினாகாணமாட்டார
திண்ணுண்டதிருவேம்பககதில்லைசசிற்றம்பலததே
பண்ணுண்டபாடலோடும்பரமநீயாடுமாறே

திருச்சிற்றம்பலம்

---

நீடிய மணியின் சோதி நிறைதிரு முன்றின் மாடு
மாடுயர் கொடிசூழ் பொற்றேர் மாமணி வீதி யுள்ளுங்
கூடிய பணிகள் செய்து கும்பிடுந் தொழில ராகிப்
பாடிய புனித வாக்கின் பணிகளும் பயிலச் செய்வார். (கஎ0)

அருட்பெரு மகிழ்ச்சி பொங்க வன்னம்பா லிக்கு மென்னுந்
திருக்குறுந் தொகைகள் பாடித் திருவுழ வாரங் கொண்டு
பெருத்தெழு காத லோடும் பெருந்திருத் தொண்டு செய்து
விருப்புறு மேனி கண்ணீர் வெண்ணீற்று வண்ட லாட. (௧௭௧)

---

### கோயில் - திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்

அன்னம்பாலிக்குந்தில்லைச் சிற்றம்பலம்
பொன்னம்பாலிக்குமேலுமிப்பூமிசை
யென்னன்பாலிக்குமாறுகொண்டின்புற
வின்னம்பாலிக்குமோவிப்பிறவியே.

மதுரவாய்மொழிமங்கையோர்பங்கினன்
சதுரன்சிற்றம்பலவன்றிருமலை
யதிரவார்த்தெடுத்தான்முடிபத்திற
மிதிகொள்சேவடிசென்றணைந்துய்ம்மினே

திருச்சிற்றம்பலம்.

---

மேவிய பணிகள் செய்து விளங்குநாள் வேட்க ளத்துச்
சேவுயர் கொடியார் தம்மைச் சென்றுமுன் வணங்கிப் பாடிக்
காவியங் கண்டர் மன்னுந் திருக்கழிப் பாலை தன்னி
னாவினுக் கரசர் சென்று நண்ணினார் மண்ணோர் வாழ. (௧௭௨)

வேறு.

சினவிடையே றுகைத்தேறு மணவாள நம்பிகழல் சென்று தாழ்ந்து
வனபவள வாய்திறந்து வானவர்க்குந் தானவனே யென்கின் றாளென்
றனையதிருப் பதிகமுட னன்புறவண் டமிழ்பாடி யங்கு வைகி
நினைவரியார் தமைப்போற்றி நீடுதிருப் புலியூரை நினைந்து மீள்வார். ()

---

### திருக்கழிப்பாலை - பண் - காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

வனபவளவாய்திறந்துவானவர்க்குந்தானவனேயென்கின்றாளாற்
சினபவளத்திரடோணமேற்சேர்ந்திலங்குவெண்ணீற்றனென்கின்றாளா
லனபவளமேகலையோடப்பாலைக்கப்பாலானென்கின்றாளாற்
கனபவளஞ்சிந்துங்கழிப்பாலைச்சேர்வானைக்கண்டாள்கொல்லோ.

அடர்ப்பரிய விராவணனையருவரைக்கீழடர்த்தவனேயென்கின்றாளாற்
சுடர்ப்பெரிய திருமேனிச்சுண்ணவெண்ணீற்றவனேயென்கின்றாளான்

(௧௭௧) மரளிரன்ன சுண்ணத்தோடு நீரலந்து ஒருவா மேலொருவர் தெறித்து வண்டலாட்டயா தல்போல, சுவாமிகள் ஆனந்தக கண்ணீா வெண்ணீற்றைக் கரைத்தொழுகவின "வண்டலாட" என்றார். (௧௭௨) சேவுயர்கொடியார் தம்மை - இடபக் கொடி யுடையசிவபெருமானை. காவியங்கண்டர் - நீலமலர்போலும் நீலகண்டத்தை யுடைய இறைவர்.

மடற்பெரியவாலின்கீழறநால்வர்க்கன் றுரைத்தானென்கின்றாளாற்
கடற்கருவிசூழ்ந்தகழிப்பாலைசசேர்வானைக்கண்டாள்கொல்லோ

திருச்சிற்றம்பலம்.

---

மனைப்படப்பிற் கடற்கொழுந்து வளைசொரியுங் கழிப்பாலை மருங்கு நீங்கி
நனைசினைமென் குளிர்ஞாழற் பொழிலூடு வழிக்கொண்டு நண்ணும போதி
னினைப்பவர்தம் மனங்கோயில் கொண்டருளு மம்பலத்து நிருத்த னுரைத
தினைத்தனையாம் பொழுதுமறந் துய்வனோ வெனப்பாடித் தில்லைசார்ந்தார

---

### கோயில் - திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்.

பனைக்கைமும்மதவேழமுரித்தவன்
நினைப்பவர்மனங்கோயிலாக்கொண்டவன்
அனைத்தும்வேடமாமம்பலக்கூத்தனைத்
தினைத்தனைப்பொழுதும்மறந்துய்வனோ.

ஓங்குமால்வரையேந்தலுற்றான்சிரம்
வீங்கிவிம்முறவூன்றியதாளினான்
தேங்குநீர்வயல்சூழ்தில்லைக்கூத்தனைப்
பாங்கிலாத்தொண்டனேன்மறந்துய்வனோ.

திருசசிற்றமபலம.

---

அரியானை யென்றெடுத்தே யடியவருக் கெளியானை யவர்தஞ் சிந்தை
பிரியாத பெரியதிருத் தாண்டகச்செந் தமிழ்பாடிப் பிறங்கு சோதி
விரியாநின் றெவ்வுலகும் விளங்கியபொன் னமபலத்து மேவி யாடல
புரியாநின றவாதமைப் பணிந்துதமி யூற்பின்னும் போற்றல் செயவார

---

### கோயில் - பெரிய திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்

அரியானையந்தணர்தஞ்சிந்தையானையருமறையினகத்தானையணுவை யார்க்குந், தெரியாததத்துவனைத்தேனைப்பாலைத்திகழொளியைத்தேவர்கட னுகோனைமற்றைக, கரியானைநான்முகனைககனலைக்காற்றைக்கனைகடலைக குலவரையைககலந்துநின்ற, பெரியானைப் பெரும்பற்றப் புலியூரானைப் பேசாதநாளெல்லாம்பிறவாநாளே

காரொளியதிருமேனிச்செங்கண்மாலுங்கடிககமலத்திருந்தயனுங்காணா வண்ணஞ்,சீரொளியதழற்பிழம்பாய்நின்றதொலலைத்திகழொளியைச்சிந்தை தனைமயக்கந்தீர்க்கும, ஏரொளியையிருநிலனும்விசும்புமவிண்ணுமேழுலகுங கடந்தண்டததப் பாலின்ற, பேரொளியைப் பெரும்பற்றப் புலியூரானைப் பேசாதநாளெல்லாம்பிறவாநாளே.

திருசசிற்றம்பலம்

---

(௭௭௪) மனைப்படப்பில கடல சொழுந்து வளை சொரியும - மனைகளின பின்புறத துள்ள தோட்டங்களில சமுத்திரத்தின அலைகள சங்குகளை வீசும. நனைசினை - அரும்பு களையுடைய கிளைகளில. ஞாழலபொழிலூடு - சுரபுன்னைச சோலைவழியாக.

செஞ்சடைக் கற்றைமுற்றத் திளநிலா வெறிக்குமெனுஞ் சிறந்த வாய்மை
யஞ்சொல்வளத் தமிழ்மாலை யதிசயமாம் படிபாடி யன்பு சூழ்ந்த [யுந்
நெஞ்சுருகப் பொழிபுனல்வார் கண்ணிணையும் பரவியசொன் னிறைந்த வா
தஞ்செயலி னொழியாத திருப்பணியு மாறாது சாரு நாளில். (௧௭௪)

### கோயில் - திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்.

செஞ்சடைக்கற்றைமுற்றத்திளநிலாவெறிக்குஞ்சென்னி
நஞ்சடைகண்டனாரைக்காணலாநறவநாறு
மஞ்சடைசோலைத்தில்லைமல்குசிற்றம்பலத்தே
துஞ்சடையிருள்கிழியத்துளங்கெரியாடுமாறே.

மதியிலாவரக்கனோடிமாமலையெடுக்கநோக்கி
நெதியன்றோணெரியவூன்றிநீடிரும்பொழில்கள்சூழ்ந்த
மதியந்தோய்தில்லைதன்னுண்மல்குசிற்றம்பலத்தே
யதிசயம்போலநின்றனலெரியாடுமாறே.

திருச்சிற்றம்பலம்.

கடையுகத்தி லாழியின்மேன் மிதந்ததிருக் கழுமலத்தி னிருந்த செங்கண் [ம்
விடையுகைத்தார் திருவருளால் வெற்பரையன் பாவைதிரு முலைப்பாலோடு
அடையநிறை சிவம்பெருக வளர்ஞானங் குழைத்தூட்ட வமுது செய்த
உடையமறைப் பிள்ளையார் திருவார்த்தை யடியார்க ளுரைப்பக் கேட்டார்.

ஆழிவிட முண்டவரை யம்மைதிரு முலையமுத முண்ட போதே
ஏழிசைவண் டமிழ்மாலை யிவனெம்மா னெனக்காட்டி யியம்ப வல்ல
காழிவரும் பெருந்தகைசீர் கேட்டலுமே யதிசயமாங் காதல் கூர
வாழியவர் மலர்க்கழல்கள் வணங்குதற்கு மனத்தெழுந்த விருப்பு வாய்ப்ப ()

அப்பொழுதே யம்பலத்து ளாடுகின்ற கழல்வணங்கி யருண்முன் பெற்றுப்
பொய்ப்பிறவிப் பிணியோட்டுந் திருவீதி புரண்டுவலங் கொண்டு போந்தே
யெப்புவனங் களுநிறைந்த திருப்பதியி னெல்லையினை யிறைஞ்சி யேத்திச்
செப்பரிய பெருமையினார் திருநாரை யூர்பணிந்து பாடிச் செல்வார் (௧௭௬)

தொண்டர்குழாம் புடைசூழத் தொழுதகரத் தொடுநீறு துதைந்த கோலங்
கண்டவர்தம் மனங்கசிந்து கரைந்துருகுங் கருணைபுறம் பொழிந்து காட்டத்
தெண்டிரைவாய்க் கன்மிதப்பி லுகைத்தேறு திருநாவுக் கரசர் தாமும்
வண்டமிழா லெழுதுமறை மொழிந்தபிரான் றிருப்புகலி மருங்கு சார்ந்தார்.

நீண்டவரை வில்லியார் வெஞ்சூலை மடுத்தருளி நேரே முன்னாள்
ஆண்டவர செழுந்தருளக் கேட்டருளி யாளுடைய பிள்ளை யாருந்

(௧௭௭) ஆழியின்மேல் - சமுத்திரத்தின்மீது. திருக்கழுமலம் - சீகாழி. வெற்பரையன் பாவை - உமையம்மையார். மறைப்பிள்ளையார் - திருஞானசம்பந்தர். (௧௮௰) எழுதுமறை - தமிழ்வேதம். எழுதாமறை - வடமொழிவேதம்.

காண்டகைய பெருவிருப்புக் கைம்மிக்க திருவுள்ளக் கருத்தி னோடு
மூண்டவருண் மனத்தன்பர் புடைசூழ வெழுந்தருளி முன்னே வந்தார்

தொழுதணைவுற் றாண்டவர சன்புகுதத் தொண்டர்குழாத் திடையே சென்று
பழுதில்பெருங் காதலுட னடிபணியப் பணிந்தவர்தங் கரங்கள் பற்றி [மை
யெழுதரிய மலர்க்கரத்தா லெடுத்திறைஞ்சி விடையின்மேல் வருவார் தம்
யழுதழைத்துக் கொண்டவர்தா மப்பரே யெனவவரு மடியே னென்றார் ()

அம்பிகைசெம் பொற்கிண்ணத் தமுதஞா னங்கொடுப்ப வழுகை தீர்ந்த
செம்பவள வாய்ப்பிள்ளை திருநாவுக் கரசரெனச் சிறந்த சீர்த்தி
யெம்பெருமக் களுமியைந்த கூட்டத்தி லரனடியா ரின்ப மெய்தி [லாம்.
யும்பர்களும் போற்றிசைப்பச் சிவம்பெருகு மொலிநிறைத்தா ருலக மெல்

பிள்ளையார் கழல்வணங்கப் பெற்றேனென் றரசுவப்பப் பெருகு ஞான
வள்ளலார் வாகீசர் தமைக்காணப் பெற்றதற்கு மகிழ்ச்சி பொங்க
உள்ளநிறை காதலினா லொருவரொரு வரிற்கலந்த வுண்மை யோடும் [கார்.
வெள்ளநீர்த் திருத்தோணி வீற்றிருந்தார் கழல்வணங்கும் விருப்பின் மிக்

வேறு.

அருட்பெருகு தனிக்கடலு முலகுக் கெல்லா மன்புசெறி கடலுமா மெனவு மோங்கும், பொருட்சமய முதற்சைவ நெறிதான் பெற்ற புண்ணியக்கண் ணிரண்டெனவும் புவன முய்ய, இருட்கடுவுண் டவரருளு மகில மெல்லா மீன்றாடன் றிருவருளு மெனவுங் கூடித, தெருட்கலைஞா னக்கன்று மரசுஞ் சென்று செஞ்சடைவா னவர்கோயில் சேர்ந்தா ரன்றே ()

பண்பயிலவண டறைசோலை சூழுங் காழிப் பரமர்திருக் கோபுரத்தைப் பணிந்துள் புகுந்து, விண்பணிய வோங்குபெரு விமானந் தன்னை வலங்கொண்டு தொழுதுவிழுந் தெழுந்த வெல்லைசு, சண்பைவரு பிள்ளையா ரப்ப ருங்கடம்பிரா னுரைசீர பாடீ ரென்னக், கண்பயிலும் புனல்பொழிந்த வரசும் வாய்மைக லைபயிலு மொழிபொழியக் கசிந்து பாடி (கஅ௬)

பெரியபெரு மாட்டியுடன் றோணி மீது பேணிவீற் றிருந்தருளும பிரான்முன் னின்று, பரிவுறுசெந் தமிழ்மாலை பத்தி யோடும் பார்கொண்டு மூடியெனும் பதிகம் போற்றி, அரியவகை புறம்போந்து பிள்ளை யார்தந் திருமடத்தி லெழுந்தருளி யமுது செய்து, மருவியநண் புறுகேண்மை யுற்றை நாள்போல் வளர்ந்தோங்க வுடன்பலநாள் வைகு நாளில். (கஅ௭)

(கஅ௨) அழுது அழைத்துக்கொண்டவா - திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் (கஅ௩) சிவம்பெருகும் ஒலி - ஓதுவார் நாவிற்கு இனசுவை பயந்து, அவர்களைப் பேரானந்தவாரிதியிற் றிளைப்பிக்கும் ஒலி. (மங்கலவொலி, மகாதேவ, சங்கர எனத் திருநாமங்களை உச்சரித்தலாலெழுவது) (கஅ௫) பொருள் சமயமுதல சைவநெறி - பரம்பொருளை முதலாகக்கொண்ட சைவசமயம். கடு - விடம்.

**திருக்கழுமலம் - திருவிருத்தம்.**

*திருச்சிற்றம்பலம்*

*பார்கொண்டுமூடிக்கடல்கொண்டஞான்றுநின்பாதமெல்லாம*
*நாலந்துபுள்ளினமேந்தினவென்பாரளிர்மதியங்*
*கால்கொண்டவண்கைச்சடைவிரித்தாடுங்கழுமலவர்க்*
*காளன்றிமற்றுமுண்டோவந்தணாழியகலிடமே*

*கரையாகடல்சூழிலங்கையர்கோன்றன்முடிசிதறத்*
*தொலையாமலரடியூன்றலுமுள்ளமவிதிரவிதிர்த்துத்*
*தலையாய்க்கிடந்துயர்ந்தான்றன்கழுமலங்காணப்பதற்கே*
*யலையாப்பரிசிவைநாடோறுநந்தமமையாள்வனவே*

*திருச்சிற்றம்பலம்.*

அத்தன்மையினிலரசும் பிள்ளை யாரு மளவளா வியமகிழ்ச்சி யளவி லாத, சித்தநெகிழ்ச் சியினோடு செல்லு நாளிற் றிருநாவுக் கரசர்திரு வுள்ளந் தன்னின், மைத்தழையு மணிமிடற்றார் பொன்னி நாட்டு மன்னியதா னங்க ளெல்லாம் வணங்கிப் போற்ற, மெய்த்தெழுந்த பெருங்காதல் பிள்ளை யார்க்கு விளம்புதலு மவருமது மேவி னாரால் (கஅஅ)

ஆண்டவர செழுந்தருளக் கோலக் காவை யவரோடுஞ் சென்றிறைஞ்சி யன்பு கொண்டு, மீண்டருளி னாரவரும் விடைகொண் டிப்பால் வேதநா யகர்விரும்பும் பதிக ளான, நீண்டகருப் பறியலூர் புன்கூர் நீடூர் நீடுதிருக் குறுக்கைதிரு நின்றி யூருங், காண்டகைய நனிபள்ளி முதலா நண்ணிக் கண்ணுதலார் கழல்தொழுது கலந்து செல்வார் (கஅகூ)

மேவுபுனற் பொன்னியிரு கரையுஞ் சார்ந்து விடையுயர்த்தார் திருச் செம்பொன் பள்ளி பாடிக், காவுயரு மயிலாடு துறைநீள் பொன்னிக் கரைத் துருத்தி வேள்விக்குடி யெதிர்கொள் பாடி, பாவுறுசெந் தமிழ்மாலை பாடிப் போற்றிப் பரமர்திருப் பதிபலவும் பணிந்து போந்தே, ஆவுறுமஞ் சாடுவார் கோடி காவி லணைந்துபணிந் தாவடுதண் டுறையைச் சார்ந்தார் (ககூ0)

ஆவடுதண் டுறையாரை யடைந்துய்ந் தேனென் றளவில்திருத் தாண்டகமுன் னருளிச் செய்து, மேவுதிருக் குறுந்தொகைநே ரிசையுஞ் சந்த விருத்தங்க ளானவையும் வேறு வேறு, பாவலர்செந் தமிழ்த்தொடையாற் பள்ளித் தாமம் பலசாத்தி மிக்கெழுந்த பரிவி னோடும், பூவலயத் தவர்பரவப் பலநாட் டங்கிப் புரிவுறுகைத் திருத்தொண்டு போற்றிச் செய்வார் (ககூக)

---

**திருவாவடுதுறை - திருத்தாண்டகம்.**

*திருச்சிற்றம்பலம்.*

நம்பனைநால்வேதங்கரைகண்டானைஞானப்பெருங்கடலைநன்மைதன
னைக், கம்பனைக்கல்லாலிருந்தான்றன்னைக்கற்பகமாயடியார்கட்கருள்செய்
வானைச், செம்பொன்னைப்பவளத்தைத்திரளுமுத்தைத்திங்களைஞாயிற்றைத

---

(ககூக) பூவலயத்தவர் - பூமியிலுள்ளார்.

தீயைநீரை, யம்பொன்னையாவடுதண்டுறையுண்மேயவரனடியேயடிநாயே னடைந்துய்ந்தேனே.

தரித்தானைத்தண்கடனஞ்சுண்டான்றன்னைத்தக்கன்றன்பெருவேள்வி தகர்த்தான்றன்னைப், பிரித்தானைப்பிறைதவழ்செஞ்சடையினானைப்பெருவ லியால்மலையெடுத்தவரக்கன்றன்னை,நெரித்தானைநேரிழையாள்பாகத்தானை நீசனேனுடலுறுநோயானதீர, வரித்தானையாவடுதண்டுறையுணமேயவரன டியேயடிநாயேனடைந்துய்ந்தேனே.

திருச்சிற்றம்பலம்

---

எறிபுனல்பொன் மணிசிதறுந் திரைநீர்ப் பொன்னி யிடைமருதைச் சென்றெய்தி யன்பி னோடு, மறிவிரவு கரத்தாரை வணஙகி வைகி வண்ட மிழ்ப்பா மாலைபல மகிழச சாத்திப், பொறியரவம் புனைந்தாரைத் திருநா கேச்சரத்துப் போற்றியருந் தமிழ்மாலை புனைந்து போந்து, செறிவிரைநன் மலர்ச்சோலைப் பழையா றெய்தித் திருச்சத்தி முற்றத்திற் சென்று சேர்ந் தார (௧௬௨)

வேறு

சென்று சேர்ந்து திருச்சத்தி முற்றத் திருந்த சிவக்கொழுந்தைக்
குன்ற மகடன் மனககாதல் குலவும் பூசை கொண்டருளும்
என்று மினிய பெருமானை யிறைஞ்சி யியல்பிற் றிருப்பணிகண்
முன்றி லணைந்து செய்துதமிழ் மொழிமா லைகளுஞ் சாததுவார் (௧௬௩)

கோவாய் முடுகி யென்றெடுததுக் கூற்றம் வந்து குமைப்பதன்முன
பூவா ரடிக ளென்றலைமேற் பொறிதது வைப்பா யெனப்புகன்று
நாவார் பதிகம் பாடுதலு நாதன் றானு நல்லூரில்
வாவா வென்றே யருள்செய்ய வணஙகி மகிழ்நது வாகீசா (௧௬௪)

திருச்சத்திமுற்றம் - திருவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்

கோவாய்முடுகியடுதிறற்கூற்றஙகுமைப்பதன்முன்
பூவாரடிசசுவடென்மேற்பொறித்துவைபோகவிடின்
மூவாமுழுப்பழிமூடுஙகண்டாய்முழஙகுந்தழற்கைத்
தேவாதிருச்சத்திமுற்றததுறையுஞ்சிவக்கொழுந்தே

பொறித்தேரரக்கன்பொருப்பெடுப்புற்றவன்பொன்முடிதோள்
இறத்தாளொருவிரலூன்றிட்டலறவிரஙகியொள்வாள்
குறித்தேகொடுத்தாய்கொடியேன்செய்குற்றக்கொடுவினைநோய்
செறுத்தாய்திருச்சத்திமுற்றத்துறையுஞ்சிவக்கொழுந்தே.

திருச்சிற்றம்பலம்

(௧௬௨) பொறி - புள்ளிகளையுடைய. (௧௬௪) குமைபபதனமுன - வருத்து முனபே.

வேறு.

நன்மைபெரு கருணைநெறியே வந்தணைந்து நல்லூரின்
மன்னுதிருத் தொண்டனார் வணங்கிமகிழ்ந் தெழும்பொழுதில்
உன்னுடைய நினைப்பதனை முடிக்கின்றோ மென்றவர்தஞ்
சென்னிமிசைப் பாதமலர் சூட்டினான் சிவபெருமான். (௧௧௫)

நனைந்தனைய திருவடியென் றலைமேல்வைத் தாரென்று
புனைந்ததிருத் தாண்டகத்தாற் போற்றிசைத்துப் புனிதாருள்
நினைந்துருகி விழுந்தெழுந்து நிறைந்துமலர்ந் தொழியாத
தனம்பெரிதும் பெற்றுவந்த வறியோன்போன் மனந்தழைத்தார் (௧௧௬)

---

திருநல்லூர் - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்

நினைந்துருகுமடியாரைநனையவைத்தார்நில்லாமேதீவினைநணுகவைத்தார்,சினந்திருகுகளிற்றுரிவைப்போரவைத்தார்செழுமதியின்றளிர்வைத்தார்சிறந்துவானோர்,இனந்துருவிமணிமகுடத்தேறத்துற்றவினமலர்கள்போதவிழ்ந்துமதுவாய்ப்பிலகி, நனைந்தனையதிருவடியென்றலைமேல்வைத்தார்நல்லூரெம்பெருமானார்நல்லவாறே.

குலங்கிளரும்வருதிரைகளேழும்வைத்தார்குருமணிசேர்மலைவைத்தார்மலையைக்கையால், நுலங்கிளரவெடுத்தவன்றோணுமுடியுநோவவொருவிரலாலுறவைத்தாரிறைவாவென்று, புலம்புதலுமருளொடுபோவாளும்வைத்தார்புகழ்வைத்தார்புரிந்தாளாக்கொள்ளவைத்தார்,நலங்கிளருந்திருவடியென்றலைமேல்வைத்தார்நல்லூரெம்பெருமானார்நல்லவாறே.

திருச்சிற்றம்பலம்.

---

நாவுக்கு மன்னர்திரு நல்லூரி னம்பர்பால்
மேவுற்ற திருப்பணிகண் மேவுறநா ளுஞ்செய்து
பாவுற்ற தமிழ்மாலை பலபாடிப் பணிந்தேத்தித்
தேவுற்ற திருத்தொண்டு செய்தொழுகிச் செல்லுநாள். (௧௧௭)

கருகாவூர் முதலாகக் கண்ணுதலோ னமர்ந்தருளுந்
திருவாவூர் திருப்பாலைத் துறைபிறவுஞ் சென்றிறைஞ்சிப்
பெருகார்வத் திருத்தொண்டு செய்துபெருந் திருநல்லூர்
ஒருகாலும் பிரியாதே யுள்ளுருகிப் பணிகின்றார். (௧௧௮)

ஆளுடைய நாயகன்ற னருள்பெற்றங் ககன்றுபோய்
வாளைபாய் புனற்பழனத் திருப்பழன மருங்கணைந்து
காளவிட முண்டிருண்ட கண்டர்பணிக் கலன்பூண்டு
நீளிரவி லாடுவார் கழல்வணங்க நேர்பெற்றார். (௧௧௯)

---

(௧௧௭) நாவுக்குமன்னர் - வாகீசர்.

அப்பதியைச் சூழ்ந்ததிருப் பதியிலரனார்மகிழும்
ஒப்பரிய தானங்க ளுள்ளுருகிப் பணிந்தணைவார்
மெய்ப்பொருடேர் நாவினுக்கு வேந்தர்தா மேவினார்
செப்பருஞ்சீ ரப்பூதி யடிகளூர் திங்களூர். (உ00)

அந்தணரின் மேம்பட்ட வப்பூதி யடிகளார்
தந்தனய ருடன்சாலை கூவல்குளந் தருதண்ணீர்ப்
பந்தர்பல வாண்டவர செனும்பெயராற் பண்ணினமை
வந்தணைந்த வாகீசர் கேட்டவர்தம் மனைநண்ண. (உ0க)

மற்றவரு மனமகிழ்ந்து மனைவியார் மைந்தர்பெருஞ்
சுற்றமுடன் களிகூரத் தொழுதெழுந்து சூழ்ந்துமொழிக்
கொற்றவரை யமுதுசெயக் குறைகொள்வா ரிறைகொள்ளப்
பெற்றபெருந் தவத்தொண்டர் திருவுள்ளம் பெறப்பெற்றார். (உ0உ)

காண்டகைமை யின்றியுமுன் கலந்தபெருங் கேண்மையினார்
பூண்டபெருங் காதலுடன் போனகமுங் கறியமுதும்
வேண்டுவன வெவ்வேறு விதங்கள்பெற விருப்பினால்
ஆண்டவர சமுதுசெயத் திருவமுதாம் படியமைத்து. (உ0௩)

திருநாவுக் கரசமுது செய்தருள மற்றவர்தம்
பெருநாமஞ் சாத்தியவப் பிள்ளைதனை யழைத்தன்பு
தருஞானத் திருமறையோர் தண்டலையின் வண்கதலிக்
குருநாளக் குருத்தரிந்து கொண்டுவரத் தனிவிட்டார். (உ0௪)

ஆங்கவனும் விரைந்தெய்தி யம்மருங்கு தாழாதே
பூங்கதலிக் குருத்தரியப் புகுமளவி லொருநாகந்
தீங்கிழைக்க வதுபேணான் றிருவமுது செய்தருள
[illegible]ங்குகத லிக்குருத்துக் கொண்டொல்லை வந்தணைந்தான். (உ0௫)

தீயவிடந் தலைக்கொள்ளத் தெருமந்து செழுங்குருத்தைத்
தாயர்கரத் தினினீட்டித் தளர்ந்துதனைத் தழலாக
மேயபடி யுரைசெய்யான் விழக்கண்டு கெட்டொழிந்தே
தூயவரிங் கமுதுசெயத் தொடங்காரென் றதுவொளித்தார் (உ0௬)

---

(உ௱க) தந்தனயருடன் - தம்புதல்வர்களோடு. சாலை - அறச்சாலைகளும். கூவல் - கிணறுகளும். தரு - மரங்களும். (உ௱உ) இறைகொள்ளப்பெற்ற - சிவபெருமானால் ஆட்கொள்ளப்பட்ட (இறைகொள்ள - உத்தரவுகொள்ள எனினுமாம்.) (உ௱௩) முன்காண்டகைமை இன்றியும் - (அப்பூதியடிகள்) முன் (அப்பாசுவாமிகளை) காணாதிருந்தும், போனகமும் - திருவமுதும், (உ௱௪) அவர் தம்பெருநாமம் சாத்திய - திருநாவுக்கரசு எனனும் திருநாமமிட்ட. தண்டலையின் வண்கதலி-தோட்டத்திலுள்ள வண்மைபொருந்திய வாழையின். குருநாளக்குருத்து - நல்ல நிறக்குருத்தை; இலை மூன்றிலும் பசுமைநிறம் விரவாமலும், சுருள்மிக விரியாமலும் உள்ள குருத்து. (உ௱௬) தெருமந்து - மயக்கமடைந்து. அது - பிரேதத்தை.

தம்புதல்வன் சவமறைத்துத் தடுமாற்ற மிலராகி
யெம்பெருமா னமுதுசெய வேண்டுமென வந்திறைஞ்ச
உம்பர்பிரான் றிருத்தொண்ட ருள்ளத்திற் றடுமாற்ற
நம்பர்திரு வருளாலே யறிந்தருளி நவைதீர்ப்பார். (உ0எ)

அன்றவர்கண் மறைத்ததனுக் களவிறந்த கருணையராய்க்
கொன்றைநறுஞ் சடையார்தங் கோயிலின்முன் கொணர்வித்தே
யொன்றுகொலா மெனப்பதிக மெடுத்துடையான் சீர்பாடப்
பின்றைவிடம் போய்நீங்கிப் பிள்ளையுணர்ந் தெழுந்திருந்தான். (உ0அ)

---

விடந்தீர்த்த திருப்பதிகம் - பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

ஒன்றுகொலாமவர்சிந்தையுயர்வரை
ஒன்றுகொலாமுயரும்மதிசூடுவர்
ஒன்றுகொலாமிடுவெண்டலைகையது
ஒன்றுகொலாமவரூர்வதுதானே.

பத்துக்கொலாமவர்பாம்பின்கண்பாம்பின்பல்
பத்துக்கொலாமெயிறுந்நெரிந்துக்கன
பத்துக்கொலாமவர்காயப்பட்டான்றலை
பத்துக்கொலாமடியார்செய்கைதானே.

திருச்சிற்றம்பலம்.

---

அருந்தனய னுயிர்பெற்ற வதுகண்டு மமுதுசெயா
திருந்ததற்குத் தளர்வெய்தி யிடருழந்தார் துயர்நீங்க
வருந்துமவர் மனைப்புகுந்து வாகீசத் திருமுனிவர்
விருந்தமுது செய்தருளி விருப்பினுடன் மேவுநாள். (உ0௯)

திங்களூர் தனினின்றுந் திருமறையோர் பின்செல்லப்
பைங்கண்விடைத் தனிப்பாகர் திருப்பழனப் பதிபுகுந்து
தங்குபெருங் காதலொடு தம்பெருமான் கழல்சார்ந்து
பொங்கியவன் புறவணங்கி முன்னின்று போற்றிசைப்பார் (உ௧0)

புடைமாலை மதிக்கண்ணிப் புரிசடையார் பொற்கழற்கீழ்
அடைமாலைச் சீலமுடை யப்பூதி யடிகடமை
நடைமாணச் சிறப்பித்து நன்மைபுரி தீந்தமிழின்
றொடைமாலைத் திருப்பதிகச் சொன்மாலை பாடினார். (உ௧௧)

---

(உ௧௧) புடைமாலை மதிக்கண்ணி - ஓர் பக்கத்திலே இளஞ்சந்திரனாகிய கொண்டை மாலை யணிந்த. அடைமாலை சீலம உடை - அடையத்தக்க (சார்ந்த) ஒழுக்கமைந்த அனபுடைய.

### திருப்பழனம் - பண் - பழந்தக்கராகம்.

திருச்சிற்றம்பலம்.

சொன்மாலைபயில்கின்றகுயிலினங்காள்சொல்லீரே
பன்மாலைவரிவண்டுபண்மிழற்றும்பழனத்தான்
முன்மாலைநகுதிங்கள்முகிழ்விளங்குமுடிச்சென்னிப்
பொன்மாலைமார்பனென்புதுநலமுண்டிகழ்வானோ

வஞ்சித்தென்வளைகவர்ந்தான்வாரானேயாயிடினும்
பஞ்சிக்காற்சிறகன்னம்பரந்தார்க்கும்பழனத்தான்
அஞ்சிப்போய்கலிமெலியவழலோம்பும்அப்பூதி
குஞ்சிப்பூவாய்நின்றசேவடியாய்கோடியையே.

திருச்சிற்றம்பலம்.

---

எழும்பணியு மிளம்பிறையு மணிந்தவரை யெம்மருங்குந்
தொழும்பணிமேற் கொண்டருளித் திருச்சோற்றுத் துறைமுதலாத்
தழும்புறுகேண் மையினண்ணித் தானங்கள் பலபாடிச்
செழும்பழனத் திறைகோயிற் றிருத்தொண்டு செய்திருந்தார். (உகஉ)

சாலநா ளங்கமர்ந்து தந்தலைமேற் றாள்வைத்த
ஆலமார் மணிமிடற்று ரணிமலர்ச்சே வடிநினைந்து
சேலுலாம் புனற்பொன்னித் தென்கரையே றிச்சென்று
கோலநீண் மணிமாடத் திருநல்லூர் குறுகினார் (உகங)

அங்கணைந்து தம்பெருமா னடிவணங்கி யாராது
பொங்கியவன் பொடுதிளைத்துப் போற்றிசைத்துப் பணிசெயுநாட்
டங்குபெருங் காதலினாற் றமரைமேல் விரிஞ்சனொடு
செங்கண்மா லறிவரியார் திருவாரூர் தொழநினைந்தார். (உகச)

நல்லூரி னம்பரருள் பெற்றுப்போய்ப் பழையாறை
பல்லூர்வெண் டலைக்கரத்தார் பயிலுமிடம் பலபணிந்து
சொல்லூர்வண் டமிழ்பாடி வலஞ்சுழியைத் தொழுதேத்தி
யல்லூர்வெண் பிறையணிந்தார் திருக்குடமூக் கணைந்திறைஞ்சி (உகரு)

நாலூர்தென் றிருச்சேறை குடவாயி னறையூர்சேர்
பாலூரு மின்மொழியாள் பாகனார் கழல்பரவி
மேலூர்தி விடைக்கொடியார் மேவுமிடம் பலபாடிச்
சேலூர்தண் பணைசூழ்ந்த தென்றிருவாஞ் சியமணைந்தார். (உகசா)

---

(உகரு) பல்லூர் வெண்டலைக்கரத்தார் - பற்கள் விளங்கும் பிரமகபாலத்தைத் திருக்கரத்திலேந்திய சிவபெருமான். அல் ஊர் - மாலையிலதோன்றும். திருக்குடமூக்கு - கும்பகோணம்.

பெருவாச மலர்ச்சோலைப் பெருவேளூர் பணிந்தேத்தி
முருகாரு மலர்க்கொன்றை முதல்வனார் பதிபிறவுந்
திருவாரும் விளமருடன் சென்றிறைஞ்சி வாகீசர்
மருவாரூ ரெரித்தவர்தந் திருவாரூர் வந்தடைந்தார். (உகஎ)

ஆண்டவர செழுந்தருள வாரூரி லன்பர்கடா
நீண்டசடை முடியார்பா னிறைந்தவருள் பெற்றுடையார்
காண்டகுமா ளிகைமாடங் கவின்சிறந்தோங் கிடவெங்குஞ்
சேண்டிகழ்வீ திகள்பொலியத் திருமலிமங் கலஞ்செய்தார். (உகஅ)

வேறு.

வல்லமண் குண்டர்தம் மாயை கடந்து மறிகடலிற்
கல்லே மிதப்பாகப் போந்தவர் வந்தா ரெனுங்களிப்பால்
எல்லை யிற்றொண்ட ரெயிற்புறஞ் சென்றெதிர் கொண்டபோது
சொல்லி னரசர் வணங்கித் தொழுதுரை செய்தணைவார். (உகக)

பற்றொன் றிலாவரும் பாதக ராகு மமணர்தம்பால்
உற்ற பிணியொழிந் துய்யப்போந் தேன்பெற லாவதுண்டே
புற்றிடங் கொண்டான்றன் றொண்டர்க்குத் தொண்டராம் புண்ணியமென்
றுற்ற வுணர்வொடு மாரூர்த் திருவீதி யுள்ளணைந்தார். (உஉ0)

---

## திருவாரூர் - திருவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

குலம்பலம்பாவருகுண்டர்முன்னேநமக்குண்டுகொலோ
அலம்பலம்பாவருதண்புனலாரூரவிர்சடையான்
சிலம்பலம்பாவருசேவடியான்றிருமூலட்டானம்
புலம்பலம்பாவருதொண்டர்க்குத்தொண்டராம்புண்ணியமே

குற்றமுடையவமணர்திறமதுகையகன்றிட்
டுற்றகருமஞ்செய்துய்யப்போந்தேனுக்குமுண்டுகொலோ
மற்பொலிதோளானிராவணன்றன்வலிவாட்டுவித்த
பொற்கழலானடித்தொண்டர்க்குத்தொண்டராம்புண்ணியமே.

திருச்சிற்றம்பலம்.

---

சூழுந் திருத்தொண்டர் தம்முடன் றோரண வாயினண்ணி
வாழி திருநெடுந் தேவா சிரியன்முன் வந்திறைஞ்சி
யாழி வரைத்திரு மாளிகை வாயி லவைபுகுந்து
நீள்சுடர் மாமணிப் புற்றுகந் தாரைநேர் கண்டுகொண்டார். (உஉக)

(உகஎ) முருகு ஆரும் - தேன் நிறைந்த. மரு ஆர் ஊர் - பகைவர்களது முப்புரங்களை. (உகக) எயில்புறம் - மதிலின் பக்கத்தில். (உஉ0) பற்று - இரக்கம்; அன்பு.

கண்டு தொழுது விழுந்து காசா ணுதியங்கங்
கொண்ட புளகங்க ளாக வெழுந்தன்பு கூரக்கண்க
டண்டுளி மாரி பொழியத் திருமூலட் டானர் தம்மைப்
புண்டரி கக்கழல் போற்றித் திருத்தாண் டகம்புனைந்து. (உஉஉ)

---

திருவாரூர் - போற்றித் திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்.

கற்றவர்களுண்ணுங்கனியேபோற்றி கழலடைந்தார்செல்லுங்கதியே போற்றி,யற்றவாகட்காரமுதமானுய்போற்றியல்லலறுத்தடியேனையாண்டாய் போற்றி, மற்றொருவரொப்பிலலாமைந்தாபோற்றிவானவர்கள்போற்றுமரு ந்தேபோற்றி, செற்றவர்தம்புரமெரித்தசிவனேபோற்றி திருமூலத்தானனே போற்றிபோற்றி

பிரமன்றன்சிரமரிந்தபெரியோய்போற்றிபெண்ணுருவோடாணுரு வாய்நின்றாய்போற்றி, கரிநான்குமுககண்ணுமுடையாய்போற்றிகாதலிப் பார்ககாற்றவெளியாய்போற்றி, யருமந்ததேவர்க்கரசேபோற்றியன்றரக்க னைநான்குதோளுந்தாளுஞ், சிரநெரித்தசேவடிகள்போற்றிபோற்றிதிருமூ லட்டானனேபோற்றிபோற்றி

திருச்சிற்றம்பலம்.

---

காண்ட லேகருத் தாய்நினைந் தென்னுங் கலைப்பதிகந்
தூண்டா விளககன்ன சோதிமுன் னின்று துதித்துருகி
யீண்டு மணிககோயில் சூழ வலஞ்செய் திறைஞ்சியன்பு
பூண்ட மனத்தொடு நீடிரு வாயிற் புறத்தணைந்தார் (உஉ௩)

---

திருவாரூர் - பண் - சீகாமரம்.

திருச்சிற்றம்பலம்

காண்டலேகருத்தாய்நினைந்திருந்தேன்மனம்புகுந்தாய்கழலடி
பூணடுகொண்டொழிந்தேன்புறம்போயினுலறையோ
வீண்டுமாடஙகணீண்டமாளிகைமேலெழுகொடிவானிளமதி
நீண்டிவந்துலவுந்திருவாரூரம்மானே.

நாடினூர்கமலம்மலரயனேடிரணியனுகங்கீண்டவ
னுடிககாணமாட்டாதழலாயநம்பானைப்
பாடுவார்பணிவார்பல்லாண்டிசைகூறுபத்தர்கள்சித்தத்துள்புக்குத்
தேடிக்கண்டுகொண்டேன்திருவாரூரம்மானே

திருச்சிற்றம்பலம்.

---

வேறு.

செய்யமா மணியொளிசூழ் திருமுன்றின் முன்றேவா சிரியன் சார்ந்து
கொய்யுமா மலர்ச்சோலைக் குயில்கூவ மயிலாலு மாரூ ராரைக்

கையினாற் றொழாதொழிந்து கனியிருக்கக் காய்கவர்ந்த கள்வ னேனென்
றெய்தரிய கையறவாந் திருப்பதிக மருள்செய்தங் கிருந்தா ரன்றே.

---

### திருவாரூர் - பழமொழிப்பத்து - பண் - காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

மெய்யெலாம்வெண்ணீறுசண்ணித்தமேனியான்றாடொழாதே
யுய்யலாமென்றெண்ணியுறி தூக்கியுழிதந்தெனுள்ளம்விட்டுக்
கொய்யுலாமலர்ச்சோலைக்குயில்கூவமயிலாலுமாரூரைக்
கையினாற்றொழாதொழிந்துகனியிருக்கக்காய்கவர்ந்தகள்வனேனே

மறுத்தானோர்வல்லரக்கனீரைந்துமுடியினொடுதோளுந்தாளும் [றை
இறுத்தானையெழின்முளரித்தவிசின்மிசையிருந்தான்றன்றலையிலொன்
யறுத்தானையாரூரிலம்மானையாலாலமுண்டுகண்டங்
கறுத்தானைக்கருதாதேகரும்பிருக்கவிரும்புகடித்தெய்த்தவாறே.

திருச்சிற்றம்பலம்.

---

மார்பாரப் பொழிகண்ணீர் மழைவாருந் திருவடிவு மதுர வாக்கிற்
சேர்வாகுந் திருவாயிற் றீந்தமிழின் மாலைகளுஞ் செம்பொற் றாளே
சார்வான திருமனமு முழவாரத் தனிப்படையுந் தாமு மாகிப்
பார்வாழத் திருவீதிப் பணிசெய்து பணிந்தேத்திப் பரவிச் செல்வார் ()

நீடுபுகழ்த் திருவாரூர் நிலவுமணிப் புற்றிடங்கொ ணித்தர் தம்மைக்
கூடியவன் பொடுகாலங் களிலணைந்து கும்பிட்டுக் கோதில் வாய்மைப்
பாடிளம்பூ தத்தினா னெனும்பதிக முதலான பலவும் பாடி
நாடியவார் வம்பெருக நைந்துமனங் கரைந்துருகி நயந்து செல்வார். ()

---

### திருவாரூர் - பண் - காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

பாடிளம்பூதத்தினானும்பவளச்செவ்வாய்வண்ணத்தானுங்
கூடிளமென்முலையாளைக்கூடியகோலத்தினானும்
ஓடிளவெண்பிறையானுமொளிதிகழ்சூலத்தினானும்
ஆடிளம்பாம்பசைத்தானுமாரூரமர்ந்தவம்மானே.

பையஞ்சுடர்விடுநாகப்பள்ளிகொள்வானுள்ளத்தானுங்
கையஞ்சுநான்குடையானைக்கால்விரலாலடர்த்தானும்
பொய்யஞ்சிவாய்மைகள்பேசிப்புகழ்புரிந்தார்க்கருள்செய்யு
மையஞ்சினப்புறத்தானுமாரூரமர்ந்தவம்மானே.

திருச்சிற்றம்பலம்.

---

நான்மறைநூற் பெருவாய்மை நமிநந்தி யடிகடிருத் தொண்டி னன்மைப்
பான்மைநிலை யாலவரைப் பரமர்திரு விருத்தத்துள் வைத்துப் பாடித்
தேன்மருவுங் கொன்றையார் திருவாரூ ரரனெறியிற் றிகழுந் தன்மை
யானதிற மும்போற்றி யணிவீதிப் பணிசெய்தங் கமரு நாளில் (உஉஎ)

நீராருஞ் சடைமுடியார் நிலவுதிரு வலிவலமு நினைந்து சென்று
வாராரு முலைமங்கை யுமைபங்கர் கழல்பணிந்து மகிழ்ந்து பாடிக்
காராருங் கறைக்கண்டர் கீழ்வேளூர் கன்றாப்பூர் கலந்து பாடி
யாராத காதலினாற் றிருவாரூர் தனின்மீண்டு மணைந்தா ரன்றே. (உஉஅ)

மேவுதிரு வாதிரைநாள் வீதிவிடங் கப்பெருமாள் பவனி தன்னிற்
றேவருடன் முனிவர்கண்முன் சேவிக்கு மடியார்க ளுடன்சே வித்து
மூவுலகுங் களிகூர வரும்பெருமை முறைமையெலாங் கண்டு போற்றி
நாவினுக்குத் தனியரசர் நயக்குநா ணம்பர்திரு வருளி னாலே (உஉகூ)

திருப்புகலூ ரமர்ந்தருளுஞ் சிவபெருமான் சேவடிகள் கும்பிட் டேத்தும்
விருப்புடைய வுள்ளத்து மேவியெழு காதல்புரி வேட்கை கூர
ஒருப்படுவார் திருவாரூ ரொருவாறு தொழுதகன்றங் குள்ளம வைததுப்
பொருப்பரையன் மடப்பாவை யிடப்பாகர் பதிபிறவும் பணிந்து போந்தார்.

அந்நாளி லாளுடைய பிள்ளையார் திருப்புகலி யதன்க ணின்றும்
பன்னாகப் பூணணிவார் பயின்றதிருப் பதிபலவும் பணிந்து செல்வார்
புன்னாக மணங்கமழும் பூம்புகலூா வந்திறைஞ்சிப் பொருவில கீர்த்தி
மின்னாரும் புரிமுந்நூன் முருகனார் திருமடத்தின் மேவு காலை. (உஙக)

ஆண்டவர செழுந்தருளி யணியாரூர் மணிப்புற்றி லமர்ந்து வாழு
நீண்டசுடர் மாமணியைக் கும்பிட்டு நீடுதிருப் புகலூர் நோக்கி
மீண்டருளி னாரென்று கேட்டருளி யெதிர்கொள்ளும் விருப்பி னோடும்
ஈண்டுபெருந் தொண்டர்குழாம் புடைசூழ வெழுந்தருளி யெதிரேசென்றார்.

கரண்டமலி தடம்பொய்கைக் காழியர்கோ னெதிரணையுங் காதல் கேட்டு
வரண்டுமணிப் புனற்புகலூர் நோக்கிவரும் வாகீசர் மகிழ்ந்து வந்தார்
திரண்டுவருந் திருநீற்றுத் தொண்டர்குழா மிருதிறமுஞ் சேரத போதில்
இரண்டுநில வின்கடல்க ளொன்றாகி யணைந்தனபோ லிசைந்த வன்றே. ()

திருநாவுக் கரசரெதிர் சென்றிறைஞ்சச் சிரபுரத்துத் தெய்வ வாய்மைப்
பெருஞான சம்பந்தப் பிள்ளையா ரெதிர்வணங்கி யப்ப ரேநீர்
வருநாளிற் றிருவாரூர் நிகழ்பெருமை வகுத்துரைப்பீ ரென்று கூற
வருநாமத் தஞ்செழுத்தும் பயில்வாய்மை யவருமெதி ரருளிச் செய்வார் ()

---

(உஙக) புன்னாகம் - சுரபுன்னை. (உஙஉ) கரண்டம - நீர்க்காக்கைகள். காழியா கோன - திருஞானசம்பந்தா (உஙச) சிரபுரம் - சீகாழி.

வேறு.

சித்த நிலாவுந் தென்றிரு வாரூர் நகராளு
மைத்தழை கண்ட ராதிரை நாளின் மகிழ்செல்வம்
இத்தகை மைத்தென் றென்மொழி கேனென் றுரைசெய்தார்
முத்து விதான மணிப்பொற் கவரி மொழிமாலை (உருரு)

திருவாரூர் - திருவாதிரைத் திருப்பதிகம் - பண் - குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

முத்துவிதானமணிப்பொற்கவரிமுறையாலே
பத்தர்களோடுபாவையர்சூழப்பலிப்பின்னே
வித்தகக்கோலவெண்டலைமாலைவிரதிகள்
அத்தனாரூராதிரைநாளாலதுவண்ணம்.

பாரூர்பல்லவத்தானைப்பத்தர்பணிந்தேத்தச
சீரூர்பாடலாடலறாதசெம்மாப்பார்ந
தோரூரொழியாதுலகமெங்குமெடுத்தேத்தும்
ஆரூரன்றனாதிரைநாளாலதுவண்ணம்

திருச்சிற்றம்பலம்.

அம்மொழி மாலைச் செந்தமிழ் கேளா வணிசண்பை
மைம்மலர் கண்டத் தண்டர் பிரானா மகனாரு
கொய்ம்மலர் வாவித் தென்றிரு வாரூர் குமபிட்டே
யும்முடன் வந்திங் குடனமர் வேனென் றுரைசெய்தார். (உருசு)

மாமதி லாரூர் மன்னரை யங்கு வணங்கசசெங்
தாமரை யோனைச் சண்பையர் நாதன் றானேக
நாமரு சொலவி னாதரு மார்வத தொடுபுக்கார்
பூமலர் வாசத தணபணை சூழும் புகலூரில (உருஎ)

அத்திரு மூதூர் மேவிய நாவுக கரசுந்தநு
சித்த நிறைந்தே யன்பு தெவிட்டுந தெளிவெள்ள
மொய்ததிழி தாரைக் கண்பொழி நீரமெயம் முழுதாரப்
பைததலை நாகப் பூணணி வாரைப் பணிவுற்றா. (உருஅ)

தேவர் பிரானைத் தென்புக லூர்மன் னியதேனைப்
பாவியன் மாலைச் செந்தமிழ் பாடிப் பரிவோடு
மேவிய காலந் தோறும் விருப்பிற் கும்பிட்டே
யோவுத லோவு திருப்பணி செய்தங குறைகின்றா். (உருகூ)

(உருஎ) மனனரை - தியாகேசரை. (உருகூ) ஓவுதல ஓவுதிருபபணி - குறைவில லாத கைததொண்டு.

சீர்தரு செங்காட் டங்குடி நீடுந் திருநள்ளா
றார்தரு சோலை சூழ்தரு சாந்தை யயவந்தி
வார்திகழ் மென்முலை யாளொரு பாகன் றிருமருகல்
ஏர்தரு மன்பாற் சென்று வணங்கி யின்புற்றார். (உ௪௦)

அப்படி சின்னாள் சென்றபி னூரர் நகராளுந்
துப்புறழ் வேணிக் கண்ணுத லாரைத் தொழுதிப்பான்
மெய்ப்பொருண் ஞானம் பெற்றவர் வேணு புரத்தெங்கள்
பொற்புரி முந்நூன் மார்பரும் வந்தார் புகலூரில் (உ௪க)

வேறு

பிள்ளையா ரெழுந்தருளப் பெருவிருப்பால் வாகீசர்
உள்ளமகிழ்ந் தெதிர்கொண்டங் குடனுறையு நாளின்கண்
வள்ளலார் சிறுத்தொண்டர் மற்றவர்பா லெழுந்தருள
எள்ளருஞ்சீர் நீலநக்கர் தாமுமெழுந் தருளினார். (உ௪உ)

ஆங்கணையு மவர்களுட னப்பதியி லந்தணராம்
ஓங்குபுகழ் முருகனார் திருமடத்தி லுடனாகப்
பாங்கில்வருஞ் சீரடியார் பலருமுடன் பயில்கேண்மை
நீங்கரிய திருத்தொண்டி னிலையுணர்ந்து நிகழ்கின்றார் (உ௪௩)

திருப்பதிகச் செந்தமிழின் றிறம்போற்றி மகிழ்வுற்றுப்
பொருப்பரையன் மடப்பாவை யிடப்பாகர் பொற்றாளில்
விருப்புடைய திருத்தொண்டர் பெருமையினை விரித்துரைத்தங்
கொருப்படுசிந் தையினாக ளுடனுறைவின் பயன்பெற்றார் (உ௪௪)

அந்நாளிற் றமக்கேற்ற திருத்தொண்டி னெறியாற்றி
மின்னார்செஞ் சடையண்ணல் மேவுபதி யெனைப்பலவு
முன்னாகச் சென்றேத்தி முதல்வனார் றொழுவதற்குப்
பொன்னாரு மணிமாடப் பூம்புகலூர் தொழுதகன்றார் (உ௪௫)

திருநீல நக்கடிகள் சிறுத்தொண்டர் முருகனார்
பெருநீர்மை யடியார்கள் பிறரும்விடை கொண்டேக
ஒருநீர்மை மனத்துடைய பிள்ளையா ருடனரசும்
வருநீர்செஞ் சடைக்கரந்தார் திருவம்பர் வணங்கினார் (உ௪௬)

செங்குமுத மலர்வாவித் திருக்கடவூ ரணைந்தருளிப்
பொங்கியவெங் கூற்றடர்த்த பொன்னடிகள் டொழுதேத்திக்
குங்கிலியக் கலயனார் திருமடத்திற் குறைவறுப்ப
அங்கவர்பாற் சிவனடியா ருடனமுது செய்தார்கள். (உ௪௭)

(உ௪க) துப்பு உறழ் - பவளத்தையொத்த; சிவந்த. வேணுபுரம் - சீகாழி.

சீர்மன்னுந் திருக்கடவூர்த் திருமயா னமும்வணங்கி
யேர்மன்னு மின்னிசைப்பாப் பலபாடி யினிதமர்ந்து
கார்மன்னுங் கறைக்கண்டர் கழலிணைக டொழுதகன்று
தேர்மன்னு மணிவீதித் திருவாக்கூர் சென்றணைந்தார். (உசஅ)

சார்ந்தார்தம் புகலிடத்தைத் தான்றோன்றி மாடத்துக்
கூர்ந்தார்வ முறப்பணிந்து கோதிறமிழ்த் தொடைபுனைந்து
வார்ந்தாடுஞ் சடையார்தம் பதிபலவும் வணங்கியுடன்
சேர்ந்தார்க டம்பெருமான் திருவீழி மிழலையினை (உசகூ)

வேறு

வீழி மிழலை வந்தணைய மேவு நாவுக் கரசினையுங்
காழி ஞானப் பிள்ளையையுங் கலந்த வுள்ளக் காதலினால்
ஆழி வலவ னறியாத வடியா ரடியா ரவர்களுடன்
வாழி மறையோ ரெதிர்கொண்டு வணங்க வணங்கி யுள்புக்கார். (உருo)

மாட வீதி யலங்கரித்து மறையோர் வாயின் மணிவிளக்கு
நீடு கதலி தழைப்பூக நிரைத்து நிறைபொற் குடமெடுத்துப்
பீடு பெருகும் வாகீசர் பிள்ளை யாருந் தொண்டர்களுங்
கூட மகிழ்ந்து விண்ணிழிந்த கோயில் வாயில் சென்றணைந்தார். (உருக)

சென்று புகுந்து திருவீழி மிழலை யமர்ந்த செங்கனகக்
குன்ற வில்லி யார்மகிழ்ந்த கோயில் வலமா வந்துதிரு
முன்றில் வணங்கி முன்னெய்தி முக்கட் செக்கர்ச் சடைமவுலி
வென்றி விடையார் சேவடிக்கீழ் விழுந்தா ரெழுந்தார் விம்மினார். (உருஉ)

கைகள் குவித்துங் கழல்போற்றிங் கலந்த வன்பு கரைந்துருக
மெய்யில் வழியுங் கண்ணருவி விரவப் பரவுஞ் சொன்மாலை
செய்ய சடையார் தமைச்சேரா தீங்கு நெறிசேர் கின்றாரென்
றுய்யு நெறித்தாண் டகமொழிந்தங் கொழியாக் காதல் சிறந்தோங்க (உருங)

---

திருவீழிமிழலை - திருத்தாண்டகம்

திருச்சிற்றம்பலம்

போரானையீருரிவைப்போர்வையானைப்புலியதளேயுடையானைப்போற்றினானைப, பாரானைமதியானைப்பகலானானைப்பல்லுயிராய்நெடுவெளியாய்ப் பரந்துநின்ற, நீரானைக்காற்றானைத்தீயானானைநினையாதாரர்புரமெரியநினைந்த தெய்வத, தேரானைத்திருவீழிமிழலையானைச்சேராதார்தீநெறிக்கேசேர்கின்றாரே

---

(உசகூ) சார்ந்தார்தம் புகலிடத்தை - தம்மையடைந்த அடியவர்கட்குப் புகலிடமாகிய சிவபெருமானை. வார்ந்து நீண்டு (உருo) ஆழிவலவன் அறியாத அடியார் - சக்கரத்தையேந்திய நாராயணமூர்த்தி யறியாத திருவடியையுடைய சிவபெருமான. (உருஉ) செங்கனகக் குன்றவில்லியார் - மேருவில்லையேந்திய சிவபெருமான.

அறுத்தானையயன்றலைகளஞ்சிலொன்றையஞ்சாதேவரையெடுத்தவரக் கன்றோள்க, ளிறுத்தானையெழுநரம்பினிசைகேட்டானையிந்துவினைத்தேய்த்தானையிரவிதன்பல், பறித்தானைப்பகீரதற்காவானோர்வேண்டப்பரந்திழியும்புனற்கங்கைபனிபோலாகச்,செறுத்தானைத்திருவீழிமிழலையானைச்சேராதார்தீநெறிக்கேசேர்கின்றாரே.

திருச்சிற்றம்பலம்.

---

முன்னா ளயனுந் திருமாலு முடியு முதலுங் காணாத
பொன்னார் மேனி மணிவெற்பைப் பூவீழி மிழலை யினிற்போற்றிப்
பன்னாள் பிரியா நிலைமையினாற் பயிலக் கும்பிட் டிருப்பாரா
யந்நாண் மறையோர் திருப்பதியி லிருந்தார் மெய்ம்மை யருந்தவர்கள். ()

சீரின் விளங்குந் திருத்தொண்ட ரிருந்து சிலநாட் சென்றதற்பின்
மாரி சுருங்கி வளம்பொன்னி நதியும் பருவ மாறுதலு
நீரி னியன்ற வுணவருகி நிலவும் பலமன் னுயிர்களெல்லாம்
பாரின் மலிந்த விலம்பாட்டிற் படர்கூர் வறுமை பரந்ததால் (௨௫௫)

வைய மெங்கும் வற்கடமாய்ச் செல்ல வுலகோர் வருத்தமுற
நைய நாளிற் பிள்ளையார் தமக்கு நாவுக் கரசினுக்குங்
கையின் மானு மழுவுமுடன் காணக் கனவி லெழுந்தருளிச்
செய்ய சடையார் திருவீழி மிழலை யுடையா ரருள்செய்வார். (௨௫௬)

கால நிலைமை யாலுங்கள் கருத்தில் வாட்ட முறீரெனினும்
ஏல வும்மை வழிபடுவார்க் களிக்க வளிக்கின் றோமென்று
கோலங் காண வெழுந்தருளிக் குலவும் பெருமை யிருவருக்கு
ஞால மறியப் படிக்காசு வைத்தார் மிழலை நாயகனார் (௨௫௭)

விண்ணின் றிழிந்த விமானத்தின் கிழக்கு மேற்கும் பீடத்தில்
அண்ணல் புகலி யாண்டகையார் தமக்கு மாண்ட வரசினுக்கு
நண்ணு நாள்க டொறுங்காசு படிவைத் தருள நானிலத்தில்
எண்ணி லடியா ருடனமுது செய்தங் கிருந்தா ரிருவர்களும். (௨௫௮)

அல்லார் கண்டத் தண்டர்பிரா னருளாற் பெற்ற படிக்காசு
பல்லா றியன்ற வளம்பெருகப் பரம னடியா ரானார்கள்
எல்லா மெய்தி யுண்கவென விரண்டு பொழுதும் பறைநிகழ்த்திச்
சொல்லாற் சாற்றிச் சோறிட்டார் துயர்கூர் வறுமை தொலைத்திட்டார் ()

ஈசர் மிழலை யிறையவர்பா லிமையப் பாவை திருமுலைப்பால்
தேச முய்ய வுண்டவார் தாந் திருமா மகனா ராதலினாற்

---

(௨௫௫) பொன்னிநதியும் பருவம் மாறுதலும் - காவேரிநதியும் பருவகாலத்தில் பெருகாமல் வற்றவும் நீரின் இயன்ற உணவு அருகி - நீரால் விளையும் உணவுகள் குறைந்து. இலம்பாட்டில் - தரித்திரத்தால். (௨௫௬) வற்கடமாய்ச்செல்ல - பஞ்சமுண்டாகிப் பரவ.

காசு வாசி யுடன்பெற்றார் கைத்தொண் டாகு மடிமையினால்
வாசி யில்லாக் காசுபடி பெற்று வந்தார் வாகீசர். (௨௬௦)

ஆறு சடைமே லணிந்தருளு மண்ணல் வைத்த படிக்காசால்
ஈறி லாத பொருளுடைய விருவ ருடைய திருமடங்கள்
சோறு நாளுந் தொண்டர்மகிழ்ந் துண்ண வுண்ணத் தொலையாதே
யேறு பெருமை புவிபோற்ற வின்புற் றிருக்கு மங்நாளில் (௨௬௧)

காலந் தவறு தீர்ந்தெங்குங் கலிவான் பொழிந்து புனல்கலந்து
ஞால மெல்லாங் குளிர்தூங்கி யுணவு பெருகி நலஞ்சிறப்ப
மூல வன்ப ரிருவர்களு மொழிமா லைகளும் பலசாத்தி
நீல கண்ட ருறைபதிகள் பிறவும் வணங்க நினைவுற்றார். (௨௬௨)

வாய்ந்த மிழலை மாமணியை வணங்கிப் பிரியா விடைகொண்டு
பூந்தண் புனல்சூழ் வாஞ்சியத்தைப் போற்றிப் புனிதர் வாழ்பதிகள்
ஏய்ந்த வன்பி னாலிறைஞ்சி யிசைவண் டமிழ்கள் புனைந்துபோய்ச்
சேர்ந்தார் செல்வத் திருமறைக்கா டெல்லை யில்லாச் சீர்த்தியினார். (௨௬௩)

மன்றல் விரவு மலர்ப்புன்னை மணஞ்சூழ் சோலை யுப்பளத்தின்
முன்றி றோறுஞ் சிறுமடவார் முத்தங் கொழிக்கு மறைக்காட்டுக்
குன்ற வில்லி யாரமகிழ்ந்த கோயில் புகுந்து வலங்கொண்டு
சென்று சேர்ந்தார் தென்புகலிக் கோவு மரசுந் திருமுன்பு. (௨௬௪)

பரவை யோதக் கழிக்கானற் பாங்கு நெருங்கு மப்பதியில்
அரவச் சடையந் தணனாரை யகில மறைக ளர்ச்சனைசெய்
துரவக் கதவந் திருக்காப்புச் செய்த வந்நாண் முதலிந்நாள்
வரையு மடைத்தே நிற்கின்ற மணிநீள் வாயில் வணங்குவார் (௨௬௫)

தொல்லை வேதந் திருக்காப்புச் செய்த வாயிற் றொடர்வகற்ற
வல்ல வன்ப ரணையாமை மருங்கோர் வாயில் வழியெய்தி
யல்ல றீர்ப்பார் தமையருச்சிப் பார்க டொழுவா ராம்படிகண்
டெல்லை யில்லாப் பெரும்புகழா ரிதனை யங்குக் கேட்டறிந்தார் (௨௬௬)

ஆங்கப் பரிசை யறிந்தருளி யாழித் தோணி புரத்தரசர்
ஓங்கு வேத மருச்சனைசெ யும்பர் பிரானை யுள்புக்குத்
தேங்கா திருவோ நேரிறைஞ்சத் திருமுன் கதவந் திருக்காப்பு
நீங்கப் பாடு மப்பரென நீடுந் திருநா வுக்கரசர் (௨௬௭)

உண்ணீர் மையினாற் பிள்ளையா ருரைசெய் தருள வதனாலே
பண்ணி னேரு மொழியாளென் றெடுத்துப் பாடப் பயன்றுய்ப்பான்

---

(௨௬௦) வாசியுடன் - வட்டத்தோடு. (௨௬௨) காலம் தவறு - காலவேறுபாடு, பஞ்சகாலம். (௨௬௫) பரவை ஓதம் கழிகானல் பாங்கு - கடலின் ஓதத்தையுடைய கழிநிலத்தில்.

றெண்ணீ ரணிந்தார திருக்காப்பு நீக்கத் தாழ்க்கத் திருக்கடைக்காப்
பெண்ணீ ரிரக்க மொன்றில்லீ ரென்று பாடி யிறைஞ்சுதலும் (உகூஅ)

---

**திருமறைக்காடு - திருக்குறுந்தொகை.**

திருச்சிற்றம்பலம்

பண்ணினேர்மொழியாளுமைபங்கரோ
மண்ணினார்வலஞ்செயமறைக்காடரோ
கண்ணினாலுமைக்காணக்கதவினைத்
திண்ணமாகத்திறந்தருள்செய்மினே.

அரக்கனைவிரலாலடர்த்திட்டநீர்
இரக்கமொன்றிலீரெம்பெருமானீரே
சுரக்கும்புன்னைகள்சூழ்மறைக்காடரோ
சரக்கவிக்கதவந்திறப்பிம்மினே

திருச்சிற்றம்பலம்.

---

வேத வனத்தின் மெய்ப்பொருளி னருளால் விளங்கு மணிக்கதவங்
காத லன்பர் முன்புதிருக் காப்பு நீங்கக் கலைமொழிக்கு
நாதர் ஞான முனிவருடன் றொழுது விழுந்தா ராலத்துள்
ஓத வொலியின் மிக்கெழுந்த தும்ப ரார்ப்பு மறையொலியும் (உகூகூ)

அன்ப ரீட்டங் களிசிறப்ப வாண்ட வரசுஞ் சிவக்கன்றும்
இன்ப வெள்ளத் திடைமூழ்கி யெழுந்துள் புகுந்து தம்பெருமான்
முன்பு பணிந்து போற்றிசைத்துப் பரவி மொழிமா லைகள்பாடி
யென்பு கரைய வுளுருகி யிறைஞ்சி யரிதிற் புறத்தணைந்தார். (உ௭0)

புறம்பு நின்று வாகீச புனித ரருளா லிக்கதவந்
திறந்து மடைத்துஞ் செலலுநெறி திருந்த மலையா டிருமுலையிற்
சுறந்த ஞானங் குழைத்தமுது செய்த புகலிக் கவுணியரை
நிறைந்த கதவ மடைக்குமவகை நீரும பாடி யருளுமென (உ௭க)

சண்பை யாளுந் தமிழ்விரகர் தாமுந் திருநா வுக்கரசர்
பண்பின் மொழிந்த வுரைகொண்டு பதிகம் பாடு மவ்வளவிற்
கண்பொற் பமைந்த நுதற்காளை கண்ட ரருளாற் கடிதுடனே
திண்பொற் கதவந் திருக்காப்புச் செய்த தெடுத்த திருப்பாட்டின் (உ௭உ)

அதுகண் டுடைய பிள்ளையார் தாமு மாண்ட வரசுமகிழ்ந்
திதுநம் பெருமா னருள்செய்யப் பெற்றோ மென்றங் கிறைஞ்சியபின்
பதிக நிரம்பப் பிள்ளையார் பாடித் தொழுது பணிவுற்றார்
எதிர்பொற் றிருவா யிலின்வழக்க மென்று நிகழ்ச்சி யெய்தியதால் (உ௭௩)

அங்கு நிகழ்ந்த வச்செயல்கண் டடியா ரெல்லா மதிசயித்துப்
பொங்கு புளக மெய்திடமெய் பொழியுங் கண்ணீர் பரந்திழிய

---

(உகூகூ) ஓத ஒலி - கடலொலி. (உ௭0) சிவக்கன்று - ஆளுடையபிள்ளையார்.

எங்கு நிகரொன் றில்லாத விருவர் பாத மிறைஞ்சினார்
நங்கள் புகலிப் பெருந்தகையு மரசு மடத்தி னண்ணியபின். (உஎச)

அரிதிற் றிறக்கத் தாம்பாட வடைக்க வவர்பா டியவெளிமை
கருதி நம்பர் திருவுள்ள மறியா தயர்ந்தே னெனக்கவன்று
பெரிது மஞ்சித் திருமடத்தி லொருபா லணைந்து பேழ்கணித்து
மருவு முணர்விற் றுயில்கொண்டார் வாய்மை திறம்பா வாகீசர். (உஎரு)

மன்னுஞ் செல்வ மறைக்காட்டு மணியின் பாத மனத்தின்கண்
உன்னித் துயிலும் பொழுதின்க ணுமையோர் பாக முடையவர்தாம்
பொன்னின் மேனி வெண்ணீறு புனைந்த கோலப் பொலிவினொடுந்
துன்னி யவர்க்கு வாய்மூரி லிருப்போந் தொடர வாவென்றார் (உஎசா)

போத நிகழ வாவென்று போனா ரெனக்கொ டெனப்பாடி
யீதெம் பெருமா னருளாகி லியானும் போவே னென்றெழுந்து
வேத வனத்தைப் புறகிட்டு விரைந்து போக வவர்முன்னே
யாதி மூர்த்தி முனைகாட்டு மவ்வே டத்தா லெழுந்தருள (உஎஎ)

திருவாய்மூர் - திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

எங்கே யென்னை யிருந்திடந் தேடிக்கொண்
டங்கே வந்தடை யாள மருளினார்
தெங்கே தோன்றுந் திருவாய்மூர்ச் செல்வனார்
அங்கே வாவென்று போனா ரதென்கொலோ

தீண்டற் கரிய திருவடி யொன்றினால்
மீண்டற் கும்மிதித் தாரரக் கன்றனை
வேண்டிக் கொண்டேன் றிருவாய்மூர் விளக்கினைத்
தூண்டிக் கொள்வ னென்றலுந் தோன்றுமே

திருச்சிற்றம்பலம்

சீரார் பதியி னின்றெழுந்து செல்லுந் திருநா வுக்கரசர்
ஆரா வன்பி லாரமுத முண்ண வெய்தா வாறேபோல்
நீரார் சடையா ரெழுந்தருள நெடிது பின்பு செல்லுமவர்
பேரா ளரைமுன் றொடர்ந்தணையப் பெறுவா ரெய்தப் பெற்றிலரால் ()

அன்ன வண்ண மெழுந்தருளி யணித்தே காட்சி கொடுப்பார்போற்
பொன்னின் கோயி லொன்றெதிரே காட்டி யதனுட் புக்கருளத்
துன்னுந் தொண்ட ரம்மருங்கு விரைந்து தொடரப் போந்தபடி
மன்னும் புகலி வள்ளலார் தாமுங் கேட்டு வந்தணைந்தார். (உஎகூ)

---

(உஎரு) பேழ்கணித்து - தங்குற்றத்தைக் குறித்துச் சிந்தித்து. உணர்விற்றுயில - அறிதுயில, யோகநித்திரை.

அழைத்துக் கொடுபோந் தணியார்போற் காட்டி மறைந்தா ரெனவயர்ந்து
பிழைத்துச் செவ்வி யறியாதே திறப்பித் தேனுக் கேயல்லால்
உழைத்தா மொளித்தாற் கதவந்தொண் டுறைககப் பாடி யடைப்பித்த
தழைத்த மொழியா ருப்பாலார் தாமிங் கெப்பான் மறைவதென (உஅ0)

மாட நீடு திருபபுகலி மன்ன ரவர்க்கு மாலயனா
நேடி யின்னங் காணாதார் நேரே காட்சி கொடுத்தருள
ஆடல் கண்டு பணிந்தேத்தி யரசுங காணக் காட்டுதலும
பாட வடியா ரென்றெடுத்துப் பரமர் தம்மைப் பாடினார். (உஅக)

---

**திருவாய்மூர் - திருத்தாண்டகம்.**

*திருச்சிற்றம்பலம்*

பாடவடியார்பரவக்கண்டேன்பத்தர்கணங்கண்டேன்மொய்த்தபூத
மாடனமுழவமதிரக்கண்டேனங்கையனல்கண்டேன்கங்கையாளைக [டேன்
கோடலரவார்சடையிற்கண்டேன்கொக்கினிதழ்கண்டேன்கொன்றைகண்
வாடற்றலையொன்றுகையிற்கண்டேன்வாய்மூரடிகளைநானகண்டவாறே

கலங்கவிருவர்க்கழலாய்நீண்டகாரணமுங்கண்டேன்கருவாய்நின்று
பலங்கடரித்துகந்தபண்புங்கண்டேன்பாடலொலியெலாங்கூடககண்டேன்
இலங்கைத்தலைவன்சிரங்கள்பததுமிறுத்தவனுக்கீந்தபெருமைகணடேன்
வலங்கைததலததுள்ளனலுங்கண்டேன்வாயமூரடிகளைநானகணடவாறே

*திருசசிற்றம்பலம*

---

பாடுந் தமிழ்மாலைகள்கொண்டு பரமா தாமு மெழுந்தருள
நீடுந் திருவாய் மூரடைந்து நிலவுங் கோயில வலஞ்செய்து
சூடும் பிறையார் பெருந்தொண்டா தொழுது போற்றித துதிசெய்து
நாடுங காதல் வளாந்தோங்க நயந்தந் நகரி னுடனுறைந்தார் (உஅஉ)

ஆண்ட வரசும் பிள்ளையா ருடனே யங்க ணினிதமர்ந்து
பூண்ட காதல் பொங்கியெழ வாய்மூ ரடிக ளடிபோற்றி
மூண்ட வனபின மொழிமாலை சாததி ஞான முனிவரொடு
மீண்டு வந்து திருமறைக்காட் டெய்தி விமலா தாள்பணிந்தார். (உஅங)

ஆதி முதல்வா தமைப்பணிந்தங் கான பணிசெய் தமருநாட்
சீத மதிவெண் குடைவளவர் மகளார் தென்னன் றேவியாங
கோதில் குணத்துப் பாண்டிமா தேவி யார்முன் குலச்சிறையாா
போத விட்டாா சிலர்வநதாா புகலி வேந்தர் தமைககாண (உஅச)

வந்து சிவனார் திருமறைக்கா டெய்தி மன்னு வேணுபுரி
அந்த ணாளா தமக்கறிவித் தவர்பா லெய்தி யடிவணங்கச்
சிநதை மகிழ்ந்து தீதின்மை வினவத் தீங்கு முளவாமோ
இந்த வுலக முயவநதீ ரிருதா ணினைவார்க் கென்றுரைப்பார் (உஅரு)

(உஅ0) உழை - இவவிடததில. (உஅச) வளவா - சோழராசன. தென்னன-பாணடியன. பாணடிமாதேவியாா - மஙகையாகசரசியாா.

சைவ நெறிவை திகழ்ந்தற்கச் சழக்கு நெறியைத் தவமென்னும்
பொய்வல் லமணர் செயறன்னைப் பொறுக்க கில்லோ மெனக்கேட்டே
அவ்வன் றொழிலோர் செயன்மாற்றி யாதி சைவ நெறிவிளங்கத்
தெய்வ நீறு நினைந்தெழுந்தார் சீர்கொள் சணைபைத் திருமறையோர். ()

ஆய பொழுது திருநாவுக் கரசு புகலி யாண்டகைக்குக்
காய மாசு பெருகவியுழல கலதி யமணர் கடுவினைசெய்
மாயை சால மிகவல்லா ரவர்மற் றென்னை முன்செய்த
தீய தொழிலும பலகெட்டேன் செல்ல விசையேன் யானென்றார். (உஅஎ)

என்று கூற வெல்லையிலா நீறு போற்று மிருவரையுஞ்
சென்று காணுங கருத்துடையே னங்குத் தீங்கு புரியமணர்
நின்ற நிலைமை யழிவித்துச சைவ நெறிபா ரித்தன்றி
ஒன்றுஞ் செய்யே னுணையும தென்ற ருடைய பிள்ளையார். (உஅஅ)

போமா றணிந்து நீரஙகுப் போகப் போதா வவ்வமணர்
தீமா யையினை யானேபோயச சிதைத்து வருகின் றேனென்ன
ஆமா றலலா முரைததவரை மறுகக மாட்டா தரசிருப்பத
தாமா தரவாற் றமிழ்நாட்டிற் போனார் ஞானத தலைவனார். (உஅகூ)

வேணு புரககோ னெழுநதருள விடைகொண டிருந்த வாகீசர்
பூணு மனபான மறைககாட்டிற் புனிதா தம்மைப் போற்றிசைத்துப்
பேணி யிருநதங குறையுநாட் பெயர்வாா வீழி மிழலையமர்
தாணு வினறன் செய்யகழன் மீணடுஞ சாா நினைககின்றார். (உகூ0)

சோலை மறைக்காட் டமர்நதருளுஞ் சோதி யருள்பெற் றகன்றுபோய்
வேலை விடமுண் டவர்வீழி மிழலை மீண்டுஞ் செல்வனென
ஞால நிகழ்நத நாகைக்கா ரோணம் பிறவுந் தாமபணிநது
சாலு மொழிவண் டமிழ்பாடித தலைவர் மிழலை வநதடைந்தார். (உகூக)

வீழி மிழலை தனைப்பணிந்து வேத முதல்வர் தாமிருப்ப
ஆழி வலமேந் தியவரியா லாகா சத்தி னின்றிழிந்த
வாழி மலாந்த கோயிறனின் மன்னும் பொருளைப் போற்றிசைத்துத்
தாழு நாளிற் பிறபதியும் பணியுங காத றலைநிற்பார். (உகூஉ)

பூவிற் பொலியும் புனற்பொன்னிக் கரைபோய்ப் பணிவார் பொற்பமைந்த
ஆவுக் கருளு மாவடுதண் டுறையார் பாத மணைந்திறைஞ்சி
நாவுக் கரசர் ஞானபோ னகர்க்குச் செம்பொ னாயிரமும்
பாவுக் களித்த திறம்போற்றிப் போந்து பிறவும் பணிகின்றார். (உகூங)

---

(உஅஎ) கலதிஅமணா - பொயயாகளாகிய சமணாகள, மூதேவிகள. (உஅஅ) பாரிதது - வளாததது, ஓஙகச்செயது. (உஅகூ) தமிழநாடடில - பாணடியநாடடில. (உகூ0) வேணுபுரக்கோன - திருஞானசமபநதமூாததி சுவாமிகள் (உகூங) ஆவுககு அருளும - பசுவிறகு முததி கொடுததருளும.

**திருவாவடுதுறை - திருநேரிசை.**

*திருச்சிற்றம்பலம்.*

*மாயிருஞாலமெல்லாமலரடிவணங்கும்போலும்*
*பாயிருங்கங்கையாளைப்படர்சடைவைப்பர்போலுங்*
*காயிரும்பொழில்கள்சூழ்ந்தகழுமலவூரர்க்கம்பொன்*
*ஆயிரங்கொடுப்பர்போலுமாவடுதுறையனாரே*

*பார்த்தனுக்கருள்வர்போலும்படர்சடைமுடியர்போலும்*
*ஏத்துவாரிடர்கடீரவின்பங்கள்கொடுப்பர்போலும்*
*கூத்தராய்ப்பாடியாடிக்கொடுவலியரக்கன்றன்னை*
*யார்த்தவாயலறுவிப்பராவடுதுறையனாரே.*

*திருச்சிற்றம்பலம்.*

---

*செய்ய சடையார் பழையாறை யெய்த வதனிற் செல்பொழுதின்*
*மைய லமணர் மறைத்தவடை தளியின் மன்னுஞ் சிவனாரைக்*
*கைகள் கூப்பித் தொழுதருளக், கண்ட வாறங் கமணாகடம்*
*பொய்கொள் விமான மெனக்கேட்டுப் பொறாத வுள்ள மிகப்புழுங்கி ()*

*அந்த விமானந் தனக்கருகா வாங்கோ ரிடத்தின் பாங்கெய்திக்*
*கந்த மலருங் கடிக்கொன்றை முடியார் செய்ய கழலுன்னி*
*மந்த வமணர் வஞ்சனையான் மறைத்த வஞ்ச மொழித்தருளிப்*
*பந்தங் கொண்ட குண்டர்திறம் பாற்று மென்று பணிந்திருந்தார். (உகூரு)*

*வண்ணங் கண்டு நானும்மை வணங்கி யன்றிப் போகேனென்*
*றெண்ண முடிக்கும் வாகீச ரிருந்தா ரமுது செய்யாதே*
*யண்ண லாரு மதுவுணர்ந்தங் கரசு தம்மைப் பணிவதற்குத்*
*திண்ண மாக மன்னனுக்குக் கனவி லருளிச் செய்கின்றார் (உகூசு)*

*அறிவி லமணர் நமைமறைப்ப விருந்தோ மென்றங் கடையாளக்*
*குறிக ளறியச் செய்தருளி நம்மை யரசு கும்பிடவா*
*னெறியி லமணர் தமையழித்து நீக்கிப் போக்கென் றருள்புரியச்*
*செறிவி லறிவுற் றெழுந்தவனுஞ் செங்கை தலைமேற் குவித்திறைஞ்சி ()*

*கண்ட வியப்பு மந்திரிகட் கியம்பிக் கூடக் கடிதெய்தி*
*யண்டர் பெருமா னருள்செய்த வடையா ளத்தின் வழிகண்டு*
*குண்டர் செய்த வஞ்சனையைக் குறித்து வேந்தன் குலவுபெருந்*
*தொண்டர் தம்மை யடிவணங்கித் தொக்க வமணர் தூரறுத்தான். (உகூஅ)*

*ஆனை யினத்திற் றுகைப்புண்ட வமண ரிரமு மாய்ந்ததற்பின்*
*மேன்மை யரச னீசர்க்கு விமான மாக்கி விளக்கியபின்*

---

(உகூரு) பாற்றும் - ஒழியும், அழியும். (உகூசு) வண்ணமகண்டு - தேவரீர் திருமேனியைத் தரிசித்து. (உகூஅ) தூர் - வேரை.

ஆன வழிபாட் டர்ச்சனைக்கு நிபந்த மெல்லா மமைத்திறைஞ்ச
ஞான வரசும் புக்கிறைஞ்சி நாதர் முன்பு போற்றுவார். (உ௯௯)

தலையின் மயிரைப் பறித்துண்ணுஞ் சாதி யமணர் மறைத்தாலு
நிலையி லாதார் நிலைமையினுன் மறைக்க வொண்ணு மோவென்னும்
விலையில் வாய்மைக் குறுந்தொகைகள் விளம்பிப் புறம்போந் தங்கமர்ந்தே
யிலைகொள் சூலப் படையார்சே ரிடங்கள் பிறவுந் தொழுதணைவார். (௩௦௦)

---

திருப்பழையாறைவடதளி - திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்.

தலையெலாம்பறிக்குஞ்சமண்கையருள்
நிலையினுன்மறைத்தான்மறைக்கொண்ணுமே
அலையினாபொழிலாறைவடதளி
நிலையினனடியேநினைந்துய்ம்மினே.

செருத்தனைச்செயுஞ்சேணரக்கன்னுடல்
எருதநிறவிரலாலிறையூன்றிய
அருததனைப்பழையாறைவடதளித்
திருத்தனைத்தொழுவார்வினைதேயுமே.

திருச்சிற்றம்பலம்.

---

பொஙகு புனலார் பொன்னியினி லிரண்டு கரையும் பொருவிடையார்
தஙகு மிடஙகள் புககிறைஞ்சித் தமிழ்மா லைகளுஞ் சாத்திப்போய்
எஙகு நிறைநத புகழாள ரீறி ரூண்ட ரெதிர்கொள்ளச்
செஙகண் விடையார் திருவானைக் காவின் மருங்கு சென்றணைந்தார். ()

சிலந்திக கருளுங கழல்வணங்கிச் செஞ்சொன் மாலை பலபாடி
இலஙகு சடையா ரெறும்பியூர் மலையு மிறைஞ்சிப் பாடியபின்
மலர்ந்த சோதி திருச்சிராப் பள்ளி மலையுங கற்குடியு
நலஙகொள் செல்வத திருப்பராய்த் துறையுந் தொழுவா னண்ணினர் ()

மற்றப் பதிகண் முதலான மருங்குள் ளனவுங் கைதொழுது
பொற்புற் றமைந்த திருப்பணிகள் செய்து பதிகங் கொடுபோற்றி
உற்ற வருளாற் காவிரியை யேறி யொன்னார் புரமெரியச்
செற்ற சிலையாா திருப்பைஞ்ஞீ லியினைச் சென்று சேர்கின்றார். (௩0௩)

வழிபோம் பொழுது மிகவிளைத்து வருத்த முறநீர் வேட்கையொடும்
அழிவாம் பசிவந தணைந்திடவு மதற்குச் சித்த மலையாதே
மொழிவேந தருமுன் னெழுந்தருள முருகார் சோலைப் பைஞ்ஞீலி
விழியேந் தியநெற் றியினார்தந் தொண்டர் வருத்த மீட்பாராய். (௩0௪)

(௩0௪) மொழிவேநதரும - நாவுககரசரும.

காவுங் குளமு முன்சமைத்துக் காட்டி வழிபோங் கருத்தினன்
மேவுந் திருநீற் றந்தணராய் விரும்பும் பொதிசோ றுங்கொண்டு
நாவின் றனிமன் னவர்க்கெதிரே நண்ணி யிருந்தார் விண்ணின்மேற்
றாவும் புள்ளு மண்கிழிக்குந் தனியே னமுங்காண் பரியவர்தாம். (௩௦௫)

அங்க ணிருந்த மறையவர்பா லாண்ட வரசு மெழுந்தருள
வெங்கண் விடைவே தியர்நோக்கி மிகவும் வழிவந் திளைத்திருந்தீர்
இங்கென் பாலே பொதிசோறுண் டிதனை யுண்டு தண்ணீரிப்
பொங்கு குளத்திற் குடித்திளைப்புப் போக்கிப் போவீ ரெனப்புகன்றார் ()

நண்ணுந் திருநா வுக்கரசர் நம்ப ரருளென் றறிந்தார்போல்
உண்ணு மென்று திருமறையோ ருரைத்துப் பொதிசோ றளித்தலுமே
எண்ண நினையா தெதிர்வாங்கி யினிதா வமுது செய்தினிய
தண்ணீ ரமுது செய்தருளித் தூய்மை செய்து தளர்வொழிந்தார் ()

எய்ப்பு நீங்கி நின்றவரை நோக்கி யிருந்த மறையவனார்
அப்பா லெங்கு நீர்போவ தெனவா ரரசு மவர்க்கெதிரே
செப்பு வார்யான் றிருப்பைஞ்ஞீ லிக்குப் போவ தென்றுரைத்தார்
ஒப்பி லாரும் யானங்குப் போகின் றேனென் றுடன்போந்தார் (௩௦௮)

கூட வந்து மறையவனா திருப்பைஞ் ஞீலி குறுகியிட
வேட மவர்முன் மறைத்தலுமே மெய்ம்மைத் தவத்து மேலவராம்
ஆடல் புரிந்தா ரடியேனைப் பொருளா வளித்த கருணையெனப்
பாடல் புரிந்து விழுந்தெழுந்து கண்ணீ ரமாரி பயில்வித்தார் (௩௦௯)

பைஞ்ஞீ லியினி லமர்ந்தருளும் பரமர் கோயில் சென்றெய்தி
மைஞ்ஞீ லத்து மணிகண்டர் தம்மை வணங்கி மகிழ்சிறந்து
மெய்ஞ்ஞா னத்தி லன்புருக விரும்பும் தமிழ்மா லைகள்பாடிக்
கைஞ்ஞீ டியதந் திருத்தொண்டு செய்து காத லுடனிருந்தார். (௩௧௦)

நாதர் மருவுந் திருமலைக ளுடனும் பதிகள் பலமிகவுங்
காதல் கூரச் சென்றிறைஞ்சிக் கலந்த விசைவண் டமிழ்பாடி
மாதொர் பாக ரருளாலே வடபா லேகி வாகீசர்
ஆதி தேவ ரமர்ந்ததிரு வண்ணா மலையை நண்ணினார். (௩௧௧)

செங்கண் விடையார் திருவண்ணா மலையைத் தொழுது வலங்கொண்டு
துங்க வரையின் மிசையேறித் தொண்டர் தொழும்புக் கெதிர்நிற்கும்
அங்க ணரசைத் தொழுதெழுந்து திளைத்துத் திருநா வுக்கரசர்
தங்கு பிறப்பே வீட்டினுக்கு மேலாம் பெருமை சாதித்தார். (௩௧௨)

---

(௩௦௫) காவும் - சோலையும். புள்ளும் - அன்னமாகிய அயனும். ஏனமும் - பன்றியாகிய அரியும். (௩௦௮) எய்ப்பு - இளைப்பு.

அண்ணா மலைமே லணிமலையை யாரா வன்பி னடியவர்தங்
கண்ணா ரமுதை விண்ணோரைக் காக்கக் கடலில் வந்தெழுந்த
உண்ணா நஞ்ச முண்டானைக் கும்பிட் டுருகுஞ் சிந்தையுடன்
பண்ணார் பதிகத் தமிழ்பாடிப் பணிந்து பரவிப் பணிசெய்தார். (௩௧௩)

---

**திருவண்ணாமலை - திருநேரிசை.**

திருச்சிற்றம்பலம்.

ஓதிமாமலர்கடூவியுமையவள்பங்காமிக்க
சோதியேதுளங்குமெண்டோட்சுடர்மழுப்படையினானே
ஆதியேயமரர்கோவேயணியணாமலையுளானே
நீதியானின்னையல்லானினையுமாநினைவிலேனே.

இரக்கமொன்றியாதுமில்லாக்காலனைக்கடந்தவெம்மான்
உரத்தினால்வரையையூக்கவொருவிரனுதியினாலே
யரக்கனைநெரித்தவண்ணாமலையுளாயமரரேறே
சிரத்தினால்வணங்கியேத்தித்திருவடிமறப்பிலேனே.

திருச்சிற்றம்பலம்.

---

பணியார் வேணிச் சிவபெருமான் பாதம் போற்றிப் பணிசெய்நாண்
மணியார் கண்டத் தெம்பெருமான் மண்மேன் மகிழு மிடமெங்குந்
தணியாக் காத லுடன்சென்று வணங்கித் தக்க பணிசெய்வார்
அணியார் தொண்டைத் திருநாட்டி லருளா லணைவா ராயினார் (௩௧௪)

காதல் செய்யுங் கருத்தினுடன் காடு மலையுங் கான்யாறுஞ்
சூத மலிதண் பணைப்பதிகள் பலவுங் கடந்து சொல்லினுக்கு
நாதர் போந்து பெருந்தொண்டை நன்னாட் டெய்தி முன்னாகச்
சீத மலர்மென் சோலைசூழ் திருவோத் தூரிற் சென்றடைந்தார். (௩௧௫)

செக்கர்ச் சடையார் திருவோத்தூர்த் தேவர் பிரானார் தங்கோயில்
புக்கு வலங்கொண் டெதிரிறைஞ்சிப் போற்றிக் கண்கள் புனல்பொழிய
முக்கட் பிரானை விரும்புமொழித் திருத்தாண் டகங்கள் முதலாகத்
தக்க மொழிமா லைகள்சாத்திச் சார்ந்து பணிசெய் தொழுகுவார். (௩௧௬)

செய்ய வையர் திருவோத்தூ ரேத்திப் போந்து செழும்புவனம்
உய்ய நஞ்சுண் டருளுமவ ருறையும் பதிகள் பலவணங்கித்
தைய றழுவக் குழைந்தபிரான் றங்குந் தெய்வப் பதியென்று
வைய முழுதுந் தொழுதேத்து மதில்சூழ் காஞ்சி மருங்கணைந்தார். (௩௧௭)

ஞால முய்யத் திருவதிகை நம்பர் தம்பே ரருளினாற்
சூலை மடுத்து முன்னாண்ட தொண்டர் வரப்பெற் றோமென்று

---

(௩௧௫) சூதமலி தண்பணை பதிகள் - மாமரங்கள் நிறைந்த குளிர்ச்சிபொருந்திய மருதநிலத்தூர்கள்.

காலை மலருங் கமலம்போற் காஞ்சி வாணர் முகமெல்லாஞ்
சால மலர்ந்து களிசிறப்பத் தழைத்த மனங்க டாங்குவார். (௩௧௯)

மாட வீதி மருங்கெல்லா மணிவா யில்களிற் றோரணங்கள்
நீடு கதலி யுடன்கமுகு நிறைத்து நிறைபொற் குடந்தீபந்
தோடு குலவு மலர்மாலை சூழ்ந்த வாசப் பந்தர்களும்
ஆடு கொடியு முடனெடுத்தங் கணிநீள் காஞ்சி யலங்கரித்தார். (௩௨௦)

தொண்ட ரீண்டி யெதிர்கொள்ள வெழுந்து சொல்லுக் கரசர்பாற்
கொண்ட வேட்கைப் பொலிவினொடுங் குலவும் வீதி பணிசெய்யும்
அண்ட ரறிதற் கரியதிரு வலகு முதலா மவையேந்தி
இண்டை புனைந்த சடைமுடியார்க் கன்பர் தம்மை யெதிர்கொண்டார் ()

எதிர்கொண் டிறைஞ்சுஞ் சீரடியார் தம்மை யிறைஞ்சி யெழுந்தருளி
மதில்கொண் டணிந்த காஞ்சிநகர் மறுகுட் போந்து வானநதி
குதிகொண் டெழுந்த சடைக்கம்பர் செம்பொற் கோயில் குறுகினார்
அதிர்கொண் டலைநேர் மணிமிடற்றா ராண்ட திருநா வுக்கரசர் (௩௨௧)

திருவா யிலினைப் பணிந்தெழுந்து செல்வத் திருமுன் றிலையணைந்து
கருவார் கச்சி யேகம்பர் கனக மணிமா ளிகைசூழ்ந்து
வருவார் செம்பொன் மலைவல்லி தழுவக் குழைந்த மணிமேனிப்
பெருவாழ் வினைமுன் கண்டிறைஞ்சிப் பேரா வன்பு பெருக்கினார் (௩௨௨)

வார்ந்து சொரிந்த கண்ணருவி மயிர்க்கா றோறும் வரும்புளகம்
ஆர்ந்த மேனிப் புறம்பலைப்ப வன்பு கரைந்தென் புள்ளலைப்பச்
சேர்ந்த நயனப் பயன்பெற்றுத் திளைப்பத் திருவே கம்பர்தமை
நேர்ந்த மனத்தி லுறவைத்து நீடு பதிகம் பாடுவார் (௩௨௩)

வேறு

கரவாடும் வன்னெஞ்சர்க் கரியானை யென்றெடுத்துப்
பரவாய சொன்மாலைத் திருப்பதிகம் பாடியபின்
விரவார்தம் புரமெரித்த விடையவனார் வெள்ளெயிற்றின்
அரவாரம் புனைந்தவர்தந் திருமுன்றிற் புறத்தணைந்தார் (௩௨௪)

திருவேகம்பம் - பண் - காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

கரவாடும்வன்னெஞ்சர்க்கரியானைக்கரவார்பால்
விரவாடும்பெருமானைவிடையேறும்வித்தகனை
யரவாடச்சடைதாழவங்கையினனலேந்தி
யிரவாடும்பெருமானையென்மனத்தேவைத்தேனே.

(௩௨௰) இண்டை - பூமாலை, கொண்டைமாலையினும் சிறியதாய வட்டமாகச்
சாத்தப்படுவது. (௩௨௪) எயிற்றின் அரவு ஆரம் - பற்களையுடைய சர்ப்பாபரணம்.

அடுத்தானையுரித்தானையருச்சுனற்குப்பாசுபதங்
கொடுத்தானைக்குலவரைமேயசிலையாகக்கூரம்பு
தொடுத்தானைப்புரமெரியச்சுனைமல்குகயிலாயம்
எடுத்தானைததடுத்தானையென்மனத்தே தவைத்தேனே.
திருச்சிற்றம்பலம்.

---

கையார்ந்த திருத்தொண்டு கழியமிகுங் காதலொடுஞ்
செய்யாநின் றேயெல்லாச் செந்தமிழ்மா லையும்பாடி
மையார்ந்த மிடற்றாதிரு மயானத்தை வலங்கொண்டு
மெய்யார்வ முறத்தொழுது விருப்பினொடு மேவுவார். (௩௨௫)

சீர்வளரு மதிற்கச்சி நகர்த்திருமேற் றளிமுதலா
நீர்வளருஞ் சடையவர்தா நிலவியுறை யாலயங்கள்
ஆர்வமுறப் பணிந்தேத்தி யாழ்ந்ததமிழ்ச் சொன்மலராற்
சார்வுறுமா லைகளசாத்தித தகுந்தொண்டு செய்திருந்தார் (௩௨௬)

அந்நகரி லவ்வண்ண மமர்ந்துறையு நாளின்கண்
மன்னுதிரு மாற்பேறு வந்தணைந்து தமிழ்பாடிச
சென்னிமிசை மதிபுனைவார் பதிபலவுஞ் சென்றிறைஞ்சித்
துன்னினா காஞ்சியினைத தொடர்ந்தபெருங் காதலினால் (௩௨௭)

ஏகம்பன் காணவனென் னெண்ணத்தா னெனப்போற்றிப்
பாகம்பெண் ணுருவானைப் பைங்கண்விடை யுயாததானை
நாகம்பூ ணுகந்தானை நலம்பெருகுந் திருநீற்றின்
ஆகந்தோ யணியானை யணைந்துபணிந் தின்புற்றார் (௩௨௮)

---

திருவேகம்பம் - திருத்தாண்டகம்.

திருச்சிற்றமபலம்

கூற்றுவனகாண்கூற்றுவனைகருமைதததகோன்காண்குவலயன்காண்குவலயத்தினீராஞன்காண, காற்றவன்காணகனலவன்காணகலிக்குமின்காணகனபவளச்செம்மேனிகலந்தவெள்ளை, நீற்றவனகாணிலாவூருஞ்சென்னியான்காணிறையாரநதபுனற்கஙகைநிமிரசடைமே, லேற்றவனகாணெழிலாரும்பொழிலாரகச்சிமேயகம்பன்காணவனென்னெண்ணததானே

அறுததான்காணயன்சிரத்தையமரர்வேணடவாழ்கடலினஞ்சுண்டங்கணிநீர்க்கஙகை, செறுததான்காணடேவர்ககுநததவனஞன்காண்டிசையனைத்துந் தொழுதேத்தக் கலைமான்கையிற், பொறுத்தான்காண புகலிடததைநலியவந்துபொருகயிலையெடுத்தவன்றன் முடிதோளைநத, திறுததான்காணெழிலாரும்பொழிலார்கசசியேகம்பன்காணவனெனனெண்ணத்தானே
திருச்சிற்றம்பலம்.

---

திருவேகம்பர் - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்

உரித்தவன்காணுரக்களிற்றையுமையாளால்கவோங்காரத்தொருவன்காணுரமெய்ஞ்ஞானம, விரித்தவன்காண்விரித்தநால்வேதத்தான்காண்விய

---

(௩௨௮) ஆகந்தோய அணியானை - திருமேனி நிரம்பிய அழகுடையவரை.

னுலகிற்பல்லுயிரைவிதியினாலே, தெரித்தவன்காண்சில்லுருவாய்த்தோன்றி யெங்குந் திரண்டவன்காணடிரிபுரத்தைவேவவில்லால், எரித்தவன்காணெழிலாரும்பொழிலார்கச்சியேகம்பன்காணவனென்னெண்ணத்தானே.

பொன்னிசையும்புரிசடையெம்புனிதன்றான்காண்பூதகணநாதன்காண் புலித்தோலாடைத், தன்னிசையவைத்தவெழிலரவினான்காண்சங்கவெண்குழைக்காதிற்சதிரன்றான்காண், மின்னிசையும்வெள்ளெயிற்றோன்வெகுண்டு வெற்பையெடுக்கவடியடர்ப்பமீண்டவன்றன்வாயில், இன்னிசைகேட்டிலங் கொளிவாளீந்தோன்கச்சியேகம்பன்காணவனென்னெண்ணத்தானே.

திருச்சிற்றம்பலம்.

---

திருக்கச்சி யேகம்பம் பணிந்தேத்தித் திங்களார்
நெருக்கச்செஞ் சடைக்கணிந்தார் நீடுபதி தொழநினைவார்
வருக்கைச்செஞ் சுளைபொழிதேன் வயல்விளைக்கு நாட்டிடைப்போய்ப்
பருக்கைத்திண் களிற்றுரியார் கழுக்குன்றின் பாங்கணைந்தார் (௩௨௯)

நீடுதிருக் கழுக்குன்றி னிருத்தனார் கழல்வணங்கிப்
பாடுதமிழ்த் தொடைபுனைந்து பாங்குபல பதிகளிலுஞ்
சூடுமிளம் பிறைமுடியார் தமைத்தொழுது போற்றிப்போய்
மாடுபெருங் கடலுடுத்த வான்மியூர் மருங்கணைந்தார். (௩௩௦)

திருவான்மி யூர்மருந்தைச் சேர்ந்துபணிந் தன்பினொடும்
பெருவாய்மைத் தமிழ்பாடி யம்மருங்கு பிறப்பறுத்துத்
தருவார்தங் கோயில்பல சார்ந்திறைஞ்சித் தமிழ்வேந்தர்
மருவாரு மலர்ச்சோலை மயிலாப்பூர் வந்தடைந்தார். (௩௩௧)

வரைவளர்மா மயிலென்ன மாடமிசை மஞ்சாடுந்
தரைவளர்சீர்த் திருமயிலைச் சங்கரனார் தாள்வணங்கி
யுரைவளர்மா லைகளணிவித் துழவாரப் படையாளி
திரைவளர்வே லைக்கரைபோய்த் திருவொற்றி யூர்சேர்ந்தார். (௩௩௨)

ஒற்றியூர் வளநகரத் தொளிமணிவீ திகள்விளக்கி
நற்கொடிமா லைகள்பூக நறுங்கதலி நிரைநாட்டிப்
பொற்குடங்க டீபங்க டூபங்கள் பொலிவித்து
மற்றவரை யெதிர்கொண்டு கொடுபுக்கார் வழித்தொண்டர் (௩௩௩)

திருநாவுக் கரசருமத் திருவொற்றி யூரமர்ந்த
பொருநாகத் திண்சிலையார் கோபுரத்தை யிறைஞ்சிப்புக்
கொருஞானத் தொண்டருட னுருகியலங் கொண்டடியார்
கருநாமந் தவிர்ப்பாரைக் கைதொழுது முன்வீழ்ந்தார். (௩௩௪)

---

(௩௨௯) திங்கள் ஆர் - சந்திரனையும், ஆத்திமாலையினையும். வருக்கை - பலா. (௩௩௨) வரைவளர் மாமயில் என்ன - மலையில் வளரும் பெருமையுடைய மயிலைப்போலும், (௩௩௪) பொருநாகம் திண்சிலையார் - ஒப்பில்லா மேருவெனும் வலிய வில்லையேந்திய சிவபெருமான்.

எழுதாத மறையளித்த வெழுத்தறியும் பெருமானைத்
தொழுதார்வ முறநிலத்திற் றோய்ந்தெழுந்தே யங்கமெலா
முழுதாய பரவசத்தின் முகிழ்த்தமயிர்க் கான்மூழ்க
விழுதாரை கண்பொழிய விதிர்ப்புற்று விம்மினார். (௩௩௫)

வண்டோங்கு செங்கமல மெனவெடுத்து மனமுருகப்
பண்டோய்ந்த சொற்றிருத்தாண் டகம்பாடிப் பரவுவார்
விண்டோய்ந்த புனற்கங்கை வேணியார் திருவுருவங்
கண்டோங்கு களிசிறப்பக் கைதொழுது புறத்தணைந்தார். (௩௩௬)

---

## திருவொற்றியூர் - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்

வண்டோங்குசெங்கமலக்கழுநீர்மல்குமதமத்தஞ்செஞ்சடைமேன்மதியஞ்சூடித, திண்டோள்களாயிரமுமவீசிநின்றுதிசைசேரநடமாடிச்சிவலோகனா, உண்டானஞ்சுலகுக்கோருறுதிவேண்டியொற்றியூர்மேயவொளிவண்ணனார், கண்டேனவனைத்திறக்கண்டேற்கென்னகடும்பிணியுஞ்சுடுநெதொழிலுங்கைவிட்டவே

மருவுற்றமலர்க்குழலிமடவாளஞ்சமலைத்துளங்கத்திசைநடுங்கச்செறுத்துநோக்கிச, செருவுற்றவாளரக்கன்வலிதான்மாளத்திருவடியின்விரலொன்றாலலறவூன்றி, உருவொற்றியங்கிருவரோடிக்காணவோங்கினவவ்வொள்ளழலார்ங்கேவந்து, திருவொற்றியூர்நம்மூரென்றுபோனார்செறிவளைகளொன்றொன்றாச்சென்றவாறே

திருச்சிற்றம்பலம்

---

விளங்குபெருந் திருமுன்றின் மேவுதிருப் பணிசெய்தே
யுளங்கொடிரு விருத்தங்க ளோங்குதிருக் குறுந்தொகைகள்
களங்கொடிரு நேரிசைகள் பலபாடிக் கைதொழுது
வளங்கொடிருப் பதியதனிற் பலநாள்கள் வைகினார். (௩௩௭)

---

## திருவொற்றியூர் - திருவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்

செற்றுக்களிற்றுரிகொள்கின்றஞான்றுசெருவெணகொம்பொன்
றிற்றுக்கிடந்ததுபோலுமிளம்பிறைபாம்பதனைச
சுற்றிக்கிடந்ததுகிம்புரிபோலச்சுடரிமைக்கு
நெற்றிக்கண்மற்றதன்முத்தொக்குமாலொற்றியூரனுக்கே.

தருக்கினவாளரக்கன்முடிபத்திறப்பாதந்தன்னால்
ஒருக்கினவாறடியேனைப்பிறப்பறுத்தாளவல்லான்
நெருக்கினவானவர்தானவர்கூடிக்கடைந்தநஞ்சைப்
பருக்கினவாறென்செய்கேனொற்றியூருறைபண்டங்கனே.

திருச்சிற்றம்பலம்.

### திருவொற்றியூர் - திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்.

ஒற்றியூருமொளிமதிபாம்பினை
ஒற்றியூருமப்பாம்புமதனையே
ஒற்றியூரவொருசடைவைத்தவன்
ஒற்றியூர்தொழநம்வினையோயுமே.

வரையினாருயர்தோளுடைமன்னனை
வரையினாலவலிசெற்றவர்வாழ்விடம்
திரையினார்புடைசூழ்திருவொற்றியூர்
உரையினாற்பொலிந்தாருயர்ந்தார்களே.

---

### திருவொற்றியூர் - திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்.

ஓம்பினேன்கூட்டைவாளாவுள்ளதோர்கொடுமைவைத்துக்
காம்பிலாமூழைபோலக்கருதிற்றேமுகக்கமாட்டேன்
பாம்பின்வாய்த்தேரைபோலப்பலபலநினைக்கின்றேனை
யோம்பிநீயுய்யக்கொள்ளாயொற்றியூருடையகோவே.

மனமெனுந்தோணிபற்றிமதியெனுங்கோலையூன்றிச்
சினமெனுஞ்சரக்கையேற்றிச்செறிகடலோடும்போது
மதனெனும்பாறைதாக்கிமறியும்போதறியவொண்ணா
துணையுனுமுணர்வைநல்காயொற்றியூருடையகோவே.

திருச்சிற்றம்பலம்

---

அங்குறையு நாளின்க ணருகுளவாஞ் சிவாலயங்கள்
எங்குஞ்சென் றினிதிறைஞ்சி யேத்துமவ ரிறையருளாற்
பொங்குபுனற் றிருவொற்றி யூர்தொழுது போந்துமையாள்
பங்குடையா ரமர்ந்ததிருப் பாசூராம பதியணைந்தார். (௩௩௮)

திருப்பாசூர் நகரெய்திச் சிந்தையினில் வந்தூறும்
விருப்பார்வ மேற்கொள்ள வேயிடங்கொண் டுலகுய்ய
இருப்பாரைப் புரமூன்று மெரித்தருள வெடுத்ததனிப்
பொருப்பார்வெஞ் சிலையாரைத தொழுதெழுந்து போற்றுவார். (௩௩௯)

முந்திமூ வெயிலெய்த முதல்வனா ரெனவெடுத்துச்
சிந்தைகரைந் துருகுதிருக் குறுந்தொகையுந் தாண்டகமுஞ்
சந்தநிறை நேரிசையு முதலான தமிழ்பாடி
யெந்தையார் திருவருள்பெற் றேகுவார் வாகீசர். (௩௪௦)

---

### திருப்பாசூர் - திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்.

முந்திமூவெயிலெய்தமுதல்வனார்
சிந்திப்பார்வினைதீர்த்திடுஞ்செல்வனார்

அந்திக்கோன்றனக்கேயருள்செய்தவர்
பந்திசெஞ்சடைப்பாசூரடிகளே.

திரியுமூவெயில்செங்கணையொன்றினால்
எரியவெய்தவரேனுமிலங்கைக்கோன்
நெரியவூன்றியிட்டார்விரலொன்றினால்
பரியாநுண்ணியர்பாசூரடிகளே.

திருச்சிற்றம்பலம்.

### திருப்பாசூர் - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்.

விண்ணாகிநிலனாகிவிசும்புமாகிவேலைசூழ்ஞாலத்தார்விரும்புகின்ற
எண்ணாகியெழுத்தாகியியல்புமாகியேழுலகுந்தொழுதேத்திக்காணநின்ற
கண்ணாகிமணியாகிககாட்சியாகிககாதலித்தங்கடியார்கள்பரவநின்ற
பண்ணாகியின்னமுதாம்பாசூர்மேயபரஞ்சுடரைக்கண்டடியேனுய்ந்தவாறே.

வேந்தனெடுமுடியுடையவரக்கர்கோமான்மெல்லியலாளுமைவெருவவி ரைந்திட்டோடிச், சாந்தமெனநீறணிந்தான்கயிலைவெற்பைத்தடக்கைகளா லெடுத்திடலுந்தாளாலூன்றி,யேந்துதிரடிண்டோளுந்தலைகள்பத்துமிறுத்த வன்றனிசைகேட்டிரக்கங்கொண்ட, பாந்தளணிசடைமுடியெம்பாசூர்மே யபரஞ்சுடரைககண்டடியேனுய்ந்தவாறே

திருச்சிற்றம்பலம்.

அம்மலர்ச்சீர்ப் பதியையகன் றயலுளவாம் பதியனைத்தின்
மைம்மருவு களத்தாரை வணங்கிமகிழ் வொடும்போற்றி
மெய்ம்மைநிலை வழுவாத வேளாள விழுக்குடிமைச்
செம்மையினோர் பழையனூர்த் திருவாலவனம்பணிந்தார். (௩௪௧)

திருவாலங் காடுறையுஞ் செல்வர்தா மெனச்சிறப்பி
னொருவாத பெருந்திருத்தாண் டகமுதலா வோங்குதமிழ்ப்
பெருவாய்மைத் தொடைமாலை பலபாடிப் பிறபதியு
மருவார்வம் பெறவணங்கி வடதிசைமேல் வழிக்கொள்வார் (௩௪௨)

### திருவாலங்காடு - திருத்தாண்டகம்

திருச்சிற்றம்பலம்.

ஒன்றாவுலகனைத்துமானார்தாமேயூழிதோறூழியுயர்ந்தார்தாமே
நின்றாகியெங்குநிமிர்ந்தார்தாமேநீர்வளிதீயாகாசமானார்தாமே
கொன்றாடுங்கூற்றையுதைத்தார்தாமேகோலப்பழனையுடையார்தாமே
சென்றாடுதீர்த்தங்களானார்தாமேதிருவாலங்காடுறையுஞ்செல்வர்தாமே

மாலைப்பிறைசென்னிவைத்தார்தாமேவண்கயிலைமாமலையைவந்தியாத
நீலககடல்சூழிலங்கைக்கோனைநெரியவிரலாலடர்த்தார்தாமே
பாலொத்தமேனிநிறத்தார்தாமேபழனைப்பதியையுடையார்தாமே
சீலத்தாரேத்துந்திறத்தார்தாமேதிருவாலங்காடுறையுஞ்செல்வர்தாமே

திருச்சிற்றம்பலம்

(௩௪௧) திரு ஆல வனம - திரு ஆலங்காடு.

பல்பதியு நெடுங்கிரியும் படர்வனமுஞ் சென்றடைவார்
செல்கதிமுன் னளிப்பார்தந் திருக்காரி கரைபணிந்து
தொல்கலையின் பெருவேந்தர் தொண்டர்கள்பின் னும்பர்குழா
மல்குதிருக் காளத்தி மாமலைவந் தெய்தினார். (௩௪௩)

பொன்முகலித் திருநதியின் புனிதநெடுந் தீர்த்தத்தின்
முன்முழுகிக் காளத்தி மொய்வரையின் றாழ்வரையிற்
சென்னியுறப் பணிந்தெழுந்து செங்கண்விடைத் தனிப்பாகர்
மன்னுமலை மிசையேறி வலங்கொண்டு வணங்குவார். (௩௪௪)

காதணிவெண் குழையானைக் காளத்தி மலைக்கொழுந்தை
வேதமொழி மூலத்தை விழுந்திறைஞ்சி யெழுந்துபெருங்
காதல்புரி மனங்களிப்பக் கண்களிப்பப் பரவசமாய்
நாதனையென் கண்ணுளா னெனுந்திருத்தாண் டகநவின்றார் (௩௪௫)

---

**திருக்காளத்தி - திருத்தாண்டகம்.**

திருச்சிற்றம்பலம்.

விற்றாணொன் றிலவாதநலகூர்ந்தான் காண்வியன்கச்சிக்கம்பன்காண்பிச்சையல்லால், மற்றாதொன் றிலவாதமாசதுரன்காணமயானததுமைந்தன்காண்மாசொன்றிலலாப், பொற்றூணகாண மாமணி நற்குன்றொப்பான்காண் பொய்யாதபொழிலேழுநதாங்கிநின்ற, கற்றூணகாண்காளததிகாணப்பட்ட கணநாதன்காணவனென்கணணுளானே.

உண்ணா வருநஞ்சமுண்டான்றான்கா ணூழிதீயன்றான்காணுகப்பார் காணப், பணணாரப்பலவிலயமபாடினான்காண பயின்றநாலவேததகின்பண் பினான்காண, அணணாமலையான்காணடியாரீட்டமடியிணைகடொழுதேத்தவருளுவான்காண, கணணாரக்காண்பாராகோகாட்சியான்காண் காளததியானவனென்கணணுளானே.

திருச்சிற்றம்பலம்.

---

மலைச்சிகரச் சிகாமணியின் மருங்குறமுன் னேநிற்குஞ்
சிலைததடக்கைக கண்ணப்பா திருப்பாதஞ் சேரநிறைஞ்சி
யலைததுவிழுங கணணருவி யாகததுப் பாயநிழியத
தலைக்குவிதத கையினராய்த் தாழ்நதுபுறம போந்தணைந்தார. (௩௪௬)

சேணுலவு திருமலையிற் றிருப்பணியா யினசெய்து
தாணுவினை யம்மலைமேற் றொள்பணிந்த குறிப்பினாற்
பேணுதிருக கயிலைமலை வீற்றிருநத பெருங்கோலங
காணுமது காதலித்தார் கலைவாய்மைக் காவலனார். (௩௪௭)

வேறு.

அங்கண் மாமலை மேன்ம ருந்தை வணங்கி யாரரு ளான்மிகப்
பொங்கு காதலி னுத்த ரத்திசை மேல்வி ருப்பொடு போதுவார்

துங்க மால்வரை கானி யாறு தொடர்ந்த நாடு கடந்தபின்
செங்கண் மால்விடை யண்ணன்மேவு திருப்ப ருப்பத மெய்தினார். (௩௪௯)

மான விஞ்சையர் வான நாடர்கள் வானி யக்கர்கள் சித்தர்கள்
கான கின்னரர் பன்ன காதிபா காம சாரிக ளோழுதன்
ஞான மோனிக ளோடும் நம்பரை வநதி றைஞ்சி நலம்பெறுந்
தான மான திருச்சி லம்பை வணஙகி வண்டமிழ் சாற்றினார். (௩௫௦)

## திருப்பருப்பதம் - திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்

கன்றினாபுரஙகள்மூன்றுங்கனலெரியாகச்சீறி
நின்றதோருருவந்தன்னனீர்மையுநிறையுங்கொண்டும்
ஒன்றியாஙகுமையுந்தாமுமூர்பலிதேர்ந்துபின்னும்
பனறிப்பின்வேடராகிப்பருப்பதநோக்கினாரே.

அடல்விடையூர்தியாகியரககன்றோளடரவூன்றிக்
கடலிடைநஞ்சமுண்டகறையணிகண்டனார்தாஞ்
சுடர்விடுமேனிதன்மேற்சுணணவெணணீறுபூசிப்
படர்சடைமதியஞ்சேர்த்திப்பருப்பதநோக்கினாரே.

திருச்சிற்றம்பலம்

அம்ம ருஙகு கடந்து போமவ ரார்கொள் சூல வயிற்படைச்
செம்மல் வெள்கயி லைப்பொ ருப்பை நினைந்தெ ழுந்ததொர் சிந்தையால்
எம்ம ருஙகுமொர் காதலின்றி யிரண்டு பாலும் வியநதுளோர்
கைமம ருஙகணை யுந்தெ லுஙகு கடந்து கன்னட மெய்தினார். (௩௫௧)

கருந டஙகழி வாக வேகிய பின்க லந்த வனங்களுந்
திருந திதுறை யாவை யும்பயில் சேணெ டுஙகிரி வட்டையும்
பெருந லஙகிளர் நாடு மெண்ணில பிற்ப டச்செறி பொற்பினால்
வருநெ டுங்கதிர் கோலு சோலைய மாள வத்தினை நண்ணினார். (௩௫௨)

அங்கு முற்றி யகன்று போகி யருஞ்சு ரங்க ளிகந்துசென்
றெஙகு மிகக வறங்க ணீடு மிலாட பூமி யிகந்துபோய்
மங்குல் சுற்றிய வெற்பி னோடு வனஙக ளாறு கடந்தயற்
பங்க யப்பழ னத்து மத்திய பைதி ரத்தினை யெய்தினார். (௩௫௩)

அன்ன நாடு கடந்து கங்கை யணைந்து சென்று வலங்கொளு
மின்னு வேணியர் வார ணாசி விருப்பி னோடு பணிந்துடன்
பின்ன ணைந்தவா தம்மை யஙக ணொழிந்து கங்கை கடந்துபோய்
மன்னு காதல்செய் நாவின் மன்னவர் வந்து கற்சுர முந்தினார். (௩௫௪)

(௩௪௯) திருபபருபபதம - ஸ்ரீசைலம (௩௫௦) மானம - வீரமுடைய. திருச்சிலமபை - ஸ்ரீசைலததை. (௩௫௨) கருநடம - கனனடதேசம. சேண் நெடும கிரி வட்டையும - ஆகாயமளவுயர்நத மலைவழிகளும. (௩௫௪) வாரணாசி - காசி. கல்சுரம - கலவழி, அருநெறி, பாலைநிலம.

மாக மீது வளர்ந்த கானக மாகி யெங்கு மனித்தராற்
போக லாநெறி யன்றி யும்புரி கின்ற காதல் பொலிந்தெழச்
சாக மூல பலங்க டுய்ப்பன வுந்த விர்ந்து தனித்துநேர்
ஏகி னாரிர வும்பெ ருங்கயி லைக்கு லக்கிரி யெய்துவார். (௩௫௪)

ஆய வாரிரு ளின்க ணேகுமவ் வன்பர் தம்மை யணைந்துமுன்
றீய வாய விலங்கு வன்றொழில் செய்ய வஞ்சின நஞ்சுகால்
வாய நாக மணிப்ப ணங்கொள் விளக்கெ டுத்தன வந்துகால்
தோய வானவ ராயி னுந்தனி துன்ன ருஞ்சுர மன்னினார். (௩௫௫)

வெங்க திர்ப்பக லக்க டத்திடை வெய்ய வன்கதிர் கைபரந்
தெங்கு மிக்க பிளப்பி னாகர்த மெல்லை புக்கெரி கின்றன
பொங்க ழற்றெறு பாலை வெந்நிழல் புக்க சூழல் புகும்பகற்
செங்க திர்க்கனல் போலு மத்திசை திண்மை மெய்த்தவர் நண்ணினார் ()

இங்ங னம்மிர வும்ப கற்பொழு தும்ம ருஞ்சுர மெய்துவார்
பங்க யம்புரை தாள்ப ரட்டள வும்ப சைத்தசை தேயவு
மங்கை பாகர்தம் வெள்ளி மால்வரை வைத்த சிந்தை மறப்பரோ
தங்க ரங்க ளிரண்டு மேகொடு தாவி யேகுதன் மேவினார். (௩௫௭)

கைக ளுமணி பந்த சைந்துற வேக ரைந்து சிதைந்தபின்
மெய்க லந்தெழு சிந்தை யன்பின் விருப்பு மீமிசை பொங்கிட
மொய்க டுங்கனல் வெம்ப ரற்புகை மூளு மத்த முயங்கியே
மைகொள் கண்டர்த மன்பர் செல்ல வருந்தி யுந்தினர் மார்பினால் (௩௫௮)

மார்பு முந்தசை நைந்து சிந்தி வருந்த வென்பு முரிந்திட
நோவ ருங்குறி நின்ற சிந்தையி னேச மீசனை நேடுநீ
டார்வ மங்குயிர் கொண்டு கைக்கு முடம்ப டங்கவு மூன்கெடச்
சேர்வ ரும்பழு வம்பு ரண்டு புரண்டு சென்றனர் செம்மையோர். (௩௫௯)

அப்பு றம்புரள் கின்ற நீளிடை யங்க மெங்கு மரைந்திடச்
செப்ப ருங்கயி லைச்சி லம்படி சிந்தை சென்றுறு மாதலால்
மெய்ப்பு றத்தி லுறுப்ப ழிந்தபின் மெல்ல வந்து முயற்சியுந்
தப்பு றச்செய லின்றி யந்நெறி தங்கி னார்தமி ழாளியார். (௩௬௦)

(௩௫௪) மாகம் - ஆகாயம். சாகமூல பலங்கள் துய்ப்பனவும் தவிர்ந்து - இலை கிழங்கு பழம் ஆகிய இவைகளை யுண்ணுதலையும் நீக்கி. (௩௫௫) நஞ்சுகால் வாய - விஷத்தைக் கக்கும் வாயினையுடைய. (௩௫௬) அக்கடத்திடை - அப்பாலைவனத்தில். பாலையின் உஷ்ணத்தோடு சூரியஉஷ்ணமும் மிகுந்துள்ள கொடியவழி என்றவாயிற்று. (௩௫௭) பங்கயம் புரைதாள் - தாமரைமலரையொத்த திருவடிகள். பரட்டளவும் - கணைக்காலளவும். (௩௫௮) மணிபந்து - மணிகட்டுகள். பரல் புகைமூளும் அத்தம் - பருக்கைக்கற்களால் உண்டாகிய புகைஎழும் வழி. (௩௫௯) பழுவம் - அக்கானத்தில்.

வேறு

அன்ன தன்மையர் கயிலையை யணைவதற் கருளார்
மன்னு தீந்தமிழ் புவியின்மேற் பின்னையும் வழுத்த
நன்னெ டும்புனற் றடமுமொன் றுடன்கொடு நடந்தார்
பன்ன கம்புனை பரமரோர் முனிவராம் படியால் (௩௬௧)

வந்து மற்றவர் மருங்குற வணைந்துநேர் நின்று
நொந்து நோக்கிமற் றவரெதிர் நோக்கிட நுவல்வார்
சிந்தை யிவ்வுறுப் பழிந்திட வருந்திய திறத்தால்
இந்த வெங்கடத் தெய்திய தென்னென விசைத்தார். (௩௬௨)

மாசில் வற்கலை யாடையு மார்பின்முந் நூலுந்
தேசு டைச்சடை மவுலியு நீறுமெய் திகழ
ஆசின் மெய்த்தவ ராகிநின் றவர்தமை நோக்கிப்
பேச வுற்றதோ ருணர்வுற விளம்புவார் பெரியோர் (௩௬௩)

வண்டு லாங்குழன் மலைமக ளுடன்வட கயிலை
யண்டர் நாயக ரிருக்குமப் பரிசவ ரடியேன்
கண்டு கும்பிட விருப்பொடுங் காதலி னடைந்தேன்
கொண்ட வென்குறிப் பிதுமுனி யேயெனக் கூற. (௩௬௪)

கயிலை மால்வரை யாவது காசினி மருங்கு
பயிலு மானுடப் பான்மையோ ரடைவதற் கெளிதோ
வயில்கொள் வேற்படை யமரரு மணுகுதற் கரிதால்
வெயில்கொள் வெஞ்சுரத் தென்செய்தீர் வந்தென விளம்பி (௩௬௫)

மீளு மத்தனை யுமக்கினிக் கடனென விளங்குந்
தோளு மாகமுந் துவளுமுந் நூன்முனி சொல்ல
ஆளு நாயகன் கயிலையி லிருக்கைகண் டல்லான்
மாளு மிவ்வுடல் கொண்டுமீ ளேனென மறுத்தார். (௩௬௬)

ஆங்கு மற்றவர் துணிவறிந் தவர்தமை யறிய
நீங்கு மாதவர் விசும்பிடைக் கரந்துநீண் மொழியால்
ஓங்கு நாவினுக் கரசனே யெழுந்திரென் றுரைப்பத்
தீங்கு நீங்கிய யாக்கைகொண் டெழுந்தொளி திகழ்வார். (௩௬௭)

அண்ண லேயெனை யாண்டுகொண் டருளிய வமுதே
விண்ணி லேமறைந் தருள்புரி வேதநா யகனே
கண்ணி னாற்றிருக் கயிலையி லிருந்தநின் கோலம்
நண்ணி நான்றொழ நயந்தருள் புரியெனப் பணிந்தார். (௩௬௮)

---

(௩௬௨) கடத்து - காட்டில். (௩௬௩) வற்கலை - மரவுரி.

தொழுதெ ழுந்தநற் றொண்டரை நோக்கிவிண் டலத்தி
லெழுபெ ருந்திரு வாக்கினு லிறைவரிப் பொய்கை
முழுகி நம்மைநீ கயிலையி லிருந்தவம் முறைமை
பழுதில் சீரத்திரு வையாற்றிற் காணெனப் பணித்தார் (௩௬௯)

ஏற்றி னாரரு டலைமிசைக கொண்டெழுந் திறைஞ்சி
வேற்று மாகிவிண் ணாகிநின் றார்மொழி விரும்பி
யாற்றல் பெற்றவவ் வண்ணலா ரஞ்செழுத் தோதிப்
பாற்ற டம்புனற் பொய்கையின் மூழ்கினர் பணியால் (௩௭௦)

---

போற்றித் திருத்தாண்டகம்

திருச்சிற்றம்பலம்

வேற்றாகிவிண்ணாகி நின்றாய்போற்றி மீளாமே யாளென்னைககொண் டாய்போற்றி, ஊற்றாகியுள்ளேயொளித்தாய்போற்றியோவாதசத்ததொலி யேபோற்றி, யாற்றாகியங்கேயமர்ந்தாய்போற்றி யாறங்கநால்வேதமானாய் போற்றி, காற்றாகியெங்குங்கலந்தாய் போற்றி கயிலைமலையானே போற்றி போற்றி.

உண்ணாதுறங்காதிருந்தாய்போற்றியோதாதேவேதமுணர்ந்தாய்போற்றி, யெண்ணா விலங்கைக்கோன்றன்னைப் போற்றி யிறைவிரலால் வைத்துகந்த வீசாபோற்றி, பண்ணாரிசையின் சொற்கேட்டாய் போற்றி பண்டேயென் சிந்தைபுகுந்தாய்போற்றி, கண்ணாயுலகுக்குநின்றாய் போற்றி கயிலைமலையா னேபோற்றிபோற்றி

திருச்சிற்றம்பலம்

---

ஆதி தேவர்தந் திருவருட் பெருமையா ரறிந்தார்
போத மாதவா பனிமலர்ப் பொய்கையின் மூழ்கி
மாதொர் பாகனர் மகிழுமை யாற்றிலோர் வாவி
மீது தோன்றிவந் தெழுந்தன ருலகெலாம் வியப்ப. (௩௭௧)

வம்பு லாமலர் வாவியின் கரையில்வந் தேறி
யும்பர் நாயகர் திருவருட் பெருமையை யுணர்வார்
எம்பி ரான்றருங் கருணைகொ லிதுவென விருகண்
பம்பு தாரைநீர் வாவியிற் படிந்தெழும படியார். (௩௭௨)

மிடைய நீள்கொடி வீதிகள் விளங்கிய வையா
றுடைய நாயகர் சேவடி பணியவந் துறுவார்
அடைய வப்பதி நிற்பவுஞ் சரிப்பவு மான
புடைய மர்ந்ததந் துணையொடும் பொலிவன கண்டார் (௩௭௩)

பொன்ம லைக்கொடி யுடனமர் வெள்ளியம் பொருப்பிற்
றன்மை யாமபடி சத்தியுஞ் சிவமுமாஞ் சரிதைப்
பன்மை யோனிகள் யாவையும் பயில்வன பணிந்தே
முன்னு மாதவா தம்பிரான் கோயின்முன் வந்தார். (௩௭௪)

காணு மப்பெருங் கோயிலுங் கயிலைமால் வரையாய்ப்
பேணு மாலய னிந்திரன் முதற்பெருந் தேவர்
பூணு மன்பொடு போற்றிசைத் தெழுமொலி பொங்கத்
தாணு மாமறை யாவையுந் தனித்தனி முழங்க (௩௭௫)

தேவ தானவர் சித்தர்வித் தியாதர ரியக்கர்
மேவு மாதவ முனிவர்கள் புடையெலா மிடையக்
காவி வாளவிழி யரமபையர் கானமு முழவுந்
தாவில் வேழ்கடன் முழக்கினும் பெருகொலி தழைப்ப. (௩௭௬)

கங்கை யேமுதற் றீர்த்தமாங் கடவுண்மா நதிகண்
மங்க லம்பொலி புனற்பெருந் தடங்கொடு வணங்க
எங்கு நீடிய பெருங்கண நாதர்க ளிறைஞ்சப்
பொங்கி யங்களாற் பூதவே தாளங்கள் போற்ற (௩௭௭)

அந்தண் வெள்ளிமால் வரையிரண் டாமென வணைந்தோர்
சிந்தை செய்திடச் செங்கண்மால் விடையெதிர் நிற்ப
முந்தை மாதவப் பயன்பெறு முதன்மையான் மகிழ்ந்தே
நந்தி யெம்பிரா னடிவிடை யாடிமுன் னணுக. (௩௭௮)

வெள்ளி வெற்பினமேன் மரகதக் கொடியுடன் விளங்குந்
தெள்ளு பேரொளிப் பவளவெற் பெனவிடப் பாகங்
கொள்ளு மாமலை யாளுடன் கூடவீற் றிருந்த
வள்ள லாரைமுன் கண்டனா வாக்கின்மன் னவனார். (௩௭௯)

கண்ட வானந்தக் கடலினைக் கண்களான் முகந்து
கொண்டு கைகுவித் தெதிர்விழுந் தெழுந்துமெய் குலைய
அண்டர் முன்புநின் றாடினார் பாடினா ரழுதார்
தொண்ட னார்க்கங்கு நிகழ்ந்தன யாவர்சொல வல்லார். (௩௮௦)

முன்பு கண்டுகொண் டருளினா ரமுதுண்ண மூவா
அன்பு பெற்றவ ரளவிலா வார்வமுன் பொங்கப்
பொன்பி றங்கிய சடையரைப் போற்றுதாண் டகங்கள்
இன்ப மோங்கிட வேத்தினா ரெல்லையி றவத்தோர் (௩௮௧)

திருவையாறு - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்

ஆரார்திரிபுரங்கணீறாநோக்குமனலாடியாரமுதேயென்றேனானே [னே
கூரார்மழுவாட்படையொன்றேந்திக்குறட்பூதப்படையாயென்றேனா
பேராயிரமுடையாயென்றேனானேபிறைசூடும்பிஞ்ஞகனேயென்றேனானே
ஆராவமுதேயெனையாறனேயென்றென்றேநானரற்றினைகின்றேனே

(௩௭௬) காவி - காவிமலர்

வில்லாடிவேடனேயென்றேனானேவெண்ணீறுமெய்க்கணிந்தாயென்றேனானே, சொல்லாயசூழலாயென்றேனானேசுலாவாயதொன்னெறியேயென்றேனானே, எல்லாமாயென்னுயிரேயெனறேனானேயிலங்கையர்கோன்றோளிறுத்தாயென்றேனானே, அலலாவினைதீர்க்குமையாறனேயென்றென்றேநானரற்றிநைகின்றேனே.

திருச்சிற்றம்பலம்.

---

### திருவையாறு - திருத்தாண்டகம்.

திருசசிற்றம்பலம்

ஓசையொலியெலாமானாய்நீயேயுலகுக்கொருவனாய்நின்றாய்நீயே
வாசமலரெலாமானாய்நீயேமலையானமருகனாயநின்றாய்நீயே
பேசப்பெரிதுமினியாயநீயேபிரானாயடியென்மேலவைததாயநீயே
தேசவிளககெலாமானாயநீயேதிருவையாறகலாதசெமபொற்சோதி.

ஆருமறியாவிடத்தாய்நீயேயாகாயந்தேருரவல்லாய்நீயே
பேரும்பெரியவிலஙகைவேந்தன்பெரியமுடிபததிறுததாய்நீயே
யூருமபுரமூன்றுமட்டாய்நீயேயொண்டாமறையானுமாலுஙகூடித்
தேருமடியென்மேல்வைத்தாய்நீயேதிருவையாறகலாதசெமபொற்சோதி.

திருசசிற்றமபலம

---

ஆய வாறுமற் றவர்மனங களிப்புறக் கயிலை
மேய காதர்தந் துணையொடும் வீற்றிருந் தருளித்
தூய தொண்டருந் தொழுதெதிர் நிற்கவக் கோலஞ்
சேய தாககினார் திருவையா றமாந்தமை திகழ (௩௮௨)

ஐயர் கோலமங் களித்தகன் றிடவடித் தொண்டர்
மையல் கொண்டுள மகிழ்ந்திட வருந்திமற் றஙகுச்
செய்ய வேணிய ரருளிது வோவெனத் தெளிந்து
வைய முய்ந்திடக் கண்டமை பாடுவா மகிழ்ந்து (௩௮௩)

வேறு

மாதாப் பிறைக்கண்ணி யானை மலையான் மகளொடு மென்னுங்
கோதறு தண்டமிழ்ச் சொல்லாற் குலவு திருப்பதி கங்கள்
வேத முதல்வரை யாற்றில் விரவுஞ் சராசர மெல்லாங்
காதற் றுணையொடுங் கூடக் கண்டே னெனப்பாடி நின்றார் (௩௮௪)

---

### திருவையாறு - பண் - காந்தாரம்

திருச்சிற்றம்பலம்

மாதர்ப்பிறைக்கண்ணியானைமலையான்மகளொடும்பாடிப்
போதொடுநீர்சுமந்தேத்திப்புகுவாரவர்பின்புகுவேன்
யாதுஞ்சுவடுபடாமலையாறடைக்கின்றபோது
காதன்மடப்பிடியோடுங்களிறுவருவனகண்டேன்
கண்டேனவர்திருப்பாதங்கண்டறியாதனகண்டேன்.

வளர்மதிக்கண்ணியினானைவார்குழலாளொடும்பாடிக்
களவுபடாததோர்காலங்காண்பான்கடைக்கணிக்கின்றேன்
அளவுபடாததோரன்போடையாறடைகின்றபோது
இளமணநாகுதழுவியேறுவருவனகண்டேன்
கண்டேனவர்திருப்பாதங்கண்டறியாதனகண்டேன்.

திருச்சிற்றம்பலம்.

---

கண்டு தொழுது வணங்கிக் கண்ணுத லார்தமைப் போற்றிக்
கொண்ட திருத்தாண் டகங்கள் குறுந்தொகை நேரிசை யன்பின்
மண்டு விருத்தங்கள் பாடி வணங்கித் திருத்தொண்டு செய்தே
அண்டர் பிரான்றிரு வையா றமர்ந்தனர் நாவுக் கரசர் (௩௮௫)

நீடிய வப்பதி நின்று நெய்த்தான மேமுத லாக
மாடுயர் தானம பணிந்து மழபாடி யாரை வணங்கிப்
பாடிய செந்தமிழ் மாலை பகர்ந்து பணிசெய்து போற்றித்
தேடிய மாலுக் கரியார் திருப்பூந் துருத்தியைச் சேர்ந்தார். (௩௮௬)

சேர்ந்து விருப்பொடும் புகுந்துத் திருநட மாளிகை முன்னாச
சார்ந்து வலங்கொண் டிறைஞ்சித் தம்பெரு மான்றிரு முன்பு
நேர்ந்த பரிவொடுந் தாழ்ந்து நிறைந்தொழி யாவன்பு பொங்க
வார்ந்தகண் ணீர்மழை தூங்க வயர்வுறுந் தன்மைய ரானார். (௩௮௭)

திருப்பூந் துருத்தி யமர்ந்த செஞ்சடை யானையா னேற்றுப்
பொருப்பூரந் தருநம் பிரானைப் பொய்யிலி யைக்கண்டே னென்று
விருப்புறு தாண்டகத் தோடு மேவிய காதல் விளைப்ப
இருப்போந் திருவடிக் கீழ்நா மென்னுங் குறுந்தொகை பாடி. (௩௮௮)

---

## திருப்பூந்துருத்தி - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்

நில்லாததீசடைமேனிற்பித்தானை நினையாவென்னெஞ்சை நினைவித்தானைக், கல்லாதனவெல்லாங்கற்பித்தானைக் காணாதனவெல்லாங்காட்டினானைச், சொல்லாதனவெல்லாஞ்சொல்லியென்னைத் தொடர்ந்திங்கடியேனையாளாக்கொண்டு, பொல்லாவென்னோய்தீர்த்த புனிதன்றன்னைப்புண்ணியனைப்பூந்துருத்திகண்டேனானே

மறுத்தானைமலைகோத்தங்கெடுத்தான்றன்னை மணிமுடியோடிருபதுதோணெரியக்காலா, லிறுத்தானையெழுநரம்பினிசைகேட்டானையெண்டிசைக்குங்கண்ணானைசிரமேலொன்றை, யறுத்தானையமரர்களுக்கமுதீந்தானையாவர்க்குந்தாங்கொணா நஞ்சமுண்டு, பொறுத்தானைப்புண்ணியனைப்புனிதன்றன்னைப்பொய்யிலியைப்பூந்துருத்திகண்டேனானே.

திருச்சிற்றம்பலம்

---

### திருப்பூந்துருத்தி - திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்.

கொடிகொள்செல்வவிழாக்குணலையருக்
கடிகொள்பூம்பொழிற்கச்சியேகம்பனார்
பொடிகள்பூசியபூந்துருத்திந்கா
அடிகளசேவடிக்கீழ்நாமிருப்பதே

துடித்ததோள்வலிவாளரக்கன்றனைப்
பிடித்தகைந்நெரிந்தற்றனகண்ணெலாம்
பொடிக்கலூன்றியபூந்துருத்திந்கர்ப்
படிக்கொள்சேவடிக்கீழ்நாமிருப்பதே

திருச்சிற்றம்பலம்

---

அங்குறை யுந்தன்மை வேண்டி நாமடி போற்றுவ தென்று
பொங்கு தமிழ்ச்சொல் விருத்தம் போற்றிய பாடல் புரிந்து
தங்கித் திருத்தொண்டு செய்வார் தம்பிரா னாருள் பெற்றுத்
திங்களு ஞாயிறு தோயுந் திருமட மாங்கொன்று செய்தார். (௩௮௯)

---

### திருப்பூந்துருத்தி - திருவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்

மாலினைமாலுறநின்றான்மலைமகடன்னுடைய
பாலனைப்பானமதிசூடியைப்பண்புணராமதின்மேற்
போலனைப்போர்விடையேறியைப்பூந்துருத்திமகிழு
மாலனையாதிபுராணனைநாமடிபோற்றுவதே

பைக்கையும்பாந்திவிழிக்கையும்பாம்புசடையிடையே
வைக்கையும்வானிழிகங்கையுமங்கைநடுக்குறவே
மொய்க்கையரக்கனையூன்றினன்பூந்துருத்தியுறையு
மக்கநல்வேதவிகிர்தனைநாமடிபோற்றுவதே

திருச்சிற்றம்பலம்.

---

பல்வகைத் தாண்டகத் தோடும் பரவுந் தனித்தாண் டகமும்
அல்ல லறுப்பவா தானத் தடைவு திருத்தாண் டகமுஞ்
செல்கதி காட்டிடப் போற்றுந் திருவங்க மாலையு முள்ளிட்
டெல்லையில் பன்மைத் தொகையு மியம்பின ரேத்தி யிருந்தார் (௩௯௦)

வேறு

பொன்னிவலங் கொண்ட திருப் பூந்துருத்தி யிவரிருப்பக்
கன்மனத்து வல்லமணர் தமைவாதிற் கட்டழித்துத்
தென்னவன்கூ னிமிர்த்தருளித் திருநீற்றி னொளிகண்டு
மன்னியசீர்ச் சண்பைநகர் மறையவனார் வருகின்றார். (௩௯௧)

நீந்தமிழ்நாட் டிடைநின்று மெழுந்தருளிச் செம்பொன்னி
வாய்ந்தவளந் தருநாட்டு வந்தணைந்தார் வாக்கினுக்கு

வேந்தரிருந் தமைகேட்டு விரைந்தவர்பாற் செல்வனெனப்
பூந்துருத்தி வளம்பதியின் புறம்பணையில் வந்தணைந்தார். (௩௯௨)

சண்பைவருந் தமிழ்விரக ரெழுந்தருளத் தாங்கேட்டு
மண்பரவும் பெருங்கீர்த்தி வாகீசர் மனமகிழ்ந்து
கண்பெருகுங் களிகொள்ளக் கண்டிறைஞ்சுங் காதலினால்
எண்பெருகும் விருப்பெய்த வெழுந்தருளி யெதிர்சென்றார் (௩௯௩)

காழியர்கோன் வருமெல்லை கலந்தெய்திக் காதலித்தார்
சூழுமிடைந் திடுநெருக்கிற் காணாமே தொழுதருளி
வாழியவர் தமைத்தாங்கு மணிமுத்தின் சிவிகையினைத்
தாழுமுட லிதுகொண்டு தாங்குவன்யா னெனத்தரித்தார். (௩௯௪)

வந்தொருவ ரறியாமே மறைந்தவடி வொடும்புகலி
அந்தணனா ரேறியெழுந் தருளிவரு மணிமுத்தின்
சந்தமணிச் சிவிகையினைத் தாங்குவா ருடன்றாங்கிச்
சிந்தைகளிப் புறவருவார் தமையாருந் தெளிந்திலரால். (௩௯௫)

திருஞான முனிவரர் சிருந்ததிருப் பூந்துருத்திக்
கருகாக வெழுந்தருளி யெங்குற்றா ரப்பரென
உருகாநின் றும்மடியே னும்மடிகட் டாங்கிவரும்
பெருவாழ்வு வந்தெய்தப் பெற்றிங்குற் றேனென்றார். (௩௯௬)

பிள்ளையா ரதுகேளாப் பெருகுவிரை வுடனிழிந்தே
யுள்ளமிகு பதைப்பெய்தி யுடையவர சினைவணங்க
வள்ளலார் வாகீச ரவர்வணங்கா முன்வணங்கத்
துள்ளுமான் மறிக்கரத்தார் தொண்டரெலாந் தொழுதார்த்தார். (௩௯௭)

கழுமலக்கோன் றிருநாவுக் கரசருடன் கலந்தருளிச்
செழுமதியந் தவழ்சோலைப் பூந்துருத்தித் திருப்பதியின்
மழுவினொடு மானேந்து திருக்கரத்தார் மலர்த்தாள்கள்
தொழுதுருகி யின்புற்றுத் துதிசெய்தங் குடனிருந்தார் (௩௯௮)

வல்லமணர் தமைவாதில் வென்றதுவும் வழுதிபாற்
புல்லியகூ னிமிர்த்ததுவுந் தண்பொருந்தப் புனனாட்டில்
எல்லையிலாத் திருநீறு வளர்த்ததுவு மிருந்தவத்தோர்
சொல்லவது கேட்டுவந்தார் தூயபுகழ் வாகீசர் (௩௯௯)

பண்புடைய பாண்டிமா தேவியார் தம்பரிவு
நண்புடைய குலச்சிறையார் பெருமையுஞா னத்தலைவர்
எண்பெருக வுரைத்தருள வெல்லையில்சீர் வாகீசர்
மண்குலவு தமிழ்நாடு காண்பதற்கு மனங்கொண்டார். (௪௦௦)

---

(௩௯௯) வழுதிபால் - பாண்டியனிடமிருந்த.

பிரமபுரத் திருமுனிவர் பெருந்தொண்டை நன்னாட்டில்
அரனுறையுந் தானங்க ளணைந்திறைஞ்சிப் பாடுவதற்
குரனுடைய திருநாவுக் கரசருரை செய்தருளப்
புரமெரித்தார் திருமகனார் பூந்துருத்தி தொழுதகன்றார். (௪0௧)

ஆண்டவர சங்கணார்சீ ரருள்பெற்றப் பதிநின்றும்
பாண்டிநாட் டெழுந்தருளும் பான்மையராய்த் தென்றிசைபோய்க்
காண்டகைய திருப்புத்தூர் பணிந்தேத்திக் கதிர்மதியந்
தீண்டுகொடி மதின்மதுரைத் திருவால வாய்சேர்ந்தார் (௪0௨)

சென்றணைந்து மதுரையினிற் றிருந்தியநூற் சங்கத்துள்
அன்றிருந்து தமிழாராய்ந் தருளியவங் கணர்கோயின்
முன்றிலினை வலங்கொண்டு முன்னிறைஞ்சி யுள்புக்கு
வன்றனிமால் விடையாரை வணங்கிமகிழ் வொடுதிளைத்தார் (௪0௩)

எய்தியபே ரானந்த வின்பத்தி னிடையழுந்தி
மொய்திகழுஞ் சடையானை முளைத்தானை யெனவெடுத்துச்
செய்தவத்தோர் தாண்டகச்செந் தமிழ்பாடிப் புறத்தணைவார்
கைதொழுது பணிந்தேத்தித் திருவுள்ளங் களிசிறந்தார் (௪0௪)

திருவாலவாய் - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்

முளைத்தானையெல்லார்க்கு முன்னேதோன்றி முதிருஞ்சடைமுடிமேன் முகிழ்வெண்டிங்கள், வளைத்தானைவல்லசுரர் புரங்கள்மூன்றும் வரைசிலையா வாசுகிமாநாணாக்கோத்துத், துளைத்தானைச்சுடுசரத்தாற் றுவளநீறாத் தூமுத்த வெண்முறுவலுமையோடாடித், திளைத்தானைத்தென்கூடற்றிருவாலவாய்ச் சிவனடியேசிந்திக்கப்பெற்றேனானே.

தூர்த்தனைத்தோண்முடிபத்திறுத்தான்றன்னைத் தொன்னரம்பினின்னிசைகேட்டருள்செய்தானைப், பார்த்தனைப்பணிகண்டுபரிந்தான்றன்னைப் பரிந்தவற்குப்பாசுபதமீந்தான்றன்னை, யார்த்தனையடியேனுக்கன்பன்றன்னை யளவிலாப்பல்லூழிகண்டுநின்ற, தீர்த்தனைத்தென்கூடற்றிருவாலவாய்ச்சிவனடியேசிந்திக்கப்பெற்றேனானே.

திருச்சிற்றம்பலம்

சீர்திகழும் பாண்டிமா தேவியார் திருமேனி
சேரவரு ளுடையதனாற் கூனிமிர்ந்த தென்னவனார்
பார்பரவுங் குலச்சிறையார் வாகீசர் தமைப்பணிவுற்
றாரகிலாக் காதன்மிக வடிபோற்ற வங்கிருந்தார். (௪0௫)

திருவால வாயமர்ந்த செஞ்சடைச் செழும்பொருளை
றருவானை நேரிசையுந் தாண்டகமு முதலான

(௪0௧) பிரமபுரத்திருமுனிவர் - ஞானசம்பந்த வள்ளலார். உரன் உடைய - மெய்ஞ்ஞானமுடைய.

பெருவாய்மைத் தமிழ்பாடிப் பேணுதிருப் பணிசெய்து
மருவார்முப் புரமெரித்தார் பூவணத்தை வந்தடைந்தார். (௩௦௬)

கொடிமாட நிலவுதிருப் பூவணத்துக் கோயிலினு
ணெடியானுக் கறிவரியார் நேர்தோன்றக் கண்டிறைஞ்சி
வடிவேறு திரிசூலத் தாண்டகத்தால் வழுத்திப்போய்ப்
பொடிநீடு திருமேனிப் புனிதர்பதி பிறபணிவார் (௩௦௭)

---

### திருப்பூவணம் - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்.

வடிவேறுதிரிசூலந்தோன்றுந்தோன்றும்வளர்சடைமேலிளமதியந்தோன்றுந்தோன்றுங், கடியேறுகமழ்கொன்றைக்கண்ணிதோன்றுங்காதில்வெண்குழைதோடுகலந்துதோன்றும், இடியேறுகளிற்றுரிவைப்போர்வைதோன்றுமெழில்திகழுந்திருமுடியுமிலங்கித்தோன்றும்,பொடியேறுதிருமேனிபொலிந்துதோன்றும்பொழில்திகழும்பூவணத்தெம்புனிதனார்க்கே

ஆரொருவருள்குவாருள்ளத்துள்ளேயவ்வுருவாய்நிற்கின்றவருளுந்தோன்றும், வாருருவப்பூண்முலைநன்மங்கைதன்னைமகிழ்ந்தொருபாலவைத்துகந்தவடிவுதோன்றும், நீருருவக்கடலிலங்கையரக்கர்கோனைநெறுநெறெனவடர்த்திட்டநிலையுந்தோன்றும்,போருருவக்கூற்றுதைத்தபொற்புந்தோன்றும்பொழில்திகழும்பூவணத்தெம்புனிதனார்க்கே

திருச்சிற்றம்பலம்

---

தென்னிலங்கை யிராவணன்றன் சிரமீரைந் துந்துணித்த
மன்னவனு மிராமனுக்கு வரும்பெரும்பா தகந்தீர்க்கும்
பின்னுக்கரைத் தொழுவதற்கு நினைந்துபோயப் பெருமகிழ்ச்சி
துன்னிமனங் கரைந்துருகத் தொழுதெழுந்தார் சொல்லரசர். (௩௦௮)

தேவர்தொழுந் தனிமுதலைத் திருவிராமேச்சரத்து
மேவியசங் கரனையெதிர் நின்றுவிருப் புறுமொழியாற்
பாவுதிரு நேரிசைகண் முதலான தமிழ்பாடி
நாவரசர் திருத்தொண்டு நலம்பெருகச் செய்தமர்ந்தார் (௩௦௯)

---

### திருவிராமேச்சுரம் - திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்

பாசமுங்கழிக்ககில்லாவரக்கரைப்படுத்துத்தக்க
வாசமிக்கலர்கள்கொண்டுமதியினான்மால்செய்கோயி
னேசமிக்கன்பினாலேநினைமின்னீர்நின்றுநாளு
மேசமிக்கானிருந்ததிருவிராமேச்சரமே

வரைகளொத்தேயுயர்ந்தமணிமுடியரக்கர்கோனை
விரையமுற்றறவொடுக்கிமீண்டுமால்செய்தகோயி
றிரைகண்முத்தாலவணங்குந்திருவிராமேச்சரத்தை
உரைகள்பத்தாலுரைப்பாருள்குவார்வன்பினாலே

திருச்சிற்றம்பலம்.

அங்குறைந்து கண்ணுதலா ரருள்சூடி யகன்றுபோய்ப்
பொஙகுதமிழ்த் திருநாட்டுப் புறம்பணைசூழ் நெல்வேலி
செஙகணவிடை யார்மன்னுந் திருக்கானப் பேர்முதலா
எஙகுநிகழ் தானங்க ளெல்லாம்புக் கிறைஞ்சுவார் (௩௧0)

தொழுதுபல வகையாலுஞ் சொற்றொடைவண் டமிழ்பாடி
வழுவிறிருப் பணிசெய்து மனஙகசிவுற் றெப்பொழுது
மொழுகியகண் பொழிபுன லு மோவாது சிவன்றாளகள்
தழுவியசிந் தையிலுணர்வுந் தங்கியசீர் மையிற்சரித்தார் (௩௧௧)

தேம்பொழில்சூழ் செந்தமிழ்நாட் டினிலெஙகுஞ் சென்றிறைஞ்சிப்
பாம்பணிவார் தமைப்பணிவார பொன்னிநா டதுவணைந்து
வாம்புனல்சூழ் வளநகர்கள் பின்னும்போய் வணஙகியே
பூம்புகலூர் வந்தடைந்தா பொய்ப்பாசம் போக்குவார். (௩௧௨)

பொய்கைசூழ் பூம்புகலூர்ப் புனிதர்மலர்த் தாள்வணங்கி
நையுமனப் பரிவோடு நாடோறுந் திருமுன்றிற்
கைகலநத திருத்தொண்டு செயதுபெருங காதலுடன்
வைகுநா ளெண்ணிறந்த வணடமிழ்மா லைகண்மொழிவார். (௩௧௩)

நின்றதிருத் தாண்டகமு நீடுதனித தாணடகமு
மன்றுறைவார் வாழ்பதிகள வழுததுதிருத தாணடகமுங்
கொனறைமலாச சடையார்பாற குறைநதிரு நேரிசையுந்
துனறுதனி நேரிசையு முதலான தொடுததுரைத்தா (௩௧௪)

ஆருயிரின் திருவிருததந தசபுரா ணததடைவு
பாாபரவும பாவநா சப்பதிகம் பன்முறையும
நேர்படநின் றறைகூவுந் திருப்பதிக முதறபிறவும்
பேரருளின் கடலளிக்கும் பெருமானைப் பாடினா (௩௧௫)

அந்நிலைமை தனிலாண்ட வரசுபணி செயயவவா
நனனிலைமை காட்டுவார் நம்பாதிரு மணிமுன்றில்
தனனிலவரு முழவார நுழைநதவிடந தாமெஙகும்
பொன்னினொடு நவமணிகள் பொலிநதிலஙக வருள்செய்தார் (௩௧௬)

செமபொன்னு நவமணியுஞ் சேணவிளங்க வாஙகவையு
மும்பாபிரான திருமுன்றி லருள்பருககை யுடனொககு
எம்பெருமான் வாகீச ருழவாரத தினிலேந்தி
வம்பலாமென் பூஙகமல வாவியினிற் புகவெறிந்தா (௩௧௭)

புல்லோடுங கல்லோடும் பொன்னோடு மணியோடுஞ்
சொல்லோடும் வேறுபா டிலாநிலைமை துணிந்திருந்த

நல்லோர்முன் றிருப்புகலூர் நாயகனார் திருவருளால்
வில்லோடு நுதன்மடவார் விசும்பூடு வந்திழிந்தார். (௪௧௮)

வானகமின் னுக்கொடிகள் வந்திழிந்தா லெனவந்து
தானநிறை சுருதிகளிற் றகுமலங்கா ரத்தன்மை
கானவமு தம்பரப்புங் கனிவாயி லொளிபரப்பப்
பானனெடுங் கண்கள்வெளி பரப்பியிசை பாடுவார் (௪௧௯)

கற்பகப்பூந் தளிரடிபோங் காமருசா ரிகைசெய்ய
உற்பலமென் முகிழ்விரல்வட் டணையோடுங் கைபெயரப்
பொற்புறுமக் கையின்வழி பொருகயற்கண் புடைபெயர
அற்புதப்பொற் கொடிநுடங்கி யாடுவபோ லாடினார். (௪௨௦)

ஆடுவார் பாடுவா ரலர்மாரி மேற்பொழிவார்
கூடுவார் போனறணைவார் குழலவிழ விடைநுடங்க
ஓடுவா மாரவே ளுடன்மீள்வ ரொளிபெருக
நீடுவார் துகிலசைய நிற்பாரு மாயினார். (௪௨௧)

இத்தன்மை யரம்பையர்க ளெவ்விதமுஞ் செயல்புரிய
அத்தனார் திருவடிகீழ் நினைவகலா வன்புருகு
மெய்த்ததன்மை யுணர்வுடைய விழுத்தவத்து மேலோர்தஞ்
சித்தநிலை திரியாது செய்பணியின் றலைநின்றார். (௪௨௨)

இம்மாயப் பவதொடக்கா மிருவினைக டமைநோக்கி
உம்மாலிங் கென்னகுறை யுடையேன்யான் றிருவாரூர்
அம்மானுக் காளானே னலையேன்மி னீரென்று
பொய்ம்மாயப் பெருங்கடலு ளெனுந்திருத்தாண் டகம்புகன்றார் (௪௨௩)

மாதரவர் மருங்கணைய வந்தெய்தி மதனவசக்
காதலவர் புரிந்தொழுகுங் கைதவங்கள் செய்திடவும்
பேதமிலா வோருணர்விற் பெரியவரைப் பெயாவிக்க
யாதுமொரு செயலில்லா மையிலிறைஞ்சி யெதிரகன்றார் (௪௨௪)

இந்நிலைமை யுலகேழு மெய்தவறிந் தியல்பேதத
மன்னியவன் புறுபத்தி வடிவான வாகீசர்
மின்னிலவுஞ் சடையார்தம் மெய்யருடா னெய்தவரும்
அந்நிலைமை யணித்தாகச் சிலநாளங் கமர்ந்திருந்தார். (௪௨௫)

மன்னியவந் தக்கரண மருவுதலைப் பாட்டினாற்
றன்னுடைய சரணான தமியேனைப் புகலூரான்
என்னையினிச் சேவடிக்கீ ழிருத்திடுமென் றெழுகின்ற
முன்னுணர்வின் முயற்சியினாற் றிருவிருத்தம் பலமொழிந்தார். (௪௨௬)

---

(௪௧௯) பானல - நீலோறபல மலாபோலும. (௪௨௰) உறபலம - செஙகழுநீா. (௪௨௪) கைதவங்கள் - வஞ்சனைகள்.

மண்முதலா மூலகேத்த மன்னுதிருத் தாண்டகத்தைப்
புண்ணியா வுன்னடிக்கே போதுகின்றே னெனப்புகன்று
நண்ணரிய சிவானந்த ஞானவடி வேயாகி
அண்ணலார் சேவடிக்கீ ழாண்டவர செய்தினார். (௪௨௭)

---

**திருப்புகலூர் - திருத்தாண்டகம்.**

திருச்சிற்றம்பலம்.

எண்ணுகேனென்சொல்லியெண்ணுகேனோவெம்பெருமான் றிருவடியேயெண்ணினல்லாற், கண்ணிலேன்மற்றோர்களைக்கணில்லேன்கழலடியே கைதொழுதுகாணினல்லா,லொண்ணுளேயொன்பதுவாசல்வைத்தாயொக்க வடைக்கும்போ துணரமாட்டேன், புண்ணியா வுன்னடிக்கே போதுகின் றேன்பூம்புகலூர்மேவியபுண்ணியனே.

ஒருவரையுமல்லாதுணராதுள்ளமுணர்ச்சித்தடுமாற்றத்துள்ளேநின்ற இருவரையுமூவரையுமென்மேலேவியில்லாததரவறுத்தாய்க்கில்லேனலக் கருவரைசூழ்கானலிலங்கைவேந்தன்கடுந்தேர்மீதோடாமைக்காலாற்செற்ற பொருவரையாயுன்னடிக்கேபோதுகின்றேன்பூம்புகலூர்மேவியபுண்ணியனே.

திருச்சிற்றம்பலம்.

---

வானவர்கண் மலர்மாரி மண்ணிறைய விண்ணுலகின்
மேனிறைந்த வைந்துபே ரியவொலியும் விரிஞ்சன்முதல்
யோனிகளா யினவெல்லா முண்ணிறைந்த பெருமகிழ்ச்சி
தானிறைந்த சித்திரையிற் சதயமாந் திருநாளில (௪௨௮)

அடியனே னாதரவா லாண்டவர சின்சரிதப்
படியயா னறிந்தபடி பகர்ந்தேனப் பரமுனிவன்
கடிமலர்மென் சேவடிகள் கைதொழுது குலச்சிறையார்
முடிவில்புகழ்த் திருத்தொண்டின் முயற்சியினை மொழிகின்றேன். (௪௨௯)

**திருநாவுக்கரசுசுவாமிகள்புராண முற்றிற்று.**

ஆ திருவிருத்தம் - ௧௬௯௧



திருவிளங்குந் திருமுனைப்பாடி நாட்டிலே, திருவாய்மூரிலே, வேளாளர்மரபிலே, குறுக்கையர் குடியிலே விருந்தளிப்பதினும, சுற்றங்களைத் தாங்குவதினுஞ் சிறப்பினையுடைய புகழனார் என்பவர் ஒருவர் இருந்தார் அவர் மனைவியின் பெயர் மாதினியார். அவர்களுக்குத் திலகவதியார் என்னுஞ் சிவமாது புத்திரியாகப் பிறந்த பின்னர், பிறையணிந்த இறைவனருளால் மருணீக்கியார் என்பவர் திருவவதாரஞ் செய்தார். புகழனார் அவரை அன்புடன் வளர்த்து உரியபருவத்திலே கலைபயிலும்படி செய்தார். மருணீக்கியார் சகல கலைகளையுங் கற்றுணர்ந்து இளம்பிறைபோல வளர்ந்து வந்தார். திலகவதியாருக்குப் பன்னிரண்டு வயதாக, வேளாள வருணத்தவரும், அரசனிடம் சேனாதிபதியாய் இருப்பவரும் ஆகியகலிப்பகை நாயனார்

என்பவர் திலகவதியாரை மணம்புரிய விரும்பிச் சில பெரியோர்களைப் பெண் கேட்கும்படி புகழனாரிடம் அனுப்பினார் அவர்கள் புகழனாரிடம் வந்து கலிப்பகையார் கருத்தைத்தெரிவிக்க, அவரும் இசைந்தனர். அம்மு தியோர்கள் சென்றுபுகழனார் இசைந்தமையைச் சிவபத்தியில் முதிர்ந்த கலி ப்பகையாருக்குத் தெரிவித்தார்கள். அவர் திருமணத்துக்கு முன் அரசன் ஆணைப்படி வடதேசஞ்சென்று பகையரசர்களோடு யுத்தஞ்செய்து கொண் டிருந்தார அக்காலத்தில் புண்ணியராகிய புகழனார் சிவபதம் அடைந்தார். அவர் மனைவியாகிய மாதினியார் விதிப்படி உடன்கட்டை ஏறினார் திலகவ தியாரும், மருணீக்கியாரும் பெரிதும் துக்கித்து, சுற்றத்தவர்கள் தேற்றத் துயரொழிந்து, சிவனடிசேர்ந்த பிதாமாதாக்களுக்குச் செய்ய வேண்டிய கடன்களைச செய்து முடித்தார்கள்.

வேற்றரசர்களோடு போர்புரிந்துகொண்டிருந்த கலிப்பகையார் யுத்த களத்திலே பூத உடம்பை விடுத்துப் புகழுடம்பைப் பெற்றுக் கொண்டார் அதைத் திலகவதியார் கேள்விப்பட்டதும் இறக்கத் துணிய, மருணீக்கியார் அம்மையாரை வணங்கி "நமது தந்தை தாயர்கள் சிவலோகமடைந்த பின் உம்மையே அவர்களாகக் கருதியிருக்கின்றேன் என்னைத்தனியாக விடுத்து இறப்பீராயின் உமக்கு முன்னமே என் உயிரைப் போக்கிக்கொள்வேன்" என்றார் கருணையிற் சிறந்த பெருமாட்டியார் தமபியார் உலகில் வாழவேண் டும் என்னும் பேரவாவால் உயிர்தாங்கி, விவாகமில்லாமல், இல்லத்திலே தவம் புரிந்துகொண்டிருந்தார் மருணீக்கியார் தண்ணீர்ப் பந்தர் அமைத்தல்முத லிய தருமவழிகளில் திரவியங்களைச் செலவழித்து, உலக இன்பத்தைவெறு த்து, எல்லாச சமயங்களினுஞ் சிறந்த சமயம் இதுதான் என்று உணரும் பேரறிவைச் சிவபிரான் திருவருள் செய்யாமையால், பாடலிபுத்திரம் என் னும் பதிக்குப்போய், சமணர்களது பள்ளியடைந்து, அவர்கள் துர்ப்போ தனையால் சமண சமயத்தைக் கைக்கொண்டு, அச்சமய நூலுண்மைகளைக் கரதலா மலகம்போலுணர்ந்தார். அவர் நுண்ணறிவையும், கல்வியாற்றலை யுங்கண்ட அமணர்கள் அவருக்குத் தருமசேனர் என்னும் பெயரைக்கொடு த்து, அவரைக் குருவாகப் பூசித்து வந்தார்கள். தருமசேனர் சித்தநிலையறி யாத புத்தர்களை வாதத்தில் வென்று, அமண சமயத்தை வளர்த்துக்கொண் டிருந்தார

திலகவதியார் சிவபத்தியிற் பெரும்பற்றுடையவராய்த் திருவதிகை வீரட் டானம் என்னும் திருப்பதியையடைந்து, புரமெரித்த புண்ணிய மூர்த்திக் குத் திருத்தொண்டு செய்துவந்தார். வருநாளில் ஒருநாள் தம்பியாரை நினை ந்து பெரிதுந்துக்கித்து, அதிகைவீரட்டானேசுரரைவணங்கி 'பெருமானே! தேவரீர் என்னை அடிமையாக்கி ஆண்டருளுபவர் என்பது உண்மையாயின், சமணப் படுகுழியில் வீழ்ந்துள்ள என் தம்பியை அதினின்றும் எடுத்தாளல் வேண்டும்' என்று பன்முறை விண்ணப்பித்தார். சிவபெருமான் அம்மை யார் சொப்பனத்திலே தோன்றி "உன் மனக் கவலையை ஒழி; உன்தம்பி முன்சன்மத்திலே முனியாகி நம்மையடையத்தவஞ்செய்தான்;அத்தவத்தில் சிறிது வழுவினமையால் சமணனாயினன்; அவனைச் சூலைநோயால் வருத்தி ஆண்டருளுவோம்" என்று அருளிச்செய்தார். எல்லாம் வல்ல அவ்விறை வனருளாலே தருமசேனர் வயற்றிலே ஆலகால விஷத்தினுங்கொடிய சூலை நோயுண்டாகிக் குடலை முடுக்கியது. அவர்வருந்தி அமணர்பாழியறையில் வீழ்ந்து, தமக்குக் கைவந்த சமணசமய மந்திரங்களாற்றடுத்தும், நோய் ஒழி யாமல் மென்மேலும் முடுகியெழுந்து குடைந்தது. தருமசேனர் பாம்பின் விஷம் தலைகொண்டாற் போல மயங்கி நலையுற்றார். சமணர்கள் ஒருங்கு

சேர்ந்து குண்டிகைநீரை மந்திரித்துக் குடிப்பித்தார்கள்; மயிற்பீலிகொண்டு
காலளவுந் தடவினார்கள். சூலைநோய் தணியாது முன்னிலும் அதிகப்பட்டு
முனிவரை வருத்தியது. அதைக்கண்ட குண்டர்கள் 'இவ்வெங்நோயைப்
போன்ற ஓர் நோயையிதுகாறும் கண்டிலேம்; இதற்கு யாம் என்செய்கோம்;
இது நம்மாலபோக்க அரிது' என்றுசொல்லிக் கைவிட்டார்கள். தருமசேனர்
தமது தமக்கையாரை நினைந்து, தம்முடைய சமாசாரத்தை அவருக்குத்
தெரிவிக்கப் பாசுகனை அனுப்பினார் அவன் அதிகையடைந்து அருந்தவக்
கொழுந்தாகிய திலகவதி யம்மையாரை நந்தனவனத்தருகே கண்டு இறை
ஞ்சி "உமக்கிளையவர் ஏவலினால் வந்தேன்" என்றான். அம்மையார் "அவ
ருக்கு ஏதாயினும் தீங்குளவோ" என்ன; பாசுகன் "ஆம்; அவரைச் சூலை
நோய் வருத்துகின்றது ; அதை ஒழிக்குந் திறம் அமணர்களுக்கில்லை; அச்
சமாசாரத்தை உமக்குத் தெரிவித்துப் பிழைக்கும் வழிகேட்டுக் கொண்டு
இரவிலே திருமடம்படி என்னை அனுப்பினார்" என்றான் அதற்கு அம்மை
யார் "மாபாவிகளாகிய சமணர்கள் பள்ளிக்கு நான்வாரேன் ; என்சகோதர
ருக்கு இதை உரை" என்று சொன்னார் அதைக்கேட்ட பாசுகன் திரும்பித்
தருமசேனரிடஞ் சென்று, அம்மையார் சொற்றதைச்சொற்றான் நோயால்
வருந்துந் தருமசேனர் "அந்தோ; என்செய்கேன்" என்று மனஞ்சோர்ந்து
பின்னர் 'புன்சமயத்தில் ஒழியா இவ்வெங்நோயொழியத் திலகவதியார் திரு
வடியை யடைவேன்' என்றுகருதி, சமணவேடங்களை நீக்கி, வஸ்திரமணிந்து
தமக்குக் கைதருவார் சிலரைப்பற்றிக்கொண்டு, சூலைநோய் மாத்திரம் தம்
மைத் தொடர்ந்துவர, திருவதிகை அடைந்து, திலகவதியார் திருமடத்திற்
குப்போய் அவரைப்பணிந்து 'நங்குலஞ் செய்த நற்றவப்பயனே! அடி
யேன் சூலைநோயால் பெரிதும் வருந்திப் பொறுக்க முடியாமல் இங்குவந்
தேன்; இனிமயங்காது உய்ந்து கரை ஏறும்வழியை யுணர்த்தியருளும்' என்
றார் அம்மையார் அவரைப் பார்த்து, தடங்கருணைப் பெருங்கடலாகிய சிவ
பிரான் திருவருளை நினைந்து கைதொழுது "பரசமயப் படுகுழியில் அறி
யாது வீழ்ந்து வருந்தும் தம்பியாரே! எழுந்திரும்" என்று இயம்பினார்
அம்மொழி கேட்ட மருணீக்கியார் சூலைநோயுடன் நடுங்கி எழுந்து தமக்கை
யாரைத் தொழுதார் அருந்தவ அரசியார் "இது சங்கரனார் திருவருளாகும்;
தங்கழலடைந்த மெய்யடியவர்களது பற்றையறுத்து அவர்களை ஆளும் அப்
பரஞ்சோதிக்கே திருத்தொண்டு செய்யும்" என்று கட்டளையிட, அதைச்
சிரமேற்றாங்கி அவரை இறைஞ்சினார். தபோதனியார் எம்பெருவாழ்விற்குத்
திருவஞ்செழுத்தை ஓதித் திருநீற்றைக் கொடுத்தார் மருணீக்கியார் அப்
பூதியை விதிப்படிவாங்கி அணிந்துகொண்டார். சைவத்திலகவதியார் திருப்
பள்ளி எழுச்சியிலே, திருவலகுந் திருமெழுக்குத் திருத்தோண்டியும் தாங்
கிக்கொண்டு அதிகைப்பெருமான் திருவாலயத்துக்குத் தம்பியாரை யழைத்
துக்கொண்டு சென்றார் அமண்பொய்யை யுலகுக்குணர்த்திய மருணீக்கி
யார், வீரட்டானேசுரர் திருக்கோயிலைத்தொழுது வலம்வந்து, திருமுன்விழு
ந்து எழுந்து நின்றார். அதுகாலை சிவநாதன் திருவருளால் அவருக்குத் தமி
ழ்ப்பாமாலைகள் சாத்தும் ஞானவுணர்ச்சி உண்டாயது; உண்டாகத்தம்மை
வருத்தும் சூலைநோய் ஒழியவும், உலகமுய்யவும் "கூற்றாயினவாறு விலக்க
கிலீர்" என்னுங் கோதிலாத் திருவருட்பதிகத்தை ஓதியருளினார். உடனே
சூலை நோய் ஒழிந்தது தெய்வத் திருவருள் கைவரப்பெற்ற அடியவர்பெரு
மான் அன்புருவாய் நின்று விழுந்து புரண்டு 'சமணப்படுகுழியில் விழுந்து
வருந்திய யான் சிவபிரான் திருவடியையடைந்து பேரின்ப வாழ்வைப்
பெறச் செய்தசூலைநோய்க்கு என்ன கைம்மாறுசெய்வேன்' என்று தொழு
தார். அப்பொழுது அம்பிகைபாகன் திருவருளால் "மொழிக்குமொழித்

திக்கும் தேவாரப்பதிகத்தை நீ பாடியபடியால் உனக்கு நாவுக்கரசு என்னும் அருமைத திருநாமமே ஏழுலகங்களினும் வழங்குக" என்று யாவரும் வியக்கும்படி ஒரு அசரீரி ஆகாயத்தில் எழுந்தது. அதுகேட்ட அருளரசர் "சமண சமயததிலுழன்று தீவினை வயப்பட்டிருந்த அடியேனுக்கும் பெருவாழ்வு கிடைத்ததே" என்று ஆனந்தித்து, அத்தன்மையனாய இராவணனுக்குக் கருணைசெய்த திருவருட்டிறததின் மெய்ம்மையை யுணர்ந்து துதிப்பதனையே மேற்கொண்டு மெய்யுற வணங்கினார் திருவதிகையிலுள்ள சிவநேயர்கள் "திருநாவுக்கரசுசுவாமிகள் பொய்ச்சமயமாகிய சமணசமயம அழியத் திருவருள் பெற்றமையால் உலகம் உய்ந்தது உய்ந்தது" என்று ஆனந்தவாரிதியிற் றோயந்தார்கள் வாகீசமன்னர், மனம்வாக்குகாயத்தொண்டுகளைச செய்யவேண்டும என்னும் பேரவாதம்மைப் பிடித்தூந்ததலால், சிவசின்னங்களைத்தாங்கி, தியானமறாவுணர்வும், ஈறின்றி எழும்திருவாசகமும், உழவாரத்திருத்தொண்டும் உடையவரானார். சிவபுண்ணியமே ஒருருக்கொண்டுவந்தா லெனவிளங்குந் திலகவதியார் "எம்மை ஒருபொருளாக மதித்து ஆண்டருளிய சிவபிரான் கருணைததிறத்தைப் பெற்றவர் யார்" என்று மகிழ்ந்து அப்பிரானை வணங்கினார்.

பாடலி புத்திரத்திலுள்ள சமணர்கள் இந்த சமாசாரததைக் கேள்வியுற்று மனம் பொறாதவர்களாய் "தருமசேனரை வருத்திய சூலைநோயைத் தீர்க்க நம்மால் முடியாமையால், அவர்திருவதிகைககுப்போய் முன்போலச் சைவராய், அவ்வெங்நோய் நீங்கப்பெற்று உய்ந்தார் இனிநமதுசமயம் அழிந்தது அழிந்தது" என்றுமயங்கி ஓரிடத்தில் ஒருஙகுசேர்ந்தார்கள். இவவாறாக மருண்டு கூடியசமணர்கள் 'அந்தோ தருமசேனர் சைவராயதை பல்லவராஜன் அறிவானாகில், அவனும்சைவனாகி நமதுசமயவிருததியைத் தவிர்ப்பான்' என்று மனஙகலங்கி ஆலோசித்து, ஒரு உபாயத்தைத் தெரிந்து 'அரசன் இதைக் கேள்விப்படுமுன்னே நாமே சென்று அவனிடம்போய் முறையிடுவோம்' என்றுஎழுந்து வாடியமுகத்தினர்களாய், அரமனைவாயிலையடைந்து, தஙகள் வரவை அரசனுக்குத் தெரிவிக்கும்படி வாயில் காப்போர்களிடம் சொன்னாகள் அவர்கள் அடிகண்மார் வரவை அரசனுக்குத் தெரிவித்து, அவனாணையின் மேல பாவிகளை அரமனைக்குள்ளே விடுத்தார்கள். கருமலை போன்ற சமண முனிவர்கள் மன்னவனைக்கண்டு 'அரசர் பெருமானே! தருமசேனர், சைவசமயநெறியில் நிற்கும் தமதுதமக்கையாராகிய திலகவதியாரைப்போலத தாமும் ஆக விரும்பித் தமக்குச் சூலைநோயுற்றதாகக காட்டி, அங்நோய நம்மால் தீரவில்லை என்று திருவதிகைசேர்ந்து சைவராகி நமது சமயததையும், தெய்வத்தையும் நிந்திக்கின்றார்' என்றார்கள். அது கேட்ட பல்லவன் வெகுண்டு 'இதற்கு என்செய்வது' என்ன, குண்டர்கள் 'நமது நெறியை யழித்த அத்தருமசேனரைத் துன்புறுத்தவேண்டும்' என்றார்கள். உடனே பாவி மன்னன் மந்திரிகளை நோக்கி 'இவர்கள் சொன்ன தீயோனைப் பிடித்துக் கொண்டு வாருஙகள்' என்று கட்டளையிட்டான்.

அமைச்சர்கள் அரசனாணைப்படி திருவதிகைஅடைந்து திருநாவுக்கரசு சுவாமிகளைக் கண்டு 'உம்மை அழைத்துவரும்படி அரசன் எங்களை அனுப்பினான்; வாரும்' என்றார்கள். சுவாமிகள் 'நாமார்க்குங் குடியல்லோம்' என்னுந் திருத்தாண்டகத்தைத் திருவாய்மலர்ந்தருளி 'நாம் வரக்கடவேமல்லோம்' என்றார். அதைக்கேட்ட அமைச்சர்கள் அரசரது திருவடிகளை வணங்கி வேண்ட நாயனார் 'எனக்குவரும் வினைகளுக்கெல்லாம் எம்பெருமானுளன்' என்று நினைந்து, மந்திரிகளோடு பல்லவன் சபை சேர்ந்தார் அவரைக்கண்டு அஞ்ஞான அரசன் அழுக்காறுடைய அடிகண்மார்களை

நோக்கி 'இவனை என்செய்வது; சொல்லும்' என்ன, கொல்லாவிரதங்கொண்டுங்கொடுமைசெய்யுஞ்சமணர்கள் 'இவனைநீற்றறையிலிடவேண்டும்' என்றார்கள். உடனே உணர்விலாப் பல்லவன் அருகிருந்த ஏவலாளர்களை நோக்கி 'இவனை அடிகண்மார் சொல்லியபடி நீற்றறையிலிடுங்கள்' என்று ஆஞ்ஞாபித்தான். அவர்கள் அப்படியே எம்பெருவாழ்வை நீற்றறையிலிட்டுக் கதவைத் தாளிட்டார்கள். திருநாவுக்கரசு சுவாமிகள் தாண்டவமூர்த்தியின் தாள்நிழலைத் தலைக்கொண்டு 'ஈசனடியார்களுக்கு ஈண்டுவரும் துயருளவோ' என்று அவ்வீசனையே நினைந்து 'மாசில் வீணையும் மாலை மதியமும்' என்னுந் திருக்குறுந்தொகையை அருளிச்செய்து ஆங்கு இனிது வீற்றிருந்தார். அந்நீற்றறை இளவேனிலும், தென்றற்காற்றும், கழுநீர்த்தடமும், வெண்ணிலவும், யாழொலியும்போலக் குளிர்ந்தது. ஏழுநாள் கழிந்தபின்னர் அரசன் ஆணைதாங்கி அமணக்கொடியவர்கள் நீற்றறைக் கதவைத்திறந்தார்கள். அங்கே அருளாளராகிய நாவரசர் ஒரு துன்பமுமின்றி விளங்கிக்கொண்டிருந்தார். அதைக்கண்ட தீயர்கள் ஆச்சரியமடைந்து, அரசனிடஞ்சென்று 'தருமசேனர் நமது சமயமந்திரங்களை யுணர்ந்தவராகலான், அதனால் பிழைத்தார்' என்றார்கள். அக்கொடுங்கோலரசன் 'இனி இவனுக்கென்செய்வது' என்ன, நின்றுண்ணும் நீசர்கள் 'இவனுக்கு நஞ்சூட்டவேண்டும்' என்றார்கள். அரசன் ஏவலாளர்களுக்குக் கட்டளையிட அவர்கள் அப்படியே செய்தார்கள். அந்நஞ்சை அருளாளர் 'நாதன் அடியவர்களுக்கு நஞ்சம் அமுதாம்' என்று உட்கொண்டு தீங்கில்லாமல் உயிர்பெற்றிருந்தார். சமணர்கள் உற்றுநோக்கி 'இவனுக்கு விடமும் அமுதமாயிற்று; இவன்பிழைத்திருப்பானாயின் நமக்குத்தீங்குவிளையும்' என்று அஞ்சி, அரசன்பாற்சென்று 'நஞ்சையுண்டும் நமது சமய மந்திர வலியால் பிழைத்தான்; அவன் உயிரோடிருப்பானாயின் எமது உயிரும், உமது அரசாட்சியும் அழியும்' என்றார்கள். அம்மொழிகேட்ட அறிவிலா அரசன் 'இனி அவனை மாய்ப்பதற்குச் செய்யவேண்டிய உபாயம்யாது' என்றுகேட்க; கருணை என்பது சிறிதுமில்லாத கரியவர்கள் 'உமது யானையை விடுத்து அவனைக் கொல்லுவித்தலே முறை' என்றார்கள். அங்ஙனே அரசன் யானையைச் சுவாமிகளுக்கெதிரே விடுவித்தான். கோபங்கொண்டு வரும் கொலைக்களிற்றைக்கண்ட நாயனார் சிறிதும் அஞ்சாது, சிவன் கழலைச் சிந்தித்து 'சுண்ணவெண் சந்தனச் சாந்தும்' என்னுந் திருப்பதிகத்தை எடுத்து, ஒவ்வொரு திருப்பாட்டின் இறுதியினும் 'அஞ்சுவது யாதொன்றுமில்லை அஞ்சவருவதுமில்லை' என்று ஓதியருளினார். வடவைபோலச் சீறி எதிர்த்த வேழம் உலகுய்ய அவதாரஞ் செய்த உண்மை நாயனாரை வலம்வந்து வணங்கி அஞ்சி அப்புறம்போயிற்று. அதன்மேலிருந்த பாகர்கள் அதனை அங்குச் சத்தாற் குத்தித்திருப்பிச் சுவாமிகளை மாய்க்க வேண்டும் என்னுங்குறிப்பைக்காட்ட, அது அவர்களைக் கீழே தள்ளிக்கொன்று, அங்கே பலவிடங்களிலுள்ள சமணர்களைத் தேடித்தேடியோடி மிதித்தும் பிளந்தும் கொன்றும் நகரத்தைக்கலக்கி, அரசனை ஆகுலக்கடலில் ஆழ்த்தியது. அவ்விறல்வேழத்துக்கு எதிர்படாமல் பிழைத்த சமணர்கள் மானமழிந்து மயங்கி வருந்திய சிந்தையராகி மன்னவனை யடைந்து 'தருமசேனன் நமது சமய சாத்திரங்களிலே கற்ற மந்திரவலிமையால் நாம விடுத்தயானையினாலேயே நமக்குத்தீங்கு செய்தான்' என்றார்கள். அவ்வரசன் அளவிலாத கோபங்கொண்டு 'இனி என செய்வது' என்ன; தீமைக்கஞ்சாத் தீயர்கள் 'அவனைக்கல்லோடு கயிற்றால் கட்டிப்படகிலேற்றிக் கடலிலே தள்ளவேண்டும்' என்றார்கள். உடனே உண்மையறியா அரசன் அருகிருந்த கொலைத் தொழிலாளர்களை நோக்கி 'இவர்கள் சொல்லியபடி செய்க' என்று ஆஞ்ஞாபிக்க, அவர்கள் அப்

படியே செய்தார்கள். அருணாவுக்கரசர் 'எப்பரிசாயினும் ஆகுக; நான் எந்தையை ஏத்துவேன்' என்று 'சொற்றுணை வேதியன்' என்னும் நமச்சிவாயப் பதிகத்தைப்பாடியருளினார். கடல்மீது கல்லானது, சுவாமிகள் மேற் பக்கத்திலிருக்கத், தெப்பம் போல மிதந்தது. பிணித்தபாசமும் அறுந்தது. தவஞ்செய்த வருணனும் கருங்கல்லே சிவிகையாகத் தமிழ்த் தெய்வத்தைத் தாங்கிக்கொண்டு திருப்பாதிரிப்புலியூர் என்னுந் திருப்பதியின் அருகே சேர்த்தனன். சுவாமிகள் திருக்கோயிலுக்குச் சென்று 'ஈன்றாளுமாய்' என்னுந் தமிழ்மாலைசாத்தி, சின்னாள் அங்கு அருந்தமிழ்ப் பதிகங்கள் பாடிக் கொண்டிருந்தார்.

அருக்கக்கடல் கடந்தேறிய அன்பர்பெருமான் திருவதிகை வீரட்டானேசுரரை வணங்க வேண்டுமென்னும் பெருங்காதலினால் பாதிரிப் புலியூரை விடுத்துச்சென்று, திருமாணிக்குழியையும், திருத்தினை நகரையும் கண்டு தொழுது திருவதிகையடைந்தார். அப்பதியிலுள்ள அடியவர்கள் நகரை யலங்கரித்து எதிர்கொண்டுபணிய அவர்களோடு திருக்கோயிலுக்குச்சென்று, பெருமானாரை வணங்கி 'வெறிவிரவு கூவிளம' என்னும்ஏழைத்திருத்தாண்டகத்தையும், பலதிருப்பதிகங்களையும்பாடித்திருத்தொண்டு செய்துகொண்டிருந்தார். சமணர்களோடுசேர்ந்து உண்மையறியாமல் பலதீங்குகள்செய்த பல்லவராசன் திருநாவுக்கரசுசுவாமிகளை வணங்கிச் சைவனாகிப் பாடலிபுத்திரத்திலிருந்த சமணர் பள்ளிகளையும், பாழிகளையும் இடித்து, அவைகளின் கற்களால் திருவதிகையிலே குணதரவீச்சுரம் என்னும் சிவாலயத்தைக் கட்டினான்.

சிவமயமாக விளங்குந் திருநாவுக்கரசுசுவாமிகள் சிவஸ்தல யாத்திரை செய்ய விரும்பித் திருவெண்ணெய்நல்லூர் திருவாமாத்தூர், திருக்கோவலூர் முதலிய திருப்பதிகளை வணங்கித் தேவாரப் பதிகம்பாடி, திருப்பெண்ணாகட மடைந்து, திருத்தூங்கானை மாடம் என்னும் ஆலயத்திற்குப் போய்ச் சிவபெருமானைப் பணிந்து 'நாயகனே! அடியேன் ஆருகதசமயத் தொடக்குண்டுபோந்த இவ்வுடலோடு உயிர்வாழ்த்தரியேன்; உயிர்தரிப்பதனுக்குத் தேவரீர் திருமுத்திரையாகிய சூலத்தையும், இடபத்தையும் என்மீது பொறித்தருளல் வேண்டும்' என்று, 'பொன்னார் திருவடிக்கொன்றுண்டு' என்னுந் திருவருட்பதிகம்பாடினார். பாடினதும், சிவபிரான் திருவருளால் ஒருசிவபூதம் ஒருவருக்குந் தெரியாதபடி சுவாமிகள் திருத்தோளினிடத்திலே சூலக்குறியையும், இடபக்குறியையும் பொறித்தது. வாகீசர் பரமசிவனார் திருவருளை வியந்து விழுந்து வணங்கி எழுந்து, திருமுதுகுன்றம் முதலிய திருத்தலங்களுக்குச் சென்று சிவதரிசனஞ் செய்து, கிழக்கே நிவாநதிக்கரை வழியாகநடந்து சிதம்பரதலத்தை யடைந்தார். அடைந்து என்று வந்தாய் என்னுங் குறிப்போடு திருத்தாண்டவம் புரியும் ஸ்ரீ நடராஜப்பெருமானாரைப்பணிந்து ஆனந்தமயமாய் நின்று 'கருநட்டகண்டனை' என்னும் திருவிருத்தத்தையும் 'பத்தனாய்ப் பாடமாட்டேன்' என்னும் திருநேரிசையையும், 'அன்னம்பாலிக்குந் தில்லை' என்னுந் திருக்குறுந்தொகையையும் பாடிப்பரவினார். அத்தலத்தினின்றும் திருவேட்களத்துக்குப் போய்ச்சுவாமியைத் தொழுது பதிகம்பாடி, திருக்கழிப்பாலை என்னுஞ் சிவதலத்தையுடைந்து சிவதரிசனஞ் செய்து 'வனபவள வாய்திறந்து' என்னுந் திருப்பதிகமருளிச் சின்னாள் அங்கே தங்கியிருந்தார். பின்னர் அத்திருத்தலத்தை விடுத்து வழியிலே 'பனைக்கை மும்மத வேழ முரித்தவன்' என்னுந் திருக்குறுந்தொகையையருளிச்செய்துகொண்டே தில்லையம்பதியைச்சேர்ந்து, 'அரியானை' என்னும் பெரிய திருத்தாண்டகத்தைப் பாடிக்கொண்டு திரு

வம்பலமேவிச் சபாபதியைத் தரிசித்துத் தொழுது 'செஞ்சடைக்கற்றை' என்னுந் திருநேரிசை பாடினார்.

வாகீசப் பெருந்தகையார் சிதம்பரத்திலே திருத்தொண்டுகள் செய்து கொண்டிருக்குநாளில், ஒருநாள் அவர் சீர்காழியிலே அம்மையார் ஞானமு தத்தையுண்ட திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகளது தெய்வீகசசெயல்களை அடியார்கள் சொல்லக்கேட்டு, அத்திருவாளர் சேவடிகளை வணங்கவேண்டும் எனனும்பேராசையால் ஸ்ரீநடராஜப்பெருமானைத் தொழுதுவிடைபெற்றுத் திருவீதியிலே புரண்டு அங்கப் பிரதக்ஷணஞ்செய்து, அத்திருவெல்லையை வணங்கிக்கடந்து, திருநாரையூரைப் பணிந்துபாடி, சீர்காழியருகே வந்தார். வாகீசர் வருதலைக் கேள்வியுற்ற திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் அடி யவர்களோடு அவரை எதிர்கொண்டார். திருநாவுக்கரசு சுவாமிகள் ஞான சம்பந்தப் பெருமானாரது திருவடிகளை வணங்கினார் கௌணியர் பெரு மான் அவருடைய திருக்கரங்களைப் பற்றி எடுத்து, இறைஞ்சி, 'அப்பரே' என்ன; அருளரசர் 'அடியேன்' என்றார். அவர்களிருவரும் எல்லையில்லா ஆனந்தமெய்தி ஆலயத்திற்குப்போய் அம்பிகாபதியை வணங்கினார்கள். அதுகாலை ஆளுடைய பிள்ளையார் அப்பர்சுவாமிகளை நோக்கி 'உமது தம் பிரானைப்பாடும்' என்ன, ஆளுடைய அரசர் 'பார்கொண்டுமூடி' என் னுந் திருப்பதிகத்தை யருளிச் சிவஞானசம்பந்தர் திருமடத்திலே எழுந் தருளி அமுதுசெய்து, அப்பிள்ளையாருடன் பலநாள் இருந்தார். அத்திரு மடத்தில் இருக்குங்காலத்தில் ஒருநாள் வாகீசர் சோழநாட்டிலுள்ள திருப் பதிகளைத் தரிசிக்கவேண்டுமென்று பரசமயக் கோளரியிடம் விண்ணப்பஞ் செய்து, அவ்வள்ளலாரோடும் திருக்கோலக்காவிற்குப்போய், சிவபெரு மானை வணங்கித் துதித்தார் முத்தமிழ்விரகர் சீர்காழிக்குத் திரும்பினார். அப்பர்சுவாமிகள் திருக்கருப்பறியலூர், திருப்புன்கூர், திருநீடூர், திருக் குறுக்கை, திருநின்றியூர், திருநனிபள்ளி, திருச்செம்பொன்பள்ளி, திரு மயிலாடுதுறை, திருத்துருத்தி, திருவேள்விக்குடி, திருவெதிர்கொள்பாடி, திருக்கோடிகா, திருவாவடுதுறை, திருவிடைமருதூர், திருநாகேச்சரம் முதலிய சிவதலங்களைத் தரிசித்துப் பதிகம்பாடி, திருச்சத்திமுற்றத்தை அடைந்து, சுவாமி தரிசனஞ்செய்து 'கோவாய்முடுகி' என்னுந் திருப்பதி கத்தைத் திருவாய்மலர்ந்தருளினார் அப்பொழுது சிவபெருமான் 'நல்லூ ருக்கு வா' என்று அருளிச்செய்தார் சிவாஞ்ஞைப்படி திருநாவுக்கரசு சுவாமிகள் திருநல்லூரை யடைந்து சுவாமியை வணங்கி மகிழ்ந்து எழும் போது சிவபிரான் 'உன்னுடைய நினைப்பை முடிக்கின்றோம்' என்று தமது பாதமலரை அவர் திருமுடிமீது சூட்டியருளினார். சுவாமிகள் 'நினைந்துருகுமடியாரை நையவைத்தார்' என்னுந் திருத்தாண்டகம்பாடி யருளினார் இன்னும் பல திருப்பதிகங்கள் அருளிச்செய்து கொண்டும், திருக்கருகாவூர், திருவாவூர், திருப்பாலை முதலிய க்ஷேத்திரங்களுக்குப் போய்ச் சுவாமி தரிசனஞ்செய்துகொண்டும் நல்லூரிலே சிலநாளிருந்தார்

அத்திருப்பதியினின்றும் திருநாவுக்கரசு சுவாமிகள் திருப்பழனத்திற் குச் சென்று சுவாமி தரிசனஞ்செய்து, திங்களூர் வழியாகப்போய்க்கொண் டிருந்தபொழுது, அவ்வூரிலே அப்பூதியடிகள் தமது புதல்வர்களுக்குத் திரு நாவுக்கரசு என்னுந் திருப்பெயரைத்தரித்தும், தமது அன்னசாலை, கிணறு, குளம், தண்ணீர்ப்பந்தர் முதலியவற்றைத் திருநாவுக்கரசு என்னும் பெய ரால் அமைத்தும் இருத்தலைக்கேட்டும், கண்டும் அவரது திருமாளிகைக்கு எழுந்தருளினார். அப்பூதியடிகளுயனார் அப்பர்சுவாமிகளை மனைவி மக்க ளோடும் பேரன்புடன் பணிந்து, 'தேவரீர் திருவமுது செய்தருளல்வேண்

டும்' என்று பிரார்த்திக்க, வாகீசரும் உடன்பட்டார். அப்பூதிநாயனார்
தமது புத்திரராகிய மூத்த திருநாவுக்கரசை யழைத்து வாழைக்குருத்து
அறுத்துவருமபடி தோட்டத்திற் கனுப்பினார். அவர் தந்தைசொற்படி
தோட்டத்திற்குப் போய் வாழைக் குருத்தைக் கொய்யும்போது ஒருநாகப்
பாம்பு அவரைத தீண்டியது அவர் அதை ஒரு சிறிதுஞ் சிந்தியாது விரை
வாகத் திரும்பிவந்து மாதாவிடம் குருதகைக் கொடுதது, விஷந்தலைக்
கொள்ள மயஙகிக கீழே விழுநது இறநதார் அப்பூதியடிகளாரும், அவர்
மனைவியாரும புததிரரைக் குறித்துச் சிறிதும் வருநதாதவர்களாய் 'சுவாமி
கள் திருவமுது செயயாரோ' எனப்பெரிதும் வருநதி, தம்புதல்வன சவத்
தைமறைதது மயஙகாது வாக்கின் மன்னர்பால் வந்து 'தேவரீர் திருவமுது
செய்ய எழுந்தருளல் வேண்டும்' என்று வேண்டினார்கள். கருணைக்கடலா
கிய வாகீசப்பெருமான் நடந்த உண்மையைத் திருவருளால் உணர்ந்து,
அவர்களது அன்புக்கிரஙகிப்பிணத்தைச் சிவாலயத்தின்முன்பாகக் கொணர்
வித்து 'ஒன்று கொலா மவர்' என்னுந் திருப்பதிக மருளி அப்பிள்ளையை
உயிர்பெற்று எழும்படி செய்தார். அப்பூதியடிகளார் அருந்தனையர் உயிர்
பெற்றதைக் கண்டும் ஆனந்திக்காது சுவாமிகள் அமுது செய்யாதிருந்ததற்
குத் தளர்வெய்தினார். அத்தளர்ச்சியை ஒழிக்க; அப்பர்சுவாமிகள் அவரில்
லத்துக்குச் சென்று அமுதுசெய்து, அவவிடத்தில சிலநாள் தங்கிப் பின்னர்
அவ்வூரினின்றும் நீஙகித் திருப்பழனததை யடைந்து 'சொன் மாலைபயில்
கின்ற' என்னுந் திருப்பதிகத்தைப் பாடியருளி, அதிலே அப்பூதிநாயனா
ரைச் சிறப்பிதது, அஙகே எழுந்தருளியிருந்தார். இருந்தபோது திருச்சோற்
றுத்துறை முதலிய திருப்பதிகளுக்குப்போய்ச் சுவாமிதரிசனஞ் செய்து
திரும்புவார்.

நெடுநாள் கழிந்தபின்னர் தாண்டகவேந்தர் திருநல்லூருக்குச் சென்று
சுவாமி தரிசனம்பண்ணித் திருத்தொண்டுகள் செய்துவந்தார். செய்துவருங்
காலத்தில் திருவாரூரைக்கண்டு தொழக்கருதி நல்லூரை விடுத்து நீஙகிப்
பழையாறை, திருவலஞ்சுழி, கும்பகோணம, நாலூர், திருச்சேறை, திருக்
குடவாயில், திருநாறையூர், திருவாஞ்சியம், பெருவேளூர், திருவிளமர் என்
னுந் திருப்பதிகளைத தரிசிதது, திருவாரூரை அடைநது, எதிர்கொண்ட
அடியவர்களோடு 'குலம்பலவாவரு குண்டர் முன்னே' என்னுந் திருப்பதி
கததைப் பாடிககொண்டே திருவீதியினுள்ளே நுழைந்து தேவாசிரியமண்ட
பமடைந்து புற்றிடஙகொண்ட பெருவாழ்வைக்கண்டு தொழுது 'கற்றவர்
களுண்ணுங் கனியேபோற்றி' என்னும் போற்றித் திருத்தாணடகத்தைப்
பாடினார்; இன்னும் பல திருவருட்பாக்களை யோதிக்கொண்டு அவ்வூரிலே
யிருந்தார்; ஒருபதிகத்திலே நமிநந்தியடிகள் திருத்தொண்டையுஞ் சிறப்பித்
தார்; அத்திருவாரூரிலுள்ள அரநெறி என்னும் ஸ்தலத்தையும தரிசிததுப்
போற்றினார். அப்படியிருக்கு நாட்களிலே திருவலிவலம், கீழ்வேளூா, கன்
றாப்பூர் முதலிய திருப்பதிகளுக்குப் போய்ச் சுவாமி தரிசனஞ் செய்து
திருவாரூருக்கே திரும்பிவிட்டார். திருநாவுக்கரசுசுவாமிகள் திருவாதிரைத்
திருத்தினத்திலே வீதிவிடஙகப்பெருமானைத் திருத்தொண்டர்களோடு தரி
சித்து, திருப்புகலூரை யடைந்தார். அதுகாலை அவ்வூர் முருகநாயனார் திரு
மடத்திலே எழுந்தருளியிருந்த ஆளுடைய பிள்ளையார் அப்பர்சுவாமிகள்
வருதலைக் கேள்வியுற்றுத் திருககூட்டத்தோடு எதிர்கொண்டார். அப்பர்
சுவாமிகள் ஆளுடைய பிள்ளையாரை வணங்க; பிள்ளையாரும் எதிர் வணங்கி
'அப்பரே! நீர்வரும்நாளில் திருவாரூரில் நிகழ்ந்த பெருமையை வகுத்து
ரையும்' என்றார். திருநாவுக்கரசு சுவாமிகள் திருவாரூரில் நடந்த திருவாதி
ரைச் சிறப்பை 'முத்துவிதானம்' என்னுந் திருப்பதிகத்தால் விளக்கினர்.

உடனே ஞானசம்பந்தப் பெருந்தகையார் 'திருவாரூருக்குச்சென்று சுவாமி தரிசனஞ் செய்து வருவேன்' என்றருளிச் செய்து திருவாரூருககுச் சென்றார். அப்பர் சுவாமிகள் திருப்புகலூரை யடைந்து சுவாமி தரிசனஞ் செய்து தமிழ்மாலை சாத்தித் திருத்தொண்டுகள் செய்து வந்தார். திருச் செங்காட்டங்குடி, திருநள்ளாறு, சாத்தமங்கை, திருமருகல் என்னுந் திருத் தலங்களைத் தரிசித்துத் திருப்புகலூருக்குத் திரும்பினார். கௌணியர்கோன் திருவாரூரை விட்டுநீங்கித் திருப்புகலூருக் கெழுந்தருளினார். தாண்டகவேந் தர் அவரை எதிர்கொண்டழைத்து வந்தார். இருவரும் முருகனார்திருமடத் தில் தங்கியிருந்தார்கள். அந்நாளில் சிறுத்தொண்டநாயனாரும், திருநீலநக்க நாயனாரும் அத்திருமடத்தில் எழுந்தருளி யிருந்தார்கள்.

சின்னாள் கழிந்த பின்னர் சீர்காழிவள்ளலோடுந் திருத்தாண்டகச் சதுரர் புகலூரினின்றும் நீங்கித் திருவம்பர், திருக்கடவூர் முதலிய க்ஷேத்திரங்க ளுக்குப் போய்ச் சுவாமி தரிசனஞ் செய்து திருவீழிமிழலை யடைந்து 'போரானை' என்னுந் திருத்தாண்டகத்தை யோதி அங்கே தங்கியிருந்தார். சிலநாள்சென்றபின் அவண மாரி சுருங்கியபடியானும், காவேரி வற்றியபடி யானும் பெரும்பஞ்சம் உண்டாகி உயிர்களைவருத்தியது. அதுகளைவான் சிவ பெருமான் திருஞானசம்பந்த சுவாமிகளுக்கும், திருநாவுக்கரசு சுவாமிக ளுக்கும் முன்பாகத் தோன்றி 'கால நிலைமையால் நீங்கள் மனம் வாட்டம் அடையீர்கள். ஆயினும் உங்களை வழிபடும் தொண்டர்களுக்காக உங்களுக் குப் படிக்காசு அளிக்கின்றோம்' என்று அருளிச் செய்து ஆலயத்தின் கிழக்குப் பீடத்திலும், மேற்குப் பீடத்திலும் நாடோறும் படிக்காசு வைத் தருளினார் அவ்விருவருளாளர்களும் அரனருளால் பெற்ற படிக்காசுகளால் சிவனடியார்களுக்குத் திருவமுது செய்வித்தார்கள் திருஞானசம்பந்தர் சிவ குமாரர் ஆகலானும், பாடற்றொண்டை மாத்திரஞ் செய்கையானும் தாம் காசு வாசியுடன் பெற்றுவந்தார். திருநாவுக்கரசர் திருத்தொண்டர் ஆகலா னும், கைத்தொண்டு செய்கையானும் வாசியிலாக காசுபெற்று வந்தார். சிவனடியார்கள் துன்பமின்றித் திருவமுது செய்து மனமகிழ்ந்திருக்கும் நாளில் பஞ்சம் நீங்கிற்று.

அப்பர் சுவாமிகளும், ஆளுடைய பிள்ளையாரும் திருவீழிமிழலை விடுத்துத் திருவாஞ்சிய முதலிய பதிகளைத்தரிசித்துத் திருமறைக்காட்டை யடைந்து, திருக்கோயிலுள்ளே நுழைந்து, வேதங்கள் பூசித்துத் திருக்காப் பிட்ட அன்று முதல் அடைக்கப்பட்டே இருக்கும் திருக்கதவு முன்பாக வந்து, அக்கதவைத் திறக்கும் திறம்வகித்த அன்பர் அணையாமையால் அடி யவர்கள் மருங்கே யுள்ள ஓர் வாயிலின் வழியாகச் சென்று சுவாமி தரிச னஞ் செய்கின்றார்கள் என்பதைக் கேட்டுணர்ந்தார்கள் எல்லாம் வல்ல ஞானசம்பந்தர் நாவரசரை நோக்கி 'நாம் இவ்வாயிலின் வழியாகச் சென்று வேதநாயகனை வணங்க இக்கதவு திறக்க நீர் பதிகம்பாடும்' என்றார். வாகீச வள்ளலார் 'பண்ணினேர் மொழியாளுமை பங்கரோ' என்று எடுத்துப் பாடச் சிவபிரான் திருக்காப்புநீக்கத் தாழ்க்க 'இரக்கமொன்றிலீர்' என்று திருக்கடைக் காப்பிலே பாடி இறைஞ்சுதலும், திருக்கதவு சிவனருளால் திறக்கப்பட்டது. இரண்டு ஞானமுனிவர்களும் விழுந்து வணங்கி உள்ளே சென்று சிவபெருமானைப் பணிந்து, பதிகங்கள் பாடிவெளியே வந்தார்கள். திருநாவுக்கரசு சுவாமிகள் முத்தமிழ்த் தெய்வத்தை நோக்கி 'இக்கதவை நாள்தோறும் திறக்கவும், அடைக்கவும் வழக்கமாகத் தேவரீர் இக்கதவினை அடைக்கப் பதிகம்பாடும் என்றார். ஞானப்பாலுண்ட பெருமான் திருவ ருட்பதிகந்தொடங்கி முதற்செய்யுள் பாடியவுடன் திருக்கதவு திருவருளால்

அடைக்கப்பட்டது. அதைக்கண்ட அடியவர்கள் கீழே விழுந்து வணங்கிக் களிப்படைந்தார்கள். தமிழ்விரகர் தாம் எடுத்த திருப்பதிகத்தைப் பாடி முடித்தார். அன்று முதல் அத்திருக்கதவு திறக்கப்பட்டும், அடைக்கப்பட்டும் வருகிறது. அவ்விரு அருட்பிரகாசர்களும் திருமடத்தை யடைந்தார்கள்.

திருநாவுக்கரசு சுவாமிகள் தம்பதிக இறுதியில் திருக்கதவு திறக்கப் பட்ட அருமையையும், திருஞானசம்பந்த சுவாமிகளுடைய பதிகத்தொடக் கத்திலேயே கதவு அடைக்கப்பட்ட எளிமையையுங் கருதிக்கவன்று மடத் தின் ஒருபக்கத்தில நித்திரைசெய்தார். சிவபெருமான் அவருக்குத்தோன்றி 'நாம் வாய்மூரில் இருப்போம்; தொடரவா' என்றருளினர் அப்பரெம்பெ ருமானர் 'எங்கே என்னை' என்னுந் திருப்பதிகம் பாடிக்கொண்டு எழுந்து, தமக்குமுன் தோன்றிய திருக்கோலத்தோடு போகும் சிவனரைத் தொட ர்ந்து சென்றார். சென்றும் அவரைச் சமீபித்தாரில்லை. சிவபெருமான் அணித்தே காட்சி கொடுப்பவர்போலத் திருக்கோயிலொன்றெதிரே காட்டி, அதனுள்ளே புக்கருளினர் தாண்டக வேந்தர் விரைந்து தொடர்ந்தார். புக லிப்பெருமானும் சொலலரசர் திருவாய்மூருக்குப் போகின்றார் என்பதைக் கேள்வியுற்று வந்து அணைந்தார். அப்பர் சுவாமிகள் சிவபெருமான் அணித் தேகாட்சி கொடுப்பவர் போலக்காட்டி மறைத்தமையைக் குறித்துத்துக் கித்து 'திருவுள்ளக் கருத்தையறியாமல் திருககதவைத்திறப்பித்த எனக்குத் திருவுருவை மறைக்கலாம்; ஒரு திருப்பாட்டாலேயே திருக்கதவை அடைப்பித்த ஞானசம்பந்தர் இவ்விடம்வந்திருக்கின்றார்; அவருக்கெங்ஙனம் மறைப்பது' என்றார் சிவபெருமான் திருஞான சம்பந்த மூர்த்திசுவாமிக ளுக்குத் தரிசனந்தந்தார். அவர்கண்டு தொழுது, அப்பர் சுவாமிகளுக்குக் காட்ட, அவர்தரிசித்து 'பாடவடியார்' என்னுந் திருத்தாண்டகத்தைப் பாடியருளினர் இருவர்களும் சிலநாள் அங்கிருந்து பின்னர்வேதாரணியத் திற்குத் திரும்பி வந்திருந்தார்கள். அந்நாளில் திருஞானசம்பந்தர் மஙகை யர்க்கரசியாரும், குலச்சிறை நாயனரும் அனுப்பிய தூதுவர்களால் பாண்டி நாடு முழுவதும் சமணமயமா யிருக்கின்ற தென்பதை அறிந்து, அம ணர்கள் கொடுமையை மாற்றி, அற நெறியாம் சைவசமயத்தை விளங்கச் செய்யக் கருதித் திருநாவுக்கரசுசுவாமிகள் தடுத்தும் கேளாதவராய்த் திரு வருளை முன்னிட்டுத் தமிழ்நாட்டிற்குப் புறப்பட்டார்.

வாகீசா திருமறைக் காட்டினின்றும் நீங்கி, திருநாகைக் காரோணம், திருவீழிமிழலை முதலிய திருப்பதிகளைத் தரிசித்துத் திருவாவடுதுறை யடைந்து சுவாமி தரிசனஞ்செய்து 'மாயிருஞாலமெல்லாம்' என்னுந் திருப் பதிகம் எடுத்து, அதிலே ஆளுடைய பிள்ளையாருக்கு ஆயிரஞ் செம்பொன் கொடுத்த அருட்டன்மையைப் புகழ்ந்து, திருப்பழையாறை என்னுந் திருப் பதிக்குச் சென்றார். அப்பதியிலே வடதளி என்னும் சிவாலயத்தில் எழுந்த ருளியுள்ள சிவலிங்கப்பெருமானைச் சமணர்கள் மறைத்திருத்தலைக் கேள் விப்பட்டு மனம்புழுங்கி ஒருபக்கம்போய்ச் சிவபிரான் திருவடிகளைச் சிந் தித்து 'தேவரீர் திருவுருவைமறைத்த தீயர்களைப் பாற்றித் திருமேனியைக் காட்டியருளும்; உம்மைத் தரிசித்துத் தொழாமல் போகேன்' என்றுதிருவ முது செய்யாதிருந்தார். அடியவருக்கெளிய அம்பலவாணர் அரசனுக்குக் கனவில் தோன்றி 'அறிவிலாத அமணர்கள் நம்மை மறைத்து விட்டார்கள்; நாவரசன் நம்மைக்கண்டு தொழச் சிந்தித்துக் கொண்டிருக்கின்றான்; சம ணர்களை யொழித்துவிடு' என்று தாம் வீற்றிருக்குந் தானத்தைக் குறிப் பித்து மறைந்தருளினர். உடனே அரசன் விழித்து நிகழ்ந்ததை மந்திரி களுக்குச் சொல்லித் திருக்கோயிலுக்குச் சென்று, இறைவன் மொழிந்த

அடையாள வழிகண்டு, திருநாவுக்கரசு சுவாமிகள் திருவடிகளை வணங்கிச் சமணர்களை யானைகளைவிடுத்து மிதிப்பித்துக்கொன்று, சிவபெருமானுக்கு விமானமமைத்து, ஆலயத்திருப்பணிகளையுஞ் செய்தான். அப்பர்சுவாமிகள் சந்நிதியையடைந்து சிவபிரான் திருவுருவைக்கண்டு தொழுது 'தலை யெலாம்' என்னுந் திருப்பதிகத்தைப் பாடி, அங்கே திருத்தொண்டு செய் திருந்தார். பின்பு அத்திருப்பதியை விட்டுப் புறப்பட்டுத் திருவானைக்கா, திருவெறும்பியூர், திருச்சிராப்பள்ளி, திருக்கற்குடி, திருப்பராய்த்துறை என்னுந் திருத்தலங்களைத் தரிசித்துத் திருப்பைஞ்ஞீலியை நோக்கிப் பசியாலும், தாகத்தாலும் மிகவாடியும் சித்தமலையாது நடந்தார். அருட்கட லாகிய அம்பிகாபதி அடியவர் பசியைத் தீர்க்கும்பொருட்டுச் சோலையை யும், குளத்தையும் உண்டாக்கி, ஒரு சிவவேதியர் கோலந்தாங்கிப் பொதி சோறு வைத்துக்கொண்டிருந்து தாண்டகவேந்தர் தமக்கருகே வந்தபோது அவரைப்பார்த்து 'நீர் பசித்திருக்கின்றீர் போலும்; என்னிடம் பொதி சோறிருக்கின்றது; அதனையுண்டு இக்குளத்தில் தண்ணீரருந்தி இளைப்பை ஒழியும்' என்றின்சொற்கூறிப் பொதிசோற்றைக் கொடுத்தார். அப்பர் சுவாமிகள் அதைவாங்கி அமுதுசெய்து தண்ணீர் அருந்தி இளைப்பு நீங்கி னார். பின்பு வேதியர் சுவாமிகளை நோக்கி 'நீர் எவ்விடம் போகின்றீர்' என்று வினவ; நாயனார் 'நான் திருப்பைஞ்ஞீலிக்குப் போகின்றேன்' என் றார் அந்தணர் 'நானும் அப்பதிக்கே போகின்றேன்' என்று அடியவர் பெருமானுடன் சென்று திருப்பைஞ்ஞீலியைக் குறுகியதும மறைந்தருளி னா. திருநாவுக்கரசுசுவாமிகள் திருக்கருணையை வியந்து திருக்கோயிலுக்குட் சென்று சிவதரிசனஞ்செய்து திருப்பதிகம்பாடி, சிலநாள் அங்கிருந்து பின் திருவண்ணாமலைக்குப் போய்ப் பதிகம்பாடி, தொண்டை மண்டலத்தை யடைந்து, திருவோத்தூரைத்தரிசித்து, காஞ்சீபுரத்திற்குப்போய், திருவே கம்பம், திருக்கச்சிமயானம், திருமேற்றளி, திருமாற்பேறு முதலிய திருத் தலங்களைப்பணிந்து பதிகம்பாடி, திருக்கழுக்குன்றம், திருவான்மியூர், திரு மயிலாப்பூர், திருவொற்றியூா, திருப்பாசூர், திருவாலங்காடு, திருக்காரிக் கரை என்னுந திருப்பதிகளைத் தரிசித்து, திருக்காளத்திக்குச் சென்று சுவாமி தரிசனஞ்செய்து பதிகம்பாடிக் கண்ணப்பநாயனார் திருவடிகளை வணங்கி அங்கே தங்கியிருந்தார்

தங்கியிருக்குநாளில் வாகீசர் வடகயிலையில் பரமசிவன் பார்வதி தேவி யாரோடு எழுந்தருளியுள்ள திருக்கோலத்தைக் கண்டுதொழ விழைந்து திருக்காளத்தி மலையினின்றும் நீங்கி ஸ்ரீசைலத்தைத்தரிசித்துத் தமிழ்வேத மருளி, தெலுங்கு, கன்னடம், மாளவம முதலிய தேசங்களையும், பல நதி களையும், வனங்களையும் கடந்து, காசியைக்கண்டு தொழுது, தம்முடன் வந்தவர்களை அங்கே நிறுத்தி, சாலமூலபலங்களை உண்பதையும் ஒழித்து, கற்சுரத்திலே அல்லும்பகலுமாய் நடந்தார்; நடந்ததால் பாதங்கள் தேய்ந் தன; தேய்ந்தும் அவவெம்பாலை நிலத்தில் கைகளால் தாவிச்சென்றார்; கைகளும் கரைந்து சிதைந்தன; கைலையங்கிரியைத் தரிசிக்கவேண்டும் என்னும் அளவிலாசை பொங்கியெழ பருக்கைக் கற்கள் நிறைந்த வழி யிலே மார்பினால் நகர்ந்தார்; மார்பும் நைந்துதேய எலும்புகள் முறிந்தன; பின்னா உயிர்களுக்காகப் புரண்டுபுரண்டு சென்றனர்; உடலமும் தேய்ந் தது. கயிலையைக் காணவேண்டும் என்னுங் கருத்தெழலால் கருணையிற் கடலனையார் மெதுவாக நகர்ந்துசெல்ல முயன்றார். முயன்றும் முடியாமல் செயலற்றவராய் வழியிலே கிடந்தார். அதுகாலை அருளையே திருமேனி யாகவுடைய எம்பெருமான் திருநாவுக்கரசு சுவாமிகளை மீளவும் தமிழ்

வேதம் பாடுவித்து உலகை உய்விக்கத் திருவுளங்கொண்டு, ஒருதடாகத்தை அங்கே உண்டாக்கி, முனிவர் திருவுருவங்கொண்டு நாயனார் முன்னேவந்து 'நீர்உறுப்புக்களெல்லாம் அழிந்திடவருந்தி அக்கினியிலுங்கொடிய இவ்வெங் கானகத்தில் எதற்காக வந்தீர்' என்று வினவினார். வாகீசப் பெருந்தகை யார் அம்முனிவரைக் கண்டவுடன் தமக்கு பேசுமுணர்வு சிறிதுண்டாக 'முனிவரே! வடகயிலையில் மலைமகளோடு மாதேவன் வீற்றிருந்தருளுந் திருக்கோலத்தைக் கண்டு கும்பிடவந்தேன்' என்றார். அதுகேட்ட முனிவர் பிரான் 'அமரர்களும் அடைவதற்கு அரியதாகிய கயிலையங்கிரியை மானுடர் எளிதாயடைவரோ! நீர் திரும்புதலே நலம்' என்ன; தாண்டகவேந்தர் 'கயிலையங்கிரியில் எழுந்தருளியுள்ள இறைவர் திருக்கோலத்தைத் தரிசியாது அழியும் இவ்வுடல்கொண்டு திரும்பேன்' என்று மறுத்தார். சிவபெருமான் அடியவர் உறுதியையறிந்து, ஆகாயத்திலே கரந்து, அசரீரியாய் 'நாவுக்கரசனே! எழுந்திரு' என்றருள, அப்பர்சுவாமிகள் அழிந்த அங்கங்களெல்லாம பழயபடி நிரம்பப்பெற்று அழகியமேனியோடும் எழுந்து 'அண்ணலே! எனை ஆண்டுகொண்டருளிய அமுதே' தேவரீர் திருக்கயிலாயக் கோலத்தை அடியேன் கண்டு தொழக்காட்டியருளும்' என்று பணிந்தார். எல்லாம்வல்ல சித்தராகிய சிவபெருமான் 'நீ இப்பொய்கையில் மூழ்கித் திருவையாற்றை யடைந்து, அங்கே நமது கயிலாயக்கோலத்தைக் காண்பாயாக' என்று ஆஞ்ஞாபித்தார்.

திருநாவுக்கரசு சுவாமிகள் சிவாஞ்ஞையைச் சிரமேற்கொண்டு 'வேற்றாகி விண்ணாகி' என்னும் போற்றித் திருத்தாண்டகத்தைத் திருவாய்மலர்ந்தருளி, அஞ்செழுததோதி அத்திருப்பொய்கையில் மூழ்கித் திருவையாற்றிலே ஒரு தடாகததின்மேலே தோன்றிக் கரையேறினார். வாகீசப்பெருமான் அத்திருப்பதியிலுள்ள சராசரங்களெல்லாம் தத்தம்பக்கங்களில் துணையோடும் பொலிதலைக் கண்டு, அவையிற்றை அரன் உமையாகப் பார்த்துப் பணிந்து திருககோயில் முன்னே சென்றார். அத்திருக்கோயில் பரமசிவன் பார்வதியாரோடு வீற்றிருந்தருளும் திருக்கயிலாயமாக, அப்பர்சுவாமிகள் அளவிலா ஆனந்தமெய்தித் திருத்தாண்டகஙகள் பாடினார். அடியவர்கள் வேண்டியதை வேண்டி யாஙகளிக்கும் அருட்பெருங்கடலாகிய அம்பிகை பாகர் கயிலைத் திருக்கோலத்தை மறைததருள, வாக்கரசர் சிறிதுவருந்தி 'சிவனருளிதுவோ' எனத்தெளிந்து 'மாதர்பிறைக் கண்ணியானை' என்னுந் திருப்பதிகம் பாடினார். பின்னும் திருத்தாண்டகங்களையும், திருக்குறுந் தொகைகளையும், திருநேரிசைகளையும, திருவிருத்தங்களையும் அருளிச் செய்து கொண்டும், கைத்தொண்டு செய்துகொண்டும் அத்திருப்பதியைப் பிரியாமல் சிலநாளிருந்தார்.

பின்பு வாகீசர் பஞ்சநதத்தினின்றும் நீங்கித் திருநெய்த்தானம், திருமழபாடி முதலிய சிவஸ்தலஙகளைத் தரிசித்துத் திருப்பூந்துருத்தியைச் சேர்ந்தார். அப்பதியில் ஒரு திருமடங்கட்டுவித்து, பலவகைத் திருத்தாண்டகம், தனித்திருத்தாண்டகம், அடைவு திருத்தாண்டகம், திருவங்கமாலை முதலிய திருப்பதிகங்களைப் பாடிக்கொண்டு அங்கே தஙகியிருக்கையில், சமணர்களைவென்று, பாண்டியன் கூனைநிமிர்த்தி, விபூதியை விளங்கச் செய்த திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் பாண்டிநாட்டினின்றும் எழுந்தருளிச் சோழநாட்டை யடைந்து, அப்பர்சுவாமிகள் திருப்பூந்துருத்தியிலிருத்தலைக் கேள்வியுற்று, அத்திருப்பதி நோக்கிவந்தார். அவர்வருதலை அப்பர்சுவாமிகள் கேட்டு எழுந்து எதிர் சென்று, ஒருவரும் அறியாதபடி அவரது முத்துச் சிவிகையைத் தாங்குபவர்களோடு தாமும் ஒருவராய்த் தாங்கி

வந்தார். பாலருவாயர் பூந்துருத்திக் கருகே வந்ததும் ' அப்பர் எங்குற்றார் ' என்று கேட்டார். அது கேட்ட அப்பர்சுவாமிகள் 'அடியேன் தேவரீர் திருவடிகளைத் தாங்கிவரும் பெருவாழ்வைப்பெற்று இங்குற்றேன்' என்ன; உடனே ஞானசம்பந்த வள்ளலார் உள்ளத்திலே மிகுபதைப்பெய்திப் பல்லக்கைவிட்டிழிந்து வாகீசரை வணங்க; அதற்குமுன் அப்பர்சுவாமிகள் ஆளுடைய பிள்ளையாரை வணங்கினார். அதைக்கண்ட அடியவர்களெல்லாம் விழுந்து வணங்கி ஆனந்தக்கூத்தாடினார்கள். ஞானசம்பந்தரும், நாவரசரும் திருப்பூந்துருத்தி யடைந்து சுவாமிதரிசனஞ் செய்துகொண்டிருந்தார்கள். அதுகாலை ஆளுடையபிள்ளையார் தாம்சமணர்களை வாதில்வென்றதையும், வழுதியின் கூனை நிமிர்த்தியதையும், திருநீற்றின் பெருமையைவளர்த்ததையும், மங்கையர்க் கரசியார், குலச்சிறையார் இவர்களுடைய பெருமைகளையும் அப்பர் சுவாமிகளுக்குச் சொல்ல, அப்பரும் தாம்தொண்டை நாட்டிற்குச் சென்று திருப்பதிகளைத் தரிசித்ததைத் திருஞானசம்பந்த சுவாமிகளுக்குச் சொல்லியருளினார். புரமெரித்தார் புதல்வராகிய புகலிப் பெருமான் தொண்டை நாட்டிற்குப் புறப்பட்டார். ஆளுடைய அரசர் பூந்துருத்தியினின்றும் நீங்கிப் பாண்டிநாட்டை யடைந்து, திருப்புத்தூரைத் தரிசித்து, மதுரையம் பதிக்குப்போய், திருக்கோயிலினுள்ளே நுழைந்து, சங்கத்தலைவராயிருந்து தமிழ் வளர்த்த கடவுளை வணங்கி 'மூலைத்தானை யெல்லார்க்கு முன்னேதோன்றி' என்னுந் திருத்தாண்டகம் அருளிச்செய்தார். சுவாமிகள் தம்மை மங்கையர்க்கரசியாரும், அவர் நாயகரும், கூன் நிமிரப்பெற்றவரும் ஆகிய நின்றசீர் நெடுமாற நாயனாரும், அவருடைய மந்திரியாராகிய குலச்சிறை நாயனாரும் வந்து வணங்கித் துதிக்க, அங்கே சிலநாளிருந்து, பின் அவ்விடத்தினின்றும் நீங்கித் திருப்பூவணம், திருவிராமேச்சுரம், திருநெல்வேலி, திருக்கானப்பேர் முதலிய திருப்பதிகளைத் தரிசித்துக்கொண்டு, சோழநாட்டிற் கெழுந்தருளித் திருப்புகலூரை யடைந்தார்.

திருநாவுக்கரசு சுவாமிகள் பூம்புகலூரீசனை நாடோறும் தொழுது உழவாரத் திருத்தொண்டு செய்துகொண்டு, நின்ற திருத்தாண்டகம், தனித் திருத்தாண்டகம், க்ஷேத்திரக்கோவைத் திருத்தாண்டகம், குறைந்த திருநேரிசை, தனித்திருநேரிசை, ஆருயிர்த் திருவிருத்தம், தசபுராணத்தடைவு, பாவநாசப் பதிகம், சரக்கறைத் திருவிருத்தம் முதலிய திருப்பதிகங்களைப் பாடினார் அடியவர்கள் அன்பினில் விளையும் ஆரமுதாகிய சிவபெருமான் அப்பர் சுவாமிகளுடைய நன்னிலைமையை உலகத்திற்குக் காட்டுவான், அந்நாயனார் புல செதுக்கும்போது உழவாரப்படை நுழைந்த இடங்களிலெல்லாம் பொன்னும், நவமணிகளும் பொலிந்து இலங்கும்படி திருவருள்செய்தார். ஆசையறுத்த அப்பரெம்பெருமான் அவைகளைப் பருக்கைக் கற்களோடு ஒக்க உழவாரத்தில் ஏந்தி தாமரைத்தடாகத்தில் எறிந்துவிட்டார். பின்னர் பிறையணிந்த கறைமிடற்றண்ணல் திருவருளால், புல்லோடும், கல்லோடும், பொன்னோடும், மணியோடும், சொல்லோடும் வேறுபாடில்லாத நிலைமையைத் துணிந்திருந்த வாகீசர் திருமுன்பு தேவதாசிகள் ஆகாயத்தினின்றும் இறங்கிவந்து இசைபாடினார்கள்; நடனஞ் செய்தார்கள்; அவர் மீது அலர்மாரி பொழிந்தார்கள்; அவரை அணைபவர்களைப் போல அருகே சென்றார்கள்; குழல அவிழவும் இடை நுடங்கவும் ஓடினார்கள்; ஆடைகள் அசைய நின்றார்கள் இப்படி அவர்கள் சுவாமிகளை மோகிப்பிக்கச் சிறுதொழில்களைச் செய்ய; திருநாவுக்கரசுசுவாமிகள் சித்தநிலை ஒருசிறிதுந் திரியாது, திருத்தொண்டில உறுதிகொண்டு 'பொய்ம்மாயப் பெருங்கடலுள்' என்னுந் திருத்தாண்டகத்தை அருளிச்செய்தார். தேவதாசிகள் தங்

கள் மாயச்செய்கைகளால் சுவாமிகளது நிலைமையைக் கலைக்க இயலாதவர்களாய், அவரைவணங்கித் துதிசெய்து போய் விட்டார்கள். இத்தகைய உறுதி நிலையை ஏழுலகத்தவர்களும் உணர்ந்து சுவாமிகளைத் தோத்திரஞ் செய்தார்கள். வாகீசப் பெருந்தகையார் 'புகலூரரே! என்னை இனிச் சேவடிக் கீழிருத்திடும்' என்று எழுகின்ற முன்னுணர்வால் திருவிருத்தங்கள் பலபகர்ந்து, ஒருசித்திரைமதியிலே சதயநட்சத்திரத்திலே 'எண்ணுகேனென் சொல்லி' என்னுந் திருத்தாண்டகத்தைப் பாடி, சிவானந்த ஞான வடிவைப்பெற்றுக் கலியாணசுந்தரனை யளித்த கயிலைக் கரசன் சேவடி நீழலை யடைந்தார்.



# குலச்சிறைநாயனர் புராணம்.

(*)

பன்னு தொல்புகழ்ப் பாண்டிநன் னாட்டிடைச
செந்நெ லார்வயற் றீங்கரும் பின்னயற்
றுன்னு பூகப் புறம்பணை சூழ்ந்தது
மன்னு வண்மையி னார்மண மேற்குடி. (௧)

அப்ப திக்கு முதல்வர்வன் றொண்டர்தாம்
ஒப்ப ரும்பெரு நம்பியென் றோதிய
செப்ப ருஞ்சீர்க் குலச்சிறை யார்திண்மை
வைப்பி னாற்றிருத் தொண்டின் வழாதவர். (௨)

கார ணங்கண் ணுதற்கன்ப ரென்னவே
வார மாகி மகிழ்ந்தவர் தாண்மிசை
யாரு மன்பொடு வீழ்ந்தஞ் சலிமுகிழ்த்
தீர நன்மொழி யெய்த விசைத்துளார். (௩)

குறியி னன்கு குலத்தின ராயினு
நெறியி னக்குல நீங்கின ராயினும்
அறிவு சங்கரற் கன்ப ரெனப்பெறிற்
செறிவு றப்பணிந் தேத்திய செய்கையார். (௪)

உலகர் கொள்ளு நலத்தின ராயினும்
அலகி றீமைய ராயினு மம்புலி
யிலகு செஞ்சடை யாரடி யாரெனிற்
றலமு றப்பணிந் தேத்துந் தகைமையார். (௫)

பண்பின் மிக்கார் பலரா யணையினும்
உண்ப வேண்டி யொருவ ரணையினும்

(௧) வண்மையினார் - ஈகையுடையார்; நற்குணமுடையார். (௩) வாரமாகி - அன்பாகி.

எண்பெ ருக்கிய வன்பா லெதிர்கொண்டு
நண்பு கூர்ந்தமு தூட்டு நலத்தினார். (௬)

பூதி கோவணஞ் சாதனத் தாற்பொலிந்
தாதி தேவர்த மஞ்செழுத் தாமவை
யோது நாவணக் கத்தா லுரைப்பவர்
பாத நாளும் பரவிய பண்பினார். (௭)

இன்ன நல்லொழுக் கத்தினா ரீறில்சீர்த்
தென்ன வன்னெடு மாறற்குச் சீர்திகழ்
மன்னு மந்திரி கட்குமே லாகியார்
ஒன்ன லார்ச்செற் றுறுதிக்க ணின்றுளார். (௮)

ஆய செய்கைய ராயவ ராறணி
நாய னார்திருப் பாத நவின்றுளார்
பாய சீர்புனை பாண்டிமா தேவியார்
மேய தொண்டுக்கு மெய்த்தொண்ட ராயினார் (௯)

புன்ன யத்தரு கந்தர்பொய் நீக்கவுந்
தென்ன னூடு திருநீறு போற்றவு
மன்னு காழியர் வள்ளலார் பொன்னடி
சென்னி சேர்த்தி மகிழ்ந்த சிறப்பினார். (௧0)

வாதிற் றோற்ற வமணரை வன்கழுத்
தீது நீங்கிட வேற்றுவித் தார்திறம்
யாது போற்றினேன் மேலினி யேத்துகேன்
வேத நீதி மிழலைக் குறும்பர்தாள். (௧௧)

குலச்சிறைநாயனார் புராண முற்றிற்று.

ஆ_ திருவிருத்தம் - ௧,௭௧0.



பாண்டி நாட்டிலே, மணமேற்குடியிலே, சுந்தரமூர்த்தி சுவாமிகளால் திருத்தொண்டத் தொகையிலே 'ஒருநம்பி' என்று ஓதப்பட்டவரும், விபூதி ருத்திராக்ஷமணிந்த சிவனடியார்கள் எக்குலத்தவராயினும், அவர்களைச் சிவமாகக் கருதி வழிபடுபவரும், சிவநேயர்கள் பலர்வரினும், ஒருவர் வரினும் உள்ளன்போடு அவர்களைஎதிர்கொண்டு,உபசரித்து,அமுதுசெய்விப்பவரும் ஆகிய குலச்சிறைநாயனார் என்பவர் ஒருவர் இருந்தார். அவர் நின்ற சீர்நெடுமாற நாயனார் என்னும் பாண்டிய ராசாவிற்குப் பிரதம மந்திரியாயிருந்து, அவர் நாயகியாராகிய மங்கையர்க்கரசியாருடைய சிவதொண்டிற்குத் துணை செய்து, சமணம் ஒழியவும், சைவமோங்கவும் சிவஞான சம்பந்த வள்ளல் சேவடியை வணங்குஞ் சிறப்பினைவகித்து, அப்பெருமானார்க்குத் தோற்ற சமணர்களைக் கழுவிலேற்றிக் கூரங்கேயன் தந்தையார் திருவடிநீழலை யடைந்தார்.

(௮) ஒன்னலார் செற்று - பகைவர்களையழித்து. (௯) பாய - (எங்கும்) பரவிய. பாண்டிமாதேவியார் - மங்கையர்க்கரசியார். (௰) அருகந்தர் - சமணர்கள்.

# பெருமிழலைக் குறும்பநாயனார் புராணம்.



சூத நெருங்கு குலைத்தெங்கு பலவு பூகஞ் சூழ்புடைத்தாய்
வீதி தோறு நீற்றினொளி விரிய மேவி விளங்குபதி
நீதி வழுவா நெறியினராய் நிலவுங் குடியா னெடுநிலத்து
மீது விளங்குந் தொன்மையது மிழலை நாட்டுப் பெருமிழலை (க)

அனன தொனமைத் திருபபதிகக ணதிபர் மிழலைக குறுமபனா
சென்னி மதியம் வைததவர்த மடியார்க் கான செய்பணிகள்
இன்ன வண்ண மென்றவர்தா முரையா முன்ன மெதிரேற்று
முன்ன முவந்து செய்வாராய் முதிரு மறிவின் பயன்கொள்வார் (உ)

தொண்டர் பலரும் வந்தீண்டி யுண்ணத் தொலையா வமுதூட்டிக்
கொண்டு செல்ல விருநிதிய முகந்து கொடுத்துக் குறைந்தடைவார்
வண்டு மருவுங் குழலுமையாள் கேள்வன் செய்ய தாளென்னும்
புண்ட ரீக மகமலரில் வைத்துப் போற்றும் பொற்பினார். (௩)

இத்தன் மையராய் நிகழுநா ளெல்லை யில்லாத் திருத்தொண்டின்
மெய்த்தன் மையினை யுலகறிய விதியால் வணங்கி மெய்யடியார்
சித்த நிலவுந் திருத்தொண்டத் தொகைபா டியநம் பியைப்பணிந்து
நித்த னருள்பெற் றவர்பாத நினைக்கு நியமத் தலைநின்றார். (௪)

மையார் தடங்கட் பரவையார் மணவா ளன்றன் மலர்ககழல்கள்
கையாற் றொழுது வாய்வாழ்த்தி மனத்தா னினைக்குங் கடப்பாட்டிற்
செய்யாள் கோனு நான்முகனு மறியாச் செம்பொற் றாளிணைக்கீழ்
உய்வான் சேர வுற்றநெறி யிதுவே யென்றன் பினிலுய்த்தார். (௫)

நாளு நம்பி யாரூரர் நாம நவின்ற நலத்தாலே
யாளும் படியா லணிமாதி சித்தி யான வணைந்ததற்பின்
மூளுங் காத லுடன்பெருக முதல்வர் நாமத் தஞ்செழுத்துங்
கேளும் பொருளு முணர்வுமாம் பரிசு வாய்ப்பக் கெழுமினார். (௬)

இன்ன வாறே யிவரொழுக வேறு கொடிமே லுயர்த்தவாதாம்
பொன்னின் கழல்கண் மண்ணின்மேற் பொருந்த வந்து வழக்குரைத்து
மன்னு மோலை யவைமுன்பு காட்டி யாண்ட வன்றொண்டர்
சென்னி மதிதோய் மாடமலி கொடுங்கோ ளூரைச் சேர்வுற்றார். (௭)

---

(க) சூதம - மாமரஙகள. பூகம - கமுக மரஙகள. (௫) செய்யாள கோனும - இலக்குமி நாயகனாகிய திருமாலும. (௬) அஷ்டமாசிததிகளாவன:—அணிமா, மகிமா, இலகிமா, கரிமா, பிராபதி, பிராகாமியம, ஈசததுவம, வசிததுவமெனபன. (இவறறின விரிவைத் திருமந்திரம, திருவிளையாடறபுராணம முதலிய உண்மை நூலகளிற்காணக.) கேளும - உறவும.

அஞ்சைக் களத்து நஞ்சுண்ட வமுதைப் பரவி யணைவுறுவார்
செஞ்சொற் றமிழ்மா லைகண்மொழியத் தேவர் பெருமா னருளாலே
மஞ்சிற் றிகழும் வடகயிலைப் பொருப்பி லெய்த வரும்வாழ்வு
நெஞ்சிற் றெளிய விஙகுணர்ந்தார் நீடு மிழலைக் குறும்பனார். (௮)

மண்ணிற் றிகழுந் திருநாவ லூரில் வந்த வன்றொண்டர்
நண்ணற் கரிய திருக்கயிலை நாளை யெய்த நான்பிரிந்து
கண்ணிற் கரிய மணிகழிய வாழ்வார் போல வாழேனென்
றெண்ணிச் சிவன்றா ளின்றேசென் றடைவன் யோகத தாலென்பார். (௯)

நாலு கரணங களுமொன்றாய் நல்ல வறிவு மேற்கொண்டு
காலும் பிரம நாடிவழிக் கருத்துச் செலுத்தக் கபாலநடு
ஏல வேமுன் பயின்றநெறி யெடுத்த மறைமூ லந்திறப்ப
மூல முதல்வர் திருப்பாத மடைவார் கயிலை முன்னடைந்தார். (௧௦)

பயிலச செறிந்த யோகததாற் பரவை கேள்வன் பாதமுறக்
கயிலைப் பொருப்ப ரடியடைந்த மிழலைக் குறும்பர் கழல்வணங்கி
மயிலைப் புறங்கொண் மென்சாயன் மகளிர் கிளவி யாழினொடுங
குயிலைப் பொருவுங் காரைக்கா லம்மை பெருமை கூறுவாம் (௧௧)

பெருமிழலைக்குறும்ப நாயனார் புராண முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ௧,௭௨௧.



மிழலை நாட்டிலுள்ள பெருமிழலையிலே, சிவனடியார்களைக் கண்டவுடன் எதிர்கொண்டு, அவர்கள் திருவுள்ளக் குறிப்பையறிந்து பணிசெய்கின்றவரும், அவர்களை அமுது செய்வித்து, அவர்களுக்கு வேண்டிய திரவியங்களை அளிப்பவரும் ஆகிய பெருமிழலைக் குறும்பநாயனார் என்பவர் ஒருவர் இருந்தார் அவர் தமது திருத்தொண்டு செய்து வருநாளில், சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருவடிகளைக் கையாற்றொழுது, வாயால் வாழ்த்தி, மனத்தால் நினைத்து வழிபடலே உய்யுநெறி எனக்கருதி, அப்படியே செய்து வந்து, அணிமா முதலிய அஷ்டமா சித்திகளைப்பெற்று, அஞ்செழுத்தை ஓதிக்கொண்டிருந்தார். ஒருநாள் திருவஞ்சைக் களத்திலே சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்குச் சிவபிரான் திருவருளால் வடகயிலையெய்தும் பெருவாழ்வு கிடைப்பதை யோகத்தால் அறிந்து "வன்றொண்டப் பெருமானார் நாளைக்கு வடகயிலை யடைபவராயிருக்க, நான் அவரைப்பிரிந்து, கண்ணிழிந்து வாழுங் குருடரைப்போல, இங்குவாழேன்" என்று எண்ணி "சிவயோகத்தால் இன்றே சிவனடிசேர்வேன்" என்று, செயற்கரிய யோகமுயற்சியால் பிரமரந்திரந் திறக்கப்பெற்றுச் சிலம்பனடுஞ் சிவகயிலை யடைந்தார்.



(ம) நாலுகரணங்கள் - மனம், புத்தி, சித்தம், அகங்காரம். மறைமூலம் - பிரணவம்.

# காரைக்காலம்மையார் புராணம்.



மானமிகு தருமத்தின் வழிநின்று வாய்மையினில்
ஊனமில்சீர்ப் பெருவணிகர் குடிதுவன்றி யோங்குபதி
கூனல்வளை திரைசுமந்து கொண்டேறி மண்டுகழிக்
கானன்மிசை யுலவுவளம் பெருகுதிருக் காரைக்கால். (க)

வங்கமலி கடற்காரைக் காலின்கண் வாழ்வணிகர்
தங்கள்குலத் தலைவனார் தனதத்த னார்தவத்தால்
அங்கவர்பாற் றிருமடந்தை யவதரித்தா ளெனவந்து
பொங்கியபே ரழகுமிகப் புனிதவதி யார்பிறந்தார். (உ)

வணிகர்பெருங் குலம்விளங்க வந்துபிறந் தருளியபின்
அணிகிளர்மெல் லடிதளர்வுற் றசையுநடைப் பருவத்தே
பணியணிவார் கழற்கடிமை பழகிவரும் பாங்குபெறத்
தணிவில்பெரு மனக்காதல் ததும்பவரு மொழிபயின்றார் (௩)

பல்பெருநற் கிளையுவப்பப் பயில்பருவச் சிறப்பெல்லாஞ்
செல்வமிகு தந்தையார் திருப்பெருகுஞ் செயல்புரிய
மல்குபெரும் பாராட்டின் வளர்கின்றார் விடையவர்பால்
அல்கியவன் புடனழகின் கொழுந்தெழுவ தெனவளர்வார். (௪)

வண்டல்பயில் வனவெல்லாம் வளர்மதியம் புனைந்தசடை
யண்டர்பிரான் றிருவார்த்தை யணையவரு வனபயின்று
தொண்டர்வரிற் றொழுதுதா தியர்போற்றத் துணைமுலைகள்
கொண்டுநுசுப் பொதுங்குபதங் கொள்கையினிற் குறுகினார் (௫)

நல்லவென வுறுப்புநூ லவருரைக்கு நலநிரம்பி
மல்குபெரு வனப்புமீக் கூரவரு மாட்சியினால்
இல்லிகவாப் பருவத்தி லிவர்கண்மர பினுக்கேற்குந்
தொல்குலத்து வணிகர்மகட் பேசுதற்குத் தொடங்குவார். (௬)

நீடியசீர் கடனாகை நிதிபதியென் றுலகின்கட்
பாடுபெறு புகழ்வணிகன் பயந்தகுல மைந்தனுக்குத்
தேடவருந் திருமரபிற் சேயிழையை மகட்பேசி
மாடமலி காரைக்கால் வளநகரின் வரவிட்டார். (௭)

வந்தமூ தறிவோர்கண் மணங்குறித்தம் மனைபுகுந்து
தந்தையாந் தனதத்தன் றனைநேர்ந்து நீபயந்த

(௧) மானம - பெருமை ; அளவு (௨) வங்கம - கப்பல்கள். (௬) நூலவா - சாமுத்திரிக இலக்கண மறிந்தவர்கள். இல இகவா - வீட்டினின்றும வெளியே வாராத. (௭) பாடு - பெருமை.

பைந்தொடியை நிதிபதிமைந் தன்பரம தத்தனுக்கு
முந்தைமர பினுக்கேற்கு முறைமைமணம் புரிகென்றார். (அ)

மற்றவனு முறைமையினான் மணமிசைந்து செலவிடச்சென்
றுற்றவர்க ளுரைகேட்ட நிதிபதியு முயர்சிறப்புப்
பெற்றனன்போ லுவந்துதனிப் பெருமகட்குத் திருமலியுஞ்
சுற்றமுடன் களிகூர்ந்து வதுவைவினைத் தொழில்பூண்டான் (௯)

மணமிசைந்த நாளோலை செலவிட்டு மங்கலநாள்
அணையவது வைத்தொழில்க ளானவெலா மமைவித்தே
இணரலங்கன் மைந்தனையு மணவணியி னெழில்விளக்கிப்
பணைமுரச மெழுந்தார்ப்பக் காரைக்காற் பதிபுகுந்தார் (௧௦)

அளிமிடைதார்த் தனதத்த னணிமாடத் துட்புகுந்து
தெளிதருநூல் விதிவழியே செயன்முறைமை செய்தமைத்துத
தளிரடிமென் னகைமயிலைத் தாதவிழ்தார்க் காளைக்குக்
களிமகிழ்சுற் றம்போற்றக் கல்யாணஞ் செய்தார்கள் (௧௧)

மங்கலமா மணவினைகண் முடித்தியல்பின் வைகுநாட்
டங்கள்குடிக் கரும்புதல்வி யாதலினாற் றனதத்தன்
பொங்கொலிநீர் நாகையினிற் போகாமே கணவனுடன்
அங்கணமர்ந் தினிதிருக்க வணிமாட மருங்கமைத்தான். (௧௨)

மகட்கொடையின் மகிழ்சிறக்கும் வரம்பிறனங் கொடுத்ததற்
னிகரப்பரிய பெருஞ்சிறப்பி னிதிபதிதன் குலமகனுந்
தகைப்பில்பெருங் காதலினாற் றங்குமனை வளம்பெருக்கி
மிகப்புரியுங் கொள்கையினின் மேம்படுதன் மேவினான் (௧௩)

ஆங்கவன்ற னில்வாழ்க்கை யருந்துணையா யமர்கின்ற
பூங்குழலா ரவர்தாமும் பொருவிடையார் திருவடிக்கீழ்
ஓங்கியவன் புறுகாத லொழிவின்றி மிகப்பெருகப்
பாங்கில்வரு மனையறத்தின் பண்புவழா மையிற்பயில்வார் (௧௪)

நம்பரடி யாரணைந்தா னல்லதிரு வமுதளித்துஞ்
செம்பொன்னு நவமணியுஞ் செழுந்துகிலு முதலான
தம்பரிவி னாலவர்க்குத் தகுதியின்வேண் டுவகொடுத்தும்
உம்பர்பிரான் றிருவடிக்கீ ழுணர்வுமிக வொழுகுநாள் (௧௫)

---

(௰) இணர் அலங்கல் - பூங்கொத்துக்களால் தொடுக்கப்பட்ட மாலை தரித்த. மண அணியின் எழில்விளக்கி - கலியாண ஆபரணங்களால் அலங்காரஞ் செய்து. பணை - பருத்த. (௧௧) அளிமிடைதார் - வண்டுகள் மொய்க்கும் மாலையணிந்த. (௧௩) மகள்கொடையின் - தமது கன்னிகையைத் தானஞ் செய்த காரணமாக. மகிழ்சிறக்கும் - (மருகனுக்கு) உவப்பெய்துவிக்கும்.

பாங்குடைய நெறியின்கட் பயில்பரம தத்தனுக்கு
மாங்கனிக ளோரிரண்டு வந்தணைந்தார் சிலர்கொடுப்ப
ஆங்கவைதான் முன்வாங்கி யவர்வேண்டுங் குறையளித்தே
யீங்கிவற்றை யில்லத்துக் கொடுக்கவென வியம்பினான். (௧௬)

கணவன்றான் வரவிடுத்த கனியிரண்டுங் கைக்கொண்டு
மணமலியு மலர்க்கூந்தன் மாதரார் வைத்ததற்பின்
பணவரவம் புனைந்தருளும் பரமனார் திருத்தொண்டர்
உணவின்மிகு வேட்கையினா லொருவர்மனை யுட்புகுந்தார் (௧௭)

வேதங்கண் மொழிந்தபிரான் மெய்த்தொண்டர் நிலைகண்டு
நாதன்ற னடியாரைப் பசிதீர்ப்பே னெனநண்ணிப்
பாதங்கள் விளக்கநீர் முன்னளித்துப் பரிகலம்வைத்
தேதந்தீ நல்விருந்தா வின்னடிசி லூட்டுவார். (௧௮)

கறியமுதங் குதவாதே திருவமுது கைகூட
வெறிமலர்மேற் றிருவனையார் விடையவன்ற னடியாரே
பெறலரிய விருந்தானாற் பேறிதன்மே லில்லையெனும்
அறிவினரா யவரமுது செய்வதனுக் காதரிப்பார். (௧௯)

இல்லாளன் வைக்கவெனத் தம்பக்கன் முன்னிருந்த
நல்லநறு மாங்கனிக ளிரண்டினிலொன் றைக்கொண்டு
வல்விரைந்து வந்தணைந்து படைத்துமன மகிழ்ச்சியினால்
அல்லறீர்ப் பவரடியார் தமையமுது செய்வித்தார். (௨௦)

மூப்புறுமத் தளர்வாலு முதிர்ந்துமுடு கியவேட்கைத
தீப்பசியி னிலையாலு மயர்ந்தணைந்த திருத்தொண்டர்
வாய்ப்புறுமென் சுவையடிசின் மாங்கனியோ டினிதருந்திப்
பூப்பயின்மென் குழல்மடவார் செயலுவந்து போயினார். (௨௧)

மற்றவர்தாம் போயினபின் மனைப்பதியா கியவணிகன்
உற்றபெரும் பகலின்கணோங்கியபே ரில்லெய்திப்
பொற்புறமுன் னீராடிப் புகுந்தடிசில் புரிந்தயிலக்
கற்புடைய மடவாருங் கடப்பாட்டி லூட்டுவார். (௨௨)

இன்னடிசில் கறிகளுட னெய்துமுறை யிட்டதற்பின்
மன்னியசீர்க் கணவன்றான் மனையிடைமுன் வைப்பித்த
நன்மதுர மாங்கனியி லிருந்ததனை நறுங்கூந்தல்
அன்னமனை யார்தாமுங் கொடுவந்து கலத்தளித்தார். (௨௩)

(௧௯) அங்கு கறியமுது உதவாதே திருஅமுது கைகூட - அவ்விடத்தில கறியமுது (பதார்த்தம) பாகமாகாமல அன்னம மாத்திரம பாகமாயிருக்க. வெறி மலா மேல் திருஅனையாா - வாசனையுடைய தாமரை மலாமேல் வீற்றிருக்கும இலக்குமியைப போனற புனிதவதி யமமையாா. (௨௨) அடிசில் புரிநது அயில - அன்னத்தை விரும பியுண்ண.

மனைவியார் தாம்படைத்த மதுரமிக வாய்த்தகனி
தனைநுகர்ந்த வினியசுவை யாராமைத் தார்வணிகன்
இனையதொரு பழமின்னு முளததனை யிடுகவென
அனையதுதாங் கொண்டுவர வணைவார்போ லங்ககன்றார். (உச)

அம்மருங்கு நின்றயர்வா ரருங்கனிக்கங் கென்செய்வார்
மெய்ம்மறந்து நினைந்துற்ற விடத்துதவும் விடையவர்தாள்
தம்மனங்கொண் டுணர்தலுமே யவரருளாற் றாழ்குழலார்
கைம்மருங்கு வந்திருந்த ததிமதுரக் கனியொன்று. (உரு)

மற்றதனைக் கொடுவந்து மகிழ்ந்திடலு மயின்றதனில்
உற்றசுவை யமுதினுமேற் படவுளதா யிடவிதுதான்
முற்றருமாங் கனியன்று மூவுலகிற் பெறற்கரிதாற்
பெற்றதுவே றெங்கென்று பெய்வளையார் தமைக்கேட்டான். (உசா)

அவ்வுரைகேட் டலுமடவா ரருளுடையா ரளித்தருளுஞ்
செவ்வியபே ரருள்விளம்புந் திறமன்றென் றுரைசெய்யார்
கைவருகற் புடைநெறியாற் கணவனுரை காவாமை
மெய்வழியன் றெனவிளம்பல் விடமாட்டா விதிர்ப்புறுவார் (உஎ)

செய்தபடி சொல்லுவதே கடனென்னுஞ் சீலத்தா
லைதழையுங் கண்டர்சே வடிகண்மனத் துறவணங்கி
யெய்தவருங் கனியளித்தா ரியாரென்னுங் கணவனுக்கு
மொய்தருபூங் குழன்மடவார் புகுந்தபடி தனைமொழிந்தார் (உஅ)

ஈசனரு ளெனக்கேட்ட வில்லிறைவ னதுதெளியான்
வாசமலர்த் திருவனையார் தமைநோக்கி மற்றிதுதான்
தேசுடைய சடைப்பெருமான் றிருவருளே லின்னமுமோர்
ஆசில்கனி யவனருளா லழைத்தளிப்பா யெனமொழிந்தான் (உகூ)

பாங்ககன்று மனைவியார் பணியணியார் தமைப்பரவி
யீங்கிதளித் தருளீரே லென்னுரைபொய் யாமென்ன
மாங்கனியொன் றருளாலவந் தெய்துதலு மற்றதனை
யாங்கவன்கைக் கொடுத்தலுமே யதிசயித்து வாங்கினான் (௩0)

வேறு

வணிகனுந் தன்கைப் புக்க மாங்கனி பின்னைக் காணான்
தணிவரும் பயமேற் கொள்ள வுள்ளமுந் தடுமா றெய்தி
யணிகுழ லவரை வேறோ ரணங்கெனக் கருதி நீங்குந்
துணிவுகொண் டெவர்க்குஞ் சொல்லான் றொடர்வின்றி யொழுகு நாளில்.

(உசா) பெய்வளையார் தமை - பெண்ணினை, புனிதவதியாரை. (௩க) அணங்கு - தெய்வப்பெண். தொடர்வு இன்றி ஒழுகு நாளில் - சம்பந்தமில்லாமல் வாழுங்காலத்தில். (உள்ளத்தில் மனைவியென்ற பாவனையையொழித்துத் தெய்வமாகக் கருதிவாழுநாளில்.)

விடுவதே யெண்ண மாக மேவிய முயற்சி செய்வான்
படுதிரைப் பரவை மீது படர்கலங் கொண்டு போகி
நெடுநிதி கொணர்வே னென்ன நிரந்தபல் கிளைஞ ராகும்
வடுவில்சீர் வணிக மாக்கள் மரக்கலஞ் சமைப்பித் தார்கள். (௧௨)

கலஞ்சமைத் ததற்கு வேண்டுங் கம்மிய ருடனே செல்லும்
புலங்களில் விரும்பு பண்டம் பொருந்துவ நிரம்ப வேற்றிச்
சலந்தரு கடவுட் போற்றித் தலைமையா நாயகன் றானு
நலந்தரு நாளி லேறி நளிர்திரைக் கடன்மேற் போனான். (௧௩)

கடன்மிசை வங்க மோட்டிக் கருதிய தேயந் தன்னில்
அடைவுறச் சென்று சேர்ந்தங் களவில்பல் வளங்கண் முற்றி
யிடைசில நாட்க ணீங்க மீண்டுமக் கலத்தி லேறிப்
படர்புனற் கன்னி நாட்டோர் பட்டின மருங்கு சேர்ந்தான். (௧௪)

அப்பதி தன்னி லேறி யலகில்பல் பொருள்க ளாக்கும்
ஒப்பின்மா நிதிய மெல்லா மொருவழிப் பெருக வுய்த்து
மெய்ப்புகழ் விளங்கு மவ்வூர் விரும்பவோர் வணிகன் பெற்ற
செப்பருங் கன்னி தன்னைத் திருமலி வதுவை செய்தான் (௧௫)

பெறலருந் திருவி னாளைப் பெருமணம் புணர்ந்து முன்னை
யறலிய னறுமென் கூந்த லணங்கனா டிறத்தி லற்றம்
புறமொரு வெளியு றாமற் பொதிந்தசிந் தனையி னோடு
முறைமையின் வழாமை வைகி முகமலர்ந் தொழுகு நாளில். (௧௬)

முருகலர் சோலை மூதூ ரதன்முதல் வணிக ரோடும்
இருநிதிக் கிழவ னென்ன வெய்திய திருவின் மிக்குப்
பொருகடற் கலங்கள் போக்கும் புகழினான் மனைவி தன்பாற்
பெருகொளி விளக்குப் போலோர் பெண்கொடி யரிதிற் பெற்றான் (௧௭)

மடமக டன்னைப் பெற்று மங்கலம் பேணித் தான்முன்
புடனுறை வஞ்சி நீத்த வொருபெரு மனைவி யாரைத்
தொடர்வற நினைந்து தெய்வத் தொழுகுல மென்றே கொண்டு
கடனமைத் தவாத நாமங் காதல்செய் மகவை யிட்டான் (௧௮)

இந்நிலை யிவனிங் கெய்தி யிருந்தன னிப்பா னீடுங்
கன்னிமா மதில்சூழ் மாடக் காரைக்கால் வணிக னான

(௧௨) பரவை - கடல். (௧௩) கம்மியா - மாலுமிமுதலியோர். புலங்களில் - தேசங்களில். சலம் தருகடவுள் - வருணன். நாயகன் - வணிகனுப பரமதத்தன். (௧௪) கன்னிநாடு-பாண்டிநாடு. (௧௬) அறல் இயல்-கருமணல்போன்ற. அணங்கனாள் திறத்தில் அற்றம் புறம் ஒருவெளி உறாமல் - புனிதவதியாரிடத்தில் தான் செய்தவஞ்சனையைப் புறம்பே ஒருவருக்கும் வெளியிடாமல்.

தன்னிகர் கடந்த செல்வத் தனதத்தன் மகளார் தாமு
மன்னிய கற்பி னோடு மனையறம் புரிந்து வைக. (௩௯)

விளைவளம் பெருக்க வங்க மீதுபோம் பரம தத்தன்
வளர்புகழ்ப் பாண்டி நாட்டோர் மாநகர் தன்னின் மன்னி
யளவின்மா நிதிய மாக்கி யமர்ந்தினி திருந்தா னென்று
கிளரொளி மணிக்கொம் பன்னார் கிளைஞர்தாங் கேட்டா ரன்றே. (௪௦)

அம்மொழி கேட்ட போதே யணங்கனார் சுற்றத் தாருந்
தம்முறு கிளைஞர்ப் போக்கி யவனிலை தாமுங் கேட்டு
மம்மர்கொண் மனத்த ராகி மற்றவ னிருந்த பாங்கர்க்
கொம்மைவெம் முலையி னாளைக் கொண்டுபோய் விடுவ தென்றார் (௪௧)

மாமணிச் சிவிகை தன்னின் மடநடை மயிலன் னாரைத்
தாமரைத் தவிசில் வைகுந் தனித்திரு வென்ன வேற்றிக்
காமரு கழனி வீழ்த்துக் காதல்செய் சுற்றத் தாருந்
தேமொழி யவருஞ் சூழச் சேணிடைக் கழிந்து சென்றார் (௪௨)

சிலபகல் கடந்து சென்று செந்தமிழ்த் திருநா டெய்தி
மலர்புகழ்ப் பரம தத்தன் மாநகர் மருங்கு வந்து
குலமுதன் மனைவி யாரைக் கொண்டுவந் தணைந்த தன்மை
தொலைவில்சீர்க் கணவ னுக்குச் சொல்லிமுன் செல்ல விட்டார். (௪௩)

வந்தவ ரணைந்த மாற்றங் கேட்டலும் வணிகன் றானுஞ்
சிந்தையி லச்ச மெய்திச் செழுமணம் பின்பு செய்த
பைந்தொடி தனையுங் கொண்டு பயந்தபெண் மகவி னோடு
முந்துறச் செல்வே னென்று மொய்குழ லவர்பால் வந்தான் (௪௪)

தானுமம் மனைவி யோடுந் தளர்நடை மகவி னோடு
மானிளம் பிணைபோ னின்ற மனைவியா ரடியிற் றாழ்ந்தே
யானும தருளால் வாழ்வே னிவ்விளங் குழவி தானும்
பான்மையா லுமது நாம மென்றுமுன் பணிந்து வீழ்ந்தான் (௪௫)

கணவர்தாம் வணங்கக் கண்டு காமர்பூங் கொடியு னாரும்
அணைவுறுஞ் சுற்றத் தார்பா லச்சமோ டொதுங்கி நிற்ப
உணர்வுறு கிளைஞர் வெள்கி யுன்றிரு மனைவி தன்னை
மணமலி தாரி னாய்நீ வணங்குவ தென்கொ லென்றார் (௪௬)

மற்றவர் தம்மை நோக்கி மானுட மிவர்தா மல்லர்
நற்பெருந் தெய்வ மாத னானறிந் தகன்ற பின்பு

---

(௪௧) மம்மர் - துயரம். (௪௨) காமருகழனி வீழ்த்து - அழகிய திரைச்சீலைவிடுத்து. சேணிடை - நெடுந்தூரம்.

பெற்றவிம் மகவு தன்னைப் பேரிட்டே னுத லாலே
பொற்பதம் பணிந்தே னீரும் போற்றுதல செய்மி னென்றான். (சஎ)

என்றபின் சுற்றத் தாரு மிதுவென்கொ லென்று நின்றார்
மன்றலங குழலி னாரும் வணிகன்வாய் மாற்றங கேளாக்
கொன்றைவார் சடையி னார்தங குரைகழல போற்றிச சிந்தை
யொன்றிய நோக்கின் மிக்க வுணர்வுகொண் டுரைசெய் கின்றார். (சஅ)

ஈங்கிவன் குறித்த கொள்கை யிதுவினி யிவனுக் காகத
தாங்கிய வனப்பு நின்ற தசைப்பொதி கழித்திங குன்பால
ஆஙகுநின் றாளகள் போற்றும் பேய்வடி வடியே னுக்குப்
பாஙகுற வேண்டு மென்று பரமனைப் பரவி நின்றார். (சகூ)

ஆனவப் பொழுது மன்று ளாடுவா ரருளி னாலே
மேனெறி யுணர்வு கூர வேண்டிறறே பெறுவார மெய்யில்
ஊனடை வனப்பை யெலலா முதறியெற புடமபே யாகி
வானமு மண்ணு மெலலாம வணஙகுபேய் வடிவ மானார். (ருo)

மலர்மழை பொழிநத தெங்கும் வானதுந் துபியி னாதம்
உலகெலா நிறைநது விமம வும்பரு முனிவர தாமுங
குலவினா கணஙக ளெலலாங குணலையிட் டனமுன னின்ற
தொலைவில்பல் சுற்றத் தாருந தொழுதஞசி யகன்று போனார (ருக)

உறபவித தெழுநத ஞானந தொருமையி னுமைகோன் றன்னை
யற்புதத திருவந் தாதி யப்பொழு தருளிச செயவார்
பொற்புடைச செய்ய பாத புண்டரீ கஙகள் போறறு
நறகணத தினிலொன் றானே னென்று நயந்து பாடி. (ருஉ)

---

அற்புதத்திருவந்தாதி.

திருச்சிற்றம்பலம்.

பிறந்துமொழிபயின்றபின்னெல்லாங்காதல
சிறந்துநின்சேவடியேசோந்தே—னிறந்திகழு
மைஞ்ஞான்றகண்டத்துவானோர்பெருமானே
யெஞ்ஞான்றுதீர்ப்பதிடர்.

உரையினலிம்மாலையந்தாதிவெண்பா
கரைவினற்காரைக்காற்பேய்சசொற்—பரவுவார
ஆராதவன்பிறைேடண்ணலைச்சென்றேத்துவார்
பேராதகாதல்பிறநது

திருச்சிற்றம்பலம்.

---

(ருக) குணலை இட்டன - கொக்கரித்தன.

ஆய்ந்தசீ ரிரட்டை மாலை யந்தாதி யெடுத்துப் பாடி
யேய்ந்தபே ருணர்வு பொங்க வெயிலொரு மூன்று முன்னாட்
காய்ந்தவ ரிருந்த வெள்ளிக் கைலைமால் வரையை நண்ண
வாய்ந்தபே ரருண்முன் கூர வழிபடும் வழியால் வந்தார். (௫௩)

---

## திருஇரட்டைமணிமாலை.

திருச்சிற்றம்பலம்

கிளர்ந்துந்துவெந்துயர்வந்தடும்போதஞ்சிநெஞ்சமென்பாய்
தளர்ந்திங்கிருத்தறவிர்திகண்டாய்தளராதுவந்தி
வளர்ந்துந்துகங்கையும்வானத்திடைவளர்கோட்டுவெள்ளை
யிளந்திங்களுமெருக்குமிருக்குஞ்சென்னியீசனையே

உத்தமராய்வாழ்வாருலந்தக்காலுற்றார்கள்
செத்தமரமடுக்கித்தீயாமுன்—உத்தமனாய்
நீளாழிநஞ்சுண்டநெய்யாடிதன்றிறமே
கேளாழிநெஞ்சேகிளாந்து

திருச்சிற்றம்பலம்.

---

கண்டவர் வியப்புற் றஞ்சிக் கையகன் றோடு வார்கள்
கொண்டதோர் வேடத் தன்மை யுள்ளவா கூறக் கேட்டே
யண்டநா யகனு ரென்னை யறிவரே லறியா வாய்மை
யெண்டிசை மாக்க ளுக்கியா னெவ்வுரு வாயென் னென்பார் (௫௪)

வடதிசைத் தேச மெல்லா மனத்தினுங் கடிதிற் சென்று
தொடையவி ழிதழி மாலைச் சூலபா ணியனா மேவும்
படரொளிக் கைலை வெற்பிற் பாங்கணைந் தாங்குக் காலி
னடையினைத் தவிர்ந்து பாரமேற் றலையினா னடந்து சென்றார் (௫௫)

தலையினா னடந்து சென்று சங்கர னிருந்த வெள்ளி
மலையின்மே லேறும் போது மகிழ்ச்சியா லன்பு பொங்கக்
கலையிளந் திங்கட் கண்ணிக் கணனுத லொருபா கத்துச்
சிலைநுத லிமய வல்லி திருக்கணோக் குற்ற தன்றே (௫௬)

அம்பிகை திருவுள் ளத்தி னதிசயித் தருளித் தாழ்ந்து
தம்பெரு மானை நோக்கித் தலையினா னடந்திங் கேறும்
எம்பெரு மானே ரெற்பின் யாக்கையன் பென்னே யென்ன
நம்பெரு மாட்டிக் கங்கு நாயக னருளிச் செய்வான். (௫௭)

வருமிவ ளம்மைப் பேணு மம்மைகா ணுமையே மற்றிப்
பெருமைசேர் வடிவும் வேண்டிப் பெற்றன ளென்று பின்னை
யருகுவந் தணைய நோக்கி யம்மையே யென்னுஞ் செம்மை
யொருமொழி யுலக மெல்லா முய்யவே யருளிச் செய்தார். (௫௮)

அங்கண னம்மை யேயென் றருள்செய வப்பா வென்று
பங்கயச் செம்பொற் பாதம் பணிந்துவீழ்ந் தெழுந்தார் தம்மைச்
சங்கவெண் குழையி னாருந் தாமெதிர் நோக்கி நம்பால்
இங்குவேண் டுவதெ னென்ன விறைஞ்சிநின் றியம்பு கின்றார். (௫௯)

இறவாத வின்ப வன்பு வேண்டிப்பின் வேண்டு கின்றார்
பிறவாமை வேண்டு மீண்டும் பிறப்புண்டே லுன்னை யென்று
மறவாமை வேண்டு மின்னும் வேண்டுநான் மகிழ்ந்து பாடி
யறவாநீ யாடும் போதுன் னடியின்கீ ழிருக்க வென்றார். (௬௦)

கூடுமா றருள்கொ டுத்துக் குலவுதென் றிசையி லென்று
நீடுவாழ் பழன மூதூர் நிலவிய வாலங் காட்டில்
ஆடுமா நடமு நீகண் டானந்தஞ் சேர்ந்தெப் போதும்
பாடுவாய் நம்மை யென்றான் பரவுவார் பற்றாய் நின்றான். (௬௧)

அப்பரி சருளப் பெற்ற வம்மையுஞ் செம்மை வேத
மெய்ப்பொரு ளானார் தம்மை விடைகொண்டு வணங்கிப் போந்து
செப்பரும் பெருமை யன்பாற் றிகழ்திரு வாலங் காடா
நற்பதி தலையி னாலே நடந்துபுக் கடைந்தா ரன்றே (௬௨)

ஆலங்கா டதனி லண்ட முறநிமிர்ந் தாடு கின்ற
கோலங்காண் பொழுது கொங்கை திரங்கியென் றெடுத்துத் தங்கு
மூலங்கா ணாதார் தம்மை மூத்தநற் பதிகம் பாடி
ஞாலங்கா தலித்துப் போற்று நடம்போற்றி நண்ணு நாளில். (௬௩)

---

அம்மை - மூத்ததிருப்பதிகம்.

திருச்சிற்றம்பலம்.

கொங்கைதிரங்கிநரம்பெழுந்துகுண்டுகண்வெண்பற்குழிவயிற்றுப்
பங்கிசிவந்திருபற்கணீண்டுபரடுயர்நீள்கணைக்காலோர்பெண்பேய்
தங்கியலறியுலறுகாட்டிற்றாழ்சடையெட்டுத்திசைகள்வீசி
யங்கங்குளிர்ந்தனலாடுமெங்களப்பனிடந்திருவாலங்காடே.

ஒப்பிணையில்லவன்பேய்கள்கூடியொன்றினையொன்றடித்தொக்கலித்துப்
பப்பிணையிட்டுப்பரண்டைபாடப்பாடிருந்துந்நரியாழமைப்ப
வப்பனையணிதிருவாலங்காட்டுளடிகளைச்செடிதலைக்காரைக்காற்பேய்
செப்பியசெந்தமிழ்பத்தும்வல்லார்சிவகதிசேர்ந்தின்பமெய்துவாரே.

திருச்சிற்றம்பலம்

---

வேறு.

மட்டவிழ்கொன் றையினார்தந் திருக்கூத்து முன்வணங்கு
மிட்டமிகு பெருங்காத லெழுந்தோங்க வியப்பெய்தி
யெட்டியில வம்மீகை யெனவெடுத்துத் திருப்பதிகங்
கொட்டமுழ வங்குழக னாடுமெனப் பாடினார். (௬௪)

## பதிகம்.

திருச்சிற்றம்பலம்.

எட்டியிலவமீகைசூரைகாரைபடர்ந்தெங்குஞ்
சுட்டசுடலைசூழ்ந்தகள்ளிசோர்ந்தகுடர்கவ்விப்
பட்டபிணங்கள்பரந்தகாட்டிற்பறைபோலவிழிகட்பேய்
கொட்டமுழவங்கூளிபாடக்குழகனாடுமே.

சூடுமதியஞ்சடைமேலுடையார்சுழல்வர்திருநட்டம்
ஆடுமரவமரையிலார்த்தவடிகளருளாலே
காடுமலிந்தகனலவாயெயிற்றுக்காரைக்காற்பேய்தன்
பாடல்பத்தும்பாடியாடப்பாவநாசமே.

திருச்சிற்றம்பலம்

---

மடுத்தபுனல் வேணியினா ரம்மையென மதுரமொழி
கொடுத்தருளப் பெற்றாரைக் குலவியதாண் டவத்திலவ
ரெடுத்தருளுஞ் சேவடிக்கீ ழென்று மிருக் கின்றாரை
யடுத்தபெருஞ் சீர்பரவ லாரளவா யினதம்மா. (௬௫)

வேறு

ஆதியோ டந்த மில்லா னருணட மாடும் போது
கீதமுன் பாடு மம்மை கிணையொளி மலர்த்தாள் போற்றிச்
சீதநீர் வயல்சூழ் திங்க ளூரினப் பூதி யாராம்
போதமா முனிவர் செய்த திருத்தொண்டு புகல லுற்றேன. (௬௬)

**காரைக்காலம்மையார் புராணமுற்றிற்று.**

ஆ திருவிருத்தம் - ௧,௭௮௭.

---

காரைக்காலிலே, வணிகர் குலத்தலைவனும், பெருந்தவமுடையவனும் ஆகிய தனதத்தன் என்பவன் ஒருவன் இருந்தான். அவன் பூர்வத்தில் செய்த புண்ணியப் பயனால் அவனுக்குப் பூமகளே என்று சொல்லத்தகுந்த புனிதவதியார் என்பவர் புத்திரியாராகப் பிறந்தார். அப்புனிதவதியார் அரனிடத்திலே பேரன்புடையவராய், அழகின்கொழுந்து எழுவதைப் போல வளர்ந்து, திருமணப் பருவமடைந்தார். அடையவே, சில முதியோர்கள் தனதத்தனிடம் வந்து நாகப்பட்டினத்துள்ள நிதிபதி என்பவன் புத்திரனாகிய பரமதத்தனுக்குப் புனிதவதியாரை மணஞ் செய்விக்கப் பேசினார்கள். தனதத்தன் இசைந்து பரமதத்தனுக்குத் தன்னொரு புதல்வியைக் கலியாணஞ் செய்து கொடுத்து, நாகைக்கனுப்பாமல், தனது வீட்டருகே ஒருவீடுகட்டி, அளவில்லாத திரவியங்களை அளித்து, அதிலே வாழும்படி செய்தான். புனிதவதியார் கணவனோடு இல்லறத்தை வழாது நடத்தி, தமது இல்லத்துக்கு வரும் சிவனடியார்களைத் திருவமுது செய்வித்து, அவர் வேண்டும் பொருள்களையும், பிறவற்றையுங் கொடுத்துக் கொண்டு வந்தார்.

ஒருநாள் பரமதத்தன்பால் வந்தவர்கள் சிலர் அவனுக்கு இரண்டு மாங்கனிகள் கொடுத்தார்கள். அவன் அவைகளை வாங்கி அவர்கள் குறையை

முடித்து, அவைகளை இல்லிற்கனுப்பினான். இல்லரசியாகிய அம்மையார் அப் பழங்களை வாங்கிவைத்த பின்பு அவர் வீட்டிற்கு ஒரு சிவனடியார் பசியால் வாடி இளைப்புற்று வந்தார். புனிதவதியார் அவரைக்கண்டதும் பாதங்களை விளக்கிக்கொள்ள நீர்கொடுத்துக் கலத்திலே திருவமுதுபடைத்தார். அது காலை கறியமுது பாகம்பண்ணப்படாமையால் "சிவனடியாரோ விருந்தின ராய் வந்தமையால் இதைவிட பெறும்பேறு வேறு இல்லை" எனக்கருதிக் கணவன் அனுப்பிய இரண்டு மாம்பழங்களுள் ஒன்றைக்கொண்டு வந்து படைத்துப் பெரியவரை அமுது செய்வித்தார். திருத்தொண்டர் அன் னத்தை மாங்கனியோடு உண்டு உவந்துபோயினார்.

சிவனடியார் சென்றபின் பரமதத்தன் நடுப்பகலிலே இல்லிற்கு வந்து போசனம் பண்ணுங்கால், புனிதவதி யம்மையார் தம்மிடமிருந்த ஒருமாங் கனியைப் பரிகலத்தில் இட்டார். அவன் அதையுண்டு அது அதிக சுவையா யிருந்தமையால் "இன்னொரு கனியையுங்கொணர்ந்துவை" என்றான். அது கேட்ட அம்மையார் கொண்டு வருபவரைப் போலப்போய் நின்றுகொண்டு நீலகண்டப்பெருமானை நினைக்க, அவரருளால் ஒருமாங்கனி அவர்கையில்வந் திருந்தது. எம்பெருமாட்டியார் அப்பழத்தைக் கணவனுக்கு இட்டார். அவ் வணிகன் அதைப்புசித்து, அதன் சுவைதேவாமுதத்திலும் இனிமையாயிருந் தமையால் மனைவியாரை நோக்கி "இதுநான் அனுப்பிய மாங்கனியன்று; இது திரிலோகங்களிலும் பெறுதற்கு அருமையானது; இதனை நீ எங்கே பெற்றாய்" என்றுவினவினான். அதைக்கேட்ட புனிதவதியார் தமக்குத்திரு வருள் உதவிய திறத்தை வெளியிடல் முறையன்றெனக்கருதி விளைந்ததை விளம்பமாட்டாதவரும், கணவனுக்கு உண்மையை மறைத்துக் கூறலும் குற்றமெனக்கருதி நிகழ்ந்ததைவிளம்பாது விடமாட்டாதவருமாய் வருந்திப் பின் நிகழ்ந்த உண்மையைக் கூறினார். பரமதத்தன் அதைத் தெளியாதவ னாய், அம்மையாரைப் பார்த்து "சிவனருளால் இன்னுமோர் கனிகொண் டுவா" என்றான். கற்பரசியார் அவ்விடத்தைவிட்டு நீங்கி அடியார்க்கெளிய வரைச் சிந்தித்து 'இன்னும் ஒருபழம் அருளீரேல் என்னுரை பொய்யாகும்' என்ன, சர்வவியாபியாகிய சங்கரன் திருவருளால் ஒருமாங்கனி அம்மையார் திருக்கரத்தில் வந்தது. புனிதவதியார் அக்கனியை நாயகனுக்குக்கொடுக்க, அவன் அதிசயித்து வாங்கினான். உடனே மாங்கனி மறைந்தது. வணிகன் மனந்தடுமாறித் தன்மனைவியாரைத் தெய்வமெனக்கருதி, அவரைவிட்டு நீங் கத்துணிந்து, வெளியிடாதவனாய், அவரோடுதொடர்வின்றி ஒழுகிச்சின்னாட் கழித்தபின் ஒருமரக்கலஞ் செய்வித்து, அதிலே பலபண்டங்களை ஏற்றித் தானும் வேலையாட்களுடன் ஏறி வாத்தகஞ் செய்து கொண்டே, பாண்டி நாட்டிலுள்ள ஒருநகரத்தை யடைந்து, அங்கே ஒரு வைசியப்பெண்ணை விவாகஞ் செய்துகொண்டு, ஒருபெண் குழவியைப்பெற்று, அதற்குத் தான் தெய்வமாகக் கொண்டு வழிபட்டுவரும் முதன் மனைவியின் திருநாமம் இட்டுச் சிறப்பாக வாழ்ந்துகொண்டிருந்தான்.

காரைக்காலிலுள்ள புனிதவதியார் சுற்றத்தவர்கள் பரமதத்தன் பாண்டி நாட்டிலிருப்பதைக் கேள்வியுற்றுச் சிலரையனுப்பி அவன் நிலைமையையு ணர்ந்து, புனிதவதியாரை அவனிடஞ் சேர்க்கவேண்டும் என்று ஒருசிவிகை யிலே அம்மையாரை ஏற்றிக்கொண்டு, அவன் வாழும் நகரருகேவந்து, தாங் கள் வந்தமையை அவனுக்குத் தெரிவித்தார்கள். பரமதத்தன் அதைக்கேட் டவுடன் தன் இரண்டாம் மனைவியையும், மகளையும் அழைத்துக்கொண்டு புனிதவதியாரிடம் வந்து மனைவி மக்களோடும் அவரைப் பணிந்து "உம்மு டைய திருவருளால் சுகமாக வாழ்கின்றேன்; இக்குழந்தைக்கு உமது திரு

நாமத்தையே இட்டேனேன்" என்று அச்சத்தோடு சொன்னான். புனிதவதியார் சுற்றத்தவர்பால் அச்சமோடு ஒதுங்கி நிற்க, அவர்கள் வெள்கிப்பரமதத்தனைப் பார்த்து "நீ உனது மனைவியை வணங்கியதென்னை" என்று கேட்டார்கள். அதற்கு அவன் "இவர்மானுடமாது அல்லர்; இவரைத் தெய்வமாதெனக்கருதிப் பிரிந்தேன்; இவரைத் தெய்வமாக யான் கொண்டபடியால, இககுழவிக்கு இவர் பெயரையே அணிந்தேன்; இப்பொழுது இவர் பாதங்களையும் பணிந்தேன்; நீங்களும் பணியுங்கள்" என்றான். சுற்றத்தவர்கள் அதைக்கேட்டு "இது என்ன! இது என்ன!!" என்று திகைத்தார்கள். அம்மையார சிவபெருமான் திருவடியைப் போற்றி ஒரு மைப்பாடுடைய சிநதையராய் "ஈசனே! இவன் குறித்த கொள்கை இது; இவனுக்காகத் தாஙகிய அழகுநிரம்பிய தசைப்பொதியைக் கழித்து, தேவரீரைச் சூழ்ந்து நின்றுள்கள் போற்றும் பேய்வடிவை அடியேனுக்கு அளித்தருளல் வேண்டும்" என்று பிரார்த்தித்தார். அப்பொழுது சிவபிரான் திருவருளால் ஊன்நிறைந்த அழகையுதறி, எற்புடம்பாக, மண்ணும் விண்ணும் வணங்கும் பேய்வடிவம் ஆயினர் தேவர்கள் மலர் மாரி பொழிந்தார்கள். சுற்றததவர்கள் அஞ்சித்தொழுது அகன்று போய்விட்டார்கள்.

மாயை யொழிததபேயார் திருவருளால் கைவரப்பெற்ற சிவஞானத்தால அற்புதத திருவந்தாதியையும், திருவிரட்டைமணி மாலையையும் அருளிசெய்து, கயிலாயததைக் காண விரும்பிச் சித்தவேகத்தினும் அதிவேகமாக நடநதுசென்று, அககயிலை வெற்பின்பாஙகா அணைந்து, அஙகுக்காலால் நடததலைத தவிர்நது, தலையால நடநது, மலையின்மேல் ஏறினர். அப்பொழுது அம்பிகை யெம்பெருமாட்டியார் தம்பெருமானைநோககி "இஙகே தலையினல் நடந்தேறிவரும என்புடலை யுடையவாது அன்பென்னே" என்ன; சிவபிரான "உமையே! இவ்வருபம் இவள் நம்மைத் துதிககும் அம்மை இப்பெருமை பொருந்திய வடிவததையும் வேண்டிப் பெற்றாள்" என்றார். பின்னா புனிதவதியாா சிவசந்நிதிககுச் சமீபிக்கச் சிவபெருமான் உலகம் உய்ய அவரைத் திருநோக்கஞ் செய்து "அம்மையே" என்றழைப்ப, அவரும் "அப்பா" என்று சொல்லி, அவருடைய திருவடிகளில் விழுந்து வணங்கினர் கயிலாயபதி புனிதவதியாரைப் பார்த்து "உனக்கு வேண்டுவது என்னை" என்று கேட்டார் அதற்கு அம்மையார் வணங்கி "தர்ம சொரூபியே! அடியேனுக்கு அழியாத பேரின்பமாகிய அன்பு வேண்டும்; இனிமேல் பிறவாமைவேணடும்; மீண்டும் பிறப்புண்டேல் தேவரீரை என்றும் மறவாமைவேண்டும்; தேவரீா திருததாண்டவஞ் செய்யும்போது, திருவடியின் கீழ்மகிழ்நது தேவரீரைப் பாடிக்கொண்டிருகக வேண்டும்" என்று பிராாததித்தார். சிவபெருமான் அம்மையாரை நோக்கி "தென் திசையிலுள்ள திருவாலஙகாட்டில் நமது நடனததைத் தரிசித்துப் பேரானந்தமுற்று நம்மைப் பாடிககொண்டிரு" என்றார். அதைக்கேட்ட புனிதவதியாா சிவசஙகரனைப் பணிந்து விடைபெற்றுத தலையினல் நடந்து, திருவாலஙகாட்டை யடைந்து, அஙகே இரத்தின சபாபதி புரியும் ஊர்த்துவ தாண்டவத்தைத் தரிசிததுத் தொழுது, "கொஙகை திரங்கி" "எட்டியிலவமீகை" என்னும திருவருட்பதிகங்களைப் பாடினர். பின் காரைக்காலம்மையார் சுதிரைவேலரை யீன்ற கடவுள் தூக்கிய திருவடிக்கீழ் என்றுஞ் சிவானந்தத்தை அனுபவிக்கும் பெரும்பேற்றை யடைந்தார்

# அப்பூதியடிகள்நாயனார் புராணம்.



தாண்டவம் புரிய வல்ல தம்பிரா னாருக் கன்பர்
ஈண்டிய புகழின் பாலா ரெல்லையில் தவத்தின் மிக்கார்
ஆண்டசீ ரரசின் பாத மடைந்தவ ரறியா முன்னே
காண்டகு காதல் கூரக் கலந்தவன் பினரா யுள்ளார் (௧)

களவுபொய் காமங் கோப முதலிய குற்றங் காய்ந்தார்
வளமிகு மனையின் வாழ்க்கை நிலையினார் மனைப்பா லுள்ள
அளவைக ணிறைகோல் மக்க ளாவொடு மேதி மற்றும்
உளவெலா மரசி னாமஞ் சாற்றுமவ் வொழுக்க லாற்றார் (௨)

வடிவுதாங் காணா ராயு மன்னுசீர் வாக்கின் வேந்தர்
அடிமையுந் தம்பி ரானா ரருளுங்கேட் டவரா நாமத்தாற்
படிநிகழ் மடங்கள் தண்ணீர்ப் பந்தர்கண் முதலா யுள்ள
முடிவிலா வறங்கள் செய்து முறைமையால் வாழு நாளில் (௩)

வேறு

பொருப்பரையன் மடப்பிடியி னுடன்புணருஞ் சிவக்களிற்றின்
திருப்பழனம் பணிந்துபணி செய்திருநா வுக்கரசர்
ஒருப்படுகா தலிற்பிறவு முடையவர்தம் பதிவணங்கும்
விருப்பினொடு திங்களூர் மருங்குவழி மேவுவார் (௪)

அளவில்சனஞ் செலவொழியா வழிக்கரையி லருளுடையார்
உளமனைய தண்ணளித்தா யுறுவேனிற் பரிவகற்றிக்
குளநிறைந்த நீர்த்தடம்போற் குளிர்தூங்கும் பரப்பினதாய்
வளமருவு நிழறருதண் ணீர்ப்பந்தர் வந்தணைந்தார் (௫)

வந்தணைந்த வாகீசர் மந்தமா ருதசீதப்
பந்தருட னமுதமாந் தண்ணீரும் பார்த்தருளிச்
சிந்தைவியப் புறவருவார் திருநாவுக் கரசெனும்பேர்
சந்தமுற வரைந்ததனை யெம்மருங்குந் தாங்கண்டார் (௬)

இப்பந்த ரிப்பெயரிட் டிங்கமைத்தா ரியாரென்றாக்
கப்பந்த ரறிந்தார்க ளாண்டவர செனும்பெயரால்
செப்பருஞ்சீ ரப்பூதி யடிகளார் செய்தமைத்தார்
தப்பின்றி யெங்குமுள சாலைகுளங் காவென்றார். (௭)

என்றுரைக்க வரசுகேட் டிதற்கென்னோ கருத்தென்று
நின்றவரை நோக்கியவ ரெவ்விடத்தா ரெனநிறைந்து

---

(௨) அளவைகள் - முகத்தலளவைக் கருவிகள். நிறைகோல் - எடுத்தலளவைக் கருவிகள். (௭) கா - சோலைகள்.

துன்றியநான் மாப்பருமித் தொல்பதியார் மனையின்கட்
சென்றனரிப் பொழுததுவுஞ் செய்தன்று நணித்தென்றார் (அ)

அங்ககன்று முனிவரும்போ யப்பூதி யடிகளார்
தங்குமனைக் கடைத்தலைமுன் சார்வாக வுள்ளிருந்த
திங்களூர் மறைத்தலைவர் செழுங்கடையில் வந்தடைந்தார்
நங்கள்பிரா னமரொருவ ரெனக்கேட்டு நண்ணினார் (௯)

கடிதணைந்து வாகீசர் கழல்பணிய மற்றவர்தம்
அடிபணியா முன்பணியு மரசினெதி ரந்தணனார்
முடிவிறவுஞ் செயதேன்கொல் முன்பொழியுங் கருணைபுரி
வடிவுடையீ ரென்மனையில் வந்தருளிற் றென்னென்றார் (௧௦)

ஒருகுன்ற வில்லாரைத் திருப்பழனத் துள்ளிறைஞ்சி
வருகின்றோம் வழிக்கரையி னீர்வைத்த வாய்ந்தவளந்
தருகின்ற நிழற்றண்ணீர்ப் பந்தருங்கண் டத்தகைமை
புரிகின்ற வறம்பிறவுங் கேட்டணைந்தோ மெனப்புகல்வார் (௧௧)

ஆறணியுஞ் சடைமுடியா ரடியாருக் கீர்வைத்த
ஈறில்பெருந் தண்ணீர்ப்பந் தரினும்பே ரெழுதாதே
வேறொருபேர் முன்னெழுத வேண்டியகா ரணமென்கொல்
கூறுமென வெதிர்மொழிந்தார் கோதின்மொழிக் கொற்றவனார் (௧௨)

நின்றமறை யவர்கேளா நிலையழிந்த சிந்தையராய்
நன்றருளிச் செய்திலீர் நாணிலமண் பதகருடன்
ஒன்றியமன் னவன்சூழ்ச்சி திருத்தொண்டி னுறைப்பாலே
வென்றவர்தந் திருப்பேரோ வேறொருபே ரெனவெகுள்வார் (௧௩)

நம்மையுடை யவர்கழற்கீழ் நயந்ததிருத் தொண்டாலே
யிம்மையிலும் பிழைப்பதென வென்போல்வா ருந்தெளியச்
செம்மைபுரி திருநாவுக் கரசர்திருப் பெயரெழுத
வெம்மைமொழி யானகேட்க விளம்பினீ ரெனவிளம்பி (௧௪)

பொங்குகடற் கன்மிதப்பிற் போந்தேறு மவர்பெருமை
யங்கணரும் புவனத்தி னறியாதா ரியாருளரே
மங்கலமாந் திருவேடத் துடனின்றிவ் வகைமொழிந்தீர்
எங்குறைவீர் நீர்தாம்யா ரியம்புமென வியம்பினார். (௧௫)

திருமறையோ ரதுமொழியத் திருநாவுக் கரசரவர்
பெருமையறிந் துரைசெய்வார் பிறதுறையி னின்றேற
அருளுபெருஞ் சூலையினா லாட்கொள்ள வடைந்துய்ந்த
தெருளுமுணர் வில்லாத சிறுமையேன் யானென்றார். (௧௬)

---

(அ) நணித்து - அருகே. (௧௩) பதகர் - கீழ்மக்கள். உறைப்பு - அழுத்தம்.

அரசறிய வுரைசெய்ய வப்பூதி யடிகடாங்
கரகமல மிசைகுவியக் கண்ணருவி பொழிந்திழிய
உரைகுழறி யுடம்பெல்லா முரோமபுள கம்பொலியத்
தரையின்மிசை வீழ்ந்தவர்தஞ் சரணகம லம்பூண்டார். (௧௭)

மற்றவரை யெதிர்வணங்கி வாகீச ரெடுத்தருள
அற்றவர்க ளருநிதியம் பெற்றார்போ லருமறையோர்
முற்றவுளங் களிகூர முன்னின்று கூத்தாடி
யுற்றவிருப் புடன்சூழ வோடினார் பாடினார். (௧௮)

மூண்டபெரு மகிழ்ச்சியினான் முன்செய்வ தறியாதே
யீண்டமனை யகத்தெய்தி யில்லவர்க்கு மக்களுக்கும்
ஆண்டவர செழுந்தருளு மோகையுரைத் தார்வமுறப்
பூண்டபெருஞ் சுற்றமெலாங் கொடுமீளப் புறப்பட்டார். (௧௯)

மனைவியா ருடன்மக்கண் மற்றுமுள்ள சுற்றத்தோர்
அனைவரையுங் கொண்டிறைஞ்சி யாராத காதலுடன்
முனைவரையுள் ளெழுந்தருளு வித்தவர்தாண் முன்விளக்கும்
புனைமலர்நீர் தங்கண்மேற் றெளித்துள்ளும் பூரித்தார் (௨௦)

ஆசனத்திற் பூசனைக ளமர்வித்து விருப்பினுடன்
வாசநிறை திருநீற்றுக் காப்பேந்தி மனந்தழைப்பத்
தேசமுய்ய வந்தவரைத் திருவமுது செய்விக்கு
நேசமுற விண்ணப்பஞ் செய்யவவரு மதுநேர்ந்தார். (௨௧)

வேறு.

செய்தவ ரிசைந்த போது திருமனை யாரை நோக்கி
யெய்திய பேறு நம்பா லிருந்தவா றென்னே யென்று
மைதிகழ் மிடற்றி னான்ற னருளினால் வந்த தென்றே
யுய்ந்துமென் றுவந்து கொண்டு திருவமு தாக்க லுற்றார். (௨௨)

தூயநற் கறிக ளான வறுவகைச் சுவையா லாக்கி
யாயவின் னமுது மாக்கி யமுதுசெய் தருளத் தங்கள்
சேயவர் தம்மின் மூத்த திருநாவுக் கரசை வாழை
மேயபொற் குருத்துக் கொண்டு வாவென விரைந்து விட்டார். (௨௩)

நல்லதாய் தந்தை யேவ நானிது செயப்பெற் றேனென்
றொல்லையில் விரைந்து தோட்டத் துள்புக்குப் பெரிய வாழை
மல்லலங் குருத்தை யீரும் பொழுதினில் வாள ராவொன்
றல்லலுற் றழுங்கிச் சோர வங்கையிற் றீண்டிற் றன்றே. (௨௪)

கையினிற் கவர்ந்து சுற்றிக் கண்ணெரி காந்து கின்ற
பையரா வுதறி வீழ்த்துப் பதைப்புடன் பாந்தள் பற்றும்

---

(௧௯) ஓகை - சந்தோஷ சமாசாரம். (௨௫) பாந்தள் - வாழைக்குருத்து.

வெய்யவே கத்தால் வீழா முன்னம்வே கத்தா லெய்திக்
கொய்தவிக் குருத்தைச் சென்று கொடுப்பனென் றோடி வந்தான் (௨௫)

பொருந்திய விடவே கத்திற் போதுவான் வேக முந்த
வருந்தியே யணையும் போழ்து மாசுணங் கவர்ந்த தியார்க்கும்
அருந்தவ ரமுது செய்யத் தாழ்க்கயா னறையே னென்று
திருந்திய கருத்தி னோடுஞ் செழுமனை சென்று புக்கான். (௨௬)

எரிவிட முறையே யேறித் தலைகொண்ட வேழாம் வேகந்
தெரிவுற.வெயிறுங் கண்ணு மேனியுங் கருகித் தீந்து
விரியுரை குழறி யாவி விடக்கொண்டு மயங்கி வீழ்வான்
பரிகலக் குருத்தைத் தாயார் பால்வைத்துப் படிமேல வீழ்ந்தான். (௨௭)

தளர்ந்துவீழ் மகனைக் கண்டு தாயருந் தந்தை யாரும்
உளம்பதைத் துற்று நோக்கி யுதிரஞ்சோர் வடிவு மேனி
விளங்கிய குறியுங் கண்டு விடத்தினால வீந்தா னென்று
துளங்குத லின்றித் தொண்ட ரமுதுசெய் வதற்குச் சூழ்வார் (௨௮)

பெறலரும் புதல்வன் றன்னைப் பாயினுட் பெய்து மூடிப்
புறமனை முன்றிற் பாங்கோர் புடையினின் மறைத்து வைத்தே
யறவிது தெரியா வண்ண மமுதுசெய் விப்போ மென்று
விறலுடைத் தொண்ட னார்பால் விருப்பொடு விரைந்து வந்தார் (௨௯)

கடிதுவந் தமுது செய்யக் காலந்தாழ்க் கின்ற தென்றே
யடிசிலுங் கறியு மெல்லா மழகுற வணைய வைத்துப்
படியிலசீத் தொண்ட னார்முன் பணிந்தெழுந் தமுது செய்தெங்
குடிமுழு துய்யக் கொள்வீ ரென்றவர் கூறக் கேட்டு (௩௦)

அருந்தவ ரெழுந்து செல்ல வடியிணை விளக்கி வேறோர்
திருந்துமா சனத்தி லேற்றிப் பரிகலந் திருத்து முன்னா
இருந்துவெண் ணீறு சாத்தி யியல்புடை யிருவ ருக்கும்
பொருந்திய நீறு நல்கிப் புதல்வர்க்கு மளிக்கும் போழ்தில். (௩௧)

ஆதிநான் மறைநூல் வாய்மை யப்பூதி யாரை நோக்கிக்
காதல ரிவர்க்கு மூத்த சேயையுங் காட்டு முன்னே
மேதகு பூதி சாத்த வென்றலும் விளங்கு தன்மை
யாதுமொன் றுரையா ரிப்போ திங்கவ னுதவா னென்றார். (௩௨)

அவ்வுரை கேட்ட போதே யங்கண ரருளா லன்பர்
செவ்விய திருவுள் ளத்தோர் தடுமாற்றஞ் சேர நோக்கி
யிவ்வுரை பொறாதென் னுள்ள மென்செய்தா னிதற்கொன் றுண்டான்
மெய்விரித் துரையு மென்ன விளம்புவார் விதிர்ப்புற் றஞ்சி. (௩௩)

---

(௨௬) மாசுணம் - பாம்பு. (௨௮) துளங்குதல் - சலித்தல.

பெரியவ ரமுது செய்யும் பேறிது பிழைக்க வென்றோ
வருவதென் றுரையா ரேனு மாதவர் வினவ வாய்மை
தெரிவுற வுரைக்க வேண்டுஞ் சீலத்தாற் சிந்தை நொந்து
பரிவொடு வணங்கி மைந்தர்க் குற்றது பகர்ந்தா ரன்றே. (௩௪)

நாவினுக் கரசர் கேளா நன்றுநீர் புரிந்த வண்ணம்
யாவரித் தன்மை செய்தா ரென்றுமுன் னெழுந்து சென்றே
யாவிதீர் சவத்தை நோக்கி யண்ணலா ரருளும் வண்ணம்
பாவிசைப் பதிகம் பாடிப் பணிவிடம் பாற்று வித்தார். (௩௫)

தீவிட நீங்க வுய்ந்த திருமறை யவர்தஞ் சேயு
மேவிய வுறக்க நீங்கி விரைந்தெழு வானைப் போன்று
சேவுகைத் தவராட் கொண்ட திருநாவுக் கரசர் செய்ய
பூவடி வணங்கக் கண்டு புனிதநீ றளித்தா ரன்றே. (௩௬)

பிரிவுறு மாவி பெற்ற பிள்ளையைக் காண்பார் தொண்டி
னெறியினைப் போற்றி வாழ்ந்தார் நின்றவப் பயந்தார் தாங்கள்
அறிவரும் பெருமை யன்ப ரமுதுசெய் தருளு தற்குச்
சிறிதிடை யூறு செய்தா னிவனென்று சிந்தை நொந்தார். (௩௭)

ஆங்கவர் வாட்டந் தன்னை யறிந்துசொல் லரசர் கூட
ஓங்கிய மனையி லெய்தி யமுதுசெய் தருள வுற்ற
பாங்கினி லிருப்ப முந்நூல் பயின்மணி மார்பர் தாமுந்
தாங்கிய மகிழ்ச்சி யோடுந் தகுவன சமைத்துச் சார்வார். (௩௮)

புகழ்ந்தகோ மயத்தி னீராற் பூமியைப் பொலிய நீவித்
திகழ்ந்தவான் சுதையும் போக்கிச் சிறப்புடைத் தீப மேற்றி
நிகழ்ந்தவக் கதலி நீண்ட குருத்தினை விரித்து நீரான்
மகிழ்ந்துடன் விளக்கி யீர்வாய் வலம்பெற மன்னு வித்தார். (௩௯)

திருந்திய வாச நன்னீ ரளித்திடத் திருக்கை நீவும்
பெருந்தவர் மறையோர் தம்மைப் பிள்ளைக ளுடனே நோக்கி
யரும்புதல் வர்களு நீரு மமுதுசெய் வீரிங் கென்ன
விரும்பிய வுள்ளத் தோடு மேலவ ரேவல் செய்வார். (௪0)

மைந்தரு மறையோர் தாமு மருங்கிருந் தமுது செய்யச்
சிந்தைமிக் கில்ல மாதர் திருவமு தெடுத்து நல்கக்
கொந்தவிழ் கொன்றை வேணிக் கூத்தனா ரடியா ரோடும்
அந்தமி லாளி யாரங் கமுதுசெய் தருளி னாரே. (௪௧)

மாதவ மறையோர் செல்வ மனையிடை யமுது செய்து
காதனண் பளித்துப் பன்னாள் கலந்துட னிருந்த பின்றை

---

(௩௬) சேவுகைத்தவர் - இடபாரூடராகிய சிவபெருமான். (௩௯) வான்சுதை - வெள்ளிய சுண்ணச் சாந்து.

மேதகு நாவின் மன்னர் விளங்கிய பழன மூதூர்
நாதர்தம் பாதஞ் சேர்ந்து நற்றமிழ்ப் பதிகஞ் செய்தார். (௪௨)

அப்பூதி யடிக ளார்த மடிமையைச் சிறப்பித் தான்ற
மெய்ப்பூதி யணிந்தார் தம்மை விரும்புசொன் மாலை வேய்ந்த
இப்பூதி பெற்ற நல்லோ ரெல்லையி லன்பா லென்றுஞ்
செப்பூதி யங்கைக் கொண்டார் திருநாவுக் கரசர் பாதம். (௪௩)

இவ்வகை யரசின் பாத மேத்திமெய்ப் பொருளு நாளும்
அவ்வருந் தவர்பொற் றாளே யெனவுணர்ந் தடைவார் செல்லுஞ்
செவ்விய நெறிய தாகத் திருத்தில்லை மன்று ளாடு
நவ்வியங் கண்ணாள் பங்கர் நற்கழ னண்ணி னாரே. (௪௪)

மான்மறிக் கையர் பொற்றாள் வாகீச ரடைவாற் பெற்ற
மேன்மையப் பூதி யாராம் வேதியர் பாதம் போற்றிக்
கான்மலர்க் கமல வாவிக் கழனிசூழ் சாத்த மங்கை
நான்மறை நீல நக்கர் திருத்தொழி னவில லுற்றேன். (௪௫)

அப்பூதியடிகள்நாயனார் புராண முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - க,௮௩௨.



சோழநாட்டிலே, திங்களூரிலே, முதல்வருணத்திலே, களவு பொய் காமம் கோபம் முதலிய குற்றங்களைக் காய்ந்தவரும், இல்லறத்தில் ஒழுகுகின்றவரும் ஆகிய அப்பூதி நாயனார் என்பவர் ஒருவர் இருந்தார் அவர் திருநாவுக்கரசுசுவாமிகள் பெருமையைக் கேள்வியுற்று, அவரைத் தெய்வமாகக் கொண்டு தம்மனையிலுள்ள அளவைகளுக்கும், நிறைகோல்களுக்கும், பிள்ளைகளுக்கும், மற்றவைகளுக்கும் அவர் திருநாமத்தையே சாற்றியும், தண்ணீர்ப்பந்தர்கள், திருமடங்கள், குளங்கள் முதலியனவற்றை அரசுசுவாமிகள் அருமைத் திருநாமத்தால் அமைத்துக் கொண்டுமிருந்தார்

இப்படி இருக்குநாளில் திருநாவுக்கரசு சுவாமிகள் திருப்பழனம் என்னுஞ் சிவஸ்தலத்தைப் பணிந்து பணிசெய்து, மற்றப் பதிகளையும் வணங்க விரும்பி, திங்களூருக்குச் சமீபமாகப் போம்பொழுது,ஒரு தண்ணீர்ப் பந்தரை அடைந்து, அதிலே தமபெயர் எங்கும் வரையப்பட்டிருத்தலைக் கண்டு, அருகிருந்தவர்களை நோக்கி "இப்பந்தரை இப்பெயரிட்டு அமைத்தவர் யாவர" என்று வினவ; அவர்கள் "இப்பந்தரையும், மற்றுமுள்ள மடங்கள் முதலியவற்றையும் திருநாவுக்கரசு என்னும் பெயரால் அப்பூதியடிகள் என்பவர் அமைத்தார்" என்றார்கள். அதுகேட்டு அப்பர் சுவாமிகள் "இதற்குக் கருத்தென்னை" என்று, அவர்களை நோக்கி "அவர் எவ்விடத்தவர்" என்று கேட்டார். அவர்கள் "அவர் இப்பதியிலுள்ளவரே; இப்பொழுதுதான் வீட்டுக்குப் போனார்; அவர் வீடு தூரமல்ல; சமீபத்திலிருக்கின்றது" என்றார்கள். திருநாவுக்கரசு சுவாமிகள் அவ்விடத்தி

(௪௩) இப்பூதி - இந்தச் செல்வம். (௪௪) நவ்வியங்கண்ணாள் - மானபோன்ற கண்ணையுடைய சிவகாமித்தாயார். (௪௫) கான - மணமவீசும.

னின்றும் நீங்கி விரைவாக நடந்து, அப்பூதி நாயனார் வீட்டின் தலைக்கடை வாயிலைச் சேர்ந்தார அதையறிந்த அப்பூதியடிகளார் விரைவிற் சென்று சுவாமிகளை வணங்க, சுவாமிகளும் நாயனாரை வணங்கினார். நாயனார் நாவரசரை நோக்கி "தேவரீர் அடியேன் வீட்டிற்கு எதுபற்றி எழுந்தருளினீர்" என்ன, தாண்டகவேந்தர் "திருப்பழனத்தைத் தரிசித்து வரும் மார்க்கத்திலே நீர் அமைத்த தண்ணீர்ப்பந்தரைக் கண்டும், நீர்செய்துள்ள பிற அறங்களைக்கேட்டும் உம்மைக்காண வந்தோம்" என்றுசொல்லி "நீர்வைத்த தண்ணீர்ப்பந்தரில் உம்முடைய பெயரை எழுதாது வேறொரு பெயரை எழுத வேண்டிய காரணம் என்னை" என்று கேட்டார் அதற்கு அப்பூதிநாயனார் "நீர் நலலது அருளிச் செய்திலீர்; சமணர்களோடு பல்லவன் செய்த கொடுஞ் சூட்சிகளை யெல்லாம் திருத்தொண்டி னுறைப்பால் வென்ற ஒருவா பெயரோ வேறொருவர்பெயர்" என்று சினந்து, "திருத்தொண்டாலே இம்மையிலும் பிழைக்கலாம் என்று என்போன்றவர்களும் தெளியத் திருவருள்புரிந்த திருநாவுக்கரசர் திருப்பெயரை நான்எழுத, இவ்வெம்மை மொழியைககேட்க விளம்பினீர்; கருஙகல்லைத் தெப்பமாகக் கொண்டு கடலைக் கடந்த அவர் பெருமையை அறியாதவர் இவ்வுலகத்திலே யாருளர்; சிவவேடந்தாஙகி நின்று இவ்வாறு மொழிந்தீர்; நீர் எங்கே இருக்கின்றவர்" என்று கேட்க, திருநாவுககரசுசுவாமிகள் அப்பூதியடிகளாா மெய்ப்பத்தியை யறிநது "சமணப்படுகுழி விட்டு ஏறச் சிவபெருமான் சூலைநோய்தந்து ஆளப்பெற்ற சிறியேன் யான்" என்றார் உடனே அப்பூதிநாயனார் அருநிதியம் பெற்றார்போல் களித்துச் சுவாமிகளை வணஙக; அவரும் நாயனாரை எதிர் வணஙகி எடுத்தருள; அப்பூதியடிகள் அளவிலா ஆனந்தக் கடலாடிப் பாடி மனைவியும் மக்களையும் அழைததுக் கொண்டுவந்து, சுவாமிகளை வணங்கும் படி செய்தார் நாயனாரும், மற்றவர்களும் அவரை உள்ளே எழுந்தருளுவித்து அவாது திருவடிகளைச் சுத்த சலத்தால் விளக்கி, அச்சலத்தைத் தங்கள்மேல் தெளிதது உள்ளம் உவந்தார்கள். பின்பு சுவாமிகளை ஆசனத்தில்ருத்திப் பூசித்து "திருவமுது செய்தருளல் வேண்டும்" என்று வேண்ட, அவரும் உடன்பட்டார் நாயனார் பெருமான் நல்லமுதையும், கறியமுதுகளையும் சமைத்துத் தமது குமாராாகிய மூத்த திருநாவுக்கரசை வாழைக் குருதது அறுதது வரும்படி தோட்டத்திற் கனுப்பினார். அவர் தந்தைசொற்படி தோடடததுக்குசசென்று வாழைக்குருத்து அரியும்போது ஒருசர்ப்பம் அவரைத தீணடிக்கையிற் சுற்றிககொண்டது. மூத்த திருநாவுக்காசர் பாமபை யுதறிககீழே வீழ்ததுப் பதைபதைத்து 'விஷவேகம் தலைக்கேறி என்னைச சாயககுமுன் நான் வேகமாக ஓடி இக்குருத்தைக் கொடுப்பேன்' என்று அதிவேகமாக ஓடி வந்து குருததைதத தாயார் கையில் நீட்டித் தேகங கறுத்து, உரைதடுமாறிக் கீழேவிழுந்துஇறந்தார். அதைக்கண்ட மாதாபிதாககள் புத்திரரைக குறித்து வருந்தாமல் "ஐயோ! சுவாமிகள் இதையுணர்ந்தால் அமுது செய்யாரே" என்று வருந்திச் சவத்தை வீட்டின் ஒருபுறத்திலே பாயால் மறைத்து, வாக்கின்மன்னர்பால் அணைந்துபணிந்து "சுவாமீ! தேவரீர் திருவமுது செய்ய எழுந்தருளல் வேண்டும்" என்று வேண்டினார்கள். சுவாமிகள எழுந்து பாதஙகளைச் சுத்திசெய்து கொண்டு, வேறொரு ஆசனத்திலிருந்து, விபூதி யணிந்து, அப்பூதி நாயனார்க்கும், அவர் மனைவியார்கரும் விபூதி கொடுத்துப் புதல்வர்களுக்கு அளிக்கும்போது அப்பூதியாரை நோககி 'இவர்களுக்கு முன்னே விபூதிசாத்த உமது மூத்தகுமாரரை வருவியும்' என்றார். அதற்கு நாயனார் 'இப்போது இங்கே அவன் உதவான்' என்றார் அதைக்கேட்டதும் சுவாமிகள் சிவபிரான் திருவரு

ளால் தமது மனதிலே ஒரு தடுமாற்றம் உண்டாக, அப்பூதியடிகளாரைப் பார்த்து 'அவன் என்செய்தான்; உண்மையுரையும்' என்று வினவ, நாயனார் நிகழ்ந்ததைக் கூறினார். அதைககேட்ட அப்பர்சுவாமிகள் 'நீர்மொழிந்தது நன்றாயிருக்கின்றது; இப்படிச்செய்தவர் வேறியாவர்' என்று சொல்லி எழுந்து போய்ச் சவத்தைப் பார்த்துத் திருவருளை நினைந்து 'ஒன்று கொலாம்' என்னுந் திருப்பதிகம் பாடிப் பாம்பின் விஷத்தை நீக்கினார். விஷம் நீங்கவே மூத்த திருநாவுக்கரசர் உயிர் பெற்றெழுந்து தமது தெய்வமாகிய திருநாவுக்கரசு சுவாமிகளை வணங்க, அவர் திருநீறு கொடுத்தார். நாயனாரும், அவர் நாயகியாரும் தம்புத்திரர் உயிர் பெற்றதைக் குறித்துக் களிப்படையாமல் "சுவாமிகள் அமுது செய்வதற்குச் சிறிது இடையூறு செய்தான்" என்று வருந்தினாரகள அப்பர்சுவாமிகள் அதை யறிந்து அவர்களது வீட்டிற்குப் போய் அப்பூதிநாயனாரோடும், அவருடைய புதல்வர்களோடும் அமுது செய்து சிலநாளங்கிருந்து பின்னர் திருப்பழனத்திற்குப் பதிகம்பாடச் சென்றார். அவர் பதிகத்திலே சிறப்பிக்கப் பெற்ற அப்பூதிநாயனார் தமக்குள்ள யாவையும் திருநாவுக்கரசு சுவாமிகளாகவே பாவித்துச் சிலகாலம் வாழ்ந்து கொண்டிருந்து வளளிநாயகனும் வணங்குங் கனகசபாபதியின் திருவடியடைந்தார்

—∞∞—

# திருநீலநக்க நாயனார் புராணம்.



பூதத பங்கயப் பொகுட்டின்மேற் பொருகய லுகளுங்
காய்தத செந்நெலின் காடுசூழ் காவிரி நாட்டுச்
சாத்த மங்கையென் றுலகெலாம் புகழ்வுறுந் தகைத்தால்
வாய்த்த மங்கல மறையவா முதற்பதி வனப்பு. (௧)

நன்மை சாலுமப் பதியிடை நறுநுதன் மடவார்
மென்ம லாத்தடம் படியமற் றவருடன் விரவி
யன்ன மொண்டுறை யாடுவ பாடுவ சாமம்
பன்ம றைக்கிடை யுடன்பயிற் றுவபல பூவை. (௨)

ஆய்ந்த மெய்ப்பொரு ணீறென வளர்க்குமக் காப்பில்
எய்ந்த மூன்றுதீ வளாததுளா ரிருபிறப் பாளர்
நீந்து நல்லற நீர்மையின் வளாக்குமத் தீயை
வாய்ந்த கற்புட னுன்கென வளர்ப்பர்கண் மடவார் (௩)

சீல முய்த்தவத திருமறை யோர்செழு மூதூா
ஞால மிக்கநான் மறைப்பொருள் விளக்கிய நலத்தார்
ஆலம் வைத்தகண் டத்தவர் தொண்டாா மன்பர்
நீல நக்கனு ரென்பவர் நிகழ்ந்துளா ரானார். (௪)

---

(௧) உகளும - புரளும, வசிக்கும.

வேத வுள்ளுறை யாவன விரிபுனல் வேணி
நாதர் தம்மையு மவரடி யாரையு நயந்து
பாத வர்ச்சனை புரிவதும் பணிவது மென்றே
காத லாலவை யிரண்டுமே செய்கருத் துடையார். (௬)

மெய்த்த வாகம விதிவழி வேதகா ரணரை
நித்தல் பூசனை புரிந்தெழு நியமமுஞ் செய்தே
யத்த ரன்பருக் கமுதுசெய் விப்பது முதலா
வைத்தி றத்தன பணிகளு மேற்றெதிர் செய்வார். (௭)

ஆய செய்கையி னமருநா ளாதிரை நாளின்
மேய பூசனை நியதியை விதியினான் முடித்துத்
தூய தொண்டனார் தொலைவிலீ டயவந்தி யமர்ந்த
நாய னாரையு மருச்சனை புரிந்திட நயந்தார். (௮)

உறையு ளாகிய மனைநின்று மொருமையின் புறத்து
முறைமை யாலவர் பூசைக்கு முற்றவேண் டுவன
குறைவ றக்கொண்டு மனைவியார் தம்மொடுங் கூட
இறைவர் கோயில்வந் தெய்தின ரெல்லையி றவத்தோர். (௯)

அணைய வந்துபுக் கயவந்தி மேவிய வமுதின்
றுணைம லர்க்கழ றொழுதுபூ சனைசெய்யத் தொடங்கி
யிணைய நின்றங்கு வேண்டுவ மனைவியா ரேந்த
உணர்வின் மிக்கவ ருயர்ந்தவர்ச் சனைமுறை யுய்த்தார். (௧௦)

நீடு பூசனை நிரம்பியு மன்பினு ணிரம்பார்
மாடு சூழ்புடை வலங்கொண்டு வணங்கிமுன் வழுத்தித்
தேடு மாமறைப் பொருளினைத் தெளிவுற நோக்கி
நாடு மஞ்செழுத் துணர்வுற விருந்துமுன் னவின்றார். (௧௧)

தொலைவில் செய்தவத் தொண்டனார் சுருதியே முதலாங்
கலையி னுண்மையா மெழுத்தஞ்சுங் கணிக்கின்ற காலை
நிலையி னின்றுமுன் வழுவிட நீண்டபொன் மேருச்
சிலையி னார்திரு மேனிமேல் விழுந்ததோர் சிலம்பி. (௧௨)

விழுந்த போதிலங் கயனின்ற மனைவியார் விரைவுற்
றெழுந்த வச்சமோ டிளங்குழ வியில்விழுஞ் சிலம்பி
யொழிந்து நீங்கிட வூதிமுன் றுமிப்பவர் போலப்
பொழிந்த வன்பினா லூதிமேற் றுமிந்தனர் போக. (௧௩)

பதைத்த செய்கையான் மனைவியார் முற்செயப் பந்தஞ்
சிதைக்கு மாதவத் திருமறை யவர்கண்டு தங்கண்

(௧௨) துமிப்பவர் - உமிழ்பவர்.

புதைத்து மற்றிது செய்ததென் பொறியிலா யென்னச்
சுதைச்சி லம்பிமேல் விழவூதித் துமிந்தன னென்றார். (௧௩)

மனைவி யார்செய்த வன்பினை மனத்தினிற் கொள்ளார்
புனையு நூன்மணி மார்பர்தம் பூசனைத் திறத்தில்
இனைய செய்கையிங் கநுசித மாமென வெண்ணு
நினைவி னாலவர் தம்மைவிட் டகன்றிட நீப்பார் (௧௪)

மின்னெ னுஞ்சடை விமலர்மேல் விழுந்தநூற் சிலம்பி
தன்னை வேறொரு பரிசினாற் றவிர்ப்பது தவிர
முன்ன ணைந்துவந் தூதிவாய் நீர்ப்பட முயன்றா
யுன்னை யானினித் துறந்தன னீங்கென வுரைத்தார். (௧௫)

மற்ற வேலையிற் கதிரவன் மலைமிசை மறைந்தான்
உற்ற வேவலின் மனைவியா ரொருவழி நீங்க
முற்ற வேண்டுவ பழுதுதீர் பூசனை முடித்துக்
கற்றை வேணியார் தொண்டருங் கடிமனை புகுந்தார் (௧௬)

அஞ்சு முள்ளமோ டவர்மருங் கணைவுற மாட்டார்
நஞ்ச முண்டவர் கோயிலி னங்கையா ரிருந்தார்
செஞ்சொ னான்மறைத் திருநீல நக்கர்தா மிரவு
பஞ்சின் மெல்லணைப் பள்ளியிற் பள்ளிகொள் கின்றார். (௧௭)

பள்ளி கொள்பொழு தயவந்திப் பரமர்தாங் கனவில்
வெள்ள நீர்ச்சடை யொடுநின்று மேனியைக் காட்டி
யுள்ளம் வைத்தெமை யூதிமுன் றுமிந்தபா லொழியக்
கொள்ளு மிப்புறஞ் சிலம்பியின் கொப்புளென் றருள. (௧௮)

கண்ட வப்பெருங் கனவினை நனவெனக் கருதிக்
கொண்ட வச்சமோ டஞ்சலி குவித்துடன் விழித்துத்
தொண்ட னார்தொழு தாடினார் பாடினார் துதித்தார்
அண்ட நாயகர் கருணையைப் போற்றிநின் றழுதார். (௧௯)

போது போயிருள் புலர்ந்திடக் கோயிலுட் புகுந்தே
ஆதி நாயக ரயவந்தி யமர்ந்தவங் கணர்தம்
பாத மூலங்கள் பணிந்துவீழ்ந் தெழுந்துமுன் பரவி
மாத ராரையுங் கொண்டுதம் மனையின்மீண் டணைந்தார். (௨0)

பின்பு முன்னையிற் பெருகிய மகிழ்ச்சிவந் தெய்த
இன்பு றுந்திறத் தெல்லையில் பூசனை யியற்றி
அன்பு மேம்படு மடியவர் மிகவணை வார்க்கு
முன்பு போலவர் வேண்டுவ விருப்புடன் முடிப்பார். (௨௧)

(௧௩) பொறியிலாய - உணர்விலாதவனே. சுதை சிலம்பி - வெண்சிலம்பிப் பூச்சி.

அன்ன தன்மையி னமர்ந்தினி தொழுகுமந் நாளின்
மன்னு பூந்தராய் வருமறைப் பிள்ளையார் பெருமை
பன்னி வையகம் போற்றிட மற்றவர் பாதஞ்
சென்னி வைத்துடன் சேர்வுறும் விருப்பினிற் சிறந்தார் (௨௨)

பண்பு மேம்படு நிலைமையார் பயிலுமப் பருவ
மண்பெ ருந்தவப் பயன்பெற மருவுநற் பதிகள்
விண்பி றங்குநீர் வேணியார் தமைத்தொழ வணைவார்
சண்பை மன்னருஞ் சாத்தமங் கையில்வந்து சார்ந்தார். (௨௩)

நீடு சீர்த்திரு நீலகண் டப்பெரும் பாணர்
தோடு லாங்குழல் விறலியா ருடன்வரத் தொண்டர்
கூடு மப்பெருங் குழாத்தொடும் புகலியர் பெருமான்
மாடு வந்தமை கேட்டுள மகிழ்நீல நக்கர் (௨௪)

கேட்ட வப்பொழு தேபெரு மகிழ்ச்சியிற் கிளர்ந்து
தோட்ட லங்கலுங் கொடிகளும் புனைந்துதோ ரணங்க
ணாட்டி நீணடைக் காவண மிட்டுநற் சுற்றத்
தீட்ட முங்கொடு தாமுமுன் னெதிர்கொள வெழுந்தார் (௨௫)

சென்று பிள்ளையா ரெழுந்தரு ளுந்திருக் கூட்டம்
ஒன்றி யங்கெதிர் கொண்டுதங் களிப்பினு லொருவா
றன்றி யாடியும் பாடியுந் தொழுதெழுந் தயர்வார்
பொன்ற யங்குநீண் மனையிடை யுடன்கொடு புகுந்தார். (௨௬)

பிள்ளை யாரெழுந் தருளிய பெருமைக்குத் தக்க
வெள்ள மாகிய வடியவர் கூட்டமும் விரும்ப
உள்ள மாதர வோங்கிட வோங்குசீர்க் காழி
வள்ள லாரைத்தம் மனையிடை யமுதுசெய் வித்தார். (௨௭)

அமுது செய்தபின் பகலவன் மேல்கட லணையக்
குமுத வாவியிற் குளிர்மதிக் கதிரணை போதில்
இமய மங்கைதன் றிருமுலை யமுதுண்டா ரிரவுந்
தமது சீர்மனைத் தங்கிட வேண்டுவ சமைத்தார். (௨௮)

சீல மெய்த்திருத் தொண்டரோ டமுதுசெய் தருளி
ஞால முய்ந்திட நாயகி யுடனம்பர் நண்ணுங்
கால முற்பெற வழுதவ ரழைத்திடக் கடிது
நீல நக்கனார் வந்தடி பணிந்துமுன் னின்றார். (௨௯)

நின்ற வன்பரை நீலகண் டப்பெரும் பாணர்க்
கின்று தங்கவோ ரிடங்கொடுத் தருளுவீ ரென்ன

(௨௨) பூந்தராய் வருமறைப் பிள்ளையார் - சீகாழியில் அவதாரஞ் செய்த திருஞானசம்பந்தசுவாமிகள்.

நன்று மின்புற்று நடுமனை வேதியின் பாங்கர்ச்
சென்று மற்றவர்க் கிடங்கொடுத் தனர்திரு மறையோர். (௩0)

ஆங்கு வேதியி லருதசெந் தீவலஞ் சுழிவுற்
றோங்கி முன்னையி லொருபடித் தன்றியே யொளிரத்
தாங்கு நூலவர் மகிழ்வுறச் சகோடயாழ்த் தலைவர்
பாங்கு பாணியா ருடனரு ளாற்பள்ளி கொண்டார் (௩௧)

தங்கு லிற்பள்ளி கொண்டபின் கவுணியர்க் கிறைவர்
அங்கு நின்றெழுந் தருளுவா ரயவந்தி யமர்ந்த
திங்கள் சூடியை நீலநக்க ரைச்சிறப் பித்தே
பொங்கு செந்தமிழ்த் திருப்பதி கந்தொடை புனைந்தார். (௩௨)

பதிக நாண்மலர் கொண்டுதம் பிரான்கழல் பரவி
யதிக நண்பினை நீலநக் கருக்களித் தருளி
யெதிர்கொ ளும்பதி களிலெழுந் தருளினா ரென்றும்
புதிய செந்தமிழ்ப் பழமறை மொழிந்தபூ சுரனார். (௩௩)

பிள்ளை யாரெழுந் தருளவத் தொண்டர்தாம் பின்பு
தள்ளு மன்புடன் கேண்மையுந் தவிர்ப்பில வெனினும்
வள்ள லார்திரு வருளினை வலியமாட் டாமை
யுள்ள மங்குடன் போக்கிமீண் டொருவகை யிருந்தார் (௩௪)

மேவு நாளிலவ் வேதியர் முன்புபோல் விரும்புந்
தாவில் பூசனை முதற்செய்கை தலைத்தலை சிறப்பச்
சேவின் மேலவர் மைந்தராந் திருமறைச் சிறுவர்
பூவ டித்தலம் பொருந்திய வறிவொடும் பயின்றார். (௩௫)

சண்பை யாளியார் தாமெழுந் தருளுமெப் பதியு
நண்பு மேம்பட நாளிடைச் செலவிட்டு நண்ணி
வண்பெ ரும்புக ழவருடன் பயின்றுவந் துறைந்தார்
திண்பெ ருந்தொண்ட ராகிய திருநீல நக்கர் (௩௬)

பெருகு காதலிற் பின்னெடு நாண்முறை பிறங்க
வருபெ ருந்தவ மறையவர் வாழிசீ காழி
யொருவர் தந்திருக் கல்லியா ணத்தினி லுடனே
திரும ணத்திறஞ் சேவித்து நம்பர்தாள் சேர்ந்தார். (௩௭)

தருதொ ழிற்றிரு மறையவர் சாத்தமங் கையினில்
வருமு தற்பெருந் திருநீல நக்கர்தாள் வணங்கி

(௩௰) வேதி - ஓமகுண்டம்.

யிருபி றப்புடை யந்தண ரேறுயர்த் தவர்பால்
ஒருமை யுய்த்துணர் நமிநந்தி யார்தொழி லுரைப்பாம். (௩௮)

திருநீலநக்கநாயனார் புராண முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - கஅ௭௦.



சோழநாட்டிலே, சாத்தமங்கைஎன்னும் ஊரிலே, வேதியர்குலத்திலே நாள்தோறும் சிவபூசைசெய்கின்றவரும், சிவனடியார்களைத் திருவமுது செய்விப்பவரும் ஆகிய திருநீலநக்கநாயனார் என்பவர் ஒருவர் இருந்தார். அவர் ஒருநாள் திருவாதிரை நட்சத்திரத்திலே விதிப்படி சிவபூசை செய்து முடித்து, அத்திருப்பதியிலே, அயவந்தி என்னும் ஆலயத்திலே வீற்றிருந்தருளுஞ் சிவபிரானை அர்ச்சிக்க விரும்பி, மனைவியாரோடு அவ்வாலயத்துக்குப்போய்ச் சந்நிதானத்திலே விழுந்துவணங்கி,அருச்சித்து, பஞ்சாக்ஷரத்தை ஜபித்துக் கொண்டிருக்கும்போது, ஒரு சிலம்பி மேலே நின்றும் வழுவிச் சிவலிங்கத்தின் மேல் விழுந்தது அதைக்கண்ட நாயனார் மனைவியார் குழந்தை மேல் விழுஞ் சிலம்பி நீங்கிட ஊதித்துமிப்பவரைப்போல, எழும்பேரன்பால் அச்சிலம்பியை ஊதித்துமிந்தார் திருநீல நக்கநாயனார் அதைப் பார்த்துப் பதைபதைத்துத் தங்கண்களைப் புதைத்து "உணர்விலலாதவளே! இப்படி என்செய்தாய்" என்ன; மனைவியார் "சிலம்பி திருமேனி மீது விழுந்தபடியால் ஊதித் துமிந்தேன்" என்றார். அதுகேட்ட நாயனார் நாயகியார் அன்பின் செய்கையை மதியாது அது அநுசிதம் எனக்கருதி அவரைநோக்கி "நீ சிவலிங்கத் திருமேனி மேல் விழுந்த சிலம்பியை வேறொருபரிசினால் ஒழிக்காமல், முன்னணைந்து ஊதி வாய்நீர்பட்டத் துமிந்தாய்; அதனால் நான் உன்னைத் துறந்தேன்" என்றார் அதுகாலை சூரியன் அஸ்தமயனமானான் அம்மையார் நாயகன் ஏவல்படி ஒருவழிநீங்க; நாயனார்பூசனை முடித்து வீட்டிற்குத் திரும்பினார். கற்பரசியார் வீட்டிற்குப்போக அஞ்சி ஆலயத்திலே யிருந்தார். அன்றிரவு அயவந்திநாதர் நாயனார் சொப்பனத்திலே தோன்றித் தமது திருமேனியைக் காட்டி "உன் மனைவி மெய்யன்போடு ஊதித் துமிந்த இடமொழிய இப்புறம் சிலம்பியின் கொப்புளம் இருக்கின்றது" என்று அருளிச்செய்தார். உடனே நாயனார் விழித்து எழுந்து பணிந்துபாடி ஆனந்தக்கூத்தாடித் திருவருளைப் போற்றியழுதார். பொழுது விடிந்ததும் புண்ணியர் திருக்கோயிலுக்குப் போய்ச் சுவாமி தரிசனஞ் செய்து, அங்கேயிருந்த மனைவியாரை யழைத்துக் கொண்டு வீட்டிற்கு வந்து, தமது திருத்தொண்டை முன்னிலும் பெரும் பற்றுடையவராய்ச் செய்து கொண்டிருந்தார்.

பின்பு திருநீலநக்கநாயனார் திருஞானசம்பந்த சுவாமிகள் அருட்பெருமையைக் கேள்வியுற்று அவரைத் தரிசிக்க வேண்டும் என்னும் பேரவா உடையவராய் வாழுநாளில், ஒருநாள் ஞானசம்பந்தப் பெருமான் அயவந்தியப்பரைத் தரிசித்துப் பதிகம்பாடிச் சாத்தமங்கைக்கு எழுந்தருளினார். அவர் வருதலைக் கேள்வியுற்றுத் திருநீலநக்கநாயனார் ஊரையலங்கரித்து, சுவாமிகளை எதிர்கொண்டுவணங்கி, தம் இல்லத்துக்கு அழைத்துக்கொண்டு போய் அமுது செய்வித்தார்; அன்றிரவும் ஆளுடையபிள்ளையாரை அமுது செய்வித்து வணங்கிநிற்க, சுவாமிகள் அவரை நோக்கி "திருநீலகண்டப் பெரும்பாணர் இன்றுதங்கவோரிடங் கொடும்" என்றுசொல்ல; நாயனார் மனமகிழ்ந்து மனையின் மத்தியிலுள்ள வேதிகையின் பக்கத்திலே யவருக்குத் தங்கு

மிடங் கொடுத்தார் அங்கே வேதிகையிலுள்ளநித்தியாக்கினி வலஞ்சுழித்து ஓங்கி முன்னிலும் பிரகாசமாக விளங்கவும், திருநீலநக்க நாயனார் மகிழவும் பெரும்பாணர் விறலியாரோடு பள்ளிகொண்டார். சூரியன் உதயமானபின் திருஞானசம்பந்த சுவாமிகள் அயவந்திக்குப்போய், திருநீலநக்கரைச் சிறப்பித்துப் பதிகம்பாடிச் சிலநாள் அங்கிருந்து நாயனாருக்கு விடைகொடுத்து, அத்தலத்தினின்றும் நீங்கினார் நாயனார் ஞானசம்பந்த வள்ளலார்மேல் தமக்குள்ள பேரன்பு அவரைத்தொடர்ந்து செல்லும்படி பிடர்பிடித் துந்தியதாயினும், அவர் ஆணையை வலியமாட்டாமையால் தம் ஊரிலேயிருந்துகொண்டு அவ்வருளாளர் திருவடியை இடையறாது தியானித்துக்கொண்டும், இடைநாட்களில் கௌணியர் பெருமான் எழுந்தருளும் திருப்பதிகளுக்குப்போய் அவரைத் தரிசித்துக்கொண்டும் இருந்தார் இப்படிப் பலநாள் சென்றபின்னர் திருநீலநக்கநாயனார் திருஞானசம்பந்த சுவாமிகளுடைய திருமணத்தைச் சேவித்துச் செந்தமிழ்க்நாவனைத் தந்த சந்திரசேகரர் சேவடி சேர்ந்தார



# நமிநந்தியடிகணாயனார் புராணம்.



வையம் புரக்குந் தனிச்செங்கோல் வளவர் பொன்னித் திருநாட்டுச்
செய்ய கமலத் தடம்பணையுஞ் செழுநீர்த் தடமும் புடையுடைத்தாய்ப்
பொய்தீர் வாய்மை யருமறைநூல் புரிந்த சீலப் புகழதனால்
எய்தும் பெருமை யெணடிசையு மேறா * ரேமப் பேறூரால். (௧)

மாலை பயிலுந் தோரணங்கண மருங்கு பயிலு மணிமறுகு
வேலை பயிலும் புனல்பருகு மேகம் பயிலு மாடங்கள்
சோலை பயிலும் குளிர்ந்தவிருள் சுரும்பு பயிலு மரும்பூகங்
காலை பயிலும வேதவொலி கழுநீர் பயிலுஞ் செழுநீர்சசெய் (௨)

பணையில் விளைந்த வெண்ணெல்லின் பரப்பின் மீது படச்செய்ய
துணர்மென் கமல மிடையிடையே சுடர்விட் டெழுந்து தோன்றுவன
புணர்வெண் புரிநூ லவர்வேள்விக் களத்திற் புனைந்த வேதிகைமேன்
மணல்வெண் பரப்பி னிடையிடையே வளர்த்த செந்தீ மானுமால (௩)

பெருமை விளங்கு மப்பதியிற் பேணு நீற்றுச் சைவநெறி
யொருமை நெறிவா ழந்தணர்த மோங்கு குலத்தி னுள்வந்தார்
இருமை யுலகு மீசர்கழ லிறைஞ்சி யேத்தப் பெற்றதவத்
தருமை புரிவார் நமிநந்தி யடிக ளென்பா ராயினார். (௪)

வாய்மை மறைநூற் சீலத்தால் வளர்க்குஞ் செந்தீ யெனத்தகுவார்
தூய்மைத் திருநீற் றடைவேமெய்ப் பொருளென் றறியுந் துணிவினார்

(௧) பொய்தீர் வாய்மை - சிறந்தமெய்ம்மை. * ஏமப் பேறூர் - திருவாரூர்க்குத் தெற்கே ஐந்துமைமயில் தூரத்திலுள்ளது.

சாம கண்டர் செய்யகழற் றலைப்பட் டொழுகுந் தன்மைநிலை
யாம விரவும் பகலுமுணர் வொழியா வின்ப மெய்தினர். (௫)

அவ்வூர் நின்றுந் திருவாரூ ரதனை யடைவா ரடியார்மேல்
வெவ்வூ றகற்றும் பெருமான்றன் விரைசூழ் மலர்த்தாள் பணிவுறுதல்
எவ்வூ தியமு மெனக்கொள்ளு மெண்ண முடையார் பலநாளுந்
தெவ்வூ ரெரித்த வரைச்சிலையார் திருப்பா தங்கள் வணங்கினர். (௬)

செம்பொற் புற்றின் மாணிக்கச் செழுஞ்சோ தியைநேர் தொழுஞ்சீலந்
தம்பற் றாக நினைந்தணைந்து தாழ்ந்து பணிந்து வாழ்ந்துபோந்
தம்பொற் புரிசைத் திருமுன்றி லணைவார் பாங்கோ ரரனெறியி
னம்பர்க் கிடமாங் கோயிலினுட் புக்கு வணங்க நண்ணினர். (௭)

நண்ணி யிறைஞ்சி யன்பினு னயப்புற் றெழுந்த காதலுடன்
அண்ண லாரைப் பணிந்தெழுவா ரடுத்த நிலைமைக் குறிப்பினாற்
பண்ணுந் தொண்டின் பாங்குபல பயின்று பரவி விரவுவார்
எண்ணி தீப மேற்றுவதற் கெடுத்த கருத்தி னிசைந்தெழுந்தார். (௮)

எழுந்த பொழுது பகற்பொழுதங் கிறங்கு மாலை யெய்துதலுஞ்
செழுந்தண் பதியி னிடையப்பாற் செல்லிற் செல்லும் பொழுதென்ன
ஒழிந்தங் கணைந்தோர் மனையில்விளக் குறுநெய் வேண்டி யுள்புகலும்
அழிந்த நிலைமை யமணர்மனை யாயிற் றங்க ணவருரைப்பார். (௯)

கையில் விளங்கு கனலுடையார் தமக்கு விளக்கு மிகைகாணு
நெய்யிங் கில்லை விளக்கெரிப்பீ ராகி னீரை முகந்தெரித்தல்
செய்யு மென்று திருத்தொண்டர்க் குரைத்தார் தெளியா தொருபொருளைப்
பொய்யு மெய்யு மாமென்னும் பொருண்மேற் கொள்ளும் புரைநெறியார். (௰)

அருகர் மதியா துரைத்தவுரை யாற்ற ராகி யப்பொழுதே
பெருக மனத்தில் வருத்தமுடன் பெயர்ந்து போந்து பிறையணிந்த
முருகு விரியு மலர்க்கொன்றை முடியார் கோயின் முன்னெய்தி
யுருகு மன்பர் பணிந்துவிழ வொருவாக் கெழுந்த துயர்விசும்பில். (௧௧)

வந்த கவலை மாற்றுமினி மாறா விளக்குப் பணிமாற
இந்த மருங்கிற் குளத்துநீர் முகந்து கொடுவந் தேற்றுமென
அந்தி மதிய மணிந்தபிரா னருளா லெழுந்த மொழிகேளாச்
சிந்தை மகிழ்ந்து நமிநந்தி யடிகள் செய்வ தறிந்திலரால். (௧௨)

சென்னி மிசைநீர் தரித்தபிரா னருளே சிந்தை செய்தெழுவார்
நன்னீர்ப் பொய்கை நடுப்புக்கு நாதர் நாம நவின்றேத்தி

(௬) வெவ்வூறு - கொடியதுன்பம். தெவ்வூர் - முப்புரங்களை. (௭) புரிசை - மதில்சூழ்ந்த. (௰) பொய்யும் மெய்யும் ஆம் எனனும் - இல்லதும் உள்ளதும் ஆகும் எனனும் (ஒருபொருளையே அஸ்தி எனவும், நாஸ்தி எனவுஞ் சொல்லல்.)

யந்நீர் முகந்து கொண்டேறி யப்பர் கோயி லடைந்தகலுண்
முந்நீ ருலக மதிசயிப்ப முறுக்குந் திரிமே னீர்வார்த்தார். (கங)

சோதி விளக்கொன் றேற்றுதலுஞ் சுடர்விட் டெழுந்த துநோக்கி
யாதி முதல்வ ரரனெறியார் கோயி லடைய விளக்கேற்றி
யேத நினைந்த வருகந்த ரெதிரே முதிருங் களிப்பினுட
னாத ரருளாற் றிருவிளக்கு நீரா லெரித்தார் நாடறிய. (கச)

நிறையும் பரிசு திருவிளக்கு விடியு மளவு நின்றெரியக்
குறையுந் தகளி களுக்கெல்லாங் கொள்ள வேண்டு நீர்வார்த்து
மறையின் பொருளை யருச்சிக்கு மனையி னியதி வழுவாமல்
உறையும் பதியி னவ்விரவே யணைவா பணிவுற் றொருப்பட்டார். (கரு)

இரவு சென்று தம்பதியி லெய்தி மனைபுக் கென்றும்போல்
விரவி நியமத் தொழின்முறையே விமலர் தம்மை யருச்சித்துப்
பரவி யமுது செய்தருளிப் பள்ளி கொண்டு புலர்காலை
யரவ மணிவார் பூசையமைத் தாரூர் நகரின் மீண்டணைந்தார். (கசு)

வந்து வணங்கி யரனெறியார் மகிழுங் கோயில் வலங்கொண்டு
சிந்தை மகிழப் பணிந்தெழுந்து புறம்பு முள்ளுந் திருப்பணிகள்
முந்த முயன்று பகலெல்லா முறையே செய்து மறையவனார்
அந்தி யமைத்த வரியவிளக் கெங்கு மேற்றி யடிபணிவார். (கஎ)

பண்டு போலப் பலநாளும் பயிலும் பணிசெய் தவரொழுகத்
தண்டி யடிக ளாலமணர் கலக்கம் விளைந்து சாரவிலமண்
குண்ட ரழிய வேழுலகுங் குலவும் பெருமை நிலவியதால்
அண்டர் பெருமான் றொண்டர்கழ லமரர் பணியு மணியாரூர். (கஅ)

நாத மறைதேர் நமிநந்தி யடிக ளார்நற் றொண்டாகப்
பூத நாதர் புற்றிடங்கொள் புனிதர்க் கமுது படிமுதலா
நீதி வளவன் றான்வேண்டு நிபந்தம் பலவு மரியணையின்
மீது திகழ விருந்தமைத்தான் வேதா கமநூல் விதிவிளங்க. (க௯)

வென்றி விடையார் மதிச்சடையார் வீதி விடங்கப் பெருமாடாம்
என்றுந் திருவா ரூராளு மியல்பின் முறைமைத் திருவிளையாட்
டொன்றுஞ் செயலும் பங்குனியுத் தரமாந் திருநா ளுயர்சிறப்பு
நின்று விண்ணப் பஞ்செய்த படிசெய் தருளு நிலைபெற்றார். (உ0)

இன்ன பரிசு திருப்பணிகள் பலவுஞ் செய்தே யேழுலகு
மன்னும் பெருமைத் திருவாரூர் மன்ன ரடியார் வழிநிற்பார்
அன்ன வண்ணந் திருவிளையாட் டாடி யருள வெந்நாளு
நன்மை பெருக நமிநந்தி யடிக டொழுதார் நாமுய்ய. (உக)

தேவர் பெருமா னெழுச்சிதிரு மணலிக் கொருநா ளெழுந்தருள
யாவ ரென்னா துடன்சேவித் தெல்லாக் குலத்தி லுள்ளோரு
மேவ வன்பர் தாமுமுடன் சேவித் தணைந்து விண்ணவர்தங்
காவ லாள ரோலக்க மங்கே கண்டு களிப்புற்றார். (௨௨)

பொழுது வைகச் சேவித்துப் புனிதர் மீண்டு கோயில்புகத்
தொழுது தம்மூர் மருங்கணைந்து தூய மனையுட் புகுதாதே
யிழுது மிருள்சே ரிரவுபுறங் கடையிற் றுயில வில்லத்து
முழுதுந் தருமம் புரிமனையார் வந்துட் புகுத மொழிகின்றார். (௨௩)

திங்கள் முடியார் பூசனைகண் முடித்துச் செய்யுங் கடன்முறையால்
அங்கி தனைவேட் டமுதுசெய்து பள்ளி கொள்வீ ரெனவவர்க்குத்
தங்கள் பெருமான் றிருமணலிக் கெழுச்சி சேவித் துடனண்ண
எங்கு மெல்லா ரும்போத விழிவு தொடக்கிற் றெனையென்று. (௨௪)

ஆத லாலே குளித்தடுத்த தூய்மை செய்தே யகம்புகுந்து
வேத நாதர் பூசையினைத் தொடங்க வேண்டு மதற்குநீ
சீத நன்னீர் முதலான கொண்டிங் கணைவா யெனச்செப்பக்
காதன் மனையார் தாமுமவை கொணரு மதற்குக் கடிதணைந்தார். (௨௫)

ஆய பொழுது தம்பெருமா னருளா லேயோ மேனியினில்
ஏயு மசைவி னயர்வாலோ வறியோ மிறையுந் தாழாதே
மேய வுறக்கம் வந்தணைய விண்ணோர் பெருமான் கழனினைந்து
தூய வன்பர் துயில்கொண்டார் துயிலும் பொழுது கனவின்கண். (௨௬)

மேன்மை விளங்குந் திருவாரூர் வீதி விடங்கப் பெருமாடா
மான வன்பர் பூசனைக்கு வருவார் போல வந்தருளி
ஞான மறையோ ராரூரிற் பிறந்தா ரெல்லா நங்கணங்கள்
ஆன பரிசு காண்பாயென் றருளிச் செய்தங் கெதிரகன்றார். (௨௭)

ஆதி தேவ ரெழுந்தருள வுணர்ந்தா ரிரவர்ச் சனைசெய்யா
தேத நினைந்தே னெனவஞ்சி யெழுந்த படியே வழிபட்டு
மாத ரார்க்கும் புகுந்தபடி மொழிந்து விடியல் விரைவோடு
நாத னார்தந் திருவாரூர் புகுத வெதிரங் நகர்காண்பார். (௨௮)

தெய்வப் பெருமா டிருவாரூர்ப் பிறந்து வாழ்வா ரெல்லாரு
மைவைத் தனைய மணிகண்டர் வடிவே யாகிப் பெருகொளியா
மொய்வைத் தமர்ந்த மேனியராம் பரிசு கண்டு முடிகுவித்த
கைவைத் தஞ்சி யவனிமிசை விழுந்து பணிந்து களிசிறந்தார். (௨௯)

---

(௨௨) ஓலக்கம் - உற்சவக்காட்சி. (௨௩) பொழுதுவைக - மாலைப்பொழுது நீங்க; நெடுநேரம் எனினுமாம். இழுதுமிருள் - மைக்குழம்பு போன்ற இருள்,

படிவ மாற்றிப் பழம்படியே நிகழ்வுங் கண்டு பரமர்பால்
அடியேன் பிழையைப் பொறுத்தருள வேண்டு மென்று பணிந்தருளாற்
குடியுந் திருவா ரூரகத்துப் புகுந்து வாழ்வார் குவலயத்து
நெடிது பெருகுந் திருத்தொண்டு நிகழச் செய்து நிலவுவார். (௩௦)

நீறு புனைவா ரடியார்க்கு நெடுநா ணியதி யாகவே
வேறு வேறு வேண்டுவன வெல்லாஞ் செய்து மேவுதலால்
ஏறு சிறப்பின் மணிப்புற்றி லிருந்தார் தொண்டர்க் காணியெனும்
பேறு திருநா வுக்கரசர் விளம்பப் பெற்ற பெருமையினார் (௩௧)

இன்ன வகையாற் றிருப்பணிக ளெல்லா வுலகுந் தொழச்செய்து
நன்மை பெருகு நமிநந்தி யடிக ணயமார் திருவீதிச்
சென்னி மதியுந் திருநதியு மலைய வருவார் திருவாரூர்
மன்னர் பாத நீழன்மிகும வளர்பொற் சோதி மன்னினார். (௩௨)

நாட்டா ரறிய முன்னாளி னன்றா ளுலந்த வைம்படையின்
பூட்டார் மார்பிற் சிறியமறைப் புதல்வன றன்னைப் புக்கொளியூர்த்
தாட்டா மரையின் மடுவினகட் டனிமா முதலை வாய்நின்று
மீட்டார் கழல்க ணினைவாரை மீளா வழியின் மீட்பனவே. (௩௩)

நமிநந்தியடிகள் நாயனார் புராண முற்றிற்று.

ஆ திருவிருத்தம் க, ௬௦அ

திருநின்றசருக்கம முற்றுப் பெற்றது.

## முதற்காண்ட முற்றிற்று.



காவிரிநாட்டிலே, ஏமப்பேறு என்னும் ஊரிலே, பிராமண வருணத்திலே சிவபத்தியிற் சிறந்த நமிநந்தியடிகணாயனார் என்பவர் ஒருவர் இருந்தார். அவர் பலநாளுந்திருவாரூருக்குச் சென்று சுவாமி தரிசனஞ் செய்துவந்தார் வருங்காலை ஒருநாள் புறப்பட்டுக்கொண்ட புனித மூர்த்தியைப் பணிந்து போந்து, திருமுன்றிலையடைந்து, அருகேயுள்ள அரநெறியென்னும் ஆலயத்தினுள்ளேபோய் அம்பிகைபாகரை வணங்கிப்பல திருத்தொண்டுகள் செய்து, அங்கே அளவிலாத தீபங்கள் ஏற்ற விரும்பி எழுந்து, மாலைக்காலமாயிருந்தபடியால் அப்பால் செல்லாது அருகேயிருந்த ஒரு வீட்டுக்குள்ளே நுழைந்து திருவிளக்கேற்ற நெய்கேட்டார் அவ்வீட்டிலுள்ளார் சமணர்களாயிருந்தமையால், அவர்கள் அடியவரை நோக்கி "கையிலேகனலுடைய கடவுளுக்கு விளக்கு மிகையன்றோ; இங்கு நெய்யில்லை; சலத்தை முகந்து விளக்கு எரியும்" என்றார்கள் நாயனார்பெருமான் அவ்வுரையை ஆற்றாராகி, உடனே மனவருத்தத்தோடு திரும்பிப்போய்ச் சிவசந்நிதி யடைந்து பரமசிவனை வணங்கி விழுந்தார். அதுகாலை "நமிநந்தீ! கவலையையொழி; இதற்கு அருகேயுள்ள குளத்து நீரைக் கொணர்ந்து விளக்கேற்று" என்று ஒரு அசரீரி சிவபிரான் திருவருளால் எழுந்தது. அதைக்கேட்ட நாயனார் அளவிலா ஆனந்தமடைந்து, எழுந்துபோய்க் குளத்திலே இறங்கி நீரை

முகந்துகொண்டு வந்து அகலிலே வார்த்து விளக்கேற்றினார். அது பிரகாச மாக எரிந்தது. எரியவே அடியவர் பெரிதும் மகிழ்ந்து, சமணர்கள் நாணும் படி அவ்வாலய முழுவதும் தண்ணீரால விளககெரித்தார். திருவிளககு விடியுமளவும் நின்றெரிய நீர்குறையுந் தகழிகளுக்கெல்லாம் நீரைவார்த்து, அவ்விரவே தம்மூருக்குச் சென்று, சிவபிரானை அருச்சித்து, திருவமுது செய்து, பள்ளிகொண்டு, விடியற்காலை எழுநது சிவபூசைசெய்து, திருவ ரூரையடைந்து, அரநெறியப்பரை வணங்கிப பகலிலே பலதிருப்பணிகள் செய்து, மாலையிலே தண்ணீரால் விளககேற்றினார். நாடோறும் இங்ஙனம் செய்து வருவாராயினார்.

இப்படிச்செய்து வருநாளில் தண்டியடிகள்நாயனாரால் சமணர்கள் அழி ந்தார்கள். திருவாரூர் சிவமயமாக விளங்கியது. சோழமகாராஜன் நமிநந்தி யடிகளாரே அத்தியக்ஷராக விருக்கத் தியாகராசப் பெருமானாக்கு அமுது படி முதலாய நிபந்தங்கள் பலவற்றையும் அமைத்தான். நாயனா வீதிவிடங கப் பெருமானுக்குப் பங்குனிமதியிலே மகோற்சவஞ் செய்வித்தார். ஒரு நாள் சிவநாதன் திருமணலூருக் கெழுந்தருள ; எலலாக் குலத்தவர்களுஞ சேவித்துப்போனாகள். அவர்களோடு நமிநந்தியடிகளாரும் சேவிததுச சென்று, சுவாமி திருவோலக்கத்தைத் தரிசித்து, ஆனநதமுறறார் பொழுது போக, சிவபெருமான் திருமணலூரினின்றுந் திருவாரூருககு எழுந்தருள; நாயனார் நாயகரை வணங்கித் தமமூரையடைநது, மனைககுள் நுழையாது, புறக்கடையிலே துயின்றார். மனைவியார் வநது வீட்டினுள்ளே வரும்படி கேட்டார் அதற்கு அடிகளார் "இன்று இறைவனார் திருமணலிக்கு எழுந் தருளினார்; எல்லாச சாதியாருடன் நானுமசேவிததுபபோனேன்; அதனால தீட்டுண்டாயிற்று; பிராயச்சித்தஞ் செயல வேணடும ; ஜலங்கொணடுவா" என்றார். அதைககேட்ட கற்பரசியாா ஜலங்கொணடுவர வீட்டிற்குப் போனார். அதற்குள் சிவபிரான் திருவருளால அடியவருககு நிததிரை வந் தது. வன்மீகநாதர் அவருக்குச் சொப்பனததிலே தோனறி "திருவாரூரில் பிறந்தவர்கள் எலலாரும் நமது கணஙகள்; அதை நீகாணபாய்" என்று திரு வாய்மலர்ந்தருளி மறைந்தருளினார் உடனே நாயனாபெருமான் துயில நீங்கி "நான் நினைத்தது குற்றம்" என்று எழுநதபடியே சிவார்சசனைசெய்து, நிகழ்ந்ததை மனைவியாருக்குச் சொலலி, விடிநததும் திருவாரூரை யடைந தார். அஙகே பிறந்தவாகளெல்லாரும் சிவசாரூபிகளாக விளஙகுதலைக கண்டு பூமியில் விழுந்துவணங்கி, அவர்கள் எலலாரும் பழயபடி யாயினமையுங கண்டு "என்பிழை பொறுத்தருளல் வேணடும்" என்று இறைவனாரைத் தொழுதார்.

பின்னர் நமிநந்தியடிகளார் தம்மூரை விடுத்துத திருவாரூரிலே குடி புகுந்து, திருத்தொண்டுகளைச் செய்துவந்தார். அவா அடியவர்களுககு வேண்டுவன எல்லாவற்றயைுஞ்செய்து கொணடிருநதமையால், அடியவாக ளுக்கு "ஆணிப்பொன்" என்று அபபாசுவாமிகளால திருப்பதிகததிலே சிறப்பிக்கப் பட்டார். நமிநந்தியடிகளநாயனா எலலாவுலகஙகளுந தொழத் திருத்தொண்டுகளைச் செய்துகொண்டிருநது, குமரவேளா தநதையாங குழக னடி சேர்ந்தார்.



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# இரண்டாங்காண்டம்.

ஆறாவது

## வம்பறுவரிவண்டுச்சருக்கம்.

# திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள் புராணம்.

(*)

வேதநெறி தழைத்தோங்க மிகுசைவத் துறைவிளங்கப்
பூதபரம் பரைபொலியப் புனிதவாய் மலர்ந்தழுத
சீதவள வயற்புகலித் திருஞான சம்பந்தர்
பாதமலர் தலைக்கொண்டு திருத்தொண்டு பரவுவாம். (க)

சென்னிவளர் மதியணிந்த சிலம்பணிசே வடியார்தம்
மன்னியசை வத்துறையின் வழிவந்த குடிவளவர்
பொன்னிவளந் தருநாடு பொலிவெய்த நிலவியதாற்
கன்னிமதின் மருங்குயுகி னெருங்குகழு மலமூதூர். (உ)

அப்பதிதா னந்தணர்தங் கிடைகளரு மறைமுறையே
செப்புமொலி வளர்பூகச் செழுஞ்சோலை புறஞ்சூழ

---

(க) வேதநெறி - வைதிகசமயங்கள். சைவத்துறை - சைவசித்தாந்தம். வேதநெறிதழைத்தோங்கவும், சைவத்துறை விளங்கவும் புகலிவேந்தர் புனிதவாய்மலர்ந்து அழுதமையால், அவ்வருள்வள்ளலார் அத்துவித சைவ சித்தாந்திரகனறி அதன் அங்கங்களாய மற்றைய மறைச்சம்பந்தமான சமயங்கட்கும் மாபெருங்குரவர் என்பது கரதலாமலகமே. இவ்வுண்மையை விரிக்கிற் பெருகும்; சைவசித்தாந்த நல்லாசிரியர் மாட்டுக்கேட்டுச் சிந்தித்துத் தெளிக. பூதபரம்பரை - பரிசுத்தமுடைய ஆன்மாக்கள் (வைதிகசைவர்கள்.) திருஞானசம்பந்தர் - உயர்வுபற்றிய பால்வழுவமைதி. பரவுவாம் - துதிப்பாம். (உ) வளவர் - சோழர்கள். பொன்னி - காவிரி. கன்னி - அழியாத. கழுமலம் - சீகாழி. (ஙு) அந்தணர்தம் கிடைகள் - பிராமணப்பிள்ளைகளின் கூட்டங்கள். பூகம் - கமுகம்.

ஒப்பினக ரோங்குதலா லுகக்கடைநா ளன்றியே
எப்பொழுது கடன்மேலே மிதப்பதெனா விசைந்துளதால். (௩)

அரியயனே முதலமர ரடங்கவெழும் வெள்ளங்கள்
விரிசுடர்மா மணிப்பதண மீதெறிந்த திரைவரைகள்
புரிசைமுதல் புறஞ்சூழ்வ பொங்கோதங் கடைநாளில்
வரியரவ மந்தரஞ்சூழ் வடம்போல வயங்குமால். (௪)

வளம்பயிலும் புறம்பணைப்பால் வாசப்பா சடைமிடைந்த
தளம்பொலியும் புனற்செந்தா மரைச்செவ்வித் தடமலராற்
களம்பயினீர்க் கடன்மலர்வ தொருபரிதி யெனக்கருதி
இளம்பரிதி பலமலர்ந்தாற் போல்பவுள விலஞ்சிபல. (௫)

உளங்கொண்மறை வேதியர்த மோமதூ மத்திரவுங்
கிளர்ந்ததிரு நீற்றொளியிற் கெழுமியநண் பகலுமலர்ந்
தளந்தறியாப் பல்லூழி யாற்றுதலா லகலிடத்து
விளங்கியவம் மூதூர்க்கு வேறிரவும் பகலுமிகை (௬)

பரந்தவிளை வயற்செய்ய பங்கயமாம் பொங்கெரியில்
வரம்பில்வளர் தேமாவின் கனிகிழிந்த மதுநறுநெய்
நிரந்தரநீ ளிலைக்கடையா லொழுகுதலா னெடிதவ்வூர்
மரங்களுமா குதிவேட்குந் தகையவென மணந்துளதால். (௭)

வேலையழற் கதிர்படிந்த வியன்கங்குல் வெண்மதியஞ்
சோலைதொறு நுழைந்துபுறப் படும்பொழுது துதைந்தமலர்ப்
பாலணைந்து மதுத்தோய்ந்து தாதளைந்து பயின்றந்தி
மாலையெழுஞ் செவ்வொளிய மதியம்போல் வதியுமால். (௮)

காமர்திருப் பதியதன்கண் வேதியர்போற் கடிகமழுந்
தாமரையும் புல்லிதழுந் தயங்கியநூ லுந்தாங்கித்

(௪) அரியயனே ... வெள்ளங்கள் - பிரமவிட்டுணுக்களும் ஒடுங்கும்படி எழாநின்ற கற்பாந்த வெள்ளங்கள். பதணம் - மதிலுண்மேடை. வரைகள் - கீற்றுகள். புரிசை - மதிலினுடைய. ஓதமகடை நாளில் - பாற்கடலைக்கடைந்த காலத்தில் (௫) வளம்பயிலும் புறம்பணைப்பால் - வளப்பம் பொருந்திய அப்பதியின் புறத்திலுள்ள வயல்களின் பக்கத்து. பல இலஞ்சி - பலதடாகங்கள். பாசடை...............புனல் - பசிய இலைகளுக்கிடையே நெருங்கிய இதழோடு விளங்குகின்ற ஜலத்திலுள்ள. வாசச்செந்தாமரை செவ்வித்தடம் மலரால் - மணங்கமழும் செந்தாமரையின் அழகிய பெரியபூக்களால். களம் பயில் - இடம் அகன்ற. பரிதி - சூரியன். (௬) அகலிடம் - உலகம். ஓமதூமமும், நீற்றொளியும் இரவையும், பகலையும் உண்டாக்கலால், பொதுவான இரவையும், பகலையும் அசசீகாழிவேண்டா தெனக. (௭) எரியில் - ஓமாக்கினியில். நிரந்தரம் - எந்நாளும். மரங்களும் - உயர்வு சிறப்பும்மை. (௮) துதைந்த - நெருங்கிய. பயின்று - அச்சோலையில் நெடுநேரம்பழகி.

தூமருநுண் டுகளணிந்து துளிவருகண் ணீர்ததும்பித்
தேமருமென் சுரும்பிசையாற் செழுஞ்சாமம் பாடுமால். (௯)

புனைவார்பொற் குழையசையப் பூந்தானை பின்போக்கி
வினைவாய்ந்த தழல்வேதி மெழுக்குறவெண் சுதையொழுக்குங்
கனைவான முகில்கூந்தற் கதிர்செய்வட மீன்கற்பின்
மனைவாழ்க்கைக் குலமகளிர் வளம்பொலிவ மாடங்கள். (௧௦)

வேள்விபுரி சடங்கதனை விளையாட்டுப் பண்ணைதொறும்
பூழியுற வகுத்தமைத்துப் பொன்புனைகிங் கிணியொலிப்ப
ஆழிமணிச் சிறுதேரூர்ந் தவ்விரதப் பொடியாடும்
வாழிவளர் மறைச்சிறார் நெருங்கியுள மணிமறுகு (௧௧)

விடுசுடர்நீள் மணிமறுகின் வெண்சுதைமா ளிகைமேகந்
தொடுகுடுமி நாசிதொறுந் தொடுத்தகொடி சூழ்கங்குல்
உடுவெனுநாண் மலரலர வுறுபகலிற் பலநிறத்தால்
நெடுவிசும்பு தளிர்ப்பதென நெருங்கியுள மருங்கெல்லாம். (௧௨)

மடையெங்கு மணிக்குப்பை வயலெங்குங் கயல்வெள்ளம்
புடையெங்கு மலர்ப்பிறங்கல் புறமெங்கு மகப்பொலிவு
கிடையெங்குங் கலைச்சூழல் கிளரெங்கு மூரலளிகள்
இடையெங்கு முனிவர்குழா மெயிலெங்கும் பயிலெழிலி. (௧௩)

பிரமபுரம் வேணுபுரம் பெரும்புகலி வெங்குருநீர்ப்
பொருவிறிருத் தோணிபுரம் பூந்தராய் சிரபுரமுன்
வருபுறவஞ் சணபைநகர் வளர்காழி கொச்சைவயம்
பரவுதிருக் கழுமலமாம் பன்னிரண்டு திருப்பெயர்த்தால். (௧௪)

அப்பதியி னந்தணர்தங் குடிமுதல்வ ராசின்மறை
கைப்படுத்த சீலத்துக் கவுணியர்கோத் திரம்விளங்கச்
செப்புநெறி வழிவந்தார் சிவபாத விருதயரென்
றிப்புவிவா ழத்தவஞ்செ யியல்பினா ருளரானார். (௧௫)

மற்றவர்தந் திருமனையார் வாய்ந்தமறை மரபின்வரு
பெற்றியினா ரெவ்வுலகும் பெறற்கரிய பெருமையினார்

(௯) கடிஎனனும பலகுணந்தழுவிய உரிச்சொல் ஈண்டு வாசனைபபொருளில் வந்தது. (தாமரைபரத்தில் பொருள்—புல் இதழும - புறவிதழும. நூலும - நாள நூலையும. நுண்துகள் - மகரந்தப்பொடி. கள்நீர் - தேன். சாமம - கானம.) (அந்தணா பரத்தில பொருள்—புலவிதழ் - தருப்பைபபவித்திரம். நூல் - பூணூல். நுண்துகள் - திருநீறு. கண்ணீர-ஆனந்தக்கண்ணீர. சாமம்-சாமவேதம.) (௰) பூந்தானைபின்போக்கி- அழகியபட்டாடையின முனதானையைப் பின்பக்கஞ் செருகி. சுதை - சுண்ணப்பொடி. வடமீன - அருந்ததி. (௧௨) உடுஎனும - நட்சத்திரமெனனும.

பொற்புடைய பகவதியா ரெனப்போற்றும் பெயருடையார்
கற்புமேம் படுசிறப்பாற் கணவனார் கருத்தமைந்தார். (௧௬)

மரபிரண்டுஞ் சைவநெறி வழிவந்த கேண்மையராய்
அரவணிந்த சடைமுடியா ரடியலா லறியாது
பரவுதிரு நீற்றன்பு பாலிக்குந் தன்மையராய்
விரவுமறை மனைவாழ்க்கை வியப்பெய்த மேவுநாள். (௧௭)

மேதினிமேற் சமண்கையர் சாக்கியர்தம் பொய்ம்மிகுத்தே
ஆதியரு மறைவழக்க மருகியர னடியார்பாற்
பூதிசா தனவிளக்கம் போற்றல்பெறா தொழியக்கண்
டேதமில்சீர்ச் சிவபாத விருதயர்தா மிடருழந்தார். (௧௮)

மனையறத்தி லின்பமுறு மகப்பெறுவான் விரும்புவார்
அனையநிலை தலைநின்றே யாடியசே வடிக்கமல
நினைவுறமுன் பரசமய நிராகரித்து நீறாக்கும்
புனைமணிப்பூண் காதலனைப் பெறப்போற்றுந் தவம்புரிந்தார். (௧௯)

பெருத்தெழுமன் பாற்பெரிய நாச்சியா ருடன்புகலித்
திருத்தோணி வீற்றிருந்தார் சேவடிக்கீழ் வழிபட்டுக்
கருத்துமுடிந் திடப்பரவுங் காதலியார் மணிவயிற்றில்
உருத்தெரிய வரும்பெரும்பே றுலகுய்ய வுளதாக. (௨0)

ஆளுடையா ருடன்றோணி யமர்ந்தபிரா னருள்போற்றி
மூளுமகிழ்ச் சியிற்றங்கண் முதன்மறைநூன் முறைச்சடங்கு
நாளுடைய வீரைந்து திங்களினு நலஞ்சிறப்பக்
கேளிருடன் செயல்புரிந்து பெரிதின்பங் கிளர்வுறுநாள். (௨௧)

அருக்கன்முதற் கோளனைத்து மழகியவுச் சங்களிலே
பெருக்கவலி யுடனிற்கப் பேணியநல் லோரையெழத்
திருக்கிளரு மாதிரைநாட் டிசைவிளங்கப் பரசமயத்
தருக்கொழியச் சைவமுதல் வைதிகமுந் தழைத்தோங்க. (௨௨)

தொண்டர்மனங் களிசிறப்பத் தூயதிரு நீற்றுநெறி
எண்டிசையுந் தனிநடப்ப வேழுலகுங் களிதூங்க
அண்டர்குல மதிசயிப்ப வந்தணரா குதிபெருக
வண்டமிழ்செய் தவநிரம்ப மாதவத்தோர் செயல்வாய்ப்ப. (௨௩)

திசையனைத்தின் பெருமையெலாந் தென்றிசையே வென்றேற
மிசையுலகும் பிறவுலகு மேதினியே தனிவெல்ல
அசைவில்செழுந் தமிழ்வழக்கே யயல்வழக்கின் றுறைவெல்ல
இசைமுழுது மெய்யறிவு மிடங்கொள்ளு நிலைபெருக. (௨௪)

(௨௧) கேளிருடன - உறவினரோடு.

தாளுடைய படைப்பென்னுந் தொழிற்றன்மை தலைமைபெற
நாளுடைய நிகழ்கால மெதிர்கால நவைநீங்க
வாளுடைய மணிவீதி வளர்காழிப் பதிவாழ
ஆளுடைய திருத்தோணி யமர்ந்தபிரா னருள்பெருக. (௨௫)

அவம்பெருக்கும் புல்லறிவி னமண்முதலாம பரசமயப்
பவம்பெருக்கும் புரைநெறிகள் பாழ்படநல லூழிதொறுந்
தவம்பெருக்குஞ் சண்பையிலே தாவில்சரா சரங்களெலாஞ்
சிவம்பெருக்கும் பிள்ளையார் திருவவதா ரஞ்செய்தார். (௨௬)

வேறு.

அப்பொழுது பொற்புறு திருக்கழு மலத்தோர்
எப்பெயரி னோருமய லெய்துமிடை யின்றி
மெய்ப்படு மயிர்ப்புளக மேவியறி யாமே
ஒப்பில்களி கூர்வதொ ருவப்புற வுரைப்பார். (௨௭)

சிவனரு ளெனப்பெருகு சித்தமகிழ் தன்மை
இவணிது நமக்குவர வெய்தியதெ னென்பார
கவுணியர் குலத்திலொரு காதல னுதித்தான்
அவன்வரு நிமித்தமிது வென்றதி சயித்தார். (௨௮)

பூமுகை யவிழ்ந்துமண மேவுபொழி லெங்குந்
தேமருவு தாதொடு துதைந்த திசையெல்லாந்
தூமருவு சோதிவிரி யத்துக ளடங்கி
மாமலய மாருதமும் வந்தசையு மன்றே. (௨௯)

மேலையிமை யோர்களும் விருப்பொடு கரப்பில்
சோலைமலர் போலமலர் மாமழை சொரிந்தே
ஞாலமிசை வந்துவளர் காழிநகர் மேவுஞ்
சீலமறை யோர்களுட னேமவினை செய்தார் (௩0)

பூதகண நாதர்புவி வாழவருள் செய்த
நாதனரு ளின்பெருமை கண்டுநல முய்ப்பார்
ஓதுமறை யோர்பிறி துரைததிடு மோவா
வேதமொழி யாலொலி விளங்கியெழு மெங்கும். (௩௧)

பயன்றருவ பல்தருவும் வல்லிகளு மல்கித்
தயங்குபுன லுந்தெளிவு தண்மையுட னண்ணும்
வயங்கொளி விசும்புமலி னங்கழியு மாறு
நயம்புரிவ புள்ளொலிக ணல்லதிசை யெல்லாம். (௩௨)

---

(௨௫) தாள் - முயற்சி.

அங்கண்விழ விற்பெருகு சண்பையகன் மூதூர்ச்
சங்கபட கங்கருவி தாரைமுத லான
எங்கணு மியற்றுபவ ரின்றியு மியம்பு
மங்கல முழக்கொலி மலிந்தமறு கெல்லாம். (௩௩)

இரும்புவன மித்தகைமை யெய்தவவர் தம்மைத்
தருங்குல மறைத்தலைவர் தம்பவன முன்றிற்
பெருங்களி வியப்பொடு பிரானருளி னாலே
அருந்திரு மகப்பெற வணைந்தவணி செய்வார். (௩௪)

காதல்புரி சிந்தைமகி ழ்க்களி சிறப்பார்
மீதணியு நெய்யணி விழாவொடு திளைப்பார்
சூதநிகழ் மங்கல வினைத்துழனி பொங்கச்
சாதக முறைப்பல சடங்குவினை செய்வார். (௩௫)

மாமறை விழுக்குல மடந்தையர்க டம்மில்
தாமுறு மகிழ்ச்சியொடு சாயன்மயி லென்னத்
தூமணி விளக்கொடு சுடர்க்குழைகண் மின்னக்
காமர்திரு மாளிகை கவின்பொலிவு செய்வார். (௩௬)

சுண்ணமொடு தண்மலர் துதைந்ததுகள் வீசி
உண்ணிறை விருப்பினுட னோகையுரைசெய்வார்
வெண்முளைய பாலிகைகள் வேதிதொறும் வைப்பார்
புண்ணிய நறும்புனல்கொள் பொற்குட நிரைப்பார் (௩௭)

செம்பொன்முத லானபல தானவினை செய்வார்
நம்பரடி யாரமுது செய்யநல முய்ப்பார்
வம்பலர் நறுந்தொடையல் வண்டொடு தொடுப்பார்
நிம்பமுத லானகடி நீடுவினை செய்வார். (௩௮)

ஐயவி யுடன்பல வமைத்தபுகை யாலும்
நெய்யகி னறுங்குறை நிறைத்தபுகை யாலு
வெய்யதழ லாகுதி விழுப்புகையி னாலுந்
தெய்வமண நாறவரு செய்தொழில் விளைப்பார். (௩௯)

ஆயபல செய்தொழில்க ளன்றுமுதல் விண்ணோர்
நாயக னருட்பெருமை கூறுநல மெய்த்த
தூயதிரு மாமறை தொடர்ந்தநடை நூலின்
மேயவிதி யையிரு தினத்தினும் விளைத்தார். (௪௰)

---

(௩௪) பவனமுன்றில் - மாளிகையின் முற்றத்து. பெற - பெற்றகாரணமாக. (௩௫) சூதம் - நழுவுதல்; ஈண்டுத்திருவவதாரம். (௩௮) நிம்பமுதலான என்றது வேப்பிலை செருகல் முதலிய காப்புச் செயல்களை. (௪௰) நடைநூல் - ஸ்மிருதிகள்.

நாமகர ணத்தழகு நாள்பெற நிறுத்திச்
சேமவுத யப்பரிதி யிற்றிகழ் பிரானைத்
தாமரை மிசைத்தனி முதற்குழவி யென்னத்
தூமணி நிரைத்தணிசெய் தொட்டிலமர் வித்தார் (சக)

பெருமலை பயந்தகொடி பேணுமுலை யின்பால்
அருமறை குழைத்தமுது செய்தருளு வாரைத்
தருமிறைவி யார்பரமர் தாள்பரவு மன்பே
திருமுலை சுரந்தமுது செய்தருளு வித்தார் (சஉ)

ஆறுலவு செய்யசடை யையரரு ளாலே
பேறுலகி னுகளென வரும்பெரிய வர்க்கு
வேறுபல காப்புமிகை யென்றவை விரும்பார்
நீறுதிரு நெற்றியி னிறுத்திநிறை வித்தார் (சங)

வேறு

தாயர்திரு மடித்தலத்துந் தயங்குமணித் தவிசினிலுந்
தூயசுடர்த் தொட்டிலினுந் தூங்குமலர்ச் சயனத்துஞ்
சேயபொருட் டிருமறையுந் தீந்தமிழுஞ் சிறக்கவரு
நாயகனைத் தாலாட்டு நலம்பலபா ராட்டினார் (சச)

வருமுறைமைப் பருவத்தின் வளர்புகலிப் பிள்ளையார்
அருமறைக டலையெடுப்ப வாணடதிரு முடியெடுத்துப்
பெருமழுவர் தொண்டலலாற் பிறிதிசையோ மென்பார்போற்
றிருமுகமண் டலமசையச் செங்கீரை யாடினார். (சரு)

நாமறியோம் பரசமய முலகிலெதிர் நாடாது
போமகல வெனவங்கை தட்டுவதும புனிதன்பாற்
காமருதா ளம்பெறுதற் கொற்றுவதுங் காட்டுவபோல்
தாமரைச்செங் கைகளினாற் சப்பாணி கொட்டினார் (சசு)

விதிதவறு படும்வேற்றுச் சமயங்க ளிடைவிழுந்து
கதிதவழ விருவிசும்பு நிறைந்தகடி வாரகங்கை
நதிதவழுஞ் சடைமுடியார ஞானமளித் திடவுரியார்
மதிதவழ்மா ளிகைமுன்றின் மருங்குதவழ்ந் தருளினார். (சஎ)

சூழவரும் பெருஞ்சுற்றத் தோகையருந் தாதியருங்
காழியர்தஞ் சீராட்டே கவுணியர்கற் பகமேயென

(சக) சேம உதய பரிதி-(உலகத்துக்கு) இன்பத்தை யளிக்கும் இளஞ்சூரியனைப் போல. தாமரைமிசைத் தனிமுதற் குழவி - பிரமன் (சரு) செங்கீரைப்பருவம்-செவ்வியமதலைச் சொற்களைப் பேசும் பருவம். கீர் - சொல். இப்பருவத்தின் செயல் - ஒருகாலைமடக்கி ஒருகாலை நீட்டி இருகைகளையும் நிலத்திலூன்றித் தலைநிமிர்ந்து முகமசைய ஆடுதல்.

றேழிசையும் பலகலையு மெவ்வுலகுந் தனித்தனியே
வாழவரு மவர்தம்மை வருகவரு கெனவழைப்ப. (சஅ)

திருநகையா லழைத்தவர்தஞ் செழுமுகங்கண் மலர்வித்தும்
வருமகிழ்வு தலைசிறப்ப மற்றவர்மேற் செலவுகைத்தும்
உருகிமனங் கரைந்தலைய வுடனணைந்து தழுவியுமுன்
பெருகியவின் புறவளித்தார் பெரும்புகலிப் பிள்ளையார். (சக)

வளர்பருவ முறையாண்டு வருவதன்முன் மலர்வரிவண்
டுளர்கருமென் சுருட்குஞ்சி யுடனலையச் செங்கின்று
கிளரொலிகிங் கிணியெடுப்பக் கீழ்மைநெறிச் சமயங்கள்
தளர்நடையிட் டறத்தாமுந் தளர்நடையிட் டருளினார் (ருo)

தாதியர்தங் கைப்பற்றித் தளர்நடையி னசைவொழிந்து
சோதியணி மணிச்சதங்கை தொடுத்தவடம் புடைசூழ்ந்த
பாதமலர் நிலம்பொருந்தப் பருவமுறை யாண்டொன்றின்
மீதணைய நடந்தருளி விளையாடத் தொடங்கினார் (ருக)

சிறுமணித்தேர் தொடர்ந்துருட்டிச செழுமணற்சிற் றிலகளிழை
நறுநுதற்பே தையர்மருங்கு நடந்தோடி யடர்ந்தழித்துங்
குறுவியர்ப்புத துளியரும்பக் கொழும்பொடியா டியகோல
மறுகிடைப்பே ரொளிபரப்ப வந்துவளர்ந் தருளினார். (ருஉ)

மங்கையோ டுடனாகி வளர்தோணி வீற்றிருந்த
திங்கள்சேர் சடையார்தந் திருவருட்குச் செய்தவத்தின்
அங்குரம்போல் வளர்ந்தருளி யருமறையோ டுலகுய்ய
எங்கள்பிரா னீராண்டின் மேலோராண் டெய்துதலும். (ருங)

நாவாண்ட பலகலையு நாமகளு நலஞ்சிறப்பப்
பூவாண்ட திருமகளும் புண்ணியமும் பொலிவெய்தச்
சேவாண்ட கொடியவர்தஞ் சிரபுரத்துச் சிறுவருக்கு
மூவாண்டி னுலகுய்ய நிகழ்ந்ததனை மொழிகின்றேன். (ருச)

பண்டுதிரு வடிமறவாப் பான்மையோர் தமைப்பரமர்
மண்டுதவ மறைக்குலத்தோர் வழிபாட்டி னளித்தருளத்
தொண்டினிலை தரவருவார் தொடர்ந்தபிரி வுணர்வொருகாற்
கொண்டெழலும் வெருக்கொண்டாற் போலழுவர் குறிப்பயலாய் (ருரு)

மேதகைய விந்நாளின் வேறொருநாள் வேதவிதி
நீதிமுறைச் சடங்குநெறி முடிப்பதற்கு நீராடத்

(சஅ) வருக வருக - உவகைப்பொருளில் வந்த அடுக்கு. (ருo) உளர் - மொய்க்கின்ற. (ருஉ) குறுவியர்ப்பு - சிறியவியர்வை. அரும்ப - முளைப்ப. மறுகு - வீதி, (ருங) அங்குரம் - முளை.

தாதையார் போம்பொழுது தம்பெருமா னருள்கூடச்
சோதிமணி மனைமுன்றிற் றொடர்ந்தழுது பின்சென்றார். (௫௬)

பின்சென்ற பிள்ளையார் தமைநோக்கிப் பெருந்தவத்தோர்
முன்செல்கை தனையொழிந்து முனிவார்போல் விலக்குதலு
மின்செய்பொலங் கிங்கிணிக்கால் கொட்டியவர் மீளாமை
உன்செய்கை யிதுவாகிற் போவென்றங் குடன்சென்றார். (௫௭)

கடையுகத்திற் றனிவெள்ளம் பலவிரிக்குங் கருப்பம்போன்
றிடையறாப் பெருந்தீர்த்த மெவற்றினுக்கும் பிறப்பிடமாய்
விடையுயர்த்தார் திருத்தோணிப் பற்றுவிடா மேன்மையதாந்
தடமதனிற் றுறையணைந்தார் தருமத்தின் றலைநின்றார். (௫௮)

பிள்ளையார் தமைக்கரையில் வைத்துத்தாம் பிரிவஞ்சித்
தெள்ளுநீர் புகமாட்டார் தேவியொடுந் திருத்தோணி
வள்ளலா ரிருந்தாரை யெதிர்வணங்கி மணிவாவி
உள்ளிழிந்து புனல்புக்கா ருலகுய்ய மகப்பெற்றார் (௫௯)

நீராடித் தருப்பித்து நியமங்கள் பலசெய்வார்
சீராடுந் திருமகனார் காண்பதன்முன் செய்ததற்பின்
ஆராத விருப்பினு லகமருடம் படியநீர்
போராது மூழ்கினார் பெருங்காதல் பெற்றாராய். (௬0)

மறைமுனிவா மூழ்குதலு மற்றவர்தம் மைக்காணு
திறைதரியா ரெனுநிலைமை தலைக்கீடா வீசாகமுன்
முறைபுரிந்த முன்னுணர்வு மூளவழத் தொடங்கினார்
நிறைபுனல்வா விக்கரையி னின்றருளும் பிள்ளையார். (௬௧)

கண்மலர்க ணீர்ததும்பக் கைமலர்க ளாற்பிசைந்து
வண்ணமலர்ச் செங்கனிவாய் மணியதரம் புடைதுடிப்ப
எண்ணின்மறை யொலிபெருக வெவ்வுயிருங் குதூகலிப்பப்
புண்ணியக்கன் றனையவர்தாம் பொருமியழு தருளினார். (௬௨)

மெய்ம்மேற்கண் டுளிபனிப்ப வேறெங்கும் பார்த்தழுவார்
தம்மேலைச் சார்புணர்ந்தோ சாரும்பிள் ளைமைதானே
செம்மேனி வெண்ணீற்றார் திருத்தோணிச் சிகரம்பார்த்
தம்மேயப் பாவென்றென் றழைத்தருளி யழுதருள. (௬௩)

அந்நிலையிற் றிருத்தோணி வீற்றிருந்தா ரருளுேக்கான்
முன்னிலைமைத் திருத்தொண்டு முன்னியவர்க் கருள்புரிவான்

(௬0) தருப்பித்து - தருப்பணஞ்செய்து. அகமருடம - (வடமொழி) பாவத்தை யொழிப்பது. செய்வார், செய்து, பெற்றாராய்ப்படிய மூழ்கினார் எனக்கூட்டுக. (௬௧) தலைக்கீடா - மேற்கொண்டு. (௬௨) அதரம - உதடுகள். பொருமி - தேம்பி.

பொன்மலைவல் லியுந்தாமும் பொருவிடைமே லெழுந்தருளிச்
சென்னியிளம் பிறைதிகழச் செழும்பொய்கை மருங்கணைந்தார். (௬௪)

திருமறைநூல் வேதியர்க்குந் தேவியர்க்குந் தாங்கொடுத்த
பெருகுவர நினைந்தோதான் றம்பெருமைக் கழல்பேணும்
ஒருநெறியில் வருஞானங் கொடுப்பதனுக் குடனிருந்த
அருமறையா ளுடையவளை யளித்தருள வருள்செய்வார். (௬௫)

அழுகின்ற பிள்ளையார் தமைநோக்கி யருட்கருணை
யெழுகின்ற திருவுள்ளத் திறையவர்தா மெவ்வுலகுந்
தொழுகின்ற மலைக்கொடியைப் பார்த்தருளித் துணைமுலைகள்
பொழிகின்ற பாலடிசில் பொன்வள்ளத் தூட்டென்ன. (௬௬)

ஆரணமு முலகேழு மீன்றருளி யனைத்தினுக்குங்
காரணமாய் வளம்பெருகு கருணைதிரு வடிவான
சீரிணங்கு சிவபெருமா னருளுதலுஞ் சென்றணைந்து
வாரிணங்கு திருமுலைப்பால் வள்ளத்துக் கறந்தருளி. (௬௭)

எண்ணரிய சிவஞானத் தின்னமுதங் குழைத்தருளி
உண்ணடிசி லெனவூட்ட வுமையம்மை யெதிர்நோக்குங்
கண்மலர்நீர் துடைத்தருளிக் கையிற்பொற் கிண்ணமளித்
தண்ணலையங் கழுகைதீர்த் தங்கணரு ளருள்புரிந்தார். (௬௮)

யாவருக்குந் தந்தைதா யெனுமிவரிப் படியளித்தார்
ஆவதனு லாளுடைய பிள்ளையா ராயகில
தேவருக்கு முனிவருக்குந் தெரிவரிய பொருளாகுந்
தாவிறனிச் சிவஞான சம்பந்த ராயினர் (௬௯)

சிவனடியே சிந்திக்குந் திருப்பெருகு சிவஞானம்
பவமதனை யறமாற்றும் பாங்கினிலோங் கியஞானம்
உவமையிலாக் கலைஞான முணர்வரிய மெய்ஞ்ஞானம்
தவமுதல்வர் சம்பந்தர் தாமுணர்ந்தா ரந்நிலையில். (௭௦)

எப்பொருளு மாக்குவா னீசனே யெனுமுணர்வும்
அப்பொருடா னுளுடையா ரடியாக ளெனுமறிவும்

---

(௬௫) வேதியர்க்கும் தேவியாருக்கும் - சிவபாத விருதயருக்கும், பகவதியாருக்கும்.
(௭௦) உவமை . . கலைஞானம் - கேட்டல் எனவும், சிவனடியே.........சிவஞானம் - சிந்தித்தல் எனவும், பவமதனை .........ஓங்கியஞானம் - தெளிதல் எனவும், உணர்வரிய மெய்ஞ்ஞானம் - நிட்டை எனவுங் கூறுவாருமுளர். சிவனடியே............ சிவஞானம் (ஆகிய) உணர்வரிய மெய்ஞ்ஞானம் - பரஞானம் எனினும், பவமதனை ... கலைஞானம் - அபரஞானம் எனினும் பொருந்தும். (அபரஞானம் - கேட்டல், சிந்தித்தல்; பரஞானம் - தெளிதல், நிட்டை.)

இப்படியா லிதுவன்றித் தம்மிசைவு கொண்டியலூர்
துப்புரவில் லார்துணிவு துகளாகச் சூழ்ந்தெழுந்தார். (௭௧)

சீர்மறையோர் சிவபாத விருதயருஞ் சிறுபொழுதில்
நீர்மருவித தாஞ்செய்யு நியமங்கண் முடித்தேறிப்
பேருணர்விற் பொலிகின்ற பிள்ளையார் தமைநோக்கி
யாரளித்த பாலடிசி லுண்டதுநீ யெனவெகுளா. (௭௨)

எச்சின்மயங் கிடவுனக்கீ திட்டாரைக் காட்டென்று
கைச்சிறிய தொருமாறு கொண்டோச்சக் காலெடுத்தே
யச்சிறிய பெருந்தகையா ரானந்தக் கண்டுளிபெய்
துச்சியின்மே லெடுத்தருளு மொருதிருக்கை விரற்சுட்டி (௭௩)

விண்ணிறைந்த பெருகொளியால் விளங்குமழ விடைமேலே
பண்ணிறைந்த வருமறைகள் பணிந்தேத்தப் பாவையுடன்
எண்ணிறைந்த கருணையினா னின்றானை யெதிர்காட்டி
யுண்ணிறைந்து பொழிந்தெழுந்த வுயர்ஞானத் திருமொழியால். (௭௪)

எல்லையிலா மறைமுதன்மெய் யுடனெடுத்த வெழுதுமறை
மல்லனெடுந் தமிழாலிம் மாநிலத்தோர்க் குரைசிறப்பப்
பல்லுயிருங் களிகூரத் தம்பாடல் பரமர்பாற்
செல்லுமுறை பெறுவதற்குத் திருச்செவியைச சிறப்பித்து. (௭௫)

செம்மைபெற வெடுதததிருத் தோடுடைய செவியனெனு
மெய்ம்மைமொழித் திருப்பதிகம் பிரமபுர மேவினார்
தம்மையடை யாளங்க ளுடன்சாற்றித் தாதையாாக
கெம்மையிது செய்தபிரா னிவனன்றே யெனவிசைததார். (௭௬)

---

## திருப்பிரமபுரம் - பண் - நட்டபாடை.

திருச்சிற்றம்பலம்.

தோடுடையசெவியன்விடையேறியோர்தூவெண்மதிசூடிக்
காடுடையசுடலைப்பொடிப்பூசியெனதுள்ளங்கவர்கள்வன்
ஏடுடையமலரான்முனநாட்பணிந்தேத்தவருள்செய்த
பீடுடையபிரமாபுரமேவியபெம்மானிவனன்றே.

அருநெறியமறைவல்லமுனியகன்பொய்கையலர்மேய
பெருநெறியபிரமாபுரமேவியபெம்மானிவன்றன்னை
ஒருநெறியமனம்வைத்துணர்ஞானசம்பந்தனுரைசெய்த
திருநெறியதமிழ்வல்லவர்தொல்வினைதீர்தலெளிதாமே.

திருச்சிற்றம்பலம்.

---

(௭௫) மறைமுதல - பிரணவத்தை. மெயயுடன - தகரமெயயெழுதோடு.

மண்ணுலகில் வாழ்வார்கள் பிழைத்தாலும் வந்தடையிற்
கண்ணுதலான் பெருங்கருணை கைக்கொள்ளு மெனக்காட்ட
எண்ணமிலா வல்லரக்க னெடுத்துமுறிந் திசைபாட
அண்ணலவற் கருள்புரிந்த வாக்கப்பா டருள்செய்தார். (எஎ)

தொழுவார்க்கே யருளுவது சிவபெருமா னெனத்தொழார்
வழுவான மனத்தாலே மாலாய மாலயனும்
இழிவாகுங் கருவிலங்கும் பறவையுமா யெய்தாமை
விழுவார்க ளஞ்செழுத்துந் துதிதுய்ந்த படிவிரித்தார். (எஅ)

வேதகா ரணராய வெண்பிறைசேர் செய்யசடை
நாதனெறி யறிந்துய்யார் தம்மிலே நலங்கொள்ளும்
போதமிலாச் சமண்கையர் புத்தர்வழி பழியாக்கும்
ஏதமே யெனமொழிந்தா ரெங்கள்பிரான் சம்பந்தர். (எகூ)

திருப்பதிக நிறைவித்துத் திருக்கடைக்காப் புச்சாத்தி
இருக்குமொழிப் பிள்ளையா ரெதிர்தொழுது நின்றருள
அருட்கருணை திருவாள னாருள்கண் டமரரெலாம்
பெருக்கவிசும் பினிலார்த்துப் பிரசமலர் மழைபொழிந்தார். (அ0)

வநதெழுமங் கலமான வானகதுந் துபிமுழக்குங
கந்தருவர் கின்னரர்கள் கானவொலிக டன்முழக்கும்
இநதிரனே முதற்றேவ ரடுதடுத்து மிசைமுழககும்
அந்தமில்பல கணநாத ரரவெனுமோ சையினடங்க. (அக)

வேறு

மறைகள் கிளர்ந்தொலி வளர முழங்கிட வானோர்தந்
நிறைமுடி யுநதிய நிறைமணி சிநதிட நீள்வானத
துறையென வந்துல கடைய நிறைந்திட வோவாமெய்ப்
பொறைபெரு குந்தவ முனிவ ரனுங்கடல் புடைசூழ (அஉ)

அணைவுற வந்தெழு மறிவு தொடங்கின வடியார்பால
இணையில் பவங்கிளா கடல்க ளிகந்திட விருதாளின்
புணையரு ளங்கணர் பொருவிடை தங்கிய புணர்பாகத்
துணையொ டணைநதனர் சுருதி தொடர்ந்த பெருந்தோணி (அங)

அண்ண லணைந்தமை கண்டு தொடர்ந்தெழு மன்பாலே
மண்மிசை நின்ற மறைச்சிறு போதக மன்னுருங
கண்வழி சென்ற கருத்து விடாது கலந்தேகப்
புண்ணியர் நண்ணிய பூமலி கோயிலி னுட்புக்கார் (அச)

(எஎ) பிழைததாலும - பிழைசெயதாலும. (அ0) பிரசம-தேனொழுகும. (அக) இகந்திட - கடக்க.

ஈறில் பெருந்தவ முன்செய்து தாதை யெனப்பெற்றார்
மாறு விழுந்த மலர்க்கை குவித்து மகிழ்ந்தாடி
வேறு விளைந்த வெருட்சி வியப்பு விருப்போடுங்
கூறு மருந்தமி ழின்பொரு ளான குறிப்போர்வார். (அ௫)

தாணு வினைத்தனி கண்டு தொடர்ந்தவர் தம்மைப்போற்
காணுதல் பெற்றில ரேனு நிகழ்ந்தன கண்டுள்ளார்
தோணி புரத்திறை தன்னரு ளாத றுணிந்தார்வம்
பேணு மனத்தொடு முன்புகு காதலர் பின்சென்றார். (அ௬)

அப்பொழு தங்க ணணைந்தது கண்டவ ரல்லாதார்
முப்புரி நூன்மறை யோர்க ளுரோம முகிழ்ப்பெய்தி
இப்படி யொப்பதொ ரற்புத மெங்குள தென்றென்றே
துப்புறழ் வேணியர் கோயிலின் வாயில புறஞ்சூழ. (அ௭)

பொங்கொளி மால்விடை மீது புகுந்தணி பொற்றோணி
தங்கி யிருந்த பெருந்திரு வாழ்வு தலைப்பட்டே
இங்கெனை யாளுடை யானுமை யோடு மிருந்தானென்
றங்கெதிர் நின்று புகன்றனர் ஞானத் தமுதுண்டார். (அ௮)

இன்னிசை யேழு மிசைந்த செழுந்தமி ழீசற்கே
சொன்முறை பாடு தொழும்பருள் பெற்ற தொடக்கோடும்
பன்மறை வேதியர் காண விருப்பொடு பாலூறும்
பொன்மணி வாயினர் கோயிலி னின்று புறப்பட்டார். (அ௯)

பேணிய வற்புத நீடருள் பெற்ற பிரான்முனமே
நீணிலை யிற்றிகழ் கோபுர வாயிலி னேரெய்தி
வாணில விற்றிகழ் வேணியர் தொண்டர்கள் வாழ்வெய்துந்
தோணி புரத்தவர் தாமெதிர் கொண்டு துதிக்கின்றார் (௯0)

வேறு.

காழியர் தவமே கவுணியர் தனமே கலைஞானத்
தாழிய கடலே யதனிடை யமுதே யடியார்முன்
வாழிய வந்திம் மணமிசை வானோர் தனிநாதன்
ஏழிசை மொழியா டன்றிரு வருள்பெற் றனையென்பார். (௯௧)

மறைவளர் திருவே வைதிக நிலையே வளர்ஞானப்
பொறையணி முகிலே புகலியர் புகலே பொருபொன்னித்
துறைபெறு மணியே சுருதியி னொளியே வெளியேவந்
திறையவ னுமையா ளுடனரு டரவெய் தினையென்பார். (௯௨)

புண்ணிய முதலே புனைமணி யரையா ணொடுபோதுங்
கண்ணிறை கதிரே கலைவளர் மதியே கவின்மேவும்

(௯௨) புகலே - புகலிடமே.

பண்ணியல் கதியே பருவம தொருமூ வருடத்தே
எண்ணிய பொருளாய் நின்றவ ரருள்பெற் றனையென்பார். (௯௩)

வேறு.

என்றினைய பலகூறி யிருக்குமொழி யந்தணரு மேனை யோரு
நின்றுதுதி செய்தவர்தா ணீண்முடிக்கண் மேலேந்தி நிரந்த போது
சென்றணைந்த தாதையார் சிவபாத விருதயர்தாந் தெய்வ ஞானக்
கன்றினைமுன் புக்கெடுத்துப் பியலின்மேற் கொண்டுகளி கூர்ந்து செல்ல

மாமறையோர் குழாத்தினுடன் மல்குதிருத் தொண்டர்குழா மருங்கு சூழ்ந்து
தாமறுவை யுத்தரியந் தனிவிசும்பி லெறிந்தார்க்குந் தன்மை யாலே
பூமருகு சிவானந்தப் பெருக்காறு போதவதன் மீது பொங்குங்
காமர்நுரைக் குமிழியெழுந் திழிவனபோல் விளங்குபெருங் காட்சித் தாக.

நீடுதிருக் கழுமலத்து நிலத்தேவர் மாளிகைமே னெருங்கி யங்கண்
மாடுநிறை மடவார்கண் மங்கலமா மொழிகளால் வாழ்த்தி வாசத்
தோடுமலி நறுமலருஞ் சுண்ணமும்வெண் பொரியினொடுந் தூவி நிற்பார்
கோடுபயில் குலவரைமேன் மின்குலங்கள் புடைபெயருங் கொள்கைத் தாக.

மங்கலதூ ரியந்துவைப்பார் மறைச்சாமம் பாடுவார் மருங்கு வேதிப் [ர
பொங்குமணி விளக்கெடுத்துப் பூரணகும் பமுநிறைப்பார் போற்றிசெய்வா
அங்கவர்கண் மனத்தெழுந்த வதிசயமும் பெருவிருப்பு மன்பும் பொங்கத்
தங்குதிரு மலிவீதிச் சணபைநகர் வலஞ்செய்து சாருங் காலை (௯௭)

தந்திருமா ளிகையின்க ணெழுந்தருளிப் புகும்பொழுது சங்க நாதம்
அந்தாதுந் துபிமுதலா வளவில்பெரு கொலிதழைப்ப வணைந்து புக்கார்
சுந்தரப்பொற் றோணிமிசை யிருந்தபிரா னுடனமர்ந்த துணைவி யாகும்
பைந்தொடியா டிருமுலையின் பாலறா மதுரமொழிப் பவள வாயார (௯௮)

தூமணிமா ளிகையின்க ணமர்ந்தருளி யன்றிரவு தொலலை நாத
மாமறைக டரண்டபெருந் திருத்தோணி மன்னிவீற் றிருந்தார் செய்ய
காமருசே வடிக்கமலங் கருத்திலுற விடையறாக் காதல் கொண்டு
நாமநெடுங் கதிருதிப்ப நணணினார் திருத்தோணி நம்பர் கோயில் (௯௯)

காதலுட னணைந்துதிருக் கழுமலத்துக் கலந்துவீற் றிருந்த தங்கள்
தாதையா ரையும்வெளியே தாங்கரிய மெய்ஞ்ஞானந் தம்பால் வந்து
போதமுலை சுரந்தளித்த புண்ணியத்தா யாரையுமுன் வணங்கிப் போற்றி
மேதகைய வருள்பெற்றுத் திருக்கோலக் காவிறைஞ்ச விருப்பிற் சென்றார்.

(௯௪) பியல - தோள. கூர்ந்து - கூர் எனனும உரிச்சொலலடியாகப பிறந்த வினையெச்சம. கூர்தல - உள்ளது சிறத்தல, "கழிவுங் கூர்ப்புமுள்ளது சிறக்கும" என்றார் தொல்காப்பியனார, (௯௫) அறுவை - உடையையும, உத்தரியம - குறுக் கல்விசாரம, (௯௬) நிலத்தேவர் - பிராமணர.

பெருக்கோலிட் டலைபிறங்கு காவிரிநீர் பிரசமலர் தரளஞ் சிந்த
வரிக்கோல வண்டாட மாதரார் குடைந்தாடு மணிநீர் வாவித்
திருக்கோலக் காவெய்தித் தேவபிரான் கோயில்வலஞ் செய்து முன்னின்
றிருக்கோலிட் டறிவரிய திருப்பாத மேத்துவதற் கெடுத்துக் கொள்வார்.

மெய்ந்நிறைந்த செம்பொருளாம் வேதத்தின் விழுப்பொருளை வேணி மீது
பைந்நிறைந்த வரவுடனே பசுங்குழவித் திங்களணிந் தருளு வானை
மைந்நிறைந்த மிடற்றானை மடையில்வா ளைகள்பாய வென்னும் வாக்காற்
கைந்நிறைந்த வொற்றறுத்துக் கலைப்பதிகங் கவுணியர்கோன் பாடுங் காலை.

---

திருக்கோலக்கா - பண் - தக்கராகம்

திருச்சிற்றம்பலம்

மடையில்வாளைபாயமாதரார், குடையும்பொய்கைக்கோலக்காவுளான்[லோ
சடையும்பிறையுஞ்சாம்பற்பூச்சுங்கீள், உடையுங்கொண்டவுருவமென்கொ
நலங்கொள்காழிஞானசம்பந்தன், குலங்கொள்கோலக்காவுளானையே [ரே
வலங்கொள்பாடல்வல்லவாய்மையார், உலங்கொள்வினைபோயோங்கிவாழ்வ

திருச்சிற்றம்பலம்

---

கையதனு லொற்றறுத்துப் பாடுதலுங் கண்டருளிக் கருணை கூர்ந்த
செய்யசடை வானவர்த மஞ்செழுத்து மெழுதியநற் செம்பொற் றாளம்
ஐயரவர் திருவருளா லெடுத்தபா டலுக்கிசைந்த வளவா லொற்ற
வையமெலா முய்யவரு மறைச்சிறுவர் கைத்தலத்து வந்த தன்றே. (௧௦௩)

காழிவரும் பெருந்தகையார் கையில்வருந் திருத்தாளக் கருவி கண்டு
வாழியதந் திருமுடிமேற் கொண்டருளி மனங்களிப்ப மதுர வாயில்
ஏழிசையுந் தழைத்தோங்க வின்னிசைவண் டமிழ்ப்பதிக மெய்தப் பாடித்
தாழுமணிக் குழையார்முன் றக்கதிருக் கடைக்காப்புச் சாத்தி நின்றார். ()

உம்பருல கதிசயிப்ப வோங்கியநா தத்தளவி னுண்மை நோக்கித்
தும்புருநா ரதர்முதலாஞ் சுருதியிசைத் துறையுளோர் துதித்து மண்மேல்
வம்பலர்மா மழைபொழிந்தார் மறைவாழ வந்தருளு மதலை யாருந்
தம்பெருமா னருள்போற்றி மீண்டருளிச் சண்பைநகர் சாரச் செல்வார் ()

செங்கமல மலர்க்கரத்துத் திருத்தாளத் துடனடந்து செல்லும் போது
தங்கள்குலத் தாதையார் தரியாது தோளின்மேற் றரித்துக் கொள்ள
அங்கவர்தந் தோளின்மிசை யெழுந்தருளி யணைந்தார்சூழ்ந் தமர ரேத்துந்
திங்களணி மணிமாடத் திருத்தோணி புரத்தோணிச் சிகரக் கோயில் (௧௦௬)

திருப்பெருகு பெருங்கோயில் சூழவலங் கொண்டருளித் திருமுன் னின்றே
அருட்பெருகு திருப்பதிக மெட்டொருகட் டளையாக்கி யவற்று ளொன்று

(௱௪) மாதர் - அழகு, ஆசை. ஆகுபெயராய்ப் பெண்களை யுணர்த்துகிறது.
(௱௬) தோணிச்சிகரம் - தோணியென்னுஞ் சிகரம்.

விருப்புறுபொற் றிருத்தோணி வீற்றிருந்தார் தமைப்பாட மேவு காதற்
பொருத்தமுறவருள்பெற்றுப் போற்றியெடுத் தருளினார் பூவார் கொன்றை

---

சீகாழி - பண் - தக்கராகம்.

திருச்சிற்றம்பலம்.

பூவார்கொன்றைப்புரிபுன் சடையீச, காவாயெனநின்றேத்துங்காழியார்
மேவார்புரமூன் றட்டாரவர்போலாம், பாவாரினசொற்பயிலும்பரமரே.
காரார்வயல்சூழ்காழிக்கோன் றனைச, சீராருஞானசம்பந்தன்சொன்ன
பாரார்புகழப்பாடல்வல்லவ, ரேரார்வானத்தினிதாயிருப்பாரே.

திருச்சிற்றம்பலம்.

---

எடுத்ததிருப் பதிகத்தி னிசைதிருத்தா ளத்தினு லிசைய வொற்றி
அடுத்தநடை பெறப்பாடி யார்வமுற வணங்கிப்போந் தலைநீரப் பொன்னி
மடுத்தவயற் பூந்தரா யவர்வாழ மழவிளங்கோ லத்துக காட்சி
கொடுத்தருளி வைகினார் குறைவிலா நிறைஞானக் கொண்ட லார்தாம் ()

அங்கிலையி லாளுடைய பிள்ளையார் தமைமுன்ன மளித்த தாயார்
முன்னுதிக்க முயன்றதவத திருநன்னி பள்ளிமுதன் மறையோ ரெல்லா
மன்னுபெரு மகிழ்ச்சியுடன் மங்கலதூ ரியநதுவைப்ப மறைக ளோதிக்
கன்னிமதிற் சண்பைநகர் வந்தணைநது கவுணியர்கோன் கழலிற் றாழ்ந்தார்.()

மங்கலமா மெய்ஞ்ஞான மணகளிப்பப் பெற்றபெரு வார்த்தை யாலே
எங்கணுநீள் பதிமருங்கி லிருபிறப்பா ளருமல்லா வேனை யோரும்
பொங்குதிருத் தொண்டாகளு மதிசயித்துக குழாங்கொணடு புகலி யார்தஞ்
சிங்கவிள வேற்றின்பால வநதணைநது கழலபணியுஞ் சிறப்பின் மிக்கார். ()

வந்ததிருத் தொணடர்கட்கு மலகுசெழு மறையவாகசு மற்று ளோர்க்குஞ்
சிந்தைமகிழ் வுறமலர்ந்து திருவமுது முதலான சிறப்பின் செய்கை
தந்தமள வினிலவிரும்புந் தகைமையினாற் கடனாற்றுஞ் சண்பை மூதூர்
எந்தைபிரான் சிவலோக மெனவிளங்கி யெவ்வுலகு மேதது நாளில. (௧௧௧)

செழுந்தாளப் பொன்னிசூழ் திருநன்னி பள்ளியுள்ளோா தொழுது திங்கட்
கொழுந்தணியுஞ் சடையாரை யெங்களபதியினிற்குமபிட் டருள வங்கே
எழுந்தருள வேண்டுமென விசைநதருளித தோணிவீற் றிருந்தார் பாதந்
தொழுந்தகைமை யாலிறைஞ்சி யருள்பெற்றுப் பிறபதியுந தொழமுன சென்றா.

தாதவிழ்செந் தாமரையி னகவிதழ்போற் சிறடிக டரையின் மீது
போதுவதும் பிறரொருவர் பொறுப்பதுவும் பொறாவன்பு புரிநத சிந்தை
மாதவஞ்செய் தாதையார் வந்தெடுத்துத தோளின்மேல் வைத்துக் கொள்ள
நாதாகழ றம்முடிமேற் கொணடகருத் துடன்போந்தார் ஞான முணடார்.()

தேனலருங கொன்றையினார் திருநன்னி பள்ளியினைச் சாரச் செல்வார்
[illegible]னையு மலர்ச்சோலை தோன்றுவதெப் பதியென்ன மகிழ்ச்சி யெய்திப்

பானல்வயற் றிருநனி பள்ளியெனத் தாதையார் பணிப்பக் கேட்டு
ஞானபோ னகர்தொழுது நற்றமிழ்ச்சொற் றொடைமாலை நவில லுற்றார்.()

வேறு.

காரைகள் கூகை முல்லை யெனநிகழ் கலைசேர் வாய்மைச்
சீரியற் பதிகம் பாடித் திருக்கடைக் காப்புத் தன்னில்
நாரியோர் பாகர் வைகு நனிபள்ளி யுள்கு வார்தம்
பேரிடர் கெடுதற் காணை நமதெனும் பெருமை வைத்தார். (௧௧௫)

---

திருநனிபள்ளி - பண் - பியந்தைக் காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

காரைகள்கூகைமுல்லைகளவாகையீகைபடர்தொடரிகள்ளிகவினிச்
சூரைகள்பம்மிவிம்முசுடுகாடமர்ந்தசிவன்மேயசோலைநகர்தான்
றேரைகள்சாரைசாயமிதிகொள்ளவாளைகுதிகொள்ளவள்ளைதுவள
நாரைகளாரல்வாரவயன்மேதிவைகுநனிபள்ளிபோலுநமர்காள்.

கடல்வரையோதமல்குகழிகானல்பானல்கமழ்காழியென்றுகருதப்
படுபொருளாறு நாலுமுளதாகவைத்தபதியானஞானமுனிவ
னிடுபறையொன்றவத்தர்பியன்மேலிருந்துவிசையாலுரைத்தபனுவல்
நடுவிருளாடுமெந்தைநனிபள்ளியுளகவினைகெடுதலாணைநமதே.

திருச்சிற்றம்பலம்

---

ஆதியார் கோயில் வாயி லணைந்துபுக் கன்பு கூரு
நீதியாற் பணிந்து போற்றி நீடிய வருண்முன் பெற்றுப்
போதுவார் தம்மைச் சூழ்ந்து பூசுரர் குழாங்கள் போற்றுங்
காதல்கண் டுவக மர்ந்தார் கவுணியா தலைவ னாதாம் (௧௧௬)

அம்பிகை யளித்த ஞான மகிலமு முய்ய வுண்ட
நம்பெருந் தகையார் தம்மை யெதிர்கொண்டு நண்ண வேண்டி
உம்பரும் வணங்கு மெய்ம்மை யுயர்தவத் தொண்ட ரோடு
தம்பெரு விருப்பால் வந்தார் தலைசையந் தணர்க ளெல்லாம் (௧௧௭)

காவண மெங்கு மிட்டுக் கமுகொடு கதலி நாட்டிப்
பூவணைத் தாமந் தூக்கிப் பூரண கும்ப மேந்தி
ஆவண வீதி யெல்லா மலங்கரித் தண்ண லாரை
மாவண மலர்மென் சோலை வளம்பதி கொண்டு புக்கார். (௧௧௮)

திருமறை யோர்கள் சூழ்ந்து சிந்தையின் மகிழ்ச்சி பொங்கப்
பெருமறை யோசை மல்கப் பெருந்திருக் கோயி லெய்தி
அருமறைப் பொருளா னாரைப் பணிந்தணி நற்சங் கத்தின்
தருமுறை நெறியக் கோயில் சார்ந்தமை யருளிச் செய்தார். (௧௧௯)

---

(௧௧௮) காவணம - நடைபபந்தல. மா - வண்டுகள்.

கறையணி கண்டர் கோயில் காதலாற் பணிந்து பாடி
மறையவா போற்ற வந்து திருவலம் புரத்து மன்னும்
இறைவரைத் தொழுது பாடுங் கொடியுடை யேத்திப் போந்து
நிறைபுனற் றிருச்சாய்க் காடு தொழுதற்கு நினைந்து செல்வார். (கஉ0)

---

திருவலம்புரம் - பண் - பழம்பஞ்சுரம்.

திருச்சிற்றம்பலம்

கொடியுடைமும்மதிலூடுருவக்குனிவெஞ்சிலைவாங்கி
யிடிபடவெய்தவமரர்பிரானடியாரிசைந்தேத்தத்
துடியிடையாளையோர் பாகமாகத்துதைந்தாரிடம்போலும்
வடிவுடைமேதிவயல்படியும்வலம்புரநன்னகரே

நல்லியனுன்மறையோர்புகலித்தமிழ்ஞானசம்பந்தன்
வல்லியதோலுடையாடையினான்வலம்புரநன்னகரைச்
சொல்லியபாடல்கள்பத்துஞ்சொல்லவல்லவர்தொல்வினைபோய்ச்
செல்வனசேவடிசென்றணுகிச்சிவலோகஞ்சேர்வாரே.

திருச்சிற்றம்பலம்

---

பன்னகப் பூணி னாரைப் பல்லவ னீச்ச ரத்துச்
சென்னியால் வணங்கி யேத்தித் திருந்திசைப் பதிகம் பாடிப்
பொன்னிசூழ் புகாரி னீடு புனிதர்தந் திருச்சாய்க் காட்டு
மன்னுசீர்த் தொண்ட ரெல்லா மகிழ்ந்தெதிர் கொள்ளப் புக்கார் (கஉக)

வானளா வுயர்ந்த வாயி லுள்வலங் கொண்டு புக்குத்
தேனலர் கொன்றை யார்தந் திருமுன்பு சென்று தாழ்ந்து
மானிடந் தரித்தார் தம்மைப் போற்றுவார் மண்பு காரென்
றானெலா முருக வேத்தி யுச்சிமேற் குவித்தார் செங்கை. (கஉஉ)

---

திருச்சாய்க்காடு - பண் - சீகாமரம்.

திருச்சிற்றம்பலம்.

மண்புகார்வான்புகுவர்மனமிளையாரபசியாலுங்
கண்புகார்பிணியறியார்கற்றாருங்கேட்டாரும்
விண்புகாரெனவேண்டாவெண்மாடநெடுவீதித்
தண்புகார்ச்சாய்க்காட்டெந்தலைவன்றாள்சார்ந்தாரே

நொம்பந்துபுடைத்தொல்குநூபுரஞ்சேர்மெல்லடியார்
அம்பந்தும்வரிக்கழலுமரவஞ்செய்பூங்காழிச்
சம்பந்தன்றமிழ்பகர்ந்தசாய்க்காட்டுப்பதியினையும்
எம்பந்தமெனக்கருதியேத்துவார்க்கிடர்கெடுமே.

திருச்சிற்றம்பலம்.

---

(கஉக) புகார் - காவிரிப்பூம் பட்டினம்.

சீரினிற் றிகழ்ந்த பாடற் றிருக்கடைக் காப்புப் போற்றிப்
பாரினிற் பொலிந்த தொண்டர் போற்றிடப் பயில்வார் பின்னும்
ஏரிசைப் பதிகம் பாடி யேதிப்போந் திறைவர் வெண்கா
டாருமெய்க் காத லோடும பணிவதற் கணைந்தா ரன்றே (௧௨௩)

பொன்னிதழ்க் கொன்றை வன்னி புனலிள மதிய னீடு
சென்னியார் திருவெண் காட்டுத் திருத்தொண்ட ரெதிரே சென்றங்
கின்னதன் மையர்க ளாகு மெனவொணு மகிழ்ச்சி பொங்க
மன்னுசீர சண்பை யாளு மன்னரைக் கொண்டு புக்கார (௧௨௪)

மூததமிழ் விரகர் தாமு முதல்வர்கோ புரத்து முன்னர்ச
சிததநீ டுவகை யோடுஞ் சென்றுதாழ்ந் தெழுந்து புககுப்
பததரா மடியார் சூழப் பரமர்கோ யிலைச்சூழ் வந்து
நித்தனுர் தமமுன் பெய்தி நிலமுறத் தொழுது வீழ்ந்தார். (௧௨௫)

மெய்ப்பொரு ளாயி னாரை வெண்காடு மேவி னாரைச்
செப்பரும பதிக மாலை கணகாட்டு நுதன்முன் சேர்ததி
முப்புரஞ் செற்றா பாதஞ் சேருமுக குளமும் பாடி
ஒப்பரு ஞான முணடா ருளமகிழ்ந் தேத்தி வாழ்ந்தார் (௧௨௬)

---

திருவெண்காடு — பண் - சீகாமரம்.

திருச்சிற்றம்பலம்

கணகாட்டுநுதலானுஙகனல்காட்டுஙகையானும்
பெண்காட்டுமுருவானுமபிறைகாட்டுஞ்சடையானும்
பண்காட்டுமிசையானுமபயிர்காட்டுமபுயலானும
வெணகாட்டிலுறைவானுமவிடைகாட்டுஙகொடியானே.

பேயடையாப்பிரிவெய்துமபிள்ளையினோடுள்ளநினை
வாயினவெலாம்பெறுவரையுறவேணடாவொன்றும்
வேயனதோளுமைபங்கன்வெண்காட்டுமுககுளநீர்
தோய்வினையாரவர்தம்மைத்தோயாவாந்தீவினையே

தண்பொழிலசூழ்சண்பையர்கோன்றமிழ்ஞானசம்பந்தன்
விண்பொலிவெண்பிறைச்சென்னிவிகிர்தனுறைவெண்காட்டைப்
பண்பொலிசெந்தமிழ்மாலைபாடியபத்திவைவலலார்
மணபொலியவாழ்ந்தவர்போய்வான்பொலியப்புகுவாரே.

திருச்சிற்றம்பலம்.

---

அருமையாற் புறம்பு போந்து வணங்கியங் கமரு நாளிற்
றிருமுல்லை வாயி லெய்திச் செழுந்தமிழ் மாலை சேர்த்தி

---

(௧௨௬) முககுளம - பரமசிவனுடைய சோமன சூரியன அககினி என்னுந திரி
நேததிரஙகளினின்றுந தோனறிய துளிவடிவாகிய முககுளம.

மருவிய பதிகண் மற்றும் வணங்குவார் மறையோ ரேத்தத்
தருமலி புகலி வந்து ஞானசம் பந்தர் சார்ந்தார். (௧௨௭)

தோணிவீற் றிருந்தார் தம்மைத் தொழுதுமுன் னின்று தூய
ஆணியாம் பதிகம் பாடி யருட்பெரு வாழ்வு கூரச்
சேணுயர் மாட மோங்குந் திருப்பதி யதனிற் செய்ய
வேணியார் தம்மை நாளும் போற்றிய விருப்பின் மிக்கார் (௧௨௮)

வைகுமந் நாளிற் கீழ்பான் மயேந்திரப் பள்ளி வாசஞ்
செய்பொழிற் குருகா வூருந் திருமுல்லை வாயி லுள்ளிட்
டெய்திய பதிக ளெல்லா மின்புற விறைஞ்சி யேத்தித்
தையலாள் பாகர் தம்மைப் பாடினார் தமிழ்ச்சொன் மாலை (௧௨௯)

அவ்வகை மருங்கு சூழ்ந்த பதிகளி லரனார் பொற்றாண்
மெய்வகை ஞான முண்ட வேதியர் விரவிப் போற்றி
உய்வகை மண்ணு ளோருக் குதவிய பதிகம் பாடி
எவ்வகை யோரு மேத்த விறைவரை யேத்து நாளில (௧௩௦)

வேறு

திருநீல கண்டத்துப் பெரும்பாணர் தெள்ளமுதின்
வருநீர்மை யிசைப்பாட்டு மதங்கசூ ளாமணியார்
ஒருநீர்மை யுடனுடைய பிள்ளையார் கழல்வணங்கத்
தருநீர்மை யாழ்கொண்டு சண்பையிலே வந்தணைந்தார் (௧௩௧)

பெரும்பாணர் வரவறிந்து பிள்ளையா ரெதிர்கொள்ளச்
சுரும்பார்செங் கமலமலர்த் துணைப்பாதந் தொழுதெழுந்து
விரும்பார்வத் தொடுமேத்தி மெய்ம்மொழிக ளாற்றுதித்து
வரும்பான்மை தருவாழ்வு வந்தெய்த மகிழ்சிறந்தார் (௧௩௨)

அளவிலா மகிழ்ச்சியினா ரமைநோக்கி யையாநீர்
உளமகிழ விங்கணைந்த வுறுதியுடை யோமென்றே
இளநிலா நகைமுகிழ்ப்ப விசைத்தவரை யுடன்கொண்டு
களநிலவு நஞ்சணிந்தார் பாலணையுங் கவுணியனார் (௧௩௩)

கோயிலினிற் புறமுன்றிற் கொடுபுக்குக் கும்பிடுவித்
தேயுமிசை யாழுங்க ளிறைவருக்கிங் கியற்றுமெனா
ஆயபுகழ்ப் பிள்ளையா ரருள்பெற்ற வதற்கிறைஞ்சி
மேயதொடைத் தந்திரியாழ் வீக்கியிசை விரிக்கின்றார் (௧௩௪)

தானநிலைக் கோல்வடித்துப் படிமுறைமைத் தகுதியினால்
ஆனவிசை யாராய்வுற் றங்கணர்தம் பாணியினை

(௧௩௪) தந்திரி - யாழ்நரம்பு.

மானமுறைப் பாடினியா ருடன்பாடி வாசிக்க
ஞானபோ னகர்மகிழ்ந்தார் நான்மறையோ ரதிசயித்தார். (௧௫௫)

யாழிலெழு மோசையுட னிருவர்மிடற் றிசையொன்றி
வாழிதிருத் தோணியுளார் மருங்கணையு மாட்சியினைத்
தாழுமிரு சிறைப்பறவை படிந்ததனி விசும்பிடைநின்
றேழிசைநூற் கந்தருவர் விஞ்சையரு மெடுத்திசைத்தார் (௧௫௬)

எண்ணருஞ்சீர்த் திருத்தோணி யெம்பெருமான் கழல்பரவிப்
பண்ணமையா ழிசைகூடப் பெரும்பாணர் பாடியபின்
கண்ணுதலா ரருளினாற் காழியர்கோன் கொடுபோந்து
நண்ணியுறை விடஞ்சமைத்து நல்விருந்து சிறந்தளிப்ப. (௧௫௭)

பிள்ளையா ரருள்பெற்ற பெரும்பாணா பிறையணிந்த
வெள்ளநீர்ச் சடையாரை யவர்மொழிந்த மெய்ப்பதிகம்
உள்ளபடி கேட்டலுமே யுருகுபெரு மகிழ்ச்சியராய்த்
தெள்ளமிர்த மருந்தினர்போற் சிந்தைகளிப் புறத்தொழுதார். (௧௫௮)

காழியார் தவப்பயனுங் கவுணியர்தந் தோன்றலார்
ஆழிவிட முண்டவர்த மடிபோற்றும் பதிகவிசை
யாழின்முறை மையினிட்டே யெவ்வுயிரு மகிழ்வித்தார்
ஏழிசையும் பணிகொண்ட நீலகண்ட யாழ்ப்பாணர். (௧௫௯)

சிறியமறைக் களிறளித்த திருப்பதிக விசையாழி
னெறியிலிடும் பெரும்பாணர் பின்னுநீ ரருள்செய்யும்
அறிவரிய திருப்பதிக விசையாழி லிட்டடியேன்
பிறிவின்றிச் சேவிக்கப் பெறவேண்டு மெனத்தொழுதார் (௧௬௦)

மற்றதற்குப் பிள்ளையார் மனமகிழ்வுற் றிசைந்தருளப்
பெற்றவர்தாந் தம்பிரா னருளிதுவே யெனப்பேணிச்
சொற்றமிழ்மா லையினிசைகள் சுருதியாழ் முறைதொடுத்தே
யற்றைநாட் போலென்று மகலாத புடனமர்ந்தார். (௧௬௧)

சிரபுரத்தி லமர்ந்தருளுந் திருஞான சம்பந்தர்
பரவுதிருத் தில்லைநடம் பயில்வாரைப் பணிந்தேத்த
விரவியெழும் பெருங்காதல் வெள்ளத்தை யுள்ளத்தில்
தரவிசையுங் குறிப்பறியத் தவமுனிவர்க் கருள்செய்தார். (௧௬௨)

பிள்ளையா ரருள்செய்யப் பெருந்தவத்தாற் பெற்றெடுத்த
வள்ளலார் தாமுமுடன் செல்வதற்கு மனங்களிப்ப
வெள்ளிமால் வரையென்னத் திருத்தோணி வீற்றிருந்த
புள்ளிமா னுரியாரைத் தொழுதருளாற் புறப்பட்டார். (௧௬௩)

தாவில்யாழ்ப் பாணரொடுந் தாதையார் தம்மோடு
மேவியசீ ரடியார்கள் புடைவரவெங் குருவேந்தர்
பூவின்மே லயன்போற்றும் புகலியினை கடந்துபோய்த்
தேவர்கடம் பெருந்தேவர் திருத்தில்லை வழிச்செல்வார் (௧௪௪)

வேறு.

நள்ளி ருட்கணின் றாடுவா ருறைபதி நடுவுகண் டனபோற்றி
முள்ளு டைப்புற வெள்ளிதழ்க் கேதகை முகிழ்விரி மணஞ்சூழப்
புள்ளு டைத்தடம் பழனமும் படுகரும் புடைகழிந் திடப்போந்து
கொள்ளி டத்திரு நதிக்கரை யணைந்தனர் கவுணியர் குலதீபர் (௧௪௫)

வண்டி ரைத்தெழு செழுமலர்ப் பிறங்கலு மணியுமா ரமுமுந்தித்
தண்ட லைப்பல வளத்தொடும் வருபுனற் றாழ்ந்துசே வடிதாழத்
தெண்டி ரைக்கடற் பவளமும் பணிலமுஞ் செழுமணித் திரண்முத்துங்
கொண்டி ரட்டிவந் தோதமங் கெதிர்கொளக் கொள்ளிடங் கடந்தேறி ()

பல்கு தொண்டர்தங் குழாத்தொடு முடன்வரும் பயின்மறை யவர்சூழச்
செல்க திப்பயன் காண்பவர் போற்களி சிந்தைகூர் தரக்கண்டு
மல்கு தேவரே முதலனைத் துயிர்களும் வணங்கிவேண் டினவெல்லா
நல்கு தில்லைசூழ் திருவெல்லை பணிந்தனர் ஞானவா ரமுதுண்டார். (௧௪௭)

செங்க ணேற்றவர் தில்லையே நோக்கியத் திருந்துல கினிற்கெல்லா
மங்க லந்தரு மழவிளம் போதகம் வருமிரு மருங்கெங்குந்
தங்கு புள்ளொலி வாழ்த்துரை யெடுத்துமுன் றாமரை மறுவாசப்
பொங்கு செம்முகை கரங்குவித் தலர்முகங் காட்டின புனற்பொய்கை ()

கலவ மென்மயி லினங்களித் தழைத்திடக் கடிமணக் குளிர்கால்வந்
துலவி முன்பணிந் தெதிர்கொளக் கிளர்ந்தெழுந் துடன்வருஞ் சுரும்பார்ப்ப
இலகு செந்தளிர் மெய்யொளி சிறந்திட விருக்குழை புடையாட
மலர்மு கம்பொலிந் தசையமென் கொம்பரின் றாடுவ மாச்சோலை. ()

இழைத்த டங்கொங்கை யிமயமா மலைக்கொடி யின்னமு தெனஞானங்
குழைத்த ளித்திட வமுதுசெய் தருளிய குருளையா ரெனக்கண்டு
மழைத்த மந்தமா ருதத்தினு னறுமலர் வண்ணநுண் டுகடூவித்
தழைத்த பொங்கெழின் முகஞ்செய்து வணங்கின தடம்பணை வயற்சாலி

(௧௪௫) நள் இருட்கண் - மகாசங்காரகாலமாகிய நடுயாமத்து (சுடுகாடாகிய கோயிலிலே.) கேதகைமுகிழ் - தாழையின் பூவரும்பு. பழனமும் படுகரும் - வயல்களும் தடாகங்களும். (௧௪௬) மலர்ப்பிறங்கலும் - மலர்க்கூட்டங்களையும் (மலைகளையும்.) ஆரமும் உந்தி - சந்தனமரங்களையும் வாரிக்கொண்டு. தண்டலை - சோலையிலுள்ள. (௧௪௮) இளம்போதகம் - இளங்களிறு. (௧௪௯) குளிர்கால் - தென்றற்காற்று. குழை - இலைக்கொத்து. (௧௫௦) இழை - ஆபரணமணிந்த. குருளையார் - சிங்கக்குட்டியைப்போன்ற ஞானசம்பந்தர்.

ஞால முய்ந்திட ஞானமுண் டவரெழுந் தருளுமந் நலங்கண்டு
சேல லம்புதண் புனற்றடம் படிந்தணை சீதமா ருதமவீச
சால வும்பல கணபெறும பயன்பெறுந் தன்மையிற் களிகூர்வ
போல சைந்திரு புடைமிடைந் தாடின புறம்பணை நறுமபூகம் (௧௫௧)

பவந்த விர்ப்பவர் தில்லைசூ ழெல்லையின் மறையவா பயிலவேள்விச்
சிவந்த ரும்பய னுடையவா குதிகளின் செழும்புகைப் பரப்பாலை
தவந்த ழைப்பவந தருளிய பிள்ளையார் தாமணை வுறமுன்னே
நிவந்த நீலநுண டுகிலவிதா னித்தது போன்றது நெடுவானம (௧௫௨)

கரும்பு செந்நெல்பைங கமுகொடு கலநதுயா கழனியம் பணைநீங்கி
யரும்பு மென்மலர் தளிர்பல மூலமென் றனைத்தினு காமான
மருங்கி னந்தண வனமபணிந் தணைநதனா மாடமா ளிகையோங்கி
நெருங்கு தில்லைசூழ் நெடுமதிற் றென்றிரு வாயினே ரணித்தாக (௧௫௩)

பொங்கு கொங்கையிற் கறந்தமெய்ஞ் ஞானமாம போனகம் பொற்குன்ற
மங்கை செங்கையா லூட்டவுண டருளிய மதலையாா வநதாரென்
றங்கண் வாழ்பெருந தில்லைவா ழநதண ரனபாக ளுடனீணடி
எங்கு மங்கல வணிமிக வலங்கரித தெதிாகொள வணைவாாகள். (௧௫௪)

வேத நாதமு மங்கல முழக்கமும விசுமபிடை நிறைநதோங்கச
சீத வாசநீா நிறைகுடந தீபங்க டிசையெலா நிறைநதாாச
சோதி மாமணி வாயிலின புறஞ்சென்று சோபன வாககமுஞ் சொலலிக
கோதி லாதவா ஞானசம பநதரை யெதிாகொணடு கொடுபுககாா (௧௫௫)

செலவ மலகிய தில்லைமூ தூரினிற் றெனறிசைத திருவாயில
எல்லை நீங்கியுள புகுநதிரு மருங்குநின றெடுக்குமத தொலிசூழ
மல்ல லாவண மறுகிடைக கழிநதுபோய மறையவா நிறைவாழ்க்கைத
தொல்லை மாளிகை நிரைததிரு வீதியைத தொழுதணைந தனர்தூயோர் ()

மலர்ந்த பேரொளி குளிர்தரச சிவமணங கமழ்நதுவான் றுகண்மாறிச
சிலம்ப லமபுசே வடியவா பயில்வுறுஞ் செம்மையாற் றிருததொணடு
கலந்த வன்பாதஞ் சிந்தையிற நிகழ்திரு வீதிகண களிசெய்யப
புலங்கொண மைந்தனு ரெழுநிலைக கோபுரம பணிநதெழுந தனர்போற்றி.

நீடு நீணிலைக் கோபுரத துள்புக்கு நிலவிய திருமுன்றின்
மாடு செம்பொனின் மாளிகை வலஙகொணடு வானுற வளர்திங்கள்
சூடு கின்றபே ரம்பலந் தொழுதுபோந தருமறை தொடர்ந்தேதத
ஆடு கினறவர் முன்புற வணைந்தன ரணிகிளர் மணிவாயில் (௧௫௮)

நந்தி யெம்பிரான் முதற்கண நாதாக ணலங்கொள்பண் மறைகூட
அந்த மில்லவ ரணுகிமுன் னெருழதிரு வணுக்கனுந் திருவாயில

---

(௧௫௩) ஆகரமான - காரணமான, பிறப்பிடமான. (௧௫௬) ஆவணமறுகு-திருக் கோபுரவாயிலின் நேரிலுள்ள வீதி. (௧௫௯) அணுக்கனுந் திருவாயில - சிவபிரான் தம மையடைந்தாரைச் சமீபராகச் செய்யுந் திருவாயில.

சிந்தை யார்வமும் பெருகிடச் சென்னியிற் சிறுச்செய கையேற
உய்ந்து வாழ்திரு நயனங்கள் களிகொள்ள வுருகுமன் பொடுபுக்கார். (௧௫௯)

அண்ண லார்தமக களித்தமெய்ஞ் ஞானமே யானவம் பலமுந்தம்
உண்ணி றைந்தஞா னதெழு மானந்த வொருபெருந் தனிக்கூத்துங
கண்ணின் முன்புறக் கண்டுகும் பிட்டெழுங களிப்பொடுங் கடற்காழிப்
புண்ணி யக்கொழுந் தனையவர் போற்றுவார் புனிதரா டியபொற்பு. (௧௬௦)

உணர்வி னேர்பெற வருஞ்சிவ போகததை யொழிவின்றி யுருவின்கண்
அணையு மைம்பொறி யளவினு மெளிவர வருளினை யெனப்போற்றி
இணையில் வண்பெருங கருணையே யேதிமுன னெடுத்தசொற் பதிகத்திற்
புணரு மின்னிசை பாடின ராடினா பொழிந்தனர் விழிமாரி (௧௬௧)

வேறு.

ஊழி முதல்வர்க் குரிமைத் தொழிற்சிறப்பால்
வாழிதிருத தில்லைவா ழுநதணரை முன்வைததே
ஏழிசையு மோஙக வெடுததா ரெமையாளுங
காழியர்தங காவலனார் கறறாங கெரியோமபி. (௧௬௨)

கோயில் - பண் - குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

கற்றாங்கெரியோம்பிககலியைவாராமே
செற்றார்வாழ்தில்லைசசிற்றம்பலமேய
முற்றாவெண்டிஙகணமுதலவன்பாதமே
பற்றாநின்றாரைப்பற்றாபாவமே

ஞாலத்துயர்காழிஞானசம்பந்தன்
சீலத்தார்கொள்கைசசிற்றம்பலமேய
சூலப்படையானைசசொன்னதமிழ்மாலை
கோலத்தாற்பாடவல்லார்நல்லாரே

திருச்சிற்றம்பலம்.

பண்ணார் பதிகத் திருக்கடைககாப் புப்பரவி
உண்ணாடு மென்பு முயிருங் கரைந்துருக்கும்
விண்ணா யகன்கூததை வெட்டவெளி யேதிளைத்துக்
கண்ணா ரமுதுண்டார காலம் பெறவழுதார். (௧௬௩)

முன்மா லயனறியா மூர்த்தியார் முன்னின்று
சொன்மாலை யாற்கால மெல்லாந் துதித்திறைஞ்சிப்
புன்மா மறைவெள்ளஞ் சூழ்ந்து பரவுகின்ற
பொன்மா ளிகையைவலங் கொண்டு புறம்போந்தார். (௧௬௪)

செல்வத் திருமுன்றிற் றாழ்ந்தெழுந்து தேவர்குழா
மல்குந் திருவாயில் வந்திறைஞ்சி மாதவங்கள்
நல்குந் திருவீதி நான்குந் தொழுதங்கண்
அல்குந் திறமஞ்சு வார்சண்பை யாண்டகையார் (௧௬௫)

செய்ய சடையார் திருவேட் களஞ்சென்று
கைதொழுது சொற்பதிகம் பாடிக் கழுமலக்கோன்
வைகி யருளுமிட மங்காக மன்றாடும்
ஐயன் றிருக்கூத்துங் கும்பிட் டணைவுறுநாள் (௧௬௬)

கைம்மான் மறியாரா கழிப்பாலை யுள்ளணைந்து
மெய்ம்மாலைச் சொற்பதிகம் பாடி விரைக்கொன்றைச்
செம்மாலை வேணித் திருவுச்சி மேவியுறை
அம்மானைக் கும்பிட் டருந்தமிழும் பாடினார். (௧௬௭)

பாடும் பதிகவிசை யாழ்ப்பாண ரும்பயிற்றி
நாடுஞ் சிறப்பெய்த நாளுநடம் போற்றுவார்
நீடுந் திருத்தில்லை யந்தணர்க ணீண்மன்றுள்
ஆடுங் கழற்கணுக்க ராம்பே றதிசயிப்பார். (௧௬௮)

ஆங்கவர்தஞ் சீலத் தளவின் மையுநினைந்தே
ஓங்கி யெழுங்காத லொழியாத வுள்ளத்தார்
தேங்கமழுஞ் சோலைத் திருவேட் களங்கடந்து
பூங்கிடங்[illegible]லியூர் புகக்கணையும் பொழுதின்கண். (௧௬௯)

அண்டத் [illegible]ர நளா லணிதில்லை
முண்டத[illegible]மூவா யிரவர்களுந்
தொண்ட[illegible]மக் கணநாத ராய்த்தோன்றக்
கண்டப் ப[illegible]நம் பாணர்க்குங் காட்டினார். (௧௭௦)

செல்வம் பிரியாத் தில்லைவா ழந்தணரும்
எல்லையில்சீர்ச் ச[illegible]பை யிளவே றெழுந்தருளி
ஒல்லை யிறைஞ்சாமுன் றாமு முடனிறைஞ்சி
மல்ல லணிவீதி மருங்கணைய வந்தார்கள் (௧௭௧)

பொங்கி யெழுங்காதல் புலனாகப் பூசுரர்தஞ்
சிங்க மனையார் திருமுடியின் மேற்குவித்த
பங்கயத்தின் செவ்வி பழித்து வனப்போங்குஞ்
செங்கை யொடுஞ்சென்று திருவாயி லுட்புக்கார். (௧௭௨)

ஒன்றிய சிந்தை யுருக வுயர்மேருக்
குன்றனைய பேரம் பலமருங்கு கும்பிட்டு

---

(௧௬௫) அலகும திறம - வசிக்க.

மன்று ணிறைந்தாடு மாணிக்கக் கூத்தரெதிர்
சென்றணைந்து தாழ்ந்தார் திருக்களிற் றுப்படிக்கீழ் (௧௭௩)

வேறு.

ஆடி னாய்நறு நெய்யொடு பாலயி ரென்றெடுத் தார்வத்தாற்
பாடி னார்பின்னு மப்பதி கத்தினிற் பரவிய பாட்டொன்றி
னீடு வாழ்தில்லை நான்மறை யோர்தமைக் கண்டவந் நிலையெல்லாங்
கூடு மாறுகோத் தவர்தொழு தேத்துசிற் றம்பல மெனக்கூறி. (௧௭௪)

## திருக்கோயில் - பண் - காந்தாரபஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

ஆடினாய்நறுநெய்யொடுபாலயிரந்தணர்பிரியாதசிற்றம்பல
நாடினாயிடமாநறுங்கொன்றைநயந்தவனே
பாடினாய்மறையோடுபல்கீதமும்பல்சடைப்பனிகால்கதிர்வெண்டிங்க
சூடினாயருளாய்சுருங்கவெமதொல்வினையே [ள்

நாறுபூமபொழிலணியகாழியுண்மறைவல்லஞானசம்பந்தன்
ஊறுமின்றமிழாலுயர்ந்தாருறைதில்லைதன்னு
ளேறுதொல்புகழேந்துசிற்றம்பலத்தீசனையிசையாற்சொன்னபத்திவை
கூறுமாறுவல்லாருயர்ந்தாரொடுங்கூடுவரே.

திருச்சிற்றமபலம்

இன்ன தன்மையி லின்னிசைப் பதிகமுந் திருக்கடைக் காப்பேற்றி
மன்னு மானந்த வெள்ளத்திற் றிளைத்தெதிர வந்துமுன் னின்றாடும்
பின்னு வார்சடைக் கூத்தர்பே ரருள்பெறப் பிரியாத விடைபெற்றுப்
பொன்னி னம்பலஞ் சூழ்ந்துதாழ்ந்தெழுந்துபோந் தணைந்தனர் புறமுன்றில்

அப்பு றத்திடை வணங்கியங் கருளுட னணிமணித் திருவாயில்
பொற்பு றத்தொழு தெழுந்துடன் போதரப் போற்றிய புகழ்ப்பாணர்
நற்ப தந்தொழு தடியனேன் பதிமுத னதிநிவாக் கரைமேய
ஒப்பி லானங்கள் பணிந்திட வேண்டுமென் றுரைசெய வதுநேர்வார். (௧௭௬)

பொங்கு தெண்டிரைப் புனிதநீர் நிவாக்கரைக குடதிசை மிசைப்போந்து
தங்கு தந்தையா ருடன்பரி சனங்களுந் தவமுனி வருஞ்செல்லச்
செங்கை யாழ்த்திரு நீலகண் டப்பெரும் பாணனா ருடன்சேர
மங்கை யார்புகழ் மதங்கசூ ளாமணி யாருடன் வரவந்தார். (௧௭௭)

இருந்த டங்களும் பழனமுங் கடந்துபோ யெருக்கத்தம் புலியூரின்
மருங்கு சென்றுற நீலகண் டப்பெரும் பாணனார் வணங்கிக்கார்
நெருங்கு சோலைசூ ழிப்பதி யடியனேன் பதியென நெடிதின்புற்
றருங்க லைச்சிறு மழவிளங் களிறனை ரங்கணைந் தருள்செய்வார். (௧௭௮)

ஐயர் நீரவ தரித்திட விப்பதி யளவின்மா தவமுன்பு
செய்த வாறெனச் சிறப்புரைத் தருளியச் செழும்பதி யிடங்கொண்ட
மைகொள் கண்டர்தங் கோயிலி னுட்புகுந் துவலங்கொண்டு வணங்கிப்பார்
உய்ய வந்தவர் செழுந்தமிழ்ப் பதிகமங் கிசையுட னுரைசெய்தார். (௧௭௯)

அங்கு நின்றெழுந் தருளிமற் றவருட னம்பொன்மா மலைவல்லி
பங்கர் தாமினி துறையுநற் பதிபல பரிவொடும் பணிந்தேத்தித்
துங்க வண்டமிழ்த் தொடைமலர் பாடிப்போய்த் தொலைவிலவெங் குருவேந்தர்
செங்க ணேறறவர் திருமுது குன்றினைத் தொழுதுசென் றணைகின்றார் [ன்

மொய்கொண் மாமணி கொழித்துமுத் தாறுசூழ் முதுகுன்றை யடைவோமெ
றெய்து சொன்மலர் மாலைவண் பதிகத்தை யிசையொடும் புனைந்தேத்திச்
செய்த வத்திரு முனிவருந் தேவருந் திசையெலா நெருங்கப்புக்
கையர் சேவடி பணியுமப் பொருப்பினி லாதர வுடன்சென்றார். (௧௮௧)

வான நாயகர் திருமுது குன்றினை வழிபட்டு வலங்கொள்வார்
தூந றுந்தமிழ்ச் சொல்லிருக் குக்குறட் டிணைமலர் மொழிந்தேத்தி
ஞான போனகர் நம்பர்தங் கோயிலை நண்ணியங் குள்புக்குத்
தேன லம்புதண் கொன்றையார் சேவடி திளைத்தவின் பொடுதாழ்ந்தார் ()

தாழ்ந்தெ ழுந்துமுன் முரசதிர்ந் தெழுமெனுந் தண்டமிழ்த் தொடைசாத்தி
வாழ்ந்து போந்தங்கண் வளம்பதி யதனிடை வைகுவார் மணிவெற்புச்
சூழ்ந்த தண்புனல் சுலவுமுத் தாற்றொடு தொடுத்தசொற் றொடைமாலை
வீழ்ந்த காதலாற் பலமுறை விளம்பியே மேவினர் சிலநாள்கள். (௧௮௩)

---

### திருமுதுகுன்றம் – திருமுக்கால் – பண் – சாதாரி.

திருச்சிற்றம்பலம்

முரசதிர்ந்தெழுதிருமுதுகுன்றமேவிய, பரசமர்படையுடையீரே
பரசமர்படையுடையீருமைப்பரவுவா, ரரசாகவுலகிலாவாரே.

மூடியசோலைசூழ்முதுகுன்றத்தீசனை, நாடியஞானசம்பந்தன்
பாடியஞானசெந்தமிழ், பாடியவவர்பழியிலரே

திருச்சிற்றம்பலம்

---

ஆங்கு நாதரைப் பணிந்துபெண் ணாகட மணைந்தரு மறையோசை
யோங்கு தூங்கானை மாடத்து ளமர்கின்ற வொருதனிப் பரஞ்சோதி
பாங்க ணைந்துமுன் வலங்கொண்டு பணிவுற்றுப் பரவுசொற் றமிழ்மாலை
தீங்கு நீங்குவீர் தொழுமின்க ளெனுமிசைப் பதிகமுந் தெரிவித்தார். ()

---

### திருத்தூங்கானைமாடம் – பண் – பழந்தக்கராகம்.

திருச்சிற்றம்பலம்.

ஒடுங்கும்பிணிபிறவிகேடென்றிவையுடைத்தாயவாழ்க்கையொழியத்தவ
மடங்குமிடங்கருதிநின்றீரெல்லாமடிகளடிநிழற்கீழாளாம்வண்ணங்

கிடங்குமதிலுஞ்சுலாவியெங்குங்கெழுமனைகடொறுமறையின்னொலி
தொடங்குங்கடந்தைத்தடங்கோயில்சேர்தூங்கானைமாடந்தொழுமின்களே

மண்ணார்முழவதிருமாடவீதிவயற்காழிஞானசம்பந்தனல்ல [ன்
பெண்ணாகடத்துப்பெருங்கோயில்சேர்பிறையுரிஞ்சுந்தூங்கானைமாடமேயா
கண்ணார்கழல்பரவுபாடல்பத்துங்கருத்துணரக்கற்றாருங்கேட்டாரும்போய்
விண்ணோருலகத்துமேவிவாழும்விதியதுவேயாகும்வினையுமாயுமே

திருச்சிற்றம்பலம்.

---

வேறு.

கருவ ரைப்பிற் புகாதவர் கைதொழும்
ஒருவ ரைத்தொழு துள்ள முவந்துபோய்ப்
பெருவ ரத்தினிற் பெற்றவர் தம்முடன்
றிருவ ரத்துறை சேருமென் றேகுவார். (௧௮௫)

முந்தை நாள்க ளொராரொரு காண்முது
தந்தை யார்பியன் மேலிருப் பார்தவிர்ந்
தந்த ணாள ரவரருகே செலச்
சிந்தை செய்திருப் போமுன் சென்றனர். (௧௮௬)

ஆதி யார்த மரத்துறை நோக்கியே
காத லாலணை வாரகடி தேகிடத
தாதை யாரும் பரிவுறச் சம்பந்தர்
பாத தாமரை நொந்தது பைப்பய (௧௮௭)

மறைய வனத்து மொருவடி வாமென
நிறைம திப்பிள்ளை நீணிலஞ் சேர்ந்தெனத்
துறைய லைக்கங்கை சூடு மரத்துறை
இறைவ ரைத்தொழு வான்விரைந் தேகினார். (௧௮௮)

பாச மற்றில ராயினும் பார்மிசை
யாசை சங்கரற் காயின தன்மையாற்
றேசு மிக்க திருவுரு வானவர்
ஈச னைத்தொழு தேதொழு தேகினார் (௧௮௯)

இந்த மாநிலத் தின்னிரு ணீங்கிட
வந்த வைதிக மாமணி யானவா
சிந்தை யாரமு தாகிய செஞ்சடைத்
தந்தை யார்கழ றாழ்ந்தெழுந் தேகினார் (௧௯௦)

மாறன் பாடி யெனும்பதி வந்துற
ஆறு செல்வருத் தத்தி னசைவினால்

(௧௮௭) பைபபய - சிறிது சிறிது. (௧௯௧) ஆறு செல் வருத்தத்தின் அசைவினால - வழியிறபோகும வருததததினாலாகிய சோர்வினால்

வேறு செல்பவர் வெய்துறப் பிள்ளையார்
ஏறு மஞ்செழுத் தோதியங் கெய்திட. (௧௬௧)

உய்ய வந்தசம் பந்த ருடன்வந்தார்க்
கெய்து வெம்மை யிளைப்பஞ்சி னன்போலக்
கைக ளாயிரம் வாங்கிக் கரந்துபோய்
வெய்ய வன்சென்று மேலகடல் வீழ்ந்தனன் (௧௬௨)

அற்றை நாளிர வப்பதி யின்னிடைச்
சுற்று நீடிய தொண்டர்கள் போற்றிடப்
பெற்ற மூர்ந்த பிரான்கழல் பேணுவார
வெற்றி மாதவத் தோருடன் மேவினார் (௧௬௩)

இந்நி லைக்க ணெழில்வளர் பூந்தராய்
மன்ன னார்தம் வழிவருத் தந்தனை
யன்ன மாடுந் துறைநீ ரரத்துறைச்
சென்னி யாற்றர் திருவுளஞ் செய்தனர். (௧௬௪)

ஏறு தற்குச் சிவிகை யிடக்குடை
கூறி யூதக் குலவுபொற் சின்னங்கள்
மாறின் முத்தின் படியினன் மன்னிய
நீறு வந்த நிமல ரருளுவார் (௧௬௫)

நீடு வாழ்பதி யாகுநெல் வாயிலின்
மாட மாமனை தோறு மறையோர்க்குக்
கூடு கங்குற் கனவிற் குலமறை
தேடு சேவடி தோன்றமுன் சென்றுபின். (௧௬௬)

ஞான சம்பந்த னம்பா லணைகின்றான்
மான முத்தின் சிவிகை மணிக்குடை
யான சின்னநம் பாற்கொண் டருங்கலைக்
கோன வன்பா லணைந்து கொடுமென. (௧௬௭)

அந்த ணாள ருரைத்தவப் போழ்தினில்
வந்து கூடி மகிழ்ந்தற் புதமுறுஞ்
சிந்தை யோடுஞ் செழுநீ ரரத்துறை
யிந்து சேகரர் கோயில்வந் தெய்தினர். (௧௬௮)

ஆங்கு மற்ற வருளடி யாருடன்
ஓங்கு கோயிலுள் ளார்க்குமுண் டாயிட
ஈங்கி தென்ன வதிசய மென்பவர்
தாங்க ளம்மறை யோர்கண்முன் சாற்றினார். (௧௬௯)

---

(௧௬௧) வேறு செல்பவர் வெய்துற - தம்முடன்வரும் திருக்கூட்டங்களுங் களைப்படைய.

சால மிக்க வியப்புறு தன்மையின்
பால ராதலும் பள்ளி யெழுச்சியின்
கால மெய்திடக் காதல் வழிப்படுஞ்
சீல மிக்கார் திருக்காப்பு நீக்கினார். (௨௦௦)

திங்க ணீர்மைச் செழுந்திரண் முத்தினாற்
றுங்க வெண்குடை தூய சிவிகையும்
பொங்க வூதும் பொருவருஞ் சின்னமும்
அங்க ணாத ரருளினாற் கண்டனர் (௨௦௧)

கண்ட பின்னவர் கைதலை மேற்குவித்
தெண்டி சைக்கும் விளக்கிவை யாமெனத்
தொண்ட ரோடு மறையவர் சூழ்ந்தெழுந்
தண்டர் நாடு மறிவுற வார்த்தனர். (௨௦௨)

சங்கு துந்துபி தாரைபே ரிம்முதற்
பொங்கு பல்லிய நாதம் பொலிந்தெழ
அங்க ணன்னரு ளாலவை கொண்டுடன்
பொங்கு காத லெதிர்கொளப் போதுவார் (௨௦௩)

மாசில் வாய்மைநெல் வாயின் மறையவர்
ஆசில் சீர்சசண் பை யாண்டகை யார்க்கெதிர்
தேசு டைசசிவி கைமுத லாயின
ஈச ரின்னரு ளாற்றாங்கி யேகினார் (௨௦௪)

இத்த லையிவ ரின்னண மேகினார்
அத்த லைச்சண்பை நாதர்க்கு மவ்விரா
முத்த நற்சிவி கைமுத லாயின
உய்த்த ளிக்கும் படிமுன் னுணர்த்துவார் (௨௦௫)

அள்ள னீர்வயல் சூழு மரத்துறை
வள்ள லாரநா மகிழ்ந்தளிக் கும்மவை
கொள்ள லாகுங்கொண டுய்ததல்செய் வாயென
உள்ள வாறருள் செய்ய வுணர்ந்தபின். (௨௦௬)

சண்பை யாளியார் தாங்கண்ட பேரருட்
பண்பு தந்தையார் தம்முடன் பாங்கமர்
தொண்ட ருக்கருள் செய்து தொழாமுனம்
விண்பு லப்பட வீங்கிரு ணீங்கலும் (௨௦௭)

மாலை யாமம் புலர்வுறும் வைகறை
வேலை செய்வினை முற்றிவெண் ணீறணி

(௨௦௬) அள்ளல்-சேறு நிறைந்த.

கோல மேனிய ராய்க்கைம மலர்குவித்
தேல வஞ்செழுத் தோதி யெழுந்தனா (உoஅ)

போத ஞானப் புகலிப் புனிதரைச
சீத முத்தின் சிவிகைமே லேற்றிடக
காதல் செய்பவன் போலக கருஙகடன்
மீது தோினவந் தெய்தினன் வெய்யவன் (உoக)

ஆய போழ்தி னரவெனு மார்ப்புடன்
றூய முததின் சிவிகை சுடர்ககுடை
மேய சின்னஙகள் கொண்டுமெய் யன்பரோ
டேய வந்தணா தாமெதிர் தோன்றினர் (உகo)

வந்து தோன்றிய வந்தணர் மாதவா
கநத வார்பொழிற் காழிநன் னுடர்முன்
அந்த மில்சீ ரரத்துறை யாதியாா
தந்த பேரரு டாஙகுவீ ரென்றனா (உகக)

என்று தஙகளுக கீச ரருளசெயத
தொன்று மஙகொழி யாமை யுரைததுமுன்
நின்று போற்றித தொழுதிட நோந்தது
மன்று ளாரரு ளென்று வணஙகினர் (உகஉ)

மெயமமை போற்றி விடாத விருபபினற்
றமமை யுன்னும பரிசுதந தாளபவா
செமமை நிததில யானச சிறபபருள்
எமமை யாளுவப் பானின் றளிததே. (உகங)

எந்தை யீச னெனவெடுத் திவ்வருள்
வநத வாறுமற் றெவவண்ண மோவென்று
சிநதை செய்யுந திருப்பதி கததிசை
புநதி யாரப் புகன்றெதிா போற்றுவார். (உகச)

---

திருநெல்வாயிலரத்துறை - பண் - பியந்தைக்காந்தாரம்.

திருச்சிற்றமபலம.

எந்தையீசனெமபெருமானேறமர்கடவுளென்றேத்திச
சிநதைசெயபவர்ககலலால்செனறுகைகூடுவதன்றாற்
கநதமாமலருநதிககடும்புனனிவாமலகுகரைமேல
அந்தணசோலைநெலவாயிலரததுறையடிகடம்மருளே.

கறையினர்பொழில்சூழ்ந்தகாழியுள்ஞானசம்பந்தன்
நறையும்பூம்புனலபரநதவாததுறையடிகடமமருளே

முறைமையாற்சொன்னபாடன்மொழியுமம்மாந்தர்தம்வினைபோய்ப்
பறையுமையுறவில்லைபுராட்டிவைபத்தும்வல்லார்கட்கே.

திருச்சிற்றம்பலம்,

---

பொடிய ணிந்த புராண னரத்துறை
யடிக ளம்மரு ளேயிது வாமெனப்
படியி லாதசொன் மாலைகள் பாடியே
நெடிது போற்றிப் பதிக நிரப்பினார். (௨௧௫)

சோதி முத்தின் சிவிகைசூழ் வந்துபார்
மீது தாழ்ந்துவெண் ணீற்றொளி போற்றிநின்
றோதி யாரரு ளாதலி லஞ்செழுத்
தோதி யேறினா ருய்ய வுலகெலாம். (௨௧௬)

வேறு

தொண்ட ரார்த்தனர் சுருதிக ளார்த்தன தொல்லை
அண்ட ரார்த்தன ரகிலமு மார்ப்புட னெய்தக்
கொண்ட லார்த்தன முழவமு மார்த்தன குழுமி
வண்ட ருப்பொலி மலர்மழை யார்த்தது வானம். (௨௧௭)

வளையு மார்த்தன வயிர்களு மார்த்தன மறையின்
கிளையு மார்த்தன கிளைஞரு மார்த்தனர் கெழுவுங்
களைக ணார்த்ததோர் கருணையி னார்கவின் முத்தின்
விளையு மாககதிர் வெணகுடை யார்த்தது மிசையே. (௨௧௮)

பல்கு வெணகதிர்ப் பத்திசேர் நித்திலச் சிவிகைப்
புல்கு நீற்றொளி யுடன்பொலி புகலிகா வலனார்
அல்கு வெள்வளை யலைதெழு மணிநிரைத் தரங்க
மல்கு பாற்கடல் வளர்மதி யுதித்தென வந்தார் (௨௧௯)

நீடு தொண்டர்கண் மறையவ ரேனையோர் நெருங்கி
மாடு கொண்டெழு மகிழ்ச்சியின் மலர்க்கைமேற் குவித்தே
யாடு கின்றன ரயர்ந்தன ரளவிலா னந்தங்
கூடு கின்றகண் பொழிபுனல் வெள்ளத்திற் குளித்தார். (௨௨0)

செய்ய பொன்புனை வெண்டா ளத்தணி சிறககச
சைவ மாமறைத் தலைவர்பாற் பெறுந்தனிக் காளம்
வைய மேழுடன் மறைகளு நிறைதவத் தோரும்
உய்ய ஞானசம் பந்தன்வந் தானென வூத. (௨௨௧)

---

(௨௧௮) வயிர்களும - கொம்புகளும. (௨௧௯) பல்கு - நிறைந்த. புல்கு - நீங்
காத, அல்கு - பொருந்திய. வளை - சங்குகளை. தரங்கமல்கு - அலைகள் நிறைந்த,

சுற்று மாமறைச் சுருதியின் பெருகொலி நடுவே
தெற்றி னார்புர மெரித்தவர் தருதிருச் சின்ன
முற்று மானவண் ஞானமே முலைசுரந் தூட்டப்
பெற்ற பாலறா வாயன்வந் தானெனப் பிடிக்க. (௨௨௨)

புணர்ந்த மெய்த்தவக் குழாத்தொடும் போதுவார் முன்னே
யிணைந்த நித்திலத் திலங்கொளி நலங்கிளர் தாரை
யணைந்த மாமறை முதற்கலை யகிலமு மோதா
துணர்ந்த முத்தமிழ் விரகன்வந் தானென்ன வூதி. (௨௨௩)

தெருளு மெய்க்கலை விளக்கவும் பாருளோர் சிந்தை
யிருளு நீங்கவு மெழுதுசொன் மறையளிப் பவர்தாம்
பொருளு ஞானமும் போகமும் போற்றியென் பாருக்
கருளு மங்கணர் திருவாத் துறையைவந் தணைந்தார். (௨௨௪)

வந்து கோபுர மணிநெடு வாயில்சேய்த் தாகச
சந்த நித்திலச் சிவிகைநின் றிழிந்துதாழ்ந் தெழுந்து
சிந்தை யார்வமு மகிழ்ச்சியும் பொங்கிமுன் செல்ல
அந்தி நாண்மதி யணிந்தவர் கோயிலுள் ளடைந்தார். (௨௨௫)

மன்னு கோயிலை வலங்கொண்டு திருமுன்பு வந்து
சென்னி யிற்கரங் குவித்துவீழ்ந் தன்பொடு திளைப்பார்
என்னை யும்பொரு ளாகவின் னருள்புரிந் தருளும்
பொன்ன டித்தலத் தாமரை போற்றியென் றெழுந்தார். (௨௨௬)

சூடி னார்கர கமலங்கள் சொரிந்திழி கண்ணீர்
ஆடி னார்திரு மேனியி லாத்துறை விரும்பி
நீடி னார்திரு வருட்பெருங் கருணையே நிகழப்
பாடி னார்திருப் பதிகமே ழிசையொடும் பயில. (௨௨௭)

இசைவி ளங்கிட வியல்பினிற் பாடிநின் றேத்தி
மிசைவி ளங்குநீர் வேணியா ரருளினான் மீண்டு
திசைவி ளங்கிடத் திருவருள் பெற்றவர் சிலநாள்
அசைவில் சீர்த்தொண்டர் தம்முட னப்பதி யமர்ந்தார். (௨௨௮)

தேவர் தம்பிரான் றிருவாத் துறையினி லிறைஞ்சி
மேவு நாட்களில் விமலனார் நெல்வெண்ணெய் முதலாத்
தாவி லன்பர்க டம்முடன் றொழுதுபின் சண்பைக்
காவ லாரருள் பெற்றாருடன் கலந்துமீண் டணைந்தார். (௨௨௯)

விளங்கு வேணுபு ரத்திருத் தோணிவீற் றிருந்த
களங்கொள் கண்டர்தங் காதலி யாருடன் கூட
உளங்கொ ளப்புகுந் துணர்வினில் வெளிப்பட வருளி
வளங்கொள் பூம்புனற் புகலிமேற் செலமனம் வைத்தார். (௨௩0)

அண்ண லார்திரு வரத்துறை யடிகளை வணங்கி
நண்ணு பேரரு ளால்விடை கொண்டுபோய் நடங்கொண்
டுண்ணி றைந்தபூங் கழலிணை யுச்சிமேற் கொண்டே
வெண்ணி லாமலர் நித்திலச் சிவிகைமேற் கொண்டார் (௨௩௧)

சிவிகை முத்தினிற் பெருகொளி திசையெலாம் விளக்கக்
கவிகை வெண்மதிக் குளிரொளி கதிர்செய்வான் கலப்பக்
குவிகை மேற்கொண்டு மறையவர் குணலையிட் டாடப்
புவிகைம் மாறின்றிப் போற்றவந் தருளினார் போந்தார் (௨௩௨)

மறைமு ழங்கின தழங்கின வண்டமிழ் வயிரின்
குறைந ரன்றன முரன்றன வளைக்குலங் காளம்
முறையி யம்பின வியம்பல வொலித்தன முரசப்
பொறைக றங்கின பிறங்கின போற்றிசை யரவம். (௨௩௩)

உடைய பிள்ளையார் வருமெல்லை யுள்ளவப் பதியோர்
புடையி ரண்டினுங் கொடியொடு பூந்துகில் விதான
நடைசெய் காவணந் தோரணம் பூகநற் கதலி
மிடையு மாலைகள் நிறைகுடம் விளக்கொடு நிரைத்தார் (௨௩௪)

அனைய செய்கையா லெதிர்கொளும் பதிகளா னவற்றின்
வினைத ரும்பவந் தீர்ப்பவர் கோயில்கண் மேவிப்
புனையும் வண்டமிழ் மொழிந்தடி பணிந்துபோந் தணைந்தார்
பனைநெ டுங்கைமா வுரித்தவர் மகிழ்பெரும் பழுவூர் (௨௩௫)

வேறு

அங்கணைந் திளம்பிறை யணிந்த சென்னியார்
பொங்கெழிற் கோபுரந் தொழுது புக்கபின்
றுங்கநீள் விமானத்தைச் சூழ்ந்து வந்துமுன்
பங்கயச் சேவடி பணிந்து பாடுவார் (௨௩௬)

மண்ணினிற் பொலிகுல மலையர் தாந்தொழு
தெண்ணில்சீர்ப் பணிகள்செய் தேத்துந் தன்மையில்
நண்ணிய வகைசிறப் பித்து நாதரைப்
பண்ணினிற் றிகழ்திருப் பதிகம் பாடினார் (௨௩௭)

---

### திருப்பழுவூர் திருவிராகம் - பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்

எண்ணுமோரெழுத்துமிசையின்கிளவிதேர்வார்
கண்ணுமுதலாயகடவுட்கிடமிதென்பார்

---

(௨௩௨) குணலை-பேரானந்த மேம்பாட்டால் வாயினின்றும் வெளிப்படும் ஓரொலி. (௨௩௩) வயிர் - ஊதுகொம்பு. (௨௩௪) நடைகாவணம் - நடைப்பந்தர். (௨௩௭) மலையர் - மலையாளர்.

மண்ணின்மிசையாடிமலையாளர்தொழுதேத்திப்
பண்ணியொலிகொண்டுபயில்கின்றபழுவூரே.

அந்தணாகளானமலையாளரவரேத்தும்
பநதமலிகின்றபழுவூரரனையாரச்
சந்தமிகுஞானசமபநதனுரைபேணி
வந்தவணமேதநுமவர்வானமுடையாரே
திருச்சிற்றம்பலம்.

---

பாவின மிசைவழி பாடி யங்ககன்
றியாவருந் தொழுதட னேத்த வெய்தினர்
மூவுல குய்யநஞ் சுண்ட மூர்த்தியார்
மேவிய பெருந்திரு விசய மங்கையில். (௨௩௯)

அந்தணர் விசயமங் கையினி லங்கணா
தந்தனி யாலயஞ் சூழ்ந்து தாழ்ந்துமுன்
வந்தனை செய்துகோ தனத்தை மன்னிய
செந்தமிழ் மாலையிற் சிறப்பித் தேத்தினர் (௨௩௪)

---

திருவிசயமங்கை - பண் - காந்தாரபஞ்சமம்.
திருச்சிற்றம்பலம்.

கீதமுன்னிசைதாககிளரும்வீணையர்
பூதமுன்னியலவுடைப்புனிதர்பொன்னகர்
கோதனம்வழிபடகுலவுநானமறை
வேதியாதொழுதெழுவிசயமஙகையை

விண்ணவாதொழுதெழுவிசயமஙகையை
நண்ணியபுகலியுணஞானசம்பந்தன்
பண்ணியசெந்தமிழ்பததும்வல்லவர்
புண்ணியர்சிவகதிபுகுதறிண்ணமே.
திருச்சிற்றம்பலம்.

---

விசயமங் கையினிட மகன்று மெய்யர்தாள்
அசைவில்லை காவினி லணைந்து பாடிப்போர்
திசைவளர் ஞானசம் பந்த ரெய்தினா
திசையுடை யாடையர் திருப்பு றம்பயம். (௨௪௦)

புறம்பயத திறைவரை வணஙகிப் போற்றிசெய்
திறம்புரி நீரமையிற் பதிகச் செந்தமிழ்
நிறம்பயி லிசையுடன் பாடி நீடிய
அறந்தரு கொள்கையா ரமர்ந்து மேவினர். (௨௪௧)

---

(௨௩௪) கோதனம - பசு.

அத்திருப் பதிபணிந் தகன்று போயனற்
கைத்தலத் தவர்பதி பிறவுங் கைதொழு
முத்தமிழ் விரகரா முதல்வர் நண்ணினார்
செய்த்தலைப் பணிலமுத் தீனுஞ் சேய்ஞலூர். (௨௪௨)

திருமலி புகலிமன் சேரச் சேய்ஞலூர்
அருமறை யவர்பதி யலங்க ரித்துமுன்
பெருமறை யொடுமுழ வொலிபி றங்கவே
வருமுறை யெதிர்கொள வந்து முந்தினார். (௨௪௩)

ஞானசம் பந்தரு நாய னார்சடைத்
தூநறு தொடையன்முன் சூட்டும் பிள்ளையார்
பான்மையில் வரும்பதி யென்று நித்தில
யானமுன் னிழிந்தெதி ரிறைஞ்சி யெய்தினார். (௨௪௪)

மாமறை யாளர்வண் புகலிப் பிள்ளையார்
தாமெழுந் தருளிடத் தங்கள் பிள்ளையார்
காமரும் பதியில்வந் தருளக் கண்டனர்
ஆமகிழ் வுடன்பணிந் தாடி யார்த்தனர். (௨௪௫)

களித்தனர் புண்ணியக் கரக வாசநீர்
தெளித்தனர் பொரிகளு மலருஞ் சிந்தினர்
துளித்தனர் கணமழை சுருதி யாயிரம்
அளித்தவர் கோயிலு ளவர்முன் பெய்தினார். (௨௪௬)

வெங்குரு வேந்தரும் விளங்கு கோயிலைப்
பொங்கிய விருப்பினாற் புடைவ லங்கொடு
செங்கைகள் சென்னிமேற் குவித்துச் சென்றுபுக்
கங்கணர் முன்புற வணைந்து தாழ்ந்தனர். (௨௪௭)

வேதியர் சேய்ஞலூர் விமலர் தங்கழல்
காதலிற் பணிந்தவர் கருணை போற்றுவார்
தாதைதா டடிந்தசண் டீசப் பிள்ளையார்
பாதகப் பயன்பெறும் பரிசு பாடினார். (௨௪௮)

---

திருச்சேய்ஞலூர் — பண் - பழந்தக்கராகம்.

திருச்சிற்றம்பலம்

பீரடைந்தபாலதாட்டப்பேணாதவன்றாதை
வேரடைந்துபாய்ந்ததாளைவேர்த்தடிந்தான்றனக்குத்
தாரடைந்தமாலைசூட்டித்தலைமைவகுத்ததென்னே
சீரடைந்தகோயின்மல்குசேய்ஞலூர்மேயவனே

---

(௨௪௪) பிள்ளையார் - சண்டீசர்.

சேயடைந்தசேய்ஞலூரிற்செல்வன்சீர்பரவித்
தோயடைந்ததண்வயலசூழ்தோணிபுரத்தலைவன்
சாயடைந்தஞானமல்குசம்பந்தனின்னுரைகள்
வாயடைந்துபாடவல்லார்வானுலகாள்பவரே.

திருச்சிற்றம்பலம்

---

இன்னிசை வண்டமிழ் பாடி யேத்தியு
நன்னெடும் பதியுளோர் நயக்க வைகிய
பின்னர்வெண பிறையணி வேணிப் பிஞ்ஞகர்
மன்னிய திருப்பனந் தாள்வ ணங்கினார். (௨௪௯)

ஆங்கணி சொன்மலர் மாலை சாத்தியப்
பாங்குபந் தணைநலூர் பணிநது பாடிப்போய்த்
தீங்குதீர் மாமறைச் செம்மை யந்தணர்
ஓங்குமோ மாம்புலி யூர்வந் துற்றனர். (௨௫௦)

மற்றநற் பதிவட தளியின் மேவிய
அற்புத ரடிபணிந் தலர்ந்த செநதமிழ்ச்
சொற்றொடை பாடியங ககன்று சூழ்மதிற்
பொற்பதி வாழ்கொளி புத்தூர் புக்கனர். (௨௫௧)

சீர்வளர் கோயிலை யணைந்து தேமலர்க்
கார்வளர் கண்டர்தாள் பணிந்து காண்பவர்
பார்புகழ் பதிகங்கள் பாடி நீடுவார்
வார்பொழிற் கடம்பையும் வணங்கி வாழ்ந்தனர். (௨௫௨)

நம்பரை நலந்திகழ் நாரை யூரினிற்
கும்பிடும் விருப்பொடு குறுகிக் கூடிய
வம்பலர் செந்தமிழ் மாலை பாடிநின்
றெம்பிரான் கவுணியர் தலைவ ரேத்தினார். (௨௫௩)

அப்பதி பணிநதருந் தமிழ்பு னைந்துத
மெய்ப்படு விருப்பொடு மேவு நாளமர்
பொற்பதி பலவுமுன் பணிந்து போந்தனர்
பைப்பணி யவர்கருப் பறிய லூரினில். (௨௫௪)

பரமர்தந் திருக்கருப் பறிய லூரினைச்
சிரபுரச் சிறுவாகை தொழுது செந்தமிழ்
உரையிசை பாடியம் மருங்கி னுள்ளவாஞ்
சுரர்தொழும் பதிகளுந் தொழுது பாடினார். (௨௫௫)

வேறு

மண்ணுலகு செய்ததவப் பயனா யுள்ள வள்ளலா ரப்பதிகள் வணங்கி யேகி, யெண்ணின்முர சிரங்கியெழப் பணில மார்ப்ப விலங்கியகா ளஞ்சின்ன மெங்கு மூதக், கண்வளர்மென் கரும்புமிடை கதிர்ச்செஞ் சாலி கதலி கமு குடனோங்குங் கழனி நாட்டுத், தெண்ணிலவு சூடியதம் பெருமான் வைகுந் திருப்பிரம புரஞ்சாரச் செல்லும் போது (௨௫௬)

பிள்ளையா ரெழுந்தருளக் கேட்ட செல்வப் பிரமபுரத் திருமறையோர் பெருகுகாத, லுள்ளமகிழ் சிறந்தோங்கத் தோணி மேவு முமைபாகர் கழல்வணங்கி யுவகை கூர, வெள்ளமறை யொலிபெருகு மறுகு தோறு மிடைமகர தோரணங்கள் கதலி பூகந், தெள்ளுபுன னிறைகுடங்க டீபந் தூபஞ் செழுங்கொடிக ணிரைத்தெதிர்கொள் சிறப்பிற் செல்வார் (௨௫௭)

ஆரணங்கண் மதுரவொலி யெழுந்து பொங்க வாசிலையுந் தருப்பையுமெய் தணிந்த வாசப், பூரணகும் பங்கணிறைக் கமேந்திப் புதுமலருந் நறுந்துகளும் பொரியுந் தூவி, வாரணங்கு முலையுமையா ளகுழைத்த செம்பொன் வள்ளத்தி லமுதுண்ட வள்ளலாரைச், சீரணங்கு மணிமுத்தின் சிவிகை மீது செழுந்தாளக் குடைநிழற்கீழ்ச் சென்று கண்டார் (௨௫௮)

கண்டபொழு தேகைக்கட லேமேற்கொண்டு கண்களிப்ப மனங்களிப்பக் காதல் பொங்கித், தொண்டர்களு மறையவருஞ் சென்று சூழ்ந்து சொல்லிறந்த மகிழ்ச்சியினாற் றுதிசத்த வோசை, யெண்டிசையு நிறைவித்தா ராடை வீசி யிருவிசும்பின் வெளிதூர்த்தா ரேறு சாத்தி, வண்டமிழ்நா யகருமிழிந் தெதிரே சென்று வணங்கியவ ருடன்கூடி மகிழ்ந்து புக்கார் (௨௫௯)

திங்களணி மணிமாட மிடைந்த வீதி சென்றணைந்து தெய்வமறைக் கற்பின் மாதர், மங்கலவாழ்த் திசையிரண்டு மருங்கு மல்க வானவர்நா யகர்கோயின் மருங்கு சார்ந்து, துங்கநிலைக் கோபுரத்தை யிறைஞ்சிப் புக்குச் சூழ்ந்துதிருத் தோணிமிசை மேவி னாரைத், தங்கடிரு முன்புதாழ்ந் தெழுந்து நின்று தமிழ்வேதம் பாடினார் தாளம் பெற்றார் (௨௬௦)

பரவுதிருப் பதிகவிசை பாடி நீடு பரங்கருணைத் திருவருளின் பரிசு போற்றி, விரவுமலர்க் கண்பனிப்பக் கைகள் கூப்பி வீழ்ந்தெழுந்து புறம்போந்து வேத வாய்மைச், சிரபுரத்துப் பிள்ளையார் செல்லும் போது திருநீல கண்டயாழ்ப் பாணர் பின்னே, வரவுவகை யுளம்பெருகு மனையிற் போக வருள்செய்து தந்திருமா ளிகையின் வந்தார். (௨௬௧)

மறையவர்க ளடிபோற்றத் தந்தை யாரு மருங்கணைய மாளிகையி லணையும் போதி, னிறைகுடமு மணிவிளக்கு முதலா யுள்ள நீடுமறைக் குலமகளிர் நெருங்கி யேந்த, இறைவர்திரு நீற்றுக்காப் பேந்தி முன்சென் றத்தாயார் சாத்தி யிறைஞ்சி யேத்த, முறைமையவர்க் கருள்செய்து மடத்திற் புக்கார் முதல்வர்பான் மணிமுத்தின் சிவிகை பெற்றார். (௨௬௨)

செல்வநெடு மாளிகையி லமர்ந்து நாளுந் திருத்தோணி மிசையாரைச் சென்று தாழ்ந்து, மல்குதிருப் பதிகங்கள் பலவும் பாடி மனமகிழ்ந்து போற் றிசைத்து வைகு நாளில், ஒல்லைமுறை யுபநயனப் பருவ மெய்த வுலகிறந்த சிவஞான முணரப் பெற்றார், தொல்லைமறை விதிச்சடங்கு மறையோர் செய்யத் தோலொடுநூ லுங்கினார் சுரர்கள் போற்ற. (உகூ௩)

ஒருபிறப்பு மெய்தாமை யுடையா ரம்மை யுலகியல்பி னுபநயன முறைமை யாகும், இருபிறப்பி னிலைமையினைச் சடங்கு காட்டி யெய்து விக்கு மறைமுனிவ ரெதிரே நின்று, வருதிறத்தின் மறைநான்குந் தந்தோ மென்று மந்திரங்கண மொழிந்தவர்க்கு மதுர வாக்காற், பொருவிறப்ப வோதினா புகலி வந்த புண்ணியனா ரெண்ணிறந்த புனித வேதம் (உகூச)

சுருதியா யிரமோதி யங்க மான தொலகலைக ளெடுத்தியம்புந் தோன்ற லாரைப், பரிதியா யிரகோடி விரிந்தா லென்னப் பரஞ்சோதி யருள்பெற்ற பானமை மேனமை, கருதியா தரவோடும வியப்புற் றேத்துங் கலைமறை யோா கவுணியனா தமமைக கணமுன, வருதியா னப்பொருளென் றிறைஞ் சித தாமுன் வல்லமறை கேட்டையந் தீாநது வாழ்ந்தா (உகூரு)

மநதிரங்க ளானவெலா மருளிச செய்து மற்றவற்றின் வைதிகநூற் சடங்கின் வந்த, சிநதைமயக குறுமையந் தெளிய வெலலாஞ் செழுமறை யோாக் கருளியவா தெருளு மாற்றான், முநதைமுதன் மநதிரங்க ளெல்லாந் தோன்று முதலாகு முதலவனா ரெழுததஞ் செனபார், அந்தியினும் மநதிர மஞ் செழுதது மேயென் றஞ்செழுததின றிருப்பதிக மருளிச செய்தா ()

---

ஸ்ரீ பஞ்சாக்ஷரப் பதிகம் - பண் - காந்தார பஞ்சமம்.

திருசசிற்றமபலம

துஞ்சலுந துஞ்சலிலாதபோழ்தினு, நெஞ்சகநைந்து நினைமினுநாடொறும்
வஞ்சகமறறடிவாழ்ததவநதகூற், றஞ்சவுதைப்பனவஞ்செழுததுமே.

நற்றமிழ்ஞானசம்பந்தனுன்மறை, கற்றவன்காழியர்மன்னனுன்னிய
அறறமிழ்மாலையீரைந்துமஞ்செழுத, துற்றனவலலவருமபராவரே.

திருச்சிற்றம்பலம்.

---

அததகைமை பிள்ளையா ரருளிச்செய்ய வந்தணர்க ளருடலைமேற் கொண்டு தாழ்நது, சித்தமகிழ் வொடுசிறப்பத் தாமுந் தெய்வத திருததோணி யமர்ந்தாரைச சென்று தாழ்ந்து, மெய்ததவிசைப் பதிகங்கள் கொண்டு போற்றி விரைமலாத்தாண் மனங்கொண்டு மீண்டு போந்து, பத்தருட னினிதமரும் பண்பு கூடப் பரமர்தாள் பணிந்தேத்திப் பயிலு நாளில். ()

வேறு.

பந்தணை மெல்விர லாளும் பாமரும் பாய்விடை மீது
வந்துபொன் வள்ளத் தளித்த வரம்பின்ஞா னத்தமு துணட

செந்தமிழ் ஞானசம் பந்தர் திறங்கேட்டி றைஞ்சுதற் காக
அந்தணர் பூந்தராய் தன்னி லணைந்தனர் நாவுக் கரையர். (உ௬அ)

வாக்கின் பெருவிறன் மன்னர் வந்தணைந் தாரெனக் கேட்டுப்
பூக்கமழ் வாசத் தடஞ்சூழ் புகலிப் பெருந்தகை யாரும்
ஆக்கிய நல்வினைப் பேறென் றன்பர் குழாத்தொடு மெய்தி
யேற்கும் பெருவிருப் போடு மெதிர்கொள வெய்தும் பொழுதில். (உ௬௯)

சிந்தை யிடையறா வன்புந் திருமேனி தனிலசை வுங்
கந்த மிகையாங் கருத்துங் கையுழ வாரப் படையும்
வந்திழி கண்ணீர் மழையும் வடிவிற் பொலிதிரு நீறும்
அந்தமி லாத்திரு வேடத் தரசு மெதிர்வந் தணைய (உ௭௦)

கண்ட கவுணியக் கன்றுங் கருத்திற் பரவுமெய்க் காதற்
றொண்டர் திருவேட நேரே தோன்றிய தென்று தொழுதே
யண்டரும் போற்ற வணைந்தங் கரசு மெதிர்வந் திறைஞ்ச
மண்டிய வார்வம் பெருக மதுர மொழியருள் செய்தார். (உ௭௧)

பேரிசை நாவுக் கரசைப் பிள்ளையார் கொண்டுடன் போந்து
போர்விடை யார்திருத் தோணிப் பொற்கோயி லுட்புகும் போதில்
ஆர்வம் பெருக வணையு மவருடன் கும்பிட் டருளாற்
சீர்வளர் தொண்ட ரைக்கொண்டு திருமா ளிகையினிற் சேர்ந்தார். (உ௭உ)

அணையுந் திருத்தொண்டர் தம்மோ டாண்ட வரசுக்கு மன்பால்
இணையில் திருவமு தாக்கி யியல்பா லமுதுசெய் வித்துப்
புணரும் பெருகன்பு நண்பும் பொங்கிய காதலிற் கும்பிட்
டுணருஞ்சொன் மாலைகள் சாத்தி யுடன்மகிழ் வெய்தி யுறைந்தார். (உ௭௩)

அந்நாள் சிலநாள்கள் செல்ல வருட்டிரு நாவுக் கரசர்
மின்னார் சடையண்ண லெங்கு மேவிடங் கும்பிட வேண்டிப்
பொன்மார்பின் முந்நூல் புனைந்த புகலிப் பிரானிசை வோடும்
பின்னாக வெய்த விறைஞ்சிப் பிரியாத நண்பொடும் போந்தார். (உ௭௪)

வாக்கின் றனிமன்ன ரேகமாறுந் திருவுளத் தோடு
பூக்கம ழும்பணை சூழ்ந்த புகலியின் மீண்டும் புகுந்து
தேக்கிய மாமறை வெள்ளத் திருத்தோணி வீற்றிருந் தாரைத்
தூக்கின் றமிழ்மாலை பாடித் தொழுதங் குறைகின்ற நாளில். (உ௭௫)

செந்தமிழ் மாலை விகற்பச் செய்யுட்க ளானமொழி மாற்றும்
வந்தசொற் சீர்மாலை மாற்றும் வழிமொழி யெல்லா மடக்குஞ்
சந்த வியமக மேகபா தந்தமி ழிருக் குக்குறள் சாத்தி
யெந்தைக் கெழுகூற் றிருக்கை யீரடி யீரடி வைப்பு. (உ௭௬)

---

(உ௭௦) கந்தமிகையாங் கருத்தும் - இந்திரியங்களால் உணரத்தப்படும் விடயங்களை யாவுங் குற்றமே என்னுங் கருத்தும். கந்தம் - இந்திரியம், மிகை - குற்றம்.

நாலடி மேல்வைப்பு மேன்மை நடையின் முடுகுமி ராகஞ்
சால்பினிற் சக்கர மாதி விகற்பங்கள் சாற்றும் பதிக
மூல விலக்கிய மாக வெல்லாப் பொருள்களு முற்ற
ஞாலத் துயர்காழி யாரைப் பாடினார் ஞானசம் பந்தர். (உஎஎ)

இன்னிசை பாடின வெல்லாம் யாழ்ப்பெரும் பாணனா தாமு
மன்னு மிசைவடி வான மதங்கசூ ளாமணி யாரும்
பன்னிய வேழிசை பற்றிப் பாடப் பதிகங்கள் பாடிப்
பொன்னின் றிருத்தா ளமபெற்றார் புகலியிற் போற்றி யிருந்தார். (உஎஅ)

அங்க ணமர்கின்ற நாளி லருந்தமிழ் நாடெத்தி னுள்ளுந்
திங்கட் சடையண்ண லார்தந் திருப்பதி யானவையுங் கும்பிட்
டெங்குந் தமிழ்மாலைபாடி யேத்தியிங் கெய்துவ னென்று
தங்குலத் தாதையா ரோடு தவமுனி வர்க்கருள் செய்தார் (உஎகூ)

பெருகு விருப்புட னேக்கிப் பெற்ற குலத்தாதை யாரும்
அருமையா லும்மைப் பயந்த வதனாற் பிரிந்துறை வாற்றேன்
இருமைக்கு மின்ப மளிக்கும் யாகமும் யான்செய வேண்டும்
ஒருமையா லின்னஞ் சிலநா ளுடனெய் துவனென் றுரைத்தார். (உஅ०)

ஆண்டகை யாரு மிசைந்தங் கம்பொற் றிருத்தோணி மேவு
நீண்ட சடையா ரடிக்கீழ்ப் பணிவுற்று நீடருள் பெற்றே
யீண்டு புகழ்த்தா தையார்பின் னெய்திட யாழ்ப்பாண ரோடுங்
காண்டகு காழி தொழுது காதலி னுற்புறம் போந்தார். (உஅக)

அத்திரு மூதூரி னுள்ளா ரமர்ந்துடன் போதுவார் போத
மெய்த்தவ ரந்தணர் நீங்கா விடைகொண்டு மீள்வார்கண் மீள
முத்தின் சிவிகைமேற் கொண்டு மொய்யொளித் தாம நிரைத்த
நித்தில வெண்குடை மீது நிறைமதி போல நிழற்ற (உஅஉ)

சின்னந் தனிக்காளந் தாரை சிரபுரத் தாண்டகை வந்தார்
என்னுந் தகைமை விளங்க வேற்ற திருப்பெயர் சாற்ற
முன்னெம் மருங்கு நிரந்த முரசுடைப் பல்லிய மார்ப்ப
மன்னுந் திருத்தொண்ட ரானார் வந்தெதிர் கொண்டு வணங்க. (உஅங)

சங்கநா தங்க ளொலிப்பத் தழங்குபொற் கோடு முழங்க
மங்கல வாழ்த்துரை யெங்கு மல்க மறைமுன் னியம்பத்
திங்களும் பாம்பு மணிந்தார் திருப்பதி யெங்குமுன் சென்று
பொங்கிய காதலிற் போற்றப் புகலிக் கவுணியர் போந்தார். (உஅச)

திருமறைச் சண்பைய ராளி சிவனார் திருக்கண் ணார்கோயில
பெருவிருப் பாலணைந் தேத்திப் பிஞ்ஞகர் கோயில பிறவும்
உருகிய வன்பா லிறைஞ்சி யுயர்தமிழ் மாலைகொண் டேத்தி
வருபுனற் பொன்னி வடபாற் குடதிசை நோக்கி வருவார் (உஅரு)

போற்றிய காதல் பெருகப் புள்ளிருக் குந்திரு வேளூர்
நாற்றடந் தோளுடை மூன்று நயனப் பிரான்கோயி னண்ணி
யேற்றவன் பெய்தவ ணங்கி யிருவர்புள் வேந்த ரிறைஞ்சி
யாற்றிய பூசனை சாத்தி யஞ்சொற் பதிக மணிந்தார். (உஅசு)

நீடு திருநின்றி யூரி னிமலனார் நீள்கழ லேத்திக்
கூடிய காதலிற் போற்றிக கும்பிட்டு வண்டமிழ் கூறி
நாடுசீர் நீடூர் வணங்கி நம்பர் திருப்புன்கூர் நண்ணி
யாடிய பாத மிறைஞ்சி யருந்தமிழ் பாடிய மார்ந்தார் (உஅஎ)

அங்குநின் றேகியப் பாங்கி லரனார் மகிழ்கோ யிலான
எங்கணுஞ் சென்று பணிந்தே யேத்தி யிமவான் மடந்தை
பங்க ருறைபழ மண்ணிப் படிக்கரைக் கோயில் வணங்கித்
தங்கு தமிழ்மாலை சாத்தித் திருக்குறுக் கைப்பதி சார்ந்தார். (உஅஅ)

திருக்குறுக் கைப்பதி மன்னித் திருவீரட் டானத் தமர்ந்த
பொருபபுவில லாளரை யேத்திப் போந்தன்னி யூர்சென்று போற்றிப்
பருகரை வரையுரித் தார்தம் பந்தண நல்லூர் பணிந்து
விருப்புடன் பாட லிசைத்தார் வேதத் தமிழால் விரித்தார். (உஅகூ)

அப்பதி போற்றி யகல்வா ரரனார் திருமணஞ் சேரி
செப்பருஞ் சீரதொண்ட ரோடுஞ் சென்று தொழுதிசை பாடி
யெப்பொரு ளுந்தரு மீச ரெதிர்கொள்பா டிப்பதி யெய்தி
யொப்பில் பதிகங்கள் பாடி யோங்குவேள் விகுடி யுற்றார். (உகூ0)

செழுந்திரு வேள்விக் குடியிற் றிகழ்மண வாளநற் கோலம்
பொழிந்த புனன்பொன்னி மேவும் புனிதத் துருத்தி யிரவிற்
றழும்பிய தன்மையுங கூடத் தண்டமிழ் மாலையிற் பாடிக்
கொழுந்துவெண டிங்க ளணிந்தார் கோடி காவிற்சென் றடைந்தார். (உகூக)

திருக்கோடி காவி லமர்ந்த தேவர் சிகாமணி தன்னை
யெருக்கோ டிதழியும் பாம்பு மிசைந்தணிந் தானைவெள் ளெனப்
பருக்கோடு பூண்ட பிரானைப் பணிந்துசொன் மாலைகள் பாடிக்
கருக்கோடி நீப்பார்கள் சேருங கஞ்சனூர் கைதொழச் சென்றார். (உகூஉ)

கஞ்சனூ ராண்டதங் கோவைக் கண்ணுற் றிறைஞ்சிமுன் போந்து
மஞ்சணி மாமதில் சூழு மாந்துறை வந்துவ ணங்கி
யஞ்சொற் றமிழ்மாலை சாத்தி யங்ககன் றன்பாமுன் னுகச்
செஞ்சடை வேதியர் மன்னுந் திருமங்க லக்குடி சேர்ந்தார் (உகூங)

வெங்கண் விடைமேல் வருவார் வியலூ ரடிகளைப் போற்றித்
தங்கிய வின்னிசை கூடுந் தமிழ்ப்பதி கத்தொடை சாத்தி
யங்கண மர்வார்தம் முன்னே யருள்வே டங்காட்டத் தொழுது
செங்கண்மா லுக்கரி யார்தந் திருந்துதே வன்குடி சேர்ந்தார். (உகூச)

திருந்துதே வன்குடி மன்னுஞ் சிவபெரு மான்கோயி லெய்திப்
பொருந்திய காதலிற் புக்குப் போற்றிவ ணங்கிப் புரிவார்
மருந்தொடு மந்திர மாகி மற்றுமி வர்வேட மாமென்
றருந்தமிழ் மாலைபு னைந்தா ரளவில்ஞா னத்தமு துண்டார். (௨௯௫)

மொய்திகழ் சோலையம் மூதூர் முன்னகன் றந்நெறி செல்வார்
செய்தரு சாலிக ரும்பு தெங்குபைம் பூகத்தி டைபோய்
மைதிகழ் கண்டர்தங் கோயின் மருங்குள்ள வெல்லாம் வணங்கி
யெய்தினா ஞான சம்பந்த ரின்னம்ப ரீசர்தங் கோயில். (௨௯௬)

இன்னம்பர் மன்னும்பி ரானை யிறைஞ்சியி டைமடக் கான
பன்னுந்த மிழ்த்தொடை மாலைப் பாடல்பு னைந்து பரவிப்
பொன்னங் கழலிணை போற்றிப் புறம்போந் தணைந்து புகுந்தார்
மன்னுந் தடங்கரைப் பொன்னி வடகுரங் காடு துறையில் (௨௯௭)

வடகுரங் காடு துறையில் வாலியார் தாம்வழி பட்ட
அடைவுந் திருப்பதி கத்தி லறியச் சிறப்பித் தருளிப்
புடைகொண் டிறைஞ்சினர் போந்து புறத்துள்ள தானங்கள் போற்றிப்
படைகொண்ட மூவிலை வேலார் பழனத் திருப்பதி சார்ந்தார் (௨௯௮)

பழனத்து மேவிய முக்கட் பரமேட்டி யாரபயில் கோயில்
உழைபுக் கிறைஞ்சிநின் றேத்தி யுருகிய சிந்தைய ராகி
விழைசொற் பதிகம் விளம்பி விருப்புடன் மேவி யகல்வார்
அழனக்க பங்கய வாவி யையாறு சென்றடை கின்றார் (௨௯௯)

வேறு.

மாடநிரை மணிவீதித் திருவையாற் றினில்வாழும் மல்கு தொண்டர்
நாடுய்யப் புகலிவரு ஞானபோ னகர்வந்து நண்ணி னாரென்
றாடலொடு பாடலறா வணிமூதூ ரடையவலங் காரஞ் செய்து
நீடுமனக் களிப்பினொடு மெதிர்கொள்ள நித்திலயா னத்து நீங்கி. (௩௦௦)

வந்தணைந்து திருத்தொண்டர் மருங்குவர மானேந்து கையர் தம்பால்
நந்திதிரு வருள்பெற்ற நன்னகரை முன்னிறைஞ்சி நண்ணும் போதில்
ஐந்துபுல னிலைகலங்கு மிடத்தஞ்ச லென்பார்த மையா றென்று
புந்திநிறை செந்தமிழின் சந்தவிசை போற்றிசைத்தார் புகலி வேந்தர். ()

மணிவீதி யிடங்கடந்து மாலயனுக் கரியபிரான் மன்னுங் கோயில்
அணிநீடு கோபுரத்தை யணைந்திறைஞ்சி யுள்ளெய்தி யளவில் காத
றணியாத கருத்தினொடு தம்பெருமான் கோயில்வலங் கொண்டு தாழ்ந்து
பணிசூடு மவர்முன்பு பணிந்துவீழ்ந் தெழுந்தன்பாற் பரவுகின்றார் (௩௦௨)

கோடல்கோங் கங்குளிர்கூ விளமென்னுந் திருப்பதிகக் குலவு மாலை
நீடுபெருந் திருக்கூத்து நிறைந்ததிரு வுள்ளத்து நிலைமை தோன்ற

ஆடுமா றதுவல்லா னையாற்றெம் மையனே யென்று நின்று
பாடினு ராடினுர் பண்பினெடுங் கண்பொழிநீர் பரந்து பாய. (கூ0கூ)

---

திருவையாறு - பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்

கோடல்கோங்கங்குளிர்கூவிளமாலைகுலாயசீர்
ஓடுங்கங்கையொளிவெண்பிறைசூடுமொருவனுர்
பாடல்வீணைமுழவங்குழன்மொந்தைபண்ணுகவே
யாடுமாறுவல்லானுமையாறுடையையனே.

பலிதிரிந்துழலபண்டங்கன்மேயவையாற்றினை
கலிகடிந்தகையான்கடற்காழியர்காவலன்
ஒலிகொளசம்பந்தனெண்டமிழ்பத்தும்வல்லார்கள்போய
மலிகொளவிண்ணிடைமன்னியசீர்பெறுவார்களே.

திருச்சிற்றம்பலம்.

---

பலமுறையும் பணிந்தெழுந்து புறம்போநது பரவுதிருத் தொண்ட ரோடு
நிலவுதிருப் பதியதன்க ணிகழுநா ணிகரிலா நெடுநீர்க் கங்கை
பலையுமதி முடியார்தம் பெரும்புலியூ ரூதலான வணைந்து போற்றிக
தலவுதமிழ்த் தொடைபுனைந்து மீண்டணைநது பெருகார்வங கூரு நாளில

நடதிசைமேற் போவதற்குக் கும்பிட்டங் கருள்பெற்றுக குறிப்பி னேடும்
படருநெறி மேலணைவா பரமாதிரு நெய்ததானப் பதியி னண்ணி
அடையுமன முறவணங்கி யருந்தமிழ்மா லைகள்பாடி யங்கு நின்றும
புடைவளர்மென் கரும்பினெடு பூகமிடை மழபாடி போற்றச் சென்ருர. ()

செங்கைமான் மறியார்தந் திருமழபா டிப்புறததுச சேரச செல்வாா
அங்கையா ரழலெனனுந் திருப்பதிக மெடுத்தருளி யணைந்த போழ்தின்
மங்கைவாழ் பாகததாா மழபாடி தலையினுல வணங்கு வார்கள [ா
பொங்குமா தவமுடையா ரெனதொழுது போற்றிசைத்தே கோயிலபுககா

---

திருமழபாடி - பண் - கவுசிகம்.

திருச்சிற்றம்பலம்

அங்கையாரழலன்னழகார்சடைக
கங்கையான்கடவுள்ளிடமேவிய
மங்கையானுறையும்மழபாடியைத்
தங்கையாற்றெழுவார்தகவாளரே

மந்தமுந்துபொழின்மழபாடியுள்
எந்தைசநதமினிதுகந்தேத்துவான்
கந்தமாாகடற்காழியுள்ஞானசம
பந்தன்மாலைவல்லார்க்கிலைபாவமே

திருச்சிற்றம்பலம்

---

மழபாடி வயிரமணித் தூணமர்ந்து மகிழ்கோயில் வலங்கொண் டெய்
திச், செழுவாச மலர்க்கமலச் சேவடிக்கீழ்ச் சென்றுதாழ்ந் தெழுந்து நின்று,
தொழுதாடிப் பாடிநறுஞ் சொன்மாலைத் தொடையணிந்து துதித்துப்
போந்தே, யொழியாத நேசமுட னுடையவரைக் கும்பிட்டங் குறைந்தார்
சின்னாள். (கூ0எ)

அதன்மருங்கு கடந்தருளாற் றிருக்கானூர் பணிந்தேத்தி யான்ற சைவ [ப்
முதன்மறையோ ரன்பிலா லந்துறையின் முன்னவனைத் தொழுது போற்றி
பதநிறைசெந் தமிழ்பாடிச் சடைமுடியார் பயில்பதியும் பணிந்து பாடி
மதகரட வரையுரித்தார் வடகரைமாந் துறையணைந்தார் மணிநூன் மார்பர் ()

சென்றுதிரு மாந்துறையிற் றிகழ்ந்துறையுந் திருநதிவாழ் சென்னி யாரத்
முன்றிலைப்பணிந் தணிநெடுமா ளிகைவலஞ்செய் துள்புக்கு முன்பு தாழ்ந்து
துன்றுகதிர்ப் பரிதிமதி மருத்துகக் டொழுதுவழி பாடு செய்ய
நின்றநிலை சிறப்பித்து நிறைதமிழின் சொன்மாலை நிகழப் பாடி. (கூ0கூ)

அங்கணகன் றம்மருங்கி லங்கணர்தம் பதிபிறவு மணைந்து போற்றிச்
செங்கமலப் பொதியவிழச் சேல்பாயும் வயன்மதுவாற் சேறு மாறாப் [தர்
பொங்கொலிநீர் மழநாட்டுப் பொன்னிவட கரைமிசைப்போய்ப் புகலிவேந்
தங்களபிரான் றிருப்பாச்சி லாச்சிரா மம்பணிய நணுகும் போதில். (கூக0)

அந்நகரிற் கொல்லிமழ வன்பயந்த வரும்பெறலா ரமுத மென்சொற்
கன்னியிள மடப்பிணையாங் காமருகோ மளக்கொழுந்தின் கதிர்செய் மேனி
மன்னுபெரும் பிணியாகு முயலகன்வந் தணைவுறமெய் வருத்த மெய்தித்
தன்னுடைய பெருஞ்சுற்றம் புலம்பெய்தத் தானுமனந் தளாவு கொள்வான்.

மற்றுவே றொருபரிசாற் றவிராமை மறிவளருங் கையா ரபாதம்
பற்றியே வருங்குலத்துப் பான்மையினா லதனினாற் பரிவு தீரப் [றுஞ்
பொற்றொடியைக் கொடுவந்து போரகசோலச் சேவகராய்ப் புரங்கண் மூன்
செற்றவர்தங் கோயிலினுட் கொடுபுகுந்து திருமுன்பே யிட்டு வைத்தான்.

அவ்வளவி லாளுடைய பிள்ளையா ரெழுந்தருளி யணுக வெய்தச்
செவ்வியமெய்ஞ் ஞானமுணர் திருஞான சம்பந்தர் வந்தா ரென்றே
யெவ்வுலகுந் துயர்நீங்கப் பணிமாறுந் தனிக்காளத் தெழுந்த வோசை
வெவ்வுயிர்க்கு மவன்கேளா மெலவியலை விட்டெதிரே விரைந்து செல்வான்

மாநகர மலங்கரிமின் மகரதோ ரணநாட்டு மணிநீர் வாசத்
தூநறும்பூ ரணகும்பஞ் சோதிமணி விளக்கினொடு தூப மேந்தும்
ஏனையணி பிறவுமெலா மெழிலபெருக வியற்றுமென வேவித் தானும்
வானவர்நா யகர்மகனார் வருமுன்பு தொழுதணைந்தான் மழவர் கோமான். ()

பிள்ளையா ரெழுந்தருளப் பெற்றேனென் றுனந்தம் பெருகு காதல்
வெள்ளநீர் கண்பொழியத் திருமுத்தின் சிவிகையின்முன் வீழ்ந்த போது

வள்ளலா ரெழுகவென மலர்வித்த திருவாக்கான் மலர்க்கை சென்னி
கொள்ளமகிழ்ந் துடன்சென்று குலப்பதியின் மணிவீதி கொண்டு புக்கான்

மங்கலதூ ரியமுழங்கு மணிவீதி கடந்துமதிச் சடையார் கோயிற்
பொங்குசுடர்க் கோபுரத்துக் கணித்தாகப் புனைமுத்தின் சிவிகை நின்றும்
அங்கணிழிந் தருளுமுறை யிழிந்தருளி யணிவாயில் பணிந்து புக்குத்
தங்கள்பிரான் கோயில்வலங் கொண்டுதிரு முன்வணங்கச் சாருங் காலை ()

கன்னியிளங் கொடியுணர்வு கழிந்துநிலன் சோர்ந்ததனைக் கண்டு நோக்கி
யென்னிதுவென் றருள்செய்ய மழவனுமுன் னிறைஞ்சியடியேன் பெற்ற
பொன்னிவளை முயலகனும் பொருவிலரும் பிணிபொருந்தப் புனிதர்கோயின்
முன்னணையக் கொணர்வித்தே னிதுபுகுந்தபடியென்று மொழிந்துநின்றான்.

வேறு.

அணிகிளர் தாரவன் சொன்ன மாற்ற மருளொடுங் கேட்ட நிலையி னின்றே
பணிவளர் செஞ்சடைப் பாச்சினமேய பரம்பொரு ளாயினா ரைப்ப ணிந்து
மணிவளர் கண்டரோ மங்கையைவாட மயல்செய்வ தோவிவர் மாண்பெனத்
தணிவில் பிணிதவிர்க் கும்பதிகத் தண்டமிழ் பாடினார் சண்பை நாதர். [று

பன்னு தமிழ்மறை யாம்பதிகம் பாடித் திருக்கடைக் காப்புச் சாத்தி
மன்னுங் கவுணியர் போற்றிநிற்க மழவன் பயந்த மழலை மென்சொற்
கன்னி யுறுபிணி விட்டு நீங்கக் கதுமெனப் பார்மிசை நின்றெழுந்து[தாள்·
பொன்னின் கொடியென வொல்கி வந்து பொருவலித் தாதை புடையணைந்

வன்பிணி நீங்கு மகளைக் கண்ட மழவன் பெருகு மகிழ்ச்சி பொங்கத்
தன்றனிப் பாவையுந் தானுங் கூடச் சண்பையர் காவலர் தாளில் வீழ
நின்ற வருமறைப் பிள்ளை யாரு நீரணி வேணி நிமலர் பாதம்
ஒன்றிய சிந்தை யுடன்ப ணிந்தா ரும்பர் பிரான்றிருத் தொண்ட ராத்தர்.

நீடு திருவாச் சிராம மன்னு நேரிழை பாகத்தர் தாள்வ ணங்கிக்
கூடு மருளுட னங்க மர்ந்து கும்பிடுங் கொள்கைமேற் கொண்டு போந்தே
யாடன் மகிழ்ந்தார் பதிபிறவு மணைந்து பணிந்தடி போற்றி யேகிச்
சேடர்கள் வாழுந் திருப்பைஞ்ஞீலிச் சிவபெருமானை யிறைஞ்சச் சென்றார்.

பண்பயில் வண்டினம் பாடுஞ் சோலைப் பைஞ்ஞீலி வாணர் கழல்ப ணிந்து
மண்பர வுந்தமிழ் மாலை பாடி வைகி வணங்கி மகிழ்ந்து போந்து
திண்பெருந் தெய்வக் கயிலை யில்வாழ் சிவனார் பதிபல சென்றிறைஞ்சிச்
சண்பை வளந்தரு நாடர் வந்து தடந்திரு வீங்கோய் மலையைச் சார்ந்தார்.()

செங்கட் குறவரைத் தேவர்போற்றுந் திகழ்திரு வீங்கோய் மலையின் மேவுங், கங்கைச் சடையார் கழல்பணிந்து கலந்த விசைப்ப திகம்பு னைந்து, பொங்கர்ப் பொழில்சூழ் மலையுமற்றும் புறத்துள்ள தானங்க ளெல்லாம் போற்றிக், கொங்கிற் குடபுலஞ் சென்ற ணைந்தார் கோதின் மெய்ஞ்ஞானக் கொழுந்த னையார். (௩௨௩)

வேறு.

அண்டர்பிரா னாலயங்க ளம்மருங்குள் ளனபணிந்து
தெண்டிரைநீர்த் தடம்பொன்னித் தென்கரையாங் கொங்கினிடை
வண்டலையும் புனற்சடையார் மகிழ்விடங்க டொழுதணைந்தார்
கொண்டல்பணி நெடும்புரிசைக் கொடிமாடச் செங்குன்றூர். (௩௨௪)

அந்நகரில் வாழ்வாரு மடியவரு மனமகிழ்ந்து
பன்னெடுந்தோ ரணமுதலாப் பயிலணிகள் பலவமைத்து
முன்னுறவந் ததிர்கொண்டு பணிந்தேத்தி மொய்கரங்கள்
சென்னியுறக் கொண்டணைந்தார் சினவிடையார் செழுங்கோயில். (௩௨௫)

தம்பெருமான் கோயிலினு ளெழுந்தருளித் தமிழ்விரகர்
நம்பரவர் திருமுன்பு தாழ்ந்தெழுந்து நலஞ்சிறக்க
இம்பருமும் பருமேத்த வின்னிசைவண் டமிழ்பாடிக்
கும்பிடுமா தரவுடனக் கோநகரி லினிதமர்ந்தார். (௩௨௬)

அப்பாலைக் குடபுலத்தி லாறணிந்தா ரமர்கோயில்
எப்பாலுஞ் சென்றேத்தித் திருநணா வினையிறைஞ்சிப்
பைப்பாந்தள் புனைந்தவரைப் பரவிப்பண் டமாகின்ற
வைப்பான செங்குன்றூர் வந்தணைந்து வைகினார். (௩௨௭)

ஆங்குடைய பிள்ளையா ரமர்ந்துறையு நாளின்கட்
டேங்குதுளி முகிற்குலங்கள் சுரந்துபெய லொழிகாலை
வீங்கொலிநீர் வைப்பெல்லாம் வெயில்பெற விருப்புவரப்
பாங்கர்வரை யுங்குளிரும் பனிப்பருவ மெய்தியதால். (௩௨௮)

அளிக்குலங்கள் சுளிந்தகல வரவிந்த முகம்புலரப்
பளிக்குமணி மரகதவல் லியிற்கோத்த பான்மையெனத்
துளித்தலைமெல் லறுகுபனி தொடுத்தசையச் சூழ்பனியாற்
குளிர்க்குடைந்து வெண்படாம் போர்த்தனைய குன்றுகளும். (௩௨௯)

மொய்பனிகூர் குளிர்வாடை முழுதுலவும் பொழுதேயாய்க்
கொய்தளிர்மென் சோலைகளுங் குலைந்தசையக் குளிர்கொதுங்கி
வெய்யவனுங் கரமிர்க்க மாட்டான்போல் விசும்பினிடை
யைதுவெயில் விரிப்பதுவு மடங்குவது மாகுமால். (௩௩0)

நீடியவப் பதிகளெலா நிரைமாடத் துறையுடொறும்
பேடையுடன் பவளக்காற் புறவொடுங்கப் பித்திகையிற்
றோடலர்மென் குழன்மடவார் துணைக்கலச வெம்முலையுள்
ஆடவர்தம் பணைத்தோளு மணிமார்பு மடங்குவன. (௩௩௧)

---

(௩௨௯) அளி குலங்கள் சுளிந்து - வண்டின கூட்டங்கள் வெறுத்து. அரவிந்தம - தாமரை. (௩௩0) ஐதுவெயில - சிறிது கிரணங்களை. (௩௩௧) பித்திகை - சிறு சண்பகம.

அரிசனமுங் குங்குமமு மரைத்தமைப்பா ரயலெல்லாம்
பரியவகிற் குறைபிளந்து புகைப்பார்கள் பாங்கெல்லாம்
எரியுமிழ்பேழ் வாய்த்தோணி யிரும்பீர்ப்பா ரிடையெல்லாம்
விரிமலர்மென் புறவணிந்த மீப்புலத்து வைப்பெல்லாம். (௩௩௨)

அந்நாளிற் கொடிமாடச் செங்குன்றூ ரமர்ந்திருந்த
மெய்ஞ்ஞானப் பிள்ளையா ருடன்மேவும் பரிசனங்கள்
பன்னாளு மந்நாட்டிற் பயின்றதனாற் பனித்தகுளிர்
முன்னான பிணிவந்து மூள்வதுபோன் முடுகுதலும். (௩௩௩)

அந்நிலைமை யாளுடைய பிள்ளையார்க் கவர்களெலா
முன்னறிவித் திறைஞ்சுதலு முதல்வனா ருடொழுதே
இந்நிலத்தி னியல்பெனினு நமக்கெய்தப் பெறாவென்று
சென்னிமதி யணிந்தாரைத் திருப்பதிகம் பாடுவார். (௩௩௪)

வேறு.

அவ்வினைக் கிவ்வினை யென்றெடுத் தைய ரமுதுசெய்த
வெவ்விட முன்றடுத் தெம்மிடர் நீக்கிய வெற்றியினால்
எவ்விடத் தும்மடி யாரிடர் காப்பது கண்டுமென்றே
செய்வினை தீண்டா திருநீல கண்ட மெனச்செப்பினார். (௩௩௫)

---

திருநீலகண்டம் - பண் - வியாழக்குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்

அவ்வினைக்கிவ்வினையாமென்றுசொல்லுமஃதறிவீர்
உய்வினைநாடாதிருப்பதுமுந்தமக்கூனமன்றே
கைவினைசெய்தெம்பிரானகழல்போற்றுதுநாமடியேஞ்
செய்வினைவந்தெமைத்தீண்டப்பெறா திருநீலகண்டம்.

பிறந்தபிறவியிற்பேணியெஞ்செல்வன்கழலடைவா
னிறந்தபிறவியுண்டாகியிமையவர்கோனடிக்கட்
டிறமபயிஞானசம்பந்தன்செந்தமிழ்பததுமவல்லார்
நிறைந்தவுலகினில்வானவர்கோனொடுங்கூடுவரே.

திருச்சிற்றம்பலம்.

---

ஆய குறிப்பினி லானை நிகழ வருளிச்செய்து
தூய பதிகத் திருக்கடைக் காப்புத் தொடுத்தணிய
மேயவப் பொற்பதி வாழ்பவர்க் கேயன்றி மேவுமந்நாட்
டேய பனிப்பிணி யந்நா டடங்கவுந் தீர்ந்ததன்றே. (௩௩௬)

(௩௩௨) அரிசனம - மஞ்சள். தோணி இருமபு - இருமபினல் தோணிவடிவாக அமைதது, தீ நிறைக்கபபட்டுகுளிரின நிமிததம் அருகே இழுததுககொளவது. மீபு லததுவைபபு - உயாவாகிய இடம. (௩௩௩) குளிா முனனுனபிணி - குளிாமுனனே தனடு பினனே சுரஙகாணுநோய்—நளிாசுரம,

அப்பதி யின்க ணமர்ந்து சிலநாளி லங்ககன்று
துப்புறழ் வேணியர் தானம் பலவுந் தொழுதருளி
முப்புரி நூலுடன் றோலணி மார்பர் முனிவரொடுஞ்
செப்பருஞ் சீர்த்திருப் பாண்டிக் கொடுமுடி சென்றணைந்தார். (௩௩௭)

பருவ மறாப்பொன்னிப் பாண்டிக் கொடுமுடி யார்தம்பாத
மருவி வணங்கி வளத்தமிழ் மாலை மகிழ்ந்துசாத்தி
விரிசுடர் மாளிகை வெஞ்சமாக் கூடல் விடையவர்தம்
பொருவிறு னம்பல போற்றிக் குணதிசைப் போதுகின்றார். (௩௩௮)

செல்வக் கருவூர் திருவா னிலைக்கோயில் சென்றிறைஞ்சி
நல்லிசை வண்டமிழ்ச் சொற்றொடை பாடியங் நாடகன்று
மல்கிய மாணிக்க வெற்பு முதலா வணங்கிவந்து
பல்கு திரைப்பொன்னித் தென்கரைத தானம் பலபணிவார். (௩௩௯)

பன்னெடுங் குன்றும் படர்நெடுங் கானும் பலபதியும்
அந்நிலைத் தானங்க ளாயின வெல்லா மமர்ந்திறைஞ்சி
மன்னு புகலியில் வைதிக வாய்மை மறையவனார்
பொன்னியல் வேணிப் புனிதர் பராய்த்துறை யுட்புகுந்தார். (௩௪௦)

நீடும் பராய்த்துறை நெற்றித் தனிக்கண்ணர் கோயினண் ணிக்
கூடுங் கருத்தொடு கும்பிடக் கோதி றமிழ்ச்சொன் மாலை
பாடுங் கவுணியர் கண்பனி மாரி பரந்திழிய
சூடுங் கரதலத் தஞ்சலி கோலித் தொழுதுநின்றார் (௩௪௧)

தொழுது புறம்பணைந் தங்குநின் றேகிச் சுரர்பணிவுற்
றெழுதிரு வாலந் துறைதிருச் செந்துறை யேமுதலா
வழுவில்பல கோயில்கள் சென்று வணங்கி மகிழ்ந்தணைவார்
செழுமலர்ச் சோலைத் திருக்கற் குடிமலை சேரவந்தார் (௩௪௨)

வேறு.

கற்குடி மாமலை மேலெழுந்த கனகக் கொழுந்தினைக் கால்வளையப்
பொற்றிரண் மேருச் சிலைவளைத்த போர்விடை யாளியைப் போற்றிசைத்து
நற்றமிழ் மாலை புனைந்தருளி ஞானசம் பந்தர் புலங்களைந்துஞ்
செற்றவர் மூக்கீச் சரம்பணிந்து திருசிராப் பள்ளிச் சிலம்பணைந்தார்.(௩௪௩)

செம்மணி வாரி யருவி தூங்குஞ் சிராப்பள்ளி மேய செழுஞ்சுடரைக்
கைம்மலை யீருரி போர்வை சாத்துங கண்ணுத லாரைக் கழல்பணிந்து
மெய்ம்மகிழ் வெய்தி யுளங்குளிர விளங்கிய சொற்றமிழ் மாலைவேய்ந்து
மைம்மலர் கண்டர்த மானைக்காவை வணங்கும் விருப்பொடு வந்தணைந்தார்.()

(௩௩௮) பருவமறா பொன்னி-காலந்தவறாது வெள்ளம்வரும் காவேரிநதி. (௩௩௯) மாணிக்க வெற்பு - இரத்தினகிரி.

விண்ணவர் போற்றிசெய் யானைக்காவில் வெண்ணாவல் மேவிய மெய்ப் பொருளை, நண்ணி யிறைஞ்சிமுன் வீழ்ந்தெழுந்து நாற்கோட்டு நாகம் பணிந் ததுவும், அண்ணல்கோச் செங்கணா சன்செய்த வடிமையுமஞ் சொற்றொ டை யில்வைத்துப், பண்ணுறு செந்தமிழ் மாலைபாடிப் பரவிநின் றேத்தினர் பான்மையினால். (௩௪௫)

நாரண னான்முகன் காணாவுண்மை வெண்ணாவ னன்மை மயேந்திரமுஞ்
சீரணி நீடு திருக்கயிலை செல்வத் திருவாரூர் மேய பண்பும்
ஆரணத் துட்பொரு ளாயினாரை யானைக்கா வின்கட் புகழ்ந்துபாடி
யேரணி யும்பொழில் சூழ்ந்தசண்பை யேந்தலா ரல்லலி வின்பமுற்றார்.()

கைதொழு தேத்திப் புரத்தணைந்து காமர் பதியதன் கட்சிலநாள்
வைகி வணங்கி மகிழ்ந்தணைவார் மன்னுந் தவத்துறை வானவர்தா [போந்து
ளெய்தி யிறைஞ்சி யெழுந்துநின்றே யின்றமிழ் மாலைகொண் டேத்திப்
வைதிக மாமணி யம்மருங்கு மற்றுள்ள தானம் வழுத்திச்செல்வார். (௩௪௭)

எறுயாத் தார்திருப் பாற்றுறையு மெறும்பியூர் மாமலை யேமுதலா
வேறு பதிகள் பலவும் போற்றி விரவுந் திருத்தொண்டர் வந்துசூழ
ஈறில் புகழ்ச்சண்பை யாளியார்தா மெண்டிசை யோருந் தொழுதிறைஞ்ச
நீறணி செம்பவ ளப்பொருப்பி னெடுங்கள மானகா சென்று சேர்ந்தார். ()

நெடுங்களத் தாதியை யன்பானின்பால் நெஞ்சஞ் செலாவகைநேர்விலக் கும், இடும்பைக டர்த்தருள் செய்வா யென்னு மின்னிசை மாலைகொண் டேத்தியேகி, யடும்பணி செஞ்சடை யாரபதிக ளணைந்து பணிந்து நிய மமபோற்றிக, கடுங்கை வரையுரித் தார்மகிழ்ந்த காட்டுப்பள் ளிப்பதி கைதொழுவார் (௩௪௯)

சென்று திகழ்திருக் காட்டுப்பள்ளிச் செஞ்சடை நம்பர்தங் கோயிலெய்தி
முன்றில் வலங்கொண டிறைஞ்சி வீழ்ந்து மொய்கழற் சேவடிகைதொழுவார்
கன்றணை யாவின் கருததுவாய்ப்பக் கணணுத லாரைமுன் போற்றிசெய்து
மன்றுணின் றாடன் மனததுள்வைப்பார்வாருமன் னும்முலை பாடிவாழ்ந்தார்

அங்கப் பதிநின் றெழுந்தருளி யணிதிரு வாலம் பொழில்வணங்கிப் பொங்கு புனற்பொன்னிப் பூந்துருத்திப் பொய்யிலி யாரைப் பணிந்துபோ ற்றி, யெங்கு நிகழ்திருத் தொண்டர்குழா மெதிர்கொள்ள வெப்பதி யுந்தொ ழுது, செங்கயல் பாய்வய லோடைசூழ்ந்த திருக்கண்டி யூர்தொழச் சென்ற ணைந்தார் (௩௫௧)

கண்டியூர் வீரட்டர் கோயிலெய்திக் கலந்தடி யாருடன் காதல்பொங்கக்
கொண்ட விருப்புடன் றாழ்ந்திறைஞ்சிக் குலவு மகிழ்ச்சியின் கொள்கையினாற்
றொண்டர் குழாததினை நோக்கிநின்று தொடுத்த விசைத்தமிழ் மாலைதன்னி
லண்டா பிரான்ற னருளின்வண்ண மடியார் பெருமையிற் கேட்டருளி. ()

---

(௩௪௫) நாற்கோட்டு நாகம் - நான்கு கொம்புகளையுடைய யானை.

வினவி யெடுத்த திருப்பதிக மேவு திருக்கடைக் காப்புத்தன்னில்
அனைய நினைவரி யோன்செயலை யடியாரைக் கேட்டு மகிழ்ந்ததன்மை
புனைவுறு பாடலிற் போற்றிசெய்து போந்து புகலிக் கவுணியனூர் [டைவார்.
துனைபுனற் பொன்னித் திரைவலங்கொள் சோற்றுத்துறைதொழச் சென்ற

வேறு.

அப்பர்சோற் றுத்துறை சென்றடை வோமென்
றொப்பில் வண்டமிழ் மாலை யொருமையாற்
செப்பி யேசென்று சேர்ந்தனர் சேர்விலார்
முப்புரஞ் செற்ற முன்னவர் கோயின்முன் (௩௯௪)

தொல்லை நீடிருச் சோற்றுத் துறையுறை
செல்வர் கோயில் வலங்கொண்டு தேவர்கள்
அல்ல றீர்க்கனஞ் சுண்ட பிரானடி
யெல்லை யில்லன்பு கூர விறைஞ்சினார் (௩௯௫)

இறைஞ்சி யேத்தி யெழுந்துநின் றின்னிசை
நிறைந்த செந்தமிழ் பாடி நிலாவியங்
குறைந்து வந்தடி யாருட னெய்தினார்
சிறந்தசீர்த்திரு வேதி குடியினில். (௩௯௬)

வேத வேதியர் வேதி குடியினில்
காதர் கோயி லணைந்து நலந்திகழ்
பாத பங்கயம் போற்றிப் பணிந்தெழுந்
தோதி னார்தமிழ் வேதத்தி னோங்கிசை. (௩௯௭)

எழுது மாமறை யாம்பதி கத்திசை
முழுதும் பாடி முதல்வரைப் போற்றிமுன்
றொழுது போந்துவந் தெய்தினார் சோலைசூழ்
பழுதில் சீர்த்திரு வெண்ணிப் பதியினில். (௩௯௮)

வெண்ணி மேய விடையவர் கோயிலை
நண்ணி நாடிய காதலி னுண்மதிக்
கண்ணி யார்தங் கழலிணை போற்றியே
பண்ணி னீடும் பதிகமும் பாடினார் (௩௯௯)

பாடி நின்று பரவிப் பணிந்துபோய்
ஆடு மங்கணர் கோயிலங் குள்ளன
மாடு சென்று வணங்கி மகிழ்ந்தனர்
நீடு சண்பை நிறைபுகழ் வேதியர் (௪௦௦)

வேறு.

மொய்தருஞ் சோலைசூழ் முளரிமுளரிடமம் பாய
மெய்தரும் பரிவிலான் வேள்வியைப் பாழ்படச்
செய்தசங் கரர்திருச் சக்கரப் பள்ளிமுன்
பெய்தவந் தருளினா ரியலிசைத தலைவனார். (௩௬௧)

சக்கரப் பள்ளியார் தந்தனிக் கோயிலுட்
புக்கருத் தியினுடன் புனைமலர்த் தாள்பணிந்
தக்கரைப் பரமர்பா லன்புறும் பரிவுகூர்
மிக்கசொற் றமிழினால் வேதமும் பாடினார். (௩௬௨)

தலைவர்தஞ் சக்கரப் பள்ளிதன் னிடையகன்
றலைபுனற் பணைகளி னருகுபோ யருமறைப்
புலனுறுஞ் சிந்தையார் புள்ளமங் கைப்பதி
குலவுமா லந்துறைக் கோயிலைக் குறுகினார். (௩௬௩)

மன்னுமக் கோயில்சேர் மான்மறிக் கையர்தம்
பொன்னடித் தலமுறப் புரிவொடுந் தொழுதெழுந்
தின்னிசைத தமிழ்புனைந் திறைவர்சே வூருடன
பன்னுபா லைத்துறைப் பதிபணிந் தேகினார். (௩௬௪)

காவின்மேன் முகிலெழுங கமழ்நறும் புறவுபோய்
வாவிநீ டலவன்வாழ் பெடையுடன் மலர்நறும்
பூவின்மேல் விழைவுறும் புகலியார் தலைவனார்
சேவின்மே லண்ணலார் திருநலூர் நண்ணினார். (௩௬௫)

மன்றலங் கழனிசூழ் திருநலூர் மறையவலோர்
துன்றுமங கலவினைத் துழனியா லெதிர்கொளப்
பொன்றயங் கொளிமணிச் சிவிகையிற் பொலிவுறச
சென்றணைந் தருளினார் சிரபுரச் செம்மலார். (௩௬௬)

நித்திலச் சிவிகைமே னின்றிழிந் தருளியே
மொய்த்ததவந் தணர்குழா முன்செலப் பின்செலும்
பத்தரும் பரிசனங் களுமுடன் பரவவே
அத்தர்தங் கோபுரந தொழுதணைந் தருளினார். (௩௬௭)

வெள்ளிமால் வரையைநேர் விரிசுடர்க் கோயிலைப்
பிள்ளையார் வலம்வரும் பொழுதினிற் பெருகுசீர்
வெள்ளவா னந்தமெய் பொழியமே லெறிநீர்
துள்ளுவார் சடையரைத தொழுதுமுன் பரவுவார். (௩௬௮)

---

(௩௬௧) பரிவிலான - தக்கன. "எடுத்தமொழியினஞ் செப்பலு முரித்தே" என்ற தொல்காப்பியச் சூத்திரப்படி இயற்றமிழ, இசைத்தமிழோடு நாடகத் தமிழையுஞ் சேர்க்க.

பரவுசொற் பதிகமுன் பாடினார் பரிவுதான்
வரவயர்த் தருகுநேர் மனனுடன் புறமணைந்
தரவுடைச் சடையர்பே ரருள்பெறும் பெருமையால்
விரவுமப் பதியமர்ந் தருளியே மேவினார். (௩௬௯)

வேறு.

அன்ன தன்மையி லப்பதி தனிலமர்ந் தருளி
மின்னெ டுஞ்சடை விமலர்தாள் விருப்பொடு வணங்கிப்
பன்னு மின்னிசைப் பதிகமும் பலமுறை பாடி
நன்னெ டுங்குல நான்மறை யவர்தொழ நயந்தார். (௩௭0)

நீடு மப்பதி நீங்குவார் நிகழ்திரு நல்லூர்
ஆடு வார்திரு வருள்பெற வகன்றுபோந் தங்கண்
மாடு முள்ளன வணங்கியே பரவிவந் தணைந்தார்
தேடு மாலயற் கரியவர் திருக்கரு காவூர் (௩௭௧)

வந்து பந்தர்மா தவிமணங் கமழ்கரு காவூர்ச்
சந்த மாமறை தந்தவர் கழலிணை தாழ்ந்தே
யந்த மில்லவா வண்ணமா மழல்வண்ண மென்று
சிந்தை யின்புறப் பாடினார் செழுந்தமிழ்ப் பதிகம் (௩௭௨)

பதிக வின்னிசை பாடிப்போய்ப் பிறபதி பலவு
நதிய ணிநதவர் கோயில்க ணண்ணியே வணஙகி
மதுர முத்தமிழ் வாசக ரணைந்தனர் மன்றுள்
அதிர்சி லம்படி யார்மகி ழவளிவ ணல்லூர் (௩௭௩)

மன்னு மப்பதி வானவர் போற்றவு மகிழ்ந்த
தன்மை யார்பயில் கோயிலுட் டம்பரி சுடையார்
என்னு நாமமு நிகழ்ந்திட வேதிமுன் னிறைஞ்சிப்
பன்னு சீர்ப்பதி பலவுமப் பாற்சென்று பணிவார. (௩௭௪)

பழுதில் சீர்திருப் பரிதிநன் னியமமும் பணிந்தங்
கெழுது மாமறை யாம்பதி கத்திசை போற்றி
முழுது மானவர் கோயில்கள் வணஙகியே முறைமை
வழுவி லாதிருப் பூவனூர் வணஙகிவந் தணைந்து. (௩௭௫)

பொங்கு காதலிற் போற்றியங கருளுடன் போந்து
பங்க யத்தடம் பணைப்பதி பலவுமுன் பணிந்தே
யெங்கு மன்பர்க ளேத்தொலி யெடுக்கவந் தணைந்தார்
அங்க ணர்க்கிட மாகிய பழம்பதி யாவூர். (௩௭௬)

பணியு மப்பதிப் பசுபதீச் சரத்தினி திருந்த
மணியை யுள்புக்கு வழிபடும் விருப்பினால் வணங்கித்

தணிவில் காதலிற் றண்டமிழ் மாலைகள் சாத்தி
யணிவி ளங்கிய திருநலூர் மீண்டும்வந் தணைந்தார். (௩௭௭)

மறைவி ளங்குமப் பதியினின் மணிகண்டர் பொற்றாள்
நிறையு மன்பொடு வணங்கியே நிகழ்பவர் நிலவும்
பிறைய ணிந்தவ ரருள்பெறப் பிரசமென் மலர்வண்
டறைந றும்பொழிற் றிருவலஞ் சுழியில்வந் தணைந்தார். (௩௭௮)

மதிபு னைந்தவர் வலஞ்சுழி மருவுமா தவத்து
முதிரு மன்பர்கண் முத்தமிழ் விரகர்த முன்வந்
தெதிர்கொள் போழ்தினி லிழிந்தவ ரெதிர்செல மதியைக்
கதிர்செய் வெண்முகிற் குழாம்புடை சூழ்ந்தெனக் கலந்தார். (௩௭௯)

கலந்த வன்பர்க டொழுதெழக் கவுணியர் தலைவர்
அலர்ந்த செங்கம லக்கரங் குவித்துட னணைவார்
வலஞ்சு ழிப்பெரு மான்மகிழ் கோயில்வந் தெய்திப்
பொலங்கொள் நீள்சுடர்க் கோபுர மிறைஞ்சி யுட்புகுந்தார். (௩௮௦)

மருவு லார்புர முனிந்தவர் திருமுன் றில் வலங்கொண்
டுருகு மன்புட னுச்சிமே லஞ்சலி யினராய்த்
திருவ லஞ்சுழி யுடையவர் சேவடித் தலத்திற்
பெருகு மாதர வுடன்பணிந் தெழுந்தனர் பெரியோர். (௩௮௧)

ஞான போனகர் நம்பர்முன் றொழுதெழு விருப்பால்
ஆன காதலி லங்கண ரவர்தமை வினவும
ஊன மில்லிசை யுடன்விளங் கியதிருப் பதிகம்
பான லார்மணி கண்டரைப் பாடினார் பரவி. (௩௮௨)

புலன்கொ ளின்றமிழ் போற்றினர் புறத்தினி லணைந்தே
யிலங்கு நீர்ப்பொன்னி சூழ்திருப் பதியினி லிருந்து
நலங்கொள் காதலி னாதர்தா ணாடொறும் பரவி
வலஞ்சு ழிப்பெரு மான்றொண்டர் தம்முடன் மகிழ்ந்தார். (௩௮௩)

மகிழ்ந்த தன்றலை வாழுமந் நாளிடை வானிற்
றிகழ்ந்த ஞாயிறு துணைப்புண ரோரையுட் சேர்ந்து
நிகழ்ந்த தன்மையி னிலவுமேழ் கடனீர்மை குன்ற
வெகுண்டு வெங்கதிர் பரப்பலின் முதிர்ந்தது வேனில். (௩௮௪)

தண்பு னற்குளிர் கானறுஞ் சந்தனத் தேய்வை
பண்பு நீடிய வாசமென் மலர்பொதி பனிநீர்
நண்பு டைத்துணை நகைமணி முத்தணி நாளும்
உண்ப மாதுரி யச்சுவை யுலகுளோர் விரும்ப. (௩௮௫)

---

(௩௮௪) துணைபுணர் ஓரை - மிதுனராசி. கடல் நீர்மை குன்றலாவது - நீர்வாழ்வன பிறவாமையும், மணிமுதலியன தோன்றாமையும் எனக. (௩௮௫) மாதுரியச்சுவை - மதுர வுணவு.

### வேறு.

அறன்மலியுங் கான்யாற்றி னீர்நசையா லணையுமான்
பெறலரிய புனலென்று பேய்த்தேரின் பின்படரும்
உறையுணவு கொள்ளும்புட் டேம்பியய லிரைதேரும்
பறவைசிறை விரித்தொடுங்கப் பனிப்புறத்து வதியுமால். (௩௮௬)

நீணிலைமா ளிகைமேலு நிலாமுன்றின் மருங்கினிலும்
வாணிழனற் சோலையிலு மலர்வாவிக் கரைமாடும்
பூணிலவு முத்தணிந்த பூங்குழலார் முலைத்தடத்துங்
காணுமகிழ்ச் சியின்மலர்ந்து மாந்தர்கலந் துறைவரால். (௩௮௭)

மயிலொடுங்க வண்டாட மலர்க்கமல முகைவிரியக்
குயிலொடுங்குஞ் சோலையின்மென் றளிர்கோதிக் கூவியெழத்
துயிலொடுங்கா வுயிரனைத்துந் துயில்பயிலச் சுடர்வானில்
வெயிலொடுங்கா வெம்மைதரும் வேனில்விரி தருநாளில். (௩௮௮)

சண்பைவரும் பிள்ளையார் சடாமகுடர் வலஞ்சுழியை
யெண்பெருகத் தொழுதேத்திப் பழையாறை யெய்துதற்கு
நண்புடைய வடியாரு டன்போத நடந்தருளி
விண்பொருநீண் மதிளாறை மேற்றளிசென் றெய்தினார். (௩௮௯)

திருவாறை மேற்றளியிற் றிகழ்ந்திருந்த செந்தீயின்
உருவாள னடிவணங்கி யுருகியவன் பொடுபோற்றி
மருவாருங் குழன்மலையாள் வழிபாடு செய்யவருள்
தருவார்தந் திருச்சத்தி முற்றத்தின் புறஞ்சார்ந்தார். (௩௯௦)

திருச்சத்தி முற்றத்திற் சென்றெய்தித் திருமலையாள்
அருச்சித்த சேவடிக ளார்வமுறப் பணிந்தேத்திக்
கருச்சுற்றி லடையாமற் காத்தருள்வார் கழல்பாடி
விருப்புற்றுத் திருப்பட்டீச் சரம்பணிய மேவுங்கால். (௩௯௧)

வெம்மைதரு வேனிலிடை வெயில்வெப்பந் தணிப்பதற்கு
மும்மைநிலைத் தமிழ்விரகர் முடிமீதே சிவபூதந்
தம்மையறி யாதபடி தண்டரளப் பந்தரெடுத்
தெம்மைவிடுத் தருள்புரிந்தார் பட்டீச ரென்றியம்பும். (௩௯௨)

அவ்வுரையு மணிமுத்தின் பந்தருமா காயமெழச்
செவ்வியமெய்ஞ் ஞானமுணர் சிரபுரத்துப் பிள்ளையார்
இவ்வினைதா னீசர்திரு வருளாகி லிசைவதெனா
மெய்விரவு புளகமுடன் மேதினியின் மிசைத்தாழ்ந்தார். (௩௯௩)

---

(௩௮௬) அறல் - கருமணல். பேய்த்தேர் - கானற்சலம். உறை உணவு - மழைத் துளிகளையுணவாக. புள் - வானம்பாடி.

அதுபொழுதே யணிமுத்தின் பந்தரினை யருள்சிறக்கக்
கதிரொளிய மணிக்காம்பு பரிசனங்கள் கைக்கொண்டார்
மதுரமொழி மறைத்தலைவர் மருங்கிமையோர் பொழிவாசப்
புதுமலரா லப்பந்தர் பூம்பந்த ரும்போலும். (௩௯௪)

தொண்டர்குழா மார்ப்பெடுப்பச் சுருதிகளின் பெருந்துழனி
யெண்டிசையு நிறைந்தோங்க வெழுந்தருளும் பிள்ளையார்
வெண்டரளப் பந்தர்நிழன் மீதணையத் திருமன்றில்
அண்டர்பிரா னெடுத்ததிரு வடிநீழ லெனவமர்ந்தார் (௩௯௫)

பாரின்மிசை யன்பருடன் வருகின்றார் பன்னகத்தின்
ஆரமணிந் தவர்தந்த வருட்கருணைத் திறம்போற்றி
யீரமனங் களிதழைப்ப வெதிர்கொள்ள முகமலர்ந்து
சேரவருந் தொண்டருடன் றிருப்பட்டீச் சரமணைந்தார் (௩௯௬)

சென்றணைந்து திருவாயிற் புறத்திறைஞ்சி யுள்புக்கு
வென்றிவிடை யவர்கோயில் வலங்கொண்டு வெண்கோட்டுப்
பன்றிகிளைத் தறியாத பாதத்தா மரைகண்டு
முன்றொழுது விழுந்தெழுந்து மொழிமாலை போற்றிசைத்தார் (௩௯௭)

அருள்வெள்ளத் திறம்பரவி யளப்பரிய வானந்தப்
பெருவெள்ளத் திடைமூழ்கிப் போதாத பெருங்காதற்
றிருவுள்ளப் பரிவுடனே செம்பொன்மலை வல்லியார்
தருவள்ளத் தமுதுண்ட சம்பந்தர் புறத்தணைந்தார். (௩௯௮)

அப்பதியி லமர்கின்ற வாளுடைய பிள்ளையார்
செப்பருஞ்சீர்த் திருவாறை வடதளியிற் சென்றிறைஞ்சி
யொப்பரிய தமிழ்பாடி யுடனமருந் தொண்டருடன்
எப்பொருளு மாய்நின்றா ரிரும்பூளை யெய்தினார். (௩௯௯)

தேவர்பிரா னமர்ந்ததிரு விரும்பூளை சென்றெய்தக்
காவணநீ டோரணங்க ணாட்டியுடன் களிசிறப்பப்
பூவணமா லைகணாற்றிப் பூரணபொற் குடநிரைத்தங்
கியாவர்களும் போற்றிசைப்பத் திருத்தொண்ட ரெதிர்கொண்டார். (௪௦௦)

வண்டமிழின் மொழிவிரகர் மணிமுத்தின் சிவிகையினைத்
தொண்டர்குழாத் தெதிரிழிந்தங் கவர்தொழத்தா முந்தொழுதே
யண்டர்பிரான் கோயிலினை யணைந்திறைஞ்சி முன்னின்று
பண்டருமின் னிசைப்பதிகம் பரமபொருளைப் பாடுவார். (௪௦௧)

நிகரிலா மேருவரை யணுவாக நீண்டானை
நுகர்கின்ற தொண்டர்தமக் கமுதாகி நொய்யானைத்
தகவொன்ற வடியார்க ளடைவினவித் தமிழ்விரகர்
பகர்கின்ற வருமறையின் பொருள்விரியப் பாடினார். (௪௦௨)

**திருஇரும்பூளை - பண் - இந்தளம்.**

திருச்சிற்றம்பலம்.

சீரார்கழலேதொழுவீரிதுசெப்பீர்
வாரார்முலைமங்கையொடும்முடனாகி
யேராரிரும்பூளையிடங்கொண்டவீசன்
காரார்கடனஞ்சமுதுண்டகருத்தே.

எந்தையிரும்பூளையிடங்கொண்டவீசன்
சந்தம்பயில்சண்பையுள்ஞானசம்பந்தன்
செந்தண்டமிழ்செப்பியபத்திவைவல்லார்
பந்தம்மறுத்தோங்குவர்பான்மையினாலே.

திருச்சிற்றம்பலம்

---

பாடுமர் தைப்பெரும் பாழியே முதலாகச
சேடர்பயி றிருச்சேறை திருநாலூர் குடவாயில்
நாடியசீர் நறையூர்தென் றிருப்புத்தூர் நயந்திறைஞ்சி
நீடுதமிழ்த் தொடைபுனைந்தந் நெடுநகரி லினிதமர்ந்தார் (௪0௫)

அங்கணினி தமருநா ளடல்வெள்ளே னததுருவாய்ச்
செங்கணெடு மால்பணியுஞ் சிவபுரத்துச் சென்றடைந்து
கங்கைசடைக் கரந்தவர்தங் கழல்வணங்கிக் காதலினாற்
பொங்குமிசைத் திருப்பதிக முன்னின்று போற்றிசைத்தார். (௪0௬)

போற்றிசைத்துப் புனிதாருள் பெற்றுப்போந் தெவ்வுயிருந்
தோற்றுவிதத வயன்போற்றுந் தோணிபுரத் தந்தணனார்
ஏற்றுமிசை யேற்றுகந்த விறைவர்தமை யேத்துதற்கு
நாற்றிசையோர் பரவுதிருக் குடமூக்கு நண்ணினார். (௪0௭)

தேமருவு மலர்ச்சோலைத் திருக்குடமூக் கினிற்செல்வ
மாமறையோர் பூந்தராய் வள்ளலார் வந்தருளத்
தூமறையி னொலிபெருகத் தூரியமங் கலமுழங்கக்
கோமுறைமை யெதிர்கொண்டு தம்பதியுட் கொடுபுக்கார். (௪0௮)

திருஞான சம்பந்தர் திருக்குடமூக் கினைச்சேர
வருவாதம் பெருமானை வண்டமிழின் றிருப்பதிக
முருகாநின் றுளமகிழக் குடமூக்கை யுகந்திருந்த
பெருமானெம் மிறையென்று பெருகிசையாற் பரவினார். (௪0௯)

வந்தணைந்து திருக்கீழ்க்கோட் டத்திருந்த வான்பொருளைச்
சிந்தைமகிழ் வுறவணங்கித் திருத்தொண்ட ருடன்செல்வார்
அந்தணர்கள் புடைசூழ்ந்து போற்றிசைப்ப வவரோடுங்
கந்தமலர்ப் பொழில்சூழ்ந்த காரோணஞ் சென்றடைந்தார். (௪0அ)

பூமருவுங் கங்கைமுதற் புனிதமாம் பெருந்தீர்த்த
மாமகந்தா னாடுதற்கு வந்துவழி படுங்கோயி

றாமருவு மலர்க்கையாற் றொழுதுவலங் கொண்டணைந்து
காமர்கெட நுதல்விழித்தார் கழல்பணிந்து கண்களித்தார். (௪௦௯)

கண்ணாரு மருமணியைக் காரோணத் தாரமுதை
நண்ணாதார் புரமெரித்த நான்மறையின் பொருளானைப்
பண்ணார்ந்த திருப்பதிகம் பணிந்தேத்திப் பிறபதியும்
எண்ணார்ந்த சீரடியா ருடன்பணிவுற் றெழுந்தருளி. (௪௧௦)

திருநாகேச் சரத்தமர்ந்த செங்கனகத் தனிக்குன்றைக்
கருநாகத் துரிபுனைந்த கண்ணுதலைச் சென்றிறைஞ்சி
யருஞானச் செந்தமிழின் றிருப்பதிக மருள்செய்து
பெருஞான சம்பந்தர் பெருகார்வத் தின்புற்றார். (௪௧௧)

மாநாக மருச்சித்த மலர்க்கமலத் தாள்வணங்கி
நாணாளும் பரவுவார் பிணிதீர்க்கு நலம்போற்றிப்
பாணாறு மணிவாயர் பரமர்திரு விடைமருதிற்
பூநாறும் புனற்பொன்னித் தடங்கரைபோய்ப் புகுகின்றார். (௪௧௨)

ஓங்குதிருப் பதிகமோ டேகலனென் றெடுத்தருளித்
தாங்கரிய பெருமகிழ்ச்சி தலைசிறக்குந் தன்மையினால்
ஈங்கெனையா ளுடையபிரா னிடைமருதீ தோவென்று
பாங்குடைய வின்னிசையாற் பாடியெழுந் தருளினார். (௪௧௩)

---

திரு இடைமருது - பண் - தக்கராகம்.

திருச்சிற்றம்பலம்.

ஓடேகலனுண்பதுமூரிடுபிச்சை, காடேயிடமாவதுகல்லானிழற்கீழ்
வாடாமுலைமங்கையுந்தானுமகிழ்ந், தீடாவுறைகின்றவிடைமருதீதோ.

கண்ணார்கமழ்காழியுள்ஞானசம்பந்த, னண்ணார்புகழெந்தையிடைமருதின்மேற், பண்ணோடிசைபாடியபத்தும்வல்லார்கள், விண்ணோருலகத்தினில்வீற்றிருப்பாரே.

திருச்சிற்றம்பலம்.

---

அடியவர்க ளெதிர்கொள்ள வெழுந்தருளி யங்கணைந்து
முடிவில்பரம் பொருளானார் முதற்கோயின் முன்னிறைஞ்சிப்
படியில்வலங் கொண்டுதிரு முன்பெய்திப் பார்மீது
நெடிதுபணிந் தெழுந்தன்பு நிறைகண்ணீர் நிரந்திழிய. (௪௧௪)

பரவுறுசெந் தமிழ்ப்பதிகம் பாடியமர்ந் தப்பதியில்
விரவுவார் திருப்பதிகம் பலபாடி வெண்மதியோ
டரவுசடைக் கணிந்தவர்தந் தாள்போற்றி யார்வத்தால்
உரவுதிருத் தொண்டருடன் பணிந்தேத்தி யுறையுநாள். (௪௧௫)

மருங்குளநற் பதிகள்பல பணிந்துமா நதிக்கரைபோய்க்
குரங்காடு துறையணைந்து குழகனார் குரைகழல்கள்
பெருங்காத லிற்பணிந்து பேணியவின் னிசைபெருக
அருங்கலைநூற் றிருப்பதிக மருள்செய்து பரவினார். (௪௧௭)

வே று.

அம்ம லர்த்தடம் பதிபணிந் தகன்றுபோந் தருகு
மைம்ம லர்க்களத் திறைவர்தங் கோயில்கள் வணங்கி
நம்ம லத்துயர் தீர்க்கவந் தருளிய ஞானச்
செம்ம லாதிரு வாவடு துறையினைச் சேர்ந்தார். (௪௧௮)

மூவ ருக்கறி வரும்பொரு ளாகிய மூலத்
தேவர் தந்திரு வாவடு துறைத்திருத் தொண்டர்
பூவ லம்புதண் பொருபுனற் றடம்பணைப் புகலிக்
காவ லர்க்கெதிர் கொள்ளுமா தரவுடன் கலந்தார். (௪௧௯)

வந்த ணைந்தவர் தொழாமுன மலர்புகழ்ச் சண்பை
யந்த ணர்க்கெலா மருமறைப் பொருளென வந்தார்
சந்த நித்திலச் சிவிகைநின் றிழிந்தெதிர் தாழ்ந்தே
சிந்தை யின்புற விறைவர்தங் கோயின்முன் சென்றார் (௪௨௦)

நீடு கோபுர மிறைஞ்சியுட் புகுந்துநீ ணிலையான்
மாடு சூழ்திரு மாளிகை வலங்கொண்டு வணங்கி
யாடு மாதியை யாவடு துறையுளா ரமுதை
நாடு காதலிற் பணிந்தெழுந் தருந்தமிழ் நவின்றார். (௪௨௦)

அன்பு நீடிய வருவிகண பொழியுமா வந்தான்
முன்பு போற்றியே புறம்பணை முத்தமிழ் விரகர்
துன்பு போமனத் திருத்தொண்டர் தம்முடன் றொழுதே
யின்ப மேவியப் பதியினி லினிதமர்ந் திருந்தார். (௪௨௧)

மேவி யங்குறை நாளினில் வேள்விசெய் வதனுக்
காவ தாகிய காலம்வந் தணைவுற வணைந்து
தாவில் சண்பையர் தலைவர்க்குத் தாதையார் தாமும்
போவ தற்கரும் பொருள்பெற வெதிர்நின்று புகன்றார். (௪௨௨)

தந்தை யார்மொழி கேட்டலும் புகலியார் தலைவர்
முந்தை நாளிலே மொழிந்தமை நினைந்தருண் முன்னி
யந்த மில்பொரு ளாவன வாவடு துறையுள்
எந்தை யாரடித் தலங்களன் றோவென வெழுந்தார் (௪௨௩)

சென்று தேவர்தம் பிரான்மகிழ் கோயின்முன் பெய்தி
நின்று போற்றுவார் நீணிதி வேண்டினார்க் கீவ

(௪௧௯) மூவர் - பிரமவிஷ்ணு உருத்திரர்கள்.

தொன்று மற்றிலே னுன்னடி யல்லதொன் றறியேன்
என்று பேரருள் வினவிய செந்தமி ழெடுத்தார். (௪௨௪)

---

**திரு ஆவடுதுறை - நாலடிமேல்வைப்பு - பண் - காந்தார பஞ்சமம்.**

திருச்சிற்றம்பலம்.

இடரினுந்தளரினுமெனதுறுநோய், தொடரினுமுனகழறொழுதெழுவேன்
கடறனிலமுதொடுகலந்தநஞ்சை, மிடறினிலடக்கியவேதியனே
இதுவோவெமையாளுமாறீவதொன்றெமக்கில்லையேல்
அதுவோவுனதின்னருளாவடுதுறையானே

அலைபுனலாவடுதுறையமர்ந்த, இலைநுனைவேற்படையெம்மிறையை
நலமிகுஞானசம்பந்தன்சொன்ன, விலையுடையருந்தமிழ்மாலைவல்லார்
வினையாயினநீங்கிப்போய்விண்ணவர்வியனுலகம்
நிலையாகமுன்னேறுவார்நிலமிசைநிலையிலரே.

திருச்சிற்றம்பலம்.

---

எடுத்த வண்டமிழ்ப் பதிகநா லடியின்மே லிருசீர்
தொடுத்த வைப்பொடு தொடர்ந்தவின் னிசையினாற் றுதிப்பார்
மடுத்த காதலில் வள்ளலா ரடியிணை வழுத்தி
யடுத்த சிந்தையா லாதரித் தஞ்சலி யளித்தார (௪௨௫)

நச்சி யின்றமிழ் பாடிய ஞானசம் பந்தர்
இச்சை யேபுரிந் தருளிய விறையவரின் னருளால
அச்சி றப்பருள் பூதமுன் விரைந்தகன் பீடத்
துச்சி வைத்தது பசும்பொனா யிரக்கிழி யொன்று (௪௨௬)

வைத்த பூதமங் கணைந்துமுன் னின்றுநல் வாக்கால்
உய்த்த விக்கிழி பொன்னுல வாக்கிழி யுமக்கு
நித்த னாருள செய்ததென் றுரைக்கவே தொழுதே
யத்த னார்திரு வருணினைந் தவனிமேற் பணிந்தார் (௪௨௭)

பணிந்தெ ழுந்துகை தொழுதுமுன் பணிமலர்ப் பீடத்
தணைந்த வாடகக் கிழிதலைக் கொண்டரு மறைகள்
துணிந்த வான்பொரு டரும்பொரு ளேயவாய் மையினாற்
றணிந்த சிந்தையத் தந்தையார்க் களித்துரை செய்வார். (௪௨௮)

ஆதி மாமறை விதியினா லாறுசூழ் வேணி
நாத னாரைமுன் னாகவே புரியுநல் வேள்வி
தீது நீங்கநீர் செய்யவுந் திருக்கழு மலத்து
வேத வேதிய ரனைவருஞ் செய்யவு மிதுமால். (௪௨௯)

(௪௨௮) ஆடகக்கிழி - பொற்கிழி.

என்று கூறியங் கவர்தமை விடுத்தபி னவரு
நன்று மின்புறு மனத்தொடும் புகலிமே னண்ண
வென்றி ஞானசம் பந்தரும் விருப்பொடு வணங்கி
மன்ற லாவடு துறையினின் மகிழ்ந்தினி திருந்தார். (௪௩௦)

அண்ண லார்திரு வாவடு துறையமர்ந் தாரை
யுண்ணி லாவிய காதலி னுற்பணிந் துறைந்து
மண்ணெ லாமுய வந்தவர் போந்தவார் சடைமேற்
றெண்ணி லாவணி வார்திருக் கோழம்பஞ் சேர்ந்தார் (௪௩௧)

கொன்றை வார்சடை முடியரைக் கோழம்பத திறைஞ்சி
யென்று நீடிய வின்னிசைப் பதிகமுன் னியம்பி
மன்று ளார்மகிழ் வைகன்மா டககோயின மருஙகு
சென்று சாாநதனா திருவளர் சிரபுரச செலவர் (௪௩௨)

வைக னீடுமா டககோயின மன்னிய மருந்தைக
கைக ளஞ்சலி கொண்டுதாழ்ந தெழுந்துகண் ணருவி
செய்ய வின்னிசைச செநதமிழ் மாலைகண் மொழிந்து
நையு முள்ளதத ராய்ததிரு நல்லத்தி னண்ணி. (௪௩௩)

நிலவு மாளிகைத் திருநல்ல நீடுமா மணியை
யிலகு சேவடி யிறைஞ்சியின் றமிழ்கொடு துதித்துப்
பலவு மீசர்தந திருப்பதி பணிந்துசெல் பவர்தாம்
அலைபு னற்றிரு வழுந்தூர்மா டக்கோயி லடைந்தார். (௪௩௪)

மன்னு மாமட மகிழ்ந்தவரன் பொருளினை வணங்கிப்
பன்னு பாடலிற் பதிகவின் னிசைகொடு பரவிப்
பொன்னி மாநதிக் கரையினின் மீண்டுபோந் தணைந்து
சொன்ன வாறறி வார்தமைத் துருத்தியிற் றொழுதார். (௪௩௫)

திரைத்த டம்புனற் பொன்னிசூழ் திருத்துருத் தியினில்
வரைத்த லைப்பசும் பொன்னெனும் வணடமிழ்ப் பதிகம்
உரைதது மெயயுறப் பணிநதுபோந் துலவுமந் நதியின்
கரைக்கண மூவலூர்க கண்ணுத லார்கழல பணிநதார். (௪௩௬)

மூவ லூருறை முதல்வரைப் பரவிய மொழியான்
மேவு காதலி லேத்தியே விருப்பொடும் போநது
பூவ லம்புதண் புனற்பணைப் புகலியர் தலைவர்
வாவி சூழ்திரு மயிலாடு துறையினில் வந்தார். (௪௩௭)

மல்கு தண்டலை மயிலாடு துறையினின் மருவுஞ்
செல்வ வேதியர் தொண்டரோ டெதிர்கொளச் சென்று
கொல்லை மான்மறிக் கையரைக் கோயில்புக் கிறைஞ்சி
யெல்லை யில்லதோ ரின்பமுன் பெருகிட வெழுந்தார். (௪௩௮)

உள்ள மின்புற வுணர்வுறும் பரிவுகொண் டுருகி
வெள்ளந் தாங்கிய சடையனை விளங்குசொற் பதிகத்
தெள்ளு மின்னிசைத் திளைப்பொடும் புறத்தணைந் தருளி
வள்ள லார்மற்ற வளம்பதி மருவுதன் மகிழ்ந்தார். (௪௩௯)

அத்தி ருப்பதி யகன்றுபோ யணிகிளர் சூலக்
கைத்த லப்படை வீரர்செம் பொன்பள்ளி கருதி
மெய்த்த காதலில் விளநகர் விடையவர் பாதம்
பத்தர் தம்முடன் பணிந்திசைப் பதிகமுன் பகர்ந்தார். (௪௪௦)

பாடி மப்பதி பணிந்துபோய்ப் பறியலூர் மேவுந்
தோடு லாமல ரிதழியுந் தும்பையு மடம்புங்
காடு கொண்டசெஞ் சடைமுடிக் கடவுளார் கருது
நீடு வீரட்டம் பணிந்தனர் நிறைமறை வேந்தர். (௪௪௧)

பரமர் தந்திருப் பறியலூர் வீரட்டம் பரவி
விரவு காதலின் வேலையின் கரையினை மேவி
யரவ ணிந்தவர் பதிபல வுந்தொழு துமுன் வணங்கிச்
சிரபு ரத்தவர் திருத்தொண்ட ரெதிர்கொளச் செல்வார். (௪௪௨)

வேறு.

அடியவர்கள் களிசிறப்பத் திருவேட்டக் குடிபணிந்தங் கலைவாய்ப் போகிக்
கடிகமழு மலர்ப்பழனக் கழனிநாட் டகன்பதிகள் கலந்து நீங்கிக்
கொடிமதில்சூழ் தருமபுரங் குறுகினார் குண்டர்சாக் கியர்தங் கொள்கை
படியறியப் பழுதென்றே மொழிந்துய்யு நெறிகாட்டும் பவள வாயர். ()

தருமபுரம் பெரும்பாணர் திருத்தாயர் பிறப்பிடமா மதனாற் சார
வருமவர்தஞ் சுற்றத்தா ரெதிர்கொண் டடிவணங்கி வாழ்த்தக் கண்டு
பெருமையுடைப் பெரும்பாண ரவர்க்குரைப்பார் பிள்ளையா ரருளிச்செய்த
அருமையுடைப் பதிகந்தாம் யாழினாற் பயிற்றும்பே றருளிச் செய்தார். ()

இளைஞருமற் றதுகேட்டுக் கெழுவுதிருப் பதிகத்திற் கிளர்ந்த வோசை
யளவுபெறக் கருவியினி லமைதரியுற் றதனாலே யகில மெல்லாம்
வளரிசை நிகழ்வதென விளம்புதலும் வளமபுகலி மன்னர் பாதம்
உளநடுங்கிப் பணிந்துதிரு நீலகண்டப் பெரும்பாண ருணர்த்துகின்றார். ()

அலகிறிருப் பதிகவிசை யளவுபடா வகையிவர்க ளன்றி யேயும் [ற்
உலகிலுளோ ருந்தெரிந்தங் குண்மையினை யறிந்துய்ய வுணர்த்தும் பண்பா
பலர்புகழுந் திருப்பதிகம் பாடியரு ளப்பெற்றாற் பண்பு நீடி
இலகுமிசை யாழின்க ணடங்காமை யான்காட்டப் பெறுவ னென்றார். ()

வேதநெறி வளர்ப்பவரும் விடையவர்முன் றொழுதுதிருப் பதிகத்துண்மை
பூதலத்தோர் கண்டத்துங் கலத்தினிலு நிலத்துறால் புகன்ற பேதை

நாதவிசை முயற்சிகளா லடங்காத வகைகாட்ட நாட்டு கின்றார்
மாதர்மடப் பிடிபாடி வணங்கினார் வானவரும் வணங்கி யேத்த. (௪௪௭)

---

திருத்தருமபுரம் - பண் - யாழ்மூரி.

திருச்சிற்றம்பலம்.

மாதர்மடப்பிடியுமடவன்னமுமன்னதோர்நடையுடைம்மலைமகடுணையெனமகிழ்வர்,பூதவினப்படைநின்றிசைபாடவுமாடுவரவர்படர்சடைநெடுமுடியதோர்புனலா, வேதமோடேழிசைபாடுவராழ்கடல்வெண்டிரையிரைநுரைகரைபொருதுவிம்மிநின்றயலே, தாதவிழ்புன்னைதயங்குமலர்ச்சிறைவண்டறையெழில்பொழில்குயிலபயிலதருமபுரம்பதியே

பொன்னெடுநன்மணிமாளிகைசூழ்விழவம்மலிபொருபுனல்திருவமர்புகலியென்றுலகிற், றனனெறுடுநோபிறவிலபதிஞானசம்பந்தனஃதுசெந்தமிழ்த்தடங்கடற்றருமபுரம்பதியைப், பினனெடுவாாசடையிற்பிறையும்மரவும்முடையவன்பிணைதுணைகழலகளபேணுதலுரியா,ரினனெடுநலனுலகெய்துவரெய்தியம்பாகமுமுறுவாகளிடர்பிணிதுயரணைவிலரே

திருச்சிற்றம்பலம்

---

வண்புகலி வேதியனார் மாதர்மடப் பிடியெடுத்து வனப்பிற் பாடிப்
பண்பயிலுந் திருக்கடைக்காப் புச்சாத்த வணைந்துபெரும பாண னார்தா [க்
நண்புடையாழ்க் கருவியினின் முன்புபோற் கைக்கொண்டு நடத்தப் புக்கார்
கெணபெருகு மப்பதிகத் திசைநரம்பி லிடவடங்கிற் றில்லை யன்றே. ()

அப்பொழுது திருநீல கண்டவிசைப் பெரும்பாண ரதனை விட்டு
மெய்ப்பயமும் பரிவுமுறப் பிள்ளையார கழலிணைவீழ்ந் தெழுந்து நோக்கி
இப்பெரியோ ரருள்செய்த திருப்பதிகத் திசையாழி லேற்ப னென்னச்
செப்பியதிக கருவியைநான் றொடுதலினன் றேயென்றுதெளிந்துசெய்வார்.

வீக்குநரம் புடையாழி னல்விளைந்த திதுவென்றங் கதனைப் போக்க
வோக்குதலுந் தடுத்தருளி யையரே யுற்றவிசை யளவி னனீர்
ஆக்கியவிக் கருவியினைத தாருமென வாஙகிககொண டவனி செய்த
பாக்கியத்தின் மெய்வடிவாம் பாலறு வாயர்பணித தருளு கின்றார். (௪௫0)

ஐயர்நீர் யாழிதனை முரிக்குமதெ னுளுடையா ளுடனே கூடச்
செய்யசடை யாரளித்த திருவருளின் பெருமையெலாந தெரிய நம்பால்
எய்தியவிக் கருவியினி லளவுபடு மோநநத மியல்புக கேற்ப
வையகத்தோ ரறிவுறவிக் கருவியள வையினியற்றல் வழக்கே யென்றார். ()

சிந்தையா லளவுபடா விசைப்பெருமை செயலளவி லெய்து மோநீர்
இந்தயா ழினைக்கொண்டே யிறைவர்திருப் பதிகவிசை யிதனி லெய்த
வந்தவா றேபாடி வாசிப்பீ ரெனக்கொடுப்பப் புகலி மன்னர் [டார்.
தந்தயா ழினைத்தொழுது கைக்கொண்டு பெரும்பாணர் தலைமேற் கொண்

அணைவுறுமக் கிளைஞருடன் பெரும்பாண ராளுடைய பிள்ளை யார்தந்
துணைமலர்ச்சே வடிபணிந்து துதித்தருளத் தோணிபுரத் தோன்ற லாரும்
இணையில்பெருஞ் சிறப்பருளித் தொண்டருட னப்பதியி லினிது மேவிப்
பணைநெடுங்கை மதயானை யுரித்தவர்தம் பதிபிறவும் பணியச் செல்வார். ()

பங்கயப்பா சடைத்தடஞ்சூழ் பழனநாட் டகன்பதிகள் பலவு நண்ணி
மங்கையொரு பாகத்தார் மகிழ்கோயி லெனைப்பலவும் வணங்கிப் போற்றித
தங்கிசையாழ்ப் பெரும்பாண ருடன்மறையோர் தலைவனார்சென் றுசார்ந்தார்
செங்கைமான் மழுவேந்துஞ் சினவிடையா ரமர்ந்தருளுந் திருநள் ளாறு. ()

நள்ளாற்றி லெழுந்தருள நம்பர்திருத் தொண்டர்குழா நயந்து சென்று
கொள்ளாற்றி லெதிர்கொண்டு குலவியுடன் சூழ்ந்தணையக் குறுகிக்கங்கைத்
தெள்ளாற்று வேணியர்தந் திருவளர்கோ புரமிறைஞ்சிச் செல்வக் கோயில
உள்ளாற்ற வலங்கொண்டு திருமுன்பு தாழ்ந்தெழுந்தா ருணர்வின் மிக்கார்.

உருகியவன் புறுகாத லுள்ளுருகி நனையீரம் பெற்றாற் போல
மருவுதிரு மேனியெலா முகிழ்த்தெழுந்த மயிர்ப்புளகம் வளர்க்கு நீரா
யருவிசொரி திருநயனத் தானந்த வெள்ளமிழிந் தலைய நின்று
பொருவில்பதி கம்போக மார்த்தபூண் முலையாளென் றெடுத்துப் போற்றி.

---

திருநள்ளாறு - பண் - பழந்தக்கராகம்.

திருச்சிற்றம்பலம்

போகமார்த்தபூண்முலையாடன்னோடும்பொன்னகலம்
பாகமார்த்தபைங்கண்வெள்ளேற்றண்ணல்பரமேட்டி
யாகமார்த்ததோலுடையன்கோவணவாடையின்மே
னாகமார்த்தநம்பெருமான்மேயதுநள்ளாறே.

தண்புனலும்வெண்பிறையுந்தாங்கியதாழ்சடைய
னண்புநல்லார்மல்குகாழிஞானசம்பந்தனல்ல
பண்புநள்ளாறேத்துமபாடல்பத்துமிவைவல்லா
ருண்புநீங்கிவானவரோடுலகிலுறைவாரே.

திருச்சிற்றம்பலம்.

---

யாணரம்பி லாரவிய லிசைகூடப் பாடியே யெண்ணில் கற்பச்
சேணளவு படவோங்குந் திருக்கடைக்காப் புச்சாத்திச் செங்க ணாகப்
பூணகலத் தவர்பாதம் போற்றிசைத்துப் புறத்தணைந்து புவன மேத்தும்
பாணனார் யாழிலிடப் பாலரு வாயரருள் பணித்த போது. (௩௱௭)

பிள்ளையார் திருத்தாளங் கொடுபாடப் பின்புபெரும் பாண னார்தாந்
தெள்ளமுத வின்னிசையின் றேம்பொழிதந் திரியாழைச் சிறக்க வீக்கிக்
கொள்ளவிடும் பொழுதின்கட் குவலயத்தோர் களிகூரக் குலவு சண்பை
வள்ளலார் திருவுள்ள மகிழ்ந்துதிருத் தொண்டருடன் மருவுங் காலை. ()

மன்னுதிரு நள்ளாற்று மருந்தைவணங் கிப்போந்து வாச நன்னீர்ப்
பொன்னிவளந் தருநாட்டுப் புறம்பணைசூழ் திருப்பதிகள் பலவும் போற்றிச்
செந்நெல்வயற் செங்கமல முகமலருந் திருச்சாத்த மங்கை மூதூர்
தன்னிலெழுந் தருளினார் சைவசிகா மணியார்மெய்த் தவத்தோர் சூழ. ()

நிறைசெல்வத் திருச்சாத்த மங்கையினி னீலநக்கர் தாமுஞ் சைவ
மறையவனா ரெழுந்தருளும் படிகேட்டு வாழ்ந்துவழி விளக்கி யெங்கும்
துறைமலிதோ ரணங்கதலி கமுகுநிறை குடந்தூப தீப மாக்கி [தார்.
முறைமையில்வந் ததிர்கொள்ள வுடனணைந்து முதல்வனார் கோயில் சார்ந்

அயவந்தி யமர்ந்தருளு மங்கணர்தங் கோயின்மருங் கணைந்து வானோர்
உயவந்தித் தெழுமுன்றில் புடைவலங்கொண் டுள்புக்கா ரெழுகுஞ் செக்கர்
மயவந்தி மதிச்சடையார் முன்றாழ்ந்து மாதவமிவ் வைய மெல்லாஞ்
செயவந்த வந்தணனார் செங்கைமேற் குவித்தெழுந்து திருமுன் னின்றார்.()

போற்றிசைக்கும் பாடலினாற் பொங்கியெழு மாதரவு பொழிந்து விம்ம
ஏற்றின்மிசை யிருப்பவர்த மெதிர்நின்று துதித்துப்போந் தெல்லை யில்லா
நீற்றுநெறி மறையவனார் நீலநக்கர் மனையிலெழுந் தருளி யன்பால்
ஆற்றும்விருந் தவரமைப்ப வன்பருட னின்புற்றங் கமுது செய்தார்.(சூகூ௨)

நீடுதிரு நீலநக்கர் நெடுமனையில் விருந்தமுது செய்து நீர்மை
பாடுமியாழ்ப் பெரும்பாண ருந்தங்க வங்கிரவு பள்ளி மேவி
யாடுமவ ரயவந்தி பணிவதனுக் கன்பருட னணைந்து சென்று
நாடியநண் புடைநீல நக்கடிக ளுடனாதர் கழலிற் றாழ்ந்து. (சூகூ௩)

கோதிலா வாரமுதைக் கோமளககொம் புடன்கூடக் கும்பிட் டேத்தி
யாதியா மறைப்பொருளா லருந்தமிழின் றிருப்பதிக மருளிச் செய்வார்
நீதியா னிகழ்கின்ற நீலநக்கர் தம்பெருஞ்சீர் நிகழ வைத்துப்
பூதிசா தனர்பரவும் புனிதவிய லிசைப்பதிகம் போற்றி செய்தார். (சூகூ௪)

பரவியகா தலிற்பணிந்து பாலரா வாயர்புறத் தணைந்து பண்பு
விரவியநண் புடையடிகள் விருப்புறுகா தலிற்றங்கி மேவு நாளில்
அரவணிந்தார் பதிபிறவும் பணியவெழு மாதரவா லணைந்து செல்வார்
உரவுமனக் கருத்தொன்றா முள்ளமுடை யவர்கவிடை யுவந்து நல்கி. ()

வேறு.

மற்றவர்தம் பெருங்கேண்மை மகிழ்ந்து கொண்டு மாலயனுக் கரிய பிரான் மருவுதானம், பற்பலவுஞ் சென்றுபணிந் தேத்திப் பாடிப் பரமர் திருத்தொண்டர்குழாம் பாங்கி னெய்தக், கற்றவர்வாழ் கடனாகைக் காரோ ணத்துக்கண்ணுதலைக் கைதொழுது கலந்தவோசைச்,சொற்றமிழ்மா லைகள் பாடிச் சிலநாள் வைகித் தொழுதகன்றார் தோணிபுரத் தோன்ற லார்தாம்.()

வேறு.

கழிக்கானன் மருங்கணையுங் கடனாகை யதுநீங்கிக் கங்கை யாற்றுச்
சுழிககானல் வேணியர்தம் பதிபலவும் பரவிப்போய்த் தோகை மார்தம்
விழிக்காவி மலர்பழனக் கீழ்வேளூர் விமலர்கழல் வணங்கி யேத்தி
மொழிக்காதற் றமிழ்மாலை புனைந்தருளி யங்ககன்றூர் மூதூர் நின்றும். ()

அருகணையுந் திருப்பதிக ளானவெலா மங்கணரைப் பணிந்து போற்றிப்
பெருகியஞா னம்பெற்ற பிள்ளையா ரெழுந்தருளும் பெருமை கேட்டுத்
திருமருவு செங்காட்டங் குடிநின்றுஞ் சிறுத்தொண்ட ரோடிச் சென்றங்
குருகுமனங் களிசிறப்ப வெதிர்கொண்டு தம்பதியுட் கொண்டு புக்கார். ()

சிறுத்தொண்ட ருடன்கூடச் செங்காட்டங் குடியிலெழுந் தருளிச் சீர்த்தி
நிறுதசெண்டிக் கிலுநிலவுந் தொண்டரவர் நண்பமர்ந்து நீல கண்டம்
பொறுத்தண்ட ருயக்கொண்டார் கணபதீச் சரத்தின்கட் போக'மெல்லாம்
வெறுத்துண்டிப் பிச்சைநுகர் மெய்த்தொண்ட ருடனணைந்தார் வேதகீதர்.

அங்கணைந்து கோயில்வலங் கொண்டருளி யரவணிந்தா ரடிக்கீழ் வீழ்ந்து, செங்கணரு விகள்பொழியத் திருமுன்பு பணிந்தெழுந்து செங்கை கூப்பித், தஙகள்பெருந் தகையாரைச சிறுத்தொண்டர் தொழவிருந்த தன்மை போற்றிப், பொஙகியெழு மிசைபாடிப் போற்றிசைத்தங் கொருபரிசு புறம்பு போந்தார் (௪௭௦)

---

திருச்செங்காட்டங்குடி - பண் - பஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்

பைங்கோட்டுமலர்புன்னைப்பறவைகாள்பயப்பூரச
சஙகாட்டந்தவிர்தசென்னைத்தவிராநோய்தநதானே
செங்காட்டங்குடிமேயசிறுதசொண்டன்பணிசெய்ய
வெங்காட்டுளனலேந்திவிளையாடும்பெருமானே

செந்தனல்பூம்புனல்பரநதசெஙகாட்டஙகுடிமேய
வெநதநீறணிமார்பன்சிறுதசொண்டனவனவேணட
வநதண்பூஙகலிக்காழியடிகளேயேயடிபரவுஞ்
சந்தங்கொள்சம்பந்தன்றமிழுரைப்போர்தககோரே.

திருச்சிற்றமபலம்.

---

போந்துமா மாத்தியர்தம் போரேற்றின் றிருமனையிற் புகுந்து சிந்தை
வாயந்தமா தவரவர்தா மகிழ்ந்தருள வமர்ந்தருளி மதில்கண் மூன்றுங
காய்நதமால் விடையார்தங கணபதீச் சரம்பரவு காதல் கூர
வேந்துநூ லணிமாரப ரின்புற்றங கன்பருட னிருந்த நாளில (௪௭௧)

திருமருக னகரின்க ணெழுந்தருளித் திங்களுடன் செங்கட் பாம்பு
மருவுநெடுஞ் சடைமவுலி மாணிக்க வண்ணர்கழல் வணங்கிப் போற்றி

யுருகியவன் புறகாத லுள்ளலைப்பத் தெள்ளுமிசை யுடனே கூடப்
பெருகுதமிழ்த் தொடைசாத்தி யங்கிருந்தார் பெரும்புகலிப்பிள்ளையார்தாம்

வேறு.

அந்நாளி லொருவணிகன் பதிகனாகி யணைவானோர் கன்னியையு முட
னே கொண்டு, பொன்னார்மே ருச்சிலையார் கோயின் மாடு புறத்திலொரு
மடத்திரவு துயிலும் போது, மின்னார்வெள் ளெயிற்றரவு கவ்வுத லுங்கிளர்
ந்தவிடவேகங் கடிதுதலை மீக்கொண்டேறத், தன்னாவி நீங்குமவன் றன்மை
கண்டு சாயலிளங் கன்னிநிலை தளர்ந்து சோர்வாள். (௪௭௩)

வாளரவு தீண்டவுந்தான் றீண்ட கில்லாண் மறுமாற்ற மற்றொருவர்
கொடுப்பா ரின்றி, யாளரியே றனையானை யணுக வீழ்ந்தே யசைந்தமலர்க்
கொடிபோல்வா ளரற்றும் போது, கோளுருமும் புள்ளரசு மனையா ரெல்
லாக கொள்கையினா லுநதீர்க்கக் குறையா தாக, நீளிரவு புலர்காலை மாலை
வாச நெறிகுழலா ளடிதயர்ந்து புலம்பு கின்றாள் (௪௭௪)

அன்னையையு மத்தனையும் பிரிந்து நின்னை யடைவாக வுடன்போந்தே
னரவால வீடி, யென்னையுயிர் விட்டகன்றா யானென செய்கே னிவ்விடுக்
கண் டீர்க்கின்றா ராருமிலலை, மன்னியசீர் வணிகர்குல மணியே யானும்
வாழேனென் றென்றயாவாண் மதியிலாலே, சென்னியிளம் பிறையணிவார்
கோயில் வாயிற் றிசைநோக்கிக் கைதொழுவாள் செயலொன் றில்லாள். ()

அடியாரா மிமையவர்தங் கூட்ட முய்ய வலைகடல்வாய் நஞ்சுண்டவமு
தேசெங்க, ணெடியானு நான்முகனுங் காணக் கோல நீலவிட வரவணிந்த
நிமலா வெந்து, பொடியான காமனுயி ரிரதி வேண்டப் புரிந்தளித்த புண்
ணியனே பொங்கர் வாசக், கடியாரு மலர்ச்சோலை மருங்கு சூழுங் கவின்
மருகற் பெருமானே காவா யென்றும். (௪௭௬)

வந்தடைந்த சிறுமறையோ னுயிர்மேற் சீறி வருங்காலன் பெருங்கால
வலயம் போலு ... றுகண் வெள்ளெயிற்றுக் கரிய கோலஞ் சிதைந்து
ருள வு... செய்ய தாளா, விந்தவிடக் கொடுவேக நீங்கு மாறும்
யானிடுக்கட் ... மேறு மாறும், 'அந்திமதிக் குழவிவளர் செய்ய
வேணி யணிமருகற் பெருமானே யருளா யென்றும். (௪௭௭)

இத்தன்மை சிவனருளே சிந்தித் தேங்கு மிளங்கொடியோ னுடங்கு
மிடை யேழை யேதலும், அததன்மை யோசையெழுந தெங்கள் சண்பை
யாண்டகையா ருமபிடவந தணைகின் றார்தம், மெய்த்தன்மை விளங்குதி
ருச் செவியிற் சாரமேவுதலுந் திருவுள்ளக் கருணை மேன்மேல், வைத்தன்ன
மெனவயர்வாண் மாடு நீடு மாதவத்தோர் சூழவெழுந் தருளி வந்தார்.(௪௭௮)

(௪௭௩) பதிகனாகி - வழிசசெலவோனாய. (௪௭௪) மறுமாற்றம - வேறுவார்த்
தையை. கோள உருமும புளளரசும அனையார - இடையூறு விளக்கும இடியையும்
கருடனையும போனற மாநதிரிகா. (௪௭௭) காலவலயம் - காலசக்கரம.

சிரபுரத்து மறையவனூர் சென்று நின்று சிவபெருமா னருள்போற்றிச் சிந்தை நைந்து, பரவுறுவா டனைநோக்கிப் பயப்ப டேனீ பருவரலு நும்பரி சும் பகர்வா யென்னக், கரமலர்க ளுச்சியின்மேற் குவித்துக் கொண்டு கண்ணருவி சொரிந்திழியக் காழி வேதப், புரவலனூர் சேவடிக்கீழ் வீழ்ந்து தாங்கள் போந்ததுவும் புகுந்ததுவும் புகல லுற்றாள். (௪௭௧)

வளம்பொழில்சூழ் வைப்பூர்க்கோன் றாம னெந்தை மருமகன்மற் றிவனவற்கு மகளிர் நல்ல, இளம்பிடியா ரோரெழுவ ரிவரின் மூத்தா ளிவனுக்கென் றுரைசெய்தே யேதி லானுக், குளம்பெருகத் தனம்பெற்றுக் கொடுத்த பின்னு மோரொருவ ராகவெனை யொழிய வீந்தான், றளர்ந்தழியு மிவனுக்காத் தகவு செய்தங் கவரைமறைத் திவன்றனையே சார்ந்து போந்தேன்.

மற்றிவனும் வாளரவு தீண்ட மாண்டான் மறிகடலிற் கலங்கவிழ்த்தார் போல நின்றேன், சுற்றத்தா ரெனவந்து தோன்றி யென்பாற் றுயரமெலா நீங்கவருள் செய்தீ ரென்னக், கற்றவர்கள் தொழுதேத்துங் காழி வேந்தர் கருணையினாற் காரிகையா டனக்குநல்கப், பற்றியவா ளரவின்விடந் தீருமாறு பணைமருகற் பெருமானைப் பாட லுற்றார் (௪௭௧)

சடையானே யெவ்வுயிர்க்குந் தாயா னானேச் சங்கரனைச் சசிகண்ட மவுலியானை, விடையானை வேதியனை வெண்ணீற் றானை விரவாதார் புரமூன்று மெரியச் செற்ற, படையானைப் பங்கயத்து மேவி னானும் பாம்பணையிற் றுயின்றானும் பரவுங் கோல, முடையானை யுடையானே தகுமோ விந்த வொள்ளிழையா ளுண்மெலிவென் றெடுத்துப் பாட. (௪௭௨)

---

### திருமருகல் - விஷந்தீர்த்த திருப்பதிகம் - பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்

சடையாயெனுமால்சரணீயெனுமால், விடையாயெனுமால்வெருவாவிழுமா
மடையாருவளைமலருமமருக, லுடையாய் தகுமோவிவளுண்மெலிவே [ல்

வயஞானம்வல்லார்மருகற்பெருமா, னுயாஞானமுணர்ந்தடியுலகு றஙலா
வியன்ஞானசம்பந்தனபாடல்வல்லார்,வியனுலமெல்லாமவிளங்கும்புகழே

திருச்சிற்றம்பலம்.

---

பொங்குவிடந் தீர்ந்தெழுந்து நின்றாள் சூழ்ந்த பொருவிறிருத் தொண்டர்குழாம் பொலிய வார்ப்ப, அங்கையினை யுச்சியின்மேற் குவித்துக் கொண்டங் கருட்காழிப் பிள்ளையா ரடியில் வீழ்ந்த, நங்கையவ டனையயந்த நம்பி யோடு நானிலத்தி லின்புற்று வாழும் வண்ண, மங்குறவழ் சோலைமலி புகலி வேந்தர் மணம்புணரும் பெருவாழ்வு வகுத்து விட்டார். (௪௭௩)

மற்றவர்க்கு விடைகொடுத்தங் கமரு நாளின் மருகனக ரினில்வந்து வலிய பாசஞ், செற்றபுகழ்ச் சிறுத்தொண்டர் வேண்ட மீண்டுஞ் செங்காட்டங் குடியிலெழுந் தருள வேண்டிப், பற்றியெழு காதன்மிக மேன்மேற்

*சென்று பரமனார் திறத்துன்னிப் பாங்க ரெங்கும், சுற்றுமருந் தவரோடுங்*
*கோயி லெய்திச் சுடர்மழுவாண் டவர்பாதந் தொழுவான் புக்கார். (௪௮௪)*

*புக்கிறைஞ்சி யெதிர்நின்று போற்று கின்றார் பொங்குதிரை நதிப்புன*
*லும் பிறையுஞ் சேர்ந்த, செக்கர்முடிச் சடைமவுலி வெண்ணீற் றார்தந் திரு*
*மேனி யொருபாகம் பசுமை யாக, மைக்குலவு கண்டத்தார் மருகற் கோயின்*
*மன்னுநிலை மனங்கொண்டு வணங்குவார்முன், கைக்கனலார் கணபதீச் சரத்*
*தின் மேவுங் காட்சிகொடுத் தருளுவான் காட்டக் கண்டார். (௪௮௫)*

வேறு.

*மருக லமர்ந்து நிறைந்த கோல மல்குசெங் காட்டங் குடியின் மன்னிப்*
*பெருகு கணபதி யீச்சரத்தார் பீடுடைக் கோலமே யாகித் தோன்ற*
*உருகிய காதலு மீது பொங்க வுலகர்முன் கொள்ளு முணர்வு நீட*
*அருவிகண் வார்வுறப் பாடலுற்றா ரங்கமும் வேதமு மென்றெடுத்து. ()*

---

திருச்செங்காட்டங்குடியும் - திருமருகலும் - வினாவுரை - பண் - நட்டபாடை.

*திருச்சிற்றம்பலம்.*

*அங்கமும்வேதமுமோதுநாவரந்தணர்நாளுமடிபரவ*
*மங்குன்மதிதவழ்மாடவீதிமருகனிலாவியமைந்தசொல்லாய்*
*செங்கயலார்புனற்செல்வமல்குசீர்கொள்செங்காட்டங்குடியதனுட்*
*கங்குல்விளங்கெரியேந்தியாடுங்கணபதீச்சரங்காமுறவே.*

*நாலுகுலைக்கமுகோங்குகாழிஞானசம்பந்தனலந்திகழு*
*மாலின்மதிதவழ்மாடமோங்குமருகலின்மற்றதன்மேன்மொழிந்த*
*சேலுங்கயலுந்திளைத்தகண்ணார்சீர்கொள்செங்காட்டங்குடியதனுட்*
*சூலம்வல்லான்கழலேத்துபாடல்சொல்லவல்லார்வினையில்லையாமே.*

*திருச்சிற்றம்பலம்.*

---

*கண்டெதிர் போற்றி வினவிப் பாடிக் கணபதி யீச்சரங் காத லித்த*
*அண்டர் பிரானை வணங்கி வைகு மப்பதி யிற்சில நாள்கள் போற்றித்*
*தொண்ட ருடனருள் பெற்று மற்றத் தொல்லைத் திருப்பதி யெல்லை நீங்கிப்*
*புண்டரி கத்தடஞ் சூழ்பழனப் பூம்புக லூர்தொழப் போது கின்றார். ()*

*சீரின் மலிந்த சிறப்பின் மேவுஞ் சிறுத்தொண்டர் நண்புடன் செல்ல நல்ல*
*வேரி நறுந்தொங்கன் மற்றவரும விடையரு ளப்பெற்று மீண்ட பின்பு*
*நீரின் மலிந்த சடையர் மேவி நிகழும் பதிகள் பலப ணிந்து*
*பாரின் மலிந்து நிறைந்த செல்வம் பயில்புக லூர்நகர்ப் பாங்க ணைந்தார். ()*

*திருப்புக லூர்த்திருத் தொண்டரோடுஞ் செம்மை முருகனார்மெய்ம்மகிழ்ந்த*
*விருப்பொடு சென்றெதிர் கொள்ளவந்து வேதமுதல்வர்தங் கோயிலெய்திப்*
*பொருப்புறழ் கோபுரத் துட்பு குந்து பூமலி முன்றில் புடைவ லங்கொண்*
*டொருப்படு சிந்தையொ டுள்ளணைந்தா ரோதாது ஞானமெ லாமுணர்ந்தார்.*

புக்கெதிர் தாழ்ந்து விழுந்தெ ழுந்து பூம்புக லூர்மன்னு புண்ணியனை
நெக்குரு குஞ்சிந்தை யன்பு பொங்க நிறைமலர்க் கண்ணீ ரருவி செய்ய
மிக்க தமிழ்த்தொடை மாலை சாத்தி மேவிய வேழிசை பாடிப் போந்து
திக்கு நிறைசீர் முருகர் முன்பு செல்வ வவர்மடஞ் சென்று புக்கார் (௪௯௦)

ஆங்கவர் போற்றுஞ் சிறப்பின் மேவி யப்பதி தன்னி லமரு நாளில்
வாங்கு மலைச்சிலை யார்ம கிழ்ந்த வர்த்தமா னீச்சரந் தான்வணங்கி [ம்
யோங்கிய வன்பின் முருக னார்தம் முயர்திருத் தொண்டு சிறப்பித் தோங்கு
பாங்குடை வண்டமிழ் பாடி நாளும் பரமர்தம் பாதம் பணிந்தி ருந்தார். ()

மற்றத் திருப்பதி வைகுநாளில் வாகீசர் பெருவிறன் மன்ன னார்தாம், புற்றிடங் கொண்டாரை வந்தி றைஞ்சிப் பொன்மதி லாரூர் புகழ்ந்து போற்றிச், சிற்றிடைப் பொற்றொடிப் பங்கர் தங்குந் திருப்புக லூர்தொழச் சிந்தை செய்து, கொற்றவ னாருள் பெற்ற தொண்டர் குழாத்துட னவ்வூர் குறுக வந்தார். (௪௯௨)

நாவுக் கரச ரெழுந்தருளு நல்ல திருவார்த்தை கேட்ட போதே
சேவிற் றிகழ்ந்தவர் மைந்த ரான திருஞான சம்பந்தர் சிந்தை யன்பு
மேவுற்ற காதல் மிகப்பெருக விரைந்தெதிர் கொள்ளமெய் யன்ப ரோடும்
பூவிற் பொலிபொய்கை சூழ்புகலூர்ப் புறம்பணை யெல்லைகடந்து போந்தார்

அங்கண ராரூர் வணங்கிப் போந்த வரசு மெதிர்வந் தணைய வாசப்
பொங்கு புனற்றண் புகலி வந்த பூசுரர் சிங்கமும் போற்றி யெதிர்
தங்களி னன்பின் முறைமை யாலே தாழ்ந்து வணங்கித் தனித்தனியே
மங்கல மாகிய நல்வரவின் வாய்மை விளம்பி மகிழும் போது (௪௯௪)

மெய்த்திரு ஞானசம் பந்தர் வாகீசர் வேந்தரை நோக்கி விருப்பி னாலே
யப்பரை யிங்கணை யப்பெ றும்பே றருளுடை யோமியா மந்த ணாரூர்
எப்பரி சாற்றொழு துய்ந்த தென்று வினவிட வீறில பெருந்த வத்தோர்
செப்பிய வண்டமிழ் மாலை யாலே திருவா திரைநிகழ் செல்வஞ் சொன்னார்.

அரசரு ளிச்செய்த வாய்மை கேட்ட வப்பொழு தேயருள் ஞானமுண்ட, சிரபுர வேந்தருஞ் சிந்தை யின்கட் டென்திரு வாரூர் வணங்கு தற்கு, விரவிய காதலிற் சென்று போற்றி மீண்டுமவ் வந்தும்முடன் மேவுவனென், றுரவு கடற்கன் மிதப்பின் வந்தாரைக் குறைத்துடன் பாடுகொண் டெல்லை போந்தார். (௪௯௬)

சொற்பெரு வேந்தருந் தோணி மூதூர்த் தோன்றல்பின் காத லொருடனத் தாமும், பொற்புக லூர்தொழச் சென்றணைந்தார் புகலிப் பிரானும் புரிந்த சிந்தை, விற்குடி வீரட்டஞ் சென்று மேவி விடையவர் பாதம் பணிந்து போற்றிப், பற்பல வாயிரந் தொண்ட ரோடும் பாடல னாமறை பாடிப் போந்தார். (௪௯௭)

துணரிணர்ச் சோலையுஞ் சாலி வேலித் துறைநீர்ப் பழனமுஞ் சூழ்க ரும்பின், மணமலி கானமு ஞானமுண்டார் மருங்குற நோக்கி மகிழ்ந்தருளி, யணைபவ ரள்ளற் * கழனி யாரூ ரடைவோ மெனமொழிந் தன்பு பொங்கப், புணரிசைச் செந்தமிழ் கொண்டு போற்றிப் பொன்மதி லாரூர்ப் புறத்தணை ந்தார. (௪௧௮)

---

### திருவாரூர் - பண் - வியாழக்குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்

பாடலனான்மறையன்படிபட்டகோலத்தன்றிங்கள்
சூடலன்மூவிலையசூலம்வலனேந்திக
கூடலர்மூவெயிலுமெரியுண்ணககூரெரிகொண்டெல்லி
யாடலனாதிரையனாரூரமர்ந்தானே

சோலையிலவண்டினங்கள்சுரும்போடிசைமுரலச்சூழ்ந்த
வாலையின்வெம்புகைபோய்முகிறோயுமாரூரிற்
பாலொடுநெய்தயிரும்பயின்றாடுமபரமேட்டிபாதங
காலையுமாலையும்போய்ப்பணிதலகருமமே.

உள்ளமோரிச்சையினாலுகந்தேத்தித்தொழுமின்றொண்டீர்மெய்யே
கள்ளமொழிந்திடுமின்கரவாதிருபொழுதும்
வெள்ளமோர்வாரசடைமேற்கரந்திட்டவெள்ளேற்றான்மேய
அள்ளலகன் * கழனியாரூரடைவோமே.

நல்லபுனறபுகலிததமிழ்ஞானசம்பந்தனல்ல
அலலிமலாககழனியாரூரமாநதானை
வல்லதோரிசசையினலவழிபாடிவைபததுமவாய்ககச்
சொலலுதலகேட்டலவலலார்துனபநதுடைப்பாரே.

திருசசிற்றமபலம

---

வானுயர் செஙகதிர் மண்டி லத்து மருஙகணை யுஙகொடி மன்னு மாரூர் தானொரு பொன்னுல கென்னத தோன றுந தயஙகொளி முன்கண்டுசண்பை பாணிற நீற்றா பருககை யானைப் பதிகத தமிழிசை பாடிப் பாடித் [வந்த தேனொடு வணடு முரலுஞ சோலைத திருப்பதி மற்றத னெல்லை சேர்ந்தார்.

---

### திருவாரூர் - திருவிராகம் - பண் - நடடராகம்.

திருச்சிற்றம்பலம்.

பருக்கையானைமததகத்தரிக்குலத்துகிர்ப்புகந்
நெருக்கிவாயநித்திலநிரக்குநீள்பொருப்பனூர்
கருக்கொள்சோலைசூழ்நெடுமாடமாளிகைக்கொடி
யருக்கன்மண்டலத்தளாவுமந்தணாரூரெனபதே.

வல்லிசோலைசூதநீடுமென்னுவீதிபொன்னுலா
அல்லிமாதமர்ந்திருந்தவந்தணாரூராதியை
நலலசொல்லுஞானசம்பந்தனாவினின்னுரை
வலலதொணடர்வானமாளவலலாவாய்மையாகவே.
திருசசிற்றம்பலம்.

---

பொஙகிய சிந்தை விருப்பின் வெள்ளம் பொழிந்து புவிமேற் பொலிவதெ
எங்குங குளிரொளி வீசு முத்தி னிலங்கு சிவிகை யிழிந்தருளிச் [ன்ன
செஙகை நிறைமலர் கொணடு தூவித திருவிருக் குக்குறள் பாடி யேத்தித்
தங்கள் பிரானரா சாரூ மாரூர் தனைப்பணி வுற்றார் தமிழ்விரகர். (௫௦௦)

---

திருவாரூர் - திருவிருக்குக்குறள - பண் - குறிஞ்சி.
திருசசிற்றமபலம்.

சிததந்தெளிவீர்காள், அததனாரூரைப்
பததிமலர்தூவ, முததியாகுமே

சீரூாசம்பந்த, னாரூரைச்சொன்ன
பாரூர்பாடலார், பேராரின்பமே
திருச்சிற்றம்பலம்.

---

வே று.

படியின் ஞானமுண் டருளிய பிள்ளையைப் பணிதற்
கடியர் செனறெதிர கொளவெழுந தருளுமஞ் ஞான்று
வடிகொள் சூலததர் மன்னிய பொன்மதி லாரூர்க்
கடிகொள் பேரணிப் பொலிவையார் முடிவுறக் காண்பார். (௫௦௧)

நான மான்மத ஙளிாபெருஞ் சேற்றிடை நறும்பொற்
றூந றுந்துகள சொரிதலிற் சுடரொளிப் படலை
யான வீதிக ளடிவலித தவைகரைந் தலைய
வான மாரியிற் பொழிந்தது மலர்மது மாரி. (௫௦௨)

ஆட னீடுவ துகிற்கொடி யணிகுழற் கொடிகள்
தோடு சூழ்வன சுரும்பொடு தயனியத் தசும்பு
காடு கொண்டன கதலிதோ ரணநிரைக் கமுகு
மாட மாளிகை மண்டபங் களின்மருங் கெல்லாம். (௫௦௩)

மாலை சூழ்புறங கடைகளின் மணிநிரை விளக்கின்
கோல நீள்சுட ரொளியுடன் கோத்திடை தூக்கு
நீல மாமணி நிழல்பொர நிறம்புகர் படுக்கும்
பால வாயின பவளவே திகைமலர்ப் பந்தர். (௫௦௪)

---

(௫௦௨) நானமானமதம - வாசனைபொருநதிய கஸ்தூரிசேர்ந்த. படலை - பரந்த.
(௫௦௩) தயனியததசும்பு - பொற்குடஙகள்.

தழைம லர்த்தடஞ் சாலைக டெற்றிகள் சதுக்கங்
குழைமு கத்தவ ராடரங் கிமையவர் குழாமும்
விழைசி றப்பின வியலிட மியாவையு மிடைந்து
மழைமு ழக்கென வியம்பின மங்கல வியங்கள். (௩௦௫)

விரவு பேரணி வேறுவே றின்னன விளங்கும்
பிரச மென்மலர்ச் சோலைசூழ் பெருந்திரு வாரூர்
அரச ளிப்பவ ருளினு லடியவர் குழுவும்
புரிச னங்களும் புறத்தணைந் தெதிர்தொழும் பொழுது. (௩௦௬)

வந்தி றைஞ்சுமெய்த் தொண்டர்தங் குழாத்தெதிர் வணங்கிச்
சந்த முத்தமிழ் விரகராஞ் சண்பையர் தலைவர்
அந்த மாயுல காதியாம் பதிகமங் கெடுத்தே
யெந்தை தானெனை யென்றுகொ ளுங்கொலென் றிசைத்தார். (௩௦௭)

---

திருவாரூர் - பண் - கவுசிகம்.

திருச்சிற்றம்பலம்.

அந்தமாயுலகாதியுமாயினான், வெந்தவெண்பொடிபூசியவேதியன் [லோ.
சிந்தையேபுகுந்தான்றிருவாரூரெம், எந்தைதானெனையென்றுகொளுங்கொ

வன்னிகொன்றைமதியொடுகூவிளஞ், சென்னிவைத்தபிரான்றிருவாரூரை
மன்னுகாழியுள்ஞானசம்பந்தன்வாய்ப்,பன்னுபாடல்வல்லார்க்கில்லைபாவமே

திருச்சிற்றம்பலம்.

---

ஆன வத்திருப் பதிகமுன் பாடிவந் தணையு
ஞான வித்தகர் மெய்த்தவர் சூழவந் நகரார்
தூந றுஞ்சுண்ண மலர்பொரி தூஉய்த்தொழு தேத்த
வான நாயகர் கோயில்வா யிலின்மருங் கணைந்தார் (௩௦௮)

மன்னு தோரண வாயின்முன் வணங்கியுள் புகுவார்
தன்னு ளெவ்வகைப் பெருமையுந் தாங்கிய தகைத்தாம்
பன்னெ டுஞ்சுடர்ப் படலையின் பரப்பினைப் பார்த்துச்
சென்னி தாழ்ந்துதே வாசிரி யன்றொழு தெழுந்தார். (௩௦௯)

மாடு சூழ்திரு மாளிகை வலங்கொண்டு வணங்கிக்
கூடு காதலிற் கோபுரம் பணிந்துகை குவித்துத்
தேடு மாலயர்க் கரியராய்ச் செழுமணிப் புற்றில்
நீடு வார்முன்பு நிலமுறப் பலமுறை பணிந்தார். (௩௧௦)

பணிந்து வீழ்ந்தனர் பதைத்தனர் பரப்பிய புளகம்
அணிந்த மேனியோ டாடினர் பாடின ரறிவிற்
றுணிந்த மெய்ப்பொரு ளானவர் தமைக்கண்டு துதிப்பார்
தணிந்த சிந்தையின் விரைந்தெழு வேட்கையிற் றாழ்ந்தார். (௩௧௧)

செஞ்சொல் வண்டமிழ்த் திருப்பதி கத்திசை யெடுத்து
நஞ்சு போனக மாக்கிய நம்பர்முன் பாடி
மஞ்சு சூழ்திரு மாளிகை வாயிலின் புறம்போந்
தஞ்செ ழுத்துமெய் யுணர்ந்தவர் திருமடத் தணைந்தார். (௫௧௨)

அங்க ணைந்தமர்ந் தருளுவா ரரனெறி யமர்ந்த
செங்க ணேற்றவர் சேவடி வணங்கிமுன் றிளைத்துப்
பொங்கு பேரொளிப் புற்றிடங் கொண்டவர் புனிதப்
பங்க யப்பதந் தொழுதுகா லந்தொறும் பணிந்தார் (௫௧௩)

புற்றி டங்கொளும் புனிதரைப் போற்றிசை பெருகப்
பற்று மன்பொடு பணிந்திசைப் பதிகங்கள் பாடி
நற்ற வத்திருத் தொண்டர்க ளொடுநலஞ் சிறப்ப
மற்ற வண்பதி தன்னிடை வைகுமந் நாளில். (௫௧௪)

மல்ல னீடிய வலிவலங் கோளிலி முதலாத்
தொல்லை நான்மறை முதல்வர்தம் பதிபல தொழுதே
யெல்லை யிற்றிருப் பதிகங்க ளாற்பணிந் தேத்தி
யல்ல றீர்ப்பவர் மீண்டுமா ரூர்தொழ வணைந்தார் (௫௧௫)

ஊறு காதலி லொளிவளர் புற்றிடங் கொண்ட
ஆறு லாவிய சடைமுடி யையரைப் பணிந்து
நீறு வாழ்வென நிகழ்திருத் தொண்டர்க ளோடும்
ஏறி லாத்திரு ஞானசம் பந்தரங் கிருந்தார் (௫௧௬)

அங்கு நன்மையில் வைகுமந் நாள்சில வகல
நங்க டந்திரு நாவினுக் கரசரை நயந்து
பொங்கு சீர்ப்புக லூர்தொழ வருளினாற் போவார்
தங்கு மப்பதிப் புறம்பணை சார்ந்தருள் செய்வார். (௫௧௭)

வேறு

புவனவா ரூரினிற் புறம்புபோந் ததனையே நோக்கி நின்றே
யவமிலா நெஞ்சமே யஞ்சனீ யுய்யுமா றறிதி யென்றே
சிவனதா ரூர்தொழாய் நீமற வாதென்று செங்கை கூப்பிப்
பவனமாய்ச் சோடையா யெனுந்திருப் பதிகமுன் பாடி னாரே (௫௧௮)

---

### திருவாரூர் - பண் - காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்

பவனமாய்ச்சோடையாய்நாவெழாப்பஞ்சு தோய்ச்சட்டவுண்டு
சிவனதாளசிந்தியாப்பேதைமார்போலநீவெள்கினாயே
கவனமாய்ப்பாய்வதோரேறுகந்தேறியகாளகண்டன்
அவனதாரூர்தொழுதுய்யலாமையல்கொண்டஞ்சனெஞ்சே.

பல்லிதழ்மாதவியல்லிவண்டியாழ்செயுங்காழியூரன்
நல்லவேநல்லவேசொல்லியஞானசம்பந்தனூர்
எல்லியம்போதெரியாடுமெம்மீசனையேத்துபாடல்
சொல்லவேவல்லவர்தீதிலரோதநீர்வையகத்தே.

திருச்சிற்றம்பலம்

---

காழியார் வாழவந் தருள்செயுங் கவுணியப் பிள்ளை யார்தாம்
ஆழியா னறியொணு வண்ணலா ரூர்பணிந் தரிது செலவார
பாழிமா லியானையின் னுரிபுனைந் தார்பனை யூர்ப ணிந்து
வாழிமா மறையிசைப் பதிகமும் பாடியப் பதியில் வைகி (௬௧௯)

---

**திருப்பனையூர் - பண் - தக்கராகம்.**

திருச்சிற்றம்பலம்

அரவச்சடைமேன்மதிமத்தம், விரவிப்பொலிகின்றவனூரா
நிரவிப்பலதொண்டர்களோடும், பரவிப்பொலியும்பனையூரே.

பாரார்விடையான்பனையூர்மேற், சீரார்தமிழ்ஞானசம்பந்த
னூரற்சொன்னமாலைகள்பத்து, மூரார்வினைவாருயர்வாரே

திருச்சிற்றம்பலம்.

---

அங்குநின் றரிதெழுந் தருளுவா ரகிலகா ரணமு மானூர்
தங்குநற் பதிகளும பிறபணிந் தருளிவண் டமிழ்பு னைந்தே
யெங்குமெய்த் தவர்குழா மெதிர்கொளத் தொழுதெழுந் தருளி வந்தார்
பொங்குதண் பாசடைப் பங்கயப் புனல்வயற் புகலூர் சார. (௬௨௦)

நாவினுக் கரசரு நம்பிசீர் முருகரு மற்று நாமச்
சேவுகைத் தவர்திருத தொண்டரா னவர்கண்முன் சென்று சீதப்
பூவினிற் பொலிபுனற் புகலியார் போதகத் தெதிர்ப ணிந்தே
மேவமற் றவருடன் கூடவே விமலர்கோ யிலைய டைந்தார். (௬௨௧)

வே று.

தேவர்தந் தலைவனார் கோயில்புக் கனைவருஞ் சீர்நிலத் துறவ ணங்கிப்
பாவருந் தமிழிசைப் பதிகமும் பாடிமுன் பரவுவார் புறம்ப ணைந்தே
தாவில்சீர் முருகனார் திருமனைக் கெய்தியத் தனிமுதற் றொண்டர் தாமே
யாவையுங் குறைவறத் திடவமர்ந் தருளுவா ரினிதினங் குறையு நாளில்.

நீலநக் கடிகளு நிகழ்சிறுத் தொண்டரு முடனணைந் தெய்து நீர்மைச்
சீலமெய்த் தவர்களுங் கூடவே கும்பிடுஞ் செய்கைநேர் நின்று வாய்மைச்
சால்பின்மிக் குயர்திருத்தொண்டினுண் மைத்திறந்தன்னையேதெளிய நாடிக்
காலமுய்த் தவர்களோ டளவளா விக்கலந் தருளினார் காழி நாடர். (௬௨௩)

கும்பிடுங் கொள்கையிற் குறிகலந் திசையெனும் பதிகமுன் னுன பாட
றம்பெருந் தலைமையால் நிலைமைசால் பதியதன் பெருமைசால் புறவிளம்பி

யும்பரும் பரவுதற் குரியசொற் பிள்ளையா ருள்ளமெய்க் காதல் கூர
நம்பர்தம பதிகளா யினவெனைப் பலவுமு னண்ணியே தொழுக யந்தார். ()

---

**திருப்புகலூர் - பண் - நட்டபாடை.**

திருச்சிற்றம்பலம்.

குறிகலந்தவிசைபாடலினானசையாலிவ்வுலகெல்லா
நெறிகலந்ததொருசீர்மையனாயெருதேறும்பலிபேணி
முறிகலந்ததொருதோலரைமேலுடையானிடமொய்ம்மலரின்
பொறிகலந்தபொழில்சூழ்ந்தயலேபுயலாரும்புகலூரே.

புற்றில்வாழுமரவம்மரையார்த்தவன்மேவும்புகலூரைக்
கற்றநல்லவாகாழியுள்ஞானசம்பந்தன்றமிழ்மாலை
பற்றியென்றுமிசைபாடியமாந்தர்பரமன்னடிசேர்ந்து
குற்றமின்றிக்குறைபாடொழியாப்புகழோங்கிப்பொலிவாரே.

திருச்சிற்றம்பலம்.

---

வேறு

புள்ள லம்புதண் புனற்புக லூருறை புனிதனா ரருள்பெற்றுப்
பிள்ளை யாருட னாவினுக் கரசரும் பிறபதி தொழச்செல்வார்
வள்ள லார்சிறுத் தொண்டரு நீலநக் கரும்வளம் பதிக்கேக
வுள்ள மன்புறு முருகரங் கொழியவு முடன்பட விசைவித்தார். (௫௨௫)

கண்ண கன்புக லூரினைத் தொழுதுபோம் பொழுதினிற் கடற்காழி
யண்ண லாதிரு நாவினுக் கரசர்த மருகுவிட் டகலாதே
வண்ண நித்திலச் சிவிகையும் பின்வர வழிக்கொள வுறுங்காலை
யெண்ணில் சீர்த்திரு நாவினுக் கரசரு மற்றவர்க் கிசைக்கின்றார். (௫௨௬)

நாய னாருமக் களித்தருள் செய்தவிந் நலங்கிள ரொளிமுத்தின்
றூய யானத்தின் மிசையெழுந் தருளுவீ ரென்றலுஞ் சுடர்த்திங்கண்
மேய வேணியா ரருளுமிவ் வாறெனில் விரும்புதொண் டர்களோடும்
போய தெங்குநீ ரங்குயான் பின்வரப் போவதென் றருள்செய்தார் (௫௨௭)

என்று பிள்ளையார் மொழிந்தருள் செய்திட விருந்தவத் திறையோரு
நன்று நீரருள் செய்ததே செய்வனென் றருள்செய்து நயப்புற்ற
அன்றை நாண்முத லுடன்செலு நாளெலா மவ்வியல் பினிற்செல்வார்
சென்று முன்னுறத் திருவம்ப ரணைந்தனர் செய்தவக் குழாத்தோடும். ()

சண்பை மன்னருந் தம்பிரா னருள்வழி நிற்பது தலைச்செல்வார்
பண்பு மேம்படு பனிக்கதிர் நித்திலச் சிவிகையிற் பணிந்தேறி
வண்பெ ரும்புக லூரினைக் கடந்துபோய் வரும்பரி சனத்தோடுந்
திண்பெ ருந்தவ ரணைந்ததெங் கென்றுபோயத் திருவம்பர் நகர்புக்கார். ()

அம்பர் மாநக ரணைந்துமா காளத்தி லண்ணலா ரமர்கின்ற
செம்பொன் மாமதிற் கோயிலை வலங்கொண்டு திருமுன்பு பணிந்தேத்தி

வம்பு லாமலர் தூவிமுன் பரவிய வண்டமி ழிசைமாலை
யும்பர் வாழநஞ் சுண்டவர் தமைப்பணிந் துருகுமன் பொடுதாழ்ந்தார். ()

தாழ்ந்து நாவினுக் கரசுடன் றம்பிரான் கோயின்முன் புறமெய்திச்
சூழ்ந்த தொண்டரோ டப்பதி யமர்பவர் சுரநதி முடிமீது
வீழ்ந்த வேணியர் தமைப்பெறுங் காலங்கள் விருப்பினுற் கும்பிட்டு
வாழ்ந்தி ருந்தனர் காழியார் வாழவந் தருளிய மறைவேந்தர். (௩௩௧)

பொருவி லாதசொற் புல்குபொன் னிறமுதற் பதிகங்க ளாற்போற்றித்
திருவி ளூர்ந்தகோச் செங்கணு னந்நகர்ச் செய்தகோ யிலைச்சேர்ந்து
மருவு வாய்மைவண் டமிழ்மலர் மாலையவ் வளவனைச் சிறப்பித்துப்
பெருகு காதலிற் பணிந்துமுன் பரவினூ பேணிய வுணர்வோடும். (௩௩௨)

---

### திருஅம்பர்மாகாளம் - பண் - நட்டராகம்.

திருச்சிற்றம்பலம்

புல்குபொன்னிறம்புரிசடைநெடுமுடிப்போழிளமதிசூழப்
பில்குதேனுடைநறுமலர்க்கொன்றையும்பிணையல்செயதவர்மேய
மல்குதண்டுறையரிசிலின்வருபுனல்வடகரைமாகாளம்
அல்லுநண்பகலுந்தொழுமடியவர்க்கருவினையடையாவே.

மாறுதன்னொடுமண்மிசையிலலதுவருபுனன்மாகாளத்
தீறுமாதியுமாகியசோதியையேறமர்பெருமானை
நாறுபூம்பொழிற்காழியுள்ஞானசம்பந்தனதமிழ்மாலை
கூறுவாரையுங்கேட்கவல்லாரையுங்குற்றங்கள்குறுகாவே.

திருச்சிற்றம்பலம்.

---

இன்ன வாறுசொன் மாலைக ளாற்றுதித் திறைஞ்சியங் கமர்நாளிற்
கன்னி மாமதிற் றிருக்கட வூர்தொழக் காதல்செய் தருளிப்போய்
மன்னு கோயில்கள் பிறபதி வணங்கியே வாக்கின்மன் னவரோடும்
அங்கொ டும்பதி யணைவுறக் கலயரோ டடியவ ரெதிர்கொண்டார். (௩௩௩)

மற்ற வண்பதி யணைந்துவீ ரட்டதது மழவிடை யார்கோயிற்
சுற்று மாளிகை வலங்கொண்டு காலனை யுதைததருட் டியசெய்ய
பொற்சி லம்பணி தாமரை வணங்கிமுன் போற்றியுய்ந் தெதிர்நின்று
பற்ற றுப்பவர் சடையுடை யானெனும் பதிகவின் னிசைபாடி. (௩௩௪)

---

### திருக்கடவூர் - திருவீரட்டானம் – பண் -காந்தாரபஞ்சமம்

திருச்சிற்றம்பலம்.

சடையுடையானுநெய்யாடலானுஞ்சரிகோவண
உடையுடையானுமையார்ந்தவொண்கண்ணுமைகேள்வனுங்
கடையுடைநன்னெடுமாடமோங்குங்கடவூர்தனில்
விடையுடையண்ணலும்வீரட்டானத்தரனல்லனே.

வெந்தவெண்ணீ றணிவீரட்டானத்துறைவேந்தனை
யந்தணர்தங்கடலூருளானையணிகாழியான்
சந்தமெல்லாமடிச்சார்த்தவல்லமறைஞானசம்
பந்தனசெந்தமிழ்பாடியாடக்கெடும்பாவமே.

திருச்சிற்றம்பலம்.

---

பாவி யேத்தியங் கரிதினிற் போந்துபார் பரவுசீ ராசோடு
விரவு நண்புடைக் குங்குலி யப்பெருங் கலயர்தம் மனைமேவிக்
கரையில் காதன்மற் றவரமைத் தருளிய விருந்தினி தமர்ந்தங்குச்
சிரபு ரத்தவர் திருமயா னமும்பணிந் திருந்தனர் சிறப்பெய்தி (ருடுரு)

சிறப்பு டைத்திருப் பதியத னிடைச்சில நாளமர்ந் தருளோடும்
விறற்பெ ருங்கரி யுரித்தவர் கோயில்கள் விருப்பொடுந் தொழச்செல்வார்
மறைப்பெ ருந்திருக் கலயரு முடன்பட வணங்கிய மகிழ்வோடும்
அறப்பெ ருமபய னனையவத் தொண்டரோ டணைந்தனர் திருவாக்கூர் ( )

தக்க வந்தணர் மேவுமப் பதியினிற் றான்றோன்றி மாடத்துச்
செக்கர் வார்சடை யண்ணலைப் பணிந்திசைச் செந்தமிழ்த் தொடைபாடி
மிக்க கோயில்கள் பிறவுடன் றொழுதுபோய் மீயச்சூர் பணிந்தேத்திப்
பக்கம் பாரிடம் பரவநின் றாடுவார் பாம்புர நகர்சேர்ந்தார் (ருடுஎ)

பாம்பு ரத்துறை பரமரைப் பணிந்துநற் பதிகவின் னிசைபாடி
வாம்பு னற்சடை முடியினார் மகிழ்விட மற்றுமுன் னனபோற்றிக்
காம்பி னிற்றிகழ் கரும்பொடு செந்நெலின் கழனியம் பணைநீங்கித்
தேமபொ ழிற்றிரு வீழிநன் மிழலையின் மருங்குறச் செல்கின்றார். (ருடுஅ)

வேறு.

அப்பொழுதி னாண்ட வரசை யெதிர்கொண்ட
மெய்ப்பெருமை யந்தணர்கள் வெங்குருவாழ் வேந்தனார்
பிற்படவந் தெய்தும் பெரும்பேறு கேட்டுவப்பார்
எப்பரிசி னாலவந் தணைந்தங் கெதிர்கொண்டார் (ருடுகூ)

நிறைகுடந்தூ பந்தீப நீடநிரைத் தேந்தி
நறைமலர்ப்பொற் சுண்ண நறும்பொரியுந் தூவி
மறையொலிபோய் வானளப்ப மாமுரச மார்ப்ப
இறைவர்திரு மைந்தர்தமை யெதிர்கொள்வர வேற்றார். (ருசo)

வந்துதிரு வீழி மிழலை மறைவல்ல
அந்தணர்கள் போற்றிசைப்பத் தாமு மணிமுத்தின்
சந்த மணிச்சிவிகை நின்றிழிந்து தாழ்ந்தருளி
யுய்ந்த மறையோ ருடனணைந்தங் குள்புகுவார். (ருசக)

அப்போ தரையார் விரிகோ வணவாடை
யொப்போ தரும்பதிகத் தோங்கு மிசைபாடி

மெய்ப்போதப் போதமர்ந்தார் தங்கோயின் மேவினார்
கைப்போது சென்னியின்மேற் கொண்டு கவுணியனார். (௫௪௨)

நாவின் றனிமன்னர் தாமு முடனண்ண
மேவிய விண்ணிழிந்த கோயில் வலங்கொள்வார்
பூவியலு முந்தியான் போற்றப் புவிக்கிழிந்த
தேவியலு மெய்கண்டு சிந்தைவியப் பெய்தினார். (௫௪௩)

வலங்கொண்டு புக்கெதிரே வந்து வணங்கியின
சலங்கொண்ட வேணித் தனிமுதலைத் தாழ்ந்து
நிலங்கொண்ட மேனியராய் நீடுபெருங் காதல்
புலங்கொண்ட சிந்தையினாற் பொங்கியிசை மீப்பொழிந்தார். (௫௪௪)

போற்றிச் சடையார் புனலுடையா னென்றெடுத்துச்
சாற்றிப் பதிகத் தமிழ்மாலைச் சந்தவிசை
யாற்ற மிகப்பாடி யானந்த வெள்ளத்தில்
நீற்றழகர் சேவடிக்கீழ் நின்றலைந்து நீடினார் (௫௪௫)

---

திருவீழிமிழலை - பண் - நட்டபாடை.

திருச்சிற்றம்பலம்

சடையார்புன லுடையானொரு சரிகோவண முடையான்
படையார்மழு வுடையான்பல பூதப்படை யுடையான்
மடமான்விழி யுமைமாதிட முடையானெனை யுடையான்
விடையார்கொடி யுடையானிடம் வீழிம்மிழ லையே

வீழிம்மிழ லைம்மேவிய விகிர்தன்றனை விரைசேர்
காழிந்நகர்க் கலைஞான சம்பந்தன்றமிழ் பத்தும்
யாழின்னிசை வல்லார்சொலக் கேட்டாரவ ரெல்லாம்
ஊழின்வலி வினைபோயிட வுயர்வானடை வாரே

திருச்சிற்றம்பலம்

---

நீடியபே ரன்புருகி யுள்ளலைப்ப நேர்நின்று
பாடியெதி ராடிப் பரவிப் பணிந்தெழுந்தே
ஆடிய சேவடிக ளாரவுற வுட்கொண்டு
மாடுயர் கோயிற் புறத்தரிது வந்தணைந்தார் (௫௪௬)

வந்தணைந்து வாழ்ந்து மதிற்புறத்தோர் மாமடத்துச்
செந்தமிழ்ச்சொல் வேந்தருஞ் செய்தவருஞ் சேர்ந்தருளச்

(௫௪௨) மெய்ப்போதம் போது அமர்ந்தார் தம் - மெய்ஞ்ஞானமுடைய திருத்தொண்டர்கள் இதயகமலத்தில் எழுந்தருளியுள்ள சிவபெருமானது. (௫௪௩) பூவியலும் உந்தியான் - தாமரைமலர் விளங்கும் உந்தியையுடைய திருமால். தேவியலும் மெய் கண்டு - தெய்வத்தன்மை பொருந்திய (அவ்விமானத்தின்) திருவுருவைத் தரிசித்து.

சந்தமணிக் கோபுரத்துச் சார்ந்தவட பாற்சண்பை
அந்தணர்கு ளாமணியா ரங்கோர மடத்தமர்ந்தார் (௫௪௭)

அங்க ணமாவா ராரூ ரடியிணைக்கீழ்த்
தங்கிய காதலினாற் காலங்க டப்பாமே
பொங்குபுகழ் வாகீச ருங்கூடப் போற்றிசைத்தே
எங்கு மிடர்தீர்ப்பா ரின்புற் றமாகின்றார் (௫௪௮)

ஓங்குபுனற் பேணு பெருந்துறையு முள்ளிட்ட
பாங்கார் திலதைப் பதிமுற்ற மும்பணிந்து
வீங்கொலிநீர் வீழி மிழலையினின் மீண்டுமணைந்
தாங்கினிது கும்பிட் டமர்ந்தொழுகு மந்நாளில். (௫௪௯)

வேறு

சேணுயர் மாடப் புகலி யுள்ளார் திருஞான சம்பந்தப் பிள்ளை யாரைக்
காணும் விருப்பிற் பெருகு மாசை கைம்மிகு காதல் கரையி கப்பப்
பூணு மனத்தொடு தோணி மேவும் பொருவிடை யாரமலர்ப் பாதம் போற்றி
வேணு புரத்தை யகன்று போந்து வீழி மிழலையில் வந்த ணைந்தார். (௫௫०)

ஊழி முடிவி லுயர்ந்த வெள்ளத் தோங்கிய காழி யுயர்பதியில், வாழி
மறையவர் தாங்க ளெல்லாம் வந்து மருங்கணைந் தார்க ளென்ன, வீழி மிழலை
யின் வேதி யர்கள் கேட்டுமெய்ஞ் ஞானமுண் டாரை முன்னா, வழிசை சூழ்
மறை யெய்த வோதி யெதிர்கொண் முறைமையிற் கொண்டு புக்கார் ()

சண்பைத் திருமறை யோர்க ளெல்லாந் தம்பிரா னாரைப் பணிந்து போந்து
நண்பிற் பெருகிய காதல் கூர்ந்து ஞானசம் பந்தர் மடத்தி னெய்திப்
பண்பிற் பெருகுங் கழும லத்தார் பிள்ளையார் பாதம் பணிந்து பூண்டே
எனைபெற்ற தோணி புரத்தி லெம்மோ டெழுந்தரு ளப்பெற வேண்டு மென்றார்

என்றவர் விண்ணப்பஞ் செய்த போதி லீறில் சிவஞானப் பிள்ளை யாரு
நன்றிது சாலவுந் தோணி மேவு நாதர் கழலிணை நாமி றைஞ்ச
இன்று கழித்து மிழலை மேவு மிறைவ ரருள்பெற்றுப் போவ னென்றே
யன்று புகலி யருமறை யோர்க் கருள்செய் தவர்க்கு முகம ளித்தார் (௫௫௩)

மேற்பட்ட வந்தணர் சண்பை மேவும் வேதியர் காய விருந்த ளிப்பப்
பாற்பட்ட சிந்தைய ராய மகிழ்ந்துபரம் பொரு ளானா ரமைப்பரவுஞ்
சீர்ப்பட்ட வெல்லை யினிது செல்லத் திருத்தோணி மேவிய செல்வர் தாமே
கார்ப்பட்ட வண்கைக் கவுணி யர்க்குக் கனவிடை முன்னின் றருள்செய் கின்றார்.

தோணியி லுமங் கிருந்த வண்ணந் தூமறை வீழி மிழலை தன்னுட்
சேணுயர் விண்ணினி ழிழிந்த விந்தச் சீர்கொள் விமானத்துக் காட்டு கின்றோம்
பேணும் படியா லறிதி யென்று பெயர்ந்தருள் செய்யப் பெருந்த வங்கள்
வேணு புரத்தவர் செய்ய வந்தார் விரவும் புளகத் தொடுமு ணர்ந்தார் (௫௫௫)

அறிவுற்ற சிந்தைய ராயெ ழுந்தே யதிசயித் துச்சிமே லங்கை கூப்பி
வெறியுற்ற கொன்றையி னார்ம கிழ்ந்த விண்ணிழி கோயிலிற் சென்று புக்கு
மறியுற்ற கையரைத் தோணி மேன்முன் வணங்கும் படியங்குக் கண்டு வாழ்ந்து
குறியிற் பெருகுந் திருப்பதிகங் குலவிய கொள்கையிற் பாடுகின்றார். (௩௫௭)

மைம்மரு பூங்குழ லென்றெ டுத்து மாறில் பெருந்திருத் தோணி தன்மேற்
கொம்மை முலையினாள் கூட நீடு கோலங் குலவு மிழலை தன்னிற்
செம்மை தருவிண் ணிழிந்த கோயிற் றிகழ்ந்த படியது வென்கொ லென்று
மெய்ம்மை விளங்குந் திருப்பதிகம் பாடி மகிழ்ந்தனர் வேத வாயர் (௩௫௮)

ஸ்ரீபுகலியும் - திருவீழிமிழலையும் - வினாவுரை - பண் - நட்டபாடை.

திருச்சிற்றம்பலம்

மைம்மருபூங்குழற்கற்றைதுற்றவாணுதன்மான்விழிமங்கையோடும
பொய்ம்மொழியாமறையோர்களேத்தப்புகலிநிலாவியபுண்ணியனே
யெம்மிறையேயிமையாதமுக்கணீசவென்னேசவிதென்கொல்சொல்லாய்
மெய்ம்மொழிநான்மறையோர்மிழலைவிண்ணிழிகோயில்விரும்பியதே

விண்ணிழிகோயில்விரும்பிமேவும்வித்தகமென்கொலிதென்றுசொல்லிப்
புண்ணியனைப்புகலிந்நிலாவுபூங்கொடியோடிருந்தானைப்போற்றி
நண்ணியகீர்த்திநலங்கொள்கேள்விநான்மறைஞானசம்பந்தன்சொன்ன
பண்ணியல்பாடல்வல்லார்களிந்தப்பாரொடுவிண்பரிபாலகரே

திருச்சிற்றம்பலம்

---

செஞ்சொன் மலர்ந்த திருப்பதிகம் பாடித் திருக்கடைக் காப்புச் சாற்றி
அஞ்சலி கூப்பி விழுந்தெழுவா ரானந்த வெள்ள மலைப்பப் போந்து
மஞ்சிவர் சோலைப் புகலி மேவு மாமறை யோர்தமை நோக்கி வாய்மை
நெஞ்சி னிறைந்த குறிப்பின் வந்த நீர்மைத் திறத்தை யருள்செய் கின்றார்

பிரம புரத்தி லமர்ந்த முக்கட் பெரிய பிரான்பெரு மாட்டி யோடும
விரவிய தானங்க ளெங்குஞ் சென்று விரும்பிய கோலம் பணிந்து போற்றி
வருவது மேற்கொண்ட காதல் கண்டங் கமர்ந்த வகையிங் களித்த தென்று
தெரிய வுரைத்தருள் செய்து நீங்கள் சிரபுர மாநகர் செல்லு மென்றார் ()

என்று கவுணியப் பிள்ளை யார்தா மியம்பப் பணிந்தரு ளேற்றுக் கொண்டே
ஒன்றிய காதலி னுள்ள மங்கே யொழிய வொருவா றகன்று போந்து
மன்று ணடம்புரிந் தாரமர்ந்த தானம் பலவும் வணங்கிச் சென்று
நின்ற புகழ்த்தோணி நீடு வாரைப் பணியு நியதிய ராயு றைந்தார் (௩௬௦)

சிரபுரத் தந்தணர் சென்ற பின்னைத் திருவீழி மேவிய செல்வர் பாதம்
பரவுதல் செய்து பணிந்து நாளும் பண்பின் வழாத்திருத் தொண்டர் சூழ
உரவுத் தமிழ்த்தொடை மாலை சாத்தி யோங்கிய நாவுக் கரசரோடும்
விரவிப் பெருகிய நண்பு கூர மேவி யினிதங் குறையு நாளில். (௩௬௧)

வேறு

மண்ணின்மிசை வான்பொய்த்து நதிகள் தப்பி மன்னுயிர்கள் கண்சாம்பி யுணவு மாறி, விண்ணவர்கட்குஞ் சிறப்பில்வரும் பூசை யாற்றா மிக்க பெரும் பசியுலகில் விரவக் கண்டு, பண்ணமரு மொழியுமையாள் முலையின் ஞானப் பாலறா வாயருட னரசும் பார்மேற், கண்ணுதலான் றிருநீற்றுச் சார்வி னோர்க்குங் கவலைவரு மோவென்று கருத்திற் கொண்டார் (௫௬௨)

வானாகி நிலனாகி யனலு மாகி மாருதமா யிருசுடராய் நீரு மாகி
ஊனாகி யுயிராகி யுணர்வு மாகி யுலகங்க ளனைத்துமா யுலகுக் கப்பால்
ஆனாத வடிவாகி நின்றார் செய்ய வடிபரவி யனறிரவு துயிலும் போது[வார்
கானாடுங் கங்காளர் மிழலை மூதூர் காதலித்தார் கனவிலணைந் தருளிச் செய்

உலகியல்பு நிகழ்ச்சியினி லணைந்த தீய வுறுபசிநோ யுமையடையா தெனினு மும்பால், நிலவுசிவ நெறிசார்ந்தோர் தம்மை வாட்ட நீக்குதற்கு நித்தமொரோர் காசு நீடும், இலகுமணிப் பீடத்துக் குணக்கு மேற்கு மாம ளித்தோ முமக்கிந்தக் காலந் தீர்ந்தால், அலகில்புகழ் நீர்தவிர வாகு மென்றே யருள்புரிந்தார் திருவீழி மிழலை யையர் (௫௬௪)

தம்பிரா னருள்புரிந்து கனவி னீங்கச் சண்பையா ரிளவேறு தாமு ணர்ந்து, நம்பிரா னருளிருந்த வண்ண மென்றே நாவினுக்கை யரசரொடுங் கூட நண்ணி, வம்புலா மலர்சூழி வீழி நாதர் மணிக்கோயில் வலஞ்செய்யப் புகுந்த வேலை, அம்பிகா பதியருளாற் பிள்ளை யார்தா மபிமுகத்துப் பீடிகை மேற் காசு கண்டார் (௫௬௫)

காதலொடுந் தொழுதெடுத்துக் கொண்டு நின்று கைகுவித்துப் பெருமகிழ்ச்சி கலந்து போக, நாதர் தம் மடியாராய் ளெல்லாரு நாளு நல்விருந்தா யுண்பதற்கு வருக வென்று, தீதில்பறை நிகழ்வித்துச் சென்ற தொண்டர் திருவமுது கறிநெய்பா றயிரொ டின்ன, ஏதமுறா தினிதுண்ண வூட்டி யங்க ணிருந்திறத்துப் பெருந்தவரு மிருந்த நாளில் (௫௬௬)

நாவினுக்கு வேந்தர்திரு மடத்திற் றொண்டர் நாட்கூறு திருவமுது செய்யக் கண்டு, சேவுகைத்தா ரருள்பெற்ற பிள்ளை யார்தந் திருமடத்தி லமுதாக்கு வாரை நோக்கித், தீவினைக்கு நேரொன்று மடைவி லாதீர் திருவமுது காலத்தா லாக்கி யிங்கு, மேவுமிக்க வடியவர்க ளியா வண்ணம் விளைந்தவா றென்கொலோ விளம்பு மென்றார் (௫௬௭)

(௫௬௨) "விண்ணவர்கட்குஞ் சிறப்பில் வரும்பூசையாற்றா" என்பதினுண்மையை "சிறப்பொடு பூசனை செல்லாது வானம் வறக்குமேல் வானோர்க்குமீண்டு" என்னுந் திருக்குறளினுந் தெளிக. (௫௬௪) குணக்கு - கிழக்கு. (௫௬௫) அபிமுகம் - [illegible]. திருநாவுக்கரசு சுவாமிகள் மேற்குப்பீடத்தில் படிக்காசு பெற்றார் என்பதை அவர் புராணத்தானுணர்க. (௫௬௭) நாட்கூறு - உச்சிகாலம்.

திருமறையோர் தலைவர்தா மருளிச் செய்யத் திருமடத்தி லமுதமைப்போர் செப்புவார்கள், ஒருபரிசு மறிந்திலோ மிதனை யும்மை யுடையவர்பாற் பெறும்படிக்கா சொன்றுங் கொண்டு, கருதியவெல் லாங்கொள்ள வேண்டிச் சென்றாற் காசுதனை வாசிபட வேண்டு மென்பார், பெருமுனிவர் வாகீசர் பெற்ற காசு பேணியே கொள்வரிது பிற்பா டென்றார். (ருசுஅ)

திருஞான சம்பந்த ரதனைக் கேட்டுச் சிந்திப்பார் சிவபெருமா னெமக்குத் தந்த, ஒருகாசு வாசிபட மற்றக் காசு நன்றாகி வாசிபடா தொழிவா னெந்தப், பெருவாய்மைத் திருநாவுக் கரசர் தொண்டாற் பெறுங்காசா மாதலின் றறைபெரியோன் றன்னை, வருநாள்க டருங்காசு வாசி தீரப் பாடுவனென் றெண்ணியது மனத்துட் கொண்டார். (ருசுகூ)

மற்றைநா ளெம்பிரான் கோயில் புக்கு வாசிதீர்த் தருளுமெனப் பதிகம் பாடிப், பெற்றபடி நற்காசு கொண்டு மாந்தர் பெயர்ந்துபோ யாவணவீ தியினிற் காட்ட, நற்றவத்தீ ரிக்காசு சால நன்று வேண்டுவன நாந்தருவோ மென்று நல்கு, அற்றைநாட் டொடங்கிநாட் கூறு தன்னி லடியவரை யமுதுசெய் வித்தா ரவ்வ மிக்கார். (ருஎ0)

---

திருவீழிமிழலை - திருவிருக்குக்குறள் - பண் - குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

வாசிதீரவே, காசுநல்குவீர்
மாசின்மிழலையீ, ரேசலில்லையே

காழிமாநகர், வாழிசம்பந்தன்
வீழிமிழலைமேற், றாழுமொழிகளே

திருச்சிற்றம்பலம்

---

அருவிலையிற் பெறுங்காசு மவையே யாகி யமுதுசெய்யத் தொண்டரள விறந்து பொங்கி, வருமவர்க ளெல்லார்க்கும் வந்தார்க் கும்மகிழ்ந் துண்ண வின்னடிசின் மாளா தாக்கத், திருமுடிமேற் றிங்களொடு கங்கை சூடுஞ் சிவபெருமா னருள்செய்யச் சிறப்பின் மிக்க, பெருமைதரு சண்பைநகர் வேந்தர் நாவுக் கரசரிவர் பெருஞ்சோற்றுப் பிறங்க லீந்தார். (ருஎக)

அவனிமிசை மழைபொழிய வுணவு மல்கி யனைத்துயிருந் துயர்நீங்கி யருளி னாலே, புவனமெலாம் பொலிவெய்துங் கால மெய்தப் புரிசடையார் கழல்பலநாள் போற்றி வைகித், தவமுனிவர் சொல்வேந்த ரோடுங் கூடத் தம்பிரா னருள்பெற்றுத் தலத்தின் மீது, சிவன்மகிழுந் தானங்கள் வணங்கப் போவார் தென்றிருவாஞ் சியமூதூர் சென்று சேர்ந்தார். (ருஎஉ)

(ருசுஅ) வாசிபடவேண்டும் - வட்டங்கொடுக்கவேண்டும். (ருஎ0) ஆவணவீதி - கடைவீதி. (ருஎக) சோற்றுப்பிறங்கல் - அன்னமலை.

நீடுதிரு வாஞ்சியத்தி லமர்ந்த முக்க ணீலமிடற் றருமணியை வணங்கிப் போற்றிப், பாடொலிநீர்த் தலையாலங் காடு மாடு பரமர்பெரு வேளூரும் பணிந்து பாடி, நாடுபுகழ்ந்த தனிச்சாத்தங் குடியி னண்ணி நம்பர்திருக் கரவீர நயந்து பாடித், தேடுமறைக் கரியார்தம் விளமர் போற்றித் திருவாரூர் தொழ நினைந்து சென்று புக்கார். (ருஎங)

நம்பர்மகிழ் திருவாரூர் வணங்கிப் போந்து நலங்கொடிருக் காறாயி னண்ணி யேத்திப், பைம்புனன்மென் பணைத்தேவூ ரணைந்து போற்றிப் பரமர்திரு நெல்லிக்காப் பணிந்து பாடி, யும்பர்பிரான் கைச்சினமும் பரவித் தெங்கூ ரோங்குபுகழ்த் திருக்கொள்ளிக் காடும் போற்றிச், செம்பொன் மதிற் கோட்டூரும் வணங்கி யேத்தித் திருமலிவெண் டுறைதொழுவான் சென்று சேர்ந்தார். (ருஎச)

மற்றவ்வூர் தொழுதேத்தி மகிழ்ந்து பாடி மாலயனுக் கரியபிரான் மருவுந் தானம், பற்பலவுஞ் சென்றுபணிந் தேத்திப் பாடிப் பரவுதிருத் தொண்டர்குழாம் பாங்கி னெய்தக், கற்றவர்வாழ் தண்டலைநீ ணெறியுள்ளிட்ட கனகமதிற் றிருக்களருங் கருதார் வெள்கச், செற்றவர்தம் பதிபிறவுஞ் சென்று போற்றித் திருமறைக்காட் டணைமருங்கு சேர்ந்தா ரன்றே ()

கானமணவெஞ் சுரமருளாற் கடந்தார் தாமுங் கடற்காழிக் கவுணியர்தந் தலைவர் தாமுஞ், சேரவெழுந் தருளியப்பேறு கேட்டுத் திருமறைக்காட் டகன்பதியோர் சிறப்பிற் பொங்கி, யூரடைய வலங்கரித்து விழவு கொள்ள வுயர்கமுகு கதலிநிறை குடந்தீ பங்கள், வார்முரச மங்கலநா தங்கண் மல்க வெதிர்கொள்ள வடியருடன் மகிழ்ந்து வந்தார் (ருஎசு)

முன்னணைந்த திருநாவுக் கரசர் தம்மை முறைமையா லெதிர்கொண்டு களிப்பின் மூழ்கிப், பின்னணைய வெழுந்தருளும் பிள்ளை யார்தம்பெருகிய பொற்காளத்தி னோசை கேட்டுச், சென்னிமிசைக் கரங்குவித்து முன்பு சென்று சேர்ந்து வணங்குதலுந் திருந்து சண்பை, மன்னவரு மணிமுத்தின் சிவிகை நின்று வந்திழிந்து வணங்கியுடன் மகிழ்ந்து போந்தார் (ருஎஎ)

சொல்லரச ருடன்கூடப் பிள்ளை யார்தாந் தூமணிநீர் மறைக்காட்டுத் தொல்லை மூதூர், மல்குதிரு மறுகினைக்கட் புகுந்த போது மாதவர்கண் மறையவர்கண் மற்று முள்ளோர், எல்லையில்லா வகையரவென் றெடுத்த வோசை யிருவிசும்பு திசையெட்டு நிறைந்து பொங்கி, யொல்லொலிநீர் வேலையொலி யடக்கி விண்மே லும்பர்நாட் டப்புறத்து முற்ற தன்றே (ருஎஅ)

அடியவரும் பதியவரு மருங்கு போற்ற வணிமறுகி னூடெய்தி யருகு சூழ்ந்த, கொடிநுடங்கு செழுந்திருமா ளிகையின் முன்னாகக் கோபுரத்தைத் தாழ்ந்திறைஞ்சிக் குறுகிப் புக்கு, முடிவிலிமை யவர்முனிவர் நெருங்

(ருஎசு) கான அமண வெஞ்சுரம் - கொடியசமணராகிய பாலைநிலத்தை.

குந் தெய்வ முன்றில்வலங் கொண்டுநேர் சென்று முன்னாட், படியின்மறை யருச்சித்துக் காப்புச் செய்த பைம்பொன்மணித் திருவாயிற் பாங்கு வந்தார்.

அருமறைகள் திருக்காப்புச் செய்து வைத்த வக்கதவந் திறந்திடவும் மறைகளோதும், பெருகியவன் புடையடியா ரணைந்து நீக்கப்பெறாமையினா லன்றுமுதலாகப் பின்னை, ஒருபுடையோர் வாயிலமைத் தொழுகுந் தன்மை யுள்ளபடி கேட்டருளி யுயர்ந்த சண்பைத், திருமறையோர் தலைவர்வியப் பெய்தி நின்று திருநாவுக்கரசருக்குச் செப்புகின்றார். (௫௮௦)

அப்பரே வேதவனத் தையர் தம்மை யபிமுகத்துத் திருவாயி றிறந்து புக்கே, எப்பரிசும் நாமிறைஞ்ச வேண்டு நீரே யிவ்வாயிற் றிருக்காப்பு நீங்கு மாறு, மெய்ப்பொருள்வண் டமிழ்பாடி யருளு மென்ன விளங்குமொழி வேந்தரதுமேற்கொண் டென்னை, யிப்பரிசு நீரருளிச் செய்தீ ராகிலிது செய்வே னென்னப் பதிக மெடுத்துப் பாட (௫௮௧)

பாடியவப் பதிகப்பாட் டான பத்தும் பாடவிரம் பியபின்னும் பைம்பொன்வாயிற், சேடியர்பொற் கதவுதிருக் காப்பு நீங்காச்செய்கையினால் வாகீசர் சிந்தை நொந்து, நீடுதிருக் கடைக்காப்பி லரிது வேண்டி நின்றெடுக்கத் திருக்காப்பு நீங்கக் காட்ட, ஆடியசே வடியார்த மடியார் விண்ணோ ராயபெருந் திகிலாண்ட மனைத்து மூழ்க (௫௮௨)

வேறு

மற்றது கண்ட போதே வாகீசர் மன்னவரை நோக்கிப்
பொற்புகலியார் தம மன்னா போற்றிட வவரும் போற்றி
அற்புத நிலையி னாக வெண்ணி திருமறைக்கா டாளுங்
கொற்றவர் கோயில் வாயி னோவழி குறுகிப் புக்கார் (௫௮௩)

கோயிலுட் புகுவார் முன்சி றவித்த செங் கைகளோடுந்
தாயினு மினிய தங்க டம்பிரா னுரைக் கண்டார்
பாயுநீ ரருவி கண்க ணேங்கிடப் படியின் மீது
மேயின மெய்ய ராகி விதிர்ப்புற்று விரைவின் வீழ்ந்தார் (௫௮௪)

அன்பினுக் களவு காணா ரானந்த வெள்ள மூழ்கி
என்புநெக் குருக நோக்கி யிறைஞ்சிமுன் விழுந்து நம்பர்
முன்புநிற் பதுவு மாற்றா ரொழிந்துமா றேற்றி
மின்புரை சடையார் தம்மைப் பதிகங்கள் விளம்பிப் போந்தார். (௫௮௫)

புறம்புவந் தணைந்த போது புகலிகா வலரை நோக்கி
நிறங்கிளர் மணிக்க பாட நீக்கமு மடைப்பு நிற்கத்
திறந்தவா றடைக்கப் பாடி யருளுமென் றெனருர் தீய
மறம்புரி யமணர் செய்த வஞ்சனை கடக்க வல்லார் (௫௮௬)

அன்றர சருளிச் செய்ய வருமறைப் பிள்ளை யாரும்
வென்றிவெள் விடையார் தம்மை விருப்பினாற் சதுர மென்னும்

இன்றமிழ்ப் பதிகப் பாட லிசைத்திட விரண்டு பாலு
நின்றவக் கதவு காப்பு நிரம்பிட வடைத்த தன்றே. (ருஅஎ)

---

**திருமறைக்காடு - பண் - இந்தளம்.**

திருச்சிற்றம்பலம்.

சதுரம்மறைதான்றுதிசெய்துவணங்கும்
மதுரம்பொழில்சூழ்மறைக்காட்டுறைமைந்தா
இதுநன்கிறைவைத்தருள்செய்கவெனக்குன்
கதவந்திருக்காப்புக்கொள்ளுங்கருத்தாலே

காழிந்நகரான்கலைஞானசம்பந்தன்
வாழிம்மறைக்காடனைவாய்ந்தறிவித்த
ஏழின்னிசைமாலையீரைந்திவைவல்லார்
வாழியுலகோர்தொழவானடைவாரே

திருச்சிற்றம்பலம்

---

அடைத்திடக் கண்டு சண்பை யாண்டகை யாரு மஞ்சொற்
றொடைத்தமி ழாளி யாருந் தொழுதெழுந் தொண்ட ரார்த்தார்
புடைப்பொழிந் திழிந்த தெங்கும் பூமழை புகலி வேந்தர்
நடைத்தமிழ்ப் பதிக மாலை நிரம்பிட நவின்று போற்ற (ருஅஅ)

அத்திரு வாயி றன்னி லற்றைநா டொடங்கி நேரே
மெய்த்திரு மறைகள் போல மேதினி புக்குப் போற்ற
வைத்தெதிர் வழக்கஞ் செய்க வரம்பிலாப் பெருமை யோரைக்
கைத்தலங் குவித்துத் தாழ்ந்து வாழ்ந்தது கடல்சூழ் வையம் (ருஅகூ)

அருமறை யான வெல்லா மகலிரு விசும்பி லார்த்துப்
பெருமையின் முழங்கப் பஞ்ச நாதமும் பிறங்கி யோங்க
இருபெருந் சகையோர் தாமு மெதிரெதி ரிறைஞ்சிப் போந்து
திருமடங் களின்முன் புக்கார் செழும்பதி விழவு கொள்ள (ருகூ0)

வேதங்க ளெண்ணில் கோடி மிடைந்துசெய் பணியை மிக்க
ஏதங்க ணம்பா னீப்பா ரிருவருஞ் செய்து வைத்தார்
நாதங்கொள் வடிவாய் நின்ற நதிபொதி சடையார் செய்ய
பாதங்கள் போற்று மேலோர் பெருமையார் பகரு நீரார் (ருகூக)

திருமறை நம்பர் தாமுன் பருள்செய்த வதனைச் செப்பும்
ஒருமையி னின்ற தொண்டர் தம்பிரா ஞாபா லொக்க
வருமருட் செய்கை தாமே வகுத்திட வல்லோ ரென்றாற்
பெருமறை யுடன்மெய்த் தொண்டர்க் கிடையீடு பெரிதா மன்றே (ருகூஉ)

---

(ருகூ0) நாதம் - சூக்குமை, பைசந்தி, மத்திமை, வைகரி என்னும் நான்கிற்குங் காரணமான அதிசூக்குமை வாக்கெனனும் பிரதானநாதத்தை.

இவ்வகை திருமறைக்காட் டிறையவ ரருளை யுன்னி
மெய்வகை தெரிந்த வாகீசர் வேந்தர்தாந் துயிலும் போதின்
மைவளர் கண்டர் சைவ வேடத்தால் வந்து வாய்மூர்
அவ்விடை யிருந்தோ நம்பால் வாவென் றங் கருளிப் போக (௫௯௩)

கண்டவப் போதே கைகள் குவித்துடன் கடிது செல்வார்
மண்டிய காத லோடு மருவுவார் போன்றங் காணார்
எண்டிசை நோக்கு வாருங் கெய்துவார் போல வெய்தா
அண்டர்தம் பிரானார் தம்பின் போயினா ராவ தோரார் (௫௯௪)

அங்கவ ரேகச் சண்பை யாண்டகை யாரு மப்பால்
எங்குற்ற தென்று கேட்ப வெய்தினார் திருவாய் மூரிற்
பொங்கிய காத லாலென் றுரைத்திடப் போன தன்மை
சங்கையுற் றனரோ வென்று தாமுமங் கணையப் போந்தார் (௫௯௫)

அந்நிலை யணைந்து போதி லம்பிகை யுடனே கூட
மன்னிய வாடல் காட்டத் தளரிள வளருமம் பாடிச்
சென்னியால் வணங்கி வாய்மூ ரரசொடுஞ் சென்று புக்கங்
கின்னியல் புறமுன் கூடி யிருவரும் போற்றி செய்தார் (௫௯௬)

---

**திருவாய்மூர் - பண் - நட்டராகம்.**

திருச்சிற்றம்பலம்

தளிரிளவளரொளியுமைபாடத்தாளம்மிட்டவோர்கழல்வீசிக்
கிளரிளமணியரவரையார்த்தாடும்வேடக்கிறிமையார்
விளரிளமுலையவர்க்கருள்நல்கிவெண்ணீறணிந்தோர்சென்னிமேல்
வளரிளமதியமொடியவராணீர்வாய்மூரடிகள்வருவாரே

திங்களொட்டருவரைப்பொழிற்சோலைத்தெங்கணலங்கானல்சூழ்திருவாய்மூர்
அங்கமொடருமறையொலிபாடலழலவண்ணர்தம்மடிபரவி
நங்கள்வினைகெடமொழியவல்லஞானசம்பந்தன்தமிழ்மாலை
தங்கியமனத்திறைமொழுதெழுவார்தவநெறியுலகுக்கோர்தவநெறியே

திருச்சிற்றம்பலம்

---

நீடுசீர்த் திருவாய் மூரி னிலவிய சிவனார் தம்மைப்
பாடுசொற் பதிகந் தன்னாற் பரவியப் பதியில் வைகிக்
கூடுமெய் யன்பு பொங்க விருவருங் கூடி மீண்டு
தேடுமா மறைகள் கண்டார் திருமறைக் காடு சேர்ந்தார் (௫௯௭)

சண்பைநா டுடைய பிள்ளை தமிழ்மொழித் தலைவ ரோடு
மண்பயில் கீர்த்திச் செல்வ மாமறைக் காடு வைகிக்
கண்பயி னெற்றி யார்தங் கழலிணை பணிந்து போற்றிப்
பண்பயில் பதிகம் பாடிப் பரவியங் கிருந்தா ரன்றே (௫௯௮)

---

திருமறைக்காடு - பண் - பியந்தைக்காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

பொங்குவெண்மணற்கானற்பொருகடற்றிரைதவழ்முத்தங்
கங்குலாரிருள்போழுங்கலிமறைக்காடமர்ந்தார்தாந்
திங்கள்சூடினரேனுந்திரிபுரமெரித்தாரேனு
மெங்குமெங்கள்பிரானார்புகழலதிகழ்பழியிலரே.

மையுலாம்பொழில்சூழ்ந்தமாமறைக்காடமர்ந்தாரைக்
கையினாற்றொழுதெழுவான்காழியுள்ஞானசம்பந்தன்
செய்தசெந்தமிழ்பத்துஞ்சிந்தையுட்சேர்க்கவல்லார்போய்ப்
பொய்யிலவானவரோடும்புகவலார்கொள்வலார்புகழே

திருச்சிற்றம்பலம்

---

இவ்வகை யிவர்க ளிங்க ணிருந்தன ராக விப்பாற்
செய்வகை யிடையே தப்புந் தென்னவன் பாண்டி நாட்டு
மெய்வகை நெறியி னில்லா வினையமண் சமய மிக்குக்
கைவகை முறைமை தன்மை கழியமுன் கலங்குங் காலை (௩௯௯)

தென்னவன் றானு முன்செய் தீவினைப் பயத்தி னாலே
அந்நெறிச் சார்வு தன்னை யறமென நினைந்து நிற்ப
மன்னிய சைவ வாய்மை வைதிக வழக்க மாகு
நன்னெறி திரிந்து மாறி நவைநெறி நடந்த தன்றே (௪௦௦)

பூழியர் தமிழ்நாட் டுள்ள பொருவில்சீர்ப் பதிக ளெல்லாம்
பாழியு மருகர் மேவும் பள்ளிக ளபலவு மாகிச்
சூழிருட் குழுக்கள் போலத் தொடைமயிற் பீலி யோடு
மூழிநீர் கையிற் பற்றி யமணரே யாகி மொய்ப்ப (௪௦௧)

பறிமயிர்த் தலையும் பாயும் பீலியுந் தடுக்கு மேனிச்
செறியுமுக் குடையு மாகித் திரிபவ ரெங்கு மாகி
அறியுமச் சமய நூலி னளவினி லடங்கிச் சைவ
நெறியினிற் சித்தஞ் செல்லா நிலைமையி னிகழுங் காலை (௪௦௨)

வரிசிலைத் தென்னன் வன்றா னுய்தற்கு வளவர் கோமான்
திருவுயிர்த் தருளுஞ் செல்வப் பாண்டிமா தேவி யாருங்
குறைகழ லமைச்ச ராய குலச்சிறை யாரு மென்னும்
இருவர்தம் பாங்கு மன்றிச் சைவமங் கெய்தா தாக (௪௦௩)

ஆங்கவர் தாங்க ளங்க ணரும்பெறற் றமிழ்நா டுற்ற
தீங்கினுக் களவு தேற்றாச் சிந்தையிற் பரிவு கொண்டே
ஓங்கிய சைவ வாய்மை யொழுக்கத்தி னின்ற தன்மை
பூங்கழற் செழியன் முன்பு புலப்படா வகைகொண் டுய்த்தார் (௪௦௪)

இந்நெறி யொழுகு கின்றா ரேழுல குய்ய வந்த
மன்னிய புகலி வேந்தர் வைதிக வாய்மைச் சைவச்

செந்நெறி விளக்கு கின்றார் திருமறைக் காடு சேர்ந்த
தன்னிலை கன்னி நாட்டு நல்வினைப் பயத்தாற் கேட்டார் (௬௦௫)

கேட்டஅப் பொழுதே சிந்தை கிளர்ந்தெழு மகிழ்ச்சி பொங்க
நாட்பொழு தலர்ந்த செந்தா மரைநகை முகத்த ராகி
வாட்படை யமைச்ச ரோடு மங்கையர்க் கரசி யாருஞ்
சேட்படு புலத்தா ரேனுஞ் சென்றடி பணிந்தா ரொத்தார் (௬௦௬)

காதலான் மிகக்கோ தாங்கள் கைதொழுங் கருத்தி னாலே
போதவிழ் சோலை வேலிப் புகலிகா வலனார் செய்ய
பாதங்கள் பணிமி னென்று பரிசன மாக்கட் டம்மை
மாதவஞ் சுருதி செய்த மாமறைக் காட்டில் விட்டார் (௬௦௭)

ஆங்கவா விடமுன் போந்த வறிவுடை மாந்த ரங்கண்
நீங்கிவண் டமிழ்நாட் டெல்லை பிற்பட நெறியி னேகி
ஞாங்கர்நீர் நாடுங் காடு நதிகளுங் கடந்து வந்து
தேங்கமழ் கைதை நெய்தற் றிருமறைக் காடு சேர்ந்தார் (௬௦௮)

திருமறைக் காடு நண்ணிச் சிரபுர நகரில் வந்த
அருமறைத் தலைவ ரங்க கமர்ந்திருந் தருளுஞ் செல்வப்
பெருமடத் தணைய வந்து பெருகிய விருப்பிற் றங்கள்
வருமுறைத் தன்மை யெல்லாம் வாயிற்கா வலர்க்குச் சொன்னார் (௬௦௯)

மற்றவர் சென்று புக்கு வளவர்கோன் மகளார் தென்னர்
கொற்றவன் றேவி யாருங் குலச்சிறை யாரு மேவப்
பொற்கழல் பணிய வந்தோ மென்றச்சிலர் புறத்து வந்து
சொற்றன ரென்று போற்றித் தொழுதுவிண் ணப்பஞ் செய்தார் (௬௧௦)

புகலிகா வலர்தாங் கேட்டுப் பொருவிலா வருண்முன் கூர
அகமலர்ந் தவர்கட் டம்மை யழையுமென் றருளிச் செய்ய
நகைமுகச் செவ்வி நோக்கி நற்றவ மாந்தர் கூவத்
தகவுடை மாந்தர் புக்குத் தலையினால் வணங்கி நின்றார் (௬௧௧)

நின்றவர் தம்மை நோக்கி நிகரிலசீர்ச் சண்பை மன்னர்
மன்றலங் குழலி யாரா மானியார் தமக்கு மான
குன்றென நின்ற மெய்ம்மைக் குலச்சிறை யார்த மக்கு
நன்றுதான் வினவக் கூறி நற்பதம் போற்று வார்கள் (௬௧௨)

கன்னிநா டமணர் தம்மாற் கட்டழிந் திழிந்து தங்கண்
மன்னனு மவர்கண் மாயத் தழுந்தமா தேவி யாருந்

(௬௧௩) இழிந்து என்றும் வினையெச்சம் அழுந்த என்றும் வினையெச்ச வினையைத் தழுவியது. இவ்வினையெச்சவினை நாட்டிற்கும் மன்னற்கும் பொதுவாகலான் செயவெனெச்சத் தெச்சவினை முதல் வினையாயிற்று. இதனை — "ஆ[illegible]சொல" என்ற சூத்திரத்திற் சேனாவரையர் விரித்துரையா னுணர்க.

கொன்னவி லயில்வேல் வென்றிக் குலச்சிறை யாருங் கூடி
முந்நிலை புகலி வேந்தர்க் கியம்புமென் றிறைஞ்சி விட்டார் (௬௧௩)

வேறு

என்றவர்கள் விண்ணப்பஞ் செய்த பின்னை யேறுயர்த்த சிவபெருமான் றொண்டரெல்லா, நன்றுநமை யாளுடைய நாதன் பாதநண்ணுத லெண்ணிலமண ருண்டார் தம்மை, வென்றருளி வேதநா னெறியே யாக்கி வெண்ணீறு வேந்தனையும் பூசுவித்தங்கு, நின்றசெயல் சிவனடியார் செயலே யாக நினைந்தருள வேண்டுமென நின்று போற்ற (௬௧௪)

மற்றவர்கட் கருள்புரிந்து பிள்ளை யாரும் வாகீச முனிவருடன் கூடச் சென்று, பெற்றமுயர்த் தவர்பாதம் பணிந்து போந்து பெரியதிருக் கோபுரத்து ளிருந்து தென்னன், முற்றசெயல் பாண்டிமா தேவியாரு முரிமை யமைச்சருமுரைத்து விட்ட வார்த்தை, சொற்றணிமன் னவருக்குப் புகலி மன்னர் சொல்லியெழுந் தருளுதற்குத் துணிந்த போது (௬௧௫)

அரசருளிச் செய்கின்றா ரிள்ளா யந்த வமணர்கையா வஞ்சனைக்கோ ரவதி யில்லை, யுரைசெய்வ துளதுறக்கோ டாமுந் தீய வெழுந்தருள வுடன்படுவ தொண்ணா தென்னப், பரசுவது நம்பெருமான் கழல்க ளென்றாற் பழுதணையா தெனப்பகர்ந்து பரமர் செய்ய, விரைசெய்மலர்த் தாள்போற்றிப் புகலி வேந்தர் வேயுறுதோ ளியையெடுத்து விளம்பி னாரே (௬௧௬)

---

### வேயுறுதோளி - பண் - பியந்தைக்காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்

வேயுறுதோளிபங்கன்விடமுண்டகண்டன்மிகநல்லவீணைதடவி
மாசறுதிங்கள்கங்கைமுடிமேலணிந்தென்னுளமேபுகுந்தவதனாற்
ஞாயிறுதிங்கள்செவ்வாய்புதன்வியாழம்வெள்ளிசனிபாம்பிரண்டுமுடனே
யாசறுநல்லநல்லவவைநல்லநல்லவடியாரவர்க்குமிகவே

தேனமர்பொழில்கொளாலைவிளைசெந்நெறுன்னிவளர்செம்பொனெங்குநிகழ
நான்முகனாதியாயபிரமாபுரத்துமறைஞானஞானமுனிவன்
தானுறுகோளுநாளுமடியாரைவந்துநலியாதவண்ணமுரைசெ
யானசொன்மாலையோதுமடியார்களவானிலரசாள்வராணைநமதே

திருச்சிற்றம்பலம்

---

சிரபுரத்துப் பிள்ளையா ரருளிச் செய்த திருப்பதிகங் கேட்டதற்பின் றிருந்து நாவுக், கரசுமதற் குடன்பாடு செய்து தாமு மவர்முன்னே யெழுந்தருள வமைந்த போது, புரமெரித்தார் திருமகனா ரப்ப ரிந்தப் புனனாட்டி லெழுந்தருளி யிருப்பீ ரென்று, கரகமலங் குவித்திறைஞ்சித் தவிரப்ப வாகின் காவலருந் தொழுதரிதாங் கருத்தி னேர்ந்தார் (௬௧௭)

வேதமவ ளர்க்கவுஞ் சைவம் விளக்குதற்கும் வேதவனத் தருமணியை மீண்டும் புகுதப், பாதமுறப் பணிந்தெழுந்து பாடிப் போற்றிப் பரசியருள

பெற்றவிடை கொண்டு போந்து, மாதவத்து வாகீசர் மற்ற வண்ணம் வணங்கியருள் செய்தவிடை கொடுத்து மன்னுவ, காதலினா லருமையுறக் கலந்து நீங்கிக் கதிர்ச்சிவிகை மருங்கணைந்தார் காழி நாதர் (௫௧௮)

திருநாவுக் கரசருமங் கிருந்தாரிப்பாற் றிருஞான சம்பந்தர் செழுநீர் முத்தின், பெருநாமச் சிவிகையின்மீ தேறிப் பெற்ற முயர்த்தவர்தாள் சென்னியின்மேற் பேணு முள்ளத், தொருநாமத் தஞ்செழுத்து மோதி வெண்ணீற் றொளிவிளங்குந் திருமேனி தொழுதார் நெஞ்சில், வருநாமத் தன்புருகுங் கடலா மென்ன மாதவரார்ப் பொலிவையம் நிறைந்த தன்றே (௫௧௯)

வேறு

பொங்கியெழுந் திருத்தொண்டர் போற்றெடுப்பார் நாற்றிசையு
மங்கலதூ ரியந்தழங்க மறைமுழங்க மழைமுழங்குஞ்
சங்கபடக் கம்பேரி தாரைகா ளந்தாளம்
எங்குமெழுந் தெதிரியம்ப விருவிசும்பு கொடிதூர்ப்ப (௫௨௦)

மலர்மாரி பொழிந்திழிய மங்கலவாழ்த் தினிதிசைப்ப
அலர்வாசப் புனற்குடங்க ளணிவிளக்கு தூபமுடன்
நிலைநீடு தோரணங்க ணிரைத்தடியா ரெதிர்கொள்ளக்
கலைமாலை மதிச்சடையா ரிடம்பலவுங் கைதொழுவார் (௫௨௧)

தெண்டிரைசூழ் கடற்கானற் றிருவகத்தி யான்பள்ளி
அண்டர்பிரான் கழல்வணங்கி யருந்தமிழ்மா மறைபாடிக்
கொண்டலபயின் மணற்கோடு சூழ்கோடிக் குழகர்தமைத்
தொண்டருடன் றொழுதணைந்தார் தோணிபுரத் தோன்றலார் (௫௨௨)

கண்ணார்ந்த திருநுதலார் மகிழ்ந்தகடிக் குளமிறைஞ்சி
எண்ணார்ந்த திருவிடும்பா வனமேத்தி யெழுந்தருளி
மண்ணார்ந்த பதிபிறவு மகிழ்ந்தருமன் பாலவணங்கிப்
பண்ணார்ந்த தமிழ்பாடிப் பரவியே செல்கின்றார் (௫௨௩)

திருவுசாத் தானத்துத் தேவர்பிரான் கழல்பணிந்து
மருவியசெந் தமிழ்ப்பதிக மாலைபோற் றும்படிபாடி
இருவினையும் பற்றறுப்பா ரெண்ணிறந்த தொண்டருடன்
பெருகுவிருப் பினராகிப் பிறபதியும் பணிந்தணைந்தார் (௫௨௪)

கருங்கழிவே லைப்பாலைக் கழிநெய்தல் கடந்தருளித்
திருந்தியசீர்ப் புனனாட்டுத் தென்மேல்பாற் றிசைநோக்கி
மருங்குமிடை தடஞ்சாலி மாடுசெறி குலைத்தெங்கு
நெருங்கிவளர் கமுகுடுத்த நிறைமருத வழிச்சென்றார். (௫௨௫)

சங்கங்கள் வயலெங்குஞ் சாலிகளைக் கரும்பெங்குங்
கொங்கெங்கு நிறைகமலக் குளிர்வாசத் தடமெங்கும்
அங்கங்கே யுழவர்குழா மார்க்கின்ற வொலியெங்கும்
எங்கெங்கு மலர்ப்படுக ரிவைகழிய வெழுந்தருளி. (௫௨௬)

தடமலங்கும் புனல்குடையுந் தையலார் தொய்யினிறம்
இடமலங்கு மந்தணங்க ளோதுகிடை யாகநிலை
மடமலங்குந் தொண்டர்குழா மனையெங்கும் புனைவதுவை
நடமலங்கு மொலியோவா நற்பதிக ளவைகடந்து (௬௮௭)

நீர்நாடு கடந்தருளி நெடும்புறவிற் குறும்புதல்கள்
கார்நாடு முகைமுல்லைக் கடிநாறு நிலங்கடந்து
போர்நாகஞ் சிலைமறவர் புன்புலவைப் பிடைபோகிச்
சீர்நாடுந் தென்பாண்டி நன்னாடு சென்றணைவார். (௬௮௮)

மன்றன்மலர்ப் பிறங்கன்மருங் கெறிந்துவரு நதிகள்பல
சென்றணைந்து கடந்தேறித் திரிமருப்பின் கலைபுணர்மான்
கன்றுதெறித் தனவுகைக்குங் கானவதர் கடந்தணைந்தார்
கொன்றைநறுஞ் சடைமுடியார் மகிழ்ந்ததிருக் கொடுங்குன்றம் (௬௮௯)

கொடுங்குன்றத் தினிதமர்ந்த கொழும்பவளச் செழுங்குன்றை
அடுங்குன்ற முரித்தாரை வணங்கியருந் தமிழ்பாடி
நெடுங்குன்றும் படர்கானு நிறைநாடுங் கடந்துமதி
தொடுங்குன்ற மதின்மதுரைத் தொன்னகர்வந் தணைகின்றார் (௬௯௦)

வேறு

இந்நிலை யிவர்வந் தெய்த வெண்பெருங் குன்ற மேவும்
அந்நிலை யமணர் தங்கட் கழிவுமுன் சாற்ற லுற்றுப்
பன்முறை வெருக்கொண் டுள்ளம் பதைப்பத்தீக் கனாக்க ளோடுந்
துன்னிமித் தங்க ளங்கு நிகழ்ந்தன சொல்ல லுற்றாம் (௬௯௧)

பள்ளிகண் மேலு மாடு பயிலமண் பாழி மேலும்
ஒள்ளிதழ் அசோகின் மேலு முணவுசெய் கவளங் கையிற்
கொள்ளுமன் னடங்கண மேலுங் கூகையோ டாந்தை தீய
புள்ளின மான தம்மிற் பூசலிட் டழிவு சாற்றும் (௬௯௨)

பீலியுந் தடுக்கும் பாயும் பிடித்தகை வழுவி வீழக்
காலமுந் தடுமா றாடிக் கண்களு மிடமே யாடி
மேலெழு மழிவுக் காக வேறுகா ரணமுங் காணார்
மாலுழந் தறிவு கெட்டு மயங்கின ரமண ரெல்லாம் (௬௯௩)

சந்தியா தம்மிற் றாமே கனன்றெழு கலாங்கள் கொள்ள
வந்தவா றமணர் தம்மின் மாறுகொண் டூறு செய்ய
முந்தைய வுரையிற் கொண்ட பொறைமுத லவையும் விட்டுச்
சிந்தையிற் செற்ற முன்னைத் தீக்குணந் தலைநின் றார்கள் (௬௯௪)

(௬௯௧) எண்பெருங் குன்றங்கள் - அஞ்சனம், கவுஞ்சம், கோவர்த்தனம், திரிகூடம், [illegible], [illegible], ஏமகூடம், விந்திடம் என்பன. (௬௯௪) சந்தியா - தம்மிற் பகைமை யுள்ள கோபம், கலகம்.

இப்படி யமணர் வைகு மெப்பெயர்ப் பதியு மெய்தும்
ஒப்பிலுற் பாத மெல்லா மொருவரி னொருவர் கூறி
மெய்ப்படு தீக்க னாவும் வேறுவே றாகக் கண்டு
செப்புவான் புகுந்து ளோருந் தென்னவன் மதுரை சேர்ந்தார் (௬௫௫)

அந்நகர் தன்னில் வாழ்வார் புறம்புநின் றணைவார் கூடி
மன்னவன் றனக்குங் கூறி மருண்டவுள் ளத்த ராகித்
துன்னிய வழுக்கு மெய்யிற் றூசிலார் பலரு மீண்டி
இன்னன கனவு கண்டோ மெனவெடுத் தியம்ப லுற்றார் (௬௫௬)

சீர்மலி யசோகு தன்கீ ழிருந்தநந் தேவர் மேலே
வேரொடு சாய்ந்து வீழக் கண்டன மதன்பின் னாக
ஏர்கொண்முக் குடையுந் தாமு மெழுந்துகை நாற்றிப் போக
ஊருளோ ரோடிக் காணக் கண்டன மென்று ரைப்பார் (௬௫௭)

குண்டிகை தகர்த்துப் பாயும் பீறியோர் குரத்தி யோடப்
பண்டிதர் பாழி நின்றுங் கழுதைமேற் படர்வார் தம்மின்
ஒண்டொடி யியக்கி யொரு முறையிட்டுப் புலம்பி யோடக்
கண்டன மென்று சொன்னார் கையறு கவலை யுற்றார் (௬௫௮)

கானிடை நாட்ட மாடுங் கண்ணுதற் றொண்ட ரல்லார்
மீனவன் மதுரை தன்னில் விரவிடக் கண்டோ மென்பார்
கோனவன் றானு மெய்ய கொழுந்தழன் முழுகக் கண்டோம்
ஆனபி னெழவுங் கண்டோ மதிசய மிதுவா மென்பார் (௬௫௯)

மழவிடை யிளங்கன் றொன்று வந்துநங் கழகந் தன்னை
உழறிடச் சிதறி யோடி யொருவருந் தடுக்க வஞ்சி
விழுவொரு புலனு மின்றி மேதினி தன்னை விட்டு
நிழலிலா மரங்க ளேறி நின்றிடக் கண்டோ மென்பார் (௬௬௦)

ஆவதென் பாவி காளிக் கனத்திற மடிகண் மார்க்கு
மேவிய தீங்கு தன்னை விளைப்பது திடமே யென்று
நோவுறு மனத்த ராகி நுகர்பெரும் பதமுங் கொள்ளார்
யாவது செயலென் றெண்ணி யிடருழன் றழுங்கி னார்கள் (௬௬௧)

அவ்வகை யவர்க ளெல்லா மருநிலை மையர்க ளாகச்
சைவநன் மரபில் வந்த தடமயின் மடமென் சாயற்
பைவள ரரவ ரல்குற் பாண்டிமா தேவி யார்க்கு
மெய்வகை யமைச்ச னார்க்கும் விளங்குநன் னிமித்த மேன்மேல் (௬௬௨)

அளவிலா மகிழ்ச்சி காட்டு மரும்பெரு நிமித்த மெய்த
உளமகிழ் வுணருங் காலை யுலகெலா முய்ய வந்த

(௬௫௭) கைநாற்றி - கைகளைத் தொங்கவிட்டு. (௬௫௮) குரத்தி - குருபத்தினி. ஒண்டொடி - தருமதேவதை. (௬௬௦) கழகம் - வித்துவசபை.

வளரொளி ஞான முண்டார் வந்தணைந் தருளும் வார்த்தை
கிளர்வுறு மோகை கூறி வந்தவர் மொழியக் கேட்டார் (௯௬௩)

அம்மொழி விளம்பி னோர்க்கு வேண்டுவ வுடைய நல்கி
மெய்ம்மையில் விளங்கு காதல் விருப்புறு வெள்ள மோங்கத்
தம்மையு மறியா வண்ணங் கைமிகுத் தழைத்துப் பொங்கி
விம்மிய மகிழ்ச்சி கூர மேவிய சிறப்பின் மிக்கார் (௯௬௪)

மங்கையர்க் கரசி யார்பால் வந்தடி வணங்கி நின்ற
கொங்கலர் தெரிய லாராங் குலச்சிறை யாரை நோக்கி
நங்கடம் பிரானா ராய ஞானபோ னகர்முன் பெய்தி
இங்கெழுந் தருள வுய்ந்தோ மெனவெதிர் கொள்ளு மென்றார் (௯௬௫)

மன்றலங் குழலி னாரை வணங்கிப்போந் தமைச்ச னாரும்
வென்றிவே லரச னுக்கு முறுதியே யெனவி ளைந்து
பொன்றிகழ் மாட வீதி மதுரையின் புறத்துப் போகி
இன்றமிழ் மறைதந் தாரை யெதிர்கொள வெய்துங் காலை (௯௬௬)

அம்புய மலராள் போல்வா ராலவா யமர்ந்தார் தம்மைக்
கும்பிட வேண்டு மென்று கொற்றவன் றனக்கு நங் கூறித்
தம்பரி சனங்கள் சூழத் தனித்தனி யோடுஞ் சென்று
நம்பரை வணங்கித் தாமு நல்வர வேற்று நின்றார் (௯௬௭)

வேறு

திருநிலவு மணிமுத்தின் சிவிகையின்மேற் சேவித்து
வருநிலவு தருமதிபோல் வளரொளிவெண் குடைநிழற்றப்
பெருகொளிய திருநீற்றுத் தொண்டர்குழாம் பெருகிவர
அருள்பெருக வருஞானத் தமுதுண்டா ரணைகின்றார் (௯௬௮)

துந்துபிகண் முதலாய தூரியங்கள் கிளர்ந்தார்ப்ப
அந்தணர்மா தவர்க ளாயிரமா மறையெடுப்ப
வந்தெழுமங் கலநாத மாதிரமுட் படமுழங்கச்
செந்தமிழ்மா ருதமெதிர்கொண் டெம்மருங்குஞ் சேவிப்ப. (௯௬௯)

பண்ணியவஞ் சனைத்தவத்தாற் பஞ்சவனாட் டிடைப்பரந்த
எண்ணிலமண் ணெனும்பாவ விருஞ்சேனை யிரிந்தோட
மண்ணுலக மேயன்றி வானுலகுஞ் செய்தபெரும்
புண்ணியத்தின் படையெழுச்சி போலெய்தும் பொலிவெய்த (௯௭௰)

துன்னுமுழு வுடற்றுகளாற் சூழுமுணர் வினிற்றுகளால்
அன்னெறியிற் செறிந்தடைந்த வமண்மாசு கழுவுதற்கு
மன்னியொளிர் வெண்மையினாற் றூய்மையினால் வழுதியர்தங்
கன்னிநாட் டிடைக்கங்கை யணைந்ததெனுங் கவின்காட்ட. (௯௭௧)

பானல்வயற் றமிழ்நாடு பழிநாடும் படிபரந்த
மானமிலா வமணென்னும் வல்லிருள்போய் மாய்வதனுக்
கானபெரு கொளிப்பரப்பா லண்டமெலாங் கொண்டதொரு
ஞானமணி விளக்கெழுந்து வருவதென நலம்படைப்ப. (கூ௯உ)

புரசைவயக் கடகளிற்றுப் பூழியர்வண் டமிழ்நாட்டுத்
தரைசெய்தவப் பயன்விளங்கச் சைவநெறி தழைத்தோங்க
உரைசெய்திருப் பேர்பலவு மூதுமணிச் சின்னமெல்லாம
பரசமயக் கோளரிவந் தானென்று பணிமாற (கூ௯௩)

வேறு

இப்பரி சணையுஞ் சண்பையர் பெருமா னெழுந்தரு ளும்பொழு திசைக்கும
ஒப்பினித் திலப்பொற் றனிப்பெருங் காள முலகுய்ய வொலித்தெழு மோசை
செப்பரும் பெருமைக் குலச்சிறை யாரத் செவிநிறை யமுதெனத் தேக்க
அப்பொழு தறிந்து தலத்தினமேற் பணிந்தே யளப்பருங் களிப்பின ரானா

அஞ்சலி குவித்த கரங்களுந் தலைமே லணைந்திடக் கடிதுசென் றணைவார்
நஞ்சணி கண்டர் தந்திரு மகனா ருடனணைவரு நற்றவக் கடலை
நெஞ்சினி னிறைந்த வார்வமுன் செல்லக் கண்டுநீ ணிலத்திடைத் தாழ்ந்து
பஞ்சவர் பெருமான் மந்திரித் தலைவர் பாங்குற வணைந்துமுன் பணிந்தார் ()

நிலமிசைப் பணிந்த குலச்சிறை யாரை நீடிய பெருந்தவத் தொண்டர்
பலருமுன் னணைந்து வணங்கிமற் றவர்தாம் படியினின் றெழாவகை கண்டு
மலர்மிசைப் புத்தேள் வழிபடும் புகலி வைதிக சேகரர் பாதங்
குலவியங் கணைந்தார் தெனனவ னமைச்சர் குலச்சிறை யாரெனக் கூற. ()

சிரபுரச் செல்வ ரவருரை கேட்டுத் திருமுகத் தாமரை மலர்ந்து
விரவொளி முத்தின் சிவிகைநின் றிழிந்து விரைந்துசென் றவர்தமை யணை
கரகம லங்கள் பற்றியே யெடுப்பக் கைதொழு தவருமுன் னிற்ப [ந்து
வரமிகு தவத்தா லவரையே நோக்கி வள்ளலார் மதுரவாக் களிப்பார் (கூ௯எ)

செம்பியர் பெருமான் குலமக ளார்க்குந் திருந்திய சிந்தையீ ருமக்கு
நம்பெரு மானறன் றிருவருள் பெருகு நன்மைதான் வாலிதே யென்ன
வம்பல ரலங்கன் மந்திரி யாரு மணமிசைத் தாழ்ந்தடி வணங்கித்
தம்பெருந் தவத்தின் பயனனை யார்க்குத் தன்மையா நிலையுரைக் கின்றார் ()

சென்றகா லத்தின் பழுதிலாத் திறமு மினியெதிர் காலத்தின் சிறப்பும்
இன்றெழுந் தருளப் பெற்றபே றிதனு லெற்றைக்குந் திருவரு ளுடையோம்
நன்றியி னெறியி லழுந்திய நாடு நற்றமிழ் வேந்தனு முய்ந்து [ன்பார்.
வென்றிகொ டிருநீற் றொளியினில் விளங்கு மேன்மையும் படைத்தன மெ

இங்கெழுந் தருளும் பெருமைகேட் டருளி யெய்துதற் கரியபே றெய்தி
மங்கையர்க் கரசி யாருநம் முடைய வாழ்வெழுந் தருளிய தென்றே

அங்குநீ ரெதிர்சென் றடிபணி வீரென் றருள்செய்தா ரெனத்தொழு தார்வம்
பொங்கிய களிப்பான் மீளவும் பணிந்து போற்றினார் புரவல னமைச்சர் ()

ஆங்கனம் போற்றி யடிபணிந் தவர்மே லளவிலா வருள்புரி கருணை
தாங்கிய மொழியாற் றகுவன விளம்பித் தலையளித் தருளுமப் பொழுதில்
ஓங்கெயில் புடைசூழ் மதுரைதோன் றுதலு முயர்தவத் தொண்டரை நோக்கி
ஈங்குநம் பெருமான் றிருவால வாய்மற் றெம்மருங் கினதென வினவ ()

அன்பரா யவர்முன் பணிந்தசீ ரடியா ரண்ணலா ரடியிணை வணங்கி
முன்புநின் றெடுத்த கைகளாற் காட்டி முகில்தோய் சோலைகள் சூழ்ந்து [ழும
மின்பொலி விசும்பை யளக்குநீள் கொடிசூழ் வியனெடுங் கோபுரந் தோன்ற
என்பணி யணிவா ரினிதமர்ந் தருளுந் திருவால வாயிது வென்றார் (௬௬௨)

தொண்டர்தாம் போற்றிக் காட்டிடக் கண்டு துணைமலர்க் கரங்குவித் தருளி
மண்டுபே ரன்பான் மண்மிசைப் பணிந்து மங்கையர்க் கரசியென் றெடுத்த
எண்டிசை பரவு மாலவா யாவ திதுவேயென் றிருவாதம் பணிபுங் [தே
கொண்டமை சிறப்பித் தருளிநற் பதிகம் பாடினா ருலகமுய் யப்போற்ற ()

---

## திருவாலவாய் - பண் - புறநீர்மை.

திருச்சிற்றம்பலம்

மங்கையர்க்கரசிவளவர்கோன்பாவைவரிவளைக்கைம்மடமானி
பங்கயச்செல்விபாண்டிமாதேவிபணிசெய்துநாடொறும்பரவப்
பொங்கழலுருவன்பூதநாயகனால்வேதமும்பொருள்களுமருளி
அங்கயற்கண்ணிதன்னொடுமமர்ந்தவாலவாயாவதுமிதுவே

பன்னலம்புணரும்பாண்டிமாதேவிகுலச்சிறையெனுமிவர்பணியும்
அந்நலம்பெறுசீராலவாயீசன்றிருவடியாங்கவைபோற்றிக்
கன்னலம்பெரியகாழியுள்ஞானசம்பந்தன்செந்தமிழிவைகொண்
டின்னலம்பாடவல்லவரிமையோரேத்தவீற்றிருப்பவரினிதே

திருச்சிற்றம்பலம்

---

பாடிய பதிகம் பரவியே வந்து பண்புடை யடியவ ரோடுந்
தேடுமா லயனுக் கரியவர் மகிழ்ந்த திருவால வாய்மருங் கணைந்து
நீடுயர் செல்வக் கோபுர மிறைஞ்சி நிறைபெரு விருப்புடன் புக்கு
மாடுசூழ் வலங்கொண் டுடையவர் கோயின் மந்திரி யாருடன் புகுந்தார் ()

வேறு.

ஆளு மங்கண ராலவா யமர்ந்தினி திருந்த
காள கண்டரைக் கண்களின் பயன்பெறக் கண்டு
நீள வந்தெழு மன்பினாற் பணிந்தெழ நிறையார்
மீள வும்பல முறைநில முறவிழுந் தெழுவார். (௬௬௫)

---

(௬௬௫) இருவர் என்றது மங்கையர்க் கரசியாரையும், குலச்சிறையாரையும்.

அங்க மெட்டினு மைந்தினு மளவின்றி வணங்கிப்
பொங்கு காதலின் மெய்ம்மயிர்ப் புளகமும் பொழியுஞ்
செங்க ணீர்தரு மருவியுந் திகழ்திரு மேனி
எங்கு மாகிநின் றேத்தினார் புகலியா ரிறைவர் (சுசுசு)

நீல மாமிடற் றாலவா யானை நிலவு
மூல மாகிய திருவிருக் குக்குறண் மொழிந்து
சீல மாதவத் திருத்தொண்டர் தம்மொடுந் திளைத்தார்
சாலு மேன்மையிற் றலைச்சங்கப் புலவனார் தம்முன் (சுசுஎ)

---

**திருவாலவாய் - திருவிருக்குக்குறள் - பண் - குறிஞ்சி.**

திருச்சிற்றம்பலம்.

நீலமாமிடற் - றாலவாயிலான
பாலதாயினார் - ஞாலமாள்வரே

அடிகளாலவாய் - படிகொள்சம்பந்தன
முடிவிலின்றமிழ் - செடிகணீக்குமே

திருச்சிற்றம்பலம்

---

சேர்ந்து மின்னிசைப் பதிகமுந் திருக்கடைக் காப்புச்
சாத்தி நல்லிசைத் தண்டமிழ்ச் சொன்மலர் மாலை
பேர்த்து மின்புறப் பாடிவெண் பிறையணி சென்னி
மூர்த்தி யார்கழல் பரவியே திருமுன்றி லணைய (சுசுஅ)

பிள்ளை யாரெழுந் தருளிமுன் புகுதுமப் பொழுது
வெள்ள நீர்பொதி வேணியார் தமைத்தொழும் விருப்பால்
உள்ள ணைந்திட வெதிர்செலா தொருமருங் கொதுங்குந்
தெள்ளு நீர்விழித் தெரிவையார் சென்றுமுன் பெய்த. (சுசுகூ)

மருங்கின் மந்திரி யார்பிள்ளை யார்கழல் வணங்கிக்
கருங்கு ழற்கற்றை மேற்குவி கைத்தளி ருடையார்
பருங்கை யானைவாழ் வளவர்கோன் பாவையா ரென்னப்
பெருங்க ளிப்புடன் விரைந்தெதிர் பிள்ளையா ரணைந்தார். (சுஎ0)

தென்ன வன்பெருந் தேவியார் சிவக்கன்றின் செய்ய
பொன்ன டிக்கம லங்களிற் பொருந்தமுன் விழுந்தார்
மன்னு சண்பையார் வள்ளலார் மகிழ்சிறந் தளிக்கும்
இன்ன ருட்பெருஞ் சிறப்பொடுந் திருக்கையா லெடுத்தார். (சுஎக)

ஞான போனக ரெதிர்தொழு தெழுந்தநற் றவத்து
மானி யார்மனக் கருத்துமுற் றியதென மதித்தே
பான லங்கண்க ணீர்மல்கப் பவளவாய் குழறி
யானு மென்பதி யுஞ்செய்த தவமென்கொ லென்றார். (சுஎ௨)

(சுசுஎ) தலைச்சங்கப் புலவர் - சோமசுந்தரக் கடவுள்.

யாழின் மென்மொழி யார்மொழிந் தெதிர்கழல் வணங்கக்
காழி வாழவந் தருளிய கவுணியர் பிரானுஞ்
சூழு மாகிய பரசம யத்திடைத் தொண்டு
வாழு நீர்மையீ ருமைக்காண வந்தன மென்றார் (௬௭௩)

இன்ன வாறருள் செய்திடத் தொழுதடி வீழ்ந்தார்
மன்னு மந்திரி யாரவரு திறமெலா மொழிய
அன்ன மென்னடை யார்தமக் கருள்செய்து போக்கித்
துன்னு மெய்த்தொண்டர் சூழவந் தருளுமப் பொழுது. (௬௭௪)

செல்வ மல்கிய திருவால வாயினிற் பணிசெய்
தலகு தொண்டர்கள் பிள்ளையார் மருங்கணைந் திறைஞ்சி
மலகு காரம ணிருள்கெட வீங்குவந் தருள
எல்லை யிற்றவஞ் செய்தன மெனவெடுத் திசைத்தார் (௬௭௫)

அத்தி ருத்தொண்டர் தங்களுக் கருண்முக மளித்து
மெய்த்த காதலி னவரொடும் புறத்தினின் மேவிச்
சித்த மின்புறு மமைச்சனார் திருமடங் காட்டப்
பத்தர் போற்றிடப் பரிசனத் தொடுமினி தமர்ந்தார் (௬௭௬)

பரவு காதலிற் பாண்டிமா தேவியா ரருளால்
விரவு நண்பொடு குலச்சிறை யார்விருந் தளிப்பச்
சிரபு ரத்துவந் தருளிய செல்வரங் கிருந்தார்
இரவி மேற்கட லணைந்தன னெல்லிவந் தணைய (௬௭௭)

வழுதி மாநக ரதனிடை மாமறைத் தலைவர்
பழுதில் சீரடி யாருடன் பகல்வரக் கண்ட
கழுது போலவருங் காரமண் குண்டர்கள் கலங்கிப்
பொழுது மையிருட் கிருளென வீண்டின ரொருபால் (௬௭௮)

அங்கண் மேவிய சமணர்கள் பிள்ளையா ரமர்ந்த
துங்க மாமடந் தன்னிடைத் தொண்டர்தங் குழாங்கள்
எங்கு மோதிய திருப்பதி கத்திசை யெடுத்த
பொங்கு பேரொலி செவிப்புலம் புக்கிடப் பொறாராய் (௬௭௯)

மற்றிவ் வானபழி மன்னவன் மாறனை யெய்திச்
சொற்று மென்றுதஞ் சூழ்ச்சியு மொருபடி துணிவார்
கொற்ற வன்கடை காவலர் முன்சென்று குறுகி
வெற்றி வேலவர்க் கெங்களை விளம்புவீ ரென்றார் (௬௮௦)

வாயில் காவலர் மன்னவன் றனையெதிர் வணங்கி
ஆய மாகிவந் தடிகண்மா ரணைந்தன ரென்ன
மேயி னானணை வாரென வவருஞ்சென் றிசைத்தார்
பாயி னுடல மூடுவார் பதைப்புடன் புக்கார். (௬௮௧)

புக்க போதவ ரழிவுறு மனத்திடைப் புலர்ச்சி
மிக்க தன்மையை வேந்தனுங் கண்டெதிர் வினவி
ஒக்க நீரிரண் டனைவதற் குற்றதென் னென்னத்
தக்க தலைவநீங் கடுத்தது சாற்றுதற் கென்றார். (சுஅஉ)

ஆவ தேனுமக் கடுத்தது கூறுவீ ரென்று
காவ லன்பரிந் துரைத்தலுங் காரமண் கையர்
மாவ லாயுன்றன் மதுரையிற் சைவவே தியர்தாம்
மேவ லாலின்று கண்டுமுட் டியாமென்று விளம்ப. (சுஅங)

என்று கூறலுங் கேட்டுமுட் டியானுமென் றியம்பி
நன்று நல்லறம் புரிந்தவா றாமென்று நகுவான்
கன்று முள்ளத்த னாகியக் கண்ணுத லடியார்
இன்று மாநக ரணைந்ததென் னவர்கள்யா ரென்றான் (சுஅச)

மாலை வெண்குடை வளவர்சோ ணாட்டுவெண் புகலிச்
சூல பாணிபால் ஞானம்பெற் றானென்று சுருதிப்
பால னன்பர்தங் குழாத்தொடும் பணிமுத்தின் சிவிகை
மேல ணைந்தன னெங்களை வாதினில் வெல்ல (சுஅரு)

என்று கூறவா ரித்திற முன்புதா மறிந்த
தொன்று மங்கொழி யாவகை யுரைத்தலுந் தென்னன்
மன்ற லம்பொழிற் சண்பையார் வள்ளலார் நாமஞ்
சென்று தன்செவி நிறைத்தலுஞ் செயிர்த்துமுன் சொல்வான் (சுஅசு)

மற்ற மாமறை மைந்தனிம் மருங்கணைந் தானேல்
உற்ற செய்தொழி லியாதுசெய் கோமென வுரைப்பச்
செற்ற மீக்கொண்ட சிந்தையுஞ் செய்கையு முடையோர்
கொற்ற மன்னவன் மொழிக்கெதிர் குறித்துரை செய்வார். (சுஅஎ)

வந்த வந்தணன் றன்னைநாம் வலிசெய்து போக்குஞ்
சிந்தை யன்றியச் சிறுமறை யோனுறை மடத்தில்
வெந்த ழற்பட விஞ்சைமந் திரத்தொழில் விளைத்தால்
இந்த நன்னக ரிடத்திரா னேகுமென் றிசைத்தார் (சுஅஅ)

வேறு

ஆவதொன் றிதுவே யாகி லதனையே விரைந்து செய்யப்
போவதென் றவரைப் போக்கிப் பொய்பொரு ளாகக் கொண்டான்

---

(சுஅங) மாவலாய் - யானையேறி நடத்துதலில் சமர்த்தனாகிய பாண்டியனே. மிக்க வலிமையுடையவனே எனினுமாம். சுத்தாத்துவித சைவசித்தாந்திகளைக் காணின் கண்டுமுட்டு என்றலும், கண்டோம் எனப்பிறர் சொல்லைக்கேட்பின் கேட்டு முட்டு என்றலும் சமணர்கள் சமயக்கொள்கை. முட்டு - அசுசியால் உண்டாகுந் தீக்களம் (சுஅச) நகுவான் - சிரித்து. கன்றும் - கோபித்த. (சுஅரு) சுருதிப்பாலன் - மறைச்சிறுவன்.

யாவது முறையா டாதே யெண்ணத்திற் கவலை யோடும்
பூவணை யமளி புக்கான் பொங்கெழிற் றேவி சேர்ந்தாள். (சுஅகூ)

மன்னவ னுரைப்ப தின்றி யிருக்கமா தேவி யார்தாம்
என்னுயிர்க் குயிரா யுள்ள விறைவநீ யுற்ற தென்னோ
முன்னுள மகிழ்ச்சி யின்றி முகம்புலர்ந் திருந்தா யின்று
பன்னிய வுள்ளத் தெய்தும் பருவர லருள்செ யென்றார் (சுகூ0)

தேவியார் தம்மை நோக்கித் தென்னவன் கூறு கின்றான்
காவிநீள் கண்ணி னாய்கேள் காவிரி நாட்டின் மன்னுந்
தாவில்சீர்க் கழும லத்தான் சங்கர னருள்பெற் றிங்கு
மேவினா னடிகண் மாரை வாதினில் வெல்ல வென்று. (சுகூக)

வெண்பொடி பூசுந் தொண்டர் விரவினா ரவரை யெல்லாங்
கண்டுமுட் டடிகண் மார்கள் கேட்டுமுட் டியானுங் காதல்
உண்டுணைத் துறைந்த கோதை மாளிகை யிங்கு வந்த
பண்புமற் றிதுவே யாகும் பரிசுவே றில்லை யென்றான் (சுகூஉ)

மன்னவ னுரைப்பக் கேட்டு மங்கையர்க் கரசி யார்தா
நின்னிலை யிதுவே யாகி னீடிய தெய்வத் தன்மை
அன்னவர் வாது செய்தால் வென்றவர் பக்கஞ் சேர்ந்து
துன்னுவ துறுதி யாருஞ் சுழிவுறேல் மன்ன வென்றார் (சுகூ௩)

சிந்தையிற் களிப்பு மிக்குத் திருக்கழு மலத்தார் வேந்தன்
வந்தவா றெம்மை யாள வென்னவரு மகிழ்ச்சி யோடுங்
கொந்தலர் குழலாள் போதக் குலச்சிறை யாருஞ் செய்த
இந்தநன் மாற்ற மெல்லா மவர்க்குரைத் திருந்த பின்னர் (சுகூச)

கொற்றவ னமைச்ச ருங்கை தலைகுவித் துநின்று
பெற்றனம் பிள்ளை யாரிங் கணைந்திடப் பெரும்பே றென்பார்
இற்றைநா ளீச னன்பர் தம்மைநா மிறைஞ்சப் பெற்றோம்
மற்றினிச் சமணர் செய்யும் வஞ்சனை யறியே மென்றார் (சுகூரு)

மானியார் தாமு மஞ்சி வஞ்சகப் புலையர் தாங்கள்
ஈனமே புரிய வல்லார் செய்வதென் னாமென் றெண்ணி
ஞானசம் பந்தர் தம்பா னன்மையல் லாத செய்ய
ஊனம்வந் தடையில் யாமு முயிர்துறந் தொழிவ தென்றார் (சுகூசு)

இவர்நிலை யிதுவே யாக விலங்குவேற் றென்ன னான
அவனிலை யதுவா மந்நா ளருகர்தந் நிலையா தென்னிற்
றவமறைந் தல்ல செய்வார் தங்கண்மந் திரத்தாற் செந்தீ
சிவநெறி வளர்க்க வந்தார் திருமடஞ் சேரச் செய்தார். (சுகூஎ)

---

(சுகூ0) பருவரல் - துன்பம். (சுகூக) காவி - நீலோற்பலம். (சுகூ௩) சுழிவுறேல் - வருந்தவேண்டாம்.

வேறு.

ஆதி மந்திர மஞ்செழுத் தோதுவார் நோக்கு
மாதி ரத்தினு மற்றைமந் திரவிதி வருமே
பூதி சாதனர் மடத்திற்றாம் புணர்ந்தசார் வினைகள்
சாதி யாவகை கண்டமை குண்டர்க டளர்ந்தார் (௬௯௮)

தளர்ந்து மற்றவர் தாஞ்செய்த தீத்தொழில் சரியக்
கிளர்ந்த வச்சமுன் கெழுமிய கீழ்மையோர் கூடி
விளங்கு நீண்முடி வேந்தனீ தறியினம் மேன்மை
உளங்கொ ளானமர் விருத்தியு மொழிகுமென் றுணர்வார். (௬௯௯)

மந்தி ரச்செயல் வாய்த்தில மற்றினிச் செய்யும்
புந்தி யாவதிங் கிதுவெனப் பொதித்தழல் கொடுபுக்
கந்தண் மாதவர் திருமடப் புறத்தய லிருள்போல்
வந்து தந்தொழில் புரிந்தனர் வஞ்சனை மனத்தோர் (௭௦௦)

திரும டப்புறஞ் சுற்றினிற் றீயபா தகத்தோர்
மருவு வித்தவத் தொழில்வெளிப் படுதலு மறுகிப்
பரிச னத்தவர் பதைப்பொடுஞ் சிதைத்தது நீக்கி
அருக ரித்திறம் புரிந்தமை தெளிந்துசென் றணைவார் (௭௦௧)

கழும லப்பதிக் கவுணியர் கற்பகக் கன்றைத்
தொழுது சீறமண் குண்டர்செய் தீங்கினைச் சொன்ன
பொழுது மாதவர் துயிலுமித் திருமடப் புறம்பு
பழுது செய்யவந் த பாவிக ளெனப்பரிந் தருளி (௭௦௨)

என்பொ ருட்டவர் செய்ததீங் காயினு மிறையோன்
அன்ப ருக்கெய்து மோவென்று பின்னையு மச்சம்
முன்பு றப்பின்பு முனிவுற முத்தமிழ் விரகர்
மன்ப ரக்குமெய் முறைவழு வெனமனங் கொண்டார் (௭௦௩)

வெய்ய தீங்கிது வேந்தன்மேற் றெனும்விதி முறையாற்
செய்ய னேதிரு வாலவா யெனுந்திருப் பதிகஞ்
சைவர் வாழ்மடத் தமணர்க ளிட்டதீத் தழல்போய்ப்
பைய வேசென்று பாண்டியற் காகெனப் பணித்தார் (௭௦௪)

---

திருவாலவாய் - பண் - கௌசிகம்.

திருச்சிற்றம்பலம்.

செய்யனே திருவாலவாய்மேவிய, வையனே யஞ்சலென் றருள்செய்யெனைப்
பொய்யராமமணர்கொளுவுஞ்சுடர், பையவேசென்று பாண்டியற்காகவே

---

(௬௯௮) மாதிரத்தினும் மற்றை மந்திரவிதி வருமே - திக்குகளினும் மற்ற மந்திரங்களின் விதிகள் பலிக்குமோ.

அப்பனாலவாயாதியருளினால், வெப்பந்தென்னவன்மேலுறமேதினிக
கொப்பஞானசம்பந்தனுரைபத்தும், செப்பவல்லவர்தீதிலாச்செல்வரே
திருச்சிற்றம்பலம்.

---

வேறு.

பாண்டிமா தேவியார் தமது பொற்பிற் பயிலுநெடு மங்கலநாண் பாது காத்தும், ஆண்டகையார் குலச்சிறையா ரன்பி னாலு மரசன்பா லபராத முறுத லாலு, மீண்டுசிவ நெறியடையும் விதியி னாலும் வெண்ணீறு வெப்ப கலப் புகலி வேந்தர், தீண்டியிடப் பேறுடைய னாத லாலுந் தீப்பிணியைப் பையவே செல்க வென்றார். (௭0௫)

வேறு.

திருந்தி சைப்பதி கத்தொடை திருவால வாயின்
மருந்தி னைச்சண்பை மன்னவர் புனைந்திட வருளால்
விரிந்த வெந்தழல் வெம்மைபோய்த் தென்னனை மேவிப்
பெருந்த யூற்பொதி வெதுப்பெனப் பெயர்பெற்ற தன்றே (௭0௬)

செய்ய மேனியர் திருமக னுறைதிரு மடத்தில்
வையு முள்ளதத் தாயமண் கையர்தா நணுகிக்
கையி னாலெரி யிடவுடன் படுமெல்லி கரப்ப
வெய்ய வன்குண கடலிடை யெழுந்தனன் மீது (௭0௭)

இரவு பாதகர் செய்ததீங் கிரவிதன் மரபிற்
குரவ வோதியார் குலச்சிறை யாருடன் கேட்டுச்
சிரபு ரப்பிள்ளை யாரையித் தீயவர் நாட்டு
வரவ ழைத்தநா மாய்வதே யெனமன மயங்கி (௭0௮)

பெருகு மச்சமோ டாருயிர் பதைப்பவர் பின்பு
திரும டப்புற மருங்குதீ தின்மையிற் றெளிந்து
கருமு ருட்டமண் கையர்செய் தீங்கிது கடைக்கால
வருவ தெப்படி யாமென மனங்கொளும் பொழுது (௭0௯)

அரச னுக்குவெப் படுத்ததென் றருகுகஞ் சுகிகள்
உரைசெ யப்பதைத் தொருதனித் தேவியார் புகுத
விரையு மச்சமு மேற்கொளக் குலச்சிறை யாரும்
வரைசெய் பொற்புய மன்னவன் மருங்குவந் தணைந்தார். (௭௧0)

(௭0௫) "பையவே" என்னும் அருண்மொழியினுண்மை இத்திருவருட்பாவால் இனிது விளங்குமென்க. (௭0௬) வெதுப்பு - வெம்மைநோய், சுரம். (௭0௭) எல்லி கரப்ப-இரவு ஒழிய. (௭0௮) இரவிதன்மரபில் குரவ ஓதியார் - சூரியவம்சமாகிய சோழ குலத்திற்றோன்றிய குராமலரணிந்த கூந்தலையுடைய மங்கையர்க்கரசியார். (௭௧0) கஞ்சுகிகள் - காவற்காரர்கள்.

வேந்த னுக்குமெய் விதிர்ப்புற வெதுப்புறு வெம்மை
காந்து வெந்தழற் கனமென மெய்யெலாங் கவர்ந்து
போந்து மாளிகைப் புறத்துநின் றோர்களும் புலர்ந்து
தீந்து போம்படி யெழுந்தது விழுந்துடற் றிரங்க. (எகக)

உணர்வு மாவியு மொழிவதற் கொருபுடை யொதுங்க
அணைய லுற்றவ ருருகுதா ரத்திடை யகலப்
புணரி லங்கத லிகைகுருத் தொடுதளிர் புடையே
கொணரி னுஞ்சுருக் கொண்டவை நுண்டுகள் ளாக (எகஉ)

மருத்து நூலவர் தங்கள்பல் கலைகளில் வகுத்த
திருத்த குந்தொழில் யாவையுஞ் செயயவு மேன்மேல்
உருத்தெ ழுந்தவெப் புயிரையு முருக்குவ தாகக்
கருத்தொ ழிந்துரை மறந்தனன் கௌரியர் தலைவன். (எகங)

ஆன வன்பிணி நிகழ்வுழி யமணர்க ளெல்லா
மீன வன்செயல் கேட்டலும் வெய்துயிர்த் தழிந்து
போன கங்குலிற் புகுந்ததின் விளைவுகொ லென்பார்
மான முன்னெறி யாவகை மன்னன்மாட் டணைந்தார் (எகச)

வேறு

மால்பெருக்குஞ் சமண்கையர் மருங்கு சூழ்ந்து வழுதிநிலை கண்ட
ழிந்து வந்த நோயினை, மூலநெறி யறியாதே தங்க டெய்வ மொழிந்தவின் மந்
திரங்கொண்டு முன்னும் பின்னும், பீலிகொடு தைவருதற் கெடுத்த போது
பிடித்தபீ லிகள்பிரம்பி னோடுந் தீந்து, மேலெரியும் பொரிசிதறி வீழக்
கண்டு வெப்பினதி சயநோக்கி வெருவ மிக்கார் (எகரு)

கருகியமா சுடையாக்கைத் தீயோர் தங்கள் கைத்தூங்கு குண்டிகை
நீர் தெளித்துக் காவா, யருகனே யருகனே யென்றென் றோதி யடலவழுதி
மேற்றெளிக்க வந்நீர் பொங்கிப், பெருகுமெரி தழலசொரிந்த நெய்போ
லாகிப் பேர்த்துமொரு தழல்தன்மேற் பெய்தாற் போல, ஒருவருமங் கிரு
மருங்கு மிராது போமென றமணரைப்பார்த் துரைத்தரச னுணர்வு சோர்ந்
தான் (எககூ)

வேறு

பாண்டிமா தேவி யாரும் பயமெய்தி யமைச்சர் பாரம்
பூண்டவர் தம்மை நோக்கிப் புகலியில் வந்து நம்மை
ஆண்டுகொண் டவர்பாற் கங்கு லமணர்தாஞ் செய்த தீங்கு
மூண்டவா றினைய தாகி முடிந்ததோ வென்று கூற. (எகஎ)

---

(எகக) திரங்க - கிலைதளர்ந்து வருந்த. (எகங) கௌரியா - பாண்டியா. (எகச) போனகங்குலில் புகுந்ததின் விளைவுகொல் என்பார் சென்ற இரவு நாமசெய்த தீச் செயலால் விளைந்ததிதுவோ என்று சொல்பவராம்.

கொற்றவ னமைச்ச னாருங் குலச்சிறை யாருந் தாழ்ந்து
மற்றிதன் கொடுமை யிந்த வஞ்சகர் மதில்கண் மூன்றுஞ்
செற்றவ ரன்பர் தம்பாற் செய்ததீங் கரசன் பாங்கு
முற்றிய திவர்க டீர்க்கின் முதிர்வதே யாவ தென்பார். (எகஅ)

இருதிறத் தவரு மன்ன னெதிர்பணிந் திருந்த வெப்பு
வருதிறம் புகலி வந்த வள்ளலார் மதுரை நண்ண
அருகர்கள் செய்த தீய வநுசித மதனால் வந்து
பெருகிய திதற்குத் தீர்வு பிள்ளையா ரருளே யென்று. (எககூ)

காயமு மனமு மாசு கழுவுதல் செய்யார் செய்யு
மாயமு மிந்த நோயை வளர்ப்பதே வளர்வெண் டிங்கண்
மேயவே ணியர்பான் ஞானம் பெற்றவர் விரும்பி நோக்கிற்
றீயவிப் பிணியே யன்றிப் பிறவியுந் தீரு மென்றார். (எஉ௦)

மீனவன் செவியி னூடு மெய்யுணர் வளிப்பார் கூற
ஞானசம் பந்த ரென்னு நாமமந் திரமுஞ் செல்ல
ஆனபோ தயர்வு தன்னை யகன்றிட வமண ராகு
மானமில் லவரைப் பார்த்து மாற்றமொன் றுரைக்க லுற்றான். (எஉக)

மன்னவ னவரை நோக்கி மற்றிவர் செய்கை யெல்லாம்
இன்னவா றெய்து நோய்க்கே யேதுவா யினவென் றெண்ணி
மன்னிய சைவ நீதி மாமறைச் சிறுவர் வந்தால்
அன்னவ ரருளா லிந்நோ யகலுமே லறிவே னென்றான். (எஉஉ)

என்றுமுன் கூறிப் பின்னும் யானுற்ற பிணியைத் தீர்த்து
வென்றவர் பக்கஞ் சேர்வன் விரகுண்டே லழையு மென்ன
அன்றவ ருவகை பொங்கி யார்வத்தா லணையை நூக்கிச்
சென்றநீர் வெள்ளம் போலுங் காதல்வெள் ளத்திற் செல்வார். (எஉங)

பாயுடைப் பாதகத்தோர் திருமடப் பாங்கு செய்த
தீவினைத் தொழிலை நோக்கி யுள்ளழி திருவு ளத்தான்
மேயவத் துயர நீங்க விருப்புறு விரைவி னோடு
நாயகப் பிள்ளை யார்தந் நற்பதம் பணிவா ராகி. (எஉச)

மன்னவ னிடும்பை தீர மற்றவன் பணிமேற் கொண்டே
அன்னமென் னடையி னாரு மணிமணிச் சிவிகை யேறி
மின்னிடை மடவார் சூழ வேற்படை யமைச்ச னாரு
முன்னணைந் தேகச் சைவ முதல்வனார் மடத்தைச் சார்ந்தார். (எஉரு)

திருமடஞ் சாரச் சென்று சேயரிக் கண்ணி னாருன்
வருபரி யிழிந்து நின்ற வமைச்சனார் வந்த பான்மை

---

(எககூ) அநுசிதம் - உசிதமல்லாதது, பொருந்தாச்செயல். (எஉங) விரகு - உபாயம், சாமார்த்தியம். நூக்கி - உடைத்து.

சிரபுரப் பிள்ளை யார்க்கு விண்ணப்பஞ் செய்வீ ரென்னப்
பரிசனத் தவரும் புக்குப் பதமறிந் துணர்த்து நின்றார். (௭௨௬)

பாண்டிமா தேவி யாரும் பரிவுடை யமைச்ச னாரும்
ஈண்டுவந் தணைந்தா ரென்று விண்ணப்பஞ் செய்யச் சண்பை
ஆண்டகை யாரு மீண்ட வழையுமென் றருளிச் செய்ய
மீண்டுபோந் தழைக்கப் புக்கார் விரைவுறு விருப்பின் மிக்கார் (௭௨௭)

வேறு

ஞானத்தின் றிருவுருவை நான்மறையின் றனித்துணையை
வானத்தின் மிசையன்றி மண்ணில்வளர் மதிக்கொழுந்தைத்
தேனக்க மலர்க்கொன்றைச் செஞ்சடையார் சீர்தொடுக்குங்
கானத்தி னெழுபிறப்பைக் கண்களிப்பக் கண்டார்கள் (௭௨௮)

கண்டபொழு தமண்கொடியோர் செய்தகொடுந் தொழினினைந்தே
மண்டியகண் ணருவிநீர் பாயமலர்க் கைகுவித்துப்
புண்டரிகச் சேவடிக்கீழ்ப் பொருந்தநில முறவிழுந்தார்
கொண்டகுறிப் போடுநெடி துயிர்த்தழிந்த கொள்கையராய் (௭௨௯)

உரைகுழறி மெய்ந்நடுங்கி யொன்றுமறிந் திலராகித்
தரையின்மிசைப் புரண்டயர்ந்து சரணகம லம்பற்றிக்
கரையில்கவ லைக்கடற்கோர் கரைபற்றி னார்போன்று
விரைவுறுமெய் யன்பினொடு விடாதொழிவார் தமைக்கண்டு. (௭௩௦)

அருமறைவாழ் பூம்புகலி யண்ணலா ரடிபூண்ட
இருவரையுந் திருக்கையா லெடுத்தருளித் தேற்றிடவுந்
தெருமந்து தெளியாதார் தமைநோக்கிச் சிறப்பருளித்
திருவுடையீ ருங்கள்பாற் றீங்குளதோ வெனவினவ. (௭௩௧)

வெஞ்சமணர் முன்செய்த வஞ்சனைக்கு மிகவழிந்தே
அஞ்சினோந் திருமேனிக் கடாதென்றே யதுதீர்ந்தோம்
வஞ்சகர்மற் றவர்செய்த தீத்தொழில்போய் மன்னவன்பால்
எஞ்சலிலாக் கொடுவெதுப்பா யெழாநின்ற தெனத்தொழுது (௭௩௨)

வெய்யதொழி லமண்குண்டர் விளைக்கவரும் வெதுப்பவர்தாஞ்
செய்யுமதி யாண்மைகளாற் றீராமைத் தீப்பிணியான்
மையலுறு மன்னவன்முன் மற்றவரை வென்றருளில்
உய்யுமெம துயிருமவ னுயிருமென வுரைத்தார்கள். (௭௩௩)

வேறு

என்றவ ருரைத்த போதி லெழில்கொள்பூம் புகலி வேந்தர்
ஒன்றுநீ ரஞ்ச வேண்டா வுணர்விலா வமணர் தம்மை

(௭௨௬) பதம் - சமயம். (௭௩௧) தெருமந்து - மயங்கி.

இன்றுநீ ருவகை யெய்த யாவருங் காண வாதில்
வென்றமீ னவனை வெண்ணீ றணிவிப்பன் விதியா லென்றார் (௭௰௪)

வேறு.

மொழிந்தருள வதுகேட்டு முன்னிறைஞ்சி முகமலர்வார்
அழுந்துமிடர்க் கடலிடைநின் றடியோமை யெடுத்தருளச்
செழுந்தாளச் சிவிகையின்மேற் றென்னாடு செய்தவத்தால்
எழுந்தருளப் பேறுடையோ மெனப்பெற்றோ மெனத்தொழுதும் (௭௰௫)

வேறு.

ஆவது மழிவ தெல்லா மவர்செய லமண ராகும்
பாவகா ரிகளை நோக்கும் பழுதுட னீங்க வெல்லச்
சேவுயர் கொடியி னார்தந் திருவுள்ள மறிவே னென்று
பூவலர் பொழில்சூழ் சண்பைப் புரவலர் போது கின்றார் (௭௰௬)

வையக முய்ய வந்த வள்ளலார் மடத்தி னின்று
மெய்யணி நீற்று தொண்டர் வெள்ளமுந் தாமும் போந்து
கையிணை தலையின் மீது குவியக்கண் மலர்ச்சி காட்டச்
செய்யவார் சடையார் மன்னுந் திருவால வாயுட் புக்கார் (௭௰௭)

நோக்கிட விதியி லாரை நோக்கியான் வாது செய்யத்
தீக்கணன் மேனி யானே திருவுள மேயென் றெண்ணில்
பாக்கியப் பயனா யுள்ள பாலறா வாயர் மெய்ம்மை
நோக்கிவண் டமிழ்செய் மாலைப் பதிகந்தா னுவல லுற்றார் (௭௰௮)

கானிடை யாடு வாரைக் காட்டுமா வுரிமுன் பாடித்
தேனலர் கொன்றை யார்தந் திருவுள நோக்கிப் பின்னும்
ஊனமில் வேத வேள்வி யென்றெடுத் துரையின் மாலை
மானமி லமணர் தம்மை வாதில்வென் றிறக்கப் பாடி (௭௰௯)

---

திருவாலவாய் - பண் - கௌசிகம்.

திருச்சிற்றம்பலம்

காட்டுமாவ துரித்துரிபோர்த்துடல், நாட்டமூன் றுடையாயுரைசெய்வனான்
வேட்டுவேள்விசெய்யாவமண்கையரை, யோட்டிவாதுசெய்யத்திருவுளமே

செந்தெனமுரலுந்திருவாலவாய், மைந்தனேயென்று வல்லமணாசறச்
சந்தமார்தமிழ்கேட்டமெய்ஞ்ஞானசம், பந்தன்சொற்பகருமபழிநீங்கவே.

திருச்சிற்றம்பலம்

---

ஆலமே யமுத மாக வுண்டவா னவர்க்க ளித்துக்
காலனை மார்க்கண் டர்க்காக் காய்ந்தனை யடியேற் கின்று

---

(௭௰௯) கானிடை - சுடுகாட்டிலே (அதுவே கோயில.)

ஞாலநின் புகழே யாக வேண்டுநான் மறைக ளேத்துஞ்
சீலமே யால வாயிற் சிவபெரு மானே யென்றார். (௭௪௦)

---

திருவாலவாய் - மேலடிமேல்வைப்பு - பண் - பழம்பஞ்சுரம்.

திருச்சிற்றம்பலம்

வேதவேள்வியைநிந்தனைசெய்துழல், ஆதமில்லியமணொடுதேரரை
வாதில்வென்றழிக்கத்திருவுள்ளமே, பாதிமாதுடனாயபரமனே
ஞாலநின்புகழேமிகவேண்டுந்தென், னாலவாயிலுறையுமெம்மாதியே.
கூடலாலவாய்க்கோனைவிடைகொண்டு, வாடன்மேனியமணரைவாட்டிட
மாடக்காழிசசம்பந்தன்மதித்தவிப், பாடல்வல்லவர்பாக்கியவாளரே

திருச்சிற்றம்பலம்.

---

நாதர்தம் மருண்முன் பெற்று நாடிய மகிழ்ச்சி பொங்கப்
போதுவார் பணிந்து போற்றி விடைகொண்டு புனித நீற்று
மேதகு கோலத் தோடும் விருப்புறு தொண்டர் சூழ
மூதெயிற் கபாட நீடு முதற்றிரு வாயில் சார்ந்தார் (௭௪௧)

அம்மலர்க் குழலி னார்க்கு மமைச்சர்க்கு மருள வேண்டிச்
செம்மணிப் பலகை முத்தின் சிவிகைமேற் கொண்ட போதில்
எம்மருங் கினிலுந் தொண்ட ரெடுத்தவார்ப் பெல்லை யின்றி
மும்மைநீ டுலக மெல்லா முழுதுட னிறைந்த தன்றே. (௭௪௨)

பல்லிய நாதம் பொங்கப் படாதிரு நீற்றின் சோதி
நல்லொளி வட்ட மாகி நண்ணிமேல் வருவ தென்ன
வில்வளர் தரளக் கோவை வெண்குடை நிழற்ற வெவ்வே
றெல்லையின் முத்தின் காளந் தாரைசங் கெங்கு மோத (௭௪௩)

கண்ணினுக் கணியா யுள்ளா ரெழுச்சியிற் காட்சி பெற்றார்
நண்ணிய சமயம் வேறு நம்பின ரெனினு முன்பு
பண்ணிய தவங்க ளென்கொல் பஞ்சவன் றஞ்ச மேவிப்
புண்ணிய மூர்த்தி வந்து மதுரையிற் புகுத வென்றார். (௭௪௪)

தென்னவன் றேவி யாருந் திருமணிச் சிவிகை மீது
பின்வர வமைச்சர் முன்பு பெருந்தொண்டர் குழாத்துச் செல்லப்
பொன்னணி மாட வீதி யூடெழுந் தருளிப் புக்கார்
கன்னிநா டுடையான் கோயில் காழிநா டுடைய பிள்ளை. (௭௪௫)

கொற்றவன் றன்பான் முன்பு குலச்சிறை யார்வந் தெய்திப்
பொற்றட மதில்சூழ் சணபைப் புரவலர் வரவு கூற
முற்றுயர் சிறிது நீங்கி முழுமணி யணிப்பொற் பீட
மற்றவன் முடியின் பக்கத் திடுகென வல்ல ஞான்ன். (௭௪௬)

(௭௪௩) வில - ஒளி.

மந்திரி யாரைப் பின்னு மெதிர்செல மன்ன னேவச்
சிந்தையுண் மகிழ்ந்து போந்தார் செயலையான் சமயத் துள்ளோர்
பைந்துண ரலங்கன் மன்னன் பரிசுகண் டிதுவோ பண்பால்
நந்தனிச் சமயந் தன்னை நாட்டுமா றென்று பின்னும் (எசஎ)

நின்னற நெறியை நீயே காத்தருள் செய்தி யாகில்
அன்னவர் தம்மை யிங்கே யழைத்தனை யவரும் யாமு
முன்னுற வொக்கத் தீர்க்க மொழிந்துமற் றவராற் றீர்ந்த
தென்னினு மியாமுந் தீர்த்தோ மாகவு மிசைவா யென்றார் (எசஅ)

பொய்தவ மாகக் கொண்ட புன்றலைச் சமணர் கூறச்
செய்தவப் பயன்வந் தெய்துஞ் செவ்விமுன் னுறுத லாலே
எய்திய தெய்வச் சார்வா லிருதிறத் தீருந் தீருங்
கைதவம் பேச மாட்டே னென்றுகை தவனுஞ் சொன்னான் (எசகூ)

என்றவ னுரைப்பக் குண்ட ரெண்ணங்கெட் டிருந்த வெல்லைத்
தென்றமிழ் நாடு செய்த செய்தவக் கொழுந்து போல்வார்
வன்றனிப் பவன முன்னர் வாயிலு ளணைந்து மாடு
பொன்றிகழ் தாளப் பத்திச் சிவிகைநின் றிழிந்து புக்கார் (எருo)

குலச்சிறை யார்முன் பெய்தக் கொற்றவன் றேவி யாருந்
தலத்திடை யிழிந்து சென்றார் தண்டமிழ் நாட்டு மன்னன்
நிலத்திடை வானி னின்று நீளிரு ணீங்க வந்த
கலைச்செழுந் திங்கள் போலுங் கவுணியர் தம்மைக் கண்டான் (எருக)

கண்டவப் பொழுதே வேந்தன் கையெடுத் தெய்த நோக்கித்
தண்டுணர் முடியின் பாங்கர்த் தமனியப் பீடங் காட்ட
வண்டமிழ் விரகர் மேவி யதன்மிசை யிருந்தார் மாயை
கொண்டவல் லமண ரெல்லாங் குறிப்பினு ளச்சங் கொண்டார் (எருஉ)

செழியனும் பிள்ளை யார்தந் திருமேனி காணப் பெற்று
விழியுற நோக்க லாலே வெம்மைநோய் சிறிது நீங்கி
அழிவுறு மனத்தோர் நிற்க வந்தணர் வாழ்வை நோக்கிக்
கெழுவுறு பதியா தென்று விருப்புடன் கேட்ட போது (எருந)

வேறு

பொன்னிவளந் தருநாட்டுப் புனற்பழனப் புறம்பணைசூழ்
கன்னிமதிற் கழுமலநாங் கருதுமூ ரெனச்சிறந்த
பன்னிரண்டு பெயர்பெற்றும் பரவியசொற் றிருப்பதிகந்
தென்னவன்முன் பருள்செய்தார் திருஞான சம்பந்தர். (எருச)

---

(எசகூ) கைதவம் - வஞ்சனை. (எருo) பவனம் - கோயில், அரமனை. (எருஉ) தமனியம் - பொன்.

**திருப்பிரமபுரம் - திருச்சக்கரமாற்று - ௧௧-ம் - காந்தாரம்.**

திருச்சிற்றம்பலம்

பிரமனூர்வேணுபுரம்புகலிவெங்குருப்பெருநீர்த்தோணி
புரமனூந்தராயபொன்னஞ்சிரபுரம்புறவம்வண்சண்பை
யரனமனூதண்காழிகொச்சைவயமுளவிட்டங்காதியாய
பரமனூர்பன்னிரண்டாய்நின்றதிருக்கழுமலநாமப்பரவுமின்

காவிமலர்புரையுங்கண்ணார்கழுமலத்தின்பெயரைநாளும்
பாவியசீர்ப்பன்னிரண்டுநன்னூலாப்பத்திமையாற்பனுவன்மாலை
நாவினலம்புகழ்சீர்ஞானமறையான்ஞானசம்பந்தன்சொன்ன
மேவியிசைமொழிவார்விண்ணவரின்மேனனுதலைவிருப்புளாரே

திருச்சிற்றம்பலம்.

---

பிள்ளையார் செம்பொன்மணிப் பீடத்தி லிருந்தபொழு
துள்ளநிறை பொறாமையினா லுழையிருந்த காரமணர்
கொள்ளுமனத் திடையச்ச மறைத்துமுகங் கோபத்தீத்
துள்ளியெழு மெனக்கண்கள் சிவந்துபல சொல்லுவார் (௭௫௫)

காலையெழுங் கதிரவனைப் புடைசூழுங் கருமுகில்போற்
பீலிசேர் சமணகையர் பிள்ளையார் தமைச்சூழ்வார்
ஏலவே வாதினால் வெல்லவதனுக் கெண்ணித்தாங்
கோலுநூ லெடுத்தோதித் தலைதிமிர்ப்பக் குரைத்தார்கள் (௭௫௬)

பிள்ளையா ரதுகேளாப் பேசுகநும் பொருளெல்லா
முள்ளவா றெனவருள வூத்தைவாயப் பறிதலையர்
துள்ளியெழுந் தனேகராய்ச் சூழ்ந்துபதற் றிகத்தற
வொள்ளிழையா ரதுகண்டு பொறாராகி யுண்ணடுங்கி (௭௫௭)

வேறு.

தென்னவன் றன்னை நோக்கித் திருமேனி யெளியர் போலும்
இன்னருட் பிள்ளை யாமற் றிவருவ ரெண்ணி லார்கண்
மன்னநின் மயக்க மெங்கள் வள்ளலார் தீர நல்கும்
பின்னையிவ் வமணர் மூள்வார் வல்லரேற் பேச வென்றார் (௭௫௮)

மாறனு மவரை நோக்கி வருந்தனீ யென்று மற்று
வேறுவா தென்கொ லென்மேல் வெப்பொழித் தருகா நீரும்
ஆறணி சடையி னாருக் கன்பரா மிவரு நீங்கள்
தேறிய தெய்வத் தன்மை யென்னிடைத் தெரிப்பீ ரென்றான் (௭௫௯)

ஞானவா ரமுத முண்டார் நற்றவத் திருவை நோக்கி
மானினேர் விழியி னாய்கேண் மற்றெனைப் பால னென்று

(௭௫௫) உழை-அருகே. (௭௫௬) திமிர்ப்ப - சொல்லோசைதத்தால நடுக்குறுமாறு வருத்த. குரைத்தார்கள் என்றதனால் அமணர்கள் சொலவிழிவு தோன்றுகிறது. (௭௫௭) ஒள் இழையார் - மங்கையர்க்கரசியார். (௭௫௮) உவர் - அமணர்கள்.

நீநனி யஞ்ச வேண்டா நிலையிலா வமணர்க் கென்றும்
யானெளி யேனை லேனென் றெழுந்திருப் பதிகம பாடி. (எ௬௦)

---

திருவாலவாய் - பண் - கொல்லி.

திருச்சிற்றம்பலம்

மானினேர்விழிமாதராய்வழுதிக்குமாபெருந்தேவிகேள்
பானல்வாயொருபாலனீங்கிவ னென்றுநீபரிவெய்திடேல
ஆனைமாமலையாதியாயவிடங்களிற்பலவல்லல்சோ
ஈனர்கட்கெளியேனலேன் றிருவாலவாயரனிற்கவே

எக்காமமண்கையருக்கெளியேனலேன் றிருவாலவாய்ச
சொக்கனென்னுளிருக்கவேதுளங்கும்முடிதமென்னன்முன் னிவை
தக்கசீர்ப்புகலிக்குமன் றமிழ்நாதன்ஞானசம்பந்தன்வாய்
ஒக்கவேயுரைசெய்தபதது முரைப்பவர்ககிடரில்லையே

திருச்சிற்றம்பலம்.

---

பெற்றியா லருளிச் செய்த பிள்ளையார் தமக்கு முன்னஞ்
சுற்றுநின் றழைத்த லோவா வருகாகரு தென்னா கோமான்
இற்றைநா ளென்னை யுற்ற பிணியைநீ ரிகலிந தீருந
தெற்றெனத் தீர்த்தார் வாதில் வென்றவ ரென்று செப்ப (எ௬௧)

மன்னவன் மாற்றங் கேட்டு வடிவுபோன் மனத்து மாசு
துன்னிய வமணர் தென்னா தோன்றலை நோக்கி நாங்கள்
உன்னுடம் பதனில் வெப்பை யொருபுடை வாம பாக
முன்னமந் திரித்துத் தெய்வ முயற்சியாற் றீர்த்து மென்றார் (எ௬௨)

யாதுமொன் றறிவி லாதா ரிருளென வணையச் சென்று
வாதினின் மன்ன வன்றன் வாமபா கததைத தீர்ப்பாா
மீதுதம் பீலி கொண்டு தடவிட மேன்மேல் வெப்புத
தீதுறப் பொறாது தென்னன் சிரபுரத் தவரைப் பார்த்தான் (எ௬௩)

தென்னவ னோக்கங் கண்டு திருக்கழு மலததார் செல்வர்
அன்னவன் வலப்பால் வெப்பை யாலவா யண்ண னீறே
மன்னுமந் திரமு மாகி மருந்துமாய்த் தீர்ப்ப தென்று
பன்னிய மறைக ளேத்திப் பகாதிருப் பதிகம் பாடி (எ௬௪)

---

திருவாலவாய் - திருநீற்றுப்பதிகம் - பண் - காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்

மந்திரமாவதுநீறு வானவர்மேலதுநீறு
சுந்தரமாவதுநீறு துதிக்கப்படுவதுநீறு
தந்திரமாவதுநீறுசமயத்திலுள்ளதுநீறு
செந்துவர்வாயுமைபங்கன் றிருவாலவாயான்றிருநீறே

---

(எ௬௧) ஓவா - நீங்கா. இகலி - வேறுபட்டு.

ஆற்றலடல்விடையேறுமாலவாயான்றிருநீற்றைப்
போற்றிப்புகலிநிலாவும்பூசுரன்ஞானசம்பந்தன்
றேற்றித்தென்னனுடலுற்றதீப்பிணியாயினதீரச்
சாற்றியபாடல்கள்பத்தும்வல்லவர்நல்லவர்தாமே
திருச்சிற்றம்பலம்

---

திருவளர் நீறு கொண்டு திருக்கையாற் றடவத் தென்னன்
பொருவரு வெப்பு நீங்கிப் பொய்கையிற் குளிர்ந்த தப்பால்
மருவிய இடப்பால் மிக்க வழலெழ மண்டித் தீப்போல்
இருபுடை வெப்புங் கூடி யிடங்கொளா தென்னப் பொங்க (எசுரு)

உறியுடைக் கையர் பாயி னுடுக்கையர் நடுக்க மெய்திச்
செறிமயிற் பீலி தீயத் தென்னன்வெப் புறுதீத் தம்மை
எறியுமா சுடலுங் கன்றி யிருக்கவிட் டேற நிற்பார்
அறிவுடை யாரை யொத்தா ரறிவிலா நெறியி னின்றார் (எசுசு)

பலர்தொழும் புகலி மன்ன ரொருபுடை வெப்பைப் பாற்ற
மலர்தலை யுலகின் மிக்கார் வந்ததி சயித்துச் சூழ
இலகுவேற் றென்னன் மேனி வலமிட மெய்தி நீடும்
உலகினிற் றண்மை வெம்மை யொதுங்கினொத் ததன்றே (எசுஎ)

மன்னவன் மொழிவா னென்னே மதித்தவிக் கால மொன்றில்
வெந்நர கொருபா லாகும் வீட்டின்ப மொருபா லாகும்
துன்னுநஞ் சொருபா லாகுஞ் சுவையமு தொருபா லாகும்
என்னவு மொன்றி லுற்றே னிருதிறத் தியல்பு மென்பான் (எசுஅ)

வெந்தொழி லருகர் தோற்றீ ரென்னைவிட் டகல நீங்கும்
வந்தெனை யுய்யக் கொண்ட மறைக்குல வள்ள லார்பால்
இந்தவெப் படைய நீங்க வெனக்கருள் புரிவீ ரென்று
சிந்தையாற் றொழுது சொன்னான் செல்கதிக் கணிய னானான் (எசுகூ)

திருமுகக் கருணை காட்டித் திருக்கையா னீறு காட்டிப்
பெருமறைத் துதிக்கு மாற்றாற் பிள்ளையார் போற்றிப் பின்னும்
ஒருமுறை தடவ வங்க ணொழிந்துவெப் பகன்று பாகம்
மருவுதீப் பிணியு நீங்கி வழுதியு முழுது முய்ந்தான் (எஎ0)

கொற்றவன் றேவி யாருங் குலச்சிறை யாரு நீங்கு
செற்றவர் செய்ய பாதத் தாமரை சென்னி சேர்த்துப்
பெற்றனம் பெருமை யின்று பிறந்தனம் பிறவா மேன்மை
உற்றனன் மன்ன னென்றே யுளங்களித் துவகை மிக்கார். (எஎக)

மீனவன் றனமே லுள்ள வெப்பெலா முடனே மாற
ஆனபே ரின்ப மெய்தி யுச்சிமே லங்கை கூப்பி

மற்றவர் சொன்ன வார்த்தை கேட்டலு மலய மன்னன்
செற்றத்தா லுரைத்தி ருங்கள் செய்கையு மறந்தீ ரென்று
பற்றிய பொருளி னோடு படர்புனல் வைகை யாற்றிற்
பொற்புற விடுவ தற்குப் போதுவ தென்று கூற (௭௯௯)

பிள்ளையார் முன்னம் பைம்பொற் பீடத்தி னிழிந்து போந்து
தெள்ளுநீர்த் தரளப் பத்திச் சிவிகைமே லேறிச் சென்றார்
வள்ளலார் தம்பின் பு மன்னனுமா வேறிச் சென்றான்
உள்ளவா றறிகி லாதா ருணர்வுமா லேறிச் சென்றார் (௮௦௦)

தென்னவன் வெப்புத் தீர்த்த செழுமணிக் கோயி னீங்கிப்
பின்னுற வணைந்த போது பிள்ளையார் பெருகு செல்வ
மன்னிய மதுரை மூதூர் மறுகிலவ் வருளக் கண்டு
துன்னிய மாதர் மைந்தர் தொழுதுவே றிவைய சொன்னார் (௮௦௧)

மீனவன் கொண்ட வெப்பை நீக்கிநம் விழுமந் தீர்த்த
ஞானசம் பந்த ரிந்த நாயனார் காணு மென்பார்
பானறுங் குதலைச் செய்ய பவளவாய்ப் பிள்ளை யார்தாம்
மானசீர்த் தென்ன னாடு வாழவந் தணைந்தா ரென்பார் (௮௦௨)

எரியிடை வாதிற் றோற்ற திவர்க்குநம் மருக ரென்பார்
புரிசடை யண்ண லீறே பொருளெனக் கண்டோ மென்பார்
பெருகொளி முத்தின் பைம்பொற் சிவிகைமேற் பிள்ளை யார்தாம்
வருமழ கென்னே யென்பார் வாழ்ந்தனங் கண்க ளென்பார் (௮௦௩)

ஏதமே விளைந்த திந்த வடிகண்மா ரியல்பா லென்பார்
நாதனு மால வாயி னம்பனே காணு மென்பார்
போதமா வதுவு முக்கட் புராணனை யறிவ தென்பார்
வேதமு நீறு மாகி விரவிடு மெங்கு மென்பார் (௮௦௪)

அடிகண்மார் முகங்க ளெல்லா மழிந்தன பாரீ ரென்பார்
கொடியவஞ் சனைக ளெல்லாங் குலைந்தன போலு மென்பார்
வடிகொளம்வன மாறன காதன மாறின வண்ண மென்பார்
விடிவதாய் முடிந்த திந்த வெஞ்சம ணிருளு மென்பார் (௮௦௫)

நெருப்பினிற் றோற்றார் தாங்க ணீரில்வெல் வாரோ வென்பார்
இருப்புநெஞ் சுடைய ரேனும் பிள்ளையார்க் கெதிரோ வென்பார்
பருப்பொரு ளுணர்ந்தார் தாங்கள் படுவன பாரீ ரென்பார்
மருப்புடைக் கழுக்கோல் செய்தார் மந்திரி யார்தா மென்பார் (௮௦௬)

யடிகள் வைகை தன்னி லிடுவதற் கணைந்தா ரென்பார்
ஓடுநீ ருடன்செ லாது நிற்குமோ வோலை யென்பார்

(௮௦௦) மாவேறி - குதிரையேறி. மாலேறி - மயக்கமேறி. (௮௦௨) விழுமம்-துன்பம்

நீடிய ஞானம் பெற்றார் நிறுத்தவும் வல்ல ரென்பார்
நாடெலாங் காண விங்கு நண்ணுமா காணீ ரென்பார். (அ0எ)

தோற்றவர் கழுவி லேறத் துணிவதே யருக ரென்பார்
ஆற்றிய வருளின் மேன்மைப் பிள்ளையார்க் கழகி தென்பார்
நீற்றினாற் றென்னன் றீங்கு நீங்கிய வண்ணங் கண்டார்
போற்றுவா ரெல்லாஞ் சைவ நெறியினைப் போற்று மென்பார் (அ0அ)

இன்னன விரண்டு பாலு மீண்டின ரெடுத்துச் சொல்ல
மின்னொளி மணிப்பொற் காம்பின் வெண்குடை மீது போதப்
பன்மணிச் சிவிகை தன்மேற் பஞ்சவ னாட்டு ளோர்க்கு
நன்னெறி காட்ட வந்தார் நான்மறை வாழ வந்தார் (அ0கூ)

தென்றமிழ் விளங்க வந்த திருக்கழு மலத்தான் வந்தான்
மன்றுளா ரளித்த ஞான வட்டிலவண் கையன் வந்தான்
வென்றுல குய்ய மீள வைகையில் வெல்வான் வந்தான்
என்றுபன் மணிச்சின் னங்க ளெண்டிசை நெருங்கி யேங்க (அக0)

பன்மணி முரசஞ் சூழ்ந்த பல்லிய மியம்பப் பின்னே
தென்னனுந் தேவி யாரு முடன்செலத் திரண்டு செல்லும்
பன்னெறி யமணர் வேறோர் புடைவரப் புகலி வேந்தர்
மன்னிய வைகை யாற்றின் கரைமிசை மருவ வந்தார் (அகக)

கார்கெழு பருவம் வாய்ப்பக் காமுறு மகளி ருள்ளஞ்
சீர்கெழு கணவன் றன்பால் விரைவுறச் செல்லு மாபோல்
நீர்கெழு பௌவ நோக்கி நிறைந்திரை யிரைத்துச் செல்லும்
பார்கெழு புகழின் மிக்க பண்புடை வைகை யாறு (அகஉ)

ஆற்றினீர் கடுக வோடு மருங்குற வாச நோக்கி
நீற்றணி திகழ்ந்த மேனி நிறைமதிப் பிள்ளை யாரும்
வேற்றுரு வருகர் நீரும் விதித்தவே டிடுக வென்றார்
தோற்றவர் தோலா ரென்று முன்னுறத் துணிந்திட் டார்கள் (அகங)

படும்பொரு ளின்றி நெல்லிற் பதடிபோ லுள்ளி லாமெய்
அடும்பவர் பொருளை யத்தி நாத்தியென் றெழுதி யாற்றிற்
கடுகிய புனலைக் கண்டு மவர்விஞற கையி லேடு
விடுதலும் விரைந்து கொண்டு வேலைமேற் படர்ந்த தன்றே (அகச)

ஆறுகொண் டோடு மேட்டைத் தொடர்ந்தெதி ரணைப்பார் போலத்
தேறுமெய் யுணர்வி லார்தாங் கரைமிசை யோடிச் சென்றார்
பாறுமப் பொருண்மேற் கொண்ட பட்டிகை யெட்டா தங்கு
நூறுவிற் கிடைக்கு முன்னே போனது நோக்கிக் காணார் (அகரு)

---

(அகரு) பாறும் - நிலைபெறாதழியும், ஓடும். பட்டி - ஏடு.

காணவு மெய்தா வண்ணங் கடலின்மேற் செல்லு மேடு
நாணிலா வமணர் தம்மை நட்டாற்றில் விட்டுப் போக்கச்
சேணிடைச் சென்று நின்றார் சிதறினார் திகைத்தார் மன்னன்
ஆணையில் வழுவ மாட்டார் தஞ்சுவா ரணைய மீண்டார் (௮௧௬)

வேறொரு செயலி லாதார் வெருவுற்று நடுங்கித் தம்பால்
ஈறுவார் தெய்திற் றென்றே மன்னவ னெதிராய்ந் தெய்தி
யாறுடை நெஞ்சி லச்சம் வெளிப்பட வொளிப்பார் போன்று
மாறுகொண் டெரு மிட்டால் வந்தது காண்டு மென்றார் (௮௧௭)

மாசுசே ரமண ரெல்லா மதியினின் மயங்கிக் கூற
ஆசிலா நெறியிற் சேர்ந்த வரசனு மவரை விட்டுத்
தேசுடைப் பிள்ளை யார்தந் திருக்குறிப் பதனை நோக்கப்
பாசுரம் பாட லுற்றார் பரசம யங்கள் பாற (௮௧௮)

தென்னவன் மாறன் றானுஞ் சிரபுரத் தலைவர் தீண்டிப்
பொன்னவில் கொன்றை யார்தந் திருநீறு பூசப் பெற்று
முன்னைவல் வினையு நீங்கி முதல்வனை யறிந்த தன்மை
துன்னினன் வினைக ளொத்துத் துலையென நிற்ற லாலே (௮௧௯)

வேறு

உலகியல் வேதநூ லொழுக்க மென்பது
நிலவுமெய்ந் நெறிசிவ நெறிய தென்பதுங்
கலதிவா யமணர்கா ணிலாக ளாயினும்
பலர்புகழ் தென்னவ னறியும் பான்மையால் (௮௨௰)

அந்தணர் தேவர்ஆ னினங்கள் வாழ்கவென்
றிந்தமெய் மொழிப்பய னுலக மின்புறச்
சந்தவேள் விகணப்பூதல் சங்க ராகத்முன்
வந்தவாச் சனைவழி பாடு மன்னவாய (௮௨௧)

வேறு

வேள்வி நற்பயன் வீழ்புன லாவது
நாளு மர்ச்சனை நல்லுறுப் பாதலால்
ஆளு மன்னனை வாழ்த்திய தர்ச்சனை
மூளு மற்றிவை காக்கு முறைமையால் (௮௨௨)

ஆழ்க தீயதென் றோதிற் றயனெறி
வீழ்க வென்றுவே றல்லா மரன்பெயர்
சூழ்க வென்றது தொல்லுயி ராவையும்
வாழி யஞ்செழுத் தோதி வளர்கவே (௮௨௩)

(௮௨௰) உலகியல் - அறம், பொருள் இன்பம் [illegible] (௮௨௧)
ஆனினங்கள் - பசுக்கூட்டங்கள், (௮௨௨) வீழ்புனல் - மழை.

சொன்ன வையக முந்துயர் தீர்கவே
என்னு நீர்மை யிகபரத் திற்றுயர்
மன்னி வாழுல கத்தவர் மாற்றிட
முன்னர் ஞானசம் பந்தர் மொழிந்தனர் (அ௨௪)

அரிய காட்சிய ரென்பதவ் வாதியைத்
தெரிய லாகிலை யாற்றெரி யாரென
உரிய வன்பினிற் காணபவர்க் குண்மை யாம்
பெரிய நல்லடை யாளங்கள் பேசினார். (அ௨௫)

ஆயி னும்பெரி யாரவ ரென்பது
மேய விவ்வியல் பேயன்றி விண்முதற்
பாய பூதங்கள் பல்லுயி ரண்டங்கள்
ஏயும் யாவு மிவர்வடி வென்றதாம் (அ௨௬)

பின்பு மாரறி வாரவர் பெற்றியை
என்பு நீயா ருணர்வா னுஞ்சென் றெட்டோரும்
மன்பெ ருந்தன்மை யாரென வாழ்த்தினார்
அன்பு சூழ்சண்பை யாண்டகை யாரவர் (அ௨௭)

வெந்த சாம்பல் விரையெனப் பூத்தம்
தந்த மில்லொளி யல்லா வொளியெலாம்
வந்து வெந்தற மற்றப் பொடியணி
சந்த மாகக்கொண் டண்ணமுஞ் சாற்றினார் (அ௨அ)

தம்கருத் தகைமையா தாயில ரென்பதும்
அமைத்தங் கியானையு மாங்கவை யீந்தபோ
திமைத்த சோதி யடக்கிப்பின் னீதலால்
எமக்கு நாதர் பிறப்பில ரென்றதாம் (அ௨௯)

தம்மை மேய சிந்தி யாவெனுந் தன்மைதான்
மெய்ம்மை யாகி விளங்கொளி சாமென
இம்மை யேயிந்த வாதம யிருவினைப்
பொய்ம்மை யல்லிருள் போக்குவ ரென்றதாம் (அ௩௰)

எந்தை யாரவ ரெவ்வகை யாரகொலென்
றிந்த வாய்மைமற் றெப்பொருட் கூற்றினும்
முந்தை யோரையெக் கூற்றின மொழிவசென்
றந்தண் பூந்தராய் வேந்த ரருளினார் (அ௩க)

ஆகி யாட்பா லவர்க்கரு ளுந்திற
நாதன் மாட்சிமை கேட்க நவிலுங்கால்

(அ௩௨) ஆதி - சிவபெருமான். ஆட்ப [illegible] திருத்தொண்டர்களுக்கு.

ஓது மெல்லை யுலப்பில வாதலின்
யாது மாராய்ச்சி யில்லையா மென்றதாம் (௮௩௨)

அன்ன வாதலி லாதியார் தாளடைந்
தின்ன கேட்கவே யேற்றகோட் பாலவு
முன்னை வல்வினை யும்முடி வெய்துமத
தன்மை யாக்கென் றனாசண்டை காவலா (௮௩௩)

முன்னு மேதுக்க ளாலெனும வாய்மைதான்
தன்ன தொப்புவே றின்மையிற சங்கரன
இன்ன தன்மையை யேது வெடுததுக்காட
டன்ன வற்று ளபபில னென்றதாம். (௮௩௪)

தோன்று காட்சி சுடர்விட் டுளனென்ப
தான்ற வங்கிப் புறத்தொளி யாயனபில்
ஊன்ற வுள்ளெழுஞ் சோதியாய் நின்றனன
என்று காண்பாரக் கிதுபொரு ளென்றதாம (௮௩௫)

வேறு

மாதுக்க நீங்க லுறுவீர் மனமபற்று மெனப
தாதிச சுடாசசோ, தியையனபி னசததுள [illegible] சகிப
போதிதத நோக்குற வெழியாமற பொருநதி வாழ்ந்து
பேதிதத பந்தப பிறப்பினையெனறி போம் மென்ற (௮௩௬)

வேறு

ஈண்டு சாதுக்க ளனைறேடுர தோதிற்று
வேண்டும வேட்கைய வெல்லாம் விமலாதாள
பூணட வன்பினிற் போற்றுவீா சாரமெனன
றூணட சணடைப யரச ரருளினா (௮௩௭)

வேறு

ஆடும் மெனவாங் திருப்பாட்டி னமைதத மூன்று
நீடும் புகழோ பிறாதுன்ப நீததற்கோ வென்று
தேடு முணாவீ ருலகுக்கிவை செய்த தீசா
கூடுங் கருணைத திறமெனறனா கொள்கை மேலோர் (௮௩௮)

கருதுங் கடிசேர்நத வெனுந்திருப் பாட்டி லீசா
மருவும் பெருமபூசை மறுத்தவாக் கோறனை முததி
தருதன் மையதாதல சணடீசர் தஞ்செயகை தககோா
பெரிதுஞ் சொலக்கேட் டனமென்றனர் பிள்ளை யார்தாம் (௮௩௯)

---

(௮௩௨) ஓதும எல்லை உலபபில - யாம கூறுஞ சொலலளவில அடஙகா. (௮௩௮) அமைதத மூனறு - ஆடல, கூறறுதைததல, வேதம பாடல. (௮௩௯) ஈசா மறுததவா - எசசதததனை கோறல - கொலலை.

வேத முதல்வ னென்னும்மெய்த் திருப்பாட் டினினேர்
ஆதி யுலகோ ரிடர்நீங்கிட வேத்த வாயும்
பாத முதலாம் பதினெண் புராணங்க ளென்றே
ஓதின னுரைசெய் தனர்யாவு மோதா துணர்ந்தார் (௮௪௰)

பாவுற்ற பாராழி வட்டத் திருப்பாட்டி னுண்மை
காவற் றொழிலா னென்னுங்கண்ணனுங் காவல் பெற்ற
தியாவர்க்கு மேலாய வீசனரு ளாழி பெற்று
மேவுற்ற சீருற் றதுவென்றனர் வேத வாயர். (௮௪௧)

மாலா யவனென்ன வருந்திருப் பாட்டின் மாலுந்
நீதாலா மறைநான் முகனுந் தொடர்வா மமரர்
எலா வகைசுட்ட நஞ்சுண் டிறவாமைக் காத்த
மேலாங் கருணைத் திறமெங்குரு வேந்தர் வைத்தார் (௮௪௨)

வேறு.

ஆனவற் றன்றி யென்ற வத்திருப் பாட்டிற் கூடல்
மாநக ரத்துச் சங்க மவைத்தவன் றேற்றத் தேறு
மீனாக ளெல்லைக் கிட்ட வேடுநீ ரெதிர்ந்து செல்லில்
ஞானமீ சன்பா லன்பே யென்றனர் ஞான முண்டார். (௮௪௩)

வேறு

வெறியேர் பொழிற்சண் பையர்வேந்தர் மெய்ப்பா சுரத்தைக்
குறியே றியவெல்லை யறிந்துகும் பிட்டே னல்லேன்
சிறியே னறிவுக் கவர்தந்திருப் பாதந் தந்த
நெறியே சிறிதியா னறிநீர்மைகும் பிட்டே னன்பால் (௮௪௪)

* அலரும் விரைசூழ் பொழிற்காழி யுளாதி ஞான
மலருந் திருவாக் குடைவள்ளலா ருள்ள வண்ணம்
பலரும் முணர்ந்துய்யப் பகர்ந்து வரைந்தி யாற்றின்
நிலவுந் திருவேடு திருக்கையா னிட்டிட்டார் (௮௪௫)

திருப்பாசுரம் - பண் - கௌசிகம்.

திருச்சிற்றம்பலம்

வாழ்கவந்தணர்வானவரானினம்
வீழ்கதண்புனல்வேந்தனுமோங்குக
ஆழ்கதீயதெல்லாமரனாமமே
சூழ்கவையகமுந்துயர்தீர்கவே

(௮௪௨) தேலை - வெறியுடைய. (௮௪௪) இத்திருப்பாசுரத்தின் உண்மையை [illegible] பெரிய தேவாரத்திருப் பொருளுரையில் அஞ்சுவா [illegible]

* [illegible] இத்திருப்பாசுரம் ௮௨௰-வது செய்யுளின் கீழ் இருக்கின்றது.

பல்லார்களுமதிக்கப்பாசுரஞ்சொன்னபத்தும்
வல்லார்கள்வானோருலகாளவும்வல்லரன்றே.

திருச்சிற்றம்பலம்

---

வேறு

திருவுடைப் பிள்ளை யார்தந் திருக்கையா லிட்ட வேடு
மருவுறும் பிறவி யாற்றின் மாதவர் மனஞ்சென் றாற்போற்
பொருபுனல் வைகை யாற்றி லெதிர்ந்துநீர் கிழித்துப் போகும்
ஒருநிலை தோற்றோர்க் கெல்லா மிதுபொரு ளென்று காட்டி (அசசு)

[illegible]ப்பரான சிவனே யெல்லாப் பொருளுமென் றெழுது மேட்டிற்
[illegible] னருளால் வேந்தன் றனைமுனே ஞெங்கப் பாட
அ[illegible]ய மலரா ளாரப னனபாய னென்னுஞ் சீர்த்திச்
செ[illegible]ப்பியன் செங்கோ லென்னத் தென்னன்கூ னிமிர்ந்த தன்றே (அசஎ)

ஏடுநீ ரெதிர்ந்து செல்லும் பொழுதிமை யோர்க ளெல்லாம்
நீடிய வாழ்த்தி றபோற்றி நிமிர்ந்தபூ மாரி தூர்த்தார்
ஆடியல் யானை மன்ன னற்புத மெய்தி நின்றான்
பாடுசே ரமண ரஞ்சிப் பதைப்புடன் பணிந்து நின்றார் (அசஅ)

ஆற்றின்மேற் செல்லு மேடு தொடர்ந்தெடுப் பதற்கு வேண்டிக்
காற்றென விசையிற் செல்லுங் கடும்பரி யேறிக் கொண்டு
கோற்றொழி றிருத்த வல்ல குலச்சிறை யார்பின் சென்றார்
ஏறுயர் கொடியி னாரைப் பாடினா ரேடு தங்க (அசகூ)

[illegible] பிள்ளை யார்தாம் வன்னியென் றெடுத்துப் பாடச்
[illegible] சீர்கொண் டேறுங் குலச்சிறை யாருங் கூடிக்
[illegible] மாக வாடுங் கண்ணுதல் கோயில் மாடு
[illegible] சேர்வுட் புக்கு நின்றவே டெடுத்துக் கொண்டார் (அருO)

---

திருப்பாசுரம் - பண் - கௌசிகம்.

திருச்சிற்றம்பலம்

வன்னியுமத்தமுமதிபொதிசடையினன்
பொன்னியறிருவடிபுதுமலரவைகொடு
மன்னியமறையவர்வழிபடவடியவர்
இன்னிசைபாடலரேடகத்தொருவனே

கோடுசந்தனமகில்கொண்டிழிவைகைநீர்
ஏடுசென்றணைதருமேடகத்தொருவனை
நாடுதென்புகலியுள்ஞானசம்பந்தன
பாடல்பத்திவைவல்லார்க்கில்லையாம்பாவமே

திருச்சிற்றம்பலம்.

தலைமிசை வைத்துக் கொண்டு தாங்கரு மகிழ்ச்சி பொங்க
அலைபுனற் கரையி லேறி யங்கினி தமர்ந்த மேருச்
சிலையுடை யவர்தாள் போற்றி மீண்டுசென் றணைவார் தெய்வ
மலைமகள் குழைத்த ஞான முண்டவர் தம்பால் வந்தார். (அ௯௧)

மற்றவர் பிள்ளை யார்தம் மலரடி வணங்கிப் போற்றிக்
கொற்றவன் முதலா யுள்ளோர் காணமுன் கொணர்ந்த வேடு
பற்றிய கையி லேந்திப் பண்பினா லியார்க்குங் காட்ட
அற்றருள் பெற்ற தொண்ட ரரவொலி யெழுந்த தன்றே. (அ௯௨)

மன்னவன் மாறன் கண்டு மந்திரி யாரை நோக்கித்
துன்னிய வாதி லொட்டித் தோற்றவிச் சமணர் தாங்கண்
முன்னமே பிள்ளை யார்பா லநுசித முற்றச் செய்தார்
கொன்னுனைக் கழுவி லேற்றி முறைசெய்க வென்று கூற (அ௯௩)

புகலியில் வந்த ஞானப் புங்கவ ரதனைக் கேட்டும்
இகலில ரெனினுஞ் சைவ ரிருந்துவாழ் மடத்திற் றீங்கு
தகவிலாச் சமணர் செய்த தன்மையாற் சாலு மென்றே
மிகையிலா வேந்தன் செய்கை விலக்கிடா திருந்த வேலை (அ௯௪)

பண்புடை யமைச்ச னாரும் பாருளோ ரறியு மாற்றாற்
கண்புடை பட்டு நீண்ட கழுத்தறி நிரையி லேற்ற
நண்புடை ஞான முண்டார் மடத்துத்தீ நாடி யிட்ட
எண்பெருங் குன்றத் தெண்ணா யிரவரு மேறி னார்கள் (அ௯௫)

தோற்றவர் கழுவி லேறித் தோற்றிடத் தோற்றாச் சமயம்
ஆற்றிடை யமணரோலை யழிவினு லார்ந்த தம்பம்
வேறொரு தெய்வ மின்மை விளக்கிய பதாகைத் தம்பம்
போற்றுசீர்ப் பிள்ளை யார்தம் புகழ்ச்சயத் த[illegible] மாகும். (அ௯௬)

தென்னவன் றனக்கு நீறு சிரபுரச் செல்வ[illegible]ர
முன்னவன் பணிந்து கொண்டு முழுவது மணிந்து நின்றான்
மன்னனீ றணிந்தா னென்று மற்றவன் மதுரை வாழ்வார்
துன்னிநின் றார்க ளெல்லாந் தூயநீ றணிந்து கொண்டார் (அ௯௭)

பூதிமெய்க் கணிந்து வேந்தன் புனிதனா யுய்ந்த போது
நீதியும் வேத நீதி யாகியே நிகழ்ந்த தெங்கும்
மேதினி புனித மாக வெண்ணீற்றின் விரிந்த சோதி
மாதிரந் தூய்மை செய்ய வமணிருண் மாய்ந்த தன்றே (அ௯அ)

மீனவற் குயிரை நல்கி மெய்ந்நெறி காட்டி மிக்க
ஊனமாஞ் சமணை நீக்கி யுலகெலா முய்யக் கொண்ட

(அ௯௨) அற்று - ஆறையாறு. (அ௯அ) மாதிரம் - எட்டுத்திசையும்

ஞானசம் பந்தர் வாய்மை ஞாலத்திற் பெருகி யோங்கத்
தேனலர் கொன்றை யார்தந் திருநெறி நடந்த தன்றே. (௮௮௯)

மறையவர் வேள்வி செய்ய வானவர் மாரி நல்க
இறைவனன் னெறியி னோங்க வகத்தினி லவனி யின்பங்
குறைவில தெனினுங் கூற்றை யுதைத்தவர் நாமங் கூறி
நிறைகடற் பிறவித் துன்ப நீங்கிடப் பெற்ற தன்றே (௮௯௦)

அங்கயற் கண்ணி தன்னோ டாலவா யமர்ந்த வண்ணல்
பங்கயச் செய்ய பாதம் பணிவனென் றெழுந்து சென்று
பொங்கொளிச் சிவிகை யேறிப் புகலியர் வேந்தர் போந்தார்
மங்கையர்க் கரசி யாரு மன்னனும் போற்றி வந்தார் (௮௯௧)

எண்ணரும் பெருமைத் தொண்ட ராவரு மகிழ்ச்சி யெய்திப்
புண்ணியப் பிள்ளை யாரைப் புகழ்ந்தடி போற்றிப் போத
மண்ணெலா முய்ய வந்த வள்ளலார் தம்மைக் கண்டு
கண்ணினுற் பயன்கொண் டார்கள் கண்ணினாட் டவர்க ளெல்லாம் (௮௯௨)

ஆலவா யண்ணல் கோயி லங்கண்முன் றோன்றக் கண்டு
பாலறா வாயர் மிக்க பணிவுற் றெழுந்து சென்று
மாலுநான் முகனும் போற்ற மன்னினார் கோயில் வாயிற்
சீலமா தவத்தோர் முன்பு சிவிகைநின் றிழிந்து புக்கார். (௮௯௩)

தென்னவன் றானு மங்கட் செம்பியன் மகளார் தாமும்
நன்னெறி யமைச்ச ரும்ஞான சம்பந்தர் செய்ய
பொன்னடிக் கமலம் போற்றி யுடன்புகப் புனிதர் கோயில்
தன்னைமுன் வலங்கொண் டுள்ளாற் சண்பையர் தலைவர் புக்கார் (௮௯௪)

கைகளுந் தலைமீ தேறக் கண்ணிலா னந்த வெள்ள
மெய்யெலாம் பொழிய வேத முதல்வரைப் பணிந்து போற்றி
ஐயனே யடிய னேனை யஞ்சலென் றருள வல்ல
மெய்யனே யென்று வீட லாலவா யிலம்ப லுற்றார் (௮௯௫)

---

### திருவாலவாய் - திருவிராகம் - பண் - கௌசிகம்.

திருச்சிற்றம்பலம்

வீடலாலவாயிலாய்விழுமியார்கள்நின்கழல்
பாடலாலவாயிலாய்பரவநின்றபண்பனே
காடலாலவாயிலாய்கபாலிநீள்கடிம்மதில்
கூடலாலவாயிலாய்குலாயதென்னகொள்கையே

போயநீர்வளங்கொளும்பொருபுனற்புகலியான்
பாயகேள்விஞானசம்பந்தனல்லபண்பினால்
ஆயசொல்லின்மாலைகொண்டாலவாயிலண்ணலைத்
தீயதீரவெண்ணுவார்கள்சிந்தையார்வர்தேவரே

திருச்சிற்றம்பலம்.

ஒன்றவே றுணர்வு மில்லே னொழிவற நிறைந்த கோல
மன்றினுள் மறைக ளேத்த மானுட ருய்ய வேண்டி
நின்றுநீ யாடல் செய்கை நினைப்பதே நியம மாகும்
என்றுபூம் புகலி மன்ன ரின்றமிழ்ப் பதிகம் பாட (௮௯௬)

தென்னவன் பணிந்து நின்று திருவால வாயின் மேவு
மன்னனே யமணர் தங்கள் மாய்கையான் மயங்கி யானும்
உன்னையா னறிந்தி லேனை யுறுபிணி தீர்த்தாட் கொள்ள
இன்னருட் பிள்ளை யாரைத் தந்தனை யிறைவ வென்றான் (௮௯௭)

சீருடைப் பிள்ளை யாருஞ் சிறப்புடை யடியா ரோடுங்
காரினிற் பொலிந்த கண்டத் திறைவர்தாள் வணங்கிக் காதல்
ஆரருள் பெற்றுப் போற்றி யங்குநின் றரிது நீங்கி
ஏரியல் மடத்தி லுள்ளா லினிதெழுந் தருளிப் புக்கார் (௮௯௮)

நீடுசீர்த் தென்னர் கோனு நேரியன் பாவை யாரும்
மாடுசென் றிறைஞ்சி நோக்கி மாளிகை தன்னிற் போக்கிக்
கூடிய மகிழ்ச்சி பொங்கக் கும்பிடு மிருப்பி னோடு
நாடியங் கிருந்து தங்க ணாதரைப் பாட லுற்றார் (௮௯௯)

திருவிய மகத்தி னுள்ளுந் திருநீல கண்டப் பாணர்க்
கருளிய திறமும் போற்றி யவரொடு மளவ ளாவித்
தெருளுடைத் தொண்டர் சூழத் திருத்தொண்டி னுண்மை நோக்கி
இருள்கெட மண்ணில் வந்தா ரினிதமர்ந் திருந்தா ரன்றே (௯௦௦)

---

## திருவாலவாய் - திருவியமகம்.

திருச்சிற்றம்பலம்

ஆலநீழலுகந்ததிருக்கையேயானபாடலுகந்ததிருக்கையே
பாலினேர்மொழியாளொருபங்கனேபாதமோதலர்சேர்புரபங்கனே
கோலநீறணிமேதகுபூதனேகோதிலார்மனமேவியபூதனே
ஆலநஞ்சமுதுண்டகளத்தனேயாலவாயுறையண்டர்களத்தனே

ஈனஞானிகடமொடுவிரகனேயேறுபல்பொருண்முத்தமிழ்விரகனே
யானகாழியுள்ஞானசம்பந்தனேயாலவாயினின்மேயசம்பந்தனே
யானவானவர்வாயினுள்ளத்தனேயன்பரானவர்வாயினுள்ளத்தனே
நானுரைத்தனசெந்தமிழ்ப்பத்துமேவல்லவர்க்கிவைநற்றமிழ்ப்பத்துமே

திருச்சிற்றம்பலம்

---

பூழியன் மதுரை யுள்ளார் புறத்துள்ளா ரமணர் சேரும்
பாழியு மருகர் மேவும் பள்ளியு மான வெல்லாங்
கீழுறப் பறித்துப் போக்கிக் களரொளித் தூய்மை செய்தே
வாழியப் பதிக ளெல்லா மங்கலம் பொலியச் செய்தார் (௯௦௧)

பெருந்தகையெம் பெருமாட்டி யுடனிருந்த தேயென்று
பொருந்துபுகழ்ப் புகலியின்மேற் றிருப்பதிகம் போற்றிசைத்தார் (௮௨௰)

மண்ணினல்ல வென்றெடுத்து மனத்தெழுந்த பெருமகிழ்ச்சி
உண்ணிறைந்த காதலினாற் கண்ணருவி பாய்ந்தொழுக
அண்ணலார் தமைவினவித் திருப்பதிக மருள்செய்தார்
தண்ணறும்பூஞ் செங்கமலத் தாரணிந்த தமிழ்விரகர் (௮௨௧)

---

## திருக்கழுமலம் - பண் - கொல்லி.

திருச்சிற்றம்பலம்

மண்ணினல் லவண்ணம் வாழலா மவைகலும்
எண்ணினல் லகதிக்கி யாதுமோர் குறைவிலை
கண்ணினல் லஃதுறுங் கழுமல வளநகர்ப்
பெண்ணினல் லாளொடும் பெருந்தகை யிருந்ததே

கருந்தடந் தேன்மல்கு கழுமல வளநகர்ப்
பெருந்தடங் கொங்கையோ டிருந்தவெம் பிரான்றனை
அருந்தமிழ் ஞானசம் பந்தன செந்தமிழ்
விரும்புவார் அவர்கள்போய் விண்ணுலகாள்வரே

திருச்சிற்றம்பலம்

---

திருப்பதிகந் திருக்கடைக்காப் புச்சாத்திச் சிறப்பினமர்ந்
திருப்பினுற லவர்தமக்கு விருந்தளித்து மேவுநாள்
அருப்புறுமெய்க் காதல்புரி யடியவர்கட் டம்மோடும்
பொருப்புறுகைச் சிலையார்சேர் பதிபிறவுந் தொழப்போவார் (௮௨௨)

ஆலின்கீழ் நால்வர்க்கன் றறமுரைத்த வங்கணனை
நூலின்கட் பொருள்பாடி நூலறிவார்க் கீந்தானைக்
காலம்பெற் றினிதிறைஞ்சிக் கைதொழுது புறம்போந்தார்
சீலங்கொ டன்னவனுந் தேவியரு முடன்போத (௮௨௩)

வேறு

தேனிலவு பொழின்மதுரைப் புறத்துப் போந்து தென்னவனுந் தேவியார்
ரமைச்சர் சிந்தை, யூனெகிழும் படியழிந்து தொழுது கண்ணீர் பாய்ந்தொ
ழிய வுணர்வின்றி வீழக் கண்டே, யானுமமைப் பிரியாத வண்ணந் தென்னாட்
டிறைவர்பதி யெனைப்பலவும் பணிவீ ரென்று, ஞானத்தோர் வாரருள வவ
ரும் போத நம்பர்திருப் பரங்குன்றை நண்ணி னாரே (௮௨௪)

ஆறணிந்தார் தமைவணங்கி யங்குப் போற்றி யணியாப்ப னூரணைந்து
பணிந்து பாடி, நீறணிந்த செல்வர்பதி பிறவுஞ் சேர்ந்து நிலவுதிருப் பதிகங்க
ணிகழப் பாடிச், சேறணிந்த வயற்பழனக் கழனி சூழ்ந்த சிரபுரத்து வந்தரு
ளுஞ் செல்வர் செங்கண், ஏறணிந்த வெல்கொடியார் திருப்புத்தூரை யெய்தி
யிறைஞ்சிச்சிலநா ளிருந்தா ரன்றே. (௮௨௫)

### திருஆப்பனூர் - பண் - குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

முற்றுஞ்சடைமுடிமேன் முதிராவிளம்பிறையன்
ஒற்றைப்படவரவமது கொண்டரைக்கணிந்தான்
செற்றமில்சீரானைத் திருவாப்பனூரானைப்
பற்றுமனமுடையார் வினைப்பற்றறுப்பாரே

அந்தணபுனல்வைகை யணியாப்பனூர்மேய
சந்தமலர்க்கொன்றைச் சடைமேலுடையானை
நந்தியடிபரவு நன் ஞானசம்பந்தன்
சந்தமிவைவல்லார் தடுமாற்றறுப்பாரே

திருச்சிற்றம்பலம்

---

### திருப்புத்தூர் - பண் - தக்கராகம்.

திருச்சிற்றம்பலம்.

வெங்கள் விம்மு வெறியார் பொழிற்சோலை, திங்களோடு திளைக்குந் திருப்புத்தூர்க்
கங்கை தங்கு முடியா ரவர்போலும், எங்க ளுச்சி யுறையு மிறையாரே.

நல்லகேள்வி ஞானசம்பந்தன், செல்வர்சேட ருறையுந் திருப்புத்தூர்ச்
சொல்லல்பாடல் வல்லார் தமக்கென்று, மல்லல் தீரும் மவல மடையாவே

திருச்சிற்றம்பலம்

---

பற்றாதார் புரங்கண்மலைச் சிலையாற் செற்ற பரமனார் திருப்புத்தூர் பணிந்து போந்து, புற்றரவும் பணிபூண்ட புனிதனார் தம் பூவணத்தைப் புக் கிறைஞ்சிப் புகழ்ந்து பாடிக், கற்றார்கள் தொழுதேத்துங் கானப் பேருங் கைதொழுது தமிழ்பாடிச் சுழியல் போற்றிக், குற்றாலங் குறும்பலாக் கும் பிட் டேத்திக் கூறுதைத்தார் நெல்வேலி குறுகினாரே. (௮௮௬)

புண்ணியனார் நெல்வேலி பணிந்து போற்றிப் புரிசடையார் திருப்பதிக ளிறவுஞ் சென்று, நண்ணியினி தமர்ந்தங்கு நயந்து பாடி நற்றொண்ட ருடனாரும் போற்றிச் செல்வார், விண்ணவரைச் செற்றுகந்தா னிலங்கை செற்ற மிக்கபெரும் பாதகத்தை நீக்க வேண்டிக், திண்ணியபொற் சிலைத் தடக்கை யிராமன் செய்த திருவிராமேச்சரத்தைச் சென்று சேர்ந்தார் ()

செங்கண்மால் வழிபட்ட கோயி னண்ணித் திருமுன்பு தாழ்ந்தெழுந்து தென்னனோடு, மங்கையர்க்கு நாயகியார் தாமும் மெய்ம்மை மந்திரியா ருஞ் சூழ மணிநீள் வாயிற், பொங்கியெழும் விருப்பினொ டுடனேபுகுப் புடைவலங்கொண் டுள்ளணைவார் போற்றி செய்து, பங்கயச்செங் கைகுவித்துப் பணிந்து நின்று பாடினார் மன்னவனும் பரவி யேத்த (௮௮௮)

சேதுவின்கட் செங்கண்மால் பூசை செய்த சிவபெருமான் றனைப் பாடிப் பணிந்து போந்து, காதலுட னந்நகரி லினிது மேவிக் கண்ணுதலான் திருத்தொண்ட ராளாக் கெல்லாந், கோதில்புகழ்ப் பாண்டிமா தேவி யார்

மெய்க்குலச்சிறையார் குறைவறுத்துப் போற்றிச்செல்ல, நாதர்தமை நாடோறும் வணங்கி யேத்தி நளிர்வேலைக் கரையினயல் திருந்தா ரன்றே (௮௮௯)

அந்நகரி லமர்ந்தங்க ணினிது மேவி யாழிபுடை சூழ்ந்தொலிக்கு மீழந் தன்னின், மன்னுதிருக் கோணமலை மகிழ்ந்த செங்கண் மழவிடையார் தமைப்போற்றி வணங்கிப் பாடிச், சென்னிமதி புனைமாட மாதோட் டத்துத் திருக்கேதீச் சரத்தண்ணல் செய்ய பாதம், உன்னிமிகப் பணிந்தேத்தி யன்ப ரோடு முலவாத கிழிபெற்றா ருவகை யுற்றார் (௮௯௦)

---

திருக்கோணமாமலை - பண் - புறநீர்மை.

திருச்சிற்றம்பலம்

நிரைகழலரவஞ்சிலம்பொலியலம்புநிமலர்நீறணிதிருமேனி
வரைகெழுமகளோர்பாகமாப்புணர்ந்தவடிவினர்கொடியணிவிடையர்
கரைகெழுசந்துங்காரகிற்பிளவுமளப்பருங்கனமணிவரன்றிக்
குரைகடலோதநித்திலங்கொழிக்குங்கோணமாமலையமர்ந்தாரே

குற்றமிலாதார்குரைகடல்சூழ்ந்தகோணமாமலையமர்ந்தாரைக்
கற்றுணர்கேள்விக்காழியர்பெருமான்கருத்துடைஞானசம்பந்தன்
உற்றசெந்தமிழார்மாலையீரைந்துமுரைப்பவர்கேட்பவருயர்ந்தோர்
சுற்றமுமாகித்தொல்வினையடையார்தோன்றுவர்வானிடைப்பொலிந்தே

திருச்சிற்றம்பலம்

---

திருக்கேதீச்சரம் - பண் - நட்டராகம்.

திருச்சிற்றம்பலம்

விருதுகுன்றமாமேருவினாணரவாவனலெரியம்பாப்
பொருதுமூவெயில்செற்றவன்பற்றிநின்றுறைபதியெந்நாளுங்
கருதுகின்றவூர்கனைகடற்கடிகமழ்பொழிலணிமாதோட்டங்
கருதநின்றகேதீச்சரங்கைதொழக்கடுவினையடையாவே

பாடலார்மணமுரசெனக்கடலினதொலிகவர்மாதோட்டத்
தாடலேறுடையண்ணல்கேதீச்சரத்தடிகளையணிகாழி
நாடுளோர்க்கிறைஞானசம்பந்தன்சொன்னவின்றெழுபாமாலை
பாடலாயினபாடுமின்பத்தர்காள்பரகதிபெறலாமே

திருச்சிற்றம்பலம்

---

அப்பதியைத் தொழுதுவட திசைமேற் செல்வா ரங்கையனா றாந்த நாளமருங் கோயில், புக்கிறைஞ்சிப் பல்பதியுந் தொழுது போற்றிப் பொருதலைக்கரைவா யொழியப் போந்த, செப்பரிய புகழ்த்திருவா டானை சேர்ந்து செந்தமிழ்மா லைகளாற் றுதித்துச் சிவனார் மன்னும், ஒப்பரிய புனவாயில் போற்றிச் செய்து வணங்கினா ருலகுய்ய ஞான முண்டார் (௮௯௧)

(௮௯௦) திருக்கோணமலை - இலங்கையிலே திருக்கோணமலை யென வழங்கப்படு மிடத்திலிருக்கின்றது, திருக்கோயிலிலே [illegible] திருக்கேதீச்சரம் - இத்தலம் மாதோட்டம் [illegible] மிருக்கின்றது. (௮௯௧) பொருது அலைக்கரை வாய் - சமுத்திரம் மோதி அலைக்கும் கரையை

பதிநிலவு பாண்டிநா டதனின் முக்கட் பரமனார் மகிழ்விடங்கள் பலவும் போற்றி, விதிநிலவு வேதநூ னெறியே யாக்கி வெண்ணீற்றின் சார்வினான் மிக்கு யாக்க, கதியருளிக் காழிநகர் வாழ வந்தார் கண்ணுதலான் றிருத்தொண்டர் பலருஞ் சூழ, மதிநிலவு குலவேந்தன் போற்றிச் செல்ல மந்திரியார் பதிமணமேற் குடியில் வந்தார் (அகஉ)

அங்கரி னினிதமர்வா ரருந்த சூழ்ந்த பதிகளினி டங்கணர்தங் கோயிற் புகுந்து, மன்னு திருத் தொண்டருடன் மீண்டு சேர்ந்து மன்னவனு மங்கையர்க்க ரசி யாருங், கொன்னவில்வேற் குலச்சிறையார் தாமுங் கூடிக் குரைகழல்கள் பணிந்து துறை கொண்டு போற்றச், சென்னிவளர் மதியணிந்தார் பாதம் போற்றிச் சிரபுரத்துச் செல்வரினி திருந்த நாளில் (அகங)

பொங்குபுனற் காவிரிநா டதனின் மீண்டு போதுதற்குத் திருவுள்ள மாகப் போற்ற, மங்கையர்க்க ரசியார் தாமுந் தென்னர் மன்னவனு மந்திரியார் தாமுங் கூட, அங்கவர்தந் திருப்பாதம் பிரிய லாற்றா துடன்போக வொருப்படும வளவு நோக்கி, இங்குநான் மொழிந்ததனுக் கிசைந்தீ ராகி லீசாசிய நெறிபோற்றி யிருப்பீ ரென்று (அகச)

சாலமிகத் தளர்வாரைத் தளரா வண்ணந் தகுவனமற் றவர்க்கருளிச் செய்த பின்பு, மேலவர்தம் பணிமறுக்க வவரு மஞ்சி மீள்வதனுக் கிசைந்து திருவடியில் வீழ்ந்து, ஞாலமுய்ய வந்தருளும் பிள்ளை யாரைப் பிரியாத நண்பினொடுந் தொழுது நின்றார், ஆலவிட முண்டவரை யடிகள் போற்ற வந்நாட்டை யகன்றாரீண் டணையச் செல்வார் (அகரு)

பொன்னிவளர் தருநாடு புகுந்து மிக்க பொருவிலசீர்த் திருத்தொண்டர் குழாத்தி னோடும், பன்னகப்பூ ணணிந்தவர்தங் கோயி றோறும் பத்தருடன் பதிபுலவோர் போற்றச் சென்று, கன்னிமதிற் றிருக்களரும் போற்றிக் கண்டங் கறையணிந்தார் பாதாளீச் சரமும் பாடி, முன்னணைந்த பதிபிறவும் பணிந்து போற்றி முள்ளிவாய்க் கரையணைந்தார் முந்நூன் மார்பர் (அகசு)

மலைவளர்சந் தனமகிலுந் தேக்குந் துந்தி மலர்ப்பிறங்கல் வண்டிரைப்பச் சுமந்து பொங்கி, அலைபெருகி யாளியங்கா வண்ண மாறு பெருகுதலா லத்துறையி லணையு மோடம், நிலைபுரியு மோடங்கோ லிலையி லாமை நீர்வாழ்நர் கரையின்க ணிறுத்திப் போகக், கலையயிலுங் கவுணியர்கோ னதனைக் கண்டக் கரையின்க ணெழுந்தருளி நின்ற காலை (அகஎ)

தேவர்பிரா னமர்ந்ததிருக் கொள்ளம் பூதூ ரெதிர்தோன்றத் திருவுள்ளம் பணியச் சென்று, மேவுதலா லோடங்கள் விடுவா ரின்றி யொழிந்திடவு மக்கரைமேற் றாம்விரைவார் சண்பைக், காவலனு மோடத்தின் கட்ட விழ்த்துக் கண்ணுதலான் றிருத்தொண்ட ரமைய வேற்றி, நாவலமே கோலாக வதனை யூன்றி நம்பாதமைக் கொட்டமென நவின்று பாட (அகஅ)

உம்பருய்ய நஞ்சுண்டா ரருளா லோடஞ் செலச்செல்ல வுந்துதலா லூடு சென்று, செம்பொனேர் சடையார்தங் கொள்ளம் பூதூர் தனைச்சேர வக்கரையி லேறந்த பின்பு, நம்பரவர் தமைவணங்க ஞான மூண்ட பிள்ளையார் நற்றொண்ட ருடனிழிந்து, வம்பலரு நறுங்கொன்றை நயந்தார் கோயில் வாயிலின்முன் மகிழ்ச்சியொடு வந்து சார்ந்தார் (௮௯௯)

---

திருக்கொள்ளம்பூதூர் - ஈரடிமேல்வைப்பு - பண் - காந்தாரபஞ்சமம்

திருச்சிற்றம்பலம்.

கொட்டமே கமழுங்கொள்ளம்பூதூர், நட்டமாடியநம்பனையுள்கச்
செல்லவுந்துகசிந்தையார்தொழ, நல்குமாறருணம்பனே

கொன்றைசேர்சடையானைக்கொள்ளம்பூதூர், நன்றுகாழியுண்ஞானசம்பந்தன்
இன்றுசொன்னமாலைகொண்டேத்தவல்லார்போ, யென்றுமவானவரோடிருப்பரே

திருச்சிற்றம்பலம்

---

நீணிலைக்கோ புரந்தனை யிறைஞ்சிப் புக்கு நிகரிலாத் தொண்டருட னெருங்கச் சென்று, வாணிலவு கோயிலினை வலங்கொண் டெய்தி மதிச்சடையார் திருமுன்பு வணங்கி நின்று, தாணுவே யாற்றினகண் ணோடமுய்க்குந் தன்மையா லருட்டந்த தலைவா நாகப், பூணிஞய களிற்றுரிவை போர்த்த முக்கட் புனிதனே யெனப்பணிந்து போற்றி செய்தார் (௯00)

போற்றிசைத்துப் புறம்போந்தங் குறையு நாளிற் பூழியன்முன் புன்சமயத் தமணர் தம்மோ, டேற்றபெரு வாதினக ணெரியின் வேவாப் பதிகமுடை யிறையவரை யிறைஞ்ச வேண்டி, யாற்றவுமங் கருள்பெற்றுப் போந்து முன்னை மணந்தபதி களுமிறைஞ்சி யன்பர் சூழ, நாற்றிசையும் பரவுதிரு நள்ளா றெய்தி நாடுடைநா யகர்கோயி னண்ணி னாரே (௯0௧)

நீடுதிருத் தொண்டர்புடை சூழ வங்க ணெதிர்நிலையா னத்திடைநின் றிழிந்து சென்று, பீடுடைய திருவாயில் பணிந்து புக்குப் பிறையணிந்த சென்னியார் மன்னு கோயில், மாடுவலங் கொண்டுள்ளான் மகிழ்ந்து புக்கு மலர்க்கரங்கள் குவித்திறைஞ்சி வள்ள லாரைப், பாடகமெல் லடியெடுத்துப் பாடி நின்று பரவினார் கண்ணருவி பரந்து பாய (௯0௨)

---

திருநள்ளாறும் - திருவாலவாயும் - பண் - நட்டபாடை.

திருச்சிற்றம்பலம்

பாடகமெல்லடிப்பாவையோடும்படுபிணக்காடிடம்பற்றிநின்று
நாடகமாடுநள்ளாறுடையநம்பெருமானிதுவென்கொல்சொல்லாய்
சூடகமுன்கைமடந்தைமார்கடுணைவரொடுந்தொழுதேத்திவாழ்த்த
வாடகமாடநெருங்குகூடலாலவாயின்கணமர்ந்தவாறே

(௯0௧) நாடுடை நாயகர் என்பதை "நாடுடைய நம்பெருமான் மேயது நள்ளாறு" என்னுந் தேவாரத்தா லுணர்க.

அன்புடையானைக்கூடலாலவாய்மேவியதென்கோலென்று
நன்பொனைநாதனைநள்ளாற்றானைநயம்பெறப்போற்றிநலங்குலாவு
பொன்புடைசூழ்தருமாடக்காழிப்பூசுரன்ஞானசம்பந்தன்சொன்ன
இன்புடைப்பாடல்கள்பத்தும்வல்லாரிமையவரேத்தவிருப்பாதாமே.

திருச்சிற்றம்பலம்

---

தென்னவர்கோன் முன்னமணர் செய்த வாதிற் றீயின்கணிடுமேடு பச்சை யாக்கி, என்னுள்ளத் துணையாகி யாலவாயி லமர்ந்திருந்த வாறெங் கோ லெந்தா யென்று, பன்னுதமிழ்த் தொடைசாத்திப் பரவிப் போந்து பணியினிய தொண்டருட னங்கு வைகி, மன்னுபுகழ்ப் பதிபிறவும் வணங்கச் சண்பை வள்ளலார் நள்ளாறு வணங்கிச் செல்வார் (௯0௩)

சீர்நிலவு திருத்தெளிச்சேரியினைச் சேர்ந்து சிவபெருமான் றனைப்பரவிச் செல்லும் போது, சாரவறியாச் சாக்கியர்தம் போதி மங்கை சார்தலுமற் றதுவறிந்த சைவ ரெல்லாம், ஆர்கலியின் கிளர்ச்சியெனச் சங்கு தாரை யளவிறந்த பல்லியங்கண் முழக்கி யார்த்துப், பார்குலவு தனிக்காளந் சின்ன மெல்லாம் பரசமய கோளரியந் தாரென்னன் றூத (௯0௪)

புல்லறிவிற் சாக்கியர்க ளறிந்தார் கூடிப் புகலியர்தம் புரவலனா பந்தத்தங்கள், எல்லையினி லெழுந்தருளும் பொழுது தொண்ட ரெடுத்தவார்ப் பொலியாலு மெதிர்முன் சென்று, மல்கியெழுந் திருச்சின்ன வொலிக ளாலு மனங்கொண்ட பொறாமையினா னருண்டு தங்கள், கலவியினின் மேம்பட்ட புத்த நந்தி முதலான தேரர்க்குங் கன்று சொன்னார். (௯0௫)

மற்றவர்கள் வெவ்வுரையும் பிள்ளை யார்முன் வருசின்னப் பெருகொலியு மன்னுந் தொண்டர், பொறபுடைய வார்ப்பொலியுஞ் செவியி னூடு புடைத்தநா ராசமெனப் புகப் போந்து, செற்றமிகு முள்ளத்துப் புத்த நந்தி செயிர்த்தெழுந்து தேரர்குழாஞ் சூழச் சென்று, வெற்றிபுனை சின்னங்கள் வாதிலெம்மை வென்றனறோ பிடிப்பதெனை வெகுண்டு சொன்னான் (௯0௬)

புத்தரினம் புடைசூழப் புத்த நந்தி பொருவிலஞா னப்புனிதர் திருமுன் பூது, மெய்த்தவிற சின்னங்கள் விலக்குங் காலை வெகுண்டெழுந்த திருத்தொண்டர் வெறுத்து நோக்கி, இத்தகைய செயற்கிவரைத் தடித்தல் செய்யா திதுபொறுக்கிற் றங்கணிலை யேற்ப ரென்று, முத்தநிரைச் சிவிகையின்மேன் மணியைவந்து முறைபணிந்து புகுந்தபடி மொழிந்து நின்றார் ()

வருமிடத்தி லழகிதா நமக்கு வாதின் மாறறிவார்தம் பொருணிலைமை மருத்த வண்ணம், பொருமிடத்தி லறிகின்றோம் புத்த நந்தி பொய்ம்மேற்கொளனப்புகலி வேந்தர் கூற, வருமறைச்சொற் றிருப்பதிக மெழுது மன்பா

(௯0௮) மருத்தவண்ணம் - மறுக்கப்படாத்திருத்தல். பொருமிடத்து - வாதமுகத்தில். திருப்பதிக மெழுதுமன்பர் - சம்பந்தசரணாலயர். இவர் ஆளுடைய பிள்ளையார்து கலைமமான.

ஆளுடைய பிள்ளையார் திருவாக் காலே, யுருமிடித்து விழப்புத்த னுத்த மாங்க முருண்டுவீழ்ந் தெனப்பொரு வரைமுன் விட்டார். (௯௦௮)

ஏறுயர்த்தார் சைவநெறி யாணை யுய்க்க வெதிர்விலக்கு மிடையூற்றை யெறிந்து நீக்கு, மாறில்வலி மந்திரமா மசனி போல வாய்மையுரைத் திருத்தொண்டர் வாக்கி னாலே,வேறுமொழிப் போரேற்பான் வந்த புத்தன் மேனி யையுந் தலையினையும் வெவ்வே றாக்க, கூறுபட நூறியிடப் புத்தர் கூட்டங் குலைந்தோடி விழுந்துவெருக் கொண்ட தன்றே (௯௦௯)

மற்றவர்க ணிலைமையையும் புத்த நந்தி வாக்கின்போ தேற்றவனற் றலையு மெய்யும், அற்றுவிழ அத்திரமாக் கதனை யன்ப ரறுத்ததுவுங் கண்ட வரடியா ரெல்லாம், வெற்றிதரும் பிள்ளையார் தமக்குச் சென்று விண்ணப்பஞ் செய்யவெதிர்ந்த விலக்கு நீங்க, உற்றவிதி யதுவேயா மரவென் றெல்லா மோதுகென வவ்வொலிவா னுற்ற தன்றே (௯௧௦)

---

திருச்சிற்றம்பலம்

புத்தர்சமண்கழுக்கையர்பொய்கொளாச், சித்தத்தவர்கடெளிந்துதேறின
வித்தகநீறணிவார்வினைப்பகைக்கு, அத்திரமாவனவஞ்செழுத்துமே

திருச்சிற்றம்பலம்

---

அஞ்சியகன் றோடியவப் புத்த ரெல்லா மதிசயித்து மீண்டுமுட னணைந்து கூடி, வஞ்சனையா லிதுசால மற்றவர்தஞ் சைவ வாய்மையேயா வெண்ண மருண்டு மனத்திற் கொள்வார், எஞ்சலின்மந் திரவாத மன்றி யெம்மோ டெதிர்ந்து பொருள் பேசுவதற் கிசைவ தென்று, தஞ்செயலின் மிக்குள்ள சாரி புத்தன் றனையே முன்கொண்டு பின்னுஞ் சார்ந்தார் (௯௧௧)

அத்தன்மை கேட்டருளிச் சண்பைவந்த வடலேறு திருவுள்ளத் தழுகி தென்று, மெத்தமகிழ்ச் சியினோடும் விரைந்து சென்று வெண்டரளச் சிவிகையினின் றிழிந்து வேறோர், சத்திரமண் டபத்தின்மிசை யேறி நீடு சைவருட னெழுந்தருளி யிருந்து சாரும், புத்தர்களை யழைக்கவெனத் திருமுன் னின்றார் புகலிகா வலரேவப் போற்றிச் சென்றார் (௯௧௨)

சென்றவர்க டேரர்குழா மணைந்து நீங்கள் செப்பிவரும் பொருணிலைமை தெரிக்க வெங்கள், வென்றிமழ விளங்களிறு சண்பை யாளி வேதபா ரகன்முழுமைத் தமிழின் வேந்த, னின்றுமகிழ்ந் தழைக்கின்றா னீண்ட நீரு நண்ணுமெனக் கூறுதலு நன்மை சாராத், தன்றகைமைப் புத்தருடன் சாரி புத்தன் சத்திரமண் டபமுன்பு சார வந்தான் (௯௧௩)

---

(௯௦௮) உத்தமாங்கம் - தலை. பாடியபாசுரம் - "புத்தர்சமண்கழுக்கையர்' என்பது. (௯௦௯) அசனி - இடி. (௯௧௦) அத்திரவாக்கு அதனை - "அத்திரமாவன அஞ்செழுத்துமே' என்னுந் திருப்பாடல்.

அங்கணைந்து மண்டபத்துப் புத்த ரோடும் பிள்ளையா ரருகணைய நின்ற போதில், எங்குநிகழ் திருச்சின்னந் தடுத்த புத்த னிருஞ்சிரத்தைப் பொடியாக்கு மெதிரி லன்பர், பொங்குபுகழ்ப் புகலிகா வலர்தம் பாதம் போற்றியரு ளாற்சாரி புத்தன் றன்னை, யுங்கடலை வனும்பொருளு முரைக்க வென்ன வுற்றவா தினைமேற்கொண் டுரைசெய் கின்றான். (௧௧௪)

கற்பங்க ளனைத்தினினும் பிறந்து வீந்து கதிமாறுங் கணபங்க வியல்பு தன்னிற், பொற்புடைய தானமே தவமே நன்மை புரிந்தநிலை யோகமே பொருந்தச் செய்ய, உற்பவிக்கு மொழிவின்றி யுரைத்த ஞானத் தொழியாத பேரின்ப முத்தி பெற்றான், பற்பலரும் பிழைத்துய்ய வறமுன் சொன்ன பான்மையான் யாங்கடொழும் பரம னென்றான். (௧௧௫)

என்றுரைத்த சாரிபுத்த னெதிர்வந் தேற்ற விருந்தவத்துப் பெருந்தன்மை யன்பா தாமு, நன்றுமது தலைவன்றான் பெற்றா னென்று நாட்டுகின்ற முத்திதான் யாவ தென்றார், நின்றவுரு வேதனையே குறிப்புச் செய்கை நேர்நின்ற ஞானமென நிகழ்ந்த வைந்தும், ஒன்றியகந் தத்தவிவே முத்தி யென்ன வுரைசெய்தான் பிடகத்தி னுணர்வு மிக்கான். (௧௧௬)

(௧௧௫) பிறந்து வீந்து கதிமாறும் கணபங்க இயல்பு தன்னில் - (உயிர்கள் உய்தற்பொருட்டுப்) பிறந்து இறந்து அக்கதியினின்றும் மாறிப்பேரின்ப நிர்வாணத்தை யடையுங் கணபங்க இயலைக்கூறும் பௌத்தசமயத்தில். கணம்-நூறுதாமரை இதழ்களையடுக்கி ஊசியினால் குத்தினால் எட்டு இதழ்கள் அறும் எல்லை. (௧௧௬) உரு - மூர்த்தகந்தங்களாகிய ரூபகந்தம்; அது பிருதிவி, அப்பு, தேயு, வாயு எனும் பூதவுருக்கள் நான்கும், கடினம், சந்தம், இரதம், ரூபம் எனும் உபாதான வுருக்கள் நான்கும் ஆக எட்டுவகைப்படும். வேதனை - வேதனாகந்தம்; அது குசலாவேதனை, ( - சுக அறிவு,) அகுசலா வேதனை,( - துக்க அறிவு,) குசலாகுசலவேதனை ( - சுகதுக்க அறிவு) என மூவகைப்படும் குறிப்பு - குறிப்புக்கந்தம், அது சோத்திரம், துவக்கு, சக்ஷு, சிங்குவை, ஆக்கிராணமெனும் ஞானேந்திரியமைந்தும், சித்தமொன்றும் ஆக அறுவகைப்படும். செய்கை-பாவனாகந்தம், அது வாக்கின் தீக்குணங்களாய பொய்சொல்லல், கோட்சொல்லல், கோபித்துச்சொல்லல், பயனில்சொல் - காயத்தீக் குணங்களாய களவாடல்போதல், வறிதே தொழில்செயல், கொலைசெயல் - மனத்தீக் குணங்களாய கொலைநினைகை, காமப்பற்று, ஆசை எனுந் தீக்குணங்கள் பத்தும், வாக்கின் நற்குணங்களாய மெய்யுரை, நலவார்த்தை, இனியன்கூறல், பயன்படுசொல் - காய நற்குணங்களாய பணிவலம்வரல், தவம்புரிதல், தானஞ்செய்தல்-மன நற்குணங்களாய அருள்நினைவு, ஆசையறுத்தல், தவப்பற்று எனும் நற்குணங்கள் பத்தும் ஆக இருபதுவகைப்படும். நேர்நின்ற ஞானம் - விஞ்ஞானம், அது சத்தம், ஸ்பரிசம், ரூபம், ரசம், கந்தம், மனம் என அறுவகைப்படும் இவைகளின் விரிவை மணிமேகலை முதலிய புத்தநூற்களிற் காண்க. பிடகம் - இருபத்துநான்கு பௌத்தர்கள் மரபில் உபதேசக்கிரமத்தாற் செய்யப்பட்ட நூல். அது வினயபிடகம், சூத்திரபிடகம், அபிதம்மபிடகம் என மூவகைப்படும்.

ஆங்கவன்றா னுரைத்தமொழி கேட்ட வன்ப ரதனையனு வாதஞ்செய் தவனை நோக்கித், தாங்கியஞா னத்துடனுங் கந்த மைந்துந் தாம்வீந்து கெட்டனவேற் றலைவன் றானும், ஈங்குளனென் றவனுக்கு விடயமாக யாவையுமு னியற்றுதற்கு விகாரமேசெய், தோங்குவடி வமைத்துவிழ வெடுக்கும் பூசை கொள்வாரா ருரைக்கவென வுரைக்க லுற்றான் (௯௧௭)

கந்தமாம் வினையுடம்பு நீங்கி யெங்கோன் கலந்துளன்முத் தியிலென்றா னென்னக் காணும், இந்திரியங் கண்முதலாங் கரணந் தானு மில்லையே லவருணர்ச்சி யில்லை யென்றா, முந்தையறி விலனாகி யுறங்கி னானை நிந்தித்து மொழிந்துடன்மீ தாடி னார்க்கு, வந்தவினைப் பயன்போல வழிபட் டார்க்கு மருமன்றோ நன்மையென மறுத்துச் சொன்னார் (௯௧௮)

சொன்னவுரை கேட்டருளி யன்பர் தாமுந் தொடர்ந்தவழி பாடுபல கொள்கின் றானுக், கன்னவற்றி னுடன்பாடு மெதிர்வு மில்லை யானபோ தவன்பெறுத லில்லை யென்றா, முன்னவற்றி னுடன்பாடு மெதிர்வு மின்றி முறுத்துயி லுற்றானை முனிந்து கொன்றால், இன்னுயிர்போய்க் கொலையாகின் முடிந்த தன்றோ விப்படியா லெம்மிறைவற் செய்து மென்றார் (௯௧௯)

இப்படியா லெய்துமென விசைத்து நீபிய கெடுத்தாக்காட் டியத்துயிலு மியல்பி னான்போன், மெய்ப்படிய கரணங்க ளுபிர்தா மிங்கு வேண்டுதியா னும்மிறைவற் கான போது, செப்பியவக் கந்தத்தின் விளைவின் றாகித் திரிவில்லா முத்தியிற்சென் றிலனு மானான், அப்படியக் கந்தத்து ளறிவுங் கெட்டா லம்முத்தி யுடனின்ப மினையா தென்றார் (௯௨௦)

அவ்வுரைகேட் டெதிர்மாற்ற மறைவ தின்றி யணைந்துளனம் முத்தி யெனுமதுவும் பாழாங், கவ்வையினின் றவனையெதிர் நோக்கி ஞானக் கடலமுத மனையவர்தங் காத லன்பர், பொய்வகையே முத்தியினிற் போனான் முன்பே பொருளெல்லா முணர்ந்துரைத்துப் போனா னென்றா, லெவ்வகையா லவனெல்லா முணர்ந்த தீது மில்லதுரைப் பாயெனினு மேற்போ மென்றார் . (௯௨௧)

உணர்வுபொதுச் சிறப்பென்ன விரண்டின் முன்ன துளவான மரப்பொதுமை யுணர்த்த லேனைப், புணர்சிறப்பு மரங்களிலவைத் தின்ன தென்ற லிப்படியா லவரம்பில்லாப் பொருள்க ளெல்லாங், கொணருமிற் கினைக்குவைசெய் திடினும் வேறு குறைத்தவற்றைத் தனித்தனியே யிடினும் வெந்தீத், துணர்க்கதுவிச் சுடவல்ல வாறு போலத் தொகுத்தும்விரித் துந்தெரிக்குந் தொல்லோ னென்றான் (௯௨௨)

(௯௧௭) அனுவாதம் - முற்குறித்த பொருளைப்பற்றித் திரும்பச்சொல்லும் நியாயம். (௯௧௮) முந்தை அறிவு - முற்பட்ட விஞ்ஞானம். (௯௧௯) பெறுதல் - பூசையேற்றல். உடன்பாடு எதிர்வு - விருப்பு வெறுப்பு. (௯௨௧) கவ்வை - சிறுமை; துன்பம். (௯௨௨) தீத்துணர் - அக்கினிக்கொழுந்து.

எடுத்துரைத்த புத்தனெதி ரியம்பு மன்ப ரெரியுணர்வுக் கெடுத்துக்காட் டாகச் சொன்னாய், அடுத்தவுணா வுருவுடைய தன்று சொன்ன வனல்வடிவிற் றாமதுவு மறிதி நுங்கோன், றொடுத்தநிகழ் காலமே யன்றி யேனைத் தொடர்ந்தவிரு காலமுந்தொக் கறியு மாகிற், கடுத்தவெரி நிகழ்காலத் திட்ட தலலாற் காணாத காலத்துக் கதுவா தென்றார். (௯௨௩)

ஆதலினா லுன்னிறைவன் பொருள்க ளெல்லா மறிந்ததுநும் முத்திபோ லாயிற் றன்றே, யேதமா மிவ்வறிவா லுரைத்த நூலு மென்றவனுக் கேற்குமா றருளிச்செய்ய,வாதமா றொன்றின்றித் தோற்றான் புத்தன் மற்றவனை வென்றருளிப் புகலி மன்னர், பாதத்தா மரைபணிந்தா ரன்பர் தங்கள் பான் மையழி புத்தர்களும் பணிந்து வீழ்ந்தார் (௯௨௪)

புந்தியினா லவருரைத்த பொருளின் றன்மை பொருளன்றாம் படியன்பர் பொருந்தக் கூற, மந்தவுணர் வுடையவரை நோக்கிச் சைவ மல்லாது மற்றொன்று மில்லை யென்றே, யந்தமிலசீர் மறைகளா கமங்க ளேனை யகில கலைப் பொருளுணர்ந்தா ரருளிச் செய்யச், சிந்தையினி லதுதெளிந்து புத்தர் சணைத் திருமறையோர் சேவடிக்கீழ்ச் சென்று தாழ்ந்தார் (௯௨௫)

அன்றவர்க்குக் கவுணியர்கோன் கருணை நோக்க மணைதலினா லறிவின்மை யகன்று நீங்கி, முன்றொழுது விழுந்தெழுந்து சைவ ரானார் முகைமலர்மா ரியின்வெள்ளம் பொழிந்த தெங்கு, நின்றனவுஞ் சரிப்பனவுஞ் சைவ மேயா நிலைமையவர்க் கருள்செய்து சணைவை வேந்தர், சென்றுசிவ னூர்பதிகள் பணிய வேண்டித் திருக்கடவூ ரதன்மருங்கு சேர வந்தார். ()

வேறு.

அங்கரி லடியார்க ளெதிர்கொள்ளப் புக்கருளிக்
கொன்னவிலுங் கூற்றுதைத்தார் குரைகழல்கள் பணிந்தேத்தி
மன்னியமர்ந் துறையுநாள் வாகீச மாமுனிவர்
எங்கரி லெழுந்தருளிற் றென்றடியார் தமைவினவ. (௯௨௭)

அங்கவரு மடிபோற்றி யாண்டவரா செழுந்தருளிப்
பொங்குபுனற் பூந்துருத்தி நகரினைகட் போற்றிசைத்துத்
தங்குதிருத் தொண்டுசெயு மகிழ்ச்சியினாற் சார்ந்தருளி
யெங்குநிகழ்ந் திடவிருந்த படியெல்லா மியம்பினார் (௯௨௮)

அப்பரிசங் கவர்மொழிய வாண்டவர சினைக்கேணும்
ஒப்பரிய பெருவிருப்பு மிக்கோங்க வொளிபெருகு
மைப்பொருவு கறைக்கண்டர் கழல்வணங்கி யருள்பெற்றுச்
செப்பரிய புகழ்ப்புகலிப் பிள்ளையார் செல்கின்றார் (௯௨௯)

பூவிரியுந் தடஞ்சோலை புடைபரப்பப் புனல்பரக்குங்
காவிரியின் றென்கரைபோய்க் கண்ணுதலார் மகிழ்ந்தவிட
மேவியினி தமர்ந்திறைஞ்சி விருப்புறுமெய்த் தொண்டரொடு
நாவரசர் சூழ்ச்சணைவை நகரரசா நண்ணுவார். (௯௩௦)

அந்தணர்சூ ளாமணியார் பூந்துருத்திக் கணித்தாக
வந்தருளும் பெருவார்த்தை வாகீசர் கேட்டருளி
நந்தமையா ளுடையவரை நாமெதிர்சென் றிறைஞ்சுவது
முந்தைவினைப் பயனென்று முகமலர வகமலர்வார் (௯௩௧)

எதிர்சென்று பணிவனென வெழுகின்ற பெருவிருப்பால்
நதிதங்கு சடைமுடியார் நற்பதங்க டொழுதந்தப்
பதிநின்றும் புறப்பட்டுப் பரசமயஞ் சிதைத்தவர்பால்
முதிர்கின்ற பெருந்தவத்தோர் முன்னெய்த வந்தணைந்தார். (௯௩௨)

திருச்சின்னம் பணிமாறக் கேட்டநாற் றிசையுள்ளோர்
பெருக்கின்ற வார்வத்தாற் பிள்ளையார் தமைச்சூழ்ந்த
நெருக்கினிடை யவர்காணா வகைநிலத்துப் பணிந்துள்ளம்
உருகியெழு மனம்பொங்கத் தொண்டர்குழாத் துடனணைந்தார் (௯௩௩)

வந்தணைந்த வாகீசர் வண்புகலி வாழ்வேந்தர்
சந்தமணித் திருமுத்தின் சிவிகையினைத் தாங்கியே
சிந்தைகளிப் புறவருவார் திருஞான சம்பந்தர்
புந்தியினில் வேறொன்று நிகழ்ந்திடமுன் புகல்கின்றார் (௯௩௪)

அப்பர்தா மெங்குற்றா ரிப்பொழுதென் றருள்செய்யச்
செப்பரிய புகழ்த்திருநா வுக்கரசர் செப்புவார்
ஒப்பரிய தவஞ்செய்தே னாதலினா லும்மடிகள்
இப்பொழுது தாங்கிவரப் பெற்றுய்ந்தேன் யானென்றார் (௯௩௫)

அவ்வார்த்தை கேட்டஞ்சி யவனிமே லிழிந்தருளி
இவ்வாறு செய்தருளிற் றென்னாமென் றிறைஞ்சுதலும்
செவ்வாறு மொழிநாவர் திருஞான சம்பந்தர்க்
கெவ்வாறு செயத்தகுவ தென்றெதிரே யிறைஞ்சினார். (௯௩௬)

சூழ்ந்துமிடைந் தருகணையுந் தொண்டரெல்லா மதுகண்டு
தாழ்ந்துநில முறவணங்கி யெழுந்தங்கை தலைகுவித்து
வாழ்ந்துமனக் களிப்பினராய் மற்றிவரை வணங்கப்பெற்
றாழ்ந்தபிறப் புய்ந்தோமென் றண்டமெலா முறவார்த்தார். (௯௩௭)

திருஞான சம்பந்தர் திருநாவுக் கரசர்தமைப்
பெருகார்வத் தொடுமணைந்து தழீஇக்கொள்ளப் பிள்ளையார்
மருவாரு மலரடிகள் வணங்கியுடன் வந்தணைந்தார்
பொருவாரும் புனற்சடையார் மகிழ்ந்ததிருப் பூந்துருத்தி (௯௨௮)

அன்பர்குழாத் தொடுஞ்செல்வ ரானேற்றார் மகிழ்கோயின்
முன்பணித்தா கச்சென்று கோபுரத்தை முன்னிறைஞ்சித்
துன்பமிலாத் திருத்தொண்ட ருடன்றொழுது புக்கருளி
என்புருக வலங்கொண்டு பணிந்தேத்தி யிறைஞ்சினார். (௯௩௧)

பொய்யிலியா ரைப்பணிந்து போற்றியே புறத்தணைவார்
செய்யசடை யாரகோயிற் றிருவாயின் முன்னாக
மையறுசீர்த் தொண்டர்குழாம் வந்துபுடை சூழவுல
குய்யவரு வார்தாங்க ளுடன்மகிழ்ந்தங் கினிதிருந்தார். (கசo)

வேறு

வாக்கின் றனிமன்னர் வண்புகலி வேந்தர்தமைப்
போக்கும் வரவும் வினவப் புகுந்ததெல்லாந்
தூக்கின் றமிழ்விரகர் சொல்லிறந்த ஞானமறை
தேக்குந் திருவாயாற் செப்பி யருள்செய்தார் (கசக)

காழியினில் வந்த கவுணியர்தம் போரேற்றை
ஆழிமிசைக் கன்மிதப்பின் வந்தா ரடிவணங்கி
வாழிதிருத் தொண்டென்னும் வான்பயிர்தா னோங்குதற்குச்
சூழும் பெருவேலி யானீ ரெனத்தொழுதார். (கசஉ)

பிள்ளையார் தாமுமவர் முன்றொழுது பேரன்பின்
வெள்ள மனையபுகழ் மானியார் மேன்மையையுங்
கொள்ளும் பெருமைக் குலச்சிறையார் தொண்டினையும்
உள்ள பரிசெல்லா மொழிந்தங்கு வந்திருந்தார். (கசங)

தென்னற் குயிரோடு நீறளித்துச் செங்கமலத்
தன்ன மனையார்க்கு மமைச்சர்க்கு மன்பருளித்
துன்னுநெறி வைதிகத்தின் றூநெறியே யாக்குதலான்
மன்னுபுகழ் வாகீசர் கேட்டு மனமகிழ்ந்தார். (கசச)

சொல்லின் பெருவேந்தர் தொண்டைவள நாடெய்தி
மல்கு புகழ்க்காஞ்சி யேகாம் பரமன்னுஞ்
செல்வர் கழல்பணிந்து சென்றதெல்லாஞ் செப்புதலும்
புல்குநூன் மார்பரும்போய்ப் போற்றுந் திறம்புரிந்தார். (கசரு)

அங்கணரைப் போற்றியெழுந் தாண்ட வரசமர்ந்த
பொங்கு திருமடத்திற் புக்கங் கினிதமர்ந்து
திங்கட் பகவணியுஞ் சென்னியார் சேவடிக்கீழ்த்
தங்கு மனத்தோடு தாம்பரவிச் செல்லுநாள். (கசசு)

வாகீச மாமுனிவர் மன்னுதிரு வாலவாய்
நாக மரைக்கசைத்த நம்பர் கழல்வணங்கப்
போகும் பெருவிருப்புப் பொங்கப் புகலியின்மேல்
ஏகும் பெருங்காதல் பிள்ளையா ரேற்றெழுவார் (கசஎ)

பூந்துருத்தி மேவும் புனிதர்தமைப் புக்கிறைஞ்சிப்
போந்து திருவாயிற் புறத்தணைந்து நாவினுக்கு

வேந்தர் திருவுள்ள மேவவிடை கொண்டருளி
யேந்தலா ரெண்ணிறந்த தொண்டருட னேகினார் (கூசஅ)

மாடுபுனற் பொன்னி யிழிந்து வடகரையி
னீடுதிரு நெய்த்தான மையாறு நேர்ந்திறைஞ்சிப்
பாடுதமிழ் மாலைகளுஞ் சாத்திப் பரவிப்போ
யாடல் புரிந்தார் திருப்பழனஞ் சென்றணைந்தார் (கூசகூ)

செங்கண் விடையார் திருப்பழனஞ் சேர்ந்திறைஞ்சிப்
பொங்கிய காதலின்முன் போற்றும் பதிபிறவுந்
தங்கிப்போய்ச் சண்பைநகர் சார்ந்தார் தனிப்பொருப்பின்
மங்கை திருமுலைப்பா லுண்டருளும் வள்ளலார். (கூருo)

தென்னாட் டமணு சறுத்துத் திருநீறே
யந்நாடு போற்றுவித்தார் வந்தணையும் வார்த்தைகேட்
டெந்நாள் பணிவதென வேற்றெழுந்த மாமறையோர்
முன்னாக வேத முழங்க வெதிர்கொண்டார். (கூருக)

வேறு.

போத நீடுமா மறையவ ரெதிர்கொளப் புகலிகா வலருந்தஞ்
சீத முத்தணிச் சிவிகைநின் றிழிந்தெதிர் செல்பவர் திருத்தோணி
நாதர் கோயின்முன் றோன்றிட நகைமலர்க் கரங்குவித் திறைஞ்சிப்போ
யோத நீரின்மே லோங்குகோயிலின் மணிக் கோபுரஞ் சென்றுற்றார் (கூருஉ)

அங்க மாநிலத் தெட்டுற வணங்கிப்புக் கஞ்சலி முடியேறப்
பொங்கு காதலிற் புடைவலங் கொண்டுமுன் பணிந்துபோற் றெடுத்தோதித்
துங்க நீள்பெருந் தோணியாங் கோயிலை யருளினாற் றொழுதேறி
மங்கை யோடுடன் வீற்றிருந் தருளினார் மலர்க்கழல் பணிவுற்றார் (கூருந)

முற்று மெய்யெலாம் புளகங்கண் முகிழ்த்தெழ முகந்துகண் களிகூரப்
பற்று முள்ளமுள் ளலைத்தெழு மானந்தம் பொழிதரப் பணிந்தேத்தி
உற்றுமை சேர்வ தெனுந்திரு வியமக முவகையா லெடுத்தோதி
வெற்றி யாகமீ னவணவை யெதிர்ந்தி மிசைவரு காரெனன்பார் (கூருச)

---

### திருக்கழுமலம் - திரு - இயமகம்.

திருச்சிற்றம்பலம்

உற்றுமைசேர்வதுமெய்யினையேயுணர்வதுநின்னருள்மெய்யினையே
கற்றவர்காய்வதுகாமனையேகனல்விழிகாய்வதுகாமனையே
யற்றமறைப்பதுமுன்பணியேயமரர்கள்செய்வதுமுன்பணியே
பெற்றுமுகந்ததுகந்தனையேபிரமபுரத்தையுகந்தனையே.

பருமதில்மதுரைமன்னவையெதிரேபதிகமதெழுதிலையவையெதிரே
வருநதியிடைமிசைவருகரனேவசையொடுமலர்கெடவருகரனே

---

(கூருஉ) ஓத நீரின்மேல் - பிரளய சலத்தின்மேல்.

கருதலிலிசைமுரறருமருளேகழுமலமமரிறைதருமருளே
மருவியதமிழ்விரகன்மொழியேவல்லவர்தம்மிடாதிடர்மொழியே.

திருச்சிற்றம்பலம்

---

சீரின் மல்கிய திருப்பதி கத்தினிற் றிருக்கடைக் காப்பேற்றி
வாரின் மல்கிய வனமுலை யாளுடன் மன்னினார் தமைப்போற்றி
யாரு மின்னருள் பெற்றுமீண் டணைபவ ரங்கையாற் றொழுதேத்தி
ஏரின் மல்கிய கோயின்முன் பணிந்துபோந் திறைஞ்சினா மணிவாயில் ()

தாதை யாருமங் குடன்பணிந் தணைந்திடச் சணபையார் தனியேறு
மூதெ யிற்றிரு வாயிலைத் தொழுதுபோய் முகைமலர்க் குழலார்கள்
ஆத ரித்துவாழ்த் துரையிரு மருங்கெழ வணிமறு கிடைச்சென்று
காத லித்தவாக் கருள்செய்து தந்திரு மாளிகைக் கடைசார்ந்தார் (௯௫௬)

நறவ மார்பொழிற் புகலியி னண்ணிய திருஞான சம்பந்தர்
விறலி யாருட னீலகண் டப்பெரும் பாணர்க்கு மிகநல்கி
யுறையு ளாமவர் மாளிகை செலவிடுத் துள்ளணைந் தரும்போதில்
அறலி னோருழ லார்மணி விளக்கெடுத் தெதிர்கொள வணைவுற்றார். (௯௫௭)

அங்க ணைந்தரு மறைக்குலத் தாயர்வந் தடிவணங் கிடத்தாமுந்
துங்க நீள்பெருந் தோணியிற் றுயர்தாண் மனங்கொளத் தொழுவாராய்த்
தங்கு காதலி னங்கமர்ந் தருளுநாட் டமப்பான் கழல்போற்றிப்
பொங்கு மின்னிசைத் திருப்பதி கம்பல பாடினார் புகழ்ந்தேத்தி (௯௫௮)

நீல மாவிடந் திருமிடற் றடக்கிய நிமலரை நேரெய்துங்
கால மானவை யனைத்தினும் பணிந்துடன் கலந்தவன் பர்களோடுஞ்
சால நாள்களங் குறைபவர் தையலோ டுழுவிடக் குழைகம்பர்
கோல மார்தரக் கும்பிடு மாசைகொண் டெழுங்குறிப் பினரானார். (௯௫௯)

தண்ட கத்திரு நாட்டினைச் சார்ந்துநந் தம்பிரான் மகிழ்கோயில்
கண்டு போற்றிநாம் பணிவதென் றன்பருக் கருள்செய்வார் காலம்பெற்
றண்ட ருக்கறி வரும்பெருந் தோணியி லிருந்தவ ரருள்பெற்றுத் [யவார்
தொண்டர் சூழ்ந்துடன் புறப்படத் தொடர்ந்தெழுந் தாதையார் குறைசெ

அப்பர் நீரினி யிங்கொழிந் தருமறை யங்கிவேட் டன்போடுந்
துப்பு நேர்சடை யார்தமைப் பரவியே தொழுதிரு மெனச்சொல்லி

---

(௯௫௬) மூதெயில் - பழையமதில். (௯௫௭) அறலினோர் - கருமணலைப் போன்ற
(௯௬௰) தண்டகத்திருநாடு - தொண்டை நாடு. இதனை —"அண்டரும்புகழ் தண்டகா
ரணியம் தண்டகநாடாயது, தண்டகன் பின்னராண்டு தண்டகநாடாயப் பின்னர்த்,
தொண்டைமானாண்டு தொண்டை நாடெனத் துலங்கிற்றெனப், பண்டையன் படைப்
புத்தொட்டுப் பயிலுமித் தொண்டைநாடு" என்னும் விநாயக புராணத் திருச்செய்
யுளா லுணர்க. (௯௬௧) அங்கிவேட்டு - யாகங்களைச் செய்து. துப்புநேர் - பவளம்
போன்ற.

மெய்ப்பெ ருந்தொண்டர் மீள்பவர் தமக்கெலாம் விடைகொடுத் தருளிப்போய்
ஒப்பி லாதவர் தமைவழி யிடைப்பணிந் துருகுமன் பொடுசெல்வார். (௬௬௧)

செல்வ மல்கிய தில்லைமூ தூரினிற் றிருநடம் பணிந்தேத்திப்
பல்பெ ருந்தொண்ட ரெதிர்கொளப் பரமர்தந் திருத்தினை நகர்பாடி
அல்கு தொண்டர்க ளுடன்றிரு மாணி குழியினை யணைந்தேத்தி
மல்கு வார்சடை யார்திருப் பாதிரிப் புலியூரை வந்துற்றார். (௬௬௨)

கன்னி மாவனங் காப்பென விருந்தவர் கழலிணை பணிந்தங்கு
முன்ன மாமுடக் கான்முயற் கருள்செய்த வண்ணமு மொழிந்தேத்தி
மன்னு வார்பொழிற் றிருவடு கூரினை வந்தெய்தி வணங்கிப்போய்ப்
பின்னு வார்சடை யார்திரு வக்கரை பிள்ளையா ரணைவுற்றார் (௬௬௩)

---

## திருப்பாதிரிப்புலியூர் - பண் - செவ்வழி.

திருச்சிற்றம்பலம

முன்னநின் றம்முடக்கால்முயற்கருள்செய்துநீள்
புன்னைநின் றுகமழ்பாதிரிப்புலியூருளான்
றன்னைநின் றுவணங்குந்தனைத்தவமில்லிகள
பின்னைநின் றபிணியாக்கையைப்பெறுவாரகளே

அந்தணல்லாரகன்காழியுண்ஞானசம
பந்தனல்லார்பயில்பாதிரிப்புலியூர்தனுட்
சந்தமாலைத்தமிழ்பத்திவைதரித்தாரகணமேல்
வந்துதீயவ்வடையாமையாலவினைமாயுமே.

திருச்சிற்றம்பலம்

---

வக்க ரைப்பெரு மான்றனை வணங்கியங் கமருநா ளருளாலே
செக்கர் வேணியா ரிரும்பைமா காளமுஞ் சென்றுதாழ்ந் துடன்மீண்டு
மிக்க சீர்வள ரதிகைவீ ரட்டான மேவுவா ரம்முன்பு [றார
தொக்க மெய்த்திருத் தொண்டர்வந் தெதிர்கொளத் தொழுதெழுந் தணைவுற்

ஆதி தேவரங் கமர்ந்தவீ ரட்டானஞ் சென்றணை பவர்முன்னே
பூதம் பாடநின் றாடுவார் திருநடம் புலப்படும் படிகாட்ட
வேத பாரகா பணிந்துமெய் யுணர்வுட னுருகிய விருப்போடுங்
கோதி லாவிசை குலவுகுண் டைக்குறட் பூதமென் றெடுத்தேத்தி. (௬௬௫)

பரவி யேத்திய திருப்பதி கத்திசை பாடினார் பணிந்தங்கு
விரவு மன்பொடு மகிழ்ந்தினி துறைபவர் விமலரை வணங்கிப்போய்
அரவ நீர்ச்சடை யங்கணர் தாமகிழ்ந் துறைதிரு வாமாத்தூர்
சிரபு ரத்துவந் தருளிய திருமறைச் சிறுவர்சென் றணைவுற்றார். (௬௬௬)

சென்ற ணைந்துசிந் தையின்மகிழ் விருப்பொடு திகழ்திரு வாமாத்தூர்ப்
பொன்ற யங்குபூங் கொன்றையும் வன்னியும் புனைந்தவ ரடிபோற்றிக்

அங்க ணணைவார் பணிந்தெழுந்து போற்றி செய்தம் மலைமீது
தங்கு விருப்பில் வீற்றிருந்தார் தாட்டா மரைக டம்முடிமேற்
பொங்கு மார்வத் தொடும்புனைந்து புளக மலர்ந்த திருமேனி
யெங்கு மாகிக் கண்பொழியு மின்ப வருவி பெருகினார் (௯௭௧)

ஆதி மூர்த்தி கழல்வணங்கி யங்க ணினிதி னமருநாட்
பூத நாத ரவர்தம்மைப் பூவார் மலராற் போற்றிசைத்துக்
காத லாலத் திருமலையிற் சிலநாள் வைகிக் கமழ்கொன்றை
வேத கீதர் திருப்பதிகள் பிறவும் பணியும் விருப்புறுவார் (௯௭௨)

திருவண்ணாமலை - பண் - தக்கேசி.

திருச்சிற்றம்பலம்

பூவார்மலர்கொண்டடியார்தொழுவார்புகழ்வார்வானோர்கள
மூவார்புரங்களெரித்தவன்றுமூவர்க்கருள்செய்தார்
தூமாமழைநின்றதிரவெருவித்தொறுவின்னிரையோடும்
ஆமாம்பிணைவந்தணையுஞ்சாரலண்ணாமலையாரே

அல்லாடரவமியங்குஞ்சாரலண்ணாமலையாரை
நல்லார்பரவப்படுவான்காழிஞானசம்பந்தன
சொல்லான்மலிந்தபாடலானபத்தும்மிவைகற்று
வல்லாரெல்லாம்வானோர்வணங்கமன்னிவாழ்வாரே

திருச்சிற்றம்பலம்

மங்கை பாகர் திருவருளால் வணங்கிப் போந்து வடதிசையிற்
செங்க ணிடையார் பதிபலவும் பணிந்து புகலிச் செம்மலார்
துங்க வரைகள் கானபலவுங் கடந்து தொண்டைத் திருநாட்டிற்
றிங்கண் முடியா ரினிதமருந் திருவோத் தூரைச் சேர்வுற்றார். (௯௭௩)

தேவர் முனிவர்க் கோத்தளித்த திருவோத் தூரிற் றிருத்தொண்டர்
தாவில் சண்பைத் தமிழ்விரகர் தாமங் கணையக் களிசிறந்து
மேவுங் கதலி தோரணங்கள் விளக்கு நிரைத்து நிறைகுடமும்
பூவும் பொரியுஞ் சுண்ணமுமுன் கொண்டு போற்றி யெதிர்கொண்டார் ( )

சண்பை வேந்தர் தண்டரளச் சிவிகை நின்று மிழிந்தருளி
நண்பின் மிக்க சீரடியார் சூழ நம்பர் கோபுரஞ்சூழ்
விண்பி னோங்க முன்னோங்கும் வியன்பொற் புரிசை வலங்கொண்டு
பண்பு நீடிப் பணிந்தெழுந்து பரமர் கோயி லுள்ளடைந்தார் (௯௭௫)

வார ணத்தி னுரிபோர்த்த மைந்த ருமையாண் மணவாளர்
ஆர ணத்தி னுட்பொருளாய் நின்றார் தம்மு னணைந்திறைஞ்சி
நார ணற்கும் பிரமற்கு நண்ணற் கரிய கழல்போற்றுங்
கார ணத்தின் வருமின்பக் கண்ணீர் பொழியக் கைதொழுதார் (௯௭௬)

தொழுது விழுந்து பணிந்தெழுந்து சொன்மா லைகளாற் றுதிசெய்து
முழுது மானா ரருள்பெற்றுப் போந்து வைகி முதல்வர்தமைப்
பொழுது தோறும் புக்கிறைஞ்சிப் போற்றி செய்தங் கமர்வார்முன்
அழுது வணங்கி யொருதொண்ட ரமணர் திறத்தொன் றறிவிப்பார் (கூஎஎ)

அங்கை யனலேற் றவர்க்கடியே னாக்கும் பனைக ளானவெலா
மங்கு லுறநீண் டாண்பனையாய்க் காயா தாகக் கண்டமணர்
ஈங்கு நீரிட் டாக்குவன காய்த்தற் கடைவுண் டோவென்று
பொங்கு நகைசெய் திழித்துரைத்தா ரருள வேண்டு மெனப்புகல (கூஎஅ)

பரம ஞானர் திருத்தொண்டர் பண்பு நோக்கிப் பரிவெய்தி
விரவு காதலொடுமிரைந்து விமலர் கோயில் புக்கருளி
அரவு மதியும் பகைதீர வணிந்தார் தம்மை யடிவணங்கி
உரவு போற்றித் திருப்பதிக மிசையிற் பெருக வெடுத்தருளி (கூஎகூ)

விரும்பு மேன்மைத் திருக்கடைக்காப் பதனில் விமல ரருளாலே
குரும்பை யாண்பனை யீனு மென்னும் வாய்மை குலவுதலால்
நெருங்கு மேற்றுப் பனையெல்லா நிறைந்த குலைக ளாய்க்குரும்பை
அரும்பு பெண்ணை யாகியிடக் கண்டா ரெல்லா மதிசயித்தார் (கூஅ0)

---

**திருவோத்தூர் - பண் - பழந்தக்கராகம்.**
**ஆண்பனை பெண்பனையான திருப்பதிகம்.**
திருச்சிற்றம்பலம்

பூதேர்ந்தாயனகொண்டுநின்பொன்னடி, யேத்தாதாரில்லையெண்ணுங்கால்
ஓத்தூர்மேயவொளிமழுவாளங்கைக், கூத்தீருமகுணங்களே

குரும்பையாண்பனையீன்குலையோத்தூர், அரும்புகொன்றையடிகளைப்
பெரும்புகலியுண்ஞானசம்பந்தன்சொல், விரும்புவார்வினைவீடே.
திருச்சிற்றம்பலம்

---

சீரின் மன்னுந் திருக்கடைக்காப் பேற்றிச் சிவனா ரருள்பெற்றுப்
பாரி னீடு மாண்பனைமுன் காய்த்துப் பழுக்கும் பணியினால்
நேரு மன்பர் தங்கருத்து நேரே முடித்துக் கொடுத்தருளி
யாரு முவகைத் திருத்தொண்டர் போற்ற வங்க ணினிதமர்ந்தார் (கூஅக)

தென்னாட் டமணர் சாற்றார்தஞ் செய்கை கண்டு திகைத்தமணர்
அந்நாட் டதனை விட்டகல்வார் சிலர்தங் கையிற் குண்டிகைகள்
என்னு மவன்மற் றினவையென்று நகைப்பா ரிறைவ னேறுயர்த்த
பொன்னார் மேனிப் புரிசடையா னன்றே யென்று போற்றினார் (கூஅஉ)

பிள்ளை யாருந் திருவாக்கிற் பிறந்த வாலத் தாலமுமுன்
புள்ள பாசம் விட்டகல வொழியாப் பிறவி தனையொழித்துக

(கூஅங) தாலமும - பனைமரமும. உம - இழிவு சிறப்பு.

தொழுதுபல முறைபோற்றிச் சுராகுருவுக் கிளையமுனி
வழுவிறவம் புரிந்தேத்த மன்னினார் தமைமலர்ந்த
பழுதில்செழுந் தமிழ்மாலைப் பதிகவிசை புனைந்தருளி
முழுதுமளித் தவரருளாற் போந்தனார்முத் தமிழ்விரகர். (க00சு)

குன்றநெடுஞ் சிலையாளர் குலவியபல பதிபிறவும்
நின்றவிருப் புடனிறைஞ்சி நீடுதிருத் தொண்டருடன்
பொன்றயங்கு மணிமாடப் பூந்தராயப் புரவலனார்
சென்றணைந்தார் பழையனூர்த் திருவாலங் காட்டருகு (க00எ)

வேறு

இம்மையிலே புவியுள்ளோர் யாருங் காண வேழுலகும் போற்றிசைப்ப வெம்மை யாளும், அம்மைதிருத் தலையாலே நடந்து போற்று மம்மையப்பர் திருவாலங் காடா மென்று, தம்மையுடை யவர்மூதூர் மிதிக்க வஞ்சிச் சண்பைவருஞ் சிகாமணியார் சாரச் சென்று, செம்மைநெறி வழுவாத பதியின் மாட்டோர் செழும்பதியி லன்றிரவு பள்ளி சேர்ந்தார் (க00அ)

மாலையிடை யாமத்துப் பள்ளி கொள்ளு மறையவனார் தம்முன்பு கனவி லேவந், தாலவனத் தமர்ந்தருளு மப்பர் நம்மை யயர்த்தனையோ பாடுதற் கென்றருளிச் செய்ய, ஞாலமிரு ணீங்கவரும் பகலில் வேந்தர் நடுவிடையா மத்தினிடைத் தொழுது ணர்ந்து, வேலைவிட முண்டவர்தங் கருணை போற்றி மெய்யுருகித் திருப்பதிகம் விளம்ப லுற்றார் (க00கூ)

துஞ்சவரு வாரென்றே யெடுத்த வோசைச் சுருதிமுறை வழுவாமற் றொடுத்தபாடல், எஞ்சலிலாக் கைம்முறையே பழைய னூரா ரியம்புமொழி காத்தகதை சிறப்பித் தேத்தி, யஞ்சனமா கரிபுரித்தா ரருளா மென்றே யறிபுகழ்வைத் திருக்கடைக்காப் பமையச் சாத்தி, பஞ்சுரமாம் பழைய திறங்கிழமை கொள்ளப் பாடினார் பாரெலா முய்ய வந்தார் (க0க0)

---

## திருவாலங்காடு - பண் - தக்கராகம்.

திருச்சிற்றம்பலம்

துஞ்சவருவாருந்தொழுவிப்பாருமழுவிப்போய்
நெஞ்சம்புகுந்தென்னைநினைவிப்பாருமுனைநட்பாய்
வஞ்சப்படுத்தொருத்திவாணாள்கொள்ளும்வகைகேட்
டஞ்சும்பழையனூராலங்காட்டெம்மடிகளே.

சாந்தங்கமழுமறுகிற்சண்பைஞானசம்பந்த
னேந்தண்பழையனூராலங்காட்டெம்மடிகளை

(க00சு) சுராகுரு - தேவகுரு, வியாழ பகவான். இளையமுனி - [illegible].
(க00அ) அம்மை - காரைக்கால் அம்மையார். (க00கூ) அயர்த்தனையோ - மறந்தனையோ.

வேந்தனருளாலே விரித்தபாடலிவைவல்லார்
சேர்ந்தவிடமெல்லாந்தீர்த்தமாகச்சேர்வாரே.
திருச்சிற்றம்பலம்

நீடுமிசைத் திருப்பதிகம் பாடிப் போற்றி நெடுங்கங்கு லிருணீங்கி நிகழுங்காலை, மாடுதிருத் தொண்டர்குழா மணைந்த போது மாலையினிற் றிருவால வனத்து மன்னி, யாடுமவ ரருள்செய்த படியை யெல்லா மருளிச்செய் தகமலரப் பாடி யேத்திச், சேடர்பயி றிருப்பதியைத் தொழுது போந்து திருப்பாசூ ரதன்மருங்கு செல்ல லுற்றார் (௧௦௧௧)

திருப்பாசூ ரணைந்தருளி யங்கு மற்றச் செழும்பதியோ ரெதிர்கொள் ளச் சென்று புக்குப், பொருப்பரையன் மடப்பாவை யிடப்பாகத்துப் புராத னாவே யிடங்கொண்ட புனிதர் கோயில், விருப்பினுடன் வலங்கொண்டு புக்குத் தாழ்ந்து வீழ்ந்தெழுந்து மேனியெலா முகிழ்ப்ப நின்றே, யருட்கரு ணைத் திருவாள னாமஞ் சிந்தை யிடையாரென் றிசைப்பதிக மருளிச் செய்தார் (௧௦௧௨)

---

### திருப்பாசூர் - பண் - காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்

சிந்தையிடையார்தலையின்மிசையார்செஞ்சொலார்
வந்துமாலைவைகும்போழ்தென்மனத்துள்ளார்
மைந்தர்மணாளரென்னமகிழ்வாரூர்போலும்
பைந்தண்மாதவிச்சோலைசூழ்ந்தபாசூரே

ஞானமுணர்வான்காழிஞானசம்பந்தன்
தேனும்வண்டுமின்னிசைபாடுந்திருப்பாசூர்க்
கானமுறைவார்கழல்சேர்பாடலிவைவல்லார்
ஊனமிலராயுயர்பாவானத் திருப்பாசூர்

திருச்சிற்றம்பலம்

---

மன்னுதிருப் பதிகவிசை பாடிப் போற்றி வணங்கிப்போந் தப்பதியில் வைகிமாடு, பிஞ்ஞகர்தம் வெண்பாக்க முதலா யுள்ள பிறப்பதிகள் பணிந்தணைவார் பெருகு மன்பால், முன்னிறைந்த திருவாய்மஞ் சனமீ ராட்டு முதல்வேடர் கண்ணப்ப நாய னாரை, யுன்னியொளிர் காளத்தி மலைவணங்க வுறும் பெருவேட்கையுட னுவந்து சென்றார் (௧௦௧௩)

மிக்கபெருங் காதலுடன் றொண்டர் சூழ வெண்புனற்பொன் முகலியினைக் கண்டு வெற்புங் கானுந், தொக்கபெரு வன்புலங்க ளடைந்து போகிச் சூழ்வரைப்பா லக்கரைத்துச் சுடரு மேனி, முக்கண்முதற் றலைவனிட மாகி யுள்ள முகிலெருங்கு காரிகரை முன்னாச் சென்று, புக்கிறைஞ்சிப் போற்றிசைத்தப் பதியில் வைகிப் பூதியரோ டுடனமகிழ்ந்தார் புகலி வேந்தர் (௧௦௧௪)

இறைவர்திருக் காரிகரை யிறைஞ்சி யப்பா லெண்ணில்பெரு வரைகளிரு மருங்கு மெங்கு, நிறையருவி நிரைபலவாய் மணியும் பொன்னும் நிறைதுவலை புடைசிதறி நிகழ்ப வாகி, யறைகழல்வா னவர்க்கிறைவன் குலிச வேற்று லற்றசிறை பெற்றவன்மே லெழுவ தற்குச், சிறகடித்துப் பறக்கமுயன் றுயர்ந்த போலுஞ் சிலைநிலத்தி லெழுந்தருளிச் செல்லா நின்றார். ()

மாதவர்க ளொருங்குசூழாம் பரந்து செல்ல மணிமுத்தின் பரிச்சின்னம் வரம்பின் றாகப், பூதிநிறை கடலணைவ தென்னச் சண்பைப் புரவலனா ரெழுந்தருளும் பொழுது சின்னந், தீதிலொலி பலமுறையும் பொங்கி யெங்குந் திருஞான சம்பந்தன் வந்தா னென்னு, நாதநிறை செவியினவாய் மாக்க ளெல்லா நலமருவு நினைவொன்றாய் மருங்கு நண்ண (க௦கசு)

கானவர்தங் குலமுலகு போற்ற வந்த கண்ணப்பர் திருப்பாதச் செருப்புத் தோய, மானவரிச் சிலைவேட்டை யாடுங் கானும் வான்மறைய நிலைபெரிய மரமுந் தூறும், ஏனையிமை யோர்தாமு மிறைஞ்சி யேத்தி யெய்தவரும் பெருமையவா மெண்ணி லாத, தானமுமற் றவைகடந்து திருக்கா ளத்தி சாரவெழுந் தருளினார் சண்பை வேந்தர் (க௦கஎ)

அம்பொன்மலைக் கொடிமுலைப்பால் குழைத்த ஞானத் தமுதுண்ட பிள்ளையா ரணைந்தா ரென்று, செம்பொன்மலை வில்லியார் திருக்கா ளத்தி சேர்ந்திருந்த தொண்டர்குழா மடைய வீண்டிப், பம்புசடைத் திருமுனிவர் கபாலக் கையர் பலவேடச் சைவர்குல வேடர் மற்று, மும்பர்தவம் புரிவாரப் பதியி லுள்ளோ ருடன்விரும்பி யெதிர்கொள்ள வுழைச்சென் றுற்றார் ()

திசையனைத்து நீற்றின்பே ரொளி தழைப்ப மண்மேற் சிவலோக மணைந்ததெனச் சென்ற போது, மிசைவிளங்கு மணிமுத்தின் சிவிகை நின்றும் வேதபா ரகரிழிந்து வணங்கி மிக்க, அசைவில்பெருந் தொண்டர்குழாந் தொழுது போற்றி யரவென்னுமோ சையினண்ட நிறைப்ப வன்பால், இசைவிளங்குந் தமிழ்விரகர் திருக்காளத்தித் திருமலையிம் மலைகளில்யா தென்று கேட்டார் (க௦க௯)

வந்தணைந்த மாதவத்தோர் வணங்கித் தாழ்ந்து மறைவாழ்வே சைவசிகா மணியே தோன்றும், இந்தமலை காளத்தோ டத்தி தம்மி லிகலிவழி பாடுசெய் திறைவ ரேயும், அந்தமில்சீர்க் காளத்தி மலையா மென்ன அவனிமேற் பணிந்தெழுந்தஞ் சலிமேற் கொண்டு, சிந்தைகளி மகிழ்ச்சிவரத் திருவிராகம் வானவர்க டானவரென் றெடுத்துச் செல்வார் (க௦உ௦)

---

(௲கரு) அருவிநிரை - சிற்றாறுகளின் வரிசைகள். அவன்மேல் எழுவதற்கு - அவனிடத்திற் சென்று போர்செய்ய எழும்படி. சிலைநிலம் - குறிஞ்சிநிலம். (௲கஎ) மானவரிச்சிலை - வலிமையோடு வரிந்துகட்டிய வில்லால். (௲உ௰) காளத்தோடு அத்திதம்மில் இகலி - பாம்போடு யானை பகைத்து.

**திருக்காளத்தி - திருவிராகம் - பண் - சாதாரி.**

திருச்சிற்றம்பலம்

வானவர்கடானவர்கள்வாதைபடவந்தொருமாகடல்விடந்
தானமுதுசெய்தருள்புரிந்தசிவன்மேவுமலைதன்னைவினவில்
ஏனமினமானினொடுகிள்ளைதினைகொள்ளவெழிலார்கவணினாற்
கானவர்தமாமகளிர்கனகமணிவிலகுகாளத்திமலையே

காடதிடமாகநடமாடுசிவன்மேவுகாளத்திமலையை
மாடமொடுமாளிகைகணீடுவளர்கொச்சைவயமன்னுதலைவ
னாடுமலிநீடுபுகழ்ஞானசம்பந்தனுரைநல்லதமிழின்
பாடலொடுபாடுமிசைவல்லவர்களல்லர்பரலோகமெளிதே.

திருச்சிற்றம்பலம்.

---

திருந்தியவின் னிசைவகுப்புத் திருக்கண்ணப்பர் திருத்தொண்டு சிறப்பித்துத் திகழப் பாடிப், பொருந்துபெருந் தவர்கூட்டம் போற்ற வந்து பொன்முகலிக் கரையணைந்து தொழுது போகி, யருந்தவர்க ளெம்மருங்கு மிடைந்து செல்ல வாளுடைய பிள்ளையா ரயன்மா றேடு, மருந்துவெளி யேயிருந்த திருக்காளத்தி மலையடிவா ரஞ்சார வந்து தாழ்ந்தார் (க0உக)

தாழ்ந்தெழுந்து திருமலையைத் தொழுது கொண்டே தடஞ்சிலா தலசோபானத்தா லேறி, வாழ்ந்திமையோர் குழாநெருங்கு மணிநீள் வாயின் மருங்கிறைஞ்சி யுட்புகுந்து வளர்பொற் கோயில், சூழ்ந்துவலங் கொண்டிறைவர் திருமுன் பெய்தித் தொழுதலைமேற் கொண்டு செங்கை போற்றி, வீழ்ந்தெழுவார் கும்பிட்ட பயன்காண் பார்போன் மெய்வேடர் பெருமானைக் கண்டு வீழ்ந்தார் (க0உஉ)

உள்ளத்திற் றெளிகின்ற வன்பின் மெய்ம்மை யுருவினையு மவ்வன்பி னுள்ளே மன்னும், வெள்ளச்செஞ் சடைக்கற்றை நெற்றிச் செங்கண் விமலரையு முடன்கண்ட விருப்பும் பொங்கிப், பள்ளத்தில் விழிபுனல்போற் பரந்து செல்லப் பைம்பொன்மலை வல்லிபரிந் தளித்த செம்பொன், வள்ளத்தில் ஞானவா ரமுத முண்டார் மகிழ்ந்தெழுந்து பலமுறையும் வணங்கு கின்றார் (க0உ௩)

பங்கயக்கண் ணருவிநீர் பாய நின்று பாவுமிசைத் திருப்பதிகம் பாடி யாடித், தங்குபெருங் களிகாதல் தகைந்து தட்பத் தம்பெருமான் கழல்போற் றுந் தன்மை நீட, அங்கரிதிற் புறம்போந்தங் கயன்மால் போற்ற வரியார்தந் திருமலைக்கீ ழணைந்தி றைஞ்சிப், பொங்குதிருத் தொண்டர்மடங் காட்ட வங்குப் புக்கருளி யினிதமர்ந்தார் புகலி வேந்தர். (க0உச)

யாவர்களு மறிவரிய விறைவன் றன்னை யேழுலகு முடையானை யெண்ணி லாத, தேவர்கடம் பெருமானைத் திருக்காளத்தி மலையின்மிசை வீற்றிருந்த செய்ய தேனைப் பூவலரும் பொழில்புடைசூழ் சண்பை யாளும்

---

(கூஉச) தட்ப - தடுக்க.

புரவலனூர் காலங்க டோறும் புக்குப், பாவலர்கொண் டடிபோற்றிப் பருகி
யார்ந்து பண்பினிய திருப்பதியிற் பயிலு நாளில் (௧௦௨௫)

அங்கண்வட திசைமேலுங் குடக்கின் மேலு மருந்தமிழின் வழக்கங்கு
நிகழா தாகத், திங்கள்புனை முடியார்தந் தானந் தோறுஞ் சென்றுதமிழ் பாட
லுறுஞ் செய்கை போல, மங்கையுடன் வானவர்கள் போற்றி சைப்ப வீற்றி
ருந்தார் வடகயிலை வணங்கிப் பாடிச், செங்கமல மலர்வாவித் திருக்கே தாரந்
தொழுதுதிருப் பதிகவிசை திருந்தப் பாடி (௧௦௨௬)

கூற்றுதைத்தார் மகிழ்ந்தகோ கரணம் பாடிக் குலவுதிருப் பருப்பதத்
தின் கொள்கை பாடி, யேற்றின்மிசை வருவாரிந் திரன்ற னீல பருப்பத
மும் பாடிமற் றிறைவர் தானம், போற்றியசொன் மலர்மாலை பிறவும் பாடிப்
புகலியர்தம் பெருந்தகையார் புனித மாகு, நீற்றினணி கோலத்துத் தொண்
டர் சூழ நெடிதுமகிழ்ந் தப்பதியி னிலவு கின்றார். (௧௦௨௭)

தென்றிசையிற் கயிலையெனுந் திருக்கா ளத்தி போற்றியினி தமர்கின்
றார் திரைசூழ் வேலை, யொன்றுதிரு வொற்றியூ ருறைவார் தம்மை யிறைஞ்
சுவது திருவுள்ளத்து துன்னி யங்கண், இன்றமிழின் விரகருள் பெற்று
மீள்வா ரெந்தையா ரிணையடியென் மனத்த வென்று, பொன்றரளங் கொழித்
திழிபொன் முகலி கூடப் புனைந்ததிருப் பதிகவிசை போற்றிப் போந்தார்.

மன்னுபுகழ்த் திருத்தொண்டர் குழாத்தி னோடு மறைவாழ வந்தவர்தா
மலையுங் கானு, முன்னணைந்த பதிபிறவுங் கடந்து போந்து முதல்வனா ருறை
பதிகள் பலவும் போற்றிப், பன்மணிகள் பொன்வரன்றி யகிலுஞ் சந்தும்
பொருதலைக்கு நம் பாலியட கரையி னீடு, சென்னிமதி யணிவார்தந் திருவேற்
காடு சென்றணைந்தார் திருஞான முண்ட செல்வர். (௧௦௨௯)

திருவேற்கா டமர்ந்தசெழுஞ் சுடர்ப்பொற் கோயில் சென்றணைந்து
பணிந்துதிருப் பதிகம் பாடி, வருவேற்று மனத்தவுணர் புரங்கள் செற்றார்
வலிதாயம் வந்தெய்தி வணங்கிப் போற்றி, யுருவேற்றா ரமர்ந்துறையு மொற்றி
வேலை யொற்றியூர் கைதொழச்சென் றுற்ற போது, பெருவேட்கை தரு
வாழ்வு பெற்ற தொண்டர் பெரும்பதியோ ரெதிர்கொள்ளப் பேணி வந்தார்.

மிக்கதிருத் தொண்டர்தொழு தணையத் தாமுந் தொழுதிழிந்து விடை
யவனென் றெடுத்துப் பாடி, மைக்குலவு கண்டத்தார் மகிழ்ந்த கோயின்
மன்னுதிருக் கோபுரத்து வந்து தாழ்ந்து, தக்கதிருக் கடைக்காப்புச் சாற்
றித் தேவர் தம்பெருமான் றிருவாயி லூடு சென்று, புக்கருளி வலங்கொண்டு
புனிதர் முன்பு போற்றெடுத்துப் படியின்மேற் பொருந்த வீழ்ந்தார் ()

பொற்றிரள்கள் போற்புரிந்த சடையார் தம்பாற் பொங்கியெழுங்
காதன்மிகப் பொழிந்து விம்மிப், பற்றியெழு மயிர்ப்புளக மெங்கு மாகிப்
பரந்திழியுங் கண்ணருவி பாய நின்று, சொற்றிகழுந் திருப்பதிகம் பாடி

(௲௨௬) குடக்கு - மேற்கு.

யேத்தித் தொழுதுபுறத் தணைந்தருளித் தொண்டர் பாடும், ஒற்றிநகர் காத
லித்தங் கினிதுறைந்தா ருலகுய்ய வுலவாத ஞான முண்டார் (௧௦௯௨)

வேறு

இன்ன தன்மையிற் பிள்ளையா ரிருந்தன ரிப்பாற்
பன்னு தொல்புகழ்த் திருமயி லாபுரிப் பதியின்
மன்னு சீர்ப்பெரு வணிகர்தந் தோன்றலார் சிறந்து
முன்ன மெய்த்திருத் தொண்டினி னிகழ்ந்தவர் மொழிவாம். (௧௦௯௩)

அருநி தித்திறம் பெருக்குதற் கருங்கலம் பலவும்
பொருக டற்செலப் போக்கியப் பொருட்குவை நிரம்ப
வருமரக்கல மனைப்படப் பணைக்கரை நிரைக்கும்
இருநி திப்பெருஞ் செல்வத்தி னெல்லையில் வளத்தார் (௧௦௯௪)

தம்மை யுள்ளவா றறிந்தபின் சங்கரற் கடிமை
மெய்ம்மை யேசெயும் விருப்புடன் மிக்கதோ ரன்பால்
பொய்ம்மை நீக்கிமெய்ப் பொருளிது வெனக்கொளு முள்ளச்
செம்மை யேபுரி மனத்தினர் சிவநேச ரென்பார் (௧௦௯௫)

கற்றை வார்சடை முடியினா ரடியவர் கலப்பில்
உற்ற செய்கையி லொழிவின்றி யுருகிய மனமும்
பற்றி லாநெறிப் பரசம யங்களைப் பாற்றுஞ்
செற்ற மேவிய சீலமு முடையரா யத்திகழ்வார் (௧௦௯௬)

ஆன நாள்செல வருமறைக் கவுணியர் பெருமான்
ஞான போனக நுகர்ந்தது நானிலம் முய்ய
ஏனை வெஞ்சமண் சாக்கிய மிழித்தழித் ததுவும்
ஊன மில்புக ழடியார்பாற் கேட்டுவந் துளராய் (௧௦௯௭)

செல்வ மல்கிய சிரபுரத் தலைவர்சே வடிக்கீழ்
எல்லை யில்லதோர் காதலி னிடையறா வுணர்வால்
அல்லு நண்பக லும்புரிந் தவரருட் டிறமே
சொல்ல வுஞ்செயல் கேட்கவுந் தொழிலின ரானார் (௧௦௯௮)

நிகழு மாங்கவர் நிதிப்பெருங் கிழவனின் மேலாய்த்
திகழு நீடிய திருவினிற் சிறந்துள ராகிப்
புகழு மேன்மையி லுலகினிற் பொலிந்துளா ரெனினும்
மகவி லாமையின் மகிழ்மனை வாழ்க்கையின் மருண்டு. (௧௦௯௯)

அரிய நோன்மையி லருந்தவம் புரிந்தர னடியார்க்
குரிய வாசனை யுலப்பில செய்தவந் நலத்தால்
கரிய வார்குழல் மனைவியார் வயிற்றினுங் கமலத்
துரிய பூமக ளனையதோர் பெண்கொடி யுதித்தாள் (௧௧௦௦)

(௧௦௯௨) உலவாத - கெடாத (௧௦௯௪) கலம் - கப்பல்கள். பணை - சமுத்திரம்.

நல்ல நாள்பெற வோரையி னலமிக வுதிப்பப்
பலபெ ருங்கிளை யுடன்பெரு வணிகர்பார் முழுதும்
எல்லை யிற்றன முகந்துகொண் டியாவரு முவப்ப
மல்ல லாவண மறுகிடைப் பொழிந்துள மகிழ்ந்தார் (௧௦௪௧)

ஆறு சூடிய முடியினா ரடியவர்க் கன்பால்
ஈறி லாதபூ சனைகள்யா வையுமிகச் செய்து
மாறி லாமறை யவர்க்குவேண் டினவெலா மளித்துப்
பேறு மற்றிது வெனும்படி பெருங்களி சிறந்தார். (௧௦௪௨)

சூத நல்வினை மங்கலத் தொழின்முறை தொடங்கி
வேத நீதியில் விதியுளி வழாவகை விரித்த
சாத கத்தொழிற் சடங்குகள் தசதினஞ் செல்லக்
காதன் மேவிய சிறப்பினிற் கடிவிழா வயர்ந்தார். (௧௦௪௩)

யாவ ரும்பெரு மகிழ்ச்சியா லின்புறப் பயந்த
பாவை நல்லுறுப் பணிகளின் பண்பெலா நோக்கிப்
பூவி னாளென வருதலிற் பூம்பாவை யென்றே
மேவு நாமமும் விளம்பினார் புவியின்மேல் விளங்க. (௧௦௪௪)

திங்க டோறுமுன் செய்யுமத் திருவளர் சிறப்பின்
மங்க லம்புரி நல்வினை யாட்டையிற் பெருக
அங்கண் மாநக ரமைத்திட வாண்டெதி ரணைந்து
தங்கு பேரொளிச் சீறடி தளர்நடை பயில. (௧௦௪௫)

தளரு மின்னினங் குரவென தமனியக் கொடியின்
வளரி ளந்தளிர்க் கிளையென மணிகிள ரொளியின்
அளவி லஞ்சுடர்க் கொழுந்தென வணைவுறும் பருவத்
திளவ னப்பிணை யனையவர்க் கேழியாண் டெய்த (௧௦௪௬)

அழகின் முன்னிளம் பதமென வணிவிளக் கென்ன
விழவு கொண்டெழும் பேதைய ருடன்விளை யாட்டிற்
கழங்கொ டம்மனை கந்துக மென்றுமற் றினைய
மழலை மென்கிளிக் குலமென மனையிடை யாடி. (௧௦௪௭)

பொற்றொ டிச்சிறு மகளிரா யத்தொடும் புணர்ந்து
சிற்றின் முற்றவு மிழைத்துட னடுந்தொழிற் சிறுசோ
றுற்ற வுண்டிகள் பயின்றொளி மணியூச லாடி
மற்று மின்புறு வண்டலாட் டயர்வுடன் வளர (௧௦௪௮)

தந்தை யாருமத் தளரிளங் கொம்பனா டகைமை
யிந்த வையகத் தின்மையா லின் புறு களிப்பு

(௧௦௪௩) சூதநல்வினை - பிரசவகாலத்திற் செய்யுங்கருமங்கள். (௧௦௪௭) கந்துகம் - பந்து. (௧௦௪௮) ஆயத்தொடும் - குழாத்தோடு.

நாலு தந்தமு மென்புறக் கவர்ந்துநஞ் சுகுத்து
மேலெ ழும்பணம் விரித்துநின் றாடிவே றடங்க
நீல வல்விடந் தொடர்ந்தெழ நேரிழை மென்பூ
மாலை தீயிடைப் பட்டது போன்றுள மயங்கி (க0ருஅ)

தரையில் வீழ்தரச் சேடியா வெருக்கொண்டு தாங்கி
வரைசெய் மாடத்தி னுட்கொடு புகுந்திட வணிகர்
உரையு முள்ளமு நிலையழிந் துறுதுயர் பெருக்கக்
கரையில் சுற்றமுந் தாமுமுன் கலங்கினார் கலுழ்ந்தார். (க0ருக)

விடந்தொ லைத்திடும் விஞ்சையிற் பெரியவர் மேலோர்
அடர்ந்த தீவிட மகற்றுதற் கணைந்துளா ரனேகர்
திடங்கொண் மந்திரந் தியானபா வகநிலை முட்டித்
தொடர்ந்த செய்வினைத் தனித்தனித் தொழிலராய்ச் சூழ்வார் (க0சு0)

மருந்து மெண்ணில மாறில செய்யவும் வலிந்து
பொருந்து வல்விட மேழுவே கமுமுறை பொங்கிப்
பெருந்த டங்கண்மென் கொடியனு டலைநிசைப் பிறங்கித்
திருந்து செய்வினை யாவையுங் கடந்துதீர்ந் திலதால் (க0சுக)

ஆவி தங்குபல் குறிகளு மடைவில வாக
மேவு காருட விஞ்சைவித் தகரிது விதியென்
றேவும் வேலையி லுறுபெருஞ் சுற்றமு மலறிப்
பாவை மேல்விழுந் தழுதனர் படரொலிக் கடல்போல் (க0சுஉ)

சிந்தை வெந்துய ருறுசிவ நேசருந் தெளிந்து
வந்த செய்வினை யின்மையில் வையகத் துள்ளோர்
இந்த வெவ்விட மொழிப்பவர்க் கீவனென் னுடைய
வந்த மிந்நிதிக் குவையெனப் பறையறை வித்தார் (க0சுங)

முரசி யம்பலு மூன்றுநா ளகவயின் முற்ற
அரசர் யாங்குளோ ருட்பட வவனிமே லுள்ள
கரையில் கலவியோர் யாவரு மணைந்துதங் காட்சிப்
புரையில் செய்கையிற் றீர்ந்திடா தொழிந்திடப் போனார் (க0சுச)

சீரின் மன்னிய சிவநேசர் கண்டுள மயங்கிக்
காரின் மல்கிய சோலைசூழ் கழுமலத் தலைவர்
சாரு மவ்வள வும்முடற் றழலிடை யடக்கிச்
சேர வென்பொடு சாம்பல்சே மிப்பது தெளிவார். (க0சுரு)

உடைய பிள்ளையார்க் கெனவிவ டனையுரைத் ததனால்
அடைவு துன்புறு வதற்கிலை யாமெனக் கென்றே

(ருக) வெருக்கொண்டு-அச்சமுற்று. (சுஉ) காருடவிஞ்ஞை வித்தகர்-கருட நூலுணர்ச்சியில் மிக்கவர்.

யிடரொ ழிந்தபின் னடக்கிய வென்பொடு சாம்பல்
புடைபெ ருத்தகும் பத்தினிற் புகப்பெய்து வைப்பார் (௧0௬௬)

கன்னி மாடத்தின் முன்புபோற் காப்புற வமைத்துப்
பொன்னு முத்துமே லணிகலன் பூந்துகில் சூழ்ந்து
பன்னு தூவியின் பஞ்சணை விரைப்பள்ளி யதன்மேன்
மன்னு பொன்னரி மாலைக ளணிந்துவைத் தனரால் (௧0௬௭)

மாலை சாந்தொடு மஞ்சன நாடொறும் வழாமைப்
பாலி னேர்தரும் போனகம் பகலவிளக் கினைய
சாலு நன்மையிற் றருவன நாடொறுஞ் சமைத்தே
யேலு மாசெய யாவரும் வியப்பெய்து நாளில். (௧0௬அ)

சண்பை மன்னவர் திருவொற்றி யூர்நகர் சார்ந்து
பண்பு பெற்றநற் றொண்டர்க ளுடன்பணிந் திருந்த
நண்பு மிக்கநல் வார்த்தையந் நற்பதி யுள்ளோர்
வண்பு கழ்ப்பெரு வணிகர்க்கு வந்துரை செய்தார் (௧0௬௯)

சொன்ன வர்க்கெலாந் தூசொடு காசுபொன் னளித்தே
யின்ன தன்மைய ரெனவொண்ணு மகிழ்சிறந் தெய்தச்
சென்னி வாழ்மதி யார்திரு வொற்றியூ ரளவுந்
துன்னு நீணடைக் காவணந் துகிலவிதா னித்து (௧0எ0)

மகர தோரணம் வண்குலைக் கமுகொடு கதலி
நிகரில் பலகொடித் தாமங்க ளணிபெற நி...த்து
நகர நீண்மறு கியாவையு நலம்புனை யணியாற்
புகரில் பொன்னுல கிழிந்ததா மெனப்பொலி வித்தார் (௧0எ௧)

இன்ன வாறணி செய்துபல் குறைவறுப் பேவி
முன்ன மொற்றியூர் நகரிடை முத்தமிழ் விரகர்
பொன்ன டித்தலந் தலைமிசை புனைவனென் றெழுவார்
அந்த காப்பெருந் தொண்டரு முடனெ... வணைந்தார் (௧0எ௨)

ஆய வேலையி லருமறைப் புகலியர் பிரானு
மேய வொற்றியூர் பணிபவர் வியனக ரகன்று
காயல் சூழ்கரைக் கடன்மயி லாபுரி நோக்கித்
தூய தொண்டர்தங் குழாத்தொடு மெதிர்வந்து தோன்ற (௧0எ௩)

மாறில் வண்பெரு வணிகருந் தொண்டரு மலர்ந்த
நீறு சேர்தவக் குழாத்தினை நீளிடைக் கண்டே
யாறு சூடினார் திருமக னாரணைந் தாரென்
றீறி லாததோர் மகிழ்ச்சியி னுல்விழுந் திறைஞ்ச (௧0எ௪)

காழி நாடருங் கதிர்மணிச் சிவிகைநின் றிழிந்து
சூழி ரும்பெருந் தொண்டர்முன் றொழுதெழுந் தருளி

வாழி மாதவர் வணிகர்செய் திறஞ்சொலக் கேட்டே
யாழி சூழ்மயி லாபுரித் திருநக ரணைந்தார் (க0எரு)

அந்தி றத்துமுன் னிகழ்ந்தது திருவுளத் தடைத்துச்
சிந்தை மின்புறு சிவநேசர் தஞ்செயல் வாய்ப்பப்
பொய்த்த வச்சமண் சாக்கியர் புறத்துறை யழிய
வைத்த வப்பெருங் கருணைநோக் கானமகிழ்ந் தருளி (க0எசு)

கங்கை வார்சடை யார்கபா லீச்சரத் தணைந்து
துங்க நீள்சுடர்க் கோபுரந் தொழுதுபுக் கருளி
மங்கை பங்கர்தங் கோயிலை வலங்கொண்டு வணங்கிச்
செங்கை சென்னிமேற் குவிந்திடத் திருமுன்பு சேர்ந்தார். (க0எஎ)

தேவர் தேவனைத் திருக்கபா லீச்சரத் தமுதைப்
பாவை பாகனைப் பரிவுறு பண்பினாற் பரவி
மேவு காதலின் விரும்பிய விரைவினால் விழுந்து
நாவின் வாய்மையிற் போற்றினார் ஞானசம் பந்தர் (க0எஅ)

போற்றி மெய்யருட் டிறம்பெறு புரிவுடன் வணங்கி
நீற்றின் மேனியி னிறைமயிர்ப் புளகங்க ணெருங்கக்
கூற்ற டாத்தவர் கோயிலின் புறம்புபோந் தருளி
யாற்று மின்னருள் வணிகர்மேற் செலவருள் செய்வார் (க0எகூ)

ஒருமை யுய்த்தநல் லுணர்வினீ ருலகவ ரறிய
அருமை யாற்பெறு மகளென்பு நிறைத்தவக் குடத்தைப்
பெருமயா னத்து நட்டம்புரி வார்பெருங் கோயிற்
றிருமதிற் புற வாய்தலிற் கொணர்கென்று செப்ப (க0அ0)

அந்த மில்பெரு மகிழ்ச்சியில் வணிகர்மேற் பணிந்து
வந்து தந்திரு மனையினின் மேவியம் மருங்கு
கந்த வார்பொழிற் கன்னிமா டத்தினிற் புக்கு
வெந்த சாம்பலோ டென்புசேர் குடத்தைவே றெடுத்து (க0அக)

மூடு பன்மணிச் சிவிகையுட் பெய்துமுன் போத
மாடு சேடிய ரினம்புடை சூழ்ந்துவந் தணைய
ஆடன் மேவினார் திருக்கபா லீச்சர மணைந்து
நீடு கோபுரத் தெதிர்மணிச் சிவிகையை நீக்கி (க0அஉ)

அங்க ணாளர்த மபிமுகத் தினிலடி யுறைப்பான்
மங்கை யென்புசேர் குடத்தினை வைத்துமுன் வணங்கப்
பொங்கு நீள்புனற் புகலிகா வலர்புவ னத்துத்
தங்கி வாழ்பவர்க் குறுதியா நிலைமைசா திப்பார் (க0அந)

மாட மோங்கிய மயிலைமா நகருளார் மற்றும்
நாடு வாழ்பவர் நன்றியில் சமயத்தி னுள்ளோர்
மாடு சூழ்ந்துகாண் பதற்குவந் தெய்தியே மலிய
நீடு தேவர்க ளேனையோர் விசும்பிடை நெருங்க (க0அச)

தொண்டர் தம்பெருங் குழாம்புடை சூழ்தரத் தொல்லை
யண்டர் நாயகர் கோபுர வாயிலி னணைந்து
வண்டு வார்குழ லாளென்பு நிறைந்தமட் குடத்தைக்
கண்டு தம்பிரான் கருணையின் பெருமையே கருதி (க0அரு)

இந்த மாநிலத் திறந்துளோ ரென்பினைப் பின்னு
நந்து நன்னெறிப் படுத்திட நன்மையாந் தன்மை
யந்த வெண்பொடி தொடர்ச்சியா மெனவரு ளேற்றுச்
சிந்து மங்கமங் குடையபூம் பாவைபேர் செப்பி (க0அ௬)

மண்ணி னிற்பிறந் தார்பெறும் பயன்மதி சூடும்
அண்ண லாரடி யார்தமை யமுதுசெய் வித்தல்
கண்ணி னாலவர் நல்விழாப் பொலிவுகண் டார்தல்
உண்மை யாமெனி லுலகர்முன் வருகென வுரைப்பார் (க0அ௭)

மன்னு வார்சடை யாரைமுன் னெழுதுமட் டிட்ட
என்னு நற்பதி கத்தினிற் போதியோ வென்னும்
அன்ன மெய்த்திரு வாக்கெனு மமுதமவ் வங்கந்
துன்ன வந்துவந் துருவமாயத் தொகுத்தக் குடத்துள் (க0அஅ)

ஆன தன்மையி னத்திருப் பாட்டினி னிடையே
போன வாயுவும் வடிவமும் பொலிவொடு நிரம்பி
யேனை யக்குடத் தடங்கிமு னிருந்தெழு வதன்முன்
ஞான போனகர் பின்சமண் பாட்டினை நவில்வார் (க0அ௯)

தேற்ற மில்சமண் சாக்கியத் திண்ணரிச் செய்கை
யேற்ற தன்றென வெடுத்துரைப் பாவென்ற போது
கோற்றொ டிச்செங்கை தோற்றிடக் குடமுடைந் தெழுவாள்
போற்று தாமரைப் போதவிழ்ந் தெழுந்தனள் போன்றாள் (க0௯0)

எடுத்த பாட்டினில் வடிவுபெற் றிருநான்கு திருப்பாட்
டடுத்த வம்முறைப் பன்னிரண் டாண்டள வணைந்து
தொடுத்த வெஞ்சமண் பாட்டினிற் றோன்றிடக் கண்டு
விடுத்த வேட்கையர் திருக்கடைக் காப்புமேல் விரித்தார் (க0௯க)

### திருமயிலை பூம்பாவை திருப்பதிகம் - பண் - சீகாமரம்.

திருச்சிற்றம்பலம்

மட்டிட்டபுன்னையங்கானன்மடமயிலைக்
கட்டிட்டங்கொண்டான்கபாலீச்சரமமர்ந்தா

ஞெட்டிட்டபணபினுருத்திரபல்கணத்தார்க்
கட்டிட்டல்காணுதேபோதியோபூம்பாவாய்

கானமாசோலைக்கபாலீச்சரமமர்ந்தான
றேனமர்பூம்பாவைப்பாட்டாகச்செந்தமிழான்
ஞானசம்பந்தனலம்புகழ்ந்தபத்தும்வல்லார்
வானசம்பந்தத்தவரோடும்வாழ்வாரே.

திருச்சிற்றம்பலம்

---

வேறு

ஆங்கண் மெழுந்து நின்ற வணங்கினை நோக்கு வார்கள்
ஈங்கிது காணீ ரென்னு வற்புத மெய்தும் வேலைப்
பாங்குசூழ் தொண்ட ரானோ ரரகர வென்னப் பாரமேல்
ஓங்கிய வோசை யும்பர் நாட்டினை யுற்ற தன்றே (௧௦௯௨)

தேவரு முனிவர் தாமுந் திருவருட் சிறப்பு நோக்கிப்
பூவரு விரைகொண் மாரிபொழிந்தன ரொழிந்த மண்ணோர்
யாவரு மருந்த வண்ண மெம்பிரான் கருணை யென்றே
மேவிய கைக ளுச்சி மேற்குவித் திறைஞ்சி வீழ்ந்தார் (௧௦௯௩)

அங்கய லுருவங் கண்டா ரதிசய மிகவு மெய்திப்
பங்கமுற் றுமோ போன்றார் பரசம யத்தி னுள்ளோர்
எங்குள செய்கை தான்மற் றெனச்செய்த வாறி தென்று
சங்கையா முணர்வு கொள்ளுஞ் சமணர்க ளோடி வீழ்ந்தார். (௧௦௯௪)

கன்னிதன் வனப்புத் தன்னைக் கண்களா னுடியக் காணார்
முன்னுறக் கண்டார்க் கெல்லா மொய்கருங் குழலின் பார
மன்னிய வசனச் செந்தா மரையினிற் கரிய வண்டு
துன்னிய வொழுங்கு சுற்றச் சூழல்போ லிருண்டு தோன்ற (௧௦௯௫)

பாங்கணி சுரும்பு மொய்த்த பனிமல ரளகப் பந்தி
தேங்கமழ் புராசை சேர்ந் திருநுதல் விளக்க நோக்கிற்
பூங்கொடிக் கமுகின் மாரி பொழிந்திடப் புயற்கீ ழிட்ட
வாங்கிய வான வில்லின் வளரொளி வனப்பு வாய்ப்ப (௧௦௯௬)

புருவமென் கொடிகள் பண்டு புரமெரித் தவர்த நெற்றி
யொருவிழி யெரியி னீறா யருள்பெற வுள்ளுங் காமன்
செருவெழுந் தனுவ தொன்றுஞ் சேமவில் லொன்று மாக
இருபெருஞ் சிலைகண் முன்கொண் டெழுந்தன போல வேறப் (௧௦௯௭)

மண்ணிய மணியின் செய்ய வளரொளி மேனி யாடன்
கண்ணிணை வனப்புக் காணிற் காமரு வதனத் திங்கட்

---

(௧௦௯௬) பாங்கர் அணி சுரும்பு - அருகில் அழகிய வண்டுகள் [illegible] வினோத.

டணணொளி விரிநத சோதி வெள்ளத்திற் றகைவி னீள
ஒண்ணிறக கரிய செயய கயலிரண் டொத்து லாவ (௧௦௯௮)

பணிவள ரலகுற் பாவை நாசியும பவள வாயு
நணியபே ரொளியிற் றோன்று நலததினை நாடு வார்க்கு
மணிநிறக கோபங கண்டு மறறது வவவுத தாழும
அணிநிறக காம ரூபி யனையதா மழகு காட்ட (௧௦௯௯)

இளமயி லனைய சாய லேநதிழை குழைகொள் காது
வளமிகு வனப்பி னாலும வடிநததா ளுடைமை யாலுங
கிளரொளி மகர வேறு கெழுமிய தன்மை யாலும்
அளவில்சீ ரனங்கன வென்றிக கொடியிரண் டனைய வாக (௧௧௦௦)

விற்பொலி நரளக கோவை விளங்கிய கழுதது மீது
பொற்பமை வதன மாகும பதுமநன னிதியம பூதத
நற்பெரும் பணில மென்னு நன்னிதி போன்று தோன்றி
யறபொலி கண்டா நநத வருட்கடை யாளங காட்ட (௧௧௦௧)

எரியவிழ் காந்தண மென்பூத தலைதொடுத திசைய வைததுத
திரள்பெறச சுருக்குஞ் செசசை மாலையோ தெரியின வேறு
கருநெடுங கயறகண மங்கை கைகளாற் காநதி வெள்ள
மருகிழிந தனவோ வென்னு மதிசயம வடிவிற் றோன்ற. (௧௧௦௨)

ஏரெழு மாரபிற் பொங்கு மேநதிளங் கொங்கை நாகக்
காரெழு விடத்தை நீக்கும கவுணியா தலைவா நோக்கால
ஆரிரு வருளிற் பூரித தடங்கிய வமுத குமபச
சீரெழு முகிழைக காட்டுஞ் செவ்வியிற் றிகழ்நது தோனற (௧௧௦௩)

காமவே ளென்னும் வேட னுந்தியிற் கரந்து கொங்கை
நேமியம் புட்க டம்மை யகப்பட நேரி தாய
தாமநீள் கண்ணி சோதத சலாகைதூக கியதே போலும
வாமமே கலைசூழ் வலலி மருங்கினமே லுரோம வலலி (௧௧௦௪)

(௲௯௮) மணணிய - சிறபபிதத. வதனத திஙகள - முகமாகிய சநதிரனுடைய
(௲௯௯) பணிவளா அலகுல - பாமபின படததைப போனறு வளாநத நிதம
பததையுடைய மணிநறககோபம - மாணிககமணியின நிறததை யுடைய இநதிரகோ
பம - தமபலபபூசசி. காமரூபி - பசசோநதி (௲௱) வடிநததாள - (கொடிபாததில)
வடிநத அடியையுடைய (காதுபாததில)வடிநத காதுத தணடையுடைய. மகரவேறு
- (கொடி) சுறவேறு (காது) மகரகுணடலம. (௲௱௧) விலல - ஒளி (௲௱௨) செசசை
- வெடசி. (௲௱௪) வாம - அழகிய. மருஙகினமேல உரோமவலலி - இடையின மே
லுளளமயிா ஒழுஙகானது. உநதியில கரநது - நாபியில மறைநது. நேமியமபுளளின
தமமை - சககரவாகப புடகளை.

பிணியவிழ் மலர்மென் கூந்தற் பெண்ணமு தனையாள் செம்பொன்
அணிவள ரல்கு றங்க ளரவுசெய் பிழையா லஞ்சி
மணிகிளர் காஞ்சி சூழ்ந்து வனப்புடை யல்கு லாகிப்
பணியுல காளுஞ் சேடன் பணம்விரித் தடைதல் காட்ட (கக0ரு)

வரிமயி லனைய சாயன் மங்கைபொற் குறங்கின் மாமை
கரியிளம் பிடிக்கை வென்று கதலிமென் றண்டு காட்டத்
தெரிவுறு மவர்க்கு மென்மைச் செழுமுழந் தாளின் செவ்வி
புரிவுறு பொற்பந் தென்னப் பொலிந்தொளி விளங்கிப் பொங்க (கக0சு)

பூவலர் நறுமென் கூந்தற் பொற்கொடி கணைக்கால் காமன்
ஆவநா ழிகையே போலு மழகினின் மேன்மை யெய்த
மேவிய செம்பொற் றட்டின் வனப்பினை மீதிட் டென்றும்
ஓவியர்க் கெழுத வொண்ணாப் பாட்டொளி யொளிரவுற் றோங்க. (கக0எ)

கற்பக மீன்ற செவ்விக் காமரு பவளச் சோதிப்
பொற்றிரள் வயிரப் பத்திப் பூந்துணர் மலர்ந்த போலு
நற்பதம் பொலிவு காட்ட ஞாலமும் விசும்பு மெல்லாம்
அற்புத மெய்தத் தோன்றி யழகினுக் கணியாய் நின்றுள. (கக0அ)

எண்ணிலாண் டெய்தும் வேதாப் படைத்தவ னெழிலின் வெள்ள
நண்ணுநான் முகத்தாற் கண்டா னவளினு நல்லா டன்பாற்
புண்ணியப் பதினா றாண்டு போபெறும் புகலி வேந்தர்
கண்ணுதல் கருணைவெள்ள மாயிர முகத்தாற் கண்டார். (கக0கூ)

வேறு.

இன்னணம் விளங்கிய வேர்கொள் சாயலா
டன்னைமுன் கண்ணுறக் கண்ட தாதையார்
பொன்னணி மாளிகைப் புகலி வேந்தர்தாள்
சென்னியிற் பொருந்தமுன் சென்று வீழ்ந்தனர் (ககக0)

அணங்கினு மேம்படு மன்ன மன்னவர்
பணம்புரி யரவரைப் பரமர் முன்பணிந்
திணங்கிய முகின்மதிச் சண்பை யேந்தலை
வணங்கியே நின்றன ளண்ணு லோர்தொழ (கககக)

சீர்கெழு சிவநேசர் தம்மை முன்னமே
கார்கெழு சோலைசூழ் காழி மன்னவர்

---

(௲௱ரு) சேடன் ஆயிரஞ்செய்ய அல்குலாகிய பணம் விரித்தடைதல் காட்ட எனக் கூட்டுக. (௲௱சு) குறங்கு - துடை. மாமை - நிறம்; அழகு. கதலி - வாழை. (௲௱எ) ஆவநாழிகையே போலும் - அம்பு கூட்டை யொத்த. ஓவியர்க்கு - சித்திரக் காரர்க்கு.

ஏர்கெழு சிறப்பினும் மகளைக் கொண்டினிப்
பார்கெழு மனையினிற் படர்மி னென்றலும் (கககஉ)

பெருகிய வருள்பெறும் வணிகர் பிள்ளையார்
மருவுதா மரையடி வணங்கிப் போற்றிநின்
றருமையா லடியனேன் பெற்ற பாவையைத்
திருமணம் புணர்ந்தருள் செய்யு மென்றலும் (கககங)

மற்றவர் தமக்குவண் புகலி வாணர்நீர்
பெற்றபெண் விடத்தினால் வீந்த பின்னையான்
கற்றைவார் சடையவர் கருணை காணவர்
உற்பவிப் பித்தலா லுரைத்த தாதென

வணிகருஞ் சுற்றமு மயங்கிப் பிள்ளையார்
அணிமல ரடியில்வீழ்ந் தரற்ற வாங்கவர்
தணிவினீள் பெருந்துயர் தணிய வேதநூற்
றுணிவினை யருள்செய்தார் தூய வாய்மையார் (கககரு)

தெள்ளுநீ தியின்முறை கேட்ட சேர்கிளை
வெள்ளமும் வணிகரும் வேட்கை நீத்திடப்
பள்ளநீர்ச் செலவென்ப பரமர் கோயிலின்
உள்ளெழுந் தருளினா ருடைய பிள்ளையார் (கககசு)

பான்மையால் வணிகரும் பாவை தன்மணம்
ஏனையோர்க் கிசைகிலே னென்று கொண்டுபோய்
வானுயர் கன்னிமா டத்து வைத்தனர்
தேன்மர் கோதையுஞ் சிவத்தை மேவினாள் (கககஎ)

வேறு

தேவர்பிரா னமர்ந்தருளுந் திருக்கபா லீச்சரத்து
மேவியஞா னத்தலைவர் விரிஞ்சன்முத லெவ்வுயிர்க்குங்
காவலனார் பெருங்கருணை கைதந்த படிபோற்றிப்
பாவலர்செந் தமிழ்பாடிப் பன்முறையும் பணிந்தெழுவார் (கககஅ)

தொழுதுபுறம் போந்தருளித் தொண்டர்குழாம் புடைசூழப்
பழுதில்புகழ்த் திருமயிலைப் பதியிலமர்ந் தருளுநாள்
முழுதுலகுந் தருமிறைவர் முதற்றான மல்விறைஞ்சி
அழுதுலகை வாழ்வித்தா ரப்பதியின் மருங்ககல்வார். (கககக)

திருத்தொண்ட ரங்குள்ளார் விடைகொள்ளச் சிவநேசர்
வருத்தமகன் றிடமதுர மொழியருளி விடைகொடுத்துத்
திருத்தருநற் பிறபதிகள் வணங்கிப்போய் நிறைகாதல்
அருத்தியொடுந் திருவான்மி யூர்பணிய வணைவுற்றார் (ககஉ0)

திருவான்மி யூர்மன்னுந் திருத்தொண்டர் சிறப்பெதிர
வருவார்மங் கலவணிகண் மறுகுநிரைத் தெதிர்கொள்ள
அருகாக விழிந்தருளி யவர்வணங்கத் தொழுதன்பு
தருவார்தங் கோயினமணித் தடநெடுங்கோ புரஞ்சார்ந்தார். (௧௧௨௧)

மிக்குயர்ந்த கோபுரத்தை வணங்கிவியன் றிருமுன்றில்
புக்கருளிக் கோயிலினைப் புடைவலங்கொண் டுள்ளணைந்து
கொக்கிறகு மதிக்கொழுந்துங் குளிர்புனலு மொளிர்கின்ற
செக்கர்ச்சடை முடியார்தஞ் சேவடியின் கீழ்த்தாழ்ந்தார் (௧௧௨௨)

தாழ்ந்துபல முறைபணிந்து தம்பிரான் முன்னின்று
வாழ்ந்துகளி வரப்பிறவி மருந்தான பெருந்தகையைச்
சூழ்ந்தவிசைத் திருப்பதிகச் சொன்மாலை விளைவுரையால்
வீழ்ந்தபெருங் காதலுடன் சாத்திமிக வின்புற்றார் (௧௧௨௩)

பரவிவரு மானந்த நிறைந்ததுளி கண்பனிப்ப
விரவுமயிர்ப் புளகங்கண் மிசைவிளங்கப் புறத்தணைவுற்
றரவநெடுந் திரைவேலை யணிவான்மி யூர்தனுட்
சிரபுரத்துப் புரவலனார் சிலநாளங் கினிதமர்ந்தார் (௧௧௨௪)

அங்கண்மா ருலகா ளுடையாரை யருந்தமிழின்
பொங்குமிசைப் பதிகங்கள் பலபோற்றிப் போந்தருளிக்
கங்கையணி மணிமுடியார் பதிபலவுங் கலந்திறைஞ்சிச்
செங்கண்விடைக் கொடியார்த மிடைச்சுரத்தைச் சேர்வுற்றார் (௧௧௨௫)

சென்னியிள மதியணிந்தார் மருவுதிரு விடைச்சுரத்து
மன்னுதிருத் தொண்டர்குழா மெதிர்கொள்ள வந்தருளி
நன்னெடுங்கோ புரமிறைஞ்சி யுள்புகுந்து நற்கோயி
றன்னைவலங் கொண்டணைந்தார் தம்பிரான் றிருமுன்பு (௧௧௨௬)

கண்டபொழு தேகலந்த காதலாற் கைதலைமேற்
கொண்டுதல முறவிழுந்து குலவுபெரு மகிழ்ச்சியுடன்
மண்டியபே ரன்புருகி மயிர்முகிழ்ப்ப வணங்கியெழுந்
தண்டர்பிரான் றிருமேனி வண்ணங்கண் டதிசயித்தார் (௧௧௨௭)

இருந்தவிடைச் சுரம்மேவு மிவர்வண்ண மென்னேயென்
றருந்தமிழின் றிருப்பதிகத் தலர்மாலை கொடுபரவித்
திருந்துமனங் கரைந்துருகத் திருக்கடைக்காப் புச்சாத்திப்
பெருந்தனிவாழ் வினைபெற்றார் பேருலகின் பேறனார் (௧௧௨௮)

நிறைந்தார்வ வேட்கையினா னின்றிறைஞ்சிப் புறம்போந்தங்
குறைந்தருளிப் பணிகின்றா ருமைபாக ரருள்பெற்றுச்

சிறந்ததிருத் தொண்டருட னெழுந்தருளிச் செந்துருத்தி
யறைந்தளிகள் பயிலசாரற் றிருக்கழுக்குன் றினையணைந்தா (௧௧௨௯)

சென்றணையும் பொழுதின்கட் டிருத்தொண்ட ரெதிர்கொள்ளப்
பொன்றிகழு மணிசசிவிகை யிழிநதருளி யுடன்போந்து
மன்றல்விரி நறுஞ்சோலைத திருமலையை வலங்கொண்டு
மின்றயங்குஞ் சடையாரை விருப்பினுடன் பணிகின்றார். (௧௧௩௦)

திருக்கழுக்குன் றத்தமாநத செங்கனகத தனிக்குன்றைப்
பெருக்கவளா காதலினாற் பணிநதெழுந்து பேராத
கருத்தினுடன் காதல்செயுங் கோயில்கழுக் குனறென்று
திருப்பதிகம் புனைந்தருளிச் சிந்தைநிறை மகிழ்வுற்றார். (௧௧௩௧)

---

**திருக்கழுக்குன்றம் - பண் - குறிஞ்சி.**

திருசசிற்றம்பலம

தோடுடையானொருகாதிறறாயகுழைதாழ
வேடுடையான்றலைகலனாகவிரநதுணணு
நாடுடையானளளிருளேமநடமாடுங
காடுடையான்காதலசெயகோயில்கழுக்குன்றே

கணணுதலான்காதல்செய்கோயில்கழுக்குன்றை
நணணியசீரஞானசமபநதன்றமிழ்மாலை
பண்ணியலபாறபாடியபத்துமிவைவல்லாா
புணணியராயவிணணவரோடும புகுவாரே

திருச்சிற்றம்பலம்.

---

இன்புற்றங் கமாந்தருளி யீறிலபெருந் தொண்டருடன்
மின்பெறற வேணியினா ரருளபெற்றுப் போநதருளி
யென்புறற மணிமாாப ரலலையிலா வாட்சிபுரிங
தன்புற்று மகிழ்ந்ததிரு வசசிறுபாக கததணைநதார். (௧௧௩௨)

ஆதிமுதல் வரைவணஙகி யாட்சிகொண்டா ரெனமொழியுங
கோதிலதிருப் பதிகவிசை குலாவியபா டலிற்போற்றி
மாதவதது முனிவருடன் வணஙகிமகிழ்ந் தின்புற்றுத்
தீதகற்றுஞ் செய்கையினார் சின்னாளங கமர்ந்தருளி. (௧௧௩௩)

---

**திருஅச்சிறுபாக்கம் - பண் - குறிஞ்சி.**

திருச்சிற்றம்பலம்.

பொன்றிரண்டன்னபுரிசடைபுரளப்பொருகடற்பவளமோடழனிறமபுரையக
குன்றிரண்டன்னதோளுடையகலஙகுலாய வெண்ணூலொடுகொழும்பொடி
யணிவா, மின்றிரண்டன்ன நுண்ணிடையரிவைமெலலியலாளையோர்பாகமாட
பேணி, யன்றிரண்டுருவமாயவெம்மடிகளசசிறுபாக்கமதாட்சிகொண்டாரே

*மைச்செறிகுவளை தவளைவாய்நிறையமது மலர்ப்பொய்கையிற்புது மலர்கிழிய பச்சுறவெறிவயல்வெறிகமழ்காழிப்பதியவர திபதிகவுணியர்பெருமான் கைச்சிறுமறியவன் கழலலாற்பேணாக்கருத்துடைஞானசம்பந்தன தமிழ்கொண் டச்சிறுபாக்கத்தடிகளையேத்து மன்புடையடியவ ருவினையிலரே.*

திருச்சிற்றம்பலம்.

---

ஏறணிந்த வெல்கொடியா ரினிதமர்ந்த பதிபிறவு
நீறணிந்த திருத்தொண்ட ரெதிர்கொள்ளச் சேர்ந்திறைஞ்சி
வேறுபல நதிகானங் கடந்தருளி விரிசடையில்
ஆறணிந்தார் மகிழ்ந்ததிரு வரசிலியை வந்தடைந்தார் (ககஙச)

அரசிலியை யமர்ந்தருளு மங்கணரைச் சேர்ந்துபணிந்து
பரசியெழு திருப்புறவார் பனங்காட்டூர் முதலாய
விரைசெய்மலர்க் கொன்றையினார் மேவுபதி பலவணங்கித்
திரைசெய்நெடுங் கடலுடுத்த திருத்தில்லை நகரணைந்தார். (ககஙரு)

எல்லையின்ஞா னத்தலைவ ரெழுந்தருள வெதிர்கொள்வார்
தில்லையில்வா ழந்தணர்மெய்த் திருத்தொண்டர் சிறப்பினொடு
மல்கியெதிர் பணிந்திறைஞ்ச மணிமுத்தின் சிவிகையிழிந்
தல்குபெருங் காதலுட னஞ்சலிகொண் டணைகின்றார் (ககஙசு)

திருவெல்லை யிற்பணிந்து சென்றணைவார் சேண்விசும்பை
மருவிவிளங் கொளிதழைக்கும் வடதிசைவா யிலைவணங்கி
யுருகுபெருங் காதலுட னுட்புகுந்து மறையினொலி
பெருகிவளர் மணிமாடப் பெருந்திருவீ தியையணைந்தார். (ககஙஎ)

நலமலியுந் திருவீதி பணிந்தெழுந்து நற்றவர்தங்
குலநிறைந்த திருவாயில் குவித்தமலர்ச் செங்கையொடு
தலமுறமுன் றாழ்ந்தெய்தித் தபனியமா ளிகைமருங்கு
வலமுறவந் தோங்கியபே ரம்பலத்தை வணங்கினா (ககஙஅ)

வணங்கிமிக மனமகிழ்ந்து மாலயனுந் தொழமூத
கணங்கணமிடை திருவாயில் பணிந்தெழுந்து கண்களிப்ப
வணங்குதனி கண்டருள வம்பலத்தே யாடுகின்ற
குணங்கடந்த தனிக்கூத்தர் பெருங்கூத்துக் கும்பிடுவார். (ககஙகூ)

தொண்டர்மனம் பிரியாத திருப்படியைத் தொழுதிறைஞ்சி
மண்டுபெருங் காதலினா லேகுகிமுக மலர்ந்தெழுவார்
அண்டமெலா நிறைந்தெழுந்த வானந்தத் துள்ளலைந்து
கண்டபே ரின்பத்தின் கரையில்லா நிலையணைந்தார் (ககச௦)

அந்நிலைமை யடைந்துநிளைத் தாங்கெய்தாக் காலத்தின்
மன்னுதிரு வம்பலத்தை வலங்கொண்டு போந்தருளிப்

பொன்னணிமா ளிகைவீதிப் புறத்தணைந்து போதுதொறும்
இன்னிசைவண் டமிழ்பாடிக் கும்பிட்டங் கினிதிருந்தார். (ககசக)

திருநதியசீர்த் தாதையார் சிவபாத விருதயரும
பொருந்துதிரு வளர்புகலிப் பூசுரரு மாதவரும்
பெருந்திருமா லயன்போற்றும் பெரும்பற்றப் புலியூரில்
இருந்தமிழா கரரணைந்தா ரெனக்கேட்டு வநதணைநதார் (ககசஉ)

ஆஙகவரைக் கண்டுசிறப் பளிததருளி யவரோடும
தாஙகரிய காதலினாற் றம்பெருமான் கழல்வணஙக
ஓங்குதிருத் தில்லைவா ழநதணரு முடனாகத
தேஙகமழ்கொன் றைசசடையார் திருச்சிற்றம் பலம்பணிந்தார் (ககசங)

தென்புகலி யந்தணருந் தில்லைவா ழந்தணர்முன்
அன்புநெறி பெருககுவிதத வாணடகையா ரடிபோற்றிப்
பொன்புரிசெஞ சடைக்கூத்த ரருள்பெற்றுப் போந்தருளி
இன்புறுதோ ணியினமர்நதார் தமைவணஙக வெழுந்தருள. (ககசச)

நற்றவர்தங குழாத்தோடு நம்பர்திரு நடஞ்செயயும
பொற்பதியின் திருவெல்லை பணிநதருளிப புறமபோந்து
பெற்றமுயாத் தவரமாந்த பிறபதியும புககிறைஞ்சிக
கற்றவாகள் பரவுதிருக் கழுமலமே செனறடைவாா. (ககசரு)

பலபதிகள கடநதருளிப் பனனிரணடு போபடைதத
தொலலைவளப் பூநதாாய தூரததே தோன்றுதலு
மலருதிரு மணிமுததின சிவிகையிழிந தெதிாவணஙகிச
செலவமிகு பதியதன்மேற் றிருபபதிக மருளசெயவாா (ககசசு)

மனனுமிசை மொழிவண்டாா குழலரிவை யென்றெடுதது
மினனுசுடர் மாளிகைவிண டாஙகுவபோல வேணுபுரம
என்னுமிசைச சொன்மாலை யெநதியமபி யெழுநதருளிப்
புன்னைமணங கமழ்புறவப் புறம்பணையில வநதணைநதாா (ககசஎ)

---

திருவேணுபுரம் - பண் - நடடபாடை.

திருசசிறறம்பலம

வண்டாாகுழலரிவையொடுமபிரியாவகைபாகம்
பெண்டான்மிகவானான்பிறைசசென்னிப்பெருமானூா
தண்டாமரைமலராளுறைதவளந்நெடுமாடம்
விண்டாஙகுவபோலும்மிகுவேணுபுரமதுவே

வேதத்தொலியானம்மிகுவேணுபுரந்தன்னைப்
பாததகினின்மனம்வைத்தெழுபந்தனுரைபாடல
ஏததகினையில்லாவிவைபததுமமிசைவல்லாா
சேததகினையில்லாசிவகெதியைப்பெறுவாரே.

திருச்சிற்றம்பலம்.

வாழிவளர் புறப்பணையின் மருங்கணைந்து வரிவண்டு
சூழுமலர் நறுந்தீப தூபங்க ளுடன்றொழுது
காழிநகர் சேர்மினெனக் கடைமுடிந்த திருப்பதிகம்
ஏழிசையி னுடன்பாடி யெயின்மூதூ ருட்புகுந்தார். (௧௧௪௮)

---

ஸ்ரீகாழி - திருவிராகம் - பண் - நட்டராகம்.

திருச்சிற்றம்பலம்

நம்பொருணமக்களென்றுநச்சியிச்சைசெய்துநீர்
அம்பரமடைந்துசாலவல்லலுய்ப்பதன்முனம்
உம்பர்நாதனுத்தமன்னொளிமிகுத்தசெஞ்சடை
நம்பன்மேவுநன்னகர்நலங்கொள்காழிசேர்மினே.

தக்கன்றாதலையரிந்தசங்கரன்றனதரை
அக்கினோடரவசைத்தவந்திவண்ணர்காழியை
ஒக்கஞானசம்பந்தனுரைத்தபாடல்வல்லவர்
மிக்கவின்பமெய்திவீற்றிருந்துவாழ்தன்மெய்ம்மையே.

திருச்சிற்றம்பலம்

---

சேணுயர்ந்த திருத்தோணி வீற்றிருந்த சிவபெருமான்
றாணினைந்த வாதரவின் றலைப்பாடு தனையுன்னி
நீணிலைக்கோ புரமணைந்து நேரிறைஞ்சிப் புக்கருளி
வாணிலவு பெருங்கோயில் வலங்கொண்டு முன்பணிந்தார் (௧௧௪௯)

முன்னிறைஞ்சித் திருவருளின் முழுநோக்கம் பெற்றேறிப்
பொன்னிமயப் பாவையுடன் புணர்ந்திருந்த புராதனரைச்
சென்னிமிசைக் குவித்தகரங் கொடுவீழ்ந்து திளைத்தெழுந்து
மன்னுபெரு வாழ்வெய்தி மனங்களிப்ப வணங்குவார் (௧௧௫௰)

பரவுதிருப் பதிகங்கள் பலவுமிசை யினிற்பாடி
விரவியகண் ணருவிநீர் வெள்ளத்திற் குளித்தருளி
அரவணிந்தா ரருள்பெருகப் புறம்பெய்தி யன்பருடன்
சிரபுரத்துப் பெருந்தகையார் தந்திருமா ளிகைசேர்ந்தார் (௧௧௫௧)

மாளிகையி னுள்ளணைந்து மறையவர்கட் கருள்புரிந்து
தாள்பணியும் பெருங்கிளைக்குத் தகுதியினாற் றலையளிசெய்
தாளுடைய தம்பெருமா னடியவர்க ளுடனமர்ந்து
நீளவரும் பேரின்ப மிகப்பெருக நிகழுநாள் (௧௧௫௨)

காழிநா டுடையபிரான் கழல்வணங்கி மகிழ்வெய்த
ஆழியினு மிகப்பெருகு மாசையுடன் றிருமுருகர்
வாழிதிரு நீலநக்கர் முதற்றொண்டர் மற்றனையோர்
சூழநெடுஞ் சுற்றமுடன் றோணிபுரந் தொழுதணைந்தார். (௧௧௫௩)

வந்தவரை யெதிர்கொண்டு மனமகிழ்ந்து சண்பையர்கோன்
அந்தமிலசீ ரடியார்க ளவரோடு மினிதமர்ந்து
சுந்தரவா ரணங்கினுடன் றோணியிலவீற் றிருந்தாரைச
செந்தமிழின் பந்தத்தாற் றிருப்பதிகம் பலபாடி. (௧௧௫௪)

பெருமகிழ்ச்சி யுடன்செல்லப் பெருந்தவத்தாற் பெற்றவரு
மருவுபெருங் கிளையான மறையவரு முடன்கூடித்
திருவளர்ஞா னத்தலைவர் திருமணஞ்செய் தருளுதற்குப்
பருவமிது வென்றெண்ணி யறிவிக்கும் பாங்கணைந்தார். (௧௧௫௫)

நாட்டுமறை முறையொழுக்க ஞானபோ னகருக்குங்
கூட்டுவது மனங்கொள்வார் கோதின்மறை நெறிச்சடங்கு
காட்டவரும் வேள்விபல புரிவதற்கோர் கன்னிதனை
வேட்டருள வேண்டுமென விண்ணப்பஞ் செய்தார்கள் (௧௧௫௬)

மற்றவர்த மொழிகேட்டு மாதவத்தின் கொழுந்தனையார்
சுற்றமுறு பெரும்பாசத் தொடர்ச்சிவிடு நிலைமையராய்ப்
பெற்றமுயர்த் தவரருண்முன் பெற்றதினு லிசையாது
முற்றியதா யினுங்கூடா தென்றவர்முன் மொழிந்தருள (௧௧௫௭)

அருமறையோ ரவர்பின்னுங் கைதொழுதங் கறிவிப்பார்
இருநிலத்து மறைவழக்க மெடுத்தீரீ ராதலினால்
வருமுறையா லறத்தொழிலின் வைதிகமா நெறியொழுகத்
திருமணஞ்செய் தருளுதற்குத் திருவுள்ளஞ் செய்யுமென (௧௧௫௮)

மறைவாழ வந்தணர்தம் வாய்மையொழுக் கம்பெருகத்
துறைவாழச் சுற்றத்தார் தமக்கருளி யுடன்படலும்
பிறைவாழுந் திருமுடியிற் பெரும்புனலோ டரவணிந்த
கறைவாழுங் கண்டத்தா ரமைத்தொழுது மனங்களித்தார் (௧௧௫௯)

திருஞான சம்பந்தர் திருவுள்ளஞ் செய்ததற்குத்
தருவாய்மை மறையவருந் தாதையருந் தாங்கரிய
பெருவாழ்வு பெற்றாராய்ப் பிஞ்ஞகனா ரருளென்றே
யுருகாநின் றின்பமுறு முளமகிழ்ச்சி யெய்துவார் (௧௧௬0)

ஏதமிலசீர் மறையவரி லேற்றதுலத் தோடிசைவால்
நாதர்திருப் பெருமணத்து நம்பாண்டார் நம்பிபெறுங்
காதலியைக் காழிநா டுடையபிரான் கைப்பிடிக்கப்
போதுமவர் பெருந்தன்மை யெனப்பொருந்த வெண்ணினார் (௧௧௬௧)

திருஞான சம்பந்தர் சீர்பெருக மணம்புணரும்
பெருவாழ்வு திருத்தொண்டர் மறையவர்கண் மிகப்பேணத்
திருவாரும் பெருஞ்சுற்ற மகிழ்சிறப்ப மகட்பேசத்
தருவாதண் பணைநல்லூர் சார்கின்றார் தாதையார். (௧௧௬௨)

மிக்கதிருத் தொண்டர்களும் வேதியரு முடனேகத்
திக்குநிகழ் திருநல்லூர்ப் பெருமணத்தைச் சென்றெய்தத்
தக்கபுகழ் நம்பாண்டார் நம்பிதா மதுகேட்டுச்
செக்கர்முடிச் சடையார்தந் திருப்பாதந் தொழுதெழுவார். (௧௧௬௩)

ஒப்பரிய பேருவகை யோங்கியெழு முள்ளத்தால்
அப்புநிறை குடம்விளக்கு மறுகெல்லா மணிபெருக்கிச்
செப்பரிய வார்வமிகு பெருஞ்சுற்றத் தொடுஞ்சென்றே
யெப்பொருளு மெய்தினே னெனத்தொழுதங் கெதிர்கொண்டார். (௧௧௬௪)

எதிர்கொண்டு மணிமாடத் தினிலெய்தி யின்பமுறு
மதுரமொழி பலமொழிந்து வரன்முறையாற் சிறப்பளிப்பச்
சதுர்முகனின் மேலாய சண்பைவரு மறையவரு
முதிருணர்வின் மாதவரு மணைந்ததிற மொழிகின்றார். (௧௧௬௫)

ஞானபோ னகருக்கு நற்றவத்தி னொழுக்கத்தால்
ஊனமில்சீ லத்தும்பான் மகட்பேசி வந்ததென
ஆனபே றந்தணர்பா லருளுடைமை யாமென்று
வானளவு நிறைந்தபெரு மனமகிழ்ச்சி யொடுமொழிவார் (௧௧௬௬)

உம்முடைய பெருந்தவத்தா லுலகனைத்து மீன்றளித்த
அம்மைதிரு முலைப்பாலிற் குழைத்தவா ரமுதுண்டார்க்
கெம்முடைய குலக்கொழுந்தை யாமுய்யத் தருகின்றோம்
வம்மினென வுரைசெய்து மனமகிழ்ந்து செலவிடுத்தார். (௧௧௬௭)

பேருவகை யாலிசைவு பெற்றவர்தா மீண்டணைந்து
காருலவு மலர்ச்சோலைக் கழுமலத்தை வந்தெய்திச்
சீருடைய பிள்ளையார்க் கவர்நோக்க படிசெப்பிப்
பாருலவுந் திருமணத்தின் பான்மைவினை தொடங்குவார். (௧௧௬௮)

திருமணஞ்செய் கலியாணத் திருநாளுந் திகழ்சிறப்பின்
மருவியவோ ரையுங்கணித மங்கலநூ லவர்வகுப்பப்
பெருகுமண நாளோலை பெருஞ்சிறப்பி னுடன்போக்கி
யருள்புரிந்த நன்னாளி லணிமுளைப்பா லிகைவிதைத்தார் (௧௧௬௯)

செல்வமலி திருப்புகலிச் செழுந்திருவீ திகளெல்லா
மல்குநிறை குடம்விளக்கு மகரதோ ரணநிறைத்தே
யெல்லையிலா வொளிமுத்து மாலைகளெங் கணுநாற்றி
யல்குபெருந் திருவோங்க வணிசிறக்க வலங்கரித்தார். (௧௧௭௦)

அருந்தவத்தோ ரந்தணர்க ளயலுள்ளோர் தாமுய்யப்
பொருந்துதிரு நாளோலை பொருவிறந்தார் கொண்டணையத்
திருந்துபுகழ் நம்பாண்டார் நம்பிசிறப் பெதிர்கொண்டு
வருந்தவத்தாள் மகட்கொடுப்பார் வதுவைவினை தொடங்குவார். (௧௧௭௧)

மன்னுபெருஞ் சுற்றத்தா ரெல்லாரும் வந்தீண்டி
நன்னிலைமைத் திருநாளுக் கெழுநாளா நன்னாளிற்
பன்மணிமங் கலமுரசம் பல்லியங்க ளிறைந்தார்ப்பப்
பொன்மணிப்பா லிகைமீது புனிதமுளை பூரித்தார். (ககஎஉ)

சேணுயரு மாடங்க டிருப்பெருகு மண்டபங்க
ணீணிலைய மாளிகைக ணிகரிலணி பெறவிளக்கிக்
காண்வருநூல் வினைவண்ணங் கவின்றோங்கும் படியெழுதி
வாணிலவு மணிக்கடைக்கண் மங்கலக்கோ லம்புனைந்து (ககஎங)

நீடுநிலைத் தோரணங்க ணீண்மறுகு தொறுநிரைத்து
மாடுயருங் கொடிமாலை மணிமாலை யிடைப்போக்கிச்
சேடுயரும் வேதிகைகள் செழுஞ்சாந்து கொடுநீவிப்
பீடுகெழு மணிமுத்தின் பெரும்பந்தர் பலபுனைந்தார் (ககஎச)

மன்றல்வினைத் திருமுளைநா ளடங்கிவரு நாளெல்லா
முன்றிறொறும் வீதிதொறு முகநெடுவா யில்கடோறு
நின்றொளிரு மணிவிளக்கு நிறைவாசப் பொற்குடங்க
டுன்றுசுடர்த் தாமங்க டூபங்க டுதைவித்தார் (ககஎரு)

எங்கணுமெய்த் திருத்தொண்டர் மறையவர்க ளேனையோர்
மங்கலநீண் மணவினைநாள் கேட்டுமிக மகிழ்வெய்திப்
பொங்குதிருப் புகலிதனி னாடோறும் புகுந்தீண்ட
அங்கணணைந் தவர்க்கெல்லாம் பெருஞ்சிறப்பு மிகவளித்தார் (ககஎசு)

மங்கலதூ ரியநாத மறுகுதொறு நின்றியம்பப்
பொங்கியநான் மறையோசை கடலோசை மிகப்பொலியத்
தங்குநறுங் குறையகிலின் றழைத்தசெழும் புகையினுடன்
செங்கன[illegible]ந்திப்புகையுந் தெய்வவிரை மணம்பெருக. (ககஎஎ)

எண்டிசையி னுள்ளோரு மீண்டுவளத் தொடுநெருங்கப்
பண்டநிறை சாலைகளும் பலவேறு விதம்பயில
மண்டுபெரு நிதிக்குவைக ண்மலைப்பிறங்க லெனமலிய
உண்டிவினைப் பெருந்துழனி யோவாத வொலியோங்க (ககஎஅ)

மாமறைநூல் விதிச்சடங்கின் வகுத்தமுறை நெறிமரபின்
றாமணநல் லுபகரணஞ் சமைப்பவர்தந் தொழிறுவன்றத்
தாமரையோ னனையபெருந் தவமறையோர் தாமெடுத்த
பூமருவு பொற்கலசப் புண்ணியநீர் பொலிவெய்த (ககஎகூ)

(ககஎரு) மன்றல் - கல்யாணம். (ககஎஎ) மங்கலதூரியம் - மங்கலவாத்தியம். (ககஎஅ) துழனி - ஓசை. உண்பார் உரையாடுதல் இனைமையான, ரண்டு துழனி என்றது அட்டிறமெழிலான. படைபடை என்றேவும் ஒலியை எனக. ஓவாத-குறையாத. (ககஎகூ) உபகரணம் - ஓமப்பொருள்கள்.

குங்குமத்தின் செழுஞ்சேற்றின் கூட்டமைப்போ ரினங்குழுமப்
பொங்குவிரைப் புதுக்கலவைப் புகையெடுப்போர் தொகைவிரவத்
துங்கநறுங் கர்ப்பூரச் சுண்ணமிடிப் போர்நெருங்க
எங்குமலர்ப் பிணைபுனைவோ ரீட்டங்கண் மிகப்பெருக (ககஅ0)

இனையபல வேறுதொழி லெம்மருங்கு நிரைத்தியற்று
மனைவளரு மறுகெல்லா மணவணிசெய் மறைமூதூர்
நினைவரிய பெருவளங்க ணெருங்குதலா னிதிக்கோமான்
றனையிறைவர் தாமேவச் சமைத்ததுபோ லமைந்துளதால் (ககஅக)

வேறு

மாறி லாநிறை வளந்தரு புகலியின் மணமீக்
கூறு நாளின்முன் னாளினில் வேதியர் குழாமு
நீறு சேர்திருத் தொண்டரு நிகரிலாத் தவருங்
காறு சூடினா ரருட்டிருக் காப்புநா ணணிவார் (ககஅஉ)

வேத வாய்மையின் விதியுளி வினையினால் விளங்க
ஓத நீருல கியன்முறை யொழுக்கமும் பெருக்கக்
காத லீடிருத் தொண்டர்கண் மறையவர் கவினார்
மாதர் மைந்தர்பொற் காப்புநா ணகாவலஞ் செய்தார். (ககஅங)

நகர்வ லஞ்செய்து புகுந்தபி னவமணி யணிந்த
புகரில் சித்திர விதானமண் டபத்தினிற் பொலியப்
பகரும் வைதிக விதிச்சமா வர்த்தனப் பான்மை
திகழ முற்றிய செம்மலார் திருமுன்பு சேர்ந்தார். (ககஅச)

செம்பொ னின்பரி கலத்தினிற் செந்நெல்வெண் பரப்பின்
வம்ப ணிந்தநீண் மாலைசூழ் மருங்குற வமைத்த
அம்பொன் வாசநீர்ப் பொற்குட மாசிலா தருப்பை
பம்பு நீள்சுடர் மணிவிளக் கொளிதரும் பரப்பில் (ககஅரு)

நாத மங்கல முழக்கொடு நற்றவ முனிவர்
வேத கீதமும் விம்மிட விரைகமழ் வாசப்
போது சாந்தணி பூந்துகில் புனைந்தபுண் ணியம்போன்
மீது புஞ்சய னத்திருந் தவர்முன்பு மேவி (ககஅசா)

ஆவ மிக்கெழு மன்பினான் மலரய னனைய
சீர்ம றைத்தொழிற் சடங்குசெய் திருந்துநூன் முனிவர்
பார்வ ழிப்பட வருமிரு வினைகளின் பந்தச்
சார்பொ ழிப்பவர் திருக்கையிற் காப்புநாண் சாத்த. (ககஅஎ)

கண்ட மாந்தர்கள் கடிமணங் காணவந் தணைவார்
கொண்ட வல்வினை யாப்பவிழ் கொள்கைய வான
தொண்டர் சிந்தையும் வதனமு மலர்ந்தன சுருதி
முண்டு மாமறைக் குலமெழுந் தார்த்தன மகிழ்ந்தே. (ககஅஅ)

நிரந்த கங்குலி னிடிமழை விதிமுறை யெவர்க்கும்
புரந்த ஞானசம் பந்தர்தாம் புன்னெறிச் சமய
அரந்தை வல்லிரு ளகலவந் தவதரித் தாற்போற்
பரந்த பேரிரு ணீந்துவந் தெழுந்தனன் பகலோன். (௧௧௮௯)

அஞ்சி றைச்சுரும் பறைபொழிற் சண்பையாண் டகையார்
தஞ்சி வத்திரு மணஞ்செயத் தவஞ்செய்நா ளென்று
மஞ்ச னத்தொழில் புரிந்தென மாசிருள் கழுவிச்
செஞ்சு டர்க்கதிர்ப் பேரணி யணிந்தன திசைகள். (௧௧௯0)

பரம்பு தன்வயி னெங்கணு முள்ளபல் வளங்க
ணிரம்ப முன்கொணாந் தெண்டிசை யவர்நெருங் குதலாற்
றரங்க டந்தவர் தந்திருக் கல்லியா ணத்தின்
வரம்பி றன்பயன் காட்டுவ தொத்தது வையம். (௧௧௯௧)

நங்கள் வாழ்வென வருந்திரு ஞான சம்பந்தர்
மங்க லத்திரு மணவெழுச் சியின்முழக் கென்னத்
துங்க வெண்டிரைச் சுரிவளை யார்ப்பொடு சூழ்ந்து
பொங்கு பேரொலி முழக்குட னெழுந்தது புணரி (௧௧௯௨)

அளக்க ரேழுமொன் றாமெனும் பெருமையெவ் வுலகும்
விளக்கு மாமணி விழாவுடன் விரைந்துசெல் வனபோற்
றுளக்கில் வேதிய ராகுதி தொடங்கிடா முன்னம்
வளாக்கும் வேதியில் வலஞ்சுழித் தெழுந்தது வன்னி (௧௧௯௩)

சந்த மென்மலர்த் தாதணி நீறுமெய் தரித்துக்
கந்த மேவுவண் டொழுங்கெனுங் கண்டிகை பூண்டு
சிந்தை தூயவன் பர்களுடன் திருமணம் போத
மந்த சாரியின் மணங்கொணர்ந் தெழுந்தது மருத்து (௧௧௯௪)

எண்டி சைத்திறத் தியாவரும் புகலிவந் தெய்தி
மண்டு மத்திரு மணவெழுச் சியினணி வாய்ப்பக்
கொண்ட வெண்ணிறக் குரூஉச்சுடர்க் கொண்டல்க ளென்ன
வெண்டு கிற்கொடி நிரைத்தது போன்றது விசும்பு (௧௧௯௫)

ஏல விந்நலம் யாவையு மெழுச்சிமுன் காட்டுங்
காலை செய்வினை முற்றிய கவுணியர் பெருமான்
மூல மாகிய தோணிமேன் முதல்வரை வணங்கிச்
சீல மார்திரு வருளினான் மணத்தின்மேற் செல்வார். (௧௧௯௬)

காழி மாநகர் வேதியர் குழாத்தொடுங் கலந்து
சூழு மன்பர்க ளேனையோர் துதைந்துமுன் செல்ல
வாழி மாமறை முழங்கிட வளம்பதி வணங்கி
நீழல் வெண்சுடர் நித்திலச் சிவிகைமேற் கொண்டார். (௧௧௯௭)

(௧௧௯௨) புணரி - சமுத்திரம். (௧௧௯௪) மருத்து - காற்று.

யான வாகன மேறுவார் யாருமேற் கொள்ளக்
கான மாகிய தொங்கல்பிச் சங்குடை கவரி
மேனெ ருஙகிட விசும்பினு நிலத்தினு மெழுந்த
வான துந்துபி முழக்குடன் மங்கல வியஙகள. (ககக அ)

வே று.

சங்கொடு தாரை சின்னந் தனிப்பெருங் காளந் தாளம்
வங்கிய மேனை மற்று மலர்துளைக் கருவி யெல்லாம
பொஙகிய வொலியி னோஙகிப் பூசுரர் வேத நாதம்
எஙகணு மெழுந்து மல்கத் திருமண மெழுந்த தன்றே. (கககக)

கோதையர் குழல்சூழ் வண்டின் குழாத்தொலி யொருபாற் கோல
வேதியா வேத வாய்மை மிகுமொலி யொருபான் மிகக
ஏதமில் விபஞ்சி வீணை யாழொலி யொருபா லேத்து
நாதமங கலஙகள் கீத நயப்பொலி யொருபா லாக (கஉ00)

விண்ணினை விழுஙக மிக்க வெண்டுகிற் பதாகை வெள்ளங்
கண்வெறி படைப்ப மிக்க கதிர்விரி கவரிக் கான
மண்ணிய மணிப்பூ ணீடு மரிசன மலிந்த பொற்பின்
எண்ணிலா வண்ணத் தூசின் பொதிப்பரப் பெஙகு நண்ண. (கஉ0க)

சிகையொடு மான்றோ லுங்குங் கிடையுமா சானுஞ் செல்வார்
புகைவிடும் வேள்விச செந்தீ யில்லுடன் கொண்டு போவார்
தகைவிலா விருப்பின் மிகக பதிகஙகள விளமபிச் சார்வார்
வகையறு பகையுஞ் செற்ற மாதவ ரியல்பின் மல்க. (கஉ0உ)

அறுவகை விளஙகுஞ் சைவத் தளவிலா விரதஞ் சாருந்
நெறிவழி நின்ற வேட நீடிய தவததி னுளளோா
மறுவறு மனததி லன்பின் வழியினால் வநத யோகக
குறிநிலை பெற்ற தொண்டர் குழாஙகுழா மாகி யேக. (கஉ0ங)

விஞ்சைய ரியககர் சித்தர் கின்னரர் மிடைந்த தேவர்
அஞ்சன நாட்ட வீட்டத் தரம்பைய ருடனே யுள்ளோர்
தஞ்சுடர் விமான மேறித தழைததவா தரவி னோடு
மஞசுறை விசும்பின் மீது மணவணி காணச் சென்றார். (கஉ0ச)

மற்றிவர் மிடைநது செல்லு மஙகல வணப்பின் காட்சி
முற்றவித தலத்தி னுளளோர் மொய்த்துடன் படரும் போதில்
அற்புத நிகழ்சசி யெய்த வணைதலான் மணமேற் செல்லும்
பொற்பமை மணத்தின் சாயை போன்றுமுன் பொலியச் செல்ல (கஉ0ரு)

(ககக அ) மஙகலவியஙகள் - மஙகலவாததியஙகள. (கஉ0க) அரிசனம - மஞ்சள். தூசினபொதிபபு - படடாடைகளின பொதி. (கஉ0உ) கிடையும வேதம ஓதும மாணவாகளும.

தவ்வர சாள வுய்க்குந் தனிக்குடை நிழற்றச் சாரும்
பவமறுத் தாள வல்லார் பாதமுள் ளத்துக் கொண்டு
புவனங்கள் வாழ வந்த பூந்தராய் வேந்தர் போந்து
சிவனமர்ந் துறையு நல்லூர்த் திருப்பெரு மணத்தைச் சேர்ந்தார். (க௨௦௬)

பெருமணக் கோயி லுள்ளார் மங்கலம் பெருகு மாற்றால்
வருமணத் திறத்தின் முன்னர் வழியெதிர் கொள்ளச் சென்று
திருமணம் புணர வெய்துஞ் சிரபுரச் செம்ம லார்தாம்
இருண்மணந் திலங்கு கண்டத் திறைவர்தங் கோயில் புக்கார் (க௨௦௭)

நாதரைப் பணிந்து போற்றி நற்பொருட் பதிகம் பாடிக்
காதன்மெய் யருண்முன் பெற்றுக் கவுணியர் தலைவர் போந்து
வேதியர் வதுவைக் கோலம் புனைந்திட வேண்டு மென்னப்
பூதநா யகர்தங் கோயிற் புறத்தொரு மடத்திற் புக்கார் (க௨௦௮)

பொற்குட நிறைந்த வாசப் புனிதமஞ் சனநீ ராட்டி
விறபொலி வெண்பட் டாடை மேதக விளங்கச் சாத்தி
நற்றிரு வுத்த ரீய நறுந்துகில் சாத்தி நானப்
பற்பல கலவைச் சாந்தம் பான்மையி னணிந்த பின்னர் (க௨௦௯)

திருவடி மலர்மேற் பூத்த செழுந்தகைச் சோதி யென்ன
மருவிய தாளக் கோவை மணிச்சரி யணையச் சாத்தி
விரிசுடர்ப் பரட்டின் மீது விளங்குபொற் சரட்டிற் கோத்த
பெருகொளி முத்தி னம்மம் பிறங்கிய தொங்கல் சாத்தி (க௨௧௦)

தண்சுடர்ப் பரிய முத்துந் தபனிய நாணிற் கோத்த
கண்கவர் கோவைப் பத்திக் கதிர்க்கடி சூத்தி ரத்தை
வெண்சுடர்த் தரள மாலை விரிசுடர்க் கொடுங்கை மீது
வண்டிரு வரையி னீடு வனப்பொளி வளரச் சாத்தி (க௨௧௧)

ஒளிகதிர்த் தரளக் கோவை யுதரபந் தனத்தின் மீது
தளிரொளி துளும்பு முத்தின் சன்னவீ ரத்தைச் சாத்திக்
குளிர்நில வெறிக்கு முத்தின் பூணூற் கோவை சாத்தி
நளிர்கதிர் முத்த [illegible] நந்துசுட ராரஞ் சாத்தி (க௨௧௨)

வாள்விடு வயிரக் [illegible] மணிவிர லாழி சாத்தித்
தாளுறு தடக்கை முத்தின் றண்டையுஞ் சரியு நாணு
நீளொளி முழங்கைப் பொட்டு நிரைசுடர் வடமுஞ் சாத்தித்
தோள்வளைத் தரளப் பைம்பூண் சுந்தரத் தோண்மேற் சாத்தி (க௨௧௩)

திருக்கழுத் தார நெய்யக் கண்டிகை மாலை சேரப்
பருத்தமுத் தொழுங்கு கோத்த படரொளி வடமுஞ் சாத்திப்

(எடாகூ) நானம் - கஸ்தூரி.

பெருக்கிய வனப்பின் செவ்வி பிறங்கிய திருவார் காதில்
வருக்கவெண் டரளக் கொத்தின் வடிக்குழை விளங்கச் சாத்தி. (கஉகச)

நீறொளி தழைத்துப் பொங்கி நிறைதிரு நெற்றி மீது
மேற்பட விரிந்த சோதி வெண்சுட ரெழுந்த தென்னப்
பாற்படு முத்தின் பாரப் பனிச்சுடர்த் திரணை சாத்தி
யேற்பவைத் தணிந்த முத்தி னெழில்வளர் மகுடஞ் சேர்த்தார் (கஉகரு)

இவ்வகை நம்மை யாளு மேர்வளர் தெய்வக் கோலங்
கைவினை மறையோர் செய்யக் கடிகொள்செங் கமலத் தாரின்
செவ்விநீ டாம மார்பர் திருவுடை யாள மாலை
யெவ்வுல கோரு மேத்தத் தொழுதுதா மெடுத்துப் பூண்டார் (கஉகசு)

அழகினுக் கணியாம் வெண்ணீ றஞ்செழுத் தோதிச் சாத்திப்
பழகிய வன்பர் சூழப் படரொளி மறுகி லெய்தி
மழவிடை மேலோர் தம்மை மனங்கொள வணங்கி வந்து
முழுவொலி யெடுப்ப முத்தின் சிவிகைமேற் கொண்ட போது (கஉகஎ)

எழுந்தன சங்க நாத மியம்பின வியங்க ளெங்கும்
பொழிந்தன விசும்பில் விண்ணோர் கற்பகப் புதுப்பூ மாரி
தொழுந்தகை முனிவர் தொண்டர் சுருதியின் வாழ்த்துப் பொங்கி
வழிந்தன திசைக ணீது மலர்ந்தன வுலக மெல்லாம் (கஉகஅ)

படர்பெருந் தொங்கல் பிச்சம் பைங்கதிர்ப் பீலிப் பந்தர்
அடர்புனை செம்பொற் பாண்டி லணிதுகிற் சதுக்க மல்கக்
கடலின்மீ தெழுந்து நிறந்துங்க கதிர்நிறை மதியம் போல
வடநிரை யணிந்த முத்தின் மணிக்குடை நிழற்ற வந்தார். (கஉககூ)

சீரணி தெருவி னூடு திருமணஞ் செல்ல முத்தின்
ஏரணி காளஞ் சின்ன மிலங்கொளித் தாரை யெல்லாம்
பேரொலி பெருக முன்னே பிடித்தன மறைக ளோடு
தாரணி யுய்ய ஞான சம்பந்தர் வந்தா ரென்று (கஉஉ0)

மண்ணினுக் கிழக்கண் டீர வந்தவர் திருநா மங்கள்
எண்ணில பலவு மேத்திச் சின்னங்க ளெழுந்த போதவ்
வண்ணலார் வதுவை செய்ய வலங்கரித் தணையப் பெற்ற
புண்ணிய மறையோர் மாட மங்கலம் பொலிந்து பொங்க (கஉஉக)

முற்றுமெய்ஞ் ஞானம் பெற்ற மூர்த்தியார் செங்கை பற்ற
நற்பெருந் தவத்தி னீர்மை நலம்படைத் தெழுந்த தெய்வக்
கற்பகப் பூங்கொம் பன்னார் தம்மையுங் காப்புச் சேர்த்துப்
பொற்புறு சடங்கு முன்னர்ப் புரிவுடன் செய்த வேலை (கஉஉஉ)

(கஉகசு) திரு அடையாளமாலை - உருத்திராக்ககண்டி மாலை. (கஉககூ) பிச்சம் - வெண்குடை. பாண்டில் - தகட்டால் ஆய.

செம்பொன்செய் வாசிச் சூட்டுத் திருமணிப் புனைபூண் செல்வப்
பைம்பொனின் மாலை வேய்ந்த பவளமென் கொடியொப் பாரை
நம்பனா ரருளே வாழ்த்தி நலமெழில் விளங்கச் சூட்டி
அம்பொன்செய் தீப மென்ன வழகலங் கரித்து வைத்தார். (௧௨௨௩)

மாமறை மைந்த ரெல்லா மணத்தெதிர் சென்று மன்னும்
தூமலர்ச் செம்பொற் சுண்ணந் தொகுநவ மணியும் வீசத்
தாமரை மலரோன் போல்வா ரரசிலை தருப்பை தோய்ந்த
காமர்பொற் கலச நன்னீ ரிருக்குடன் கலந்து வீச (௧௨௨௪)

விண்ணவர் மலரின் மாரி விசும்பொளி தழைப்ப வீச
மண்ணக நிறைந்த கந்த மந்தமா ருதமும் வீசக்
கண்ணொளி விளக்க மிக்கார் காமர்தோ ரணங்க ளூடு
புண்ணிய விளைவு போல்வார் பூம்பந்தர் முன்பு சார்ந்தார் (௧௨௨௫)

பொன்னணி சங்கின் வெள்ளம் பொலிவுடன் முழங்கி யார்ப்ப
மன்னிய தரளப் பந்தர் வளர்மணிச் சிவிகை நின்றும்
பன்மலர் நறும்பொற் சுண்ணம் பரந்தபா வாடை மீது
முன்னிழிந் தருளி வந்தார் மூவுல குய்ய வந்தார். (௧௨௨௬)

மறைக்குல மனையின் வாழ்க்கை மங்கல மகளி ரெல்லா
நிறைந்தநீர்ப் பொற்கு டங்க ணிரைமணி விளக்குத் தூப
நறைக்குல மலர்சூழ் மாலை நறுஞ்சுடர் முளைப்பொற் பாண்டில்
உறைப்பொலி கலவை யேந்தி யுடனெதி ரேற்று நின்றார். (௧௨௨௭)

ஆங்குமுன் னிட்ட செம்பொ னணிமணிப் பீடந் தன்னில்
ஓங்கிய ஞான வெள்ள முண்ணிறைந் தெழுவ தென்னத்
தாங்கிய முத்தின் பைம்பூ ணணிநிலா வெறிப்ப வேறிப்
பாங்கொளி பரப்பி நின்றார் பரசம யங்கள் வீழ்த்தார் (௧௨௨௮)

எதிர்வம் பியற்ற சாய லிளமயி லனைய மாதர்
மதுரமங் கலமுன் னான வாழ்த்தொலி யெடுப்ப வந்து
கதிர்மணிக் கரக வாசக் கமழ்புன லொழுகிக் காதல
விதிமுறை வலங்கொண் டெய்தி மேவுநல் வினைகள் செய்தார். (௧௨௨௯)

மங்கலம் பொலிய வேந்தி மாதரார் முன்பு செல்லக்
கங்கையின் கொழுந்து செம்பொ னிமவரை கலந்த தென்ன
அங்கவர் செம்பொன் மாடத் தாதிபூ மியினுட் புக்கார்
எங்களை வாழ முன்னா ளேடுவை கையினு ளிட்டார் (௧௨௩௦)

அகினறுந் தூபம் விம்மி யணிகிளர் மணியால் வேய்ந்த
துகில்புனை விதான நீழற் றூமலர்த் தவிசின் மீது

---

(௧௨௨௩) வாசிச்சூட்டு - நெற்றியிலணியு மாலை. (௧௨௩௦) கொழுந்து - பிரவாகத் தாரை.

நகிலணி முத்த மாலை நகைமுக மடவார் வாழ்த்த
இகலில்சீர் மறையோர் சூழ வினிதினங் கிருந்த வேலை. (௧௨௩௧)

திருமகட் கொடுக்கப் பெற்ற செழுமறை முனிவர் தாமும்
அருமையான் முன்செய் மெய்ம்மை யருந்தவ மனைவி யாரும்
பெருமகிழ்ச் சியினாற் பாதம் விளக்குவார் பிள்ளை யார்முன்
உரிமையால் வெண்பொற் றாலி ருடனெடுத் தேந்தி வந்தார். (௧௨௩௨)

வந்துமுன் னெய்தித் தாமுன் செய்தமா தவத்தி னன்மை
நந்துநம் பாண்டார் நம்பி ஞானபோ னகர்பொற் பாதங்
கந்தவார் குழலி னார்பொற் கரகநீ ரெடுத்து வார்ப்பப்
புந்தியா னினைதி யானம் புரிசடை யானென் றுன்னி. (௧௨௩௩)

விருப்பினால் விளக்கி மிக்க புனிதநீர் தலைமேற் கொண்டு
பொருப்புறு மாடத் துள்ளும் புறத்துள்ளுந் தெளித்த பின்னர்
உருப்பொலி யுதரத் துள்ளும் பூரித்தா ருவகை பொங்கி
யருப்புறு கிளைஞர் மேலுந் தெளித்தன ரார்வத் தோடும். (௧௨௩௪)

பெருகொளி ஞான முண்ட பிள்ளையார் மலர்க்கை தன்னின்
மருவுமங் கலநீர் வாசக் கரகமுன் னேந்தி வார்ப்பார்
தருமுறைக் கோத்தி ரத்தின் றங்குலஞ் செப்பி யென்றன்
அருநிதிப் பாவை யாரைப் பிள்ளையாக் களித்தே னென்றார். (௧௨௩௫)

நற்றவக் கன்னி யார்கை ஞானசம் பந்தர் செங்கை
பற்றுதற் குரிய பண்பிற் பழுதினற் பொழுது நணணப்
பெற்றவ ருடன்பி றந்தார் பெருமணப் பிணைய னாரைச்
சுற்றமுன் சூழ்ந்து போற்றக் கொணடுமுன் றுன்னி னார்கள். (௧௨௩௬)

ஏகமாஞ் சிவமெய்ஞ் ஞான மிசைந்தவர் வலப்பா லெய்தி
நாகமார் பணப்பே ரல்கு னற்றவக் கொழுந்த னாரை
மாகமார் சோதி மல்க மன்னிவீற் றிருந்த வெள்ளை
மேகமோ டிசையு மின்னுக் கொடியென விளங்க வைத்தார். (௧௨௩௭)

புனிதமெய்க் கோல நீடு புகலியார் வேந்தர் தம்மைக்
குனிசிலைப் புருவ மென்பூங் கொம்பனா ருடனே கூட
நனிமிகக் கண்ட போதி னல்லமங் கலங்கள் கூறி
மனிதருந் தேவ ரானார் கண்ணிமை யாது வாழ்த்தி. (௧௨௩௮)

பதியிற் குயிற்றும் பைம்பொற் பவளக்காற் பந்தர் நாப்பண்
சித்திர விதானத் தின்கீழ்ச் செழுந்திரு நீல நக்கர்
முத்தமிழ் விரகா முனபு முதன்மறை முறையி னோடு
மெய்த்தநம் பெருமான் பாத மேவுமுள் ளத்தாற் செய்ய. (௧௨௩௯)

---

(௧௨௩௪) உரு - அழகு. (௧௨௩௭) மாகமார - விண்ணுலகம. (௧௨௩௯) நாபபண-நடுவே. விதானம - மேற்கட்டி.

மறையொலி பொங்கி யோங்க மங்கல வாழ்த்து மல்க
நிறைவளைச் செங்கை பற்றி நேரிழை யவர்முன் னந்தப்
பொறையணி முந்நூன் மார்பர் புகரில்வெண் பொரிகை யட்டி
யிறையவ ரேத்தும் வேலை யெரிவலங் கொள்ள வேண்டி (௧௨௫0)

அருப்புமென் முலையி னாத மணிமலர்க் கைப்பிடித் தங்
கொருப்படு முடைய பிள்ளை யார்திரு வுள்ளந் தன்னில்
விருப்புறு மங்கை யாவர் விடையுயர்த் தவரே யென்று
திருப்பெரு மணத்தை மேவுஞ் சிந்தையிற் றெளிந்து செல்வார் (௧௨௫௧)

மந்திர முறையா லுய்த்த வெரிவல மாக மாதர்
தந்திருக் கையைப் பற்றுந் தாமரைச் செங்கை யாளர்
இந்தவில் லொழுக்கம் வந்து சூழ்ந்ததே யிவளுட னேகும்
அந்தமில் சிவன்றாள் சேர்வ னென்னுமா தரவு பொங்க (௧௨௫௨)

மலர்பெருங் கிளையுந் தொண்டர் கூட்டமு மலங்கிச் சூழ
அலகின்மெய்ஞ் ஞானத் தெல்லை யடைவுறுங் குறிப்பா லங்கண்
உலகினை மருங்கு நீங்க வுடனணைந் தருள வேண்டிக்
குலமணம் புரிவித் தார்தங் கோயிலை நோக்கி வந்தார் (௧௨௫௩)

சிவனமர்ந் தருளுஞ் செல்வத் திருப்பெரு மணத்து ளெய்தித்
தவநெறி வளர்க்க வந்தார் தலைப்படுஞ் சார்பு நோக்கிப்
பவமற வென்னை முன்னா ளாண்டவப் பண்பு கூட
நவமலர்ப் பாதங் கூட்டு மென்னுநல் லுணர்வு நல்க (௧௨௫௪)

காதன்மெய்ப் பதிக நல்லூர்ப் பெருமண மெடுத்துக் கண்டோர்
தீதுறு பிறவிப் பாசந் தீர்க்கல்செம் பொருளாகக் கொண்டு
[illegible] நல்லூர் மேவும் பெருமண நம்ப னேயுன்
பாதமெய்ந் நீழல் சேரும் பருவமீ தென்று பாட (௧௨௫௫)

---

### நல்லூர்ப்பெருமணம் — பண் — அந்தாளிக்குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்

கல்லூர்ப்பெருமணம்வேண்டாகழுமலம்
பல்லூர்ப்பெருமணம்பாட்டுமெய்யாய்த்தில
சொல்லூர்ப்பெருமணஞ்சூடலரேதொண்டர்
நல்லூர்ப்பெருமணமேயநம்பானே

நறும்பொழிற்காழியுள்ஞானசம்பந்தன்
பெறும்பதநல்லூர்ப்பெருமணத்தானை
யுறும்பொருளாற்சொன்னவொண்டமிழ்வல்லார்க்
கறும்பழிபாவமவலமிலாரே.

திருச்சிற்றம்பலம்

---

தேவர்கள் தேவர் தாமுந் திருவருள் புரிந்து நீயும்
பூவைய லாளு மிங்குன் புண்ணிய மணத்தின் வந்தார்
யாவரு மென்பாற் சோதி யிதனுள்வந் தெய்து மென்று
மூவுல கொளியால் விம்ம முழுச்சுடர்த் தாணு வாகி (கஉ௪௬)

கோயிலுட் படமே லோங்குங் கொள்கையாற் பெருகுஞ் சோதி
வாயிலை வகுத்துக் காட்ட மன்னுசீர்ப் புகலி மன்னர்
பாயின வொளியா னீடு பரஞ்சுடர் தொழுது போற்றி
மாயிரு ஞால முய்ய வழியினை யருளிச் செய்வார் (கஉ௪௭)

ஞானமெய்ந் நெறிதான் யார்க்கு நமச்சிவா யச்சொ லாமென்
றானசீர் நமச்சி வாயத் திருப்பதி கத்தை யங்கண்
வானமு நிலனுங் கேட்க வருள்செய்திம் மணத்தில் வந்தோர்
ஈனமாம் பிறவி தீர யாவரும் புகுக வென்ன. (கஉ௪௮)

---

நமச்சிவாயப்பதிகம் - பண் - கௌசிகம்

திருச்சிற்றம்பலம்.

காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி, யோதுவார் தமை நன்னெறிக் குய்ப்பது
வேதநான் கினு மெய்ப்பொரு ளாவது, நாதனாம நமச்சிவாயவே

நந்திநாம நமச்சிவாய வெனுஞ், சந்தையாற் றமிழ்ஞானசம்பந்தன் சொல்
சிந்தையான் மகிழ்ந்தேத்த வல்லாரெல்லாம், பந்தபாச மறுக்க வல்லார்களே

திருச்சிற்றம்பலம்.

---

வருமுறைப் பிறவி வெள்ளம் வரம்புகா ணாது மூழ்கி
யுருவெனுந் துயரக் கூட்டி லுணர்வின்றி மயங்கு வார்க
டிருமணத் துடன்சே வித்து முன்செலுஞ் சிறப்பி னாலே
மருவிய பிறவி நீங்க மன்னுசோ தியினுட் புக்கார் (கஉ௪௯)

வேறு

சீர்பெருகு நீலநக்கர் திருமுருகர் முதற்றொண்டர்
ஏர்கெழுவு சிவபாத விருதயர்நம் பாணனார்
ஆர்திருமெய்ப் பெரும்பாணர் மற்றனையோ ரனைந்துள்ளோர்
பாரிலவு கிளைசூழப் பன்னிகளோ டுடன்புக்கார் (கஉ௫0)

அணிமுத்தின் சிவிகைமுத லணிதாங்கிச் சென்றோர்கள்
மணிமுத்த மாலைபுனை மடவார்மங் கலம்பெருகும்
பணிமுற்று மெடுத்தார்கள் பரிசனங்கள் வினைப்பாசந்
துணிவித்த வுணர்வினராய்த் தொழுதுடன்புக் கொடுங்கினார் (கஉ௫க)

ஆறுவகைச் சமயத்தி லருந்தவரு மடியவருங்
கூறுமறை முனிவர்களுங் கும்பிடவந் தணைந்தாரும்

*வேறுதிரு வருளினால் வீடுபெற வந்தாரும்*
*ஈறில்பெருஞ் சோதியினு ளெல்லாரும் புக்கதற்பின்.* (கஉருஉ)

*காதலியை கைப்பற்றிக் கொண்டுவலங் கொண்டருளித்*
*தீதகற்ற வந்தருளுந் திருஞான சம்பந்தர்*
*நாதனெழில் வளர்சோதி நண்ணியத னுட்புகுவார்*
*போதநிலை முடிந்தவழிப் புக்கொன்றி யுடனானார்.* (கஉருங)

*பிள்ளையா ரெழுந்தருளிப் புக்கதற்பின் பெருங்கூத்தர்*
*கொள்ளநீ டியசோதிக் குறிநிலையவ் வழிகரப்ப*
*வள்ளலார் தம்பழைய மணக்கோயி றோன்றுதலுந்*
*தெள்ளுநீ ருலகத்துப் பேறில்லார் தெருமந்தார்.* (கஉருச)

*கண்ணுதலார் திருமேனி யுடன்கூடக் கவுணியனார்*
*நண்ணியது தூரத்தே கண்டுநேரா கப்பெறா*
*விண்ணவரு முனிவர்களும் விரிஞ்சனே முதலானார்*
*எண்ணிலவ ரேசறவு தீரவெடுத் தேத்தினார்.* (கஉருரு)

*அருந்தமிழா கரர்சரிதை யடியேனுக் கவர்பாதந்*
*தரும்பரிசா லறிந்தபடி துதிசெய்தேன் றாரணிமேற்*
*பெருங்கொடையுந் திண்ணனவும் பேருணர்வுந் திருத்தொண்டால்*
*வருந்தகைமைக் கலிக்காம னார்செய்கை வழுத்துவேன்.* (கஉருசு)

**திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் புராண முற்றிற்று.**

ஆ திருவிருத்தம் – ௩கருசு.



காவிரிநதிபாயுஞ் சோழநாட்டிலே, கற்பாந்த வெள்ளங்களினும் அழியாததும், பன்னிரண்டு திருநாமங்களை யுடையதுமாகிய சீகாழிப்பதியிலே, வேதியர் குலத்திலே, கௌணியா கோத்திரத்திலே, சிவபாதவிருதயர் என்பவர் ஒருவரிருந்தார். அவர் மனைவியார் கற்பிற்சிறந்த பகவதியார் என்பவர். அவ்விருவர்களும் அரனடியன்றி மற்றைய அமரர்களைக் கனவிலுங் கருதாதவர்களாய், விபூதியையே அருட்பெருஞ் செல்வமெனக்கொண்டு இல்லறத்தை நடாத்தி வந்தார்கள்

அக்காலையில் பொய்ச்சமயங்களாகிய பௌத்தசமயமும், சமணசமயமும் பெருக, மெய்ச்சமயமாகிய சைவசமயமும், விபூதிருத்திராக்ஷ சாதன விளக்கமும் அருகிக்குன்றின. அதைக்கண்ட சிவபாத விருதயர் பெரிதும் துக்கித்து, இல்லறத்திலிருந்து கொண்டே பரசமயத்தை நிராகரித்து, சைவசமயத்தை நிலைநிறுத்தவல்ல ஒரு சற்புத்திரனைப்பெற விரும்பிச் சிவபிரானை நோக்கி அரியதவஞ் செய்தார். செய்யவே, தோணியப்பருடைய திருவருளினாலே உயிர்கள் எல்லாம் உய்யப் பகவதியார் மணிவயிற்றில கற்போற்பத்தியாகிய பெரும்பேறு உண்டாயிற்று. சீவகாருண்ணியத்திற் சிறந்த சிவபாத

(கஉருச) தெருமந்தார் - மயக்கமடைந்தார். (கஉருரு) ஏசறவு - மனத்துயர்.

விருதயர் திருவருளைவியந்து, செய்யவேண்டிய கடன்களைப் பத்துமாதங் களினும் பந்துக்களோடு செய்து, பேரின்பவாரிதியில் ஆழ்ந்து கிடக்கு நாளில், சூரியன் முதலிய கோளகளெல்லாம் உச்சங்களிலே மிகவலியோடு நிற்க, சுபவோரையெழ, திருவாதிரை நட்சத்திரத்திலே, திசைகள் விளங் கவும், பரசமயங்களின் தருக்கொழியவும், சைவமும், வைதிகமும் தழைத் தோங்கவும், அடியார்கள் அகங்களிப்பவும, விபூதிருத்திராக்ஷ சாதனங்கள் தழைக்கவும, தேவர்கள் வியக்கவும, அந்தணர்கள் ஆகுதிபெருகவும், தமிழ்த் தெய்வதத்தின் தவம் நிரம்பவும், மாதவர்கள் தவம்நிலைக்கவும், எல்லாத்திசை களின் பெருமைகளைத தென்றிசையேவென்று சிறக்கவும, எம்மொழிகளி னும் இனிய தமிழ்மொழியே உயர்வடையவும், நிகழ்கால எதிர்கால நவை கள நீங்கவும் சராசரங்களெல்லாம் சிவம்பெருக்கும பிள்ளையார் திருவவதா ரஞ்செய்தார் அப்பொழுது அமரர் அலர்மாரி சொரிந்து ஆரவாரித்தார் கள்; அந்தணர்கள் வேதகோஷஞ் செய்தார்கள்; சீகாழிவாசிகள் அனைவரும ஆனந்தக் கூத்தாடினார்கள் சிவபாதவிருதயர் பிள்ளையார் அவதரித்த நாள முதல பத்துத்தினங்களினும் விதிப்படி சடங்குகளைசசெய்து, உரியகாலங்க ளிலே பிள்ளையார்க்கு நாமகரணம, அன்னப்பிராசனம முதலியனசெய்தார். உலகுய்யத திருவவதாரஞ்செய்த பிள்ளையார்பெருமான செங்கீரையாடியும், சப்பாணிகொட்டியும வளர்ந்து வந்தார்.

இப்படி வளர்ந்துவரும் இளமைப் பிள்ளையார் மூன்றும் வயதை யடைந்த பின்னர் தமது தந்தையாராகிய சிவபெருமானைப பிரிந்ததை யுணர்ந்து ஒரோர்கால் வருத்தமுற்றயர்வாராயினார். ஒருநாள் தந்தையாகிய சிவபாதவிருதயர் நீராடப்போகும்பொழுது, சிவபெருமான் திருவருள்கூட, பிள்ளையார் அழுதுகொண்டே அவரைப பின்தொடர்ந்தார். பிதாவானவர் திருமபிப்பார்த்துக் கோபிப்பவரைப்போல விலக்கச் சீகாழிப்பிள்ளையார் காலகொட்டி வீட்டுக்குத திரும்பாமல தொடர்ந்தார் அதுகண்ட சிவபாத விருதயர் "உனசெய்கை இதுவாயின வா" என்று உடனகொண்டுபோய, பிரமதீர்த்தத்தை யடைந்து, கரையிலேவைத்து, தாம தீர்த்தத்திலே மூழ்கி அகமருஷ்ணம முதலியன செய்தார் கரையிலிருந்த பிள்ளையார் தந்தை யார் ஸ்நானஞ் செய்யும்போது அவரைக்காணாது க்ஷணநேரமும் தரியார் என்னும நிலைமை தலைக்கீடாக, சிவபிரான திருவடியைப் பூசித்துவந்த முன்னுணர்சசி மூள, உலகமுய்ய, முற்சார்பையுணர்ந்தோ, பிள்ளைமை யாலோ திருத்தோணிச சிகரமபார்த்து "அம்மே அப்பா" என்று அதரந் துடிக்க அழுதருளினார் அடியார்கள் வேண்டுவனவேண்டியளிக்கும் கடங் கருணைப பெருங்கடலாகிய சிவபெருமான பிள்ளையாரது பூர்வதொண் டைக்கருதி, அவருக்குத்திருவருள்செய்யத திருவுளங்கொண்டு, உமாதேவியா ரோடும்மழவிடைமேல ஆரோகணித்துப்பொய்கைக்கரையிலே எழுந்தருளி, உலகன்னையைத திருநோக்கஞ்செய்து "உன்முலைப்பாலைப் பொற்கிண் ணத்திலே கறந்து இவனுக்கு ஊட்டு" என்று அருளிச்செய்தார் பார்வதி தேவியார் தமது திருமுலைப்பாலைப் பொற்கிண்ணத்திலே கறந்து, சிவஞா னத்தையுங் குழைத்து, அழுகின்ற பிள்ளையார் அருமைத் திருக்கரத்திலே பொற்கிண்ணத்தை அளித்து ஊட்டியருளினார் சர்வலோகநாயகராகிய சங் கரனார் புத்திரரது அழுகைதீர்த்து அருள்செய்தார். அப்பிள்ளையார் பெருமான யாவருக்குந் தந்தைதாயர்களாகிய பரமசிவனாலும், பராசத்தி யாலும் ஆளப்பட்டமையால் ஆளுடைய பிள்ளையார் ஆயினார்; தேவருக் கும், முனிவருக்கும் தெரிவரிய சிவஞானத்தோடு சம்பந்தஞ்செய்தலினாலே சிவஞானசம்பந்தர் ஆயினார்.

நீராடிக்கொண்டிருந்த சிவபாதவிருதயர் சிறிதுபொழுதிலே நியமங்களை முடித்துக் கரையேறிப் பேருணர்ச்சியிற் பொலிகின்ற பிள்ளையாரைப் பார்த்து "நீ யாரளித்த பாலையுண்டாய்" என்று வெகுண்டு "எச்சில் மயங்க உனக்கு இதனைக் கொடுத்தவரைக் காட்டு" என்று ஒருசிறிய கோலைக் கொண்டு ஓச்சினார். ஞானசம்பந்த வள்ளலார் கண்களினின்றும் ஆனந்த அருவிபெருக, ஒரு திருக்கைவிரலினாலே சுட்டி, அம்பிகையோடு இடபாரூடராய்த் தம்முன் எழுந்தருளியுள்ள சிவபிரானைக்காட்டி, பிரணவத்தைத் தகர மெய்யோடுசேர்த்து ஆன்மாக்கள் நிமித்தம் தம்பாடல் சிவபெருமான் திருச்செவியில் நுழையும்பொருட்டு அவரது திருச்செவியைச் சிறப்பித்து "தோடுடையசெவியன்" என்னுந் திருப்பதிகம்பாடி "எனக்குப் பாலையூட்டித் திருவருள்செய்தவர் இவரே" என்று திருவாய்மலர்ந்தருளி, சிவபெருமான் தமக்குப் பிழைசெய்த ஆன்மாக்களும் தம்மைச் சரணடையின், அவர்களுக்குக் கருணைசெய்வர் என்னும் உண்மையை விளக்க, இராவணனை செருக்குற்றுக் கயிலாயத்தை எடுத்துப் பின் வலியிழந்து வருந்திச் சாமம் பாடித் திருவருள்பெற்றதை எட்டாந் திருப்பாட்டிலும், எவரும் சிவபெருமானை வழிபட்டாலன்றி உய்யுநெறியடையார் என்பதை விளக்குவான் திருமாலும் பிரமனும் அடிமுடி தேடி அருளடைந்ததை ஒன்பதாந் திருவருட்பாவிலும், பௌத்தசமயமும், சமணசமயமும் தீச்சமயங்கள் என்பதைப் பத்தாம் பாடலிலும் அமைத்துப் பதிகத்தைப் பூர்த்திசெய்து, திருக்கடைக்காப்புச் சாத்திச் சிவபெருமான் திருமுன்னே வணங்கிக் கொண்டு நின்றருளினார். அதனைக்கண்ட அமரர்கள் அலர்மாரி சொரிந்தார்கள். சிவபெருமான் பார்வதிதேவியாரோடு திருத்தோணிக்கு எழுந்தருளினார். அன்பே உருவாக விளங்கும் ஆளுடையபிள்ளையார் சிவபிரானைத் தொடர்ந்து, திருக்கோயிலுள்ளே சென்றார். தடாகக்கரையிலே நின்றுகொண்டிருந்த தவப்பெருஞ் சீலராகிய சிவபாதவிருதயர் பிள்ளையார் திருவாய்மலர்ந்தருளிய திருநெறித்தமிழின் பொருளை யுணர்ந்து ஆனந்தக் கடலில்ஆழ்ந்தனர். அவ்வள்ளலார் திருஞானசம்பந்தப்பெருமானைப்போலச் சிவபிரானைத் தரிசிக்கப் பெற்றிலரேனும், அங்கே நடந்த அற்புதத்தைக் கண்டு, அந்த திருத்தோணி இறைவர் திருவருளென்று துணிந்து, பிள்ளையாருக்குப் பின்னேசென்றார். அந்நிகழ்ச்சிகள் எல்லாவற்றையுங் கேள்வியுற்ற அடியவர்கள் "இத்தகைய அற்புதம் எங்கே நடந்தது! எங்கே நடந்தது!" என்று புளகாங்கிதத்தோடு புகன்றுகொண்டு ஆலயத்தின் வாயிற்புறத்திலே சூழ்ந்துகொண்டார்கள். திருஞானசம்பந்த சுவாமிகள் சிவபிரானைப்பணிந்து, திருப்பதிகம்பாடி, விடைபெற்று, திருக்கோயிலினின்றும் புறப்பட்டார். அடியவர்களும், அந்தணர்களும், பிறரும் ஆளுடைய பிள்ளையாரை எதிர்கொண்டுபோய் அவரது அடிமலரில் வீழ்ந்து நமஸ்கரித்து இன்புற்றார்கள். சிவபாதவிருதயர் திருஞானசம்பந்த வள்ளலாரைத் தோள்மேல் சுமந்துகொண்டு, அந்தணர்கள் அருமறை முழக்கஞ்செய்ய, அடியவர்கள் துதிசெய்ய, சீகாழியிலுள்ள நம்பிமார்களும், நங்கைமார்களும் வாழ்த்துக்கூற, திருவீதியை வலம்வந்து தமது இல்லமடைந்தார்.

ஆளுடைய பிள்ளையார் அன்றிரவு ஆனந்த நித்திரைசெய்து, சூரியோதயத்தில் எழுந்து திருக்கோயிலுக்குச் சென்று தோணியப்பரையும், பெரியநாயகியாரையும் தொழுது, திருக்கோலக்காவிற்கு விருப்புடன்சென்று, சுவாமி தரிசனஞ்செய்து, திருமுன்னே நின்று திருக்கரத்தினாலே தாளமாத்திரையை ஒத்தறுத்து "மடையில்வாளை" என்னுந் திருப்பதிகத்தை ஓதியருளும்பொழுது, சிவநாதன் திருவருளால் ஸ்ரீ பஞ்சாக்கரம் பொறிக்

கப்பட்ட செம்பொற்றாளம் பிள்ளையார் திருக்கரத்திலே வந்திருந்தது. அதைக்கண்ட ஆளுடையபிள்ளையார் அதைத் திருமுடியிற்சூடி, களிகூர்ந்து, எழிசையுந் தழைத்தோங்கத, திருப்பதிகம்பாடி, திருக்கடைக் காப்புச்சாத்திச் சீகாழிக்குததிரும்பினார். அதுகாலைப்பிள்ளையார் அருமைத்திருப்பாதம் நோவ நடததலைக்கண்ட சிவபாத விருதயர் மனந் தரியாது தோளின்மேல் தரிததுககொண்டார். சம்பந்தப்பெருமான் தந்தையார் தோளின்மேல் எழுந்தருளி, திருத்தோணியை யடைநது, சுவாமி தரிசனஞ்செய்து, "பூவார் கொன்றை" என்னுந திருபபதிகததைப் பாடித் திருமாளிகையடைந்து, சீகாழி வாசிகளுக்குத் தமது இளங்கோலத் திருக்காட்சியைக் கொடுத்துக் கொணடு வந்தார் ஆளுடையார் அன்னையாராகிய பகவதியாரது ஜனன க்ஷேத்திரமாகிய திருநனிப்பள்ளியிலேயுள்ள பிராமணாகளும், பிறபதிகளிலுள்ள பிராமணர்களும் பிள்ளையார் பெரியநாயகியார் ஞானப்பாலையுணடு சிவஞானம் பெற்றதைக் கேள்வியுற்றுப் பிரமபுரத்தை யடைந்து, ஞானக் கொழுநதைப் பணிநது பிணியை யொழித்தார்கள்.

பிள்ளையார் திருநனிபள்ளி வேதியர்கள் வேண்டியபடி அத்தலதசனத் தரிசிக்க எழுந்தருளினார் அதுகாலை அம்மையார் அருண்முலைப்பாலுண்ட அருளாளருடைய சீர்அடிகள் தரைமீது செல்வதையும, பிறரொருவர் தாஙகுவதையுமபொறாதபேரன்பினையுடைய சிவபாதவிருதயர் அச்சிவஞான மணியைத் தோளின்மேல் தரிததுக்கொண்டார் திருநனிபள்ளியைச் சமீபிததபொழுது தமிழ்விரகர் "அம்மலர்ச்சோலை தோன்றும் பதியாது" என்றுவினவ, தநதையார் "திருநனிபள்ளி" என்றார் அதைக்கேட்டு "காரைகள் கூகை" என்னுந் திருப்பதிகம் பாடிக்கொண்டே திருக்கோயிலையடைந்து சுவாமி தரிசனஞ்செய்து, திருககடைக்காப்பில் "நனிபள்ளி யுள்க வினைகெடுதலாணை நமதே" என்று அருளிச்செய்து, அத்திருப்பதியிலே சின்னாட்டஙகிப் பின்னர்த் திருத்தலைச்சஙகாடு, திருவலம்புரம், பல்லவனீசசரம், திருசசாயக்காடு, திருவெண்காடு, தென்திருமுல்லைவாயில் என்னுஞ் சிவதலஙகளைத தரிசித்து, [illegible]க்கொண்டு, சீகாழியை யடைநது, மீண்டும் திருமயேநதிரப்பள்[illegible]ருககுருகாவூர் முதலிய திருப்பதிகளைத் தரிசிததுப் பதிகமபாடிக் கொண்டிருந்தார்

அநநாளில, திருநீலகண்ட யாழ்ப்பாணநாயனார் பிள்ளையாரைத் தரிசிக்க விறலியாரோடு யாழ்கொண்டு சண்பைக்குவநதார் திருஞானசம்பந்த சுவாமிகள் அவரை எதிர்கொளள; அவர் அவரது திருவடிகளில் வீழ்ந்து வணஙகித தோததிரஞ்செய்தார். கௌணியர்பெருமான் அவரைத் திருக்கோயில் புறமுன்றிலிலே அழைத்துககொண்டுபோய்க் கும்பிடுவித்து, அவரைநோக்கி "உஙகள் இறைவற்கு யாழ்வாசியும்" என்ன; பாணனார் யாழ் வாசித்துப் பிள்ளையாரை மகிழச்செய்தனர். பின்னர் பிள்ளையார் திருநீலகணடரை அழைததுககொண்டு சென்று, உறைவிடஙகொடுதது, விருந்து செய்தார். திருநீலகணட யாழ்ப்பாணர் திருஞானசம்பந்த சுவாமிகள் அருளிய அருட்பாக்களைககேட்டுப் பெருமகிழ்வெய்தித் தொழுது, அப்பாக்களின் இசையை யாழிலே இட்டுவாசிதது, பிள்ளையாரைப்பணிந்து "ஐயரே! தேவரீர திருவாய்மலருஞ் செந்தமிழ்ப்பதிகஙகளின் இசையை யாழிலிட்டு வாசித்துக்கொண்டு தேவரீரைப் பிரியாதிருககும் பெருவாழ்வை அடியேற்கருளலவேண்டும்" என்று பிரார்த்தித்தார். அதற்கு முத்தமிழ் விரகர் திருவருள்செய்தார். அன்றுமுதல் திருநீலகண்டயாழ்ப்பாணநாயனார் கௌணியர்கோன் அருளும் திருப்பாககளின் இசையை யாழிலிட்டு வாசித்துககொண்டு அவ்வள்ளலாரைப் பிரியாதிருந்தார்.

ஆளுடையபிள்ளையார் அம்பலத்திலே ஆனந்தத் திருத்தாண்டவம் புரியும் அநாதிமல முத்தராகிய ஸ்ரீ நடராஜப்பெருமானைத் தரிசிக்கவேண்டும் என்னும் பேராசைக்கொண்டு தந்தையாரோடும், திருநீலகண்ட யாழ்ப்பாண நாயனாரோடும் திருத்தொண்டர்கள் புடைசூழத் தில்லையம்பதியையடைந்தார். அடைந்து திருவெல்லையைத்தொழுது, திருமதிலின் தெற்கு வாயிலைச் சமீபிக்க, தில்லைவாழ் அந்தணர்களும், மற்றைய அடியவர்களும் எதிர்கொண்டார்கள். அவர்களுடன் சென்று திருவீதியை நமஸ்கரித்துத் தூலலிங்கமாகிய கோபுரத்தைப் பணிந்தெழுந்து, உள்ளேபோய், திருமாளிகையை வலமவந்து, பேரம்பலத்தைப் போற்றிச் சிற்சபையையடைந்து, கருணையையே திருமேனியாகக்கொண்டு திருநடம்புரியும் சபாநாயகரைத் தரிசித்து அனலிடைப்பட்ட மெழுகெனவுருகி "கற்றாங்கெரி" என்னுந் திருப்பதிகத்தைப் பாடியருளினார். பின்னர் ஞானசம்பந்த வள்ளலார் திருமாளிகையை வலங்கொண்டு புறம்போந்து திருமுன்றிலைத் தொழுது திருவாயிலை இறைஞ்சி, நான்கு திருவீதிகளையும் வணங்கி, அத்திருப்பதியில் எழுந்தருளியிருப்பதற்கு அஞ்சித் திருவேட்களத்தையடைந்து சிவபெருமானை நமஸ்கரித்து, பதிகம்பாடி, அங்கே எழுந்தருளியிருந்தார். அத்திருத்தலத்திலிருந்துகொண்டே சிதம்பர தரிசனஞ்செய்வாராயினார். அக்காலை திருக்கழிப்பாலை என்னும் க்ஷேத்திரத்திற்றப்போய்ச் சுவாமி தரிசனஞ்செய்து திரும்பினார். ஒருநாள் திருவேட்களத்தை நீங்கிச் சிதம்பரத்தையடைந்தபொழுது மூவாயிரம் அந்தணர்களும் சிவகணநாதர்களாய்த் தோன்றினார்கள். அதைப்பிள்ளையார் யாழ்ப்பாணருக்குக் காட்டி, அவ்வந்தணர்கள் தம்மைப் பணியுமுன்னமே தாம் அவர்களை வணங்கித் திருக்கோயிலுட் பிரவேசித்துச் சுவாமி தரிசனஞ்செய்து "ஆடினாய் நறுநெய்யொடு" என்னுந் திருப்பதிகத்தைப் பாடி, ஒரு திருப்பாட்டிலே தாம் தில்லைவாழ் அந்தணர்களைத் தரிசித்தபடி அருளி, அத்தகைய அந்தணர்கள் "தொழுதேத்துஞ் சிற்றம்பலம்" என்று திருவாய்மலர்ந்தருளினார். பிள்ளையார் திருக்கோயிலினின்றும் வெளியே வரும்பொழுது திருநீலகண்ட யாழ்ப்பாணநாயனார் அவரது பாதங்களில் விழுந்து "சுவாமீ! அடியேன் பிறந்த ஸ்தலமாகிய திருவெருக்கத்தம் புலியூரையும், நிவாவென்னும் நதிக்கரையிலுள்ள திருப்பதிகளையுந் தரிசிக்க எழுந்தருளல்வேண்டும்" என்று பிரார்த்தித்தார். அதற்கு ஆளுடையபிள்ளையார் இசைந்து தந்தையாரோடும், அடியவர்களோடும் திருவெருக்கத்தம் புலியூரைத் தரிசித்து, திருமுதுகுன்றம், திருப்பெண்ணாகடம், என்னுந் திருத்தலங்களைத் தரிசித்து, திருத்தூங்கானை மாடம் என்னுந் திருப்பதிக்கெழுந்தருளிச் சுவாமி தரிசனஞ்செய்து திருப்பதிகம் பாடியருளினார்.

திருஞானசம்பந்த மூர்த்திகள் திருத்தூங்கானை மாடத்தினின்றுந் திருநெல்வாயிலரத்துறை என்னுந் தலத்தைத் தரிசிக்க விரும்பிச் சிவபாதவிருதயர் தோளின்மேல் இருத்தலைத் தவிர்த்துத் திருவடிகளாலே, பையப் பைய நடந்து, ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தை உச்சரித்துக்கொண்டு மாறன்பாடி என்னும் பதியையடைந்தார். அக்காலை சூரியன் அஸ்தமயனமாயினன். அன்றிரவு பிள்ளையார் அப்பதியிலே தங்கினார். திருநெல்வாயிலரத்துறையீசனார் தமது புத்திரர் ஆகிய திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் கால்கள் வருந்த நடந்து வந்த வருத்தத்தைத் திருவுளத்திற்கொண்டு, அவர்க்கு முத்துச்சிவிகையும், முத்துக்குடையும், முத்துச்சின்னமும் அளிக்கக் கருதி, அவ்வூர் அந்தணர்கள் ஒவ்வொருவர் சொப்பனத்திலே தோன்றி "ஞானசம்பந்தன் நம்பால் அணைகின்றான்; அவனுக்கு முத்துச்சிவிகையும்,

முத்துக் குடையும், முத்துச் சின்னமும் நம்மிடத்தினின்றும் எடுத்துக் கொண்டுபோய் அவனுக்குக் கொடுங்கள்" என்று திருவாய்மலர்ந்தருளினார். அப்பிராமணர்கள் யாவரும் உடனே விழித்தெழுந்து, ஆலயத்திலே ஒருங்கு சேர்ந்து, ஆச்சரியமடைந்து, திருப்பள்ளியெழுச்சி காலம்வர, திருக்காப்பு நீக்கினார்கள். அங்கே முத்துச்சிவிகையும், முத்துக்குடையும், முத்துச் சின்னமும் இருக்கக்கண்டு அளவிலா ஆனந்தமெய்தி, வாத்தியகோஷத்தோடும, அடியவர்களோடும அவைகளைத தாங்கிக்கொண்டு கௌணியா பெருமான எழுந்தருளியுள்ள மாறன்பாடிக்குப் போனார்கள். அன்றிரவு அம்பிகைபாகனார் ஆளுடையபிள்ளையார் சொப்பனத்திலே தோன்றி "நம் ஆணைபடி முத்துச்சிவிகை முதலியன வுனக்குவரும்! அவையிற்றை ஏற்றுக்கொள்" என்று அருளிச்செய்து மறைந்தருளினார் திருஞானசம்பந்தப்பெருமான் தாங்கண்ட சொப்பனத்தைத் தந்தை முதலியோர்க்குச் சொல்லி வெண்ணீறணிந்து அஞ்செழுத்து ஓதிக்கொண்டு எழுந்தருளினார். சூரியோதயகாலத்திலே அரத்துறை அந்தணர்கள் சிவநாமகோஷத்தோடு முத்துச்சிவிகை முதலியனவற்றைத் தாங்கிக்கொண்டு எதிரேவந்து, பிள்ளையாரை வணங்கி "இவைகள் அரத்துறை அரனார் அளித்தபொருள்கள்; ஏற்றுக்கொள்ளும்" என்று சொன்னார்கள் அதற்கு முத்தமிழ்விரகர் இசைந்து "எந்தை யீசன்" என்னும் திருப்பதிகத்தைப் பாடித் திருவருளை வியந்து, அருளவடிவாகிய முத்துச்சிவிகையை வலம்வந்து, வணங்கி, அதிலே ஏறிய ருளி மேலே முத்துக்குடை நிழற்றவும், முத்துச்சின்னங்கள் "ஏழுலகங்களும் உய்யத் திருஞானசம்பந்த வள்ளலார் வந்தார்; எங்கும் நிறைந்த சங்கரியின் திருமுலைப்பாலுண்ட பாலறாவாயர் வந்தார்; எல்லாக் கலைகளையும் ஓதா துணர்ந்தவர் வந்தார்" என்று முழக்க, திருத்தொண்டர்களோடு திரு அரத்துறையை யடைந்தார் அடைந்து முத்துச்சிவிகையை விட்டிறங்கி, திருக்கோபுரத்தைத் தரிசித்துத் தொழுது, திருக்கோயிலுள்ளே நுழைந்து, சுவாமிதரிசனஞ்செய்து பதிகம்பாடி அங்கே சின்னாள் தங்கியிருந்தார் இருக்கும்போது பிள்ளையார் திருநெல்வெண்ணெய் முதலிய திருத்தலங்கட்குச் சென்று, சிவபெருமானை வணங்கி மீண்டனர்.

சிலநாள் கழிந்தபின்னர் திருஞானசம்பந்த மூர்த்திகட்குத் தோணியப்பரைத் தரிசிக்கவேண்டும் என்னும் பேரவா எழுந்தது எழவே கௌணியர் பெருமான் அரத்துறையடிகளை வணங்கி விடைபெற்று முத்துச்சிவிகையிலேறிப்போயத் திருப்பழுவூர், திருவிசயமங்கை, திருவைகா, திருப்புறம்பயம் என்னுந் தலங்களைக்கண்டு வணங்கித் திருச்சேய்ஞலூரை யடைந்து, அத்திருப்பதி சண்டேசுரநாயனார் திருவவதாரக்ஷேத்திர மாகலால், முத்துச சிவிகையினின்றும் இறங்கி, திருவடித்தாமரைகள் பூமியிலபொருந்த, திருக கோயிலுட் சென்று சிவபெருமானைத் தொழுது "நூறடைந்த பாலதாட்ட" என்னுந் திருப்பதிகத்தை ஓதி, திருப்பனந்தாள், திருப்பந்தணைநல்லூர், திருவோமாம்புலியூர், திருவாளொளிபுற்றூர், திருக்கடம்பூர், திருநாரையூர், திருக்கருப்பறியலூர் என்னுஞ் சிவதலங்களைத் தரிசித்துப் பதிகம் பாடிக் கொண்டு சீகாழியை யடைந்தார் அங்கேயுள்ள அடியவர்கள் ஆளுடைய பிள்ளையார் முத்துச் சிவிகையின்மேல எழுந்தருளிவரும் அற்புதத் திருக் கோலத்தைக் கண்டமாத்திரம் தம்மைமறந்த தனிஞானிகளானார்கள். பிள்ளையார் திருக்கோயிலுட் சென்று தோணியப்பரையும், பெரிய நாயகியாரையும் தொழுது பதிகம்பாடி ஆலயத்தினின்றும் நீங்கித் தமக்குப் பின்னே வந்த திருநீலகண்ட யாழ்ப்பெரும்பாணரைப் போம்படி விடைகொடுத்துத்

திருமாளிகையை யடைந்து, திருநீற்றுக்காப்புச்சாத்தித் தம்மை வணங்கிய தாயராம் பகவதியாருக்குத் திருவருள் செய்தார்.

ஆளுடையபிள்ளையார் தமது செல்வத் திருமாளிகையிலே அமர்ந்து நாடோறும் தோணியப்பரைத் தரிசனஞ்செய்து, திருப்பதிகம் பாடிக் கொண்டிருக்கு நாளில், அவர் உபநயனப்பருவம் அடைந்தார். அடையவே அந்தணர்கள் விதிப்படி சடங்குகளைச்செய்ய, தடங்கருணைப் பெருங்கட லாகிய காழிப்பெருமான் வைதிகநூலைக்க உபவீதத்தைத் தரித்தருளி னார். பின்னர் பிராமணர்கள் "உமக்கு நான்கு வேதங்களையும் ஓதும் அதி காரம் அளித்தோம்" என்று மந்திரோபதேசஞ் செய்யும்பொழுது, வேதங் களையெல்லாம் ஓதாதுணர்ந்த சம்பந்தப்பெருமான் அந்தணர்களுக்கு அள வில்லாத வேதங்களை ஓதி, அவைகளுக்கங்கமாகிய பலகலைகளையும் எடுத்தி யம்பினார் அந்தணர்கள் ஆளுடையபிள்ளையார் அரனருள் பெற்றதைக் கருதிவியந்து, அவரைப் பரப்பிரமமே என்று நினைத்து வணங்கித் தாங்கள் முன்கற்ற வேதங்களை அவர் பாலகேட்டுச் சந்தேகந் தீரப்பெற்றார்கள். கௌணியர் பெருமான் வேதியர்களுக்குச் சகலகலைகளையும், மந்திரங்களை யும் உபதேசித்தபின்பு, எல்லா மந்திரங்களுக்கும் உற்பத்திஸ்தானம் ஸ்ரீ பஞ்சாட்சரமென்பதை அவர்களுக்குணர்த்துவான் 'துஞ்சலுந்துஞ்சல' எனனும் அருட்பதிகம்பாடி, அதிலே 'வேதியாக கந்திபுண் மந்திரம் அஞ் செழுத்துமே' என்று அருளிச்செய்தார் அதைக்கேட்ட பிராமணர்கள் உவகைக்கடலாடிப் பிள்ளையாரை வணங்கினார்கள் ஆளுடையபெருமான் அனுதினமும் தோணியப்பரைத் தரிசனஞ்செய்து, திருப்பதிகம் பாடிக் கொண்டு தமது திருமாளிகையிலே எழுந்தருளி யிருந்தார்.

இருக்குநாளில் சிதம்பரத்திலே சபாநாயகரைத் தரிசனஞ்செய்து அருளின்பத்தை நுகர்ந்து ஆனந்தவாரிதியில் திளைத்துக்கொண்டிருந்த திருநாவுக்கரசு சுவாமிகள் திருஞானசம்பந்த சுவாமிகளுடைய அருட்பெரு மையைக் கேள்வியுற்று, அப்பெருந்தகையை வணங்குதற்காக சீகாழிக் கெழுந்தருளினார்; அவ்வள்ளலார் வருகையை அறிந்த ஆளுடைய பிள்ளை யார் அடியவர்களோடும், அந்தணர்களோடும் அவரை எதிர்கொண்டார் மனம் வாக்கு காயங்களால் பரமசிவத்துக்குத் தொண்டியற்றும் வாகீச மன்னர் பாலறாவாயரை வணங்கத் திருஞானசம்பந்த மூர்த்திகளும் அவ ரைத்தொழுது, திருத்தோணியப்பரைத் தரிசனஞ் செய்வித்து, தமது திரு மாளிகைக்கு அழைத்துக் கொண்டுபோய் விருந்து செய்தார் திருநாவுக் கரசு சுவாமிகள் சிலநாள் சீகாழியிலிருந்து, பிற சிவஸ்தலங்களை வணங்க எழுந்தருளினார் திருஞானசம்பந்த சுவாமிகள் அவரோடு சிறிது தூரஞ் சென்று விடைகொடுத்து, சண்பைக்குத் திரும்பினார் அருள்வடிவின ராகிய ஆளுடைய பிள்ளையார் சீகாழியிலே யிருந்துகொண்டு தோணி யப்பர்மீது திருமொழி மாற்று, திருமாலை மாற்று, திருவழிமொழி, திரு வியமகம், திருஏகபாதம், திருவிருக்குக்குறள், திருவெழுகூற்றிருக்கை, ஈரடிமேல்வைப்பு, நாலடிமேல்வைப்பு, திருவிராகம், திருச்சக்கரமாற்று முதலிய திருப்பதிகங்களை அணிபெறப்பாடினார்

சிலநாட் சென்றபின்னர் திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் தமது தாதையாரையும், மற்றைய அந்தணர்களையும் நோக்கி 'தமிழ்நாட்டிலுள்ள திருப்பதிகளை எல்லாந் தரிசித்து, ஆங்காங்கே தமிழ்மாலைசாத்தி இங்கு எய்துவேன்' என்றார். அதற்குச் சிவபாதவிருதயர் 'நான் அருமையாக உம்மைப்பெற்றமையால் உம்மைப் பிரிந்திருக்கமாட்டேன்; இம்மைக்கும்,

மறுமைக்கும் இன்பம்பயக்கும் யாகமும் யான் செய்யவேண்டும்; சில காலம் உம்மோடு இருப்பேன்' என்றார். அதற்கு ஆளுடையபிள்ளையார் உடன்பட்டுத் தோணியப்பரைத் தொழுது விடைபெற்று முத்துச்சிவிகையிலேறி முத்துக்குடை நிழற்ற, திருச்சின்னங்கள் முழங்க, தாதையாரோடும், திருநீலகண்ட யாழ்ப்பெரும்பாணரோடும் திருக்கண்ணார் கோயிலைத் தரிசித்துக் காவேரிநதியின் வடபாலிலே மேற்குத்திசை நோக்கிச்சென்று திருப்புள்ளிருக்குவேளூர், திருநின்றியூர், திருநீடூர், திருப்புன்கூர், திருமண்ணிப்படிக்கரை, திருக்கொறுக்கை, திருவன்னியூர், திருப்பந்தணநல்லூர், திருமணஞ்சேரி, திருவெதிர்கொள்பாடி, திருவேள்விக்குடி, திருத்துருத்தி, திருக்கோடிகா, திருக்கஞ்சனூர், திருமாந்துறை, திருமங்கலக்குடி, திருவியலூர், திருந்துதேவன்குடி, திருவின்னம்பர், வடகுரங்காடுதுறை, திருப்பழனம், திருவையாறு, திருநெய்த்தானம், திருமழபாடி, திருக்கானூர், திருவன்பிலாலந்துறை, வடகரைமாந்துறை முதலிய திருப்பதிகளைத் தரிசித்துத் தேவாரம் ஓதிக்கொண்டு சென்று, மழநாட்டையடைந்து காவேரியின் வடகரையேபோய்த் திருப்பாச்சிலாச்சிராமத்தை வணங்க எழுந்தருளினார்

அத்திருப்பதியிலே கொல்லிமழவன் என்னும் அரசனுடைய புத்திரியை முயலகன் என்னுங் கொடுநோய் வருத்தியது அதனால் அவன் கவலைகொண்டு, மணிமந்திர ஔடதங்களாலும் பிறவாலும் அவ்வெந்நோய் ஒழியாதிருத்தலைக்கண்டு, திருக்கோயிலினுள்ளே சிவசந்நிதி முன்பாக அப்பெண்ணைக் கிடத்தினான் கௌணியர் பெருமான் அத்திருப்பதியைச் சமீபித்தபொழுது அக்கொல்லிமழவன் தங்களை அலங்கரித்து அவரை அன்புடன் எதிர்கொண்டு முத்துச்சிவிகை முன்னே விழுந்து வணங்கினான் பிள்ளையார் 'எழுக' என்று அருளிச்செய்து, அவனோடு திருக்கோயிலுட்சென்று, சுவாமி தரிசனஞ் செய்யும்பொழுது, அங்கே உணர்வழிந்து கிடக்கும் பெண்ணைப் பார்த்து 'இதுஎன்ன' என்று வினவினார் அருகேயிருந்த கொல்லிமழவன் ஞானவள்ளலை வணங்கி 'இவள் அடியேன் புத்திரி; இவளை முயலகன் என்னும் வெந்நோய் வருத்துகிறது; அந்நோய் ஒருபரிசினாலும் ஒழியாமை கண்டு திருச்சந்நிதி முன்னே கொடுவந்து வைத்துள்ளேன்' என்றான் அதுகேட்டு ஆளுடைய பிள்ளையார் சிவபெருமானைச் சிந்தித்து அக்கொடுநோயை ஒழிக்க 'துணிவளர்திங்கள்' என்று எடுத்து 'மணிவளர் கண்டரோ மங்கையை வாட மயல்செய்வதோ இவர் மாண்பே' என்னும் அருட்பதிகத்தைப் பாடியருளினார் உடனே அக்கன்னி பிணிநீங்கப் பெற்று எழுந்து தந்தையினிடம் வந்தாள் அதைக்கண்ட கொல்லிமழவன் பெருமகிழ்வெய்திப் புத்திரியோடும் பூந்தராய் வேந்தரை வணங்கினான் அவர்களுக் கருள்செய்து பிள்ளையார் அங்கே சின்னாள் தங்கியிருந்தார்.

பின்பு பிள்ளையார் பாச்சிலாச்சிராமத்தினின்றும் நீங்கித் திருப்பைஞ்ஞீலியையும், திருவீங்கோய்மலையையும் தரிசித்து, கொங்குநாட்டிலே காவேரியின் தென்கரையே போய்த் திருக்கொடிமாடச் செங்குன்றூரை யடைந்து, சிவதரிசனஞ் செய்து கொண்டிருந்து, ஒருநாள் திருநணாவைத் தரிசித்து, மீண்டுஞ் செங்குன்றூர்க்குத் திரும்பி, அத்திருப்பதியில் எழுந்தருளியிருந்தார். அந்நாளில் மாரிகாலம்போய்ப் பனிக்காலம் வந்து குளிர்மிகவே, பிள்ளையாருடைய பரிசனங்கள் நளிர்சுரத்தால் வருந்திச் சம்பந்தநாதரைப் பணிந்து தங்கள் வருத்தத்தைத் தெரிவித்தார்கள் அதுகேட்டு ஆளுடைய பிள்ளையார் 'அவ்வினைக்கிவ்வினை' என்னுந் திருநீலகண்டத் திருப்பதிகத

தைப் பாடியருள, அக்குளிர் சுரம் அந்நகரில் மாத்திரமன்றி அந்நாடு முழு மையும் இல்லாமையாயிற்று. திருஞானசம்பந்தர் சின்னாள் அப்பதியிலிருந்து பின்பு திருப்பாண்டிக் கொடுமுடி, திருவெஞ்சமாக்கூடல், திருக்கருவூா என்னுந் திருத்தலங்களைத் தரிசித்துக் கொங்குநாட்டை விடுத்து மாணிகக வெற்பு முதலிய தலங்களைத் தொழுது, காவேரியின் தென்கரையிலுள்ள சிவஸ்தலஙகளைத் தரிசிக்க விரும்பி, திருப்பராய்த்துறை, திருக்கற்குடிமா மலை, திருமூக்கீச்சரம், திருச்சிராப்பள்ளி, திருவானைக்கா, திருத்தவத் துறை, திருப்பாற்றுறை, திருவெறுமபியூர், திருநெடுங்களம், மேலைசதிருக காட்டுப்பள்ளி, திருவாலம்பொழில், திருப்பூந்துருத்தி, திருக்கண்டியூர், திருச்சோற்றுத்துறை, திருவேதிகுடி, திருவெணணி, திருசசக்கரப்பள்ளி, திருப்புள்ளமங்கை (திருவாலந்துறை,) திருச்சேலூா, திருப்பாலைத்துறை, திருநல்லூர், திருக்கருகாவூர், திருவவளிவணல்லூர், திருப்பருதிநன்னிய மம், திருப்பூவனூர், திருவாவூர் என்னுந் தலஙகளுக்குச் சென்று, சுவாமி தரிசனஞ் செய்து, திருபபதிகம் பாடி, மீண்டும் திருநலலூரைத தரிசிதது, திருவலஞ்சுழியை யடைந்து, சந்திரசேகரரைத தொழுது பதிகம பாடி, அஙகே யெழுந்தருளி யிருநதார்.

அந்நாளில் வேனிற்காலம் வந்தது. அவ்வேனிற்காலத்திலே திருஞான சம்பந்த மூர்த்திகள் திருவலஞ்சுழியை விடுத்து, திருப்பழையாறையைத தரிசிப்பதற்கு அடியவர்களோடு நடந்தருளி, திருவாறைமேற்றளியையும், திருச்சததிமுற்றததையும் தொழுது பதிகம்பாடி, திருப்பட்டீசசரததை வணஙகப் புறப்பட்டாா அதுகாலை வெய்யில்வெப்பத்தைத தணிப்பதற்குத் தமிழ்விரகர் திருமுடிமீது சிவபூதம் முத்துப்பநதரை எடுதது, 'பட்டீசர் எம்மை விடுத்தருள புரிநதார்' எனறியம்பிற்று அவ்வுரையும் முத்துப்பந தரும் வானத்திலே தோன்ற; திருஞானப் பிள்ளையார் புளகாஙகிதங கொண்டு திருவருளை வியந்து பூமியிலே விழுந்து வணங்கினர் அவருடைய பரிசனஙகள் அபபநதரின் காம்பைத் தாஙகினாகள். கருணைககடலாகிய காழிப்பெருமான் திருப்பட்டீசசரததை யடைநது, கடவுளா பெருமானைத் தரிசிததுப்பதிகம பாடியருளினா பிறகு பிளளையாா அப்பதியை விடுத துப் புறப்பட்டுத திருவாறைவடதளி, திருவிரும்பூளை, திருவரதைப்பெரும பூழி, திருசசேறை, திருநாலூராமயானம, திருககுடவாயில், திருநறையூர், தென்திருப்புததூர், திருசசிவபுரம், திருககுடமூககு, திருக்குடநதைக கீழ்க கோட்டம், திருககுடநதைக்காரோணம, திருநாகேசசரம், திருவிடைமரு தூர், திருக்குரஙகாடுதுறை என்னுந் திருப்பதிகளை வணஙகிககொணடு திருவாவடுதுறையைச சேர்நதார்

அத்திருப்பதியில ஆளுடையபிள்ளையார் சிவதரிசனஞ்செய்துகொண் டிருககுநாளில, அவருடைய தந்தையாராகிய சிவபாதவிருதயா பிள்ளை யாரை நோக்கி 'யாகஞ்செய்யுஙகாலஞ் சமீபித்தது; அதற்குப் பொருள் வேண்டும்' என்றார் அதுகேட்டு எல்லாம்வல்ல திருவருளைப் பெற்றவராகிய திருஞானசம்பநத சுவாமிகள் திருககோயிலுட் சென்று சஙகரனைத் தொழுது 'இடரினுந் தளரினும்' என்னுந் திருப்பதிகத்தைப் பாடினதும், சிவபிரான் திருவருளால் ஒருபூதம் விரைந்து வநது, பலிபீடத்தின் உச்சியில் ஆயிரம்பொன் பொருந்திய ஒருகிழியை வைத்துப் பிள்ளையார் திருமுன்னே நின்று 'இது பொற்கிழி; இது உமக்குச் சிவபிரானால் அருளிச் செய்யப் பட்டது' என்று சொல்லிற்று உடனே உத்தமோத்தமராகிய நாயனார்பெரு மான் உம்பாபிரான் திருவருளை நினைந்து, பூமியில் அங்கமுற விழுந்து

பணிந்து எழுந்து பொற்கிழியை எடுத்துத் தலைமேல் தாங்கிக்கொண்டு சென்று தந்தையார்க்குக் கொடுத்து "வேதவிதிப்படி நீரும், பிற அந்தணர்களும் யாகத்தைச் செய்ய, இக்கிழி குறையாது மிகும்" என்று திருவாய் மலர்ந்தருளி அவரைச் சீகாழிக்குப் போம்படி விடைகொடுத்துத் தாம் திருவாவடுதுறையிலே எழுந்தருளி யிருந்தார்

உலகுய்யத் திருவவதாரஞ் செய்த பெருமான் சிலநாள் திருவாவடுதுறையில்வதிந்து, பின்பு அத்திருப்பதியினின்றும் நீங்கித் திருக்கோழம்பம், திருவைகன்மாடக்கோயில், திருநல்லம், திருவழுந்தூர், திருத்துருத்தி, திருமயிலாடுதுறை, திருச்செம்பொன்பள்ளி, திருப்பறியலூர், திருவேட்டக்குடி எனனும் திருப்பதிகளைத்தரிசித்து, திருநீலகண்ட யாழ்ப்பாண நாயனுருடைய தாயார் பிறந்த தலமாகிய தருமபுரத்தைச் சேர்ந்தார். அங்குள்ளவர்கள் ஆளுடையபிள்ளையாரை அன்போடு எதிர்கொண்டு பணிந்து துதித்தார்கள அதுகண்டு யாழ்ப்பெரும்பாணர் தஞ்சுற்றத்தவர்கட்குச் சம்பந்தநாதர் அருளிச்செய்த அருட்பாக்களின் இசையைத் தாம் யாழில்விட்டு வாசிக்கப் பெற்ற பெரும்பேற்றைக் கூறினுர். அதுகேட்டு அவர்கள் "நீவிர் திருப்பதிக வோசையை அளவுபெற யாழிலமைத்து வாசித்தலினாலே யகிலமெல்லாம் இசை ஓங்குக" என்ருர்கள. அச்சொற்களைக் கேட்டமாத்திரம் திருநீலகண்டப்பெரும்பாணர் உளம்நடுங்கி, ஞானசம்பந்தப்பெருமானுர் திருவடித்தாமரைகளை வணங்கி "திருப்பதிகத்தின் இசை அளவுபடாவகையை இவர்களேயன்றி உலகமுழுமையும் உண்மை யுணர்ந்துய்யும்படி தேவரீர ஒருபதிகம் அருளிச்செய்யும; சிறியேன் அத்திருப்பதிகத்தினிசையாழில் அடங்காமையைக் காட்டப் பெறுவேன்" என்னப்பிள்ளையார் பிறைசூடியைத் தொழுது திருப்பதிகத்தின் உண்மை பூதலத்தோர்து கண்டத்தினிலுங் கலத்தினிலுங் காந்தர்வ வேதத்திற் கூறப்பட்ட இசைமுயற்சிகளால அடங்காத வகைகாட்ட "மாதர் மடப்பிடி" என்னும் அருட்பதிகத்தை யருளிச்செய்தார். அத்திருப்பதிகத்தின் இசையைத் திருநீலகண்ட யாழ்ப்பெரும்பாணா தம்யாழிலே அமைத்து வாசிக்க; அது அடங்கவிலலை யாழ்ப்பெரும்பாணா பிள்ளையாரைப் பணிந்து எழுந்து 'இப்பெரியவா அருளிச்செய்த திருப்பதிகத்தினிசையை யாழில ஏற்பேன என்று சொல்லச்செய்தது இவ்யாழை யான் தீண்டுந் தீமையன்றே' என்று தேர்ந்து, அதையுடைக்க ஓங்கினுா உடனே உண்மை சொரூபியாகிய சம்பந்தநாதர் அவரைத் தடுத்து "ஐயரே! இக்கலத்தைத் தாரும்" என்று அதை வாங்கிக்கொண்டு "நீர எற்றிற்காக இதை முரிக்கப்போகின்றீர்; உமாதேவியாரோடு சிவபிரான் அளித்த திருவருளின் பெருமையெல்லாம் இவயாழில அளவுபடுமோ! சிந்தையிலும் அளவுபடாத இசைமாண்பு செய்கையில் அளவுபடுமோ! நீா இந்தக் கருவியைக்கொண்டே இறைவனுர் திருப்பதிக இசையை இயன்ற அளவு வாசியும்" என்று அதைக்கொடுக்கத் திருநீலகண்டர் திருஞானதீபத்தை வணங்கி யாழைவாங்கிச் சிரசின்மேல தரித்துக்கொண்டாா.

திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் சிலநாள் தருமபுரத்திலேயே யிருந்து, பின்னர் அத்திருப்பதியினின்றும் நீங்கி, திருநள்ளாற்றையடைந்து 'போகமார்த்த பூண்முலையாள்' என்னுந் திருப்பதிகத்தைத் திருவாய்மலார்ந்தருளி, திருச்சாத்தமங்கைக் கெழுந்தருளினுர். அத்திருப்பதியிலுள்ள திருநீலநக்க நாயனுர் பேருவகையுற்று எம்பெருவாழ்வை எதிர்கொண்டாா ஆளுடையபிளளையார் அந்நாயனுரோடு அயவந்தி எனனுஞ் சிவாலயத்திற்குச் சென்று, கடவுளைத்தொழுது, அன்போடு அழைக்கும் நீலநக்கர் திரு

மாளிகையை யடைந்து, திருவமுதுசெய்து, அங்கே திருப்பள்ளிகொண்டு, அடுத்தநாள் காலையில் எழுந்து, நாயனாருடன் அயவந்திக்குப்போய் 'திருமலர்க்கொன்றை' என்னுந் திருப்பதிகத்தை யருளிச்செய்து, அப்பதிகத்திலே திருநீலநக்க நாயனாரைச் சிறப்பித்து, அடியவர்களோடு சிலநாள் அத்திருப்பதியிலே எழுந்தருளியிருந்தார். பின்னர்த் திருநீலநக்க நாயனாருக்கு விடைகொடுத்துத் திருநாகைக் காரோணத்தை யடைந்து, சுவாமி தரிசனஞ்செய்து, திருக்கீழ்வேளூரையுந் தரிசித்துப் பதிகம்பாடிப் பிறபதிகளை வணங்க எழுந்தருளினார்.

சிவஞானப்பாலுண்ட திருஞானசம்பந்தவள்ளலார் எழுந்தருளிவருவதைத் திருச்செங்காட்டங்குடி யென்பவராகிய சிறுத்தொண்டநாயனார் கேள்வியுற்று, ஓடி, எதிர்கொண்டு, பிள்ளையாரைப் பணிந்து தம்பதிக்கு எழுந்தருளும்படி வேண்டினார். காழிப்பெருமானும் நாயனாரோடு கணபதீச்சரம் என்னும் ஆலயத்தையடைந்து 'பைங்கோட்டு மலர்ப்புன்னை' என்னுந் திருவருட்பதிகத்தைத் திருவாய்மலர்ந்து, அதிலே சிறுத்தொண்டநாயனாரைச் சிறப்பித்து, அந்நாயனாரது திருமாளிகையைச்சேர்ந்து, திருவமுதுசெய்து, அத்திருப்பதியில் சிலநாளிருந்து, பிறகு திருமருகலையடைந்து சுவாமி தரிசனஞ்செய்து கொண்டிருந்தார். இருக்குநாளில் வழிப்போக்கனாகிய ஒரு வணிகன் ஒருகன்னியோடு திருக்கோயிலுக்குப் புறத்திலே ஒருமடத்திலே இரவில் நித்திரை செய்யும்பொழுது, அவன் அரவத்தினால் தீண்டப்பட்டு இறந்தான். அதைக்கண்ட அக்கன்னியானவள் அவனைச் சாப்பாந் தீண்டியும் தான் தீண்டாமல் அவன் அருகேவிழுந்து, தாயிழந்த கன்றைப்போலக் கதறினாள். அவள் கதறுதலைப்பாராது மனம்பொறாத மாந்திரிகர்கள் அங்கே வந்து மணிமந்திராதிகளால் நீக்கவும் விடம் ஒழியாதாயிற்று. 'வணிகர்குலமணியே! அன்னையையும், அத்தனையும் பிரிந்து உன்னையே யடைவாகக்கொண்டு உடன்போந்தேன்; நீயோ அரவால் மாண்டாய்; யான் என்செய்வேன்; இவ்விடுக்கண் நீக்கினறவர்கள் ஒருவருமில்லையே; யான் உயிரோடு வாழேன்' என்று புலம்பிக்கொண்டிருந்த கன்னியானவள் திருக்கோயிலின் திருவாயிற்றிக்கை நோக்கி 'தேவர்கள் உய்யும்பொருட்டுத் திருப்பாற்கடலில் எழுந்த விஷத்தையுண்ட அமுதே! திருமாலும், பிரமனும் தேடியும் அறியொணாத மறைப்பொருளே! வெந்து நீறாகிய மன்மதனுயிரை அவன் மனைவியாகிய இரதிவேண்ட அருள்செய்த கிருபாசமுத்திரமே! மார்க்கண்டருக்காகக் காலனையுதைத்த காலரே! திருமருகலில் எழுந்தருளியிருக்கும் பெருமானே! இவ்விஷத்தின் கொடுமையை நீக்குமாறும், யான் துன்பக்கடலினின்று கரையேறுமாறும் அருள்புரியும்' என்று சிவநாதனைச் சிந்தித்து வேண்டினாள். அவளது ஓசை சுவாமி தரிசனத்திற்காக எழுந்தருளிவரும் திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் திருச்செவியில் நுழைந்தது. கருணைக்கடலாகிய காழிவள்ளலார் அவளதுயர் தீர்ப்பான் உன்னிமாதவத்தோர்கள் சூழ எழுந்தருளிவந்து, அக்கன்னியைத் திருநோக்கஞ்செய்து 'நீ சிறிதும் அஞ்சாமே, நிகழ்ந்ததனைக் கூறு' என்று கேட்க, அவள் ஆளுடையபிள்ளையாரை வணங்கி 'சுவாமி! எனதப்பனார் வைப்பூருக்குத் தலைவனார்; அவருக்குப் புத்திரிகள் எழுவர்; அவர்களில் மூத்த புத்திரியைத் தம்மருகராகிய இவருக்கே விவாகஞ்செய்து கொடுப்பதாய் வாக்களித்துப் பிறகு வேறொருவனிடம் பெருந்தனம்பெற்று அவனுக்குக் கொடுத்துவிட்டார்; பின்னர் இரண்டாம் புத்திரியைக் கொடுப்பதாகச் சொல்லி அவளையும் அயலானுக்கே கல்யாணஞ்செய்து கொடுத்தார்; அப்படியே மற்றைய நான்கு குமாரத்திகளையும் அயலார்க்கே மணஞ்செய்

வித்தார்; அவரது வஞ்சச்செயலைக் கண்ட யான் தாய் தந்தையர்களுக்குத் தெரியாமல் இவரோடு வெளிக்கிட்டேன்; இவரும் பாம்பின் வாய்ப்பட்டு இறந்தார்; யான் கடல்நடுவே கலங் கவிழ்ந்தார்போல நின்றேன்; என்சுற்றம்போல எழுந்தருளிவந்து அருள்செய்தீர்' என்று சொன்னாள். திருஞான சம்பந்தமூர்த்தி அவள் துயரொழிப்பத் திருமருகற் பெருமானைச் சிந்தித்து 'சடையாயெனுமால்' எனனும் அருட்பதிகத்தை யருளிச்செய்தார். உடனே வணிகன் உயிர்பெற்றெழுந்து, எல்லாமவல்ல பிள்ளையாரை வணங்கி நின்றான். அதைக்கண்ட அன்பர்கள் ஆரவாரித்தார்கள்; அமரர்கள் அலர்மாரி சொரிந்தார்கள்; கன்னிகையானவள் எல்லையில்லா ஆனந்தமெய்தி ஆளுடையபிள்ளையாரை அன்போடு தொழுதாள். ஞானசம்பந்தப்பெருமான் அவ்விருவரையும் மணம்புணரும்படி செய்து, அவர்களுக்கு விடைகொடுத்து அவ்விடத்தில் எழுந்தருளியிருந்தார். அதுகாலை அன்பர் பெருமானாகிய சிறுத்தொண்ட நாயனார் மறுபடியும் சம்பந்தநாதர்பாலணைந்து அவரைத் தம்பதிக்கு எழுந்தருளும்படி பிரார்த்தித்தார். அவருடைய வேண்டுகோளுக்கு இரங்கிய பிள்ளையார் அடியவர்களோடு திருமருகற் பெருமானைச் சிந்தித்துக் கொண்டே திருச்செங்காட்டங்குடிக் கெழுந்தருளினார். அங்கே சிவபெருமான் தாம் திருமருகலில் கொண்டுள்ள திருக்கோலத்தைக் கணபதீச்சரத்தில் காட்ட, காழிப்பெருமான் ஆனந்தமயமாக நின்று 'அங்கமும் வேதமுமோ' என்னும் அருமைத் திருப்பதிகத்தை யருளிச்செய்து அப்பதியிலேயே எழுந்தருளியிருந்தார்.

சிலநாள் சென்றபின்னர் ஆளுடையபிள்ளையார் திருச்செங்காட்டங்குடியை விடுத்துத் தம்மைத் தொடர்ந்துவந்த சிறுத்தொண்ட நாயனார்க்கு விடையளித்துப் பல திருப்பதிகளைத் தரிசித்துக்கொண்டு திருப்புகலூரை யடைந்தார். அங்கே தம்மை யன்போடு எதிர்கொண்டு வணங்கிய முருக நாயனாரோடும், பிற அடியார்களோடும் திருக்கோயிலுக்குச் சென்று கடவுளர் பெருமானைத் தொழுது, முருகனார் திருமடத்திற் கெழுந்தருளி அவர் பணியை ஏற்றுக் கொண்டிருந்தார். ஒருநாள் வர்த்தமானீச்சரம் என்னும் ஆலயத்திற்குப்போய் முருகநாயனார் புரிந்த திருத்தொண்டைச் சிறப்பித்து 'ஈசனேறமர்கடவுள்' எனனுந் திருப்பதிகத்தைப் பாடி மடத்திலே தங்கியிருந்தார். இருக்குநாளில் திருநாவுக்கரசு சுவாமிகள் திருவாரூரை வணங்கித் திருப்புகலூரைத் தரிசிக்க எழுந்தருளினார். அப்பெருந்தகையார் எழுந்தருளி வருவதைக் கேட்டவுடன் ஆளுடையபிள்ளையார் அவரை எதிர்கொள்ள அடியவர்களோடு பூம்புகலூர் திருவெல்லையைக் கடந்து சென்றார். திருத்தாண்டகச் சதுரரும் எதிரேவந்தார். அவ்விருவரும் ஒருவரையொருவர் நமஸ்கரித்து நலவரவு வினவி மனமகிழ்ச்சி யடைந்தார்கள். அப்பொழுது அம்பிகையின் அருண்ஞானப் பாலுண்ட அருளாளர் அருளரசரை நோக்கி 'நீவிர் திருவாரூரை எவ்வகையாகத் தொழுது உய்ந்தருளினீர்' என்றுகேட்க, திருநாவுக்கரசு சுவாமிகள் தாம் தரிசித்த திருவாதிரைச் சிறப்பைத் திருப்பதிகத்தினாலே திருவாய்மலர்ந்தருளினார். அதுகேட்ட ஆளுடையபிள்ளையார் 'நான் திருவாரூருக்குச் சென்று சிவலோகநாதனைத் தரிசித்து மீண்டும் உம்பால அணைவேன்' என்று இயம்பினார். திருநாவுக்கரசு சுவாமிகள் திருப்புகலூருக்கு எழுந்தருளினார். ஞானசம்பந்தப் பெருமான் திருவிற்குடி வீரட்டத்தைத் தரிசித்து, திருவாரூரை அடைந்து, சுவாமி தரிசனஞ்செய்து, திருப்பதிகங்கள் பாடிக்கொண்டு அங்கே எழுந்தருளியிருந்தார். பிள்ளையார் காலந்தோறும் திருவாரநெறியைத் தரிசித்துக்கொண்டிருந்து, இடையில் திருவலிவலம் திருக்கோளிலி முதலிய

திருப்பதிகளுக்குஞ் சென்று பதிகம்பாடி மீண்டும் திருவாரூரையடைந்து, வன்மீகநாதரை வணங்கிக்கொண்டிருந்தார் இருக்குநாளில அப்பர்சுவாமி களைக் காணவிரும்பி 'பவனமாய்ச் சோடையாய்' என்னுந் திருப்பதிகத் தைப பாடித திருவாரூரை நீங்கி, திருப்பனையூரைத் தரிசித்துத திருப்பு லூரைச்சார, திருநாவுககரசு சுவாமிகளும், முருகநாயனாரும் எதிர்கொண டார்கள். ஞானசம்பந்த வள்ளலார் அவாகளோடு ஆலயததிற்குப்போய்ச் சுவாமி தரிசனஞ்செய்து, முருகனார் திருமடததை அடைநது, அங்கே எழுந் தருளியிருந்தார். அதுகாலை திருநீலநக்கநாயனாரும், சிறுதொண்ட நாய னாரும் பூமபுகலூர்ககுப் போய்ப் புண்ணியமூர்த்திகளோடு கலந்து அளவளா விக் கொண்டிருநதார்கள்.

சிலநாளாயினபின் திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகளும், திருநாவுக் கரசு சுவாமிகளும் பிறதிருப்பதிகளைத் தரிசிக்க விரும்ப, முருகநாயனார் அங்கே யிருக்கவும், திருநீலநக்க நாயனாரும், சிறுதொண்ட நாயனாரும் தததம்பதிக்கேகவும் உடன்பட்டார்கள ஆளுடையபிள்ளையார் அவாக ளுககு விடைகொடுத்து, அப்பர்சுவாமிகளைப் பிரியாமல், முததுச்சிவிகை பின்னேவா, வழிகொள்ளும்போது, வாக்கரசர் முத்தமிழ்க்கடவுளை நோக்கி 'சிவபெருமான் உமக்கருள் செய்த இம்முத்துச் சிவிகையின்மீது எழுநதரு ளும்' என்றார் அதற்கு ஆளுடையபிள்ளையார் 'தேவரீர் திருத்தொண்டர் களோடும் எத்தலத்திற்கு எழுந்தருளுகின்றீரோ, அத்தலததிற்குயான் பின்னே வருவேன' என்ன, அபபர்சுவாமிகள அதற்கிசைந்து, அங்ஙனே செய்வாராய், முன்னேநடந்து திருவமபரையடைநதாா திருஞானசம்பந்த மூாததிகள முததுச்சிவிகையி லேறித திருப்புகலூரை நீங்கி 'அப்பர்சுவாமி கள் எங்கே எங்கே' என்று வினவிக்கொண்டே சென்று திருவம்பரை யடைநது,திருமாகாளததில் எழுநதருளியுள்ள பெருமானைததரிசிதது, திரு நாவுக்கரசு சுவாமிகளோடு அங்கே இருநது, கோசசெஙகட் சோழநாயனார் செய்த பெருந்திருக்கோயிலுககுச சென்று, சுவாமி தரிசனஞ்செயது, அத் திருத்தொண்டரைச சிறப்பிதது 'எரிதரவனக்கை' என்னுந திருப்பதிகம் பாடி யருளினா பின்னாத் திருஞானசம்பநதமூர்த்தி சுவாமிகள் திருவம் பரைவிடுதது திருநாவுககரசு சுவாமிகளோடுந திருகடவூருக்குச் சென்று அங்கேவநது தம்மைப் பணிந்த குங்குலியக்கலய நாயனாருடன சுவாமி தரிச னஞ்செய்து, அந்நாயனார் திருமாளிகையிலே திருவமுதுசெய்து, வீரட்ட நாதரைத தரிசிததுக் கொண்டிருநதாா.

திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் திருககடவூரிலே சிலதினமிருந்து பின்னா அப்பதியை நீங்கித் திருவாக்கூர், திருமீயச்சூர், திருப்பாம்புரம் என்னுந தலஙகளைத தரிசித்துத திருவீழிமிழலையை யடைநது, சுவாமி தரி சனஞ்செய்து, 'சடையார்புனலுடையான்' என்னுந திருப்பதிகததைப்பாடி யருளி வெளியே வந்து, திருநாவுக்கரசு சுவாமிகள் ஒரு திருமடத்திற்குச செலல, தாம் திருக்கோபுரததுக்கு வடக்கேயுளள வேறொரு திருமடததிற் குப்போய, அங்கே எழுந்தருளியிருந்தாா இருக்குநாளில் அவ்விரு குருமூர் ததிகளும பேணுபெருநதுறை, திலதைப்பதி முதலிய திருததலஙகட்குப் போய்ச சுவாமி தரிசனஞ்செய்து மீணடும் திருவீழிமிழலையை யடைந்தார் கள அதுகாலைச் சீகாழிப் பிராமணர்கள் திருஞானசம்பநத சுவாமிகளைத் தரிசிகக விரும்பி, திருவீழிமிழலையைச் சார்ந்து, பிள்ளையாரைப் பணிந்து 'தேவரீர் திருத்தோணிககு எழுந்தருளல்வேணடும்' என்று வேண்டினார்கள். அதற்குப் பிளளையாா 'இன்று கழிததுத் திருவீழிமிழலை யீசனார் அருள் பெற்று நாளை உஙகளோடு வருவேன்' என்றார். திருத்தோணிபெருமான்

அன்றிரவு ஆளுடையபிள்ளையார் கனவிலேதோன்றி 'நமது திருத்தோணிக் கோலத்தை இங்கேகாட்டுவோம்; காண்' என்று திருவாய்மலர்ந்துமறைந்தருளினார். திருஞானசம்பந்தர் விழித்தெழுந்து, திருக்கோயிலுக்குச் சென்று, அங்கே விண்ணிழிந்த விமானத்திலே சிவபெருமான் திருத்தோணித் திருக்கோலத்தைக் காட்டத் தரிசித்து 'மைம்மரு பூங் குழற்கற்றை' என்னுந் திருப்பதிகத்தை விடையாகப் பாடித்தொழுது போந்து தம்மை யழைக்கும் பிராமணர்களைநோக்கி 'பிரமபுரநாதர்தாம தேவியாரோடு எழுந்தருளியுள்ள பலதலங்களைத் தரிசித்துப் பதிகம் பாடுதலையே மேற்கொண்ட என் காதலைக்கண்டு, அவ்வெம்பெருமான் அவரது அற்புதத் திருக்கோலத்தை யிங்கே காட்டியருளினார்; ஆகையால் நீங்கள் சிரபுரத்திற்குச் செல்லுங்கள்' என்று விடைகொடுத்தார். அவர்கள் அப்பெருந்தகையார அமுதச்சொற்களைச் சிரமேற்றாங்கிச் சீகாழிக்குப் போனார்கள்

திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகளும், திருநாவுக்கரசு சுவாமிகளும் திருவீழிமிழலையிலே இருக்குநாளில், வான்பொய்த்தமையால் நீர்வளங்குன்றிப் பஞ்சம் உண்டாயிற்று. அதனால் சீவகோடிகளெல்லாம் வருந்தின. அப்பஞ்சம் அடியவர்களையும் வருத்தியது அதைக்கண்ட ஆளுடையபிள்ளையாரும், அப்பர்சுவாமிகளும் 'சிவனடியார்களுக்குங் கவலை வருமோ' என்று கருதி எள்ளுக்குள் எண்ணெய்யைப்போல எங்குமநிறைந்த ஈசனைத் துதித்துக்கொண்டே சிவானந்த நித்திரை செய்தார்கள். அதுகாலை அம்பிகை பாகர் அவர்கட்குக் கனவிலே தோன்றி 'உலகஇயல்பானும், காலபேதத்தானும் அணைந்த பசிநோய் உங்களைச் சிறிதும் வருத்தாதாயினும், உங்களைச் சூழ்ந்துள்ள அடியவர்கள் மனவாட்டத்தை யொழிக்கும்பொருட்டு நாடோறும் ஆலயத்தின் கீழ்ப்பீடத்திலும், மேற்பீடத்திலும் ஒவ்வொரு பொற்காசு உங்களுக்குக் கொடுக்கின்றோம்; பஞ்சம் ஒழிந்தால் பொற்காசு அருளுதலும் ஒழியும்' என்று திருவாய்மலர்ந்தருளினார் ஞானசம்பந்தப் பெருந்தகையார விழித்தெழுந்து நாவரசரோடு திருக்கோயிலை யடைந்தபோது கீழ்ப்பீடத்திலே பொற்காசு இருத்தலைக்கண்டு திருவருளை வியந்து அதனை எடுத்து 'தினந்தோறும் சிவனடியார்கள் அமுதுசெய்ய வரக்கடவர்' என்று பறைசாற்றுவித்து, தந்திருமடத்திற் கெழுந்தருளும் தொண்டர்களை அமுதுசெய்வித்து வந்தார் அப்படியே அப்பரமபெருமானும் மேற்பீடத்திலே வைக்கப்படும் பொற்காசையெடுத்து அன்பர்கட்கு அமுதூட்டி வந்தார். இங்ஙனம் நிகழுநாளில் பாலறாவாயர் தாண்டகவேந்தர் திருமடத்திலே அடியவர்கள் காலம்பெற அமுதுசெய்தலைக்கண்டு தம்மடத்துச் சமையற்காரர்களை நோக்கி 'நீங்கள் அடியவர்களைக் காலம்பெற அமுது செய்விக்காமைக்குக் காரணம் என்னை' என்று வினவினார். அதற்கு அவர்கள் ஆளுடையபிள்ளையாரை வணங்கி 'ஐயரே! தேவரீர் சிவபெருமான் பால்பெறும் பொற்காசுக்கு வணிகர்கள் வாசி கேட்கின்றார்கள்; அப்பர் சுவாமிகள் பெறுங்காசிற்குவட்டங் கேட்கின்றார்களில்லை; இதனாலே காலந் தாழ்க்கிறது' என்று சொன்னார்கள். அதுகேட்டுப் பிள்ளையார் அப்பர் சுவாமிகள் கைத்தொண்டு செய்கின்றமையால் அவர்வாசியிலாக் காசு பெறுகின்றார்' என்று நினைத்து 'இனி இறையருளுங் காசு வாசி தீரப்பாடுவேன்' என்று திருவுளங்கொண்டு, அடுத்தநாள் ஆலயத்திலே நுழைந்து 'வாசிதீரவே' என்னுந் திருப்பதிகத்தைப் பாடி நல்லகாசு பெற்றார். அதைச் சமையல் செய்வோர் கடைக்குக் கொண்டுபோக, அங்குள்ள வணிகர்கள் அதைப் பார்த்து 'இது சாலநன்று' என்றுசொல்லி வேண்டுவனவற்றைக் கொடுத்தார்கள். அன்றுமுதல் அடியவர்கள் காலத்திலே அமுதுசெய்விக்கப் பட்

டார்கள் இங்ஙனம் நிகழ்ந்துவருங் காலத்தில் மழை பெய்து வளமையுண்டாக்கிப் பஞ்சத்தை யொழித்தது.

சிலதினஞ் சென்றபிறகு திருஞானசம்பந்த சுவாமிகள் திருநாவுக்கரசு சுவாமிகளோடு திருவீழிமிழலையை நீங்கித் திருவாஞ்சியம், திருத்தலையாலங்காடு, திருப்பெருவேளூர், திருச்சாத்தங்குடி, திருக்கரவீரம், திருவிளமர், திருவாரூர், திருக்காறாயில், திருத்தேவூர், திருநெல்லிக்கா, திருக்கைச்சினம், திருத்தெங்கூர், திருக்கொள்ளிக்காடு, திருக்கோட்டூர், திருவெண்டுறை, திருத்தண்டலை நீணெறி முதலிய திருப்பதிகளைத் தரிசித்துத் திருமறைக் காட்டிற் கெழுந்தருளினார். அத்திருப்பதியை யடைந்து, திருக்கோயிலுள்ளே நுழைந்து, வேதங்கள் பூசித்துத் திருக்காப்பிட்ட அந்நாள் முதல் அடைக்கப்பட்டே இருக்கும் திருக்கதவு முன்பாகவந்து 'அதை வேதங்களேயாதும் அடியவர்கள் அணைந்து நீக்கப்பெறாமையால், சேவிப்போர்கள் வேறொரு பக்கத்திலே ஒருவாயில் அமைத்து, அதன் வழியாகச் சென்று சுவாமி தரிசனஞ் செய்கின்றார்கள்' என்பதைக் கேட்டறிந்தார். அரனமைந்தராகிய ஆளுடையபிள்ளையார் அப்பர்சுவாமிகளை நோக்கி 'அப்பரே! நாம் இவ்விமுக்வாயிலின் வழியாகவே போய்ச் சுவாமியை வணங்கவேண்டும். ஆகலால் இக்கதவுதிறக்கும்பொருட்டு நீரே திருப்பதிகம் பாடும்' என்றார். அருளுவுக்கரசர் 'பண்ணினேர் மொழியாளுமை பங்கரோ' என்னுந் திருப்பதிகத்தைப் பாடத் திருக்கதவு திறக்கப்படவில்லை. அப்பரெம்பெருமான் 'இரக்க மொன்றிலீர்' என்று திருக்கடைக்காப்பிறசாத்திச் சிவபிரானை வணங்கினார். உடனே வேதநாயகர் திருவருளால் கதவு திறக்கப்பட்டது. பின்னர் திருஞான வள்ளல்களாகிய இருவர்களும் ஆனந்த வெள்ளத்தில் ஆழ்ந்து, உள்ளேசென்று மறைக்காட்டீசனைத் தரிசித்துப் பதிகம்பாடி வெளியே வந்தார்கள். திருநாவுக்கரசு சுவாமிகள் திருஞானசம்பந்தரைப் பார்த்து 'இக்கதவை நாடோறும் திறக்கவும், அடைக்கவும் வழக்கமாகத் தேவரீர் இக்கதவை அடைக்கப் பதிகம்பாடும்' என்ன; ஆளுடையபிள்ளையார் திருப்பதிகம் பாடத் தொடங்கி 'சதுரம் மறை' என்று முதற்பாடல் பாடினதும் திருவருளால் திருக்கதவு அடைக்கப்பட்டது. அதைக்கண்ட அடியவர்கள் ஆனந்த மடைந்தார்கள். ஆளுடையபிள்ளையார் தாம் எடுத்த அருட்பதிகத்தைப்பாடி முடித்தார். அன்று முதல் அத்திருக்கதவு திறக்கப்பட்டும், அடைக்கப்பட்டும் வருகிறது. இருமுனிபுங்கவர்களும் திருமடத்தை யடைந்தார்கள்.

திருநாவுக்கரசு சுவாமிகள் 'நான்கு வேதங்களும் சிவபெருமானால் அருளிச்செய்யப்பட்டவை; அவைகளின் தாற்பரியங்களைத் தமிழ்வேதமாகச் செய்தருளும் ஒருமைப் பாட்டில் சிறப்பவராகிய திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகளே அச்சிவ பெருமானைப்போல அருட்செய்கை செய்ய வல்லார்; என்போன்றவர்கட்கு அவ்வேதங்களோடு இடையீடு பெரிதாகும்; அதனாலன்றோ என் பதிக இறுதியில் திருக்கதவு அரிதிற்றிறக்கப்பட்டது; அவர்பாடல் முதலிலே எளிதில் அடைக்கப்பட்டது' என்று கருதிச் சிந்திரை செய்தார். சிவபெருமான் அப்பர்சுவாமிகள் முன்னே எழுந்தருளி 'நாம் வாய்மூரில் இருப்போம்; தொடர்வாய்' என்று திருவாய் மலர்ந்தருளிப்போக, திருத்தாண்டகவேந்தர் பெருமானை விரைவாகத் தொடர்ந்து சென்றார். சென்றும் அவரைச் சமீபித்தாரில்லை. எல்லாம்வல்ல இறைவனார் சமீபத்திலே காட்சி கொடுப்பவரைப்போலத் திருக்கோயி லொன்றெதிரே காட்டி அதனுள்ளே புகுந்தருளினார். திருநாவுக்கரசு சுவாமிகளும் ஆர்வத்தோடு விரைவாகத் தொடர்ந்தார். சீகாழிப்பெருமான் திருநாவுக்கரசு சுவாமிகள்

திருவாய்மூருக்குப் போகின்றார் என்பதைக் கேள்வியுற்றுவந்து அணைந்தார். அப்பொழுது சிவபெருமான் பார்வதிதேவியாரோடு ஆடல்காட்ட 'தளிரிள வளரொளி' என்னுந் திருப்பதிகத்தைப் பாடிச் சென்னியால் வணங்கி அப்பர் சுவாமிகளோடு திருவாய்மூருக்குச்சென்று சுவாமி தரிசனஞ்செய்துகொண் டிருந்து பின்னர்த் திருமறைக்காட்டிற்குத் திரும்பி வேதவனப்பெருமானைத் தரிசித்துக்கொண்டிருந்தார்.

அந்நாளில் பாண்டியராஜன் பூர்வஜென்மத்திலே செய்த தவக்குறைவால் சமணர்கள் தூர்ப்போதனைக் குட்பட்டுச் சைவசமயத்தை விடுத்துச் சமணசமயத்தில் பிரவேசித்தான். அவன் சமணனாக அவன்கீழுள்ள குடிகளும் சமணசமயத்தைத் தழுவினர். பாண்டியநாடெங்கணும் சமணக்கூட்டங்களே பெருகிநிறைந்தன. அப்பாண்டிநாடு புரிந்த தவப்பெருமையால் பாண்டியன் மனைவியாரும் சோழமகாராஜன் புதல்வியாருமாகிய மங்கையர்க்கரசியாரும், அமைச்சர் பெருமானாகிய குலச்சிறையாருமே அரசனறியாத வண்ணம் சைவநெறியிலே நின்று, அதன்படி ஒழுகிவந்தார்கள். சிவகாருண்ணியத்திற் சிறந்த அவ்விருவரும் சைவத்திருநாடாகிய பாண்டியநாட்டிற்குற்ற தீமையைக் குறித்து வருந்துங்காலே, அம்பிகை அருண்முலைப் பாலையுண்டு சைவம் வளர்க்கும் சம்பந்தமூர்த்தியின் அருட்செயல்களையும், அவர் வேதாரணியத்தில் எழுந்தருளியிருத்தலையும் கேள்வியுற்றார்கள். உடனே அளவிலா ஆனந்தமடைந்து பரிசனமாக்களை அழைத்துத் திருமறைக்காட்டிற்கு அனுப்பினார்கள். அவர்கள் பாண்டிநாட்டைக்கடந்து திருமறைக்காட்டைச்சேர்ந்து, பிள்ளையார் எழுந்தருளியுள்ள திருமடத்தை அணைந்து, வாயில்காப்போர்க்குத் தங்கள்வரவைத் தெரிவித்தார்கள். அவர்கள் உள்ளே போய்ப் பிள்ளையாரை வணங்கி 'மங்கையர்க்கரசியாரும், குலச்சிறையாரும் ஏவினபடி தேவரீரைவணங்கச் சிலர் புறத்தே வந்துள்ளார்கள்' என்று சொல்ல; திருஞானசம்பந்த வள்ளலார் கருணைகூர்ந்து 'அவர்களை அழைத்துவாருங்கள்' என்று கட்டளையிட்டார். அக்காவலாளர்கள் வெளியேவந்து அவர்களை அழைத்துக்கொண்டு சென்றார்கள். அப்பரிசனமாக்கள் ஆளுடையபிள்ளையாரைத் தரிசித்து அவரது திருவடிகளில் விழுந்து, நமஸ்கரித்து எழுந்து திருமுன்னே நின்றார்கள். கருணைக்கடலாகிய காழிப்பெருமான் அவர்களைத் திருநோக்கஞ்செய்து மங்கையர்க்கரசியார் குலச்சிறையார் என்கிற இரு சைவசிகாமணிகளின் க்ஷேமங்களை வினவியருளினார். அப்பரிசனமாக்கள் அவர்களுடைய க்ஷேமங்களைத் தெரிவித்துப் பிள்ளையாரைத்தொழுது 'பாண்டியராசாவும், அவன் குடிகள் எல்லாரும் சமணசமயத்திற் பிரவேசித்தார்கள். அந்நாடுமுழுவதும் சைவமணமகழ்த்திலலே. அதுபற்றிச் சைவசீலர்களாகிய மங்கையர்க்கரசியாரும், குலச்சிறையாரும் மனவருத்தங் கொண்டிருந்தார்கள். பின்னர்த் தேவரீருடைய அருட்செயல்களைக் கேள்விபுற்றுப் பாண்டிநாட்டின் நிலைமையைத் தேவரீருக்கு அறிவிக்க அடியேங்களை அனுப்பினார்கள்' என்று விண்ணப்பித்தார்கள். அதுகேட்ட அடியவர்கள் எல்லாரும் எழுந்து திருஞானசம்பந்ததெய்வத்தைத்தொழுது 'ஐயரே! தேவரீர் பாண்டியநாட்டிற்கு எழுந்தருளிச் சமணர்களை வென்று, சைவசமயத்தின் உண்மையை நிலைநிறுத்தி, அரசனையும் விபூதி தரிக்கச்செய்யத் திருவுளங் கொண்டருளல்வேண்டும்' என்று பிரார்த்தித்தார்கள். அதற்கு ஆளுடையபிள்ளையார் உடன்பட்டு அப்பர்சுவாமிகளோடு திருக்கோயிலுக்குச் சென்று சுவாமி தரிசனஞ்செய்து, திருக்கோபுரத்துள்ளிருந்து பரிசனமாக்கள் சொற்றவைகளைத் தாண்டகச் சதுரர்க்குச் சொல்லிப் பாண்டிநாட்டிற்குப் புறப்படத் துணிந்தார். அப்பொழுது அப

பர்சுவாமிகள் 'தேவரீர் சிறுவர்; சமணப்பதிதர்கள் செய்யும் வஞ்சனைக்கோ ரெல்லையில்லை; அதுவும் அன்றித் தேவரீருக்கு இப்போது கிரகங்களும் வலிமையில்லாதனவா யிருக்கின்றன; இப்பொழுது பாண்டிநாட்டிற்குப் போக உடன்படுதல ஒண்ணாது' என்று தடுத்தார். அதுகேட்ட பிள்ளையார் நாம் என்றும் சிவபிரானை நினைந்துகொண் டிருக்கின்றமையால, அப் பிரான் நமது உள்ளத்தையே கோயிலாகக் கொண்டுள்ளார் ஆதலால நமக்கு நாள்கோள்களால் ஒரு இடையூறும் விளையாது' என்றுசொல்லி 'வேயுறு தோளிபங்கன' என்னுந் திருப்பதிகத்தைப் பாடியருள; அப்பர் சுவாமிகள் உடன்பட்டுத் தாம அவருக்குமுன்னே எழுந்தருளத் துணிந்தார் திருஞானசம்பந்த சுவாமிகள் 'அப்பரே! நீர்சோழ மண்டலத்திலேதானே சுவாமி தரிசனஞ்செய்து கொண்டிரும்' என்று கைகூப்பிப் பணியத் திரு நாவுக்கரசு சுவாமிகளும் ஒருவாறு சம்மதித்தார். பரசமயக கோளரியார் மீண்டும திருக்கோயிலையடைந்து வேதாரணியேசுரரைவணங்கி அருள் பெற்று, திருநாவுக்கரசு சுவாமிகள் மருத வணணம் அவரைத்தொழுது விடைகொடுத்து முத்துச்சிவிகையிலேறிப்பஞ்சாக்ஷரத்தை ஓதிக்கொண்டே திருவகத்தியான்பள்ளி, திருக்கோடிக்குழகா கோயில, திருக்கடிக்குளம, திருவிடும்பாவனம், திருவுசாத்தானம முதலிய திருப்பதிகளைத்தரிசித்து, பாண்டிநாட்டை யடைந்து மதுரையைச சமீபித்தார்.

அதுகாலை அஷ்டகிரிகளில் வாழும் அமணர்கள் எல்லாரும் தீக்கனுக் கள்கண்டு, மதுரையம்பதியிலே ஒருங்குசேர்ந்து, தாம் தாம் கண்டகனுக களை ஒருவருக்கொருவர் சொல்லி, வருந்தி அரசனுக்குந தெரிவித்து, உணவின்றித் தங்களுக்குத் தீமைவிளைவது திடமென நிச்சயித்து, ஆகுலக் கடலில் அழுந்தினார்கள். பாண்டிமாதேவியாரும், குலச்சிறை நாயனாரும் நற்சகுனங்கள் பலகண்டு ஆனந்தக்கடலில் அழுந்தினார்கள் அப்பொழுது சிலர் அவர்களிடம்போய் 'உலகெலாமுய்யச சிவஞானப் பாலுண்ட பிள்ளை யார் எழுந்தருளி வருகின்றார்' என்று சொன்னார்கள அதுகேட்ட மங்கை யர்க்கரசியார் மந்திரியாரை நோக்கி 'நமது குலதெய்வமாகிய திருஞானசம் பந்த சுவாமிகளை எதிர்கொள்ளும்' என்று ஆஞ்ஞாபிக்க அவர் அம்மை யாரை வணங்கி 'அரசனுக்கும் உறுதியே' என்று விரைவாக மதுரைக்குப் புறத்தேபோய் ஞானசம்பந்தரை எதிர்கொள்ளச் சென்றார் பாண்டிமாதே வியார் திருக்கோயிலுக்குப் போய மீனாக்ஷிசமேதரை வணங்கிப் பாலறா வாயர்வரவை எதிர்நோக்கி நின்றார் திருஞானசம்பந்த சுவாமிகள் முத்துச் சின்னங்கள் 'பாலறாவாயர் வந்தார், பரசமய கோளரிவந்தார்' என்று முழக்க, முத்துச்சிவிகையின்மேல் முத்துக்குடை நிழற்ற எழுந்தருளிவந் தார் திருக்காளத்தின் அமுத ஒலியானது குலச்சிறையார் செவியில் நுழைந்து சேக்க, அவர் பூமியிலே விழுந்து நமஸ்கரித்து எழ இயலாத ஆனந்தவடிவினராய்க் கிடந்தார் அதை எதிரேவந்த அடியார்கள் கண்டு ஆளுடைய பிள்ளையாருக்கு அறிவித்தார்கள். அதுகேட்டுப் பிள்ளையார் முத்துச்சிவிகையினின்றும் இறங்கித் தமது திருக்கரத்தால் மந்திரியாரைப் பற்றி எடுக்க, அவரும் கைகூப்பிவணங்கித் திருமுன்னே நின்றார். முத்த மிழ்விரகர் அவரைநோக்கி 'மங்கையர்க்கரசியார்க்கும், உமக்கும் நம்பெரு மான் திருவருள் பெருகும் நன்மைதான் வலிதே' என்று கூறியருள; மந் திரியார் ஞானசம்பந்தப் பெருமான் மலரடிகளில விழுந்து வணங்கி 'சுவாமி! சிறியேங்களுக்குச் சென்றகாலத்தில பழுதிலாததிறமும், இனி வருஞ் சிறப்பும இன்று தேவரீர் எழுந்தருளப் பெற்ற பெரும் பேறேயாம். அதனால் யாங்கள் என்றுந் திருவருளுடையேம். சமணமயமாக விளங்கும்

இந்நாடும் பாண்டியராசனும் திருநீற்றொளியால் விளங்கும் மேன்மையையும் அடைந்தோம். தேவரீர் வருகையைக் கேட்ட பாண்டிமாதேவியார் தேவரீரை எதிர்கொண்டு பணிய அடியேனை யேவினார்' என்று விண்ணப்பித்து, உள்ளத்தெழும் பேரன்பால் மீண்டும் பணிந்தெழுந்தார். அதுகாலை மதுரையம்பதி தோன்றுதலும் பிள்ளையார் அடியார்களை நோக்கி, 'திருவாலவாய் எப்பக்கத்தி லிருக்கிறது' என்று வினவியருள; அவர்கள் சுவாமிகளை வணங்கி 'இதோ கோபுரந் தோன்றுகிறது, இதுவே திருவாலவாய்' என்று சொன்னார்கள். உடனே ஞானசம்பந்த வள்ளலார் பூமியிலே விழுந்து வணங்கி 'மங்கையர்க்கரசி' என்னுந் திருப்பதிகத்தை யெடுத்து, அதிலே மங்கையர்க்கரசியார், குலச்சிறையார் என்கிற இருசைவசிகாமணிகளின் திருத்தொண்டுகளைச் சிறப்பித்து 'ஆலவாயாவது மிதுவே' என்று திருப்பாட்டினிறுதிதோறும் அமைத்துப் பாடிக்கொண்டே திருக்கோயிலுட் சென்று, சுவாமி தரிசனஞ்செய்து 'நீலமாமிடற்றாலவாயிலான்' என்னுந் திருப்பதிகத்தைப் பாடித் திருமுன்றிலை யடைந்தார். முன்னே ஞானசம்பந்த வள்ளலார் திருக்கோயிலுள் நுழைந்தபோது ஒருபுறம் ஒதுங்கிநின்ற மங்கையர்க்கரசியார் திருமுன்னேவர; மந்திரியார் பிள்ளையாரைப் பணிந்து, 'இங்கே தலைமேற்கூப்பிய கையோடுவருகின்ற மாதரசியாரே பாண்டிமாதேவியார்' என்றார். அதுகேட்டுப் பிள்ளையார் அம்மையாருக்கு எதிரே செல்ல, பாண்டிமாதேவியார் பரிவுடன் அவருடைய பாதபத்மங்களில் விழுந்து வணங்கினார். பிள்ளையார் அவரை அருமைத் திருக்கரங்களால் எடுத்தருளினார். மங்கையர்க்கரசியார் தங்கருத்து முற்றுப்பெற்றது என்று நினைத்து, கண்களில் ஆனந்த நீர்பெருக, வாய்குழற 'யானும், என்பதியுஞ் செய்ததவம் என்' என்றுசொல்லி மீண்டும் வணங்கினார். கருணைப்பிரகாசராகிய கௌணியர்பெருமான் 'புறச்சமயத்தார் இடையிலே சைவத்திருத்தொண்டைவழாது இயற்றி வாழும் உம்மைக்காண வந்தனம்' என்று திருவாய்மலர்ந்தருளினார். அவ்வருட்சொற்களைக்கேட்ட அம்மையார் மீண்டும் பாலறாவாயர் பாதங்களில் விழுந்து நமஸ்கரித்தார். அமைச்சர் பெருமானாகிய குலச்சிறைநாயனார் சமணர்கள்செய்த தீமைகளையெல்லாம் ஞானசம்பந்தப் பெருந்தகையார்க்குச் சொன்னார். அதுகேட்டுப் பிள்ளையார் பாண்டிமாதேவியாரை விடைகொடுத்து அனுப்பி எழுந்தருளினார். அப்பொழுது ஆலவாய்க்கண் அருமைத் திருத்தொண்டுகள் செய்துவரும் அடியவர்கள்வந்து திருஞானசம்பந்தமூர்த்திகளை வணங்கி 'ஞானபானுவே! தேவரீர் சமணக்களைகளைக் களைய இத்திருப்பதிக் கெழுந்தருளியவர் நாங்கள் அளவற்ற தவஞ்செய்தோம்' என்று சொன்னார்கள். ஆளுடையபிள்ளையார் அவர்களுக் கருள்செய்து, புறத்தேசென்று குலச்சிறைநாயனார் காட்டிய திருமடத்திலே எழுந்தருளியிருந்தார். மங்கையர்க்கரசியார் கட்டளையின்படி மந்திரியாராகிய குலச்சிறைநாயனார் சம்பந்தப்பெருமானார்க்குந், அவரது பரிசனங்கட்கும் விருந்துசெய்தார். சூரியனும் அஸ்தமயனமாயினன். பகலிலே பாலறாவாயர் முத்துச்சிவிகையிலேறி வந்ததைக்கண்ட சமணர்கள் மனங்கலங்கி ஓரிடத்திலகூடி, திருஞானசம்பந்த சுவாமிகள் எழுந்தருளியுள்ள திருமடத்திலே அடியவர்கள் ஓதும் திருப்பதிக இசையின் ஓசையைக்கேட்டு, பொறாராகி, அதைப் பாண்டியனுக்குத் தெரிவிக்கவிரும்பி, அவன் அரண்மனையையடைந்து, தங்கள்வரவை அரசனுக்கு அறிவிக்கும்படி சொன்னார்கள். அக்காவலாளர்கள் அரசன் அனுமதிபெற்று அடிகண்மார்களை உள்ளே விட்டார்கள். அச்சமணாசிரியர்கள் விரைவாக உள்ளே நுழைந்தார்கள். பாண்டியமகாராஜன் அவர்கள் மனவாட்டத்தைக் குறிப்பாலுணர்ந்து 'நீங்கள் ஒருங்குதிரண்டு இங்குவந்ததற்குக் காரணம் என்னை'

உங்களுக்கு நேர்ந்ததென்னை' என்றுகேட்டான். அதற்குச் சமணர்கள் 'இராஜாதிராஜனே! உம் மதுராபுரியிலே இன்றுசைவவேதியர்கள் மேவலால் நாங்கள் கண்டுமுட்டு' என்றார்கள். உடனே இராஜாவும் 'நான் கேட்டு முட்டு' என்று சினந்து 'அச்சைவவேதியர்கள் இன்று நமபதிக்கு வந்தகாரணம்யாது; அவர்கள் யாவர்' என்று வினவினான். அதற்குச்சமணர்கள் 'சோழநாட்டிலே சீகாழிப்பதியிலே இருக்கின்ற ஒருபிராமணச்சிறுவன் சூலபாணியினிடம் ஞானம் பெற்றவனென்று அவன் கூட்டத்தோடு முத்துச்சிவிகையி லேறிக்கொண்டு எங்களை வாதில்வெல்ல வந்திருக்கின்றான்' என்று சொன்னார்கள். அதுகேட்டு அரசன் மிகச்சினந்து 'இதற்கென்செய்வது' என்று கேட்க; பாதகர்கள் 'அச்சிறுவன் இருக்கின்ற மடத்தை மந்திரவித்தையால் தீப்பற்றும்படி செய்தால்; அவன் உடனே இப்பதியை விட்டு அகலுவன்' என்றார்கள். புறச்சமய இருளில் அழுந்திக்கிடக்கும் அரசனும் அக்கொடுஞ்செய்கைக்கு உடன்பட்டு 'அப்படியே செய்யுங்கள்' என்றுசொல்லிக் குண்டர்களுக்கு விடைகொடுத்து, மனக்கவலையோடும் முகவாட்டத்தோடும் அந்தப்புரத்திற்குப் போனான். அவன்பின்னே பாண்டிமாதேவியாரும் போனார். அங்கே அரசன் துயருடையவனாய் மௌனமாயிருத்தலைக்கண்டு மங்கையர்க்கரசியார் 'என்னுயிர்க்குயிராகிய நாயகரே! முன்னுள்ள மகிழ்ச்சியின்றி முகவாட்டப் பெற்றிருக்கின்றீர்; உமக்குநேர்ந்த துன்பம்யாது' என்றுகேட்க; அரசன் அரசியைநோக்கி 'என்னருமை நாயகியே! சீகாழிப்பதியிலே சிவன்பால் ஞானம்பெற்ற ஒரு பிராமணச்சிறுவன் நமது அடிகண்மாரை வாதில்வெல்ல இங்கே வந்திருக்கின்றான். அவனையும், அவனுடன்வந்த அடியார்களையும் அடிகண்மார்கள் கண்டு முட்டானார்கள்; நானும் கேட்டு முட்டானேன்; இதுவே காரணம்' என்றான். அதற்குப் பாண்டிமாதேவியார் 'நாயகரே! இருபாலரும் வாதுசெய்தால் வெற்றியடைபவர் பக்கஞ்சார்ந்து அவர் அநுட்டிக்கும் சமயத்தையே கைக்கொள்வது உறுதியாகும்; நீர்மனங் கலங்கவேண்டாம்' என்று தம்மாளிகைக்கு மகிழ்ச்சியோடு சென்றார். குலச்சிறைநாயனார் அங்கேபோக; அம்மையார் நிகழ்ந்த சமாசாரத்தை அவருக்குச் சொல்லியருளினார். அதுகேட்டு அமைச்சர் பெருமான் கைகூப்பி 'இன்று திருஞானசம்பந்தப் பெருந்தகையாரையும், அவரது அன்பர்களையும் வணங்கும் பெரும்பேறு பெற்றோம்; இனிச் சமணர்செய்யும் வஞ்சனை அறியோம்' என்றார். மங்கையர்க்கரசியார் மந்திரியாரை நோக்கி 'சமணர்கள் வஞ்சனையேசெய்ய வல்லார்கள்; அவர்களால் ஆளுடையபிள்ளையாருக்கு யாதாயினும் தீமைவிளையுமாயின் நாமும் உயிர் துறந்து ஒழிவோம்' என்று சொன்னார்.

அரசனிடம் விடைபெற்றுச் சென்ற சமணர்கள் திருஞானசம்பந்த சுவாமிகள் எழுந்தருளியிருந்த திருமடத்தை அணுகி, அதில் தீப்பற்றும்படி தங்கள் சமயமந்திரங்களைச் செபித்தார்கள். அவர்கள் மந்திரம் அஞ்செழுத்து ஓதும் அடியவர்கள்முன் வலிமைசெய்து பலியாமைகண்டு 'அரசன் இதை அறிவானாயின் நமது மேன்மையை ஒருபொருளாகக் கொள்ளான். நம்முடைய விருத்தியையுங் கெடுப்பான்' என்று அஞ்சிக் கையிலே அக்கினி கொண்டு திருமடத்தைத் தீப்பற்றும்படி செய்தார்கள். அக்கினி எரியத் தொடங்கியது. அதைப்பார்த்த அடியவர்கள் அத்தீயைத் தணித்து, அது சமணர்களால் செய்யப்பட்டதென்று அறிந்து, ஆளுடையபிள்ளையாரிடம் போய்ச் சமணர்கள்செய்த கொடுமையைக் கூறினார்கள். அதுகேட்ட பிள்ளையார் 'அன்பர்கள் துயிலும் திருமடத்திலே சமணத்தீயர்கள் பழுது செய்யலாமோ' என்று இரங்கி, 'அக்கொடும்பாவிகள் என்பொருட்டுச்

செய்த தீங்காயினும், சிவனடியார்களுக்கு எய்துமோ' என்று பின்னும் அச்சமுற்று, கருணையையே கோபமாகக்கொண்டு 'இது அரசாட்சியின் வழுவினாலே நேர்ந்தது' என்று கருதி 'செய்யனே திருவாலவாய்' என்னும் திருப்பதிகத்தை எடுத்து 'அமணர் கொளுவுஞ்சுடர்பையவே சென்று பாண்டியற்காகவே' என்று திருவாய்மலர்ந்தருளினார். மங்கையர்க்கரசியார் மங்கல நாணைப் பாதுகாத்தல் வேண்டினமையாலும், குலச்சிறைநாயனார் பேரன்பினாலும், அரசன்பால் அபராதமுறுதலாலும், அவன் மீண்டும் சிவ நெறியடையும் விதியைப் பெற்றுண்மையாலும், தமது அருமைத் திருக் கரம் அவனமீதுபட இருத்தலாலும், தீப்பிணியை 'பையவே சென்று' என்று பணித்தருளினார். அவ்வருட்பதிகத்தை அருளிச்செய்தவுடனே அக் கினி வெப்பம்போய்ப் பாண்டியராசனைப் பற்றியது.

பொழுதுவிடிந்ததும் பாண்டிமாதேவியாரும், குலச்சிறை நாயனாரும் திருமடத்திலே சமணர்கள் செய்த தீமையைக் கேள்வியுற்று 'முத்தமிழ் விரகரை இந்நாட்டிற்கு வரவழைத்த நாம் உயிர்துறப்பதே உறுதி' எனமயங் கிக் கொண்டிருக்கையில் திருமடத்தில் தீதின்மையைத் தெளிந்து 'கரு முரட்டுச் சமணர்கள் செய்த தீங்கு இறுதியில் எங்ஙனம் முடியுமோ' என்று எண்ணிக்கொண்டிருந்தார்கள். அப்பொழுது மெய்காப்பாளர்கள் ஓடிவந்து 'அரசனுக்கு வெஞ்சுரம் அடுத்தது' என்று சொன்னார்கள். அதுகேட்ட அரசியும், அமைச்சரும் விரைவாகப் பாண்டியனிடஞ் சென்றார்கள். அச்சுர நோய் வைத்தியர்கள் அளிக்கும் ஔடதங்களாலும், மந்திரவாதிகள் செய்யும் மந்திரங்களாலும் சிறிதும் நீங்கவில்லை. நோய் முன்னிலும் முதி ரவே அரசன் உணர்வழிந்து கிடந்தான். மாயா சொரூபிகளாகிய சமணப் பாவிகள் தங்களை எல்லாமவல்ல சித்தர்களென்னக் கருதி, விரைவாகப் பாண் டியன்பால் அணைந்து, தங்கள் கைகளிலுள்ள மயிற்பீலிகளால் அரசன் உடலைத் தடவினார்கள். நோயின் வெம்மையால் அப்பீலிகளெல்லாம் தீய்ந்தன. பிறகு அக்கொடிய குண்டர்கள் தாங்கள் கையிலே தொங்கு கின்ற கமண்டலநீரை 'அருகனே! அருகனே! காவாய்; காவாய்' என்று அரசன்மீது தெளித்தார்கள். அந்நீர் அக்கினியிற் சொரிந்த நெய்போலாகி வெம்மையை அதிகரிக்கச்செய்தது. அதனால் பாண்டியராசன் மிகவருந்தி அமணர்களைப்பார்த்து 'நீங்கள் ஒருவரும் என் இரண்டுபக்கங்களிலும் இராதுபோங்கள்' என்று உணர்வுசோர்ந்தான். பாண்டிமாதேவியார் மந் திரியாரை நோக்கி 'நம்மையாள எழுந்தருளிய திருஞானசம்பந்த சுவாமி களுக்கு இரவு சமணர்கள்செய்த தீங்கு இப்படி முடிந்ததோ' என்று சொன்னார்கள். அதற்கு அமைச்சர் பெருமானாகிய குலச்சிறை நாயனார் அரசியை வணங்கி 'திரிபுரங்களையும் புன்னகையால் எரித்தருளிய சிவபெரு மான் அன்பராகிய திருஞானசம்பந்தப் பெருமானுக்குச் சமணர்கள்செய்த தீங்கே இப்படி விளைந்தது; சமணப்பாவிகள் இந்நோயைத் தீர்க்கப்புகின் அது முதிர்ந்துகொண்டே யிருக்கும்; சிறிதும் நீங்காது' என்றார். உடனே பாண்டிமாதேவியாரும், குலச்சிறையாரும் பாண்டியராசனை வணங்கி 'இரவு சமணர்கள் சீகாழிப்பிள்ளையாருக்குச் செய்ததீங்கே சுரநோயாகி உம்மைவருத்துகிறது; இச்சமணர்கள் செய்யும் மாயமந்திரங்களும், பிறவும் நோயை வளர்க்குமேயன்றி யொழிக்கா; திருஞானசம்பந்தமூர்த்திகள் இங்கே எழுந்தருளித் திருநோக்கஞ் செய்வாராயின், இத்தீப்பிணியோடு பிறவிப்பிணியும் ஒழியும்' என்று சொன்னார்கள். பாண்டியராசன் செவி யிலே சிவஞானச் செல்வர்களாகிய மங்கையர்க்கரசியாரும், குலச்சிறையா ரும் சொல்லிய 'திருஞானசம்பந்தமூர்த்திகள்' என்னும் நாமமந்திரம்

நுழைந்தமாத்திரம், அவன் சிறிது அயர்வு நீங்கப்பெற்று ‘சமணர்கள் செய்கைகள் நோய்க்கு மூலமாயிருக்கின்றன’ என்றெண்ணி ‘தம்பக்கல் நிற்கின்ற கற்பரசியாரையும், அமைச்சர் பெருமானையும் நோக்கி ‘திருஞானசம்பந்த சுவாமிகளை அழைத்து வாருங்கள்; எவர் என்னோயைப் போக்குகின்றாரோ அவர்பக்கஞ் சார்வேன்’ என்றான் அதுகேட்டு மங்கையர்க்கரசியாரும், குலச்சிறையாரும் அளவிலா ஆனந்தமடைந்து, ஆளுடையபிள்ளையார் எழுந்தருளியிருக்கின்ற திருமடத்தையடைந்து, அவருடைய பாததாமரைகளில் உரைதடுமாற, சரீரம் நடுங்க, விழுந்து புரண்டு மெய்ம்மறந்தார்கள். திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் தமது அருமைத்திருக்கரத்தால் அவர்களை எடுத்தருளித் தேற்றியும் அவர்கள் தெளிந்தார்களில்லை பின்னாத் திருஞானசம்பந்தர் அவர்களைத் திருநோக்கஞ்செய்து ‘உங்கள்பால் யாதாயினும் தீங்குளதோ’ என்றுவினவ; அவர்கள் ‘சுவாமீ! அடியேங்கள் சமணர்கள் முன்னே தேவரீருக்குச்செய்த வஞ்சனைக்கு மிகப்பயந்தோம்; அவ்வஞ்சனை திருமேனியைப் பொருந்தாது என்று அது நீங்கினோம்; அத்தீத்தொழில் வெஞ்சுரமாகி வேந்தனையடைந்து வருத்துகின்றது; அதைச்சமணர்கள் நீக்கப்புகின் அது அதிகப்படுகிறது; தீப்பிணியால் வருந்தும் பாண்டியன் முன்னிலையில் தேவரீர் எழுந்தருளி அவர்களை வென்றருளின், அவன் உயிரும், அடியேங்கள் உயிரும் உய்யும்’ என்று சொன்னார்கள் அதுகேட்ட ஆளுடையபிள்ளையார் ‘நீங்கள் சிறிதும் அஞ்சவேண்டாம்; நீங்கள் ஆனந்திக்க இன்று சமணரை யாவருங்காண வாதில்வென்று பாண்டியனைத் திருநீறணிவிப்போம்’ என்று அருளசெய்தார் அவர்கள் ‘தேவரீர் அடியேங்கள் நிமித்தம் எழுந்தருளிவரத்தக்க பெரும்பேற்றை யடைந்தோம்; இதைவிட அடியேங்கள் பெறற்கரியபேறு வேறுண்டோ’ என்று வணங்கினார்கள். திருஞானசம்பந்த சுவாமிகள் ‘சமணர்களிடம் வாதுசெய்து வெல்லச் சிவபெருமானுடைய திருவுள்ளத்தை அறிவேம்’ என்று அடியவர்களோடும் திருவாலவாயென்னுந் திருக்கோயிலுட்சென்று ‘வஞ்சகர்களாகிய சமணர்களுடன் வாதுசெய்யத் திருவுள்ளமோ’ என்பதை அறிவான ‘காட்டுமாவதுரித்துரி’ என்னுந் திருப்பதிகத்தைப்பாடிச் சொக்கநாதர் திருவுள்ளத்தையறிந்து பின்னும் சமணர்களை ஒழிக்கவும், சிவநெறியைத் தழைக்கவும் ‘வேதவேள்வியை’ என்னுந் திருவருட்பதிகத்தைப் பாடித் திருவருள்பெற்றுக் குலச்சிறைநாயனார் முன்னே செல்லவும், பாண்டிமாதேவியார் பின்னே வரவும் பாண்டியராசனுடைய அரமனைக் கெழுந்தருளினார்

அமைச்சர்பெருமான் விரைந்துசென்று சுவாமிகள்வரவைப் பாண்டியனுக்குத் தெரிவித்தார் அவன் சிறிது துயர்நீங்கித் தன் முடியின்பக்கத்திலே ஒரு பொன்பீடத்தை யிடுவித்து, மந்திரியாரை மீண்டும் சுவாமிகளை எதிர்கொள்ளும்படி ஏவினன் அக்காலை அமணப்பாவிகள் அரசனை நோக்கி ‘அரசே! நமது சமயத்தை நிலைநிறுத்துவது இதுவோ’ என்று பின்னும் ‘உமது அறநெறியை நீரே காத்தருளவேண்டும்; அவரை யிங்கே யழைத்தீர்; எங்கள் இருவரையும் உமதுநோயைத் தீர்க்கும்படிசொல்லி, நோயுமுற்றிலும் அவராலேயே தீர்க்கப்படினும் எங்களால் தீர்க்கப்பட்டதாகச் சொல்லும்’ என்று வேண்டி நின்றார்கள். அதற்கு அரசன் ‘நீங்களிருவரும் உங்கள் தெய்வவலிமையால் தீரும்; நான் வஞ்சகம்பேசேன்’ என்றான் அதுகேட்டுச் சமணர்கள் மனந்தளர்ந்தார்கள். அப்பொழுது சமண இருளழிக்கவெழுந்த சிவபானுபோலத் திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் முத்துச்சிவிகையினின்றும் இறங்கி அரமனைக்குள்ளே சென்றார். அவரைத்தரிசித்த பாண்டியன் தன் முடியின்பக்கத்தி லிடப்பட்டிருக்கின்ற

பொன்பீடத்தைக் காட்ட, ஞானப்பிரகாசர் அதிலே எழுந்தருளினார். குண்டசமணர்கள் திகிலடைந்தார்கள். பாண்டியமகாராஜன் பாலறாவா யரைத் தரிசித்தமையால் சுரம் சிறிது நீங்கப்பெற்றுப் பிள்ளையாரை நோக்கி 'உம்முடைய பதியாது' என்று வினவினான். அதற்குச் சுவாமிகள் 'பிரம னூர் வேணுபுரம்' என்று எடுத்து 'கழுமலநாம் பரவுமூரே' என்று திருப் பதிகத்தினாலே விடையளித்தருளினார். சமணர்கள் திருஞானசம்பந்த வள்ளலாரைச் சூழ்ந்துநின்று தங்கள் சமய நூல்களிலுள்ளனவற்றைக் குரை த்தார்கள். அதுகண்ட ஆளுடையபிள்ளையார் அமணர்களை நோக்கி 'உமது வஸ்து நிலையை உங்கள் சாஸ்திரங் கூறுமாறு பேசுங்கள்' என்ன; சமணக்கள்ளர்கள் வடவைபோல் சீறி எழுந்து பிள்ளையாரை நெருங்கினார் கள். அதுகாலை மங்கையர்க்கரசியார் மனம் பொறாராகி யுள்ளமிங்கித் தமது பிராணநாயகனாகிய பாண்டியனைப்பார்த்து 'திருஞானசம்பந்த மூர்த்தி சுவாமிகள் மிகச் சிறுவர்; இச்சமணர்களோ பலர்; அவர்கள் புயங்கள் மலைகள்போலிருக்கின்றன; தேவரீர் உமது தீப்பிணியை முதலில் பிள்ளை யாரைத் தீர்க்கும்படி தயைசெய்யும்; பின்பு சமணர்களுக்கு வாதிக்கும் ஆற்றல் இருக்குமாயின் வாதிக்கச்செய்யும்' என்றார். அதற்கு அரசன் அம்மையாராம் மனைவியாரை நோக்கி 'நீ சிறிதும் அஞ்சாதே; இனி என்ன வாது இருக்கின்றது' என்றுசொல்லி அமணர்களைப் பார்த்து 'நீங்களும் சிவநேயர்களாகிய இவர்களும் என்சுரநோயைத் தீர்த்து உங்கள் தெய்வத் தன்மையை நிலைநிறுத்துங்கள்' என்று கூறினான். திருஞானசம்பந்த வள்ளலார் திருவையொத்த பாண்டிமாதேவியாரைப் பார்த்து 'மாதேவீ! என்னைச் சிறுவன் என்று எண்ணற்க' என்று திருவாய்மலர்ந்தருளி, 'திரு வாலவாய்க் கடவுளார் பெருமான் திருவருள்நிற்க, இந்த ஈனத்தீச்சமணக் குண்டர்களுக்கு நான் எளியவனாகமாட்டேன்' என்னுங்கருத்துப்பட 'மானி னேர் விழிமாதராய்' என்னுந் திருவருட்பதிகத்தை ஓதியருளினார்.

பாண்டியமகாராஜன் பதிதர்களாகிய சமணர்களை நோக்கி 'எனக்குற்ற பிணியை நீங்கள் இகலித்தீருங்கள்' என்று சொன்னான். அதற்குச் சமணர் கள் 'உமமுடைய இடப்பக்கத்துப் பிணியை நாங்கள் எங்கள் தெய்வவல்ல மையால் தீர்ப்போம்' என்றுசொல்லிப் பாண்டியனை நெருங்கி அருகநாமத் தைச் செபித்துப் பீலியினாலே மன்னன் வாமபாகத்தைத் தடவினார்கள். தட வவே, அப்பக்கத்துநோய் முன்னினும் அதிகமாக மூண்டது. பாண்டியன் ஆற்றமுடியாமல் ஞானபானுவைப் பார்த்தான் அக்குறிப்பையுணர்ந்த ஆளுடையபிள்ளையார் ஆலவாய்க் கடவுளைச் சிந்தித்து 'மந்திரமாவது நீறு' என்னுந் திருப்பதிகம்பாடித் திருநீற்றைக்கொண்டு அரசன் வலப்பாகத்தில் தமது அருமைத் திருக்கரத்தால் தடவியருளினார். உடனே பாண்டிய னுடைய வலப்பக்க வெப்புநோய் நீங்கிப் பொய்கைபோலக் குளிர்ந்தது. அவ்வலப்பக்க நோயும் இடப்பக்கத்திற் சென்று அரசனைவருத்தி, சமணர் கள் பீலிகளையுந் தீய்த்தது பாண்டியமகாராஜன் திரிகரண சுத்தமில்லாத் தீயர்களைப்பார்த்து 'நீங்கள் தோற்றீர்கள்; என்னைவிட்டு அகலுங்கள்' என்று கடிந்துசொல்லித் திருஞானசம்பந்த தெய்வத்தை நோக்கி 'சுவாமீ! என்னிடப்பக்கப் பிணியையுந் தீர்த்தருளும்' என்று பிரார்த்தித்தான். கவுணியர்பெருமான் விபூதிகொண்டு தடவினார். தடவினதும் வாமபாகநோயும் ஒழிந்தது மங்கையர்க்கரசியாரும், குலச்சிறையாரும் ஞானசம்பந்தப்பெருந் தகையார் திருவடிகளை வணங்கி 'நாங்கள் பெருமை யடைந்தோம்; இன்றே பிறந்தவர்களாயினோம்; எங்கள் வேந்தரும் பிறவாமேன்மையைப் பெற்றார்' என்று ஆனந்தக்கடலில் திளைத்தார்கள். பாண்டியமகாராஜன் பரசமய கோளரியைப் பணிந்து 'நான் உய்ந்தேன்; உய்ந்தேன்' என்றான்.

அதுகண்ட சமணர்கள் 'இனித்தர்க்கவாதத்தால் வெல்லமுடியாது; அனலாலும் புனலாலும் வெல்லவேண்டும்' என்று சிந்தித்துக்கொண்டிருந்தார்கள். அப்பொழுது ஆளுடையபிள்ளையார் குண்டர்களை நோக்கி 'உங்கள் சமயநூல் உண்மையைப்பேசுங்கள்' என்றார். அதற்குச் சமணப்பாவிகள் 'தர்க்கவாது வேண்டியதில்லை; நமது சமய உண்மைகளைப் பிரத்தியட்சமாகக் காட்டி வெல்லுவோம்' என்றார்கள். அதுகேட்ட அரசர்பெருமான் 'என்சுரநோயைப் போக்கமுடியாத உங்களுக்கு என்னவாது' என்ன; சமணர்கள் 'என்னவாது' என்பதையே விருவாகக்கொண்டு 'நாங்கள் இருவரும் எங்கள்சமய உண்மைகளை ஏட்டிலேஎழுதி நெருப்பிலேஇடக்கடவோம்; வேவப்பெறாமையே வெற்றி' என்று சொன்னார்கள். பாண்டியராசர் பதில் சொல்லுவதற்குமுன் பாலறாவாயர் 'நீங்கள் உரைத்தது மிகநன்று; வேந்தன் முன்னிலையில் அப்படியே செய்வோம்; வாருங்கள்' என்று திருவாய்மலர்ந்தருளினார். உடனே பிள்ளையார் ஆணைப்படி புண்ணியரூபியாகிய பாண்டிய மகாராசரும் சபைக்கு முன்பாக அக்கினி அமைவித்தார். திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் சிவசிந்தனையோடு தாம் பாடிய தமிழ்வேதத் திருமுறைகளை எடுத்துத் திருக்காப்பிட்ட கயிற்றை அவிழ்த்து, அத்திருவருண்முறையைத் திருக்கரத்தால் மறிக்க 'போகமார்த்த பூண்முலையாள்' என்னும் திருநள்ளாற்றுப் பதிகம்வந்து நேர்ந்தது. சைவசேகரராகிய சம்பந்தமூர்த்தி நாயனார் திருநள்ளாற்றுப் பெருமானைச் சிந்தையால் வணங்கி, அத்திருவேட்டைக்கழற்றித் திருக்கரத்திலே தாங்கிச் சிவபெருமானே முழுமுதற்கடவுள் என்பதை யாவருக்கும் உணர்த்துவான் 'இவ்வேடு நெருப்பில் இடப்படுமாயின் இதற்குப் பழுதில்லை; இதுமெய்ம்மை' என்னுங் கருத்துத்தோன்ற 'தளரிளவளரொளி' என்னுந் திருவருட்பதிகத்தைப் பாடி, அத்திருவேட்டை அக்கினியிலிட்டார். அத்திருப்பதிகம் சிவபெருமான் திருவருளேயாகையால் அது நெருப்பிலே அழியாது பசுமையாய் விளங்கியது. வஞ்சநெஞ்சர்களாகிய சமணர்கள் தங்கள்சமய உண்மைப்பொருள் எழுதப்பட்ட ஏட்டை 'இது அக்கினியில் அழியாதிருக்குமோ' என்னுங் கவலைநிறைந்த மனமுடையவர்களாய் அக்கினியிலே யிட்டார்கள். இட்டதும், அவ்வேடு அக்கினியிற்பட்ட பஞ்சுபோலத் தகிக்கப்பட்டழிந்தது. திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் தாம் அக்கினியில் இட்ட ஏடு குறித்த நாழிகையில் பழுதின்றிருக்கக் கண்டு, அதை அருமைத்திருக்கரத்தால் எடுத்து, அது முன்னிலும் பசுமையாயும், புதுமையாயும் இருத்தலைச் சபையிலுள்ள சமஸ்தருக்குங் காட்டித் திருமுறையிலே முன்போலவே கோத்தருளினார். அதுகண்டு அரசர் ஆச்சரியமும் ஆனந்தமும் அடைந்து, சமணர்களை நோக்கி 'உங்கள் ஏட்டை எடுங்கள்' என்றார். சமணர்கள் ஏட்டைஎடுக்க நெருங்கியபோது அக்கினி கொழுந்துவிட்டுச் சுவாலிக்கத் திரும்பினார்கள். அரசர் அக்கினியைச் சலத்தால் தணிவித்தார். சமணர்கள் சாம்பரையுங் கரியையுமன்றி ஏட்டைக் காணாதவர்களாய் மனம்வருந்தித் திகைத்துச் சாம்பரைப்பிசைந்து தூற்றிப்பார்த்தார்கள். அதுகண்ட அரசர் புன்சிரிப்போடும் 'ஏட்டை இன்னும் அரித்துப்பாருங்கள்; பொய்யை மெய்யாகப் புகுந்தவர்களேபோங்கள்; முன்னம்யான் வெப்புத்தீயினின்றும் பிழைக்க, அப்பொழுது நீங்கள்தோற்றீர்கள்; அதுவேயல்லாமல் நீங்கள் தீயிலிட்ட ஏடும் நிலைக்கவில்லை; நீங்கள் இன்னும் தோற்கவில்லைபோலும்' என்றார். அரசர் நகையுட்கொண்ட சொற்றை அறியாத சமணர்கள் 'முன்னே இருகால்வாது செய்தோம்; இன்னும் ஒருகால் செய்யவேண்டும்; மூன்றுமுறையில் ஒருமுறையாயினும் வெற்றியடைவோம்' என்றார்கள். மன்னர்பிரானார் 'இது என்னமாற்றம்' என்று மறுத்தபின்னுந் திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் ' இனி என்ன

வாதுசெய்வது' என்று வினவியருள; சமணர்கள் சம்பந்த வள்ளலைப்பார்த்து 'நம்முடைய சமய உண்மைகளை ஏட்டில் எழுதி வைகையாற்றில விடுவோம; எதிர்நோக்கிச்செல்லும் ஏடே வெற்றியுடையது' என்றாகள். கௌணியர்பெருமான் அதற்கு உடன்பட்டார அப்பொழுது அமைச்சர் பெருமானாகிய குலச்சிறைநாயனார் சமீபததிலே வநது 'இவவாதில் தோற்றவர்கள செய்யவேண்டியது யாது? அதைத தீாமானிததுக்கொண்டே வாதுசெய்யவேண்டும் எனறா. அப்பொழுது நீதியிலவலலவர்களாகிய சமணாகள் அமைசசர்மீதுகொண்ட கோபததாலும், பொறாமையாலும வாய்சோாநது 'நாஙகள் இம்முறை வாதில தோற்போமாயின் எஙகளை இவவரசர் கழுவிலேற்றககடவர்' எனறு கூறினாகள் அதுகேட்ட அரசா சமணாகளைப்பார்தது 'நீஙகள் கோபததால கூறினீாகள்; உஙகளசெயகையை மறந்தீர்கள' என்றுசொல்லி 'எலலாரும வைகைககுப் புறப்படுஙகள்' என்று ஆஞ்ஞாபித்தார் அப்படியே எலலாரும வைகைககரையையடைநதார்கள் அரசா 'நீஙகள் இருவரும் உஙகள ஏடுகளை வைகையிலிடுஙகள்' என்றா அறிவீனர்களாகிய சமணாகள 'தோற்றவா தோலார்' எனனும் உறுதிகொணடு பேரவாவினால அவாகள் முதலிலே 'அததிநாததி' என்று எழுதியஏட்டை வைகையிலே விட்டாாகள் அவ்வேடு கடலநோககியோடிற்று அருகர்கள் நதிகொண்டோடும் ஏட்டைததொடாநது எதிரே அணைப்பவர்போலக் கரைமீது ஓடினார்கள். அநத ஏடு நூறுவிற்கிடை தூரததிறகு அப்பால் சென்றமையால, அதைககாணுதற்கும் வறியவராய மனநதளாநது அஞ்சித்திருமபி அரசன் முன்னினறு தஙகள் அச்சததைத வெளிப்பட ஒளிப்பார்போல, திருஞானசம்பநத சுவாமிகளைப் பார்தது 'உமமுடைய ஏட்டைவிடும், விளைவதைப் பாாப்போம' எனறாகள். பாணடியநாட்டையாளும் வேந்தர்பெருமான் பாலறாவாயர் திருக்குறிப்பை நோக்க, அப்பெருநதகையார் 'வாழ்க அநதணர்' என்னுந தமிழப்பதிகததைத அருளிசசெயது, ஏட்டிலேவரைநது வைகையாற்றிலே விட்டருளினார் அநததிருவேடு எதிர்நோககிச் சலததைக் கிழிததுக்கொணடு சிவபெருமானை முழுமுதறபொருள என்று காட்டிககொணடு போயிற்று அததிருபபதிகத்திலே ஆளுடையபிள்ளையாா 'வேநதனுமோஙகுக' என்று திருவாயமலர்நதருளினமையால, அரசன் கூன்நிமிரப் பெற்றான் ஏடு சலததைக கிழிததுககொணடு எதிரேறிச செல்வதைப்பாாத்த தேவர்கள அலாமாரி தூாததாாகள; அரசாகோமான் அறபுதமெய்தி நின்றா; சமணாகள பதைபதைததுத தலைகுனிந்து நினறாாகள. ஆற்றின் எதிரேறிப்போகும் ஏட்டை எடுபபதறகுக குலசசிறைநாயனாா குதிரைமேலேறிச சென்றாா் அவவேடு நிற்குமாறு பிளளையாா 'வன்னியுமததமும்' என்னுந திருப்பதிகததைப பாடியருளினாா மநதிரியார் சிவாலயததுககுப் பக்கததிலே யிருககினற நீாநடுவிலே போய, அஙகே தஙகிககிடககுந திருவேட்டையெடுததுச சிரமேறறாஙகி எலலையிலலா ஆனநததோடு, கரையேறி, திருவேடகததில எழுநதருளியுளள சிவபெருமானைத தரிசிததுக்கொணடு ஞானசமபநதப் பிளளையாரிடமவநது, அவரைபபணிந்து, தாஙகொணாநத திருவேட்டை யாவருக்குங் காட்டினாா அதைக்கண்ட அனபாகள ஹரநாமகோஷஞ செயதாாகள பாண்டியமகாராஜாவானவா மந்திரியாரைநோககி 'வாதிலேதோற்ற இசசமணர்கள் முனனே நமது பிள்ளையார்ககு அநுசிதஞசெயதாாகள அவாகள சொலலியபடி இவர்களைக கழுவேற்றுக' என்று ஆஞ்ஞாபிததாா கருணைககடலாகிய காழிப்பிள்ளையார் அரசா ஆணையைககேட்டும் சமணர்களமீது சிறிதும் பகையிலராயினும், அவாகள திருமடததிலே அடியவாகட்குததீஙகுசெய்தமையானும், அரசனாணையே அவாகள் உய்தற்குப் பிராயசசித

தம் ஆகலானும், அத்தண்டனை அவர்கள் அடையாவிடின் அவர்களுக்கு எந்த ஜென்மத்திலும் உய்யுநெறியின்மையானும், அவர்கள்பால் மறக் கருணை செலுத்துபவராய் அரசன் கட்டளையைத் தடுக்காதிருந்தார் மந்திரி யார் உலகத்தார் உண்மையறிந்து உய்யும்பொருட்டுக் கழுமரங்களை நாட்டி, அவைகளில் சமணர்களை ஏற்ற; சமணர்கள் எண்ணாயிரவரும் ஏறினார்கள். பின்பு திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் பாண்டியராசருக்குத திருநீறு கொடுக்க அவர் அன்போடு வணங்கி விதிப்படி விபூதியைவாங்கித தரித்துக் கொண்டார். பாண்டியநாட்டிலுள்ள யாவரும் விபூதி தரித்துககொண டார்கள். எங்கணுஞ் சைவமணங் கமழப்பெற்றது. ஆளுடையபிள்ளையார் அருட்புகழ் எங்கும பரந்தது.

திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் சோமசுந்தரக்கடவுளைத் தரி சிக்க முத்துச்சிவிகையிலேறி, பாண்டியரும, பாணடிமாதேவியாரும், குலச் சிறைநாயனாரும் உடன்வர, மற்றைய அடியவர்கள் சூழ்ந்து அரநாம முழக்கத் திருக்கோயிலையடைந்து, சுவாமி தரிசனஞ்செய்து ‘வீடலால வாயிலாய்’ எனனுந் திருப்பதிகம் பாடியருளினார் பாண்டியராசா சங்கம் வளர்த்த சங்கரனைப்பணிந்து ‘திருவாலவாய்ப்பெருமானே’ சமணர்கள் மய க்கத்தால் தேவரீரைமறந்திருந்த அடியேனைப் பிணிபோக்கியாட்கொள்ள ஆளுடையபிள்ளையாரைத தந்தருளிய அருட்டன்மையை என்னென்று சொல்லுவேன்’ என்று தோத்திரம பண்ணினார். பிள்ளையார திருக்கோயிலை நீங்கித திருமடத்துக் கெழுந்தருளினார். அரசரும அரசியாரும சுவாமிகள் பால் விடைபெற்று மாளிகை சேர்ந்தார்கள திருஞானசம்பந்த சுவாமிகள் ‘ஆலநீழலுகந்த’ என்னுந திருப்பதிகத்தைப் பாடி, அதிலே சிவபெருமான் திருநீலகண்டப் பெரும்பாணர்க்கு அருளியதிறத்தையுஞ் சிறப்பித்துத துதித்து, அவரோடும அளவளாவி யிருந்தார் பாண்டிமாதேவியாரும், குலச்சிறை நாயனாரும தினந்தோறும் பணிந்துபோற்றி வந்தார்கள. பிள் ளையாரும் திருவாலவாய்க் கடவுளைத துதிசெய்து கொண்டிருந்தார.

இப்படி இருக்குநாளில் சிவபாத விருதயர் ‘சமணரைவாதுசெய்து வெல்ல மதுரையம்பதிக் கெழுந்தருளிய பிள்ளையார்பால் நிகழ்ந்ததை அறி வேன்’ என்று சீகாழியினின்றும் நீங்கி மதுரையடைந்து மீனாட்சி சுந்தரே சரைத்துதித்துப் பிள்ளையார் வீற்றிருந்தருளுந திருமடத்துக்குச்சென்றார திருஞானசம்பந்த சுவாமிகள் தந்தையாரை எதிர்கொள்ள, அவர வணங்கிக் கொண்டு முன்சென்றணைய ஞானசம்பந்த வள்ளலாரும அவரை எதிர் தொழுது திருத்தோணியப்பரை நினைத்து ‘மண்ணினலலவண்ணம்’ என் னுந திருப்பதிகம பாடி யருளினார்.

சிலதினங் கழிந்தபிறகு திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள பிறதலங் களை வணங்கப் புறப்பட்டார். பாண்டியர் பெருமானும், மங்கையாக்கரசி யாரும, குலச்சிறையாரும சுவாமிகளைப் பிரியச் சிறிதும மனமில்லாதவர்க ளாய் அவரைவணங்கி நின்றார்கள். அவர்கள கருத்தையறிந்த காழிவள்ள லார ‘யாம உங்களைப் பிரியாவண்ணம எம்மோடு இந்நாட்டிலுள்ள சிவ தலங்களைத தரிசிக்கக்கடவீர்கள’ என்று அருளிச்செய்து, அவர்களோடும, அடியவர்களோடும திருப்பரங்குன்றம், திருவாப்பனூர், திருப்புத்தூர, திருப்பூவணம், திருக்கானப்பேர, திருச்சுழியல் திருக்குற்றாலம, திருக் குறும்பலா, திருநெல்வேலி முதலிய திருப்பதிகளைத தரிசித்து, இராமேச் சுரத்தை யடைந்து, இராமநாதரை வணங்கிப் பதிகம் பாடி அங்கே எழுந் தருளியிருந்தார். அப்பொழுது அங்கிருந்தே ஈழநாட்டிலுள்ள திருக்கோண

சைலம், திருக்கேதீச்சரம் என்னும் இரண்டு திருத்தலங்களையும் நினைந்து திருப்பதிகம் பாடியருளினார். பிறகு திருஞானசம்பந்தமூர்த்திகள் இராமேச்சுரத்தை விடுத்துத் திருவாடானை, திருப்புனவாயில் என்னுந் திருப்பதிகளுக்குப்போய்ச் சுவாமி தரிசனஞ்செய்து திருப்பதிகம் பாடிக் குலச்சிறைநாயனார் அவதார க்ஷேத்திரமாகிய மணமேற்குடியை யடைந்து, அங்கே வீற்றிருந்தார். அங்கிருந்துகொண்டே அருகேயுள்ள தலங்களைத் தரிசித்துத் திரும்புவாராயினார். சிலநாள் சென்றபின்பு சீகாழிவள்ளலார் சோழநாட்டிற்கு எழுந்தருளத் திருவுளங்கொண்டருளினார். அப்பொழுது அரசரும், அம்மையாரும், அமைச்சரும் ஆளுடையபிள்ளையாரைப் பிரியப் பிரியஞ் சிறிதுமில்லாமல் அவருடன்போக ஒருப்பட்டார்கள். அதுகண்டு திருஞானசம்பந்த சுவாமிகள், 'அன்பர்களே! நீங்கள் உங்கள் நகரத்திலிருந்துகொண்டு சைவசமய பரிபாலனஞ்செய்யக் கடவீர்கள்' என்று ஆஞ்ஞாபிக்க, அவர்கள் அவ்வாஞ்ஞையை மறுத்தற்கஞ்சிச் சுவாமிகளை வணங்கி அவருடைய திருவடிகளை ஆனந்தக்கண்ணீரால் அபிடேகித்து, எழுந்து, விடைபெற்று, மதுரையையடைந்து சிவநெறி வளர்த்து வந்தார்கள்.

திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் பாண்டிநாட்டைக் கடந்து, சோழநாட்டை யடைந்து, திருக்களர், திருப்பாதாளீச்சரம் முதலிய திருப்பதிகளைத் தரிசித்து முள்ளிவாய்க் கரையையணைந்தார். அவ்விடத்தில் அப்பொழுது ஆற்றுப்பெருக்கு அதிகமாயிருந்தது. அதனால் ஓடக்காரர்கள் ஓடக்கோல்கள் நீரில் நிலையாமையைக்கண்டு ஓடங்களைக் கரையிலே நிறுத்திவிட்டுப் போய்விட்டார்கள். முத்தமிழ்விரகர் அதுகண்டு கரையிலே எழுந்தருளி நின்றபோது திருக்கொள்ளம்பூதூர் என்னுந் திருப்பதி அவருக்கு எதிரே தோன்றியது. உடனே அத்திருத்தலத்தைத் தரிசிக்கவேண்டும் என்னும் பேரவா சுவாமிகளுக்கு எழுந்தது. எழவே பிள்ளையார் ஒரு ஓடத்தின் கட்டை அவிழ்த்துத் திருத்தொண்டர்களை அதிலே ஏற்றி, தமது நாவின்றிறமே கோலாக அதின்மேல் நின்று 'கொட்டமே கமழும்' என்னுந் திருவருட்பதிகத்தைப் பாட, ஓடஞ் சிவபிரான் திருவருளால் அக்கரையை யடைந்தது. பாலறாவாயர் அடியவர்களோடும் இறங்கித் திருக்கோயிலுக்குச் சென்று சுவாமி தரிசனஞ்செய்து சிலநாள் அங்கிருந்து, பின்பு அக்கினியில் வேவாத திருப்பதிகத்தையுடைய தேவதேவனைத் தரிசிக்கவிரும்பித் திருநள்ளாற்றை யடைந்து, சிவபெருமானை வணங்கி, 'பாடக மெல்லடி' என்னும் வினவுரைத் திருவருட்பதிகத்தை அருளிச்செய்து அங்கேயிருந்தார்.

சிலதினஞ் சென்ற பின்பு சிவஞானசம்பந்தர் திருத்தெளிச்சேரியைத் தரிசித்துப் பௌத்தர்கள் வாழும் போதிமங்கையைச் சமீபித்தார். அதையறிந்த சைவத்திருக்கூட்டத்தார் அரநாமகோஷஞ் செய்தார்கள். திருச்சின்னங்கள் திருஞானசம்பந்தசுவாமிகள் அருமைத் திருநாமங்களை முழக்கின. அவ்வருளோசைகளைக்கேட்ட பௌத்தர்கள் பொறாமைகொண்டு, அதைப் பிடகநூலில் வல்ல புத்தநந்தி முதலியோர்க்குச் சொன்னார்கள். உடனே புத்தநந்தியானவன் கோபம் நிறைந்த உள்ளத்தனாய்ப் புத்தர்கள் தன்னைச் சூழ்ந்துவரச் சென்று திருத்தொண்டர்களைப் பார்த்து 'எங்களை வாதில் வென்றன்றோ வெற்றிச் சின்னங்கள் பிடிக்கவேண்டும்' என்று வெகுண்டு விலக்கினான். சிவனடியார்கள் இரக்கத்தாற் சினந்து 'இவனை மாய்க்கா தொழியின் இவன் அடியவர்களுக்குத் தீங்குவிளைப்பான்' எனக் கருதி, முத்துச் சிவிகையின்மேல் கோடி சூரியப்பிரகாசமா யெழுந்தருளி வரும் பிள்ளையாரை யடைந்து, பணிந்து, புத்தன் செய்கையைச் சொன்னார்கள். அதுகேட்டு ஞானசம்பந்த வள்ளலார் 'நாம்வருமிடத்தில் இது

அழகாயிருக்கிறது; புத்தநந்தியினுடைய பொய்ம்மேற்கோளை அவன் வாதஞ் செயதழி யறிவோம்' என்று திருவாய்மலர்ந்தருளினார். அதற்குள்ளாகத் தேவாரத் திருவருட்பாக்களை எழுதிவரும் அன்பர் பெருமான் 'புத்தர்ச மண கழுக்கையா' என்னுந் திருவருட் பாவையோதி 'இப்புத்தநந்தி சிரசு துண்டிக்கது உருள இவன்மேல் இடி விழக்கடவது' என்றுரைத்தார் உரைத்தமாத்திரம் திருவருளாஞ்ஞையால் இடியிடித்துப் புத்தன் தலையைத் துமித்தது. அதுகண்ட பௌத்தர்கள் நிலைகலங்கிப் பயந்து மருண்டு ஓடினார்கள். சிவனடியார்கள் பிள்ளையார்பாலணைந்து நிகழ்ந்ததை விண்ணப்பித்தார்கள் பிள்ளையார் அடியவர்களை நோக்கி 'நம்மைத் தடுத்த பிழைக்கு அதுவே பிராயசித்தம்; நீங்கள் சிவநாம சங்கீர்த்தனஞ் செய்யுங்கள்' என்றார். அவர்கள் அப்படியே அண்டமும் அதிரச் சிவநாம முழக்கஞ்செய்தார்கள். மருண்டு ஓடிய புத்தர்கள் 'இது வஞ்சனையோ; அல்லது அவர்கள் சமய உண்மையோ' என்று ஐயமுற்று மீண்டுஞ் சாரிபுத்தனைத் தலைவனாகக் கொண்டு வந்து 'எங்களோடு மந்திரவாதமின்றித் தருக்கவாதம் பேச வாருங்கள்' என்று சம்பந்தப் பெருமானையும், அவர் அடியவர்களையும் கேட்டார்கள் அதுகேட்ட ஆளுடையபிள்ளையார் சிவிகையினின்றும் இறங்கி ஒரு மண்டபத்திலே வீற்றிருந்துகொண்டு, புத்தர்களை அழைத்து வரும்படி அடியவர்களை ஆஞ்ஞாபித்தார். அவ்வன்பர்கள் பிள்ளையார் ஆஞ்ஞையைச் சிரமேற்கொண்டு புத்தர்களை அழைத்துக்கொண்டு வந்தார்கள் புத்தர்களுக்குத் தலைவனாகிய சாரிபுத்தன் பிள்ளையாருக்குச் சமீபத்திலே நின்றான். அப்பொழுது புத்தநந்தியின் தலையைத் துகளாகச்செய்த சிவநேயர் அவனோடு வாதஞ்செய்து புத்தமதத்தின புன்மையையும், சைவசமயத்தின் மேன்மையையுமவிளக்கி வெற்றியடைந்து, திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகளை வணங்கினார். தோல்வியடைந்த புத்தர்கள் புந்திதெளிந்து புகலிவேந்தராகிய பிள்ளையாரைப் பணிந்து விபூதியணிந்து சைவராயினார்கள்.

திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள் புத்தர்களுக்கு அருள்செய்து, திருக்கடவூரையடைந்து, சுவாமிதரிசனஞ்செய்து, அங்கே சிலநாளிருந்து, பிறகு திருநாவுக்கரசுசுவாமிகள் திருப்பூந்துருத்தியில் எழுந்தருளியிருத்தலைக் கேள்வியுற்று, அவரைக்காணவேண்டிப் புறப்பட்டுப்போய், திருப்பூந்துருத்தியைச் சமீபித்தார். பிள்ளையார் வருகையைக்கேட்ட அப்பர்சுவாமிகள் அவரை எதிர்கொள்ளப் புறப்பட்டு, அவர் வரும் எல்லையையடைந்து, அவரைச்சூழ்ந்து வரும் திருக்கூட்டத்திலே தம்மை யொருவரும் அறியாதபடி நுழைந்து சுவாமிகள் முத்துச்சிவிகையைத் தாங்குபவர்களோடு தாமும் ஒருவராய்த் தாங்கிக்கொண்டு வந்தார் ஆளுடையபிள்ளையார் திருப்பூந்துருத்தியை நெருங்கினதும் 'அப்பர் எங்குற்றார்' என்றுகேட்டார் அது கேட்ட வாகீசர் 'அடியேன் தேவரீர் திருவடிகளைத் தாங்கிவரும் பெருவாழ்வைப்பெற்று இங்குற்றேன்' என்ன; உடனே ஞானசம்பந்தப்பெருமான் உள்ளத்திலே மிகு பதப்பெய்திச் சிவிகையை விட்டிறங்கித் திருநாவுக்கரசரைத் தொழுதார். அதற்குமுன் அப்பர்சுவாமிகள் ஆளுடையபிள்ளையாரை வணங்கினார். அதைக்கண்ணுற்ற அடியவர்களெல்லாம் அன்பர்பெருமான்களாம் இருவரையும் பணிந்து ஆனந்தவாரிதியிற்றோய்ந்தார்கள். பிறகு புகலிப்பெருமானும், அப்பர்சுவாமிகளும் திருப்பூந்துருத்தியை யடைந்து திருக்கோயிலுக்குச் சென்று, சுவாமிதரிசனஞ்செய்து கொண்டிருந்தார்கள். அப்பொழுது திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள் தாம் சமணர்களிடம் வாதஞ்செய்து வென்றதையும், வழுதியின் கூனை நிமிர்த்தியதையும், விபூதியின் மேன்மையை யோங்கச்செய்ததையும், மங்கையர்க்கரசியார், குலச்சி

றையார் இவர்களுடைய பெருமைகளையும் அப்பெரம்பெருமானுர்க்குச் சொற்ருர் அப்பரும் தாம் தொண்டைநாட்டிற்குச்சென்று திருத்தலங்க ளைத் தரிசித்ததைப் பிள்ளையாருக்குச் சொல்லி, அவரிடம் விடைபெற்றுப் பாண்டியநாட்டிற்குப் புறப்பட்டார். பிள்ளையார் காவேரிக்கு வடகரையிற் போய், திருநெய்த்தானம், திருவையாறு, திருப்பழனம் முதலிய திருப்பதி களைத் தரிசித்துக்கொண்டு சீர்காழியைச் சோந்து, திருக்கோயிலுக்குச் சென்று 'உற்றுமை சேர்வது மெய்யினையே' என்னுந் திருப்பதிகம்பாடித் தந்தையாரோடு திருமாளிகைக்கு எழுந்தருளி அங்கேயிருந்தார்.

சிலநாள் சென்றபிறகு திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள் தொண்டை நாட்டிலுள்ள திருத்தலங்களைத் தரிசிககப்புறப்பட்டார் அப்பொழுது சிவ பாதவிருதயரும் பிள்ளையாருடன் செலலததுணிந்தார். சுவாமிகள அவரை நோக்கி 'நீர் இங்குஇருந்தே யாகஞ்செய்து தோணியப்பரைத் தரிசித்துக் கொண்டிரும்' எனறு சொல்லித தடுததுச் சிதம்பரம், திருத்தினைநகா, திருமாணிகுழி, திருப்பாதிரிப்புலியூர், திருவடுகூர், திருவக்கரை, திருவிரும பைமாகாளம், திருவதிகை, திருவாமாததூர், திருககோவலூர், திருவறை யணிநலலூர், திருவண்ணுமலை முதலிய திருப்பதிகளைத் தரிசித்துக் கொண்டு, தொணடைமணடலததை யடைந்து, திருவோததூர் என்னுந திருத்தலத்துக்குப்போய்ச் சுவாமி தரிசனஞ்செய்து கொண்டிருந்தாா. அந்நாளில் ஒருவர் பிள்ளையாரிடமவந்து வணங்கி 'சுவாமீ! சிவபெருமா னுக்கு அடியேன வளாதத பனைகளெல்லாம் ஆகாயமுற வளர்ந்தும் ஆண்ப னைகளாய்க காயாதொழிந்தன' அதுகண்ட சமணாகள் அடியேனை நோக்கி 'நீர்வைத்துவளாக்கும் ஆண்பனைகளெல்லாவற்றையும் காய்க்கும்படி செய்ய இயலுமோ' என்று எனறும் இழிவாககூறி நகைசெய்கின்ருர்கள் 'தேவ ரீர் கிருபைசெய்தருளும்' என்று வேண்டிநின்ருர். அதுகேட்ட பிள்ளையார் திருக்கோயிலுள்ளே நுழைந்து பரசிவப்பிரபுவைப் பணிநது, 'பூததேர்ந் தாயன' என்னுந்திருப்பதிகததைப் பாடித் திருககடைககாப்பிலே 'குரு மபை யாணபனை யீன்குலை யோததூா' என்று அருளிசசெய்தபடியால அவவாணபனைகளெல்லாம் பெணபனைகளாயின அதைககண்டவர்கள் ஆசசரிய மடைந்தாாகள் ஆளுடையபிள்ளையார் ஆண்பனைகளெல்லாம் காய்க்கும்படி அன்பருக்கு அருள்செய்தாா வஞ்சமே குடிகொண்ட நெஞ் சினர்களாகிய சமணாகளிற்பலா அவவூரைவிட்டு ஓடிப்போனாாகள்; சிலா உணமை உணாநது சைவாகளானார்கள பிள்ளையார் திருவாககாற் பாடப் பெற்றமையால அப்பனைகள் தததஙகாலங்களைக் கழித்துப் பிறவியையொ ழிததுச சிவலோகமடைநதன.

திருஞானசம்பநத சுவாமிகள் சிலநாள் திருவோத்தூரிலே யிருந்து பிறகு அததிருததலத்தினின்றும் திருமாகறல, திருககுரஙகணின்முட்டம் என்னுந திருப்பதிகளுக்குச் சென்று, சுவாமிதரிசனஞ்செய்து, காஞ்சீபு ரததை யடைநது, திருவேகம்பம், திருக்கச்சிநெறிகாரைககாடு, திருவனேக தங்காவதம், திருககசசிமேற்றளி முதலியதலஙகளைத் தரிசிதது, பாலாற்றின் தென்கரையேபோயத் திருமாற்பேறு என்னும் க்ஷேததிரததைத தொழுது பதிகமபாடி, திருவல்லம், திருவிலம்பயஙகோட்டூர், திருவிற்கோலம், திரு வூறல் முதலிய தலஙகளைத தரிசித்துககொணடு, திருவாலங்காட்டைச் சமீபிததார். அது காரைககாலம்மையாா திருத்தலையாலே நடநது பெரு மானைப் பணிநத திருததலமாதலால், அதை மிதித்தற்கு அஞ்சி, அதற்கு அருகேயுள்ள ஒருவூரிலே அன்றிரவு தங்கினார். அதுகாலை ஆலங்காட்டுப் பெருமான் பிள்ளையாருககுக் கனவிலே தோன்றி 'நம்மைப்பாட மறந்

தனையோ' என்று திருவாய்மலர்ந்தருளினார். உடனே பாலருவாயர் விழித்து எழுந்து இரததினசபாபதியைச் சிந்தித்து 'துஞ்ச வருவாரும்' என்னுந் திருப்பதிகத்தை அருளிச்செய்தார். பொழுது விடிந்ததும் தம்மைத் தொழவந்த திருக்கூட்டததாருக்கு இரவு நிகழ்ந்ததைச் சொல்லித் திருப் பாசூர், திருவெண்பாக்கம், திருக்காரிகரை முதலிய திருப்பதிகளைத் தரிசிதது, திருககாளத்தியைச் சமீபித்துத் தம்மை யெதிர்கொண்ட அடியவர் களைநோக்கி 'இம்மலைகளில் காளத்திமலை யெது' என்றுகேட்டார். அவர்கள் 'சைவசிகாமணியே! இதோ தோன்றுகிற மலையே காளததிமலையாகும்' என்றார்கள். அதுகேட்டபிள்ளையார் 'வானவர்கள் தானவர்கள்' என்னுந் திருப்பதிகத்தைப்பாடி, அதிலே கண்ணப்பநாயனார் திருததொண்டைச் சிறப்பிதது, மலைமேலேறிச சுவாமிதரிசனஞ்செய்து, பிறகு அன்பே யுருவாகக்கொண்ட வேடர்பெருமானாகிய கணணப்பதேவரைத தரிசித்துக கண்களில் ஆனந்த அருவிசொரியத்தொழுது, மலையைவிட்டு இழிநது, திருத்தொணடர்கள் காட்டிய ஒரு திருமடததிலே தங்கிக் காலந்தோறும் காளத்தி நாதரைத் தரிசிததுககொணடிருந்தார் இருக்குநாளில தமிழ் மொழி வழஙகாத வடதிசையிலும், மேற்றிசையிலும் உள்ள உத்தர கைலாசம், திருககேதாரம், திருக்கோகர்ணம, திருப்பருப்பதம், இந்திரநீலபருப்பதம முதலிய க்ஷேத்திரஙகளைத் திருக்காளததியிலிருந்து கொண்டே வணஙகித திருப்பதிகஙகள் பாடினார் சிலநாள் சென்றபின திருக்காளத்தியை விடுதது நீஙகித் திருவேற்காடு, திருவலிதாயம முதலிய திருப்பதிகளைத தரிசிததுத் திருவொற்றியூரை யடைநது, சுவாமிதரிசனஞ் செய்துகொண்டிருநதார். (நிற்க).

திருமயிலாப்பூரிலே, வைசியர்குலத்திலே, சிவபத்தி சிவனடியார் பத்திகளிற் சிறந்தவரும், செல்வத்திற் குபேரனை யொததவரும் ஆகிய சிவநேசர் எனபவர் ஒருவரிருந்தார் அவர் திருஞானசம்பநத சுவாமிகள் திருப்புகழைக கேள்வியுற்று அவர்பால் பேரனபுடையவரானா. அவருக்குப் புததிரப்பேறு இல்லாமையால் அவர் சிவபூசை மாகேஸ்வரபூசை செய்தார். அதனால் அவருக்கு ஒருபெண்மகவு பிறந்தது அக்குழந்தை மகாலட்சுமிபோல் இருந்தபடியால் அதற்குச செட்டியாா பூம்பாவையென்னும் பெயரிட்டாா. அப் பூமபாவை பெதும்பைப்பருவம் அடைந்தபின், அவள் குணப்பெருமைக நோக்கண்டு மகிழ்வெய்தி 'எனபுததிரியைக் கலியாணஞ்செய்து கொள்கின்றவன் எவனோ, அவனே என் அருநிதிககு உரியவன்' என்றார். அதுகாலை ஆளுடையபிள்ளையார் பாண்டியநாட்டிற்கெழுநதருளி நிகழ்த்திய அருட்செய்கைகளைச சிலாவநது சிவநேசருககுச் சொனனார்கள் அதுகேட்டுச சிவநேசா எலலையிலலா ஆனந்தமடைநது, அவர்களுககுக் கணக்கில்லாத திரவியஙகளைக் கொடுத்து, திருஞானசமபநதமூர்த்திகளைத திசைநோக்கித் தொழுது, பநதுக்களெலலாருங கேட்கும்படி 'என்புத்திரியாகிய பூம்பாவையையும், திரவியஙகளையும், பிறவற்றையும, என்னையும பிள்ளையாருககுக கொடுததேன்' என்று சொல்லி ஆனந்தக்கடலில் ஆழ்நதனா ஒருநாள் பூம்பாவை நந்தவனத்திற்குசசென்று பூக்கொய்யும்போது, ஒரு சாப்பம் மல்லிகைப்பந்தரிலே மறைந்து வநது, அவளைக்கடிததது. பூம்பாவை மயஙகிக் கொடிபோல் மெலிந்து கீழே சாய்ந்தாள். அருகிருநத சேடியர்கள் அவளைத தாஙகிக்கொண்டு போய்க் கன்னிமாடத்திலே வைததார்கள். விஷவைததியர்கள் ஔஷதஙகளைக் கொடுத்தார்கள். மநதிரவாதிகள் மந்திரஙகளைத் தனித்தனியே செய்தார்கள். அவைகள் சிறிதும் பயன்படவில்லை. விஷம் தலைக்கொள்ள உயிர்நீஙகிய குறிகள் தோன்றின. அதுகணட சிவநேசரும்

சுற்றத்தவர்களும் துக்கசாகரத்தி லாழ்ந்தார்கள். சிவநேசர் ஒருவாறு சிறிது தெளிவடைந்து 'இவ்விஷத்தை ஒழிப்பவர்களுக்கு எண்ணிறந்த திரவியங்களை அளிப்பேன்' என்று பறைசாற்றுவித்தார். மூன்று நாளளவும் அரசரிடத்துள்ள மந்திரவாதிகள் முதலியோர் வந்து தங்கள் வித்தைகளாலும், ஔடதங்களாலும் விஷத்தை நீக்க முயன்றார்கள். முயன்றும் விஷம் நீங்காமைகண்டு திரும்பிவிட்டார்கள். அதுகண்ட சிவநேசர் 'இப்பூம்பாவையைத் திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகளுக்கென்று சொல்லியபடியால் நான் வருத்தப்பட வேண்டியதில்லை' என்று துணிந்து, கௌணியர் பெருமான் வருமளவும் 'இத்தேகத்தைத் தகனஞ்செய்து எலும்பையும், சாம்பரையுஞ்சேமித்து வைப்பேன்' என்று மயக்கநீங்கி நினைத்தபடி உடலைத் தகனஞ்செய்து எலும்பையும், சாம்பரையும் குடத்திலேஇட்டு, முன்போல் கன்னிமாடத்திலே வஸ்திரமுதலியன அணிந்து பஞ்சணைமேல் வைத்து, நாள்தோறும் மாலை, சந்தனம், அன்னம் முதலியன அமைத்து வந்தார். இப்படிச் சிவநேசச்செட்டியார் ஒழுகிவருநாளில சிலர் அவரிடம் அணைந்து 'ஆளுடையபிள்ளையார திருவொற்றியூரிலே எழுந்தருளியிருக்கின்றார்' என்று சொன்னார்கள் அதுகேட்டுச் செட்டியார் ஆனந்தமடைந்து, அவர்களுக்கு வஸ்திரம் பொன்முதலியன அளித்துத் திருமயிலாப்பூரிலிருந்து திருவொற்றியூர்வரைக்கும் நடைப்பந்தல் இட்டு, வாழைகளையும், கமுகுகளையும் நாட்டிச் சிறப்பாக அலங்கரித்துப் பிள்ளையாரை வணங்கச் சிவனடியார்களோடு புறப்பட்டார். அதுகாலை முத்தமிழ்விரகரும் திருவொற்றியூரை நீங்கித் திருமயிலையைத தரிசிக்க விரும்பி எழுந்தருளிவந்தார். திருத்தொண்டர்களோடு திருஞானசம்பந்தவள்ளலார் முத்துச்சிவிகையில் எழுந்தருளிவருதலைத் தூரத்திலே கண்ட சிவநேசரும், மற்றச் சிவநேசர்களும் பேரானந்தமுற்றுக் கீழே விழுந்து வணங்கினார்கள். பாலறாவாயர் முத்துச்சிவிகைவிட்டிறங்கி அவர்கள எதிரே தொழுது கொண்டேசென்று அவர்களோடு கலந்தார் அப்பொழுது அடியவர்கள் சிவநேசச்செட்டியாருடைய சமாச்சாரங்களையெல்லாம் பிள்ளையாருக்குச சொன்னார்கள் அதைககேட்ட பிள்ளையார் திருமயிலையம்பதியை யடைந்தார்.

திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் சிவநேசர் எண்ணத்தை நிறைவேற்றிப புறச்சமயங்களை யொழிததற்குத் திருவுளங்கொண்டு கபாலீச்சுரம என்னுந் திருக்கோயிலுட் சென்று சுவாமி தரிசனஞ்செய்து, திருக்கோயிற் புறத்தே அணைநது, சிவநேசச்செட்டியாரைத திருநோக்கஞ்செய்து 'உம்முடைய புததிரியின் அஸ்தியை நிறைதது வைததிருக்கும் குடத்தைக் கொண்டு வாரும்' என்று ஆஞ்ஞாபித்தார் உடனே சிவநேசர் பேரானந்தமடைந்து, கன்னிமாடத்திற்குபபோய், என்புநிறைந்த குடததை இரததினச்சிவிகையில வைதது அலஙகாரததோடு கொணடுவந்து சிவலிஙகபபெருமான் அபிமுகததிலே சேர்ததார் திருமயிலாப்பூர் வாசிகளும், பிறவூர் வாசிகளும், சமணாகளும், பிறரும் அஙகேவந்து சூழ்ந்துகொண்டார்கள். வானவர்கள் ஆகாயத்திலே நிறைந்தார்கள். எல்லாமவல்ல பரசமயகோளரியாம் பெருமான் திருக்கோபுரவாயிலின் நேரேவநது என்புக்குடத்தைக் கண்டு திருவருளைச் சிந்தித்து, 'இம்மாநிலத்தில் இறந்தவர்கள் எலும்பைப் பின்னும் நன்னெறிப்படுததிட அநநன்மையாந தன்மை அவ்வெலும்போடு தொடர்சசியாம்' என்று அருள்நோக்கால் 'பூம்பாவாய்! மண்ணினிற்பிறந்தவர்கள் மதியணிந்த மாதேவன் அடியவர்களைத் திருவமுது செய்வித்தலும், அவாகளுடைய திருவிழாக்களின பொலிவைககண்டு ஆனந்தமடைதலுமே உண்மையாயின் உலகர்முன் வரக்கடவாய்' என்று, 'மட்டிட்ட' என்னுந்

திருப்பதிகத்தை யெடுத்தருளினார். அதிலே அருளிச்செய்த 'போதியோ பூம்பாவாய்' என்னும் அருளுரைதவொலி அத்தியில் பொருந்தியமாத்திரம் அது குடத்துள்ளே உருவமாய்ப் பரிணமித்தது அங்ஙனம் பரிணமித்த முறைமையில பதிகவோசை மேலும் மேலும் பொருந்த பூம்பாவை, நீங்கிய பிராணவாயுவும், வடிவமும அழகோடு குடத்திலே நிரம்பப்பெற்றுச் சுவாமிகள திருவாக்கில் 'உரிஞ்சாயவாழ்க்கை' என்னுந் திருப்பாட்டு வெளிவந்ததும் குடத்தை உடைததுககொணடு வெளியே வந்தாள் பிள்ளையார் தமது முதற்றிருப்பாட்டிலே வடிவும், மற்ற எட்டுத்திருப்பாக்களிலே பன்னிரணடு வயசும பெற்று, சமணபாட்டாகிய பததாந் திருப்பாட்டிலே பூம்பாவையாக வெளிவநததைககண்டு திருக்கடைக்காப்புச் சாததினார் அவ்வற்புததததைககணட அடியவாகள் 'ஹர ஹர மகாதேவ' என்று சிவநாம சங்கீர்த்தனஞ்செயது பேரானநதமுற்று மெய்ம்மறந்து ஆனந்தக்கூத்தாடினார்கள் அமரர்கள் அலர்மாரி சொரிநதார்கள். சமணர்கள் தள்ளாடினார்கள் அழகே யோருருக்கொண்டாற்போல விளங்கும பூம்பாவையாரைப் பாாதத சிவநேசா பெருமகிழ்வெய்திப் பிள்ளையாரைப் பணிந்தார் பூம்பாவையமமையார் புரமெரிதத சிவபெருமானை முன்தொழுது பின் திருஞானசமபநதமூாததிகளை வணஙகி நினறாா. அப்பொழுது ஆளுடைய பிள்ளையாா சிவநேசரை நோக்கி 'உமது புத்திரியை யழைத்துக்கொண்டு வீட்டிற்குசசெலலும' என்றாா. சிவநேசர் பிளளையாரைத்தொழுது 'சுவாமி! எனனருமைப் புதலவியைத தேவரீா திருமணஞ்செய்தருளல வேண்டும்' எனறு பிராாததித்தார் அதுகேட்டு ஆளுடையபிள்ளையார் சிவநேசரை நோககி 'நீா பெற்றபெண் விஷததால் இறந்தனள்; பின்பு திருவருள் மகிமையை விளககும்பொருட்டு உதிப்பிததமையால் உம் உரை தகாது' என்று மறுத்தார் சிவநேசரும், அவர் சுற்றத்தவர்களும் பிள்ளையாரை வணஙகி மயஙகி நின்றார்கள் பிள்ளையார் அவர்களுக்கு வேத சிவாகமங்களின் உண்மைகளைப் போதிததுத் தேற்ற அவர்கள துயரொழிநது தெளிவடைந்தார்கள பிறகு பிளளையாா ஆலயததிற்குள்ளே எழுந்தருளினார் சிவநேசா 'பூம்பாவையை வேறொருவருககும் விவாகஞ்செயது கொடுப்பதில்லை' எனறு உறுதிகொண்டு, முன்போல் கன்னிமாடத்திலேயே வைத்தாா அமமையார் சிவபெருமான் சேவடியடைநதார்

திருஞானசம்பந்தமூாததி சுவாமிகள் திருமயிலாப்பூரிலே சிலநாள் தஙகியிருநது, பிறகு சிவநேசாமுதலிய அன்பாகளுக்கு விடைகொடுததுத் திருததொணடாகள தமமைச சூழ்நதுவர, வெற்றிச்சின்னஙகள் முழஙக, முததுச சிவிகையிலேறிக்கொணடு போயத் திருவான்மியூர், திருவிடைச்சுரம, திருககழுககுன்றம, திருவசசிறுபாககம், திருவரசிலி, திருப்புறவாாயஙகாட்டூா முதலிய திருபபதிகளைத தரிசிததுக்கொண்டு, சிதமபரத்தையடைநது, காலநதோறும் சபாநாயகரைததரிசிததுக கொண்டு, அஙகே எழுநதருளியிருநதாா இருக்குநாளில சுவாமிகள் சிதம்பரததில் எழுந்தருளியிருததலைக் கேள்வியுறறுச சிவபாதவிருதயரும், மற்றைய அநதணர்களும் சீகாழியினின்றும சிதம்பரததிறகு வநதாாகள். சம்பந்தசுவாமிகள் அவர்களோடு சபாநாயகரை வணஙகி அருள்பெற்றுச் சீகாழி நோக்கிப் புறப்பட்டார் பிளளையாா பல திருபபதிகளைக கடந்தருளிப்போகும்பொழுது சீகாழிப்பதி தூரததிலே தோனறியது. உடனே பாலறாவாயர் சிவிகைவிட்டிறஙகி 'வணடாா குழலரிவை' எனனுந திருப்பதிகத்தை யருளிச்செய்து கோபுரவாயிலையடைந்து, 'நலஙகொள்காழி சேர்மினே' என்று முடிந்த திருப்பாககளையுடைய 'நம்பொருள் நம்மக்களென்று' என்னுந்திருப்பதிகத்

தைப் பாடிக்கொண்டே சீகாழிப்பதியினுள்ளே நுழைந்து, திருக்கோயிலை யடைந்து, சுவாமிதரிசனஞ்செய்து, திருமாளிகை சேர்ந்து, காலந்தோறும் தோணியப்பரைத் தொழுது கொண்டிருந்தார் அந்நாளில் முருகநாயனார் திருநீலநக்கநாயனார் முதலிய திருத்தொண்டர்கள் தங்கள் தங்கள் சுற்றத்தவர்களோடு சீகாழியைச் சேர்ந்து, திருஞானசம்பந்த மூர்த்திசுவாமிகளை வணங்கிப் பேரானந்தமுற்று அவருடனிருந்தார்கள்.

சிவபாதவிருதயரும், சுற்றத்தவர்களும் ஒருங்குசேர்ந்து 'ஆளுடைய பிள்ளையார் திருமணஞ்செய்தற்குரிய பருவம் இதுவே' என்று யோசித்து, சுவாமிகள்பாலணைந்து 'சுவாமீ! தேவரீர் ஒரு கன்னியை மணம்புரிதல் வேண்டும்' என்று வேண்டி நின்றார்கள். பிள்ளையார் பிராமணர்களை நோக்கி "எமக்குக் கல்யாணம் வேண்டியதில்லை' என்று மறுத்தருளினார். அது கேட்ட அந்தணர்கள் பிள்ளையாரைத் தொழுது 'தேவரீர் வைதிகநெறியை வளர்க்கவந்தீர்; அவ்வைதிகத்தின்படி திருமணஞ்செய்யத் திருவுள்ளங் கொண்டருளும்' என்று பிரார்த்தித்தார்கள் அதற்குப் பிள்ளையார் வேத நெறி தழைக்கும்பொருட்டு இசைந்தருளினார். அதுகண்ட சிவபாதவிருதயரும், மற்றைய வேதியர்களும் 'இது பரமசிவன் திருவருள்' என்று மகிழ்வெய்தி 'திருநல்லூரிலுள்ள நம்பாண்டார் நம்பிகளுடைய புத்திரியே பிள்ளையாருக்குகந்த மனைவியாதற்குத் தகுதியுடையவள்' என்று யோசித்துத் திருநல்லூரை நோக்கிச் சென்றார்கள் அவர்கள் வருதலைக் கேள்வியுற்ற நம்பாண்டார் நம்பிகள் அவர்களை எதிர்கொண்டு தம்மில்லத்திற்கு அழைத்துக் கொண்டுபோய் உபசரித்து நல்வரவைவிசாரித்தார்கள் அப்பொழுது சிவபாதவிருதயர் 'நாங்கள் திருஞானசம்பந்தப்பிள்ளையாருக்கு உம்முடைய புத்திரியை மணம்பேச வந்தோம்' என்றார். அதுகேட்டு நம்பாண்டார் நம்பி பேரானந்தமடைந்து சிவபாதவிருதயரை நோக்கி 'உம்முடைய பெருந்தவத்தினாலே திருவவதாரஞ்செய்து, உமாதேவியாருடைய திருமுலைப்பாலையுண்டருளிய பிள்ளையாருக்கு, யானும், என்குலமும் உய்யும் பொருட்டு என் புத்திரியைக் கொடுக்கின்றேன்' என்று உடன்பட்டார் சிவபாதவிருதயரும்,மற்றவர்களும் நம்பாண்டார் நம்பிகளிடம் விடைபெற்றுச்சீகாழியை யடைந்து, பாலறாவாயருக்குச் சமாசசாரத்தைத் தெரிவித்து, முகூர்த்தநாள் நிச்சயித்து, எங்கும் திருமண ஓலை யனுப்பிச் சீகாழியை யலங்கரித்தார்கள் நம்பாண்டார் நம்பிகளும் கல்யாணத்திற்குச் செய்யவேண்டியவைகளை விரைவாகச்செய்து முடித்தார்கள்.

திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் திருக்கல்யாணத் திருநாளுக்கு முன்னாளில் சமாவர்த்தனம் பண்ணி, அந்தணர்களால் காப்புநாண் அணியப்பெற்று, அடுத்தநாள் சூரியோதயகாலத்தில் நித்தியகருமங்களை முடித்துத் தோணியப்பரை வணங்கி, முத்துச்சிவிகையின்மேலேறி அடியவர்களும், சுற்றத்தவர்களும், மற்றவர்களும் சூழ, முத்துச்சின்னங்கள் முழக்க, வாத்தியங்கள் ஒலிக்க, ஸ்ரீபஞ்சாட்சரத்தை ஓதிக்கொண்டு சென்று, எதிர்கொண்டு வணங்கிய அன்பர்களோடு திருநல்லூரையடைந்து, பெருமணம் என்னுங் கோயிலினுள்ளே நுழைந்து' சுவாமிதரிசனஞ்செய்து கொண்டிருந்தார். அப்பொழுது அந்தணர்கள் சுவாமிகளை நோக்கி 'தேவரீர் திருமணக்கோலங்கொள்ளல்வேண்டும்' என்று வேண்டினார்கள். அவர்கள் வேண்டுகோளுக்கிரங்கிய முத்தமிழ்விரகர் திருக்கோயிலின் புறத்தேயுள்ள ஒரு திருமடத்தினுள்ளே புகுந்தருளினார். அதுகண்ட சிவவேதியர்கள் வாசனைத்திரவியங் கலந்த நீரால் பிள்ளையாருக்குத் திருமஞ்சனஞ்செய்து, அவரை விலைமதித்தற்கரிய முத்தாபரணங்களாலும், இரத்தினாபரணங்களாலும் அலங்கரித்தார்கள்

உலகத்தவர் நிமித்தமாக இலௌகிக பூடணங்களைத் தரித்த திருஞானசம்பந்தமுனீஸ்வரர் வைதிக சைவபூடணங்களாகிய விபூதி ருத்திராக்கங்களைத் தாமே தமது அருமைத்திருக்கரத்தால் எடுத்துத் தரித்துக்கொண்டார். பிறகு பிள்ளையார் முத்துச்சிவிகையிலேறிப் பல வாத்தியங்கள் முழக்கங் கடல்போலொலிக்க, முனிவர்குழாங்களும், இலௌகிகர்களும், வைதிகர்களும், சிவநேயர்களும் நெருங்கிவர, முத்துச்சின்னங்கள் 'முத்தமிழ்விரகர் வந்தார்; பாலறாவாயர் வந்தார்; பரசமயகோளரி வந்தார்' என்று தமது ஆயிர நாமங்களை முழக்க எழுந்தருளிவந்து, பூம்பந்தரையடைந்து, சிவிகைவிட்டிறங்கி, திருக்கல்யாணமண்டபத்தைச் சேர்ந்து, ஒரு பொன்பீடத்திலே இருந்தார். அதுகாலை நம்பாண்டார்நம்பிகளும், அவர்மனைவியாரும் பசும்பாலோடு நீருங்கொண்டுவந்து பிள்ளையாரைச் சிவபிரானாகப் பாவித்து, அவருடைய திருவடிகளை விளக்கி, அந்நீரைத் தாங்கள் தெளித்துக்கொண்டதுமல்லாமல் சுற்றத்தவர்கள் மேலும் தெளித்து ஆனந்தப் பரவசமடைந்தார்கள். பின்பு நம்பாண்டார் நம்பிகள் பிள்ளையார் திருக்கரத்திலே நீர்வார்த்து 'என்புத்திரியைப் பிள்ளையாருக்குக் கொடுத்தேன்' என்று சொன்னார். உடனே நல்முகூர்த்த காலம்வர, பெற்றோரும், பிறரும் பொன்னாபரணங்களால் அலங்கரிக்கப்பெற்ற கல்யாணப்பெண்ணை அழைத்துக்கொண்டுவந்து ஆளுடையபிள்ளையாரது வலப்பக்கத்திலே இருக்கும்படி செய்தார்கள். அவ்விருவர்களையும் தரிசித்த மானுடர்களுங் கண்ணிமையாத் தேவர்களாயினார்கள். திருநீலநக்கநாயனார் வேதவிதிப்படி சடங்குகளைச்செய்து, பொரியை அக்கினியிலேயிட்டுச் சிவபெருமானைத் துதித்துக்கொண்டிருந்தார். திருஞானசம்பந்த சுவாமிகள் அக்கினியை வலம்வரவேண்டி அம்மையார் திருக்கரத்தைப்பற்றித் தீயை வலம்வரும்போது 'அக்கினியாவார் சிவபெருமானே' என்று நினைத்துத் திருப்பெருமணத் திருக்கோயிலுக்கேகவேண்டும் என்னுந் திருவுள்ள முடையவராய் 'எனக்கு இவ்விலவொழுக்கும் வந்து சேர்ந்ததே; இவளோடு நான் இறைவனடி சேர்வேன்' என்று திருவுள்ளங்கொண்டு சுற்றத்தவர்களோடும், தொண்டர்களோடும் திருக்கோயிலையடைந்து 'எம்பெருமானே! தேவரீருடைய திருவடிநீழலை யடைதற்கு இதுவே சமயம்' என்று 'கல்லூர்ப்பெருமணம்' என்னுந் திருவருட்பதிகத்தைத் திருவாய்மலர்ந்தருளினார். அதுகாலை அருட்பிரகாச வள்ளலாராகிய சிவபெருமான் திருஞானசம்பந்தமூர்த்திகளை நோக்கி 'நீயும், உன்மனைவியும், உன் கலியாணத்தைக்கண்டு புனிதர்களாகிய புண்ணியர்களும், ஆசையறுத்த அடியவர்களும், பிறரும் இச்சோதியினுள்ளே வந்து எம்மைச்சேருங்கள்' என்று திருவாய் மலர்ந்து, திருக்கோயிலுட்பட எங்கும் பரஞ்சோதி வடிவமாகி, அச்சோதிக்குள் ஒரு திருவாயிலை வகுத்துக் காட்டியருளினார். அதுகண்ட ஆளுடையபிள்ளையார் யாவரையுஞ் சிவஞானநெறியிற் சேர்க்கும் உண்மையுடையது 'நமச்சிவாய' என்னும் மகாமந்திரமே என்னுங் கருத்துத்தோன்ற 'காதலாகிக் கசிந்து' என்னுந் திருவருட்பதிகத்தை வானத்திற்குங் கேட்கும்படி அருளிச்செய்து 'என்கல்யாணத்தைக் காண வந்த நீங்கள் எல்லீரும் உங்கள் பிறவிநோய் நீங்க இச்சோதியுள் புகுங்கள்' என்று அருளிச்செய்தார். பிள்ளையார் திருமணத்தைத் தரிசித்துப் பாசமொழித்த பெரியோர்களும், திருநீலநக்கநாயனார், முருகநாயனார், சிவபாதவிருதயர், நம்பாண்டார் நம்பிகள், திருநீலகண்ட யாழ்ப்பாணநாயனார் முதலிய திருத்தொண்டர்களும், அவரவர்களுடைய பத்தினிமார்களும், சுற்றத்தவர்களும் முத்தமிழ்விரகர் முத்துச்சிவிகை முதலியவற்றைத் தாங்கிச் சென்றவர்களும், மற்றப் பரிசனமாக்களும், அறுவகைச் சமயத்தவர்களும், முனிவர்களும், வைதிகர்களும், சைவசமயத்தவர்களும் மற்றப் புண்ணிய

சிலர்களும் அந்தச் சிவசோதியிலே நுழைந்தார்கள். திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் தமது காதலியைக் கைப்பற்றிக்கொண்டு திருச்சோதியை வலஞ் செய்து அதனுள்ளே பிரவேசித்துச் சிவத்தோடு இரண்டறக்கலந்தார். பிறகு அப்பெருஞ்சோதி மறையப் பழயபடி திருப்பெருமணத் திருக்கோயிலே தோன்றிற்று. சிவபதமடைதலாகிய அப்பெரும்பேற்றை யடையும் புண்ணியங் கைவரப்பெறாதவர்கள் மனக்கவலை கொண்டார்கள். கௌணியர்பெருமான் சிவமாதலைத் தூரத்தேகண்டு நணுகப்பெறாத நாராயணனும், நான்முகனும், தேவர்களும், முனிவர்களும் தங்கள் கவலை நீங்கத் துதிசெய்தார்கள்.



# ஏயர்கோன்கலிக்காமநாயனார் புராணம்.



நீடு வண்புகழ்ச் சோழர்நீர் நாட்டிடை நிலவு
மாடு பொன்கொழி காவிரி வடகரைக் கீழ்பால்
ஆடு பூங்கொடி மாடநீ டியவணி நகர்தான்
பீடு தங்கிய திருப்பெரு மங்கலப் பெயர்த்தால். (௧)

இஞ்சி சூழ்வன வெந்திரப் பந்திசூழ் ஞாயின்
மஞ்சு சூழ்வன வரையென வுயர்மணி மாட
நஞ்சு சூழ்வன நயனியர் நளினமெல் லடிசெம்
பஞ்சு சூழ்வன காளையர் குஞ்சியின் பரப்பு. (௨)

விழவ றாதன விளங்கொளி மணிநெடு வீதி
முழவ றாதன மொய்குழ லியர்நட வரங்க
மழவ றாதன மங்கலம் பொலிமணி முன்றில்
உழவ றாதநல் வளத்தன வோங்கிருங் குடிகள். (௩)

நீரி னிற்பொலி சடைமுடி நெற்றிநாட் டத்துக்
காரி னிற்றிகழ் கண்டர்தங் காதலோர் குழுமிப்
பாரின் மிக்கதோர் பெருமையாற் பரமர்தாள் பரவுஞ்
சீரின் மிக்கது சிவபுரி யெனத்தகுஞ் சிறப்பால் (௪)

இன்ன வாழ்பதி யதனிடை யேயர்கோக் குடிதான்,
மன்னி நீடிய வளவர்சே னாபதிக் குடியாந

(௧) நீர்நாடு - சோழநாடு. (௨) எந்திரப்பந்திசூழ் ஞாயில் இஞ்சி சூழ்வன - எந்திரவரிசைகள் சூழ்ந்த மதிலுறுப்புகள் மதிலைச் சூழ்ந்திருக்கின்றன. மஞ்சு - மேகம். நஞ்சுசூழ்வன நயனியர் - விடம்பொருந்திய விழிகளையுடைய மாதர்களது. குஞ்சியின் - குடுமியின். ஊடியமகளிர்கள் தம்மைத்தொழும் காளையர்களை உதைத்தபோது, அவர்கள் காலும், அதிலூட்டிய செம்பஞ்சுக்குழம்பும் அக்காளையர்கள் குடுமியில் பொருந்தலின் "மெல்லடி செம்பஞ்சு[illegible]பரப்பு" என்றார். (௩) விழவு - திருவிழா. நடவரங்கம்-நாடகசாலை. மழவு - குழந்தைகள். (௪) காதலோர் - அன்பர்கள். (௫) சேனாபதி - தலைமை. வளவர் - சோழர்.

தொன்மை மேவிய நிகழ்ச்சியா னிறைவது, தூய
பொன்னி நாட்டுவே ளாண்மையி லுயர்ந்தபொற் பினதால். (௫)

அங்கண் மிக்கவக் குடியினி லவதரித் துள்ளார்
கங்கை வாழ்முடி யார்தொண்டர் கலிககாம ரென்பார்
தஙக ளுயக ரடிபணி வாரடிச் சார்ந்து
பொஙகு காதலி னவர்பணி போற்றுதல் புரிந்தார். (௬)

புதிய நாண்மதிச் சடைமுடி யார்திருப் புன்கூரக்
கதிக மாயின திருப்பணி யனேகமுஞ் செய்து
நிதிய மாவன நீறுகந் தார்கழ லென்று
துதியி னுற்பர விதொழு தின்புறு கின்றார். (௭)

நாவ லூர்மன்னர் நாதனைத் தூதுவிட் டதனுக்
கியாவ ரிசசெயல் புரிநதன ரென்றவ ரிழிபபத்
தேவர் தம்பிரா னவர்திறந் திருத்திய வதற்கு
மேவ வநதவச செயலினை விளம்புவா னுற்றேன் (௮)

வேறு

திருத்தொண்டத் தொகையருளித் திருநாவ லூராளி
கருத்தொன்று காதலினாற் கனகமதிற் றிருவாரூர்
ஒருத்தாகழன் முப்பொழுது முருகியுவன் பொடுபணிநது
பெருந்தெழுமெய் யன்பினாற் பிரியாதங் குறையுநாள் (௯)

தாளாண்மை யுழவுதொழிற் றன்மைவளந் தலைசிறந்த
வேளாளர் குண்டையூர்க் கிழவரெனு மேதக்கோர்
வாளார்வெண் மதியணிந்தார் மறையவனாய் வழக்கினில்வென்
றாளாகக் கொண்டவர்தா ளடைந்தன்பா லொழுதுவார் (௧0)

செந்நெல்லும் பொன்னன்ன செழும்பருப்புந தீஙகரும்பி
னின்னல்ல வமுதுமுத லெண்ணிலபெரும் பலவளஙகண்
மன்னியசீர் வன்றொண்டர்க் கமுதாக வழுவாமற்
பன்னெடுநாள் பரவையார் மாளிகைக்குப் படிசமைத்தார். (௧௧)

ஆனசெய லனபின்வரு மார்வத்தான் மகிழ்ந்தாற்ற
வானமுறை வழஙகாமன் மாநிலதது வளஞ்சுருஙகப்
போனகநெற் படிநிரம்ப வெடுப்பதற்குப் போதாமை
மானமழி கொள்கையினான் மனமயஙகி வருநதுவார. (௧௨)

வன்றொண்டர் திருவாரூர் மாளிகைக்கு நெல்லெடுக்க
இன்றுகுறை யாகின்றதென்செய்கே னெனநினைந்து

(௯) தாளாண்மை - முயற்சி. வாள ஆர - ஒளிதஙகிய. (௧௨) போனகம - அமுதுக்குரிய.

தூன்றுபெருங் கவலையினாற் றுயரெய்தி யுண்ணாதே
யன்றிரவு துயில்கொள்ள வங்கணர்வந் தருள்புரிவார். (கங)

ஆரூரன் றனக்குன்பா னெற்றந்தோ மென்றருளி
நீரூருஞ் சடைமுடியார் நிதிக்கோமான் றனையேவப்
பேரூர்மற் றதனெல்லை யடங்கவுநென் மலைபிறங்கல்
காரூரு நெடுவிசும்புங் கரக்கநிறைந் தோங்கியதால். (கச)

அவ்விரவு புலர்காலை யுணர்ந்தெழுவா ரதுகண்டே
யெவ்வுலகி னென்மலைதா னிதுவென்றே யதிசயித்துச்
செவ்வியபொன் மலைவளைத்தார் திருவருளின் செயல்போற்றிக்
கொவ்வைவாய்ப் பரவையார் கொழுநரையே தொழுதெழுவார். (கரு)

வேறு.

நாவலூர் மன்ன னார்க்கு நாயனா ரளித்த நெல்லிங்
கியாவரா லெடுக்க லாகு மிச்செய லவர்க்குச் சொல்லப்
போவன்யா னென்று போந்தார் புகுந்தவா றருளிச்செய்து
தேவர்தம் பெருமா னேவ நம்பியு மெதிரே சென்றார். (கசு)

குண்டையூர்க் கிழவா தாமு மெதிர்கொண்டு கோதில் வாய்மைத்
தொண்டனா பாதந் தன்னிற் றொழுதுவீழ்ந் தெழுந்து நின்று
பண்டெலா மடியேன் செய்த பணியெனக் கின்று முட்ட
அண்டர்தம் பிரானார் தாமே நென்மலை யளித்தா ரென்று (கஎ)

மனிதரா லெடுக்கு மெல்லைத் தன்றுநென் மலையி னோக்கம்
இனியெனாற் செய்ய லாகும் பணியன்றி தென்னக் கேட்டுப்
பனிமதி முடியா ரன்றே பரிந்துமக் களித்தார் நெல்லென்
றினியன மொழிந்து தாமுங் குண்டையூ ரெய்த வந்தார். (கஅ)

விண்ணணினை யளக்கு நெலலின் வெற்பினை நம்பி நோக்கி
அண்ணலை தொழுது போற்றி யதிசய மிகவு மெய்தி
யெண்ணிலசீர்ப் பரவை யிலலத் திந்நெல்லை யெடுக்க வாளுங்
தண்ணில வணிந்தா தாமே தரிலன்றி யொண்ணா தென்று. (கக)

வேறு.

ஆளிடவேண் டிக்கொள்வா ரருகுதிருப் பதியான
கோளிலியிற் றம்பெருமான் கோயிலினை வந்தெய்தி
வாளனகண மடவாள் வருந்தாமே யெனும்பதிக
மூளவருங் காதலுடன் முன்னெழுது பாடுதலும். (உ0)

---

(கச) விசும்பும் - உம்மை உயர்வு சிறப்பு.

## திருக்கோளிலி - பண் - நட்டராகம்.

திருச்சிற்றம்பலம்.

நீளநினைந்தடியேனுமைநித்தலுங்கைதொழுவேன்
வாளனகண்மடவாளவள்வாடிவருந்தாமே
கோளிலியெம்பெருமான்குண்டையூர்ச்சிலநெல்லுப்பெற்றேன்
ஆளிலையெம்பெருமானவையட்டித்தரப்பணியே.

கொல்லைவளம்புறவிற்றிருக்கோளிலிமேயவனை
நல்லவர்தாம்பரவுந்திருநாவலவூரனவன்
நெல்லிடவாட்கள்வேண்டிநினைந்தேத்தியபத்தும்வல்லார்
அல்லல்களைந்துலகினண்டர்வானுலகாள்பவரே.

திருச்சிற்றம்பலம்.

---

பகற்பொழுது கழிந்ததற்பின் பரவைமனை யளவன்றி
மிகப்பெருகு நெல்லுலகில் விளங்கியவா ரூர்நிறையப்
புகப்பெய்து தருவனநம் பூதங்க ளெனவிசும்பி
னிகர்ப்பரிய தொருவாக்கு நிகழ்ந்ததுநின் மலனருளால். (௨௧)

தம்பிரா னருள்போற்றித் தரையின்மிசை விழுந்தெழுந்தே
யும்பரா லுணர்வரிய திருப்பாதந் தொழுதேத்திச்
செம்பொனேர் சடையாரைப் பிறபதியுந் தொழுதுபோய்
நம்பரா ரூரணைந்தார் நாவலூர் நாவலனார். (௨௨)

பூங்கோயின் மகிழ்ந்தருளும் புராதனரைப் புக்கிறைஞ்சி
நீங்காத பெருமகிழ்ச்சி யுடனேதிப் புறம்போந்து
பாங்கானார் புடைசூழ்ந்து போற்றிசைக்கப் பரவையார்
ஓங்குதிரு மாளிகையி னுள்ளணைந்தா ராரூரர். (௨௩)

கோவைவாய்ப் பரவையார் தாமகிழும் படிகூறி
மேவியவர் தம்மோடு மிகவின்புற் றிருந்ததற்பின்
சேவின்மே லுமையோடும் வருவாதந் திருவருளின்
ஏவலினா லவ்விரவு பூதங்கண மிக்கெழுந்து (௨௪)

குண்டையூர் நென்மலையைக் குறட்பூதப் படைகவர்ந்து
வண்டுலாங் குழற்பரவை மாளிகையை நிறைவித்தே
அண்டர்பிரான் றிருவாரூ ரடங்கவுநென் மலையாக்கிக்
கண்டவரற் புதமெய்துங் காட்சிபெற வமைத்தனவால். (௨௫)

அவ்விரவு புலர்காலை யாரூரில் வாழ்வார்கண்
டெவ்வுலகில் விளைந்தனநென் மலையிவையென் றதிசயித்து
நவ்விமதர்த் திருநோக்கி னங்கைபுகழ்ப் பரவையார்க்
கிவ்வுலகு வாழவரு நம்பியளித் தனவென்பார். (௨௬)

---

(௨௪) சே - இடபம.

நீக்கரிய நெற்குன்று தனைநோக்கி நெறிபலவும்
போக்கரிதா யிடக்கண்டு மீண்டுந்தம் மில்புகுவார்
பாக்கியத்தின் றிருவடிவாம் பரவையார்க் கிந்நெல்லுப்
போக்குமிட மரிதாகு மெனப்பலவும் புகல்கின்றார். (உஎ)

வன்றொண்டர் தமக்களித்த நெற்கண்டு மகிழ்சிறப்பார்
இன்றுநகண் மனையெல்லைக் குட்படுநெற் குன்றெல்லாம்
பொன்றநகு மாளிகையிற் புகப்பெய்து கொள்கவெனா
வென்றிமுர சறைவித்தார் மிக்கபுகழ்ப் பரவையார். (உஅ)

அணியாரூர் மறுகதனி லாளியங்கப் பறையறைந்த
பணியாலே மனைநிறைத்துப் பாங்கெங்கு நெற்கூடு
கணியாமற் கட்டிநகர் களிகூரப் பரவையார்
மணியாரம் புனைமார்பின் வன்றொண்டர் தமைப்பணிந்தார். (உகூ)

நம்பியா ரூரர்திரு வாரூரி னயந்துறைநாட்
செம்பொற்புற் றிடங்கொண்டு வீற்றிருந்த செழுந்தேனைத்
தம்பெரிய விருப்பினொடுந் தாழ்ந்துணர்வி னுற்பருகி
இம்பருட னும்பர்களு மதிசயிப்ப வேத்தினர். (௩0)

குலவுபுகழ்க் கோட்புலியார் குறையிரந்து தம்பதிக்கண்
அலகிலபுக ழாரூர ரெழுந்தருள வடிவணங்கி
நிலவியவன் றொண்டரது விசைந்ததற்பி னேரிறைஞ்சிப்
பலர்புகழும் பணபினர் மீண்டுந்தம் பதியணைந்தார். (௩க)

வேறு

தேவ ரொதுங்கத் திருத்தொண்டர் மிடையுஞ் செல்வத் திருவாரூர்
காவல் கொண்டு தனியாளுங் கடவுட் பெருமான் கழல்வணங்கி
நாவ லூர ரருள்பெற்று நம்பர் பதிகள் பிறநண்ணிப்
பாவை பாகர் தமைப்பணிந்து பாடும் விருப்பிற் சென்றணைவார் (௩உ)

மாலு மயனு முணர்வரியார் மகிழும் பதிகள் பலவணங்கி
ஞால நிகழ்கோட் புலியார்தந் நாட்டி யத்தான் குடிநண்ண
ஏலும் வகையா லலங்கரித்தங் கவரு மெதிர்கொண் டினிதிறைஞ்சிக்
கோல மணிமா ளிகையின்க ணாவம் பெருகக் கொடுபுக்கார். (௩௩)

தூய மணிப்பொற் றவிசிலெழுந் தருளி யிருக்கத் தூநீராற்
சேய மலர்ச்சே வடிவிளக்கித் தெளிததுக் கொண்டச் செழும்புனலான்
மேய சுடர்மா ளிகையெங்கும் விளங்க வீசி யுளங்களிப்ப
ஏய சிறப்பி லர்ச்சனைக ளெல்லா மியல்பின் முறைபுரிவார். (௩௪)

பூந்தண் பனிநீர் கொடுசமைத்த பொருவில் விரைச்சந் தனக்கலவை
வாய்ந்த வகிலி னறுஞ்சாந்து வாச நிறைமான் மதச்சேறு

---

(௩௫) விரை - வாசனை. மானமதச்சேறு-கஸ்தூரிக குழமபு. அடைககாயமுது - தாமபூலம. பாசனம - தட்டு.

தோய்ந்த புகைநா வியினறுநெய் தூய பசுங்கர்ப் பூரமுதல்
ஏய்ந்த வடைக்கா யமுதினைய வெண்ணின் மணிப்பா சனத்தேந்தி. (ருகு)

வேறு.

வேறு வேறு திருப்பள்ளித் தாமப் பணிகண் மிகவெடுத்து
மாறி லாத மணித்திருவா பரண வருக்கம் பலதாங்கி
யீறில விதத்துப் பரிவட்ட மூழி னிரைத்தே யெதிரிறைஞ்சி
யாறு புனைந்தா ரடித்தொண்ட ரளவில் பூசை கொளவளித்தார். (ருசு)

செங்கோ லரச னருளுரிமைச் சேனா பதியாங் கோட்புலியார்
நங்கோ மானை நாவலூர் நகரார் வேந்தை நண்பினாற்
றங்கோ மனையிற் றிருவமுது செய்வித் திறைஞ்சித் தலைசிறந்த
பொங்கோ தம்போற் பெருங்காதல் புரிந்தார் பின்னும் போற்றுவார் (ருஎ)

ஆறா விருப்பின் மற்றவர்தா மருமை யான்முன் பெற்றெடுத்த
தேனார் கோதைச் சிங்கடியார் தமையு மவர்பின் றிருவுயிர்த்த
மானா ரோக்கின் வனப்பகையார் தமையுங் கொணர்ந்து வன்றொண்டர்
தூநாண் மலர்த்தாள் பணிவித்துத் தாமுந் தொழுது சொல்லுவார். (ருஅ)

அடியேன் பெற்ற மக்களிவ ரடிமையாகக் கொண்டருளிக்
கடிசேர் மலர்த்தா டொழுதுய்யக் கருணை யளிக்க வேண்டுமெனத்
தொடிசேர் தளிர்க்கை யிவரெனக்குத் தூய மக்க ளெனக்கொண்டப்
படியே மகண்மை யாக்கொண்டார் பரவை யார்தங் கொழுநனார். (ருகூ)

கோதை சூழ்ந்த குழலாரைக் குறங்கின் வைத்துக் கொண்டிருந்து
காத னிறைந்த புதல்வியரராங் கருத்துட் கசிவா லணைத்துச்சி
மீது கண்ணீர் விழமோந்து வேண்டு வனவுங் கொடுத்தருளி
நாதர் கோயில் சென்றடைந்தார் நம்பி தம்பி ரான்றோழர் (சு௦)

வென்றி வெள்ளே றுயர்த்தருளும் விமலர் திருக்கோ புரமிறைஞ்சி
ஒன்று முள்ளத் தொடுமன்பா லுச்சி குவித்த கரத்தோடுஞ்
சென்று புகுந்து பணிந்துதிருப் பதிகம் பூணா ணென்றெடுத்துக்
கொன்றை முடியா ரருளுரிமை சிறப்பித் தார்கோட் புலியாரை (சுக)

---

திருநாட்டியத்தான்குடி - பண் - தக்கராகம்.

திருச்சிற்றம்பலம்

பூணாணாவதோரரவங்கண்டஞ்சேன்புறங்காட்டாடல்கண்டிகழேன்
பேணீராகிலும்பெருமையையுணர்வேன்பிறவேனாகிலுமறவேன்
காணீராகிலுங்காணபென்னெனமனத்தாற்கருதீராகிலுங்கருதிடிலிகழேன்
நாணேனுமடிபாடுதலொழியேனாட்டியத்தான்குடிநம்பி

கூடாமன்னரைக்கூட்டத்துவென்றகொடிறன்கோட்புலிசென்னி
நாடாரதொல்புகழ்நாட்டியத்தான்குடிநம்பியைநாளுமறவாச்

(ருஅ) ஆறா - குறையாத. (சு௦) குறங்கு - துடை.

சேடார்பூங்குழற்சிங்கடியப்பன்றிருவாரூரனுரைத்த
பாடலாகிலும்பாடுமின்றொண்டர்பாடநும்பாவம்பற்றறுமே.

திருச்சிற்றம்பலம்

---

சிறப்பித் தருளுந் திருக்கடைக்காப் பதனி னிடைச்சிங் கடியாரைப்
பிறப்பித் தெடுத்த பிதாவாகத் தம்மை நினைந்த பெற்றியினான்
மறப்பில் வகைச்சிங் கடியப்ப னென்றே தம்மை வைத்தருளி
நிறப்பொற் புடைய விசைபாடி நிறைந்த வருள்பெற் றிறைஞ்சுவார் (௪௨)

அங்கு நின்று மெழுந்தருளி யளவி லன்பி னுண்மகிழ்ச்
செங்க ணுதலார் மேவுதிரு வலிவ லத்தைச் சேர்ந்திறைஞ்சி
மங்கை பாகர் தமைப்பதிகம் வலிவ லத்துக் கண்டேனென்
றெங்கு நிகழ்ந்த தமிழ்மாலை யெடுத்துத் தொடுத்த விசைபுனைவார். (௪௩)

---

திருவலிவலம் - பண் - தக்கேசி.

திருச்சிற்றம்பலம்

ஊனங்கைத்துயிர்ப்பாயுலகெல்லாமோங்காரத்துருவாகிநின்றானை
வானங்கைத்தவர்க்குமளப்பரியவள்ளலையடியார்கடம்முள்ளத்
தேனங்கைத்தமுதாகியுள்ளூறுந்தேனினைத்திளைத்தற்கினியானை
மானங்கைத்தலத்தேந்தவல்லானைவலிவலந்தனில்வந்துகண்டேனே.

* நல்லிசைஞானசம்பந்தனுநாவினுக்கரசரும்பாடியநற்றமிழ்மாலை
சொல்லியவேசொல்லியேத்துகப்பானைத்தொண்டனேனறியாமையறிந்து
கல்லியன்மனத்தைக்கசிவித்துக்கழலடிகாட்டியெனக்களைகளையறுக்கும்
வல்லியல்வானவர்வணங்கநின்றானைவலிவலந்தனில்வந்துகண்டேனே

கலிவலங்கெடவாரழலோம்புங்கற்றநான்மறைமுற்றணலோம்பும்
வலிவலந்தனில்வந்துகண்டடியேனமன்னுநாவலாரூரனவன்றொண்டன்
ஒலிகொளின்னிசைச்செந்தமிழ்பத்துமுள்ளத்தாலுகந்தேத்தவல்லார்போய்
மெலிவில்வானுலகத்தவரேத்தவிரும்பிவிண்ணுலகெய்துவர்தாமே.

திருச்சிற்றம்பலம்

---

நன்று மகிழுஞ் * சம்பந்தர் நாவுக் கரசர் பாட்டுகந்தீர்
என்று சிறப்பித் திறைஞ்சிமகிழ்ந் தேத்தி யருள்பெற் றெழுந்தருளி
மன்றி னிடையே நடம்புரிவார் மருவு பெருமைத் திருவாரூர்
சென்று குறுகிப் பூங்கோயிற் பெருமான் செம்பொற் கழல்பணிந்து (௪௪)

இறைஞ்சிப் போந்து பரவையார் திருமா ளிகையி லெழுந்தருளி
நிறைந்த விருப்பின் மேவுநா ளீடு செல்வத் திருவாரூர்ப்
புறம்பு நணிய கோயில்களும் பணிந்து போற்றிப் புற்றிடமா
யுறைந்த பெருமான் கழல்பிரியா தோவா வின்ப முற்றிருந்தார். (௪௫)

செறிபுன் சடையார் திருவாரூர்த் திருப்பங் குனியுத் தரத்திருநாள்
குறுக வரலும் பரவையார் கொடைக்கு விழாவிற் குறைவறுக்க
நிறையும் பொன்கொண் டணைவதற்கு நினைந்து நம்பி திருப்புகலூர்
இறைவர் பாதம் பணியவெழுந் தருளிச் சென்றங் கெய்தினார். (௪௬)

சென்று விரும்பித் திருப்புகலூர்த் தேவர் பெருமான் கோயின்மணி
முன்றில் பணிந்து வலங்கொண்டு முதல்வர் முன்பு வீழ்ந்திறைஞ்சித்
தொன்று மரபி னடித்தொண்டு தோய்ந்த வன்பிற் றுதித்தெழுந்து
நின்று பதிக விசைபாடி நினைந்த கருத்து நிகழ்விப்பார். (௪௭)

சிறிது பொழுது கும்பிட்டுச் சிந்தை முன்ன மங்கொழிய
வறிது புறம்போந் தருளியயன் மடத்தி லணையார் வன்றொண்டர்
அறிவு கூர்ந்த வன்பருட னணிமுன் றிலினே ரருகிருப்ப
மறிவண் கையா ரருளேயோ மலர்க்கண் டுயில்வந் தெய்தியதால். (௪௮)

துயில்வந் தெய்தத் தம்பிரான் றோழ ரங்குத் திருப்பணிக்குப்
பயிலுஞ் சுடுமட் பலகைபல கொணர்வித் துயரம் பண்ணித்தேன்
அயிலுஞ் சுரும்பார் மலர்ச்சிகழி முடிமே லணியா வுத்தரிய
வெயிலுந் தியவெண் பட்டதன்மேல் விரித்துப் பள்ளி மேவினார். (௪௯)

சுற்று மிருந்த தொண்டர்களுந் துயிலு மளவிற் றுணைமலர்க்கண்
பற்றுந் துயினீங் கிடப்பள்ளி யுணர்ந்தார் பரவை கேள்வனார்
வெற்றி விடையா ரருளாலே வேமண் கல்லே விரிசுடர்ச்செம்
பொற்றிண் கலலா யினகண்டு புகலூ ரிறைவ ரருள்போற்றி (௫௦)

தொண்ட ருணர மகிழ்ந்தெழுந்து துணைக்கைக் கமல முகைதலைமேற்
கொண்டு கோயி லுட்புக்குக் குறிப்பி லடங்காப் பேரன்பு
மண்டு காத லுறவணங்கி வாய்த்த மதுர மொழிமாலை
பண்டங் கிசையிற் றம்மையே புகழ்ந்தென் றெடுத்துப் பாடினார். (௫௧)

---

திருப்புகலூர் - பண் - கொல்லி.

திருச்சிற்றம்பலம்.

தம்மையேபுகழ்ந்திச்சைபேசினுஞ்சாவினுந்தொண்டர்தருகிலாப்
பொய்ம்மையாளரைப்பாடாதேயெந்தைபுகலூர்பாடுமின்புலவீர்காள்
இம்மையேதருஞ்சோறுங்கூறையுமேத்தலாமிடர்கெடலுமாம்
அம்மையேசிவலோகமாள்வதற்கியாதுமையுறவில்லையே.

செறுவினிற்செழுங்கமலமோங்குதென்புகலூர்மேவியசெல்வனை
நறவம்பூம்பொழில்நாவலூரன்வனப்பகையப்பன்சடையன்றன்
சிறுவன்வன்றொண்டனூரனபாடியபாடல்பத்திவைவல்லவர்
அறவனாடிச்சென்றுசேர்வதற்கியாதுமையுறவில்லையே.

திருச்சிற்றம்பலம்.

---

(௪௯) மண் பலகை - செங்கல். (௫௦) வே - சுட

பதிகம் பாடித் திருக்கடைக்காப் பணிந்து பரவிப் புறம்போந்தே
யெதிரி லின்ப மிம்மையே தருவா ரருள்பெற் றெழுந்தருளி
நிதியின் குவையு முடன்கொண்டு நிறையு மதியுங் குறைமதியும்
பொதியுஞ் சடையார் திருப்பனையூர் புகுவார் புரிநூன் மணிமார்பர் (௫௨)

செய்ய சடையார் திருப்பனையூர்ப் புறத்துத் திருக்கூத் தொடுங்காட்சி
எய்த வருள வெதிர்சென்றங் கெழுந்த விருப்பால் விழுந்திறைஞ்சி
ஐயர் தம்மை யரங்கிலாட வல்லா ரவரே யழகியரென்
றுய்ய வுலகு பெறும்பதிகம் பாடி யருள்பெற் றுடன்போந்தார் (௫௩)

---

திருப்பனையூர் - பண் - சீகாமரம்.

திருச்சிற்றம்பலம்

மாடமாளிகைகோபுரத்தொடுமண்டபம்வளருமவளர்பொழிற்
பாடல்வண்டறையும்பழனத்திருப்பனையூர்த்
தோடுபெய்தொருகாதினிற்குழை தூங்கத்தொண்டர்கடுள்ளிப்பாடநின
றாடுமாறுவல்லாரவரேயழகியரே

வஞ்சிநுண்ணிடைமங்கைபங்கினர்மாதவர்வளருமவளர்பொழிற்
பஞ்சின்மெல்லடியார்பயிலுந்திருப்பனையூர்
வஞ்சியும்வளர்நாவலூரன்வனப்பகையவளப்பன்வன்றொண்டன்
செஞ்சொற்கேட்டுகப்பாரவரேயழகியரே.

திருச்சிற்றம்பலம்

---

வளமல் கியசீர்த் திருப்பனையூர் வாழ்வா ரேத்த வெழுந்தருளி
அளவில் செம்பொ னிட்டிகைக ளாண்மே னெருங்கி யணியாரூர்த்
தளவ முறுவற் பரவையார் தமமா ளிகையிற் புகத்தாமும்
உளமன் னியதம் பெருமானார் தம்மை வணங்கி யுவந்தணைந்தார் (௫௪)

வந்து பரவைப் பிராட்டியார் மகிழ வைகி மருவுநாள்
அந்த ணாரூர் மருங்கணிய கோயில் பலவு மணைந்திறைஞ்சிச்
சிந்தை மகிழ விருப்பிரண்டு தெய்வப் பெருமா டிருவாரூர்
முந்தி வணங்கி யினிதிருந்தார் முனைப்பா டியர்தங் காவலனார். (௫௫)

பலநா ளமர்வார் பரமர்திரு வருளா லங்கு நின்றும்போய்ச்
சிலைமா மேரு வீரனார் திருநன் னிலத்துச் சென்றெய்தி
வலமா வந்து கோயிலினுள் வணங்கி மகிழ்ந்து பாடினார்
தலமார் கின்ற தண்ணியல்வெம் மையினா னென்னுந் தமிழ்மாலை (௫௬)

---

திருநன்னிலத்துப்பெருங்கோயில் - பண் - பஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்

தண்ணியல்வெம்மையினான்றலையிற்கடைதோறும்பலி
பண்ணியன்மென்மொழியாரிடக்கொண்டுழல்பண்டரங்கன்

---

(௫௪) இட்டிகை - செங்கல்.

புண்ணியன்நான்மறையோர்முறையாலடிபோற்றிசைப்ப
நண்ணியநன்னிலத்துப்பெருங்கோயினயந்தவனே.

கோடுயர்வெங்களிற்றுத்திகழ்கோச்செங்கணான்செய்கோயில்
நாடியநன்னிலத்துப்பெருங்கோயினயந்தவனைச்
சேடியலிங்கிதநகைசடையன்றிருவாரூரன்
பாடியபத்தும்வல்லார்புகுவார்பரலோகத்துளே.

திருச்சிற்றம்பலம்.

---

பாடி யங்கு வைகியபின் பரமர் வீழி மிழலையினில்
நீடு மறையோன் மேம்பட்ட வந்த ணாளர் நிறைந்தீண்டி
நாடு மகிழ வவ்வளவு நடைக்கா வணம்பா வாடையுடன்
மாடு கதலி பூகநிரை மல்க மணித்தோ ரணநிரைத்து (ருஎ)

வந்து நம்பி தம்மையெதிர் கொண்டு புக்கார் மற்றவருஞ்
சிந்தை மலர்ந்து திருவீழி மிழலை யிறைஞ்சிச் சேணவிசும்பின்
முந்தை யிழிந்த மொய்யொளிசேர் கோயி றன்னை முன்வணங்கிப்
பந்த மறுக்குந் தம்பெருமான் பாதம் பரவிப் பணிகின்றார் (ருஅ)

படங்கொ ளரவிற் றுயில்வோனும் பதுமத் தோனும் பரவரிய
விடங்கன் விண்ணோர் பெருமானை விரவும் புளக முடன்பரவி
அடங்கல் வீழி கொண்டிருந்தீ ரடியே னுக்கு மருளு மெனத்
தடங்கொள் செஞ்சொற் றமிழ்மாலை சாத்தி யங்குச் சாருநாள் (ருக)

---

திருவீழிமிழலை - பண் - சீகாமரம்.

திருச்சிற்றம்பலம்

விடங்கொண்மாமிடற்றீர்வெள்ளைச்சுருளொன்றிட்டுவிட்ட காதினீரென்று
திடங்கொள்சிந்தையினாகலிக்கக்குந்திருமிழலை
மடங்கலபூணடவிமானமுமணமிசைவந்திழிச்சியவானநாட்டையு
மடங்கல்வீழிகொணடீரடியேற்குமருளுதிரே

வேதவேதியாவேதநீதியரோதுவாரவிரிநீர்மிழலையுள
ஆதிவீழிகொணடீரடியேறகுமருளுமெனறு
நாதனைத்தம்வண்டோதுவாரபொழிலுவலூரனவன்றொண்டனற்றமிழ்
பாதமோதவல்லாரபரனோடுங்கூடுவரே

திருச்சிற்றம்பலம்

---

வாசி யறிந்து காசளிக்க வல்ல மிழலை வாணர்பாற்
றேசு மிக்க திருவருணமுன் பெற்றுத் திருவாரு சியத்தடிகள்
பாச மறுத்தாட் கொள்ளுந்தாள் பணிந்து பொருவ னென்னு
மாசில பதிகம் பாடியமாந் தரிசொற் கரைப்புத் தூரணைந்தார். (சுo)

---

(ருஎ) நடைக்காவணம் - நடைப்பந்தர்.

### திருவாஞ்சியம் - பண் - பியந்தைக்காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்

பொருவனார்புரிநூலர்புணர்முலையுமையவளோடு
மருவனாமருவார்பால்வருவதுமில்லைநம்மடிக
டிருவனாபணிந்தேத்தநிகழ்திருவாஞ்சியததுறையும்
ஒருவனாடியாரையூழ்வினைநலியவொட்டாரே

செந்நெலங்கலங்கழனித்திகழ்திருவாஞ்சியத்துறையு
மின்னலங்கலஞ்சடையெம்மிறைவனதறைகழல்பரவும்
பொன்னலங்கலநன்மாடப்பொழிலணிநாவலாரூரன்
பனனலங்கனன்மாலைபாடுமின்பததருளீரே.

திருசசிற்றம்பலம்.

---

செழுநீர் நறையூா நிலவுதிருச் சிததீச சரமும் பணிந்தேத்தி
விழுநீா மையினிற் பெருநதொண்டர் விருப்பி னேடு மெதிர்கொள்ள
மழுவோ டிளமான் கரதலததி லுடையாா திருப்புத தூர்வணஙகித
தொழுநீர் மையினிற் றுதித்தேத்தித் தொண்டர் சூழ வுறையுநாள். (௬௧)

---

### திருநறையூர்ச்சித்தீச்சரம் - பண் - குறிஞ்சி

திருச்சிற்றம்பலம்

நீரும்மலருந்நிலவுஞ்சடைமேல், ஊரும்மரவும்முடையானிடமாம்
வாரும்மருவிமணிபொன்கொழித்துச, சேரும்நறையூர்ச்சித்தீச்சரமே.

போராா்புரமெய்தபுனிதன்னமருஞ், சீரார்நறையூாச்சிததீச்சரததை
ஆரூரனசொல்லிவைவல்லவர்கள், ஏராரிமையோருலகெய்துவரே.

திருச்சிற்றம்பலம்.

---

புனித ஞர்முன் புகழ்ததுணையாாக் கருளுந் திறமும் போற்றிசைத்து
முனிவர் போற்ற வெழுந்தருளி மூரி வெள்ளக் கஙகையினிற்
பனிவெண் டிஙக ளணிசடையார் பதிகள் பலவும் பணிந்துபோந்
தினிய நினைவி லெயதினு ரிறைவர் திருவா வடுதுறையில். (௬௨)

விளஙகுந் திருவா வடுதுறையின் மேயார் கோயில் புடைவலஙகொண்
டுளஙகொண் டுருகு மன்பினுட னுள்புககிறைஞ்சி யேத்துவாா
வளங்கொள் பதிக மறையவனென றெடுதது வளவன் செஙகணன்
றளஙகொள் பிறப்புஞ் சிறப்பிததுத தமிழ்ச்சொன் மாலை சாத்தினர்.(௬௩)

---

### திருவாவடுதுறை - பண் - தக்கேசி.

திருசசிற்றம்பலம்.

மறையவனொருமாணிவநதடையவாரமாயவனுருயிர்நிறுத்தக் [ன்
கறைகொளவேலுடைக்காலனைககாலாற்கடநதகாரணஙகண்டுகண்டடியே
இறைவனெம்பெருமானென்றெப்போதுமேத்தியேத்திநின்றஞ்சலிசெய்து
னறைகொள்சேவடிக்கன்பொடுமடைந்தேனவடுதுறையாதியெம்மானே.

தெருண்டவாயிடை நூல்கொண்டுசிலந்திசித்திரப்பந்தர்சிக்கெனவியற்றச்
சுருண்டசெஞ்சடையாயதனைசசோழனாக்கிய தொடர்ச்சிகண்டடியேன்[பி
புரண்டுவீழ்ந்துநின்பொனமலர்ப்பாதமபோற்றிபோற்றியென்றன்பொடுபுலம
யருண்டென்மேல்வினைக்கஞ்சிவந்தடைந்தேனைவடுதுறையாதியம்மானே
திருச்சிற்றம்பலம்

---

சாத்தி யஙகு வைகுநாட் டயங்கு மன்ப ருடன்கூடப்
பேர்த்து மிறைஞ்சி யருளபெற்றுப் பெண்ணோ பாகத் தண்ணலார்
தீர்த்தப் பொன்னித தென்கரைமேற் றிகழும் பதிகள் பலபணிந்து
மூர்த்தி யார்தம் மிடைமருதை யடைநதா முனைப்பா டிததலைவா (௬௪)

மன்னு மருதி னமர்ந்தவரை வணஙகி மதுரச் சொன்மலாகள்
பன்னிப் புனைந்து பணிநதேததிப் பரவிப் போநது தொண்டருடன்
அநநற் பதியி லிருந்தகலவா ரரனூர் திருநா கேச்சரததை
முன்னிப் புக்கு வலஙகொண்டு முதல்வா திருத்தாள் வணஙகினார் (௬௫)

பெருகும் பதிகம் பிறையணிவா ணுதலாள் பாடிப் பெயாநதுநிறை
திருவின் மலியுஞ் சிவபுரததுத தேவா பெருமான் கழலவணஙகி
உருகுஞ் சிநதை யுடன்போநதே யுமையோா பாகர் தாமகிழ்நது
மருவும் பதிகள் பிறபணிநது கலைய நல்லூர் மருஙகணைநதாா. (௬௬)

---

### திருநாகேச்சரம் - பண் - பஞ்சமம்.

திருசசிற்றம்பலம்

பிறையணிவாணுதலாளுமையாளவாபேழ்கணிகக
நிறையணிநெஞ்சனுஙகநீலமால்விடமுண்டதெனனே
குறையணிகுலலைமுலலையணைந்துகுளிாமாதவிம்மற
சிறையணிவணடுகளசோதிருநாகேசசரததானே

கொஙகணைவணடலர்த்தகருயிலுமமயிலுமபயிலுந
தெஙகணைபூமபொழிலசூழ்திருநாகேசசரத்தானை
வஙகமலிகடல்சூழ்வயனுவலவூரனசொனன
பஙகமிலபாடலவலலாரவாதமவினைபறறறுமே

திருசசிற்றமபலம

---

செம்மை மறையோா திருக்கலைய நல்லூ ரிறைவர் சேவடிக்கீழ்
மும்மை வணககம பெறவிறைஞசி முனபு பரவித தொழுதெழுவாா
கொம்மை மருவு குருமபைமுலை யுமையா ளென்னுந் திருப்பதிக
மெய்மமைப் புராணம் பலவுமிகச சிறப்பித திசையின் விளம்பினாா (௬௭)

---

### திருக்கலையநல்லூர் - பண் - தக்கராகம்.

திருச்சிற்றம்பலம்

குரும்பைமுலைமலர்க்குழலிகொண்டதவங்கண்டுகுறிப்பினொடுஞ்சென்ற
வடன்குணத்தினைநன்கறிநது, விரும்பும்வரங கொடுத்தவளைவேட்டருளிச

*செய்தவிண்ணவர்கோன்கண்ணுதலோன்மேவியவூர்வினவில், அரும்பருகே சுரும்பருவவறுபதமபண்பாடவணிமயில்கணடமாடுமணிபொழில்சூழயலின், கருமபருகேகருஙகுவளைகணவளருஙகழனிககமலஙகணமுகமலருஙகலையநல் லூர்காணே.*

*தண்புனலும்வெண்மதியுந்தாங்கியசெஞசடையன்றனமறையோன்தலைகல னாக்காமரமுன்பாடி, யுணபலிகொண்டுழலபரமனுறையுமூரநிறைநீரொழுகு புனலரிசிலினதென்கலையநலலூரதனை, நணபுடையநன்சடையனிசைஞானி சிறுவனாவலாகோனாரூரனுவினயந்துரைசெய்,பணபயிலும்பததுமிவைபததி செய்துநித்தம்பாடவலலார்களல்லலொடுபாவமிலாதாமே.*

*திருச்சிற்றம்பலம்.*

---

*அஙகு நின்று திருக்குடமூக் கணைந்து பணிந்து பாடிப்போய்*
*மஙகை பாகர் வலஞ்சுழியை மருவிப் பெருகு மன்புருகத்*
*தஙகு காத லுடனவணஙகித தமிழாற் பாசி யாசினுககுத*
*திஙகண் முடியா ரடியளித்த திருநல் லூரைச சென்றணைந்தார்* (௬௮)

*நல்லூ ரிறைவா கழல்போற்றி நவின்று நடுவு நமபர்பதி*
*யெலலா மிறைஞ்சி யேததிப்போ யிசையாற் பரவு நம்முடைய*
*சொல்லூ தியமா வணிந்தவர்தஞ் சோற்றுத் துறையின் மருஙகெய்தி*
*அல்லூா கணடர் கோயிலினு ளடைந்து வலஙகொண் டடிபணிவார்* (௬௯)

*அழனீ ரொழுகி யனையவெனு மஞ்சொற் பதிக மெடுத்தருளிக்*
*கழனீ டியவன் பினிற்போற்றுங காதல் கூரப் பாவியபின்*
*கெழுநீ மையினி லருள்பெற்றுப் போந்து பரவை யார்கேள்வர்*
*முழுநீ றணிவா ரமர்நதபதி பலவும பணிந்து முன்னுவார்.* (௭௦)

---

**திருச்சோற்றுத்துறை - பண் - கவுசிகம்.**

*திருச்சிற்றம்பலம்.*

*அழனீரொழுகியனையசடையு, முழையீருரியுமுடையானிடமாங் கழைநீர்முததுஙகனககுவையுஞ், சுழனீர்ப்பொன்னிசசோற்றுததுறையே.*

*சுற்றாதருநீாசசோற்றுததுறையுண், முற்றாமதிசேர்முதல்வன்பாதத தற்றாரடியாரடிநாயூரன, சொற்றாணிவைகற்றார்துன்பிலரே*

*திருச்சிற்றம்பலம்.*

---

*தேவா பெருமான் கண்டியூர் பணிநது திருவை யாறதனை*
*மேவி வணஙகிப் பூநதுருத்தி விமலர் பாதந் தொழுதிறைஞ்சிச்*
*சேவில் வருவார் திருவாலம் பொழிலிற் சேர்ந்து தாழ்ந்திரவு*
*மேவு சயனத் தமர்ந்தருளிப் பள்ளி கொள்ளக் கனவின்கண்.* (௭௧)

*மழபா டியினில் வருவதற்கு நினைக்க மறந்தா யோவென்று*
*குழகா கியதங் கோலமெதிர் காட்டி யருளக் குறித்துணர்ந்து*

நிழலார் சோலைக் கரைப்பொன்னி வடபா லேறி நெடுமாட
வழகார் வீதி மழபாடி யணைந்தார் நம்பி யாரூரர். (எ௨)

அணைந்து திருக்கோ புரமிறைஞ்சி யன்பர் சூழ வுடன்புகுந்து
பணங்கொ ளரவ மணிந்தார்முன் பணிந்து வீழ்ந்து பரங்கருணைக்
குணங்கொ ளருளின் றிறம்போற்றிக் கொண்ட புளகத் துடனுருகிப்
புணர்ந்த விசையாற் றிருப்பதிகம் பொன்னார் மேனி யென்றெடுத்து. (எ௩)

---

### திருமழபாடி - பண் - நட்டராகம்.

திருச்சிற்றம்பலம்.

பொன்னார்மேனியனேபுலித்தோலையரைக்கசைத்து
மின்னார்செஞ்சடைமேல்மிளிர்கொன்றையணிந்தவனே
மன்னேமாமணியேமழபாடியுண்மாணிக்கமே
அன்னேயுன்னையல்லாலினியாரைநினைக்கேனே.

ஏரார்முப்புரமுமெரியச்சிலைதொட்டவனை
வாரார்கொங்கையுடன்மழபாடியுள்மேயவனைச்
சீரார்நாவலர்கோனாரூரனுரைத்ததமிழ்
பாரோரேத்தவல்லார்பரலோகத்திருப்பாரே

திருச்சிற்றம்பலம்

---

அன்னே யுன்னை யல்லால்யா னாரை நினைக்கே னெனவேத்தித்
தன்னே ரில்லாப் பதிகமலர் சாத்தித் தொழுது புறம்பணைந்து
மன்னும் பதியிற் சிலநாள்கள் வைகித் தொண்ட ருடன்மகிழ்ந்து
பொன்னிக் கரையி னிருமருங்கும் பணிந்து மேல்பாற் போதுவார் (எ௪)

செய்ய சடையார் திருவானைக் காவி லணைந்து திருத்தொண்டர்
எய்த முன்வந் தெதிர்கொள்ள விறைஞ்சிக் கோயி லுட்புகுந்தே
ஐயா கமலச் சேவடிக்கீ ழார்வம் பெருக வீழ்ந்தெழுந்து
மெய்யு முகிழ்ப்பக் கண்பொழிநீர் வெள்ள மரப்ப விம்முவார். (எ௫)

மறைக ளாய நான்குமென மலர்ந்த செஞ்சொற் றமிழ்ப்பதிக
நிறையுங் காத லுடனெடுத்து நிலவு மன்பா தமைநோக்கி
இறையும் பணிவா ரெம்மையுமா ளுடையா ரெனவென் றேத்துவார்
உறையூர்ச் சோழன் மணியாரஞ் சாத்துந் திறத்தை யுணர்ந்தருளி (எ௬)

---

### திருவானைக்கா - பண் - காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

மறைகளாயினநான்குமற்றுளபொருள்களுமெல்லாந்
துறையுந்தோத்திரத்திறையுந்தொன்மையுநன்மையுமாய
வறையுமபூம்புனலானைக்காவுடையாதியைநாளும்
இறைவனென்றடிசேர்வாரெம்மையுமாளுடையாரே

ஆழியார்க்கருளானைக்காவுடையாதிபொன்னடியின்
நீழலேசரணாகநின்றருள்கூரநினைந்து
வாழவல்லவன்றொண்டன்வண்டமிழ்மாலைவல்லார்போய்
ஏழுமாபிறப்பற்றுவெம்மையுமாளுடையாரே.

திருச்சிற்றம்பலம்

---

வளவா பெருமான் திருவாரஞ் சாத்திக் கொண்டு வரும்பொன்னிக்
கிளருந் திரைநீர் மூழ்குதலும் வழுவிப் போகக் கேதமுற
அளவில் திருமஞ் சனக்குடத்து ளதுபுக் காட்ட வணிந்தருளித்
தளரு மவனுக் கருள்புரிந்த தன்மை சிறக்கச் சாற்றினார். (எஎ)

சாற்றி யங்குத் தங்குநாட் டயங்கும் பவளத் திருமேனி
நீற்றார் கோயி லெம்மருங்குஞ் சென்று தாழ்ந்து நிறைவிருப்பாற்
போற்றி யங்கு நின்றும்போய்ப் பொருவி லன்பர் மருவியதொண்
டாற்றும் பெருமைத் திருப்பாச்சி லாச்சி ராமஞ் சென்றடைந்தார் (எஅ)

சென்று திருக்கோ புரமிறைஞ்சித் தேவர் மலிந்த திருந்துமணி
முன்றில் வலங்கொண் டுள்ளணைந்து முதல்வர் முன்பு வீழ்ந்திறைஞ்சி
நன்று பெருகும் பொருட்காத னயப்புப் பெருக நாதரெதிர்
நின்றும் பரவி நினைந்தபொரு ளருளா தொழிய நேர்நின்று. (எகூ)

அன்பு நீங்கா வச்சமுட னடுத்த திருத்தோ ழமைப்பணியாற்
பொன்பெ றாத திருவுள்ளம் புழுங்க வழுங்கிப் புறம்பொருபான்
முன்பு நின்ற திருத்தொண்டர் முகப்பே முறைப்பா டுடையார்போல்
என்பு கரைந்து பிரானாமற் றிலலை யென்ன வெடுக்கின்றார் (அ०)

---

திருப்பாச்சிலாச்சிராமம் - பண் - தக்கராகம்.

திருச்சிற்றம்பலம்

வைத்தனன்றனக்கேதலையுமெனாவுமநெஞ்சமும்வஞ்சமொன்றின்றி
உய்த்தனன்றனக்கேதிருவடிக்கடிமையுரைத்தக்காலுவமனேயொக்கும்
பைத்தபாம்பார்த்தோர்கோவணத்தோடுபாச்சிலாச்சிராமத்தெம்பரமர்
பித்தரேயொத்தோர்நச்சிலராகிலிவரலாதிலலையோபிரானார்

ஏசினவல்லவிகழ்ந்தனவல்லவெம்பெருமானென்றெப்போதும்
பாயினபுகழான்பாச்சிலாச்சிராமத்தடிகளையடிதொழப்பன்னாள்
வாயினாற்கூறிமனத்தினானினைவான்வளவயனாவலாரூரன்
பேசினபேச்சைப்பொறுத்திலராகிலிவரலாதிலலையோபிரானார்

திருச்சிற்றம்பலம்.

---

வேறு

நித்தமு நீங்கா நிலைமையி னீங்கி நிலத்திடைப் புலங்கெழும் பிறப்பால்,
உய்த்த காரணத்தை யுணர்ந்துநேர்ந் தடிமை யொருமையா மெழுமையுமுண

---

(எஎ) கேதம் - துன்பம்.

ர்த்தி, யெத்தனை யருளா தொழியினும் பிரானா ரிவரல்லா தில்லையேயென்
பார், வைத்தனன் றனக்கே தலையுமென் னாவு மெனவழுத் தினர்வழித்
தொண்டர். (௮௧)

இவ்வகை பரவித் திருக்கடைக் காப்பு மேசின வல்லவென் றிசைப்ப
மெய்வகை விரும்பு தம்பெரு மானார் விழுநிதிக் குவையளித் தருள
மைவளர் கண்டர் கருணையே பரவி வணங்கியப் பதியிடை வைகி
எவ்வகை மருங்கு மிறைவர்தம் பதிக ளிறைஞ்சியங் கிருந்தனர் சிலநாள்

அப்பதி நீங்கி யருளினாற் போகி யாவினஞ் சாடுவார் நீடும்
எப்பெயர்ப் பதியு மிருமருங் கிறைஞ்சி யிறைவர்பைஞ் ஞீலியை யெய்திப்
பைப்பணி யணிவார் கோபுர மிறைஞ்சிப் பாங்கமர் புடைவலங் கொண்டு
துப்புறழ் வேணி யார்கழ றொழுவார் தோன்றுகங் காளரைக் கண்டார் ()

கண்டவர் கண்கள் காதனீர் வெள்ளம் பொழிதரக் கைகுவித் திறைஞ்சி
வண்டறை குழலார் மனங்கவர் பலிக்கு வருந்திரு வடிவுகண் டவர்கள்
கொண்டதோர் மயலால் வினவுகூற் றாகக் குலவுசொற் காருலா வியவென்
றண்டர்நா யகரைப் பரவியா ரணிய விடங்கரா மருந்தமிழ் புனைந்தார் ()

---

திருப்பைஞ்ஞீலி - பண் - கொல்லி.

திருச்சிற்றம்பலம்

காருலாவியநஞ்சையுண்டிருள்கண்டர்வெண்டலையோடுகொண்
டூரெலாந்திரிந்தென்செய்வீர்பலியோரிடத்திலேகொள்ளுநீர்
பாரெலாம்பணிந்தும்மையேபரவிப்பணியும்பைஞ்ஞீலியீர்
ஆரமாவதுநாகமோசொலுமாரணீயவிடங்கரே.

அன்னஞ்சேர்வயல்சூழ்பைஞ்ஞீலியிலாரணீயவிடங்கரை
மின்னுநுண்ணிடைமங்கைமார்பலர்வேண்டிக்காதன்மொழிந்தசொல்
மன்னுதொல்புகழ்நாவலூரன்வன்றொண்டன்வாய்மொழிப்பாடல்பத்
துன்னியின்னிசைபாடுவாருமைகேள்வனசேவடிசேர்வரே

திருச்சிற்றம்பலம்.

---

பரவியப் பதிகத் திருக்கடைக் காப்புச் சாத்திமுன் பணிந்தருள் பெற்றுக்
கரவிலன் பர்கடங் கூட்டமுந் தொழுது கலந்தினி திருந்துபோந் தருளி
விரவிய வீங்கோய் மலைமுத லாக விமலர்தம் பதிபல வணங்கிக்
குரவலர் சோலை யணிதிருப் பாண்டிக் கொடுமுடி யணைந்தனர் கொங்கில்

கொங்கினிற் பொன்னித் தென்கரைக் கறையூர்க் கொடுமுடிக் கோயின்
முன் குறுகிச், சங்கவெண் குழையா ருழைவலஞ் செய்து சார்ந்தடி யன்பி
னிற் றாழ்ந்து, பொங்கிய வேட்கை பெருகிடத் தொழுது புனிதர்பொன்
மேனியை நோக்கி, யிங்கிவர் தம்மை மறக்கவொண் ணாதென் றெழுந்தமெ
ய்க் குறிப்பினி லெடுப்ப. (௮௫)

அண்ணலா ரடிகண் மறக்கினு நாம வஞ்செழுத் தறியவெப் பொழுதும்
எண்ணிய நாவே யின்சுவை பெருக விடையறா தியம்புமென் றிதனைத்
திண்ணிய வுணர்விற் கொள்பவர் மற்றுப்பற்றிலே னெனச்செழுந் தமிழால்
நண்ணிய வன்பிற் பிணிப்புற நவின்றார் நமசிவா யத்திருப் பதிகம். (௮௭)

---

## திருப்பாண்டிக்கொடுமுடி - பண் - பழம்பஞ்சுரம்.

திருச்சிற்றம்பலம்.

மற்றுப்பற்றெனக்கின்றிநின்றிருப்பாதமேமனம்பாவித்தேன்
பெற்றலும்பிறந்தேனினிப்பிறவாததன்மைவந்தெய்தினேன்
கற்றவர்தொழுதேத்துஞ்சீர்க்கறையூரிற்பாண்டிக்கொடுமுடி
நற்றவாவுனைநான்மறக்கினுஞ்சொல்லுநாநமச்சிவாயவே.

கோணியபிறைசூடியைக்கறையூரிற்பாண்டிக்கொடுமுடி
பேணியபெருமானைப்பிஞ்ஞகப்பித்தனைப்பிறப்பில்லியைப்
பாணுலாவரிவண்டறைகொன்றைத்தாரனைப்படப்பாம்பரை
காணனைத்தொண்டனூரன்சொல்லிவைசொல்லுவார்க்கில்லைதுன்பமே.

திருச்சிற்றம்பலம்

---

உலகெலா முய்ய வுறுதியாம் பதிக முரைத்துமெய் யுணர்வுறா வொருமை
நிலவிய சிந்தை யுடன்றிரு வருளா னீங்குவார் பாங்குநற் பதிகள் [பைக்
பலவுமுன் பணிந்து பரமர்தாள் போற்றிப் போந்துதண் பனிமலர்ப் படப்
குலவுமக் கொங்கிற் காஞ்சிவாய்ப் பேரூர் குறுகினா ருறுகுமா தரவால் ( )

அத்திருப் பதியை யணைந்துமுன் றம்மை யாண்டவர் கோயிலுட் புகுந்து
மெய்த்தவர் சூழ வலங்கொண்டு முன்பு மேவுவார் தம்மெதிர் விளங்க
நித்தனார் தில்லை மன்றுணின் றாட னீடிய கோலநேர் காட்டக்
கைத்தலங் குவித்துக் கண்களா னந்தக் கலுழிநீர் பொழிதரக் கண்டார் ( )

காண்டலுந் தொழுது வீழ்ந்துட னெழுந்து கரையிலன் பென்பினை யுருக்கப்
பூண்டவைம் புலனிற் புலப்படா வின்பம் புணர்ந்துமெய் யுணர்வினிற் பொங்கத்
தாண்டவம் புரியுந் தம்பிரா னுரைத் தலைப்படக் கிடைத்தபின் சைவ [கத்
ஆண்டகை யாருக் கடுத்தவந் நிலைமை விளைவையா ரளவறிந் துரைப்பார்

அந்நிலை நிகழ்ந்த வாரருள் பெற்ற வன்பனா ரின்பவெள் ளத்து
மன்னிய பாடன் மகிழ்ந்துடன் பரவி வளம்பதி யதனிடை மருவிப்
பொன்மணி மன்று ளெடுத்தசே வடியார் புரிநடங் கும்பிடப் பெற்றால்
என்னினிப் புறம்போ யெய்துவ தென்று மீண்டெழுந் தருளுதற் கெழுவார்.

ஆயிடை நீங்கி யருளினாற் செல்வா ரருவரைச் சுரங்களும் பிறவும்
பாயுநீர் நதியும் பலபல கடந்து பரமர்தம் பதிபல பணிந்து
மேயவண் டமிழால் விருப்பொடும் பரவி வெஞ்சமாக் கூடலும் பணிந்து
சேயிடை கழியப் போந்துவந் தடைந்தார் தென்றிசைக் கற்குடி மலையில்.

வேறு.

வீடு தருமிக் கற்குடியில் விழுமி யாரைப் பணிந்திறைஞ்சி
நீடு விருப்பிற் றிருப்பதிக நிறைந்த சிந்தை யுடன்பாடிப்
பாடும் விருப்பிற் றொண்டருடன் பதிகள் பலவு மணைந்திறைஞ்சித்
தேடு மிருவர் காண்பரியார் திருவா றைமேற் றளிசென்றார் (கூரு)

செம்பொன் மேருச் சிலைவளைத்த சிவனா ராறை மேற்றளியில்
நம்பர் பாதம் பணிந்திறைஞ்சி நாளு மகிழ்வார்க் கருள்கூட
உம்பர் போற்றுந் தானங்கள் பலவும் பணிந்து போந்தணைவார்
இம்பர் வாழ வின்னம்பர் நகரைச் சேர வெய்தினார். (கூசா)

ஏரின் மருவு மின்னம்பர் மகிழ்ந்த வீசர் கழல்வணங்கி
யாரு மன்பிற் பணிந்தேத்தி யாரா வருளா லகமாவார்
போரின் மலியுங் கரியுரித்தார் மருவும புறம்ப யம்போற்றச்
சேரு முள்ள மிக்கெழுமெய்ப் பதிகம் பாடிச் செல்கின்றார் (கூரு)

வேறு

அங்க மோதியோ ராறை மேற்றளி யென்றெ டுத்தமர் காதலிற்
பொங்கு மின்றமி ழால்வி ரும்பு புறம்ப யந்தொழப் போதுமென்
றெங்கு மன்னிய வின்னி சைப்பதி கம்பு னைந்துட னெய்தினார்
திங்கள் சூடிய செல்வர் மேவு திருப்பு றம்பயஞ் சேரவே. (கூசா)

---

திருப்புறம்பயம் - பண் - கொல்லி.

திருச்சிற்றம்பலம்

அங்கமோதியோராறைமேற்றளிநின் றும்போந்துவந்தின்னம்பர்த்
தங்கினோமையுமின்னதென்றிலரீசனாரெழுநெஞ்சமே
கங்குலேமங்கள்கொண்டுதேவர்களோதிவானவர்தாந்தொழும்
பொங்குமாலவிடையேறிசெல்வப்புறம்பயந்தொழப்போதுமே

துஞ்சியும்பிறந்துஞ்சிறந்துந்துயக்கறாதமயக்கிவை
யஞ்சியூரன்திருப்புறம்பயத்தப்பனைத்தமிழ்ச்சீரினால்
நெஞ்சினாலேபுறம்பயந்தொழுதுய்துமென்றுநினைத்தன
வஞ்சியாதுரைசெய்யவல்லவர்வல்லவானுலகாள்வரே

திருச்சிற்றம்பலம்.

---

அப்ப திக்க ணமர்ந்த தொண்டரு மன்று வெண்ணெய்நல் லூரினில்
ஒப்ப ருந்தனி வேதி யன்பழ வோலை காட்டிநின் றாண்டவர்
இப்ப திக்கண்வந் தெய்த வென்ன தவங்க ளென்றெதிர் கொள்ளவே
முப்பு ரங்க ளெரித்த சேவகர் கோயில் வாயிலின் முன்னினார் (கூஎ)

நீடு கோபுர முன்பி றைஞ்சி நிலாவு தொண்டரொ டுள்ளணைந்
தாடன் மேவிய வண்ண லாரடி போற்றி யஞ்சலி கோலிநின்
றேடு லாமலர் தூவி யெட்டினொ டைந்து மாகு முறுப்பினாற்
பீடு நீடு நிலத்தின் மேற்பெரு கப்பணிந்து வணங்கினார். (கூஅ)

அங்கு நீடருள் பெற்று ளார்வ மிகப்பொ ழிந்தெழு மன்பினாற்
பொங்கு நாண்மலர்ப் பாத முன்பணிந் தேத்தி மீண்டு புறத்தணைந்
தெங்கு மாகி நிறைந்து நின்றவர் தாம கிழ்ந்த விடங்களில்
தங்கு கோல மிறைஞ்சு வாரருட் டாவி லன்பரோ டெய்தினார். (௬௬)

வேறு

வம்புநீ டலங்கன் மார்பின் வன்றொண்டர் வன்னி கொன்றை
தும்பைவெள் ளடம்பு திங்க டேயநீ றணிந்த சென்னித்
தம்பிரா னமர்ந்த தானம் பலபல சார்ந்து தாழ்ந்து
கொம்பனு மாட னீடு கூடலை யாற்றூர் சார (௬௦௦)

செப்பரும் பதியிற் சேரார் திருமுது குன்றை நோக்கி
ஒப்பரும் புகழார் செல்லு மொருவழி யுமையா ளோடு
மெய்ப்பரம் பொருளா யுள்ளார் வேதிய ராகி நின்றார்
முப்புரி நூலுந் தாங்கி நம்பியா ரூரர் முன்பு (௬௦௧)

நின்றவர் தம்மை நோக்கி நெகிழ்ந்தசிந் தையராய்த் தாழ்வார்
இன்றியா முதுகுன் றெய்த வழியெமக் கியம்பு மென்னக்
குன்றவில் லாளி யாருங் கூடலை யாற்றூ ரேறச்
சென்றதிவ் வழிதா னென்று செலவழித் துணையாய்ச் செல்ல (௬௦௨)

கண்டவா கைகள் கூப்பித் தொழுதுபின் றொடர்வார்க் காணார்
வண்டலர் கொன்றை யாரை வடிவுடை மழுவென் றேத்தி
அண்டர்தம் பெருமா னபோந்த வதிசய மறியே னென்று
கொண்டெழு விருப்பி னோடுங் கூடலை யாற்றூர் புக்கார். (௬௦௩)

---

திருக்கூடலையாற்றூர் - பண் - புறநீர்மை.

திருச்சிற்றம்பலம்

வடிவுடைமழுவேந்திமதகரியுரிபோர்த்துப்
பொடியணிதிருமேனிப்புரிகுழலுமையோடுங்
கொடியணிநெடுமாடக்கூடலையாற்றூரில்
அடிகளிவ்வழிபோந்தவதிசயமறியேனே.

கூடலையாற்றூரிற்கொடியிடையவளோடும்
ஆடலுகந்தானையதிசயமிதுவென்று
நாடியவின்றமிழாலநாவலவூரன்சொற்
பாடல்கள்பத்தும்வல்லார்தமவினைபற்றறுமே.

திருச்சிற்றம்பலம்.

---

கூடலை யாற்றூர் மேவுங் கொன்றைவார் சடையி னார்தம்
பீடுயர் கோயில் புக்குப் பெருகிய வார்வம் பொங்க
ஆடகப் பொதுவி லாடு மறைகழல் வணங்கிப் போற்றி
நீடருள் பெற்றுப் போந்து திருமுது குன்றி னேர்ந்தார். (௬௦௪)

தடநிலைக் கோபு ரத்தைத் தாழ்ந்துமுன் னிறைஞ்சிக் கோயில்
புடைவலங் கொணடு புக்குப் போற்றினர் தொழுது வீழ்ந்து
நடநவில வாரை நஞ்சி யிடையெனுஞ் செஞ்சொன் மாலைத்
தொடைநிகழ் பதிகம் பாடித் தொழுதுகை சுமநது நின்று (௧௦௫)

---

### திருமுதுகுன்றம் - பண் - கொல்லிக்கௌவாணம்.

திருச்சிற்றம்பலம்.

நஞ்சியிடையின்றுநாளையென்றுமமைநச்சுவாா
துஞ்சியிட்டாறபின்னைசசெயவதென்னடிகேள்சொலீர்
பஞ்சியிடப்புட்டிலகீறுமோபணியீரருள்
முஞ்சியிடைசசஙகமாாககுஞசீரமுதுகுனறரே.

முத்திமுததாறுவலஞ்செயும்முதுகுன்றரைப்
பிததனொபபானடிததொணடனூரனபிதற்றிவை
தததுவஞானிகளாகிஞாதமொற்றிலாா
எததவததோகளுமெததுவாககிடரிலலையே.

திருசசிற்றமபலம

---

நாதாபாற் பொருடாம் வேண்டி நணணிய வண்ண மெல்லாங்
கோதறு மனததுட் கொணட குறிப்பொடும பரவும் போது
தாதவிழ் கொன்றை வேய்நதாா தாவருள் பெறுவாா சைவ
வேதியா தலைவர் மீணடு மெய்யிலவெண பொடியும் பாட. (௧௦௬)

---

### நம்பியென்ற திருப்பதிகம் - பண் - தக்கேசி.

திருச்சிற்றம்பலம்.

மெயயைமுற்றப்பொடிபூசியோாநம்பிவேதநான்கும்விரிததோதியோர்நமபி
கையிலோாவெணமழுவேநதியோாநமபிகணணும்மூன்றுமுடையாயொருந
செய்யநமபிசிறுசெஞசடைநமபிதிரிபுரநதீயெழசசெற்றதோாவில்லா [மபி
வெய்தநமபியெனனையாளுடைநம்பியெழுபிறப்புமெஙகணம்பிகணடாயே.

கரததினமபிகசியாதவாதமமைககசிந்தவர்ககிமமைமையோடம்மையிலின்பம்
பெருககுநமபிபெருககககருத்தா

திருச்சிற்றம்பலம்.

---

பனிமதிச சடையாா தாமும பன்னிரண் டாயி ரம்பொன்
தனியருள கொடுககு மாற்று னல்கிட வுடைய நம்பி
தனிவரு மகிழ்சசி பொஙகத தாழ்ந்தெழுந் தருகு சென்று
கனிவிட மிடற்றி னாமுன பின்னென்று கழற லுற்றார். (௧௦௭)

அருளுமிக கனக மெல்லா மடியனேற் காரு ருள்ளோர்
மருளுற வியப்ப வஙகே வரப்பெற வேண்டு மென்னத்
தெருளுற வெழுந்த வாக்காற் செழுமணி முத்தாற் றிட்டிப்
பொருளினை முழுது மாறூாக் குளததிற்போய்க் கொள்க வென்றார்.(௧௦௮)

என்றுதம் பிரானார் நல்கு மின்னருள் பெற்ற பின்னர்
வன்றொண்டர் மச்சம் வெட்டிக் கைக்கொண்டு மணிமுத் தாற்றிற்
பொன்றிர ளெடுத்து நீருட் புகவிட்டுப் போது கின்றார்
அன்றெனை வலிந்தாட் கொண்ட வருளிதி லறிவே னென்று. (௱௯)

மேவிய காதற் றொண்டு விரவுமெய் விருத்தி பெற்றார்
ஆவியின் விருத்தி யான வந்தணர் புலியூர் மன்றிற்
காவியங் கண்டர் கூத்துக் கண்டுகும் பிடுவ தென்று
வாவிசூழ் தில்லை மூதூர் வழிக்கொள்வான் வணங்கிப் போந்தார். (௧௧௦)

மாடுள பதிகள் சென்று வணங்கிப்போய் மங்கை பாகர்
நீடிய கடம்பூர் போற்றி நிறைந்தவா னந்தக் கூத்தர்
ஆடிய தில்லை மூதூ ரணைந்தணி வாயில் புக்குச்
சேடியர் மாட மன்னுஞ் செழுந்திரு வீதி சார்ந்தார். (௧௧௧)

பொற்றிரு வீதி தாழ்ந்து புண்ணிய விளைவா யோங்கு
நற்றிரு வாயி னண்ணி நலமலி யலங்கன் மார்பர்
மற்றதன் முன்பு மண்மேல் வணங்கியுட் புகுந்து பைம்பொற்
சுற்றுமா ளிகைசூழ் வந்து தொழுதுகை தலைமேற் கொள்வார். (௧௧௨)

ஆடிய திருமுன் பான வம்பொனின் கோபு ரத்தின்
ஊடுபுக் கிறைஞ்சி யோங்கு மொளிவளர் கனக மன்றில்
நாடகச் செய்ய தாளை நணுணுற வுண்ணி றைந்து
நீடுமா னந்த வெள்ளக் கண்கணீர் நிரந்து பாய (௧௧௩)

பரவுவாய் குளறிக் காதல் படிதிருப் படியைத் தாழ்ந்து
விரவுமெய் யங்க மைந்து மெட்டினும் வணங்கி வேட்கை
உரனுறு திருக்கூத் துள்ள மார்தரப் பெருகி நெஞ்சிற்
கரவிலா தவரைக் கண்ட நிறைவுதங் கருத்திற் கொள்ள. (௧௧௪)

வேறு.

மடித்தாடு மடிமைக்க ணன்றெடுத்து மன்னுயிர்கட் கருளு மாற்றால்
அடுத்தாற்று நன்னெறிக்க ணின்றார்கள் வழுவிநர கணையா வண்ணந்
தடுப்பானைப் பேருரிற் கண்டநிலை சிறப்பித்துத் தனிக்கூத் தென்று
நடிப்பானை நாமனமே பெற்றவா றெனுங்களிப்பா னயந்து பாடி (௧௧௫)

---

கோயில் - பண் - வியாழக்குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்

மடித்தாடுமடிமைக்கணன்றியேமனனேநீவாழுநாளுந்
தடுத்தாட்டித்தருமனார்தமர்செக்கிலிடும்போதுதடுத்தாட்கொள்வான்
கடுத்தாடுகரதலத்திற்றமருகமுமெரியகலுங்கரியபாம்பும்
பிடித்தாடிபுலியூர்ச்சிற்றம்பலத்தெம்பெருமானைப்பெற்றாமன்றே.

(௱௯) மச்சம்-மாற்று நிதானமறிய வெட்டிவைத்திருக்கும் பதிற்பொன். (௧௧௫) அடுத்து ஆற்றும் - நெருங்கிச் செய்யும்.

பாரூருமரவல்குலுமைநங்கையவள்பங்கன்பைங்கணேற்ற
னூரூரன்றருமனூர்தமாசெக்கிலிடும்போதுதடுத்தாட்கொள்வான்
ஆரூரன்றம்பிரானாரூரன்மீகொங்கிலணிகாஞ்சிவாய்ப்
பேரூரர்பெருமானைப்புலியூர்சசிற்றம்பலத்தேபெற்றாமன்றே
திருச்சிற்றம்பலம்.

---

மீளாத வருள்பெற்றுப் புறம்போந்து திருவீதி மேவித் தாழ்ந்தே
யாளான வன்றொண்ட ரந்தணர்க டாம்போற்ற வமர்ந்து வைகி
மாளாத பேரன்பாற் பொறபதியை வணங்கிப்போய் மறலி வீழத்
தாளாண்மை கொணடவாதங் கருப்பறிய லூரவணங்கிச் சென்று சார்ந்தார்

வேறு

கூற்றுதைததார திருககொகுடிக கோயி னண்ணிக் கோபுரத்தைத தொ
ழுதுபுகுந தன்பர் சூழ, ஏற்றபெருங காதலினு லிறைஞ்சி யேததி யெல்லை
யிலாப் பெருமகிழ்சசி மனத்தி லெயதப, போற்றிசைததுப் புறத்தணைந்தப்
பதியின் வைகிப் புனிதரவா தமைநினையு மின்பங கூறிச, சாற்றியமெய்த்
திருப்பதிகஞ் சிமமாந தெனனுந தமிழமாலை புனைந்தங்குச் சாரு நாளில். ()

---

### திருக்கருப்பறியலூர் - பண் - நட்டராகம்.

திருசசிறறமபலம

சிமமாந்துசிம்புளித்துசசிநதையினிலவைத்துகநது திறம்பாவண்ணங்
கைமமாவினுரிவைபாாததுமைவெருவககணடானைககருப்பறியலூர்க
கொயம்மாவின்மலாசசோலைககுயிலபாடமயிலாடுங்கொகுடிககோயில
எமமானைமனததினுனினைநதபோதவாநமககினியவாறே

கலைமலிநததெனபுலவாகற்றோாதம்மிடாதீர்ககுங்கருப்பறியலூர்க
குலைமலிநதகோட்டெங்குமட்டொழுகும்பூஞ்சோலைககொகுடிக்கோயில்
இலைமலிநதமழுவாளைமனததிலனபுசெய்தினபமெய்தி
மலைமலிநததோளாரூரனவனபபகையபபனுரைததவணடமிழ்களே
திருசசிற்றம்பலம்

---

கணணுதலார் விருமபுகருப் பறிய லூரைக கைதொழுது நீங்கிப்போய்க்
கயலகள பாயு, மணணிவளம படிககரையை நண்ணி யங்கு மாதொருபாகத்
தவாதாள வணங்கிப் போற்றி, யெணணிலபுகழ்ப் பதிகமுமுன் னவனென்
றேததி யேகுவாா வாழகொளிபுத தூரெய் தாது, புணணியனூர் போம்பொ
ழுது நினைநது மீணடு புகுகினறாா தலைக்கலனென் றெடுத்துப் போற்றி. ()

---

### திருப்பழமண்ணிப்படிக்கரை - பண் - நட்டராகம்.

திருச்சிற்றம்பலம்.

முன்னவனெங்கள்பிரான்முதல்காண்பரிதாயபிரான்
சென்னியிலெங்கள்பிரான் திருநீலமிடற்றெம்பிரான்
மன்னியவெங்கள்பிரான்மறைநான்குங்கல்லானிழற்கீழ்ப்
பன்னியவெங்கள்பிரான்பழமண்ணிப்படிககரையே.

பல்லுயிர்வாழுந்தெண்ணீர்ப்பழமண்ணிப்படிக்கரையை
யலலியந்தாமரைத்தாராரூரனுரைததமிழ்
சொல்லுதலகேட்டலவலலாரவாகருநதமக்குங்கிளைக்கும்
எல்லியுநணபகலுமிடாகூருதலிலலையன்றே.

திருச்சிற்றம்பலம்

---

## திருவாழ்கொளிபுத்தூர் - பண் - தக்கேசி.

திருச்சிற்றம்பலம்

தலைக்கலன்றலைமேற்றரித்தானைதன்னையென்னைநினைக்கத்தருவானைக், கொலைக்கையானையுரிபோர்த்துகந்தானைக்கூற்றுதைத்தகுரைசேர்கழலானை, யலைத்தசெங்கணைவிடையேறவல்லானையானையாலடியேனடிநாயேன, மலைத்தசெந்நெலவயலவாழ்கொளிபுத்தூர மாணிக்கத்தைமறந்தென்னினைக்கேனே.

வளங்கிளர்பொழில்வாழ்கொளிபுத்தூர்மாணிக்கத்தைமறந்தென்னினைக்கேனென, றுளங்குளிரதமிழூரன்வனறொண்டன்சடையன்காதலன்வனப்பகையப்பன், நலங்கிளாவயனுவலாவேந்தனங்கைசிங்கடிதந்தைபயந்த, பலங்கிளர்தமிழ்பாடவல்லார்மேறபறையுமாஞ்செய்தபாவங்கடாமே.

திருச்சிற்றம்பலம்.

---

திருப்பதிகம் பாடியே சென்றங் கெய்தித் தேவர்பெரு மானார்தங் கோயில் வாயி, லுருப்பொலியு மயிர்ப்புளகம் விரவத் தாழ்ந்தே யுள்ளணைந்து பணிந்தேத்தி யுருகு மன்பாற், பொருப்பரையன் மடப்பாவை யிடப்பா லானைப் போற்றிசைத்துப் புறம்போந்து தங்கிப்பூமென், கருப்புவயல் வாழ்கொளிபுத் தூரை நீங்கிக் கானாட்டு முள்ளூரிற் கலந்த போது (ககக)

கானாட்டு முள்ளூரைச் சாரும் போது கண்ணுதலா ரெதிர்காட்சி கொடுப்பக் கண்டு, தூநாணமென மலர்க்கொன்றைச் சடையார் செய்ய துணைப்பாத மலர்கண்டு தொழுதே னென்று, வானாளுந் திருப்பதிகம் வள்வா யென்னும் வண்டமிழின் றொடைமாலை மலரச் சாத்தித், தேனாரு மலர்ச் சோலை மருங்கு சூழ்ந்த திருவெதிர்கொள் பாடியினை யெய்தச் செல்வார் ( )

---

## திருக்கானாட்டுமுள்ளூர் - பண் - கொல்லிக்கௌவாணம்.

திருச்சிற்றம்பலம்

வள்வாயமதிமிளிரும்வளர்சடையினானைமறையவனைவாய்மொழியைவானவர்தங்கோனைப், புள்வாயைக்கீண்டுலகமவிழுங்கியுமிழ்ந்தானைப்பொன்னிறத்தின் முப்புரிநூனான்முகத்தினானை, முள்வாயமடறழுவிமுடத்தாழையீன்று மொட்டலார்ந்துவிரைநாறுமுருகுவிரிபொழில்சூழ், கள்வாயகருங்குவளைகண்வளருங்கழனிக்கானாட்டுமுள்ளூரிற்கண்டுதொழுதேனே

திரையினார்கடல்சூழ்ந்ததென்னிலங்கைக்கோனைச்செற்றவனைச்செஞ்சடைமேல்வெண்மதியினானை, நுரையினார்கரைதழுவுகொள்ளிடத்தின்கரைமேற்கானாட்டுமுள்ளூரிற்கண்டுகழறொழுது, உரையினார்மதயானைநாவலாரூர

னுரிமையாலுரைசெய்தவொண்டமிழ்கள்வல்லார், வரையினர்வகைஞாலமா ணடவர்க்குத்தாம்போய்வானவர்க்குந்தலைவராய்நிற்பரவர்தாமே.

திருச்சிற்றம்பலம்.

---

எத்திசையுந் தொழுதேத்த மத்த யானை யெடுத்தெதிர்கொள் பாடி யினை யடைவோ மென்னுஞ், சித்தநிலைத் திருப்பதிகம் பாடி வந்து செல்வ மிகு செழுங்கோயி லிறைஞ்சி நண்ணி, யத்தர்தமை யடிவணங்கி யங்கு வைகி யருள்பெற்றுத் திருவேள்விக் குடியி லெய்தி, முதநிதரும பெருமா னைத் துருத்தி கூட மூப்பதிலை யெனும்பதிக மொழிந்து வாழ்ந்தார் (கஉக)

---

### திருஎதிர்கொளபாடி - பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

மத்தயானையேறிமன்னர்சூழவருவீர்கள்
செத்தபோதேலாருமில்லைசிந்தையுள்வைம்மின்கள்
வைத்தவுள்ளமாற்றவேண்டாவம்மின்மனத்தீரே
யத்தர்கோயிலெதிர்கொள்பாடியென்பதடைவோமே

முத்துநீற்றுப்பவளமேனிச்செஞ்சடையானுறையும்
பத்தர்பந்தத்தெதிர்கொள்பாடிப்பரமனையேபணியச்
சித்தம்வைத்ததொண்டர்தொண்டன்சடையன்சிறுவன்
பத்தனூரன்பாடல்வல்லார்பாதம்பணிவாரே.

திருச்சிற்றம்பலம்.

---

### மூப்பதுமில்லை - பண் - நட்டராகம்.

திருச்சிற்றம்பலம்

மூப்பதுமில்லைப்பிறப்பதுமில்லையிறப்பதில்லைச்
சேர்ப்பதுகாட்டகத்தூரினுமாகச்சிந்திக்கில்லலாற்
காப்பதுவேள்விக்குடிதண்டுருத்தியெங்கோனரைமேல்
ஆர்ப்பதுநாகமறிந்தோமேனாமிவர்காட்பட்டோமே

கூடலாமன்னன்குலநாவலூரக்கோனலத்தமிழைப்
பாடவல்லபரமனடியார்க்கடிமைவழுவா
நாடவல்லதொண்டனூரனூட்படுமாறுசொல்லிப்
பாடவல்லார்பரலோகத்திருப்பதுபண்டமன்றே.

திருச்சிற்றம்பலம்.

---

வேறு.

காட்டுநல் வேள்விக் கோலங் கருத்துற வணங்கிக் காத
லூட்டிய வுள்ளத் தோடு நம்பியா ரூரா போற்றி
யீட்டிய தவத்தோர் சூழ வங்குநின் றேகி யன்பு
பூட்டியாட் கொண்டார் மன்னுந் தானங்க ளிறைஞ்சிப் போந்தார். (கஉஉ)

வேறு.

எஞ்சாத பேரன்பிற் றிருத்தொண்ட ருடனெய்தி
நஞ்சாருங் கறைமிடற்றா ரிடம்பலவு நயந்தேத்தி
மஞ்சாரும் பொழிலுடுத்த மலர்த்தடங்கள் புடைசூழுஞ்
செஞ்சாலி வயன்மருதத் திருவாரூர் சென்றடைந்தார் (கஉங)

செல்வமலி திருவாரூர்த் தேவரொடு முனிவர்களு
மல்குதிருக் கோபுரத்து வந்திறைஞ்சி யுட்புக்குக்
கெல்லையிலாக் காதன்மிக வெடுத்தமலர்க் கைகுவித்துப்
பல்குதிருத் தொண்டருடன் பரமர்திரு முன்னணைந்தார். (கஉச)

மூவாத முதலாகி நடுவாகி முடியாத
சேவாருங் கொடியாரைத் திருமூலட் டானத்துள்
ஓவாத பெருங்காத லுடனிறைஞ்சிப் புறம்போந்து
தாவாத புகழ்ப்பரவை யார்திருமா ளிகைசார்ந்தார் (கஉரு)

பொங்குபெரு விருப்பினொடு புரிகுழலார் பலர்போற்ற
வங்கயற்கட் செங்கனிவாய்ப் பரவையா ரடிவணங்கி
யெங்களையு நினைந்தருளிற் றெனவியப்ப வினிதளித்து
மங்கைநல்லா ரவரோடு மகிழ்ந்துறைந்து வைகுநாள் (கஉசு)

நாயனார் முதுகுன்றா நமக்களித்த நன்னிதியந்
தூயமணி முத்தாற்றிற் புகவிட்டேந் துணைவரவா
கோயிலின்மா ளிகைமேல்பாற் குளத்திலவ ரருளாலே
போயெடுத்துக் கொடுபோதப் போதுவா யெனப்புகல (கஉஎ)

என்னவதி சயமித்தா னென்சொன்ன வாறென்று
மின்னிடையார் சிறுமுறுவ லுடன்விளம்ப மெய்ப்புணர்ந்தார்
நன்னுதலா யென்னுடைய நாதனரு ளாற்குளத்திற்
பொன்னடைய வெடுத்துனக்குத் தருவதுபொய் யாதென்று (கஉஅ)

ஆங்கவரு முடன்போத வளவிறந்த விருப்பினுடன்
பூங்கோயி லுண்மகிழ்ந்த புனிதர்கழல் புக்கிறைஞ்சி
யோங்குதிரு மாளிகையை வலம்வந்தங் குடன்மேலைப்
பாங்குதிருக் குளத்தணைந்தார் பரவையார் தனித்துணைவர் (கஉகூ)

மற்றதனின் வடகீழ்பாற் கரைமீது வந்தருளி
முற்றிழையார் தமைநிறுத்தி முனைப்பாடித் திருநாடர்
கற்றைவார் சடையாரைக் கைதொழுது குளத்திலிழிந்
தற்றைநா ளிட்டெடுப்பார் போலங்குத் தடவுதலும் (கங௦)

நீற்றழகர் பாட்டுவந்து திருவிளையாட் டினினின்று
மாற்றறுசெம் பொன்குளத்து வருவியா தொழிந்தருள

ஆற்றினிலிட் டக்குளத்திற் றேடுவீ ரருளிதுவோ
சாற்றுமெனக் கோற்றொடியார் மொழிந்தருளத் தனித்தொண்டர். (௧௩௧)

முன்செய்த வருள்வழியே முருகலர்பூங் குழற்பரவை
தன்செய்ய வாயினகை தாராமே தாருமென
மின்செய்த நூன்மார்பின் வேதியர்தா முதுகுன்றிற்
பொன்செய்த மேனியினீ ரெனப்பதிகம் போற்றிசைத்து. (௧௩௨)

---

## திருமுதுகுன்றம் - பண் - நட்டராகம்.

திருச்சிற்றம்பலம்

பொன்செய்தமேனியினீர்புலிததோலையரைக்கசைத்தீர்
முன்செய்தமூவெயிலுமெரித்தீர்முதுகுன்றமர்ந்தீர்
மின்செய்தநுண்ணிடையாள்பரவையிவடன்முகப்பே
யென்செய்தவாறடிகேளடியேனிட்டளங்கெடவே

பிறையாருஞ்சடையெம்பெருமானருளாயெனறு
முறையாலவந்தமரர்வணங்குமமுதுகுன்றாதம்மை
மறையாாதங்குரிசில்வயல்நாவலாரூரன்சொன்ன
இறையாாபாடல்வல்லார்கமெளிதாஞ்சிவலோகமதே.

திருச்சிற்றம்பலம்.

---

முட்டவிமை யோரறிய முதுகுன்றிற் றந்தபொருள்
சட்டநான் பெறுதொழிந்த தளர்விஞற் கையறவா
மிட்டளத்தை யிவளெதிரே கெடுக்தருளு மெனுந்திருப்பாட்
டெட்டளவும் பொனகாட்டா தொழிந்தருள வேத்துவாா. (௧௩௩)

ஏததாதே யிருந்தறியே னெனுநதிருப்பாட் டெவ்வுலகுங்
காததாடு மமபலத்துக கண்ணுளனுங் கண்ணுதலைக்
கூத்தாதந் தருளாயிக் கோமளத்தின் முன்னென்று
நீத்தாருந் தொடர்வரிய நெறிநின்றார் பரவுதலும். (௧௩௪)

---

## மேற்பதிகத்தைச்சேர்ந்த தேவாரம்.

திருச்சிற்றம்பலம்.

ஏத்தாதிருந்தறியேனிமையோர்தனிநாயகனே
மூததாயுலகுக்கெல்லாமுதுகுன்றமமர்ந்தவனே
பூத்தாருங்குழலாள்பரவையிவடன்முகப்பே
கூததாதந்தருளாய்கொடியேனிட்டளங்கெடவே.

திருச்சிற்றம்பலம்.

---

(௧௩௩) கையறவாம இட்டளததை - திருவருள உதவியினறி வருநதுந துனபததை. எட்டு அளவும - எட்டுத திருபபாட்டு வரையில. (௧௩௪) அமபலத்துககண - கனகசபையில (அமபலததுக்கண் உளனும எனபபிரிததுச சிறறமபலத்தே திருக்கூததாடு பவனுகிய எனறு பொருள்கூறலுமொனறு; கண்ணுள் - கூதது.) கோமளம எனறது பரவையாரை. (ஆகுபெயா.)

கொந்தவிழ்பூங் கொன்றைமுடிக் கூத்தனார் திருவருளால்
வந்தெழுபொன் றிரளெடுத்து வருமுறையாற் கரையேற்ற
அந்தரத்து மலர்மாரி பொழிந்திழிந்த தவனியுள்ளோர்
இந்தவதி சயமென்னே யார்பெறுவா ரெனத்தொழுதார். (கஙரு)

ஞாலம்வியப் பெய்தவரு நற்கனக மிடையெடுத்து
மூலமெனக் கொடுபோந்த வாணியின்முன் னுரைப்பிக்க
நீலமிடற் றவரருளா லுரைதாழப் பின்னுநெடு
மாலயனுக் கரியகழல் வழுத்தினார் வன்றொண்டர். (கஙசு)

மீட்டுமவர் பரவுதலு மெய்யன்ப ரன்பில்வரும்
பாட்டுவந்து கூத்துவந்தார் படுவாசி முடிவெய்தும்
ஓட்டறுசெம் பொன்னொக்க வொருமாவுங் குறையாமல்
காட்டுதலு மகிழ்ந்தெடுத்துக் கொண்டுகரை யேறினார். (கஙஎ)

கரையேறிப் பரவையா ருடன்கனக மானதெலா
நிரையேயா ளிற்சுமத்தி நெடுநிலமா ளிகைபோக்கித்
திரையேறும் புனற்சடிலத் திருமூலட் டானத்தார்
விரையேறு மலர்ப்பாதந் தொழுதணைந்தார் வீதியினில். (கஙஅ)

வந்துதிரு மாளிகையி னுட்புகுந்து மங்கலவாழ்த்
தந்தமிலா வகையேத்து மளவிறந்தா ரொலிசிறப்பச்
சிந்தைநிறை மகிழ்ச்சியுடன் சேயிழையா ருடனமர்ந்தார்
சந்தமலி மலர்ச்சோலை நாவலர்தங் காவலனார் (கஙகூ)

அணியாரூர் மணிப்புற்றி னமர்ந்தருளும் பரம்பொருளைப்
பணிவாரங் கொருநாளிற் பாராட்டுந் திருப்பதிகந்
தணியாத வானந்தந் தலைசிறப்பத் தொண்டருடன்
றுணிவாய பொருள்வினவித் தொழுதாடிப் பாடுவார். (கசo)

பண்ணிறையும் வகைபாறு தாங்கியென வெடுத்தருளி
யுண்ணிறையு மனக்களிப்பா லுறுபுளக மயிர்முகிழ்ப்பக்
கண்ணிறையும் புனல்பொழியக் கரையிகந்த வானந்தம்
எண்ணிறைந்த படிதோன்ற வேத்திமகிழ்ந் தின்புற்றார். (கசக)

---

திருவாரூர் - பண் - நட்டராகம்.

திருச்சிற்றம்பலம்

பாறுதாங்கியகாடரோபடுதலையரோமலைப்பாவையோர்
கூறுதாங்கியகுழகரோகுழைக்காதரோகுறுங்கோட்டிள
ஏறுதாங்கியகொடியரோசுடுபொடியரோவிளங்கும்பிறை
ஆறுதாங்கியசடையரோநமக்கடிகளாகியவடிகளே.

---

(கஙஎ) படுவாசி முடிவெய்தும - அதிலுள்ள வாசிநீங்கிய. ஓட்டறு - மாற்றுயர்ந்த. மா - ஒன்றின் இருபதி லொருபங்கு.

படிசெய்நீர்மையிற்பத்தர்தாள்பணிந்தேத்தினேன்பணியீரருள்
வடிவிலான்றிருநாவலூரன்வனப்பகையப்பன்வன்றொண்டன்
செடியனாகிலுந்தீயனாகிலுந்தம்மையேமனஞ்சிந்திக்கும்
அடியனூரனையாள்வரோநமக்கடிகளாகியவடிகளே.

திருச்சிற்றம்பலம்

---

இன்புற்றங் கமர்நாளி லீறிலரு மறைபரவும்
வன்புற்றி னரவணிந்த மன்னவனா ரருள்பெற்ற
அன்புற்ற காதலுட னளவிறந்த பிறபதியும்
பொன்புற்கென் றிடவொளிருஞ் சடையாரைத் தொழப்போவார் (௧௪௨)

பரிசனமு முடன்போதப் பாங்கமைந்த பதிதொறுங்
கரியுரிவை யுரித்தார்தங் கழறொழுது மகிழ்ந்தேத்தித்
துரிசறுநற் பெருந்தொண்டர் நள்ளாறு தொழுவதற்குப்
புரிவுறுமெய்த் திருத்தொண்ட ரெதிர்கொள்ளப் புக்கணைந்தார் (௧௪௩)

விண்டடவு கோபுரத்தைப் பணிந்துகர மேற்குவித்துக்
கொண்டுபுகுந் தண்ணலார் கோயிலினை வலஞ்செய்து
மண்டியபே ரன்பினொடு மன்னுதிரு நள்ளாறர்
புண்டரிகச் சேவடிக்கீழ்ப் பொருந்தநில மிசைப்பணிந்தார் (௧௪௪)

அங்கணரைப் பணிந்தேத்தி யருளினாற் றொழுதுபோய்
மங்குலணி மணிமாடத் திருக்கடவூர் வந்தெய்தித்
திங்கள்வளர் முடியார்தந் திருமயா னமும்பணிந்து
பொங்குமிசைப் பதிகமரு வார்கொன்றை யெனப்போற்றி (௧௪௫)

---

திருக்கடவூர்மயானம் — பண் — பழம்பஞ்சுரம்.

திருச்சிற்றம்பலம்

மருவார்கொன்றைமதிசூடிமாணிக்கத்தின்மலைபோல
வருவார்விடைமேல்மாதோடுமகிழ்ந்துபூதப்படைசூழத்
திருமால்பிரமனிந்திரற்குந்தேவர்நாகர்தானவர்க்கும்
பெருமானகடவூர்மயானத்துப்பெரியபெருமானடிகளே.

மாடமல்குகடவூரில்மறையோரேத்துமயானத்துப்
பீடைதீரவடியார்க்கருளும்பெருமானடிகள்சீர்
நாடிநாவலாரூரன்நம்பிசொன்னநற்றமிழ்கள்
பாடுமடியார்கேட்பார்மேற்பாவமானபறையுமே.

திருச்சிற்றம்பலம்

---

திருவீரட் டானத்துத் தேவர்பிரான் சினக்கூற்றின்
பொருவீரந் தொலைத்தகழல் பணிந்துபொடி யார்மேனி
மருவீரத் தமிழ்மாலை புனைந்தேத்தி மலைவளைத்த
பெருவீரர் வலம்புரத்துப் பெருகார்வத் தொடுஞ்சென்றார் (௧௪௬)

---

**திருக்கடவூர்வீரட்டம் - பண் - நட்டராகம்.**

திருச்சிற்றம்பலம்.

பொடியார்மேனியனேபுரிநூலொருபாற்பொருந்த
வடியார்மூவிலைவேலவளர்கங்கையினமங்கையொடுங்
கடியார்கொன்றையனேகடவூர்தனுள்வீரட்டத்தெம்
அடிகேளென்னமுதேயெனக்கார்துணைநீயலதே.

காராரும்பொழில்சூழ்கடவூர்த்திருவீரட்டத்துள்
ஏராரும்மிறையைத்துணையாவெழில்நாவலர்கோன்
ஆரூரனடியானடித்தொண்டனுரைத்ததமிழ்
பாரோரேத்தவல்லார்பரலோகத்திருப்பாரே.

திருச்சிற்றம்பலம்.

---

வரையோடு நிகர்புரிசை வலம்புரத்தார் கழல்வணங்கி
யுரையோசைப் பதிகமெனக் கினியோதிப் போய்ச்சங்கக்
கிரையோடு மித்தூப மணித்தீப நித்திலப்பூந்
திரையோதங் கொண்டிறைஞ்சுந் திருச்சாய்க்கா டெய்தினார். (௧௪௭)

தேவர்பெரு மான்றன்னைத் திருச்சாய்க்காட் டினிற்பணிந்து
பாவலர்செந் தமிழ்மாலைத் திருப்பதிகம் பாடிப்போய்
மேவலர்தம் புரமெரித்தார் வெண்காடு பணிந்தேத்தி
நாவலர்கா வலரடைந்தார் நனிபள்ளித் திருநகரில். (௧௪௮)

நனிபள்ளி யமர்ந்தபிரான் கழல்வணங்கி நற்றமிழின்
புனிதநறுந் தொடைபுனைந்து திருச்செம்பொன் பள்ளிமுதற்
பனிமதிசேர் சடையார்தம் பதிபலவும் பணிந்துபோய்த்
தனிவிடைமேல் வருவார்தந் திருநின்றி யூர்சார்ந்தார். (௧௪௯)

நின்றியூர் மேயாரை நேயத்தாற் புக்கிறைஞ்சி
யொன்றியவன் புள்ளுருகப் பாடுவா ருடையவர்
சென்றுமுலை கொடாந்நகப் பாடியவே யெழுநூறு
மன்றுசிறப் பித்தவருஞ் சொற்றிருப்பதிக மருள்செய்தார். (௧௫௰)

அப்பதியி லனபருட னமர்ந்தகல்வா ரகலிடத்திற்
செப்பரிய புகழ்நீடூர் பணியாது செல்பொழுதில்
ஒப்பரிய வுணர்வினா லினைந்தருளித் தொழவுறுவார்
மெய்ப்பொருள்வண் டமிழ்மாலை விளம்பியே மீண்டணைந்தார். (௧௫௧)

மடலாரும் புனனீடூர் மருவினர்தாள் வணங்காது
விடலாமே யெனுங்காதல் விருப்புறுமத் திருப்பதிகம்

---

(௧௫௰) ஏழ் எழுநூறு - நாலாயிரத்துத் தொளாயிரம். அப்பர்சுவாமிகள் அருளிச்செய்த திருப்பதிகங்கள் நாற்பத்தொன்பதினாயிரமென்று திருமுறைகண்ட புராண முதலிய உண்மை நூல்களுணைப்ப, ரண்டு நாலாயிரத்துத்தொளாயிர மென்றது மாறுபாடென்று மலையற்க. அது பாட்டுத்தொகை; இது பதிகத்தொகை.

அடலார்சூ லப்படையார் தமைப்பாடி யடிவணங்கி
யுடலாரு மயிர்ப்புளக மிகப்பணிந்தங் குறைகின்றார். (௧௫௨)

அங்கணினி தமர்ந்தருளாற் றிருப்புன்கூ ரணைந்திறைஞ்சிக்
கொங்கலரு மலர்ச்சோலைத் திருக்கோலக் காவணையக்
கங்கைசடைக் கரந்தவர்தா மெதிர்காட்சி கொடுத்தருளப்
பொங்குவிருப் பாற்றொழுது திருப்பதிகம் போற்றிசைப்பார். (௧௫௩)

திருஞான சம்பந்தர் திருக்கைக ளாலொற்றிப்
பெருகார்வத் துடன்பாடப் பிஞ்ஞகனார் கண்டிரங்கி
யருளாலே திருத்தாள மளித்தபடி சிறப்பித்துப்
பொருணமாலைத திருப்பதிகம் பாடியே போற்றிசைத்தார். (௧௫௪)

மூவாத முழுமுதலார் முதற்கோலக் காவகன்று
தாவாத புகழ்ச்சண்பை வலங்கொண்டு தாழ்ந்திறைஞ்சி
நாவார்முத் தமிழ்விரகர் நற்பதங்கள் பரவிப்போய்
மேவார்தம் புரஞ்செற்றார் குருகாவூர் மேவுவார். (௧௫௫)

உண்ணீரின் வேட்கையுட னுறுபசியான் மிகவருந்திப்
பண்ணீர்மை மொழிப்பரவை யார்கொழுநா வரும்பாங்கர்க்
கண்ணீடு திருநுதலார் காதல்வரக் கருத்தறிந்து
தண்ணீரும் பொதிசோறுங் கொண்டுவழிச் சார்கின்றார். (௧௫௬)

வேனிலுறு வெயில்வெம்மை தணிப்பதற்கு விரைக்குளிர்மென்
பானன்மலர்த் தடம்போலும் பந்தரொரு பாலமைத்தே
யானமறை வேதியரா யருள்வேடங் கொண்டிருந்தார்
மானமருந் திருக்கரத்தார் வன்றொண்டர் தமைப்பார்த்து. (௧௫௭)

குருகாவூ ரமர்ந்தருளுங் குழகர்வழி பார்த்திருப்பத்
திருவாரூர்த் தம்பிரானா ரோழர்திருத் தொண்டருடன்
வருவாரப் பந்தரிடைப் புகுந்துதிரு மறையவர்பாற்
பெருகார்வஞ் செலவிருந்தார் சிவாயநம வெனப்பேசி (௧௫௮)

ஆலநிழற் கீழிருந்தா ரவர்தம்மை யெதிர்நோக்கிச்
சாலமிகப் பசித்தீரிப் பொதிசோறு தருகின்றேன்
காலமினித் தாழாமே கைக்கொண்டிங் கினிதருந்தி
யேலநறுங் குளிர்தண்ணீர் குடித்திளைப்புத் தீருமென. (௧௫௯)

வன்றொண்ட ரதுகேட்டு மறைமுனிவர் தரும்பொதிசோ
றின்றுநமக் கெதிர்விலக்க லாகாதென் றிசைந்தருளிப்
பொன்றயங்கு நூன்மார்பர் தரும்பொதிசோ றதுவாங்கிச்
சென்றுதிருத் தொண்டருடன் றிருவமுது செய்தருளி (௧௬௦)

எண்ணிறந்த பரிசனங்க ளெல்லாரு மினிதருந்தப்
பண்ணியபின் னம்மருங்குப் பசித்தணைந்தார் களுமருந்த

உண்ணிறைந்த வாரமுதா யொருகாலு முலவாதே
புண்ணியனார் தாமளித்த பொதிசோறு பொலிந்ததால் (௧௬௧)

சங்கரனார் திருவருள்போற் றண்ணீரின் சுவையார்ந்து
பொங்கிவரு மாதரவா லவர்நாமம் புகழ்ந்தேத்தி
யங்கயர்வாற் பளளியமர்ந் தருகணைந்தார் களுந்துயிலக்
கங்கைசடைக் கரந்தாரப் பந்தரொடுங் தாங்கரந்தார் (௧௬௨)

சித்தநிலை திரியாத திருநாவ லூர்மன்னர்
அத்தகுதி யினிற்பள்ளி யுணர்ந்தவரைக் காணுமை
யித்தனையா மாற்ற மறிந்திலே னெனவெடுத்து
மெய்த்தகைய திருப்பதிகம் விளம்பியே சென்றடைந்தார் (௧௬௩)

---

திருக்குருகாவூர் - பண் - நட்டராகம்.

திருச்சிற்றமபலம்.

இத்தனையாமாற்றையறிந்திலேனெம்பெருமான்
பித்தரேயெனநும்மைப்பேசுவாரிறரொல்லா
முத்தினைமணிதன்னைமாணிக்கமுளைத்தெழுந்த
வித்தனேகுருகாவூர்வெள்ளடைநீயன்றே.

வளங்கனிபொழின்மலகுவயலணிந்தழகாய
விளங்கொளிகுருகாவூர்வெள்ளடையுறைவானை
யிளங்கிளையாரூரன்வனப்பகையவளப்பன
உளங்குளிர்தமிழ்மாலைபத்தாகட்குரையாமே.

திருச்சிற்றம்பலம்

---

குருகாவூ ரமர்ந்தருளுங் குழகனார் கோயிலினுக
கருகார்பொற் கோபுரத்தை யணைந்திறைஞ்சி யுள்புக்கு
வருகாதல் கூரவலங் கொண்டுதிரு முன்வணங்கிப்
பருகாவின் னமுதத்தைக் கண்களாற் பருகினார் (௧௬௪)

கண்ணார்ந்த வின்னமுதைக் கையாரத் தொழுதிறைஞ்சிப்
பண்ணார்ந்த திருப்பதிகம் பாடியே பணிந்தேத்தி
யுண்ணாடும் பெருங்காத லுடையவரா தாம் புறத்தெய்தி
நண்ணார்வத் தொண்டருட னங்கினிது நயந்திருந்தார் (௧௬௫)

அந்நாளிற் றம்பெருமா னருள்கூடப் பணிந்தகன்று
மின்னார்செஞ் சடைமுடியார் விரும்புமிடம் பலவணங்கிக்
கன்னாடு மெயில்புடைசூழ் கழிப்பாலை தொழுதேத்தித்
தென்னாவ லூர்மன்னர் திருத்தில்லை வந்தடைந்தார். (௧௬௬)

சீர்வளருந் திருத்தில்லைத் திருவீதி பணிந்துபுகுந்
தேரவளர்பொற் றிருமன்று ளெடுத்தசே வடியிறைஞ்சிப்

பார்வளர மறைவளர்க்கும் பதியதனிற் பணிந்திறைவர்
போர்வளர மேருச்சிலையார் திருத்தினைமா நகர்புகுந்தார். (௧௬௭)

திருத்தினைமா நகர்மேவுஞ் சிவக்கொழுந்தைப் பணிந்துபோய்
நிருத்தனா ரமர்ந்தருளு நிறைபதிகள் பலவணங்கிப்
பொருத்தமிகுந் திருத்தொண்டர் போற்றுதிரு நாவலூர்
கருத்திலவரு மாதரவாற் கைதொழச்சென் றெய்தினார் (௧௬௮)

திருநாவ லூர்மன்னர் சேர்கின்றா ரெனக்கேட்டுப்
பெருநாமப் பதியோருந் தொண்டர்களும் பெருவாழ்வு
வருநாளென் றலங்கரித்து வந்தெதிர்கொண் டுள்ளணையச்
செருநாகத் துரிபுனைந்தார் செழுங்கோயி லுள்ளணைந்தார் (௧௬௯)

மேவியவத் தொண்டர்குழா மிடைந்தரவென் றெழுமோசை
மூவுலகும் போயொலிப்ப முதல்வனார் முன்பெய்தி
ஆவியினு மடைவுடையா ரடிக்கமலத் தருள்போற்றிக்
கோவலனான் முகனெடுத்துப் பாடியே கும்பிட்டார் (௧௭௦)

---

திருநாவலூர் — பண் — நட்டராகம்.

திருச்சிற்றம்பலம்

கோவலனான்முகன்வானவர்கோனுங்குற்றேவல்செய்ய
மேவலராமுப்புரந்தீயெழுவித்தவனோரம்பினால்
ஏவலனார்வெண்ணெய்நல்லூரில்வைத்தெனையாளுங்கொண்ட
நாவலனார்க்கிடமாவதுநந்திருநாவலூரே

நாதனுக்கூர்நமக்கூர்நரசிங்கமுனையரையன்
ஆதரித்தீசனுக்காட்செயுமூரணிநாவலூரென்
றோதநற்றக்கவன்றொண்டனாரூரனுரைத்ததமிழ்
காதலித்துங்கற்றுங்கேட்பவர்தம்வினைகட்டறுமே

திருச்சிற்றம்பலம்

---

நலம்பெருகு மப்பதியி னுடையவன் பொடுநயந்து
குலம்பெருகுந் திருத்தொண்டர் குழாத்தோடு மினிதமர்ந்து
சலம்பெருகுஞ் சடைமுடியார் தாள்வணங்கி யருள்பெற்றுப்
பொலம்புரிநூன் மணிமார்பர் பிறபதியுந் தொழப்போவார் (௧௭௧)

தண்டகமாந் திருநாட்டுத் தனிவிடையார் மகிழ்விடங்கள்
தொண்டரெதிர் கொண்டணையத் தொழுதுபோய்த் தூயநதி
வண்டறைபூம் புறவுமலை வளமருதம் பலகடந்தே
யெண்டிசையோர் பரவுதிருக் கழுக்குன்றை யெய்தினார். (௧௭௨)

தேனார்ந்த மலர்ச்சோலைத் திருக்கழுக்குன் றத்தடியார்
ஆனாத விருப்பினொடு மெதிர்கொள்ள வடைந்தருளித்

---

(௧௭௨) தண்டகமாந்திருநாடு - தொண்டைநாடு.

தூநாள்வெண் மதியணிந்த சுடர்க்கொழுந்தைத் தொழுதிறைஞ்சிப்
பானாறு மின்னிசையின் றிருப்பதிகம் பாடினார் (கஎங)

பாடியவப் பதியின்க ணினிதமர்ந்து பணிந்துபோய்
நாடியநல் லுணர்வினொடு திருக்கச்சூர் தனைநண்ணி
யாடகமா மதில்புடைசூ ழாலக்கோ யிலினமுதைக்
கூடியமெய் யன்புருகக் கும்பிட்டுப் புறத்தணைந்தார் (கஎச)

அணைந்தருளு மவ்வேலை யமுதுசெயும் பொழுதாகக்
கொணர்ந்தமுது சமைத்தளிக்கும் பரிசனமுங் குறுகாமைத்
தணந்தபசி வருத்தத்தாற் றம்பிரான் றிருவாயிற்
புணர்ந்தமதிற் புறத்திருந்தார் முனைப்பாடிப் புரவலனார். (கஎரு)

வன்றொண்டர் பசிதீர்க்க மலையின்மேல் மருந்தானார்
மின்றங்கு வெண்டலையோ டொழிந்தொருவெற் றோடேந்தி
யன்றங்கு வாழ்வாரோ ரந்தணராய்ப் புறப்பட்டுச்
சென்றன்பர் முகநோக்கி யருள்கூரச் செப்புவார். (கஎசு)

மெய்ப்பசியால் மிகவருந்தி யிளைத்திருந்தீர் வேட்கைவிட
இப்பொழுதே சோறிரந்திங் கியானுமக்குக் கொணர்கின்றேன்
அப்புறநீ ரகலாதே சிறிதுபொழு தமருமெனச்
செப்பியவர் திருக்கச்சூர் மனைதோறுஞ் சென்றிரப்பார். (கஎஎ)

வெண்டிருநீற் றணிதிகழ விளங்குநூ லொளிதுளங்கக்
கண்டவர்கண் மனமுருகக் கடும்பகற்போ திடும்பலிக்குப்
புண்டரிகக் கழல்புவிமேற் பொருந்தமனை தொறும்புகுந்து
கொண்டுதாம் விரும்பியாட் கொண்டவர்முன் கொடுவந்தார் (கஎஅ)

இரந்துதாங் கொடுவந்த வின்னடிசி லுங்கறியும்
அரந்தைதரும் பசிதீர வருந்துவீ ரெனவளிப்பப்
பெருந்தகையார் மறையவர்தம் பேரருளின் றிறம்பேணி
நிரந்தபெருங் காதலினா னேர்தொழுது வாங்கினார் (கஎகூ)

வாங்கியவத் திருவமுது வன்றொண்டர் மருங்கணைந்த
ஓங்குதவத் தொண்டருட னுண்டருளி யுவந்திருப்ப
ஆங்கருகு நின்றார்போ லவர்தம்மை யறியாமே
நீங்கினா ரெப்பொருளு நீங்காத நிலைமையினார் (கஅ0)

திருநாவ லூராளி சிவயோகி யார்நீங்க
வருநாம மறையவனா ரிம்மறையவனா ரெனமதித்தே
பெருநாதச் சிலம்பணிசே வடிவருந்தப் பெரும்பகற்கண்
உருநாடி யெழுந்தருளிற் றெனைப்பொருட்டா மெனவுருகி (கஅக)

வேறு

முதுவா யோரி யென்றெடுத்து முதல்வ னார்தம் பெருங்கருணை
யதுவா மிதுவென் றதிசயம்வந் தெய்தக் கண்ணீர் மழையருவிப்

புதுவார் புனலின் மயிர்ப்புளகம் புதையப் பதிகம் போற்றிசைத்து
மதுவா ரிதழி முடியாரைப் பாடி மகிழ்ந்து வணங்கினர். (௧௮௨)

திருக்கச்சூராலக்கோயில் - பண் - கொல்லிக்கவ்வாணம்.

திருச்சிற்றம்பலம்.

முதுவாயோரிகதறமுதுகாட்டெரிகொண்டாடல்முயல்வானே
மதுவார்கொன்றைப்புதுவீசூடுமலையான்மகடன்மணவாளா
கதுவாய்த்தலையிற்பலிநீகொள்ளக்கண்டாலடியாரகவலரே
யதுவேயாமாறிதுவோகச்சூராலக்கோயிலம்மானே.

அன்னமன்னும்வயலசூழ்கச்சூராலக்கோயிலம்மானை
யுன்னமுன்னுமனத்தாரூரனாரூரன்பேர்முடிவைதத
மன்னுபுலவன்வயனுவலர்கோனசெஞ்சொலநாவன்வன்றொண்டன்
பன்னுதமிழ்நூல்மாலைவல்லாரவரெனறலைமேற்பயில்வாரே.

திருச்சிற்றம்பலம்.

வந்தித் திறைவ ரருளாற்போய் மஙகை பாகர் மகிழ்ந்தவிட
முந்தித் தொண்ட ரெதிர்கொள்ளப் புக்கு முகக்ட் பெருமானைச்
சிந்தித் திடவந் தருள்செய்கழல் பணிந்து செஞ்சொற் றொடைபுனைந்தே
யந்திச் செககர்ப் பெருகொளியா ரமருங காஞ்சி மருஙகணைந்தார். (௧௮௩)

அன்று வெண்ணெய் நல்லூரி லரியு மயனுந தொடர்வரிய
வென்றி மழவெள் விடையுயாததார வேத முதலவ ராயவந்து
நின்று சபைமுன் வழக்குரைதது நேரே தொடாந்தாட் கொண்டவர்தாம்
இன்றிங கெய்தப் பெற்றோமென் றெயில்சூழ் காஞ்சி நகாவாழ்வார். (௧௮௪)

மல்கு மகிழ்ச்சி மிகப்பெருக மறுகு மணிதோ ரணநாட்டி
யல்கு தீப நிறைகுடங்க ளகிலின் றூபங கொடியெடுதது
செல்வ மனைக ளலஙகரித்துத தெற்றி யாடன் முழவதிரப்
பல்கு தொணட ருடன்கூடிப் பதியின் புறமபோ யெதிர்கொண்டார். ( )

ஆண்ட நம்பி யெதிர்கொணட வடியார வணஙக வெதிர்வணஙகி
நீண்ட மதிட்கோ புரஙகடநது நிரைமா ளிகைவீ தியிறபோநது
பூண்ட காதல வாழ்ததினுடன் புனைமஙகலதூ ரியமொலிப்ப
ஈண்டு தொண்டா பெருகுதிரு வேகாம் பரஞ்சென றெயதினர். (௧௮௬)

ஆழி நெடுமா லயன்முதலா மமரா நெருஙகு கோபுரமுன்
பூழி யுறமண் மிசைமேனி பொருந்த வணஙகிப் புகுநதருளிச
சூழு மணிமா ளிகைபலவுந் தொழுது வணஙகி வலஙகொண்டு
வாழி மணிப்பொற் கோயிலினுள் வநதா ரணுகக வன்றொண்டர். (௧௮௭)

கைகள் கூப்பி முன்னணைவார் கம்பை யாறு பெருகிவா
ஐயா தமககு மிகவஞ்சி யாரத் தழுவிக் கொண்டிருநத
மையு லாவுங கருநெடுஙகண மலையா ளென்றும வழிபடுபூஞ்
செய்ய கமலச் சேவடிக்கீழ்த் திருந்து காத லுடன்வீழ்நதார். (௧௮௮)

வீழ்ந்து போற்றிப் பரவசமாய் விம்மி யெழுந்து மெய்யன்பால்
வாழ்ந்த சிந்தை யுடன்பாடி மாறா விருப்பிற் புறம்போந்து
சூழ்ந்த தொண்ட ருடன்மருவு நாளிற் றொல்லைக் கச்சிநகர்த்
தாழ்ந்த சடையா ராலயங்கள் பலவுஞ் சார்ந்து வணங்குவார். (௧௮௯)

சீரார் காஞ்சி மன்னுதிருக் காமக் கோட்டஞ் சென்றிறைஞ்சி
நீரார் சடையா ரமர்ந்தருளு நீடு திருமேற் றளிமேவி
யாரா வன்பிற் பணிந்தேத்து மளவி னூந்தா வொண்சுடராம்
பாரார் பெருமைத் திருப்பதிகம் பாடி மகிழ்ந்து பரவினார். (௧௯௦)

---

### திருமேற்றளி - பண் - நட்டராகம்.

திருச்சிற்றம்பலம்

நூந்தாவொண்சுடரே நுனையேநினைந்திருந்தேன்
வந்தாய்போயறியாய்மனமேபுகுந்துநின்ற
சிந்தாயெந்தைபிரான்றிருமேற்றளியுறையும்
எந்தாயுன்னையல்லாலினியேத்தமாட்டேனே.

பாரூர்பல்லவனூர்மதிற்காஞ்சிமாநகர்வாய்ச்
சீரூரும்புறவிற்றிருமேற்றளிச்சிவனை
யாரூரன்னடியானடித்தொண்டனாரூரன்சொன்ன
சீரூர்பாடல்வல்லார்சிவலோகஞ்சேர்வாரே.

திருச்சிற்றம்பலம்

---

ஓண காந்தன் றளிமேவு மொருவர் தம்மை யுரிமையுடன்
பேணி யமைந்த தோழமையாற் பெருகு மடிமைத் திறம்பேசிக்
காண மோடு பொன்வேண்டி நெய்யும் பாலுங் கலைவிளங்கும்
யாணாப் பதிக மெடுத்தேத்தி யெண்ணி னிதிபெற் றினிதிருந்தார். (௧௯௧)

---

### திருவோணகாந்தன்றளி - பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

நெய்யும்பாலுந்தயிருங்கொண்டுநித்தம்பூசனைசெய்யலுற்றார்
கையிலொன்றுங்காணமில்லைக்கழலடிதொழுதுய்யினல்லால்
ஐவர்கொண்டிங்காட்டவாடியாழ்குழிப்பட்டழுந்துவேனுக்
குய்யுமாறென்றருளிச்செய்யீரோணகாந்தன்றளியுளீரே.

ஓவணமேலெருதொன்றேறுமோணகாந்தன்றளியுளார்தா
மாவணஞ்செய்தாளுங்கொண்டவரைதுகிலொடுபட்டுவீக்கிக்
கோவணமேற்கொண்டவேடங்கோவையாகவாரூரன்சொன்ன
பாவணத்தமிழ்பத்தும்வல்லார்க்குப்பறையுந்தாஞ்செய்தபாவந்தானே.

திருச்சிற்றம்பலம்.

---

(௧௯௧) யாணா - புதிய ; அழகிய.

அங்க ணமர்வா ரனேகதங் காபதத்தை யெய்தி யுள்ளணைந்து
செங்கண் விடையார் தமைப்பணிந்து தேனெய் புரிந்தென் றெடுத்ததமிழ்
தங்கு மிடமா மெனப்பாடித் தாழ்ந்து பிறவுந் தானங்கள்
பொங்கு காத லுடன்போற்றிப் புரிந்தப் பதியிற் பொருந்துநாள். (௧௬௨)

---

**திருக்கச்சிஅனேகதங்காபதம் - பண் - இந்தளம்.**

திருச்சிற்றம்பலம்

தேனெய்புரிந்துழல்செஞ்சடையெம்பெருமானதிடந்திகழைங்கணையக்
கோனையெரித்தெரியாடியிடங்குலவானதிடங்குறையாமறையா
மானையிடத்ததோர்கையனிடம்மதமாறுபடப்பொழியும்மலைபோல்
ஆனையுரித்தபிரானதிடங்கலிக்கச்சியனேகதங்காபதமே

வீடுபெறப்பலவூழிகணின்றுநினைக்குமிடம்வினைதீருமிடம்
பீடுபெறப்பெரியோர்திடங்கொண்டுமேவினர்தங்களைக்காக்குமிடம்
பாடுமிடத்தடியான்புகழூரனுரைத்தசவின்மாலைகள்பத்துமவல்லார்
கூடுமிடஞ்சிவலோகனிடங்கலிக்கச்சியனேகதங்காபதமே

திருச்சிற்றம்பலம்

---

பாட லிசையும் பணியினாற் பாவை தழுவக் குழைகம்பர்
ஆடன் மருவுஞ் சேவடிகள் பரவிப் பிரியா தமர்கின்றார்
நீட மூதூர்ப் புறத்திறைவர் நிலவும் பதிக டொழவிருப்பான்
மாட நெருங்கு வன்பார்த்தான் பனங்காட் டூரில் வந்தடைந்தார். (௧௬௩)

செல்வ மல்கு திருப்பனங்காட் டூரிற் செம்பொற் செழுஞ்சுடரை
யல்ல லறுக்கு மருமருந்தை வணங்கி யன்பு பொழிகண்ணீர்
மல்க நின்று விடையின்மேல் வருவா ரெனும்வண் டமிழ்ப்பதிக
நல்ல விசையி னுடன்பாடிப் போந்து புறம்பு நண்ணுவார். (௧௬௪)

---

**திருவன்பார்த்தான்பனங்காட்டூர் - பண் - சீகாமரம்.**

திருச்சிற்றம்பலம்

விடையின்மேல்வருவானைவேதத்தின்பொருளானை
அடையிலன்புடையானையாவர்க்குமறியொண்ணா
மடையில்வாளைகள்பாயும்வன்பார்த்தான்பனங்காட்டூர்ச்
சடையிற்கங்கைதரித்தானைச்சாராதார்சார்வென்னே.

பாருரும்பனங்காட்டூர்ப்பவளத்தின்படியானைச்
சீருருந்திருவாரூர்ச்சிவன்பேர்சென்னியில்வைத்த
வாரூரனடித்தொண்டனடியன்சொல்லடிநாய்சொல்
ஊரூரனுரைசெய்வாருயர்வானத்துயர்வாரே.

திருச்சிற்றம்பலம்.

---

மன்னு திருமாற் பேறணைந்து வணங்கிப் பரவித் திருவல்லந்
தன்னு ளெய்தி யிறைஞ்சிப்போய்ச் சாரு மேல்பாற் சடைக்கற்றைப்

பின்னன் முடியா ரிடம்பலவும் பேணி வணங்கிப் பெருந்தொண்டர்
சென்னி முகிலோய் தடங்குவட்டுத் திருக்கா ளத்தி மலைசேர்ந்தார். (ககரு)

தடுக்க லாகாப் பெருங்காதற் றலைநின் றருளுங் கண்ணப்பர்
இடுக்கண் களைந்தாட் கொண்டருளு மிறைவர் மகிழ்ந்த காளத்தி
யடுக்கல் சேர வணைந்துபணிந் தருளா லேறி யன்பாறு
மடுப்பத திருமுன் சென்றெய்தி மலைமேன் மருந்தை வணங்கினார். (ககசா)

வணங்கி யுள்ளங் களிகூர மகிழ்ந்து போற்றி மதுரவிசை
யணங்கு செண்டா டெனும்பதிகம பாடி யனபாற் கண்ணப்பர்
மணங்கொள மலர்ச்சே வடிபணிந்து வாழ்ந்து போந்து மன்னுபதி
யிணங்கு தொணட ருடன்கெழுமி யின்புற்றிருக்கு மநநாளில. (ககஎ)

---

### திருக்காளத்தி - பண் - நட்டராகம்.

திருசசிற்றம்பலம்

செண்டாடும்விடையாய்சிவனேயென்செழுஞ்சுடரே
வண்டாருங்குழலாளுமைபாகமகிழ்நதவனே
கண்டார்காதலிக்குங்கணநாதனெங்காளத்தியா
யணடாயுன்னையலலாலறிநதேத்தமாட்டேனே.

காரூரும்பொழில்சூழ்கணநாதனெங்காளத்தியுள
ஆராவின்னமுதையணிநாவலாரூரன்சொனன
சீரூர்செந்தமிழ்களசெபபுவார்வினையாயினபோய்ப்
பேராவிணணுலகமபெறுவார்பிழைப்பொன்றிலரே.

திருசசிற்றம்பலம்

---

வடமா திரத்துப் பருப்பதமுந் திருக்கே தார மலைமுதலா
இடமா வரனா ராமுவந்த வெல்லா மிங்கே யிருநதிறைஞ்சி
நடமா டியசே வடியாரை நண்ணி னாரபோ லுண்ணிறைந்து
திடமாங கருததிற் றிருப்பதிகம பாடிக் காதல் சிறநதிருந்தார். (ககஅ)

---

### திருக்கேதாரம் - பண் - நட்டபாடை

திருச்சிற்றம்பலம்.

வாழ்வாவதுமாயம்மிது மண்ணாவது திண்ணம்
பாழ்போவதுபிறவிககடல்பசிநோய்செய்தபறிதான்
தாழாதறஞ்செய்மின் றடங்கண்ணான் மலரோனுங
கீழ்மேலுறநின்றான் றிருக்கேதாரமெனீரே.

நாவின்மிசையரையன்னொடுதமிழ்ஞானசம்பந்தன்
யாவர்சிவனடியாகளுக்கடியானடிதொண்டன்
தேவன் றிருககேதாரதடதையூரன் னுரைசெயத
பாவின்றமிழ்வல்லார்பரலோகத்திருப்பாரே.

திருச்சிற்றம்பலம்.

---

அங்குச் சிலநாள் வைகியபின் னருளாற் போந்து பொருவிடையார்
தங்கு மிடங்க ளெனைப்பலவுஞ் சார்ந்து தாழ்ந்து தமிழ்பாடிப்
பொங்கு புணரிக் கரைமருங்கு புவியுட் சிவலோ கம்போலத்
திங்கண் முடியா ரமர்ந்ததிரு வொற்றி யூரைச் சென்றடைந்தார். (௧௯௯)

அண்ண லொருடாந்தா வணங்காட்டி யாண்ட நம்பி யெழுந்தருள
எண்ணில் பெருமை யாதிபுரி யிறைவ ரடியா ரெதிர்கொள்வார்
வண்ண வீதி வாயிலொறும் வாழை கமுகு தோரணங்கள்
சுண்ண நிறைபொற் குடந்தூப தீப மெடுத்துத் தொழவெழுங்கால் (௨௦௦)

வரமங் கலநல் லியமுழங்க வாச மாலை யணியரங்கிற்
புரமங் கையர்க ணடமாடப் பொழியும் வெள்ளப் பூமாரி
யரமங் கையரு மமரர்களும் வீச வன்ப ருடன்புகுந்தார்
பிரமன் றலையிற் பலியுவந்த பிரானா ரிரும்பு பெருந்தொண்டர். (௨௦௧)

ஒற்றி யூரி னுமையோடுங் கூட நின்ற ருயர்தவத்தின்
பற்று மிக்க திருத்தொண்டர் பரந்த கடல்போல் வந்தீண்டிச்
சுற்று மணைந்து துதிசெய்யத் தொழுது தம்பி ரானன்பர்
கொற்ற மழவே றுடையவாதங் கோயில் வாயி லெய்தினார். (௨௦௨)

வானை யளக்குங் கோபுரத்தை மகிழ்ந்து பணிந்து புகுந்துவளர்
கூன லிளவெண் பிறைச்சடையார் கோயில் வலங்கொண் டெதிர்குறுகி
யூனு முயிருங் கரைந்துருக வுச்சி குவித்த கையினுடன்
ஆன காத லுடன்வீழ்ந்தா ராரா வன்பி னூரர். (௨௦௩)

எட்டு வரியி லொற்றியூர் நீங்க லென்ன வெழுத்தறியு
நாட்ட மலருந் திருநுதலார் நறும்பொற் கமலச் சேவடியிற்
கூட்டு முணர்வு கொண்டெழுந்து கோதி லமுத விசைகூடப்
பாட்டும் பாடிப் பரவியெனும் பதிக மெடுத்துப் பாடினார். (௨௦௪)

---

திருவொற்றியூர் - பண் - குறிஞ்சி

திருச்சிற்றம்பலம்

பாட்டும்பாடிப்பரவித்திரிவார், ஈட்டும்வினைகடீர்ப்பார்கோயில்
காட்டுங்கலமுந்திமிலுங்கரைக்கே, யோட்டுந்திரைவாயொற்றியூரே.

ஒற்றியூருமரவும்பிறையும், பற்றியூரும்பவளச்சடையர்
ஒற்றியூர்மேலூரனுரைத்த, கற்றுப்பாடக்கழியும்வினையே

திருச்சிற்றம்பலம்

---

பாடி யறிவு பரவசமாம் பரிவு பற்றப் புறம்போந்து
நீடு விருப்பிற் பெருங்காத னிறைந்த வன்பர் பலர்போற்றத்
தேடு மயனுந் திருமாலு மறிதற் கரிய திருப்பாதங்
கூடுங் காலங் களிலணைந்து பரவிக் கும்பிட் டினிதிருந்தார். (௨௦௫)

இந்த நிலைமை யாரிவரிங் கிருந்தார் முன்பே யிவர்க்காக
அந்தண் கயிலை மலைநீங்கி யருளாற் போந்த வநிந்திதையார்
வந்து புவிமே லவதரித்து வளர்ந்து பின்பு வன்றொண்டர்
சந்த விரைசூழ் புயஞ்சேர்ந்த பரிசு தெரியச் சாற்றுவாம் (௨௦௬)

நாலாங் குலத்திற் பெருகுநல முடையார் வாழும் ஞாயிற்றின்
மேலாங் கொள்கை வேளாண்மை மிக்க திருஞா யிறுகிழவர்
பாலா தரவு தருமகளா ராகிப் பார்மே லவதரித்தார்
ஆலா லஞ்சேர் கறைமிடற்றா ரருளான் முன்னை யநிந்திதையார். (௨௦௭)

மலையான் மடந்தை மலர்ப்பாத மறவா வன்பால் வந்தநெறி
தலையா முணர்வு வந்தணையத் தாமே யறிந்த சங்கிலியார்
அலையார் வேற்கட் சிறுமகளி ராயத் தோடும் விளையாட்டு
நிலையா யினவப் பருவங்க டோறு நிகழ நிரம்புவார். (௨௦௮)

சீர்கொண் மரபில் வருஞ்செயலே யன்றித் தெய்வ நிகழ்தன்மை
பாரி லெவரு மதிசயிக்கும் பண்பில் வளரும் பைந்தொடியார்
வாரு மணிய வணியவாம் வளர்மென் முலைக ளிடைவருத்தச்
சாரும் பதத்திற் றந்தையார் தங்கண் மனைவி யார்க்குரைப்பார். (௨௦௯)

வடிவுங் குணமு நம்முடைய மகட்கு மண்ணு ளோர்க்கிசையும்
படிவ மன்றி மேற்பட்ட பரிசாம் பான்மை யறிகிலோங்
கடிசேர் மணமு மினிநிகழுங் கால மெனனக் கற்புவளர்
கொடியே யனைய மனைவியா ரேற்கு மாற்றாற கொடுமென்றார். (௨௧௦)

தாய ரோடுந் தந்தையார் பேசக் கேட்ட சங்கிலியார்
ஏயு மாற்ற மன்றிதுவெம் பெருமா னீசன் றிருவருளே
மேய வொருவர்க் குரியதியான் வேறென் விளைவு மெனவெருவுற்
றாய வுணர்வு மயங்கிமிக வயர்ந்தே யவனி மேல்விழுந்தார் (௨௧௧)

பாங்கு நின்ற தந்தையார் தாயார் பதைத்துப் பரிந்தெடுத்தே
யேங்கு முள்ளத் தினராகி யிவளுக் கென்னோ வுற்றதெனத்
தாங்கிச் சீத விரைப்பனிநீர் தெளித்துத் தைவந் ததுநீங்க
வாங்கு சிலைநன் னுதலாரை வந்த தனக்கிங் கென்னென்றார். (௨௧௨)

என்று தம்மை யீன்றெடுத்தார் வினவ மறைவிட் டியம்புவார்
இன்றென் றிறத்து நீர்மொழிந்த விதுவென் பரிசுக் கிசையாது
வென்றி விடையா ரருள்செய்தா ரொருவர்க் குரியேன் யானினிமேற்
சென்று திருவொற் றியூரணைந்து சிவனா ரருளிற் செல்வனென. (௨௧௩)

அந்த மாற்றங் கேட்டவர்தா மயாவும் பயமு மதிசயமும்
வந்த வுள்ளத் தினராகி மற்ற மாற்ற மறைத்தொழுகப்

(௨௧௧) உரியது - திணைவழுவமைதி.

பந்த நீடு மிவர்குலத்து நிகரா மொருவன் பரிசறியான்
சிந்தை விரும்பி மகட்பேச விடுத்தார் சிலருஞ் சென்றிசைத்தார். (௨௧௪)

தாதை யாரு மதுகேட்டுத் தன்மை விளம்பத் தகாமையினால்
ஏத மெய்தா வகைமொழிந்து போக்க வவரங் கெய்தாமுன்
நீதங் கிழைத்தே யிறந்தான்போற் செல்ல விடுத்தா ருடன்சென்றான்
மாத ராரைப் பெற்றார்மற் றதனைக் கேட்டு மனமருண்டார் (௨௧௫)

தைய லார்சங் கிலியாரத் திறத்துப் பேசத் தகாவார்த்தை
யுய்ய வேண்டு நினைவுடையா ருரையா ரெனவிங் குலகறியச்
செய்த விதிபோ லிதுநிகழச் சிறந்தாரங் குள்ள படிசெப்பி
நையு முள்ளத் துடனஞ்சி நங்கை செயலே யுடன்படுவார். (௨௧௬)

அணங்கே யாகு மிவள்செய்கை யறிந்தோர் பேச வஞ்சுவரால்
வணங்கு மீசர் திறமன்றி வார்த்தை யறியாண் மற்றொன்றும்
குணங்க ளிவையா மினியிவடான் குறித்த படியே யொற்றிநகர்ப்
பணங்கொ ளரவச் சடையார்தம் பாற்கொண் டணைவோ மெனப்பகர்வார்.

பண்ணார் மொழிச்சங் கிலியாரை நோக்கிப் பயந்தா ரொடுங்கிளைஞர்
தெண்ணீர் முடியார் திருவொற்றி யூரிற் சேர்ந்து செல்கதியுங்
கண்ணார் நுதலார் திருவருளா லாகக் கன்னி மாடத்துத்
தண்ணார் தடஞ்சூ ழநகரிற் றங்கிப் புரிவீர் தவமென்று (௨௧௮)

பெற்ற தாதை சுற்றத்தார் பிறைசேர் முடியார் விதியாலே
மற்றச் செயலொன் றறியாது மங்கை யார்சங் கிலியார்தாஞ்
சொற்ற வண்ணஞ் செய்ததுணிந்து துதைந்த செல்வத் தொடும்புரங்கள்
செற்ற சிலையார் திருவொற்றி யூரிற் கொண்டு சென்றணைந்தார். (௨௧௯)

சென்னி வளர்வெண் பிறையணிந்த சிவனார் கோயி லுட்புகுந்து
துன்னுஞ் சுற்றத் தொடும்பணிந்து தொல்லைப் பதியோ ரிசைவினாற்
கன்னி மாட மருங்கமைத்துக் கடிசேர் முறைமைக் காப்பியற்றி
மன்னுஞ் செல்வத் தகவுய்த்துத் தந்தை யார்வந் தடிவணங்கி (௨௨௦)

யாங்க ளுமக்குப் பணிசெய்ய வீசற் கேற்ற பணிவிரும்பி
யோங்கு கன்னி மாடத்தி லுறைகின் றீரென் றுரைக்கின்றார்
தாங்கற் கரிய கண்கணீர்த் தாரை யொழுகத் தரியாதே
யேங்கு சுற்றத் தொடுமிறைஞ்சிப் போனா ரெயில்சூழ் தம்பதியில். (௨௨௧)

காதல் புரிந்து தவம்புரியுங் கன்னி யாரங் கமர்கின்றார்
பூத நாதர் கோயிலினிற் காலந் தோறும் புக்கிறைஞ்சி
நீதி முறைமை வழுவாது தமக்கு நேர்ந்த பணிசெய்யச்
சீத மலர்ப்பூ மண்டபத்துத் திரைசூ ழொருபாற் சென்றிருந்து. (௨௨௨)

---

(௨௧௭) அணங்கே - தெய்வத்தன்மையே.

பண்டு கயிலைத் திருமலையிற் செய்யும் பணியின் பான்மைமனங்
கொண்ட வுணர்வு தலைநிற்பக் குலவு மலர்மென் கொடியனையார்
வண்டு மருவுந் திருமலர்மென் மாலை காலங் களுக்கேற்ப
அண்டர் பெருமான் முடிச்சாத்த வமைத்து வணங்கி யமருநாள். (உஉ௩)

அந்தி வண்ணத் தொருவர்திரு வருளால் வந்த வாரூரர்
கந்த மாலைச் சங்கிலியார் தம்மைக் காதன் மணம்புணர
வந்த பருவ மாதலால் வகுத்த தன்மை வழுவாத
முந்தை விதியால் வந்தொருநாண் முதல்வர் கோயி லுட்புகுந்தார். (உஉ௪)

அண்டர் பெருமா னந்தணரா யாண்ட நம்பி யங்கணரைப்
பண்டை முறைமை யாற்பணிந்து பாடிப் பரவிப் புறம்போந்து
தொண்டு செய்வார் திருத்தொழில்கள் கண்டு தொழுது செல்கின்றார்
புண்ட ரீகத் தடங்கர்ப்பூந் திருமண் டபத்தி னுட்புகுந்தார் (உஉ௫)

அன்பு நாரா வஞ்செழுத்து நெஞ்சு தொடுக்க வலர்தொடுத்தே
யென்புள் ளுருக்கு மடியாரைத் தொழுது நீங்கி வேறிடத்து
முன்பு போலத் திரைநீக்கி முதல்வர் சாத்துப் பணிகொடுத்து
மின்போன் மறையுஞ் சங்கிலியார் தம்மை விதியாற் கண்ணுற்றார் (உஉ௬)

கோவா முத்துஞ் சுரும்பேறாக் கொழுமென் முகையு மனையாரைச்
சேவார் கொடியார் திருத்தொண்டர் கண்ட போது சிந்தைநிறை
காவா தவர்பாற் போயவீழத் தம்பாற் காம னார்துரந்த
பூவா ளிகள்வந் துறவீழத் தரியார் புறமே போந்துரைப்பார். (உஉ௭)

இன்ன பரிசென் றறிவரிதா லிங்கோர் மருங்கு திரைக்குள்ளாற்
பொன்னு மணியு மலர்ந்தவொளி யமுதி லளாவிப் புதியமதி
தன்னு ணீரமை யாற்குழைத்துச் சமைத்த மின்னுங் கொடிபோல்வாள்
என்னை யுள்ளந் திரிவித்தாள் யார்கொ லென்றங் கியம்புதலும் (உஉ௮)

அருகு நின்றார் விளம்புவா ரவர்தா நங்கை சங்கிலியார்
பெருகுந் தவத்தா லீசர்பணி பேணுங் கன்னி யாரென்ன
இருவ ராலிப் பிறவியையெம் பெருமா னருளா லெய்துவித்தார்
மருவும் பரவை யொருத்தியிவண் மற்றை யவளா மெனமருண்டார். (உஉ௯)

மின்னார் சடையார் தமக்காளாம் விதியால் வாழு மெனைவருத்தித்
தன்னா ரருளால் வரும்பேறு தவத்தா லணையா வகைதடுத்த

---

(உஉ௭) கோவா . . . அனையாரை - கோக்கப்படாத (தொடாத; துளையில்லாத) முத்தையும், வண்டுகள் மொய்க்காத அழகிய மிருதுவான அரும்பையுமொத்த சங்கிலி நாய்ச்சியாரை. அவர்பால் போயவீழ - சங்கிலியாரிடஞ் செல்ல. (உஉ௮) பொன் மணி இவைகளின் ஒளித்திரளின் குணமாய வெள்ளொளி; அமுதொளி நீரின் கண்ணுள்ளதாய வெள்ளொளி. இவ்விரண்டுஞ் சேர்ந்துழி ஓர் திவ்வியவொளி யுண்டாகும். அதனோடு சந்திரன் தண்ணொளியையுங் கலந்து மின்னற்கொடி போன்றார் என்றார். நயத்தை யூகித்துணர்க.

யென்னு ருயிரு மெழின்மலருங் கூடப் பிணைக்கு மிவடன்னைப்
பொன்னு ரிதழி முடியார்பாற் பெறுவே னென்று போய்ப்புக்கார். (௨௩௦)

மலாமே லயனு நெடுமாலும் வானு நிலனுங் கிளைத்தறியா
நிலவு மலருந் திருமுடியு நீடுங் கழலு முடையாரை
உலக மெல்லாந் தாமுடையா ராயு மொற்றி யூரமர்ந்த
இலகு சோதிப் பரம்பொருளை யிறைஞ்சி முன்னின் றேத்துவார் (௨௩௧)

மங்கை யொருபான் மகிழ்ந்ததுவு மன்றி மணிநீண் முடியின்கட்
கங்கை தன்னைக் கரந்தருளுங் காத லுடையீ ரடியேனுக்
கிங்கு நுமக்குத் திருமாலை தொடுத்தெ னுள்ளந் தொடையவிழ்த்த
திங்கள் வதனச் சங்கிலியைத் தந்தென் வருத்தந் தீருமென. (௨௩௨)

அண்ண லார்முன் பலவுமவ ரறிய வுணர்த்திப் புறத்தணைந்தே
யெண்ண மெல்லா முமக்கடிமை யாமென் றெண்ணு மென்னெஞ்சிற்
றிண்ண மெல்லா முடைவித்தாள் செய்வ தொன்று மறியேன்யான்
றண்ணி லாமின் னொளிர்பவளச் சடையீ ரருளு மெனத்தளர்வார் (௨௩௩)

மதிவாண் முடியார் மகிழ்கோயிற் புறத்தோர் மருங்கு வந்திருப்பக்
கதிரோன் மேலைக் கடல்காண மாலைக் கடலைக் கண்டயர்வார்
முதிரா முலையார் தம்மைமணம் புணர்க்க வேண்டி முளரிவளை
நிதியா னண்பர் தமக்கருளு நண்பா னினைந்து நினைந்தழிய (௨௩௪)

உம்ப ருய்ய வுலகுய்ய வால வேலை விடமுண்ட
தம்பி ரானார் வன்றொண்டர் தம்பா லெய்திச் சங்கிலியை
யிம்ப ருலகில் யாவருக்கு மெய்த வொண்ணா விருந்தவத்துக்
கொம்பை யுனக்குத் தருகின்றோங் கொண்ட கவலை யொழிகென்ன. ()

அன்று வெண்ணெய் நல்லூரில் வலிய வாண்டு கொண்டருளி
யொன்று மறியா நாயேனுக் குறுதி யளித்தீ ருயிர்காக்க
இன்று மிவளை மணம்புணர்க்க வேன்று நின்றீ ரெனப்போற்றி
மன்றன் மலர்ச்சே வடியிணைக்கீழ் வணங்கி மகிழ்ந்தார் வன்றொண்டர் ()

ஆண்டு கொண்ட வந்தணனு ரவருக் கருளிக் கருணையினு
னீண்ட கங்குல் யாமத்து நீங்கி வானி னிறைமதியந்
தீண்டு கன்னி மாடத்துச் சென்று திகழ்சங் கிலியாராந்
தூண்டு சோதி விளக்கனையார் தம்பாற் கனவிற் றோன்றினார் (௨௩௭)

தோற்றும் பொழுதிற் சங்கிலியார் தொழுது விழுந்து பரவசமா
யாற்ற வன்பு பொங்கியெழுந் தடியே னுய்ய வெழுந்தருளும்
பேறற் கென்யான் செய்ததெனப் பெரிய கருணை பொழிந்தனைய
நீறுக் கோல வேதியரு நேரி னருளிச் செய்கின்றார் (௨௩௮)

---

(௨௩௪) முளரிவளை நிதியானண்பர் பதுமநிதி சங்கநிதிகளையுடைய குபேரனுக்குத் தோழராய சிவபெருமான

சாருந் தவத்துச் சங்கிலிகேள் சால வென்பா லன்புடையான்
மேரு வரையின் மேம்பட்ட தவத்தான் வெண்ணெய் நல்லூரி
லியாரு மறிய யானாள வுரியா னுன்னை யெனையிரநதான்
வார்சொண முலையாய் நீயவனை மணத்தா லணைவாய் மகிழ்ந்தென்றார். ()

ஆதி தேவர் முன்னின் றங் கருளிச் செய்த பொழுதின் கண்
மாத ராாசங கிலியாரு மாலு மயனு மறிவரிய
சீத மலாததா மரையடிக்கீழ்ச சேர்ந்து வீழ்ந்து செங்நின்று
வேத முதல்வர் முன்னடுக்க மெய்தித தொழுது விளம்புவார். (௨௪௦)

எம்பி ரானே நீரருளிச செய்தார்க் குரியேன் யானிமையோர்
தம்பி ரானே யருடலைமேற் கொண்டேன் றக்க விதிமணத்தா
னமபி யாரூ ரருககென்னை நலகி யருளும் பொழுதிமயக்
கொம்பி னுகங கொண்டீர்க்குக கூறுங திறமொன் றுளதென்பார். (௨௪௧)

பின்னும் பின்னன முடியார்முன் பெருக நாணித் தொழுதுரைப்பார்
மன்னுந திருவா ரூரின்க ணவாதா மிகவு மகிழ்ந்துறைவ
தென்னுந் தன்மை யறிநதருளு மெமபி ராட்டி திருமுலைதோய்
மின்னும் புரிநூ லணிமாாபீ ரென்றார் குன்றா விளக்கனையார். (௨௪௨)

வே று.

மற்றவர்தம் முரைகொண்டு வன்றொண்டர் நிலைமையினை
யொற்றிநக ரமாநதபிரா னுணாநதருளி யுரைசெய்வார்
பொற்றொடியா யுனையிகநது போகாமைக் கொருசபதம்
அறறமுறு நிலைமையினு லவன்செய்வா னெனவருளி (௨௪௩)

வேயனைய தோளியாா பானின்று மீண்டருளித்
தூயமன மகிழ்நதிருந்த தோழனார் பாலணைந்து
நீயவளை மணமபுணரு நிலையுரைததோ மதற்கவள்பால்
ஆயதொரு குறையுனனு லமைபபதுள தென்றருள. (௨௪௪)

வன்றொண்டா மனஙகளிதது வணஙகியடி யேன்செய்ய
நினறகுறை யாதெனன நீயவளை மணம்புணர்தற்
கொன்றியுட னேநிகழ வொருசபத மவண்முன்பு
சென்றுகிடைத் திவ்விரவே செய்கவென வருள்செய்தார். (௨௪[illegible]

என்செய்தா லிதுமுடியு மதுசெய்வன் யானிதற்கு
மின்செய்த புரிசடையீ ரருள்பெறுதல் வேணடுமென
முன்செய்த முறுவலுடன் முதல்வரவர் முகநோக்கி
யுன்செய்கை தனககினியென் வேண்டுவதென் றுரைத்தருள. (௨௪௬)

(௨௪௪) வேய அனைய - மூஙகிலபோனற.

வம்பணிமென் முலையவர்க்கு மனங்கொடுத்த வன்றொண்டர்
நம்பரிவர் பிறபதியும நயந்தகோ லஞ்சென்று
கும்பிடவே கடவேனுக் கிதுவிலக்கா மெனக்குறிப்பாற்
றம்பெருமான் றிருமுன்பு தாம்வேண்டுங் குறையிரப்பார். (உசஎ)

சங்கரர்தாள் பணிந்திரந்து தமிழ்வேந்தர் மொழிகின்றார்
மங்கையவ ளெனைப்பிரியா வகைசபதஞ் செய்வதனுக்
கங்கவளோ டியான்வந்தா லப்பொழுது கோயில்விடத்
தங்குமிடந் திருமகிழ்க்கீழ்க் கொளவேண்டு மெனத்தாழ்ந்தார் (உசஅ)

தம்பிரான் றோழரவர் தாம்வேண்டிக் கொண்டருள
உம்பர்நா யகருமதற் குடன்பாடு செய்வாராய்
நம்பிநீ சொன்னபடி நாஞ்செய்து மென்றருள
எம்பிரா னேயரிய தினியெனக்கென் னெனவேத்தி (உசகூ)

அஞ்சலிசென் னியின்மன்ன வருள்பெற்றுப் புறம்போதச்
செஞ்சடையா ரவர்மாட்டுத் திருவிளையாட் டினைமகிழ்ந்தே
வஞ்சியிடைச் சங்கிலியார் வழியடிமைப் பெருமையோ
துஞ்சிருண்மீ ளவுமணைந்தா ரவர்க்குறுதி சொல்லுவார். (உரு0)

சங்கிலியார் தம்மருங்கு முன்போலச் சார்ந்தருளி
நங்கையுனக் காரூர னயந்துசூ ளுறக்கடவன்
அங்குநமக் கெதிர்செய்யு மதற்றநீ யிசையாதே
கொங்கலர்பூ மகிழின்கீழ்க் கொள்கவெனக் குறித்தருள. (உருக)

மற்றவருங் கைகுவித்து மாலயனுக் கறிவரியீர்
அற்றமெனக் கருள்புரிந்த வதனிலடி யேனுகப்
பெற்றதியா னெனக்கண்கள் பெருந்தாரை பொழிந்திழிய
வெற்றிமழ விடையார்தஞ் சேவடிக்கீழ் வீழ்ந்தெழுந்தார் (உருஉ)

தையலார் தமக்கருளிச் சடாமகுட ரெழுந்தருள
எய்தியபோ ததிசயத்தா லுணர்ந்தெழுந்த விரவின்கட்
செய்யசடை யாரருளின் றிறநினைந்தே கண்டுயிலா
ஐயமுட னருகுதுயில் சேடியரை யணைந்தெழுப்பி (உருங)

நீங்குதுயிற் பாங்கியர்க்கு நீங்கலெழுந்த தறியுமவா
தாங்கனவி லெழுந்தருளித் தமக்கருளிச் செய்ததெலாம்
பாங்கறிய மொழியவவர் பயத்தினுட னதிசயமுந்
தாங்குமகிழ்ச் சியுமெய்தச் சங்கிலியார் தமைப்பணிந்தார் (உருச)

சேயிழையார் திருப்பள்ளி யெழுச்சிக்கு மலர்தொடுக்குந்
தூயபணிப் பொழுதாகத் தொழில்புரிவா ருடன்போதக்

(உருக) சூள - சபதம் ; உறுதிமொழி. (உருஉ) அற்றம் - இரகசியம்.

கோயிலின்முன் காலமது வாகவே குறித்தணைந்தார்
ஆயசப தஞ்செய்ய வரவுபார்த் தாரூரர். (௨௫௫)

நின்றவரங் கெதிர்வந்த நேரிழையார் தம்மருங்கு
சென்றணைந்து தம்பெருமான் றிருவருளின் றிறங்கூற
மின்றயங்கு நுண்ணிடையார் விதியுடன்பட் டெதிராவிளம்பார்
ஒன்றியநா னுடமெடவா ருடனுதுங்கி யுட்புகுந்தார். (௨௫௬)

அங்கவர்தம் பின்சென்ற வாரூர ராயிழையீர்
இங்குநான் பிரியாமை யுமக்கிசையும் படியியம்பத்
திங்கண்முடி யாதிருமுன் போதுவீ ரெனசசெப்பச்
சங்கிலியா ரவனுரைப்பக் கேட்டதா தியாமொழிவார். (௨௫௭)

எம்பெருமா னிதற்காக வெழுந்தருளி யிமையவர்கள்
தம்பெருமான் றிருமுன்பு சாற்றுவது தகாதென்ன
நம்பெருமான வன்றொண்டா நாதாசெய லறியாதே
கொம்பனையீர் யான்செய்வ தெங்கென்று கூறுதலும் (௨௫௮)

மாதரவர் மகிழ்க்கீழே யமையுமென மனமருள்வா
ஈதலரா கிலுமாகு மிவர்சொன்ன படிமறுக்கில்
ஆதலினு லுடன்படவே யமையுமெனத் துணிந்தாகிற்
போதுவீ ரெனமகிழ்க்கீ ழவர்போதப் போயணைந்தார். (௨௫௯)

தாவாத பெருந்தவத்துச் சங்கிலியா ருங்காண
மூவாத திருமகிழை முக்காலும் வலமவந்து
மேவாதிங் கியானகலே னெனநின்று விளம்பினார்
பூவார்தண் புனற்பொய்கை முனைப்பாடிப் புரவலனார். (௨௬௦)

மேவியசீ ராரூரர் மெய்ச்சபத வினைமுடிப்பக்
காவியினே கணருங் கண்டிமிக மனங்கலங்கிப்
பாவியே னிதுகண்டேன் றம்பிரான் பணியாலென்
றாவிசோர்ந் தழிவாரங் கொருமருங்கு மறைந்தயர்ந்தார். (௨௬௧)

திருநாவ லூராளி தம்முடைய செயன்முற்றிப்
பெருநாகத் தரிபுனைந்தார் கோயிலினுட் புகுந்திறைஞ்சி
யருளுந் தாவிருந்தீர் செய்தவா றழகிதெனப்
பெருநாம மெடுத்தேத்திப் பெருமகிழ்ச்சி யுடன்போந்தார். (௨௬௨)

வார்புனையும் வனமுலையார் வன்றொண்டர் போனதற்பின்
றார்புனையு மண்டபத்துத் தம்முடைய பணிசெய்து
கார்புனையு மணிகண்டர் செயல்கருத்திற் கொண்டிறைஞ்சி
யேர்புனையுங் கன்னிமா டம்புகுந்தா ரிருள்புலர. (௨௬௩)

(௨௫௯) அலா - பழிமொழி. (௨௬௰) தாவாத - குறையாத.

அன்றிரவே யாதிபுரி யொற்றிகொண்டா ராட்கொண்ட
பொன்றிகழ்பூண் வன்றொண்டர் புரிந்தவினை முடித்தருள
நின்றபுகழ்த் திருவொற்றி யூர்நிலவு தொண்டர்க்கு
மன்றல்வினை செயவதற்கு மனங்கொள்ள வுணர்த்துவார். (௨௬௪)

நம்பியா ரூரனுக்கு நங்கைசங் கிலிதன்னை
யிம்பர்ஞா லத்திடைநம் மேவலினால் மணவினைசெய்
தும்பர்பா ருலகறிய வளிப்பீரென் றுணர்த்துதலுந்
தம்பிரான் றிருத்தொண்ட ரருட்டலைமேற் கொண்டெழுவார் (௨௬௫)

மண்ணிறைந்த பெருஞ்செல்வத் திருவொற்றி யூர்மன்னும்
எண்ணிறைந்த திருத்தொண்ட ரெழிற்பதியோ ருடனீண்டி
யுண்ணிறைந்த மகிழ்ச்சியுட னும்பர்பூ மழைபொழியக்
கண்ணிறைந்த பெருஞ்சிறப்பிற் கலியாணஞ் செய்தளித்தார் (௨௬௬)

பண்டுநிகழ் பான்மையினாற் பசுபதிதன் னருளாலே
வண்டமர்பூங் குழலாரை மணம்புணர்ந்த வன்றொண்டர்
புண்டரிகத் தவளவனப் பைப்புறங்கண்ட தூநலத்தைக்
கண்டுகேட் டுண்டுயிர்த்துற் றமர்ந்திருந்தார் காதலினால் (௨௬௭)

யாழின்மொழி யெழின்முறுவ லிருகுழைமேற் கடைபிறழு
மாழைவிழி வனமுலையார் மணியல்குற் றுறைபடிந்து
வீழுமவர்க் கிடைதோன்றி மிகும்புலவி புணர்ச்சிக்க
ணூழியா மொருகணந்தா னவ்வூழி யொருகணமாம் (௨௬௮)

இந்நிலையிற் பேரின்ப மினிதமர்வா ரிறையுறையு
மன்னுபுக ழொற்றியூ ரதனின்மகிழ் சிறப்பினாற்
சென்னிமதி புனைவார்தந் திருப்பாதந் தொழுதிருந்தார்
முன்னியகா லங்கள்பல முறைமையினால் வந்தகல (௨௬௯)

---

(௨௬௭) காண்டல் முதலிய ஐம்புல னுகர்ச்சிகளையும் அமைந்தார் பெற்றுச் செலுத்தினார் என்பார். "கண்டு … " என்றார். இவ்வுண்மையை "கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியு மைம்புலனும் - ஒண்டொடி கண்ணே யுள" என்னும் பெருநாவலர் பெருவாக்கா னுணர்க. (௨௬௮) அல்குற்றுறை யென்றது காமவின்பத்தைக் கடலுக் கொத்துரைக்கும் ஆன்றோர் வழக்குப்பற்றி யென்க. முறுவல் - பற்களையும். குழைமேல் - செவிகளின்மேல். மாழை - மாவடுப்போன்ற (அழகிய, திரண்ட எனினுமாம்.) புலவியில் காலத்தாழ்வையும், புணர்ச்சியில் காலநீட்சியையும் விரும்பலின் "புலவி.. ..கணமாம்" என்றார். இதை யனுபவத்தானுணர்க. புலவிக்கண் ஒருகணமூழியாம் புணர்ச்சிக்கண் அவ்வூழி ஒருகணமாம் என இயைதலின் இது முறைநிரனிறை. (௨௬௯) மும்மலக்கட்டுள் ஆழ்ந்து கிடக்கும் நம்மனோர்க்குக் காமவின்பம் சிற்றின்பமாகவும், தம்மோடு பிறவும் சிவமாகக் காணுஞ் சிவஞானமுடையார்க்கு அஃது பேரின்பமாகவு மிருத்தலின் "பேரின்ப மினிதமர்வார்" என்றார். ஈண்டு வன்றொண்டப்பெருமான் நுகர்ந்த இன்பம் மாயா இன்பம் அன்றென்பது பெறப்படும்.

பொங்குதமிழ்ப் பொதியமலைப் பிறந்துபூஞ் சந்தனத்தின்
கொங்கணைந்து குளிர்சார லிடைவளர்ந்த கொழுந்தென்றல்
அங்கணையத் திருவாரூ ரணிவீதி யழகரவர்
மங்கலநாள் வசந்தமெதிர் கொண்டருளும் வகைநினைந்தார். (௨௭௦)

வெண்மதியின் கொழுந்தணிந்த வீதிவிடங் கப்பெருமான்
ஒண்ணுதலார் புடைபரந்த வோலக்க மதனிடையே
பண்ணமரு மொழிப்பரவை யார்பாட லாடறனைக்
கண்ணுறமுன் கண்டுகேட் டார்போலக் கருதினார் (௨௭௧)

பூங்கோயி லமர்ந்தாரைப் புற்றிடங்கொண் டிருந்தாரை
நீங்காத காதலினா னினைந்தாரை நினைவாரைப்
பாங்காகத் தாமுன்பு பணிவருமப் பயனுணர்வார்
ஈங்குநான் மறந்தேனென் றேசறவான் மிகவழிவார் (௨௭௨)

மின்னொளிர்செஞ் சடையானை வேதமுத லானானை
மன்னுபுகழ்த் திருவாரூர் மகிழ்ந்தானை மிகநினைந்து
பன்னியசொற் பத்திமையு மடிமையையுங் கைவிடுவான்
என்னுமிசைத் திருப்பதிக மெடுத்தியம்பி யிரங்கினார். (௨௭௩)

---

### திருவாரூர் - பண் - பழம்பஞ்சுரம்.

திருச்சிற்றம்பலம்

பத்திமையுமடிமையையுங்கைவிடுவான்பாவியேன்
பொத்தினநோயதுவிதனைப்பொருளறிந்தேன்போய்த்தொழுவேன்
முத்தினைமாமணிதன்னைவயிரத்தைமூர்க்கனேன்
எத்தனைநாள்பிரிந்திருக்கேனென்னாரூரிறைவனையே

பேரூருமதகரியினுரியானைப்பெரியவர்தஞ்
சீரூருந்திருவாரூர்ச்சிவனடியேதிறம்விரும்பி
யாரூரனடித்தொண்டனடியன்சொல்லகலிடத்தில்
ஊரூரனிவைவல்லாருலகவர்க்குமேலாரே

திருச்சிற்றம்பலம்

---

பின்னொருநா டிருவாரூர் தனைப்பெருக நினைந்தருளி
புன்னவனி யார்கோயில் புகுந்திறைஞ்சி யொற்றிநகர்
தன்னையக லப்புக்கார் தாஞ்செய்த சபதத்தான்
முன்னடிக டோன்றாது கண்மறைய மூர்ச்சித்தார். (௨௭௪)

செய்வதனை யறியாது திகைத்தருளி நெடிதுயிர்ப்பார்
மைவிரவு கண்ணார்பாற் சூளுறவு மறுத்ததனால்
இவ்வினைவந் தெய்தியதா மெனநினைந்தெம் பெருமானை
வெவ்வியவித் துயர்நீங்கப் பாடுவே னெனநினைந்து. (௨௭௫)

வேறு.

அழுக்கு மெய்கொடுன் றிருத்தசொற் பதிக மாதி நீள்புரி யண்ணலை யோதி, வழுத்து நெஞ்சொடு தாழ்ந்துநின் றுரைப்பார் மாதோர் பாகனர் மலர்ப்பத முன்னி, யிழுகரு நீக்கிட வேண்டுமென் றிரந்தே யெய்து வெந்துயர்க் கையற வினுக்கும், பழிக்கும் வெள்கிநல் லிசைகொடு பரவிப் பணிந்து சாலவும் பலபல நினைவார் (உஎ௬)

திருவொற்றியூர் — பண் - தக்கேசி.

திருச்சிற்றம்பலம்

அழுக்குமெய்கொடுன்றிருவடியடைந்தேனதுவுநான்படப்பாலதேதானமுறாற்
பிழுக்கைவாரியும்பாலகொளவரடிகேள்பிழைப்பனாகிலுந்திருவடிப்பிழையே
வழுகவீழினுந்திருப்பெயரலலாலமற்றுநானறியேனமறுமாற்றம் [ன
ஒழுக்கவெனகணுககொருமருந்துரையாயொற்றியூரெனுமூருறைவானே.

ஓதம்வந்துலவுங்கரைதன்மேலொற்றியூருறைசெல்வனைநாளு
ஞாலந்தான்பரவப்படுகின்றநான்மறையங்கமோதியநாவன
சீலந்தான்பெரிதுமமிகவலலசிறுவனவன்றொண்டனூரனுரைதத
பாடல்பததிவைவலலவாதாமபோயப்பரகதிதிணணநணணுவாதாமே.

திருச்சிற்றம்பலம்

அங்கு நாதாசெய் யருளது வாக வங்கை கூப்பியா ரூர்தொழ நினைந்தே
பொங்கு காதன்மீ ளாநிலை மையினாற் போது வாரவழி காட்டமுன் போந்து
திங்கள வேணியார் திருமுல்லை வாயில் சென்றி றைஞ்சிநீ டியதிருப் பதிகஞ்
சங்கிலிக காகவென் கணகளை மறைத்தீ ரெனறு சாற்றிய தனமையிற் பாடி.

திருவடமுல்லைவாயில் - பண் - தக்கேசி.

திருச்சிற்றம்பலம்.

திருவுமெயபபொருளுஞ்செலவமுமெனகுன்சீருடைககழல்களென்றெண்
யொருவரைமதியாதுறமைகளசெய்துமூடியுமுறைப்பனாய்ததிரிவேன்[ணி
முருகமாசோலைசூழ்திருமுலலைவாயிலாயவாயினாலுன்னைப
பரவிடுமடியேனபடுதுயாகளையாய்பாசுபதாபரஞ்சுடரே.

விண்பணிநதேததும்வேதியாமாதாவெருவிடவேழமொன்றுரித்தாய்
செண்பகசசோலைசூழ்திருமுலலைவாயிலாயதேவாதமமராசே
தணபொழிலொற்றிமாநகருடையாய்சங்கிலிககாகவெணகண்கொண்ட
பண்பநின்னடியேனபடுதுயாகளையாய்பாசுபதாபரஞ்சுடரே

விரைதருமலாமேலயனொடுமாலுமவெருவிடநீண்டவெம்மானைத
திரைதருபுனல்சூழ்திருமுலலைவாயிற்செலவனைநாவலாரூரன்
உரைதருமாலையோரைஞ்சினோடைஞ்சுமுள்குளிர்ந்தேததவல்லாாகள்
நரைதிரைமூப்புநடலையுமின்றிநணணுவாவிணணவர்க்கரைசே.

திருச்சிற்றம்பலம்.

தொண்டை மானுக்கன் றருள்கொடுத் தருளுந் தொல்லை வண்புகழ் முல்லைநா யகரைக், கொண்ட வெந்துயர் களைகெனப் பரவிக் குறித்த காதலி னெதிர்கொள வருவார், வண்டு லாமலர்ச் சோலைகள் சூழ்ந்து மாட மாளிகை நீடுவெண் பாக்கங், கண்ட தொண்டர்க ளெதிர்கொள வணங்கிக் காயு நாகத்தர் கோயிலை யடைந்தார் (உ௭அ)

அணைந்த தொண்டர்க ளுடன்வல மாக வங்க ணாயகர் கோயின்முன் னெய்திக், குணங்க ளோதியே பரவியஞ் சலியாற் குவித்த கைதலை மேற் கொண்டு நின்று, வணங்கி நீரமகிழ் கோயிலு ளீரோ வென்ற வன்றொண் டர்க் கூன்றுகோ லருளி, யிணங்கி லாமொழி யாலுளேம் போகீ ரென் றியம்பினா ரேதிலார் போல. (உ௭கூ)

---

திருவெண்பாக்கம் - பண் - சீகாமரம்.

திருச்சிற்றம்பலம்.

பிழையுளனபொறுத்திடுவரென்றடியேன்பிழைத்தக்காற்
பழியதனைப்பாராதேபடலமென்கண்மறைப்பித்தாய
குழைவிரவுவடிகாதாகோயிலுளாயேயென்ன
வுழையுடையானுள்ளிருந்துளோம்போகீரென்றானே

மான்றிகழுஞ்சங்கிலியைத்தந்துவருபயன்களெல்லாந்
தோன்றவருள்செய்தளித்தாயென்றுரைக்கவுலகமெல்லாம்
ஈன்றவனேவெண்கோயிலிங்கிருந்தாயோவென்ன
வூன்றுவதோர்கோலருளியுளோம்போகீரென்றானே

ஏராரும்பொழிலகிலவுவெண்பாக்கமிடங்கொண்ட
காராரும்மிடற்றானைக்காதலித்திட்டன்பினொடுஞ்
சீராருந்திருவாரூர்ச்சிவன்பேர்சென்னியில்வைத்த
ஆரூரன்றமிழ்வல்லார்க்கடையாவல்வினைதானே

திருச்சிற்றம்பலம்

---

வேறு.

பிழையுளன பொறுத்திடுவ ரென்றெடுத்துப் பெண்பாகம்
விழைவடிவிற் பெருமானை வெண்பாக்க மகிழ்ந்தானை
யிழையெனமா சுணமணிந்த விறையானைப் பாடினார்
மழைதவழு நெடும்புரிசை நாவலூர் மன்னவனார். (உ௮௦)

முன்னின்று முறைப்பாடு போன்மொழிந்த மொழிமாலைப்
பன்னுமிசைத் திருப்பதிகம் பாடியபின் பற்றாய
வென்னுடைய பிரானருளிங் கித்தனைகொ லாமென்று
மன்னுபெருந் தொண்டருடன் வணங்கியே வழிக்கொள்வார் (உ௮க)

அங்கணர்தம் பதியதனை யகன்றுபோ யன்பருடன்
பங்கயப்பூந் தடம்பணைசூழ் பழையனூ ருழையெய்தி

தங்குவா ரம்மைதிருத் தலையாலே வலங்கொள்ளுந்
திங்கண்முடி யாராடுந் திருவாலங் காட்டினயல். (௨௮௨)

முன்னின்று தொழுதேத்தி முத்தாவென் றெடுத்தருளிப்
பன்னுமிசைத் திருப்பதிகம் பாடிமகிழ்ந் தேத்துவார்
அந்நின்று வணங்கிப்போய்த் திருவூற லமர்ந்திறைஞ்சிக்
கன்னிமதின் மணிமாடக் காஞ்சிமா நகரணைந்தார். (௨.௮௩)

## திருஆலங்காடு — பண் - பழம்பஞ்சுரம்.

திருச்சிற்றம்பலம்

முத்தாமுத்திதரவல்லமுகிழ்மென்முலையாளுமைபங்கா
சித்தாசித்தித்திறங்காட்டுஞ்சிவனேதேவாசிங்கமே
பத்தாபத்தர்பலர்போற்றும்பரமாபழையனூர்மேய
அத்தாவாலங்காடாவுன்னடியார்க்கடியேனாவேனே.

பத்தர்சித்தர்பலரேத்தும்பரமன்பழையனூர்மேய
அத்தனாலங்காடன்றனடிமைத்திறமேயன்பாகிச்
சித்தஞ்சித்தமவைத்தபுகழ்ச்சிறுவனூரனொண்டமிழ்கள்
பத்தும்பாடியாடுவார்பரமனடியேபணிவாரே.

திருச்சிற்றம்பலம்

தேனிலவு பொழிற்கச்சித் திருக்காமக் கோட்டத்தில்
ஊனில்வள ருயிர்க்கெல்லா மொழியாத கருணையினால்
ஆனதிரு வறம்புரக்கு மம்மைதிருக் கோயிலின்முன்
வானில்வளர் திருவாயில் வணங்கினார் வன்றொண்டர் (௨௮௪)

தொழுதுவிழுந் தெழுந்தருளாற் றுதித்துப்போய்த் தொல்லுலக
முழுதுமளித் தழித்தாக்கு முதல்வர்திரு வேகம்பம்
பழுதிலடி யார்முன்பு புகப்புகுந்து பணிகின்றார்
இழுதையேன திருமுன்பே யென்மொழிவே னென்றிறைஞ்சி (௨௮௫)

விண்ணாளவா ரமுதுண்ண மிக்கபெரு விடமுண்ட
கண்ணாளா கச்சியே கம்பனே கடையானேன்
எண்ணாத பிழைபொறுத்திங் கியான்காண வெழிற்பவள
வண்ணாகண் ணளித்தருளா யெனவீழ்ந்து வணங்கினார். (௨௮௬)

பங்கயச்செங் கைத்தளிராற் பனிமலர்கொண் டருச்சித்துச்
செங்கயற்கண் மலைவல்லி பணிந்தசே வடிநினைந்து
பொங்கியவன் பொடுபரவிப் போற்றியவா ரூரருக்கு
மங்கைதழு வக்குழைந்தார் மறைந்தவிடக் கண்கொடுத்தார். (௨௮௭)

ஞாலந்தா னிடந்தவனு நளிர்விசும்பு கடந்தவனு
மூலந்தா னறிவரியார் கண்ணளித்து முலைச்சுவட்டுக்

கோலந்தான் காட்டுதலுங் குறுகிவிழுந் தெழுந்துகளித்
தாலந்தா னுகந்தவனென் றெடுத்தாடிப் பாடினார். (உ௮௮)

---

திருவேகம்பம் - பண் - தக்கேசி.

திருச்சிற்றம்பலம்.

ஆலந்தானுகந்தமுதுசெய்தானையாதியையமராதொழுதேத்துஞ்
சீலந்தான்பெரிதுமுடையானைச்சிந்திப்பாரவர்சிந்தையுளானை
யேலவார்குழலாளுமைநங்கையென்றுமேத்திவழிபடப்பெற்ற
காலகாலனைக்கம்பனெம்மானைக்காணக்கண்ணடியேன்பெற்றவாறே.

பெற்றமேறுகந்தேறவல்லானைப்பெரியவெம்பெருமானென்றெப்போதுங்
கற்றவர்பரவப்படுவானைக்காணக்கண்ணடியேன்பெற்றதென்று
கொற்றவன்கம்பன்கூத்தனெம்மானைக்குளிர்பொழிற்றிருநாவலாரூரன்
நற்றமிழிவையீரைந்தும்வல்லார்நன்னெறியுலகெய்துவர்தாமே.

திருச்சிற்றம்பலம்.

---

பாடிமிகப் பரவசமாய்ப் பணிவார்க்குப் பாவையுட
னீடியகோ லங்காட்ட நிறைந்தவிருப் புடனிறைஞ்சிச்
சூடியவஞ் சலியினராய்த் தொழுதுபுறம் போந்தனபு
கூடியமெய்த் தொண்டருடன் குமபிட்டங் கினிதமர்வார். (உ௮௯)

மாமலையாண் முலைச்சுவடும் வளைத்தழும்பு மணிந்தமதிப்
பூமலிவார் சடையாரைப் போற்றியரு ளதுவாகத்
தேமலர்வார் பொழிற்காஞ்சித் திருநகரங் கடந்தகல்வார்
பாமலர்மா லைப்பதிகந் திருவாரூர் மேற்பரவி. (உ௯௦)

அந்தியுநண் பகலுமெனை யெடுத்தார்வத் துடனசைவால்
எந்தைபிரான் றிருவாரூ ரென்றுகொலெய் துவதென்று
சந்தவிசை பாடிப்போய்த் தாங்கரிய வார்வமுடன்
வந்தணைய வன்பருடன் மகிழ்ந்துவழிக் கொள்கின்றார். (உ௯௧)

---

திருவாரூர் - பண் - புறநீர்மை.

திருச்சிற்றம்பலம்.

அந்தியுநண்பகலுமஞ்சுபதஞ்சொல்லி
முந்தியெழும்பழையவல்வினைமூடாமுன்
சிந்தைபராமரியாதென்றிருவாரூர்புக
கெந்தைபிரானாரையென்றுகொலெய்துவதே.

மின்னெடுஞ்செஞ்சடையான்மேவியவாரூரை
நன்னெடுங்காதன்மையாளுவலாகோனூரன்
பன்னெடுஞ்சொன்மலர்கொண்டிட்டனபத்தும்வல்லார்
பொன்னுடைவிண்ணுலகநண்ணுவர்புண்ணியரே.

திருச்சிற்றம்பலம்.

மன்னுதிருப் பதிகடொறும் வன்னியொடு கூவிளமுஞ்
சென்னிமிசை வைத்துவந்தார் கோயிலின்முன் சென்றிறைஞ்சிப்
பன்னுதமிழ்த் தொடைசாத்திப் பரவியே போந்தணைந்தார்
அன்னமலி வயற்றடங்கள் சூழ்ந்ததிரு வாமாத்தூர் (௨௯௨)

அங்கணரை யாமாத்தூ ரழகர்தமை யடிவணங்கித்
தங்குமிசைத் திருப்பதிகம் பாடிப்போய்த் தாரணிக்கு
மங்கலமாம் பெருந்தொண்டை வளநாடு கடந்தணைந்தார்
செங்கண்வளை வன்பிறந்த சீர்நாடு நீர்நாடு (௨௯௩)

அந்நாட்டின் மருங்குதிரு வரத்துறையைச் சென்றெய்தி
மின்னாரும் படைமழுவார் விரைமலர்த்தாள் பணிந்தெழுந்து
சொன்மாலை மலர்க்கலவ யகிலென்னுந் தொடைசாத்தி
மன்னாவத் திருத்தொண்ட ருடன்மகிழ்ந்து வைகினார் (௨௯௪)

---

### திருநெல்வாயிலரத்துறை - பண் - இந்தளம்.

கல்வாயகிலுங்கதிர்மாமணியுங்கலந்துந்திவருந்நிவவின்கரைமேல்
நெல்வாயிலரத்துறைநீடுறையுநிலவெண்மதிசூடியநின்மலனே
நல்வாயில்செய்தார்நடந்தாருடுத்தார்நரைத்தாரிறந்தாரென்றுநானிலத்திற்
சொல்லாயகழிகின்றதறிந்தடியேன்றொடர்ந்தேனுய்யப்போவதோர்சூழல்
நீரூருநெடுவயல்சூழ்புறவினெல்வாயிலரத்துறைநின்மலனைத் [சொல்லே
தேரூர்நெடுவீதிநன்மாடமலிதென்னாவலர்கோனடித்தொண்டுபண்ணி
யாரூரனுரைத்தனநற்றமிழின்மிகுமாலையோரைந்திவைகற்றுவல்லார்
காரூர்களிவண்டறையானைமன்னரவராகியோர்விண்முழுதாள்பவரே.

திருச்சிற்றம்பலம்

---

பரமர்திரு வரத்துறையைப் பணிந்துபோய்ப் பலபதிகள்
விரவிமழ விடையுயர்த்தார் விரைமலர்த்தா டொழுதேத்தி
யுரவுநீர்த் தடம்பொன்னி யடைந்தன்ப ருடனாடி
யரவணிந்தா ரமர்ந்ததிரு வாவடுதண் டுறையணைந்தார் (௨௯௫)

அங்கணைவார் தமையடியா ரெதிர்கொள்ளப் புக்கருளிப்
பொங்குதிருக் கோயிலினைப் புடைவலங்கொண் டுள்ளணைந்து
கங்கைவாழ் சடையாரோ கண்ணிலே னெனக்கவல்வார்
இங்கெனக்கா ருறவென்னுந் திருப்பதிக மெடுத்திசைத்தார். (௨௯௬)

---

### திருவாவடுதுறை - பண் - தக்கேசி.

திருச்சிற்றம்பலம்.

கங்கைவார்சடையாய்கணநாதாகாலகாலனேகாமனுக்கனலே
பொங்குமாகடல்விடமிடற்றானேபூதநாதனேபுண்ணியாபுனிதா
செங்கண்மால்விடையாய்தெளிதேனேதீர்த்தனேதிருவாவடுதுறையுள்
அங்கணாவெனையஞ்சலென்றருளாயாரெனக்குறவமரர்களேறே.

*வெண்டலைப்பிறைகொன்றையுமரவும்வேரிமத்தமும்விரவிமுண்டித்த*
*விண்டைமாமலர்ச்செஞ்சடையானையீசனைத்திருவாவடுதுறையுள்*
*அண்டவாணனைச்சிங்கடியப்பனனுக்கவனெரண்டனாவத்தாலுரைத்த*
*தண்டமிழ்மலர்பததும்வல்லார்களசாதலும்பிறப்புமறுப்பாரே.*

திருச்சிற்றம்பலம்.

---

*திருப்பதிகங் கொடுபரவிப் பணிந்துதிரு வருளாற்போய்*
*விருப்பினொடு திருததுருத்தி தனைமேவி விமலர்கழல*
*அருததியினாற் புக்கிறைஞ்சி யடியேன்மே லுற்றபிணி*
*வருத்தமெனை யொழித்தருள வேண்டுமென வணங்குவார்.* (உகஎ)

*பரவியே பணிந்தவர்க்குப் பரமாதிரு வருள்புரிவார்*
*விரவியவிப் பிணியடையத தவிாப்பதற்கு வேருக*
*வரமலர்வண் டறைதீர்த்த வடகுளத்துக குளியென்னக்*
*கரவிறுருத தொண்டாதாங கைதொழுது புறப்பட்டாா.* (உகஅ)

*மிக்கபுனற் றீாத்தத்தின் முனனணைந்து வேதமெலாங*
*தொககவடி வாயிருந்த துருத்தியாா தமைதொழுது*
*புககதனின் முழுகுதலும் புதியபிணி யதுநீங்கி*
*யககணமே மணியொளிசோ திருமேனி யாயினார்.* (உகக)

*கண்டவாக ளதிசயிப்பக் கரையேறி யுடைபுனைந்து*
*மண்டுபெருங காதலினாற் கோயிலினை வநதடைநது*
*தொண்டரெதிர் மின்னுமா மேகமெனுஞ் சொற்பதிகம்*
*எண்டிசையு மறிநதுய்ய வேழிசையா லெடுத்திசைத்தார்* (௩00)

---

**திருத்துருத்தியும் - திருவேள்விக்குடியும் - பண் – காந்தாரம்.**

திருச்சிற்றம்பலம்.

*மின்னுமாமேகங்கள்பொழிநதிழிந்தருவிவெடில்படக்கரையொடுந்திரை கொணாநதெற்று, மன்னமாங்காவிரியகனகரையுறைவாரடியிணைதொழுதெழுமனபராமடியாா, சொனனவாறறிவார்துருததியார்வேளவிககுடியுளாரடிகளைச்செடியனேனாயே, னெனனைநான்மறககுமாறெம்பெருமானையென்னுடம்படும்பிணியிடர்கெடுததானை.*

*மங்கையோர்கூறுகநதேறுகந்தேறிமாறறலார்திரிபுரநீறெழச்செற்ற, வங்கையான்கழலடியனறிமற்றறியானடியவாககடியவன் றொழுவனாரூரன், கங்கையாரகாவிரிததுருததியாாவேள்விககுடியுளாரடிகளைசசோத்தியபாடற, றங்கையாற்றொழுதுதநாவினமேற்கொளவார்தவநெறிசென்றமருலகமாள்பவரே.*

திருச்சிற்றம்பலம்.

---

*பண்ணிறைந்த தமிழ்பாடிப் பரமர்திரு வருண்மறவா*
*தெண்ணிறைந்த தொண்டருடன் பணிந்தங்க ணுறைந்தேகி*
*யுண்ணிறைநத பதிபிறவு முடையவாதாள் வணங்கிப்போய்க*
*கண்ணிறைந்த திருவாரூா முனரோன்றக் காண்கின்றார்.* (௩0க)

அன்றுதிரு நோக்கொன்று லாரக்கண் டின்புறார்
நின்றுநில மிசைவீழ்ந்து நெடிதுயிர்த்து நேரிறைஞ்சி
வன்றொண்டர் திருவாரூர் மயங்குமா லையிற்புகுந்து
துன்றுசடைத் தூவாயர் தமைமுன்னந் தொழவணைந்தார். (௩௦௨)

பொங்குதிருத் தொண்டருட னுள்ளணைந்து புக்கிறைஞ்சித்
துங்கவிசைத் திருப்பதிகந் தூவாயா வென்றெடுத்தே
யிங்கெமது துயர்களைந்து கண்காணக் காட்டாயென
றங்கணரை முன்னின்று பாடியருந் தமிழ்புனைந்தார். (௩௦௩)

திருவாரூர் - பரவையுண்மண்டளி - பண் - பஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்

தூவாயாதொண்டுசெய்வார்படுதுக்கங்கள்
காவாயேகண்டுகொண்டாரைவராகிலும்
நாவாயாலுன்னையேநல்லனசொல்லுவேற்
காவாவென்பரவையுண்மண்டளியம்மானே.

கரந்தையும்வன்னியுமத்தமுங்கூவிளமும்
பரந்தசீர்ப்பரவையுண்மண்டளியம்மானை
நிரம்பியவூரனுரைத்தனபத்திவை
விரும்புவார்மேலையார்மேலையார்மேலாரே.

திருச்சிற்றம்பலம்.

ஆறணியுஞ் சடையாரைத் தொழுதுபுறம் போந்தங்கண்
வேறிருந்து திருத்தொண்டர் விரவுவா ருடன்கூடி
யேறுயர்த்தார் திருமூலட் டானத்து ளிடைதெரிந்து
மாறிறிரு வத்தயா மத்திறைஞ்ச வந்தணைந்தார் (௩௦௪)

ஆதிதிரு வன்பெதி ரணையவவர் முகநோக்கிக்
கோதிலிசை யாற்குருகு பாயவெனக் கோத்தெடுத்தே
ஏதிலார் போல்வினவி யேசறவாற் றிருப்பதிகங்
காதலுரி கைக்கிளையாற் பாடியே கலந்தணைவார் (௩௦௫)

திருவாரூர் - பண் - கொல்லி.

திருச்சிற்றம்பலம்

குருகுபாயக்கொழுங்கரும்புகணெரிந்தசா
றருகுபாயும்வயலந்தணாரூரரைப்
பருகுமாறும்பணிந்தேத்துமாறுநினைந்
துருகுமாறும்மிவையுணர்த்தவல்லீர்களே.

(௩௦௫) கைக்கிளை - ஒரு தலைக்காமம், தலைவன் தலைவி என்னும் இருவருள் ஒருவர்பால் நிகழும் காதல்.

நித்தமாக நினைந்துள்ள மேத்தித்தொழும்
அத்தனம்பொற்கழலடிக ளாரூரரைச்
சித்தம்வைத்த புகழ்ச்சிங் கடியப்பன்மெய்ப்
பத்தனூரன்சொன்ன பாடுமின்பத்தரே.

திருச்சிற்றம்பலம்.

---

சீர்பெருகுந் திருத்தேவா சிரியன்முன் சென்றிறைஞ்சிக்
காரிரவு கோபுரத்தைக் கைதொழுதே யுட்புகுந்து
தார்பெருகு பூங்கோயி றனைவணங்கிச் சார்ந்தணைவார்
ஆர்வமிகு பெருங்காத லாலவனி மேல்வீழ்ந்தார் (௩௦௬)

வீழ்ந்தெழுந்து கைதொழுது முன்னின்று விம்மியே
வாழ்ந்தமல ராகக் கண்ணருவி லாரமன மனமழிவார்
ஆழ்ந்ததுயர்க் கடலிடைநின் றடியேனை யெடுத்தருளித்
தாழ்ந்தகருத் தினைநிரப்பிக் கண்டாரு மெனத்தாழ்ந்தார் (௩௦௭)

திருநாவ லூரமன்னர் திருவாரூர் வீற்றிருந்த
பெருமானைத் திருமூலட் டானனைச்சேர் பிஞ்ஞகனைப்
பருகாவின் னமுதத்தைக் கண்களாற் பருகுதற்கு
மருவார்வத் துடனமறைக் கண்டாரீ ரெனவணங்கி (௩௦௮)

வேறு

மீளா வடிமை யெனவெடுத்து மிக்க தேவா குலமெல்லா
மாளா மேருச் சுணைடருளி மன்னி யிருந்த பெருமானைத்
தாளா தரிக்கு மெய்யடியார் தமக்கா மிடாநீர் தரியீரென்
றுள்ளார் திருத்தோ ழமைத்திறத்தா லஞ்சொற் பதிகம் பாடினார் (௩௦௯)

---

திருவாரூர் - பண் - செந்துருத்தி.

திருச்சிற்றம்பலம்

மீளாவடிமையுமக்கேயாளாய்ப்பிறரைவேண்டாதே
மூளாத்தீப்போலுள்ளேகனன்றுமுகத்தான்மிகவாடி
யாளாயிருக்குமடியார்தங்களல்லல்சொன்னக்கால்
வாளாங்கிருப்பீர்திருவாரூரீர்வாழ்ந்துபோதீரே

காரூர்கண்டத்தெண்டோண்முக்கண்கலைகளல்லவாகி
யாரூர்த்திருமூலத்தானத்தேயடிப்பேராரூரன்
பாரூரறியவென்கண்கொண்டீர்நீரேபழிபட்டீர்
வாரூர்முலையாள்பாகங்கொண்டீர்வாழ்ந்துபோதீரே

திருச்சிற்றம்பலம்

பூத முதல்வர் புற்றிடங்கொண் டிருந்த புனிதர் வன்றொண்டர்
காதல் புரிவே தனைக்கிரங்கிக் கருணைத் திருநோக் களித்தருளி

சீத மலர்க்கண் கொடுத்தருளச் செவ்வே விழித்து முகமலர்ந்து
பாத மலர்கண் மேற்பணிந்து வீழ்ந்தா ருள்ளம் பரவசமாய். (௩௧௦)

விழுந்து மெழுந்தும் பலமுறையான் மேவிப் பணிந்து மிகப்பரவி
யெழுந்த களிப்பி னூலாடிப் பாடி யின்ப வெள்ளத்தில்
அழுந்தி யிரண்டு கண்ணாலு மம்பொற் புற்றி னிடையெழுந்த
செழுந்தண் பவளச் சிவக்கொழுந்தி னருளைப் பருகித் திளைக்கின்றார் ()

கால மிரம்பத் தொழுதேத்திக் கனக மணிமா ளிகைக்கோயின்
ஞால முய்ய வருநம்பி நலங்கொள் விருப்பால வலங்கொண்டு
மாலு மயனு முறையிருக்கும் வாயில் கழியப் புறம்போந்து
சீல முடைய வன்பருடன் றேவா சிரியன் மருங்கணைந்தார் (௩௧௨)

நங்கை பரவை யார்தம்மை நம்பி பிரிந்து போனதற்பின்
றங்கு மணிமா ளிகையின்கட் டனிமை கூரத் தளர்வாரக்குக்
கங்குல் பகலாய்ப் பகல்கங்கு லாகிக் கழிய நாளெல்லாம்
பொங்கு காதன் மீதூரப் புலர்வார் சிலநாள் போனதற்பின். (௩௧௩)

செம்மை நெறிசேர் திருநாவ லூர ரொற்றி யூர்சேர்ந்து
கொம்மை முலையார் சங்கிலியார் தம்மைக் குலவ மணம்புணர்ந்த
மெய்ம்மை வார்த்தை தாமவர்பால் விட்டார் வந்து சட்டுரைப்பத்
தம்மை யறியா வெகுளியினாற் றரியா நெஞ்சி னொந்தழிவார் (௩௧௪)

மென்பூஞ் சயனத் திடைத்துயிலு மேவார் விரித்து மினிதமரார்
பொன்பூந் தவிசின் மிசையிரார் நில்லார் செல்லார் புறம்பொழியார்
மன்பூ வாளி மழைகழியார் மறவார் நினையா ரென்செய்வார்
என்பூ டுருக்கும் புலவியோ பிரிவோ விரண்டி னிடைப்பட்டார். (௩௧௫)

ஆன கவலைக் கையறவா லழியு நாளி லாரூரர்
கூன லிளவெண் பிறைக்கண்ணி முடியார் கோயின் முன்றுறுகப்
பானல் விழியார் மாளிகையிற் பண்டு செல்லும் பரிசினாற்
போன பெருமைப் பரிசனங்கள் புகுதப் பெறாது புறநின்றார் (௩௧௬)

நின்ற நிலைமை யவர்கள்சிலர் நிலவு திருவா ரூரரெதிர்
சென்று மொழிவார் திருவொற்றி யூரி னிகழ்ந்த செய்கையெலாம்
ஒன்று மொழியா வகையறிந்தங் குள்ளார் தள்ள மாளிகையில்
இன்று புறமுஞ் சென்றெய்தப் பெறறி லோமென றிறைஞ்சினார். (௩௧௭)

மற்ற மாற்றங் கேட்டழிந்த மனத்த ராகி வன்றொண்டர்
உற்ற விதனுக் கினியென்னோ செயலென் றுணர்வா ருலகியல்பு
கற்ற மாந்தர் சிலர்தம்மைக் காதற் பரவை யார்கொண்ட
செற்ற நிலைமை யறிந்தவர்க்குத் தீர்வு சொல்லச் செலவிட்டார் (௩௧௮)

(௩௧௪) அவர்பால் விட்டார் - சுவாமிகளைப் பார்த்து வரும்படி தம்மால் அனுப்பப் பட்டவர்.

நம்பி யருளாற் சென்றவரு நங்கை பரவை யார்தமது
பைம்பொன் மணிமா ளிகையணைந்து பண்பு புரியும் பாங்கினல்
வெம்பு புலவிக் கடலமுழ்ந்து மின்னே ரிடையாண் முன்னெய்தி
யெம்பி ராட்டிக் கிதுதகுமோ வென்று பலவு மெடுத்துரைத்தார். (௩௧௯)

பேத நிலைமை நீதியினற் பின்னும் பலவுஞ் சொன்னவர்முன்
மாத ரவரு மறுத்துமனங் கொண்ட செற்ற மாற்ருராய்
ஏத மருவு மவாதிறத்தி லிந்த மாற்ற மியம்பிலுயிர்
போத லொழியா தெனவுரைத்தா ரவரு மஞ்சிப் புறம்போந்தார். (௩௨௦)

போந்து புகுந்த படியெல்லாம் பூந்தண் பழன மூனப்பாடி
வேந்தா தமக்கு விளம்புதலும் வெருவுற் றயர்வார் துயர்வேலை
நீந்தும் புணையாந் துணைகாணு நிகழ்ந்த சிந்தா குலநெஞ்சிற்
காந்த வழிந்து தோய்ந்தெழுார் கங்கு லிடையா மக்கடலுள். (௩௨௧)

அருகு சூழ்ந்தார் துயின்றுதிரு வத்த யாமம் பணிமடங்கிப்
பெருகு புவனஞ் சலிப்பினறிப் பேயு முறங்கும் பிறங்கிருள்வாய்
முருகு விரியு மலர்க்கொன்றை முடிமே லரவு மிளமதியுஞ்
செருகு மொருவர் தோழர்தனி வருந்தி யிருந்து சிந்திப்பார். (௩௨௨)

முன்னை வினையா லிவ்வினைக்கு மூல மானுள் பாலணைய
என்னை யுடையாய் நினைந்தருளா யிந்த யாமத் தெழுந்தருளி
யன்ன மனையாள் புலவியினை யகற்றி லுய்ய லாமன்றிப்
பின்னை யிலலைச் செயலென்று பெருமா னடிக டமைநினைந்தார் (௩௨௩)

அடியா ரிடுக்கண் டரியாதா ராண்டு கொண்ட தோழர்குறை
முடியா திருக்க வல்லரோ முற்று மளித்தாள் பொற்றளிர்க்கைத்
தொடியார் தழும்பு முலைச்சுவடு முடையார் தொண்டர் தாங்காணு
மடியா லணைந்தார் நெடியோனுங் காணு வடிகள் படிதோய (௩௨௪)

தம்பி ரானு ரெழுந்தருளத் தாங்கற் கரிய மகிழ்ச்சியினற்
கம்பி யாகின றவயவங்கள் கலந்த புளக மயிர்முகிழ்ப்ப
நம்பி யாரூ ரருமெதிரே நளின மலர்க்கை தலைகுவிய
அம்பி காவல லவர்செய்ய வடித்தா மரையின் கீழ்வீழ்ந்தார். (௩௨௫)

விழுந்து பரவி மிக்கபெரு விருப்பி னேடு மெதிர்போற்றி
யெழுந்த நண்பர் தமைநோக்கி யென்னீ யுற்ற தெனவருளத்
தொழுந்தங் குறையை விளம்புவார் யானே தொடங்குந் துரிசிலை ——
டழுந்து மென்னை யினனமெடுத் தாள வேண்டு முமக்கென்று. (௩௨௬)

---

(௩௨௪) வல்லரோ என்பதில் ஓகாரம் வல்லராகார் என்னும் பொருளினமேதரு.
(௩௨௫) கம்பியா - நடுங்க. அம்பிகாவலவா - அம்பிகாபதி. (௩௨௬) துரிசு-குற்றம்

அடியே னங்குத் திருவொற்றி யூரி னீரே யருள்செய்ய
வடிவே லொண்கட் சங்கிலியை மணஞ்செய் தணைந்த திறமெல்லாங்
கொடியே ரிடையாள் பரவைதா னறிந்து தன்பால் யான்குறுகின்
முடிவே னென்று துணிந்திருந்தா ளென்னான் செய்வ தெனமொழிந்து ()

நாய னீரே நானுமக்கிங் கடியே னாகி னீரெனக்குத்
தாயி னல்ல தோழருமாந் தம்பி ரானா ரேயாகில்
ஆய வறிவு மிழந்தழிவே னயாவு நோக்கி யவ்வளவும்
போயிவ் விரவே பரவையுறு புலவி தீர்த்துத் தாருமென (ருஉஅ)

அன்பு வேண்டுந் தம்பெருமா னடியார் வேண்டிற் றேவேண்டி
முன்பு நின்று விண்ணப்பஞ் செய்த நம்பி முகநோக்கித்
துன்பு மொழிநீ யாமுனக்கோர் தூத னாகி யிப்பொழுதே
பொன்செய் மணிப்பூண் பரவைபாற் போகின் றோமென் றருள்செய்தார்.

எல்லை யில்லாக் களிப்பினா லிறைவர் தாளில் வீழ்ந்தெழுந்து
வல்ல பரிசெல் லாந்துதித்து வாழ்ந்து நின்ற வன்றொண்டர்
முல்லை முகைவெண் ணகைப்பரவை முகில்சேர் மாடத் திடைச்செல்ல
நில்லா தீண்ட வெழுந்தருளி நீக்கும் புலவி யெனத்தொழுதார். (ருங0)

அண்டர் வாழக் கருணையினா லால கால மமுதாக
வுண்ட நீலக் கோலமிடற் றொருவ ரிருவர்க் கறிவரியார்
வண்டு வாழு மலர்க்கூந்தற் பரவை யார்மா ளிகைநோக்கித்
தொண்ட னார்தந் துயர்நீக்கத் தூத ராயெழுந்தருள (ருஙக)

தேவா சிரியன் முறையிருக்குந் தேவ ரெல்லாஞ் சேவித்துப்
போவார் தம்மில் வேண்டுவார் போத வொழிந்தார் புறத்தொழிய
ஓவா வனுக்கச் சேவகத்தி லுள்ளோர் பூதர் கணநாதர்
மூவா முனிவர் யோகிகளின் முதலா யுள்ளோர் மகிழ்ந்தேத்த (ருஙஉ)

அருகு பெரிய தேவருட னணைந்து வருமவ் விருடிகளும்
மருவு நண்பி னிதிக்கோனு முதலா யுள்ளோர் மகிழ்ந்தேத்தத்
தெருவும் விசும்பு நிறைந்துவிரைச் செழும்பூ மாரி பொழிந்தலையப்
பொருவி லன்பர் விடுந்தூதர் புனித வீதி யினிற்போத (ருஙங)

மாலு மயனுங் காணாதார் மலர்த்தாள் பூண்டு வந்திறைஞ்சுங்
கால மிதுவென் றங்கவரை யழைத்தா லென்னக் கடலவிளைத்த
ஆல மிருண்ட கண்டத்தா னடித்தா மரைமேற் சிலம்பொலிப்ப
நீல மலர்க்கட் பரவையார் திருமா ளிகையை நேர்நோக்கி (ருஙச)

---

(ருஉகூ) அரவங்கை அல்குலார்பால் ஆசைந்தவராகச் வீட்டிலக்கும் விமலன் பரவைபால் தூதுசெல்லப் பரிந்தது என்னையோவெனில் அன்புகாரணமாக வெனக. அது பற்றியே "அன்புவேண்டும் பெருமான்" என்றார். அன்பின் நயமும் உண்மையும் உணர்ந்தார் எண்டு மலையார் எனக. (ருஙஉ) ஓவா வனுக்கச் சேவகத்திலுள்ளோர் - அகம்படிமைத் தொண்டர்கள்.

இறைவர் விரைவி னெழுந்தருள வெய்து மவர்கள் பின்றொடர
அறைகொ டிரைநீர் தொடர்சடையி லரவு தொடர வரியவிளம்
பிறைகொ ளருந்த நறையிதழிப் பிணையல் சுரும்பு தொடரவுடன்
மறைக டொடர வன்றொண்டர் மனமுந் தொடர வரும்பொழுது. (௩௩௫)

பெருவீ ரையினு மிகமுழங்கிப் பிறங்கு மதகுஞ் சரமுரித்து
மருவீ ருரிவை புனைந்தவர்தம் மருங்கு சூழ்வார் நெருங்குதலாற்
றிருவீ தியினி லழகரவா மகிழுஞ் செல்வத் திருவாரூர்
ஒருவீ தியிலே சிவலோக முழுதுங் காண வுளதாமால. (௩௩௬)

ஞால முய்ய வெழுந்தருளு நம்பி தூதர் பரவையார்
கோல மணிமா ளிகைவாயில் குறுகு வார்முன கூடத்தம்
பாலங் கணைந்தார் புறநிற்பப் பண்டே தம்மை யர்ச்சிக்குஞ்
சீல முடைய மறைமுனிவ ராகித் தனியே சென்றணைந்தார். (௩௩௭)

சென்று மணிவா யிற்கதவஞ் செறிய வடைத்த வதன்முன்பு
நின்று பரவாய் திறவாயென் றழைப்ப நெறிமென் குழலாரும்
ஒன்றுந் துயிலா துணர்ந்தயாவா ருடைய பெருமான் பூசனைசெய்
துன்றும புரிநூன் மணிமார்பர் போலு மழைத்தா ரெனத்துணிந்து. ()

பாதி மதிவாழ் சடையாரைப் பயில்பூ சனையின் பணிபுரிவார்
பாதி யிரவி லிங்கணைந்த தென்னோ வென்று பயமெய்திப்
பாதி யுமையா டிருவடிவிற் பரம ராவ தறியாதே
பாதி மதிவா ணுதலாரும் பதைத்து வந்து கடைதிறந்தார். (௩௩௯)

மன்னு முரிமை வன்றொண்டர் வாயிற் றூதர் வாயிலிடை
முன்னின ருரைக கண்டிறைஞ்சி முழுது முறங்கும் பொழுதின்கண்
என்னை யாளும் பெருமானிங் கெய்தி யருளி னீரென்ன
மின்னு மணிநூ லணிமார்பீ ரெய்த வேண்டிற் றென்னென்றார். (௩௪0)

வேறு.

கங்கைநீர் கரந்த வேணி கரந்தவ ரருளிச் செய்வார்
நங்கைநீ மறாது செய்யி னாம்வந்த துரைப்ப தென்ன
அங்கயல் விழியி னாரு மதனைநீ ரருளிச் செய்தால்
இங்கெனக் கிசையு மாகி லிசையலா மென்று சொல்லி. (௩௪௧)

என்னினைந் தணைந்த தென்பா லின்னதென் றருளிச் செய்தாற்
பின்னைய தியலு மாகி லாமெனப் பிரானார் தாமு
மின்னிடை மடவாய் நம்பி வரவிங்கு வேண்டு மென்ன
நன்னுத லாருஞ் சால நன்றுநம் பெருமை யென்பார் (௩௪௨)

பங்குனித் திருநா ளுக்குப் பண்டுபோல் வருவா ராகி
யிங்கெனைப் பிரிந்து போகி யொற்றியூ ரெய்தி யங்கே

சங்கிலித் தொடக்குண் டாருக் கிங்கொரு சார்வுண் டோநீர்
கங்குலின் வந்து சொன்ன காரிய மழகி தென்றார். (௩௪௩)

நாதரு மதனைக் கேட்டு நங்கைநீ நம்பி செய்த
ஏதங்கண் மனத்துக் கொள்ளா தெய்திய வெகுளி நீங்கி
நோதக வொழிதற் கன்றோ நுன்னையான் வேண்டிக் கொண்ட
தாதலின் மறுத்தல செய்ய வடாதென வருளிச் செய்தார். (௩௪௪)

அருமறை முனிவ ரான வையரைத் தையலார்தாங்
கருமமீ தாக நீரிங் கடைத்தலை வருகை மற்றும்
பெருமைக்குத் தகுவ தன்றா லொற்றியூ ருறுதி பெற்றார்
வருவதற் கிசையே னீரும் போமென மறுத்துச் சொன்னார். (௩௪௫)

நம்பர்தா மதனைக் கேட்டு நகையுமுட் கொண்டு மெய்ம்மைத்
தம்பரி சறியக் காட்டார் தனிப்பெருந் தோழ னார்தம்
வெம்புறு வேட்கை காணுந் திருவிளை யாட்டின மேவி
வம்பலர் குழலி னார்தா மறுத்ததே கொண்டு மீண்டார். (௩௪௬)

தூதரைப் போக விட்டு வரவுபார்த் திருந்த தொண்டர்
நாதரை யறிவி லாதே நன்னுதல் புலவி நீக்கப்
போதரத் தொழுதே னென்று புலம்புவார் பரவை யாரைக்
காதலி லிசைவு கொண்டு வருவதே கருத்துட் கொள்வார் (௩௪௭)

போயவண் மனையி னண்ணும் புண்ணிய ரென்செய் தாரோ
நாயனார் தம்மைக் கண்டா னன்னுதன் மறுக்கு மோதா
னாயவென் னயர்வு தன்னை யறிந்தெழுந் தருளி னார்தாஞ்
சேயிழை துனிதீர்த் தன்றி மீள்வது செய்யா ரென்று. (௩௪௮)

வழியெதிர் கொள்ளச் செல்வர் வரவுகா ணாது மீள்வர்
அழிவுற மயங்கி நிற்ப ரசைவுட னிருப்பா ரெற்றி
விழியவர் தாழ்த்தா ரென்று மீள்வு மெழுவர் மாரன்
பொழிமலர் மாரி வீழ வொதுங்குவார் புன்க ணுற்றார். (௩௪௯)

பரவையார் தம்பா னம்பி தூதராம் பாங்கிற் போன
அரவணி சடையார் மீண்டே யறியுமா றணையும் போதில்
இரவுதான் பகலாய்த் தோன்ற வெதிரெழுந் தணையை விட்ட
உரவுநீர் வெள்ளம் போல வோங்கிய களிப்பிற் சென்றார். (௩௫௦)

சென்றுதம் பிரானைத் தாழ்ந்து திருமுக முறுவல் செய்ய
ஒன்றிய விளையாட் டோரா ருறுதிசெய் தணைந்தா ரென்றே
யன்றுநீ ராண்டு கொண்ட வதனுக்குத் தகவே செய்தீர்
இன்றிவள் வெகுளி யெல்லாந் தீர்த்தெழுந் தருளி யென்றார் (௩௫௧)

---

(௩௪௮) துனி - புலவிநீட்சி.

அம்மொழி விளம்பு நம்பிக் கையர்தா மருளிச் செய்வார்
நம்மைநீ சொல்ல நாம்போய்ப் பரவைதன் னில்ல நண்ணிக்
கொம்மைவெம் முலையி னாட்குன் றிறமெலாங் கூறக் கொள்ளாள்
வெம்மைதான் சொல்லி நாமே வேண்டவு மறுத்தா ளென்றார். (௩௫௨)

அண்ணலா ரருளிச் செய்யக் கேட்டவா ரூரர் தாமுந்
துணையென நடுக்க முற்றே தொழுதுநீ ரருளிச் செய்த
வண்ணமு மடியா ளான பரவையே மறுப்பா ளாங்கள்
எண்ணவா ரடிமைக் கென்ப தின்றறி வித்தீ ரென்று. (௩௫௩)

வானவ ருய்ய வேண்டி மறிகட னஞ்சை யுண்டீர்
தானவர் புரங்கள் வேவ மூவரைத் தவிர்த்தாட் கொண்டீர்
நான்மறைச் சிறுவர்க் காகக் காலனைக் காய்ந்து நட்டீர்
யான்மிகை யுமக்கின் றானா லென்செய்வீர் போதா தென்றார். (௩௫௪)

ஆவதே செய்தீ ரின்றெ னடிமைநீர் வேண்டா விட்டாற்
பாவியேன் றன்னை யன்று வலியவாட் கொண்ட பற்றென்
னேவுமென் னழிவுங் கண்டீர் நுடங்கிடை யவள்பா லின்று
மேவுதல் செய்யீ ராகில் விடுமுயி ரென்று வீழ்ந்தார். (௩௫௫)

தமபிரா னதனைக் கண்டு தரியாது தளர்ந்து வீழ்ந்த
நம்பியை யருளா னோக்கி நாமின்ன மவள்பாற் போயக்
கொமபினை யிப்போ தேநீ குறுகுமா கூறு கின்றோம்
வெமபுறு துயர்நீங் கென்றா வினையெலாம் விளக்க வல்லார். (௩௫௬)

மயங்கிய நண்ப ருய்ய வாக்கெனு மதுர வாய்மை
நயங்கிள ரமுத நல்க நாவலூர் மன்னா தாமும்
உயங்கிய கலக்க நீக்கி யும்மடித் தொழும்ப னேனைப்
பயங்கெடுத் திவ்வா றன்றோ பணிகொள்வ தென்று போற்ற. (௩௫௭)

அன்பாமேற் கருணை கூர வாண்டவர் மீண்டுஞ் செல்லப்
பின்புசென் றிறைஞ்சி நம்பி பேதுற வோடு மீண்டார்
முன்புடன் போதா தாரு முறைமையிற் சேவித் தேகப்
பொன்புரி சடையார் மாதர் புனிதமா ளிகையிற் சென்றார். (௩௫௮)

மதிநுதற் பரவை யாதா மறையவர் போன பின்பு
முதிர்மறை முனியாய் வந்தா ராளுடை முதல்வ ராகும்
அதிசயம் பலவுந் தோன்ற வறிவுற்றே யஞ்சிக் கெட்டேன்
எதிர்மொழி யெம்பி ரான்முன் னென்செய மறுத்தே னென்பார். (௩௫௯)

கண்டுயி லெய்தார் வெய்ய கையற வெய்தி யீங்கின்
றண்டர்தம் பிரானார் தோழர்க் காகவர்ச் சிப்பார் கோலங்

(௩௫௪) மூவா-பரமவிரதன, பரமயோகன, பரமகுணன. இவாககருள் செய்ததை "மூவெயில செறறானறு........." எனனுங தேவாரததாலுணாக.

கொண்டணைந் தவரை யானுட் கொண்டிலேன் பாவி யேனென்
றொண்சுடர் வாயி லேபார்த் துழையரோ டழியும் போதில். (௩௬0)

வெறியுறு கொன்றை வேணி விமலருந் தாமாந் தன்மை
யறிவுறு கோலத் தோடு மளவில்பல் பூத நாதர்
செறிவுறு தேவர் யோக முனிவர்கள் சூழ்ந்து செல்ல
மறுவில்சீர்ப் பரவை யார்தம் மாளிகை புகுந்தார் வந்து. (௩௬௧)

பாரிடத் தலைவர் முன்னும் பல்கண நாதர் தேவா
நேர்வுறு முனிவர் சித்த ரியக்காக ணிறைத லாலே
பேரரு ளாள ரெய்தப் பெற்றமா ளிகைதான் றென்பாற்
சீர்வளர் கயிலை வெள்ளித் திருமலை போன்ற தன்றே. (௩௬௨)

ஐயரங் கணைந்த போதி லகிலலோ கத்துள் ளாரும
எய்தியே செறிந்து சூழ வெதிர்கொண்ட பரவை யார்தா
மெய்யுறு நடுக்கத் தோடு மிகவெழு மகிழ்ச்சி பொங்கச
செய்யதா ளிணைமுன சேர விரைவினுற் சென்று வீழ்ந்தார். (௩௬௩)

அரியயற் கரியார் தாமு மாயிழை யாரை நோக்கி
யுரிமையா லூர னேவ மீளவு முன்பால் வந்தோ
முருகலர் குழலா யின்ன முன்புபோன மற்றே நின்பாற்
பிரிவுற வருந்து கின்றான் வரப்பெற வேண்டு மென்றார். (௩௬௪)

பெருந்தடங் கண்ணி னாரும் பிரான்முன்பு மிகவு மஞ்சி
வருந்திய வுள்ளத் தோடு மலர்க்கரங் குழன்மேற் கொண்டே
யருந்திரு மறையோ ராகி யணைந்தீர்முன் னடியேன் செய்த
இருந்தவப் பயனு மென்ன வெய்திய நீரோ வென்பார். (௩௬௫)

துளிவளர் கண்ணீர் வாரத் தொழுதுவிண் ணப்பஞ் செய்வார்
ஒளிவளர் செய்ய பாதம் வருந்தவோ ரிரவு மாறா
தளிவரு மனப்பாங் காக வங்கொடிங் குழலவீ ராகி
யெளிவரு வீரு மானு லென்செய்கே னிசையா தென்றார். (௩௬௬)

நங்கைநின் றன்மைக் கேற்கு நன்மையே மொழிந்தா யென்று
மங்கையோர் பாகம் வைத்த வள்ளலார் விரைந்து போகத்
திங்களவா ணுதலி னாருஞ் சென்றுபின் னிறைஞ்சி மீண்டார்
எங்களை யாளு நம்பி தூதாமீண் டேகு கின்றார். (௩௬௭)

வேறு

ஆதியு மேலு மாலய னுடற் கருளாதார்
தூதினி லேகித் தொண்டரை யாளுந் தொழில்கண்டே
வீதியி லாடிப் பாடி மகிழ்ந்தே மிடைகின்றார்
பூதியி னீடும் பல்கண நாதப் புகழ்வீரர். (௩௬௮)

(௩௬௮) ஆதியுமேலும - திருவடி திருமுடிகளை.

அன்னவர் முன்னும் பின்னு மருங்கு மணைவெய்த
மின்னிடை யார்பா லன்பரை யுய்க்கும் விரைவோடுஞ்
சென்னியி னீடுங் கங்கை ததும்பத் திருவாரூர்
மன்னவ னாரம் மறையவ னார்பால் வந்துற்றார். (௩௬௯)

அன்பரு மென்பா லாவி யளிக்கும் படிபோனார்
என்செய்து மீள்வா ரின்னமு மென்றே யிடர்கூரப்
பொன்புரி முந்நூன் மார்பினர் செல்லப் பொலிவீதி
முன்புற நேருங் கண்ணிணை தானு முகிழாரால். (௩௭௦)

அந்நிலை மைக்கண் மன்மதன் வாளிக் கழிவார்தம்
மன்னுயிர் நல்குந் தம்பெரு மானார் வந்தெய்த
முன்னெதிர் சென்றே மூவுல குஞ்சென் றடையுந்தாள்
சென்னியில் வைத்தென் சொல்லுவ ரென்றே தெளியாதார். (௩௭௧)

எம்பெரு மானீ ரென்னுயிர் காவா திடர்செய்யுங்
கொம்பனை யார்பா லென்கொடு வந்தீர் குறையென்னத்
தம்பெரு மானுந் தாழ்குழல் செற்றந் தணிவித்தோம்
நம்பி யினிப்போய் மற்றவ டன்பா னணுகென்ன. (௩௭௨)

நந்தி பிரானார் வந்தருள் செய்ய நலமெய்துஞ்
சிந்தைய ராவங் கூர்களி யெய்தித் திகழ்கின்றார்
பந்தமும் வீடு நீரருள் செய்யும் படிசெய்தீர்
எந்தைபி ரானே யென்னினி யென்பா லிடரென்றார். (௩௭௩)

என்றடி வீழு நண்பாத மன்புக் கெளிவந்தார்
சென்றணை நீயச் சேயிழை பாலென் றருள்செய்து
வென்றுயர் சேமேல் வீதி விடங்கப் பெருமாள்தம்
பொன்றிகழ் வாயிற் கோயில் புகுந்தார் புவிவாழ. (௩௭௪)

வேறு

தம்பிரா னார்பின் சென்று தாழ்ந்தெழுந் தருளால் மீள்வார்
எம்பிரான் வல்ல வாறென் றெய்திய மகிழ்ச்சி யோடும்
வம்பலர் குழலார் செம்பொன் மாளிகை வாயி லேகி
நம்பியா ரூரர் காதல் நயந்தெழுந் தருளும் போது (௩௭௫)

முன்றுயி லுணர்ந்து சூழ்ந்த பரிசன மருங்கு மொய்ப்ப
மின்றிகழ் பொலம்பூ மாரி விண்ணவர் பொழிந்து வாழ்த்த
மன்றல்செய் மதுர கீத சீகரங் கொண்டு மந்தத்
தென்றலு மெதிர்கொண் டெய்துஞ் சேவக முன்பு காட்ட. (௩௭௬)

---

(௩௭௩) பந்தம் - தனுகரண புவனபோகங்களாற் பந்தித்தல். வீடு - பந்தத்தைப் பாற்றித் திருவடியிற் சேரப்பித்தல். (௩௭௪) புவிவாழ என்றமையால் முன் நிகழ்ந்தன வெல்லாம் இறைவன் பொருட்டுமன்று, வன்றொண்டர் பொருட்டுமன்று என்பது பெற்றாம். (௩௭௬) சீகரம் - நீர்த்துளி.

மாலைதண் கலவைச் சேறு மான்மதச் சாந்து பொங்குங்
கோலநற் பசுங்கர்ப் பூரங் குங்கும முதலா யுள்ள
சாலுமெய்க் கலன்கள் கூடச் சாத்தும்பூ ணுடை வர்க்கம்
பாலன பிறவு மேந்தும் பரிசன முன்பு செல்ல. (௩௭௭)

இவ்வகை யிவர்வந் தெய்த வெய்திய விருப்பி னோடு
மைவளர் நெடுங்கண் ணாரு மாளிகை யடைய மன்னுஞ்
செய்வினை யலங்கா ரத்துச் சிறப்பணி பலவுஞ் செய்து
நெய்வளர் விளக்குத் தூப நிறைகுட நிரைத்துப் பின்னும். (௩௭௮)

பூமலி நறும்பொற் றாமம் புனைமணிக் கோவை நாற்றிக்
காமர்பொற் சுண்ணம் வீசிக் கமழ்நறுஞ் சாந்து நீவித்
தூமலர் வீதி சூழ்ந்த தோகையர் வாழ்த்தத் தாமு
மாமணி வாயின் முன்பு வந்தெதி ரேற்று நின்றார் (௩௭௯)

வண்டலர் குழலார் முன்பு வன்றொண்டர் வந்து கூடக்
கண்டபோ துள்ளங் காதல் வெள்ளத்தின் கரைகா ணாது
கொண்டநா ணச்சங் கூர வணங்கவக் குரிசி லாருந்
தண்டளிர்ச் செங்கை பற்றிக் கொண்டுமா ளிகையுட் சார்ந்தார். (௩௮௦)

இருவரும் தம்பி ரானார் தாமிடை யாடிச் செய்த
திருவருட் கருணை வெள்ளத் திறத்தினைப் போற்றிச் சிந்தை
மருவிய வின்ப வெள்ளத் தழுந்திய புணர்ச்சி வாய்ப்ப
ஒருவரு மொருவர் மேவு நிலைமையி லுயிரொன் றானார். (௩௮௧)

ஆரணக் கமலக் கோயின் மேவிப்புற் றிடங்கொண் டாண்ட
நீரணி வேணி யாரை நிரந்தரம் பணிந்து போற்றிப்
பாரணி விளக்குஞ் செஞ்சொற் பதிகமா லைகளுஞ் சாத்தித்
தாரணி மணிப்பூண் மார்பர் தாமகிழ்ந் திருந்த நாளில். (௩௮௨)

வேறு.

நம்பியா ரூரர் நெஞ்சி னடுக்கமொன் றின்றி நின்று
தம்பிரா னாரைத் தூது தையல்பால் விட்டா ரென்னும்
இம்பரின் மிக்க வார்த்தை யேயர்கோ னார்தாங் கேட்டு
வெம்பினா ரதிச யித்தார் வெருவினார் விளம்ப லுற்றார். (௩௮௩)

நாயனை யடியா னேவுங் காரிய நன்று சால
வேயுமென் றிதனைச் செய்வான் றொண்டனா மென்னே பாவம்
பேயனேனை பொறுக்க வொண்ணாப் பிழையினைச் செவியாற் கேட்ப
தாயின பின்னு மாயா திருந்ததென் னாவி யென்பார் (௩௮௪)

(௩௮௪) நாயனை - சிவபெருமானை. ஆம் - சினத்தைக்குறிக்கும் எதிர்மறை வியப் பிடைச்சொல்.

காரிகை தன்பாற் செல்லுங் காதலா லொருவ னேவப்
பாரிடை நடந்து செய்ய பாததா மரைக ணோவத்
தேரணி வீதி யூடு செல்வது வருவ தாகி
யோரிர வெல்லாந் தூதுக் குழல்வரா மொருவ ரென்று. (௩௮௫)

நம்பர்தா மடிமை யற்றா ராகியே நண்ணி னாரேல
உம்பரார் கோனு மாலு மயனுநே ருணர வொண்ணா
எம்பிரா னிசைந்தா லேவப் பெறுவதே யிதனுக் குள்ளங்
கம்பியா தவனை யான்முன் காணுநா ளென்னா வென்று. (௩௮௬)

அரிவைகா ரணத்தி னாலே யாளுடைப் பரமர் தம்மை
யிரவினிற் றூது போக வேவியங் கிருந்தான் றன்னை
வரவெதிர் காண்பே னாகில் வருவதென் னாங்கொலென்று
விரவிய செற்றம பற்றி விளனுமுள ளத்த ராகி. (௩௮௭)

ஈறிலாப் புகழி னோங்கு மேயர்கோ னார்தா மெண்ணப்
பேறிது பெற்றார் கேட்டுப் பிழையுடன படுவா ராகி
வேறினி யிதற்குத தீர்வு வேண்டுவார் விரிபூங் கொன்றை
யாறிடு சடைய னாருக் கதனைவிண் ணப்பஞ் செயது. (௩௮௮)

நாடொறும் பணிந்து போற்று நாதரு மதனை நோக்கி
நீடிய தொண்டா தமமு மொருவரு மேவு நீர்மை
கூடுதல் புரிவா ராயா குரிசிலார் தமபான் மேனி
வாடுறு சூலை தன்னை யருளினா வருந்து மாற்றால் (௩௮௯)

ஏதமில் பெருமைச் செய்கை யேயர்தம் பெருமான் பக்கல்
ஆதியா ரேவுஞ் சூலை யனல்செயவேல் குடைவ தென்ன
வேதனை மேனமேற் செய்ய மிகவதற் குடைந்து வீழ்ந்து
பூதநா யகாதம பொறறாள் பறறியே போற்று கின்றா. (௩௯௦)

சிந்தையால் வாககா லன்பர் திருந்தடி போற்றி செய்ய
எந்தமை யாளு மேயர் காவலா தம்பா லீசா
வந்துனை வருததுஞ் சூலை வன்றொண்டன் றீர்க்கி லன்றி
முந்துற வொழியா தென்று மொழிந்தருள செயயக கேட்டு. (௩௯௧)

எமபிரா னெநதை தந்தை தநதையெங கூட்ட மெல்லாந
தம்பிரா னீரே யென்று வழிவழி சார்ந்து வாழும்
இம்பரின மிகக வாழ்க்கை யென்னைநின றீருஞ் சூலை
வம்பென வாண்டு கொண்டா னொருவனோ தீர்ப்பான் வந்து. (௩௯௨)

மற்றவன் றீக்கிற் றீரா தொழிந்தெனை வருத்த னன்றாற்
பெற்றமே லுயர்த்தீர் செய்யும் பெருமையை யறிந்தார் யாரே

(௩௮௬) கம்பியாதவனை - நடுங்காதவனை. (௩௮௮) தீர்வு - பிராயச்சித்தம்.

யுற்றவன் றொண்டர்க் கேயா முறுதியே செய்தீ ரென்னக்
கற்றைவார் சடையார் தாமு மவர்முன்பு கரந்தா ரன்றே (௩௯௩)

வன்றொண்டர் தம்பாற் சென்று வள்ளலா ரருளிச் செய்வார்
இன்றுநம் மேவ லாலே யேயர்கோ னுற்ற சூலை
சென்றுநீ தீர்ப்பா யாகென் றருள்செயச் சிந்தை யோடு
நன்றுமெய்ம் மகிழ்ந்து போற்றி வணங்கினார் நாவ லூரர். (௩௯௪)

அண்ணலா ரருளிச் செய்து நீங்கவா ரூரர் தாமும்
விண்ணவர் தம்பி ரானா ரேவலால் விரைந்து செல்வார்
கண்ணிய மனத்தின் மேவுங் காதலாற் கலிக்கா மர்க்குத்
திண்ணிய சூலை தீர்க்க வருதிறஞ் செப்பி விட்டார். (௩௯௫)

நாதர்தம் மருளா னண்ணுஞ் சூலையு மவர்பாற் கேட்ட
கேதமும் வருத்த மீண்டும் வன்றொண்டர் வரவு கேட்டுத்
தூதனா யெம்பி ரானை யேவினான் சூலை தீர்க்கும்
ஏதமிங் கெய்த வெய்தில் யான்செய்வ தென்னா மென்பார். (௩௯௬)

மற்றவ னிங்கு வந்து தீர்ப்பதன் முன்னான் மாயப்
பற்றினின் றென்னை நீங்காப் பாதகச் சூலை தன்னை
யுற்றவிவ் வயிற்றி னோடுங் கிழிப்பனென் றுடைவா ளன்னாற்
செற்றிட வுயிரி னோடுஞ் சூலையுந் தீர்ந்த தன்றே. (௩௯௭)

கருதரும் பெருமை நீர்மைக் கலிக்காமர் தேவி யாரும்
பொருவருங் கணவ ரோடு போவது புரியுங் காலை
மருவவிங் கணைந்தார் நம்பி யென்றுமுன் வந்தார் கூற
ஒருவரு மழுதல் செய்யா தொழிகவென் றுரைத்துப் பின்னர். (௩௯௮)

கணவர்தஞ் செய்கை தன்னைக் கரந்துகா வலரை நம்பி
யணைவுறும் பொழுது சால வலங்கரித் தெதிர்போ மென்னப்
புணர்நிலை வாயிற் றீபம் பூரண கும்பம வைத்துத்
துணர்மலர் மாலை தூக்கித் தொழுதெதிர் கொள்ளச் சென்றார். (௩௯௯)

செம்மைசேர் சிந்தை மாந்தர் சென்றெதிர் கொண்டு போற்ற
நம்மையா ளுடைய நம்பி நகைமுக மவர்க்கு நல்கி
மெய்ம்மையாம் விருப்பி னோடு மேவியுட் புகுந்து மிக்க
மொய்ம்மலர்த் தவிசின் மீது முகமலர்ந் திருந்த போது. (௪௦௦)

பான்மையாச் சனைக ளெல்லாம் பண்பினில் வழாமை யெய்தத்
தானமறை தொடர்ந்த வாய்மை நம்பியா ரூரர் கொண்டிங்

(௩௯௩) நோக்கில் - தீர்ப்பதினும். உற்ற - புதிதாகத் தொண்டுசெய்யும். உறுதி - உபாயம். (௩௯௬) கேதமும் - துன்பமும் (௩௯௭) செற்றிட - வயிற்றைக்கிழிக்க. (௩௯௮) கணவரோடு போவது - நாயகரோடு உயிர்துறத்தல்.

கியான்மிக வருந்து கின்றே னேயர்கோ னார்தா முற்ற
வூனவெஞ் சூலை நீக்கி யுடனிருப் பதனுக் கென்றார். (௪௦௧)

மாதர்த மேவ லாலே மனைத்தொழின் மாக்கண் மற்றிங்
கேதமொன் றில்லை யுள்ளே பள்ளிகொள கின்றா ரென்னத்
தீதனை வில்லை யேனு மென்மனந் தெருளா தின்னம்
ஆதலா லவரைக் காண வேண்டுமென் றருளிச் செய்தார். (௪௦௨)

வன்றொண்டர் பின்னுங் கூற மற்றவர் தம்மைக் காட்டத்
துன்றிய குருதி சோரத் தொடர்குடர் சொரிந்துள் ளாவி
பொன்றியே கிடந்தார் தம்மைக் கண்டபின் புகுந்த வாறு
நன்றென மொழிந்து நானு நண்ணுவே னிவர்முன் பெனபார். (௪௦௩)

கோளுறு மனத்த ராகிக் குற்றுடை வாளைப் பற்ற
ஆளுடைத் தம்பி ரானா ரருளினா லவரு முய்ந்து
கேளிரே யாகிக் கெட்டே னெனவிரைந் தெழுந்து கையில்
வாளினைப் பிடித்துக் கொள்ள வன்றொண்டா வணங்கி வீழ்ந்தார். (௪௦௪)

மற்றவர் வணங்கி வீழ வாளினை மாற்றி யேயர்
கொற்றவ னாரு நம்பி குரைகழல் பணிந்து வீழ்ந்தார்
அற்றைநா ணிகழ்ந்த விந்த வதிசயங் கண்டு வானோர்
பொற்றட மலரின் மாரி பொழிந்தனர் புவனம் போற்ற. (௪௦௫)

இருவரு மெழுந்து புல்லி யிடைவிடா நண்பி னாலே
பொருவரு மகிழ்ச்சி பொங்கத் திருப்புன்கூர்ப் புனிதர் பாத
மருவினர் போற்றி நின்று வன்றொண்டர் தம்பி ரானார்
அருளினை நினைந்தே யந்த ணாளனென் றெடுத்துப் பாடி. (௪௦௬)

---

திருப்புன்கூர் - பண் - தக்கேசி.

திருச்சிற்றம்பலம்.

அந்தணாளனுன்னடைக்கலம்புகுதவவனைக்காப்பதுகாரணமாக
வந்தகாலன்றனாருயிரதனைவவ்வினாய்க்குன்றன்வன்மைகண்டடியேன்
எந்தைநீயெனைநமன்றமர்நலியிலிவன்மற்றென்னடியானெனவிலக்குஞ்[ணே
சிந்தையால்வந்துன்றிருவடியடைந்தேன்செழும்பொழிற்றிருப்புன்கூருளா

கம்பமாகளிற்றின்னுரியானைக்காமற்காய்ந்ததோர்கண்ணுதலானைச் [னை
செம்பொனேயொககுந்திருவுருவானைச்செழும்பொழிற்றிருப்புன்கூருளா
யும்பராளியையுமையவள்கோனையூரன்வன்றொண்டனுள்ளத்தாலுகந்
தன்பினாறசொன்னவருந்தமிழைந்தோடைந்துமவல்லவாருவினையிலரே.

திருச்சிற்றம்பலம்.

---

(௪௱௪) கேளிரே - நட்புடையவரே.

சிலபகல் கழிந்த பின்பு திருமுனைப் பாடி நாடர்
மலர்புகழ்த் திருவா ரூரின் மகிழ்ந்துடன் வந்த வேயர்
குலமுதற் றலைவ னாருங் கூடவே குளிர்பூங் கோயில்
நிலவினார் தம்மைக் கும்பிட் டுறைந்தனர் நிறைந்த வன்பால். (௪0௭)

அங்கினி தமர்ந்து நம்பி யருளினான் மீண்டு போந்து
பொங்கிய திருவின் மிக்க தம்பதி புகுந்து பொற்பிற்
றங்குநா ளேயர் கோனார் தமக்கேற்ற தொண்டு செய்தே
செங்கண்மால் விடையார் பாதஞ் சேர்ந்தனர் சிறப்பி னோடும். (௪0அ)

நள்ளிரு ளைய னாரைத் தூதுவிட் டவர்க்கே நண்பாம்
வள்ளலா ரேயர் கோனார் மலரடி வணங்கிப் புக்கேன்
உள்ளுணர் வான ஞான முதலிய வொருநான் குண்மை
தெள்ளுநீர் தமிழாற் கூறுந் திருமூலர் பெருமை செப்ப. (௪0௯)

ஏயர்கோன்கலிக்காமநாயனார் புராண முற்றிற்று.

ஆக திருவிருத்தம் - ௩,௫௬அ.

---

நீர்நிலவளங்களாற் சிறப்புற்றோங்குஞ் சோழநாட்டிலே, காவிரிநதியின் வடகரைக் கீழ்பாலுள்ள திருப்பெருமங்கலத்திலே, வேளாண்மரபிலே, பரம்பரையாகச் சோழமகாராஜாக்களிடத்தில் சேனாதிபதி தொழில்செய்து வந்த ஏயர்குடியிலே அவதரித்தவர் ஒருவர் இருந்தார். அவர் கலிக்காமர் என்னும் அருமைத் திருநாமமுடையவர்; சிவபத்தி சிவனடியார்பத்திகளில் மிகச் சிறப்புற்றவர்; திருப்புன்கூர் என்னுந் திருப்பதியிலே பல திருப்பணிகள் செய்தவர்.

அக்கலிக்காமநாயனார் சிவநெறியில் ஒழுகிவருநாளில் சுந்தரமூர்த்தி சுவாமிகள் தியாகேசப் பெருமானைப் பரவைபால் தூதுவிட்ட சமாசாரத்தைக்கேட்டு மனநடுங்கிச் சினந்து வெம்பி "நாயனை அடியான் ஏவுங்காரியம் மிகநன்று; இதைச் செய்தவனுந் திருத்தொண்டனாம்; என்னேபாவம்! இப்பிழையைக்கேட்ட பின்னும் என்னாவியொழிய வில்லையே" என்று கூறிப் பின்னும் "ஒருவன் பெண்ணாசை நிமித்தம் ஏவ எல்லாம்வல்ல இறைவனார் தூதராய்ப் பாதங்கள்நோவ ஓரிரவுமுழுதும் போக்கு வரவுசெய்து உழன்றாராம்; தேவதேவராகிய சிவபெருமான் இசைந்தனரேனும் அவன் அவரை ஏவலாமோ; இதனுக்கு உள்ளங்கம்பியாத அவனைக் காணுநாள் எந்நாளோ; அவனைக் காணப்பெறுவேனாயின் என்ன விளையுமோ" என்று இயம்பிக் கோபம்நிறைந்த உள்ளத்தவராயினார்.

சுந்தரமூர்த்தி சுவாமிகள் நாயனார் நோக்கத்தைக் கேள்வியாலுணர்ந்து, சிவபெருமானுக்கு அதனை விண்ணப்பஞ்செய்து நாள்தோறும் போற்றி வந்தார். அடியார்க் கெளியவராகிய அருட்பிரகாச வள்ளலார் இரண்டு திருத்தொண்டர்களையுங் கூட்டி ஒற்றுமைப்படுத்தத் திருவுள்ளங்கொண்டு, ஏயர்கோன் கலிக்காமநாயனார்பால் சூலைநோயை ஏவியருளினார். அக்கொடுநோய் நாயனாரை யடுத்துப்பற்றி வெந்தழலிற் காய்ச்சிய வேலாயுதத்தைப் போலக் குடையத்தொடங்க, நாயனார்பெருமான் மிகவருந்திச் சிவபெருமான் திருவடித் தாமரைகளை மனத்தாலும், வாக்காலும் போற்றிசெய்தார்.

எள்ளுக்குள் எண்ணெய்போல் எங்கும் நீக்கமற நிறைந்துள்ள நீலகண்டப் பெருமானை கலிக்காமர் முன்னேதோன்றி "அன்பனே! இந்நோய் வன்றொண்டனாலன்றி ஒழியாது" என்று திருவாய் மலர்ந்தருளினார். அது கேட்ட அடியவர்பெருமான் "எம்பிரானே! பரம்பரையாகத் தேவரீரையே வழிபட்டுவருங் குடியிற்பிறந்த அடியேனுக்குற்ற சூலைநோயைப் புதிதாக அடிமைகொண்ட ஒருவனோ தீர்க்கவல்லான; அதனினும் நோயால்வருந் தலை நன்று; திருவருள் பெருமையை யறியவல்லார் யார்; நம்பியாரூரனுக்கே ஆகும் உறுதிசெய்யும்" என்றார். உடனே உம்பர்கட்கரசாய பெருமான நாயனார்முன் திருவுருவைக்கரந்து, சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருமுன்னே தோன்றி "நம் ஏவலாலே ஏயர்கோனை வருத்துஞ் சூலையை நீ சென்று தீர்ப்பாய்" என்று அருளிச்செய்தார். அதைக்கேட்ட வன்றொண்டப்பெருமான் அளவிலா ஆனந்தமடைந்து, ஏயர்கோன்கலிக்காமநாயனார் இல்லத்திற்கேகத் திருவுள்ளங்கொண்டு தமது வருகையைத் தெரிவிக்கும்படி ஒற்றரைவிடுத்தார். அவர்கள் சென்று நாயனாரைக்கண்டு சுவாமிகள் வரவைத் தெரிவித்தார்கள். அதுகேட்ட கலிக்காமர் "பிரம விஷ்ணுக்கட்கும் அரியவராகிய பரசிவப்பெருமானைப் பெண்பொருட்டாகத் தூதனுப்பிய அவன் இங்குவரின் நான் என்னசெய்வேன்; அவன் இங்குவந்து தீர்த்தற்குமுன் இச்சூலையை வயிற்றினோடுங்கிழிப்பேன்" என்று உடைவாளையெடுத்து வயிற்றைக் கிழித்துக்கொண்டார். உயிரோடு சூலையும் ஒழிந்தது. அதுகண்ட நாயனாருடைய நாயகியார் தாமுங் கணவரோடு உயிரிழக்கப் புகும்போது, சிலர்வந்து "சுந்தரமூர்த்திகள் இங்கு எழுந்தருளிவந்தார்கள்" என்று சொற்றனர். உடனே அம்மையார் அங்கே யாவரையும் அழாதிருக்கும்படி செய்து, சுந்தரமூர்த்தி சுவாமிகளை முறைப்படி எதிர்கொண்டழைக்கப் பந்துக்களை ஏவினார். அப்படியே அவர்கள் எதிர்கொண்டுவணங்கச் சுவாமிகள் அவர்களுக்கருள்செய்து போந்து, கலிக்காமர் இல்லத்திற் புகுந்து, ஆசனத்திருந்து தமக்கு அன்பாற்செய்யப்பட்ட அருச்சனைகளையேற்றுக்கொண்டு "கலிக்காமருடைய நோயைத்தீர்த்து அவரோடு இனிதுறைய யான் வருந்துகின்றேன்" என்று சொன்னார். அதுகாலை நாயனார் மனைவியார் ஏவலால் வேலைக்காரர்கள் சுந்தரமூர்த்திகளை வணங்கி "ஐயரே! நாயனார்க்குக் கெடுதி யொன்றுமில்லை; அவர் உள்ளே பள்ளிகொள்கின்றார்" என்றார்கள். அதற்கு வன்றொண்டப்பெருமான் "அவருக்குத் தீங்கு இல்லையாயினும் என்மனந் தெளிந்திலது, ஆதலால் அவரைக் காணவேண்டும்" என்று திருவாய்மலர்ந்தருள; அவர்கள் கலிக்காமரைக் காட்டினார்கள். சுந்தரமூர்த்தி சுவாமிகள், குருதிசோரக் குடர்சொரிந்து உயிர்நீங்கிக் கிடந்த நாயனாரைப்பார்த்து "நிகழ்ந்தது நன்று! நன்று!! நானும்உயிர்துறப்பேன்" என்று உடைவாளைப்பற்றினார். பற்றினதும் பரமேசுவரன் திருவருளால் ஏயர்கோன்கலிக்காம நாயனார் உயிர்பெற்று, "அந்தோ கெட்டேன்!" என்று விரைந்தெழுந்து, சுவாமிகள் திருக்கரத்திலிருந்த உடைவாளைப் பிடித்துக்கொள்ள, வன்றொண்டப்பெருமான் நாயனார் பாதங்களில்விழுந்து வணங்கினார். நாயனாரும் சுவாமிகளைப் பணிந்தனர். அன்றுதொட்டு இருவருஞ்செழுந்தகை நட்புடையவர்களாய், திருப்புன்கூரையடைந்து சுவாமியைத் தரிசித்துத் திருவாரூரையடைந்து, தியாகேசரைத் தொழுதுகொண்டிருந்தார்கள். சிலநாள் சென்றபிறகு ஏயர்கோன்கலிக்காம நாயனார் சுந்தரமூர்த்தி சுவாமிகள்பால் விடைபெற்றுத் தம்பதிக்குச்சென்று, திருத்தொண்டுகள் செய்துகொண்டிருந்து, தூநீர்ச்சிக்கிழவனைப் பெற்ற குழகனார் திருவடிநீழலை யடைந்தார்.

---

# திருமூலநாயனார் புராணம்.

அந்தியிளம் பிறைக்கண்ணி யண்ணலார் கயிலையினின்
முந்தைதங்கழ் கோயிலுக்கு முதற்பெருநா யகமாகி
இந்திரன்மா லயன்முதலா மிமையவர்க்கு நெறியருளு
நந்திதிரு வருள்பெற்ற நான்மறையோ கிகளொருவர். (௧)

மற்றவர்தா மணிமாதி வருஞ்சித்தி பெற்றுடையார்
கொற்றவனார் திருக்கயிலை மலைநின்று குறுமுனிபால்
உற்றதொரு கேண்மையினா லுடன்சிலநா ளுறைவதற்கு
நற்றமிழின் பொதியமலை நண்ணுதற்கு வழிக்கொண்டார் (௨)

மன்னுதிருக் கேதாரம் வழிபட்டு மாமுனிவர்
பன்னுபுகழ்ப் பசுபதிநே பாளத்தைப் பணிந்தேத்தித்
துன்னுசடைச் சங்கரனா ரேற்றதூ நீர்க்கங்கை
யன்னமலி யகன்றுறைநீ ரருங்கரையின் மருங்கணைந்தார். (௩)

கங்கைநீர்த் துறையாடிக் கருத்துறைநீள் கடலேற்றும்
அங்கணர்தா மகிழ்ந்தருளு மவிமுத்தம் பணிந்தேத்தி
மங்குல்வளர் வரைவிந்த மன்னுபருப் பதமிறைஞ்சித்
திங்களணி சடையர்திருக் காளத்தி மலைசேர்ந்தார். (௪)

நீடுதிருக் காளத்தி நிலவுதா ணுவைவணங்கி
யாடுதிரு வரங்கான வாலவனந் தொழுதேத்தித்
தேடுமிரு வர்க்கரியார் திருவேகாம் பரம்பணிந்து
மாடுயர்மா மதிற்காஞ்சி வளநகரின் வைகினார். (௫)

---

அணிமாதி—அணிமா=ஆதி - தீர்க்கசந்தி. அணிமா ஆதிசித்திகள்—அணிமா, மகிமா, லகிமா, கரிமா, பிராத்தி, பிராகாமியம், ஈசத்துவம், வசித்துவம் என்பன. அணிமா—அணுவினுஞ் சிறிய உருவங்கொள்வது. மகிமா—எவ்வகைத் தத்துவங்களினும் நீக்கம் அறநிறைந்து நிற்பது. லகிமா—மேருவைப்போலிருந்தும் எடுக்குங்கால் லகுவாகிய பரமாணுப்போல்வது. கரிமா—பரமாணுவைப்போலிருந்தும் எடுக்குங்கால் மேருவைப்போலக் கனப்பது. பிராத்தி—எல்லா அண்டங்களினும் போகும் ஆற்றலோடு எல்லா வளங்களையும் எய்தப்பெறுவது, பிராகாமியம்—இச்சித்த எல்லாப்போகங்களையும் இருந்தவிடத்தில் வரப்பெற்று நுகர்வது. ஈசத்துவம்—கடவுளைப் போல் முத்தொழில்கள் செய்து, எவரும் பணிகேட்ப நிற்பது. வசித்துவம்—எவ்வுயிருந்தன் வயமாக நிற்பது. (௪) நீள்துறை - மணிகாணிகை. நீள்கடல் - பிறவிக்கடல். அவிமுத்தம்—முத்தம் - விடுகை, விமுத்தம் - மிகவும் விடுகை, அவிமுத்தம் - மிகவும் விடவேண்டிய காலத்தும் விடாமை. அ—எதிர்மறை. விவரம் அத்தலமான்மியத்தானுணர்க.

நற்பதியங் கமர்யோக முனிவர்களை நயந்துபோய்க்
கற்புரிசைத் திருவதிகை கலந்திறைஞ்சிக் கறைக்கண்டர்
அற்புதக்கூத் தாடுகின்ற வம்பலஞ்சூழ் திருவீதிப்
பொற்பதியாம் பெரும்பற்றப் புலியூரில் வந்தணைந்தார். (௬)

எவ்வுலகு முய்யவெடுத் தருளியசே வடியாரைச்
செவ்வியவன் புறவணங்கிச் சிந்தைகளி வரத்திளைத்து
வவ்வியமெய் யுணர்வின்கண் வருமானந் தக்கூத்தை
யவ்வியல்பிற் கும்பிட்டங் காராமை யமர்ந்திருந்தார். (௭)

தடநிலைமா ளிகைப்புலியூர் தன்னிலுறைந் திறைஞ்சிப்போய்
அடல்விடையின் மேல்வருவா ரமுதுசெய வஞ்சாதே
விடமளித்த தெனக்கருதி மேதினிக்கு வளநிறைத்தே
கடல்வயிறு நிறையாத காவிரியின் கரையணைந்தார் (௮)

காவிரிநீர்ப் பெருந்தீர்த்தங் கலந்தாடிக் கடந்தேறி
யாவினருங் கன்றுறையு மாவடுதண் டுறையணைந்து
சேவில்வரும் பசுபதியார் செழுங்கோயில் வலம்வந்து
மேவுபெருங் காதலினாற் பணிந்தங்கு விருப்புறுவார். (௯)

அந்நிலைமைத் தானத்தை யகலாத தொருகருத்து
முன்னியெழுங் குறிப்பினான் மூளுமா தரவெய்தப்
பின்னுமகன் றேகுவார் பேணவருங் கோககுலங்கள்
பொன்னிநதிக் கரைப்புறவிற் புலம்புவன வெதிர்கண்டார். (௧௦)

அந்தணர்தஞ் சாத்தனூ ராமேய்ப்பார் குடித்தோன்றி
முந்தைமுறை நிரைமேய்ப்பான் மூலனெனும் பெயருடையோன்
வந்துதனி மேய்க்கின்றான் வினைமாள வாழ்நாளை
வெந்தொழில்வன் கூற்றுண்ண வீடிநிலத் திடைவீழ்ந்தான். (௧௧)

மற்றவன்ற னுடம்பினையக் கோககுலங்கள் வந்தணைந்து
சுற்றிமிகக் கதறுவன சுழல்வனமோப் பனவாக
நற்றவயோ கியாகாணு நம்பாரு ளாலேயா
வுற்றதுய ரிவைநீங்க வொழிப்பனென வுணர்கின்றார். (௧௨)

இவனுயிர்பெற் றெழிலன்றி யாக்களிடர் நீங்காவென்
றவனுடலிற் றம்முயிரை யடைவிக்க வருள்புரியுந்
தவமுனிவர் தம்முடம்புக கரண்செய்து தாமுயன்ற
பவனவழி யவனுடலிற் றம்முயிரைப் பாய்த்தினார். (௧௩)

பாய்த்தியபின் றிருமூல ராயெழலும் பசுக்களெலா
நாத்தழும்ப நக்கிமோந் தணைந்துகளைப் பொடுநயந்து

---

(௬) புரிசை - மதில்கள். (௧௩) அரண்செய்து - கெடுதி நேரிடாதபடி சேமித்து.

வாய்த்தெழுந்த களிப்பினால் வாலெடுத்துத் துள்ளிப்பி
னீத்ததுய ரினவாகி நிரைந்துபோய் மேய்ந்தனவால். (௧௪)

ஆவினிரை மகிழ்வுறக்கண் டளிகூர்ந்த வருளினராய்
மேவியவை மேய்விடத்துப் பின்சென்று மேய்ந்தவைதாங்
காவிரிமுன் றுறைத்தண்ணீர் கலந்துண்டு கரையேறப்
பூவிரிதண் புறவினிழ லினிதாகப் புறங்காத்தார். (௧௫)

வெய்யசுடர்க் கதிரவனு மேல்பாலை மலையணையச்
சைவநெறி மெய்யுணர்ந்தோ ரானினங்க டாமேமுன்
பையநடப் பனகன்றை நினைந்துபடர் வனவாகி
வையநிகழ் சாத்தனூர் வந்தெய்தப் பின்போனார். (௧௬)

போனவர்தாம் பசுக்களெலா மனைதோறும் புகநின்றார்
மானமுடை மனையாளும் வைகியபின் றாழ்த்தாரென்
றானபயத் துடன்சென்றே யவர்நின்ற வழிகண்டாள்
ஈனமிவர்க் கடுத்ததென மெய்தீண்ட வதற்கிசையார். (௧௭)

அங்கவளு மக்களுட னருஞ்சுற்ற மில்லாதா
டங்கிவெரு வுறமயங்கி யென்செய்தீ ரெனத்தளர
இங்குனக்கென் னுடனணைவொன் றில்லையென வெதிர்மறுத்துப்
பொங்குதவத் தோராங்கோர் பொதுமடத்தி னுட்புகுந்தார். (௧௮)

இல்லாள னியல்புவே றானமைகண் டிரவெல்லாஞ்
சொல்லாடா திருந்தவர்பா லணையாது துயிலாதாள்
பல்லார்முன் பிற்றைநா ளிவர்க்கடுத்த பரிசுரைப்ப
நல்லார்க ளவர்திறத்து நாடியே நயந்துரைப்பார் (௧௯)

பித்துற்ற மயலன்று பிறிதொருசார் புளதன்று
சித்தவிகற் பங்களைந்து தெளிந்தசிவ யோகத்தில்
வைத்தகருத் தினராகி வரம்பில்பெரு மையிலிருந்தார்
இத்தகைமை யளப்பரிதால் யாராலு மெனவுரைப்பார். (௨௦)

பற்றறுத்த வுபதேசப் பரமர்பதம் பெற்றார்போன்
முற்றுமுணர்ந் தனராகு முன்னைநிலை மையிலுங்கள்
சுற்றவியல் பினுக்கெய்தா ரென்றுரைப்பத் துயரெய்தி
மற்றவளு மையலுற மருங்குள்ளார் கொண்டகன்றார். (௨௧)

இந்தநிலை மையிலிருந்தா ரெழுந்திருந்தாங் கானிரைகள்
வந்தநெறி யேசென்று வைத்தகாப் பினிலுய்த்த
முந்தையுடற் பொறைகாணார் முழுதுணர்ந்த மெய்ஞ்ஞானச்
சிந்தையினில் வந்தசெய லாராய்ந்து தெளிகின்றார். (௨௨)

(௧௫) புறவின - மருதநிலத்தின. (௧௬) பைய - மெல்ல. (௨௨) பொறை - சுமை.

தண்ணிலவார் சடையார்தாந் தந்தவா கமப்பொருளை
மண்ணின்மிசைத் திருமூலர் வாக்கினாற் றமிழ்வகுப்பக்
கண்ணியவத் திருவருளா லவ்வுடலைக் கரப்பிக்க
எண்ணிறைந்த வுணர்வுடையா ரீசரரு ளெனவுணர்ந்தார். (௨௩)

சுற்றியவக் குலத்துள்ளார் தொடர்ந்தார்க்குத் தொடர்வின்மை
முற்றவே மொழிந்தருள வவர்மீண்டு போனதற்பின்
பெற்றமீ துயர்த்தவர்தாள் சிந்தித்துப் பெருகார்வச்
செற்றமுதல் கடிந்தவர்தா மாவடுதண் டுறைசேர்ந்தார். (௨௪)

ஆவடுதண் டுறையணைந்தங் கரும்பொருளை யுறவணங்கி
மேவுவார் புறக்குடபான் மிகவுயர்ந்த வரசின்கீழ்த்
தேவிருக்கை யமர்ந்தருளிச் சிவயோகந் தலைநின்று
பூவலரு மிதயத்துப் பொருளோடு புணர்ந்திருந்தார். (௨௫)

ஊனுடம்பிற் பிறவிவிடந் தீர்ந்துலகத் தோருய்ய
ஞானமுத னான்குமலர் நற்றிருமந் திரமாலை
பான்மைமுறை யோராண்டுக் கொன்றாகப் பரம்பொருளாம்
ஏனவெயி றணிந்தாரை யொன்றவன்றா னெனவெடுத்து (௨௬)

திருமந்திரமாலை.

திருச்சிற்றம்பலம்.

ஒன்றவன்றானே யிரண்டவனின்னரு
ணின்றனன் மூன்றினு ணான்குணர்ந்தைந்து
வென்றனனாறு விரிந்தனனேழும்பர்ச்
சென்றனன்றானிருந்தானுணர்ந்தெட்டே.

நீருநிலனும்விசும்பங்கிமாருத
தூருமுடம்புறுசோதியுமாயுளன்
பேருமபராபரன்பிஞ்ஞகனெம்மிறை
யூருஞ்சகலனுலப்பிலிதானே.

திருச்சிற்றம்பலம்.

முன்னியவப் பொருண்மாலைத் தமிழ்மூவா யிரஞ்சாத்தி
மன்னியமூ வாயிரத்தாண் டிப்புவிமேன் மகிழ்ந்திருந்து
சென்னிமதி யணிந்தார்தந் திருவருளாற் றிருக்கயிலை
தன்னிலணைந் தொருகாலும் பிரியாமைத் தாளடைந்தார். (௨௭)

நலஞ்சிறந்த ஞானயோ கக்கிரியா சரியையெலாம்
மலர்ந்தமொழித் திருமூல தேவர்மலர்க் கழல்வணங்கி

(௨௬) ஏனஎயிறு - பன்றிக்கொம்பு.

யலர்ந்தபுகழ்த் திருவாரூ ரமணர்கலக் கங்கண்ட
தலங்குலவு விறற்றண்டி யடிகடிறஞ் சாற்றுவாம். (௨௮)

## திருமூலநாயனார்புராணமுற்றிற்று.

### ஆகத் திருவிருத்தம் - ௩,௫௬௬.

---

திருக்கயிலாயத்திலே நந்தியெம்பெருமான் திருவருள்பெற்ற சிவயோகிகளுள் ஒருவர் அகத்தியமுனிவரிடம் சிலநாளிருத்தற்குப் பொதிகைமலையை யடைதற்பொருட்டுக் கயிலையங்கிரியை விடுத்து, திருக்கேதாரம், பசுபதிநேபாளம், காசி, ஸ்ரீசைலம், திருக்காளத்தி, திருவாலங்காடு, காஞ்சீபுரம், திருவதிகை, சிதம்பரம் முதலிய திருத்தலங்களைத் தரிசித்துக்கொண்டு, திருவாவடுதுறையைச் சேர்ந்து, தினந்தோறுஞ் சிவதரிசனஞ் செய்துகொண்டிருந்தார். ஒருதினம் திருவாவடுதுறையினின்றும் நீங்கிப்போகும்போது காவிரிநதியிலுள்ள வனத்திலே பசுக்கூட்டங்களெல்லாம் கதறிக் கதறிப் புலம்புவதைப் பார்த்தார். அப்பசுக்களை மேய்க்கின்றவன் சாத்தனூரிலே உள்ள இடையனாகிய மூலனென்பவன் அவன் அன்றையதினம் இறந்து கிடந்தபடியால் பசுக்கள் எல்லாம் அவனைச் சுற்றிக்கொண்டு அழுது மோப்பனவாயின. அதுகண்ட அருந்தவயோகியர் "திருவருளால் இப்பசுக்கள் துயரத்தைப் போக்கவேண்டும்; இவ்விடையன் உயிர்பெற்றெழுந்தாலன்றி இவைகள் இன்புறா" என்று நினைத்துத் தந்திருமேனியைச் சேமித்துவைத்துத் தமதுஉயிரை அவ்விடையன் உடலிலே நுழைத்துத் திருமூலராய் எழுந்தருளினார். அங்ஙனம் எழலும் பசுக்களெல்லாம் ஆனந்தமடைந்து அவரை நாத்தழும்ப நக்கிமோந்து, கனைத்துத் துள்ளியோடி மேய்ந்தன. திருமூலர் எல்லையில்லா ஆனந்தங்கொண்டு அவைகளை நன்றாக மேய்த்தார் பொழுதுபடவே கோக்கள் தத்தங்கன்றுகளை நினைத்துத் தாமே சாத்தனூர்க்குப் பையப்பையச்செல்ல திருமூலநாயனார் அவைகளுக்குப் பின்சென்று, அவைகள் இல்லங்கள்தோறும் நுழையத் தாம் வீதியிலே நின்றார்.

மூலன் மனைவியானவள் "நாயகர் இன்று மிகத்தாழ்த்தார்" என்று சிவயோகியார் இருந்த இடத்தையடைந்து" இவருக்கு ஈனம் அடுத்தது போலும்" என்று அவருடைய அருமைத் திருமேனியைத்தீண்ட, அவர் அதற்கு இசைந்தாரில்லை. அவளமயங்கி "என்செய்தீர்" என்று தளர, "என்னுடன் உனக்கு ஒருசம்பந்தமும் இல்லை" என்றுமறுத்து, ஒருபொதுமடத்தினுள்ளே நுழைந்து, சிவயோகத்திலே யிருந்தார். பெண்டாட்டி இரவுமுழுவதும் துயிலின்றி வருந்தி அடுத்தநாள் தந்நாயகர் செய்கையை அவ்வூரிலுள்ள அறிஞர்களிடம் விண்ணப்பிக்க, அவர்கள் திருமூலரைப் பார்த்து "இது பயித்தியமன்று; பிறிதொரு சார்புமன்று; இவர்கருத்து சிவயோகத்திடத்தேயாம்; இனிச் சுற்றத்தோடு சேரார்" என்று சொன்னார்கள். அதுகேட்டு மனைவி துயரக்கடலில் ஆழ்ந்தாள். அவர்கள் அவளைத் தேற்றி அழைத்துக்கொண்டு அகன்றார்கள்.

சிவயோகத்திலிருந்த திருமூலநாயனார் எழுந்து பசுக்கள்வந்த வழியே போய்த் தாஞ்சேமித்துவைத்த உடலைக்காணாது மெய்ஞ்ஞானத்தால் ஆராய்ந்து, 'சிவபெருமான் தாம் அருளிச்செய்த சிவாகமங்களிலே செறிந்துள்ள

உண்மைப்பொருள்களை யுலகத்திலே தமிழ்நூலாகத் தமியேனைப்பாடுவிக்க அவ்வுடலை மறைத்தருளினார்' என்று தெளிந்து, திருவாவடுதுறையை யடைந்து, திருக்கோயிலினுள்ளே நுழைந்து, சிவதரிசனஞ்செய்து, அத்திருக் கோயிலுக்குப் புறக்கடைபாலுள்ள ஓர் அரசமரத்தின்கீழ் மூவாயிரவருடஞ் சி[illegible]ாகமிருந்து, ஓராண்டிற்கு ஓரருட்பாவாகத் திருமந்திரம் மூவாயிரத் தையும் திருவாய்மலர்ந்தருளிச் செட்டியாடு திருக்கயிலை யடைந்தருளினார்.

---

# தண்டியடிகணாயனார் புராணம்.

---

தண்டி யடிக டிருவாரூர்ப் பிறக்கும் பெருமைத் தவமுடையார்
அண்ட வாணர் மறைபாட வாடுஞ் சொம்பொற் கழன்மனத்துக்
கொண்ட கருத்தி னகநோக்குங் குறிப்பே யன்றிப் புறநோக்குங்
கண்ட வுணர்வு துறந்தார்போற் பிறந்த பொழுதே கண்காணார் (௧)

காணுங் கண்ணாற் காண்பதுமெய்த் தொண்டே யான கருத்துடையார்
பேணுஞ் செல்வத் திருவாரூர்ப் பெருமா னடிக டிருவடிக்கே
பூணு மன்பி னாற்பரவிப் போற்று நிலைமை புரிந்தமரர்
சேணு மறிய வரியதிருத் தொண்டிற் செறியச் சிறந்துள்ளார். (௨)

பூவார் சடிலத் திருமுடியார் மகிழ்ந்த செல்வப் பூங்கோயிற்
றேவா சிரியன் முன்னிறைஞ்சி வலஞ்செய் வாராய்ச் செம்மைபுரி
நாவா லின்ப முறுங்காத னமச்சி வாய நற்பதமே
யோவா வன்பி லெடுத்தோதி யொருநாள் போல வருநாளில். (௩)

செங்கண் விடையார் திருக்கோயிற் குடபாற் றீர்த்தக் குளத்தின்பாங்
கெங்கு மமணர் பாழிகளா யிடத்தாற் குறைபா டெய்துதலால்
அங்க நிலைமை தனைத்தண்டி யடிக ளறிந்தே யாதரவால்
இங்கு நானிக் குளம்பெருகக் கல்ல வேண்டு மென்றெழுந்தார் (௪)

குழிவா யதனிற் குறிநட்டுக் கட்டுங் கயிறு குளக்குலையின்
இழிவாய்ப் புறத்து நடுத்தறியோ டிசையக் கட்டி யிடைதடவி
வழியால் வந்து மண்கல்லி யெடுத்து மறித்துந் தடவிப்போ
யொழியா முயற்சி யாலுய்த்தா ரோது மெழுத்தஞ் சுடனுய்ப்பார். (௫)

நண்ணி நாளு நற்றொண்டர் நயந்த விருப்பான் மிகப்பெருகி
யண்ண றீர்த்தக் குளங்கல்லக் கண்ட வமணர் பொறாராகி
யெண்ணித் தண்டி யடிகள்பா லெய்தி முன்னின் றியம்புவார்
மண்ணைக் கல்லிற் பிராணிபடும வருத்த வேண்டா மென்றுரைத்தார். (௬)

---

(௪) குடபால - மேற்கிலுள்ள. பாழிகள - ஆலயங்கள். கல்ல - வெட்ட. (௫) குலை - கரை. (௬) பிராணிபடும - உயிர்கள் மடியும. இயம்புவார் - முற்றெச்சம்.

மாசு சேர்ந்த முடையுடலார் மாற்றங் கேட்டு மறுமாற்றந்
தேசு பெருகுந் திருத்தொண்டர் செப்பு கின்றார் திருவிலிகாள்
பூசு நீறு சாந்தமெனப் புனைந்த பிரானுக் கானபணி
யாசி லாநல் லறமாவ தறிய வருமோ வுமக்கென்றார். (௭)

அந்த மில்லா வறிவுடையா ருரைப்பக் கேட்ட வறிவில்லார்
சிந்தித் திந்த வறங்கேளாய் செவியு மிழந்தா யோவென்ன
மந்த வுணர்வும் விழிக்குருடுங் கேளாச் செவியு மற்றுமக்கே
யிந்த வுலகத் துள்ளனவென் றன்பர் பின்னு மியம்புவார். (௮)

வில்லா லெயின்மூன் றெரித்தபிரான் விரையார் கமலச் சேவடிகள்
அல்லால் வேறு காணேன்யா னதுநீ ரறிதற் காரென்பார்
நில்லா நிலையீ ருணர்வின்றி நுங்கண் குருடா யென்கண்ணுல
கெல்லாங் காண்பான் யான்கண்டா லென்செய் வீரென் றெடுத்துரைத்தார்.

அருக ரதுகேட் டுன்றெய்வத் தருளாற் கண்ணீ பெற்றாயேற்
பெருகு மிவ்வூ ரினினுங்கள் பின்னை யிருக்கி லோமென்று
கருகு முருட்டுக் கைகளாற் கொட்டை வாங்கிக் கருத்தின்வழித்
தருகைக் கயிறுந் தறியுமுடன் பறித்தார் தங்க டலைபறித்தார். (௧௦)

வெய்ய தொழிலார் செய்கையின்மேல் வெகுண்ட தண்டி யடிகடா
மைகொள் கண்டர் பூங்கோயின் மணிவா யிலின்முன் வந்திறைஞ்சி
யைய னேயின் றமணர்கடா மென்னை யவமா னஞ்செய்ய
நைவ தானே னிதுதீர நல்கு மடியேற் கெனவீழ்ந்தார். (௧௧)

பழுது தீர்ப்பார் திருத்தொண்டர் பரவி விண்ணப் பஞ்செய்து
தொழுது போந்து மடம்புகுந்து தூய பணிசெய் யப்பெறா
தழுது கங்கு லவர்துயிலக் கனவி லகில லோகங்கண்
முழுது மளித்த முதல்வனார் முன்னின் றருளிச் செய்கின்றார். (௧௨)

நெஞ்சின் மருவுங் கவலையினை யொழிநீ நின்கண் விழித்தந்த
வஞ்ச வமணர் தங்கண்கண் மறையு மாறு காணகின்றா
யஞ்ச வேண்டா வென்றருளி யவர்பா னீங்கி யவ்விரவே
துஞ்சு மிருளி னரசன்பாற் றோன்றிக் கனவி லருள் புரிவார். (௧௩)

தண்டி நமக்குக் குளங்கல்லக் கண்ட வமணர் தரியாராய்
மிண்டு செய்து பணிவிலக்க வெகுண்டா னவன்பா னீமேவிக்
கொண்ட குறிப்பா லவன்கருத்தை முடிப்பா யென்று கொளவருளித்
தொண்ட ரிடுக்க ணீங்கவெழுந் தருளி னாரத் தொழிலுவப்பார் (௧௪)

வேந்த னதுகண் டப்பொழுதே விழித்து மெய்யின் மயிர்முகிழ்ப்பப்
பூந்தண் கொன்றை வேய்ந்தவரைப் போற்றிப் புலரத் தொண்டர்பாற்

(௰) கொட்டை - மணவெட்டியை. கருத்தின் வழித்தரு - சிந்தனைபோல வழி தெரிவிக்கும். (௧௪) மிண்டு - கொடுமை.

சார்ந்து புகுந்த படிவிளம்பத் தம்பி ராணு ருணி னேந்தே
யேய்ந்த மன்னன் கேட்பவிது புகுந்த வண்ண மியம்புவார். (௧௫)

மன்ன கேள்யான் மழவிடையார் மகிழுந் தீர்த்தக் குளங்கல்லத்
துன்னு மமண ரங்கணைந்தி தறமன் றென்று பலசொல்லிப்
பின்னுங் கயிறு தடவுதற்கியான் பிணித்த தறிக ளவைவாங்கி
யென்னை வலிசெய் தியாண்கல்லுங் கொட்டைப் பறித்தா ரென்றியம்பி. ()

அந்த ணனை வுனக்கறிவு மில்லை யென்று ரியானதனுக்
கெந்தை பெருமா னருளால்யான் விழிக்கி லென்செய் வீரென்ன
இநத வூரி லிருக்கிலோ மென்றே யொட்டி ஞரிதுமேல்
வந்த வாறு கண்டிந்த வழக்கை முடிப்ப தெனமொழிந்தார். (௧௭)

அருகா தம்மை யரசனுமங் கழைத்துக் கேட்க வதற்கிசைந்தார்
மருவுந் தொண்டர் முன்போக மன்னன் பின்போய் மலர்வாவி
யருகு நின்று விறற்றண்டி யடிக டம்மை முகநோக்கிப்
பெருகுந் தவத்தீர் கண்ணருளாற் பெறுமா காட்டு மெனப்பெரியோர். ()

ஏய்ந்த வடிமை சிவனுக்கியா னென்னி லின்றென் கண்பெற்று
வேந்த னெதிரே திருவாரூர் விரவுஞ் சமணர் கண்ணிழப்பார்
ஆயநத பொருளுஞ் சிவபதமே யாவ தென்றே யஞ்செழுத்தை
வாய்ந்த தொண்ட ரெடுத்தோதி மணிநீர் வாவி மூழ்கினுர். (௧௯)

தொழுது புனன்மே லெழுந்தொண்டர் தூய மலர்கண் பெற்றெழுந்தார்
பொழுது தெரியா வகையமரா பொழிந்தார் செழுந்தண் பூமாரி
யிழுதை யமணா விழிதேகண் ணிழந்து தடுமா றக்கண்டு
பழுது செய்த வமண்கெட்ட தென்று மன்னன் பகர்கின்றன் (௨௦)

தணடி யடிக டம்முடனே யொட்டிக் கெட்ட சமண்குண்டர்
அண்டா போற்றுந் திருவாரூர் நின்று மகன்று போயகழியக்
கண்ட வமணா தமையெங்கு காணு வண்ண மூரகவென
மண்டி வயவர் சாடுதலுங் கண்கள் காணுர் மனங்கலங்கி (௨௧)

குழியில் விழுவார் நிலைதளாவார் கோலு மிலலை யெனவுரைப்பார்
வழியீ தென்று தூறடைவார் மாண்டோ மென்பார் மதிகெட்டோர்
அழியும் பொருளை வட்டித்திங் கழிந்தோ மென்பா ரரசனுக்குப்
பழுதீ தாமோ வென்றுரைப்பார் பாய்க ளிழப்பார் பறிதலையா. (௨௨)

பீலி தடவிக் காணுது பெயர்வார் நின்று பேதுறுவார்
காலி னேடு கைமுறியக் கன்மே லிடறி வீழ்வார்கள்
சால நெருங்கி யெதிரெதிரே தம்மிற் றுமே முட்டிடுவார்
மாலு மனமு மழிந்தோடி வழிக ளறியார் மயங்குவார் (௨௩)

---

(௧௭) ஒட்டினுா - உறுதியாகச்சொனனுா. (௨௦) இழுதை - அறிவிலாதவாகள. (௨௧) வயவா - வீராகள்.

அன்ன வண்ண மாரூரி லமணர் கலக்கங் கண்டவர்தாஞ்
சொன்ன வண்ண மேயவரை யோடத் தொடர்ந்து துரந்ததற்பின்
பன்னும் பாழி பள்ளிகளும் பறிந்துக் குளஞ்சூழ் கரைபடுத்து
மன்ன னவனு மனமகிழ்ந்து வந்து தொண்ட ரடிபணிந்தான். (உ௪)

மன்னன் வணங்கிப் போயினபின் மாலு மயனு மறியாத
பொன்னங் கழல்கள் போற்றிசைத்துப் புரிந்த பணியுங் குறைமுடித்தே
யுன்னு மனத்தா லஞ்செழுத்து மோதி வழுவா தொழுகியே
மின்னுஞ் சடையா ரடிநீழன் மிக்க சிறப்பின் மேவினர். (உ௫)

கண்ணின் மணிக ளவையின்றிக் கயிறு பிடித்துக் குளந்தொட்ட
எண்ணில் பெருமைத் திருத்தொண்டர் பாத மிறைஞ்சி யிடர்நீங்கி
விண்ணில் வாழ்வார் தாம்வேண்டப் புரங்கள் வெகுண்டார் வேற்காட்டூர்
உண்ணி லாவும் புகழ்த்தொண்டர் மூர்க்கர் செய்கை யுரைக்கின்றாம். (உ௬)

தண்டியடிகணாயனார்புராண முற்றிற்று.

ஆ. திருவிருத்தம் - ௩,௬௨௨

---

சோழநாட்டிலே, திருவாரூரிலே, பிறவிக்குருடரும், அகக்கண்ணினாலே அறக்கடவுளாகிய பரசிவப்பிரபுவைத் தரிசித்துப பூசிக்கின்ற வருமாகிய தண்டியடிகள் நாயனார் என்பவர் ஒருவர் இருந்தார். அவர் ஸ்ரீகமலாலயத்தைத் தினந்தோறும் வலஞ்செய்துகொண்டும், என்றும் ஸ்ரீபஞ்சாக்ஷரத்தை ஓதிக்கொண்டும், வாழ்ந்து வருவாராயினார்.

இங்ஙனம் வாழ்ந்துவரும் நாயனார், தியாகேசப்பெருமான் திருக்கோயிலுக்கு மேற்குத் திசையிலுள்ள திருக்குளம பக்கமெங்குஞ் சமணர்களுடைய மடங்களாகி இடத்தாற்குறைவெய்தி யிருந்ததையறிந்து, அத்திருக்குளத்தைப் பெருகக் கல்லவேண்டி, குளத்தினுள்ளே ஒருதறிநட்டு, அதிலே கயிறுகட்டி, அதனுனியைக் கரையிலே ஒருதறிநட்டு அதிலே கட்டி, மண்வெட்டியையுங் கூடையையுந் தாங்கிக்கொண்டு, கயிற்றைத் தடவிக்கொண்டேபோய்மண்ணைக்கல்லிக் கூடையிலவைத்துச் சுமந்துகொண்டு மீண்டும் முன்போலவே கயிற்றைத் தடவிக்கொண்டே சென்று கரையிலே போட்டுக்கொண்டு வந்தார். இப்படி நாடோறுஞ்செய்து வருவதைச் சமணர்கள் கண்டு பொறாமைகொண்டு, நாயனாரையணைந்து "மண்ணைக் கல்லிற் பிராணிகள் இறக்கும், அவைகளை வருத்தவேண்டாம்" என்று சொன்னார்கள் அதுகேட்ட அடியவர்பெருமான "அறிவிலலாதவர்களே! இது சிவபெருமானுக்குச் செய்யுங் குற்றமற்ற அறத்தொண்டு இதன்பெருமை உங்களுக்குத் தெரியுமா" என்றார். அதற்குச் சமணர்கள் "நாங்கள்சொன்ன தருமமுறைக்குச் செவிசாய்த்தாயில்லை; செவியும் இல்லையோ" என்ன, நாயனார் "மந்தவுணர்வும், குருட்டுவிழியும், கேளாச்செவியும் உங்களுக்கே யுள்ளன" என்று அருளி "சிவபெருமான் திருவடிகளையன்றிப் பிறிதொன்றையும் யான்காணேன். அதை யறிதற்கு நீவிர்யாவர்? உங்கள் கண்கள் குருடாகவும், உலகமெல்லாங்காண என்கண் காணவும்பெற்றால் நீங்கள் என்செய்வீர்கள்" என்று கூறினார். உடனே சமணர்கள் "நீ உன்தெய்

வத்தருளால் கண்பெறுவையேல் நாங்கள் இவ்வூரில் இரோம்" என்றுகூறி, நாயனாருடைய மண்வெட்டியையும், குறித்தறிகளையும் பறித்துப்பிடுங்கி எறிந்தார்கள். புண்ணிய சொரூபியாகிய தண்டியடிகள்நாயனார் திருக்கோயில் திருவாயிலிலே சென்று இறைஞ்சி 'ஐயனே! இன்று சமணர்கள் என்னை அவமானஞ் செய்தார்கள்; அதனால் மிகவருந்துகின்றேன்; அதையொழித்தருளவேண்டும்' என்று பிரார்த்தித்து, தமது திருமடத்தை யடைந்து துன்பசாகரத்தில் மூழ்கியிருந்தார். அன்று இரவு அம்பிகைபாகர் நாயனார் சொப்பனத்திலே தோன்றி 'அன்பனே! உன்வருத்தத்தை யொழி. உன்கண்காணவும், அமணர்கள் கண்கள் குருடாகவும் அருள்செய்கின்றோம்' என்று அருள்செய்து, சோழமகாராசன் கனவிலேதோன்றி 'தண்டியென்பவன் நமக்குக் குளங்கல்லினான். அதற்குச் சமணர்கள் இடையூறு செய்தார்கள் நீ அவனையடைந்து அவன் கருத்தைமுடிப்பாய்' என்று கட்டளையிட்டுக் கரந்தருளினார் மகாராஜா விழித்துப் பரசிவனைத் துதிசெய்து, பொழுது விடிந்தவுடன் நாயனார் பாலணைந்து, தான் இரவு கண்ட கனவைச் சொன்னான். நாயனாரும் சமணர்கள் நிகழ்த்தியவற்றைச் சொல்லி அவர்கள் கண்ணிழக்கப்பெறறால் ஊரைவிட்டகல இசைந்த உறுதியைத் தெளிவாகக் கூறினார். அதுகேட்ட அரசன் அமணர்களை அழைத்துக்கேட்க அவர்களும் இசைந்தார்கள். உடனே தண்டியடிகள் முன்செல்ல, அரசன் அவர் பின்னேபோய்த் திருக்குளக்கரையிலே நின்றுகொண்டு 'சிவநேயரே! நீர் திருவருளால் கணபெறுதலைக்காட்டும்' என்ன; நாயனார் 'பரமசிவமே மெய்க்கடவுளும், யான் அவருக்கு மெய்த்தொண்டனுமாயின் நான் கண்பெற்றுச் சமணர்கள கண்ணிழப்பார்கள்' என்று ஒருப்பட்ட மனத்தராய் உரைத்து, அஞ்செழுத் தோதிக்கொண்டு திருக்குளத்திலே முழுகிக் கண்பெற்று எழுந்தார சமணர்கள் எல்லாரும் குருடர்களாய்த் தடுமாறினார்கள். அதுகண்ட அரசன ஏவலாளரைப்பார்த்து 'நாயனாரிடஞ் சபதஞ்செய்து தோலவியடைந்த சமணர்களை ஊரைவிட்டுத் துரத்துங்கள்' என்று ஆஞ்ஞாபித்தான். அப்படியே சமணர்கள துரத்தப்பட்டார்கள்.

சோழராசன் சமணர்களுடைய பாழிகளையிடித்துத் திருக்குளத்தின் கரையைக்கட்டி நாயனார திருவடிகளைப் பணிந்து சென்றான். தண்டியடிகள நாயனார சிவபெருமானைத் தொழுதுபோற்றி, மனதிலே அஞ்செழுத் தோதித் திருத்தொண்டுகள் செய்துகொண்டிருந்து பரங்குன்றனைப பெற்ற பரசிவப்பெருமான் திருவடிநீழலை யடைந்தார்.



# மூர்க்கநாயனார் புராணம்.

மன்னிப் பெருகும் பெருந்தொண்டை வளநா டதனில் வயல்பரப்பு
நன்னித் திலவெண் டிரைப்பாலி நதியின் வடபால் நலங்கொள்பதி
யன்னப் பெடைகள் குடைவாவி யலர்புக் காட வரங்கினிடை
மின்னுக் கொடிக ளுகிற்கொடிகள் விழவிற் காடு வேற்காடு. (க)

(க) அரங்கு - நடனசபை மின்னுக்கொடிகள் - மகளிர்களோடு, விழவிற்கு ஆடும - மங்கலத்தின பொருட்டு ஆடுகின்ற.

செம்பொற் புரிசைத் திருவேற்கா டமர்ந்த செய்ய சடைக்கற்றை
நம்பர்க் கும்பர்க் கமுதளித்து நஞ்சை யமுது செய்தவருக்
கிம்பர்த் தலத்தில் வழியடிமை யென்றுங் குன்றா வியல்பில்வருந்
தம்பற் றுடைய நிலைவேளாண் குலத்திற் றலைமை சார்ந்துள்ளார். (௨)

கோதின் மரபிற் பிறந்துவளர்ந் தறிவு கொண்ட நாட்டொடங்கி
யாதி முதல்வர் திருநீற்றி னடைவே பொருளென் றறிந்தானா
காத லடியார்க் கமுதாக்கி யமுது செய்யக் கண்டுண்ணும்
நீதி முறைமை வழுவாத நியதி பூண்ட நிலைமையார். (௩)

தூய வடிசி னெய்கன்னல் சுவையின் கறிக ளவையமைத்து
மேய வடியார் தமைப்போற்றி விருப்பா லமுது செய்வித்தே
யாய பொருளு மவர்வேண்டும் படியா லுதவி யன்புமிக
வேயு மாறு நாடோறு மினைய பணிசெய் தின்புற்றார். (௪)

இன்ன செயலி னொழுகுநா ளடியார் மிகவு மெழுந்தருள
முன்ன முடைமை யானபொருண் முழுது மாள வடிமையுடன்
மன்னு காணி யானநில மற்று முள்ள திறம்விற்றே
யன்ன மளித்தே மேன்மேலு மாரா மனத்தா ராயினார். (௫)

அங்க ணவ்வூர் தமக்கொருபற் றடியார் தங்கட் கமுதாக்க
எங்குங் காணு வகைதோன்ற விலம்பா டெய்தி யிருந்தயர்வார்
தங்கும் வகையாற் றான்முன்பு கற்ற தன்மை நற்சூதாற்
பொங்கும் பொருளாக் கவுமங்குப் பொருவா ரின்மை யினிற்போவார். (௬)

பெற்ற மேறிப் பலிக்குவரும் பெருமா னமருந் தானங்கள்
உற்ற வன்பாற் சென்றெய்தி யுருகு முள்ளத் தொடும்பணிந்து
கற்ற சூதா னியதியாங் கரும முடித்தே கருதாரை
செற்ற சிலையார் திருக்குடந்தை யடைந்தார் வந்து சிலநாளில். (௭)

வேறு.

இருளாரு மணிகண்ட ரடியார்க்கின் னமுதளிக்கப்
பொருளாய மெய்துதற்குப் புகழ்க்குடந்தை யம்பலத்தே
யுருளாயச் சூதாடி யுறும்பொருள்வென் றனநம்பர்
அருளாக வேகொண்டங் கமுதுசெய்வித் தின்புறுவார். (௮)

முற்சூது தாந்தோற்று முதற்பணைய மவர்கொள்ளப்
பிற்சூது பலமுறையும் வென்றுபெரும் பொருளாக்கிச்
சொற்சூதான் மறுத்தாரைச் சுரிகையுருவிக்குத்தி
நற்சூதர் மூர்க்கரெனும் பெயர்பெற்றார் நானிலத்தில். (௯)

சூதினில்வென் றெய்துபொரு டுரிசற்ற நல்லுணர்விற்
றீதகல வமுதாக்கு வார்கொள்ளத் தாந்தீண்டார்

(௨) பற்று - அன்பு. (௫) எழுந்தருள - எச்சத்திரிபு. (௭) திருக்குடந்தை - கும்பகோணம். (௯) சுரிகை - உடைவாள். (௧0) துரிசு - குற்றம்.

காதலுட னடியார்க ளமுதுசெயக் கடைப்பந்தி
ஏதமிலா வகைதாமு மமுதுசெய்தங் கிருக்குநாள் (௧௦)

நாதன்ற னடியார்க்கு நல்லடிசி லூட்டோறும்
ஆதரவி னாலமுது செய்வித்தங் கருளாலே
ஏதங்கள் போயகல விவ்வுலகை விட்டதற்பின்
பூதங்க ளிசைபாட வாடுவார் புரம்புக்கார். (௧௧)

வல்லார்கள் தமைவென்று சூதினால் வந்தபொருள்
அல்லாருங் கறைக்கண்ட ரடியவர்க டமக்காக்கும்
நல்லார்நற் சூதரா மூர்க்கர்கழல் நாம்வணங்கிச்
சொல்லார்சீர்ச் சோமாசி மாறர்திறஞ் சொல்லுவாம். (௧௨)

மூர்க்கநாயனார்புராண முற்றிற்று.

ஆக திருவிருத்தம் - ௩,௬௩௪.

---

தொண்டைநாட்டிலே, திருவேற்காட்டிலே, வேளாளர் குலத்தலைவராகிய அடியவர் ஒருவர் இருந்தார். அவர் அடியவர்களை அமுது செய்வித்த பின்னர்த்தாம் உண்டும், அன்பர்கள் விழையும பொருள்களைக் கொடுத்துக் கொண்டும் வருபவராயிருந்தார்.

இப்படி யிருக்குங் காலத்தில் மாகேசுரபூசைக்கு எழுந்தருளுந் திருக்கூட்டங்கள் நாளுக்குநாள் அதிகப்படவே அவரிடமிருந்த திரவியங்களெல்லாம் செலவாகிவிட்டன. பிறகு அடிமை நிலம் முதலியவற்றை விற்றும் மாகேசுரபூசையை வழாது நடத்திவந்தார். அதற்குபபின்னர் மாகேசுரபூசைக்குவேண்டிய பொருள் இல்லாமை கண்டு பெரிதும்நொந்து, தாம் முன்கற்ற சூதாட்டத்தாற் பொருளாக்கவுன்னி, அத்திருப்பதியிலேசூதாடுவோரில்லாமையால் அப்பதியினின்றும் நீங்கிச் சிவக்ஷேத்திரங்கள் தோறுஞ்சென்று சிவதரிசனஞ்செய்து, சூதாட்டத்தால் வரும்பொருளைக்கொண்டு, தங்கருமத்தைக் குறைவறச்செய்து, சிலநாளில் கும்பகோணத்தையடைந்து, அங்கே சூதாடிப் பொருள்தேடி அடியவர்களை அமுதுசெய்வித்து இன்புற்றார். சூதாட்டத்தில் முதலிலே தாந்தோற்று, பின்னாட்டங்களிலே தாம் பன்முறையும் ஜெயமடைந்து, பொருளாக்கிச் சூதிலே மறுத்தவர்களை உடைவாளாற்குத்தி, நற்சூதர் மூர்க்கர் என்னும அருமைத் திருநாமங்களைப் பெற்றார். சூதிற்கிடைக்கும் பொருள்களைப் பாகுகர்களே கைக்கொள்ள; தாந்தீண்டார. அடியவர்கள் திருக்கூட்டங்கள் முழுவதும் திருவமுது செய்தபின் தாம்கடைப்பந்தியில் அமுதுசெய்வார். இங்ஙனஞ் சிலநாள அடியவர்கட்கு அமுதூட்டுந் திருததொண்டைச் செய்துகொண்டிருந்து தேவசேனாதிபதியின் தநதையாராகிய சிவபெருமான் திருவடியைச் சேர்ந்தார்.



# சோமாசிமாறநாயனார் புராணம்.

சூதம் பயிலும் பொழிலம்பரிற் றூய வாய்மை
வேதம் பயிலு மறையாளர் குலத்தின் மேலோர்
ஏதம் புரியு மெயில்செற்றவர்க் கன்பர் வந்தாற்
பாதம் பணிந்தா ரமுதூட்டுநற் பண்பின் மிக்கார். (க)

யாழின் மொழியா டனிப்பாகரைப் போற்றும் யாக
மூழின் முறைமை வழுவாதுல கங்க ளான
வேழு முவப்பப் புரிந்தின்புறச் செய்த பேற்றால்
வாழுந் திறமீசர் மலர்க்கழல் வாழ்த்த லென்பார். (உ)

எத்தன் மையரா யினுமீசனுக் கன்ப ரென்றால்
அத்தன் மையர்தா நமையாள்பவ ரென்று கொள்வார்
சித்தந் தெளியச் சிவனஞ்செழுத் தோது வாய்மை
நித்தந் நியம மெனப்போற்று நெறியி னின்றார். (ந)

சீருந் திருவும் பொழியுந்திரு வாரூ ரெய்தி
யாரந் திகழ்மார்பி னனுக்கவன் றொண்டர்க் கன்பாற்
சாரும் பெருநண்பு சிறப்ப வடைந்து தங்கிப்
பாரும் விசும்பும் பணியும்பதம் பற்றி யுள்ளார். (ச)

துன்றும் புலனைந் தடனூறு தொகுத்த குற்றம்
வென்றிங் கிதுநன் னெறிசேரும் விளக்க மென்றே
வன்றொண்டர் பாதந் தொழுதான சிறப்பு வாய்ப்ப
வென்றுந் நிலவுஞ் சிவலோகத்தி லின்ப முற்றார். (ரு)

வேறு.

பணையுந் தடமும் புடைசூழு மொற்றி யூரிற் பாகத்தோர்
துணையுந் தாமும் பிரியாதார் தோழத் தம்பி ரானாரை
யிணையுங் கொங்கைச் சங்கிலியா ரெழின்மென் பணைத்தோ ளெய்துவிக்க
அணையு மொருவர் சரணமே யரண மாக வடைந்தோமே. (சு)

சாக்கியநாயனார் புராண முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ந,சுசு0.

வம்பறுவரிவண்டுச்சருக்க முற்றுப்பெற்றது.

---

(க) சூதம் - மாமரங்கள்.

சோழநாட்டிலே, திருவம்பரிலே, வேதியர்குலத்திலே சிவபத்தி சிவனடியார்பத்திகளிற் சிறந்தவரும், ஸ்ரீபஞ்சாக்ஷரத்தை ஓதும் வாய்மையையே நித்தியநியமமெனக் கொண்டவரும் ஆகிய சோமாசிமாறநாயனார் என்பவர் ஒருவர் இருந்தார். அவர், எத்தன்மையராயினும் சிவனடியார்களாயின் அவர்களே தம்மையாள்பவர் எனக்கொள்பவராய், தம் இல்லத்துக்கெழுந்தருளும் அடியவருக் கமுதூட்டி, உலகம் உவப்பப் பல யாகங்களைச் செய்து, திருவாரூரையடைந்து, வன்றொண்டப்பெருமானார்க்கு இடையறுப் பேரன்புசெலுத்திப் பழநியாண்டியைப் பெற்ற பரசிவலோகத்தையடைந்தார்.



## ஏழாவது

# வார்கொண்ட வனமுலையாள் சருக்கம்.



## சாக்கியநாயனார் புராணம்.



அறுசமயத் தலைவராய் நின்றவருக் கன்பராய்
மறுசமயச் சாக்கியர்தம் வடிவினால் வருந்தொண்டர்
உறுதிவரச் சிவலிங்கங் கண்டுவந்து கல்லெறிந்து
மறுவில்சரண் பெற்றதிற மறிந்தபடி வழுத்துவாம். (௧)

தாளாளர் திருச்சங்க மங்கையினிற் றகவுடைய
வேளாளர் குலத்துதித்தார் மிககபொரு டெரிந்துணர்ந்து
கேளாகிப் பல்லுயிர்க்கு மருளுடைய ராய்க்கெழுமி
நீளாது பிறந்திறக்கு நிலையொழிவே னெனநிற்பார். (௨)

அந்நாளி லெயிற்காஞ்சி யணிநகரஞ் சென்றடைந்து
நனஞான மடைவதற்குப் பலவழியு நாடுவார்
முன்னாகச் சாக்கியர்தா மொழியறத்தின் வழிச்சார்ந்து
மன்னாத பிறப்பறுக்குந் தத்துவத்தின் வழியுணர்வார். (௩)

அந்நிலைமைச் சாக்கியர்த மருங்கலநூ லோதியது
தன்னிலையும் புறச்சமயச் சார்வுகளும் பொருளல்ல
என்னுமது தெளிந்தீச ரருள்கூட வீறில்சிவ
நன்னெறியே பொருளாவ தெனவுணர்வு நாட்டுவார். (௪)

---

(௨) தாளாளர் - தொழின் முயற்சியுடையவர். கேளாகி - நட்பாகி.

செய்வினையுஞ் செய்வானு மதன்பயனுங் கொடுப்பானு
மெய்வகையா னான்காகும் விதித்தபொரு ளெனக்கொண்டே
இவ்வியல்பு சைவநெறி யல்லவற்றுக் கில்லையென
உய்வகையாற் பொருள்சிவனென் றருளாலே யுணர்ந்தறிந்தார். (௫)

எந்நிலையி னின்றாலு மெக்கோலங் கொண்டாலு
மன்னியசீர்ச் சங்கரன்றாண் மறவாமை பொருளென்றே
துன்னியவே டந்தன்னைத் துறவாதே தூயசிவந்
தன்னைமிகு மன்பினான் மறவாமை தலைநிற்பார். (௬)

வேறு.

எல்லா முடைய வீசனே யிறைவ னென்ன வறியாதார்
பொல்லா வேடச் சாக்கியரே யாகிப் புல்ல ராகுவார்
அல்லார் கண்டர் தமக்கிந்த வகில மெல்லா மாளென்ன
வல்லா ரிவரவ் வேடத்தை மாற்றா தன்பின் வழிநிற்பார். (௭)

வேறு.

காணாத வருவினுக்கு முருவினுக்குங் காரணமாய்
நீணாக மணிந்தார்க்கு நிகழ்குறியாஞ் சிவலிங்க
நாணாது நேடியமா னான்முகனுங் காணாமைச்
சேணாருந் தழற்பிழம்பாய்த் தோன்றியது தெளிந்தாராய். (௮)

நாடோறுஞ் சிவலிங்கங் கண்டுண்ணு மதுநயந்து
மாடோரவெள் ளிடைமன்னுஞ் சிவலிங்கங் கண்டுமன
நீடோடு களியுவகை நிலைமைவரச் செயலறியார்
பாடோர்கற் கண்டதனைப் பதைப்போடு மெடுத்தெறிந்தார். (௯)

அகநிறைந்த பேருவகை யடங்காத வாதரவான்
மகவுமகிழ்ந் துவப்பார்கள் வன்மைபுரி செயலினாற்
இகழ்வனவே செய்தாலு மிளம்புதல்வர்க் கின்பமே
நிகழுமது போலதற்கு நீள்சடையார் தாமகிழ்வார் (௧௦)

அன்றுபோய்ப் பிற்றைநா ளந்நியதிக் கணையுங்காற்
கொன்றைமுடி யார்மேற்றாங் கல்லெறிந்த குறிப்பதனை
நின்றுணர்வா ரெனக்கப்போ திதுநிகழ்ந்த தவரருளே
யென்றதுவே தொண்டாக வென்றுமது செயநினைந்தார். (௧௧)

தொடங்கியநா ளருளியவத் தொழிலொழியா வழிதொடரு
கடன்புரிவா ரதுகண்டு கல்லெறிவார் துவராடை
படம்புனைவே டந்தவிரார் பசுபதியார் தஞ்செயலே
யடங்கலுமென் பதுதெளிந்தா ராதலினான் மாதவர்தாம். (௧௨)

இந்நியதி பரிவோடும் வழுவாம லிவர்செய்ய
முன்னுதிருத் தொண்டர்நிலை முடிந்தபடி தான்மொழியிற்

றுன்னியமெய் யன்புடனே யெழுந்தவினை தூயவர்க்கு
மன்னுமிகு பூசனையே யாமன்பு வழக்கினுல். (௧௩)

கல்லாலே யெறிந்ததுவு மன்பான படிகாணில்
வில்வேடர் செருப்படியுந் திருமுடியின் மேவிற்றுல்
நல்லார்மற் றவர்செய்கை யன்பாலே நயந்தத்னை
யல்லாதார் கல்லென்பா ரரனுர்க்கஃ தலராமால். (௧௪)

அங்கொருநா ளருளாலே யயர்ந்துண்ணப் புகுகின்றுர்
எங்கள்பிரான் றனையெறியா தயர்த்தேன்யா னெனவெழுந்து
பொங்கியதோர் காதலுடன் மிகவிரைந்து புறப்பட்டு
வெங்கரியி னுரிபுனைந்தார் திருமுன்பு மேவினுர். (௧௫)

கொண்டதொரு கல்லெடுத்துக் குறிகூடும் வகையெறிய
உண்டிவினை யொழித்தஞ்சி யோடிவரும் வேட்கையொடுங்
கண்டருளுங் கண்ணுதலார் கருணைபொழி திருநோக்காற்
றெண்டரெதிர் நெடுவிசும்பிற் றுணைவியொடுந் தோன்றினுர். (௧௬)

மழவிடைமே லெழுந்தருளி வந்ததொரு செயலாலே
கழலடைந்த திருத்தொண்டர் கண்டுகரங் குவித்திறைஞ்சி
விழவருணேக் களித்தருளி மிக்கசிவ லோகத்திற்
பழவடிமைப் பாங்கருளிப் பரமரெழுந் தருளினுர். (௧௭).

வேறு.

ஆதியார் தம்மை நாளுங் கல்லெறிந் தணுகப் பெற்ற
கோதில்சீர்த் தொண்டர் கொண்ட குறிப்பினை யவர்க்கு நல்குஞ்
சோதியா ரறித லன்றித் துணிவதென் னவர்தாள் சூடித்
தீதினை நீக்க லுற்றேன் சிறப்புலி யாரைச் செப்பி. (௧௮)

சாக்கியநாயனுர்புராண முற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௩,௬௫௮.

---

திருச்சங்கமங்கையிலே, வேளாளர்மரபிலே அவதரித்த ஒருவர் பிறப்பு இறப்புகளை யொழிக்கும் வழியை ஆராய்வாராய், திருக்காஞ்சியை யடைந்து, பௌத்தசமயத்திற் பிரவேசித்து, அவர்கள் அறநெறியைக் கைக்கொண்டு ஒழுகிவந்தார். வருநாளில அவர்கள் சமயநூல்களை யெல்லாம் ஓதி அச்சமயம சற்சமயம் அன்றென்பதைத் தெளிந்து, பிறகு பலசமயநூல்களையும் ஆராய்ச்சிசெய்து, அவைகளிலும் உண்மை விளங்கப்பெருமல் மயங்கி, பூர்வ புண்ணியப்பயனுல் திருவருள்கூடச் சிவபெருமானே பரமபதியென்றும், சைவசமயமே உண்மைச சமயமென்றும் உணர்ந்துகொண்டார். அவர் எந்நிலையில் நின்றுலும், எக்கோலங்கொண்டாலும் சங்கரனுர் திருவடித்தாமரைகளை மறவாதிருத்தலே பொருள் என்று நினைத்து, தாம்தாங்கியிருந்த பௌத்தவேடத்தை நீக்காமலே சிவபெருமானைச சிந்தித்து வந்தார்.

இப்படி ஒழுகிவருநாளில் சிவலிங்கத்தைத் தரிசித்தபிறகே போசனஞ் செய்யவேண்டும் என்று உறுதிகொண்டு, பக்கத்திலே ஓர் வெள்ளிடையி லுள்ள சிவலிங்கத்தைத் தரிசித்து, ஆனந்த வாரிதியிற்றோய்ந்து, செயலறி யாதவராய், அருகேகிடந்த ஒரு செங்கல்லை அன்போடு எடுத்து, அச்சிவலிங் கத்தின்மீது எறிந்தார். நன்மைதீமை யறியாத இளங்குழந்தைகள் செய்யும் இழிசெய்கைகளையும் பெற்றோர்கள் பிரியமாய் ஏற்றுக்கொள்வதுபோல அடியவர் அன்புமேலிட்டால் செய்யும் செய்கையைப் பரமசிவன் பிரியமாய் ஏற்றார். நாயனார்பெருமான் அடுத்தநாள் தம் நியமத்தை முடிக்கச்செல்லும் போது முன்னாளில் சிவலிங்கத்தின்மேல் கல்லெறிந்த குறிப்பை யோசித்து "எனக்கு அவ்வெண்ணத்தை யுதிப்பித்தது சிவபெருமான் திருவருளே" என்று துணிந்து கல்லெறிதலையே திருத்தொண்டாகக் கருதித் தினந்தோ றும் அத்திருத்தொண்டைச் செய்து வந்தார். ஒருநாள் சிவபிரான் திருவரு ளால் மறந்து உணவுண்ணப்போகும்பொழுது "என் ஆண்மநாயகனைக் கல்லால் எறிய இன்றுமறந்தேன்" என்று எழுந்து, அதிவிரைவாக நடந்து, சிவலிங் கப்பெருமான் திருமுன் அடைந்து, ஒரு கல்லையெடுத்து அவர்மேல் எறிந் தார். எறிந்ததும் எம்பெருமானைப் பெற்ற ஈசனார் இமயவல்லியோடு இட பாரூடராய் ஆகாயத்திலே தோன்றிச் சாக்கியநாயனாருக்குத் திருவடிப்பே றளித்தருளினார்.

—oo—

# சிறப்புலிநாயனார் புராணம்.



பொன்னிநீர் நாட்டி னீடும் பொற்பதி புவனத் துள்ளோர்
இன்மையா லிரந்து சென்றோர்க் கில்லையென் னாதே யீயுந்
தன்மையா ரென்று நன்மை சார்ந்தவே தியரைச் சண்பை
மன்னனா ரருளிச் செய்த மறைத்திரு வாக்கூ ரவ்வூர். (க)

தூமலர்ச் சோலை தோறுஞ் சுடர்தொடு மாடந்தோறு
மாமழை முழக்கந் தாழ மறையொலி முழக்க மோங்கும்
பூமலி மறுகி லிட்ட புகையகிற் றூபந் தாழ
ஓமநல் வேள்விச் சாலை யாகுதித் தூப மோங்கும். (உ)

ஆலைசூழ் பூகவேலி யத்திரு வாக்கூர் தன்னில்
ஞாலமார் புகழின் மிக்கார் நான்மறைக் குலத்தி னுள்ளார்
நீலமார் கண்டத் தெண்டோ ளிருத்தர்க்குந் திருத்தொண் டேற்ற
சீலராய்ச் சாலு மீகைத் திறத்தினிற் சிறந்த நீரார். (௩)

ஆளுமங் கணருக் கன்ப ரணைந்தபோ தடியிற் றாழ்ந்து
மூளுமா தரவு பொங்க முன்புநின் றினிய கூறி
நாளுநல் லமுத மூட்டி நயந்தன வெல்லா நல்கி
நீளுமின் பத்துட் டங்கி நிதிமழை மாரி போன்றார். (௪)

அஞ்செழுத் தோதி யங்கி வேட்டுநல் வேள்வி யெல்லா
நஞ்சணி கண்டர் பாத நண்ணிடச் செய்து ஞாலத்

தெஞ்சலி லடியார்க் கென்று மிடையறு வன்பால் வள்ளற்
றஞ்செயல் வாய்ப்ப வீசர் தாணிழற் றங்கினாரே. (௫)

அறத்தினின் மிக்க மேன்மை யந்தண ராக்கூர் தன்னின்
மறைப்பெரு வள்ள லார்வண் சிறப்புலி யார்தாள் வாழ்த்திச்
சிறப்புடைத் திருச்செங் காட்டங் குடியினிற் செம்மை வாய்ந்த
விறற்சிறுத் தொண்டர் செய்த திருத்தொழில் விளம்ப லுற்றேன். (௬)

சிறப்புலிநாயனார்புராண முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ௩,௬௬௪.



சோழமண்டலத்திலே, திருவாக்கூரிலே, வேதியர்குலத்திலே சிவபத்தி சிவனடியார் பத்திகளிற் சிறந்த சிறப்புலிநாயனார் என்பவர் ஒருவர் இருந்தார். அவர் திருத்தொண்டர்கள் அணைந்த பொழுது முறைப்படி எதிர்கொண்டு, வணங்கி, அழைத்துக்கொண்டுவந்து, திருவமுது செய்வித்து, வேண்டும் பொருள்களையுங் கொடுத்தும், ஸ்ரீபஞ்சாக்ஷரத்தை என்றும் ஓதியும், யாகங்கள்பலசெய்தும் வாழ்ந்துகொண்டிருந்து, கோழிக்கோடியனைப் பெற்ற குழகன் திருவடியடைந்தார்.

—∞∞—

# சிறுத்தொண்டநாயனார் புராணம்.



உருநாட்டுஞ் செயல்காம னொழியவிழி பொழிசெந்தீ
வருநாட்டத் திருநுதலார் மகிழ்ந்தருளும் பதிவயலிற்
கருநாட்டக் கடைசியர்தங் களிகாட்டுங் காவேரித்
திருநாட்டு வளங்காட்டுஞ் செங்காட்டங் குடியாகும். (௧)

நிலவியவத் திருப்பதியி னெடுஞ்சடையார் நீற்றடைவால்
உலகில்வள ருயிர்க்கெல்லா முயர்காவற் றொழில்பூண்டு
மலர்புகழ்மா மாத்திரர்தங் குலம்பெருக வந்துள்ளார்
பலர்புகழுந் திருநாமம் பரஞ்சோதி யாரென்பார். (௨)

ஆயுள்வே தக்கலையு மலகில்வட நூற்கலையுந்
தூயபடைக் கலத்தொழிலுந் துறைநிரம்பப் பயின்றவற்றாற்

(௧) உருநாட்டுமசெயல் - வடிவததைத தோற்றுவிக்குஞ் செய்கை. நாட்டம - கண்ணையுடைய. கடைசியாதம களிகாட்டும - (நாறறுமுளைகளை நடும) உழத்தியாகள் தங்கள் மகிழவை (குரவையாட்டம முதலியவற்ருல) காட்டாநினற. திருநாட்டு - சோழநாட்டிலே, திருநாடடு.........செஙகாட்டங்குடி - சோழநாட்டின வளமெல்லாம ஒருஙகே தனனிடத்துத் தோற்றுவிககுஞ் செங்காடடங்குடி எனினுமாம். (௨) நீறறடைவால - விபூதி சாரபோடும. ஆல் - உடனிகழ்ச்சிப்பொருள.

பாயுமதக் குஞ்சரமும் பரியுமுகைக் கும்பண்பு
மேயதொழில் விஞ்சையினு மேதினியின் மேலானார். (௩)

உள்ளநிறை கலைத்துறைக ளொழிவின்றிப் பயின்றவற்றாற்
றெள்ளிவடித் தறிந்தபொருள் சிவன்கழலிற் செறிவென்றே
கொள்ளுமுணர் வினின்முன்னே கூற்றுதைத்த கழற்கன்பு
பள்ளமடை யாயென்றும் பயின்றுவரும் பண்புடையார். (௪)

ஈசனடி யார்க்கென்று மியல்பான பணிசெய்தே
யாசில்புகழ் மன்னவன்பா லணுக்கரா யவற்காகப்
பூசல்முனைக் களிறுகைத்துப் போர்வென்று பொருமரசர்
தேசங்கள் பலகொண்டு தேர்வேந்தன் பாற்சிறந்தார். (௫)

மன்னவர்க்குத் தண்டுபோய் வடபுலத்து வாதாவித்
தொன்னகரந் துகளாகத் துளைநெடுங்கை வரையுகைத்துப்
பன்மணியு நிதிக்குவையும் பகட்டினமும் பரித்தொகையும்
இன்னனவெண் ணிலகவர்ந்தே யிகலரசன் முன்கொணர்ந்தார். (௬)

கதிர்முடிமன் னனுமிவர்தங் களிற்றுரிமை யாண்மையினை
யதிசயித்துப் புகழ்ந்துரைப்ப வறிந்தவமைச் சர்களுரைப்பார்
மதியணிந்தார் திருத்தொண்டு வாய்த்தவலி யுடைமையினால்
எதிரிவருக் கிவ்வுலகி லில்லையென வெடுத்துரைத்தார். (௭)

தம்பெருமான் றிருத்தொண்ட ரெனக்கேட்ட தார்வேந்தன்
உம்பர்பிரா னடியாரை யுணராதே கெட்டொழிந்தேன்
வெம்புகொடும் போர்முனையில் விட்டிருந்தே னெனவெருவுற்
றெம்பெருமா னிதுபொறுக்க வேண்டுமென விறைஞ்சினான். (௮)

இறைஞ்சுதலு முன்னிறைஞ்சி யென்னுரிமைத் தொழிற்கடுத்த
திறம்புரிவே னதற்கென்னோ தீங்கென்ன வாங்கவர்க்கு
நிறைந்தநிதிக் குவைகளுட னீடுவிருத் திகளளித்தே
யறம்புரிசெங் கோலரச னஞ்சலிசெய் துரைக்கின்றான். (௯)

உம்முடைய நிலைமையினை யறியாமை கொண்டுய்த்தீர்
எம்முடைய மனக்கருத்துக் கினிதாக விசைந்துமது
மெய்ம்மைபுரி செயல்விளங்க வேண்டியவா றேசரித்துச்
செம்மைநெறித் திருத்தொண்டு செய்யுமென விடைகொடுத்தான். (௰)

---

(௪) செறிவு - பொருந்தல்; ஒடுங்கல். பள்ளமடையாய் - பள்ளத்திற்பாயும் நீர் மடைபோல. மடை - ஆகுபெயர். ஆய - உவமவுருபு. (௫) அணுக்கர் - மந்திரி; சிநேகர். (ஆமாத்தியர் - மந்திரியர், அணுக்கர்.) (௬) துளைநெடுங்கைவரை-யானை. பகட்டினம் - யானைக்கூட்டங்கள். (௯) விருத்திகள் - பரம்பரையாக அநுபவிக்க விருத்திக்கும் மானியநில முதலியவை. விருத்திகள் - அடிமைகள் எனினுமாம். (௰) சரித்து - நடத்தி; வசித்து.

மன்னவனை விடைகொண்டு தம்பதியின் வந்தடைந்து
பன்னுபுகழ்ப் பரஞ்சோதி யார்தாமும் பனிமதிவாழ்
சென்னியரைக் கணபதீச் சரத்திறைஞ்சித் திருத்தொண்டு
முன்னைநிலை மையில்வழுவா முறையன்பிற் செய்கின்றார். (கக)

வேதகா ரணரடியார் வேண்டியமெய்ப் பணிசெய்யத்
தீதில்குடிப் பிறந்ததிரு வெண்காட்டு நங்கையெனுங்
காதன்மனைக் கிழத்தியார் கருத்தொன்ற வரும்பெருமை
நீதிமனை யறம்புரியு நீர்மையினை நிலைநிற்பார். (கஉ)

கறையிதழித் திருமுடியா ரடியாரை நாடோறு
முறைமையினிற் றிருவமுது முன்னூட்டிப் பின்னுண்ணு
நிறையுடைய பெருவிருப்பா னியதியாகக் கொள்ளுந்
துறைவழுவா வகையொழுகுந் தூயதொழி றலைநின்றார். (கங)

தூயதிரு வமுதுகனி கன்னலறு சுவைக்கறிநெய்
பாயதயிர் பாலினிய பண்ணியமுண் ணீரமுத
மேயபடி யாலமுது செய்விக்க மிசைந்தடியார்
மாயிருஞா லம்போற்ற வருமிவர்பான் மனமகிழ்ந்தார். (கச)

சீதமதி யரவினுடன் செஞ்சடைமேற் செறிவித்த
நாதனடி யார்தம்மை நயப்பாட்டு வழிபாட்டான்
மேதகையா ரவர்முன்பு மிகச்சிறிய ராயடைந்தார்
ஆதலினாற் சிறுத்தொண்ட ரெனநிகழ்ந்தா ரவனியின்மேல். (கரு)

கண்ணுதலார் கணபதீச் சரத்தின்கட் கருத்தமர
உண்ணிறையன் பினிற்பணிசெய் தொழுதுவரா வழுவின்றி
யெண்ணிலபெருஞ் சீரடியா ரிடைவிடா தமுதுசெய
நண்ணியபே ருவகையுட னயந்துறையு நாளின்கண். (கசா)

நீராருஞ் சடைமுடியா ரருளினா னிறைதவத்துப்
பேராள ரவர்தமக்குப் பெருகுதிரு மனையறத்தின்
வேராகி விளங்குதிரு வெண்காட்டு நங்கைபாற்
சீராள தேவரெனுந் திருமைந்த ரவதரித்தார் (கஎ)

அருமையினிற் றனிப்புதல்வர் பிறந்தபொழு தலங்கரித்துப்
பெருமையினிற் கிளைகளிப்பப் பெறற்கரிய மணிபெற்று
வருமகிழ்ச்சி தாதையார் மனத்தடங்கா வகைவளரத்
திருமலிநெய் யாடல்விழாச் செங்காட்டங் குடியெடுப்ப.

(கக) மன்னவனை - வேற்றுமை மயக்கம். (கச) பாய - உறைந்த. பண்ணியம் - பலகாரம். (கஅ) புதல்வர்ப்பேறு இல்வாழ்க்கைக்குச் சிறந்த ஆபரணமாகலின் "அலங்கரித்த பெருமையினில்" என்றார். இதனை.—"மங்கலமென்ப மனைமாட்சிமற்றதன் னன்கல நன்மக்கட்பேறு" என்னும் பெருநாவலர் திருவாக்கானறிக.

மங்கலநல் லியமுழக்க மறைமுழக்கம் வானளப்ப
அங்கணர்தஞ் சீரடியார்க் களவிறந்த நிதியளித்துத்
தங்கண்மா பிணிலுரிமைச் சடங்குதச தினத்தினிலும்
பொங்குபெரு மகிழ்ச்சியுடன் புரிந்துகாப் பணிபுனைந்தார். (கக)

ஆர்வநிறை பெருஞ்சுற்ற மகமலர வளித்தவர்தாம்
பார்பெருகு மகிழ்ச்சியுடன் பருவமுறைப் பாராட்டிச்
சீர்பெருகச் செய்யவளர் திருமகனார் சீரடியிற்
றூர்வளர்கிண் கிணியசையத் தளர்நடையின் பதஞ்சார்ந்தார். (உ0)

சுருளுமயிர் நுதற்சுட்டி துணைக்காதின் மணிக்குதம்பை
மருவுதிருக் கண்டநாண மார்பினிலைம் படைகையிற்
பொருவில்வயி ரச்சரிகள் பொன்னரைஞாண் புனைசதங்கை
தெருவிலொளி விளங்கவளர் திருவிளையாட் டினிலமர்ந்தார். (உக)

வந்துவளர் மூவாண்டின் மயிர்வினைமங் கலஞ்செய்து
தந்தையா ரும்பயந்த தாயாருந் தனிச்சிறுவர்
சிந்தைமலர் சொற்றெளிவிற் செழுங்கலைகள் பயிலத்தம்
பந்தமற வந்தவரைப் பள்ளியினி லிருத்தினார். (உஉ)

அந்நாளிற் சண்பைநக ராண்டகையா ரெழுந்தருள
முன்னாக வெதிர்கொண்டு கொடுபுகுந்து முந்நூல்சேர்
பொன்மார்பிற் சிறுத்தொண்டர் புகலிகா வலனார்த
நன்னாமச் சேவடிகள் போற்றிசைத்து நலஞ்சிறந்தார். (உந)

சண்பையர்தம் பெருமானுந் தாங்கரிய பெருங்காதற்
பண்புடைய சிறுத்தொண்ட ருடன்பயின்று மற்றவரை
மண்பரவுந் * திருப்பதிகத் தினில்வைத்துச் சிறப்பித்து
நண்பருளி யெழுந்தருளத் தாமினிது நயப்புற்றார் (உச)

இத்தன்மை நிகழுநா ளிவர்திருத்தொண் டிருங்கயிலை
யத்தர்திரு வடியிணைக்கீழ்ச் சென்றணைய வவருடைய
மெய்த்தன்மை யன்புநுகர்ந் தருளுதற்கு விடையவர்தாஞ்
சித்தமகிழ் வயிரவராய்த் திருமலைநின் றணைகின்றார். (உரு)

---

(உக) கண்டநாண - கண்டசரம். சரிகள - வளைகள். ஐம்படை - சங்கு, சக்கரம், கோதண்டம் கதை, வாள்; இவைகள் திருமாறகுரியன. இப்பஞ்சாயுத வடிவமாகச்செய்த ஆபரணத்தைக் குழந்தைகட்கணிதல் தொன்றுதொட்ட வழக்கு.

* பைங்கோட்டு மலர்ப்புன்னைப் பறவைகாள பயப்பூரச, சங்காட்டந் தவிர்த் தென்னைத் தவிராநோய் தந்தானே, செங்காட்டங் குடிமேய சிறுத்தொண்டன் பணிசெய்ய, வெங்காட்டு ளனலேந்தி விளையாடும் பெருமானே.

மடல்கொண்ட மலரிதழி நெடுஞ்சடையை வனப்பெய்தக்
கடன்மண்டி முகந்தெழுந்த காளமே கச்சுருள்போற்
றொடர்பங்கி சுருண்டிருண்டு தூறிநெறித் தசைந்துசெறி
படர்துஞ்சின் கருங்குஞ்சி கொந்தளமா கப்பரப்பி. (௨௬)

அஞ்சனமஞ் சனஞ்செய்த தனையவணி கிளர்பம்மை
மஞ்சினிடை யிடையெழுந்த வானமீன் பரப்பென்னப்
புஞ்சநிரை வண்டுதேன் சுரும்புபுடை படர்ந்தார்ப்பத்
துஞ்சினுனித் தனிப்பரப்புந் தும்பைநறு மலர்தோன்ற (௨௭)

அருகுதிரு முடிச்செருகு மந்தியிளம் பிறைதன்னைப்
பெருகுசிறு மதியாக்கிப் பெயர்த்துச்சாத் தியதென்ன
விரிசுடர்ச்செம் பவளவொளி வெயில்விரிக்கும் விளங்குசுடர்த்
திருநுதன்மேற் றிருநீற்றுத் தனிப்பொட்டுத் திகழ்ந்திலங்க. (௨௮)

வெவ்வருக்கன் மண்டலமும் விளங்குமதி மண்டலமும்
அவ்வனற்செம் மண்டலமு முடனணைந்த தெனவழகை
வவ்வுதிருக் காதின்மணிக் குழைச்சங்கு வளைதத்தனுட்
செவ்வரத்த மலர்செறித்த திருத்தோடு புடைசிறக்க (௨௯)

களங்கொள்விட மறைத்தருளக் கடலமுதக் குமிழிநிரைத்
துளங்கொளிவெண் டிரட்கோவைத் தூயவட மணிந்ததென
உளங்கொள்பவர் கரந்துடலு முயிருமுரு கப்பெருக
விளங்குதிருக் கழுத்தினிடை வெண்பளிங்கின் வடந்திகழ. (௩௰)

---

(௨௬) மடல்கொண்ட மலர் இதழி - இதழ்கள் அமைந்த கொன்றைப் பூமாலை யணிந்த. வனப்பு - அழகு. கடல்மண்டி முகந்து - சமுத்திரத்தையடைந்து நீரைப் பருகி. காளமேகம் - கரியமேகம். பங்கி - புறமயிர்; ஆண்மயிர். தூறி - காட்டார்ந்து; சிலிர்த்து. செறிபடர் - கற்றையாய நெருங்கிய கருங்குஞ்சி கொந்தளம் ஆக - கரிய மயிர்க்கொத்தைப்போல. (காளமேகச் சுருள் .. ........ - குறுகியமயிர் ஓரடுக்கும், நீண்டமயிர் ஓரடுக்கும், அதனினும் நீண்டமயிர் மற்றோரடுக்குமாக அடுக்கடுக்காகச் சுருளுதல்.) துஞ்சல் - ஓவ்வோர் அடுக்கின் நிலைபேறு. துஞ்சினுனி எனப் பிற்பாட்டில் வருதல் காண்க. (௨௭) அஞ்சன மஞ்சனம் செய்தது அனைய - இருளுக்கு இருள் ஊட்டியதைப்போல; மைக்குழம்பைப் பூட்டியதைப்போல. அணிகிளர் பம்மைமஞ்சின் - அடுக்காக உள்ள சுருண்ட மயிராயமேகத்தின். வானமீன் - நட்சத்திரங்களின். புஞ்சம் நிரை வண்டு தேன் சுரும்பு - திரட்சியாகவும் வரிசையாகவும் வருகின்ற கருவண்டும், தேன்வண்டும், பொறிவண்டும். வானமீன் பரப்பென்னத் தும்பை நறுமலர் தோன்ற என இயையும். (௨௮) திருமுடி அருகுசெருகும் - திருமுடியின் அருகில் தரித்த. (௨௯) செவ்வரத்தமலர் - செங்கழுநீர்மலர்; செங்குவளை மலர். மணிக்குழை - சூரியமண்டலம். சங்கு - மதிமண்டலம். செவ்வரத்தமலர் செறித்த திருத்தோடு - அனற்செய் மண்டலம். திருச்செவியை அருக்கமண்டலத்திற்கு ஒப்பிடுவாருமுளர். அவர் மணிக்கு அழகு எனப்பொருள் கொள்வர். (௩௰) உளம்கொள்பவர் - உள்ளே சிந்திப்பவரது.

* செம்பரிதி கடற்குளித்த செக்கரொளி யினையந்திப்
ப[illegible]மிருள செறிபொழுது படர்ந்தணைந்து சூழ்வதெனத்
[illegible]மழைய கரியுரிவை கொண்டுசமைத் ததுசாத்தும்
அம்பவளத் திருமேனிக் கஞ்சுகத்தி னணிவிளங்க. (௫௧)

மிகவெழுமன் பர்களன்பு திருமேனி விளைந்ததென
அக்குமணி யாற்சன்ன வீரமுமா ரமும்வடமுங்
கைக்கணிதோர் வளைச்சரியு மரைக்கடிசூத் திரச்சரியுந்
தக்கதிருக் காற்சரியுஞ் சாத்தியவொண் சுடர்தயங்க. (௫௨)

பொருவிறிருத தொண்டர்க்குப் புவிமேல்வந் தருள்புரியும்
பெருகருளின் றிறங்கண்டு பிரானருளே பேணுவீர
வருமனபின் வழிநிற்பீ ரெனமறைபூண் டறைவனபோற்
றிருவடிமேற் றிருச்சிலம்பு திசைமுழுதுஞ் செலவொலிப்ப. (௫௩)

அயன்கபா லந்தரித்த விடத்திருக்கை யாலணைத்த
வயங்கொளிமூ விலைச்சூல மணித்திருத்தோண் மிசைப்பொலியத்
தயங்குசுடர் வலத்திருக்கைத் தமருகத்தி னொலிதழைப்பப்
பயன்றவத்தாற் பெறும்புவியும் பாததா மரைசூட. (௫௪)

அருள்பொழியுந் திருமுகத்தி னணிமுறுவ னிலவெறிப்ப
மருள்பொழியும் மலஞ்சிதைக்கும் வடிச்சூலம் வெயிலெறிப்பப்
பொருள்பொழியும் பெருகன்பு தழைத்தோங்கிப் புவியேத்தத்
தெருள்பொழிவண் டமிழ்நாட்டுச் செங்காட்டங் குடிச்சேர்ந்தார். (௫௫)

தண்டாத தொருவேட்கைப் பசியுடையார் தமைப்போலக்
கண்டாரைச் சிறுத்தொண்டர் மனைவினவிக் கடிதணைந்து
தொண்டனார்க் கெந்நாளுஞ் சோறளிக்குந் திருத்தொண்டர்
வண்டார்பூந் தாரரிம் மனைக்குள்ளா ரோவென்ன. (௫௬)

வந்தணைந்து வினவுவார் மாதவரே யாமென்று
சந்தனமாந் தையலார் முன்வந்து தாள்வணங்கி
யந்தமில்சீ ரடியாரைத் தேடியவர் புறத்தணைந்தார்
எந்தமையா ளுடையவரே யகத்துளெழுந் தருளுமென (௫௭)

---

(௫௧) செம்பரிதி. .. .... சூழ்வது என - சிவந்த கிரணங்களையுடைய சூரியன் மேற்றிசைக்கடலில் அஸ்தமித்தபோது உண்டாகிய செவ்வான ஒளியை இருள்நிறைந்த மாலைக்காலம் விரிந்து நெருங்கிச் சூழ்தல்போல. * செம்பரிதி கடலளித்த என்றும் பாடம். கஞ்சுகம் - சட்டை. திருமேனி செக்கரொளிக்கும், சட்டை இருளிற்கும் உவமிக்கப்பட்டன. (௫௨) சன்னவீரம் - வெற்றிமாலை. வளைச்சரியும் - கடகமும். கடி - அரை. அன்பை வெண்ணிறத்திற் சொப்பிடல் பண்டைமூதறிஞர் வழக்காகலின் [illegible] அக்குமணி முதலியன அன்பின் விளைவிற்கு உருவகிக்கப்பட்டது. (௫௩) பேணுவீர் - விளி. (௫௬) தண்டாத - நீங்காத.

மடவாரலை முகநோக்கி மாதரார் தாமிருந்த
இடவகையிற் றனிபுகுந்தோ மென்றருள வதுகேட்டு
விடவகல்வார் போலிருந்தா ரெனவெருவி விரைந்துமனைக்
கடனுடைய திருவெண்காட் டம்மைகடைத் தலையெய்தி. (௩அ)

அம்பலவ ரடியாரை யமுதுசெய்விப் பாரிற்றைக்
கெம்பெருமான் யாவரையுங் கண்டிலர்தே டிப்போனார்
வம்பெனநீ ரெழுந்தருளி வருந்திருவே டங்கண்டாற்
றம்பெரிய பேறென்றே மிகமகிழ்வ ரினித்தாழார். (௩௯)

இப்பொழுதே வந்தணைவ ரெழுந்தருளி யிருமென்ன
ஒப்பின்மனை யறம்புரப்பீ ருத்தராபதியுள்ளோஞ்
செப்பருஞ்சீர்ச் சிறுத்தொண்டர் தமைக்காணச் சேர்ந்தனம்யாம்
எப்பரிசு மவரொழிய விங்கிரோ மென்றருளி. (௪௦)

கணணுதலிற் காட்டாதார் கணபதீச் சரத்தின்கண்
வண்ணமலர் ராத்தியின்கீ ழிருக்கின்றோ மற்றவர்தா
நண்ணினா லிருந்த பரிசுரைப்பீ ரென்றருளி
யண்ணலார் திருவாத்தி யணைந்தருளி யமர்ந்திருந்தார். (௪௧)

வேறு.

நீரார் சடையா னடியாரை நேடி யெங்குங் காணாது
சீரார் தவத்துச் சிறுத்தொண்டர் மீண்டுஞ் செல்வ மனையெய்தி
யாரா வின்ப மனைவியார்க் கியம்பி யழிவெய் திடவவரும்
பாரா தரிக்குந் திருவேடத் தொருவர் வந்த படிபகர்ந்தார். (௪௨)

அடியே னுய்ந்தே னெங்குற்றா ருரையா யென்ன வவர்மொழிவார்
வடிசேர் சூல கபாலத்தார் வடதே சத்தோ மென்றார்வண்
டுடிசேர் கரத்துப் பயிரவர்யாஞ் சொல்ல விசைந்து மிராதேபோய்க்
கடிசேர் திருவாத் தியினிழற்கீ ழிருந்தார் கணப தீச்சரத்து. (௪௩)

என்று மனைவி யாரியம்ப வெழுந்த விருப்பால் விரைந்தெய்திச்
சென்று கண்டு திருப்பாதம் பணிந்து நின்றார் சிறுத்தொண்டர்
நின்ற தொண்டர் தமைநோக்கி நீரோ பெரிய சிறுத்தொண்டர்
என்று திருவாய் மலர்ந்தருள விறைவர் தம்மைத் தொழுதுரைப்பார். (௪௪)

பூதி யணிசா தனத்தவர்முன் போற்றப் போதே னாயிடினு
நாத னடியார் கருணையினா லருளிச் செய்வா ராயினன்று
சோதி வன்பா சனையரிந்து செயவிப் பதற்குக் குலப்பதியிற்
காத லாலே தேடியுமுன் காணே னறவத்தா னுமைக்கண்டேன். (௪௫)

---

(௩அ) மடவரல் - இளமபெண். (௩௯) வம்பு - புதுமை. (௪0) உத்தராபதி - வடதேயம்.

அடியேன் மனையி லெழுந்தருளி யமுதுசெய்ய வேண்டுமென
நெடியோ னறியா வடியார்தா நிகழுந் தவத்தீ ருமைக்காணும்
படியால வந்தோ முததரா பதியோ மெம்மைப் பரிந்தூட்ட
முடியா துமக்குச் செய்கையரி தொண்ணா தென்று மொழிந்தருள. (௪௬)

எண்ணா தடியேன் மொழியேனீ ரமுது செய்யு மியல்பதனைக்
கண்ணார் வேட நிறைதவத்தீ ரருளிச் செய்யுங் கடிதமைகக
தண்ணா ரிதழி முடியாத மடியார் தலைப்பட் டாற்றேட
ஒண்ணா தனவு முளவாகு மருமை யில்லை யெனவுரைத்தார். (௪௭)

அரிய தில்லை யெனக்கேட்ட பொழுதி னழகு பொழிகின்ற
பெரிய பயிர வக்கோலப் பெருமா னருளிச் செய்வாராம்
பரியுந் தொண்டீர் மூவிருது கழிததாற் பசுவீழ்த் திடவுண்ப
துரிய நாளு மதற்கின்றா லூட்ட வரிதா முமக்கென்றார். (௪௮)

சால நன்று முந்நிரையு முடையேன் றாழ்விங் கெனக்கில்லை
யால முண்டா ரன்பருமக் கமுதாம் பசுநதா னின்னதென
ஏல வருளிச் செயப்பெற்றால் யான்போ யமுது கடிதமைத்துக்
காலந் தப்பா மேவருவே னென்று மொழிந்து கைதொழுதார். (௪௯)

பண்பு மிக்க சிறுதொண்டர் பரிவு கண்டு பயிரவரு
நண்பு மிக்கீர் நாமுண்ணப் படுக்கும் பசுவு நரப்பசுவாம்
உண்ப தஞ்சு பிராயத்தி லூறுப்பின் மறுவின் றேலின்னம்
புண்செய் நோவில் வேலெறிந்தாற் போலும் புகலவ தொன்றென்றார் (௫௦)

யாது மரிய தில்லையினி யீண்ட வருளிச் செய்யுமென
நாதன் றானு மொருகுடிக்கு நல்ல சிறுவ னொருமகனைத்
தாதை யரியத் தாய்பிடிக்கும் பொழுதிற் றம்மின் மனமுவந்தே
யேத மின்றி யமைத்தகறி யாமிட் டுண்ப தெனமொழிந்தா. (௫௧)

அதுவு முனைவர் மொழிந்தருளக் கேட்ட தொண்ட ரடியேனுக
கிதுவு மரிதன் றெம்பெருமா னமுது செய்யப் பெறிலென்று
கதுமென் விரைவி லவரிசையப் பெற்றுக களிப்பாற் காதலொடு
மதுமென் கமல மலர்ப்பாதம் பணிந்து மனையில வந்தணைந்தார். (௫௨)

அன்பின் மிக்க பெருங்கற்பி னணங்கு திருவெண் காட்டம்மை
முன்பு வந்து சிறுதொண்டர் வரவு நோக்கி முன்னின்றே
யின்பம் பெருக மலர்ந்தமுகங் கண்டு பாத மிசையிறைஞ்சிப்
பின்பு கணவர் முகநோக்கிப் பெருந் தவத்தோர் செயல்வினவ. (௫௩)

(௪௮) இருது - இருமாதகாலம்; மூவிருது - ஆறுமாதம். ஆல - அசை. (௪௯) முந்நிரை - பசு, எருமை, ஆடு. (௫௦) மறுவு - பழுது. (௫௧) ஈண்ட - இப்பொழுதே; விரைவாக. (௫௨) கதுமெனவிரைவு - ஒருபொருட் பன்மொழி.

வள்ள லாரு மனையாரை நோக்கி வந்த மாதவர்தாம்
உள்ள மகிழ வமுதுசெய்ய விசைந்தார் குடிக்கோர் சிறுவனுமாய்க்
கொள்ளும் பிராய மைந்துளனு யுறுப்பிற் குறைபா டின்றித்தாய்
பிள்ளை பிடிக்க வுவந்துபிதா வரிந்து சமைக்கப் பெறினென்ருர். (௩௪)

அரிய கற்பின் மனைவியா ரவரை நோக்கி யுரைசெய்வார்
பெரிய பயிர வத்தொண்ட ரமுது செய்யப் பெறுமதற்கிங்
குரிய வகையா லமுதமைப்போ மொருவ னுகி யொருகுடிக்கு
வருமச் சிறுவன் றனைப்பெறுமா றெவ்வா றென்று வணங்குதலும். (௩௫)

மனைவி யார்தம் முகநோக்கி மற்றித் திறத்து மைந்தர்தமை
நினைவு நிரம்ப நிதிகொடுத்தாற் றருவா ருளரே நேர்நின்று
தனையன் றன்னைத் தந்தைதா யரிவா ரில்லைத் தாழாமே
யெனையிங் குய்ய நீபயந்தான் றன்னை யழைப்போ மியாமென்ருர். (௩௬)

என்று கணவர் கூறுதலு மதனுக் கிசைநதெம் பிரான்ருெண்டர்
இன்று தாழா தமுதுசெய்யப் பெற்றிங் கவர்த மலர்ந்தமுக
நன்று காண்ப மெனநயந்து நம்மைக் காக்க வருமணியைச்
சென்று பள்ளி யினிற்கொண்டு வாரு மென்ருர் திருவனையார். (௩௭)

காதன் மனையார் தாங்கூறக் கணவ னுருங் காதலனை
யேத மகலப் பெற்றபே றெல்லா மெய்தி னுர்போல
நாதர் தமக்கங் கமுதாகக நறுமென் குதலை மொழிப்புதல்வன்
ஓத வணைந்த பள்ளியினி லுடன்கொண் டெய்தக் கடிதகன்ருர். (௩௮)

பள்ளி யினிற்சென றெய்துதலும் பாத சதங்கை மணியொலிப்பப்
பிள்ளை யோடி வநதெதிரே தழுவ வெடுத்துப் பியலின்மேற்
கொள்ள வணைதுக் கொண்டுமீண டில்லம் புகுதக் குலமாதர்
வள்ள லார்த முன்சென றுமைந்நன் றன்னை யெதிர்வாங்கி. (௩௯)

குஞ்சி திருத்தி முகந்துடைத்துக் கொட்டை யரைநாண் கோணீக்கி ப[illegible]
மஞ்ச ளழிந்த வதற்கிரங்கி மையுங் கண்ணின் மருங்கொதுக்கிப்
பஞ்சி யஞ்சு மெல்லடியார் பரிந்து திருமஞ் சனமாட்டி
யெஞ்ச லில்லாக் கோலஞ்செய் தெடுத்துக் கணவர் கைக்கொடுத்தார். (௪0)

அச்ச மெய்திக் கறியமுதா மென்னு மகனு லரும்புதல்வன்
உச்சி மோவார் மார்பினக ணணைத்து முத்தந் தாமுண்ணுர்
பொச்ச மில்லாத் திருத்தொண்டர் புனிதர் தமக்குக் கறியமைக்க
மெச்சு மனத்தா லடுக்களையின் மேவார் வேறு கொண்டணைவார். (௪௧)

ஒன்று மனத்தா ரிருவர்களு முலக ரறியா ரெனமறைவிற்
சென்று புக்குப் பிள்ளைதனைப் பெற்ற தாயார் செழுங்கலங்கள்

(௩௯) பியலினமேல - தோளினமேல். (௪0) மஞ்சள் - கலவைச்சாந்து. (௪௧) பொச்சம - தவறு. அடுக்களை - மடைப்பள்ளி.

நன்று கழுவிக் கொடுசெல்ல நல்ல மகனை யெடுத்தலகை
வென்ற தாதை யார்தலையைப் பிடிக்க விரைந்து மெய்த்தாயர் (கூஉ)

இனிய மழலைக் கிங்கிணிக்கா லிரண்டு மடியின் புடையிடுக்கிக்
கனிவாய் மைந்தன் கையிரண்டுங் கையாற் பிடிக்கக் காதலனு
நனிநீ டுவகை யுறுகின்றா ரென்று மகிழ்ந்து நகைசெய்யத்
தனிமா மகனைத் தாதையார் கருவி கொண்டு தலையரிவார். (கூங)

பொருவில் பெருமைப் புத்திரன்மெய்த் தன்மை யளித்தா னெனப்பொலிந்து
மருவு மகிழ்ச்சி யெய்தவவர் மனைவி யாருங் கணவனார்
அருமை யுயிரை யெனக்களித்தா னென்று மிகவு மகமலர
இருவர் மனமும் பேருவகை யெய்தி யரிய வினைசெய்வார். (கூச)

அறுத்த தலையி னிறைச்சிதிரு வமுதுக் காகா தெனக்கழித்து
மறைத்து நீக்கச் சந்தனத்தார் கையிற் கொடுத்து மற்றையுறுப்
பிறைச்சி யெல்லாங் கொத்தியறுத் தெலும்பு மூளை திறந்திட்டுக்
கறிக்கு வேண்டும் பலகாய மரைத்துக் கூட்டிக் கடிதமைப்பார். (கூரு)

மட்டு விரிபூங் குழன்மடவா ரடுப்பி லேற்றி மனமகிழ்ந்தே
யட்ட கறியின் பதமறிந்தங் கிழிச்சி வேறா ருங்கலத்துப்
பட்ட நறையாற் றாளித்துப் பலவு மற்றுங் கறிசமைத்துச்
சட்ட விரைந்து போனகமுஞ் சமைத்துக் கணவர் தமக்குரைத்தார். (கூகூ)

உடைய நாத ரமுதுசெய வுரைத்த படியே யமைத்தவதற்
கடையு மின்ப முன்னையிலு மாவம் பெருகிக் களிகூர
விடையில் வருவார் தொண்டர்தாம் விரைந்து சென்று மென்மலரின்
புடைவண் டறையு மாத்தியின்கீ ழிருந்த புனிதர் முன்சென்றார். (கூஎ)

அண்ண லிருமுன் பணிந்திறைஞ்சி யன்பர் மொழிவா ரடியேன்பால்
நண்ணி நீரிங் கமுதுசெய வேண்டு மென்று நான்பரிவு
பண்ணி னேனுய்ப் பசித்தருளத் தாழ்தத தெனினும் பணிசமைத்தேன்
எண்ணம் வாய்ப்ப வெழுந்தருள வேண்டு மென்றங் கெடுத்துரைத்தார். ()

இறையுந் தாழா தெழுந்தருளி யமுது செயயு மென்றிறைஞ்சக்
கறையுங் கண்டத் தினின்மறைத்துக் கண்ணு நுதலிற் காட்டாதார்
நிறையும் பெருமைச் சிறுத்தொண்டர் போது மெனன நிதியிரண்டுங்
குறைவ னொருவன் பெற்றுவந்தாற் போலக் கொணடு மனைபுகுந்தார். ()

வந்து புகுந்து திருமனையின் மனைவி யார்தா மாதவரை
முந்த வெதிர்சென் றடிவணங்கி முழுது மழகு செய்தமனைச்
சந்த மலர்மா லைகள்முதத்தின் றூம நாற்றித் தவிசடுத்த
கந்த மலரா சனங்காட்டிக் கமழ்நீரக கரக மெடுத்தேந்த (எO)

(கூகூ) நறையால - வாசனையோடு. சட்டவிரைந்து - அதிகவிரைவாய. (கூக)
இறையும - சிறிதும.

தூய நீராற் சிறுத்தொண்டர் சோதி யார்தங் கழல்விளக்கி
யாய புனிதப் புனறங்க டலைமே லாரத் தெளித்தின்ப
மேய வில்ல மெம்மருங்கும் வீசி விரைமென் மலர்சாந்தம்
ஏயுந் தூப தீபங்கண் முதற்பூ சனைசெய் திறைஞ்சுவார். (எக)

பனிவெண் டிங்கட் சடைவிரித்த பயில்பூங் குஞ்சிப் பயிரவராம்
புனிதர் தம்மைப் போனகமுங் கறியும் படைக்கும் படிபொற்பின்
வனிதை யாருங் கணவருமுன் வணங்கிக் கேட்ப மற்றவர்தாம்
இனிய வண்ண முடன்கறிக ளெல்லா மொக்கப் படைக்கவென. (எஉ)

பரிசு விளங்கப் பரிகலமுந் திருத்திப் பாவா டையிலேற்றித்
தெரியும் வண்ணஞ் செஞ்சாலிச் செழும்போ னகமுங் கறியமுதும்
வரிசை யினின்முன் படைத்தெடுத்து மன்னும் பரிக லக்கான்மேல்
விரிவெண் டுகிலின் மிசைவைக்க விமலர் பார்த்தங் கருள்செய்வார். (எங)

சொன்ன முறையிற் படுத்தபசுத் தொடர்ந்த வுறுப்பெல் லாங்கொண்டு
மன்னு சுவையிற் கறியாக்கி மாண வமைத்தீ ரேயன்ன
அன்ன மனையார் தலையிறைச்சி யமுதுக் காகா தெனக்கழித்தேம்
என்ன வதுவுங் கூடநா முண்ப தென்றா ரிடர்தீர்ப்பார். (எச)

சிந்தை கலங்கிச் சிறுத்தொண்டர் மனையா ரோடுந் திகைத்தயரச்
சந்த னத்தா ரெனுந்தாதி யார்தா மந்தத் தலையிறைச்சி
வந்த தொண்ட ரமுதுசெயும் பொழுது நினைக்க வருமென்றே
முந்த வமைத்தேன் கறியமுதென் றெடுத்துக் கொடுக்க முகமலர்ந்தார். ()

வாங்கி மகிழ்ந்து படைத்ததற்பின் வணங்குஞ் சிறுத்தொண் டரைநோக்கி
யீங்கு நமக்குத் தனியுண்ண வொண்ணா தீச னடியாரிப்
பாங்கு நின்றார் தமைக்கொணர்வீ ரென்று பரமர் பணித்தருள
ஏங்கிக் கெட்டே னமுதுசெய்ய விடையூ றிதுவோ வெனநினைவார். (எசு)

அகத்தின் புறத்துப் போயருளா லெங்குங் காணா ரழிந்தணைந்து
முகத்தில் வாட்ட மிகப்பெருகப் பணிந்து முதல்வர்க் குரைசெய்வார்
இகத்தும் பரத்து மினியாரைக் காணே னியானுந் திருநீறு
சகத்தி லிடுவார் தமைக்கண்டே யிடுவே னென்று தாழ்ந்திறைஞ்ச. (எஎ)

உம்மைப் போல நீறிட்டா ருளரோ வுண்பீர் நீரென்று
செம்மைக் கற்பிற் றிருவெண்காட் டம்மை தம்மைக் கலந்திருத்தி
வெம்மை யிறைச்சி சோறிதனின் மீட்டுப் படையு மெனப்படைத்தார்
தம்மை யூட்ட வேண்டியவ ருண்ணப் புகலுந் தடுத்தருளி. (எஅ)

ஆறு திங்க ளொழிந்துண்போ முண்ணு மளவுந் தரியாது
சோறு நாளு முண்பீர்முன் னுண்ப தென்னம் முடன்றுய்ப்ப

(எங) பாவாடை - நிலத்தில்விரிக்கும வஸ்திரம.

மாறின் மகவு பெற்றீரேன் மைந்தன் றன்னை யழையுமென
ஈறு முதலு மில்லாதார்க் கிப்போ துதவா னவனென்றார். (எகூ)

நாமிங் குண்ப தவன்வந்தா னாடி யழையு மெனநம்பர்
தாமங் கருளிச் செயத்தரியார் தலைவ ரமுது செய்தருள
யாமிங் கென்செய் தாலாகு மென்பார் விரைவுற் றெழுந்தருளாற்
பூமென் குழலார் தம்மோடும் புறம்போ யழைக்கப் புகும்பொழுது. (அ0)

வைய நிகழுஞ் சிறுத்தொண்டர் மைந்தா வருவா யெனவழைத்தார்
தைய லாருந் தலைவர்பணி தலைநிற் பாராய்த் தாமழைப்பார்
செய்ய மணியே சீராளா வாராய் சிவனா ரடியார்யாம்
உய்யும் வகையா லுடனுண்ண வழைக்கின் றாரென் றோலமிட. (அக)

பரம ரருளாற் பள்ளியினின் றோடி வருவான் போல்வந்த
தரமில் வனப்பிற் றனிப்புதல்வன் றன்னை யெடுத்துத் தழுவித்தங்
கரமுன் னணைத்துக் கணவனார் கையிற் கொடுப்பக் களிகூர்ந்தார் [ல்.
புரமூன் றெரித்தார் திருத்தொண்ட ருண்ணப் பெற்றா மெனும்பொலிவா

வந்த மகனைக் கடிதிற்கொண் டமுது செய்விப் பான்வந்தார்
முந்த வேயப் பயிரவரா முதல்வ ரங்கண் மறைந்தருளச்
சிந்தை கலங்கிக் காணாது திகைத்தார் வீழ்ந்தார் தெருமந்தார்
வெந்த விறைச்சிக் கறியமுதுங் கலத்திற் காணார் வெருவுற்றார். (அங)

செய்ய மேனிக் கருங்குஞ்சிச் செழுங்கஞ் சுகத்துப் பயிரவர்யாம்
உய்ய வமுது செய்யாதே யொளித்த தெங்கே யெனத்தேடி
மையல் கொண்டு புறத்தணைய மறைந்த வவர்தா மலைபயந்த
தைய லோடுஞ் சரவணத்துத் தநய ரோடுந் தாமணைவார். (அச)

தனிவெள் விடைமே னெடுவிசும்பிற் றலைவர் பூத கணநாதர்
முனிவ ரமரர் விஞ்சையர்கண் முதலா யுள்ளோர் போற்றிசைப்ப
இனிய கறியுந் திருவமுது மமைத்தார் காண வெழுந்தருளிப்
பனிவெண் டிங்கண் முடிதுளங்கப் பரந்த கருணை நோக்களித்தார். (அரு)

அன்பின் வென்ற தொண்டரவர்க் கமைந்த மனைவி யார்மைந்தர்
முன்பு தோன்றும் பெருவாழ்வை முழுதுங் கண்டு பரவசமா
யென்பு மனமுங் கரைந்துருக விழுந்தா ரெழுந்தா ரேத்தினார்
பின்பு பரமர் தகுதியினாற் பெரியோ ரவருக் கருள்புரிவார். (அசு)

கொன்றை வேணி யார்தாமும் பாகங் கொண்ட குலக்கொடியும்
வென்றி நெடுவேன் மைந்தருந்தம் விரைபூங் கமலச் சேவடிக்கீழ்
நின்ற தொண்டர் மனைவியார் நீடு மகனார் தாதியார்
என்றும் பிரியா தேயிறைஞ்சி யிருக்க வுடன்கொண் டேகினார். (அஎ)

ஆறு முடிமே லணிந்தவருக் கடியா ரென்று கறியமுதா
யூறி லாத தனிப்புதல்வன் றன்னை யரிந்தங் கமுதூட்டப்
பேறு பெற்றார் சேவடிக டலைமேற் கொண்டு பிறவுயிர்கள்
வேறு கழறிற் றறிவார்தம் பெருமை தொழுது விளம்புவாம். (அஅ)

சிறுத்தொண்டநாயனார் புராண முற்றிற்று.

ஆக திருவிருத்தம் ௩,எ௯௨.

---

சோழநாட்டிலே, திருச்செங்காட்டங் குடியிலே, மாமாத்திரர் குலத்திலே, ஆயுள்வேதங்களிலும், வடமொழிக்கலைகளிலும் மகாபாண்டித்தியம் வாய்ந்தவரும், படைத்தொழில்களிலும, யானையேற்றம், குதிரையேற்றங்களிலும மிகச்சிறந்தவரும் ஆகிய பரஞ்சோதியார என்பவர் ஒருவரிருந்தார். அவர் வேதமுதலிய கலைகளையாராய்ந்து, அவைகளில தெளிந்தபொருள் சிவபெருமானே எனத்துணிநது, அவருக்கு இடையறாப் பேரன்புசெலுத்தும் இயல்பும், சிவனடியாரகளுககு எப்பொழுதும் திருததொணடுசெய்யும் பெருமையும் உடையவர்.

அப்பரஞ்சோதியார் அரசனிடத்திலே அணுக்கராய், அவனுக்காகத் தாமே வேற்றரசர்களை எதிர்தது, யுததஞ்செய்து, ஜெயமடைநது, அவர்கள் நாடுகளைக் கைப்பற்றி, அவனால் நன்குமதிக்கப் பெற்றிருநதார். ஒருமுறை வடதேசத்திலே வாதாவியென்னும் நகரததையடைநது, போர்புரிந்து, அதைவென்று, பலவகைப்பட்ட இரத்தினஙகளையும், நிதிககுவியல்களையும், யானைக்கூட்டங்களையும், குதிரைககூட்டஙகளையும் மகாராஜாவுக்குமுனனே கொண்டுவந்தார். அதுகண்ட அரசன் பரஞ்சோதியாருடைய யானையேற்றத்தின் திறமையைப் புகழ்ந்துபேசினான். அஙகிருநத மநதிரிகள் அரசனைப் பார்தது "அரசர்பெருமானே! இவர் சந்திரசேகரர்க்குத் திருத்தொண்டு செய்யும் பெருமையை யுடையவரானபடியால இவருககு எதிராவார் ஒருவரும் இஙகுஇலலை" என்று சொன்னார்கள் அவ்வுரைகள அரசன்செவியிற பொருநதியமாத்திரம் அவன் இடிகேட்ட சர்ப்பம்போல நடுநடுஙகி "அநதோ! இவரைச் சிவனடியார் என்றுணராது போர்முகத்தில் விட்டிருநதேன் செயற்கரிய அரும்பாவத்தைச் செயதேன்" எனறுசொல்லி அடியவரைப் பணிநது "எம்பெருமானே! என்பிழை பொறுக்கவேணடும்" என்று பிரார்த்தித்தான். மெய்ப்பத்தராகிய பரஞ்சோதியார் அரசனுக்குமுன்னே விழுநது பணிந்து "அரசரேறே! எனகடமையை நான் செலுத்திககொணடு வநதேன்; அதனால் விளைந்த குற்றமென்னை?" என்றுசொல்லி நின்றார். அடியவர்பத்தியிற்சிறநத அரசன் அவருக்கு நிதிக்குவையல்களையும், விருத்திகளையுஙகொடுத்து "உமது மெய்நநிலைமையை யான் அறியாதபடி நடத்திவந்தீர். இனி என்கருததுக்கிசைந்து, பணிசெய்தலை விடுதது, சிவநாதனுக்கும், சிவநேயர்கட்கும அன்புரிமைத் திருததொண்டைச் செய்துகொண்டிரும்" என்றுவேணடி விடைகொடுத்தான். பரஞ்சோதி நாதரும் அரசனபால விடைபெற்றுககொண்டு, தநதிருப்பதியையடைந்து, கணபதீச்சரப் பெருமானை நாடோறும் வழிபடுந்தொழிலராய், திருவெண்காட்டு நங்கையெனுங கற்பரசியாரோடு இலலறவழிநின்று, தினந்தோறும் சிவனடியார்களைத் திருவமுது செய்விததுப்பின் தாம் உண்டு வாழ்ந்துவந்தார்.

அவர் அடியவர்கள் முன்னிலையில் மிகச்சிறியராய்க் காட்டி யொழுகின மையால் சிறுத்தொண்டர் என்னுந் திருநாமத்தை யுடையவரானார். சிவபெருமான் திருவருளால் அவருடைய பத்தினியார்க்குச் சீராளதேவர் என்பவர் புத்திரராகப் பிறந்தார். சிறுத்தொண்டர் அப்புத்திரசிகாமணியை அன்போடு வளர்த்து, ஐந்துவயதிலே பள்ளியிலமர்த்தினார். அதுகாலை அத்திருப்பதிக்கு எழுந்தருளிவந்த ஆளுடையபிள்ளையாரை எதிர்கொண்டழைத்து உபசரித்தார். அப்பெருந்தகையார் சிறுத்தொண்டரைத் தமது பதிகத்திலே சிறப்பித்து எழுந்தருளினார். இங்ஙனம் நாயனார்பெருமான் அடியவர்களுக்கு அமுதூட்டுந் திருத்தொண்டைக் குறைவற நடாத்திவரு நாளில் எல்லாம்வல்ல இறைவனார் அவர் அன்பை நுகரவேண்டி, வயிரவத் திருவேடந்தாங்கி, திருக்கயிலையினின்றும் நீங்கி, திருச்செங்காட்டங்குடியைச் சேர்ந்து, சிறுத்தொண்டநாயனாருடைய வீட்டுவாயிலை அடைந்து, "தொண்டர்களுக்குச் சோறளிக்குஞ் சிறுத்தொண்டர் இவ்வீட்டிலுளரோ" என்று கேட்டருள, தாதியாராகிய சந்தனநங்கையார் விரைவாக வந்துவணங்கி "மாதவரே! நாயனார் அடியவர்களைத்தேட வெளியேபோய்விட்டார். தேவரீர் உள்ளே எழுந்தருளும்" என்று சொன்னார். அதுகேட்ட பெருமான் "பெண்கள் உள்ள இடத்தில் நாம் தனியேவாரோம்" என்று திருவாய் மலர்ந்தருளினார். அதைக் கேட்டுக்கொண்டிருந்த திருவெண்காட்டுநங்கையார் "இவ்வன்பர் போய்விடுவார் போலிருக்கிறது" என்றுகருதி விரைவாக ஓடிவந்து, வைரவரை வணங்கி "சுவாமீ! அடியேன் நாயகர் அடியவர்களை அமுதுசெய்விப்பவர்; இன்று ஒரு அடியவரையுங்காணாது வெளியே தேடப் போயினார்; உமது திருவேடத்தைத் தரிசிப்பாராயின் உண்மையானந்தமெய்துவர். இனிவரத்தாழார். தேவரீர் உள்ளே எழுந்தருளும்" என்று வேண்டிக்கொண்டார். அதற்கு வயிரவமூர்த்தியார் "நமதுதேசம் உத்தரதேசம். சிறுத்தொண்டரைக் காணவந்தோம். அவர் இல்லாக்காலத்தில் இங்குதங்கோம். கணபதீச்சரத்தின்கணுள்ள திருவாத்திமரத்தடியி லிருக்கின்றோம். அவர் வந்ததும் அறிவியுங்கள்" என்றுகூறிக் கணபதீச்சரத்தை யடைந்து திருவாத்தியின் கீழிருந்தார்.

அன்பேயுருவாக விளங்குஞ் சிறுத்தொண்டநாயனார் அடியவர்களைத் தேடி எங்குங்காணாது, வீட்டிற்குத் திரும்பி, நாயகியாருக்குச்சொல்லி வருந்தினார். அம்மையார் நாயகரைப்பார்த்து "இப்பொழுது இங்கே ஒருவைரவர் வந்தார்" என்றதும், நாயனார் "நான் உய்ந்தேன் உய்ந்தேன்" என்று மகிழ்வெய்தி "அவர் எங்கேபோயினார்" என்று கேட்டார். அதற்குத் திருவெண்காட்டு நங்கையார் "அவர் வடதேசத்தவராம். அவரை இங்கே இருக்கவேண்டினேன். அவர் இசையாது சென்று கணபதீச்சரத்துள்ள ஆத்தியின்கீழ் இருக்கின்றார்" என்று சொன்னார். உடனே உத்தமோத்தமராகிய சிறுத்தொண்டர் மனோவேகமாக ஓடிச்சென்று வைரவரைக்கண்டு வணங்கி நின்றார். வைரவர்பெருமான் தொண்டரைநோக்கி "பெரிய சிறுத்தொண்டர் நீரோ" என்றுவினவ; நாயனார் "அடியேன்தான்" என்று சொல்லி "இன்று அமுது செய்விக்க அடியவர் ஒருவரையுந் தேடியுங்கண்டிலேன். என்தவப் பயனால் உம்மைக்கண்டேன். தேவரீர்அடியேன் மனைக்கெழுந்தருளி அமுது செய்யவேண்டும்" என்று பிரார்த்தித்தார். அதுகேட்டு வைரவர் "தொண்டரே! நந்தேசம் வடதேசம். உம்மைக் காணவந்தோம். எமக்கு அமுதளிக்க உம்மால் இயலாது" என்றார். அதற்குச் சிறுத்தொண்டர் "மாதவரே! தேவரீர் திருவமுதுசெய்யும் இயல்பைத் திருவாய்மலர்ந்தருளும். உடனே சமைக்கச்செய்வேன். சிவனடியார் தலைப்பட்டால் அரியவையும்

உளவோ" என்றார். அதுகேட்ட வைரவர் "நாம் ஆறுமாதத்திற் கொரு முறை பசுவைக்கொன்று சமைத்துண்பேம். அந்நாளும் இந்நாளேயாம். அங்ஙனம் ஊட்ட உம்மால் முடியாது" என்றார் சிவனடியாரைச் சிவமாகவேகாணும் சிறுத்தொண்டர் "சாலநன்று; நான் மூந்நிரையும் உடையேன். தேவரீருக்குத் திருவமுதாகும் பசு இன்னதென்று அருளிச்செய்வீரேல், யான்போய்ப் பாகமபண்ணுவித்து விரைவில்திரும்புவேன்" என்றுசொல்லி வணங்கினர். அதற்கு வைரவர் "நாம் உண்ணும பசு நரப்பசுவாகும்; அது ஐந்து வயதுடையதாயும், உறுப்பில் பழுதில்லாததாயும், ஒருகுடிக்கு ஒன்றாயும் இருக்கவேண்டும். அதைத்தாய்மனமகிழ்ச்சியோடு பிடிக்கத் தந்தையரிய வேண்டும். இங்ஙனஞ் சமைத்தாலன்றி நாம் உண்ணோம்" என்றார். தொண்டர்பெருமான் வயிரவரை வணங்கி "தேவரீர் திருவமுது செய்வீரேல் இதுவும் எனக்கு அரிதன்று" என்று மீண்டும் பணிந்து, விடைபெற்று, வீட்டையடைந்தார். அவரதுவரவை எதிர்நோக்கியிருந்த மனைவியார் நாயகர் முகமலர்ந்து வந்ததைக்கண்டு, அகமலர்ந்து அவரைத்தொழுது,வைரவர்செய்கையைக்கேட்க, அவர்சொற்றவைகளைச் சொன்னர். அதுகேட்ட வெண்காட்டுநங்கையார் "வைரவமூர்த்திகள் திருவமுது செய்யப்பெற ஒருகுடிக்கு ஒருவனக வுள்ள ஒரு சிறுவனைப்பெறுவது எங்ஙனம்" என்று வணங்க, நாயனர் மனைவியாரைநோக்கி "ஆசை நிரம்பத்திரவியம் அளித்தால் அடியவர் சொற்ற இலக்கணங்கள் நிறைந்த சிறுவனைக் கொடுப்போர் உளர். ஆனல் அச்சிறுவனை நோகின்று மகிழ்ச்சியோடு அரியத்துணியும் மாதாபிதாக்கள் இல்லை. இனிக்காலந் தாழ்க்காது நம்அருமைப்புதல்வனையே யழைப்போம்" என்று சொன்னர். திருவெண்காட்டு நங்கையார் "நம்மைக் காக்கவந்த குலமணியைப்பள்ளியினின்றும்அழைத்துவாரும்"என்ன; சிறுத்தொண்டர்அளவிலா ஆனந்தமடைந்து, பள்ளிக்கு ஓடிச்சென்று, சீராளதேவரை எடுத்துத் தோள்மேல் வைத்துக்கொண்டு வீட்டிற்கு வந்தார் வெண்காட்டுநங்கையார் எதிர்சென்று சீராளரை வாங்கித்தலைமயிரைத் திருத்தித் திருமஞ்சனமாட்டி அலங்கரித்துக் கணவனர் கையிற்கொடுத்தார். சிறுத்தொண்டர் புத்திரனையன்போடுவாங்கி அடுக்களையிற் செல்லாமல் ஒருவருக்குந்தெரியாத மறைவிடத்திற்செல்ல, நங்கையார் பாத்திரங்களை நன்றாகச்சுத்தஞ்செய்து உடன் போனர் பிறகு தொண்டர்பெருமான் புதல்வருடைய சிரசைப்பிடிக்க; அம்மையார் பிள்ளையின்காலை மடியிலேயிடுக்கி, இரண்டுகைகளையும் தம் இரண்டு கைகளால் பிடித்தார் சீராளதேவர் தம்மைப்பார்த்துத் தாய் தந்தையர்கள மிகமகிழ்வதாக எண்ணிச் சந்தோஷித்து நகைசெய்தனர். அப்பொழுது சிறுத்தொண்டர் புத்திரன் தமக்குப் பெரும்பேறளித்தனன் என்றுகருதி ஆனந்தவாரிதியிற்றோய்ந்து, அன்புமயமாய் விளங்கி, கருவிகொண்டு புத்திரசிகாமணியின் தலையையறுத்தார். உலகைவென்ற திருவெண்காட்டு நங்கையார் தலையின் இறைச்சி திருவமுதுக்குதவாது என்று, அதைமறைத்து நீக்கும்பொருட்டுச் சந்தனநங்கையார்பால் கொடுத்து, மற்றைய அவயவங்களின் இறைச்சியையறுத்து, பாகமாகச் சமைத்து, வேறு கறிகளும் பாகம்பண்ணி, அன்னமுஞ் சமைத்துத் தமது நாயகருக்குத் தெரிவித்தார்.

நன்மை தீமையின் தன்மை சிறிதும் விளங்காது, கரணங்களும், உலகமும், பிறவும் சிவமாகவே கண்டுகளிக்குஞ் சிறுத்தொண்டர் விரைவிலே திருவாத்தியை யடைந்து, வைரவரைத்தொழுது, "சுவாமீ! தேவரீர் திருவாய்மலர்ந்தருளியபடியே திருவமுது பாகம் பண்ணுவித்தேன்; அடியேன் மீது கருணைகூர்ந்து எழுந்தருளித் திருவமுது செய்தருளவேண்டும்" என்று

பிரார்த்தித்து, அவரை வீட்டுக்கு அழைத்துவந்து, முறைப்படி யுபசரித்து, மனைவியாரோடு பணிந்து "சுவாமீ! திருவமுதையும், கறிகளையும் படைக்கும் வகை எப்படி" என்று கேட்டார். வைரவமூர்த்தி "அன்னமுடன் கறிக ளெல்லாம் ஒக்கப்படைக்கவேண்டும்" என்று அருளிச்செய்தார். அது கேட்ட திருவெண்காட்டு நங்கையார் பரிகலந்திருத்திச் சோற்றையும், கறி களையும் கிரமமாகப்படைக்க, வைரவர் அதைத் திருநோக்கஞ்செய்து "நாம் சொல்லியபடியே பசுவின் அவயவங்க ளெல்லாவற்றையும் சமைத்தீரா" என்று வினவினர். அம்மையார "சுவாமீ! தலையிறைச்சி திருவமுதுக்காகா தெனக்கழித்தோம்" என்ன; வைரவர் "நாம் அதையும் உண்போம்" என்று சொன்னர். அதுகேட்ட நாயனரும் நாயகியாரும் திகைத்து அயர்ந் தார்கள். அப்பொழுது தாதியாராகிய சந்தனநங்கையார் "வைரவர் திரு வமுது செய்யுங்கால் அத்தலையிறைச்சியை நினைக்கவரும் என்று அதையும் கழிக்காது பாகம் பண்ணிவைத்திருக்கின்றேன்" என்றுகூறி, அதைக் கொணர்ந்து கொடுத்தார். வெண்காட்டுநங்கையார் அகமுகமலர்ந்து அதை அன்போடுவாங்கிப் படைத்தார். பிறகு வைரவர் அஞ்சலி அஸ்தராய்நிற்கும் சிறுத்தொண்டரைப்பார்த்து "நாம் தனியே உண்ணமாட்டோம். சிவனடி யார்களை யழைத்துவாரும்" என்றார். அதுகேட்ட நாயனர்வருந்தி "அந்தோ! அடியவர் திருவமுதுசெய்ய இடையூறு இதுவோ" என்று எண்ணி, வெளியேபோய்ச் சிவனடியார்களைத் தேடிக்காணுது, வருத்தமடைந்து சோர்ந்த முகத்தினராய்த் திரும்பிவந்து, வைரவரை வணங்கி "சிவநேயர்களை எங்குங்காணேன். சிறியேன விபூதி யணிபவார்க்கே அன்னங்கொடுப்பது வழக்கம்" என்றுசொல்லி வணங்கினர் வைரவா நாயனரைப்பார்த்து "அன்பரே! உம்மைப்போலத் திருநீறிட்டவர் உளரோ. நீர எம்மோடு அமுதுசெய்யும்" என்று அருளிச்செய்து, நங்கையாரை நோக்கி "உமது நாயகர்க்கு வேறொரு பரிகலந்திருத்தி, சோறுங்கறிகளும் நமக்குப் படைத்த தில் எடுத்து இடும்" என்று ஆஞ்ஞாபித்தார். கற்பரசியாராகிய திருவெண் காட்டு நங்கையார் அப்படியே செய்தார். உலகைவென்ற உத்தமச சிறுத் தொண்டர் திருத்தொண்டரை யூட்டவேண்டி யுண்ணப்புகலும் வைரவர் அவ ரைத்தடுத்து "ஆறுமாதத்திற்கு ஒருமுறை அன்னம உண்ணும்யாம் உண்ணு மளவும் பொறுக்காது தினந்தோறும அன்னம் உணணும நீவிர எமக்குமுன உண்ணப்புகுதல என்னை? நம்மோடு அமுதுசெயய உமககுப் புததிர னிருப்பின் அழையும்" என்றார். அதற்கு நாயனர்பெருமான் "என்புதல் வன் இப்போது உதவான்" என்று சொன்னா வைரவா "அவன் வந்தா லன்றி நாம் உணணோம். தேடி அழைததுவாரும்" எனறா. அதுகேட்டுச் சிறுதொண்டரும், மனைவியாரும் வருத்தமுற்று வெளியேபோய் "மைந்தா வாராய்; செயய மணியேவாராய; சீராளாவாராய; வைரவர் உனனோடு அமுதுசெய்ய அழைக்கின்றா வாராய், வாராய்" என்று ஓலமிட்டு அழைத் தாாகள். அதுகாலை அம்பலததில ஆனந்த நடம்புரியும் அருட்பிரகாசரது திருவருளால சீராளதேவர் பள்ளியினினறும் ஓடி வருபவரைப்போல் வந் தார். அனைத்துலகையும் ஈன்ற அன்னையைப்போன்ற அன்னையார் அரு மைப்புதல்வனை அணைததெடுதது நாயகர்பால் அளித்தார். அன்பாபெரு மான் "அடியவா அமுதுசெய்யப் பெற்றோம்" என்று ஆனந்தமடைந்து, விரைவாக அழைத்துக்கொண்டு வீட்டிற்குள்ளே வந்தார். அதற்குமுன்னே வயிரவர் மறைந்தருளினர். சிறுதொண்டர் அடியவரைக் காணுமல திகைத் தார்; வீழ்ந்தார்; மயங்கினர்; "யாங்கள் உய்யத் திருவமுதுசெய்யாது வைரவர் எங்கே ஒளிததனரோ" என்று மையல்கொண்டு வெளியேவந்தார். அப்பொழுது அரி அயன் அமரர்அருந்தவர் முதலியோர் அறிவிற்கும் அறிய

அரிய பிரமமாகிய சிவபெருமான், பார்வதிதேவியாரோடும், பாலசுப்பிர மணியப் பெருமானோடும் இடபாரூடராய் ஆகாயத்திலே தோன்றியருளி னார். சிறுத்தொண்ட நாயனாரும், தேவியாரும், புத்திரரும், தாதியாரும சிவமூர்த்திகளைத் தரிசித்துத் தங்களை மறந்தது தாங்களே யறியாதவர்க ளாய் விழுந்து வணங்கித் துதிசெய்துகொண்டு சிவமாக நின்றார்கள். சங்கர னும், சங்கரியும், செங்கேழ்முருகனும் அவர்கள் நால்வரையும் தங்களையென் றும் பிரியாது இறைஞ்சி நித்தியானந்தவாழ்வை யனுபவிக்கும் பொருட்டு உடன்கொண்டு திருக்கயிலையங்கிரிக் கெழுந்தருளினார்கள்.



# கழறிற்றறிவார்நாயனார் புராணம்.



மாவீற் றிருந்த பெருஞ்சிறப்பின் மன்னுந் தொன்மை மலைநாட்டுப்
பாவீற் றிருந்த பல்புகழார் பயிலு மியல்பிற் பழம்பதிதான்
சேவீற் றிருந்தார் திருவஞ்சைக் களமு நிலவிச் சேரர்குலக்
கோவீற் றிருந்து முறைபுரியுங் குலக்கோ மூதூர் கொடுங்கோளூர். (௧)

காலை யெழும்பல் கலையினொலி களிற்றுக் கன்று வடிக்குமொலி
சோலை யெழுமென் சுரும்பினொலி துரகச் செருக்காற் சுலவுமொலி
பாலை விபஞ்சி பயிலுமொலி பாட லாடன் முழவினொலி
வேலை யொலியை விழுங்கியெழ விளங்கி யோங்கும் வியப்பினதால். (௨)

மிக்க செல்வ மனைகடோறும் விளையு மின்பம் விளங்குவன
பக்க நெருங்கு சாலைதொறும் பயில்சட் டறங்கள் பல்குவன
தக்க வணிகொண் மடங்க டொறுஞ் சைவ மேன்மை சாற்றுவன
தொக்க வளங்கொ ளிடங்கடொறு மடங்க நிதியந் துவன்றுவன. (௩)

வேத நெறியின் முறைபிறழா மிக்க வொழுக்கந் தலைநின்ற
சாதி நான்கு நிலைதழைக்குந் தன்மைத் தாகித் தடமதில்சூழ்
சூத வகுள சரளநிரை துதையுஞ் சோலை வளநகர்தான்
கோதை யரசர் மகோதையெனக் குலவு பெயரு முடைத்துலகில். (௪)

முருகு விரியு மலர்ச்சோலை மூதூ ரதன்கண் முறைமரபின்
அருகி யழியுங் கலிநீக்கி யறங்கொள் சைவத் திறந்தழைப்பத்
திருகு சினவெங் களியானைச் சேரர் குலமு முலகுஞ்செய்
பெருகு தவத்தா லரனருளாற் பிறந்தார் பெருமாக் கோதையார். (௫)

திருமா நகரந் திருவவதா ரஞ்செய் விழவின் சிறப்பினால்
வருமா களிகூர் நெய்யாட லெடுப்பார் வான மலர்மாரி

---

(௧) மா - இலக்குமி. சே - இடபம. (௨) துரகம - குதிரை. பாலைவிபஞ்சி - பாலையாழ். (௪) சூதம - மாமரம. வகுளம - மகிழமரம. சரளம - தறுவிமரம.

தருமா விசும்பின் மிகநெருங்கத் தழங்கு மொலிமங் கலந்தழைப்பப்
பெருமா நிலத்தி லெவ்வுயிரும் பெருகு மகிழ்ச்சி பிறங்கினவால். (சு)

மண்மேற் சைவ நெறிவாழ வளர்ந்து முன்னை வழியன்பாற்
கண்மேல் விளங்கு நெற்றியினார் கழலே பேணுங் கருத்தினரா
யுண்மே வியவன் பினராகி யுரிமை யரசர் தொழில்புரியார்
தெண்ணீர் முடியார் திருவஞ்சைக் களத்திற் றிருத்தொண் டேபுரிவார். (எ)

உலகி னியல்பு மரசியல்பு முறுதி யல்ல வெனவுணர்வார்
புலரி யெழுந்து புனன்மூழ்கிப் புனித வெண்ணீற் றினுமூழ்கி
நிலவு திருநந் தனவனத்து நீடும் பணிகள் பலசெய்து
மலரு முகையுங் கொணர்ந்துதிரு மாலை சாத்த மகிழ்ந்தமைத்து. (அ)

திருமஞ் சனமுங் கொணர்ந்துதிரு வலகு மிட்டுத் திருமெழுக்கு
வருமன் புடனின் புறச்சாத்தி மற்று முள்ள திருப்பணிகள்
பெருமை பிறங்கச் செய்தமைத்துப் பேணும் விருப்பிற் றிருப்பாட்டும்
ஒருமை நெறியி னுணர்வுவர வோதிப் பணிந்தே யொழுகுநாள். (கூ)

நீரின் மலிந்த கடலகழி நெடுமால் வரையின் கொடுமதில்சூழ்
சீரின் மலிந்த திருநகர மதனிற் செங்கோற் பொறையனெனுங்
காரின் மலிந்த கொடைநிழன்மேற் கவிக்கு நகொற்றக் குடைநிழற்கீழ்த்
தாரின் மலிந்த புயத்தரசன் றரணி நீத்துத் தவஞ்சார்ந்தான். (க0)

வந்த மரபி னரசளிப்பான் வனஞ்சார் தவத்தின் மருவியபின்
சிந்தை மதிநூ றேரமைச்சர் சிலநா ளாய்ந்து தெளிந்தநெறி
முந்தை மரபின் முதல்வர்திருத் தொண்டு முயல்வார் முதற்றூக
இந்து முடியார் திருவஞ்சைக் களத்தி லவர்பா லெய்தினார். (கக)

எய்தி யவர்த மெதிரிறைஞ்சி யிருந்தண் சாரன் மலைநாட்டுச்
செய்தி முறைமை யாலுரிமைச் செங்கோ லரசு புரிவதற்கு
மைதீர் நெறியின் முடிசூடி யருளு மரபால் வந்ததெனப்
பொய்தீர் வாய்மை மந்திரிகள் போற்றிப் புகன்ற பொழுதின்கண் (கஉ)

இன்பம் பெருகுந் திருத்தொண்டுக் கிடையூ றாக விவர்மொழிந்தார்
அன்பு நிலைமை வழுவாமை யரசு புரக்கு மருளுண்டேல்
என்பு மரவும் புனைந்தாரை யிடைபெற் றறிவே னெனப்புக்கு
முன்பு தொழுது விண்ணப்பஞ் செய்தார் முதல்வ ரருளினால். (கந)

மேவு முரிமை யரசளித்தே விரும்பு காதல் வழிபாடும்
யாவும் யாருங் கழறினவு மறியு முணர்வு மீறிலலாத்
தாவில் விறலுந் தண்டாத கொடையும் படைவா கனமுதலாங்
காவன் மன்னர்க் குரியனவு மெல்லாங் கைவந் துறப்பெற்றார். (கச)

ஆன வருள்கொண் டஞ்சலிசெய் திறைஞ்சிப் புறம்போந் தரசளித்தால்
ஊன மாகுந் திருத்தொண்டுக் கெனினு முடையா னருளாலே
மேன்மை மகுடந் தாங்குதற்கு வேண்டு மமைச்சர்க் குடன்படலும்
மான வமைச்சர் தாளபணிந்தவ் வினைமேற் கொண்டு மகிழ்ந்தெழுந்தார். ()

உரிமை நாளி லோரைநல னெய்த மிக்க வுபகரணம்
பெருமை சிறக்க வேண்டுவன வெல்லாம் பிறங்க மங்கலஞ்செய்
திருமை யுலகுக் கொருமைமுடி கவித்தா ரெல்லா வுயிருமகிழ்
தரும நிலைமை யறிந்துபுவி தாங்குங் கழறிற் றறிவார்தாம். (கசு)

தம்பி ரானார் கோயில்வலங் கொண்டு திருமுன் றாழ்ந்தெழுந்து
கும்ப யானை மேல்கொண்டு கொற்றக் குடையுஞ் சாமரையு
நம்பு முரிமை யவர்தாங்க நலங்கொ ணகர்சூழ் வலங்கொள்வார்
மொய்ம்பி லுவரின் பொதிசுமந்தோர் வண்ணான் முன்னே வரக்கண்டார் ()

மழையிற் கரைந்தங் குவருறி மேனி வெளுத்த வடிவினால்
உழையிற் பொலிந்த திருக்கரத்தா ரடியார் வேட மென்றுணர்ந்தே
யிழையிற் சிறந்த வோடைநுதல் யானைக் கழுத்தி னின்றிழிந்து
விழைவிற் பெருகுங் காதலினால் விரைந்து சென்று கைதொழுதார். (கஅ)

சேரர் பெருமான் றொழக்கண்டு சிந்தை கலங்கி முன்வணங்கி
யாரென் றடியே னைக்கொண்ட தடியே னடிவண் ணானென்னச்
சேரர் பிரானு மடிச்சேர னடியே னென்று திருநீற்றின்
வாரு வேட நினைப்பித்தீர் வருந்தா தேகு மெனமொழிந்தார். (க௯)

மன்னர் பெருமான் றிருத்தொண்டு கண்டு மதிநீ டமைச்சரெலாஞ்
சென்னி மிசையஞ் சலிசெய்து போற்றச் சினமால் களிறேறி
மின்னு மணிப்பூண் கொடிமாட வீதி மூதூர் வலங்கொண்டு
பொன்னின் மணிமா ளிகைவாயில் புக்கார் புனைமங் கலம்பொலிய. (உ0)

யானை மிசைநின் றிழிந்தருளி யிலங்கு மணிமண் டபத்தின்கண்
மேன்மை யரியா சனத்தேறி விளங்குங் கொற்றக் குடைநிழற்கப்
பானல் விழியார் சாமரைமுன் பணிமா றப்பன் மலர்தூவி
மான வரசர் போற்றிடவீற் றிருந்தார் மன்னர் பெருமானார். (உக)

உலகு புரக்குங் கொடைவளவ ருரிமைச் செழிய ருடன்கூட
நிலவு பெருமுக் கோக்களாய் நீதி மனுநூ னெறிநடத்தி
யலகி லரசர் திறைகொணர வகத்தும் புறத்தும் பகையறுத்து
மலருந் திருநீற் றொளிவளர மறைகள் வளர மண்ணளிப்பார். (உஉ)

நீடு முரிமைப் பேரரசா னிகழும் பயனு நிறைதவமுந்
தேடும் பொருளும் பெருந்துணையுந் தில்லைத் திருச்சிற் றம்பலத்துள்
ஆடுங் கழலே யெனத்தெளிந்த வறிவா லெடுத்த திருப்பாதங்
கூடு மன்பி லர்ச்சனைமேற் கொண்டார் சேரர் குலப்பெருமாள். (உ௩)

வாசத் திருமஞ் சனம்பள்ளித் தாமஞ் சாந்த மணித்தூபந்
தேசிற் பெருகுஞ் செழுந்தீப முதலா யினவுந் திருவமுதும்
ஈசர்க் கேற்ற பரிசினா லருச்சித் தருள வெந்நாளும்
பூசைக் கமர்ந்த பெருங்கூத்தர் பொற்பார் சிலம்பி னொலியளித்தார். (௨௪)

நம்பர் தாளின் வழிபாட்டா லானா வின்புற் றமர்கின்றார்
இம்ப ருலகி லிரவலர்க்கும் வறியோ ரெவர்க்கு மீகையினாற்
செம்பொன் மழையா மெனப்பொழிந்து திருந்து வென்றி யுடன்பொருந்தி
யும்பர் போற்றத் தம்பெருமாற் குரிய வேள்வி பலசெய்தார். (௨௫)

இன்ன வண்ண மிவரொழுக வெழில்கொள் பாண்டி நன்னாட்டு
மன்னு மதுரைத் திருவால வாயி லிறைவர் வருமன்பாற்
பன்னு மிசைப்பா டலிற்பரவும் பாணனார்பத் திரனார்க்கு
நன்மை நீடு பெருஞ்செல்வ நல்க வேண்டி யருள்புரிவார். (௨௬)

இரவு கனவி லெழுந்தருளி யென்பா லன்பா லெப்பொழுதும்
பரவு சேரன் றனக்குனக்குப் பைம்பொன் காணம் பட்டாடை
விரவு கதிர்செய் நவமணிப்பூண் வேண்டிற் றெல்லாங் குறைவின்றித்
தரநம் மோலை தருகின்றோந் தாழா தேகி வருகென்று. (௨௭)

வேறு.

அதிர்கழ லுதியர் வேந்தற் கருள்செய்த பெருமை யாலே
எதிரில்செல் வத்துக் கேற்ற விருநிதி கொடுக்க வென்று
மதிமலி புரிசை யென்னும் வாசகம் வரைந்த வாய்மைக்
கதிரொளி விரிந்த தோட்டுத் திருமுகங் கொடுத்தார் காண. (௨௮)

---

சோக்கநாதசுவாமி - திருமுகப்பாசுரம்.

திருச்சிற்றம்பலம்.

மதிமலிபுரிசைமாடக்கூடற், பதிமிசைநிலவுபானிறவரிசிற
கன்னம்பயில்பொழிலாலவாயின், மன்னியசிவன்யாமொழிதருமாற்றம் [கழ்
பருவக்கொண்மூப்படியெனப்பாவலர்க், குரிமையினுரிமையினுதவியொளிதி
குருமாமதிபுரைகுலவியகுடைக்கீழ்ச், செருமாவுகைக்குஞ்சேரலன்காண்க
பண்யால்யாழ்பயில்பாணபத்திரன், தன்போலென்பாலன்பன்றன்பாற்
காண்பதுகருதிப்போந்தனன் மாண்பொருள்கொடுத்துவரவிடுப்பதுவே.

திருச்சிற்றம்பலம்.

---

சங்கப் புலவர் திருமுகந்தந் தலைமேற் கொண்டு பத்திரனார்
அங்கப் பொழுதே புறப்பட்டு மலைநா டணைய வந்தெய்தித்
துங்கப் புரிசைக் கொடுங்கோளூர் தன்னிற் புகுந்து துன்னுகொடி
மங்குற் றோடக்கு மாளிகைமுன் வந்து மன்னர்க் கறிவித்தார். (௨௯)

---

(௨௭) காணம் - காசு. (௨௮) உதியர்வேந்தற்கு - சேரமான் பெருமாணாயனாருக்கு. புரிசை மதில்.

கேட்ட பொழுதே கைத்தலமேற் கொண்டு கிளர்ந்த பேரன்பா
னாட்டம் பொழிநீர் வழிந்திழிய வெழுந்து நடுக்க மிகவெய்தி
யோட்டத் தம்பொன் மாளிகையின் புறத்தி லுருகுஞ் சிந்தையுடன்
பாட்டின் றலைமைப் பாணனார் பாதம் பலகாற் பணிகின்றார். (௯௦)

அடியேன் பொருளாத் திருமுகங்கொண் டணைந்த தென்ன வவர்தாமுங்
கொடிசேர் விடையார் திருமுகங்கைக் கொடுத்து வணங்கக் கொற்றவனார்
முடிமேற் கொண்டு கூத்தாடி மொழியுங் குழறிப் பொழிகண்ணீர்
பொடியார் மார்பிற் பரந்துவிழப் புவிமேற் பலகால் வீழ்ந்தெழுந்தார். (௯௧)

பரிவிற் போற்றித் திருமுகத்தைப் பலகாற் றொழுது படியெடுக்க
உரிய வகையா லெடுத்தோதி யும்பர் பெருமா னருள்போற்றி,
விரிபொற் சுடர்மா ளிகைபுகுந்து மேவு முரிமைச் சுற்றமெல்லாம்
பெரிது விரைவிற் கொடுபோந்து பேணு மமைச்சர்க் கருள்செய்வார். (௯௨)

நங்கள் குலமா ளிகையிதனு ணலத்தின் மிக்க நிதிக்குவையாய்ப்
பொங்கி நிறைந்த பலவேறு வகையிற் பொலிந்த பண்டாரம்
அங்க ணொன்று மொழியாமை யடையக் கொண்டு புறப்பட்டுத்
தங்கும் பொதிசெய் தாளின்மேற் சுமைய வேற்றிக் கொணருமென. (௯௩)

சேரர் பெருமா னருள்செய்யத் திருந்து மதிநூன் மந்திரிகள்
சாரு மணிமா ளிகையுள்ளாற் றனங்க ளெல்லா நிறைந்தபெருஞ்
சீர்கொ ணிதிய மெண்ணிறந்த வெல்லாம் பொதிசெய் தாளின்மேற்
பாரி னெருங்க மிசையேற்றிக் கொணர்ந்துவந்து பணிந்தார்கள் (௯௪)

பரந்த நிதியின் பரப்பெல்லாம் பாண னார்பத் திரனார்க்கு
நிரந்த தனங்கள் வெவ்வேறு நிரைத்துக் காட்டி மற்றிவையும்
உரந்தங் கியவெங் கரிபரிகண் முதலா வுயிருள் ளனதனமும்
புரந்த வரசுங் கொள்ளுமென மொழிந்தார் பொறையர் புரவலனார். (௯௫)

பாண னார்பத் திரனாரும் பைம்பொன் மௌலிச் சேரலனார்
காணக் கொடுத்த விவையெல்லாங் கண்டு மகிழ்வுற் றதிசயித்துப்
பேண வெனக்கு வேண்டுவன வடியேன் கொள்ளப் பிஞ்ஞகனா
ராணை யரசு மரசுறுப்புங் கைக்கொண் டருளு மெனவிறைஞ்ச. (௯௬)

இறைவ ராணை மறுப்பதனுக் கஞ்சி யிசைந்தா ரிகல்வேந்தர்
நிறையு நிதியின் பரப்பெல்லா நிலத்தை யெளிய வுடன்கொண்டே
யுறைமும் மதத்துக் களிறுபரி யுள்ளிட் டனவேண் டுவகொண்டோர்
பிறைவெண் கோட்டுக் களிறுமேல் கொண்டு போந்தார் பெரும்பாணர். ( )

பண்பு பெருகும் பெருமாளும் பாண னார்பத் திரனார்பின்
கண்கள் பொழிந்த காதனீர் வழியக் கையாற் றொழுதணைய
நண்பு சிறக்கு மவர்தம்மை நகரின் புறத்து விடைகொண்டு
திண்பொற் புரிசைத் திருமதுரை புக்கார் திருந்து மிசைப்பாணர். (௯௮)

வான வரம்பர் குலம்பெருக்கு மன்ன ரொரு மறித்தேகிக்
கூன லிளவெண் பிறைக்கண்ணி முடியா ரடிமை கொண்டருளும்
பான்மை யருளின் பெருமையினை நினைந்து பலகாற் பணிந்தேத்தி
மேன்மை விளங்கு மாளிகைமண் டபத்து ளரசு வீற்றிருந்தார். (௩௯)

அளவில் பெருமை யகிலயோ னிகளுங் கழறிற் றறிந்தவற்றின்
உளமன் னியமெய் யுறுதுயர மொன்று மொழியா வகையகற்றிக்
களவு கொலைகண் முதலான கடிந்து கழறிற் றறிவார்தாம்
வளவர் பெருமா னுடன்செழியர் மகிழுங் கலப்பில் வைகுநாள். (௪0)

வானக் கங்கை நதிபொதிந்த மல்கு சடையார் வழிபாட்டுத்
தூநற் சிறப்பி னர்ச்சனையாந் தொண்டு புரிவார் தமக்கொருநாட்
டேனக் கலர்ந்த கொன்றையினா ராடற் சிலம்பி னொலிமுன்போன்
மானப் பூசை முடிவின்கட் கேளா தொழிய மதிமயங்கி (௪௧)

பூசை கடிது முடித்தடியே னென்னோ பிழைத்த தெனப்பொருமி
ஆசை யுடம்பான் மற்றினிவே றடையு மின்ப மியாதென்று
தேசின் விளங்கு முடைவாளை யுருவித் திருமார் பினிலூட்ட
ஈசர் விரைந்து திருச்சிலம்பி னோசை மிகவு மிசைப்பித்தார். (௪௨)

ஆடற் சிலம்பி னொலிகேளா வுடைவா ளகற்றி யங்கைமலர்
கூடத் தலைமேற் குவித்தருளிக் கொண்டு விழுந்து தொழுதெழுந்து
நீடப் பரவி மொழிகின்றார் நெடுமால் பிரம னருமறைமுன்
றேடற் கரியாய் திருவருண்முன் செய்யா தொழிந்த தென்னென்றார். ( )

என்ற பொழுதி லிறைவர்தா மெதிர்நின் றருளா தெழுமொலியான்
மன்றி னிடைநங் கூத்தாடல் வந்து வணங்கி வன்றொண்டன்
ஒன்று முணர்வா லமைப்போற்றி யுரைசேர் பதிகம் பாடுதலா
னின்று கேட்டு வரத்தாழ்ந்தோ மென்றா ரவரை நினைப்பிப்பார் (௪௪)

என்னே யடியார்க் கிவரருளுங் கருணை யிருந்த வாறென்று
பொன்னேர் சடையார் திருநடஞ்செய் புலியூர் பொன்னம் பலமிறைஞ்சித்
தன்னே ரில்லா வன்றொண்டர் தமையுங் காண்ப னெனவிரும்பி
நன்னீர் நாட்டுச் செலநயந்தார் நாமச் சேரர் கோமானார் (௪௫)

பொன்னார் மௌலிச் சேரலனார் போற்று மமைச்சர்க் கஃதியம்பி
நன்னாட் கொண்டு பெரும்பயண மெழுக வென்று நலஞ்சாற்ற
மின்னா ரயில்வேற் குலமறவர் வென்றி நிலவுஞ் சிலைவீரர்
அந்நாட் டுள்ளா ரடையநிரந் தணைந்தார் வஞ்சி யகநகர்வாய். (௪௬)

இட்ட நன்னா ளோரையினி லிறைவர் திருவஞ் சைக்களத்து
மட்டு விரியுங் கொன்றையினார் தம்மை வலங்கொண் டிறைஞ்சிப்போய்ப்
பட்ட நுதல்வெங் களியானைப் பிடர்மேற் கொண்டு பனிமதியந்
தொட்ட கொடிமா ளிகைமூதூர் கடந்தா ருதியர் தோன்றலார். (௪௭)

யானை யணிகள் பரந்துவழி யெங்கு நிரந்து செல்லுவன
மான மலைநாட் டினின்மலிந்த மலைக ளுடன்போ துவபோன்ற
சேனை வீரர் புடைபரந்து செல்வா ரங்கண் மலைசூழ்ந்த
கான மடைய வுடன்படர்வ போலுங் காட்சி மேவினதால். (௪௮)

புரவித் திரள்க ளாயோகப் பொலிவி னசைவிற் போதுவன
அரவச் சேனைக் கடற்றரங்க மடுத்து மேன்மே லடர்வனபோல்
விரவிப் பரந்து சென்றனவான் மிசையு மவனு மொன்றாக
நிரவிப் பரந்த நெடுஞ்சேனை நேமி நெளியச் சென்றனவால். (௪௯)

அந்நாட் டெல்லை கடந்தணைய வமைச்சர்க் கெல்லாம் விடையருளி
மின்னார் மணிப்பூண் மன்னவனா வேண்டு வாரை யுடன்கொண்டு
கொன்னா ரயில்வேன் மறவர்பயில் கொங்கர் நாடு கடந்தருளிப்
பொன்னாட் டவரு மணைந்தாடும் பொன்னி நீர்நாட் டிடைப்போவார். (௫௦)

சென்ற திசையிற் சிவனடியார் சிறப்பி னோடு மெதிர்கொள்ளக்
குன்றுங் கானு முடைக்குறும்ப ரிடங்க ளோடுங் குறைவறுப்பத்
துன்று முரம்புங் கான்யாறுந் துறுகற் சுரமும் பலகடந்து
வென்றி விடையா ரிடம்பலவு மேவிப் பணிந்து செல்கின்றார். (௫௧)

பொருவில் பொன்னித் திருநதியின் கரைவந் தெய்திப் புனிதநீர்
மருவுந் தீர்த்த மகிழ்ந்தாடி மருங்கு வடபாற் கரையேறித்
திருவிற் பொலியுந் திருப்புலியூர்ச் செம்பொன் மன்று ணடம்போற்ற
உருகு மனத்தி னுடன்சென்றா ரொழியா வன்பின் வழிவந்தார். (௫௨)

வந்து தில்லை மூதூரி னெல்லை வணங்கி மகிழ்ச்சியினால்
அந்த ணாளர் தொண்டர்குழா மணைந்த போதி னெதிர்வணங்கிச்
சந்த விரைப்பூந் திருவீதி யிறைஞ்சித் தலைமேற் கரமுகிழ்ப்பச்
சிந்தை மகிழ வெழுநிலைக்கோ புரத்தை யணைந்தார் சேரலனார். (௫௩)

நிலவும் பெருமை யெழுநிலைக்கோ புரத்தின் முன்னர் நிலத்திறைஞ்சி
மலருங் கண்ணீர்த் துளிததும்பப் புகுந்து மணிமா ளிகைவலங்கொண்
டுலகு விளக்குந் திருப்பேரம் பலத்தை வணங்கி யுள்ளணைந்தார்
அலகி லண்ட மளித்தவர்நின் றாடுந் திருச்சிற் றம்பலமுன். (௫௪)

அளவி லின்பப் பெருங்கூத்த ராட வெடுத்த கழல்காட்ட
உளமும் புலனு மொருவழிச்சென் றுருகப் போற்றி யுய்கின்றார்
களனில் விடம்வைத் துலகளித்த வமுதன் மன்றிற் கழல்வைத்து
வளருந் திருக்கூத் தமுதுலகுக் களித்த கருணை வழுத்தினார். (௫௫)

ஆரா வாசை யானந்தக் கடலுட் டிளைத்தே யமர்ந்தருளாற்
சீரார் வண்ணப் பொன்வண்ணத் திருவந் தாதி திருப்படிக்கீழ்ப்
பாரா தரிக்க வெடுத்தேத்திப் பணிந்தார் பருவ மழைபொழியுங்
காரா னிகர்க்க வரியகொடைக் கையார் கழறிற் றறிவார்தாம். (௫௬)

## சேரமான்பெருமாள அருளிச்செய்த - பொன்வண்ணத்தந்தாதி.

திருச்சிற்றம்பலம்.

பொன்வண்ணமெவ்வண்ணமவ்வண்ணமேனிபொலிந்திலங்கு
மின்வண்ணமெவ்வண்ணமவ்வண்ணம்வீழ்சடைவெள்ளிக்குன்றந்
தனவண்ணமெவ்வண்ணமவ்வண்ணமால்விடைதன்னைக்கண்ட
எனவண்ணமெவ்வண்ணமவ்வண்ணமாகியவீசனுக்கே

மாயனன்மாமணிகண்டன்வளாசடையாறகடிமை
யாயினதொண்டர்துறக்கம்பெறுவதுசொல்லுடைத்தே
காய்சினவானைவளருங்கனகமலையருகே
போயினகாககையுமன்றேபடைத்ததுபொன்வண்ணமே.

திருச்சிற்றம்பலம்

---

தம்பி ரானுக் கெதிர்நின்று தமிழ்ச்சொன் மாலை கேட்பிக்க
உம்பா வாழ நடமாடு மொருவ ரதற்குப் பரிசிலெனச
செம்பொன் மணிமன் றினிலெடுத்த செய்ய பாதத் திருசசிலம்பின்
இம்பர் நீட வெழுந்தவொலி தாமு மெதிரே கேட்பித்தார். (௫௭)

ஆடற் சிலம்பி னொலிகேட்பா ரளவி லின்ப வானந்தங்
கூடப் பெற்ற பெருமபேற்றின் கொள்கை வாயப்பக் கும்பிடுவார்
நீடப் பணியுங் காலமெலா நின்று தொழுது புறம்போந்து
மாடத் திருமா ளிகைவீதி வணங்கிப் புறதது வைகினார். (௫௮)

பரவுந் தில்லை வட்டத்துப் பயில்வார் பைம்பொ னம்பலத்துள்
அரவும புனலுஞ் சடையாட வாடு வார்கூத் தாராமை
விரவுங் காதன் மிககோங்க வேதம் படியுந் திருப்படிககீழ்
இரவும் பகலும் பணிந்தேத்தி யினபஞ் சிறககு மந்நாளில. (௫௯)

ஆடும் பெருமான் பாடல்கேட் டருளித் தாழ்த்த படிதமக்குக்
கூடும் பரிசான் முன்பருளிச் செய்த நாவ லூர்க்கோவை
நீடும் பெருங்கா தலிற்காண நிறைந்த நினைவு நிரம்பமா
றேடும் பாத ரருளினாற் றிருவா ரூர்மேற் செலவெழுந்தார். (௬௦)

அறிவி னெல்லை யாயதிருத் தில்லை யெல்லை யமர்ந்திறைஞ்சிப்
பிறிவி லாத திருவடியைப் பெருகு முள்ளத் தினிற்பெற்றுச்
செறியு ஞான போனகாவந் தருளும் புகலி சென்றிறைஞ்சி
மறிசேர் கரத்தார் கோயில்பல வணங்கி மகிழ்ந்து வழிக்கொள்வார். (௬௧)

வழியிற் குழியிற் செழுவயலின் மதகின் மலர்வா விகளின்மடுச்
சுழியிற் றரளந் திரைசொரியுந் துறைநீர்ப் பொன்னி கடந்தேறி
விழியிற் றிகழுந் திருநுதலார் விரும்பு மிடங்க ளிறைஞ்சியுகக்
கழிவிற் பெருவெள் ளமுங்கொள்ளாக் கழனி யாரூர் கண்ணுற்றார். (௬௨)

நம்பி தாமு மன்னுட்போய்நாகைக் காரோ ணம்பாடி
அம்பொன் மணிப்பூ ணவமணிக ளாடை சாந்த மடற்பரிமா
பைம்பொற் சுரிகை முதலான பெற்று மற்றும பலபதியிற்
றம்பி ரானைப் பணிந்தேத்தித் திருவாரூரிற் சார்ந்திருந்தார். (௬௩)

வந்து சேரர் பெருமானார் மன்னுந் திருவா ரூரெய்த
அந்த ணாளர் பெருமானு மரசர் பெருமான் வரப்பெற்றுச்
சிந்தை மகிழ வெதிர்கொண்டு சென்று கிடைத்தார் சேரலனார்
சந்த விரைத்தார் வன்றொண்டர் முன்பு விருப்பி னுடன்றாழ்ந்தார். (௬௪)

முன்பு பணிந்த பெருமானைத் தாமும் பணிந்து முகந்தெடுத்தே
அன்பு பெருகத் தழுவவிரைத் தவரு மார்வத் தொடுதழுவ
இன்ப வெள்ளத் திடைநீந்தி யேற மாட்டா தலைவார்போல்
என்பு முருக வுயிரொன்றி யுடம்பு மொன்று மெனவிசைந்தார். (௬௫)

ஆன நிலைமை கண்டதிருத் தொண்ட ரளவின் மகிழ்வெய்த
மானச் சேரர் பெருமானார் தாமும் வன்றொண் டருமகலந்த
பான்மை நண்பாற் சேரமான் றோழ ரென்று பார்பரவு
மேன்மை நாம முனைப்பாடி வேந்தர்க் காகி விளங்கியதால். (௬௬)

ஒருவ ரொருவ ரிற்கலந்த வுணர்வா லின்ப மொழியுரைத்து
மருவ வினியார் பாற்செய்வ தென்னோ வென்னு மகிழ்ச்சியினாற்
பருவ மழைச்செங் கைப்பற்றிக் கொண்டு பரமர் தாள்பணியத்
தெருவு நீங்கிக் கோயிலினுட் புகுந்தார் சேர மான்றோழர். (௬௭)

சென்று தேவா சிரியனைமுன் னிறைஞ்சித் திருமா ளிகைவலங்கொண்
டொன்று முள்ளந் தொடும்புகுவா ருடைய நம்பி முன்னாக
நின்று தொழுது கண்ணருவி வீழ நிலத்தின் மிசைவீழ்ந்தே
யென்று மினிய தமபெருமான் பாத மிறைஞ்சி யேத்தினார். (௬௮)

தேவர் முனிவர் வந்திறைஞ்சுந் தெய்வப் பெருமாள் கழல்வணங்கி
மூவர் தமக்கு முதலாகு மவரைத திருமும் மணிக்கோவை
காவ லூரர் தம்முன்பு நன்மை விளங்கக் கேட்பித்தார்
தாவில் பெருமைச் சேரலனார் தம்பி ரானார் தாங்கொண்டார். (௬௯)

அங்க ணருள்பெற் றெழுவாரைக் கொண்டு புறம்போந் தாரூரர்
நங்கை பரவை யார்திருமா ளிகையி னண்ண நன்னுதலார்
பொங்கு விளக்கு நிறைகுடமும் பூமா லைகளும் புகையகிலும்
எங்கு மடவா ரெடுத்தேந்த வணைந்து தாமு மெதிர்கொண்டார். (௭௦)

சோதி மணிமா ளிகையின்கட் சுடரும் பசும்பொற் காலமளி
மீது பெருமா டமையிருத்தி நம்பி மேவி யுடனிருப்பக்
கோதில் குணத்துப் பரவையார் கொழுந னார்க்குந் தோழர்க்கு
நீதி வழுவா வொழுக்கத்து நிறைபூ சனைகண் முறையளித்தார். (௭௧)

தாண்டும் புரவிச் சேரர்குலப் பெருமா டமக்குத் திருவமுது
தூண்டு சோதி விளக்கனையா ரமைக்கத் துணைவர் சொல்லுதலும்
வேண்டும் பரிசு வெவ்வேறு விதத்துக் கறியும் போனகமும்
ஈண்டச் சமைப்பித் துடன்வந்தார்க் கெல்லா மியல்பின் விருந்தமைத்தார்.

அரசர்க் கமைத்த சிறப்பினுமே லடியார்க் கேற்கும் படியாக
விரவிப் பெருகு மன்பினுடன் விரும்பு மமுது சமைத்ததற்பின்
புரசைக் களிற்றுச் சேரலனார் புடைசூழ்ந் தவரோ டமுதுசெயப்
பரவை பிறந்த திருவனைய பரவை யார்வந் தறிவித்தார் (எ௩)

சேரர் பெருமா னெழுந்தருளி யமுது செய்யச் ~~செய்தவத்தால்~~
தாரின் மலிபூங் குழன்மடவாய் தாழா தமுது செய்வியெனப்
பாரின் மலிசீர் வன்றொண்ட ரருளிச் செய்யப் பரிகலங்கள்
ஏரின் விளங்கத் திருத்திக்கா லிரண்டிற் படியா வேற்றுதலும். (எ௪)

ஆண்ட நம்பி பெருமானை யுடனே யமுது செய்தருள
வேண்டு மென்ன வாங்கவரும விரைந்து வணங்கி வெருவுறலும்
நீண்ட திடக்கை பிடித்தருளி மீண்டு நேரே குறைகொள்ள
ஈண்ட வமுது செய்வதனுக் கிசைந்தார் பொறையாக் கிறையவனார். (எ௫)

ஒக்க வமுது செய்தருள வுயர்ந்த தவத்துப் பரவையார்
மிக்க விருப்பி லமுதுசெய்வித் தருளி மேவும் பரிசனங்கள்
தக்க வகையா லறுசுவையுந் தாம்வேண் டியவா றினிதருந்தத்
தொக்க மகிழ்ச்சி களிசிறப்பத் தூய விருந்தின் கடன்முடித்தார். (எ௬)

பனிநீர் விரவு சந்தனத்தின் பசுங்கர்ப் பூர விரைக்கலவை
வனிதை யவர்கள் சமைத்தெடுப்பக் கொடுத்து மகிழ்மான் மதச்சாந்தும்
புனித நறும்பூ மாலைகளும் போற்றிக் கொடுத்துப் பொற்கொடியார்
இனிய பஞ்ச வாசமுட னடைக்கா யமுது மேந்தினார். (எஎ)

ஆய சிறப்பிற் பூசனைக ளளித்த வெல்லா மமர்ந்தருளித்
தூய நீறு தங்கடிரு முடியில் வாங்கித் தொழுதணிந்து
மேய விருப்பி னுடனிருப்பக் கழறிற் றறிவார் மெய்த்தொண்டின்
சேய நீர்மை யடைந்தாராய் நம்பி செம்பொற் கழல்பணிந்தார். (எ௮)

மலைநாட் டரசர் பெருமானார் வணங்க வணங்கி யெதிர்தழுவிக்
கலைநாட் பெருகு மதிமுகத்துப் பரவை யார்தங் கணவனார்
சிலைநாட் டியவெல் கொடியானைச் சேரர் தந்தா ரெனக்கங்கை
யலைநாட் கொன்றை முடிச்சடையா ரருளே போற்றி யுடனமர்ந்தார். (எ௯)

செல்வத் திருவா ரூர்மேவுஞ் செம்பொற் புற்றி லினிதமர்ந்த
வில்வெற் புடையார் கழல்வணங்கி வீதி விடங்கப் பெருமானை

(எஎ) பஞ்சவாசம - "தக்கோல மேலந் தகைசா லிலவங்கம் - கர்ப்பூரஞ் சாதி யோடைந்து" என்பதனாறிக.

மல்லற் பவனி சேவித்து வாழ்ந்து நாளு மனமகிழ்ந்து
சொலவித் தகர்தா மிருவர்களுந் தொடர்ந்த காத லுடன்சிறந்தார். (௮௦)

இவ்வா றொழுகு நாளின்க ணிலங்கு மணிப்பூண் வன்றொண்டர்
மைவாழ் களத்து மறையவனார் மருவு மிடங்கள் பலவணங்கிச்
செய்வார் கன்னித் தமிழ்நாட்டுத் திருமா மதுரை முதலான
மொய்வார் சடையார் மூதூர்க ளிறைஞ்ச முறைமை யானினைந்தார். (௮௧)

சேரர் பிரானு மாரூரர் தம்மைப் பிரியாச் சிறப்பாலும்
ஆர்வம் பெருகத் தமக்கன்று மதுரை யால வாயமர்ந்த
வீர ரளித்த திருமுகத்தால் விரும்பு மன்பின் வண்பெருகற்குச்
சார வெழுந்த குறிப்பாலுந் தாமு முடனே செலத்துணிந்தார் (௮௨)

இருவர் திருவுள் ளமுமிசைந்த பொழுதி லெழுந்து திருவாரூர்
ஒருவர் மலர்த்தாள் புக்கிறைஞ்சி யுடன்பாட் டருளாற் போந்தருளி
மருவு முரிமைப் பெருஞ்சுற்றம் வரம்பில் பணிகள் வாகனங்கள்
பொருவில் பண்டா ரங்கொண்டு போது வார்க ளுடன்போத (௮௩)

சேவித் தணையும் பரிசனங்கள் சூழ்ந்த திருவா ரூரிறைஞ்சிக்
காவிற் பயிலும் புறம்பணையைக் கடந்து போந்து கீழ்வேளூர்
மேவிப் பரமர் கழல்வணங்கிப் போந்து வேலைக் கழிக்கானற்
பூவிற் றிகழும் பொழினாகை புகுந்து காரோ ணம்பணிந்தார் (௮௪)

திருக்கா ரோணத் திருப்பீரே யென்று மன்பர் சிந்தைபுரி
யுருக்கார் வசனத் தமிழ்மாலை சாத்திச் சிலநா ளுறைந்தேகிப்
பெருக்கா றலவு சடைமுடியா ரிடங்கள் பலவும் பணிந்தெய்தி
யருட்கா ரணத்தந் திருமறைக்கா டணைந்தார் சேர ராரூரர் (௮௫)

---

**திருநாகைக்காரோணம் — பண் - கொல்லிக்கௌவாணம்.**

திருச்சிற்றம்பலம்

பத்தூர்புக்கிரந்துண்டுபலபதிகம்பாடிப்பாவையரைக்கிறிபேசிப்படிறு
டித்திரிவீர், செத்தார்தமெலும்பணிந்துசேவேறித்திரிவீர்செல்வத்தைமறை
த்துவைத்தீரெனக்கொருநாளிரங்கீர், முத்தாரமிலங்கிமிளிர்மணிவயிரக்கோ
வையவைபூணத்தந்தருளிமெய்க்கினிதாநாறுங், கத்தூரிகமழ்சாந்துபணித்த
ருளவேண்டுங்கடனாகைக்காரோணமேவியிருந்தீரே

பண்மயத்தமொழிப்பரவைசங்கிலிக்குமெனக்கும்பற்றாயபெருமானே
மற்றாரையுடையேன், உண்மயத்தவுமக்கடியேன்குறைதீர்க்கவேண்டுமொளி
முத்தம்பூணாரமொண்பட்டும்பூவுங், கண்மயத்தகத்தூரிகமழ்சாந்தும்வேண்
டுங்கடனாகைக்காரோணமேவியிருந்தீரென், றண்மயத்தாலணிநாவலாரூரன்
சொன்னவருந்தமிழ்களிவைவல்லாரமருலகாள்பவரே.

திருச்சிற்றம்பலம்.

---

முந்நீர் வலங்கொண் மறைக்காட்டு முதல்வர் கோயில் சென்றிறைஞ்சிச்
செந்நீர் வாய்மைத் திருநாவுக் கரசும் புகலிச் சிவக்கன்றும்
அந்நேர் திறக்க வடைக்கவெனப் பாடுந் திருவா யிலையணைந்து
நன்னீர் பொழியும் விழியினராய் நாயன் மாரை நினைந்திறைஞ்சி. (௮௬)

நிறைந்த மறைக ளர்ச்சித்த நீடு மறைக்காட் டருமணியை
யிறைஞ்சி வீழ்ந்து பணிந்தெழுந்து போற்றி யாழைப் பழித்தென்னும்
அறைந்த பதிகத் தமிழ்மாலை நம்பி சாத்த வருட்சேரர்
சிறந்த வந்தா தியிற்சிறப்பித் தனவே யோதித் திளைத்தெழுந்தார். (௮௭)

திருமறைக்காடு - பண் - காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

யாழைப்பழித்தன்னமொழிமங்கையொருபங்கன்
பேழைச்சடைமுடிமேற்பிறைவைத்தானிடம்பேணிற்
றாழைப்பொழிலூடேசென்றுபூழைத்தலைநுழைந்து
வாழைக்கனிகூழைக்குரங்குண்ணுமறைக்காடே.

பாரூர்பலபுடைசூழ்வளவயலூவலர்வேந்தன்
வாரூர்வனமுலையாளுமைபங்கன்மறைக்காட்டை
யாரூரனதமிழ்மாலைகள்பாடும்மடித்தொண்டா
நீரூர்தருநிலனோடுயர்புகழாகுவர்தானே.

திருச்சிற்றம்பலம்.

எழுந்து பணிந்து புறத்தெய்தி யிருவர் பெருந்தொண் டருஞ்சிலநாட்
செழுந்தண் பழனப் பதியதனு ளமர்ந்து தென்பாற் றிரைக்கடனஞ்
சமுந்து மிடற்று ரகத்தியான் பள்ளி யிறைஞ்சி யவிரமதியக்
கொழுந்து வளர்செஞ் சடைக்குழகர் கோடிக் கோயில் குறுகினார் (௮௮)

கோடிக் குழகர் கோயிலயற் குடிக ளொன்றும் புறத்தெங்கு
நாடிக் காணா துள்புக்கு நம்பர் பாதந் தொழுதுள்ளம்
வாடிக் கடிதாய்க் கடற்காற்றென் றெடுத்து மலர்க்கண் ணீர்வாரப்
பாடிக் காடு காள்புணர்ந்த பரிசும் பதிகத் திடைவைத்தார். (௮௯)

திருக்கோடிக்குழகர் - பண் - கொல்லி.

திருச்சிற்றம்பலம்.

கடிதாய்க்கடற்காற்றுவந்தெற்றக்கரைமேற்
குடிதானயலேயிருந்தாற்குற்றமாமோ
கொடியேன்கண்கள்கண்டனகோடிக்குழகீர்
அடிகேளுமக்கார்துணையாகவிருந்தீரே.

பாரூர்மலிசூழ்மறைக்காடதன்றென்பால்
வாரார்பொழில்சூழ்தருகோடிக்குழகை

யாரூரனுரைத்தனபத்திவைவல்லார்
சீரார்சிவலோகத்திருப்பவர்தாமே.

திருச்சிற்றம்பலம்.

---

அங்கு வைகிப் பணிந்தருளாற் போவா ரகன்சோ ணாட்டரனார்
தங்கு மிடங்கள் வணங்கிப்போய்ப் பாண்டி நாடு தனைச்சார்ந்து
திஙகண் முடியார் திருப்புத்தூ ரிறைஞ்சிப் போந்து சேண்விளங்கு
மஙகு றவழு மணிமாட மதுரை மூதூர் வந்தணைந்தார். (௬௦)

வேறு.

சேரமான் றோழருமச் சேரர்பிரா னும்பணிப்பூண்
ஆரமார் பரைமதுரை யாலவா யினில்வணங்க
வாரமா வந்தணைய வழுதியார் மனக்காதல்
கூரமா நகர்கோடித் தெதிர்கொண்டு கொடுபுக்கார். (௬௧)

தென்னவர்கோன் மகளாரைத் திருவேட்டு முன்னரே
தொன்மதுரை நகரின்க ணினிதிருந்த சோழனார்
அன்னவர்க ளுடன்கூட வணையவவ ருங்கூடி
மன்னுதிரு வாலவாய் மணிக்கோயில் வந்தணைந்தார். (௬௨)

திருவால வாயமர்ந்த செஞ்சடையார் கோயில்வலம்
வருவார்முன் வீழ்ந்திறைஞ்சி வன்றொண்டர் வழித்தொண்டு
தருவாரைப் போற்றிசைத்துத தாழ்ந்தெழுந்து வாழ்ந்துதமிழ்ப்
பெருவாய்மை மலர்புனைந்து பெருமகிழ்ச்சி பிறங்கினார். (௬௩)

படியேறு புகழ்ச்சேரர் பெருமானும் பார்மிசைவீழ்ந்
தடியேனைப் பொருளாக வளித்ததிரு முகக்கருணை
முடிவேதென் றறிநதிலே னெனமொழிக டடுமாறக்
கடியேறு கொன்றையார் முன்பரவிக் களிகூர்ந்தார். (௬௪)

செம்பியனா ருடன்செழியர் தாம்பணிந்து சேரருட
னம்பியுமுன் புறத்தணைய நண்ணியபே ருவகையால்
உமபர்பிரான் கோயிலினின் றுடன்கொடுபோ யிருவர்க்கும்
பைம்பொன்மணி மாளிகையில் குறைவறுத்தார் பஞ்சவனார். (௬௫)

உளமகிழக் கும்பிட்டங் குறையுநா ளுதியருடன்
கிளரொளிப்பூண் வன்றொண்டர் தாமிருந்த விடங்கெழுமி
வளவனார் மீனவனார் வளம்பெருக மற்றவரோ
டளவளா வியவிருப்பா னமர்ந்துகலந் தினிதிருந்தார். (௬௬)

அந்நாளின் மதுரைநகர் மருங்கரனா ரமர்பதிகள்
பொன்னார மணிமார்பிற் புரவலர்மூ வரும்போதச்

செந்நாவின் முனைப்பாடித் திருநாடர் சென்றிறைஞ்சிச்
சொன்மாலை களுஞ்சாத்தித் தொழுத்திருப்பூ வணத்தணைந்தார். (கஎ)

நீடுதிருப் பூவணத்துக் கணித்தாக நேர்செல்ல
மாடுவருந் திருத்தொண்டர் மன்னியவப் பதிகாட்டத்
தேடுமறைக் கரியாரைத் திருவுடையா ரென்றெடுத்துப்
பாடிசையிற் பூவணமீ தோவென்று பணிந்தணைவார். (கஅ)

---

திருப்பூவணம் - பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்

திருவுடையார்திருமாலயனாலும, உருவுடையாருமையாளையோர்பாகம்
பரிவுடையாரடைவார்வினைதீர்க்கும், புரிவுடையாருறைபூவணமீதோ.

சீரின்மிகப்பொலியுந்திருப்பூவண, மாரவிருப்பிடமாவுறைவானை
யூரனுரைத்தசொன்மாலைகள்பத்திவை, பாரிலுரைப்பவர்பாவமறுப்பரே.

திருச்சிற்றம்பலம்.

---

சென்றுதிருப் பூவணத்துத் தேவர்பிரான் மகிழ்கோயின்
முன்றிலவலங் கொண்டிறைவர் முன்வீழ்ந்து பணிந்தெழுந்து
நின்றுபர விப்பாடி நேர்நீங்கி யுடன்பணிந்த
வென்றிமுடி வேந்தருடன் போந்தங்கண் மேவினார். (கக)

அப்பதியி லமர்ந்திறைஞ்சிச் சிலநாளி லாரூரர்
முப்பெருவேந் தாகளொடு முதன்மதுரை நகரெய்தி
மெய்ப்படரிவிற் றிருவால வாயுடையார் விரைமலர்த்தாள்
எப்பொழுதும் பணிந்தேத்தி யினபுற்றங் கமர்கின்றார். (௪௦௦)

செஞ்சடையார் திருவாப்ப னூர்திருவே டகமுதலா
நஞ்சணியுங் கண்டரவர் நயந்தபதி நண்ணியே
யெஞ்சவிலாக் காதலினா லினிதிறைஞ்சி மீண்டணைந்து
மஞ்சணையு மதின்மதுரை மாநகரின் மகிழ்ந்திருந்தார். (௪௦க)

பரமர்திருப் பரங்குன்றிற் சென்றுபார்த் திபரோடும்
புரமெரித்தார் கோயில்வலங் கொண்டுபுகுந் துள்ளிறைஞ்சிச்
சிரமலிமா லைச்சடையார் திருவடிக்கீ ழாட்செய்யும்
அருமைநினைந் தஞ்சுதுமென் றாரூரர் பாடுவார். (௪௦௨)

கோத்திட்டை யெனவெடுத்துக் கோதிறிருப் பதிகவிசை
மூர்த்தியார் தமைவணங்கி முக்கோக்க டமமுனபே
யேத்தியவண் டமிழ்மாலை யின்னிசைபா டிப்பரவிச்
சாத்தினார் சங்கரனார் தங்குதிருப் பரங்குன்றில். (௪௦௩)

## திருக்கோத்திட்டையுங் கோவலும் - பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

*கோத்திட்டையுங்கோவலுங்கோயில்கொண்டு உம்மைக்கொண்டுழல்கின்ற தோர்கொல்லைச்சில்லைச், செதிட்டுக்குத்தித்தெருவேதிரியுஞ்சில்பூதமுநீ ருந்திசைதிசையன, சோத்திட்டுவிண்ணோர்பலருந்தொழநும் மரைக்கோ வணத்தோடொருதோல்புடைசூழ்ந், தார்த்திட்டதும்பாம்புகைக்கொண்ட தும்பாம்படிகேளுமக்காட்செயவஞ்சுதுமே.*

*அடிகேளுமக்காட்செயவஞ்சுதுமென்றமரர்பெருமானையாரூரனஞ்சி [னையும*
*முடியாலுலகாண்டமூவேந்தர்முன்னேமொழிந்தாறுமோர்நான்குமோரொன்றி*
*படியாவிவைகற்றுவல்லவடியார்பரங்குன்றமேயபரமனடிக்கே*
*குடியாகிவானோர்க்குமோர்கோவுமாகிக்குலவேந்தராய்விண்முழுதாள்பவரே*

திருச்சிற்றம்பலம்.

---

இறைவர்திருத் தொண்டுபுரி யருமையினை யிருநிலத்து
முறைபுரியு முதல்வேந்தர் மூவர்களுங் கேட்டஞ்சி
மறைமுந்நூன் மணிமார்பின் வன்றொண்டர் தமைப்பணிந்தார்
நிறைதவத்தோ ரப்பாலு நிருத்தர்பதி தொழநினைந்தார். (௧௦௪)

அந்நாட்டுத் திருப்பதிகள் பலவுமணைந் திறைஞ்சமலை
நன்னாட்டு வேந்தருட னம்பிதா மெழுந்தருள
மின்னாட்டு மபனமணிப்பூண் வேந்தரிரு வருமீள்வார்
தென்னாட்டு வேண்டுவன செய்தமைப்பார் தமைவிடுத்தார். (௧௦௫)

இருபெருவேந் தருமியல்பின் மீண்டதற்பி னெழுந்தருளும்
பொருவருஞ்சீர் வன்றொண்டர் புகழ்ச்சேர ருடன்புனிதர்
மருவியதா னம்பலவும் பணிந்துபோய் மலைச்சாரற்
குருமணிகள் வெயிலெறிக்குங் குற்றாலஞ் சென்றடைந்தார். (௧௦௬)

குற்றாலத் தினிதமர்ந்த கூத்தர்குரை கழல்வணங்கிச்
சொற்றும மலர்புனைந்து குறும்பலாத் தொழுதிப்பான்
முற்றவெண் மதிமுடியார் பதிபணிந்து மூவெயில்கள்
செற்றாமன் னியசெல்வத் திருநெல்வே லியையணைந்தார். (௧௦௭)

நெல்வேலி நீற்றழகர் தமைப்பணிந்து பாடிநிகழ்
பல்வேறு பதிபிறவும் பணிந்தன்பால் வந்தணைந்தார்
வில்வேட ராய்வென்றி விசயனெதிர் பன்றிப்பின்
செல்வேத முதல்வரமர் திருவிரா மேச்சரத்து. (௧௦௮)

மன்னுமிரா மேச்சரத்து மாமணியை முன்வணங்கிப்
பன்னுதமிழ்த் தொடைசாத்திப் பயில்கின்றார் பாம்பணிந்த
சென்னியரா மாந்தோட்டத்துத் திருக்கேதீச் சரஞ்சார்ந்த
சொன்மலர்மா லைகள்சாத்தித் தூரத்தே தொழுதமர்ந்தார். (௧௦௯)

### திருக்கேதீச்சரம் - பண் - நட்டபாடை.

திருச்சிற்றம்பலம்.

நத்தார்படைஞானன்பசுவேறிநனைகவிழ்வாய
மததம்மதயானையுரிபோர்த்தமணவாளன்
பததாகியதொணடாதொழுபாலாவியின்கரைமேற்
செததாரெலும்பணிவான்றிருக்கேதீசசரத்தானே.

கறையார்கடல்சூழ்ந்தகழிமாதோட்டநன்னகருட்
சிறையாரபொழிலவண்டியாழ்செயுங்கேதீசசரததானை
மறையார்புகழூரன்னடிததொண்டனுரைசெய்த
குறையாத்தமிழ்பததுஞ்சொலக்கூடாகொடுவினையே.

திருச்சிற்றம்பலம்.

---

திருவிரா மேச்சரத்துச் செழும்பவளச் சுடர்க்கொழுந்தைப்
பரிவினாற் றொழுதகன்று பரமர்பதி பிறபணிந்து
பெருவிமா னத்திமையோர் வணங்குபெருந் திருச்சுழியன்
மருவினார் வன்றொண்டர் மலைவேந்த ருடன்கூட. (௧௧௦)

திருச்சுழிய லிடங்கொண்ட செம்பொன்மலைச் சிலையாரைக்
கருச்சுழியில் வீழாமைக் காப்பாரைக் கடல்விடத்தின்
இருட்சுழியு மிடற்றாரை யிறைஞ்சியெதி ரிதழிமலர்ப்
பருச்சுழியத் துடனூறு யுயிரெனும்பா மலர்புனைந்தார். (௧௧௧)

---

### திருச்சுழியல் - பண் - நட்டராகம்.

திருச்சிற்றம்பலம்.

ஊனாயுயிர்புகலாயகலிடமாய்முகில்பொழியும்
வானாய்வருமதியாய்விதிவருவானிடம்பொழிலின்
றேனாதரித்திசைவண்டினமிழற்றுந்திருச்சுழிய
னானாவிதநினைவார்தமைநலியார்நமன்றமரே

நீரூர்தருநிமலன்றிருமலையார்க்கயலருகே
தேரூர்தருமரககன்சிரநெரித்தான்றிருசசுழியல்
பேரூரெனவுறைவானடிப்பெயாநாவலர்கோமா
னாரூரனதமிழ்மாலைபத்தறிவாரதுயரிலரே.

திருச்சிற்றம்பலம்.

---

அஙகணரைப பணிநதுறையு மாரூரர்க் கவ்வூரிற்
கங்குலிடைக் கனவின்கட் காளையாந் திருவடிவாற்
செஙகையினிற் பொற்செண்டுந் திருமுடியிற் சுழியமுடன்
எங்குமிலாத் திருவேட மென்புருக முன்காட்டி. (௧௧௨)

கானப்பேர் யாமிருப்ப தெனக்கழறிக் கங்கையெனும்
வானப்பே ராறுலவு மாமுடியார் தாமகல

ஞானப்பே ராளருணர்ந் ததிசயித்து நாகமுடன்
ஏனப்பே ரெயிறணிந்தா ரருளிருந்த பரிசென்பார் (௧௧௩)

கண்டருளும் படிகழறிற் றறிவார்க்கு மொழிந்தருளிப்
புண்டரிகப் புனற்சுழியற் புனிதர்கழல் வணங்கிப்போ
யண்டர்பிரான் றிருக்கானப் பேரணைவா ராரூரர்
தொண்டரடித் தொழலுமெனுஞ் சொற்பதிகத் தொடைபுனைவார். (௧௧௪)

---

**திருக்கானப்பேர் - பண் - புறநீர்மை.**

திருச்சிற்றம்பலம்.

தொண்டரடித்தொழலுஞ்சோதியிளம்பிறையுஞ்சூதனமென்முலையாள் பாகமுமாகிவரும், புண்டரிகப்பரிசாமேனியும்வானவர்கள்பூசலிடக்கடனஞ் சுண்டகருத்தமருங, கொண்டலெனத்திகழுங்கண்டமுமெண்டோளுங்கோல நறுஞ்சடைமேலவண்ணமுங்கண்குளிரக், கண்டுதொழப்பெறுவதென்றுகொ லோவடியேன்கார்வயல்சூழ்கானப்பேருறைகாளையையே.

கன்னலையின்னமுதைக்கார்வயல்சூழ்கானப்பேருறைகாளையையொண் சீருறைதண்டமிழால், உன்னிமனத்தயராவுள்ளுருகிப்பரவுமொண்பொழில் நாவலர்கோனாகியவாரூரன், பன்னுமிசைக்கிளவிபத்திவைபாடவல்லார்பத்தர் குணத்தினராயெத்திசையும்புகழ, மன்னியிருப்பவர்கள்வானிலிழிந்திடினும் மண்டலநாயகராய்வாழ்வதுநிச்சயமே.

திருச்சிற்றம்பலம்.

---

காளையார் தமைக்கண்டு தொழப்பெறுவ தென்றென்று
தாளைநா ளும்பரவத் தருவாராபாற் சார்கின்றார்
ஆளைநீ ளிடைக்காண வஞ்சியநீ ராயயலே
வாளைபாய் நுழைப்பழன முளைப்பாடி வளநாடர். (௧௧௫)

மன்னுதிருக் கானப்பேர் வளம்பதியில் வந்தெய்திச்
சென்னிவளர் மதியணிந்தார் செழுங்கோயில் வலங்கொண்டு
முன்னிறைஞ்சி யுள்ளணைந்து முதல்வர்சே வடிதாழ்ந்து
பன்னுசெழுந் தமிழ்மாலை பாடினார் பரவினார். (௧௧௬)

ஆராத காதலுட னப்பதியிற் பணிந்தேத்திச்
சீராருந் திருத்தொண்டர் சிலநாளங் கமர்ந்தருளிக்
காராரு மலர்ச்சோலைக் கானப்பேர் கடந்தணைந்தார்
போரானேற் றூர்கயிலைப் பொருப்பர்திருப் புனவாயில். (௧௧௭)

புனவாயிற் பதியமர்ந்த புனிதரா லயம்புக்கு
மனவார்வ முறச்சித்த நீநினையென் னொடுவென்று
வினவான தமிழ்பாடி வீழ்ந்திறைஞ்சி யப்பதியிற்
சினவானை யுரித்தணிந்தார் திருப்பாதந் தொழுதிருந்தார். (௧௧௮)

திருப்புனவாயில் - பண் - பழம்பஞ்சுரம்.

திருச்சிற்றம்பலம்

சித்தநீ நினையென்னொடுசூளறும்வைகலு
மத்தயானையினீருரிபோர்த்தமணாளனூர்
பத்தர்தாம்பலர்பாடிநின்றாடும்பழம்பதி
பொத்திலாந்தைகள்பாட்டறாப்புனவாயிலே.

பொடியாடுமேனியன்பொன்புனஞ்சூழ்புனவாயிலை
யடியாரடியன்னாவலனூரனுரைத்தன
மடியாதுகற்றிவையேத்தவல்லார்வினைமாய்ந்துபோய்க்
குடியாகப்பாடிநின்றாடவல்லார்க்கில்லைகுற்றமே.

திருச்சிற்றம்பலம்

---

திருப்புனவா யிற்பதியி லமர்ந்தசிவ னாமகிழும்
விருப்புடைய கோயில்பல பணிந்தருளான் மேவினார்
பொருப்பினொடு கானகன்று புனற்பொன்னி நாடணைந்து
பருப்பதவார் சிலையார்தம் பாம்பணிமா நகர்தன்னில. (கககூ)

பாதாளீச் சரமிறைஞ்சி யதன்மருங்கு பலபதியும்
வேதாதி நாதர்கழல் வணங்கிமிகு விரைவினுடன்
சூதாரு துணைமுலையார் மணிவாய்கருத் தோற்றிரவு
சேதாம்பல் வாய்திறக்குந் திருவாரூர் வந்தணைந்தார (கஉ௦)

திருநாவ லூர்வேந்தர் சேரர்குல வேந்தருடன்
வருவாரைத் திருவாரூர் வாழ்வார்க ளெதிர்கொள்ளத்
தருகாத லுடன்வணங்கித் தம்பெருமான் கோயிலினுட்
பெருகார்வத் தொடுவிரும்பும் பெரும்பேறு பெறப்புகுந்தார். (கஉக)

வாசமலர்க் கொன்றையார் மகிழ்கோயில் வலங்கொண்டு
நேசமுற முன்னிறைஞ்சி நெடும்பொழு தெலாம்பரவி
யேசறவாற் றிருப்பதிக மெடுத்தேத்தி யெழுந்தருளாற்
பாசவினைத் தொடக்கறுப்பார பயிலகோயில பணிந்தணைவார். (கஉஉ)

பரவையார் மாளிகையிற் பரிசனங்கண் முன்னெய்த
விரவுபே ரலங்கார விழுச்செல்வ மிகப்பெருக
வரவெதிர்கொண் டடிவணங்க வன்றொண்டர் மலைநாட்டுப்
புரவலனு ரையுங்கொண்டு பொன்னணிமா ளிகைபுகுந்தார். (கஉ௩)

பரவியே பரவையார் பரிவுடனே பணிந்தேத்தி
விரவியபோ னகங்கறிகள் விதம்பலவா கச்சமைத்துப்
பரிகலமும் பாவாடை பகல்விளக்கு முடனமைத்துத்
திருவமுது செய்வித்தார் திருந்தியதேன் மொழியினார். (கஉ௪)

(கஉ௰) சூது ஆரும - சூதாடு கருவிபோலும.

மங்கலமாம் பூசனைகள் பரவையார் செயமகிழ்ந்து
தங்கியினி தமர்கின்றார் தம்பிரான் கோயிலினுட்
பொங்குபெருங் காலமெலாம் புக்கிறைஞ்சிப் புறத்தணைந்து
நங்கள்பிரா னருள்மறவா நல்விளையாட் டினைநயந்தார் (௧௨௫)

நிலைச்செண்டும் பரிச்செண்டும் வீசிமிக மகிழ்வெய்தி
விலக்கரும்போர்த் தகர்ப்பாச்சல் கண்டருளி வென்றிபெற
மலைக்குநெடு முட்கணைக்கால் வாரணப்போர் மகிழ்ந்தருளி
யலைக்குமறப் பலபுள்ளி னமர்விரும்பி யமர்கின்றார். (௧௨௬)

வேறு.

விரவு காதன் மீக்கூர மேவி நாள்கள் பலசெல்லக்
கரவி லீகைச் சேரலனார் தங்கள் கடல்சூழ் மலைநாட்டுப்
பரவை யார்தங் கொழுநனார் தம்மைப் பணிந்து கொண்டணைவான்
இரவும் பகலுந் தொழுதிரக்க விசைந்தா ரவரு மெழுந்தருள. (௧௨௭)

நங்கை பரவை யாருள்ளத் திசைவா னம்பி யெழுந்தருளத்
திங்கள் முடியார் திருவருளைப் பரவிச் சேர மான்பெருமாள்
எங்கு முள்ள வடியார்க்கு மேற்ற பூசை செய்தருளிப்
பொங்கு முயற்சி யிருவரும்போய்ப் புக்கார் புனிதர் பூங்கோயில். (௧௨௮)

தம்பி ரானைத் தொழுதருளாற் போந்து தொண்டர் சார்ந்தணையும்
நம்பி யாரூ ரருஞ்சேரர் நன்னாட் டரச ராகும்
பைம்பொன் மணிநீண் முடிக்கழறிற் றறிவார் தாமும் பயணமுடன்
செம்பொ னீடு மதிலாரூர் தொழுது மேல்பாற் செல்கின்றார் (௧௨௯)

வேறு

பொன்பரப்பி மணிவரன்றிப் புனல்பரக்குங் காவேரித்
தென்கரைபோய்ச் சிவன்மகிழ்ந்த கோயில்பல சென்றிறைஞ்சி
மின்பரப்புஞ் சடையண்ணல் விரும்புதிருக் கண்டியூர்
அன்புருக்குஞ் சிந்தையுடன் பணிந்துபுறத் தணைந்தார்கள். (௧௩௦)

வடகரையிற் றிருவையா றெதிர்தோன்ற மலர்க்கரங்கள்
உடலுருக வுள்ளுருக வுச்சியின்மேற் குவித்தருளிக்
கடல்பரந்த தெனப்பெருகுங் காவிரியைக் கடந்தேறித்
தொடர்வுடைய திருவடியைத் தொழுவதற்கு நினைவுற்றார். (௧௩௧)

வேறு.

ஐயா றதனைக் கண்டுதொழு தருளா ரூரர் தமைநோக்கிச்
செய்யாள் பிரியாச் சேரமான் பெருமா ளருளிச் செய்கின்றார்

(௧௨௬) செண்டு-பந்துபோன்றதோர் விளையாட்டுக்கருவி. நிலைச்செண்டு-நின்று விளையாடுவது. பரிச்செண்டு - பரியிலிவர்ந்து இடசாரி வலசாரியாகச் சுழன்று விளையாடுவது. தகர் - ஆடு.

மையார் கண்டர் மருவுதிரு வையா றிறைஞ்ச மனமுருகி
நையா நின்ற திவ்வாறு கடந்து பணிவோ நாமென்ன. (௧௩௨)

ஆறு பெருகி யிருகரையும் பொருது விசும்பி லெழுவதுபோல்
வேறு நாவா யோடங்கண் மீது செல்லா வகைமிகைப்ப
நீறு விளங்குந் திருமேனி நிருத்தர் பாதம் பணிந்தன்பி
னாறு நெறியாச் செலவுரியார் தரியா தழைத்துப் பாடுவார். (௧௩௩)

பரவும் பரிசென் றெடுத்தருளிப் பாடுந் திருப்பாட் டினின்முடிவில்
அரவம் புனைவா ராதமையையா றுடைய வடிக ளோவென்று
விரவும் வேட்கை யுடனழைத்து விளங்கும் பெருமைத் திருப்பதிக
நிரவு மிசையில் வன்றொண்டர் நின்று தொழுது பாடுதலும். (௧௩௪)

---

திருவையாறு - பண் - காந்தாரபஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

பரவும்பரிசொன் றறியேனான்பண்டேயுமைப்பயிலாதே
யிரவும்பகலுநினைந்தாலுமெய்தநினையமாட்டேனான்
கரவிலருவிகமுகுண்ணத்தெங்கங்குலைக்கீழ்க்கருப்பாலை
யரவந்திரைக்காவிரிக்கோட்டத்தையாறுடையவடிகளோ.

கூடியடியாரிருந்தாலுங்குணமொன்றிலவீர்குறிப்பிலீர்
ஊடியிருந்துமுணர்கிலேனும்மைத்தொண்டனூரனேன்
தேடியெங்குங்காணகிலேன்றிருவாரூரேசிந்திப்ப
னாடுந்திரைக்காவிரிக்கோட்டத்தையாறுடையவடிகளோ.

திருச்சிற்றம்பலம்.

---

மன்றி னிறைந்து நடமாட வல்லார் தொல்லை யையாற்றிற்
கன்று தடையுண் டெதிரழைக்கக் கதறிக் கனைக்கும் புனிற்றாப்போல்
ஒன்று முணர்வாற் சராசரங்க ளெல்லாங் கேட்க வோலமென
நின்று மொழிந்தார் பொன்னிமா நதியு நீங்கி நெறிகாட்ட (௧௩௫)

விண்ணின் முட்டும் பெருக்காறு மேல்பாற் பளிக்கு வெற்பென்ன
நண்ணி நிற்கக் கீழ்பானீர் வடிந்த நடுவு நல்லவழிப்
பண்ணிக் குளிர்ந்த மணற்பரப்பக் கண்ட தொண்டர் பயின்மாரி
கண்ணிற் பொழிந்து மயிர்ப்புளகங் கலக்கக் கையஞ் சலிகுவித்தார். (௧௩௬)

நம்பி பாதஞ் சேரமான் பெருமாள் பணிய நாவலூர்ச்
செம்பொன் முந்நூல் மணிமார்பர் சேரர் பெருமா னெதிர்வணங்கி
யும்பர் நாத ருமக்களித்த தன்றோ வென்ன வுடன்மகிழ்ந்து
தம்பி ரானைப் போற்றிசைத்துத் தடங்கா வேரி நடுவணைந்தார் (௧௩௭)

செஞ்சொற் றமிழ்நா வலர்கோனுஞ் சேரர் பிரானுந் தம்பெருமான்
எஞ்ச லில்லா நிறையாற்றி னிடையே யளித்த மணல்வழியிற்

றஞ்ச முடைய பரிசனமுந் தாமு மேறித் தலைச்சென்று
பஞ்ச நதிவா ணரைப்பணிந்து விழுந்தா ரெழுந்தார் பரவினார் (கஙஅ)

அங்க ணரனார் கருணையினை யாற்றா தாற்றித் திளைத்திறைஞ்சித்
தங்கள் பெருமான் றிருவருளாற் றாழ்ந்து மீண்டுந் தடம்பொன்னிப்
பொங்கு நதியின் முன்வந்த படியே நடுவு போந்தேறத்
துங்க வரைபோ னின்றநீர் தூர்ந்து தொடரப் பெருகியதால். (கஙகூ)

ஆய செயலி னதிசயத்தைக் கண்டக் கரையி லையாறு
மேய பெருமா னருள்போற்றி வீழ்ந்து தாழ்ந்து மேல்பாற்போய்த்
தூய மதிவாழ் சடையார்தம் பதிகள் பிறவுந் தொழுதேத்திச்
சேய கொங்க நாடணைந்தார் திருவா ரூரர் சேரருடன். (கச0)

கொங்கு நாடு கடந்துபோய்க் குலவு மலைநாட் டெல்லையுற
நங்கள் பெருமான் றோழனார் நம்பி தம்பி ரான்றோழர்
அங்க ணுடனே யணையவெழுந் தருளா நின்றா ரெனும்விருப்பால்
எங்கு மந்நாட் டுள்ளவர்க ளெல்லா மெதிர்கொண் டிடைபுகுவார் (கசக)

பதிக ளெங்குந் தோரணங்கள் பாங்க ரெங்கும் பல்லியங்கள்
வதிக ளெங்குங் குளிர்பந்தர் மனைக ளெங்கு மகிழ்புனைக்கார்,
நதிக ளெங்கு மலர்ப்பிறங்கன் ஞாங்க ரெங்கு மோங்குவன
நிதிக ளெங்கு முழவினொலி நிலங்க ளெங்கும் பொலஞ்சுடர்ப்பூ (கசஉ)

திசைக டோறும் வரும்பெருமை யமைச்சர் சேனைப் பெருவெள்ளங்
குசைகொள் வாசி நிரைவெள்ளங் கும்ப யானை யணிவெள்ளம்
மிசைகொள் பணைமுறும் பிடிவெள்ள மேவுஞ் சோற்று வெள்ளங்க
ணசைவி னின்பப் பெருவெள்ளத் தமர்ந்து கொடுங்கோ ளூரணைந்தார் ()

கொடுங்கோ ளூரின் மதில்வாயி லணிகோ டித்து மறுகிலுடுத்
தொடுங்கோ புரங்கண் மாளிகைகள் சூளி கரிசா லைகடோறும்
நெடுங்கோ நகர்க ளாடரங்கு நிரந்த மணித்தா மங்கமுகு
விடுங்கோ தைப்பூந் தாமங்க ணிரைத்து வெவ்வே றலங்கரித்து. (கசச)

நகர மாந்த ரெதிர்கொள்ள நண்ணி யெண்ணி லங்குதொறு
மகரக் குழையார் தாங்கள்பாடி யாட மணிவீ தியிலணைவார்
சிகர நெடுமா ளிகையணைவார் சென்று திருவஞ் சைக்களத்து
நிகரி றொண்டர் தமைக்கொண்டு புகுந்தா ருதியர் நெடுந்தகையார் (கசரு)

இறைவர் கோயின் மணிமுன்றில் வலங்கொண் டிறைஞ்சி யெதிர்புக்கு
நிறையுங் காத லுடன்வீழ்ந்து பணிந்து நோக்கி னாரூரர்
முறையில் விளம்புந் திருப்பதிக முடிப்பது கங்கை யென்றெடுத்துப்
பிறைகொண் முடியார் தமைப்பாடிப் பரவிப் பெருமா னுடன்றொழுதார்

---

(கசங) குசை - பிடரிமயிர்.

முடிப்பதுகங்கை - பண் - கொல்லிக்கவ்வாணம்.

திருச்சிற்றம்பலம்.

முடிப்பதுகங்கையுந்திங்களுஞ்செற்றதுமூவெயில்
நொடிப்பதுமாத்திரைநீறெழக்கணைநூறினார்
கடிப்பதுமேறுமென்றஞ்சவனிருகைகளாற்
பிடிப்பதுபாம்பன்றியில்லையோவெம்பிரானுக்கே.

காய்சினமால்விடைமாணிக்கத்தெந்தைகறைக்கண்டத்
தீசனையூரனெட்டோடிரண்டுமவிரும்பிய
வாயினசீர்ப்பகைஞானியப்பனடித்தொண்டனாறன்
ஏசினபேசுமின்றொண்டர்காளெம்பிரானையே

திருச்சிற்றம்பலம்.

---

தொழுது திளைத்துப் புறம்போந்து தோன்றப் பண்ணும் பிடிமேற்பார்
முழுது மேத்த நம்பியைமுன் பேற்றிப் பின்பு தாமேறிப்
பழுதின் மணிச்சா மரைவீசிப் பைம்பொன் மணிமா ளிகையில்வரும்
பொழுது மறுகி லிருபுடையு மிடைந்தார் வாழ்த்திப் புகலுகின்றார். (கஅஎ)

நல்ல தோழர் நம்பெருமா டமக்கு நம்பி யிவரென்பார்
எல்லை யில்லாத் தவமுன்பெண் செய்தோ மிவரைத் தொழவென்பார்
செல்வ மினியென் பெறுவதுநஞ் சிலம்பு நாட்டுக் கெனவுரைப்பார்
சொல்லுந் தரமோ பெருமாள்செய் தொழிலைப் பாரீ ரெனத்தொழுவார். ()

பூவும் பொரியும் பொற்றுகளும் பொழிந்து பணிவார் பொருவிலவர்
மேவும் பொன்னித் திருநாடே புவிக்குத் திலத மெனவியப்பார்
பாவுந் துதிக ளெம்மருங்கும் பயில வந்து மாளிகையின்
மாவுங் களிறு நெருங்குமணி வாயில்புகுந்து மருங்கிழிந்தார். (கஅஅ)

கழறிற் றறியுந் திருவடியுங் கலைநா வலர்தம் பெருமானார்
முழவிற் பொலியுந் திருநெடுந்தோண் முனைவர் தம்மை யுடன்கொண்டு
விழவிற் பொலியு மாளிகையில் விளங்கு சிங்கா சனத்தின்மிசை
நிழறிக் கொளிரும் பூணரை யிருத்தித் தாமு மேறினார் (கஅ௦)

செம்பொற் கரக வாசநீர் தேவி மார்க ளெடுத்தேந்த
அம்பொற் பாதந் தாம்விளக்கி யருளப் புகலு மாரூரர்
தம்பொற் றாளை வாங்கியது தகாதென் றருளத் தரணியில்வீழ்ந்
தெம்பெற் றிமையாற் செய்தனவிங் கெல்லா மிசைய வேண்டுமென (கஅக)

பெருமாள் வேண்ட வெதிர்மறுக்க மாட்டா ரன்பிற் பெருந்தகையார்
திருமா நெடுந்தோ ளுதியர்பிரான் செய்தவெல்லாங் கண்டிருந்தார்
அருமா னங்கொள் பூசனைக ளடைவே யெல்லா மளித்ததற்பின்
பெருமா மதிவெண் குடைவேந்த ருடனே யமுது செய்துவந்தார் (கஅ௨)

சோ ருடனே திருவமுது செய்த பின்பு கைகோட்டி
யார நறுமென் கலவைமான் மதச்சாந் தாடை யணிமணிப்பூண்
ஈர விரைமென் மலர்ப்பணிக ளிவையே முதலா யினவருக்குஞ்
சார வெடுத்து வன்றொண்டர் சாததி மிகக தமககாககி. (கஙஅ)

பாட லாட லின்னியங்கள் பயிறன் முதலாம் பணவையினில்
நீடு மினிய விநோதங்கள் நெருங்கு காலந் தொறுங்கழ
மாடு விரைப்பூந் தருமணஞ்செய் யாரா மங்கள வைகுவித்துக்
கூட முனைப்பா டியார்கோவைக் கொண்டு மகிழ்ந்தார் கோதையார். (கஙசு)

வே று.

சென்றாகுந் தொழின்மகிழ்வுஞ் சிறுசோற்றுப் பெருஞ்சிறப்பும்
வண்டாடு மலர்வாவி மருவியநீர் விளையாட்டுந்
தண்டாமும் மதகும்பத் தடமலைப்போர் சலமற்போர்
கண்டாரா விருப்பெய்தக் காவலனார் காவல்செய்நாள். (கஙரு)

நாவலர்தம் பெருமானுந் திருவாரூர் நகராருந்
தேவர்பிரான் கழலொருநாண் மிகநினைந்த சிந்தையரா
யாவியையா ரூரானை மறக்கலுமா மேயென்னு
மேவியசொற் றிருப்பதிகம் பாடியே வெருவுற்றார். (கஙசு)

---

திருவாரூர் - பண் - தக்கேசி.

திருச்சிற்றம்பலம்.

பொன்னுமெய்ப்பொருளுந்தருவானைப்போகமுந்திருவும்புணர்ப்பானைப்
பின்னைஎன்பிழையைப்பொறுப்பானைப்பிழையெல்லாந்தவிரப்பணிப்பானை
யின்னதன்மையனென்றறிவொண்ணாவெம்மானையெளிவந்தபிரானை
யன்னம்வைகும்வயற்பழனத்தணியாரூரானைமறக்கலுமாமே.

ஒரூரென்றுலகங்களுக்கெல்லாமுரைக்கலாம்பொருளாயுடன்கூடிக்
காரூருங்கமழ்கொன்றைநன்மாலைமுடியன்காரிகைக்காரணமாக
ஆரூரைமறத்தற்கரியானையம்மானைத்தன்றிருப்பேர்கொண்டதொண்டன்
ஆரூரன்னடிநாவுரைவல்லாமாலோகத்திருப்பவர்தாமே

திருச்சிற்றம்பலம்

---

திருவாரூர் தனை நினைந்து சென்றுதொழு வேனென்று
மருவாரவத் தொண்டருடன் வழிக்கொண்டு செலபொழுதில
ஒருவாநண புள்ளூருக வுடனெழுந்து கைதொழுது
பெருவான வரம்புனா பிரிவாற்றார் பின்செலவார். (கஙஎ)

வன்றொண்டர் முன்னெய்தி மனமகிழ்ந்த வுணர்வினராய்
இன்றுமது பிரிவாற்றே னென்செய்கேன் யானென்ன
ஒன்றுநீர் வருந்தாதே யுமதுபதி யின்கணிருந்
தன்றினார் முனைமுருக்கி யரசாளு மெனமொழிந்தார். (கஙஅ)

ஆரூரர் மொழிந்தருள வதுகேட்ட வருட்சேரர
பாரோடு விசும்பாட்சி யெனக்குமது பாதமலர்
தேரூரு நெடுவீதித் திருவாரூர்க் கெழுந்தருள
நேரூரு மனக்காத லீக்கவுமஞ் சுவனென்றார். (௧௪௯)

மன்னவனு ரதுமொழிய வன்றொண்ட ரெதிர்மொழிவார்
எனனுயிருக் கின்னுயிரா மெழிலாரூர்ப் பெருமானை
வன்னெஞ்சக் கள்வனேன் மறந்திரேன் மதியணிந்தார்
இன்னருளா லரசளிப்பீர் நீரிருப்பீ ரெனவிறைஞ்ச (௧௫௦)

மற்றவரும் பணிந்திசைந்தே மந்திரிக டமையழைத்துப்
பொற்புநிறை தொன்னகரி லிறைகைக்கு முன்புகுந்த
நற்பெரும்பண் டாரநா லுவருக்க மானவெலாம்
பற்பலவா மாளின்மிசை யேற்றிவரப் பண்ணுமென. (௧௫௧)

ஆங்கவரு மன்றுவரை யாயமா கியதனங்கள்
ஓங்கியபொன் னவமணிக ளொளிர்மணிப்பூண் டுகில்வருக்க
ஞாங்கர்நிறை விரையுறுப்பு வருக்கமுத லலஞ்சிறப்பத்
தாங்குபொதி வினைஞர்மேற் றலமலியக் கொண்டணைந்தார் (௧௫௨)

மற்றவற்றின் பரப்பெல்லாம் வன்றொண்டர் பரிசனத்தின்
முற்படவே செலவிட்டு முனைப்பாடித் திருநாடர்
பொற்பதங்கள் பணிந்தவரைத் தொழுதெடுத்துப் புனையலங்கல்
வெற்புயர்தோ ளுறத்தழுவி விடையளித்தார் வன்றொண்டர் (௧௫௩)

ஆரூர ரவர்தமக்கு விடையருளி யங்ககன்று
காரூரு மலைநாடு கடந்தருளிக் கற்சுரமும்
நீரூருங் கான்யாறு நெடுங்கானும் பலகழியச்
சீரூருந் திருமுருகன் பூண்டிவழிச் செல்கின்றார். (௧௫௪)

திருமுருகன் பூண்டியயற் செல்கின்ற போழ்தின்கட்
பொருவிடையார் நம்பிக்குத் தாமேபொன் கொடுப்பதலால்
ஒருவர்கொடுப் பக்கொள்ள வொண்ணுமைக் கதுவாங்கிப்
பெருகருளா றுங்கொடுக்கப் பெறுவதற்கோ வதுவறியோம் (௧௫௫)

வென்றிமிகு பூதங்கள் வேடர்வடி வாய்ச்சென்று
வன்றொண்டர் பண்டாரங் கவரவருள் வைத்தருள
அன்றினார் புரமெரித்தா ரருளால்வேட் டுவப்படையாய்ச்
சென்றவர்தா மவரும்வழியி லிருபாலுஞ் செயிர்த்தெழுந்து. (௧௫௬)

வில்வாங்கி யலகம்பு விசைநாணிற் சந்தித்துக்
கொல்வோமிங் கிட்டுப்போ மெனக்கோபத் தாற்குத்தி
யெல்லையிலபண் டாரமெலாங் கவர்ந்துகொள விரிந்தோடி
யல்லலுடன் பறியுண்டா ராரூரர் மருங்கணைந்தார். (௧௫௭)

ஆரூரர் தம்பாலவ் வேடுவர்சென் றணையாதே
நீரூருஞ் செஞ்சடையா ரருளினா னீங்கவவர்
சேரூராந் திருமுருகன் பூண்டியினிற் சென்றெய்திப்
போரூரு மழவிடையார் கோயிலைநா டிப்புக்கார். (கசஅ)

அங்கணர்தங் கோயிலினை யஞ்சலிகூப் பித்தொழுது
மங்குலுற நீண்டதிரு வாயிலினை வந்திறைஞ்சிப்
பொங்குவிருப் புடன்புகுந்து வலங்கொண்டு புனிதநதி
திங்கண்முடிக் கணிந்தவர்தந் திருமுன்பு சென்றணைந்தார். (கசகூ)

உருகியவன் பொடுகைகள் குவித்துவிழுந் துமைபாக
மருவியதம் பெருமான்முன் வன்றொண்டர் பாடினார்
வெருவுறவே டுவர்பறிக்கும் வெஞ்சுரத்தி லெத்துக்கிங்
கருகிருந்தீ ரெனக்கொடுகு வெஞ்சிலையஞ் சொற்பதிகம். (கஎ௦)

---

திருமுருகன்பூண்டி - பண் - பழம்பஞ்சுரம்.

திருச்சிற்றம்பலம்.

கொடுகுவெஞ்சிலைவடுகவேடுவர்விரவலாமைசொல்லித்
திடுகுமொட்டெனக்குத்திக்கூறைகொண்டாறலைக்குமிடம்
முடுகுநாறியவடுகர்வாழ்முருகன்பூண்டிமாநகர்வாய்ப்
யிடுகுநுண்ணிடைமங்கைதன்னொடுமெத்துக்கிங்கிருந்தீரெம்பிரானீரே.

முந்திவானவர்தாந்தொழுமுருகன்பூண்டிமாநகர்வாய்ப்
பந்தணைவிரற்பாவைதன்னையோர்பாகம்வைத்தவனைச்
சிந்தையிற்சிவத்தொண்டனூரனுரைத்தனபத்துங்கொண்
டெந்தமடிகளையேத்துவாரிடரொன்றுந்தாமிலரே.

திருச்சிற்றம்பலம்.

---

பாடியவர் பரவுதலும் பரமபொருளா மவரருளால்
வேடுவர்தாம் பறித்தபொரு ளவையெல்லாம் விண்ணெருங்க
நீடுதிரு வாயிலின்முன் குவித்திடலு நேரிறைஞ்சி
யாடுமவர் திருவருளா லப்படியே கைக்கொண்டார் (கஎக)

கைக்கொண்டு கொடுபோமக் கைவினைஞர் தமையேவி
மைக்கொண்ட மிடற்றாரை வணங்கிப்போய்க் கொங்ககன்று
மெய்க்கொண்ட காதலினால் விரைந்தேகி மென்கரும்புஞ்
செய்க்கொண்ட சாலியுஞ்சூழ் திருவாரூர் சென்றணைந்தார். (கஎஉ)

நாவலர்மன் னவரருளால் விடைகொண்ட நரபதியார்
ஆவியொன் றானநம்பி யாரூரர் தமைநினைந்து
மாவலரு மலர்ச்சோலை மகோதையினின் மன்னிமலைப்
பூவலயம் பொதுநீக்கி யரசுரிமை புரிந்திருந்தார். (கஎங)

இந்நிலைமை யுதியர்பிரா னெம்பிரான் வன்றொண்டர்
பொன்னிவள நாடகன்று மகோதையினின் மேற்புகுந்து
மன்னுதிருக் கயிலையினின் மதவரைமே லெழுந்தருள
முனனாவயப் பரியுகைக்குந் திருத்தொழில்பின் மொழிகின்றாம். (௧எ௪)

மலைமலிந்த திருநாட்டு மன்னவனார் மாகடல்போற்
சிலைமலிந்த கொடிததானைச் சேரலனார் கழலபோற்றி
நிலைமலிந்த மணிமாட நீண்மறுகு நான்மறைசூழ்
கலைமலிந்த புகழ்ககாழிக கணநாதா திறமுரைப்பாம் (௧எ௫)

கழறிற்றறிவார்நாயனார் புராண முற்றிற்று.

ஆ திருவிருததம் - ௩,௯உஎ.

---

மலரவள்வாழும மலைநாட்டிலே, திருவஞ்சைக் களமென்னுஞ் சிவாலயமுளள கொடுஙகோளூரிலே, சோாகுடியிலே, பெருமாககோதையர் எனனுந திருநாமததையுடைய ஒருபுதலவா அவதாரஞசெயதாா அவா உலகஇயலபும, அரசஇயலபும உறுதியுளளன அலலவெனறு சிவபததியிற் சிறநதவராய, அரசதொழிலகள் சிறிதும பயிலுதலின்றித் திருவஞ்சைககளமென்னுந திருககோயிலையடைநது, அதில எழுநதருளியுளள சிவபெருமானை நாடோறும் வழிபட்டு வருவாராயினா.

இஙஙனம் ஒழுகிவருநாளில் செஙகோறபொறையன் என்னும் சேரமகாராஜன் உலக ஆசையை ஒழிதது, தவமபுரிநது, தததுவநெறியை யடையத் தபோவனததை யடைநதான அப்பொழுது அமைசசர்கள ஆலோசிததுத தெளிந்து, "திருவஞசைக்களததிலே சிவசஙகரனை வழிபட்டு வருபவராகிய பெருமாககோதையாா அசசோர் மரபிறகுமுதலவா ஆகையால், அவரே அரசியறறும் உரிமை உடையவர்" எனககருதி, அவரையடைநது, பணிநது "தேவரீா இமமலை நாட்டின செஙகோலைத தாஙகியருளவேணடும" எனறு பிராாத்திததாாகள் அதுகேட்ட அனபா "இனபமபெருகுந திருததொணடிறகு இடையூறாக இவாகள மொழிநதார்கள சிவநேயஞ் சிறிதும வழாது அரசு புரிதற்குத திருவருள் உணடேல், அதனை இறைவனாககு விண்ணப்பித்து அறிவேன்" என்று சிவசநநிதியடைநது, விணணபபித்தார் உடனே திருவருளால் பெருமாக்கோதையார் அனபுசிறிதும வழாது அரசியறறும் ஆற்றலும், யாரும் யாவும் கழறினவைகளைத்தையும அறியும உணாவும், அழியாவிறலையும், பெருஙகொடையும, படைவாகன முதலிய எல்லாங கைவரப்பெற்று, வெளியேவநது, மந்திரிமாாகள் வேணடுகோளுக்கிரஙகி உடன்பட்டார் அமைசசர்கள் ஆனநதப் பரவசராய் அவரை வணஙகினாாகள்.

பெருமாககோதையரெனனுங் கழறிற்றறிவார் சுபதினத்திலே திருமுடிசூடப்பெற்று, திருககோயிலை வலஞ்செயது, சிவசநநிதியிலே விழுநது வணஙகி எழுநது, யானைமேற்கொண்டு, நகர்வலம் வந்தாா. வருமபோது, வண்ணான் ஒருவன் தோளிலே உவாபொதி சுமநதுகொண்டு, தம்முன்னே வருதலைப்பார்த்து, அவனுடையதேகம மழையினால கரைநத உவா ஊறப்பெற்று வெளுததிருததலால், அவனைத திருநீறுபூசிய சிவனடியார் என

நினைத்து, உடனே யானைவிட்டிழிந்து, விரைந்தோடி, கும்பிட்டார். அது கண்ட அவன் அகங்கலங்கி "அடியேனை யாரென நினைத்தீர்! சிறியேன் அடி வண்ணான்" என்று சொன்னான். அதற்குச் சேரர்பிரான் "அடியேன் அடிச்சேரன், திருநீற்றின் திருவேடத்தை நினைப்பித்தீர். வருந்தாது ஏகும்" என்று அருளிச்செய்தார். அதுகண்ட அமைச்சர் முதலாயினோர்கள் அரசர் பெருமானாருடைய அடியவர் பத்தியைவியந்து அஞ்சலிசெய்து தோத்திரம் பண்ணினார்கள். சேரமான் பெருமாணாயனார் மீண்டும் வேழமேற்கொண்டு நகர்வலஞ்செய்து, அரண்மனையடைந்து, அரியாசனமமர்ந்து, வெண் கொற்றக் குடையின் கீழிருந்து, பகைமையின்றி, சிவநேயமும், சமய உண்மையும், விபூதி மேன்மையும் விளங்கச் செங்கோல்தாங்கி நீதியரசியற்றித் தாம் தேடும்பொருளும், செல்வமும், பிறவும் ஸ்ரீ நடராஜப்பெருமானார் திருவடிகளே, எனக்கொண்டு அவ்வானந்தக் கூத்தனை நாடோறும் பூசித்து வந்தார். தினந்தோறும் பூசைமுடிவிலே அவருக்கு ஸ்ரீ நடராஜவள்ளலார் தமது திருச்சிலம்பொலியைக் கேட்பிக்கச் செய்தார். சேரர்பெருமான் சாதிபேத முதலியவற்றைச் சிறிதும் கவனியாது, சிவனடியார்களுக்கும், வறியவர்களுக்கும் வேண்டும் திரவியங்கொடுத்து வந்தார்; சிவபெருமானுக்குரிய பல யாகங்களையும் செய்தார்.

இப்படி ஒழுகிவருநாளில் பாண்டிநாட்டிலே, மதுரையம்பதியிலே எழுந்தருளியுள்ள சோமசுந்தரக்கடவுள் தம்மை மெய்யன்போடு இசைபாட்டினால் பரவும் பாணபத்திரருக்குப் பெருஞ்செல்வம் அளிக்கத் திருவுள்ளங்கொண்டு, இரவிலே அவருக்குக் கனவிலே தோன்றி "உனக்குப்பொன், காணம், பட்டாடை முதலியவற்றை வேண்டிய அளவு கொடுக்கும்படி நம்மாட்டு முதிர்ந்த அன்புடைய சேரனுக்குத் திருமுகங் கொடுக்கின்றோம், நீ தாழ்க்காமற் போய்வா" என்று திருவாய்மலர்ந்தருளி "மதிமலிபுரிசை" எனனுந் திருப்பாசுரம் வரையப்பெற்ற திருமுகத்தைத் தந்தருளினார். இசைவல்லவராகிய பாணபத்திரரும் உடனே புறப்பட்டு மலைநாட்டையடைந்து, கொடுங்கோளூரில் புகுந்து, அரமனையையணுகிச் சேரமான்பெருமானார்க்குத் தெரிவித்தார். அதுகேட்ட அரசர் சேரமான் விரைவிலெழுந்து பாணபத்திரரிடம் வந்து, அவரை வணங்கி "சிறியேனை ஒருபொருளாகக் கருதித் திருமுகங்கொண்டு வந்தீரோ" என்ன, பாணபத்திரர் பரமசிவனாரது திருமுகத்தைக் கொடுத்துத் தொழுது நின்றார். அரசர்பெருமான் அத்திருமுகத்தைப் பேரன்போடு வாங்கிச் சிரசிலேவைத்துத் தம்மை மறந்து, ஆனந்தக் கூத்தாடிப் பாணரது பாதங்களில் பன்முறை விழுந்து வணங்கினார். திருமுகத்தைப் பலமுறை பார்த்துப் பார்த்துப் பணிந்து, வாசித்துப் பேரானந்த வடிவினராய்த் திருமாளிகையினுள்ளே நுழைந்து, மந்திரிமார்களை நோக்கி "நமது பலவகைப்பண்டாரங்களையும் பொதிசெய்து ஆட்களின்மீது சுமத்திக்கொண்டு வாருங்கள்" என்று கட்டளையிட, அவர்கள் அப்படியே செய்தார்கள். சேரமான்பெருமாணாயனார் பாணபத்திரருக்கு அப்பண்டாரங்கள் எல்லாவற்றையும் தனித்தனியாகக் காட்டி, "சுவாமி! இவைகளையும், சதுரங்க சேனைகளையும், அரசையுங் கைக்கொண்டருளும்" என்ன, பாணனார் "அரசரே! அடியேனுக்கு வேண்டுவனவற்றை மாத்திரம் கொள்ளும் பொருட்டே சிவாஞ்ஞை, அரசையும் பிறவற்றையும் தேவரீரே கைக்கொள்ளும்" என்று சொன்னார். அரசர் பெருமானாரும் இறைவர் ஆணையை மறுத்தற்கு அஞ்சிப் பாணனார் சொற்றதற்கு உடன்பட்டார். பாணபத்திரர் தமக்கு வேண்டிய பொருள்களையும், யானைமுதலியவைகளையுங் கொண்டு யானைமேற்கொண்டு சென்றார். சேரர்பெருமானாரும் பேரன்போடு உடன

செல்லப்பாணனூர் நகர்ப்புறத்திலே அவர்பால் விடைபெற்றுக்கொண்டு மதுரைமாநகரத்தைச் சேர்ந்தார்.

சேரமான்பெருமாணாயனார் சோழபாண்டியர்கள் மகிழ அவர்களோடு கலந்து அரசியற்றி அரனார் பூசைசிறிதும் வழாது நிகழ்த்தி வருங்காலை, ஒருநாள் பூசைமுடிவில் ஸ்ரீநடராஜப்பெருமானாருடைய திருச்சிலம்பொலி தமக்குக்கேளாது ஒழிய மதிமயங்கிப் பூசையை விரைவில் முடித்து, "அடியேன் என்னபிழை செய்தனனோ" என்று வருந்தி, "இனி இவ்வுடம்பால்அடையும் வேறு இன்பம் யாது" என்று உடைவாளை உருவித் தம்முடைய மார்பிலே நாட்ட, உடனே ஸ்ரீநடராஜ வள்ளலார் திருச்சிலம்பினொலியைக் கேட்பித்தார் கேட்பித்ததும், அன்பிற்சிறந்த அரசர்பெருமான் உடைவாளை அகற்றி விழுந்து வணங்கி எழுந்து துதிசெய்து "அம்பலவாணரே! இத்திருவருளை முன்புரியாதது என்னை" என்று வினவினார் அதற்குச் சபாநாயகர் சுந்தரமூர்த்தி சுவாமிகளை நினைப்பிக்கவேண்டி உருவமாக நில்லாது "சுந்தரன் நம்மைக் கனகசபையிலே தரிசித்து ஆனந்த மயத்தனாய் அகங்குழைந்து அருட்பதிகம் பாடினன் அவ்வருட் சொல்வழி நம் செவிசென்றமையால் வரத்தாழ்த்தோம்" என்று அசரீரியாக அருளிச்செய்தார். அதுகேட்ட சேரர்பெருமான் "அடியவர்களுக்கு இவர் அருளுங் கருணை இருந்தவாறென்னே" என்று வியந்து கனகசபையையும் வன்றொண்ட வள்ளலாரையும் தரிசிக்கவிரும்பிச் சேனைகளோடு புறப்பட்டு ஸ்ரீ சிதம்பரத்தையடைந்து சபாநாயகரைத் தரிசித்து, அன்போடுருகிப் பொன் வண்ணத் தந்தாதியைத் திருவாய்மலர்ந்தருளினார் அதற்குப் பரிசிலாக ஆனந்த நடம்புரியும் அழகர் தமது திருச்சிலம்பொலியைக் கேட்பித்தார். அதுகேட்டு ஆனந்தவாரிதியிற் றிளைத்துச் சின்னாள் அத்திருப்பதியிலேயே இருந்து, பிறகு சுந்தரமூர்த்திகளைத் தரிசிக்கப் பெருவகையுற்றுத் தில்லையினின்றும் புறப்பட்டு, இடையிலே பல சிவஸ்தலங்களைத் தரிசித்து வணங்கித் திருவாரூரை யடைந்தார் அவரது வருகையைக் கேள்வியுற்ற நம்பியாரூரர் அவரை எதிர்கொண்டார். வன்றொண்டப் பெருமானைக்கண்ட கழறிற்றறிவார் நாயனார் அவரது திருவடிகளிலே விழுந்து வணங்கினார் சுந்தரமூர்த்திகளும் சேரமான்பெருமாணாயனாரைவணங்கினார் அவ்விருவரும் கடலில் ஆழ்ந்து கரையேறமாட்டாது அலைகின்றவர்களைப்போலப் பேரின்ப சாகரத்திற்படிந்து, என்புருகி, உயிரொன்றி, உடம்பும் ஒன்றும் எனச்சொல்லும்படி கலந்தார்கள் அதுபற்றியே சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்குச் சேரமான் தோழர் என்னும் அருமைத் திருநாமமும் உண்டாயிற்று. பின்னர் அரசர் பெருமான் வன்றொண்டரோடு திருக்கோயிலை யடைந்து வன்மீகநாதரை வணங்கித் திருமும்மணிக்கோவையை அருளிச்செய்தார். பின்னர்ப் பரவையார் திருமாளிகையையடைந்து சுந்தரமூர்த்தி சுவாமிகளுடன் இருந்தார், சிலநாள் கழிந்தபின் சுந்தரமூர்த்திசுவாமிகளோடு திருமறைக்காட்டை யடைந்து, சுவாமிதரிசனஞ்செய்து, திருவந்தாதி பாடி, பாண்டிநாட்டைச்சேர்ந்து, மதுரைமுதலிய பலதலங்களைத் தரிசித்து, மீண்டும் திருவாரூரையடைந்து, அங்கே பலநாள் தங்கிச் சுந்தரமூர்த்திசுவாமிகளைப் பன்முறை வணங்கித் தம்மூருக்கு வரும்படி வேண்டி, அவரை அழைத்துக்கொண்டு தமது கொடுங்கோளூரை யடைந்திருந்தார். சேரமான் தோழராகிய சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்கு ஒருநாள் வன்மீகநாதர்மீது சிந்தை நடந்தது. உடனே சுவாமிகள் திருவாரூருக்குப் புறப்பட்டார். அதுகண்டு அரசர்பெருமான் பிரிவாற்றாதவராய்ப் பின்சென்று சுவாமிகள் திருமுன்னே வந்து வணங்கி "சுவாமி! உமதுபிரிவாற்றேன் என்செய்வேன்" என்றார் அதற்குச் சுந்தர

மூர்த்திகள் "நீர் சிறிதும் வருந்தாது பகையரசர்களை வென்று இவ்வுலகை ஆண்டுவாரும்" என்று கூறியருளினார் சேரர்பெருமான் "சுவாமீ! தேவரீருடைய திருவடித்தாமரைகளே அடியேன் அரசாட்சி. தாங்கள் திருவாரூருக்கு எழுந்தருளக்கொண்ட பெருவிருப்பத்தைத் தவிர்க்கவும் அஞ்சுகினறேன்" என்றார் அதுகேட்ட சுவாமிகள் "யான் திருவாரூர்ப்பெருமானை மறந்திரேன். நீர் இவணிரும்" என்று வணங்கினார். உடனே கழறிற்றறிவார் உடன்பட்டு மந்திரிமாரகளைககொண்டு தமது அரண்மனையிலுள்ள பண்டார முழுவதையும் பொதிசெய்து ஆட்கள்மீது ஏற்றுவித்துச் சுவாமிகளுக்கு முன்னே செலலும்படி பணித்து, அச்சுவாமிகளைப் பணிந்து நின்றார வன்றொண்டவள்ளலார் அவரை அன்போடுதழுவி விடைகொடுத்துத திருவாரூரை யடைநதார். சேரமான்பெருமானாயனார் சுந்தரமூர்த்தி சுவாமிகளை மறவாத சிந்தையினராய் அரசாட்சி செய்துவநதார்.

இங்ஙனம் சேரமான்பெருமானாயனார் இருக்குநாளில் சுந்தரமூர்த்தி சுவாமிகள் மீணடும மகோதை என்னுந திருப்பதியடைந்து, வெள்ளையானையின்மேல திருககயிலைக்கு எழுந்தருளினார அவருக்கு முன்னே சேரமான்பெருமானாயனார குதிரையினமேலேறிசசென்ற திருச்செய்கையைப் பின்னா (வெள்ளையானைச் சருக்கத்தில்) கூறுகின்றோம்.



# கணநாதநாயனார்புராணம்.



ஆழி மாநிலத் தகிலமீன் றளித்தவ டிருமுலை யமுதுண்ட
வாழி ஞானசம் பநதாவந் தருளிய வளப்பின தளப்பில்லா
ஊழி மாகடல் வெள்ளததுமிதநதுல கினுக்கொரு முதலாய
காழி மாநகர்த திருமறை யவாகுலக காவலர் கணநாதா (௧)

ஆய வன்பாதா மணிமதிற் சண்பையி னமாபெருந் திருத்தோணி
நாய னாககுநற் றிருப்பணி யாயின நாளுமன் பொடுசெயது
மேய வததிருத தொண்டினில் விளங்குவார் விரும்பிவந் தணைவார்க்குத்
தூய கைததிருத் தொணடினி லவாதமைத் துறைதொறும் பயில்விப்பார். (௨)

நல்ல நநதன வனப்பணி செய்பவர் நறுநதுணா மலர்கொயவோா
பல்ப ணிதொடை புனைபவர் கொணாதிரு மஞ்சனப் பணிக்குள்ளோா
அலலு நணபக லுந்திரு வலகிட்டுத் திருமெழுக கமைபபோாகள்
எல்லை யிலவிளக கெரிப்பவா திருமுறை யெழுதுவோா வாசிப்போர். (௩)

இனைய பலதிருப் பணிகளி லணைந்தவாக் கேற்றவத திருத்தொணடின்
வினைவி ளங்கிட வேண்டிய குறையெல்லா முடிததுமே விடச்செய்தே
அனைய வத்திறம் புரிதலிற் றொண்டரை யாக்கியன புறுவாய்மை
மனைய றம்புரிந தடியவர்க் கின்புற வழிபடுந் தொழின்மிக்கார். (௪)

இப்பெ ருஞ்சிறப் பெய்திய தொண்டரா மேறுசீர் வளர்காழி
மெய்ப்பெ ருந்திரு ஞானபோ னகர்கழன் மேவிய விருப்பாலே
முப்பெ ரும்பொழு தருச்சனை வழிபாடு மூளுமன் பொடுநாளும்
ஒப்பில் காதலகூ ருளங்களி சிறந்திட வொழுகினா வழுவாமல. (ரு)

ஆன தொண்டினி லமர்ந்தபே ரன்பரு மகலிடத் தினிலென்று
ஞான முண்டவா புண்டரீ கக்கழ லருச்சனை நலம்பெற்றுத்
தூந றுங்கொன்றை முடியவா சுடாநெடுங் கயிலைமால் வரையெய்தி
மான நற்பெருங் கணங்கட்கு நாதராம வழிதத்தொண்டி னிலைபெற்றா (சு)

உலக முய்யநஞ் சுண்டவா தொண்டினி னுறுதிமெய் யுணாவெய்தி
அலகி றொண்டருக் கறிவளித் தவாதிற மவனியின் மிசையாகரு
மலாபெ ரும்புகழ்ப் புகலியின் வருங்கண நாதனா கழல்வாழ்ததிக
குலவு நீற்றுவணா கூற்றுவ னாதிறங் கொள்கையின் மொழிகின்றாம (எ)

கணநாதநாயனார் புராண முற்றிற்று.

ஆ திருவிருததம் - ந,கூநச.

---

சோழநாட்டிலே, சீகாழியிலே, பிராமணகுலததிலே தோன்றினவா கணநாதநாயனாா எனபவா. அவா திருததோணிப் பெருமானாக்குத திருத்தொண்டுசெயதும், தம்மை நசசிவநதயாகளைத திருநநதன வனபபணிசெய தல, மலாகொய்தல், திருமாலைகட்டல், திருமஞ்சனமெடுததல், திருவல கிடல், திருமெழுககிடல, திருவிளககெரிததல், திருமுறையெழுதல, அவ் வருட்பாககளை வாசிததல் முதலிய திருததொண்டுகளுள் அவரவர்ககுககந்த திருததொணடுகளிலே பயிலவிததுச சிவனடியாாகளாககியும,இலலறததி லை நினறு சிவனடியாாகளை வழிபட்டும, திருஞானசம்பநதமூாததி சுவாமிகளைப பேரனபோடு முபபோதும் அருசசிததுமவாழ்நது, அவவருசசனையால் பெற றகரிய நனமையையடைநது நான்முகனைக்கூட்டிய நாயகனையளிதத நம்பன் கயிலையடைந்து சிவகணஙகளுககுத தலைவராயினா

---

# கூற்றுவநாயனார்புராணம்.



தூன்றார் முனைக டோள்வலியால வென்று கூலப் படையாத
நன்று மநதந திருநாவி றைரு நவிலு நலமிக்கார
பனறு னீச ரடியாாதம் பாதம் பரவிப் பணிந்தேத்தி
முன்று கியநற் றிருததொண்டின் முயன்றா களந்தை முதல்வனா (க)

அருளின வலியா லரசொதுஙக வவனி யெல்லா மடிப்படுப்பாா
பொருளின் முடிவுங காணரிய வகையாற பொலிவித திகலசிறக்க
மருளுங களிறு பாய்புரவி மணிததேர் படைஞர் முதன்மாறறாா
வெருளுங கருவி நான்குநிறை வீரச செருக்கினா மேலானா (உ)

(உ) அடிப்படுப்பாா - தங்கீழ்ப்படுத்துவாராகி. இகல - பகை. வீரச்செருக்கு - [illegible] வலிமைபும களிபபு.

வென்றி வினையின் மீக்கூர வேந்தர் முனைகள் பலமுருக்கிச்
சென்று தும்பைத் துறைமுடித்துஞ் செருவில் வாகைத் திறங்கெழுமி
மன்றன் மாலை மிலைந்தவர்தம் வளநா டெல்லாங் கவர்ந்துமுடி
ஒன்று மொழிய வரசர்திரு வெல்லா முடைய ராயினார். (௩)

மல்லன் ஞாலம் புரக்கின்றார் மணிமா மவுலி புனைவதற்குத்
தில்லை வாழந் தணர்தம்மை வேண்ட வவருஞ் செம்பியர்தந்
தொல்லை நீடுங் குலமுதலோர்க் கன்றிச் சூட்டோ முடியென்று
நல்கா ராகிச் சேரலன்றன் மலைநா டணைய நண்ணுவார். (௪)

ஒருமை யுரிமைத் தில்லைவாழந் தணர்க டம்மி லொருகுடியைப்
பெருமை முடியை யருமைபுரி காவ லாகப் பேணும் படியிருத்தி
இருமை மரபுந் தூயவர்தாஞ் சேர னாட்டி லெய்தியபின்
வருமை யுறவான் மனந்தளர்ந்து மன்று ளாடுங் கழல்பணிவார். (௫)

அற்றை நாளி லிரவின்க ணடியேன் றனக்கு முடியாகப்
பெற்ற பேறு மலர்ப்பாதம் பெறவே வேண்டு மெனப்பரவும்
பற்று விடாது துயில்வோர்க்குக் கனவிற் பாத மலரளிக்க
உற்ற வருளா லவைதாங்கி யுலக மெல்லாந் தனிப்புரந்தார். (௬)

அம்பொ னீடு மம்பலத்து ளாரா வமுதத் திருநடஞ்செய்
தம்பி ரானார் புவியின்மகிழ் கோயி லெல்லாந் தனித்தனியே
இம்பர் ஞாலங் களிகூர வெய்தும் பெரும்பூ சனையியற்றி
உம்பர் மகிழ வரசளித்தே யுமையாள் கணவ னடிசேர்ந்தார். (௭)

காதற் பெருமைத் தொண்டினிலைக் கடல்சூழ் வையங் காத்தளித்துக்
கோதங் ககல முயல்களந்தைக் கூற்ற னார்தங் கழல்வணங்கி
நாத மறைதந் தளித்தாரை நடைநூற் பாவி னவின்றேத்தும்
போத மருவிப் பொய்யடிமை யில்லாப் புலவர் செயல்புகல்வாம். (௮)

தேனுங் குழலும் பிழைத்ததிரு மொழியாள் புலவி தீர்க்கமதி
தானும் பணியும் பகைதீர்க்குஞ் சடையார் தூது தருந்திருநாட்

---

(௩) தும்பைத்துறை - தும்பைமாலை, போர்மேல்வார் சூடுவது — வாகைமாலை - ஜெயமடைந்தார் சூடுவது. (௫) இருமை - வைதிகம், சைவம் இருபிறப்பு எனலுமாம். (௯) தேனும் - தேனினிமையும். குழலும் - புல்லாங்குழலின் இசையும். பிழைத்த - தோற்ற. பணியும் - பாம்பும். பரமசிவன் பரவையார் ஊடலை யொழித்துச் சுந்தரமூர்த்தி கூட்டச் செய்வித்த ஆடலைக் காட்டியவனாறு, சுந்தரர் தமக்குச் சின்னாளாகத் திருமாலையும், அடைக்காயும் அளித்துவந்த கூனன் கூனையும், குருடன் குருடையும் தீர்த்து ஆட்கொண்டதை "புலவிதீர்க்க..............ஏவல்கொள்வார்" என்றார். இவ்வுண்மையை.— "கூற்றுவக்கேவற்செய்கின்ற திருவாரூரன் பொன்முடிமேல் - ஏற்றுந் தொண்டையரு மின்னடைக்காய் மிடிதருமக - கோறன்றூதத்து கூனனுங் கூன் போய்க் குருடனுங் கண்பெற்றமை - சாற்றித் திரியும் பழமொழியாமித் தாரணியிலே" என்னுந் திருத்தொண்டர் திருவந்தாதியா லுணர்க.

கூனுங் குருடுந் தீர்த்தேவல் கொள்வார் குலவு மலர்ப்பாதம்
யானும் பரவித் தீக்கின்றே னேழு பிறப்பின் முடங்குகூன். (கூ)

கூற்றுவநாயனூர் புராண முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ௩,௬௭௩.

---

வார்கொண்டவனமுலையாள்சருக்க முற்றுப்பெற்றது.

---

திருக்களந்தையம்பதியிலே ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தை என்றும செபித்துச் சிவபத்தி சிவனடியார்பத்திகளிலே முதிர்ந்த கூற்றுவநாயனூர் என்பவர் ஒருவரிருந்தார். அந்நாயனூர் சிவபெருமான் திருவருளால் உலகத்திற்கு வேண்டிய பொருளும், சதுரங்கசேனைகள் நிறைந்தவீரச் செருக்கின்மேன்மையும் உடையவராய், பல வேற்றரசர்களோடு போர்புரிந்து வெற்றியடைந்து, அவர்கள் வளப்பம்பொருந்திய திருநாடுகளெல்லாவற்றையுங் கைக்கொண்டு, திருமுடியொன்று தவிர மற்றையமன்னர் திருவெல்லாம் பெற்றவரானூர். அவர்தமக்குத் திருமுடி சூட்டும்பொருட்டுத் தில்லைவாழ் அந்தணர்களை வேண்டினூர். அவர்கள் "யாங்கள் சோழகுல மன்னவர்களுக்கன்றி மற்றையோர்களுக்கு முடிசூட்டோம்" என்று மறுத்துத் தங்களில் ஒருகுடியைப் பெருமைபொருந்திய அருமைமுடியைக் காவல்செய்யும்படி யிருத்திச் சேரநாட்டிற்குப் போனூர்கள். அதுகண்ட கூற்றுவநாயனூர் அன்றிரவு மனம்வருந்தி "நடராஜப்பெருமானே! தேவரீர் திருவடியையே சிறியேற்கு முடியாகக் கொடுத்தருளல்வேண்டும்" என்று சிந்திதிரைசெய்தார். அன்பர் அன்பையே திருமேனியாகவுடைய சபாநாயகர் நாயனூர்க்குச் சொப்பனத்திலே தோன்றித் தமது திருவடியைமுடியாகச் சூட்டியருளினூர். நாயனூர் பெருமான் அத்திருவடிகளையே முடியாகத்தாங்கி உலகத்தைப்புரந்து, பல க்ஷேத்திரங்களுக்குப்போய்த் திருத்தொண்டுகள்செய்து போந்தானையின்ற புண்ணியன் பொன்னடிநீழலை யடைந்தார்.

---

எட்டாவது

# பொய்யடிமையில்லாதபுலவர் சருக்கம்.

# பொய்யடிமையில்லாதபுலவர் புராணம்.

செய்யுணிகழ் சொற்றெளிவுஞ் செவ்வியநூல் பலநோக்கு
மெய்யுணர்வின் பயனிதுவே யெனத்துணிந்து விளங்கியொளிர்
மையணியுங் கண்டத்தார் மலரடிக்கே யாளானூர்
பொய்யடிமை யில்லாத புலவரெனப் புகழ்மிக்கார். (க)

---

(க) பொய்யடிமையில்லாத புலவர் - கபிலர் பரணர் நக்கீரர் முதலியோர். இவர்கள் வரலாற்றையும், பிறவற்றையும், திருவிளையாடற் புராணத்தானும், இறையனூர் அகப்பொருள் உரைப்பாயிர முதலியவற்றானும் தெளிக.

பொற்பமைந்த வரவாரும் புரிசடையார் தமையல்லாற்
சொற்பதங்கள் வாய்திறவாத் தொண்டுநெறித் தலைநின்ற
பெற்றியினின் மெய்யடிமை யுடையாராம் பெரும்புலவர்
மற்றவர்தம் பெருமையா ரறிந்துரைக்க வல்லார்கள். (௨)

ஆங்கவர்தம் மடியிணைக டலைமேற்கொண் டவனியெலாந்
தாங்கியவெண் குடைவளவர் குலஞ்செய்த தவமனையார்
ஓங்கிவளர் திருத்தொண்டி னுண்மையுணர் செயல்புரிந்த
பூங்கழலார் புகழ்ச்சோழர் திருத்தொண்டு புகல்கின்றாம். (௩)

பொய்யடிமையில்லாதபுலவர் புராண முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ௩,௧௪௯.



பொய்யடிமையில்லாத புலவர்கள் (கபிலர், பரணர், நக்கீரர் முதலிய நாற்பத்தொன்பதின்மர்) செய்யுளிலே நிகழும் சொற்றெளிவும், பல நூல்களை ஆராய்ந்து, அவைகளாற்பெறும் மெய்யுணர்ச்சியின் பயனும் சிவபெருமானுக்கு அடிமையாதலே என்னும் உண்மையுணர்ந்து, அங்ஙனமேயொழுகி, பிறதெய்வங்களைப் போற்றாது வாழ்ந்து தமிழ்த்தெய்வத்தின் தக்கையடி சேர்ந்தவர்கள்.



# புகழ்ச்சோழநாயனார் புராணம்.



குலகிரியின் கொடுமுடிமேற் கொடிவேங்கைக் குறியெழுதி
நிலவுதரு மதிக்குடைக்கீழ் நெடுநிலங்காத் தினிதளிக்கு
மலர்புகழ்வண் டமிழ்ச்சோழர் வளநாட்டு மாமூதூர்
உலகில்வள ரணிக்கெல்லா முள்ளுறையூ ராமுறையூர். (௧)

அளவில்பெரும் புகழ்நகர மதனிலணி மணிவிளக்கும்
இளவெயிலின் சுடர்ப்படலை யிரவொழிய வெறிப்பனவாய்க்
கிளரொளிசேர் நெடுவானப் பேராறுங் கொடிகெழுவும்
வளரொளிமா ளிகைநிரைகண் மருங்குடைய மறுகெல்லாம். (௨)

நாகதலத் தும்பிலத்து நானிலத்து நலஞ்சிறந்த
போகமனைத் தினுக்குறுப்பாம் பொருவிறந்த வளத்தினவாய்
மாகநிறைந் திடமலிந்த வரம்பில்பல பொருள்பிறங்கும்
ஆகரமொத் தளவிலவா வணவீதிக ளெல்லாம். (௩)

---

(௧) உள்ளுறை - இருப்பிடம். (௨) படலை - பரப்பு, செறிவு. யாறுங்கொடி கெழுவும் - ஆகாய கங்கையினிடத்தே கொடிபோய்ப் பிரதிபிம்பிக்கின்றன. (௩) நாகதலம் - விண்ணுலகம். நானிலம் - குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல். மாகம் - ஆகாயம். ஆகரம் - இருப்பிடம், சுரங்கம். ஆவணவீதிகள் - கடைவீதிகள்.

பாரணையா மதம்பொழிந்து பனிவிசும்பு கொளமுழங்கும்
போர்முகவெங் கறையடியும் புடையினமென் றடையவருஞ்
சோரமழையின் விடுமதத்துச் சுடருநெடு மின்னோடைக்
கார்முகிலும் பலதெரியா களிற்றுநிரைக் களமெல்லாம். (௪)

படுமணியும் பரிச்செருக்கு மொலிகிளரப் பயில்புரவி
நெடுநிரைமுன் புல்லுண்வாய் நீர்த்தரங்க நுரைநிவப்ப
விடுசுடர்மெய் யுறையடுக்கன் முகில்படிய விளங்குதலாற்
றொடுகடல்க ளனையபல துரங்கசா லைகளெல்லாம். (௫)

துளைக்கையிரா வதக்களிறுந் துரங்கவர சுந்திருவும்
விளைத்தவமு துந்தருவும் விழுமணியுங் கொடுபோத
வுளைத்தகட லிவற்றொன்று பெறவேண்டி யும்பரூர்
வளைத்ததுபோன் றுளதங்கண் மதில்சூழ்ந்த மலர்க்கிடங்கு. (௬)

காரேறுங் கோபுரங்கள் கதிரேறு மலர்ச்சோலை
தேரேறு மணிவீதி திசையேறும் வசையிலணி
வாரேறு முலைமடவார் மருங்கேறு மலர்க்கணையொண்
பாரேறும் புகழுறந்தைப் பதியின்வளம் பகர்வரிதால். (௭)

அங்ககரிற் பாரளிக்கு மடலரச ராகின்றார்
மன்னுதிருத் தில்லைநகர் மணிவீதி யணிவிளக்குஞ்
சென்னிநீ டனபாயன் றிருக்குலத்து வழிமுதலோர்
பொன்னிநதிப் புரவலனார் புகழ்ச்சோழ ரெனப்பொலிவார். (௮)

ஒருகுடைக்கீழ் மண்மகளை யுரிமையினின் மணம்புணர்ந்து
பருவரைத்தோள் வென்றியினாற் பார்மன்னர் பணிகேட்பத்
திருமலர்த்தும் பேருலகு செங்கோலின் முறைநிறப்ப
அருமறைச்சை வந்தழைப்ப வரசளிக்கு மந்நாளில் (௯)

பிறைவளருஞ் செஞ்சடையார் பேணுசிவா லயமெல்லா
நிறைபெரும்பூ சனைவிளங்க நீடுதிருத் தொண்டர்தமைக்

---

(௪) முகம் - கோடு. கறையடி - யானை. மழையை மதமாகவும், மின்னை ஓடையாகவும் யானைகளேற்ப அமைந்தனர். (௫) படுமணியும் - ஒன்றோடொன்று தாக்கி ஒலிக்கின்ற மணிகளும். பரிச்செருக்கும் - குதிரைகளின் கனைப்பும். நீர் - பருகிய. தரங்கநுரை நிவப்ப - அலைகளையும், நுரைகளையும் ஒப்பப்பொங்க. மெய் உறை - உடலும், கவசங்களும். அடுக்கல் முகில்படிய - மலைகளையும் அவற்றின் மீதுபடியும் மேகங்களையும் புரைய. துரங்கம் - குதிரை. (௬) மலர்க்கிடங்கு - பூச்செறிந்த அகழியானது. துரங்க அரசும் - உச்சைச்சிரவமென்னுங் குதிரையையும். திருவும் - இலக்குமியையும். தருவும் - பஞ்சதருக்களையும் (கற்பகம், மந்தாரம், பாரிசாதம், அரிசந்தனம், சந்தானம்) விழுமணி - உயர்ந்த சிந்தாமணியையும். கொடுபோத - (வானவர்கள்) கொண்டுபோனபடியால். கடல் - திருப்பாற்கடல். உம்பரூர் - தெய்வலோகத்தை. (௭) கதிர் - சந்திராதித்தர்.

குறையிரந்து வேண்டுவன குறிப்பின்வழி கொடுத்தருளி
முறைபுரிந்து திருநீற்று முதனெறியே பாலிப்பார். (க0)

அங்கணினி துறையுநா ளரசிறைஞ்ச வீற்றிருந்து
கொங்கரொடு குடபுலத்துக் கோமன்னர் திறைகொணரத்
தங்கள்குல மரபின்முதற் றனிநகராங் கருவூரின்
மங்கலநா ளரசுரிமைச சுற்றமுடன் வந்தணைந்தார். (கக)

வந்துமணி மதிற்கருவூர் மருங்கணைவார் வானவர்சூழ்
இந்திரன்வந் தமராபுரி யெய்துவா னெனவெய்திச
சிந்தைகளி கூர்ந்தாஞர் மகிழ்திருவா னிலைக்கோயின்
முந்துறவந் தணைந்திறைஞ்சி மொய்யொளிமா ளிகைபுகுந்தார். (கஉ.)

மாளிகைமுன் னத்தாணி மண்டபத்தின் மணிபுனைபொற்
கோளரியா சனத்திருந்து குடபுலமன் னவர்கொணர்ந்த
ஒளிநெடுங் களிற்றினணி யுலப்பில்பரி துலைக்கனக
நீளிடைவில் லிலகுமணி முதனிறையுந் திறைகண்டார். (கங)

திறைகொணர்ந்த வரசர்க்குச செயலுரிமைத் தொழிலருளி
முறைபுரியுந் தனித்திகிரி முறைநிலவா முரணரசர்
உறைபரண முளவாகிற் றெரிந்துரைப்பீ ரெனவுணர்வு
நிறைமதிநீ டமைச்சர்க்கு மொழிந்தருளி நிகழுநாள். (கச)

சென்றுசிவ காமியார் கொணர்திருப்பள் ளித்தாமம்
அன்றுசிதை றுங்களிற்றை யறவெறிந்து பாகரையுங்
கொன்றவெறி பத்தரெதி ரென்னையுங்கொன் றருளுமென
வென்றிவடி வாள்கொடுத்துத் திருத்தொண்டின் மிகச்சிறந்தார். (கரு)

விளங்குதிரு மதிக்குடைக்கீழ் வீற்றிருந்து பாரளிக்குந்
துளங்கொளிநீண் முடியார்க்குத் தொன்முறைமை நெறியமைச்சர்
அளந்ததிறை முறைகொணரா வரசனுள னொருவனென
உளங்கொளளும் வகையுரைப்ப வுறுவலியப்பான் முறுவலிப்பார். (கசு)

ஆங்கவனா ரென்றருள வதிகனவ னணித்தாக
ஓங்கெயில்சூழ் மலையரணத் துள்ளுறைவா னெனவுரைப்ப
ஈங்குநமக் கெதிர்நிற்கு மரணுளதோ படையெழுந்தப்
பாங்கரணந் துகளாகப் பற்றறுப்பீ ரெனப்பகர்ந்தார். (கஎ)

அடல்வளவ னாணையினா லமைச்சர்களும் புறம்போந்து
கடலனைய நெடும்படையைக் கைவகுத்து மேற்செல்வார்
படர்வனமு நெடுங்கிரியும் பயிலரணும் பொடியாக
மிடலுடைநாற் கருவியுற வெஞ்சமா மிகவிளைத்தார். (கஅ)

---

(கங) ஒளி-ஒழுங்கு.

வளவனார் பெருஞ்சேனை வஞ்சிமலர் மிலைந்தேற்ப
அளவிலா ணக்குறுமபி லதிகர்கோ னடற்படையும்
உளநிறைவெஞ் சினந்திருவ யுயர்காஞ்சி மலைந்தேற்பக்
கிளர்கடல்க ளிரண்டென்ன விருபடையுங் கிடைத்தனவால். (௧௯)

வேறு.

கயமொடு கயமெதிர் குத்தின, வயமுட னயமுனை முட்டின
வயவரும் வயவரு முற்றனர், வியனமர் வியலிட மிக்கதே. (௨0)
மலையொடு மலைகண மலைந்தென, வலைமத வருவி கொழிப்பொடு
சிலையினர் விசையின் மிசைத்தெறு, கொலைமத கரிகொலை யுற்றவே. (௨௧)

வேறு.

சூறை மாருத மொத்தெதிர், சேறு பாயப்பரி வித்தகர்
வேறு வேறு தலைப்பெய்து, சீறி யாவி செகுத்தனர். (௨௨)
மண்டு போரின் மலைப்பவர், துண்ட மாயிட வுற்றெதிர்
கண்ட ராவி கழித்தன, ருண்ட சோறு கழிக்கவே. (௨௩)
வீடி னருட விற்பொழி, நீடு வார்குரு திப்புனல்
ஓடும் யாறென வொத்தது, கோடு போல்வ பிணக்குவை. (௨௪)
வானி லாவு கருங்கொடி, மேனி லாவு பருந்தினம
ஏனை நீள்கழு கின்குல, மான ஊனொ டெழுந்தவே. (௨௫)

வேறு.

வரிவிற் கதைசக் கரமுற் கரம்வாள்
சுரிகைப் படைசத் திகழுக் கடைவேல்
எரிமுத் தலைகப் பணமெற் பயில்கோன்
முரிவுற் றனதுற் றனமொய்க் களமே. (௨௬)
வடிவே லதிகன் படைமா ளவரைக்
கடிசூ ழரணக் கணவாய் நிரவிக்
கொடிமா மதினீடு குறும்பொறையூர்
முடிநே ரியனார்படைமுற் றியதே. (௨௭)

---

(௧௯) வஞ்சி - பகைவர்மேற் செல்வார்க்குரிய மாலை. காஞ்சி - படைமுன் எதிரூன்றும் வீரர்கள் அணியுமாலை. (௨0) கயம் - யானை. அயம் - குதிரை. வயவர் - வீரர். (௨௧) மலைந்தென - எதிர்த்தாற்போல. (௨௨) மாருதம் - சுழல்காற்று (௨௪) கோடு - கரை. (௨௫) கொடி - காக்கை. (௨௬) வரிவில் - கட்டமைந்த வில்லும். சுரிகை - உடைவாளும் சத்தி - வேலும். கழுக்கடை - சிறுசூலமும். கப்பணம் - இரும்பினால் யானைநெருஞ்சில் முள்வடிவமாகச்செய்த ஆயுதமும். எற்பயில்கோல் - ஒளிபெற்ற அம்பும். (௨௭) நேரியனார் - புகழ்ச்சோழநாயனார். வரை......நிரவி முற்றியது - மலையில் காவல்கொண்ட கோட்டையையும், கணவாயையும் சமமாக்கி வளைந்தது.

முற்றும்பொரு சேனை முனைத்தலையிற்
கற்றிண் புரிசைப் பதிகட் டழியப்
பற்றுந் துறைநொச்சி பரிந் துடையச்
சுற்றும் படைவீரர் துணித்தனரே. (௨௮)

மாறுற் றவிறற படைவா ளதிகன்
நூறுற்ற பெரும்படை நூழில்படப்
பாறுற்ற வெயிற்பதி பற்றறவிட்
டேறுற் றனனே றடி யருஞ்சுரமே. (௨௯)

அதிகன்படை போர்பொரு தற்றதலைப்
பொதியின்குவை யெண்ணில போயினபின்
நிதியின்குவை மங்கையர் நீள்பரிமா
எதிருங்கரி பற்றின ரெண்ணிலரே. (௩௰)

அரணமுற் றெறிந்த வமைச்சர்கடாம்
இரணத்தொழில்விட் டெயில்சூழ் கருவூர்
முரணுற்ற சிறப்பொடு முன்னினர்நீள்
தரணித் தலைவன் கழல்சார் வுறவே. (௩௧)

மன்னுங் கருவூர்நகர் வாயிலின்வாய்
முன்வந்த கருந்தலை மொய்குவைதான்
மின்னுஞ்சுடர் மாமுடி வேல்வளவன்
தன்முன்பு கொணர்ந்தனர் தானையுளோர் (௩௨)

மண்ணுக்குயி ராமெனு மன்னவனா
ரெண்ணிறபெரு குந்தலை யாவையினு
நண்ணிக்கொண ருந்தலை யொன்றிடைக்
கண்ணுற்றதொர் புன்சடை கண்டனரே. (௩௩)

வேறு.

கண்டபொழு தேநடுங்கி மனங்கலங்கிக் கைதொழுது
கொண்டபெரும் பயத்தினுடன் குறித்தெதிர்சென் றதுகொணர்ந்த
திண்டிறலோன் கைத்தலையிற் சடைதெரியப் பார்த்தருளிப்
புண்டரிகத் திருக்கண்ணீர் பொழிந்திழியப் புரவலனார். (௩௪)

முரசடைத்திண் படைகொடுபோய் முதலமைச்சர் முனைமுருக்கி
உரைசிறக்கும் புகழ்வென்றி யொன்றொழிய வொன்றுமால்

(௨௮) கல்திண்புரிசை - கற்களாலாகிய வலிய மதில்களையுடைய. நொச்சி - புகைவாக்கெதிருன்றித் தம்மதில காப்போர அணியுமாலை (௨௯) நூறுற்ற பெருபடை நூழில்பட-அழித்துவென்ற தஞ்சேனைகள் இப்போது அழியதாய. பாறுற்ற- அழிந்த. எயில் மதில்சூழ்ந்த. சுரம்-அருநெறி (பாலை). (௩௰) அற்றதலை - வெட்டுண்ட சிரங்கள்.

திரைசெறிந்த கடலுலகிற் றிருநீற்றி னெறிபுரந்தியான்
அரசளித்த படிசால வழகிதென வழிந்தயர்வார். (௩௫)

தார்தாங்கிக் கடன்முடித்த சடைதாங்குந் திருமுடியார்
நீர்தாங்குஞ் சடைப்பெருமா னெறிதாங்கு கண்டவரானார்
சீர்தாங்கு மிவர்வேணிச் சிரந்தாங்கி வரக்கண்டும்
பார்தாங்க விருந்தேனோ பழிதாங்கு வேனென்றார். (௩௬)

என்றருளிச் செய்தருளி யிதற்கிசையும் படிதுணிவார்
நின்றநெறி யமைச்சர்க்கு நீணிலங்கா தரசளித்து
மன்றினிடம் புரிவார்தம் வழித்தொண்டின் வழிநிற்ப
வென்றிமுடி யென்குமரன் றனைப்புனைவீ ரெனவிதித்தார். (௩௭)

அம்மாற்ற மேகேட்டழியு மமைச்சரையு மிடரகற்றிக்
கைம்மாற்றுஞ் செயலின்மை கடனாற்றுங் கருத்துடையார்
செம்மார்க்கந் தலைநின்ற செந்தீமுன் வளர்ப்பித்துப்
பொய்மாற்றுந் திருநீற்றுப் புனைகோலத் தினிற்பொலிந்தார். (௩௮)

கண்டசடைச் சிரத்தினைப்பொற் கனகமணிக் கலத்தேந்திக்
கொண்டுதிரு முடிதாங்கிக் குலவுஎரி வலங்கொள்வார்
அண்டர்பிரான் திருநாமத் தஞ்செழுத்து மெடுத்தோதி
மண்டுதழற் பிழம்பினிடை மகிழ்ந்தருளி யுள்புக்கார். (௩௯)

புக்கபொழு தலர்மாரி புவிநிறையப் பொழிந்திழிய
மிக்கபெரு மங்கலதூ ரியமவிசும் பினின்முழக்கெடுப்பச்
செக்கர்நெடுஞ் சடைமுடியார் சிலம்பலம்பு சேவடியின்
அக்கருணைத் திருநிழற்கீ ழாராமை யமர்ந்திருந்தார். (௪௰)

முரசங்கொள் கடற்றானை மூவேந்தர் தங்களின்முன்
பிரசங்கொள் நறுந்தொடையற் புகழ்ச்சோழர் பெருமையினைப்
பரசுங்குற் றேவலினா லவர்பாதம் பணிந்தேத்தி
நரசிங்க முனையர்திற நாமறிந்த படியுரைப்பாம். (௪௧)

புகழ்ச்சோழநாயனார்புராண முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்-௩,௧௮௭.

---

சோழமண்டலத்திலே, உறைந்தையம்பதியிலே, உலகமுழுவதையும் ஒரு குடைக்கீழாண்ட புகழ்ச்சோழநாயனார் என்பவர் ஒருவர் இருந்தார். அவர் சைவசமயந் தழைத்தோங்கச் செங்கோல் தாங்கிச் சிவாலயங்கள் தோறும் பூசனை வழாது நடப்பித்தும், திருத்தொண்டர்களுக்கு வேண்டியவற்றை அவரவர் குறிப்பறிந்து கொடுத்தும் வாழ்ந்து வந்தார்.

இங்ஙனம் வாழ்ந்து வருநாளில், கொங்க தேசத்தரசரும், குடக தேசத்தரசரும் கொணர்ந்த திறையை வாங்கும்பொருட்டு மந்திரி பிரதானிகளோடு தங்கள் மரபிற்குரிய நகரமாகிய கருவூரை யடைந்து, அங்குள்ள ஆனிலை என்னும் ஆலயத்தை வணங்கிச் சிவதரிசனஞ்செய்து திருமாளிகையில் நுழைந்து, அத்தாணி மண்டபத்திலே அரியாசனத்தமர்ந்து, கொங்க தேசத்தவரும், குடக தேசத்தவரும் கொண்டுவந்த திறைகளைக் கண்ணுற்று, அவர்கள் அரசுரிமைத்தொழிலை அருள புரிந்து, அமைச்சர்களை நோக்கி "நமது ஆணைக்குக் கீழ்ப்படாத அரசர் உளரேல் அறிந்து சொல்லுங்கள்" என்றார். அதுகாலை அரசர் அன்பில் முதிர்ந்த சிவகாமியாண்டார் ஆனிலைப் பெருமானார்க்குக் கொண்டுபோன புட்பங்களைச் சிதறிய தமது யானையையும், பாகர்களையும் மழுவால் வீசிக்கொன்ற எறிபத்த நாயனார் எதிரணைந்து "சுவாமீ! என்னையுங் கொன்றருள்க" என்று வாளாயுதத்தைக் கொடுத்துத் திருத்தொண்டிலே மேம்பட்டவராயினார். மந்திரிமார்கள் மன்னர் பெருமானைப் பணிந்து "தேவரீர்க்குக் கீழ்ப்படியாத அரசன் ஒருவனுளன். அவன் அதிகனென்பவன். அவன் அருகேயுள்ள மலையரணத்துள்ளே வதிபவன்" என்றார்கள். உடனே புகழ்ச்சோழநாயனார் மந்திரிகளைப் பார்த்து "நீங்கள் சேனைகளோடு சென்று, அவனரணைத் துகள்செய்து வாருங்கள்" என்றார். அப்படியே அமைச்சர்கள் சதுரங்க சேனைகளோடு அம்மலையரணை யடைந்து, அதிகனுடைய சேனைகளையெல்லாம் முறியடித்து வதைத்தார்கள். அதுகண்ட அதிகன் அஞ்சியோடி அருஞ்சுரத்தில் ஒளித்துக் கொண்டான். புகழ்ச்சோழ நாயனார் சேனை வீரர்களில் பலர் அதிகனுடைய சேனாவீரர்களின் சிரங்களையும், அவர்கள் செல்வங்களையும், பிறவற்றையும் எடுத்துக்கொண்டு மந்திரி முதலியவர்களுடன் கருவூருக்கு வந்தார்கள். சிவசின்னங்களிலே அதிக பத்திவாய்ந்த புகழ்ச்சோழநாயனார் தமது படைவீரர்கள் கொணர்ந்த தலைக்குவைகளுள்ளே ஒருதலையிலே புன்சடையைக் கண்டார். கண்டதும் கண்களில் நீர்பெருக அலறிக் கதறிப் புலம்பி "நான் சைவசமயந்தழைக்க அரசியற்றி வருவது மிக அழகாயிருக்கிறது. அந்தோ! மாலையணிந்து தமது சோற்றுக்கடனை முடித்துச் சடைதரித்த அடியவர் சிவபெருமான் அருளிச்செய்த உண்மை நெறியைக் கண்டவராவார். அவரது திருச்சடைத் தலையைக் கண்டும் பழிதாங்கிய பாதகனாகிய யான் பூமியைத் தாங்குவதற்கு இருந்தேனே" என்று ஒன்று புரியத் துணிந்து, அமைச்சர்களை நோக்கி "இவ்வுலகத்தையாண்டு சிவபெருமான் வழித்தொண்டை வழாது செய்வான் என்புதல்வனுக்கு முடிசூட்டுங்கள்" என்று விதித்தார். அது கேட்டு அவர்கள் மனங்கலங்கி நின்றார்கள். அவர்களைத் தேற்றி அக்கினியை முன்னே வளர்ப்பித்து, விபூதியணிந்து அந்தத் திருச்சடைத்தலையை ஒரு பொன்மணிக்கலத்திலே ஏந்தித் தமது திருமுடியிலே தாங்கி அத்தீயை வலம்வந்து அஞ்செழுத்தை ஓதிக்கொண்டு அதிலே புகுந்து புனிதவேலைப் பெற்ற புண்ணியனடியை நண்ணினார்.

---

## நரசிங்கமுனையரையநாயனார் புராணம்.

கோடாத நெறிவிளக்குங் குலமரபி னரசளித்து
மாடாக மணிகண்டர் திருநீறே மனங்கொள்வார்

தேடாத பெருவளத்திற் சிறந்ததிரு முனைப்பாடி
நாடாளுங் காவலனார் நரசிங்க முனையரையர். (க)

இம்முனையர் பெருந்தகையா ரிருந்தரசு புரந்துபோய்த்
தெம்முனைகள் பலகடந்து தீங்குநெறி பாங்ககல
மும்முனைநீ டிலைச்சூல முதற்படையார் தொண்டுபுரி
அம்முனைவ ரடியடைவே யரும்பெரும்பே றெனவடைவார். (௨)

சினவிடையார் கோயிறொறுந் திருச்செல்வம் பெருக்குநெறி
யனவிடையா ருயிர்துறக்க வருமெனினு மவைகாத்து
மனவிடையா மைதொடைய லணிமார்பர் வழித்தொண்டு
கனவிடையா கிலும்வழுவாக் கடனாற்றிச் செல்கின்றார். (௩)

ஆறணிந்த சடைமுடியார்க் காதிரைநா டொறுமென்றும்
வேறுநிறை வழிபாடு விளக்கிப்பூ சனைமேவி
நீறணியுந் தொண்டரணை வார்க்கெல்லா நிகழ்பசும்பொன்
நூறுகுறை யாமலளித் தினவமுது நுகர்விப்பார். (௪)

ஆனசெயன் முறைபுரிவா ரொருதிருவா திரைநாளில்
மேன்மைநெறித் தொண்டர்க்கு விளக்கியபொன் னிடும்பொழுதின்
மானநிலை யழிதன்மை வருங்காமக் குறிமலர்ந்த
ஊனநிகழ் மேனியரா யொருவர்நீ றணிந்தணைந்தார். (௫)

மற்றவர்தம் வடிவிருந்த படிகண்டு மருங்குள்ளார்
உற்றவிகழ்ச் சியராகி யொதுங்குவார் தமைக்கண்டு
கொற்றவனா ரெதிர்சென்று கைகுவித்துக் கொடுபோந்து
பெற்றியினார் தமைமிகவுங் கொண்டாடிப் பேணுவார். (௬)

சீலமில ரேயெனினுந் திருநீறு சார்ந்தாரை
ஞாலமிகழ்ந் தருநரக நண்ணாமை யெண்ணுவார்
பாலணைந்தார் தமக்களித்த படியிரட்டிப் பொன்கொடுத்து
மேலவரைத் தொழுதினிய மொழிவிளம்பி விடைகொடுத்தார். (௭)

இவ்வகையே திருத்தொண்டி னருமைநெறி யெந்நாளுஞ்
செவ்வியவன் பினிலாற்றித் திருந்தியசிந் தையராகிப்
பைவளர்வா ளரவணிந்தார் பாதமலர் நிழற்சேர்ந்து
மெய்வகைய வழியன்பின் மீளாத நிலைபெற்றார். (௮)

விடநாக மணிந்தபிரான் மெய்த்தொண்டு விளைந்தநிலை
உடனாகு நரசிங்க முனையர்பிரான் கழலேத்தித்

(க) கோடாத - மாறுபடாத, நீதிதவறாத. மாடாக - செல்வமாக. (௩) நெறியன இடை - செயல்களிலே, இடை - ஏழனுருபு. மனவு இடை - சனபு மணிகளினிடையே. சங்குமணி யெனினுமாம்.

தடகாக மதஞ்சொரியத் தனஞ்சொரியுங கலஞ்சேருங்
கடனைகை யதிபத்தர் கடனைகைக் கவினுரைப்பாம். (௧)

நரசிங்கமுனையரையநாயனார்புராண முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-௩, ௧௬௯.

---

நரசிங்கமுனையரையநாயனார் என்பவர் திருமுனைப்பாடி நாட்டிலே குறுநிலமன்னர் குலத்திலே அவதரித்தவர். அவர் எல்லா உயிரும் சைவசமயத்தைத் தழுவிப்பேரின்பத்தை நுகரவேண்டும் என்னும் பெருங்கருணையினாலேயே பகையரசர்களை வென்று திருவருளை முன்னிட்டு அரசாட்சி செய்துவந்தவர்; விபூதியையே பெருஞ்செல்வமாகக் கொண்டவர்; சிவனடியார்கள் திருவடிசசாரபே பெருமபேறெனக் கொண்டவர்; சிவாலயங்களிலே பூசனையைக் குறைவற நடத்தும புண்ணியமேற்றவர்

இத்துணைப் புண்ணியத்தை வளர்த்துவந்த நாயனார்பெருமான் திருவாதிரை நட்சத்திரந்தோறும் விசேஷபூசை முதலியன செய்து, அன்று தம்பால் எழுந்தருளும் அடியவர்களை மாகேஸ்வரபூசை செய்வித்து, ஒவ்வொருவர்க்கும் நூறுபொன்னுங கொடுத்துவந்தார். ஒரு திருவாதிரையிலே நாயனார் தொண்டர்களுக்குப் பொன்னளிக்கும் பொழுது (காமக்குறி மலர்ந்த) தூர்த்த வேடமுள்ள ஒருவர திருநீறு தரித்துக்கொண்டு வந்தார். அவரைக்கண்ட அடியவர்கள் இகழ்ந்து ஒதுங்கினார்கள். அதுகண்ட நரசிங்கமுனையரையர் அத்தூர்த்தர் எதிரேசென்று வணங்கி அழைத்துக்கொண்டு சென்று முகமன்கூறிச் சீலமில்லாதவர்களாயினும திருநீறு தரித்தவர்களை உலகத்தார் இகழ்ந்து அருநரகில் அழுந்தாவண்ணம் அவருக்கு இரட்டிப்பாக இருநூறு பொன் கொடுத்துத் தொழுது இனியமொழிபேசி விடைகொடுத்தனுப்பினார். இன்னோரன்ன அரிய திருத்தொண்டுகளை மெய்யன்போடு செய்து சூரனைப்பிளந்ததீரன் தந்தையாஞ் சிவனடி சேர்ந்தார்.

---

# அதிபத்தநாயனார் புராணம்.

மன்னி நீடிய செங்கதி ரவன்வழி மரபில்
தொன்மை யாமுதற் சோழர்தந் திருக்குலத் துரிமைப
பொன்னி நாடெனுங் கற்பகப் பூங்கொடி மலர்போல்
நன்மை சான்றது நாகபட் டினத்திரு நகரம். (௧)

தாம நித்திலக் கோவைகள சரிதிடச சரிந்த
தேம லர்க்குழன் மாதர்பந் தாடுதெற் றிகள்சூழ்
காமர் பொற்சுடர் மாளிகை கருங்கடன் முகந்த
மாமு கிற்குல மலையென வேறுவ மருங்கு. (௨)

---

(௨) தாம நித்திலக்கோவைகள் - சரமாகக் கோக்கப்பட்ட முத்துமாலைகள். தெற்றிகள் - திண்ணைகள். மா - கருமை.

பெருமை யிற்செறி பேரொலி பிறங்கலி னிறைந்து
திரும கட்குவாழ் சேர்விட மாதலில் யாவுந்
தருத லிற்கட றன்னினும் பெரிதெனத் திரைப்பாற
கரிப ரித்தொகை மணிதுகில் சொரிவதாங் கலத்தால். (௩)

நீடு தொல்புகழ் நிலம்பதி னெட்டினு நிறைந்த
பீடு தங்கிய பலபொருண் மாந்தர்கள் பெருகிக
கோடி நீடனக் குடியுடன குவலயங் காணு
மாடி மண்டலம் போல்வதவ் வணிகிளர் மூதூர். (௪)

அந்நெ டுந்திரு நகர்மருங் கலைகடல் விளிம்பிற்
பன்னெ டுந்திரை நுரைதவழ் பாங்கரின ஞாங்கர்
மன்னு தொன்மையின் வலைவளத் துணைவினின மலிந்த
தன்மை வாழ்குடி மிடைந்தது தடநுளைப் பாடி. (௫)

புயல ளப்பன வெனவலை புறம்பணை குரம்பை
அயல ளப்பன மீன்விலைப் பசும்பொனி னடுக்கல்
வியல ளக்கரில் விடுந்திமில் வாழ்நர்கள் கொணர்ந்த
கயல ளப்பன பரத்தியர் கருநெடுங் கண்கள். (௬)

உணங்கன் மீன்கவர் வுறுநசைக குருகுட னணைந்த
கணங்கொ ளோதிமங் கருஞ்சினைப் புன்னையங் கானல்
அணங்கு நுண்ணிடை நுளைச்சிய ரசைநடைக் கழிந்து
மணங்கொள் கொம்பரின மருங்குநின் றிழியல மருளும். (௭)

வலைநெ டுந்தொடர் வடம்புடை வலிப்பவ ரொலியும்
விலைப கர்ந்துமீன் குவைகொடுப் பவர்விளி யொலியுந்
தலைசி றந்தவெள் வளைசொரி பவர்தழங் கொலியும
அலைநெ டுங்கட லதிரொலிக் கெதிரொலி யனைய. (௮)

அனைய தாகிய வந்நுளைப் பாடியி லமர்ந்து
மனைவ ளம்பொலி நுளையர்தங் குலத்தினில் வந்தார
புனையி ளம்பிறை முடியவ ரடித்தொண்டு புரியும்
வினைவி ளங்கிய வதிபத்த ரெனநிகழ் மேலோர் (௯)

---

(௩) பெருமை - பெரிய மேகங்கள் எனினுமாம். (௪) ஆடிமண்டலம் - கண்ணாடிவட்டம். (௬) புயல் அளப்பன - மேக மண்டலத்தை அளப்பனபோலுயர்ந்த, முகில்கள் அளவிட்டாற்போல வலைகள் (வலைகள் மேகச்செறிவு போல்வன என்பது). குரம்பை அயல...அடுக்கல் - சிறு குடிசைகளின் மருங்கில் அளக்கப்படுவன மீன விற்றலில் வரும் செம்பொன்குவியல்களே. அளக்கர் - கடல். திமில் வாழ்நர்கள் - படகினால் ஜீவிப்பவர்கள். கயல் - கயல்மீன்கள். (௭) உணங்கல் மீன் - உலர்ந்த மீன் ; கருவாடு ; குருகு - நீர்ப்பறவை ; ஓதிமம் கணங்கள் - அன்னக்கூட்டங்கள். சினை - கிளை.

ஆங்க வன்பர்தா நுளையர்தந் தலைவரா யவர்கள்
ஏங்கு தெண்டிரைக் கடலிடைப் பலபட வியக்கிப்
பாங்கு சூழ்வலை வளைத்துமீன் படுத்துமா குவிக்கும்
ஓங்கு பல்குவை யுலப்பில வுடையரா யுயர்வார். (௧0)

முட்டின் மீன்கொலைத் தொழில்வளத் தவர்வலை முகந்து
பட்ட மீன்களி லொருதலை மீன்படுந் தோறும்
நட்ட மாடிய நம்பருக் கெனநளிர் முந்நீர்
விட்டு வந்தனர் விடாதவன் புடனென்றும் விருப்பால். (௧௧)

வாகு சேர்வலை நாளொன்றின் மீனொன்று வரினும்
ஏக நாயகர் தங்கழற் கெனவிடு மியல்பால்
ஆகு நாள்களி லனேகநா ளடுத்தொரு மீனே
மேக நீர்படி வேலையிற் படவிட்டு வந்தார். (௧௨)

மீன்வி லைப்பெரு குணவினின் மிகுபெருஞ் செல்வந்
தான்ம றுத்தலி னுணவின்றி யருங்கிளை சாம்பும்
பான்மை பற்றியும் வருந்தலர் பட்டமீ னொன்று
மான்ம றிக்கரத் தவர்கழற் கெனவிட்டு மகிழ்ந்தார். (௧௩)

சால நாள்களிப் படிவரத் தாமுண வயர்த்துக்
கோல மேனியுந் தளரவுந் தந்தொழில் குறையாச்
சீல மேதலை நின்றவர் தந்திறந் தெரிந்தே
யால முண்டவர் தொண்டரன் பெனுமமு தணிவார். (௧௪)

ஆன நாளொன்றி லவரொரு மீனுமங் கொழித்துத்
தூநி றப்பசுங் கனகநற் சுடர்நவ மணியால்
மீனு றுப்புற வமைத்தல கடங்கலும் விலையாம்
பான்மை யற்புதப் படியதொன் றிடுவலைப் படுத்தார். (௧௫)

வாங்கு நீள்வலை யலைகடற் கரையில்வந் தேற
ஓங்கு செஞ்சுட ருதித்தென வுலகெலாம் வியப்பத்
தாங்கு பேரொளி தழைத்திடக் காணலு மெடுத்துப்
பாங்கு நின்றவர் மீனொன்று படுத்தன மென்றார். (௧௬)

என்று மற்றுளோ ரியம்பவு மேறுசீர்த் தொண்டர்
பொன்றி ரட்சுடர் நவமணி பொலிந்தமீ னுறுப்பால்
ஒன்று மற்றிது வென்னையா ளுடையவர்க் காகுஞ்
சென்று பொற்கழல் சேர்கெனத் திரையொடு திரித்தார். (௧௭)

அகில லோகமும் பொருண்முதற் றூமெனு மளவிற்
புகலு மப்பெரும் பற்றினைப் புரையற வெறிந்த

---

(௧௧) முந்நீர் - சமுத்திரம். (௧௨) வாகு - ஒழுங்கு; அழகு.

இகலின் மெய்த்திருத் தொண்டர்முன் னிறைவர்தாம் விடைமேன்
முகில்வி சும்பிடை யணைந்தனர் பொழிந்தனர் முகைப்பூ. (௧௮)

பஞ்ச நாதமு மெழுந்தன வதிபத்தர் பணிந்தே
அஞ்ச லிக்கரஞ் சிரமிசை யணைத்தனுநின் றவரை
நஞ்சு வாண்மணி மிடற்றவர் சிவலோக நண்ணித்
தஞ்சி றப்புடை யடியர்பாங் குறத்தலை யளித்தார். (௧௯)

தம்ம றம்புரி மரபினிற் றரும்பெருந் தொண்டு
மெய்ம்மை யேபுரி யதிபத்தர் விளங்குதாள் வணங்கி
மும்மை யாகிய புவனங்கண் முறைமையிற் போற்றுஞ்
செம்மை நீதியார் கலிக்கம்பர் திருத்தொண்டு பகர்வாம். (௨௦)

## அதிபத்தநாயனார்புராண முற்றிற்று.

ஆ. திருவிருத்தம்-௪,௦௧௬.

---

சோழநாட்டிலே, நாகபட்டினத்திலே, நுளைப்பாடியிலே, வலைஞர் குலத்திலே, சிவபத்தியிற் சிறந்தவரும், பரதவர்களுக்குத் தலைவரும், அவர்கள் வலைவீசிக் குவிக்கும் மீன்குவைகளைப்பெற்று வாழ்பவரும் ஆகிய அதிபத்தநாயனார் என்பவர் ஒருவர் இருந்தார். அவர் சிவநேயத்தில் தலையன்புடையவராதலால், வலைப்படும் மீன்களில் ஒரு தலைமீனை "இது சிவபெருமானுக்கு" என்று கடலிலே விட்டுவந்தார். ஒருமீன் அகப்படினும் அதை அரனார்க்கெனச் சமுத்திரத்திலே விடுவார். இங்ஙனம் பத்திநெறியை வளர்த்து வருநாளில் சிவபெருமான் திருவருளால் நாடோறும் ஒவ்வோர் மீனே அகப்பட, அதனை இச்சியாது வழக்கம்போல் கடவுளர் பெருமானுக்கே விட்டுவந்தார். வருநாளில் நாயனார் செல்வங்குறைந்தது; சுற்றங்களும் உணவின்றி வருந்தின. அதிபத்தருக்கும் உணவின்மையால் அவர் திருமேனியும் தளர்ச்சியடைந்தது. நாயனார் தமது திருமேனி தளர்வுறினும் சிவபத்தியிற் சிறிதுந் தளராதவராய்த் தந்திருத்தொண்டைக் குறைவற நடத்திவந்தார்.

இவ்வண்ணம் நெறிதளராது ஒழுகி வருங்காலை ஒருநாள் செம்படவர்கள் ஒருமீனை வழக்கப்படி விடுத்து, விலை மதிப்பில்லாததும், நவரத்தினங்கள் இழைக்கப்பெற்றதும் ஆகிய ஒரு பொன்மீனைப் பிடித்துக் கரை ஏறினார்கள். அதுகண்ட நாயனார் "இது நவமணிகளால் உறுப்பமையப் பெற்றமீன். ஆதலால் என்னை அடிமையாகவுடைய சிவபெருமானுக்கு ஆகும்" என்று அதை எடுத்து "நீ எம்பெருமான் கழல்சேர்க" என்று கடலிலே விட்டனர். உடனே உமாதேவியாரோடு சிவபெருமான் இடபத்தின்மேல் தோன்றினார். அன்புருவாக நிற்கும் நாயனார் அகங்குழைந்து சிவபெருமானைத் தொழுதார். பகவனார் தந்தையாகிய சிவபெருமான் தம்முடைய சிவலோகத்திலே திருத்தொண்டர்களோடு இருக்கத் திருவருள்செய்தார்.

---

# கலிக்கம்பநாயனார் புராணம்.

உரிமை யொழுக்கந் தலைநின்ற வுயர்தொன் மரபி னீடுமனைத்
தரும நெறியால் வாழ்குடிக டழைத்து வளருந் தன்மையதாய்
வருமஞ் சுறையு மலர்ச்சோலை மருங்கு சூழ்ந்த வளம்புறவிற்
பெருமை யுலகு பெறவிளங்கு மேல்பாற் பெண்ணா கடமூதூர். (௧)

மற்றப் பதியி னிடைவாழும் வணிகர் குலத்து வந்துதித்தார்
கற்றைச் சடையார் கழற்காத லுடனே வளர்ந்த கருத்துடையார்
அற்றைக் கன்று தூங்கானை மாடத் தமர்ந்தா ரடித்தொண்டு
பற்றிப் பணிசெய் கலிக்கம்ப ரென்பார் மற்றோர் பற்றில்லார். (௨)

ஆன வன்பர் தாமென்று மரனா ரன்பர்க் கமுதுசெய
மேன்மை விளங்கு போனகமும் விரும்பு கறிநெய் தயிர்தீம்பால்
தேனி னினிய கனிகட்டி திருந்த வமுது செய்வித்தே
ஏனை நிதியம் வேண்டுவன வெல்லா மின்ப முறவளிப்பார். (௩)

அன்ன வகையாற் றிருத்தொண்டு புரியு நாளி லங்கொருநாண்
மன்னு மனையி லமுதுசெய வந்த தொண்டர் தமையெல்லாந்
தொன்மை முறைமை யமுதுசெயத் தொடங்கு விப்பா ரவர்தம்மை
முன்ன ரழைத்துத் திருவடிக ளெல்லாம் விளக்க முயல்கின்றார். (௪)

திருந்து மனையார் மனையெல்லாந் திகழ விளக்கிப் போனகமும்
பொருந்து சுவையிற் கறியமுதும் புனிதத் தண்ணீ ருடன்மற்றும்
அருந்து மியல்பி னுள்ளனவு மமைத்துக் கரக நீரளிக்க
விரும்புங் கணவர் பெருந்தவர்தா ளெல்லாம் விளக்கும் பொழுதின்கண். (௫)

முன்பு தமக்குத் தொழில்செய்யுந் தமரா யேவல் முனிந்துபோய
என்பு மரவு மணிந்தபிரா னடியா ராகி யங்கெய்தும்
அன்ப ருடனே திருவேடந் தாங்கி யணைந்தா ரொருவர்தாம்
பின்பு வந்து தோன்றவவர் பாதம் விளக்கும் பெருந்தகையார். (௬)

கையா லவர்த மடிபிடிக்கக் காதன் மனையார் முன்பேவல்
செய்யா தகன்ற தமர்போலு மென்று தேரும் பொழுதுமலர்
மொய்யார் வாசக் கரகநீர் வார்க்க முட்ட முதற்றொண்டர்
மையார் கூந்தன் மனையாரைப் பார்த்து மனத்துட் கருதுவார். (௭)

வெறித்த கொன்றை முடியார்த மடியா ரிவர்முன் மேவுநிலை
குறித்து வெள்கி நீர்வாரா தொழிந்தா ளென்று மனங்கொண்டு

---

(௧) மஞ்சு உறையும் - மேகந்தவழும். புறவில் - முல்லை நிலத்தில். பெண்ணாகடம்-கன்னிகையும், காமதேனுவும், வெள்ளானையும் வழிபடப்பெற்றது (பெண்-கன்னிகை ; ஆ - பசு ; காமதேனு ; கடம் - யானை). (௬) தமராய ஏவல் முனிந்துபோய - சுற்றமாயிருந்து ஏவற்றொழிலினின்றும் வெறுத்துச் சென்று.

மறித்து நோக்கார் வடிவாளை வாங்கிக் கரகம் வாங்கிக்கை
தறித்துக் கரக நீரெடுத்துத் தாமே யவர்தாள் விளக்கினார். (௮)

விளக்கி யமுது செய்வதற்கு வேண்டு வனதா மேசெய்து
துளக்கில் சிந்தை யுடன்றொண்டர் தம்மை யமுது செய்வித்தார்
அளப்பில் பெருமை யவர்பின்னு மடுத்த தொண்டின் வழிநின்று
களத்தி னஞ்ச மணிந்தவர்தா ணிழற்கீ ழடியா ருடன்கலந்தார். (௯)

ஓத மலிநீர் விடமுண்டா ரடியார் வேட மென்றுணரா
மாத ரார்கை தடிந்தகலிக் கம்பர் மலர்ச்சே வடிவணங்கிப்
பூத நாதர் திருத்தொண்டு புரிந்து புவனங் களிற்பொலிந்த
காத லன்பர் கலிநீதி யார்தம் பெருமை கட்டுரைப்பாம். (௧௦)

கலிக்கம்பநாயனார்புராண முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்-௪,௱௨௬.

---

மேலைத்திசையிலே, பெண்ணாகடத்திலே, வணிகர்குலத்திலே, திருத்தூங்கானைமடத்திலே எழுந்தருளியுள்ள சிவக்கொழுந்தை வழிபடுபவரும், சிவனடியார்களை அமுதுசெய்வித்தலே அரும்பெருந் தொண்டுகளின் பயன் என்று கருதி, அங்ஙனே அன்பர்களுக்கு மாகேசுவரபூசை செய்வித்து, அவர்கள் வேண்டும் பொருள்களையுங் கொடுத்துக் கொண்டுவருபவருமாகிய கலிக்கம்பநாயனார் என்பவர் ஒருவர் இருந்தார். அவர் தமது தொண்டைக் குறைவற நிகழ்த்திவருநாளில் ஒருநாள் அடியவர்களை வழக்கப்படி அமுது செய்விக்க அவர்களை அழைத்துக் கொண்டுபோய்த் தமது நாயகியார் கரகநீர் வார்க்கத் தாம் அவர்களுடைய திருவடிகளை விளக்கிக்கொண்டிருந்தார். அன்று அவ்விடத்தில் நாயனாரிடம் பணிவிடைக்காரராய் இருந்து விரோதித்துச் சென்ற ஒருவர் சிவவேடந்தாங்கி வந்திருந்தார். கலிக்கம்பர் அவர் திருவடிகளையும் விளக்கப் புகுந்தார். அப்பொழுது கற்பரசியார் "இவர் முன்னே நம்மிடத்தில் பணிவிடைசெய்யாது போனவர்போலும்" என்று சிந்தித்தபடியால் கரகநீர் வார்க்கச் சிறிது தாழ்த்தார். அக்குறிப்பையுணர்ந்த நாயனார் "இவர் முன்னிலைமையைக் குறித்து வெள்கி நீர்வார்த்தொழிந்தாள்" என்று கருதி, மறித்து நோக்காதவராய், வாளாயுதத்தையெடுத்துக் கரகத்தை வாங்கிக் கீழ் வைத்துவிட்டு, அதைத் தாங்கியிருந்த திருக்கரத்தைத் துணித்துத் தாமே கரகத்தையெடுத்து அவ்வடியார் திருவடிகளை விளக்கி உபசரித்து, அவரையும், மற்றவர்களையும் அமுதுசெய்வித்தனர். அக்கலிக்கம்பநாயனார் சில நாள் உலகிலிருந்து திருத்தொண்டை வழாது நடத்தி நாராயணனயனுக்கருளை யளித்த நம்பனடி சேர்ந்தார்.

---

## கலியநாயனார் புராணம்.

பேருலகி லோங்குபுகழ்ப் பெருந்தொண்டை நன்னாட்டு
நீருலவுஞ் சடைக்கற்றை நிருத்தர்திருப் பதியாகுங்
காருலவு மலர்ச்சோலைக் கன்னிமதில் புடைசூழ்ந்து
தேருலவு நெடுவீதி சிறந்ததிரு வொற்றியூர். (௧)

* பீடுகெழும் பெருந்தெருவும் புத்தருடன் பீலியமண்
வேடமுடை யவர்பொருள்போ லாகாச வெளிமறைக்கும்
ஆடுகொடி மணிநெடுமா ளிகைநிரைக ளலைகமுகின்
காடனைய கடல்படப்பை யெனவிளங்குங் கவின்காட்டும். (௨)

பண்ணாறு திருப்பதிக விசைப்பாட்டோ வா மண்டபங்கள்
அன்னநடை மடவார்க ளாட்டோவா வணியரங்கு
பன்முறைதூ ரியமுழங்கு விழவோவா பயில்வீதி
செந்நெலடி சிற்பிறங்க லுணவோவா திருமடங்கள். (௩)

கெழுமலர்மா தவிபுன்னை கிளைஞாழ றளையவிழும்
கொழுமுகைய சண்பகங்கள் குளிர்செருந்தி வளர்கைதை
முழுமணமே முந்நீருங் கமழமலர் முருகுயிர்க்குஞ்
செழுநிலவின் றுகளனைய மணற்பரப்புந் திருப்பரப்பு. (௪)

எயிலணையு முகின்முழக்கு மெறிதிரைவே லையின்முழக்கும்
பயிறருபல் லியமுழக்கு முறைதெரியாப் பதியதனுள்
வெயிலணிபன் மணிமுதலாம் விழுப்பொருளா லனவிளக்குந்
தயிலவினைத் தொழின்மரபிற் சக்கரப்பா டித்தெருவு. (௫)

அக்குலத்தின் செய்தவத்தா லவனியிசை யவதரித்தார்
மிக்கபெருஞ் செல்வத்து மீக்கூர விளங்கினார்
தக்கபுகழ்க் கலியனா ரெனுநாமந் தலைநின்றார்
முக்கணிறை வர்க்குரிமைத் திருத்தொண்டி னெறிமுயல்வார். (௬)

எல்லையில்பல் கோடிதனத் திறைவரா யிப்படித்தாஞ்
செல்வநெறிப் பயனறிந்து திருவொற்றி யூரமர்ந்த
கொல்லைமழ விடையார்தங் கோயிலினுள் ளும்புறம்பும்
அல்லுநெடும் பகலுமிடுந் திருவிளக்கி னணிவிளைத்தார். (௭)

எண்ணிறிரு விளக்குநெடு நாளெல்லா மெரித்துவரப்
புண்ணியமெய்த் தொண்டர்செயல் புலப்படுப்பா ரருளாலே
உண்ணிறையும் பெருஞ்செல்வ முயர்த்துமவினைச் செயலோவி
மண்ணில்வ ரிருவினைபோன் மாண்டதுமா டமைத்தாக. (௮)

திருமலிசெல் வத்துழனி தேய்ந்தழிந்த பின்னையுந்தம்
பெருமைநிலைத் திருப்பணியிற் பேராத பேராளர்
வருமரபி லுள்ளோர்பா லெண்ணெய்மா றிக்கொணர்ந்து
தருமியல்பிற் கூலியினா றமதுதிருப் பணிசெய்வார். (௯)

---

* இதனை வெள்ளிப்பாடல் என்பர் சிலர். (புத்தரொடு)......பொருள்போல்- உண்மைப் பொருளாம் ஆகாயத்தை யின்மைப் பொருளெனக் கூறுவதுபோல. படப்பை - தோட்டம். (௪) மாதவி - குருக்கத்தி. ஞாழல் - குங்குமமரம். தளை - முறுக்கு. கைதை - தாழை. முருகு - வாசனை, தேன். (௯) துழனி - முழக்கம்.

வளமுடையார் பாலெண்ணெய் கொடுபோய்மா றிக்கூலி
கொளமுயலுஞ் செயலையுமற் றவர்கொடா மையின்மாறத்
தளருமன முடையவர்தாஞ் சக்கரவெந் திரம்புரியுங்
களனில்வரும் பணிசெய்து பெறுங்கூலி காதலித்தார். (௧௦)

செக்குநிறை யெள்ளாட்டிப் பதமறிந்து திலதயிலம்
பக்கமெழ மிகவுழந்தும் பாண்டில்வரு மெருதுய்த்துந்
தக்கதொழிற் பெறுங்கூலி தாங்கொண்டு தாழாமை
மிக்கதிரு விளக்கிட்டார் விழுத்தொண்டு விளக்கிட்டார். (௧௧)

அப்பணியால் வரும்பேறு மவ்வினைஞர் பலருளராய்
எப்பரிசுங் கிடையாத வகைமுட்ட விடருழந்தே
யொப்பின்மனை விற்றெரிக்கு முறுபொருளு மாண்டதற்பின்
செப்பருஞ்சீர் மனையாரை விற்பதற்குத் தேடுவார். (௧௨)

மனமகிழ்ந்து மனைவியார் தமைக்கொண்டு வளநகரிற்
றனமளிப்பார் தமையெங்குங் கிடையாம றளர்வெய்திச்
சினவிடையார் திருக்கோயிற் றிருவிளக்குப் பணிமுட்டக்
கனவினுமுன் பறியாதார் கையறவா லெய்தினார். (௧௩)

பணிகொள்ளும் படம்பக்க நாயகர்தங் கோயிலினுள்
அணிகொள்ளுந் திருவிளக்குப் பணிமாறு மமையத்தின்
மணிவண்ணச் சுடர்விளக்கு மாளில்யான் மாள்வனெனத்
துணிவுள்ளங் கொளநினைந்தவ் வினைமுடிக்கத் தொடங்குவார். (௧௪)

திருவிளக்குத் திரியிட்டங் ககல்பரப்பிச் செயனிரம்ப
ஒருவியவெண் ணெய்க்கீடா வுடலுதிரங் கொடுநிறைக்கக்
கருவியினான் மிடறரிய வக்கையைக் கண்ணுதலார்
பெருகுதிருக் கருணையுட னேர்வந்து பிடித்தருளி. (௧௫)

மற்றவர்தம் முன்னாக மழவிடைமே லெழுந்தருள
உற்றவூ றதுநீங்கி யொளிவிளங்க வுச்சியின்மேற்
பற்றியவஞ் சலியினராய் நின்றவரைப் பரமர்தாம்
பொற்புடைய சிவபுரியிற் பொலிந்திருக்க வருள்புரிந்தார். (௧௬)

தேவர்பிரான் திருவிளக்குச் செயன்முட்ட மிடறரிந்து
மேவரிய வினைமுடித்தார் கழல்வணங்கி வியனுலகில்
யாவரொரு நானடியார் தமையிகழ்ந்து பேசினரை
நாவரியுஞ் சத்தியார் திருத்தொண்டி னலமுரைப்பாம். (௧௭)

கலியநாயனார்புராண முற்றிற்று.

ஆக திருவிருத்தம்-௪௦௪௩.

(௧௧) பாண்டில - செக்கில். (௧௩) கையறவு - உதவியின்மை; செயலின்மை.

தொண்டைநாட்டிலே, திருவொற்றியூரிலே, சக்கரப்பாடித் தெருவிலே, செக்கார்குலத்திலே அவதரித்தவர் கலியநாயனார். அவர் அத்திருப்பதியிலேயுள்ள சிவாலயத்தின் உள்ளும் புறம்பும் அல்லும் பகலும் திருவிளக்கேற்றுந் திருத்தொண்டைச் செய்துவந்தார். அவருடைய அன்பின் உறுதியை உலகத்திற்கு வெளிப்படுத்த வேண்டிச் சிவபெருமான் அவரிடத்துள்ள செல்வங்களெல்லாம் ஒழியத் திருவருள்செய்தார். நாயனார்தம் செல்வங்குன்றியும் பத்தியிற் குன்றாதவராய்த் தமது மரபினர்பால் எண்ணெய் வாங்கி அதைவிற்றுக் கொடுத்து, அவர்கள் அளிக்குங் கூலியினால் தந்திருத்தொண்டைக் குறையாது நடத்திவந்தார். சிலநாளாயினபின் அவர்கள் எண்ணெய் கொடுத்தலை யொழித்தார்கள். நாயனார் அதற்குஞ் சிறிதுந் தளராதவராய்ச் செக்காட்டுமிடத்திற்குப்போய், அங்கே எள்ளையாட்டிப் பதமறிந்து எண்ணெய் எடுத்தல்,எருதுஓட்டல் முதலிய தொழில்களைச் செய்து, கூலிவாங்கித் திருவிளக்கேற்றி வந்தார். பின்னர் அவ்விடத்தில் அத்தொழில்கள் செய்வோர் பெருகினபடியால் அத்தொழில்களால் பெறுங்கூலியும் முட்டுப்பட்டது. அன்பின்பெருக்கில் ஆழ்ந்துகிடக்கும் நாயனார் "திருத்தொண்டிற்கு இடையூறு விளையின் என்செய்வேன்" என்று மனந்தளர்ந்து இறுதியில் தம் மனைவியாரை விற்கத் துணிந்து நகரெங்கும் விலை கூறினார். வாங்குவார் இன்மையைக்கண்டு மனந்தளர்ந்து ஆலயத்தை யடைந்து, திருவிளக்கெரிக்குஞ் சமயத்தில் "இத்திருவிளக்குத் திருத்தொண்டு மாளின் யானும் மாளுவேன்" என்று உறுதிகொண்டு, அகல்களைத் திரியிட்டுப் பரப்பி எண்ணெய்க்குப் பதிலாகத் தமது உதிரத்தை நிரப்பும் பொருட்டுக் கருவி கொண்டு கழுத்தை யரிய, அவரன்பாய் விளங்குஞ் சிவபெருமான் அவருடைய கையைப்பிடித்தருளி இடபவாகனத்தின்மேல் தோன்றியருளினார். நாயனார் தமது கழுத்திலேயுற்ற ஊறு ஒழியப்பெற்று, உண்மைச் சொரூபராய் அஞ்சலிசெய்துகொண்டு நின்றார். தூரவனை யளித்த சிவபெருமான் நாயனார்க்குத் தமது திருவடி நீழலை யளித்தார்.

---

# சத்திநாயனார் புராணம்.

களமர் கட்ட கமலம் பொழிந்ததேன்
குளநி றைப்பது கோலொன்றி லெண்டிசை
யளவு மாணைச் சயத்தம்ப நாட்டிய
வளவர் காவிரி நாட்டு வரிஞ்சையூர். (௧)

வரிஞ்சை யூரினில் வாய்மைவே ளாண்குலம்
பெருஞ்சி றப்புப் பெறப்பிறப் பெய்தினார்
விரிஞ்சன் மான்முதல் விண்ணவ ரெண்ணவும்
அருஞ்சி லம்பணி சேவடிக் காட்செய்வார். (௨)

அத்த ராகிய வங்கண ரன்பரை
யித்த லத்தி லிகழ்ந்தியம் பும்முரை

---

(௧) களமர்கட்ட - மள்ளர்கள் (உழவர்கள்) களை கடிந்தெறிந்த.

வைத்த நாவை வலித்தரி சத்தியாற்
சத்தி யாரெனு நாமந் தரித்துளார். (௩)

ஈங்கு சொற்ற திருவிலர் நாவினை
வாங்க வாங்குதண் டாயத்தி னால்வலித்
தாங்க யிற்கத்தி யாலரிந் தன்புடன்
ஓங்கு சீர்த்திருத் தொண்டி னுயர்ந்தனர். (௪)

அன்ன தாகிய வாண்மைத் திருப்பணி
மன்னு பேருல கத்தில் வலியுடன்
பன்னெ டும்பெரு நாள்பரி வாற்செய்து
சென்னி யாறணி வார்செந்நெறி யாற்றினர். (௫)

ஐய மின்றி யரிய திருப்பணி
மெய்யி னாற்செய்த வீரத் திருத்தொண்டர்
வைய முய்ய மணிமன்று ளாடுவார்
செய்ய பாதத் திருநிழல் சேர்ந்தனர். (௬)

நாய னார்தொண் டரைநலங் கூறலார்
சாய நாவரி சத்தியார் தாளணிந்
தாய மாதவத் தையடி கள்ளெனுந்
தூய காடவர் தந்திறஞ் சொல்லுவாம். (௭)

சத்திநாயனார்புராண முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-௪0௫0.

---

சோழநாட்டிலே, வரிஞ்சையூரிலே, வேளாளர்குலத்திலே அவதரித்த சிவனடியார் ஒருவர் இருந்தார். அவர் சிவனடியார்களை இகழும் அதிபாதகர்களுடைய நாக்களை அரிகின்ற சத்தியால் சத்திநாயனார் என்னுந் திருநாமத்தைப் பெற்றவர். அந்நாயனார் சிலகாலஞ் சிவனடியார்களை நிந்திக்கும் பெரும்பாவிகளது நாவுகளைத் தண்டாயத்தினால் வலித்துக் கத்தியினால் அறுத்து அவர்கள் பாவத்தை அழித்தலாகிய திருத்தொண்டை வழாது நிகழ்த்தி நீலமயிலோன் தாதையின் திருவடிநீழலை யடைந்தார்.

---

# ஐயடிகள் காடவர்கோனாயனார் புராணம்.

வையநிகழ் பல்லவர்தங் குலமரபின் வழித்தோன்றி
வெய்யகலி யும்பகையு மிகையொழியும் வகையடக்கிச்
செய்யசடை யவர்சைவத் திருநெறியா லரசளிப்பார்
ஐயடிக ணீதியா றடிப்படுத்துஞ் செங்கோலார். (௧)

---

(௪) தண்டாயம் - குறடுபோன்றதோர் கருவி.

திருமலியும் புகழ்விளங்கச் சேணிலத்தி லெவ்வுயிரும்
பெருமையுட னினிதமரப் பிறபுலங்க ளடிப்படுத்துத்
தருமநெறி தழைத்தோங்கத் தாரணிமேற் சைவமுடன்
அருமறையின் றுறைவிளங்க வரசளிக்கு மந்நாளில். (௨)

மன்னவரும் பணிசெய்ய வடநூறென் றமிழ்முதலாம்
பன்னுகலை பணிசெய்யப் பாரளிப்பா ரரசாட்சி
யின்னலென விகழ்ந்ததனை யெழிற்குமரன் மேலிழிச்சி
நன்மைநெறித் திருத்தொண்டு நயந்தளிப்பா ராயினார். (௩)

தொண்டுரிமை புரக்கின்றார் சூழ்வேலை யுலகினகண்
அண்டர்பிரா னமர்ந்தருளு மாலயங்க ளானவெலாங்
கண்டிறைஞ்சித் திருத்தொண்டின் கடனேற்ற பணிசெய்தே
வண்டமிழின் மொழிவெண்பா வோரொன்றா வழுத்துவார். (௪)

பெருகெழுகா தலினவணங்கிப் பெரும்பற்றத் தண்புலியூர்த்
திருச்சிற்றம் பலத்தாடல் புரிந்தருளுஞ் செய்யசடை
நிருத்தனார் திருக்கூத்து நோக்கிறைஞ்சி நெடிதுகையார்
விருப்பினுடன் செந்தமிழின் வெண்பாமென் மலர்புனைந்தார். (௫)

க்ஷேத்திரத் திருவெண்பா.

திருச்சிற்றம்பலம்.

ஓடுகின்ற நீர்மை யொழிதலுமே யுற்றாருங்
கோடுகின்றார் மூப்புங் குறுகிற்று - நாடுகின்ற
நல்லச்சிற் றம்பலமே நண்ணாமு னன்னெஞ்சே
தில்லைச்சிற் றம்பலமே சேர்.
உய்ய மருந்திதனை யுண்மினென வுற்றாருங்
கையிற் பிடித்தெதிரே காட்டியக்கால் - பைய
எழுந்திருமி யானவேண்டா வென்னாமு னெஞ்சே
செழுந்திருமா யானமே சேர்.

திருச்சிற்றம்பலம்.

அவ்வகையா லருள்பெற்றங் கமர்ந்துசில நாள்வைகி
யிவ்வுலகிற் றம்பெருமான் கோயில்களெல் லாமெய்திச்
செவ்வியவன் பொடுபணிந்து திருப்பணியேற் றனசெய்தே
யெவ்வுலகும் புகழ்ந்தேத்தத் தனித்தமிழ்வெண் பாமொழிந்தார். (௬)

இந்நெறியா லரனடியா ரின்பமுற விசைந்தபணி
பன்னெடுநா ளாற்றியபின் பரமர்திரு வடிநிழற்கீழ்
மன்னுசிவ லோகத்து வழியன்பர் மருங்கணைந்தார்
கன்னிமதில் சூழ்காஞ்சிக் காடவரை யடிகளார். (௭)

பையரவ மணியார மணிந்தார்க்குப் பாவணிந்த
ஐயடிகள் காடவரு ரடியிணைத்தா மரைவணங்கிக்
கையணிமான் மழுவுடையா ரகழல்பணிசிந் தனையுடைய
செய்தவத்துக் கணம்புல்லர் திருத்தொண்டு விரித்துரைப்பாம். (அ)

உளத்திலொரு துளக்கமிலோ முலகுய்ய விருண்டதிருக்
களத்துமுது குன்றர்தரு கனகமாற் றினிலிட்டு
வளத்தினமலிந் தேழுலகும் வணங்குபெருந் திருவாரூர்க்
குளத்திலெடுத் தார்வினையின் குழிவாய்நின் றெனையெடுத்தார். (௯)

ஐயடிகள் காடவர்கோனாயனார்புராண முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-௪0௫௯.

பொய்யடிமையில்லாத புலவர்சருக்க முற்றுப்பெற்றது.

---

தொண்டை நாட்டிலே, காஞ்சிபுரத்திலே, பல்லவர் குலத்திலே ஐயடிகள்காடவர்கோன நாயனா என்பவா ஒருவர் இருந்தார். அவர் எல்லா ஆன்மாக்களும் முத்தியின்பத்தை யனுபவிக்கவேண்டும் என்னும் பெருங் கருணையால பிறதேயங்களையுந் தமக்குக் கீழ்ப்படுத்திப் பல அரசர்களும் தம் ஏவல் வழி நிற்கவும், சைவந்தழைக்கவும், தருமம் ஓங்கவும் செங்கோல் தாங்கி நீதியரசியற்றி வந்தார். வருநாளில் நாயனார் அரச இன்பத்தை வெறுத்து, பூபாரத்தைப் புதல்வனைச் சுமக்கும்படி செய்வித்து, சிதம்பர முதலிய சிவஸ்தலங்களை அடைந்து சுவாமிதரிசனஞ் செய்து, ஒவ்வொருதலத்திற்கு ஒவ்வொரு வெண்பா பாடிச் சிலநாள் சிவபணிசெய்து கொண்டிருந்து ஞான சம்பந்தராய்வந்த நாதனைப் பெற்ற நாயகன திருவடி நீழலையடைந்தனர்.

---

ஒன்பதாவது

## கறைக்கண்டன் சருக்கம்.

# கணம்புல்லநாயனார் புராணம்.

திருக்கிளர்சீர் மாடங்க டிருந்துபெருங் குடிநெருங்கிப்
பெருக்குவட வெள்ளாறுதென் கரைப்பாற் பிறங்குபொழில்
வருக்கைநெடுஞ் சுளைபொழிதேன் மடுநிறைத்து வயல்விளைக்கும்
இருக்குவே ளூரென்ப திவ்வுலகில் விளங்குபதி. (௧)

அப்பதியிற் குடிமுதல்வர்க் கதிபரா யளவிறந்த
எப்பொருளு முடிவறியா வெய்துபெருஞ் செல்வத்தார்
ஒப்பில்பெருங் குணத்தினு லுலகின்மேற் படவெழுந்தார்
மெய்ப்பொருளா வனயீசர் கழலென்னும் விருப்புடையார். (௨)

தாவாத பெருஞ்செல்வந் தலைநின்ற பயனிதுவென்
றோவாத வொளிவிளக்குச் சிவன்கோயி லுள்ளெரித்து
நாவாரப் பரவுவார் நல்குரவு வந்தெய்தத்
தேவாதி தேவர்பிரான் றிருத்தில்லை சென்றடைந்தார். (௩)

தில்லைநகர் மணிமன்று ளாடுகின்ற சேவடிகள்
அல்லியவன் புடனிறைஞ்சி யமர்கின்றார் புரமெரித்த
வில்லியார் திருப்புலீச் சரத்தின்கண் விளக்கெரிக்க
இல்லிடையுள் ளனமாறி யெரித்துவரு மந்நாளில். (௪)

ஆயசெயன் மாண்டதற்பி னயலவர்பா லிரப்பஞ்சிக்
காயமுயற் சியிலரிந்த கணம்புல்லுக் கொடுவந்து
மேயவிலைக் குக்கொடுத்து விலைப்பொருளா னெய்மாறித்
தூயதிரு விளக்கெரித்தார் துளக்கறுமெய்த் தொண்டனார். (௫)

இவ்வகையாற் றிருந்துவிளக் கெரித்துவர வங்கொருநாள்
மெய்வருந்தி யரிந்தெடுத்துக் கொடுவந்து விற்கும்புல்
எவ்விடத்தும் விலைபோகா தொழியவுமிப் பணியொழியார்
அவ்வரிபுல் லினைமாட்டி யணிவிளக்கா யிடவெரிப்பார். (௬)

முன்புதிரு விளக்கெரிக்கு முறையாமங் குறையாமல்
மென்புல்லும் விளக்கெரிக்கப் போதாமை மெய்யான
அன்புபுரி வாரடுத்த விளக்குத்தந் திருமுடியை
என்புருக மடுத்தெரித்தா ரிருவினையின் றொடக்கெரித்தார். (எ)

தங்கள்பிரா னருளுள்ளஞ் செய்துதலைத் திருவிளக்குப்
பொங்கியவன் புடனெரித்த பொருவிறிருத் தொண்டருக்கு
மங்கலமாம் பெருங்கருணை வைத்தருளச் சிவலோகத்
தெங்கள்பிரான் கணம்புல்ல ரினிதிறைஞ்சி யமர்ந்திருந்தார். (௮)

மூரியார் கலியுலகின் முடியிட்ட திருவிளக்குப்
பேரியா றணிந்தாருக் கெரித்தார்தங் கழல்பேணி
வேரியார் மலர்ச்சோலை விளங்குதிருக் கடவூரிற்
காரியார் தாஞ்செய்த திருத்தொண்டு கட்டுரைப்பாம். (௯)

கணம்புல்லநாயனார்புராண முற்றிற்று.

ஆக திருவிருத்தம்-௪௰௬௮.

---

வடவெள்ளாற்றுக்குத் தென்கரையிலேயுள்ள இருக்குவேளூரிலே ஒரு பெரியவர் இருந்தார். அவர் சிவபத்தி சிவனடியார் பத்திகளிலே சிறந்தவராய், செல்வத்தினாலாகும் பயன் சிவாலயத்திலே திருவிளக்கெரித்தலே எனத்துணிந்து, அத்திருத்தொண்டைச் செய்துவந்தார். வருநாளில் அவருக்கு வறுமை எய்தியது. அதனால் அவர் தில்லையம்பதியை யடைந்து, ஸ்ரீநடராஜரைத் தரிசனஞ் செய்துகொண்டு, வீட்டுப்பொருள்களை எல்லாம் விற்று, அங்குள்ள திருப்புலீச்சர மென்னும் ஆலயத்திலே திருவிளக்கேற்றுந் திருத்தொண்டை வழாது நடத்திவந்தார். வருநாளில் வீட்டுப் பொருள்களும் ஒழிந்தன. ஒழியவே திருத்தொண்டிற் சிறந்த நாயனார் பெருமான

---

(௯) மூரி - வலிய. ஆர்கலி-கடல்.

கணம்புற்களை அறுத்து விற்று, கிடைத்தபொருளால் நெய்வாங்கித் தந்திருத் தொண்டைச் செய்துவந்தார். அதனால் அவர் கணம்புல்லர் என்றழைக்கப் பட்டார். ஒருநாள் சிவபிரான் திருவருளால் புற்கள் விலைப்படவில்லை. தந்திருப்பணிக்கு முட்டுறுவண்ணம் அப்புற்களையே திரித்து விளக்கெரித்தனர். வழக்கம்போல விளக்கெரிப்பதற்கு அப்புற்கள் போதாமையால் தந்திருமுடியைப் பேரன்போடு மடுத்து எரித்தார். அதுகண்ட தழுநன் தாதையாம் சங்கரனார் நாயனார்க்குத் திருவருள்செய்ய, அவர் சிவலோகமடைந்தார்.

---

# காரிநாயனார் புராணம்.

மறையாளர் திருக்கடவூர் வந்துதித்து வண்டமிழின்
துறையான பயன்றெரிந்து சொல்விளங்கிப் பொருண்மறையக்
குறையாத தமிழ்க்கோவை தம்பெயராற் குலவும்வகை
முறையாலே தொகுத்தமைத்து மூவேந்தர் பாற்பயில்வார். (க)

அங்கவர்தா மகிழுமவகை யடுத்தவுரை நயமாக்கிக்
கொங்கலர்தார் மன்னவர்பாற் பெற்றநிதிக் குவைகொண்டு
வெங்கணரா வொடுகிடந்து விளங்குமிளம் பிறைச்சென்னிச்
சங்கரனா ரினிதமருந் தானங்கள் பலசமைத்தார். (உ)

யாவர்க்கு மனமுவக்கு மின்பமொழிப் பயனியம்பித்
தேவர்க்கு முதற்றேவர் சீரடியா ரெல்லார்க்கும்
மேவுற்ற வுருநிதிய மிகவளித்து விடையவர்தங்
காவுற்ற திருக்கயிலை மறவாத கருத்தினராய். (௩)

ஏய்ந்தகடல் சூழுலகி லெங்குந்தம் மிசைநிறுத்தி
ஆய்ந்தவுணர் விடையவரு மன்பினா லணிகங்கை
தோய்ந்தநெடுஞ் சடையார்தம் மருள்பெற்ற தொடர்பினால்
வாய்ந்தமனம் போலுடம்பும் வடகயிலை மலைசேர்ந்தார் (௪)

வேரியார் மலர்க்கொன்றை வேணியா ரடிபேணுங்
காரியார் கழல்வணங்கி யவரளித்த கருணையினால்
வாரியார் மதயானை வழுதியார் மதிமாறர்
சீரியார் நெடுமாறர் திருத்தொண்டு செப்புவாம். (௫)

காரிநாயனார்புராண முற்றிற்று.

ஆக திருவிருத்தம்-௪,௦௭௬.

---

திருக்கடவூரிலே, தமிழ் மொழியிலே மிகப் பாண்டித்தியம் வாய்ந்த காரிநாயனார் என்பவர் ஒருவர் இருந்தார். அந்நாயனார் சொல்விளங்கிப் பொருள் மறைந்திருக்கும்படி தம்பெயரால் தமிழ்க்கோவை பாடிச் சேரசோழ

(க) மூவேந்தர் - சேரசோழபாண்டியர்கள்.

பாண்டியர்கள்பால் அணுகி, அவர்கள் உள்ளம் பூரிக்கத் தம் பாக்கட்குப் பொருளுரைத்து, அவர்கள் அளிக்கும் பொருள்களைக்கொண்டு சிவாலயங்களைக் கட்டுவித்தும், சிவனடியார்களுக்கு வேண்டும் பொருளீந்தும், திருக்கைலாயத்தை இறையளவும் மறவாதவராய், உலகமெல்லாந் தம் இசை நிறுத்தி, சிவபிரான் திருவருளைப் பூரணமாகப்பெற்றுப் பாலகி தந்தை தாள் நீழலையடைந்தார்.

---

# நின்றசீர்நெடுமாறநாயனார் புராணம்.

தடுமாறு நெறியதனைத் தவமென்று தம்முடலை
யடுமாறு செய்தொழுகு மமணர்வலையி லகப்பட்டு
விடுமாறு தமிழ்விரகர் வினைமாறுங் கழலடைந்த
நெடுமாறனார்பெருமை யுலகேழு நிகழ்ந்ததால். (௧)

அந்நாளி லாளுடைய பிள்ளையா ரருளாலே
தென்னாடு சிவம்பெருகச் செங்கோலுய்த் தறமளித்துச்
சொன்னாம நெறிபோற்றிச் சுரர்நகர்க்கோன் றனைக்கொண்ட
பொன்னார மணிமார்பிற் புரவலனார் பொலிகின்றார். (௨)

ஆயவர சளிப்பார்பா லமர்வேண்டி வந்தேற்ற
சேயபுலத் தெவ்வரெதிர் நெல்வேலிச் செருக்களத்துப்
பாயபடைக் கடன்முடுகும் பரிமாவின் பெருவெள்ளங்
காயுமதக் களிற்றினிரை பரப்பியமர் கடக்கின்றார். (௩)

எடுத்துடன்ற முனைஞாட்பி னிருபடையிற் பொருபடைஞர்
படுத்தநெடுங் கரித்துணியும் பாய்மாவி னறுகுறையு
மடுத்தமர்செய் வயவர்கருந் தலைமலையு மலைசெந்நீர்
மடுத்தகடன் மீளவுந்தாம் வடிவேல்வாங் கிடப்பெருக. (௪)

வயப்பரியின் களிப்பொலியு மறவர்படைக் கலவொலியுங்
கயப்பொருப்பின் முழக்கொலியுங் கலந்தெழுபல் லியவொலியும்
வியக்குமுகக் கடைநாளின் மேகமுழக் கெனமீளச்
சயத்தொடாவல் லியமின்று தாமவிக்கும் படிதயங்க (௫)

தீயுமிழும் படைவழங்குஞ் செருக்களத்து முருக்குமுட
றேயுநெடுங் குருதிமடுக் குளித்துநிணந் துய்த்தாடிப்
போயபரு வம்பணிகொள் பூதங்க ளேயனறிப்
பேயுமரும் பணிசெய்ய வுணவளித்த தெனப்பிறங்க. (௬)

(௨) சுரர் நகர்க்கோன்.........புரவலனார் - இச்சரித்திரத்தைத் திருவிளையாடற் புராணத்திற் காண்க. (௩) சேயபுலத் தெவ்வர் - வடபுலத்துப் பகைவர். பாய படைக்கடல் - பரவிய சேனா சமுத்திரம். (௪) முனைஞாட்பின் - யுத்த களத்திலே. வடிவேல்.........திருவிளையாடற் புராணத்துட் காண்க.

இனையகடுஞ் சமர்விளைய விகலுழந்த பறந்தலையிற்
பனைநெடுங்கை மதயானைப் பஞ்சவனார் படைக்குடைந்து
முனையழிந்த வடபுலத்து முதன்மன்னர் படைசரியப்
புனையுநறுந் தொடைவாகை பூழியர்வேம் புடன்புனைந்து. (எ)

வளவர்பிரான் றிருமகளார் மங்கையர்க்கரசியார்
களபமணி முலைதிளைக்குந் தடமார்பிற் கவுரியனார்
இளவரவெண் பிறையணிந்தார்க் கேற்றதிருத் தொண்டெல்லாம்
அளவில்புகழ் பெறவிளக்கி யருள்பெருக வரசளித்தார். (அ)

திரைசெய்கட லுலகின்கட் டிருநீற்றி னெறிவிளங்க
உரைசெய்பெரும் புகழ்விளக்கி யோங்குநெடு மாறனார்
அரசுரிமை நெடுங்கால மளித்திறைவ ரருளாலே
பரசுபெருஞ் சிவலோகத் தின்புற்றுப் பணிந்திருந்தார். (௯)

பொன்மதில்சூழ் புகலிகா வலரடிக்கீழ்ப் புனிதராந்
தென்மதுரை மாறனார் செங்கமலக் கழல்வணங்கிப்
பன்மணிக டிரையோதம் பரப்புநெடுங் கடற்படப்பைத்
தொன்மயிலை வாயிலார் திருத்தொண்டி னிலைதொழுவாம். (௧0)

நின்றசீர்நெடுமாறநாயனார்புராண முற்றிற்று.

ஆக திருவிருத்தம் - ௪,0அ௫.

---

பாண்டிநாட்டிலே, மதுரையம்பதியிலே கூனபாண்டியர் என்பவர் ஒருவர் இருந்தார். அவர் பூர்வத்திற் செய்த புண்ணியப் பயனால் சிவபத்தி சிவனடியார் பத்திகளிற் சிறந்த மங்கையர்க்கரசியாராம் பெருமாட்டியாரை மனைவியாகப் பெற்றவர். சமணருடைய துர்ப்போதனையினாலே சைவசமயத்தை விடுத்துச் சமணசமயத்திற் பிரவேசித்துப் பின்னர்த் திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகளால் திருநீறு தரிக்கப்பெற்று, அவரருளால் கூன் நிமிர்ந்து, நெடுமாறநாயனார் என்னும் அரியதிருப்பெயர் பெற்றனர். தம்முடன் பகைத்து எதிர்த்த வடபுலமன்னர்களைத் திருநெல்வேலியிலே தோற்கடித்து வெற்றிபெற்றுச் சின்னாள் சைவந்தழைத்தோங்க அரசியற்றி அசுரர்ப் றடிந்தோனையீன்ற ஐயன் திருவடி சேர்ந்தார்.

---

# வாயிலார் நாயனார் புராணம்.

சொல்வி ளங்குசீர்த் தொண்டைநன் னாட்டிடை
மல்ல னீடிய வாய்மை வளம்பதி
பலபெ ருங்குடி நீடு பரம்பரைச்
செல்வ மல்கு திருமயி லாபுரி. (௧)

(எ) பறந்தலை-யுத்தகளம். பஞ்சவனார் - பாண்டியனார். வாகைத்தொடை - வெற்றிமாலை. (அ) கவுரியனார் - பாண்டியர்.

நீடு வேலைதன் பாலினி வைத்திடத்
தேடு மப்பெருஞ் சேமவைப் பாமெனா
ஆடு பூங்கொடி மாளிகை யப்பதி
மாடு தானுறு மாக்கலஞ் செப்பினால். (௨)

கலஞ்சொ ரிந்த கரிக்கருங் கன்றுமுத்
தலம்பு முந்நீர் படிந்தணை மேகமு
நலங்கொண் மேதிநன் னாகுந் தெரிக்கொணா
சிலம்பு தெண்டிரைக் கானலின் சேணெலாம். (௩)

தவள மாளிகைச் சாலை மருங்கிறைத்
துவன்ப தாகை நுழைந்தணை தூமதி
பவள வாய்மடவார்முகம் பார்த்தஞ்சி
யுவள கஞ்சேர்ந் தொதுங்குவ தொக்குமால். (௪)

வீதி யெங்கும் விழாவணி காளையர்
தூதி யங்குஞ் சுரும்பணி கோதையார்
ஓதி யெங்கு மொழியா வணிநிதி
பூதி யெங்கும் புனைமணி மாடங்கள். (௫)

மன்னு சீர்மயி லைத்திரு மாநகர்த்
தொன்மை நீடிய சூத்திரத் தொல்குல
நன்மை சான்ற நலம்பெறத் தோன்றினார்
தன்மை வாயிலா ரென்னுந் தபோதனார். (௬)

வாயி லாரென நீடிய மாக்குடித்
தூய மாமர பின்முதற் றோன்றியே
நாய னார்திருத் தொண்டி னயப்புறு
மேய காதல் விருப்பின் விளங்குவார். (௭)

வேறு.

மறவாமை யானமைத்த மனக்கோயி லுள்ளிருத்தி
யுறவாதி தனையுணரு மொளிவிளக்குச் சுடரேற்றி
யிறவாத வானந்த மெனுந்திருமஞ் சனமாட்டி
யறவாணர்க் கன்பெனுமோ ரமுதமைத்தர்ச் சனைசெய்வார். (௮)

அகமலர்ந்த வர்ச்சனையி லண்ணலார் தமைநாளு
நிகழவரு மன்பினா னிறைவழிபா டொழியாமே

---

(௨) கடல்படு பொருண்முழுமையு மீண்டுக் குவித்தலின் "சேமவைப்பு" என்றார். (௩) கானலின் சேணெலாம் - நெய்தனிலம் முழுவதும். கலஞ்சொரிந்த - கப்பல்களிறக்கிய. மேதிநன்னாகு - எருமைக் கன்றுகள். தெரிக்கொணா - (மூன்றும் நிறம் ஒத்திருத்தலின்) வேற்றுமை யுணரக்கூடாவாம். (௪) தவளம் - வெண்மை. பதாகை - கொடி. உவள் அகம் மறைவிடம். (௫) காளையா - காளையர்பொருட்டு.

*திகழநெடு நாட்செய்து சிவபெருமா னடிநிழற்கீழ்ப்*
*புகலமைத்துத் தொழுதிருந்தார் புண்ணியமெய்த் தொண்டனார்.* (௯)

*நீராருஞ் சடையாரை நீடுமன வாலயத்துள்*
*ஆராத வன்பினொ டர்ச்சனைசெய் தடியவர்பாற்*
*பேராத நெறிபெற்ற பெருந்தகையார் தமைப்போற்றிச்*
*சீராருந் திருநீடூர் முனையடுவார் திறமுரைப்பாம்.* (௧0)

வாயிலார்நாயனார்புராண முற்றிற்று.

ஆக திருவிருத்தம்-௪,0௧௬.

---

தொண்டை மண்டலத்திலே, மயிலாப்பூரிலே, சூத்திரர் மரபிலே, வாயிலார் நாயனார் என்பவர் ஒருவர் இருந்தார். அவர் சிவபெருமானை உள்ளமென்னுங் கோயிலிலே இருத்தி, ஞானமாகிய சுடர்விளக்கேற்றி, அன்பாகிய அமுதை நிவேதித்துப் பல நாளாக ஞானபூசை செய்துகொண்டிருந்து, அறுமீர் காதலனை அளித்த அரனடி சேர்ந்தார்.

---

# முனையடுவார்நாயனார் புராணம்.

*மாறு கடிந்து மணங்காத்த வளவர் பொன்னித் திருநாட்டு*
*நாறு விரைப்பூஞ் சோலைகளி னனைவாய் திறந்து பொழிசெழுந்தேன்*
*ஆறு பெருகி வெள்ளமிடு மள்ளல் வயலின் மள்ளருழுஞ்*
*சேறு நறுவா சங்கமழுஞ் செல்வ நீடூர் திருநீடூர்* (௧)

*விளங்கும் வண்மைத் திருநீடூர் வேளாண் டலைமைக் குடிமுதல்வர்*
*களங்கொண் டிடற்றுக் கண்ணுதலார் கழலிற் செறிந்த காதன்மிகும்*
*உளங்கொண் டிருந்தத் தொண்டுரிமையினி லுள்ளார் நள்ளார் முனைவென்று*
*வளங்கொண் டிறைவ ரடியார்க்கு மாறா தளிக்கும் வாய்மையார்.* (௨)

*மாறுற்றார்க் கமரி லழிந்து வந்தோர் வந்து தம்பால் மாநிதியம்*
*ஆற்றும் பரிசு பேசினா லதனை நடுவு நிலைவைத்துக்*
*கூற்று மொதுங்கு மாள்வினையாற் கூலி யேற்றுச் சென்றெறிந்து*
*போற்றும் வென்றி கொண்டிசைந்த பொன்னுங் கொண்டு மன்னுவார்.* (௩)

*இன்ன வகையாற் பெற்றநிதி யெல்லா மீச னடியார்கள்*
*சொன்ன சொன்ன படிநிரம்பக் கொடுத்துத் தூய போனகமுங்*
*கன்ன னறுநெய் கறிதயிர்பால் கனியுள் ளுறுத்த கலந்தளித்து*
*மன்னு மன்பி னெறிபிறழா வழித்தொண் டாற்றி வைகினார்.* (௪)

*மற்றிந் நிலைமை பன்னெடுநாள் வையம் நிகழச் செய்துவழி*
*யுற்ற வன்பின் செந்நெறியா லுமையாள் கணவன் றிருவருளாற்*

---

(௧) அள்ளல் - குழை - சேறு.

பெற்ற சிவலோ கத்தமர்ந்து பிரியா வுரிமை மருவினார்
முற்ற வுழந்த முனையடுவா ரென்னு நாம முன்னுடையார். (டு)

யாவ ரெனினு மிகலெறிந்தே யீச னடியார் தமக்கின்ப
மேவ வளித்த முனையடுவார் விரைப்பூங் கமலக் கழல்வணங்கித்
தேவர் பெருமான் சைவநெறி விளங்கச் செங்கோன் முறைபுரியுங்
காவல் பூண்ட கழற்சிங்கர் தொண்டி னிலைமை கட்டுரைப்பாம். (சு)

செறியுண் டென்று திருத்தொண்டிற் சிந்தை செல்லும் பயனுக்குக்
குறியுண் டொன்று கிலுங்குறையொன் றில்லோ நிறையுங் கருணையினால்
வெறியுண் சோலைத் திருமுருகன் பூண்டி வேடர் வழிபறிக்கப்
பறியுண் டவரெம் பழவினைவேர் பறிப்பா ரென்னும் பற்றாலே. (எ)

முனையடுவார்நாயனார்புராணம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-ச, கoo.

கறைக்கண்டன் சருக்கம் முற்றுப்பெற்றது.

---

காவிரி நாட்டிலே, திருநீடூரிலே, வேளாளர் குலத்திலே, சிவபத்தி சிவனடியார் பத்திகளிற் சிறந்த ஒருவர் இருந்தார். அவர், யுத்தத்திலே பகைவர்களுக்குத் தோற்றவர்கள் தம்பால் அணுகி மாநிதியம் மாற்றும் பரிசு பேசினால், அவர்களுக்காகச் சென்று யுத்தம் புரிந்து பகைவர்களை வென்று, அதனால் கிடைக்கும் பொருள்களைக்கொண்டு சிவனடியார்களுக்கு அமுதூட்டியும், அவர்கள் வேண்டும் பொருள்களைக் கொடுத்தும் வந்தார். அதனால் அவர் முனையடுவார் என்னும் அருமைத் திருப்பெயரால் அழைக்கப் பெற்றார். அப்பெருந்தகையார் பன்னாளாகத் திருத்தொண்டைச் செய்து கொண்டிருந்து இறைவன் தாளையடி சேர்ந்தார்

---

பத்தாவது

## கடல்சூழ்ந்த சருக்கம்.

# கழற்சிங்கநாயனார் புராணம்.

படிமிசை நிகழ்ந்த தொல்லைப் பல்லவர் குலத்து வந்தார்
கடிமதின் மூன்றுஞ் செற்ற கங்கைவார் சடையார் செய்ய
அடிமல ரன்றி வேறொன் றறிவினிற் குறியார் நீர்மைக்
கொடிநெடுந் தானை மன்னர் கோக்கழற் சிங்க ரென்பார். (க)

காடவர் குரிசி லாராங் கழற்பெருஞ் சிங்க னாரும்
ஆடக மேரு வில்லா ரருளினா லமரிற் சென்று
கூடலர் முனைகள் சாய வடபுலங் கவர்ந்து கொண்டு
நாடற நெறியில் வைக நன்னெறி வளர்க்கு நாளில். (உ)

குவலயத் தரனார் மேவுங் கோயில்கள் பலவுஞ் சென்று
தவலரு மன்பிற் றாழ்ந்து தக்கமெய்த் தொண்டு செய்வார்

சிவபுரி யென்ன மன்னுந் தென்திரு வாரூ ரெய்திப்
பவமறுத் தாட்கொள் வார்தங் கோயிலுட் பணியப் புக்கார். (ங)

அரசிய லாயத் தோடு மங்கணர் கோயி லுள்ளான்
முரசுடைத் தானை மன்னர் முதல்வரை வணங்கும் போதில்
விரைசெறி மலர்மென் கூந்த லுரிமைமெல் லியலார் தம்முள்
உரைசிறந் துயர்ந்த பட்டத் தொருதனித் தேவி மேவி. (ச)

கோயிலை வலங்கொண் டங்கட் குலவிய பெருமை யெல்லாஞ்
சாயன்மா மயிலே போல்வா ளணித்தனி கண்டு வந்து
தூயமென் பள்ளித் தாமந் தொடுக்குமண் டபத்தின் பாங்கர்
மேயதோர் புதுப்பூ வங்கு விழுந்ததொன் றெடுத்து மோந்தாள். (ரு)

புதுமலர் மோந்த போதிற் செருத்துணைப் புனிதத் தொண்டர்
இதுமலர்த் திருமுற் றத்து ளெடுத்துமோந் தனளா மென்று
கதுமென வோடிச் சென்று கருவிகைக் கொண்டு பற்றி
மதுமலர்த் திருவொப் பாடன் மூக்கினைப் பிடித்து வார்ந்தார். (சு)

வார்ந்திழி குருதி சோர மலர்க்கருங் குழலுஞ் சோரச்
சோர்ந்துவீழ்ந் தரற்றுந் தோகை மயிலென்னத் துளங்கி மண்ணிற்
சேர்ந்தயர்ந் துரிமைத் தேவி புலம்பிடச் செம்பொற் புற்றுள்
ஆர்ந்தபே ரொளியைக் கும்பிட் டரசரு மணைய வந்தார். (எ)

வந்தணை வுற்ற மன்னர் மலர்க்கற் பகத்தின் வாசப்
பைந்தளிர்ப் பூங்கொம் பொன்று பார்மிசை வீழ்ந்த தென்ன
நொந்தழிந் தரற்று வாளை நோக்கியிவ் வண்டத் துள்ளோர்
இந்தவெவ் வினையஞ் சாதே யார்செய்தா ரென்னு மெல்லை. (அ)

அந்நிலை யணைய வந்து செருத்துணை யாரா மன்பர்
முன்னுற நிலைமை யங்குப் புகுந்தது மொழிந்த போது
மன்னரு மவரை நோக்கி மற்றிதற் குற்ற தண்டந்
தன்னையவ் வடைவே யன்றோ தடிந்திடத் தகுவ தென்று (கூ)

கட்டிய வுடைவா ளன்னை யுருவியக் கமழ்வா சப்பூத்
தொட்டுமுன் னெடுத்த கையா முற்படத் துணிப்ப தென்று
பட்டமு மணிந்து காதல் பயில்பெருந் தேவி யான
மட்டவிழ் குழலாள் செங்கை வளையொடுந் துணித்தா ரன்றே. (க0)

ஒருதனித் தேவி செங்கை யுடைவாளாற் றுணித்த போது
பெருகிய தொண்டர் ஆர்ப்பின் பிறங்கொலி புவிமேற் பொங்க
இருவிசும் படைய வோங்கு மிமையவ ரார்ப்பும் விம்மி
மருவிய தெய்வ வாச மலர்மழை பொழிந்த தன்றே. (கக)

அரியவத் திருத்தொண் டாற்று மரசனா ரளவில் கால
மருவிய வுரிமை தாங்கி மாலயற் கரியார் மன்னும்

திருவருட் சிறப்பி னாலே செய்யசே வடியி னீழற்
பெருகிய வுரிமை யாகும் பேரரு ளெய்தி னாரே. (கஉ)

வையக நிகழக் காதன் மாதேவி தனது செய்ய
கையினைத் தடிந்த சிங்கர் கழலிணை தொழுது போற்றி
எய்திய பெருமை யனப ரிடங்கழி யாரென் றேத்து
மெய்யரு ளுடைய தொண்டர் செயல்வினை விளம்ப லுற்றாம். (கங)

கழற்சிங்கநாயனார்புராண முற்றிற்று.

ஆ. திருவிருத்தம்-ச,ககங.

---

கழற்சிங்க நாயனார் என்பவர் காடவர் குலத்திலே அவதரித்தவர். அவர் சிவபெருமானை யன்றி மற்றைய சிறுதேவர்களைக் கனவிலுங் கருதாத நீர்மையுடையவர். அவர் சிவபெருமான் திருவருளால் வடபுல மன்னர்களை வென்று உலகமெல்லாஞ் சைவசமயந் தழைத்தோங்க நீதியரசியற்றிப் பலதிருப்பதிகளுக்குப் போய்ச் சுவாமிதரிசனஞ் செய்து கொண்டிருந்தார். ஒருநாள் மனைவியாரோடு திருவாரூரையடைந்து சிவபெருமானைத் தரிசித்து வணங்கினார். அதுகாலை அவர் மனைவியார் திருக்கோயிலை வலங் கொண்டு, அங்கங்கேயுள்ள பெருமைகளைத் தனித்தனி கண்டு வியந்து, பூத் தொடுக்கும் மண்டபத்தின் பக்கத்திலே விழுந்து கிடந்த புதுப்பூவொன்றை எடுத்து மோந்தார். அதுகண்ட செருத்துணை நாயனார் புஷ்பமண்டபத் துள்ள பூவை எடுத்து மோந்தார் எனக்கருதிக் கத்தி கைக்கொண்டு விரைந்து ஓடி அம்மையார் மூக்கை யறுத்தலைத் தொழித்தார். மாதேவியார் உதிரம் ஒழுகவும், கூந்தல் சோரவும் பூமியிலே விழுந்து புலம்பினார். அப்பொழுது கழற்சிங்கநாயனார் சிவதரிசனஞ் செய்து நாயகியார் அருகே அணைந்து நோக்கி "சிறிதும் பயமின்றி இக்கொடுஞ்செயலைச் செய்தவர் யார்" என்று வினவினார். அதுகேட்ட செருத்துணையார் முன்நடந்த சங்கதியைச் சொன்னார். அதற்குக் கழற்சிங்கநாயனார் "பூவை யெடுத்த கரத்தை யன்றோ முதலில் துணிக்கவேண்டும். அதுவே தகுந்த தண்டம்" என்று கூறி, உடைவாளையுருவி மாதேவியார் மலர் எடுத்த கையைத் துணித்தார். அச்செயற்கருஞ் செய்கையைக் கண்ட அமரர்கள் அலர்மாரி சொரிந்தார்கள். சிவபத்தியிற் சிறந்த கழற்சிங்க நாயனார் சின்னாள் சைவந் தழைக்க அரசாண்டு சமயாசாரியனாந் தந்த சங்கரன் திருவடி சேர்ந்தார்.

---

# இடங்கழிநாயனார் புராணம்.

எழுந்திரைமா கடலாடை யிருநிலமா மகணமாபில்
அழுந்துபட வெழுதுமிலைத் தொழிறலுரையி லணியினவாஞ்
செழுந்தளிரின் புடைமறைந்த பெடைகளிப்பத் தேமாவின்
கொழுந்துணாகோ திகொண்டு குயிலொடுங் கோனாடு. (க)

முருகுறுசெங் கமலமது மலர்துதைந்த மொய்யளிகள்
பருகுறுதெண் டிரைவாவிப் பயிலபெடையோ டிரையருந்து

வருகுறுந்தண் டுளிவாடை மறையமா தவிசசூழ்ந்த
குருகுறங்குங் கோனாட்டுக் கொடிநகரங் கொடும்பாளூர். (௨)

அந்நகரத் தினிலிருக்கும் வேளிர்குலத் தரசளித்து
மன்னியபொன் னம்பலத்து மணிமுகட்டிற் பாக்கொங்கிற்
பன்னுதுலைப் பசும்பொன்னாற் பயில்பிழம்பா மிசையணிந்த
பொன்னெடுந்தோ ளாதித்தன் புகழ்மரபிற் குடிமுதலோர். (௩)

இடங்கழியா ரெனவுலகி லேறுபெரு நாமத்தார்
அடங்கலார் முப்புரமெரித்தா ரடித்தொண்டி னெறியன்றி
முடங்குநெறி கனவினிலு முன்னாதார் முந்நாளுந்
தொடர்ந்தபெருங் காதலினாற் றொண்டர்வேண் டியசெய்வார். (௪)

சைவநெறி வைதிகத்தின் றருமநெறி யொடுந்தழைப்ப
மைவளருந் திருமிடற்றார் மன்னியகோ யிலகளெங்கும்
மெய்வழிபா டர்ச்சனைகள் விதிவழிமேன் மேல்விளங்க
மொய்வளர்வண் புகழ்பெருக முறைபுரியு மந்நாளில். (௫)

சங்கரன்ற னடியாருக் கமுதளிக்குந் தவமுடையார்
அங்கொருவ ரடியவருக் கமுதொருநா ளாக்கவுடன்
எங்குமொரு செயல்காணா தெய்தியசெய் தொழின்முட்டப்
பொங்கியெழும் பெருவிருப்பாற் புரியும்வினை தெரியாது. (௬)

அரசர்வா பண்டாரத் தந்நாட்டி னெற்கூட்டின்
நிரைசெறிந்த புரிபலவா நிலைக்கொட்ட காரத்திற்
புரைசெறிநள் ளிருளின்கட் புக்குமுகந் தெடுப்பவரை
முரசெறிகா வலர்கண்டு பிடித்தரசன் முன்கொணர்ந்தார். (௭)

மெய்த்தவரைக் கண்டிருக்கும் வேன்மன்னர் வினவுதலும்
அத்தனடி யாரையியா னமுதுசெய் விப்பதுமுட்ட
இத்தகைமை செய்தேனென் றியம்புதலு மிகவிரங்கிப்
பத்தரைவிட் டிவரன்றோ பண்டார மெனக்கென்பார். (௮)

நிறையழிந்த வுள்ளத்தா னெற்பண்டா ரமுமன்றிக்
குறைவில்நிதிப் பண்டார மானவெலாங் கொள்ளைமுகந்
திறைவனடி யார்கவர்ந்து கொள்கவென வெம்மருங்கும்
பறையறையப் பண்ணுவித்தார் படைத்தநிதிப் பயன்கொள்வார். (௯)

எண்ணில்பெரும் பண்டார மீசனடி யார்கொள்ள
உண்ணிறைந்த வன்பினா லுறுகொள்ளை மிகவூட்டித்
தண்ணளியா னெடுங்கால திருநீற்றி னெறிதழைப்ப
மண்ணிலருள் புரிந்திறைவர் மலரடியி னிழற்சேர்ந்தார். (௧௦)

---

(௩) வேளிர் குலம் - குறுநில மன்னர் குலம்.

மைதழையு மணிமிடற்றார் வழித்தொண்டின் வழிபாட்டில்
எய்துபெருஞ் சிறப்புடைய விடங்கழியார் கழல்வணங்கி
மெய்தருவார் நெறியன்றி வேறொன்று மேலறியாச்
செய்தவராஞ் செருத்துணையார் திருத்தொண்டு செயன்மொழிவாம். (கக)

இடங்கழிநாயனார்புராணம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம்-௪,௧௨௪.

---

கோனாட்டிலே, கொடும்பாளூரிலே, குறுநிலவேந்தர் வம்சத்திலே, பொன்னம்பலத்தினை முகட்டைக் கொங்கிற் பசும்பொன் ஓடால் மூடிய ஆதித்தன் குடிமுதல்வரும், சிவநெறியை யன்றிப் புறநெறியை நெறிகளாகச் சொப்பனத்திலுங் கருதாதவரும், சிவனடியார் பத்தியிற் சிறந்தவரும் ஆகிய இடங்கழி நாயனார் என்பவர் ஒருவர் இருந்தார். அவர் வைதிக சைவநெறிகள் தழைத்தோங்கவும், சிவாலயங்கள்தோறும் அர்ச்சனைகளும், பிறவும் விதிப்படி நடைபெறவும் செங்கோல் தாங்கி அரசாட்சி செய்து வந்தார். வருநாளில் ஒருநாள் சிவனடியார்களை மாகேசுர பூசை செய்விக்கும் ஒருபெரியவர் அடியவர்களை அமுது செய்விக்கப் பொருள் அகப்படாது வருந்தி இரவிலே அரசர் பெருமானாகிய இடங்கழியார் அரண்மனையடைந்து பண்டாரத்திலே நெற்கூட்டு நிரைகள் நிறைந்த கொட்டகாரத்திலே புகுந்து நெற்களை முகந்து எடுத்தார். அப்பொழுது காவலாளர்கள் அவரைப்பார்த்துப் பிடித்து நாயனார் முன் கொண்டுவந்து நிறுத்தினார்கள். அரசர் பெருமான் அவரை நோக்கி "நீர் என் எமது நெற்பண்டாரத்தைத் திருடினீர்" என்று கேட்டார். அதற்கு அவ்வடியவர் "சிவனடியார்களுக்கு மாகேசுவர பூசை செய்விக்குந் திருத்தொண்டானது பொருள் இன்மையால் முட்டுப்பட்டது. அதனால் இங்ஙனஞ் செய்தேன்" என்று சொன்னார். அது கேட்ட இடங்கழி நாயனார் மிக இரங்கி "எனக்கு இவரன்றோ பண்டாரம்" என்று பேரன்போடு கூறி, அவரை விடுத்து, "சிவனடியார்களெல்லாரும் நெற்பண்டாரமன்றி மற்றப்பண்டாரங்களையும் கொள்ளைகொண்டு வாரிச்செல்லக்கடவர்" என்று பறையறைவித்தார். பின்னர் நெடுங்காலம் நீதியரசியற்றி வேதியனைப் பெற்ற விமலனடி சேர்ந்தார்.

---

# செருத்துணைநாயனார் புராணம்.

உள்ளும் புறம்புங் குலமரபி னொழுக்கம் வழுவா வொருமைநெறி
கொள்ளு மியல்பிற் குடிமுதலோர் மலிந்த செல்வக் குலப்பதியாந்
தெள்ளுந் திரைகண் மதகுதொறுஞ் சேலுங் கயலுஞ் செழுமணியுந்
தள்ளும் பொன்னி நீர்நாட்டு மருகனாட்டுத் தஞ்சாவூர். (க)

சீரின் விளங்கு மப்பதியிற் றிருந்து வேளாண் குடிமுதல்வர்
நீரின் மலிந்த செய்யசடை நீற்றர் கூற்றி னெஞ்சிடித்த
வேரி மலர்ந்த பூங்கழல்சூழ் மெய்யன் புடைய சைவரெனப்
பாரி னிகழுஞ் செருத்துணையார் பரவுந் தொண்டி னெறிநின்றார். (உ)

ஆன வன்பர் திருவாரூ ராழித் தேர்வித் தகர்கோயின்
ஞான முனிவ ரிமையவர்க ணெருங்கு நலஞ்சேர் முன்றிலினுண்
மான நிலவு திருப்பணிகள் செய்து காலங் களின்வணங்கிக்
கூன விளவெண் பிறைமுடியார் தொண்டு பொலியக் குலவுநாள். (௩)

உலகு நிகழ்ந்த பல்லவர்கோச் சிங்க ருரிமைப் பெருந்தேவி
நிலவு திருப்பூ மண்டபத்து மருங்கு நீங்கிக் கிடந்ததொரு
மலரை யெடுத்து மோந்ததற்கு வந்து பொறாமை வழித்தொண்டர்
இலகு சுடர்வாய்க் கருவியெடுத் தெழுந்த வேகத் தாலெய்தி. (௪)

கடிது முற்றி மற்றவடன் கருமென் கூந்தல் பிடித்தீர்த்துப்
படியில் வீழ்த்தி மணிமூக்கைப் பற்றிப் பரமர் செய்யசடை
முடியி லேறுந் திருப்பூமண் டபத்து மலர்மோந் திடுமூக்கைத்
தடிவ னென்று கருவியினா லரிந்தார் தலைமைத் தனித்தொண்டர். (௫)

அடுத்த திருத்தொண் டுலகறியச் செய்த வடலே றனையவர்தாந்
தொடுத்த தாம மலரிதழி முடியா ரடிமைத் தொண்டுகடல்
உடுத்த வுலகி னிகழச்செய் துய்யச் செய்ய பொன்மன்றுள்
எடுத்த பாத நிழலடைந்தே யிறவா வின்ப மெய்தினார். (௬)

செங்கண் விடையார் திருமுன்றில் வீழ்ந்த திருப்பள் ளித்தாமம்
அங்க ணெடுத்து மோந்தவதற் கரச னுரிமைப் பெருந்தேவி
துங்க மணிமூக் கரிந்தசெருத் துணையார் தூய கழலிறைஞ்சி
யெங்கு நிகழ்ந்த புகழ்த்துணையா ருரிமை யடிமை யெடுத்துரைப்பாம். (௭)

செருத்துணைநாயனார்புராண முற்றிற்று.

ஆக திருவிருத்தம்-௪,௧௩௩.

---

சோழநாட்டிலே, தஞ்சாவூரிலே, வேளாளர் மரபிலே செருத்துணை நாயனார் என்பவர் ஒருவர் இருந்தார். அவர் கமலாலயத்தை யடைந்து சுவாமி தரிசனஞ்செய்து பல திருத்தொண்டுகள் புரிந்து வருநாளில், அங்கே சிவ தரிசனஞ் செய்யவந்த கழற்சிங்க நாயனாருடைய பத்தினியார் பூத் தொடுக்கும் மண்டபத்தின் பக்கத்திலே விழுந்திருந்த ஒரு பூவையெடுத்து மோந்ததைப்பார்த்துக் கத்தியெடுத்துக்கொண்டு விரைவாக ஓடிவந்து அவ் வம்மையார் கூந்தலைப்பிடித்து ஈர்த்துக் கீழேதள்ளி மூக்கைஅறுத்து ஒழித் தார். பின்னர்ப் பலசிவதொண்டுகள் செய்துகொண்டிருந்து சிகியோன் தந்தையடி சேர்ந்தார்.

---

## புகழ்த்துணைநாயனார் புராணம்.

செருவிலிபுத் தூர்மன்னுஞ் சிவமறையோர் திருக்குலத்தார்
அருவரைவில் லாளிதனக் ககத்தடிமை யாமதனுக்

கொருவர்தமை நிகரில்லா ருலகத்துப் பரந்தோங்கிப்
பொருவரிய புகழ்நீடு புகழ்த்துணையா ரெனும்பெயரார். (௧)

தங்கோனைத் தவத்தாலே தத்துவத்தின் வழிபடுநாட்
பொங்கோத ஞாலத்து வறக்கடமாய்ப் பசிப்புரிந்தும்
எங்கோமான் றனைவிடுவே னல்லேனென் றிராப்பகலுங்
கொங்கார்பன் மலர்கொண்டு குளிர்புனல்கொண் டருச்சிப்பார். (௨)

மாலயனுக் கரியானை மஞ்சனமாட் டும்பொழுது
சாலவுறு பசிப்பிணியால் வருந்திநிலை தளர்வெய்திக்
கோலநிறை புனற்குடுக்கை தாங்கமாட் டாமையினால்
யாலமணி கண்டத்தார் முடிமீது வீழ்த்தயர்வார். (௩)

சங்கரன்ற னருளாலோர் துயில்வந்து தமையடைய
அங்கணனுங் கனவின்க ணருள்புரிவா னருந்துணவு
மங்கியநாட் கழிவளவும் வைப்பதுநித் தமுமொருகா
சிங்குனக்கு நாமென்ன விடர்நீங்கி யெழுந்திருந்தார். (௪)

பெற்றமுகந் தேறுவார் பீடத்தின் கீழொருகா
சற்றமடங் கிடவளிப்ப வன்பருமற் றதுகைக்கொண்
டுற்றபெரும் பசியதனா லுணங்குதல்முன் புடனுவந்து
முற்றுணர்வு தலைநிரம்ப முகமலர்ந்து களிகூர்ந்தார். (௫)

அந்நாள்போ லெந்நாளு மளித்தகா சதுகொண்டே
யின்னாத பசிப்பிணிவந் திறுத்ததனா னீங்கியபின்
மின்னார்செஞ் சடையார்க்கு மெய்யடிமைத் தொழில்செய்து
பொன்னாட்டி னமரர்தொழப் புனிதரடி நிழற்சேர்ந்தார். (௬)

பந்தணையு மெல்விரலாள் பாகத்தர் திருப்பாதம்
வந்தணையு மனத்துணையார் புகழ்த்துணையார் கழல்வாழ்த்திச்
சந்தணியு மணிப்புயத்துத் தனிவீர ராந்தலைவர்
கொந்தணையு மலரலங்கற் கோட்புலியார் செயலுரைப்பாம். (௭)

புகழ்த்துணைநாயனார்புராணம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம்-௪,௧௩௮

---

செருவிலிபுத்தூரிலே, ஆதிசைவர் மரபிலே அவதரித்தவர் புகழ்த்துணை நாயனார் என்பவர். அப்பெரியார் அபிஷேகப் பிரியராகிய சிவபெருமானை அருச்சித்து வந்தார். வருநாளில் பஞ்சத்தால் பீடிக்கப்பெற்றார். பெற்றும் "சிவார்ச்சனையை விடுவேனல்லேன்" என்று அல்லும் பகலும் அருச்சித்துக்கொண்டிருந்தார். ஒருநாள் நாயனார் சிவபெருமானைத் திருமஞ்சனமாட்டும்பொழுது பசியால் மிக மெலிவுற்றிருந்தமையால் கைத்தளர்க

(௨) வறக்கடம் - பஞ்சம்.

கலசந் தேவதேவன் திருமுடிமேல் விழுந்தது. அதுகண்ட அந்தணர் பெருமான் சிவசந்நிதியில் விழுந்து அயர அரனருளால் அவருக்கு நித்திரை வந்தது. அப்பொழுது சிவபெருமான் அவருக்குக் கனவிலே தோன்றி "பஞ்சம் ஒழியுமளவுக்கும் நாம் உனக்கு நாடோறும் ஒவ்வோர் காசளிப்போம்" என்று திருவாய் மலர்ந்தருளினார். நாயனார் நித்திரைவிட்டெழுந்து பீடத்தின் கீழே ஒருகாசு இருப்பதைக்கண்டு அதனைக் கைக்கொண்டு கழிபேருவகையுற்றார். அங்ஙனே நாடோறும் ஒவ்வொரு காசுபெற்று வாழ்ந்துவந்தார். பஞ்சம் ஒழிந்தபின்னரும் பலநாளாகத் தந்திருத்தொண்டை வழாது நடத்தி நவிரா துணைவரை நின்றாற்றுவித்த கண்ணுதலடி சேர்ந்தார்.

---

# கோட்புலிநாயனார் புராணம்.

நலம்பெருகுஞ் சோணாட்டு நாட்டியத்தான் குடிவேளாண்
குலம்பெருக வந்துதித்தார் கோட்புலியா ரெனும்பெயரார்
தலம்பெருகும் புகழ்வளவர் தந்திரியா ராயினாருப்
புலம்பெருகத் துயர்விளையப் போர்விளைத்துப் புகழ்விளைப்பார். (க)

மன்னவன்பாற் பெறுஞ்சிறப்பின் வளமெல்லா மதியணியும்
பிஞ்ஞகர்தங் கோயிறொறுந் திருவமுதின் படிபெருகச்
செந்நென்மலைக் குவடாகச் செய்துவருந் திருப்பணியே
பன்னெடுநாள் செய்தொழுகும் பாங்குபுரிந் தோங்குநாள். (உ)

வேந்தனே வலிற்பகைஞர் வெம்முனைமேற் செல்கின்றார்
பாந்தள்பூ ணெனவணிந்தார் தமக்கமுது படியாக
ஏந்தலார் தாமெய்து மாவுமேவண் டுஞ்செந்நெல்
வாய்ந்தகூ டவைகட்டி வழிக்கொள்வார் மொழிகின்றார். (ங)

தந்தமர்க ளாயினார் தமக்கெல்லாந் தனித்தனியே
எந்தையார்க் கமுதுபடிக் கேற்றியநெல் லிவையழிக்கச்
சிந்தையாற் றாநினைவார் திருவிரையாக் கலியென்று
வந்தனையா லுரைத்தகன்றார் மன்னவனார் முனைமேல். (ச)

மற்றவர்தாம் போயினபின் சிலநாளில் வற்காலம்
உற்றலுமச் சுற்றத்தா ருணவின்றி யிறப்பதனிற்
பெற்றமுயர்த் தவரமுது படிகொண்டா கிலும்பிழைத்துக்
குற்றமறப் பின்கொடுப்போ மெனக்கூடிக் குலைத்தழித்தார். (ரு)

மன்னவன்றன் வெம்முனையில் வினைவாய்த்து மற்றவன்பால்
நன்னிதியின் குவைபெற்ற நாட்டியத்தான் குடித்தலைவர்
அந்நகரிற் றமர்செய்த பிழையறிந்த தறியாமே
துன்னினார் சுற்றமெலாந் துணிப்பனெனுந் துணிவினராய். (சு)

---

(க) தந்திரியார் - சேனாபதி. (உ) குவடு - மலை (ங) பாந்தள் - பாம்பு.
(ச) திருவிரையாக்கலி - திருவாணை (ரு) வற்காலம் - பஞ்சகாலம்

எதிர்கொண்ட தமர்க்கெல்லா மினியமொழி பலமொழிந்து
மதிதங்கு சுடாமணிமா ளிகையின்கண் வந்தணைந்து
பதிகொண்ட சுற்றத்தார்க் கெல்லாமப் பைந்துகினிதியம்
அதிகந்தந் தளிப்பதனுக் கழைமின்க ளென்றுரைத்து. (௭)

எல்லாரும் புகுந்ததற்பி னிருநிதிய மளிப்பார்போல்
நல்லார்தம் பேரோன்முன் கடைகாக்க நாதன்றன்
வல்லாணை மறுத்தமுது படியழித்த மறக்கிளையைக்
கொல்லாதே விடுவேனோ வெனக்கனன்று கொலைபுரிவார். (௮)

தந்தையார் தாயார்மற் றுடன்பிறந்தார் தாரங்கள்
பந்தமார் சுற்றத்தார் பதியடியார் மதியணியும்
எந்தையார் திருப்படிமற் றுண்ணவிசைந் தார்களையுஞ்
சிந்தவாள் கொடுதுணித்தார் தீயவினைப் பவந்துணிப்பார். (௯)

பின்னங்குப் பிழைத்ததொரு பிள்ளையைத்தம் பெயரோனவ்
வன்னந்துய்த் திலதுகுடிக் கொருபுதல்வ னருளுமென
இந்நெல்லுண் டாண்முலைப்பா லுண்டதென வெடுத்தெறிந்து
மின்னலல வடிவாளா லிருதுணியாய் விழவெற்றார். (௧௦)

அந்நிலையே சிவபெருமா னன்பரெதிர் வெளிநின்
றுன்னுடைய கைவாளா லுறுபாச மறுத்தகிளை
பொன்னுலகின் மேலுலகம் புகக்கணையப் புகழோய்நீ
யிந்நிலைநம் முடனணைகென் றேவியெழுந் தருளினார். (௧௧)

அத்தனா யன்னையா யாருயிரா யமிர்தாகி
முத்தனா முதல்வனா ரடைந்துகிளை முற்றடிந்த
கொத்தலர்தார்க் கோட்புலியா ரடிவணங்கிக் கூட்டத்திற்
பத்தராய்ப் பணிவார்தம் பரிசினையாம் பகருவாம். (௧௨)

மேவரிய பெருந்தவமயான் முன்புவிளைத் தனவென்னே
யாவதுமோர் பொருளல்லா வெனமனத்து மன்றியே
நாவலர்கா வலர்பெருகு நதிகிழிய வழிநடந்த
சேவடிப்போ தெப்போதுஞ் சென்னியினு மலர்ந்தனவால். (௧௩)

கோட்புலிநாயனார்புராண முற்றிற்று.

கா ல்சூழ்ந்தசருக்க முற்றுப்பெற்றது.

ஆக திருவிருத்தம்-௪,௧௫௧.

---

சோழமண்டலத்திலே, நாட்டியத்தான்குடி வேளாண் மரபிலே, சிவபத்தி சிவனடியார் பத்திகளிற் சிறந்த கோட்புலிநாயனார் என்ற பெரியவர் ஒருவர் இருந்தார். அவர் சோழமகாராஜாவினிடத்திலே சேனாதிபதித்

தொழில்செய்து, அதனால் கிடைக்கும் பொருளைக்கொண்டு சிவாலயங்களுக்குத் திருவமுதின்பொருட்டு நெற்களைவாங்கி மலைபோலக்குவித்துக் கட்டுதலாகிய திருத்தொண்டைச் செய்துவந்தார். ஒருநாளில் அரசன் ஆணைப்படி யுத்தத்திற்குப் போகவேண்டி நேர்ந்தது. அப்பொழுது நாயனார் பெருமான் தாம் மீண்டுந் திரும்பும்வரைக்கும் சிவாலயங்களுக்கு வேண்டிய நெல்லைக் கட்டிச் சுற்றத்தவர்களைத் தனித்தனியழைத்து 'சிவநாதன் திருவமுதுப்படிக்குக் கட்டப்பட்ட இந்நெல்லை எடுத்துச் செலவழியாதிருப்பீர்களாக; இறைவன் ஆணை'' என்று கூறி யுத்தத்திற்குப்போனார். அவர்சென்ற சின்னாளைக்குள் பஞ்சம் வந்தது. அதனால் பெரிதும் வாடிய பந்துக்களெல்லாரும் 'உணவின்றி உயிர் துறப்பதினும், எம்பிரான் திருவமுதுப்படி நெல்லாகிய இதைக் கொண்டாயினும் உயிர்பெற்றிருந்து பிறகு கொடுத்துவிடுவோம்'' என்று துணிந்து நெல்லையெடுத்துச் செலவழித்தார்கள். போருக்குப்போயிருந்த கோட்புலியார் பகைவர்களை முறியடித்து ஜெயமடைந்து நிதிக்குவைபெற்றுத் திரும்பித் தம் ஊரையடைந்ததுந் தஞ்சுற்றத்தார்கள் செய்த அடாதசங்கதியைக் கேள்வியுற்று உண்மையுணர்ந்தார். உடனே நாயனார் சுற்றத்தவர்கட்கெல்லாம் பட்டாடைகளையும், திரவியங்களையும் அளிப்பதாக அழைப்பித்து, கோட்புலி என்னுந் தம்பெயருடைய சேவகனை வாயில் காக்கும்படி செய்து ''என்னையுமறந்து இறைவன் திருவமுதுக்கென்று கட்டப்பட்ட நெல்லை எடுத்துச் செலவழித்த அதிபாதகர்களை அழிக்காமல் விடுவேனோ'' என்று வடவைபோற் கொதித்தெழுந்து, தந்தையார், தாயார், உடன்பிறந்தார், தாரங்கள் முதலிய எல்லாச் சுற்றத்தார்களையும் வாளினால் வெட்டித்துணித்தார். அப்பொழுது தம்பெயர் கொண்ட வாயில்காப்போன் அங்குப் பிழைத்திருந்த ஆண்பிள்ளையைப் பார்த்து ''இக்குழந்தை அவ்வன்னத்தை உண்ணவில்லை; இது ஒரு குடிக்கு ஒரே பிள்ளை. இதை வெட்டாதருள் செய்யும்'' என்று வேண்டினன். அதற்கு அடியவர் ''இக்குழவி சிவான்னத்தையுண்டதாயினும், அதை யுண்டவருடைய முலைப்பாலை யருந்தியபடியால் இதையும் துணிக்கவேண்டும்'' என்று அதை எடுத்தெறிந்து வாளால் துணித்தார். உடனே அரக்கர்களை யழித்த அண்ணலையளித்த சிவபெருமான நாயனார் முன்னே எழுந்தருளி ''உன் கைவாளால் வெட்டுண்டு பாசத்தை யொழித்தவர்களெல்லாரும் மேலுலகம் அடைந்தார்கள். நீ இந்தப் படியே நம்மோடு வரக்கடவாய்'' என்று திருவருள்செய்து கரந்தனர்.

---

பதினோராவது

## பத்தராய்ப்பணிவார் சருக்கம்

# பத்தராய்ப்பணிவார் புராணம்.

ஈசருக்கே யன்பானார் யாவரையுந் தாங்கண்டாற்
கூசிமிகக் குதுகுதுத்துக் கொண்டாடி மனமகிழ்வுற்
றாசையினா லாவின்பின் கன்றணைந்தாற் போலணைந்து
பேசுவன பணிந்தமொழி யினியனவே பேசுவார். (க)

தாவரிய வன்பினாற் சம்புவினை யெவ்விடத்தும்
யாவர்களு மர்ச்சிக்கும் படிகண்டா லினிதுவந்து

பாவனையா னோக்கினும் பலர்காணப் பயன்பெறுவார்
மேவரிய வன்பினான் மேலவர்க்கு மேலானார். (உ)

அங்கணனை யடியாரை யாராத காதலினாற்
பொங்கிவரு முவகையுட னாமவிரும்பிப் பூசிப்பார்
பங்கயமா மலர்மேலான் பாம்பணையா னென்றிவர்க
டங்களுக்குஞ் சாரவரிய சரணசாருந் தவமுடையார். (௩)

யாதானு மிவ்வுடம்பாற் செய்வினைக ளேறுயர்த்தார்
பாதார விந்தத்தின் பாலாக வெனும்பரிவாற்
காதார்வெண் குழையவர்க்காம் பணிசெய்வார் கருக்குழியிற்
போதார்க ளவர்புகழ்க்குப் புவனமெலாம் போதாவால். (௪)

சங்கரனைச் சார்ந்தகதை தாங்கேட்குந் தன்மையராய்
அங்கணனை மிகவிரும்பி யயலறியா வன்பினால்
கங்கைநதி மதியிதழி காதலிக்குந் திருமுடியார்
செங்கமல மலர்ப்பாதஞ் சேர்வதனுக் குரியார்கள். (ரு)

ஈசனையே பணிந்துருகி யின்பமிகக் களியெய்திப்
பேசினவாய் தழுதழுப்பக் கண்ணீரின் பெருந்தாரை
மாசிலா நீறழித்துக் கருவிதிர மயிர்சிலிர்ப்பக்
கூசியே யுடல்கம்பித் திடுவார்மெய்க் குணமிக்கார். (௬)

நின்றாலு மிருந்தாலுங் கிடந்தாலு நடந்தாலு
மென்றாலுந் துயின்றாலும் விழித்தாலு மிமைத்தாலு
மன்றாடு மலர்ப்பாத மொருகாலு மறவாமை
குன்றாத வுணர்வுடையார் தொண்டராங் குணமிக்கார். (எ)

சங்கரனுக் காளான தவங்காட்டித் தாமதனாற்
பங்கமறப் பயன்றுய்யார் படிவிளக்கும் பெருமையினார்
அங்கணனைத் திருவாரூ ராள்வானை யடிவணங்கிப்
பொங்கியெழுஞ் சித்தமுடன் பத்தராய்ப் போற்றுவார். (அ)

பத்தராய்ப்பணிவார்புராண முற்றிற்று.

---

பத்தராய்ப்பணிவார் பரமசிவனடியார்களைப் பார்க்கின் அவர்களுடைய குலம் முதலியவற்றைச் சிறிதும் விசாரியாது, அவர்களைப் பேரானந்தத்தோடு, பசுவைத்தொடர்ந்து செல்லுங்கன்றைப்போல அணைந்து பணிந்து இனிய மொழிகளாற் பேசுபவர், எள்ளுக்குள் எண்ணெயைப்போல் எங்கும் நீக்கமற நிறைந்துள்ள சங்கரனை எங்கும் பூசிப்பவர்களைக் கண்டால், மிக மனமகிழ்பவர், சிவபெருமானையும், அவருடைய அடியவர்களையும் நீங்காத காதலினால் பெருவிருப்போடு பூசிப்பவர்; பிரமவிட்டுணுக்களும் அறிதற்கரிய

திருவடியைச்சாருந் தவமுடையவர்; தங்கள் உடம்பால் செய்யும் புண்ணியங்களெல்லாம் சிவபிரான் திருவடிக்கே என்று கொடுப்பவர்; சிவசரிதங்களையே கேட்பவர்; ஈசனையே பணிந்துருகி, இன்புற்று, வாய்குழறி, கண்ணீர்சொரிய, மயிர்சிலிர்ப்ப, உடலந்தம்பிப்பவர்; நின்றாலும், இருந்தாலும், கிடந்தாலும், நடந்தாலும், மென்றாலும், துயின்றாலும், விழித்தாலும், இமைத்தாலும் ஸ்ரீ நடராஜபெருமானுடைய திருவடியை ஒருகாலும் மறவாதவர்; குன்றாத வுணர்வுடையவர், சிவன் நிமித்தஞ் சிவவேடந்தரியாதவர்.

---

# பரமனையேபாடுவார் புராணம்.

புரமூன்றுஞ் செற்றானைப் பூணாக மணிந்தானை
யுரனில்வரு மொருபொருளை யுலகனைத்து மானானைக்
கரணங்கள் காணாமற் கண்ணார்ந்து நிறைந்தானைப்
பரமனையே பாடுவார் தம்பெருமை பாடுவாம். (௧)

தென்றமிழும் வடகலையுந் தேசிகமும் பேசுவன
மன்றினிடை நடம்புரியும் வள்ளலையே பொருளாக
ஒன்றியமெய் யுணர்வோடு முள்ளுருகிப் பாடுவார்
பன்றியுடன் புட்காணாப் பரமனையே பாடுவார். (௨)

பரமனையேபாடுவார்புராண முற்றிற்று.

---

பரமனையே பாடுபவர் தென்மொழியையும், வடமொழியையும், பிறமொழிகளையுங் கற்றுணர்ந்து, அவையிற்றின் பயன் பசுபதியாகிய சிவபெருமானை உள்ளன்போடு பாடுதலே என்னுஞ் சிவானந்த இறுமாப்புடையவர்.

---

# சித்தத்தைச்சிவன்பாலேவைத்தார் புராணம்.

காரணபங் கயமைந்தின் கடவுளர்தம் பதங்கடந்து
பூரணமெய்ப் பரஞ்சோதி பொலிந்திலங்கு நாதாந்தத்
தாரணையாற் சிவத்தடைந்த சித்தத்தார் தனிமன்றுள்
ஆரணகா ரணக்கூத்த ரடித்தொண்டின் வழியடைந்தார். (௧)*

சித்தத்தைச்சிவன்பாலேவைத்தார்புராண முற்றிற்று.

---

(௧) உரனில் ஞானமுதிர்ந்த இடத்தில.

* (௧) ஐங்கடவுளர் - பிரமன், விட்டுணு, உருத்திரன், மகேசுரன், சதாசிவன். இவர்களைத்தரிசித்தப்பின்னரே தற்பரசிவத்தைத் தரிசிப்பது யோகமுறை. இதனைச் சைவ சாத்திரங்களினும், காசிகாண்டம் முதலிய சிவநூல்களினும் பரக்கக் காண்க.

தாமரைப்பூவில் உறையும் பிரமன் முதலிய ஐந்துதேவர் பதங்களையும் கடந்து, பூரணமாகப் பரஞ்சோதி விளங்கும் நாதாந்தத் தாரணையாற் சிவத்தையடைந்த திருவுள்ளத்தவர்.

---

# திருவாரூர்ப்பிறந்தார் புராணம்.

அருவாகி யுருவாகி யனைத்துமாய் நின்றபிரான்
மருவாரூங் குழலுமையாண் மணவாளன் மகிழ்ந்தருளுந்
திருவாரூர்ப் பிறந்தார்க டிருத்தொண்டு தெரிந்துணர
ஒருவாயாற் சிறியேனா லுரைக்கலாந் தகைமையதோ. (க)

திருக்கயிலை வீற்றிருந்த சிவபெருமான் றிருக்கணத்தார்
பெருக்கியசீர்த் திருவாரூர்ப் பிறந்தார்க ளாதலினாற்
றருக்கியவைம் பொறியடக்கி மற்றவர்தந் தாள்வணங்க
வொருக்கியநெஞ் சுடையவர்க்கே யணித்தாகு முயர்நெறியே. (உ)

திருவாரூர்ப்பிறந்தார்புராணம் முற்றிற்று.

---

திருவாரூர்ப் பிறந்தவர்கள் சிவகணங்களேயாதலால் அவர்கள் தம் பெருமை யென்னொரு நாவால் இயம்பற்பாலதன்று.

---

# முப்போதுந்திருமேனி தீண்டுவார் புராணம்.

எப்போது மினியபிரா னின்னருளா லதிகரித்து
மெய்ப்போத நெறிவந்த விதிமுறைமை வழுவாமே
யப்போதைக் கப்போது மாவமிகு மனபினராய்
முப்போது மர்ச்சிப்பார் முதற்சைவ ராமுனிவர். (க)

தெரிந்துணரின் முப்போதுஞ் செல்கால நிகழ்காலம்
வருங்கால மானவற்றின் வழிவழியே திருத்தொண்டின்
விரும்பியவர்ச் சனைகள்சிவ வேதியர்க்கே யுரியனவப்
பெருந்தகையார் குலப்பெருமை யாம்புகழும் பெற்றியதோ. (உ)

வேறு.

நாரணற்கு நான்முகற்கு மறிய வொண்ணா நாதனையெம் பெருமானை ஞான மான ஆரணத்தி னுட்பொருள்க ளனைத்து மாகு மண்ணலையெண் ணியகால மூன்று மன்பின், காரணத்தா லர்ச்சிக்கு மறையோர் தங்கள்

கமலமலர்க் கழல்வணங்கிக் களித்த சிந்தைப், பூரணத்தான் முழுநீறு பூசி வாழும் புனிதர்செய லறிந்தவா புகல லுற்றேன். (௫)

முப்போதுந்திருமேனிதீண்டுவார்புராண முற்றிற்று.

---

முப்போதுந் திருமேனி தீண்டுவார் ஆதிசைவப் பிராமணர். முக்காலத்திலுஞ் சிவலிங்கப் பெருமானைத் தீண்டிப்புரியும் சிவார்ச்சனைகள் அவர்க்கே உரியன

---

# முழுநீறுபூசியமுனிவர் புராணம்

ஆதார மாயனைத்து மாகி நின்ற வங்கணனெம் பெருமானீ ரணிந்த வேணிக், காதார வெண்டிருக்குழையா னருளிச் செய்த கற்பமநு கற்பமுப கற்பந் தானும், ஆகாதென் றங்குரைத்த வகற்ப நீக்கி யாமென்று முன் மொழிந்த மூன்று பேத, மோகாதி குற்றங்க ளறுக்கு நீற்றை மொழிவதுநம் மிருவினைகள் கழிவ தாக. (௧)

அம்பலத்தே யுலகுய்ய வாடு மண்ண லுவந்தாடு மஞ்சினையு மளித்த வாக்கள், இம்பர் மிசை யநாமயமா யிருந்த போதி லீன்றணிய கோமயமந் திரத்தி னாலேற், றமர்தொழ வெழுஞ்சிவமந் திரத்தோ மத்தா லுற்பவித்த சிவாங்கித் தனி லுணர்வுக் கெட்டா, எம்பெருமான் கழனினைந்தங் கிட்ட தூநீ றிதுகற்ப மென்றெடுத்திங் கேத்த லாகும். (உ)

ஆரணியத் துலர்ந்தகோ மயத்தைக் கைக்கொண் டழகுறநுண் பொடியாக்கி யாவின் சுத்த, நீரணிவித் தந்திரமந் திரத்தி னாலே நிசையமுறப் பிடித்தோம நெருப்பி லிட்டுச், சீரணியும் படிவெந்து கொண்ட செல்வத் திருநீறு மநுகற்ப மில்லை மன்றுள், வாரணியு முலையுமையா ளாண வாடு மாணிக்கக் கூத்தர்மொழி வாய்மை யாலே. (௩)

அடவிபடு மங்கியினால் வெந்த நீறு மானிலைக ளனலுறக்க வெந்த நீறும், இடவகைக ளெரிகொளுவ வெந்த நீறு மிட்டிகைகள் சுட்டவெரி பட்ட நீறும், உடனன்றி வெவ்வேறே யாவி னீரா லுரைதிகழு மந்திரங் கொண் டுண்டை யாக்கி, மடமதனிற் பொலிந்திருந்த சிவாங்கி தன்னால் வெந்ததுமற் றுபகற்ப மரபி னாகும். (௪)

இந்தவகை யாலமைத்த நீறு கொண்டே யிருதிறமுஞ் சுத்திவரத் தெறித்த பின்னர், அந்தமிலா வரனங்கி யாறு மெய்ம்மை யறிவித்த குருநன்மை யல்லாப் பூமி, முந்தவெதி ராணியாதே யணியும் போது முழுவதுமெய் புண்டரஞ்சந் திரனிறபாதி, நந்தியெரி தீபசிகை வட்ட மாக நாதரடி யாரணிவர் நன்மை யாலே (௬)

---

(உ) அநாமயம் - நோயின்மை.

சாதியினிற் றலையான தருமசீலர் தத்துவத்தி னெறியுணர்ந்தோர் தங்கள் கொள்கை, நீதியினிற் பிழையாது நெறியினிற்போர் நித்தநிய மத்துநிகழங்கி தன்னிற், பூதியினைப் புதியபா சனத்துக் கொண்டு புலியதளி னுடையானைப் போற்றி நீற்றை, யாதிவரு மும்மலமு மறுத்த வாய்மை யருமுனிவர் முழுவதுமெய் யணிவ ரன்றே. (௯)

முழுநீறுபூசியமுனிவர்புராண முற்றிற்று.

---

முழுநீறுபூசிய முனிவர் கற்பம் அநுகற்பம் உபகற்பம் என மூவகைத் திருநீற்றையாவது நித்தியாக்கினி நீற்றையாவது உள்ளன்போடு மும்மலங் கழியச் சிவபிரானுக்கெதிரிலும், அக்கினிக்கெதிரிலும், வழியிலும், குருவுக்கெதிரிலும், அசுத்தமான நிலத்திலும் அணியாது, உத்தூளனமாகவும், திரிபுண்டரமாகவும், பிறைவடிவமாகவும், வட்டவடிவமாகவும், ஆகமவிதிப்படி அணிந்து பூசுகின்றவர்.

---

# அப்பாலுமடிச்சார்ந்தார் புராணம்.

மூவேந்தர் தமிழ்வழங்கு நாட்டுக் கப்பான் முதல்வனா ரடிச்சார்ந்த முறைமை யோரு, நாவேய்ந்த திருத்தொண்டத் தொகையிற் கூறு நற்றொண்டர் காலத்து முன்னும் பின்னும், பூவேய்ந்த நெடுஞ்சடைமே லடம்பு தும்பை புதியமதி நதியிதழி பொருந்த வைத்த, சேவேந்து வெல்கொடியா னடிச்சார்ந் தாருஞ் செப்பியவப் பாலுமடிச் சார்ந்தார் தாமே. (௧)

செற்றார்தம் புரமெரித்த சிலையார் செல்வத் திருமுருகன் பூண்டியினிற் செல்லும் போதிற், சுற்றருஞ் சிலைவேடர் கவர்ந்து கொண்ட தொகுநிதியின் பரப்பெல்லாஞ் சுமந்து கொண்டு, முற்றாத முலையுமையாள் பாகன் பூத முதற்கணமே யுடன்செல்ல முடியாப் பேறு, பெற்றார்தங் கழல்பரவ வடியேன் முன்னைப் பிறவியினிற் செய்ததவம் பெரிய வாமே. (௨)

அப்பாலுமடிச்சார்ந்தார்புராண முற்றிற்று.

பத்தராய்ப்பணிவார்சருக்க முற்றுப்பெற்றது.

ஆ - திருவிருத்தம்-ச,கஎகு.

---

அப்பாலும் அடிச்சார்ந்தார் சேரசோழ பாண்டிய நாடுகளுக்கு அப்புறத்திலே பத்திசெய்து சிவனடி சேர்ந்தவரும், திருத்தொண்டத் தொகையிலே சொல்லப்பட்ட அடியவர்கள் காலத்துக்கு முன்னும் பின்னும் சிவனடி சேர்ந்தவருமாவர்.

---

(*) பாசனம் - பாத்திரம்

பன்னிரண்டாவது

## மன்னியசீர்ச் சருக்கம்

# பூசலார் நாயனார் புராணம்.

அன்றினார் புரமெரித்தார்க் காலய மெடுக்க வெண்ணி
யொன்றுமங் குதவா தாக வுணர்வினா லெடுக்குந் தன்மை
நன்றென மனத்தி னாலே நல்லவா லயந்தான் செய்த
நின்றவூர்ப் பூச லார்த நினைவினை யுரைக்க லுற்றாம். (௧)

உலகினி லொழுக்க மென்று முயர்பெருந் தொண்டை நாட்டு
நலமிகு சிறப்பின் மிக்க நான்மறை விளங்கு மூதூர்
குலமுதற் சீல மென்றுங் குறைவிலா மறையோர் கொள்கை
நிலவிய செல்வ மல்கி நிகழ்திரு நின்ற வூராம். (௨)

அருமறை மரபு வாழ வப்பதி வந்து சிந்தை
தருமுணர் வான வெல்லாந் தம்பிரான் கழல்மேற் சார
ஒருநெறி மாறா வன்பு வளர்ந்தெழ வளர்ந்து வாய்மைப்
பொருள்பெறு வேத நீதிக் கலையுணர் பொலிவின் மிக்கார். (௩)

அடுப்பது சிவன்பா லன்பாக் காம்பணி செய்த லென்றே
கொடுப்பதெவ் வகையுந் தேடி யவர்கொளக் கொடுத்துக் கங்கை
மடுப்பொதி வேணி யையர் மகிழ்ந்துறை வதற்கோர் கோயில்
எடுப்பது மனத்துக் கொண்டா ரிருநிதி யின்மை யெண்ணார். (௪)

மனத்தினாற் கருதி யெங்கு மாநிதி வருந்தித் தேடி
யினைத்தொரு பொருட்பே றின்றி யென்செய்கே னென்று நைவார்
நினைப்பினா லெடுக்க நேர்ந்து நிகழ்வுறு நிதிய மெல்லாந்
தினைத்துணை முதலாத் தேடிச் சிந்தையாற் றிரட்டிக் கொண்டார். (௫)

சாதனத் தோடு தச்சர் தம்மையு மனத்தாற் றேடி
நாதனுக் காலயஞ்செய் நலம்பெறு நன்னாட் கொண்டே
யாதரித் தாக மத்தா லடிநிலை பாரித் தன்பாற்
காதலிற் கங்குற் போதுங் கண்படா தெடுக்க லுற்றார். (௬)

அடிமுத லுபான மாதி யாகிய படைக ளெல்லாம்
வடிவுறுந் தொழில்க ணுற்ற மனத்தினால் வகுத்து மான
முடிவுறு சிகரந் தானு முன்னிய முழத்திற் கொண்டு
நெடிதுநாள் கூடக் கோயி னிரம்பிட நினைவாற் செய்தார். (௭)

தூபியு நட்டு மிக்க சுதையுநல் வினையுஞ் செய்து
கூவலு மமைத்து மாடு கோயில்சூழ் மதிலும் போக்கி
வாவியுந் தொட்டு மற்றும் வேண்டுவ வகுத்து மன்னுந்
தாபனஞ் சிவனுக் கேற்க விதித்தநாள் சாரு நாளில், (௮)

காடவர் கோமான் கச்சிக் கற்றளி யெடுத்து முற்ற
மாடெலாஞ் சிவனுக் காகப் பெருஞ்செல்வம் வகுத்தல் செய்வா
னீடுமா லறியா தாரைத் தாபிக்கு மந்நாண் முன்னாள்
ஏடலர் கொன்றை வேய்ந்தா ரிரவிடைக் கனவி லெய்தி. (௯)

நின்றவூர்ப் பூச லன்ப னெடிதுநா ணினைந்து செய்த
நன்றுநீ டாலயத்து நாளைநாம் புகுவோ நீயிங்
கொன்றிய செயலை நாளை யொழிந்துபின் கொள்வா யென்று
கொன்றைவார் சடையார் தொண்டர் கோயில்கொண் டருளப் போந்தார்.

தொண்டரை விளக்கத் தூயோ னருள்செயத் துயிலை நீங்கித்
திண்டிறன் மன்ன னந்தத் திருப்பணி செய்தார் தம்மைக்
கண்டுநான் வணங்க வேண்டு மென்றெழுங் காத லோடுந்
தண்டலைச் சூழல் சூழ்ந்த நின்றவூர் வந்து சார்ந்தான். (கக)

அப்பதி யணைந்து பூச லன்பரிங் கமைத்த கோயில்
எப்புடை யதுவென் றங்க ணெய்தினார் தம்மைக் கேட்கச்
செப்பிய பூசல் கோயில் செய்ததொன் றில்லை யென்றார்
மெய்ப்பெரு மறையோ ரெல்லாம் வருகவென் றுரைத்தான் வேந்தன். (கஉ)

பூசுர ரெல்லாம் வந்து புரவலன் றன்னைக் காண
மாசிலாப் பூச லாரா மாறென மறையோ ரெல்லாம்
ஆசில்வே தியனிவ் வூரா னென்றவ ரழைக்க வொட்டா
ஈசனா ரன்பர் தம்பா லெய்தினன் வெய்ய வேலான். (கங)

தொண்டரைச் சென்று கண்ட மன்னவன் றொழுது நீரிங்
கெண்டிசை யோரு மேத்த வெடுத்தவா லயந்தா னியாதிங்
கண்டர்நா யகரைத் தாபித் தருளுநா ளின்றென் றும்மைக்
கண்டடி பணிய வந்தேன் கண்ணுத லருள்பெற் றென்றான். (கச)

மன்னவ னுரைப்பக் கேட்ட வன்பர்தா மருண்டு நோக்கி
யென்னையோர் பொருளாக் கொண்டே யெம்பிரா னருள்செய் தாரேன்
முன்வரு நிதியி லாமை மனத்தினான் முயன்ற கோயில்
இன்னதா மென்று சிந்தித் தெடுத்தவா றெடுத்துச் சொன்னார். (கரு)

அரசனு மதனைக் கேட்டங் கதிசய மெய்தி யென்னே
புரையறு சிந்தை யன்பர் பெருமையென் றவரைப் போற்றி
விரைசெறி மாலை தாழ நிலமிசை வீழ்ந்து தாழ்ந்து
முரசெறி தானை யோடு மீண்டுதன் மூதூர் புக்கான். (கசு)

அன்பரு மமைத்த சிந்தை யாலயத் தரனார் தம்மை
நன்பெரும் பொழுது சாரத் தாபித்து நலத்தி னோடும்
பின்புபூ சனைக ளெல்லாம் பெருமையிற் பலநாட் பேணிப்
பொன்புனை மன்று ளாடும் பொற்கழ னீழல் புக்கார். (கஎ)

நீண்டசெஞ் சடையி னாற்கு நினைப்பினாற் கோயி லாக்கிப்
பூண்டவன் பிடைய ருத்த பூசலார் பொற்றாள் போற்றி
யாண்டகை வளவர் கோமா னுலகுய்ய வளித்த செல்வப்
பாண்டிமா தேவி யார்தம் பாதங்கள் பரவ லுற்றேன். (௧அ)

பூசலார்நாயனார்புராணம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம்-௪௧௧௩.

---

தொண்டைநாட்டிலே, திருநின்றவூரிலே, மறையவர் குலத்திலே பூசலார் என்ற புண்ணியர் ஒருவரிருந்தார். அவர் வேதமுதலிய கலைகளைக் கற்றுத்தெளிந்து, சிவபத்தியிற் சிறந்தவராய்ச் சிவனடியார்களை வழிபட்டு அவர்கள் வேண்டுவனவற்றை எவ்வகையுந் தேடிக்கொடுத்துக் கொண்டிருந்தார். இங்ஙனம் இருக்குநாளில் அவ்வடியவர் சிவாலயம் ஒன்று கட்ட விரும்பி வருந்திப் பொருள்தேடியும் சிறிதும் கிடைக்காமைகண்டு, தளர்வெய்தி நினைவினால் ஓர் ஆலயங் கட்டத்துணிந்து, அதற்கு வேண்டியவற்றைத் தேடிச் சுபதினத்திலே அடிகோலி, நித்திரையின்றிக் கட்டிமுடித்து, பிரதிட்டை செய்யச் சுபதினத்தை எதிர்பார்த்துக்கொண்டிருந்தார். அதுகாலை காடவராஜாவானவர் காஞ்சிபுரத்திலே ஒரு திருக்கோயில் கட்டிமுடித்துப் பிரதிட்டைசெய்ய ஒரு சுபதினத்தையுங் குறித்தார். அத்தினத்திற்கு முன்னாள் சிவபிரான் பூசலார்நாயனாருடைய மெய்யன்பை உலகத்தாருக்கு வெளிப்படுத்த வேண்டி அவ்வரசன் சொப்பனத்திலே தோன்றி "திருநின்றவூரிலேயுள்ள பூசல் என்பவன் நெடுநாளாகச் சிந்தித்துக் கட்டிய திருக்கோயிலிலே நாளை நாம் எழுந்தருளுவோம். உன் ஆலயப்பிரதிட்டையை நாளை யொழித்துப் பின்னொருநாளில் வைத்துக்கொள்" என்று திருவாய் மலர்ந்தருளி மறைந்தருளினார். உடனே அரசர் விழித்தெழுந்து பூசலாரைத் தரிசிக்க விரும்பிப் புறப்பட்டுத் திருநின்றவூரை யடைந்து, அங்கு வந்தவர்களை நோக்கி "பூசலார் கட்டிய திருக்கோயி லெங்கேயிருக்கிறது" என்று கேட்டார். அவர்கள் "பூசலார் இங்குக் கோயில் கட்டினாரில்லை" என்று சொன்னார்கள். அதுகேட்ட அரசர் அவ்வூர் அந்தணர்களை அழைப்பித்து "பூசலார் யாவர்" என்று வினவினார். அதற்கு அவர்கள் "அவர் பிராமணர்; இவ்வூரவர்" என்று சொன்னார்கள். காடவர்கோமான் அந்நாயனாரை அழைக்கவொட்டாமல் தடுத்துத் தாமே அவர்பாற்சென்று அவரைத்தொழுது "தேவரீர் கட்டிய ஆலயம் யாது? அதில் பிரதிட்டைசெய்யும் நாள் இன்று என்று பரமசிவனால் தெரிந்து, இங்கு உம்மைத் தரிசிக்க வந்தேன்" என்றார். அதுகேட்ட பூசலார் மருண்டு மன்னவனை நோக்கி "சிறியேனை ஒரு பொருளாகக் கருதிச் சிவபெருமான் அருளிச்செய்த ஆலயம் யான் நினைவினால் எழுப்பியதொன்றேயாம்" என்று சிந்தித்துத் தாங்கட்டிமுடித்த வரலாற்றை எடுத்துக்கூறினார். அரசன் அந்நாயனாரைத் தொழுது விடைபெற்றுத் தம் பதியையடைந்தார். நாயனார் பெருமான் தமது சிந்தையாலயத்திலே சிவபெருமானைச் சுபதினத்திலே பிரதிட்டைசெய்து பூசித்துக்கொண்டிருந்து தூரகாரியைப் பெற்றுச் சங்கரனடி சேர்ந்தார்.

---

# மங்கையர்க்கரசியார் புராணம்.

மங்கையர்க்குத் தனியரசி யெங்க டெய்வம் வளவர்திருக் குலக்கொழுந்து வளைக்கை மானி, செங்கமலத் திருமடந்தை கன்னி நாடா டென்னர்குலப் பழிதீர்த்த தெய்வப் பாவை, யெங்கள்பிரான் சண்பையர்கோ னருளி னாலே யிருந்தமிழ்நா டுற்றவிடர் நீக்கித் தங்கள், பொங்கொளிவெண் டிருநீறு பரப்பி னாரைப் போற்றுவார் கழலெம்மாற் போற்ற லாமே. (க)

பூசுரர்சூ ளாமணியாம் புகலி வேந்தர் போனகஞா னம்பொழிந்த புனித வாக்கால், தேசுடைய பாடல்பெறுந் தவத்தி னாரைச் செப்புவதியா மென்னறிந்து தென்னர் கோமான், மாசில்புகழ் நெடுமாறன் றனக்குச் சைவ வழித்துணையாய் நெடுங்கால மன்னிப் பின்னை, யாசில்நெறி யவரோடுங் கூட வீச ரடிநீழற் கீழமர்ந்திருக்க வருளும் பெற்றார். (உ)

வருநாளென் றும்பிழையாத் தெய்வப் பொன்னி வளம்பெருக்க வளவர் குலம் பெருக்குந் தங்க, டிருநாடு போற்செழியர் தென்னாடு விளக்குஞ் சீர் விளக்கின் செய்யசீ றடிகள் போற்றி, ஒருநாளுந் தன்செயலில் வழுவா தன்பர்க் குடைகீளுங் கோவணமு நெய்து நல்கும், பெருநாமச் சாலியர்தங் குலத்தில் வந்த பெருந்தகையார் நேசர்திறம் பேச லுற்றாம். (௩)

மங்கையர்க்கரசியார்புராண முற்றிற்று.

ஆக திருவிருத்தம்-௪௧௯௩.

---

சோழமகாராஜாவின் புத்திரியாராகிய மங்கையர்க்கரசியார் மதுரை மன்னராகிய கூன்பாண்டியரெனனும் நின்றசீர்நெடுமாறநாயனார் மனைவியார்; திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகளால் திருப்பதிகத்திலே சிறப்பிக்கப் பெற்றவர்; அஞ்ஞானவள்ளலார் திருவருளால் நெடுங்காலம் தன்னாயகருக்குச் சைவவழித்துணையாய் நின்று, அந்நாயகரோடு உத்திரதுயாரணைப்பெற்ற உருத்திரநாயகனடி சேர்ந்தார்.

---

# நேசநாயனார் புராணம்.

சீர்வளர் சிறப்பின் மிக்க செயன்முறை யொழுக்கங் குன்றா
நார்வளர் சிந்தை வாய்மை நன்மையார் மன்னி வாழும்
பார்வளர் புகழின் மிக்க பழம்பதி மதிதோய் நெற்றிக்
கார்வளர் சிகர மாடக் காம்பீலி யென்ப தாகும். (க)

அந்நக ரதனில் வாழ்வா ரறுவையர் குலத்து வந்தார்
மன்னிய தொழிலிற் றங்கண் மரபின்மேம் பாடு பெற்றார்
பன்னகா பரணற் கன்பர் பணிதலைக் கொண்டு பாதஞ்
சென்னியிற் கொண்டு போற்றுந் தேசினார் நேச ரென்பார். (உ)

ஆங்கவர் மனத்தின் செய்கை யரனடிப் போதுக் காக்கி
யோங்கிய வாக்கின் செய்கை யுயரஞ்செழுத்துக் காக்கித்
தாங்குகைத் தொழிலின் செய்கை தம்பிரா னடியார்க் காகப்
பாங்குடை யுடையுங் கீளும் பழுதில்கோ வணமு நெய்வார். (௩)

உடையொடு நல்ல கீளு மொப்பில்கோ வணமு நெய்து
விடையவ ரடியார் வந்து வேண்டுமா றீயு மாற்றால்
இடையறா தளித்து நாளு மவர்கழ லிறைஞ்சி யேத்தி
யடைவுறு நலத்த ராகி யரனடி நீழல் சேர்ந்தார். (௪)

வேறு.

கற்றை வேணி முடியார்தங் கழல்சேர் வதற்குக் கலந்தவினை
செற்ற நேசர் கழல்வணங்கிச் சிறப்பான முன்னைப் பிறப்புணர்ந்து
பெற்ற மூயர்த்தார்க் காலயங்கள் பெருக வமைத்து மண்ணுண்ட
கொற்ற வேந்தர் கோச்செங்கட் சோழர் பெருமை கூறுவாம். (௫)

நேசநாயனார்புராண முற்றிற்று.

ஆக திருவிருத்தம்-௪,௨0௧.

காம்பீலிநகரத்திலே, சாலியர்குலத்திலே, நேசநாயனார் என்பவர் ஒருவர் இருந்தார். அவர் தங்குலத்துக்குத் தலைமைபூண்டு, தமது மனத்தின் செய்கையைச் சிவபிரான் திருவடித் தாமரைக்காக்கி, வாக்கின் செய்கையை அஞ்செழுத்துக்காக்கி, கையின் செய்கையைச் சிவனடியார்களுக்காகக் கூறாயக்கீள் கோவணம் வஸ்திரமுதலியன நெய்து, தம்பால்வரும் திருத்தொண்டர்களுக்கு இடையறாது அளித்து, இனியவனை யளித்த இறைவனடி சேர்ந்தார்.

# கோச்செங்கட்சோழநாயனார் புராணம்.

துலையிற் புறவி னிறையளித்த சோழ ருரிமைச் சோணாட்டில்
அலையிற் றரள மகிலொடுசந் தணிநீர்ப் பொன்னி மணிகொழிக்குங்
குலையிற் பெருகுஞ் சந்திரதீர்த் தத்தின் மருங்கு குளிர்சோலை
நிலையிற் பெருகுந் தருமிடைந்த நெடுந்தண் கான மொன்றுளதால். (௧)

அப்பூங் காவில் வெண்ணாவ லதன்கீழ் முன்னா ளரிதேடு
மெய்ப்பூங் கழலார் வெளிப்படலு மிக்க தவத்தோர் வெள்ளானை
கைப்பூம் புனலு முகந்தாட்டிக் கமழ்பூங் கொத்து மணிந்திறைஞ்சி
மைப்பூங் குவளைக் களத்தாரை நாளும் வழிபட் டொழுகுமால். (௨)

(௧) துலையிற் புறவின் நிறையளித்த - தராசுத் தட்டிலே புறாவின் நிறைக்குச் சரியாக (தமது மாமிசத்தையரிந்து) ஈந்த. அப்படிச் செய்தவர் சிபிச்சக்கரவர்த்தி அவர் சூரிய குலத்தவர்.

ஆன செயலாற் றிருவானைக் காவென் றதற்குப் பெயராக
ஞான முடைய வொருசிலந்தி நம்பர் செம்பொற் றிருமுடிமேற்
கானல் விரவுஞ் சருகுதிரா வண்ணங் கலந்த வாயனூலான்
மேனற் றிருமேற் கட்டியென விரிந்து செறியப் புரிந்துளதால். (ங)

நன்று மிழைத்த சிலம்பிவலைப் பரப்பை நாத னடிவணங்கச்
சென்ற யானை யநுசிதமென் றதனைச் சிதைக்கச் சிலம்பிதான்
இன்று களிற்றின் கரஞ்சுலவிற் றென்று மீள விழைத்ததனை
யன்று கழித்த பிற்றைநா ளடலவெள் ளானை யழித்ததால். (ச)

எம்பி ரான்றன் மேனியின்மேற் சருகு விழாமை யான்வருந்தி
யும்ப ரிழைத்த நூல்வலய மழிப்ப தேயென் றுருத்தெழுந்து
வெம்பிச் சிலம்பி துதிக்கையினிற் புக்குக் கடிப்ப வேகத்தாற்
கும்ப யானை கைநிலத்தின் மோதிக் குலைந்து வீழ்ந்ததால். (ரு)

தறையிற் புடைப்பக் கைப்புக்க சிலம்பி தானு முயிர்நீங்க
மறையிற் பொருளுந் தருமாற்றான் மதயா னைக்கும் வரங்கொடுத்து
முறையிற் சிலம்பி தனைச்சோழர் குலத்து வந்து முன்னுதித்து
நிறையிற் புவனங் காத்தளிக்க வருள்செய் தருள நிலத்தின்கண். (சு)

வேறு.

தொன்மைதரு சோழர்குலத் தரசனுஞ் சுபதேவன்
றன்னுடைய பெருந்தேவி கமலவதி யுடன்சார்ந்து
மன்னுபுகழ்த் திருத்தில்லை மன்றாடு மலர்ப்பாதஞ்
சென்னியுறப் பணிந்தேத்தித் திருப்படிக்கீழ் வழிபடுநாள். (எ)

மக்கட்பே றின்மையினான் மாதேவி வரம்வேண்டச்
செக்கர்நெடுஞ் சடைக்கூத்தர் திருவுள்ளஞ் செய்தலினான்
மிக்கதிருப் பணிசெய்த சிலம்பிகுல வேந்துமகிழ்
அக்கமல வதிவயிற்றி னணிமகவாய் வந்தடைய. (அ)

வேறு.

கழையார் தோளி கமலவதி தன்பாற் கருப்ப நாணிரம்பி
விழையார் மகவு பெறவடுத்த வேலை யதனிற் காலமுணர்
பழையா ரொருநா ழிகைகழித்துப் பிறக்கு மேலிப் பசுங்குழவி
யுழையார் புவன மொருமூன்று மளிக்கு மென்ன வொள்ளிழையார். (கூ)

பிறவா தொருநா ழிகைகழித்தென் பிள்ளை பிறக்கும் பரிசென்கால்
உறவார்த் தெடுத்துத் தூக்குமென வுற்ற செயன்மற் றதுமுற்றி
யறவா ணர்கள்சொல் லியகால மணையப் பிணிவிட் டருமணியை
யிறவா தொழிவான் பெற்றெடுத்தென் கோச்செங் கண்ணனோ வென்றாள்.

---

(ரு) உம்பர் இழைத்த - மேலே பின்னிய. (கூ) கழை - மூங்கில்.

தேவி புதல்வற் பெற்றிறக்கச் செங்கோற் சோழன் சுபதேவன்
ஆவி யனைய வரும்புதல்வன் றன்னை வளர்த்தங் கணிமகுடம்
மேவு முரிமை முடிகவித்துத் தானும் விரும்பு பெருந்தவத்தின்
றூவி னெறியைச் சென்றடைந்து தலைவர் சிவலோ கஞ்சார்ந்தான். (௧௧)

கோதை வேலார் கோச்செங்கட் சோழர் தாமிக் குவலயத்தில்
ஆதி மூர்த்தி யருளான்முன் னறிந்து பிறந்து மண்ணாள்வார்
பூத நாதன் றானமகிழ்ந்து பொருந்தும் பெருந்தண் சிவாலயங்கள்
காத லோடும் பலவெடுக்குந் தொண்டு புரியுங் கடன்பூண்டார். (௧௨)

ஆனைக் காவிற் றாம்முன்ன மருள்பெற் றதனை யறிந்தங்கு
மானைத் தரித்த திருக்கரத்தா மகிழுங் கோயில் செய்கின்றார்
ஞானச் சார்வாம் வெண்ணாவ லுடனே கூட நலஞ்சிறக்கப்
பானற் களத்துத் தம்பெருமா னமருங் கோயிற் பணிசமைத்தார். (௧௩)

வேறு.

மந்திரிக டமையேவி வள்ளல்கொடை யனபாயன்
முந்தைவருங் குலமுதலோ ராயமுதற் செங்கணார்
அந்தமில்சீர்ச் சோணாட்டி லகனாடு தொறுமணியார்
சந்திரசே கரனமருந் தானங்கள் பலசமைத்தார். (௧௪)

அக்கோயி றொறுஞ்சிவனுக் கமுதுபடி முதலான
மிக்கபெருஞ் செல்வங்கள் விருப்பினொடு மிகவமைத்துத்
திக்கனைத்துந் தனிச்செங்கோன் முறைநிறுத்தித் தேர்வேந்தர்
முக்கணமுத னடமாடு முதற்றில்லை முன்னினார். (௧௫)

திருவார்ந்த செம்பொன்னி னம்பலத்தே நடஞ்செய்யும்
பெருமானை யடிவணங்கிப் பேரன்பு தலைசிறப்ப
உருகாநின் றுளங்களிப்பத் தொழுதேத்தி யுறையுநாள்
வருவாய்மை மறையவர்க்கு மாளிகைகள் பலசமைத்தார். (௧௬)

தேவர்பிரான் றிருத்தொண்டிற் கோச்செங்கட் செம்பியர்கோன்
பூவலயம் பொதுநீக்கி யாண்டருளிப் புவனியின்மேல்
ஏவியநற் றொண்டுபுரிந் திமையவர்க ளடிபோற்ற
மேவினார் திருத்தில்லை வேந்தர்திரு வடிநிழற்கீழ். (௧௭)

வேறு.

கருநீல மிடற்றார் செய்ய கழலடி நீழல் சேர
வருநீர்மை யுடைய செங்கட் சோழர்தம் மலர்த்தாள் வாழ்த்தித்
தருநீர்மை யிசைகொள் யாழின் றலைவரா முலக மேத்துந்
திருநீல கண்டப் பாணர் திறமினிச் செப்ப லுற்றேன். (௧௮)

கோச்செங்கட்சோழநாயனார்புராண முற்றிற்று.

ஆக திருவிருத்தம்—௪,௨௧௧.

சோழநாட்டிலே, சந்திரதீர்த்தத்தின் சமீபத்திலே ஒருவனம் இருந்தது. அதிலே ஒரு வெண்ணாவல் மரத்தின் கீழே ஒரு சிவலிங்கம் வெளிப்பட்டது. அதுகண்ட ஒரு வெள்ளானை துதிக்கையினாலே நீரை முகந்துகொண்டு வந்து ஆட்டி மலர் சாத்தித் தினந்தோறும் வழிபட்டு வந்தது. அதனால் அத்திருத்தலத்திற்குத் திருவானைக்கா என்னுந் திருநாமமுண்டாயிற்று. ஞானவுணர்ச்சியுடைய ஒரு சிலந்தி அச்சிவலிங்கப் பெருமான் மீது சருகு உதிராவண்ணம் தன் வாயனூலால் விதானம் பரப்பியது. சிவலிங்கப் பெருமானைப் பூசிக்கப்போந்த வெள்ளானை மேற்கட்டியைக்கண்டு "இது அநுசிதம்" என்று எண்ணி அதை அழித்தது. அதைப்பார்த்த சிலந்தி "யானையின் துதிக்கை சுழன்றமையால் விதானம் அழிந்தது" என்று கருதி மீளவும் மெய்யன்போடு மேற்கட்டி கட்ட, அடுத்தநாளும் அந்தயானை அவ்விதானத்தைச் சிதைத்தது. அதைக் கண்ணுற்றிருந்த சிலந்தியானது "எம்பிரான் திருமேனியின்மேல் சருகுவிழா வண்ணம் யானவருந்திக் கட்டிய விதானத்தை இக்களிறு சிதைக்கலாமா" என்று உருத்தெழுந்து, கஜத்தினது துதிக்கையில் புகுந்து கடித்தது. கடிக்கவே, வேழம் துமபிக்கையை நிலத்திலே மோதிக்கொண்டு கீழே விழுந்து இறந்தது. அக்குஞ்சரம் கரத்தைமோதிய வேகத்தால் சிலந்தியும் இறந்தது. மெய்யுணர்ச்சியோடு கடவுளைப் பூசித்துவந்த வெள்ளானை சிவலோகமடைந்தது. சிலந்திப் பூச்சி, தமநாயகராகிய சுபதேவனென்னுஞ் சோழமகாராஜாவுடன் சிதம்பரத்தையடைந்து சபாநாயகரை உபாசித்துப் புத்திரப் பேறின்மையைக் குறித்து வரம்வேண்டிய கமலவதியார் திருவயிற்றில், அச்சபா நாயகர் திருவருளால் மகவாய் வந்தடைந்தது. கமலவதியார்க்குப் பிரசவகாலம் நெருங்கியது. அதுகாலைச் சோதிடர்கள் "இப்பிள்ளை இன்னும் ஒரு நாழிகை கழித்துப் பிறக்குமேல் திரிலோகத்தையும் ஆளும்" என்று சொன்னார்கள். அது அறிந்த கமலவதியார் "என்பிள்ளை இன்னும் ஒருநாழிகை பொறுத்துப் பிறக்கும்படி என்னைத் தலைகீழாகக் கட்டுங்கள்" என்று சொல்ல, அங்கிருந்தவர்கள் அப்படியே செய்து, ஒரு நாழிகை கழித்து அவிழ்த்து விட்டார்கள். உடனே பிள்ளை பிறந்தது. அது காலந்தாழ்த்துப் பிறந்தமையால் சிவந்த கண்களையுடையதாயிருந்தது. அதுகண்ட தாயார் "என் கோச்செங்கண்ணனே" என்று சொல்லிக்கொண்டே இறந்தார். சுபதேவர் அப்பிள்ளையை வளர்த்து முடிசூட்டித் தவஞ்செய்து சிவலோகஞ் சேர்ந்தார்.

பின்னர்க் கோச்செங்கட் சோழமகாராஜாவானவர் பரமசிவன் திருவருளால் பூர்வசன்ம உணர்ச்சியோடு பிறந்து, நீதியரசியற்றிச் சிவாலயங்கள் பல கட்டுந் திருத்தொண்டை மேற்கொண்டார். தாம் முன்னை திருவருள் பெற்ற திருவானைக்காவினைத் தெரிந்து, அத்திருப்பதியையடைந்து, அங்கே வெண்ணாவலோடு சிவபெருமானுக்குத் திருக்கோயில் கட்டுவித்தார். அமைச்சர்களை ஏவி சோழநாட்டிலே பல சிவாலயங்களைக் கட்டுவித்து, அவைகளுக்குப் பூசைமுதலியன குறைவற நிகழ்வதற்கு நிபந்தங்கள் அமைத்துச் சிதம்பரத்தையடைந்து, சபாநாயகரைத் தரிசனஞ் செய்துகொண்டிருந்து, தில்லைவாழ் அந்தணர்களுக்கு மாளிகைகளைக் கட்டிக் கொடுத்துப் பல திருத்தொண்டுகளைச் செய்து [illegible]ந்தையடி சேர்ந்தார்.

---

# திருநீலகண்டயாழ்ப்பாணநாயனார் புராணம்.

எருக்கத்தம் புலியூர் மன்னி வாழ்பவ ரிறைவன் றன்சீர்
திருத்தகும் யாழி லிட்டுப் பரவுவார் செழுஞ்சோ ணாட்டில்
விருப்புறு தான மெல்லாம் பணிந்துபோய் விளங்கு கூடற்
பருப்பதச் சிலையார் மன்னு மாலவா யணியச் சென்றார். (க)

ஆலவா யமர்ந்தார் கோயில் வாயிலை யடைந்து நின்று
பாலையீ ரேழு கோத்த பண்ணினிற் கருவி வீக்கிக்
காலமா தரித்த பண்ணிற் கைபல முறையு மாராய்ந்
தேலவார் குழலார் பாகர் பாணிகள் யாழி லிட்டார். (உ)

மற்றவர் கருவிப் பாடன் மதுரைநீ டால வாயிற்
கொற்றவன் றிருவுள் ளத்துக் கொண்டுதன் றொண்டர்க் கெல்லாம்
அற்றைநாட் கனவி லேவ வருட்பெரும் பாண னாரைத்
தெற்றினார் புரங்கள் செற்றார் திருமுன்பு கொண்டு புக்கார். (ங)

அன்பர்கள் கொண்டு புக்க பொழுதினி லரிவை பாகன்
றன்பெரும் பணியா மென்று தமக்குமெய் யுணர்த லாலே
மன்பெரும் பாண னாரு மாமறை பாட வல்லார்
முன்பிருந் தியாழிற் கூட்டி முதல்வரைப் பாடு கின்றார். (ச)

திரிபுர மெரித்த வாறுந் தேர்மிசை நின்ற வாறுங்
கரியினை யுரித்த வாறுங் காமனைக் காய்ந்த வாறும்
அரியயற் கரிய வாறு மடியவர்க் கெளிய வாறும்
பரிவினாற் பாடக் கேட்டுப் பரமனா ரருளி னாலே. (ரு)

அந்தரத் தெழுந்த வோசை யன்பினிற் பாணர் பாடுஞ்
சந்தயாழ் தரையிற் சீதந் தாக்கில்வீக் கழியு மென்று
சுந்தரப் பலகை முன்னீ ரிடுமெனத் தொண்ட ரிட்டார்
செந்தமிழ்ப் பாண னாருந் திருவருள் பெற்றுச் சேர்ந்தார். (சு)

தமனியப் பலகை யேறித் தந்திரிக் கருவி வாசித்
துமையொரு பாகர் வண்மை யுலகெலா மறிய வேத்தி
யிமையவர் போற்ற வேகி யெண்ணிரு ணங்கள் கும்பிட்
டமரர்நா டாளா தாரூ ராண்டவ ரானார் சேர்ந்தார். (எ)

(க) திருத்தகும் யாழ் என்றது நால்வகையாழினுள் சகோடயாழை. நால்வகை யாழ் - பேரியாழ், மகரயாழ், சகோடயாழ், செங்கோட்டியாழ். (உ) பாலையீரேழு கோத்த பண் என்றது ஆயப்பாலையை. விரிவை சிலப்பதிகாரம், வேனிற்காதை முதலிய நூல்களிற் காண்க. (எ) தமனியம் - பொன்.

வேறு.

கோயில் வாயின் முன்னடைந்து கூற்றஞ் செற்ற பெருந்திறலூர்
தாயி னல்ல பெருங்கருணை யடியார்க் களிக்குந் தண்ணளியும்
ஏயுங் கருவி யிற்றொடுத்தங் கிட்டுப் பாடக் கேட்டங்கண்
வாயில் வேறு வடதிசையில் வகுப்பப் புகுந்து வணங்கினார். (அ)

மூலத் தானத் தெழுந்தருளி யிருந்த முதல்வன் றனைவணங்கிச்
சாலக் கால மங்கிருந்து தம்பி ரான்றன் றிருவருளாற்
சீலத் தார்கள் பிரியாத திருவா ரூரி னின்றுபோய்
ஞாலத் தார்ந்த கண்டத்தா ரமருந் தானம் பலவணங்கி. (கூ)

ஆழி சூழுந் திருத்தோணி யமர்ந்த வம்மா னருளாலே
யாழின் மொழியா ளுமைஞான மூட்ட வுண்ட வெம்பெருமான்
காழி நாடன் கவுணியர்கோன் கமல பாதம் வணங்குதற்கு
வாழி மறையோர் புகலியினில் வந்தார் சந்த விசைப்பாணர். (க0)

ஞான முண்டார் கேட்டருளி நல்ல விசையாழ்ப் பெரும்பாணர்க்
கான படியாற் சிறப்பருளி யமரு நாளி லவர்பாடு
மேன்மைப் பதிகத் திசையாழி லிடப்பெற் றுடனே மேவியபின்
பானற் களத்தார் பெருமணத்தி லுடனே பரமர் தாளடைந்தார். (கக)

வரும்பான் மையினிற் பெரும்பாணர் மலர்த்தாள் வணங்கி வயற்சாலிக்
கரும்பார் கழனித் திருநாவ லூரிற் சைவக் கலைமறையோர்
அரும்பா னின்ற வணிநிலவும் பணியு மணிந்தா ரருள்பெற்ற
சுரும்பார் தொங்கற் சடையனார் பெருமை சொல்ல லுறுகின்றாம். (கஉ)

திருநீலகண்ட யாழ்ப்பாணநாயனார்புராண முற்றிற்று.

ஆக திருவிருத்தம்-௪,உ௩க.

---

திரு எருக்கத்தம்புலியூரிலே, சிவபெருமான் திருப்புகழையாழிலிட்டுவாசிப்பவராகிய திருநீலகண்டயாழ்ப்பாண நாயனாரென்பவர் ஒருவர் இருந்தார். அவர் சோழநாட்டிலேயுள்ள திருப்பதிகளைத் தரிசித்து, பாண்டிநாட்டைச் சேர்ந்து, திருவாலவாய்த் திருக்கோயில் திருவாயிலையடைந்து, சிவபெருமான் திருப்புகழ்களை யாழிலிட்டு வாசித்தார். அவ்யாழ்ப்பாடல்களைச் சொக்கநாதர் திருவுளத்திற்கொண்டு, அன்றிரவே தமது அடியவர்கள் கனவிலேதோன்றி அவர்களை ஏவ, அவர்கள் அடுத்தநாள் யாழ்ப்பெரும்பாணரைச் சந்நிதிமுன்னே அழைத்துக்கொண்டு போனார்கள். திருநீலகண்டர் இது இறைவனார் திருவாஞ்ஞை என்றுணர்ந்து, திருமுன்பு நின்று யாழ் வாசித்தார். அதுகாலை ஆகாயத்தில் "இப்பாணர் பாடுஞ் சந்தயாழ் தரையில் சீதம் தாக்கில் வீக்கழியும். ஆதலால் இவருக்குப் பொற்பலகை யிடுங்கள்" என்று அசரீரி கூறிற்று. அதுகேட்ட அன்பர்கள் அப்படியே பொற்பலகையிட்டார்கள். பாணர்பெருமான் அப்பலகைமீது நின்று யாழ் வாசித்தார்.

திருநீலகண்ட யாழ்ப்பெரும்பாணர் திருவாலவாயினின்றும் நீங்கிப் பல திருப்பதிகளைத் தரிசித்துக்கொண்டே திருவாரூரை யடைந்து, திருக்கோயில் வாயிலை அணைந்து யாழ் வாசித்தார். இசைப்பிரியராகிய இறைவனார் யாழோசையைக்கேட்டு வடதிசையிலே ஒரு திருவாயிலை வகுத்தருளினார். யாழ்ப்பெரும்பாணர் அத்திருவாயிலின் வழியாக நுழைந்து சுவாமி தரிசனஞ் செய்தார். பாணர்பெருமான் நெடுநாள் திருவாரூரிலே இருந்து பிறகு அத்திருப்பதியை விடுத்துப் பல திருத்தலங்களை வணங்கிக்கொண்டு சீகாழிப்பதியைச் சேர்ந்தார். அத்திருப்பதியிலே உலகுய்யத் திருவவதாரஞ் செய்தருளிய திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகளை வழிபட்டு, அவர் திருவாய்மலர்ந்தருளுந் திருவருட்பாக்களை யாழிலிட்டு வாசிக்கும் திருவருட்பேற்றைப் பெற்று, அப்பாலறுவாயரோடு திருநல்லூர்ப் பெருமணத்திலே சிவசோதியிற் கலந்தார்.

---

# சடையநாயனார் புராணம்.

தம்பி ரானைத் தோழமைகொண் டருளித் தமது தடமலர்த்தாள்
கொம்ப னார்பா லொருதூது செல்ல வேவிக் கொண்டருளும்
எம்பி ரானைச் சேரமான் பெருமா ளிணையி றுணைவரா
நம்பி யாரூ ரரைப்பயந்தார் ஞால மெல்லாங் குடிவாழ. (௧)

சடையநாயனார்புராண முற்றிற்று.

---

சடைய நாயனார் திருநாவலூர் ஆதிசைவர். அவர் சிவஞான சொரூபராகிய சுந்தரமூர்த்தி சுவாமிகளைப் புத்திரராகப் பெற்ற பெரும்பேற்றையுடையவர்.

---

# இசைஞானியார் புராணம்.

ஒழியாப் பெருமைச் சடையனா ருரிமைச் செல்வத் திருமனையார்
அழியாப் புரங்க ளெய்தழித்தா ராண்ட நம்பி தனைப்பயந்தார்
இழியாக் குலத்தி னிசைஞானிப் பிராட்டி யாரை யென்சிறுபுன்
மொழியாற் புகழ முடியுமோ முடியா தெவர்க்கு முடியாதால். (௧)

இசைஞானியார்புராண முற்றிற்று.

ஆ. திருவிருத்தம் ௪,௨௯௯.

மன்னியசீர்ச் சருக்க முற்றுப்பெற்றது.

---

இசைஞானியார் சடையநாயனாருடைய மனைவியார். அவர் தேவதேவராகிய சிவபெருமானைப் பெண்பொருட்டுத் தூதுகொண்ட ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகளை ஈன்றருளிய பெரும்பேறுடையவராதலான, அப்பெருமாட்டியாருடைய அருட்பெருந்திருப்புகழ் சிறியேன் புன்மொழியில் அடங்குமோ! அடங்காது.

பதின்மூன்றவது

# வெள்ளானைச் சருக்கம்.

மூல மான திருத்தொண்டத் தொகைக்கு முதல்வ ராயிந்த
ஞால முய்ய வெழுந்தருளு நம்பி தம்பி ரானரோடேழ்
காலை மலர்ச்செங் கமலக்கட் கழறிற் றறிவா ருடன்கூட
வால முண்டார் திருக்கயிலை யணைந்த தறிந்த படியுரைப்பாம். (க)

படியி னீடும் பத்திமுத லன்பு நீரிற் பணைத்தோங்கி
வடிவு நம்பி யாரூரர் செம்பொன் மேனி வனப்பாகக்
கடிய வெய்ய விருவினையின் களைகட் டெழுந்து கதிர்பரப்பி
முடிவி லாத சிவபோக முதிர்ந்து முறுகி விளைந்ததால். (உ)

ஆர முரக மணிந்தபிரா னன்ப ரணுக்க வன்றொண்டர்
ஈர மதுவார் மலர்ச்சோலை யெழிலா ரூரி லிருக்குநாட்
சேரர் பெருமா னனைநினைந்து தெய்வப் பெருமான் கழல்வணங்கிச்
சாரன் மலைநா டணைவதற்குத் தவிரா விருப்பி னுடன்போந்தார். (ங)

நன்னீர்ப் பொன்னித் திருநாட்டு நாதர் மகிழுந் திருப்பதிகண்
முன்னி யிறைஞ்சி யகன்றுபோய் முல்லைப் படப்பைக் கொல்லைமான்
றுன்னி யுகைக்குங் குடக்கொங்கி லணைந்து தூய மதிவானீர்
சென்னி மிசைவைத் தவர்செல்வத் திருப்புக் கொளியூர் சென்றடைந்தார்.

மறையோர் வாழு மப்பதியின் மாட வீதி மருங்கணைவார்
நிறையுஞ் செல்வத் தெதிர்மனைக ளிரண்டி லொன்றின் மங்கலவியங்கள்
அறையு மொலியொன் றினிலொன்றி லழுகை யொலிவந் தெழுதலுமாங்
குறையு மறையோர் களையிரண்டு முடனே நிகழ்வ தென்னென்றார். (ரு)

அந்த ணாளர் வணங்கியரும் புதல்வ ரிருவ ரையாண்டு
வந்த பிராயத் தினர்குளித்த மடுவின் முதலை யொருமகனை
முந்த விழுங்கப் பிழைத்தவனை முந்நூ லணியுங் கலியாணம்
இந்த மனைமற் றந்தமனை யிழந்தா ரழுகை யென்றுரைத்தார். (சு)

இத்தன் மையினைக் கேட்டருளி யிரங்குந் திருவுள் ளத்தினரா
மொய்த்த முகைத்தார் வன்றொண்டர் தம்மை முன்னே கண்டிறைஞ்ச
வைத்த சிந்தை மறையோனு மனைவி தானு மகவிழந்த
சித்த சோகந் தெரியாமே வந்து திருத்தா ளிறைஞ்சினார். (எ)

துன்ப மகல முகமலர்ந்து தொழுவார் தம்மை முகநோக்கி
இன்ப மைந்தன் றனையிழந்தீர் நீரோ வென்ன வெதிர்வணங்கி
முன்பு புகுந்து போனததது முன்னே வணங்க முயல்கின்றோம்
அன்பு பழுதா காமலெழுந் தருளப் பெற்றே மெனத்தொழுதார். (அ)

மைந்தன் றன்னை யிழந்ததுயர் மறந்து நான்வந் தணைந்ததற்கே
சிந்தை மகிழ்ந்தார் மறையோனு மனைவி தானுஞ் சிறுவனையான்
அந்த முதலை வாய்நின்று மழைத்துக் கொடுத்தே யவிநாசி
யெந்தை பெருமான் கழல்பணிவே னென்றா சென்றா ரிடர்களைவார். (௯)

இவ்வா றருளிச் செய்தருளி யிவர்கள் புதல்வன் றனைக்கொடிய
வெவ்வாய முதலை விழுங்குமடு வெங்கே யென்று வினவிக்கேட்
டவ்வாழ் பொய்கைக் கரையிலெழுந் தருளி யவனை யனறுகவர்
வைவா ளெயிற்று முதலைகொடு வருதற கெடுத்தார் திருப்பதிகம். (௧௦)

உரைப்பா ருரையென் றெடுத்ததிருப் பாட்டு முடியா முனனுயர்ந்த
வரைப்பான் மையினீ டடம்புயத்து மறலி மைந்த னுயிர்கொணர்ந்து
திரைப்பாய புனலின் முதலைவயிற றுடலிற சென்ற வாண்டுகளுந்
தரைப்பால் வளர்ந்த தெனநிரம்ப முதலை வாயிற் றருவித்தான. (௧௧)

---

திருப்புக்கொளியூர் அவிநாசி-பண்-குறிஞ்சி

திருச்சிற்றம்பலம்

எத்தான மறக்கேனெழுமைக்குமெம்பெருமானையே
உற்றாயென் றுன்னையேயுள்குகின்றே னுணர்ந்துள்ளத்தார்
புற்றாடரவா புக்கொளியூரவிநாசியே
பற்றாகவாழ்வேன் பசுபதியே பரமேட்டியே.

உரைப்பாருரையுகந்துள்கவல்லார்தங்களுச்சியா
யரைக்காடரவா வாதியுமந்தமுமாயினாய
புரைக்காடு சோலைப்புக்கொளியூரவிநாசியே
கரைக்கான்முதலையைப்பிள்ளைதரச்சொல்லுகாலனையே.

நீரேறவேறு நிமிர்சடைநின்மலமூர்த்தியைப்
போரேறேறுத்தறியைப்புக்கொளியூரவிநாசியைக்
காரேறுகண்டனைத்தொண்டனாரூரனகருதிய
சீரேறுபாடல்கள்சொல்லவல்லார்க்கில்லைதுன்பமே

திருச்சிற்றம்பலம்.

---

பெருவாய் முதலை கரையின்கட் கொடுவந் துமிழ்ந்த பிள்ளைதனை
யுருகா நின்ற தாயோடி யெடுத்துக் கொடுவந் துயிரளித்த
திருவா ளன்றன் சேவடிக்கீழ்ச் சீல மறையோ னொடுவீழ்ந்தா
மருவார் தருவின் மலர்மாரி பொழிந்தார் விசும்பில் வானோர்கள் (௧௨)

மண்ணி லுள்ளா ரதிசயித்தார் மறையோ ரெல்லா முத்தரியம்
விண்ணி லேற விட்டார்தாம் வேத நாத மிக்கெழுந்த
தண்ண லாரு மவிநாசி யரனார் தம்மை யருமறையோன்
றண்ணின மணியாம புதல்வனையுங் கொண்டு பணிந்தார் காசினிமேல். (௧௩)

பரவும் பெருமைத் திருப்பதிகம் பாடிப் பணிந்து போந்தன்பு
விரவு மறையோன் காதலனை வெண்ணூல் பூட்டி யண்ணலார்
முரச மியம்பக் கலியாண முடித்து முடிச்சே ரலர்தம்பாற்
குரவ மலர்ப்பூந் தண்சோலை குலவு மலைநா டணைகின்றார். (கச)

சென்ற சென்ற குடபுலத்துச் சிவனா ரடியார் பதிதொறு
நன்று மகிழ்வுற் றின்புற்று நலஞ்சேர் தலமுங் கானகமுந்
துன்று மணிநீர்க் கான்யாறுந் துறுகற் சுரமுங் கடந்தருளிக்
குன்ற வளநாட் டகம்புகுந்தார் குலவு மடியே னகம்புகுந்தார். (கரு)

முன்னாண் முதலை வாயப்புக்க மைந்தன் முன்போல் வரமீட்டுத்
தென்னா ரூர ரெழுந்தருளா நின்றா ரெனறு சேரர்பிராற்
கந்நாட் டாரு ரடியார்கண் முன்னே யோடி யறிவிப்பப்
பொன்னார் கிழியு மணிப்பூணுங் காசுந் தூசும் பொழிந்தளித்தார். (கசு)

செய்வ தொன்று மறியாது சிந்தை மகிழ்ந்து களிகூர்ந்தென்
ஐய னணைந்தா னெனையாளு மண்ண லணைந்தா னாரூரிற்
சைவ னணைந்தா னென்றுணையாந் தலைவ னணைந்தான் றரணியெலாம்
உய்ய வணைந்தா னணைந்தானென் றுரைகை முரசஞ் சாற்றுவித்தார். (கஎ)

பெருகு மதிநூ லமைச்சர்களை யழைத்துப் பெரியோ ரெழுந்தருளப்
பொருவி னகர மலங்கரித்துப் பண்ணிப் பயணம் புறப்படுவித்
தருவி மதமால் யானையினை யணைந்து மிசைகொண் டரசர்பெருந்
தெருவு கழிய வெதிர்வந்தார் சேரர் குலமுயந் திடவந்தார். (கஅ)

மலைநாட் டெல்லை யுட்புகுத வந்த வன்றொண் டரைவரையிற்
சிலைநாட் டியவெல் கொடித்தானைச் சேரர் பெருமா னெதிர்சென்று
தலைநாட் கமலப் போதனைய சரணம் பணியத் தாமில்பல
கலைநாட் டமுத வாரூரர் தாமுந் தொழுது கலந்தனரால். (ககூ)

சிந்தை மகிழுஞ் சேரலனார் திருவா ரூர ரெனுமிவர்க
டந்த மணிமே னிகள்வேறா மெனினு மொன்றாந் தன்மையராய்
முந்த வெழுங்கா தலிற்றொழுது முயங்கி யுதியர் முதல்வேந்தர்
எந்தை பெருமான் றிருவாரூர்ச் செல்வம் வினவி யின்புற்றார். (உ0)

ஒருவ ரொருவ ரிற்கலந்து குறைபா டின்றி யுயர்காதல்
இருவர் நண்பின் செயல்கண்ட விரண்டு திறத்து மாந்தர்களும்
பெருகு மகிழ்ச்சி கலந்தார்த்தார் பெருமா டமிழின் பெருமானை
வருகை வரையின் மிசையேற்றித் தாம்பின் மதிவெண் குடைகவித்தார். ()

உதியர் பெருமாள் பெருஞ்சேனை யோதங் கிளர்ந்த தெனவார்ப்பக்
கதிர்வெண் டிருநீற் றன்பர்குழாங் கங்கை கிளர்ந்த தெனவார்ப்ப
எதிர்வந் திறைஞ்சு மமைச்சர்குழா மேறு மிவுளித் துகளார்ப்ப
மதிதங் கியமஞ் சணியிஞ்சி வஞ்சி மணிவா யிலையணைந்தார். (உஉ)

வேறு.

ஆரண மொழிகண் முழங்கிட வாடினர் குணலைக ளந்தணர்
வாரண மதமழை சிந்தின வாசிகள் கிளரொளி பொங்கின
பூரண கலச மலிந்தன பூமழை மகளிர் பொழிந்திடு
தோரண மறுகு புகுந்தது தோழர்க ணடலிய குஞ்சரம் (உ௩)

அரிவையர் தெருவி னடம்பயி லணிகிளர் தளிரடி தங்கிய
பரிபுர வொலிகள் கிளர்ந்தன ப[illegible]முரசொலிகள் பரந்தன
சுரிவளை நிரைகண முரன்றன துணைவர்க ளிருவரும் வந்தணி
விரிதரு பவன நெடுங்கடை விறன்மத கரியி னிழிந்தனர் (உ௪)

ஆநறு மலர்தர ளம்பொரி தூவிமு னிருபுடை யினகணு
நான்மறை முனிவர்கண் மங்கல நாமநன் மொழிகள் விளம்பிட
மேனிறை நிழல்செய வெண்குடை வீசிய கவரி மருங்குற
வானவர் தலைவரு நண்பரு மாளிகை நடுவு புகுந்தனர். (உ௫)

அரியணை யதனின் விளங்கிட வடன்மழ விடையென நம்பியை
வரிமல ரமளி யமர்ந்திட மலையர்க டலைவர் பணிந்துபின்
உரிமைநல் வினைகள் புரிந்தன வுரைமுடி விலவென முன்செய்து
பரிசன மனமகி ழும்படி பலபடி மணிநிதி சிந்தினர். (உ௬)

வேறு.

இன்ன தன்மையி லுதியர்க டலைவர்தா மிடர்கெட முனைப்பாடி
மன்னர் தம்முடன் மகிழ்ந்தினி துறையுநாண் மலைநெடு நாட்டெங்கும்
பன்ன கம்புனை பரமர்தந் திருப்பதி பலவுடன் பணிந்தேத்திப்
பொன்னெ டுந்தட மூதெயின் மகோதையிற் புகுந்தனர் வன்றொண்டர். ()

ஆய செய்கையி னாள்பல கழிந்தபி னரசர்கண் முதற்சேரர்
தூய மஞ்சனத் தொழிலினிற் றொடங்கிடத் துணைவரா மவன்றொண்டர்
பாய கங்கைசூழ் நெடுஞ்சடைப் பரமரைப் பணந்தொழம் பிரிந்தெய்தாஞ்
சேய நன்னெறி குறுகிடக் குறுகினார் திருவஞ்சைக் களந்தன்னில். (உ௮)

கரிய கண்டர்தங் கோயிலை வலங்கொண்டு காதலாற் பெருகன்பு
புரியு முள்ளத்த ருள்ளணைந் திறைவர்தம் பூங்கழ லிணைபோற்றி
யரிய செய்கையி லவனியில் விழுந்தெழுந் தலைப்புறு மனைவாழ்க்கை
சரிய வேதலைக் குத்தலை மாலையென் றெடுத்தனர் தமிழ்மாலை. (உ௯)

---

திருவஞ்சைக்களம்-பண்-இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

தலைக்குத்தலைமாலையணிந்ததென்னேசடைமேற்கங்கைவெள்ளந்தரித்த தென்னே, அலைக்கும்புலித்தோல்கொண்டசைத்ததென்னே யதன்மேற்கத நாகக்கச்சார்த்ததென்னே, மலைக்குநிகரொப்பனவன்றிரைகள் வலித்தெற்றி முழங்கிவலம்புரிகொண், டலைக்குங்கடலங்கரைமேன்மகோதையணியார் பொழிலஞ்சைக்களத்தப்பனே.

எந்தம்மடிகளிமையோர்பெருமானெனக்கென்றுமளிக்குமணிமிடற்ற
னந்தண்கடலங்கரைமேன்மகோதையணியார்பொழிலஞ்சைக்களத்தப்பனை
மந்தம்முழவங்குழலுமியம்புவளநாவலர்கோனம்பியூரன்சொன்ன
சந்தமிகுதண்டமிழ்மாலைகள்கொண்டடிவீழவல்லார்தடுமாற்றிலரே.

திருச்சிற்றம்பலம்.

---

எடுத்த வத்திருப் பதிகத்தி னுட்குறிப் பிலவுல கினிற்பாசம்
அடுத்த வாழ்க்கையை யறுத்திட வேண்டுமென் றன்பரன் பினிற்பாடக்
கடுத்த தும்பிய கண்டர்தங் கயிலையிற் கணத்தவ ருடன்கூடத்
தடுத்த செய்கைதான் முடிந்திடத் தங்கழற் சார்புதந் தளிக்கின்றார். (௩௦)

மன்ற லர்தரு மிடைந்தபூங் கயிலையின் மலைவல்லி யுடன்கூட
வென்றி வெள்விடைப் பாகர்தாம் வீற்றிருந் தருளிய பொழுதின்கண்
ஒன்று சிந்தைநம் மூரனை யும்பர்வெள் ளானையி னுடனேற்றிச்
சென்று கொண்டிங்கு வாருமென் றயன்முதற் றேவர்கட் கருள்செய்தார். ()

வான நாடர்க ளரியயன் முதலினோர் வணங்கிமுன் விடைகொண்டு
தூந லந்திகழ் சோதிவெள் ளானையுங் கொண்டுவன் றொண்டர்க்குத்
தேன லம்புதண் சோலைசூழ் மகோதையிற் றிருவஞ்சைக் களஞ்சேரக்
கானி லங்கொள வலங்கொண்டு மேவினார் கடிமதிற் றிருவாயில். (௩௨)

தேவர் தங்குழா நெருங்கிய வாய்தலின் றிருநாவ லூரர்தங்
காவன் மன்னரும் புறப்பட வெதிர்கொண்டு கயிலைவீற் றிருக்கின்ற
பூவ லம்புதண் புனற்சடை முடியவ ரருளிப்பா டெனப்போற்றி
யேவ லென்றபின் செய்வதொன் றிலாதவர் பணிந்தெழுந் தெதிரேற்றார். ()

ஏற்ற தொண்டரை யண்டர்வெள் ளானையி னெதிர்வலங் கொண்டேற்ற
நாற்ற டங்கடன் முழங்கென வைவகை நாதமீ தெழுந்தார்ப்பப்
போற்றி வானவர் பூமழை பொழிந்திடப் போதுவா ருயிரெல்லாஞ்
சாற்று மாற்றங்க ளுணர்பெருந் துணைவரை மனத்தினிற் கொடுசார்ந்தார்.

சேரர் தம்பிரான் றம்பிரான் றோழர்தஞ் செயலறிந் தப்போதே
சார நின்றதோர் பரியினை மிசைக்கொண்டு திருவஞ்சைக் களஞ்சார்வார்
வீர வெண்களி றுகைத்துவிண் மேற்செலு மெய்த்தொண்டர் தமைக்கண்
பாரி னின்றிலர் சென்றதம் மனத்தொடு பரியுமுன் செலவிட்டார். [டார் ()

விட்ட வெம்பரிச் செவியினிற் புவிமுதல் வேந்தர்தாம் விதியாலே
யிட்ட மாஞ்சிவ மந்திரமோதலி னிருவிசும் பெழப் பாய்ந்து
மட்ட லர்ந்தபைந் தெரியல்வன் றொண்டர்மேல் கொண்டமா தங்கத்தை
முட்ட வெய்திமுன் வலங்கொண்டு சென்றது மற்றதன் முன்னாக. (௩௬)

உதியர் மன்னவர் தம்பெருஞ் சேனையி னுடன்சென்ற படைவீரர்
கதிகொள் வாசியிற் செல்பவர் தம்மைத்தங் கட்புலப் படுமெல்லை

யெதிராவி சும்பினிற் கண்டபின் கண்டில ராதலி னெல்லாரு
முதிரு மன்பினி லுருகிய சரிகையான முறைமுறை யுடல்வீழ்த்தார் (ஙஎ)

வீர யாக்கையை மேல்கொண்டு சென்றுபோய் வில்லவர் பெருமானைச்
சார முன்சென்று சேவக மேற்றனா தனித்தொண்டா மேல்கொண்ட
வாரு மும்மதத் தருவிவெள் ளானைக்கு வயப்பரி முன்வைத்துச
சேரர் வீரருஞ் சென்றனா மன்றவர் திருமலைத் திசைநோக்கி. (ஙஅ)

யானை மேல்கொண்டு செல்கின்ற பொழுதினி லிமையவர் குழாமென்னுந்
தானை முனசெலத் தானெனை முன்படைத் தானெனுந் தமிழ்மாலை
மான வன்றொண்டா பாடிமுன் னணைந்தனர் மதிநதி பொதிவேணித்
தேன லம்புதண் கொன்றையார் திருமலைத் தென்றிசைத் திருவாயில். (ஙகூ)

---

திருநொடித்தான்மலை-பண்-பஞ்சமம்.

திருச்சிற்றம்பலம.

தானெனை முனபடைத்தானதறிந்துதன பொன்னடிக்கே
நானென பாடலந்தோநாயினேனைப்பொருட்படுத்தி
வானெனை வந்தெதிர்கொள்ள மத்தயானையருள புரிந்து
ஊனுயிர்வேறுசெய்தானொடித்தானமலையுத்தமனே.

ஊழிதோறூழிமுற்றுமுயர்பொன்னொடித்தானமலையைச
சூழிசையினகரும்பினசுவைநாவலவூரன்சொன்ன
வேழிசையினறமிழாலிசைந்தேத்தியபத்திணையு
மாழிகடலரையாவஞ்சையப்பர்க்கறிவிப்பதே.

திருச்சிற்றம்பலம.

---

மாசில் வெண்மைசேர் பேரொளி யுலகெலா மலர்ந்திட வளர்மெய்ம்மை
யாசி லன்பர்தஞ் சிந்தைபோல் விளங்கிய வணிகிளர் மணிவாயிற்
றேசு தங்கிய யானையும் புரவியுந் திழிந்துசே ணிடைசசெல்வார்
ஈசர் வெள்ளிமா மலைத்தளம் பலகடந் தெய்தினர் மணிவாயில். (சo)

அங்க ணெய்திய திருவணுக் கனதிரு வாயிலி னடற்சேரர்
தங்கள் காவலர் தடையுண்டு நின்றனா தம்பிரா னருளாலே
பொங்கு மாமதம் பொழிந்தவெள் ளானையி னும்பர்போற் றிடப்போந்த
நங்கள் நாவலூர் காவலர் நண்ணினா ரண்ணலார் திருமுன்பு. (சக)

சென்று கண்ணுத திருமுன்பு தாழ்ந்துவீழ்ந் தெழுந்துசே ணிடைவிட்ட
கன்று கோவினைக் கண்டணைந் ததுவெனக் காதலின் விரைந்தெய்தி
நின்று போற்றிய தனிப்பெருந் தொண்டரை நேரிழை வலப்பாகத்
தோன்று மேனிய ரூரனே வந்தனை யென்றன ருலகுய்ய. (சஉ)

அடியனேன்பிழை பொறுத்தெனை யாண்டுகொண் டத்தொடக் கினைநீக்கி
முடிவி லாநெறி தரும்பெருங் கருணையென் றாற்றதோ வெனமுன்னர்ப்
படியு நெஞ்சொடு பன்முறை பணிந்தெழும் பரம்பரை யானந்த
வடிவு நின்றது போன்றின்ப வெள்ளத்து மலர்ந்தனா வன்றொண்டர். (சங)

நின்ற வன்றொண்டர் நீரணி வேணிய நின்மலர்க் கழலாரச
சென்று சேரலன் றிருமணி வாயிலின் புறத்தினன் னனைசெப்பக்
குன்ற வில்லியார் பெரியதே வரைச்சென்று கொணர்கென வவரெய்தி
வென்றி வானவர்க் கருளிப்பா டெனவவர் கழறொழ விரைந்தெய்தி. (சச)

மங்கை பாகர்தந் திருமுன்பு சேய்த்தாக வந்தித்து மகிழ்வெய்திப்
பொங்கு மன்பினிற் சேரலர் போற்றிடப் புதுமதி யலைகின்ற
கங்கை வார்சடைக் கயிலைநா யகர்திரு முறுவலின் கதிர்காட்டி
யிங்கு நாமழை யாமைநீ யெய்திய தென்னென வருள்செய்தார். (சரு)

அரச ரஞ்சலி கூப்பிநின் றடியனேன் றொழுதார் கழல்போற்றிப்
புரசை யானைமுன் சேவித்து வந்தனன் பொழியுநின் கருணைத்தெண்
டிரைசெய் வெள்ளமுன் கொடுவந்து புகுதலிற் றிருமுன்பு வரப்பெற்றேன்
விரைசெய் கொன்றைசேர் வேணியா யினியொரு விண்ணப்ப முளதென்று.

பெருகு வேதமு முனிவருந் துதிப்பரும் பெருமையா யுனையன்பாற்
றிருவு லாப்புறம் பாடினேன் றிருச்செவி சாத்திடப் பெறவேண்டு
மருவு பாசத்தை யகன்றிட வன்றொண்டர் கூட்டம்வைத் தாயென்ன
அருளு மீசருஞ் சொல்லுக வென்றன ரன்பருங் கேட்பித்தார். (சஎ)

சேரர் காவலர் பரிவுடன் கேட்பித்த திருவுலாப் புறங்கொண்டு
நாரி பாகரு நலமிகு திருவருள் நயப்புட னருள்செய்வார்
ஊர ணாகிய வாலால சுந்தர னுடனமர்ந் திருவீருஞ்
சாரு நங்கண நாதர்தந் தலைமையிற் றங்குமென் றருள்செய்தார் (சஅ)

அன்ன தன்மையி லிருவரும் பணிந்தெழுந் தருட்டலை மேற்கொண்டு
மனனும் வன்றொண்ட ராலால சுந்தர ராகித்தாம் வழுவாத
முன்னை நல்வினைத் தொழிற்றலை நின்றனர் முதற்சேரர் பெருமானு
நன்மை சேர்கண நாதரா யவர்செய் நயப்புறு தொழில்பூண்டார். (சகூ)

தலத்து வந்துமுன் னுதயஞ்செய் பரவையார் சங்கிலி யாரென்னு
நலத்தின் மிக்கவர் வல்வினைத் தொடக்கற நாயகி யருளாலே
யலத்த மெல்லடிக் கமலினி யாருட னனிந்திதை யாராகி
மலைத்த னிப்பெரு மானமகள் கோயிலிற் றந்தொழில் வழிநின்றார் (ருo)

வாழி மாதவ ராலால சுந்தரர் வழியிடை யருள்செய்த
வழி சைத்திருப் பதிகமிவ் வுலகினி லேற்றிட வெறிமுநீர்
ஆழி வேந்தனும் வருணனுக் களித்திட வவனுமவ் வருள்சூடி
யூழி யிற்றனி யொருவர்தந் திருவஞ்சைக் களத்திலுய்த் துணர்வித்தான். ()

சேரர் காவலர் விண்ணப்பஞ் செய்தவத் திருவுலாப் புறமன்று
சாரல் வெள்ளியங் கயிலையிற் கேட்டமா சாத்தனார் தரித்திந்தப்
பாரில் வேதியர் திருப்பிடவூர்தனில் வெளிப்படப் பகர்ந்தெங்கு
நார வேலைசூ ழுலகினில் விளங்கிட நாட்டினர் நலத்தாலே. (ருஉ)

வேறு.

என்று மின்பம் பெருகு மியல்பினா, லொன்று காதலித் துள்ளமு மோங்கிட
மன்று ளாரடி யாரவர் வான்புகழ், நின்ற தெங்கு நிலவி யுலகெலாம்.

வெள்ளானைச்சருக்க முற்றுப்பெற்றது.

ஆக திருவிருத்தம் ச,உஅசு

---

திருமுனைப்பாடி நாட்டிலே, திருநாவலூரிலே, ஆதிசைவ மரபிலே, சடையனார் என்பவர் ஒருவர் இருந்தார். அவருடைய மனைவியாராகிய இசைஞானியார்பால் உலகம் உய்ய ஒரு சற்புத்திரர் திருவவதாரஞ் செய்தார். அப்புத்திரப்பெருமானார்க்கு நம்பியாரூரர் என்னும் அருமைத்திருநாமஞ் சூட்டி அன்போடு வளர்த்து வந்தார்கள். அந்நம்பியாரூரர் ஒரு நாள் சிறு தேர் உருட்டி விளையாடிக்கொண்டிருக்கும்பொழுது, அந்நாட்டு அரசராகிய நரசிங்கமுனையரையர் அவரைக்கண்டு, காதல்கூர்ந்து, தந்தையாராகிய சடையனாரிடஞ் சென்று "உமது புத்திரசிகாமணியை எனக்குத்தாரும்" என்று கேட்டுப் பெற்றுக்கொண்டுபோய், அரசிளங்குமரர்க்கேற்ப அன்பினால் வளர்த்துவந்தார். நம்பியாரூரராம் எம்பெருமான் அரசரால் வளர்க்கப்பெறினும், அந்தணர் ஒழுக்கத்திற் சிறிதும் வழுவாதவராய், வளர்ந்து உரியகாலத்தில் உபநயனஞ் செய்யப்பெற்று, அளவிலாத கலைகளை ஆய்ந்து வல்லவராய்த் திருமணஞ் செய்தற்கு உரியபருவம் அடைந்தார்.

தந்தையாராகிய சடையனார் தமது குலத்தவராகிய புத்தூர் சடங்கவி சிவாசாரியருடைய புதல்வியைத் தம் புதல்வருக்குத் திருமணஞ்செய்து கொடுக்கும் பொருட்டுச் சிலபெரியோர்களைப் புத்தூருக்கு அனுப்பினார். அவர்கள் போய்ச்சடங்கவிசிவாசாரியரைக்கண்டு சடையனார் விருப்பத்தைத் தெரிவித்தார்கள். அதற்கு அவரும் உடன்பட்டார். உடனே அப்பெரியவர்கள் சடையனாரிடஞ் சென்று சடங்கவிசிவாசாரியார் இசைந்ததை அறிவித்தார்கள். அதுகேட்ட சடையனார் ஆனந்தக்கடலில் ஆழ்ந்து திருக்கலியாணத்திற்குச் சுபதினமுஞ் சுபமுகூர்த்தமும் நிச்சயித்து, பந்துக்களுக்கும், நண்பர்களுக்கும், மற்றவர்களுக்கும் திருமுகங்கள் விடுத்தார். சடங்கவி சிவாசாரியரும் விவாகத்திற்கு வேண்டியவற்றைக் குறைவறச்செய்து முடித்தார். நம்பியாரூரர் திருமணத்திருநாளுக்கு முன்னாளிலே சமாவர்த்தனம் பண்ணி, இரட்சாபந்தனஞ் செய்து அடுத்த நாள் காலைக்கடன்களை முடித்து, திருமணக்கோலங்கொண்டு குதிரைமேலேறிப் புத்தூரை யடைந்தார். பிராமணப்பெண்கள் நம்பியாரூரரை எதிர்கொள்ள வந்தார்கள். அத்திருமணக்கோலப்பொலிவை விரிக்க என்னொரு நாவால் இயலாது. அன்று தொட்டு அவ்வூருக்கு மணம் வந்த புத்தூர் என்னுந் திருநாமம் வழங்கிவருகின்றதெனில், அத்திருமணத்தின் பெற்றியை என்னென்று இயம்புவது. அருளழகே நம்பொருட்டாக நம்பியாரூரராக அவதரித்த பெரு

மானார் சடங்கவிசிவாசாரியருடைய வீட்டை யண்மிக் குதிரைவிட்டிறங்கித் திருமணப் பந்தருக்குள்ளே நுழைந்து, ஒரு ஆசனத்தில் எழுந்தருளினார். அப்பொழுது சிவபெருமான் திருக்கயிலாயத்திலே சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்குத் திருவாக்கருளியவண்ணம் பிரபஞ்சவாசனை அவரை அணுகாதபடி தடுத்தாட்கொள்ளும்பொருட்டு ஒருவயோதிகப்பிராமணத்திருவுருவந்தாங்கித் தண்டேன்றிக்கொண்டு திருமணப்பந்தரிலே புகுந்து சபையார்களை நோக்கி "நீங்கள் யாவரும் நான் சொல்லும் வார்த்தைகளைக் கேளுங்கள்" என்றார். அச்சபையார்களும், நம்பியாரூரரும் ஐயரைப் பார்த்து "தேவரீர் இங்கே எழுந்தருளியது எங்கள்தவம். நீர் சொல்லவேண்டியதைச் சொல்லும்" என்று சொன்னார்கள். அதுகேட்ட பெருமான் நம்பியாரூரரைக் கருணை நோக்கஞ்செய்து "எனக்கும் உனக்கும் ஒருபெருவழக்கிருக்கின்றது. அதை முடித்தே நீ விவாகஞ் செய்யவேண்டும்" என்றார், அதற்கு நம்பியாரூரர் "அவ்வழக்கை முடித்தன்றி யான் விவாகஞ்செய்யேன். அவ்வழக்கு இன்னதென்ச் சொல்லும்" என்றார். மறையவராக வந்த சிவபெருமான் சபையார்களை நோக்கி "அந்தணர்களே! கேளுங்கள். இந்நம்பியாரூரன் எனக்குப் பரம்பரை அடியவன்" என்று கூறியருளினார். அதுகேட்ட நம்பியாரூரர் 'இவ்வேதியர் சொன்ன வார்த்தை மிக அழகாயிருக்கிறது" என்று பரிகாசமாகச் சொல்லி நகைத்தார். அவ்வேடிப் பிராமணர் திருநாவலூரருக்கு அருகேபோய் "அந்தக் காலத்தில் உன் பாட்டன் எனக்கு எழுதிக்கொடுத்த அடிமையோலை இது. அப்படியிருக்க நீ யேன் என்னை இகழ்ந்து சிரிக்கின்றாய்" என்று அருளிச்செய்தார். அதுகேட்ட நாவலர் பெருமான் சிரிப்பை ஒழித்து, அவ்வேதியரை நோக்கி "அந்தணருக்கு அந்தணர் அடிமையாதல் உண்டோ? இன்று நீரே சொல்லக் கேட்டோம். நீர் பித்தரோ" என்று சொன்னார். அதற்கு அந்தணர் பெருமான் "நான் பித்தனானாலும் ஆகுக, பேயனானாலும் ஆகுக நீ பரிகாச மொழிகளைப் பேசவேண்டாம். என்னை யொன்றும் அறிந்திலை. எனக்கு அடிமைத்தொழில் செய்ய வேண்டும் என்றார்." அதுகாலை நம்பியாரூரர் "இவர் அடிமையோலை ஒன்று இருக்கிறது என்று சொல்லுகின்றார். அதனுண்மையை யறியவேண்டும்" என்று யோசித்து, அப்பிராமணரைப் பார்த்து "நீர் அந்த அடிமை யோலையைக் காட்டும்" என்று கேட்டார். அதற்குப் பிராமணர் "நீ அவ்வோலையைக் காண்டற்கு அருகனோ? யான் அவ்வோலையை இச்சபைக்கு முன்னே காட்டி உறுதிப்படுத்திய பின்னர் நீ எனக்கு அடிமைத்தொழில் ஒன்று செய்ய அருகன்" என்று திருவாய்மலர்ந்தருளினார். அதுகேட்ட நாவலர் பெருமான் வெகுண்டு அவ்வோலையைக் கிழித்தெறிய அதிவிரைவாக நெருங்க, வேதியர் பெருமான் ஓடத்தொடங்கினார். நம்பியாரூரரும் அவரைப் பின் தொடர்ந்து ஓடிப்பிடித்து ஓலையைப் பிடுங்கிப் "பிராமணர்கள் அடிமையாதல் என்ன முறை" என்று கிழித்துவிட்டார். உடனே அவ்வந்தணர் நாவலர் பெருமானைப் பற்றி ஒரு முறை "இது முறையோ" என்று சத்தமிட, அருகிலிருந்தவர்கள் அவர்களிருவரையும் விலக்கிப் பிராமணரைப்பார்த்து "உலகத்திலில்லாத வழக்கத்தைக்கொண்டு வழக்காடுகின்றீர். உமது இருப்பிடம் எங்கே" என்று கேட்டார்கள். அதற்கு அப்பிராமணர் "எனது இருப்பிடம் இத்திருவெண்ணெய்நல்லூர். அது நிற்க, இவன் என் ஓலையை வலிந்து பிடுங்கிக் கிழித்தபடியால், எனக்கு அடிமை என்பதை உறுதிப்படுத்தினன்" என்று சொன்னார். அதுகாலை நம்பியாரூரர் "இவன் பழைய மன்றாடி போலும்" என்று நினைத்து "உமது வாசஸ்தலம் இத்திரு

வெண்ணெய்நல்லூராயின், அவ்விடத்திலேயே இவ்வழக்கை முடிவு செய்ய வாரும்" என்று அழைப்ப, ஐயரும் உடன்பட்டு "திருவெண்ணெய் நல்லூரிலுள்ள பிராமணர்களுக்கு முன்னே பழைய மூலவோலையைக் காட்டி நீ என் அடியவன் என்பதை உறுதிசெய்வேன்" என்று அருளிச்செய்து, தண்டை ஊன்றிக்கொண்டு முன்னே சென்றார். நம்பியாரூரரும், மற்றவர்களும் அவருக்குப் பின்னே நடந்தார்கள். இவ்விருவர்களும் திருவெண்ணெய்நல்லூரை யடைந்து, பிராமணர்கள் நிறைந்த சபைமுன் சேர்ந்தார்கள். அப்பொழுது வேதியராக வந்து வழக்கிடுஞ் சிவபெருமான் சபையார்களை நோக்கி "மூதறிஞர்களே! இந்த நம்பியாரூரன் 'இவன் எனக்கு அடியவன்' என்று நான் காட்டிய ஓலையைக் கிழித்துவிட்டு இங்கே வந்திருக்கின்றான்' என்று விண்ணப்பஞ் செய்தார். அவர்கள் ஐயரைப்பார்த்து "அந்தணர்க்கு அந்தணர் அடிமையாதல் இவ்வுலகில் இல்லை. நீர் சொன்னது ஒப்பத்தக்கதல்ல" என்று சொன்னார்கள். அதற்குத் தனியாய் நின்ற பிராமணர் "நான் கொண்டுவந்தது மெய்வழக்கே, இவன் வலிந்து கிழித்த ஓலை இவன் பாட்டன் எழுதிக்கொடுத்த அடிமை ஓலை" என்று பதிலுரைத்தார். அதுகேட்ட சபையார்கள் நம்பியாரூரரை நோக்கி "இவர் காட்டிய ஓலையை வலிந்து கிழிப்பது வெற்றியாகுமோ! இப்பெரியவர் தமது வழக்கை யாவரும் ஒப்பும்படி சொன்னார். உமது எண்ணமென்னை" என்றார்கள். உடனே "ஆரூரர் சகலாகமபண்டிதர்களே! நீங்கள் என்னை ஆதிசைவன் என்று அறிவீர்கள். அங்ஙனமிருக்க இவர் என்னைத் தம்மடிமை என்று சொல்லுகிறார். இது மனத்தினாலும் அளவிடக்கூடாத மாயையாயிருக்கிறது. யான் என் சொல்வேன். இது எனக்குத் தெளியவொண்ணாதது" என்று சொன்னார். அதைக்கேட்ட அந்தணர்கள் வழக்குக்கொண்டுவந்த அந்தணரைப் பார்த்து "இவர் உம்முடைய அடிமை என்பதை அநுபவம், ஆவணம், சாக்ஷி ஆகிய மூன்றில் ஒன்றைக் கொண்டாயினும் உறுதிப்படுத்த வேண்டும்" என்றார்கள். அதற்கு ஐயர் "முன்னே இவன் கிழித்த ஓலை படியோலை. மூலவோலை என்னிடத்தில் இருக்கின்றது" என்று சொல்ல, அவர்கள் "அதை எங்களுக்குக் காட்டும்" என்றார்கள். அப்பொழுது ஐயர் "அவ்வோலையையும் இந்த நம்பியாரூரன் கிழித்தாலுங் கிழிப்பன். அவனைக் கிழிக்கவிடாதபடி தடுப்பீர்களாயின் அதைக் காட்டுவேன்" என்ன; பிராமணர்கள் "கிழிக்கவிடோம்" என்றார்கள். உடனே வேதியர்பெருமான் மூலவோலையைக் கையில் எடுத்தார். எடுத்ததும் சபையார் ஏவுதல்படி ஒரு கரணன் ஐயரைத் தொழுது அவ்வோலையை வாங்கிப் பிரித்துச் சபையார் கேட்கும்படி "திருநாவலூரில் வாழும் ஆதிசைவனாகிய ஆரூரன் என்கின்ற நான் திருவெண்ணெய்நல்லூர்ப் பித்தனுக்கு யானும், என் மரபினரும் வழித்தொண்டு செய்வதற்கு அகமும் புறமும் ஒப்ப உடன்பட்டு எழுதிக்கொடுத்தேன். இங்ஙனம் ஆரூரன்" என்று வாசித்துக் காட்டினான். அதன்பிறகு கையெழுத்திட்ட சாக்ஷிகளும் தங்கள் கையெழுத்தென்றே ஒத்துக்கொண்டார்கள். அதற்குமேல் சபையார் நம்பியாரூரரைப் பார்த்து "இது உமது பாட்டனாருடைய கையெழுத்தா பாரும்" என்றார்கள் அப்பொழுது அந்தணர்பெருமான் "இவன் தன் பாட்டன் கையெழுத்தைப் பார்த்து அது அவன் கைச்சாத்து என்று தீர்மானிக்கச் சக்தியுடையவனே. இவன் பாட்டனுடைய கையெழுத்து வேறுளதேல், அதை வரவழைத்து ஒப்புநோக்கி உங்கள் கருத்தில் தோன்றும் உண்மையை வெளிப்படுத்துங்கள்" என்று அருளிச்செய்ய, அவர்கள் அப்படியே செய்து, இரண்டு

கையெழுத்தும் ஒத்திருப்பதைக்கண்டு நம்பியாரூரரை நோக்கி "இனி உமக்குச் செயலில்லை. நீர் இவ்வேதியர்க்குத் தோற்றீர். அவருக்கு அடிமையாயிருப்பதே உமது கடன்" என்று தீர்மானித்தார்கள். அதற்கு ஆரூரர் "என்விதிவலி இங்ஙனமாயின் நான் இதற்கு இசையாமலிருக்கவுங் கூடுமோ" என்று கலங்கிய மனத்தராய்க் கூறி நின்றார். அங்கிருந்த அந்தணர்கள் ஐயரை நோக்கி "நீர் காட்டிய ஆவணத்தில் எங்கள் பதியே உமது பதியாக எழுதப்பட்டிருக்கின்றது. ஆதலால் உமக்கு இவ்வூரிலே பரம்பரையாக உள்ள வீடு முதலியவற்றைக்காட்டும்" என்றார்கள். உடனே அந்தணர்பெருமான் "உங்களில் ஒருவரும் என்வீடுமுதலியவற்றை அறியீராகில் என்னுடன் வாருங்கள் நான் காட்டுகின்றேன்" என்று திருவாய்மலர்ந்தருளி நம்பியாரூரரும், மற்றவர்களும் பின்னே வர, தாம் அவ்வூரிலுள்ள திருவருட்டுறை என்னுந் திருக்கோயிலினுள்ளே நுழைந்து விட்டார். அவரைப்பின்தொடர்ந்து போனவர்கள் எல்லாரும் அவரைக்காணாது மயங்கித் திகைத்து நின்றார்கள்.

அதுகாலை நம்பியாரூரர் "என்னை அடிமைகொண்ட அந்தணர் திருக்கோயிலினுள்ளே நுழைந்தது என்ன" என்று ஆச்சரியமடைந்து தனியே அவரைத் தொடர்ந்துபோய்க் கூப்பிட்டார். அப்பொழுது சிவபெருமான் இடபவாகனத்தின்மேல் உமாதேவியாரோடு ஆகாயத்திலே தோன்றி நாவலர் பெருமானை நோக்கி "நீ முன்பு நமக்குத் தொண்டன். பின்பு நீ முன்னிய வேட்கை கூறுதலால் நம் ஏவலாலே இப்பூமியில் பிறந்தாய். இவ்வுலகப்பாசம் உன்னைப்பிடியாதபடி நாமே வலியவந்து தடுத்தாட்கொண்டோம்" என்று திருவாய்மலர்ந்தருளினார். அவ்வோசையைக்கேட்ட நாவலர் பெருமான் பசுவின் குரலைக்கேட்ட கன்றைப்போலக் கதறிக்கதறித் தேக முழுமையும் புளகம் போர்க்கவும், கண்களில் ஆனந்த அருவி சொரியவும், வாய் குழறவும், தொழுத கை தலைமேல் ஏறவும், ஆனந்தவுருவாகி "சபாநாயகரே! தேவரீர் நாயினுங் கடையேனாகிய என்னை ஒரு பொருளாக மதித்து வலியவந்து தடுத்தாண்ட அருட்செயல் இருந்தவாறென்னே" என்று நின்றார். அதற்குச் சிவபெருமான் "நீ நம்மோடு வன்மைபேசி வன்றொண்டன் என்னும் பெயரைப்பெற்றாய். நீ நமக்கு அன்போடு செய்ய வேண்டிய அருச்சனையாவது பாட்டேயாம். ஆதலால் நீ நமக்குத் தமிழ்ப் பாமாலை சூட்டக்கடவாய்" என்ன, நம்பியாரூரர் "சிறியேனைத் தடுத்தாண்ட கருணைக் கடவுளே! ஒன்றுமறியாச் சிறியேன் தேவரீரது அநந்த கல்யாண குணங்களில் எதையறிவேன். என்ன சொல்லிப் பாடுவேன்" என்றார். அதற்குச் சிவபெருமான் "நீ முன்னே என்னைப் பித்தனென்று சொன்னாய். ஆகையால் என்னைப் பித்தனென்றே பாடு" என்று அருளிச்செய்ததும், வன்றொண்டப் பெருமானார் பண்டையுணர்ச்சியுடையவராய் "பித்தாபிறைசூடி" என்னுந் திருவருட் பதிகத்தை உலகுய்யத் திருவாய்மலர்ந்தருளினார். அவ்வருட் சொற்களைக் கேட்ட சிவபெருமான் நாவலரைப் பார்த்து "இன்னும் நமது புகழைப் பலவகையாகப் பாடு" என்று அருளிச்செய்து மறைந்தருளினார். புத்தூரிலேயுள்ள சடங்கவிசிவாசாரியருடைய புதல்வியார், திருக்கலியாணம் நடைபெறாது தவிர்ந்தமையால் வன்றொண்டப் பெருமானையே என்றுஞ் சிந்தித்துக்கொண்டிருந்து சிவலோகமடைந்தார்.

பிறகு நம்பியாரூரர் திருநாவலூருக்கும், திருத்துறையூருக்கும் போய்த் திருப்பதிகம்பாடி, சிதம்பரத்தைத் தரிசிக்க விரும்பி, பெண்ணையாற்றைக் கடந்து மாலைக்காலம் வரத் திருவதிகை சேர்ந்து "திருநாவுக்கரசு சுவாமி

கள் சிவபெருமானுக்கு உழவாரத் திருத்தொண்டு செய்த திருத்தலமாகிய இதனை மிதித்தற்கு அஞ்சுகின்றேன்" என்று அத்திருப்பதியினுள்ளே நுழையாமல் அருகேயிருந்த சித்தவடமடத்தை அடைந்து, திருக்கெடிலவடவீரட்டானேசுரரைச் சிந்தித்துக்கொண்டே சிவானந்த நித்திரை செய்தார். அதுகண்டு வீரட்டப்பெருமானார் ஒருகிழப்பிராமண வடிவங்கொண்டு, அம்மடத்திற்குப்போய் வன்றொண்டப் பெருமானுடைய சிரசின்மீது காலை வைத்துப் பள்ளியமர்ந்தார்போலிருந்தார். அப்பொழுது நம்பியாரூரர் விழித்து "பிராமணரே! உமது பாதத்தை என்தலைமீது ஏன் வைத்தீர்" என்று வினவ, கிழவர் "என்னுடைய மூப்பினாலே திசையறியாது அப்படி செய்தேன்" என்றார். அதுகேட்ட ஆரூரர் வேறொரு திசையில் தஞ்சிரசை வைத்து முன்போல நித்திரை செய்தார். அக்கிழவேதியர் மீண்டும் வன்றொண்டரது திருமுடிமீது தமது திருவடிகளை நீட்ட; நாவலூர் பெருமான் "இங்கு என்னைப் பலகாலும் மிதித்த நீர் யார்" என்று கேட்க, வேதியராகிய சிவபெருமான் "என்னை நீ அறியாயோ" என்று திருவாய்மலர்ந்தருளி மறைந்தருளினார். உடனே நம்பியாரூரர் தம்மை மிதித்தவர் சிவபெருமான் எனத்தெளிந்து "நான் இறுமாப்பால் சிவபெருமான் என்று அறியாது என்செய்தேன்" என்று நினைத்து "தம்மானை யறியாத சாதியாருளரோ" என்னுந் திருப்பதிகம் அருளிச்செய்தார். பின்னர் திருநாவலூரர் திருக்கெடில நதியிலே ஸ்நானஞ்செய்து, அந்நதியின் தென்கரையிற் சென்று, திருமாணிகுழியைத் தரிசித்துச் சிதம்பரத்தை யடைந்து, அத்திருப்பதியின் திருவெல்லையைத் தொழுது, திருக்கோபுரத்தைத் தரிசித்து, திருக்கோயிலினுள்ளே நுழைந்து, பொன்னம்பலத்திலே திருநடனம் புரியும் ஸ்ரீநடராஜப் பெருமானைத் தரிசித்துப் பேரானந்தவுருவராய்த் திருப்பதிகம் பாடியருளினார். ஸ்ரீநடராஜப் பெருமானுடைய திருவருளினால் "நீ திருவாரூரிலே நம்மிடத்துக்கு வா" என்று எழுந்த அசரீரியைக்கேட்டு, கனகசபையை வணங்கிப் புறப்பட்டுச் சிதம்பரத்தை விடுத்துக் கொள்ளிடத்தைக் கடந்து சீகாழியைச் சமீபித்து, "இது ஆளுடைய பிள்ளையார் திருவவதாரஞ் செய்தருளிய திருத்தலம். இதை யான் மிதியேன்" என்று, அத்திருப்பதியின் எல்லைப்புறத்தை வணங்கி, வலம் வரும்பொழுது, சிவபெருமான் உமாதேவியாரோடு இடபவாகனத்தின்மேல் காட்சி கொடுத்தருள, "சாதலும் பிறத்தலும்" என்னுந் திருப்பதிகத்தைத் திருவாய்மலர்ந்தருளி, அவ்விடத்தினின்றும் நீங்கித் திருக்கோலக்காவிற்கும், திருப்புன்கூரினுக்கும் போய்ச் சுவாமிதரிசனஞ் செய்து திருப்பதிகம் பாடினார். பிறகு காவேரி நதிக்கரையைச் சேர்ந்து, அதிலே ஸ்நானஞ்செய்து, திருமயிலாடுதுறையையும், திருஅம்பர்மாகாளத்தையும், திருப்புகலூரையும் தரிசித்து, திருவாரூர்க்குச் சென்றணைந்தார். அப்பொழுது தியாகேசப் பெருமான் திருவாரூரில் வாழ்பவர்கட்கெல்லாம் "நமது மெய்த்தொண்டனாகிய நம்பியாரூரன் நாம் அழைக்க வருகின்றான். அவனை எதிர்கொள்ளுங்கள்" என்று ஆஞ்ஞாபிக்க; அவர்களெல்லாரும் சிவாஞ்ஞையின்படி தெருக்களை அலங்கரித்து வாத்தியகோஷத்தோடு வன்றொண்டப் பெருமானை எதிர்கொண்டார்கள். ஆரூரரும் அவர்களோடு கலந்து, திருவீதியிற் செல்லும்பொழுது "கரையுங்கடலும்" என்னும் அருட்பதிகத்தை எடுத்து, "எந்தையிருப்பது மாரூரவரெம்மையுமாள்வரோ கேளீர்" என்று பாடிக்கொண்டே சென்று திருக்கோயில் திருவாயிலைத் தொழுது தேவாசிரிய மண்டபத்தைக்கண்டு தொழுது, திருமூலட்டானத்தைச்சூழ்ந்த திருமாளிகை வாயிலிற்புகுந்து, வன்மீகநாதரைத் தரிசித்து வணங்கி அன்

போடு உருகி அகங்குழைந்து திருப்பதிகம் பாடியருளினார். அப்பொழுது வன்மீகநாதர் திருவருளால் வன்றொண்டர்க்குக் கேட்கும்படி "நாம் உனக்குத் தோழரானோம். முன்னே நாம் உன்னைத் தடுத்தாட்கொண்ட காலத்து நீ தாங்கியிருந்த திருமணக்கோலத்தை யென்றுந் தாங்கி வேட்கைதீரப் பூமியில் விளையாடுவாய்" என்று ஓர் அசரீரி வாக்கு எழுந்தது. உடனே வன்றொண்டர் வன்மீகநாதரை வணங்கித் துதித்துத் திருக்கோயிலை விட்டு வெளியே வந்தார். அன்றுதொட்டு அடியவாகளெல்லாரும் நம்பியாரூரைத் தம்பிரான்தோழர் என்று சொல்லிக்கொண்டார்கள். நாவலர் பெருமான் சிவாஞ்ஞையின்படி திருமணக்கோலத்தை யுடையவராய்த் தினந்தோறுஞ் சுவாமிதரிசனஞ் செய்துகொண்டிருந்தார். இதற்கு முன்னே திருக்கயிலாயத்திலே இருந்த உமாதேவியார் தோழிமார்கள் இருவருள் கமலினி என்பவர் அத்திருவாரூரிலே, உருத்திரகணிகையர் திருக்குலத்திலே அவதரித்துப் பரவையார் என்னுந் திருநாமத்தைப் பெற்று வயதடைந்து இருந்தார். அவ்வம்மையாரும் தினந்தோறும் திருவாரூர்ப் பெருமானைத் தரிசித்துக்கொண்டு வருபவராயிருந்தார்.

வழக்கம் போலப் பரவையார் ஒரு நாள் சுவாமிதரிசனம் பண்ணப் போனார். அப்பொழுது தம்பிரான் தோழரும் திருக்கோயிலுக்குப் போயிருந்தார். முன்பற்றினால் திருவருள் கூட்ட வன்றொண்டர் பரவையாரைக் கண்டு "இவள் கற்பகத்தின் பூங்கொம்போ, இரதிதேவியோ, புண்ணியத்தின் புண்ணியமோ, சிவபிரான் திருவருளோ, நான்முகன் சிருட்டிக்க இயலாது உள்ளத்தால் சித்திரித்து விதித்த ஒரு மணிவிளக்கோ" என்று அதிசயித்து நின்றார். அப்பொழுது பண்டை விதியின்படி பரவையாரும் வன்றொண்டரைக்கண்டு மனத்திலே காமுற்று "இவர் முருகரோ, விஞ்சையரோ, சிவபிரான் திருவருள் பெற்றவரோ, என் மனத்தைக் கவர்ந்த இவர் யாரோ" என்று நினைத்து அவ்வாசைவழி மனத்தைச் செலுத்தாது அரனடிக்கே அதைச் செலுத்தித் திருக்கோயிலினுள்ளே புகுந்தார். அதுகண்ட வன்றொண்டர் "என் மனத்தைக் கவர்ந்து செல்லும் இப்பெண் யார்" என்று கேட்க; அங்கிருந்தவர்கள் "இவர் உருத்திரகணிகை நங்கைமாருள் ஒருவர். இவர் பெயர் பரவையார்" என்றார்கள். உடனே தம்பிரான்தோழர் திருக்கோயிலினுள்ளே நுழைந்தார். அதற்குமுன் பரவையார் சுவாமிதரிசனஞ் செய்து வெளியே புறப்பட்டுப் போனார். நம்பியாரூரர் பரவையார் மேல் வைத்த பெருவிருப்பால் அவரைச் சேரவேண்டிச் சுவாமியைத் தொழுது புறப்பட்டு "எம்பிரான் திருவருள் எந்நெறிச்சென்றது; எந்நெறிச்சென்றது" என்று சொல்லி அவரைத்தேடிக்கொண்டு தேவாசிரியமண்டபத்தை யடைந்து "என்னைத்தடுத்தாண்ட பெருமான் எனக்குப் பரவையாரைத் தந்தருளுவர்" என்று நினைத்துக்கொண்டு அங்கிருந்தார். அப்போது மாலைக்காலம் வந்தது. திருக்கோயிலினின்றும் வெளியேவந்த பரவையார் தம்பிரான் தோழர் மீது சென்ற பேராசை மயக்கத்தால் விழுங்கப்பட்டுத் தமது மாளிகையையடைந்து மலரணையிலிருந்து தமமருகே நின்ற பாங்கியைப்பார்த்து "நாம் சுவாமிதரிசனத்திற்குப் போனபொழுது நமக்குள் திரேவந்தவர் யாவர்" எனக்கேட்க; அவள் "சிவபெருமானால் தடுத்தாட்கொள்ளப்பெற்ற நம்பியாரூரர்" என்றாள். அதுகேட்ட பரவையார் "நமது சிவபெருமானுக்குத் திருத்தொண்டரோ" என்று சொல்லி முன்னிலும் ஆரூரர்மேல் வைத்த பேராசை வளரப்பெற்றுப் பஞ்சணைமேல் புலம்புவாராயினார். அக்காலை அன்பர்கள் வேண்டியவற்றை வேண்டியாங்களிக்கும் பரமசிவன் பரவைநாயகியாரை நம்பியாரூரருக்கு விவாகஞ் செய்துகொடுக்கும்படி திருவாரூர்

அடியவர்களுக்குக் கட்டளையிட்டு, அவ்வுண்மையை வன்றொண்டருக்கும், பரவையாருக்கும் வெளிப்படுத்தியருளினார். அடுத்தநாள்காலையில் சிவனடியார்கள் எல்லாரும் ஒருங்கு சேர்ந்து தம்பிரான்தோழருக்குப் பரவையாரை விதிப்படி திருக்கலியாணஞ் செய்துகொடுத்தார்கள்.

தம்பிரான்தோழர் பரவைநாயகியாரோடு கூடிச் சுகமாக வாழ்ந்துவந்தார். வருநாளில் ஒருநாள் சுவாமிதரிசனத்திற்காகத் திருக்கோயிலுக்குப்போனார். அப்பொழுது தேவாசிரியமண்டபத்திலே கூடி இருந்த திருத்தொண்டர்களைக் கண்டு "இவர்களுக்கு நான் அடியனாகும் நாள் எந்நாள்" என்று கருதிக்கொண்டே திருக்கோயிலினுள்ளே நுழைந்தார். அதையறிந்த தியாகேசப்பெருமான் வன்றொண்டர் வேண்டியதைக் கிருபை செய்யும்பொருட்டுக் காட்சி கொடுத்தருளி, நம்பியாரூரருக்கு அடியவர்களுடைய வழித்தொண்டை உணர்த்தி, அவர்கள் பெருமையையும் அருளிச்செய்து "நீ நமது திருத்தொண்டர்களைப் பணிந்து அவர்கள் மேல் திருப்பதிகம் பாடு" என்று திருவாய்மலர்ந்தருளினார். அதுகேட்ட தம்பிரான்தோழர் "அடியவர்களுடைய தன்மையைச் சிறிதும் அறியாதவனாகிய யான் எப்படிப் பாடுவேன். அவர்கள்மேல் பாடும் திறத்தைத் தேவரீரே அருளிச் செய்ய வேண்டும்" என்ன; சிவபெருமான் அதற்கிசைந்து உலகுய்ய வேதசிவாகமங்களை யருளிச்செய்த திருவாயால் "தில்லைவாழந்தணர்தம் அடியார்க்கும் அடியேன்" என்று அடியெடுத்துக் கொடுத்தருளி மறைந்தருளினார். உடனே வன்றொண்டப்பெருமான் தேவாசிரியமண்டபத்தை யடைந்து திருக்கூட்டத்தை வணங்கி ஒவ்வொருவருக்கும் அடியேன் அடியேன் என்று திருத்தொண்டத்தொகை என்னும் திருவருட்பதிகத்தை யருளிச்செய்து மீண்டும் அவர்களைத் தொழுதார்.

திருத்தொண்டத் தொகையருளிய வன்றொண்டர் முப்பொழுதுந் திருவாரூர்ப் பெருமானைத் தரிசித்துக்கொண்டு பரவைநாயகியாரோடு இனிது வாழ்ந்து வந்தார். வருநாளில் குண்டையூர்க்கிழவர் என்னும் ஒரு வேளாளர் நம்பியாரூரர் திருச்செயல்களைக் கேள்வியுற்று அவருடைய திருவடித் தாமரைகளை யடைந்து பேரன்போடு ஒழுகிவருவாராயினார். அதனோடு அவர் தம்பிரான் தோழர்க்குத் திருவமுதாகும்படி சம்பா நெல்லும், பருப்பும் பிற பதார்த்தங்களும் தவறாமல் பரவையார் திருமாளிகைக்கு அனுப்பிக்கொண்டு இருந்தார். அப்படி அனுப்பிக்கொண்டிருந்தபோது மழைவளஞ் சுருங்கினபடியால் குண்டையூர்க்கிழவர் ஒரு நாள் திருநாவலூரர்க்கு அனுப்ப நெல் போதாமைகண்டு மனம் வருந்தி உணவின்றி "என்ன செய்வேன். என்தொண்டிற்கு இடையூறு வந்ததே" என்று நினைத்துக்கொண்டு நித்திரை செய்தார். அதுகாலை அடியவர்க்கு எளியவராகிய பரமசிவன் அவருக்குச் சொப்பனத்திலே தோன்றி "ஆரூரனுக்காக உனக்கு நெல் அளித்தோம்" என்று திருவாய் மலர்ந்தருளிக் குபேரனை ஏவ, அவ்வூர் முழுவதும் நெல் மலைமலையாகக் குவிந்து ஆகாயத்தையும் மறைத்தது. எங்கும் நெல்மயமாகவே யிருந்தது. குண்டையூர்க்கிழவர் பொழுதுவிடியும் போது விழித்தெழுந்து நெல்மலைகளைக் கண்டு திருவருளை வியந்து "இந்நெல்லை யாரால் எடுக்க முடியும். இதனை வன்றொண்டர்க்குத் தெரிவிக்கப் போவேன்" என்று திருவாரூரை நோக்கிச் சென்றார். அதற்கு முன் அங்கு நிகழ்ந்த செயல்களைச் சிவபெருமானால் அறியப்பெற்ற தம்பிரான் தோழரும் எதிரே வந்தார். குண்டையூர்க்கிழவர் நம்பியாரூரரைக் கண்டு வணங்கி "அடியேன் தொண்டிற்கு முட்டு நேரிட்டச் சிவபிரானே நெல்மலைகளை யளித்தனர் அவை மனிதரால் எடுக்கும்

அளவினையுடையன அல்ல. அவைகளைத் தேவரீர் திருமாளிகைக்குச் சேர்க்கவேண்டிய தொண்டு என்னாலே செய்யத்தக்கதல்ல" என்று கூறினின்ரூர். அதுகேட்ட நாவலர்பெருமான் அக்கிழவரோடு குண்டையூர்க்குப் போய் நெல்மலையைக்கண்டு திருவருளை வியந்து "இந்நெல்லைப் பரவை வீட்டிற்குச் சேர்க்கச் சிவபெருமான் ஆள் அருளினாலன்றிப் பிறரால் முடியாது" என்று நினைத்து, அருகேயுள்ள திருக்கோளிலி என்னுந்திருப்பதியையடைந்து "நீள நினைந்தடியேன்" என்னுந் திருப்பதிகத்தைத் திருவாய்மலர்ந்தருள; சிவபிரான் திருவருளால் "இன்று பகற்பொழுது நீங்கிய பிறகு நமது பூதகணங்கள் பரவை வீடு மாத்திரமன்றித் திருவாரூர் முழுவதும் நெல்மலையைச் சுமந்துகொண்டுபோய் நிறையச்செய்யும்" என்று ஓர் அசரீரிவாக்கு எழுந்தது. அதுகேட்டுத் தம்பிரான்தோழர் திருவாரூரையடைந்து சுவாமி தரிசனஞ்செய்து, திருமாளிகைக்குப்போய் நிகழ்ந்தவற்றைப் பரவையாருக்குச்சொல்லி யருளினார். அன்றிரவு பூதகணங்கள் சிவாஞ்ஞையின்படி குண்டையூரிலிருந்த நெல்மலைகளைத்திருவாரூருக்குக் கொண்டுபோய்ச் சேர்த்தன. பொழுதுவிடியும்பொழுது அவ்வூரவர்கள் எங்கும் நெல்மலைகளா யிருப்பதைக்கண்டு அதிசயித்து "இவை இவ்வுலகத்தார் வாழப் பரவையாருக்கு நம்பியாரூரரால் அளிக்கப்பட்டவை" என்று சொல்லிக் கொண்டு வெளியே போகின்றதற்கு வழியின்மையைக் கண்டு "இவ்வளவு நெல்லைப் பரவையார் எங்குச் சேர்த்துவைப்பார்" என்று நினைத்து வீட்டினுள்ளே இருந்தார்கள். சிறிது நேரத்திற்குள் பரவையார் அவ்வூர்ச்சனங்களுக்கு அவரவர்கள் வீட்டின் எல்லைக்குட்பட்ட நெல்லை அவரவர்கள் எடுத்துக்கொள்ளுமாறு பறையறைவித்தார்.

நம்பியாரூரர் தியாகேசப் பெருமானைத் தினந்தோறுந் தரிசித்துக்கொண்டு பரவையாரோடு வாழ்ந்து வந்தார். அதுகாலை, கோட்புலிநாயனார் திருவாரூரையடைந்து வன்றொண்டரைத் தரிசித்துத் தம்மூருக்கு எழுந்தருளும்படி வேண்டினார். அவர் நம்பியாரூரர் தம் வேண்டுகோளுக்கிணங்கப் பெருவகையோடு தமது திருநாட்டியத்தான்குடிக்குத் திரும்பினார். பிறகு தம்பிரான்தோழர் வன்மீகநாதரை வணங்கித் திருவருள்பெற்றுத் திருநாட்டியத்தான்குடிக்குப் போனார். அங்கிருந்த கோட்புலிநாயனார் தெருக்களையலங்கரித்து, ஆரூரரை எதிர்கொண்டழைத்து, முறைப்படி உபசரித்து, திருவமுது செய்வித்து, தமது புத்திரிகளாகிய சிங்கடியாரையும், வனப்பகையாரையும் கொண்டுவந்து, பணிவித்து "தேவரீர் இவ்விரு பெண்களையும் அடிமைகளாகக் கொண்டருள வேண்டும்" என்று பிரார்த்தித்தார். அதற்குப் பரவையார் கணவர் "இவ்விருவரும் எனக்குப் புத்திரிகள்" என்று கூறி, அவர்களைத் தொடைமேலிருத்தி, உச்சிமோந்து, அவர்கள் வேண்டியவற்றைக் கொடுத்தருளித் திருக்கோயிலுக்குப்போய்ச் சுவாமி தரிசனஞ் செய்து, "பூணாணாவதோரரவம்" என்னுந் திருப்பதிகம்பாடித் திருக்கடைக்காப்பிலே கோட்புலிநாயனாரைச் சிறப்பித்துத் தம்மைச் சிங்கடியாருக்குத் தந்தையாராக நினைத்தபடியால் "சிங்கடியப்பன்" என்றும் அருளிச்செய்தார். பின்னர் அவ்விடத்தினின்றும் நீங்கித் திருவலிவலத்துக்குப் போய்ச் சுவாமிதரிசனஞ்செய்து திருவாரூரை யடைந்தார்.

அங்கேயிருக்கும்பொழுது பங்குனி உத்திரத் திருநாள்வரவே, ஆரூரர் பரவையார் திருவிழாச்செலவுக்குப் பொன்கொணரும் பொருட்டுத்திருப்புகலூரை யடைந்து, சிவதரிசனம் பண்ணித்திருப்பதிகம்பாடித் தன்கருத்தைக் குறிப்பாலுணர்த்தி, அருகேயுள்ள திருமடத்துக்குப்போக நினைத்துக்கோயிலின்திருமுற்றத்தின் ஓர் இடத்தில் அடியவர்களோடும் இருந்தருளினார். அப்

பொழுது அவருக்குச் சிவபிரான் திருவருளால் நித்திரை வந்தது. வரவே அங்கே திருப்பணிக்காகச் சுடப்பட்ட செங்கற்களை வருவித்து, உயரம்பண்ணித் தலையணையாகக்கொண்டு உத்தரீயத்தை விரித்துத் தூங்கினர். பிறகு விழித்தெழுந்தபோது அச்செங்கற்களெல்லாம் பொற்கற்களாயிருக்கக் கண்டு திருவருளை வியந்து திருக்கோயிலினுள்ளே நுழைந்து "தம்மையே புகழ்ந்து" என்னுந் திருப்பதிகம் பாடி அப்பொன் குவையை எடுத்துக் கொண்டு அத்திருப்பதியை விடுத்துத் திருப்பனையூரைச் சேர்ந்தார். அங்கே சிவபெருமான் திருக்கூத்தோடுங் காட்சி கொடுத்தருளத் தரிசித்து "மாட மாளிகை" என்னுந் திருப்பதிகமெடுத்து, அதிலே "அரங்கிலாட வல்லாரவரேயழகியரே" என்று திருவாய்மலர்ந்தருளித் திருவாரூர்க் கெழுந்தருளினர்.

பிறகு நம்பியாரூரர் திருவாரூரினின்றும் நீங்கி, திருநன்னிலம், திருவீழிமிழலை, திருவாஞ்சியம், திருநறையூர், அரிசிற்கரைப் புத்தூர், திருவாவடுதுறை, திருவிடைமருதூர், திருநாகேச்சுரம், சிவபுரம், திருக்கலயநல்லூர், கும்பகோணம், திருவலஞ்சுழி, திருநல்லூர், திருச்சோற்றுத்துறை, திருக்கண்டியூர், திருவையாறு, திருப்பூந்துருத்தி என்னுந் திருப்பதிகளுக்குச் சென்று சுவாமிதரிசனஞ் செய்து, திருப்பதிகம்பாடித் திருவாலம்பொழிலை யடைந்து, சிவபெருமானைப் பணிந்து, அருட்பாடோதி, அங்கே அன்றிரவு தங்கி நித்திரை செய்யும்போது பரமசிவன் அவருக்குச் சொப்பனத்திலே தோன்றி "மழபாடியை மறந்தனையோ" என்று திருவாய்மலர்ந்தருள, விழித்து எழுந்து திருமழபாடிக்குச் சென்று, "பொன்னார் மேனியனே" என்னுந் திருப்பதிகம் பாடி அவ்விடத்திலே சில நாளிருந்தார். பின்னர் வன்றொண்டவள்ளலார் அத்திருப்பதியை விட்டு நீங்கிக் காவேரி நதிக்கரையிலுள்ள க்ஷேத்திரங்களைத் தரிசித்துத் திருவானைக்காவினை யடைந்து, சுவாமிதரிசனஞ் செய்து "மறைகளாயின நான்கும்" என்னுந் திருப்பதிகம்பாடி, அதிலே, உறையூர்ச்சோழமகாராஜாவானவர் முத்துமாலையணிந்து கொண்டு காவிரியில் நீராடும்போது, அம்மாலை வழுவ, அவ்வரசர் "சிவமே! என் மாலையைக் கொண்டருளும்" என்று வேண்ட, அது திருமஞ்சனக்குடத்துள்ளே புக, அபிஷேகஞ் செய்யப்படுங்காலே, அதனைப் பரமசிவன் தரித்து, அரசர் பெருமானுக்கு அருள் அளித்த பெருமையைச் சிறப்பித்தருளினர். பிறகு அத்திருப்பதியை விட்டு நீங்கித் திருப்பாச்சிலாச்சிராமத்தை அடைந்து, சுவாமி தரிசனஞ் செய்து, அவ்விடத்திலே பெருமான் தமக்குச் செம்பொன் கொடுத்தருளாமையால் "வைத்தனன் தனக்கே" என்னும் திருப்பதிகம் பாடி, அதன் இறுதிதோறும் "இவரல்லாதில்லையோ பிரானார்" என்று அருளிச்செய்து, பொன்பெற்றுச் சிலநாள் அங்கே கழித்து, அவ்விடத்தை விட்டுப் புறப்பட்டுத் திருப்பைஞ்ஞீலி, திருவீங்கோய்மலை முதலிய க்ஷேத்திரங்களைத் தரிசித்துக்கொண்டு, கொங்குதேசத்தையடைந்து, திருப்பாண்டிக்கொடுமுடிக்குச் சென்று சிவதரிசனஞ் செய்து "மற்றுப்பற்றெனக்கின்றி" என்னும் பஞ்சாட்சரப்பதிகத்தை யருளி, அதன் இறுதிதோறும் 'உனை நான் மறக்கினுஞ் சொல்லுநா நமச்சிவாயவே" என்று பாடித் திருவருள் பெற்று, பல திருப்பதிகளைத் தரிசித்துக்கொண்டு திருப்பேரூரைச் சேர்ந்தார். அங்கே சிவபெருமான் பொன்னம்பலத்திலே திருநடனம் புரியுந் திருக்கோலத்தைக் காட்டியருளினர். அத்திருக்காட்சியைக்கண்ணுற்ற நம்பியாரூரர் சிவானந்த வாரிதியிற் றோய்ந்து மீண்டும் சிதம்பரத்திற்கேகத் திருவுள்ளங் கொண்டு புறப்பட்டுப் பல நதிகளையும், மலைகளையுங் கடந்து, திரு

வெஞ்சாமக் கூடல், திருக்கற்குடிமலை, திருவாறைமேற்றளி, திருவின்னம்பர், திருப்புறம்பயம், முதலிய ஸ்தலங்களைத்தொழுதுகொண்டு, திருக்கூடலையாற்றூரைச் சமீபித்தார். சமீபித்தும் அத்திருப்பதிக்கு எழுந்தருளாது விருத்தாசலத்தை நோக்கிச்செல்ல, வழியிலே சிவபெருமான் ஒருகிழப்பிராமணத் திருவேடங்கொண்டு இருந்தார். அவரை வன்றொண்டர் பார்த்து "ஐயரே! விருத்தாசலத்துக்கு எவ்வழியாகப் போவது" என்று வினவ, அவ்வேதியர் "இது கூடலையாற்றூருக்குப் போகும்வழி" என்றுசொல்லி, அவருக்கு வழித்துணையாகப் போய்த் திடீரென்று மறைந்துவிட்டார். அவர் பின்னே தொடர்ந்துசென்ற நம்பியாரூரர் ஐயரைக்காணாது அவர் சிவபெருமானென்றுணர்ந்து "வடிவுடை மழுவேந்தி" என்னுந் திருப்பதிகத்தை யெடுத்து "அடிகளிவ்வழி போந்த அதிசயமறியேனே" என்றுபாடித் திருக்கூடலையாற்றூருக்குச் சென்று சிவபெருமானைத் தரிசித்து விருத்தாசலத்தையடைந்தார். அடைந்து அக்குன்றத்திலே எழுந்தருளியுள்ள இறைவனைத் தொழுது திருப்பதிகம் பாட, எம்பெருமான் தந்தோழர்க்குப் பன்னீராயிரம் பொன் கொடுத்தருளினார். அது பெற்ற நம்பியாரூரர் சிவபெருமானை வணங்கி "சுவாமி! தேவரீர் கொடுத்தருளிய இப்பொன்னெல்லாம் திருவாரூரிலுள்ளவர்கள் வியக்கும்படி அங்குவரத் திருவருள் செய்யவேண்டும்" என்று வேண்டப் பழமலைநாதர் திருவருளினால் "நம்பியாரூரனே! இப்பொன்னெல்லாவற்றையும் மணிமுத்தாநதியிலே இட்டுக் கமலாலயத் திருக்குளத்திலே சென்று எடுத்துக்கொள்" என்று ஓர் அசரீரி வாக்கு எழுந்தது. அதுகேட்ட வன்றொண்டர் மச்சம் வெட்டி யெடுத்துக்கொண்டு, அப்பொன்னெல்லாவற்றையும் மணிமுத்தாநதியிலே யிட்டு "என்னை வலிந்து தடுத்தாண்டருளிய திறத்தை இதிலே அறிவேன்" என்று கூறி, விடைபெற்றுத் தில்லையம்பதியைச் சேர நினைத்துப் புறப்பட்டு, வழியிலே திருக்கடம்பூரைத் தரிசித்துச் சிதம்பரத்தையடைந்து "ஸ்ரீநடராஜப் பெருமானைக் கண்டு வணங்கி "மடித்தாடும்" என்னுந்திருவருட்பதிகத்தைப்பாடி, அதிலே தாந்திருப்பேரூரிற் கண்ட திருநடனக் காட்சியைச் சிறப்பித்து, அத்திருப்பதியைவிட்டு நீங்கித் திருப்பழியலூர், திருமண்ணிப்படிக்கரை, திருவாழ்கொளிபுத்தூர், திருக்கானாட்டுமுள்ளூர், திருவெதிர்கொள்பாடி, திருவேள்விக்குடி முதலிய சிவக்ஷேத்திரங்களைக்கண்டு தொழுது கொண்டு திருவாரூரை யடைந்தார்

தம்பிரான்தோழர் திருவாரூரைச் சேர்ந்து வன்மீகநாதரை வணங்கிப் பரவையாரில்லடைந்து, அவரோடு இனிதுறையு நாளில், ஒருநாள் பரவை நாயகியாரை நோக்கி "பழமலைநாதர் எனக்குக் கொடுத்தருளிய பொன்னை மணிமுத்தாநதியில் இட்டுவந்தேன். அப்பொன்னை அப்பெருமானார் திருவருளால் இத்திருவாரூர்த் திருக்கோயிலுக்கு மேற்கேயுள்ள குளத்திலே போய் எடுத்துக்கொண்டுவர என்னோடுவா" என்றார். அதுகேட்ட பரவையார் "இது என்ன அதிசயம்" என்று புன்னகைசெய்ய; வன்றொண்டர் "அப்பொன் முழுமையும் சிவபிரான் திருவருளால் அக்குளத்தில் எடுத்துக் கொடுப்பேன். இது உண்மை" என்று கூறினார். பின்னர் நம்பியாரூரர் பரவையாரோடு திருக்கோயிலுக்குப் போய்ச் சுவாமி தரிசனஞ்செய்து, திருக்குளத்தையடைந்து, அதன் வடகீழ்க்கரையிலே பரவையாரை நிறுத்தித் தாஞ் சிவத்தியானத்தோடு குளத்திலே இறங்கிப் பொன்னைத் தடவினார். அவரது பாட்டின்பயனுகவுள்ள பரமசிவன் அவரைப்பாடுவிக்க விரும்பிப் பொன்னைத் திருக்குளத்தில் வரும்படி திருவருள் செய்தாரில்லை. அப்பொழுது பரவையார் "இது என்ன? ஆற்றிலிட்டுக் குளத்தில் தேடுகின்றீ

ரே! இதுதானே திருவருள்" என்று நகையாடினர். அதுகேட்ட ஆரூரர் "பெருமானே! தேவரீர் திருமுதுகுன்றிலே சிறியேனுக்குத் திருவாய்மலர்ந் தருளியவண்ணம் இப்பரவை சிரிக்காதபடி பொன்னைக்கொடுத்தருளும்" என்றுவேண்டி "பொன்செய்த மேனியினீர்" என்னுந்திருப்பதிகம் பாடியரு ளினர். சிவபெருமான் அவர் பாட்டினிடத்தே பற்றுள்ளதை வெளிப்படுத்த எட்டுப்பாட்டு வரையினும் திருவருள் சுரந்து பொன்னளித்தாரில்லை. "எத் தாதிருந்தறியேன்" என்னும் ஒன்பதாந் திருப்பாட்டலை அருளிச்செய்து துதிக்கச் சிவபிரான் திருவருளால் பொன்திரள் எழுந்தது. எழவே அதை எடுத்துக்கொண்டு கரையேறி, அப்பொன்னைத் தாம்முன் கொண்டுவந்த மச்சத்தோடு உரைத்துப்பார்த்தார். பார்க்கவே குளத்தினின்றும் எடுத்த பொன் உரைதாழ்ந்திருந்ததைக்கண்டு வருந்திப் பின்னுஞ் சிவபெருமா[illegible] துதிக்க வுரை ஒத்தது. தம்பிரான்தோழர் சந்தோஷக்கடலில் ஸ்நானஞ் செய்து பொன் முழுதையும் ஆட்களின் மூலமாகப் பரவையாருடன் வீட்டிற்கு அனுப்பித் தாம் திருக்கோயிலுக்குப் போய்த் தியாகேசரைத் தொழுது வீடுக்குத் திரும்பிப் பரவையாரோடு களிப்பாக வாழ்ந்து கொண்டிருந்தார்.

பிறகு நம்பியாரூரர் க்ஷேத்திரயாத்திரை செய்ய விரும்பித் திருநள ளாறு, திருக்கடவூர் மயானம், திருக்கடவூர் வீரட்டம், திருவலம்புரம், திருச் சாய்க்காடு, திருவெண்காடு, திருநனிபள்ளி, திருச்செம்பொன்பள்ளி, திரு நின்றியூர், திருநீடூர், திருப்புன்கூர் என்னுந்திருப்பதிகளுக்குப் போய்ச் சுவாமிதரிசனஞ் செய்துகொண்டு, திருக்கோலக்காவை யடைந்து, பதிகம் பாடி, அதிலே ஞானசம்பந்தப் பெருமானுக்குத் தாளம் அருள்செய்த பெரு மையைச் சிறப்பித்துச் சென்று, சீர்காழியின் எல்லையை வலம் வந்து தொழுது, ஆளுடையபிள்ளையார் திருவடிகளை வணங்கித் திருக்குருகா வூருக்குப் புறப்பட்டார். அவர் பசியினாலும், தாகத்தினாலும் வருந்தி வரு வதைக்கண்ட சிவபெருமான் வழியிலே ஒரு பிராமணராய் ஒரு பந்தரை யுண்டாக்கித் தண்ணீரும் பொதிசோறும் வைத்துக்கொண்டு ஆரூரர் வரவை எதிர்பார்த்திருந்தார். வன்றொண்டர் திருக்கூட்டத்தோடு வந்து அப்பந்தரின் கீழ்ப்போய் அவ்வந்தணருக்கு அருகே ஸ்ரீபஞ்சாட்சரத்தைச் செபித்துக்கொண்டிருந்தார். அப்பொழுது அப்பிராமணர் தம்பிரான் தோழ ரைநோக்கி, "நீர் மிகப்பசித்திருக்கின்றீர். இப்பொதிசோற்றைக் கொடுக்கின் றேன். இதை உண்டு இத்தண்ணீரைக் குடித்து இளைப்பாறும்" என்ன; நம்பியாரூரர் அதற்கு இசைந்து அளவில்லாத அடியவர்களோடு அப்பொதி சோற்றை யுண்டருளினர். அவ்வளவுபேர் புசித்தும் அப்பொதிசோறு குறையாமல் அவ்விடத்தில் பசித்து வந்த மற்றவர்களுக்கும் உதவியது. வன் றொண்டர் அன்னம் உண்டபின் நீர் அருந்தி, அவ்வையரோடு பேசிக்கொண்டு பரிசனங்களோடு நித்திரை செய்தார். செய்யவே வேதியராக வந்த சிவ பிரான் பந்தரோடுமறைந்தருளினர். நம்பியாரூரர் விழித்தெழுந்து ஐயரைக் காணாது ஆச்சரியமுற்று "இத்தனையாமாற்றம் அறிந்திலேன்" என்னுந்திருப் பதிகத்தைப்பாடித் திருக்குருகாவூரைச் சேர்ந்து சுவாமிதரிசனஞ் செய்து கொண்டிருந்து, அப்பதியைவிட்டு நீங்கித் திருக்கழிப்பாலை, சிதம்பரம், திருத் தினைநகர் முதலிய சிவஸ்தலங்களை வணங்கிக்கொண்டு திருநாவலூரை யடைந்து அங்கே தங்கியிருந்தார்.

நம்பியாரூரர் பிறதலங்களையும் தரிசிக்க விரும்பித் திருநாவலூரை விட்டு நீங்கித் தொண்டைநன்னாட்டை யடைந்து, திருக்கழுக்குன்றத்திற் குப்போய்ச் சுவாமிதரிசனஞ் செய்து, திருக்கச்சூர் ஆலக்கோயில் சேர்ந்து,

சிவபெருமானை வணங்கி வெளியே வந்து, அமுது செய்யும் பொழுதாகியும், சமையல்செய்வோர் வாராமையால் பசியால் மெலிந்து, மதிலின் ஒருபுறத்திலே இருந்தார். அப்பொழுது சிவபிரான் ஒரு பிராமணத்திருவேடந்தாங்கி, நம்பியாரூரர் பால் அணைந்து "நீர் பசியினால் மிக மெலிந்திருக்கின்றீர். யான் அன்னம் இரந்து உமக்குக் கொண்டு வருகிறேன். நீர் எங்கும் போகாமல் இங்கே யிரும்" என்று அருளிச்செய்து, அவ்வூர்ப் பிராமணர் வீடுகள்தோறும்போய் அன்னமும் கறியும் இரந்துகொண்டுவந்து வன்றொண்டரை நோக்கி "உமது பசிதீர இதை உண்ணும்" என்று கொடுத்தருளினார். தம்பிரான்தோழர் அன்போடு அன்னத்தையுங் கறியையுந் தொழுது வாங்கித் தொண்டர்களோடு புசித்தருளினார். உடனே அம்மறையவர் மறைந்தனர். அது கண்ட நம்பியாரூரர் அவர் சிவபெருமான் என்றறிந்து, அவர் பெருங்கருணையை வியந்து, உள்ளங்கசிந்துருகி "முதுவாயோரி கதற" என்னுந் திருப்பதிகத்தைப் பாடினார். அதற்குப் பின் ஆரூரர் திருக்காஞ்சியையடைந்து, ஏகாம்பரநாதரை வணங்கிப் பதிகம்பாடி, காமக்கோட்டத்தைத் தரிசித்துப் போற்றித் திருமேற்றளி, திருவோணகாந்தன்றளி, அநேகதங்காபதம் முதலிய தலங்களுக்குப்போய்ச் சுவாமி தரிசனஞ்செய்து திருப்பதிகம்பாடித் திருப்பனங்காட்டூர், திருமாற்பேறு, திருவல்லம் முதலிய திருப்பதிகளுக்குச் சென்று, சிவபிரானைத் தொழுது, திருக்காளத்தியைத் தரிசிக்கப் புறப்பட்டார். சிவலிங்க வடிவாகிய அம்மலையையடைந்து அன்புடன் பணிந்து, அதன்மீதேறிக் காளத்திநாதரை வணங்கிப், பதிகம் பாடி, அவரருகே நிற்கின்ற கண்ணப்பரைக்கண்டு, அவர்திருவடிகளில் விழுந்து கும்பிட்டுக் கீழே இறங்கித் தொண்டர்களோடு அத்திருப்பதியிலே தங்கியிருந்தார். அங்கிருந்துகொண்டே வடதிசையிலுள்ள ஸ்ரீ பருப்பதம், திருக்கேதாரமலை முதலிய திருத்தலங்களைத் தொழுது அவைகடகும் திருப்பதிகங்கள் திருவாய்மலர்ந்தருளினார். பிறகு வன்றொண்டர் திருவொற்றியூரை யடைந்து, முக்காலங்களினும் பெருமானைத் தரிசித்துக்கொண்டு அங்கே இருந்தார்.

இதற்குமுன் இந்நம்பியாரூரராகிய ஆலாலசுந்தரர் மீது கைலைவரையில் காமுற்ற இருசேடியர்களுள் அனிந்திதை என்பவர் ஞாயிறு என்னும் ஊரிலே, ஞாயிறுகிழவர் என்னும் வேளாளருக்குப் புத்திரியாராகத் திருவவதாரஞ்செய்து, சங்கிலியார் என்னும் அருமைத் திருநாமத்தைப்பெற்று, பார்வதிதேவியாரிடத்து மிக்கபக்தியுடையவராயிருந்தார். அவர் திருமணப்பருவம் அடைய ஞாயிறுகிழவர் தம்மனைவியாரோடு "நமது மகட்கு வடிவுங்குணமும் எல்லாப் பெண்களினுஞ் சிறந்திருக்கின்றன, கலியாணப் பருவமும் உற்றுள்ளது. என்செய்யலாம்" என்று யோசிக்க; மனைவியார் "நமது புதல்விக்கேற்ற ஒருபுருஷனைத் தேடிக் கலியாணஞ்செய்து கொடும்" என்று சொன்னார். அதுகேட்ட சங்கிலியார் "இவர்கள் பேசியவார்த்தை எனக்குப் பொருத்தமானதன்று. ஈசன் திருவருள் பெற்ற ஒருவர்க்கு யான் உரியவள். இவர்களை வார்த்தைகளால் என்னென்ன விளையுமோ அறிகிலேன்" என்று மயங்கி, அறிவிழந்து நிலத்தில் விழுந்தார். உடனே அருகேயிருந்த தாய்தந்தையர்கள் பயந்து, அம்மையாரை எடுத்துத்தாங்கிப் பனிநீர் தெளிக்கத் தெளிந்து எழுந்தார். பிதாமாதாக்கள் சங்கிலியாரை நோக்கி "உனக்குற்றதென்ன" என்று கேட்டார்கள். அதற்கு அம்மையார் "நீங்கள் எனக்கு விரோதமான வார்த்தைகளைப் பேசினீர்கள். நான் சிவபிரான் திருவருள் பெற்றஒருவருக்குமனைவியாகும் உரிமையுடையவள். இனி யான் திருவொற்றியூரையடைந்து, திருவருள் வழி செல்வேன்" என்றார். அதைக்கேட்ட பெற

ரூர்கள் அயர்ந்து பயந்து அதிசயமுற்று மகள்சொன்னதை மறைத்து ஒழுகி வந்தார்கள். மறுநாளில், அவர்களுக்கு ஒத்த குடிபிறப்பினையுடைய ஒருவன் நிகழ்ந்ததை யறியாதவனாய்ச் சங்கிலியாரை விவாகஞ்செய்து கொள்ள விரும்பி, அவர் தாதையார்மாட்டுச் சில முதியோர்களைப் பெண் பேசும்படி யனுப்பினான். அவர்கள் அப்படியே ஞாயிறுகிழவர்பாலணைந்து பெண்பேச, அவர் "உள்ளதை விளம்புவது முறையல்ல" என்று நினைத்து, அவர்களுக்கு உபாயமாக இனிய மொழிகள் பேசி அனுப்பிவிட்டார். அவர்கள் வீடுசேர்வதற்குமுன், பெண்பேச அவர்களை அனுப்பினவன் ஒரு தீங்கு செய்து இறந்தவனைப்போல இறந்துபோனான். அது கேள்வியுற்ற ஞாயிறுகிழவரும், அவர் மனைவியாரும் "உய்யவேண்டும் என்னும் எண்ணம் உடையவர்கள் சங்கிலியார்பால் பேசத் தகாத வார்த்தைகளைப் பேசார்கள்" என்பதை வெளிப்படுத்திய திருவருளின் செயலைக்கண்டு பயந்து இனிச் சங்கிலியார் எண்ணத்துக்கு உடன்படுவதே உத்தமம்" என்று துணிந்து, சுற்றத்தவர்களோடுஞ் சங்கிலியாரை நோக்கி "நீ திருவொற்றியூரை யடைந்து, கன்னிமாடத்திலே யிருந்துகொண்டு, சிவபிரானை நோக்கி அரிய தவஞ்செய்யும்" என்று கூறி, அம்மையாரை திருவொற்றியூருக்கு அழைத்துக்கொண்டு சென்று திருக்கோயிலினுள்ளே நுழைந்து, சுவாமி தரிசனஞ்செய்து, சமீபத்திலே ஒரு கன்னிமாடங் கட்டுவித்து, அதிலே இருக்கும்படி செய்து, வேண்டியபொருள்களைக் கொடுத்து, அவரை வணங்கி வருத்தத்தோடு விடைபெற்றுக்கொண்டு தம்மூருக்குத் திரும்பிப்போய் விட்டார்கள். சங்கிலி நாயகியார் கன்னி மாடத்திலிருந்து, முக்காலங்களினுஞ் சுவாமிதரிசனஞ் செய்துகொண்டு, பூத்தொடுக்கு மண்டபத்திலே திரை சூழ்ந்த ஒரு புறத்தில் போயிருந்து, கைலாயத்தில் தான் செய்துகொண்டிருந்த திருத்தொண்டின் உணர்ச்சி முற்பட்டு நிற்க, பூமாலை கட்டிச் சிவபெருமானுக்குச் சூட்டும்படி கொடுத்துக்கொண்டு வந்தார். வருநாளில் ஒருநாள் நம்பியாரூரர் வழக்கம்போல திருக்கோயிலினுள்ளே நுழைந்து சுவாமிதரிசனஞ் செய்து, அடியார்கள் அங்கே அன்புடன் செய்யும் திருத்தொண்டுகளைத் தனித்தனி கண்டு வணங்கி, புஷ்பமண்டபத்தினுள்ளே சென்றார். அப்பொழுது சங்கிலியார் எப்பொழுதும்போல சிவபெருமானுக்குச் சூட்டும்படி தாம் தொடுத்த பூமாலையைத் திரையை நீக்கிக்கொடுத்துவிட்டு மின்போல மறைந்தார். அவரை ஆரூரர் விழிகூட்டக்கண்டு காமுற்று வெளியே வந்து சமீபத்திலே யிருந்தவர்களைப்பார்த்து "புஷ்பமண்டபத்திலே திரைக்குள்ளே ஒருபெண் இருக்கின்றாள். மின்னலைப்போன்ற அவள் என்மனத்தைக் கவர்ந்து கொண்டாள் அவள் யார்?" என்று வினவ, அவர்கள் "அவர் இடையறாப் பேரன்போடு சிவபெருமானுக்குத் திருத்தொண்டு செய்யும் கன்னிகையாகிய சங்கிலியார் என்பவர்" என்றார்கள். அதுகேட்டு வன்றொண்டர் "சிவபெருமான் இருவர் பொருட்டாக இம்மானுடப் பிறவியை அடியேனுக்கு யளித்தருளினார். அவரில் ஒருத்தி பரவை; மற்றொருத்தி யிவள்தான்" என மருண்டு திருக்கோயிலினுள்ளே சென்று சிவபெருமானைத் தரிசித்து "சுவாமீ! தேவரீர் திருமுடிக்குத் திருமாலை தொடுத்துக் கொடுக்கும் பெண்ணை அடியேனுக்குக் கிருபைசெய்து என் வருத்தத்தைத் தீரும்" என்று பிரார்த்தித்து வெளியே வந்து ஓரிடத்திலிருந்தார். மாலைக்காலம் வந்தது. அக்காலத்தில் சிவபெருமான் தந்தோழர்பால் அணைந்து "ஆரூர! பெருந்தவ ஆசியாகிய சங்கிலியை உனக்குக்கொடுக்கின்றோம் நீ கவலையை ஒழி" என்று திருவாய்

மலர்ந்தருளினார். உடனே நம்பியாரூரர் "அன்று என்னை வலியத்தடுத்தாட் கொண்டருளினீர். இன்று சங்கிலியை எனக்கு மணஞ்செய்விக்க இசைந் தீர். தேவரீர் கருணைப் பெருக்கை என்னென்பேன்" என்று வியந்து வணங் கினார். பின்னர்ச் சிவபெருமான் அந்தராத்திரியிலேயே சங்கிலியார் சொப் பனத்திலே தோன்றினார். தோன்றவே சங்கிலியார் எழுந்து தொழுது ஆனந்தப்பரவசராய் "தேவரீர் அடியேன் உய்யும்பொருட்டுக் கருணையே திருமேனியாகக் கொண்டு எழுந்தருள என்னபுண்ணியஞ் செய்தனனோ" என்று மீண்டும் வணங்கினார். அப்பொழுது சிவபெருமான் "சங்கிலியே! நம்மீது பேரன்புடையவன். மேருவினும் தவத்திற்சிறந்தவன். உலகறியத்திரு வெண்ணெய்நல்லூரிலே நம்மால் தடுத்தாட்கொள்ளப்பெற்றவன் நம்பி யாரூரன் என்னும் பெயருடையவன். அவன் உன்னை மணஞ் செய்ய விரும்பி எம்மை வேண்டினான். நீ அதற்கு உடன்படு" என்று அருளிச் செய்யச் சங்கிலியார் "சுவாமீ தேவரீர் திருவாணைப்படி இசைகின்றேன். திருமுன்னே விண்ணப்பிக்கவேண்டிய தொன்றுளது" என்று தொழுது நாணத்தோடு "அவர் திருவாரூரில் மிக்க களிப்போடு வசிக்கின்றவர் என் பதைத் தேவரீர் திருவுளங்கொண்டருளும்" என்றார். அதற்குச் சிவபெரு மான் "அவன் 'உன்னைப் பிரிந்துபோகேன்' என்று ஒரு சபதஞ் செய்து கொடுப்பான்" என்று கூறியருளி, நம்பியாரூரரிடம்போய் "நாம் சங்கிலி யால் அணைந்து, உன் கருத்தைத் தெரிவித்தேம். 'நான் உன்னைப் பிரி யேன்' என்று சபதஞ்செய்து கொடுப்பாயானால், அவள் உன்னைக் கலி யாணஞ்செய்துகொள்ள இசைவாள். நாம் இன்னும் செய்யவேண்டிய தென்ன" என்று திருவாய்மலர்ந்தருள, நம்பியாரூரர் "இச்சிவநாதனு டைய பிரபத்திகளையும் வணங்குங் கடமையுடைய எனக்கு இது பெரு விலக்காகும்" என்று யோசித்து, இறைவரை வணங்கி "'யான் உன்னைப் பிரி யேன்' என்று சபதஞ்செய்து கொடுக்கச் சங்கிலியோடு தேவரீர் திருச் சந்நிதிக்கு வருங்காலத் தேவரீர் திருக்கோயிலினின்றும் நீங்கித் திருமகிழின் கீழ் எழுந்தருளியிருக்கவேண்டும்" என்று பிரார்த்தித்தார். அதற்குச் சிவ பெருமான் இசைந்து, மீண்டும் சங்கிலியாரிடஞ்சென்று "ஆரூரன் சபதஞ் செய்துகொடுக்க உடன்பட்டான். அவன் சபதஞ்செய்துகொடுக்க உன் னோடு நமது ஆலயத்துக்கு வருவான். அப்பொழுது நீ உடன்படாது அவனை மகிழின்கீழ்ச் சபதஞ் செய்யும்படி கேள்" என்று அருளிச்செய்து, மறைந் தருளினார். உடனே சங்கிலியார் விழித்து எழுந்து திருவருளை நினை ந்து நினைந்து வியந்து, அருகே தூங்கிக்கொண்டிருந்த சேடியர்களை எழுப் பித் தம் சொப்பனத்தில் நிகழ்ந்தனவற்றையெல்லாம் சொல்ல, அவர்கள் ஆனந்தமடைந்து அம்மையாரை வணங்கினார்கள். திருப்பள்ளியெழுச் சிக்கு மலர் தொடுக்கும்பொழுதாகச் சங்கிலியார் சேடியர்களோடு திருக் கோயிலுக்குச்சென்றார். அதற்கு முன்னே தம்பிரான்தோழர் சபதஞ் செய்து கொடுக்கச் சங்கிலியார் வரவை யெதிர்நோக்கிக்கொண்டிருந் தார். அங்ஙனம் இருந்த ஆரூரர் சங்கிலியாரைக்கண்டு, அருகே சென்று சிவபெருமான் அருளிச்செய்ததைச் சொன்னார். அது கேட்ட அம்மையார் பதில் ஒன்றுஞ் சொல்லாமல் நாணத்தோடு சேடியர்களுடன் திருக்கோயிலுக்குச் சென்றார். நம்பியாரூரர் பின் தொடர்ந்துபோய் "பெண்ணே! 'நான் உன்னைப் பிரியேன்' என்று சபதஞ் செய்து கொடுக் கத் திருச்சந்நிதி முன்னேவா" என்று இயம்ப, சங்கிலியார் கண்ட சொப் பனத்தைக் கேட்டறிந்த தோழிமார்கள் "சுவாமீ! தேவரீர் இதற்காக இறைவனார் முன் சபதஞ்செய்தல் தகாது" என்றார்கள். அதற்கு நம்பியா

ரூரர் சிவபெருமான் திருச்செயலைச் சிறிதும் அறியாது "நான் எங்கே சபதஞ்செய்து தரவேண்டும்" என்று கேட்க; அப்பெண்கள் "மகிழின் கீழே சபதஞ்செய்து கொடும்" என்றார்கள். அப்பொழுது வன்றொண்டர் "இதைமறுக்கில் பழிமொழியாகும். விவாகந் தவறினுந்தவறும். இசைவதே நலம்" என்று துணிந்து "அப்படியே செய்து கொடுக்கிறேன். வாருங்கள்" என்று அவர்களோடு திருமகிழின் கீழ்ச்சென்று, சங்கிலியார் காணும்படி அந்த திருவிருக்ஷத்தை மும்முறை வலம்வந்து "யான் பிரியேன்" என்று சபதஞ் செய்துகொடுத்தார். அதைப்பார்த்த சங்கிலியார் மனங்கலங்கி "சிவ பிரான் திருவாஞ்ஞையால் பாவியேன் இதைக்கண்டேன்" என்று துக்கத் தோடு ஒருபக்கத்திலே மறைந்து நின்றார். பிறகு நம்பியாரூரர் திருக்கோயி லுக்குப்போய்ச் சுவாமிதரிசனஞ் செய்து திரும்பினார். சங்கிலியார் புஷ்ப மண்டபத்திற்குச் சென்று தந்திருத்தொண்டைச் செய்து சிவபெருமானை வணங்கித்துதித்துக் கன்னிமாடத்திற்குத் திரும்பிவிட்டார். அன்றிரவே சிவபெருமான் திருவொற்றியூரிலுள்ள தமது தொண்டர்களுக்குச் சொப் பனத்திலே தோன்றி "நமது தோழனாகிய ஆரூரனுக்குச் சங்கிலியைக் கலியா ணஞ் செய்துகொடுங்கள்" என்று கட்டளை செய்து மறைந்தருளினார். அத்திருத்தொண்டர்கள் சிவாஞ்ஞையைச் சிரமேற்றாங்கி, அடுத்த நாளிலே சங்கிலியாரைத் தம்பிரான்தோழருக்குக் கலியாணஞ் செய்து கொடுத்தார்கள். நம்பியாரூரர் சங்கிலியாரோடு இன்ப நுகர்ந்துகொண்டு திருவொற்றியூரிலே இருந்தார்.

இங்ஙனம் இருக்குநாளில் ஒருநாள் திருவாரூர்த்தியாகேசப்பெருமான் வசந்தமகோற்சவத் திருநாள் சமீபித்ததை யறிந்து "தியாகேசப் பெரு மானை இத்தனைநாள் பிரிந்து மறந்திருந்தேனே" என்று வருந்தி, "பத்தி மையும் அடிமையையும்" என்னுந் திருப்பதிகத்தைப் பாடியருளினார். பின் னொருநாள் திருவாரூரை மிக நினைந்து, அவ்வூரையடையவிரும்பித் திருக் கோயிலுக்குப் போய்ச் சுவாமிதரிசனஞ்செய்து, திருவொற்றியூரை விட்டு நீங்கினார். நீங்கினதும் நம்பியாரூரர் சபதம் தவறினபடியால் இருவிழிகளும் மறையப்பெற்று மூர்ச்சித்தார். உடனே வன்றொண்டர் "இது சபதந் தவறினமையால் நேர்ந்தது" என்று கருதி "இதை யொழிக்குமபடி சிவநாதனைப்பாடுவேன்" என்று, "அழுக்குமெய் கொடுன்றிருவடி யடைந் தேன்" என்னுந் திருப்பதிகத்தை அருளிச்செய்தார். செய்தும் கண்க ளுக்குற்ற ஊறு நீங்கப்பெறவில்லை. அவ்வாறு நீங்காதொழியினும் திரு வாரூருக்குப் போகவேண்டுமென்னும் பேரவா அவரைப் பிடர்பிடித்து உந்தினமையால், சிலர் வழிகாட்டிக்கொண்டு முன்னே செல்லத் திருமுல்லை வாயிலையடைந்து "விண் பணிந்தேத்தும்" என்னுந் திருப்பதிகத் தைத்தொடங்கிச் "சங்கிலிக்காவென் கண் கொண்டபண்ப" என்றமைத் துப் பாடியருளி, திருவெண்பாக்கத்திற்குச் சென்று சிவபெருமானைத் தொழுது "திருக்கோயிலுள்ளீரே" என்று இரங்கிக் கூறி யருள, பரம சிவன் அவருக்கு ஊன்றுகோல் ஒன்று கொடுத்து "உளோம் போகீர்" என்று திருவாய்மலர்ந்தருளினார். அதற்குமேல் நம்பியாரூரர் "பிழை யுளன பொறுத்திடுவர்" என்னுந் திருப்பதிகமோதிப் பழையனூரை யடை ந்து, காரைக்காலம்மையார் தலையாலே வலஞ்செய்த திருவாலங்காட்டி னருகே நின்று "முத்தா முத்தி தரவல்லா" என்னுந் திருவருட்பதிகத் தைப்பாடி, அத்திருப்பதியினின்றும் நீங்கித் திருவூறல் என்னும் ஸ்தலத் தைத் தரிசித்துத் திருக்காஞ்சியை யடைந்து, திருக்காமக் கோட்டத் தெம்பெருமாட்டியை வணங்கித் துதித்துப் பிறகு ஏகாம்பர நாதரைத்

தொழுது தமக்குக் கண்கொடுத்தருளும்படி வேண்டி நின்றார். அவர் வேண்டுகோளின் பொருளாயுள்ள ஏகாம்பர நாதர் தந்தோழருக்கு இடக் கண்ணை மாத்திரம் கொடுத்துத் தமது திருக்கோலத்தைக் காட்டியருளினார். அது கண்ட வன்றொண்டர் ஆனந்த சாகரத்தில் அழுந்தித் தம்மை மறந்து "ஆலந்தானுகந்தமுதுசெய்தானை" என்னுந் திருப்பதிகத்தைப் பாடிப் போற்றி, அந்தத்தலத்திலே சிலநாளிருந்து, பிறகு அத்திருப்பதியினின் றும் புறப்பட்டு வழியிலே "அந்தியு நண்பகலு" மென்னுந் திருப்பதிகத்தை யெடுத்து "ஆரூரப்பெருந்தகைப்பிரானை யென்றுகொலெய்துவதே" என்று பாடிக்கொண்டே திருவாமாத்தூர், திருவரத்துறை என்னுந் திருத் தலங்களைத் தொழுது போற்றிச் சோழநாட்டைச் சேர்ந்து, திருவாவடு துறைக்குப் போய் ஒரு கண்ணில்லாததைக்குறித்து வருந்தி "கங்கை வார் சடையாய்" என்னுந் திருப்பதிகத்தை ஓதி, அதிலே "ஆரெனக் குறவமரர்களேறே" என்னுந் திருக்கருத்தை யிறுதியிலமைத்து, திருத் துருத்தி என்னும் க்ஷேத்திரத்திற்குப் போய்ச் சிவபெருமானைத் தரிசித்து வணங்கி "அடியேன் மேலுற்றுள்ள நோயை ஒழித்தருள வேண்டும்" என்று பிரார்த்திக்க; சிவபெருமான் "நீ இக்கோயிலுக்கு வடபுறத்திலேயுள்ள தீர்த் தத்தில் ஸ்நானஞ்செய்" என்று அருளிச்செய்தார். அப்படியே நம்பியாரூரர் அத்தீர்த்தத்தில் மூழ்கிப் பிணிநீங்கப் பெற்றுப் பொலிவெய்தி மீண்டுந்திருக் கோயிலுக்குச்சென்று "மின்னுமாமேகங்கள்" என்னுந்திருப்பதிகத்தைப் பாடியருளி, அத்திருப்பதியைவிட்டுப்புறப்பட்டுப் பல சிவஸ்தலங்களைத் தரி சித்துப்போய்த் திருவாரூரைக் கண்ணுற்றார். அத்திருப்பதியைக்கண்டு களிக்க ஒரு கண் போதாமையால் மிகவருந்தி வணங்கி, மாலைக்காலத்திலே அவ்வூருக்குள் சென்று, முன்னே தூவாயனை வணங்கப்பரவையுண்மண்டளி என்னும் ஆலயத்திலே நுழைந்து, சுவாமியை வணங்கி "பெருமானே எனக் குக் கண்கொடுத்தருளும்" என்று பிரார்த்தித்து "தூவாயாதொண்டு செய் வார்" என்னுந் திருப்பதிகம் பாடி, வெளியே போய் ஒரு பக்கத்தி லிருந்து, திருமூலட்டானப் பெருமானை அர்த்தசாமத்திலே தரிசிக்க எழுந்த ருளித் தமக்கெதிரே வந்த அடியார்களைக்கண்டு "குருகுபாய" என்னுங் கைக் கிளைப் பதிகத்தைப் பாடிக்கொண்டே சென்று தியாகேசப்பெருமானைத் தொழுது "சுவாமீ! தேவரீரைத் தரிசிக்க வலக்கண்ணையுங் கொடுத்த ருளவேண்டும்" என்று வேண்டி "மீளா அடிமை" என்னுந் திருப்பதிகத் தைப் பாடியருளினார். அத்திருப்பதிகத்தைக்கேட்ட வன்மீகநாதர் திரு வுளமிரங்கித் தந்தொண்டருக்கு வலக்கண்ணையுங் கொடுத்தருளினார். உடனே நம்பியாரூரர் இன்பவெள்ளத்திலழுந்தித் தியாகராஜப்பெருமா னாரை இருகண்ணாரக்கண்டு களித்து வணங்கிப் போற்றிப் புறத்தே வந்து, தேவாசிரியமண்டபத்தையடைந்து இருந்தார்.

பரவைநாயகியார் தமது கணவராகிய நம்பியாரூரர் திருவொற்றி யூரையடைந்து, சங்கிலியாரைக் கலியாணஞ்செய்துகொண்டதைக் கேள்வி யுற்றுத் துக்கசாகரத்தில் அழுந்திக்கிடந்தார். நம்பியாரூரர் பலநாளாகப் பிரிந்திருந்த தியாகேசப்பெருமானைத் தரிசிக்கப் போனபொழுது, அவ ருடைய பரிசனங்களிற் சிலர் பரவையார் திருமாளிகைக்குச் சென்றார்கள். அவர்கள் பரவையார் கோபங்கொண்டிருந்தபடியால் உள்ளேபோகப் பெறு தவர்களாய்த் திரும்பிச் சுவாமிதரிசனஞ்செய்து தேவாசிரியமண்ட பத்திலிருந்த வன்றொண்டர் பாலணைந்து, வணங்கிச் "சுவாமீ! பரவை யார் திருமாளிகைக்குச்சென்றோம். அவ்வம்மையார் திருவொற்றியூரில் நிகழ்ந்த சங்கதியை முற்றிலும் கேள்வியுற்றுக் கோபங்கொண்டிருக்கின்றார்.

அதனால் அங்குள்ளவர்கள் எங்களைப் பிடித்துத்தள்ளினார்கள். நாங்கள் திரும்பிவிட்டோம்" என்று சொன்னார்கள். அதுகேட்ட தம்பிரான் தோழர் "இதற்கு என்ன செய்வேன்" என்று சில பெரியோர்களைப் பரவையார் கோபத்தைத்தணித்து வரும்படி அனுப்பினார். அவர்கள் அப்படியே அம்மையார் திருமாளிகைக்குப்போய்ப் பல நியாயங்களை எடுத்துக் காட்டினார்கள். அதற்கு அம்மையார் "குற்றம் பொருந்திய தம்பிரான் தோழரைப்பற்றி இன்னும் வார்த்தைகள் நடக்குமேல் என்னுயிர் போய்விடும்" என்ன, அவர்கள் பயந்து வெளியே வந்து நம்பியாரூரரிடம் போய் நடந்ததைச் சொன்னார்கள். அது கேட்ட வன்றொண்டர் துயரக்கடலில் அழுந்தி, அருகேயிருந்தவர்கள் எல்லாரும் அயர்ந்து நித்திரை செய்யும் பொழுது, அலகையும் உறங்கும் அர்த்தராத்திரியிலே சிவபெருமானைச் சிந்தித்து "எம்பெருமானே! முன்னை வினையின் தொடர்க்கால் இவ்வினைக்கு மூலமாயுள்ள பரவையாரிடம் யான் செல்லக் கிருபை செய்தருளும். தேவரீர் இந்த நடுராத்திரியிலே எழுந்தருளிப் பரவையார் புலவியைப் போக்கினாலன்றிப் பிழையேன்" என்று வேண்டினார். அதற்கு இரங்கிய சிவபெருமான் நம்பியாரூரருக்கு முன்னே வெளிப்பட்டுத் "தோழனே! உனக்கு என்ன வுற்றது" என்று வினவ, ஆரூரர் கடவுளை வணங்கி நிகழ்ந்தனவற்றைக் கூறி "சிறியேன் தேவரீருக்கு அடியவனும், தேவரீர் சிறியேனுக்குத் தோழரும், ஆண்டவருமாயிருத்தல் உண்மையாயின், யான் படுந் துன்பத்தைப் பார்த்துத் தேவரீரே இன்றிரவு பரவையிடஞ் சென்று அவள்கொண்ட ஊடலை யொழிக்கவேண்டும்" என்று பிரார்த்தித்தார். அதுகேட்ட அன்பர் பெருமான் "நம்பி! யாம் இப்பொழுதே உனக்கொரு தூதனாகிப் பரவை வீட்டிற்குப் போகின்றோம். நீ துன்பத்தையொழி" என்று அருளிச்செய்ய, அவர் தோழர் எல்லையில்லாக் களிப்புற்று "தேவரீர் எழுந்தருளிப் பரவையார் புலவியைப் போக்கும்" என்று வணங்கினார். உடனே எங்கும் விளங்கும் பரமசிவப்பெருமானார் தேவர்களும் முனிவர்களும் தம்மைச் சூழ்ந்துவரத் திருமால் பிரமன் முதலியோருக்கும் அறிவரிய திருவடித் தாமரைகள் திருவீதியிலே பொருந்த நடந்து, பரவையார் மாளிகையடைந்து, தம்முடன் வந்தவர்கள் புறத்தே நிற்கத், தம்மை யருச்சிக்கும் ஒரு ஆதிசைவப் பிராமணவேடங்கொண்டு "பரவையே! கதவைத்திற" என்று கதவைத் தட்டி அழைத்தார். அப்பொழுது துயில் சிறிதுமின்றித் துக்கம் பெரிதுமுடையவராயிருந்த பரவையார், தம்மையழைப்போர் வன்மீகநாதரை அருச்சனை செய்வோர் என்று கருதி "இந்த நடுராத்திரியிலே அவர் இங்கே வருவதற்குக் காரணம் யாது" என்று பயந்து விரைவாக வந்து கதவைத்திறந்து, குருக்களைப் பார்த்து "சிவபெருமானைப் போன்ற தேவரீர் இப்பொழுது இங்கே எழுந்தருளி வந்ததென்ன" என்று கேட்டார். அதற்குக் கங்கையை மறைத்து வந்த கடவுள் "நான் சொல்லுவதை மறுக்காது செய்ய உடன்படுவாயானால் யான் சொல்லுகிறேன்" என்று சொல்ல, அம்மையார் "நீர் அருளிச்செய்யும், செய்யக்கூடியதாயின் செய்வேன்" என்றார். பெருமான் அதைக் கேட்டு "நம்பியாரூரர் உன்னிடம் வர நீ இசையவேண்டும்" என்ன; பரவையார் "என்னைப் பிரிந்து திருவொற்றியூருக்குப்போய், அங்கே சங்கிலி என்பவளோடு தொடர்க்கு ண்ட அவருக்கு இங்கே என்ன சார்பு உண்டு. அவருக்காகத் தேவரீர் இந்நடு இரவில் வந்து சொன்ன காரியம் மிக அழகாயிருக்கின்றது" என்றார். அதற்குச் சிவபெருமான் "அவரது குற்றங்களை மனதிற் கொள்ளாது ஒழித்துக் கோபத்தை நீக்கவே யான் உன்னை வேண்டிக்கொள்கிறேன். நீ மறுப்

பது நியாயமல்ல" என்று திருவாய்மலர்ந்தருள; பரவைநாயகியார் "இது நிமித்தமாகத் தேவரீர் இங்கே வந்தது தங்கள் பெருமைக்குத் தகுதியுடையதன்று. அவர் இங்கு வர நான் உடன்படேன். நீர் போம்" என்று மறுத்துவிட்டார். சிவபிரான் அதைக் கேட்டுச் சிரித்துக்கொண்டு தம் உண்மைச் சொரூபத்தைக்காட்டாது, நம்பியாரூரரிடம் திரும்பிச் சென்றார். நம்பியாரூரர், கடவுளைத் தூதராக அனுப்பிய பின்னர் "சிறியேன் பரவையார் ஊடலை ஒழிக்கச் சிவபெருமானைத் தூதராக அனுப்பினேனே" என்று புலம்புவார், பரவையாரை நினைத்துக்கொள்வார், "பரவையாரிடம் சென்ற பரமசிவன் என் செய்தாரோ. சிவபிரான் திருவார்த்தையைப் பரவை மறுப்பாளோ. அவள் ஊடலையொழித்ததன்றிச் சிவபிரான் மீளார்." என்று நினைத்து நினைத்துப் பரமசிவன் வரவை எதிர்நோக்கிச் செல்வார். அவரைக்காணாது வருந்தித் திரும்பியிருப்பார். இப்படி வருந்திக்கொண்டிருந்த நம்பியாரூரருக்கு எதிரில் எம்பெருமான் வந்தார். அவரைக்கண்ட நம்பியாரூரர் நித்தியானந்தப் பெருவாழ்வைப் பெற்றாற்போலக் களிப்படைந்து எதிர்சென்று தொழுது "பெருமானே அன்று தடுத்தாட்கொண்டருளிய பெருமைக்கு இசைய இன்று பரவையார் கோபத்தை யொழித்து வந்தீர்" என்று சொன்னார். அதுகேட்ட சிவபிரான் "நம்பி! உன் இஷ்டப்படி நாம் பரவைவீட்டுக்குச் சென்று உன் சமாசாரங்களையெல்லாம் கூறி வேண்டியும், அவள் இசைந்தாள் இல்லை" என்றார். அப்பொழுது வன்றொண்டர் திடீரென நடுநடுங்கிப் பணிந்து "தேவரீர் திருவார்த்தையைப் பரவையார் மறுப்பாளா? தேவர்களுக்காக நஞ்சையுண்டீர். மார்க்கண்டருக்காகக் காலனை யுதைத்தருளினீர் அவர்கள் அன்பு என்பால் சிறிதுமின்மையால் திரும்பிவிட்டீர். சிறியேன் அடிமையை வேண்டாவிட்டால் அன்று வலிய ஆட்கொண்டருளிய பற்று என்னை? என் துன்பம் தேவரீருக்குத் தெரியும். அடியேன் பரவையிடஞ்செல்லத் திருவருள் செய்யீராயின் என்னுயிர் பிரியும்" என்று சொல்லி விழுந்தார். உடனே சிவபெருமான் "ஆரூரனே! நாம் இன்னம் பரவையிடம் சென்று இப்பொழுதே அவளை நீ யடையும்படி செய்வோம். வருந்தவேண்டாம்" என்று அருளிச் செய்ய; வன்றொண்டர் "சிறியேன் பயங்கெடுத்து இவ்வாறனேகம் பணிகொள்வது கருணை" என்று ஸ்தோத்திரஞ் செய்தார். அத்தோத்திராரூபராகிய சிவபெருமான், முன்னே தம்முடன் வாராத தேவர்களும் பிறரும் வணங்கிக்கொண்டு பின்னேவரப் பரவையார் வீட்டை நோக்கிச் சென்றார். அதற்குமுன் பரவையார், தம்பால் வந்த குருக்கள் போனபிறகு, அக்குருக்களாய் வந்தவர் சிவபெருமான் என்றே பல அதிசயக் காட்சிகளால் அறிந்து அஞ்சி "ஐயோ! கெட்டேன். பரமசிவன் திருவாக்கினை மறுத்துவிட்டேனே" என்று கலங்கிய மனத்தராய் நித்திரை செய்யாது "தமது தோழருக்காகத் தம்மைப் பூசிக்கும் அருச்சகராகத் திருவுருவங்கொண்டு எழுந்தருளிய இறைவரை மதிக்காமல்போயவிட்டேன். எதிர்வார்த்தையும் பேசிவிட்டேன்" என்று தெருவாயிலையே பார்த்துக்கொண்டு இருந்தார். அப்பொழுது சிவபெருமான் தமது உண்மைச் சொரூபத்தோடு தேவர்கள் முனிவர்கள் சூழ பரவையாரது திருமாளிகையில் நுழைந்தார். திருக்கயிலாயமே பரவையார் வீட்டில் விளங்கியதென்றால் பரவையாரின் தவப்பெருமையை என்னென்று சொல்லுவேம். வன்றொண்டர் அனபாய வலையில் அரனார், சிக்குண்டு பட்ட அவத்தையையும் என்னென்று சொல்வேம். திருவாரூர் சிவலோகம் எனபதற்கு ஐயமுண்டோ. திருக்கயிலாயக் கோலத்தோடு எழுந்தருளிய சிவபெரு

மானைப் பரவையார் கண்டதும் நடுநடுங்கி எழுந்து வணங்கக் கடவுளர் பெருமான் "பரவையே! மீண்டும் உன்னிடம் வந்தோம். முன் போல் மறுக்காதே. ஆரூரன் உன்னிடம் வர இசையவேண்டும்" என்று அருளிச்செய்தார். அதற்குப் பரவையார் சுவாமியைத் தொழுது "தேவரீரோ முன்னெழுந்தருளி வந்த அந்தணர். என் தவமே தவம்." என்று சொல்லி வணங்கி "திருமால் பிரமன் அறியாத தேவரீர் அன்பர் பொருட்டு அங்கும் இங்கும் உழன்றருளுகின்றீராகில், சிறியேன் இசையாது என்செய வேன்" என்றார். அப்பொழுது சிவபெருமான் பரவையாரை திருநோக்கஞ்செய்து "உன் தன்மைக்கேற்ப நன்று சொன்னாய்" என்று திருவாய் மலர்ந்தருளி, உடனே புறப்பட்டுக் கங்கைநீர்த் ததும்பிக் கீழேவிழ விரைவாக நடந்து நம்பியாரூரரிடம் வந்தார். அவரது வருகையைக் கண்ணிமைக்காது பார்த்துக்கொண்டிருந்த வன்றொண்டர் எழுந்து எதிரே போய் வணங்கி "சுவாமீ! என்னுயிரைக்காவாது இடர் செய்யும் பரவையிடத்தினின்றும் என்ன பதில் கொண்டுவந்தீர்" என்ன; சிவபிரான் "நாம் பரவையார் கோபத்தைத் தணிவித்தோம். நீ அவளிடம் சென்று சேர்வாயாக" என்று திருவாய்மலர்ந்தருளினார். அவ்வருட் சொற்களைக் கேட்ட ஆரூரர் களிப்பேருவகையுற்று "போக மோட்சங்களுக்குத் தேவரீரே முழுமுதல்வர் என்பதை விளக்கினீர். இனி அடியேனுக்குத் துன்பம் ஏது" என்று கீழே விழுந்து வணங்கினார். சிவபெருமான் நம்பியாரூரருக்குத் திருவருள் செய்து திருக்கோயிலுக்கு எழுந்தருளினார். பிறகு வன்றொண்டப் பெருமான் பரவையார் திருமாளிகை நோக்கிச் சென்றார். உறங்கிக்கொண்டிருந்த பரிசனங்கள் விழித்து எழுந்து சுவாமிகளைச் சூழ்ந்து போயின. தேவர்கள் புஷ்பமாரி பொழிந்தார்கள். நம்பியாரூரர் மங்கலம் போடு பரவையார் வீட்டைச் சேர்ந்தார். அதற்கு முன் மாளிகையை அலங்கரித்துச் சேடியர்களோடு வாயிலிலே எதிர்நோக்கிக்கொண்டிருந்த பரவை நாயகியார் நம்பியாரூரரைக்கண்டு எல்லையில்லா ஆனந்த வெள்ளத்தில் அமிழ்ந்து, நாணம் அச்சம் மிக்கத் தொழுதார். அப்பொழுது நாயனார் தமது நாயகியார் திருக்கரத்தைப் பற்றிக்கொண்டு உள்ளேசென்று முன்போல ஆனந்த இன்பம் நுகர்ந்து திரிகாலங்களிலும் வன்மீகநாதரைத் தரிசித்துக் கொண்டு சுகமாக வாழ்ந்துவந்தார்.

நம்பியாரூரர் இங்ஙனம் வாழ்ந்துவருநாளில் தாம் உள்ளஞ் சிறிதும் கம்பியாது பெண்பொருட்டுப் பரம்பொருளைத் தூதுகொண்ட சமாசாரத்தைக் கேள்வியுற்றுத் தம்மீது கோபித்துக்கொண்டிருந்த ஏயர்கோன்கலிக்காமநாயனார் பிணக்கைத் திருவருளால் ஒழிப்பித்து, அவரோடு நட்புக்கொண்டு திருப்புன்கூருக்குச் சென்று சிவதரிசனஞ் செய்து "அந்தணாளனுன்னடைக்கலம்" என்னும் திருவருட்பதிகத்தை அருளிச்செய்து, மீண்டும் திருவாரூரையடைந்தார். கலிக்காமர் நம்பியாரூரர்பால் விடைபெற்றுத் தம்பதி சேர்ந்தார். நம்பியாரூரர் திருவாரூரை விட்டு நீங்கிப் புறப்பட்டுத் திருநாகைக்காரோணத்திற்குப் போய்ச் சிவபெருமானை வணங்கிப் பதிகம்பாடிப் பொன்னும், மணிகளும், ஆபரணங்களும், ஆடைகளும் வாசனைத் திரவியங்களும், குதிரைகளும், சுரிகைகளும், பிறவும் பெற்று, பல தலங்களையும் தரிசித்து மீண்டும் திருவாரூரையடைந்தருளினார்.

அதுகாலை அரசர் பெருமானாகிய சேரமான்பெருமாணாயனார் வன்றொண்டரின் அன்பின் திறத்தைச் சிவபிரானால் அறிந்து அவரைத் தரிசிக்க விரும்பித் திருவாரூரை அடைந்தார். அதை யறிந்த வன்றொண்டர் நாயனாரை எதிர்கொண்டனர். அவர் இவரை வணங்கி, இவர் அவரை வணங்கக்கல

ந்து உயிரொன்றி உடல் வேறாய் நின்றார்கள். அதுபற்றி நம்பியாரூரர்க்குச் சேரமான் தோழர் எனனுந்திருநாமமுண்டாயிற்று. தம்பிரான தோழர் சேரர்பெருமானைப் பற்றிககொண்டு திருககோயிலுக்குப் போய்ச சுவாமி தரிசனஞ்செயது, பரவையார் வீட்டுககு அழைததுக்கொண்டு சென்று திருவமுது செயவித்தார். அவவிருவரும் தினந்தோறும் தியாகேச வள்ளலை தரிசிததுககொணடு கெழுதகை நட்பு பாராட்டிககொணடிருந்தார்கள். சினநாட் கழிந்தபின்னர் நமபியாரூரர் மதுரை முதலிய திருப்பதிகளைத் தரிசிகக விரும்பினார். சேரமான பெருமானுமவருடன் தமககுத் திருமுகங் கொடுததனுப்பி யருளிய சோமசுநதரக் கடவுளைத தரிசிகக விரும்பி ஆரூரருடன புறப்படத் துணிந்தனர். உடனே நம்பியாரூரர் சேரர் பெருமானையும் உடன் அழைததுக் கொண்டு வன்மீகநாதரை வணஙகி விடை பெற்றுப் புறப்பட்டுக் கீழ்வேளூரரைத தரிசிதது, திருநாகைககாரோணத்திற்குப்போய்ச் சுவாமி தரிசனஞ் செய்து திருப்பதிகம பாடி, சிலநாள அஙகிருந்து, பிறகு அததிருப்பதியைவிட்டு நீஙகித் திருமறைககாட்டைச சேர்ந்தார். சேர்ந்து நமபியாரூரர் கழறிற்றறிவாரோடு, திருநாவுக்கரசு சுவாமிகளாலும, திருஞானசம்பநத மூர்த்திகளாலும முறையே திறக்கவும் மூடவும திருவருட்பதிகம் பாடப்பெற்ற திருவாயிலை யடைந்து, கணகளில் ஆனந்த வெள்ளமபெருக, அந்நாயனமார்களை நினைந்து இறைஞ்சி, வேதாரணியப்பெருமானை வணஙகி, "யாழைப்பழிதது" எனனுந திருப்பதிகம் திருவாயமலாநதருளி, அஙகே சில தினம் தஙகிப் பின்னர் அகததியானபள்ளிக்குச சென்று பதிகம பாடிப பாண்டிநாட்டை யடைந்து, திருப்புத்தூரைத தரிசிதது மதுரையைச சமீபித்தார். அதைக்கேளவியுற்ற பாணடிய மகாராசாவும, அப்பாண்டியரது மகளைமணந்து அங்கிருந்த சோழமகாராசாவும நமபியாரூரரையும, சேரமகாராசாவையும எதிர்கொண்டார்கள். அவாகளோடு நமபியாரூரா திருக்கோயிலுக்குப போயச சொககநாதரைத்தொழுது பதிகமபாடி யருளினார். சேரர்பெருமானும் சோமசுநதரப் பெருமானைத தரிசிதது "அடியேனை யொருபொருளாக மதிததுத திருமுகங கொடுததருளிய பெருஙகருணை யிருநதவாறெனனே" என்று வாயகுழறத துதிததார். பாணடியராசர் அவாகளை ஒரு இரத்தின மாளிகைககு அழைததுக் கொணடுபோய அமாததி உபசரிததார். நம்பியாரூரா மூவேந்தாகளோடு சுவாமிதரிசனஞ் செயதுகொணடு மதுரையமபதியிலே தஙகியிருந்தார். பிறகு அவ்வரசாகளோடு ஆரூரா மதுரையினின்றும் நீஙகிப் புறப்பட்டுத் திருப்பூவணததைச சமீபிககப் பககததிலே சென்ற அடியவாகள் திருககோயிலைக காட்டினாகள். உடனே நமபியாரூரர் "திருவுடையார்" எனனுந் திருப்பதிகம பாடிக்கொணடே ஆலயததிற்குப் போயச சுவாமிதரிசனஞ்செயது அஙகேயிருந்தார். சிலநாடகழிநதபினனர் வன்றொணடா வேநதர்களோடும மீணடும மதுரைககு எழுநதருளி, அத்திருப்பதியிலே தங்கியிருநதார். அபபொழுது திருஆமபனூர, திருவேடகம எனனும இரண்டு திருததலஙகளுககுச சென்று சுவாமிதரிசனஞ்செயது திரும்பினா. பின்னாத தமபிரானதோழர் அவ்வரசாகளோடும் மதுரையைவிட்டு நீங்கித திருப்பரங்குன்றை யடைநது சிவபெருமானைத் தொழுது, அவருக்கு அடிமைசெயய அஞ்சுதும என்று "கோததிட்டையுங்கோவலும்" எனனுந் திருப்பதிகததைப் பாடியருளினா. அதுகேட்ட மூவேநதரும் அஞ்சித் தமபிரானதோழரை வணஙகினார்கள். அதன்பின நம்பியாரூரா சேரர் பெருமானோடு பிறதலஙகளை வணஙகப் புறப்பட, பாணடியரும சோழரும விடைபெற்று மதுரைக்குத திருமபினாகள். நமபியாரூரர் தோழரோடு

திருக்குற்றாலம், திருக்குறும்பலா, திருநெல்வேலி முதலிய திருப்பதிகளைத் தரிசித்து, இராமேச்சுரத்தை அடைந்து சுவாமிதரிசனஞ் செய்து திருப்பதிகம்பாடி அங்கே தங்கியிருந்தார். அங்கிருந்துகொண்டே ஈழநாட்டிலுள்ள மாதோட்டத்துத் திருக்கேதீச்சரத்தைத் தொழுது திருப்பதிகம் பாடினார். பிறகு இராமேச்சுரத்தை விடுத்து நீங்கித் திருச்சுழியலைச் சேர்ந்து சுவாமிதரிசனஞ் செய்துகொண்டிருந்தபொழுது, சிவபெருமான் "அவருக்குச் சொப்பனத்திலே காளைவடிவங்கொண்டு திருக்கரத்திலே பொற்செண்டும், திருமுடிமேல் சுழியமும் உடையவராயத் தோன்றி "யாமிருப்பது கானப்பேர்" என்று திருவாய்மலர்ந்தருளி மறைந்தருளினார். உடனே, வன்றொண்டர் விழித்தெழுந்து திருவருளை வியந்து, தாங் கனவிலே கண்டதைச் சேரர் பெருமானுக்குச் சொல்லித் திருச்சுழியலை விட்டுப் புறப்பட்டு "தொண்டரடித் தொழலும" என்னுந் திருப்பதிகத்தை எடுத்து, "கண்டு தொழப்பெறுவதென்றுகொலோ அடியேன் கார்வயல்சூழ் கானப்பேருறை காளையையே" என்று பாடிக்கொண்டே திருக்கானப்பேருக்குப் போய்ச் சுவாமியைத் தரிசித்துப் பதிகம்பாடி, அங்கே சில நாளிருந்து பிறகு அப்பதியினின்றும் நீங்கித் திருப்புனவாயிலைத் தரிசித்துச் சென்று சோழமண்டலத்தையடைந்து, பாதாளீச்சரத்தைத் தொழுது திருவாரூரைச் சேர்ந்தார்.

பல நாளாயின்பின் சேரமான் பெருமானாயனார் வன்றொண்டரை வணங்கித் தமதூருக்கு வரும்படி வேண்டினார். அதற்கு நம்பியாரூரர் இசைந்தருளி அரசர் பெருமானோடு திருவாரூரினின்றும் நீங்கிக் காவேரியின் தென்கரையே போய்த் திருக்கண்டியூரைத் தரிசித்து வணங்கிப் புறப்பட்டுச் சென்றார். அப்பொழுது வடகரையிலுள்ள திருவையாறு எதிர்தோன்றியது. அது கண்ட சேரர்பெருமான் தம்பிரான்தோழரைத் தொழுது "சுவாமீ! வடகரையிலுள்ள திருவையாற்றைத் தரிசிக்க என் மனம் அவாவுகிறது. நாம் இந்நதியைக்கடந்துபோய்ச் சுவாமிதரிசனஞ்செய்வோம்" என்றார். அப்பொழுது காவிரிபெருக்கெடுத்து இருகரையும் அழித்து ஓடினது. அதில் ஓடங்களும் செல்லா. அதுகண்டு நம்பியாரூரர் "பரவும் பரிசொன்றறியேன்" என்னுந் திருப்பதிகமெடுத்து ஒவ்வொரு திருப்பாட்டினிறுதிதோறும் "ஐயாறுடைய அடிகளோ" என்று அழைத்துப் பாடியருளினார். அதைக்கேட்ட அடியார்க்கெளியவர் கன்று தடைபட்டு எதிரில் நின்று அழைத்தலைக் கேட்டுக் கதறிக்கனைக்கின்ற தாய்ப்பசுவைப் போலச் சராசரங்களெல்லாங் கேட்கும்படி "ஓலம்" என்று மொழிந்தருளினார். உடனே ஆகாயத்தை முட்டும் பெருவெள்ளத்தையுடைய காவேரி நதியானது பிரிந்து வழிகாட்டியது. மேற்றிசை நீர் பளிங்கு மலைபோல் நின்றது. கீழ்த்திசை நீர் வடிந்து நடுவழி மணற் பரப்பாய் இருந்தது. அது கண்ட தொண்டர்கள் சிவானந்தக்கடலில் தோய்ந்தார்கள். கழறிற்றறிவார் வன்றொண்டரை வணங்கினார். நம்பியாரூரர் சேரபிரானை வணங்கி "பெருமான் உமக்கருளியதன்றோ" என்று திருவாய்மலர்ந்தருளி அடியவர்களோடு நதியின் மத்தியிலேயுள்ள மணல்வழியே போய்த் திருவையாற்றைத் தரிசித்து மீண்டும் அம்மணல்வழியாகவே வந்து தென்கரையேறினார். ஏறினதும் பிரிந்து மலைபோல நின்ற நீரானது தொடர்ந்து பாய்ந்தது. அதைப்பார்த்த நாயன்மார் இருவரும் திருவருளை வியந்து சென்று கொங்கநாட்டைக் கடந்து மலைநாட்டை யடைந்து, கொடுங்கோளூருக்குப் போனார்கள். போனதும் சேரமான் பெருமானாயனார் நம்பியாரூரரைத் திருவஞ்சைக்களத்துக்கு அழைத்துக்கொண்டு செல்ல நாவலர் பெருமான் சுவாமிதரி

சனஞ்செய்து "முடிப்பதுகங்கை" என்னுந் திருப்பதிகம் அருளிச்செய்தார். அதன்பின் சேரமான் பெருமாணாயனார் தம்பிரான் தோழரை யானைமீதேற்றித் தாமும் பின்னே ஏறி வெண்சாமரம் வீசிக்கொண்டு தமது திருமாளிகை வாயிலையடைந்து யானையைவிட்டிறங்கிப் பிறகு ஆரூரரை யிறக்கி அழைத்துக்கொண்டுபோய்ச் சிங்காசனத்தில் அமர்த்தித் தம் பத்தினிமார்கள் கரக நீர்வார்ப்பத் தாம் ஆரூரர் திருவடிகளை விளக்கத் தொடங்கினார். அப்பொழுது வன்றொண்டர் தமது திருவடிகளை வாங்கிக்கொண்டு "நீர் தகாத காரியம் செய்கின்றீர்" என்ன, சேரர் பெருமான் நாவலர் பெருமானைப் பணிந்து "சுவாமீ! நாங்கள் பெருவிருப்பால் செய்யும் எல்லாப் பூசனைகளையும் மறுக்காது ஏற்றருளவேண்டும்" என்று வேண்டினார். அன்பர் வேண்டுகோளுக்கு இரங்குதலையே திருமேனியாகக் கொள்ளும் ஒருவருக்கு அன்பராகிய நம்பியாரூரர் தம்தோழர் வேண்டுகோளை மறுக்கச் சிறிது மனமில்லாதவராய் அரசர் செய்த பூசனைகளை யெல்லாம் பெருமகிழ்ச்சியோடு ஏற்றுக்கொண்டார். சேரர் பெருமான் இஷ்டப்படி நம்பியாரூரரைப் பூசித்துத் திருவமுது செய்வித்தார்.

தம்பிரான் தோழர் சேரமான் பெருமாணாயனார் மெய்ப்பத்தியோடு செய்த உபசாரங்களை யேற்று இருந்தநாளில் ஒருநாள் திருவாரூர் வன்மீகநாதரை நினைத்து "பொன்னும் மெய்ப்பொருளும்" என்னுந் திருப்பதிகத்தை யெடுத்துத் திருப்பாட்டினிறுதிதோறும் "ஆரூரனை மறக்கலுமாமே" என்றுபாடித் திருவாரூருக்குப் புறப்பட்டார். அதுகண்ட சேரமான் பெருமாணாயனார் பிரிவாற்றாதவராய்ப் பின் சென்று நாவலர் பெருமான் திருமுன்னே வந்து வணங்கி "சுவாமி தேவரீரை எங்ஙனம் பிரிந்திருப்பேன்" என்றார். அதற்கு வன்றொண்டப் பெருந்தகையார் "நீர் சிறிதும் வருந்தாது பகையரசர்களை வென்று இவ்வூரை யாண்டுவாரும்" என்ன; அரசர் "தேவரீர் திருவடித்தாமரைக்கீழ் அடியேன் அரசாட்சி. தேவரீர் திருவாரூருக்குப் போதலையுந் தடுக்க அஞ்சுகின்றேன்" என்றார். அதுகேட்ட வன்தொண்ட வள்ளலார் "நான் திருவாரூர் பெருமானை மறந்திரேன். நீர் இங்கே இரும்" என்று சொல்லி வணங்கினார். அப்பொழுது அரசர் பெருமான் ஆரூரரைப் பணிந்து மந்திரிமார்களைக் கொண்டு தமது அரண்மனையிலுள்ள பண்டார முழுவதையும் பொதிசெய்து, ஆட்கள் மீது ஏற்றுவித்து நாயனாருக்கு முன்னே போம்படி பணிவித்தார். வன்றொண்டர் அவரை அன்போடு தழுவி விடைகொடுத்துப் புறப்பட்டுக் காடுகளையும், மலைகளையும், நதிகளையுங் கடந்து திருமுருகன்பூண்டி மார்க்கமாய்ப் போக நினைந்து, அதற்கு அயலிலே போகும் பொழுது, சிவபிரான் தமது பூதகணங்களைப் பார்த்து "நீங்கள் வேடர்கள் வடிவங்கொண்டு நம்பியாரூரன் கொண்டுபோகும் பண்டாரங்களைக் கவர்ந்து வாருங்கள்" என்று ஆஞ்ஞாபித்தார். அவைகள் அப்படியே வேடுவர்களாகி நம்பியாரூரருடைய சுமையாட்களை வழிமடக்கி வில்லை வளைத்து அம்புகளைத் தொடுத்துப் பயமுறுத்தி "உங்களைக்கொன்று விடுவோம். எல்லாத் திரவியங்களையும் இங்குப் போட்டு விட்டுப் போங்கள்" என்று குதித்துப் பண்டாரங்கள் முழுவதையுங் கவர்ந்துகொண்டுபோயின. சுமையாட்களெல்லாரும் பயந்து வன்றொண்டரிடம் சேர்ந்தார்கள். அவ்வேடுவர்கள் திருவருளாஞ்ஞைப்படி நம்பியாரூரரிடஞ் செல்லாது ஒழிந்தார்கள். வன்றொண்டர் திருமுருகன்பூண்டிக்குச் சென்று திருக்கோயிலினுள்ளே நுழைந்து சிவநாதனைத் தொழுது "கொடுகுவெஞ்சிலை வடுகவேடுவர்" என்னுந் திருப்பதிகத்தை யெடுத்து, திருப்பாட்டினிறுதிதோறும் "எத்துக்கிங்கிருந்தீரெம்பிரானீரே" என்று பாடியருளினார். உடனே

சிவபிரான் திருவருளால் வேடர்களாகிய பூதர்கள் தாங்கள் கவர்ந்த பண்டாரங்களெல்லாவற்றையும் கொண்டுவந்து திருவாயிலின் முன்னே குவித்தார்கள். நம்பியாரூரர் அவைகளைப் பெற்றுக்கொண்டு திருவாரூரை யடைந்தருளினார்.

சிலநாளாயினபின் நம்பியாரூரர் சேரமான் பெருமாணாயனாரைக் காண விரும்பிச் சோழநாட்டைக்கடந்து கொங்குநாட்டைச் சேர்ந்து திருப்புக்கொளியூரை அடைந்தார். அப்பொழுது அங்கே ஒரு மாடவீதியிலே ஒரு வீட்டிலே மங்கல ஒலியும், மற்றொரு வீட்டிலே அழுகையொலியுமாயிருந்தன. அதுகண்ட நாவலர்பெருமான் அவ்வூர் அந்தணர்களை நோக்கி "மங்கல ஒலியும் அமங்கல ஒலியும் ஒருங்கே நிகழ்வதென்ன" என்று கேட்டார். அதற்கு அவர்கள் "சுவாமி! ஐந்துவயதுடைய இரண்டு சிறுவர்கள் குளத்திலே குளிக்கப்போனார்கள் அவர்களில் ஒருவனை முதலைவிழுங்கிற்று மற்றவன் பிழைத்துக்கொண்டான். இந்த வீட்டிலே எழும் ஒலி பிழைத்த பிள்ளைக்கு உபநயனம் செய்யும் ஒலி; இந்த வீட்டின் ஒலி இறந்த புதல்வனைப்பற்றிப் புலம்பும் ஒலி" என்றார்கள். அதுகேட்டு மனமிரங்கி நின்ற நம்பியாரூரரை இறந்தபிள்ளையின் பிதாமாதாக்கள் புத்திர சோகத்தை முற்றிலும் மறந்தவர்களாய்ப் பெருங்காதலோடு வந்து வணங்கினார்கள். அதுகாலை நாயனார் பெருமான் அவர்களைப் பார்த்து "புதல்வனை இழந்தவர்கள் நீங்களா" என்று கேட்க; அவர்கள் மறுபடியும் வணங்கி "சுவாமி! அது முன்னே நிகழ்ந்த சமாசாரம். தேவரீரைத் தரிசித்து வணங்கப் பேராவா கொண்டிருந்தோம். அது பழுதாகாமல் தேவரீர் இங்கே எழுந்தருளப் பெற்றோம்" என்றார்கள். அதுகேட்ட ஆரூரர் "இவர்கள் புத்திரசோகத்தை மறந்து நாம் வந்ததற்காக மனமகிழ்கின்றார்கள். இவர்கள் புதல்வனை முதலைவாயினின்றும் வரவழைத்துக் கொடுத்துவிட்டு அவிநாசி அப்பரைத் தொழுவோம்" என்று திருவாய்மலர்ந்தருளி "அப்பிள்ளையை விழுங்கிய முதலையுள்ள மடு எங்கேயிருக்கிறது" என்று வினவித் தெரிந்துகொண்டு அக்குளக்கரையை யடைந்து முதலை தான் முன் விழுங்கிய பிள்ளையை உமிழும்படி எண்ணி "எற்றான் மறக்கேன்" என்னுந் திருப்பதிகத்தை எடுத்து "உரைப்பா ருரையுகந்து" என்னும் நான்காந்திருப்பாட்டை முடிப்பதற்குமுன் காலனானவன் அப்பிள்ளையினின்னுயிரை அம்முதலை வயிற்றினுள்ளே சென்ற ஆண்டுகளும் பூமியிலே வளர்ந்ததென்னும்படி வளர்ச்சியையுடையதாகத் தோற்றுவித்தான். உடனே அம்முதலை அப்புதல்வனைக் கரையிலே கொண்டுவந்து உமிழ்ந்தது. அப்பொழுது தாயானவள் ஓடி அப்பிள்ளையையெடுத்து நாயகனோடு நம்பியாரூரரை வணங்கினாள். அதுகண்ட அமரர்கள் அலர்மாரி பொழிந்தார்கள். அந்தணர்கள் ஆரவாரித்தார்கள். நம்பியாரூரர் அச்சிறுவனை அழைத்துக்கொண்டு திருஅவிநாசிக்குப்போய்ச் சுவாமிதரிசனஞ் செய்து, அவன் வீட்டை அடைந்து அவனுக்கு உபநயனஞ் செய்வித்து மலைநாட்டைச் சேர்ந்தார். அந்நாட்டுச் சிவனடியார்கள் விரைந்தோடிச் சென்று சேரமான் பெருமானை நோக்கி "மன்னர் பெருமானே! நம்பியாரூரர் திருப்புக்கொளியூரிலே முதலைவாயினின்றும் பிள்ளையை வரவழைத்து எழுந்தருளுகின்றார்" என்று சொல்ல; சேரமான் அவர்கட்குப் பொன்னுந் துகிலும் மணிகளுங் கொடுத்துச் சந்தோஷக் கடலில் ஆழ்ந்து "யாவர்க்கும் ஐயா அணைந்தார். எம்மை அடிமைகொண்ட ஆண்டவர் அணைந்தார். திருவாரூர்ச் சைவசிகாமணியார் வந்தார். நமது தலைவர் வந்தார். உலகுய்ய அவதரித்த நம்பியாரூரர் எழுந்தருளினார்" என்று முரசறைவித்து, தமது அழகிய நகரத்தை அலங்கரிப்

பித்து, மந்திரி பிரதானிகள் சூழ்ந்துவர யானைமேற்கொண்டு நம்பியாரூரரை எதிர்கொண்டழைக்கச் சென்றார். சேரமான் பெருமாணாயனார் தூரத்திலே வன்றொண்டரைக் கண்டதும் யானையினின்றும் இறங்கி வாயு வேகமாக ஓடி அவருடைய திருவடிகளிலே விழுந்து வணங்கினார். நாவலர் பெருமானும், மன்னர் பெருமானைத்தொழுது தழுவினார். அவ்விருவரும் ஆனந்த வெள்ளத்தில் அமிழ்ந்து தம்மைத்தாம் மறந்தார்கள். அதுகண்ட மெய்ப்பத்தர்கள் சிவநாம முழக்கஞ்செய்து ஆரவாரித்தார்கள். சேரர் பெருமான் தம்பிரான்தோழரை யானைமேலேற்றித் தாம் வெண்கொற்றக் குடைபிடித்துக்கொண்டு சென்று திருமாளிகை யடைந்து, நாவலரையானையினின்றும் இறக்கி, உள்ளே அழைத்துக்கொண்டுபோய் அரியாசனத்தில் அமர்த்திப் பூசித்து வணங்கி அன்பர்கள் மகிழப்பொன்மணிகளை வாரிவாரி இறைத்தார். நம்பியாரூரர் தமது தோழர் அன்புடன் செய்யும் உபசாரங்களை யேற்றுக்கொண்டு, அம்மலை நாட்டிலுள்ள சிவ க்ஷேத்திரங்களுக்குப் போய்ச் சுவாமிதரிசனஞ் செய்து மகோதை நகரத்தை யடைந்திருந்தார்.

இங்ஙனம் பலநாள் கழிந்தபின் ஒருநாள் சேரமான் பெருமாணாயனார் ஸ்நானஞ் செய்துகொண்டிருந்தபொழுது, நம்பியாரூரர் திருவஞ்சைக்களம் என்னுந் திருக்கோயிலுக்குச் சென்று சுவாமிதரிசனஞ் செய்து திருமுன்னே நின்று மனங்குழைந்துருகி "அடியேனை இவ்வுலக வாழ்க்கையினின்றுங் கரையேற்றி இரட்சிக்கவேண்டும்" என்னும் குறிப்போடு "தலைக்குத்தலை" என்னுந் திருவருட் பதிகத்தைப் பாடி யருளினார். உடனே திருக்கயிலாயத்திலே பார்வதி தேவியாரோடு வீற்றிருந்தருளுஞ் சிவபெருமான் திருமால் பிரமன் முதலிய தேவர்களைத் திருநோக்கஞ் செய்து "நீங்கள் வெள்ளையானையைக் கொண்டுபோய் அதன்மீது நமது நம்பியாரூரனை ஏற்றிக்கொண்டு வாருங்கள்" என்று ஆஞ்ஞாபித்தார். அத்தேவர்கள் அப்படியே சிவபெருமானை வணங்கி விடைபெற்று வெள்ளையானையைக் கொண்டு மகோதை நகரத்திலேயுள்ள திருவஞ்சைக்களம் என்னுந் திருக்கோயிலை யடைந்து, அத்திருக்கோயிலை வலம் வந்து, திருவாயிலிலே போனார்கள். அப்பொழுது தம்பிரான் தோழர் திருக்கோயிலினுள்ளே நின்று எழுந்தருளிவந்தார். தேவர்கள் அவரை எதிர்கொண்டு சிவாஞ்ஞையைத் தெரிவித்தார்கள். அது கேட்ட நாயனார் பெருமான் செயல் அற்றவராய்ச் சிவபெருமானை நினைத்துப் பணிந்து எழுந்து தேவர்களை எதிர் ஏற்றார். திருமால் முதலிய வானவர்கள் வன்றொண்டரை யானையின் எதிரே வலஞ்செய்து, அவரை அதன் மீது ஏற்றினார்கள். உலகுய்யத்திருவவதாரஞ் செய்து தமிழ்வேதத்தைத் திருவாய்மலர்ந்தருளிய நாவலர் பெருமான் பஞ்சவாத்தியங்கள் முழங்கவும், அமரர்கள் அலர்மாரி பொழிந்து போற்றவும், முனிவர் முதலாயினோர் ஆனந்தக்கூத்தாடவும் தமது உயிர்ப்பெருந் தோழராகிய சேரமான் பெருமாணாயனாரைத் திருவுள்ளத்தில் நினைத்துக்கொண்டு சென்றருளினார்.

சேரமான் பெருமாணாயனார் தம்பிரான் தோழர் செயலை அறிந்து, உடனே குதிரையேறித் திருவஞ்சைக்களத்துக்குச் சென்று, நம்பியாரூரர் வெள்ளையானை மீது ஆகாயமார்க்கமாகச் செல்லுவதைப் பார்த்து, தாம் ஏறியிருந்த குதிரையின் செவியிலே ஸ்ரீ பஞ்சாட்சரத்தை ஓத, அது ஆகாயமார்க்கமாய்ப் பாய்ந்து, வன்றொண்டர் ஏறிச்செல்லும் வெள்ளையானையை யடைந்து, அதனை வலஞ்செய்து அதற்குமுன்னே சென்றது. அரசர் பெரு

மாறருடைய படைவீரர்கள் தங்கள் தலைவர் ஆகாயத்தில் குதிரைமேல் ஏறிச்சென்ற திருக்காட்சியைக் கண்ணுக்கெட்டியதூரம் பார்த்துப் பின் காணாதவர்களாய் வாளாயுதங்களால் தங்களைச்சேதித்து வீரயாக்கையைப் பெற்றுச் சென்று சேரபெருமானை வணங்கிக்கொண்டு முன்னே சென்றார்கள். அப்பொழுது வன்றொண்டர் "தானெனை முன்படைத்தான" என்னுந் திருவருட்பதிகத்தைப் பாடிக்கொண்டு திருக்கைலாயத்தின் தெற்குத் திருவாயிலைச் சேர்ந்தார். இருவரும் யானையினின்றுங் குதிரையினின்றும் இறங்கிப் பலத்தடங்களைக் கடந்து மணிவாயிலை யடைந்தார்கள். அங்கே திருவணுக்கன் திருவாயிலிலே சேரபெருமான் தடைபட்டு நின்றனர். தம்பிரான் தோழர் உள்ளேசென்று சுவாமி சந்நிதியிலே விழுந்து வணங்கித் தூரத்திலே விடப்பட்ட கன்றானது தன் தாய்ப்பசுவைக் கண்டு விரைந்து வந்தது போல விரைந்து அணுகிப் போற்றினார். அங்ஙனம் போற்றிய நம்பியாரூரரைச் சிவபிரான் திருநோக்கஞ் செய்து "ஆரூரனே! வந்தனையோ" என்று உலகுய்ய வினவியருளினார். அதற்குத் தம்பிரான்தோழர் "அடியேனுடைய பிழையைப் பொறுத்துப் பாசத்தையறுத்து வலிய தடுத்தாட்கொண்டு அழிவிலா முத்தியருளிய பெருங்கருணை யென்தரத்ததோ" என்று திருவாய்மலர்ந்தருளி நித்தியானந்தப் பெருவெள்ளத்தில் மூழ்கினார். பிறகு நம்பியாரூரர் தமது தோழராகிய சேரமான் பெருமாணாயனார் திருவணுக்கன் திருவாயிலிலே தடைபட்டு நிற்பதைச் சிவபிரானுக்கு விண்ணப்பஞ் செய்ய; சிவபிரான் தேவர்களைப் பார்த்து "சேரமானை அழைத்துக்கொண்டு வாருங்கள்" என்ன, அவர்கள் அப்படியே செய்தார்கள். சேரபெருமான் சிவபெருமானைக்கண்டு எல்லையில்லா ஆனந்த மெய்தித் தோத்திரஞ்செய்து நின்றார். அப்பொழுது சிவபெருமான் புன்னகைசெய்து "சேரனே! யாம் உன்னை யழையாமலே இங்கு வந்தது என்னை?" என்று கேட்க; அரசர்பெருமான் தொழுது "வெள்ளை யானைக்கு முன்னே ஆரூரரை வணங்கிக் கொண்டே வந்தேன். தேவரீர் திருவருளால் இப்பொழுது திருமுன்பு வரப்பெற்றேன்" என்று கூறிப் பின்னுஞ் "சிவபிரானே! தேவரீர் முன் விண்ணப்பிக்க வேண்டியது ஒன்றுளது" என்று "தேவரீர்மீது ஞானத்திருவுலா ஒன்று பாடியுள்ளேன். அதற்குத் திருச்செவி சாத்தியருள வேண்டும்" என்று பிரார்த்தித்தார் அதற்குச் சிவபிரான் "அவ்வுலாவைச் சொல்லு" என்று திருவாய் மலர்ந்தருள, சேரர்பிரான் சிவபிரானைக் கேட்பித்தார். அது கேட்ட அறிநயனையளித்த அம்பிகாபதியானவர் அரசரை நோக்கி "நீயும், இந்திருவாரூர்க் கலியாண சுந்தரனும் நமது கணங்கட்கெல்லாம் தலைவராயிருக்க" என்று அருளிச்செய்தார். உடனே இருவரும் சிவபெருமானை வணங்கினார்கள். நம்பியாரூரர் ஆலாலசுந்தரராகித் தாம் முன்னே செய்து கொண்டிருந்த திருத்தொண்டைச் செய்பவரானார். சேரமான் பெருமாணாயனார் கணத்தலைவராகித் தந்திருத்தொண்டைச் செய்பவராயினார்.

முன்னே சிவாஞ்ஞையின்படி பூமியிலே அவதரித்த பரவையார் சங்கிலியார் என்னும் இருபெருமாட்டிமார்களும் முறையே கமலினியாரும், அனிந்திதையாருமாகி உமாதேவியாருக்குத் தாம் முன்செய்த திருத்தொண்டை மேற்கொண்டார்கள்.

நம்பியாரூரர் தாம் வழியிலே அருளிச்செய்த திருப்பதிகத்தை இவ்வுலகினில் ஏற்றிட வருணராஜனிடத்தில் கொடுத்தருளினார். அவன் அதைத்

தொழுது அன்புடன் வாங்கித் திருவஞ்சைக்களத்திலே உய்த்து உணர்வித்தான். சேரமான் பெருமாணாயனார் அருளிச்செய்த திருக்கைலாச ஞான வுலாவைத் திருக்கயிலாயத்திலே அன்று கேட்ட மாசாத்தனார் அதனைத் தரித்துத் திருப்பிடவூரிலே வெளிப்படப் பகர்ந்து, உலகத்திலே விளங்கும் படி செய்தார்.

பெரியபுராணம் என வழங்குகின்ற திருத்தொண்டர்புராண மூலமும், அரும்பதக் குறிப்புரையும், வசனமும் முற்றுப் பெற்றன.

திருத்தொண்டர்கள் திருவடிவாழ்க.
சேக்கிழார்சுவாமிகள் சேவடிவாழ்க.

---

# சூசிபத்திரம்

## முதற்காண்டம்

# சூசிபத்திரம்.

## இரண்டாங்காண்டம்



---

"உலகெலா முணர்ந்தோதற் கரியவன்" என்னுந் திருப்பாசுரத்தில் "மலர்சிலம்படி வாழ்த்தி வணங்குவாம்" என்னுமடியிலே உள்ள மலர் என னுஞ்சொற்குப் பரந்த எனப்பொருள் கொள்க. மலரடி-வினைத்தொகை.